# ஸம்க்ஷேப சாரீரகம்

## முதல் பாகம்







V.S. கமலாம்பாள் அம்மாள்

இயற்றிய

தமிழ் வ்யாக்யானமும் மூலத்தின் உரையும்

# ஸ்ரீ ஸர்வஞ்ஞாத்ம மஹாமுனிவர்

அருளிய

# ஸம்க்ஷேப சாரீரகம்




ஸ்ரீ அக்னிசித்புருஷோத்தம மிச்ரர் என்பவரின்
ஸுபோதினி என்ற வ்யாக்யானத்தையும் ஸ்ரீ ராமதீர்த்தர் என்பவரின்
அன்வயார்த்த ப்ரகாசிகா என்ற வ்யாக்யானத்தையும்
அனுசரித்து தமிழில் இயற்றப்பட்ட வ்யாக்யானமும்
மூலத்தின் உரையும்

**V.S. கமலாம்பாள் அம்மாள்.**


21. நாலாவது தெரு
ரட்லண்ட் கேட்
சென்னை — 600 006


1993

பூஜ்ய ஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதி



परब्रह्मनिष्ठं स्वतो धर्मनिष्ठम् अहिंसैकनिष्ठं स्वशिष्यैः सुजुष्टम् ।
यतीनां वरिष्ठं गुरूणाङ्गरिष्ठम् दयानन्दरूपं मदाचार्यमीडे ॥

SWAMI DAYANANDA SARASWATI

Arsha Vidya Ashram Gurukulam
Alamarathumedu
Anaikatti (P.O)
Coimbatore – 641108

# நாராயண ஸ்மிருதி

ஸ்ரீ ஸர்வஞ்ஞாத்ம முனி அவர்கள் அனுக்ரஹித்த பல க்ரந்தங்களில் மிகவும் அத்புதமான க்ரந்தம் ஸம்க்ஷேபசாரீரகம். ஆயிரத்திற்கு மேற்பட்ட ச்லோகங்கள் உடைய இந்த க்ரந்தம், வேதாந்த விஷயங்களை பூர்வபக்ஷ சித்தாந்த முறையில் வெகு நுட்பமாக விசாரம் செய்கிறது இந்த க்ரந்தத்திற்கு ஆதாரமாக இருப்பது ஆதி சங்கரபகவத் பாதரால் அருளப்பட்ட சூத்ர பாஷ்யம்.

இந்த க்ரந்தத்தில் விசாரிக்கப்பட்டிருக்கின்ற பலவிஷயங்களில் சப்த ப்ரமாணவிசாரம் மிகவும் விஸ்தாரமாக இருக்கின்றது. பரம புருஷார்த்தமாக இருக்கின்ற மோக்ஷம் ஆத்ம ஞானத்தினுல்தான் ஏற்படுகிறது என்ற விஷயமும், அந்த ஆத்ம ஞானம் வேறு எந்தவிதமான ஸாதனுபேக்ஷையும் இல்லாமல் சப்தத்தினுலேயே தங்கு தடையின்றி அதிகாரிக்கு ஏற்படுகிறது என்ற விஷயமும் வெகு விஸ்தாரமாக விசாரிக்கப் பட்டிருக்கிறது. மற்றும் ஸாங்க்ய நையாயிகாதி மதங்களின் குணதோஷங்கள் பூர்ணமாக விசாரிக்கப்பட்டு இருக்கின்றது.

இந்த க்ரந்தத்தை தமிழாக்கம் செய்து விளக்கி கூறுவதென்பது மிகவும் கடினம். இந்த கடினமான ப்ரயத்னத்தில் மாதுஸ்ரீ கமலாம்பாள் அம்மாள் வெற்றிபெற்றிருக்கிறுர். இதற்கு காரணம் அவர்களின் ஈச்வரபக்தியும், குருபக்தியும், விடா முயற்சியும், பூர்ண ஆசார்ய அனுக்ரஹமும் தான். கமலம்மாவின் ஆசார்யராக இருக்கின்ற ஸ்ரீ வரகூர் கல்யாண சுந்தர சாஸ்திரிகள் எத்தனையோ வருடங்கள் மிகவும் உத்ஸாகத்தோடு அம்மாவிற்கு வேதாந்த பாடம் சொல்லி இருக்கின்றுர். அவர்களின் அநுக்ரஹத்தின் ரூப மாகத்தான் தமிழால் ஆக்கப்பட்ட இந்த க்ரந்தம் இருக்கின்றது. இந்த புஸ்தகம் முமுக்ஷுக்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

(ஸ்வாமி தயானந்தா)

பாஷ்ய பாவஞ்ஞ ஸ்ரீ கல்யாணசுந்தர சாஸ்திரிகள்



कल्याणसुन्दराख्याय शिष्यवात्सल्यसिंधवे ।
सर्वतन्त्रस्वतन्त्राय शास्त्रिपादाय ते नमः ॥

## பாஷ்ய பாவக்ஞ சாஸ்திரபோதன சதுர ராஷ்ட்ரபதி ஸம்மானித வரஹூர் R. ஸஹஸ்ரஸ்ரீ கல்யாண சுந்தர சாஸ்த்ரீ

ஸம்க்ஷேப சாரீரகம் எனும் இந்நூலின் தமிழ் விளக்க உரையை பதிப்பித்திருக்கின்ற மாது ஸ்ரீ கமலாம்பாள் அம்மையார் என் மாணவியாக பலவருடங்களாக எனக்கு பரிச்சயமானவர். काश्यां तु मरणान्मुक्तिः जननात् कमलालये என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க ஆரூரில் பிறந்த இவர் பால்யம் முதற்கொண்டே உலக விஷயங்களில் பற்று அதிகமின்றி ஆன்மீகத்திலேயே நாட்டமுடையவராக இருந்துவந்தார். ஆங்காங்கே வேதாந்த சிரவணம் செய்துவந்த போதிலும் முறையாக வேதாந்தம் பயிலவேண்டும் என்ற ஆவல் உடையவராக இருந்தார்.

இவருடைய தந்தையாரும் மற்றுமுள்ள இவர் குடும்பத்தினரும் ஸ்ரீஸ்வாமி தயானந்த சரஸ்வதி அவர்களிடம் அதிக ஈடுபாடும் பக்தியும் உடையவர்கள். ஸ்ரீஸ்வாமிஜீ இவ்வம்மையாரை முறையாக வேதாந்தம் பயில என்னை அணுகும்படி கூறி இருக்கிறார். தொப்பையா முதலியார் என்பவர் இவ்வம்மையாரை அழைத்துவந்து எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். அன்றிலிருந்து இன்றுவரை பலவிதமான ஈதிபாதைகளுக்கு (அல்லல்களுக்கு இடையேயும்) நடுவிலும் வேதாந்தசிரவணத்தில் மிகுந்த ஆர்வமுடையவராய் கேட்டுவருகிறார். ब्राह्मणं अग्रतः कृत्वा என்ற ந்யாயப்படி உபநிஷத் ஆச்ரமம் போன்ற பொது இடங்களிலேயே ஆசார்யபாஷ்ய உபன்யாசங்களை ச்ரவணம் செய்தார். பஞ்சதசீ, விசாரசாகரம், ஸம்க்ஷேபசாரீரகம் போன்ற பல ப்ரகரண க்ரந்தங்களை டேப்ரிகார்டர் மூலம் பதிவு செய்து கொண்டு தத் சிந்தனம், தத்கதனம் என்ற ரீதியில் ஒய்வு நேரங்களில் அவகாசம் கிடைக்கின்ற போதெல்லாம் ச்ரவணம் செய்தது மட்டுமின்றி அவைகளை ப்ரதி எடுத்து அதைப் படித்தும் சிந்தனை செய்து வருவார்.

வேதங்கள் ஞானகாண்டம் மட்டுமின்றி ஞானகாண்டத்தினுள்ளேயே சித்த சுத்தி ஏற்படுவதற்காக உபாஸனங்களையும் பஹிரங்க சாதனமாக கூறுகின்றது. இவ்வுபாஸனங்கள் வேதத்தில் ஆழ்ந்த பயிற்சி இல்லாதார்க்கும் கலியின் கோலாஹலத்தால் அல்லல்படுவோர்க்கும் பயன்படக் கூடியதல்ல. இதை ஸ்ம்ருதிகளே

ध्यायन् कृते यजन्यज्ञैस्त्रेतायां द्वापरे चार्चयन् ।
यदाप्नोति तदाप्नोति कलौ सङ्कीर्त्य केशवम् ॥

என்று த்யானம் என்பதை க்ருதயுக கர்மாவாகவே வலியுறுத்துகிறது. (அதாவது க்ருதயுகத்தில் பெரும்பாலும் த்யானத்தில் ஈடுபடுகின்றவர்களாகவும், த்ரேதாயுகத்தில் யஞ்ஞாதி கர்மாவைச் செய்பவர்களாகவும் கலியுகத்தில் நாமஸங்கீர்த்தனத்தில் ஈடுபாடு உடையவராக இருப்பார்கள் என்பதே இதன் கருத்து.)

ஆயினும் சாஸ்த்ரார்த்தங்களை விளக்கவந்த ஸ்ரீவ்யாஸபகவானும் ஸ்ரீசங்கரபகவத்பாதரும் உபாஸனங்களையும் ஊடே விளக்கிச் சென்றார்கள்.

ஸ்ரீசங்கரபகவத்பாதரை வாதுக்கழைத்த வல்லமையுடையவரும் ஸ்ரீகாமகோடி பீடத்தை அலங்கரித்தவருமான ஸ்ரீஸர்வஞ்ஞாத்மர் என்பவர் உபாஸனங்களில் நாட்டமற்றோரின் தேவைக்கு ஏற்ப அவைகளை விலக்கி வேதாந்தமெனும் ஞான பாகத்திற்கு தேவையான விஷயங்களை மட்டும் விளக்கி சாரீரக பாஷ்யத்தை தழுவி எழுதிய நூலே இந்த ஸம்க்ஷேப சாரீரகம்.

இப்பேர்ப்பட்ட இந்தநூலை இவ்வம்மையார் இருமுறை சிரவணம் செய்ததோடல்லாமல் இவ்விளக்க உரைகள் ஏனையோருக்கும் பயன்படவேண்டு மென்ற கருத்தில் இதைபதிப்பிக்க ஆர்வங்கொண்டார். தகுந்த விளக்கங்களுடன் மேற்கோள் குறிப்புகளுடனும் இந்நூலின் பெரிதும் முக்யமானதுமான முதல் அத்யாயம் இப்பொழுது வெளியிடப்படுகிறது.

வேதாந்தத்தில் நாட்டமுடைய அனைவரும் இந்நூலைப்படித்து பயன்பெற வேண்டுமென்றும் இந்நூலின் பதிப்பாசிரியை ஸகல நிச்ச்ரேயஸங்களையும் பெறவேண்டு மென்றும் இறைவனை ப்ரார்த்திக்கிறோம்.

**65/2 பஸுல்லாரோட்**
**சென்னை — 17**
**2.7.93**

**இப்படிக்கு**

**(கல்யாணசுந்தர சாஸ்த்ரீ)**

# ஓம் ஸதாசிவஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம் அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

ஸம்க்ஷேப சாரீரகம் என்ற இந்த க்ரந்தமானது ஸ்ரீசுரேச்வராச்சார்யரின், சிஷ்யரான ஸ்ரீ ஸர்வஞ்ஞாத்ம முனி என்பவரால் இயற்றப்பட்டது. சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தை ஸம்க்ஷேபமாக விசாரிக்கப்படுகிறது என்ற அர்த்தத்தில், இந்த பெயர் இந்த க்ரந்தத்திற்கு ஏற்பட்டிருக்கிறது என்றாலும் இதைபடிக்கின்றவர்களுக்கு இதற்குமேல் விளக்கமாக வேறு என்ன விஷயம் விசாரிக்கப்படவேண்டும் என்று வியக்காமல் இருக்க முடியாது. எந்த ஒரு விஷயத்திலும் எள்ளளவு ஸந்தேஹத்திற்கும் இடமின்றி விசாரித்து அறிந்து அனுபவபூர்வகமாக அடைந்த ஆனந்தத்தை ஸகல ஜீவர்களும் பெற்று பேரானந்தத்தை அடையவேண்டுமென்ற கருணை உள்ளத்தினால் இந்த அரிய பொக்கிஷத்தை நமக்கு அருளி இருக்கின்றார்.

இப்பேர்ப்பட்ட மஹாத்மாவானவர் இந்த க்ரந்தம் இயற்றப்பட வேண்டியதற்கு காரணம் என்ன வென்பதை ஆக்ஷேபஸமாதான முறையில் மிக வினயத்துடன் தெரிவிக்கின்றார். அதாவது ப்ரஹ்மசூத்ரம் அதன் பாஷ்யம் என்பவைகள் எல்லாம் மிகவும் ஆழ்ந்த கருத்துடையதாக இருப்பதாலும், பாஷ்யம் மிகவும் விஸ்தாரமாக இருப்பதாலும் அவைகளின் தாத்பர்யம் என்ன என்பதை சாதாரணமாக சுலபமாக எல்லோராலும் அறிந்து கொள்ளமுடியாது என்பதால், அதிலுள்ள விஷயங்களை மிகவும் எளிய முறையில் விளக்குவதன் மூலம் எல்லோரும் அறிந்து பயன் பெறவேண்டும் என்று கருதியே இந்த க்ரந்தம் வெளியிடப்படுகிறது என்றும் தன்னுடைய பாண்டித்யத்தை தெரிவிப்பதற்காகவோ அல்லது கீர்த்தியை விரும்பியோ இந்த க்ரந்தம் இயற்றப்பட வில்லை என்று மிக்க பணிவுடன் தெரிவிக்கின்றார். இவ்விதம் ஸர்வ சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து ஸர்வஞ்ஞரான மஹா புருஷராலேயே இந்தக்ரந்தம் இயற்றப் படுவதற்கு காரணம் தெரிவிக்கப்படுகிறது என்றால் நான் என்ன காரணத்தைச் சொல்லமுடியும்?

அனேக கோடிஜன்ம ஸுக்ருதத்தின் பலனாகவும், பெரியோர்களின் ஆசியினாலும், என் இஷ்டதெய்வமான ஸ்ரீமுருக பெருமானை உபாஸித்ததின் பலனாக, கருணைக் கடலான அந்த கந்தப்பெருமானே கண்கண்ட தெய்வமாய் தாயும் தந்தையுமாய் தனக்குவமை இல்லாத தயாபரராய் தக்க தருணத்தில் குருவடிவாய் வந்து கடாக்ஷித்து அருள் புரிகின்ற காரணத்தினாலேயே இந்த க்ரந்தம் வெளி வருகின்றது என்பதே உண்மையில் முக்யமான காரணம். எந்த விதமான பாஷா ஞானமும் இன்றி லோகவ்யவகாரங்களைக் கூட சரிவர அறிந்து நடக்கக்கூடிய திறமை அற்றவளாகவும் ப்ராரப்தவஸத்தால் பல இன்னல்களுக்கு இடையில் செய்வதறியாது தபித்துக் கொண்டிருந்த என்னை அஹேதுகதயாசிந்துவாக தடுத்தாட் கொண்டருள்புரிகின்ற என் குருநாதர் (ஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதி) ஸ்ரீ ஸ்வாமிஜீ அவர்களின் மஹிமையை வாக்கினால்வர்ணிக்க இயலாது. 'மூகம் கரோதி வாசாலம்' என்ற வாக்யத்தின் பொருள் என் மூலம் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது என்பது நான் அறிந்த உண்மை என்பது மட்டுமல்ல, என்னை அறிந்த எல்லோருமே அறிவார்கள். என்ன செய்வதென்று மார்க்க மறியாது தபித்துக் கொண்டிருந்த போது பகவத்க்ருபையால் என்பிதாவின் முயற்சியால் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களை குருவாக அடையும் பெறுதற்கரிய பாக்யத்தை பெற்றேன். என் அவலநிலை கண்டுமனமிரங்கிய ஸ்ரீஸ்வாமிஜீ அவர்கள், என் பிதாவும் நானும் வேண்டிக்கொண்டதற்கு இணங்கி முதன் முதலாக பகவான் ஸ்ரீரமணமஹரிஷி

அவர்களால் இயற்றப்பட்ட உபதேச சாரம் என்ற செய்யுளை போதித்தருளினார்கள். அதன்பிறகு விவேக சூடாமணி என்ற க்ரந்தத்தையும் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களின் திருவாக்கினாலேயே உபதேசித்தருளினார்கள். அதை ச்ரவணம் செய்கின்ற போதே எங்களுக்கு ஏற்பட்ட அனுபவம் சொல்லில் அடங்காது. என்பிதா அவரகளும் மிகவும் வியந்து மகிழ்ந்து போற்றினார்கள். ஸ்ரீ ஸ்வாமிஜீ அவர்களின் பாண்டித்யமும் அனுபவ பூர்வகமாக விஷயங்களை விளக்குகின்றபோது, அதை கேட்பவர்களுக்கும் அந்த அனுபவத்தை அளித்தருளும் அந்த மஹாத்மாவின் மஹிமையேமஹிமை. அஹிம்ஸை க்ஷாந்தி ஆர்ஜவம் முதலான ஸர்வஸற்குணங்களையும் பூஷணமாகக் கொண்டு த்யாகமூர்த்தியாய் கொடைவள்ளலாய் சாந்தமே உருவாக திகழ்கின்ற ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களிடம் மேன்மேலும் ச்ரவணம் செய்ய வேண்டுமென்ற அவா இருந்தும் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்கள் பல இடங்களுக்கும் சென்று உபன்யாஸம் செய்ய வேண்டியிருந்ததால் ஓரிடத்தில் இருந்து பாடம் சொல்வதற்கு இயலாமல் இருந்தது. ஆகவே, மேலே ச்ரவணம் செய்வதற்கு என்ன செய்வதென்று மிகவும் வருந்தினேன். என்னுடைய ஆர்வத்தை அறிந்த ஸ்ரீஸ்வாமிஜீ அவர்கள். கட்டாயம் நல்ல ஆசார்யர் கிடைத்து நன்கு படித்து ச்ரேயஸ்ஸை அடைவீர்கள் என்று ஆசீர்வதித்து அருளினார்கள். 'ஆத்மஜ்ஞம் அர்ச்சயேத் பூதிகாம:' என்ற உபநிஷத் வாக்யம் பொய்க்கவில்லை. ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களின் ஆசியினால் அதிசீக்ரமே வித்வான்களில் தலை சிறந்தவராக சாந்தமே உருவாக ஸகல சற்குணங்களுக்கும். இருப்பிடமானவராக எவ்வித ப்ரதி உபகாரத்தையும் எதிர்பாராமல், சாஸ்த்ரார்த்தங்களில் ச்ரத்தை உடையவர்களுக்கு தனக்கு தெரிந்த எல்லாவற்றையும் உபதேசித்தருள வேண்டுமென்ற உள்ளன்புடன் ஆசார்யருக்குரிய ஸர்வகுணங்களையும் பூர்ணமாகபெற்றவரான ஸ்ரீசாஸ்திரி அவர்களை ஆசார்யராக அடையப்பெற்ற எனது பாக்யத்தை என்னவென்று எடுத்துரைப்பேன். ஸ்ரீரமணமஹரிஷியின் பக்தரும் எனது நெருங்கின உறவினருமான ஸ்ரீதபஸ்வாமிகள் என்ற தொப்பையா முதலியார் அவர்களின் முயற்ச்சியினால் (வரகூர் ஸ்ரீகல்யாண சுந்தர சாஸ்திரிகள்) இப்பேர்ப்பட்ட மஹாவித்வானை ஆசார்யராக அடையும் பாக்யம் பெற்றேன். முதன்முதலாக நுங்கம் பாக்கம் உபநிஷத் ஆச்ரமத்தில் சாஸ்திரி அவர்கள் ப்ரஹ்மசித்தி என்ற க்ரந்தத்தை ஏற்கனவே பாடம் கேட்க்கின்ற சிஷ்யர்களுக்கு பாடம் நடத்திக் கொண்டிருந்த போது அவரை தரிசித்து நமஸ்கரிக்கும் பாக்யம் பெற்றேன். முதன் முதலாக சித்தி க்ரந்தத்தை கேட்க்கும் படியான பாக்யத்தைப் பெற்ற எனக்கு வேதாந்தார்தங்களை காரண கார்யங்களுடன் எடுத்து மிகவும் அனுயாஸமாக அந்த விஷயங்களை மிகச் சுலபமாக அறிந்து கொள்ளும்படி போதிக்கின்றபோது, அந்த விஷயங்களை தானும் ரஸித்து, கேட்பவரையும் ரஸிக்கும் படிச் செய்கின்றதைக் கண்டு நான் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையே இல்லை. 'ஆசார்யவான் புருஷோவேத' என்ற வேதவாக்யத்திற்கிணங்க அவரை ஆசார்யராக பெற்ற பாக்யத்தை எண்ணுகின்ற போது உளம் பூரிக்கின்றது. அவருடைய பாண்டித்யத்தைப் பற்றி தெரிவிக்கக் கூடிய அருகதை எனக்கு கிடையாது. ஆனால், பாஷ்ய பாவஜ்ஞ' என்ற பட்டத்தை தேர்ந்தெடுத்து அளித்து கௌரவித்த ஸ்ரீ காஞ்சி காமகோடி பரமாச்சார்யரால் போற்றி புகழப்பட்டிருப்பதைக்கொண்டே அறியலாம். தன்னுடைய சிரமத்தையே பாராமல், என்னுடைய ச்ரத்தையையும் ஆர்வத்தையும் கருதி வேறு எவ்வித ப்ரதி ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் மிக்க அன்புடன் பஞ்சதசியிலிருந்து ஆரம்பித்து ஸம்க்ஷேபசாரீகம் முடிய பலக்ரந்தங்களை எனக்கு உபதேசித்தருளினார்கள். இவ்விதம்

ச்ரவணம் செய்வதை மனனம் செய்வதற்காக Notes எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். அவைகளுள் ப்ரஹ்மசித்தி ஸ்வராஜ்யசித்தி நைஷ்கர்ம்யசித்தி என்ற சித்திக்ரந்தங்களின் விசாரம் என்னை மிகவும் கவர்ந்தது. ஒரு ஸமயம் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களிடம் ஸ்வராஜ்யசித்தி Notes களை காண்பித்தேன். அதைப்பார்த்தவுடன் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்கள் மிகவும் நன்றாக இருக்கிறது. இவைகளை ப்ரசுரித்தால் தமிழில் படிப்பவர்களுக்கும் ப்ரயோஜனமாக இருக்கும் ஸ்ரீசாஸ்திரி அவர்களுக்கும் ஸந்தோஷமாக இருக்கும் என்று தெரிவித்தார்கள். ஸ்ரீசாஸ்திரி அவர்களும் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களிடம் நிறைய எழுதி வைத்திருக்கிறார்கள் என்ன செய்யப்போகிறார்களோ தெரியவில்லை என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு க்ரந்தமும் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதையே படித்து வந்தேன். அதேபோல் ஸம்க்ஷேப சாரீரகம் என்ற க்ரந்தத்தையும் ஸ்வாமிஜீ அவர்களே தேர்ந்தெடுத்து என்னை படிக்கும்படி ஆஞ்ஞாபித்தார்கள். அதன்படியே ஸ்ரீ சாஸ்திரி அவர்களால் உபதேசிக்கப் பட்ட அந்த க்ரந்தத்தை ச்ரவணம் செய்கின்ற பாக்யத்தைப் பெற்று நான் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. எவ்வளவு கடினமான க்ரந்தத்தையும் எவ்வளவு சுலபமாக எனக்கு போதித்திருக்கின்றார்கள் என்பதை இந்த க்ரந்தத்தைபடிக்கின்ற அனைவரும் அறிந்து அவரை போற்றாமல் இருக்க முடியாது. ஆகவே, உபநிஷத்துக்களில் சிலவற்றையும் நைஷ்கர்ம்யசித்திபோன்றவற்றையும் ப்ரஹ்ம சூத்ரபாஷ்யங்களையும் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களிடமும் ஸ்ரீசாஸ்திரி அவர்களிடமும் ச்ரவணம் செய்தகாரணத்தினால் என்புத்திசக்திக்கு தகுந்தவாறு என்னால் க்ரஹிக்கப் பட்ட முறையில் ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களின் ஆசிநிறைந்த ஆஞ்ஞையையும் ஸ்ரீசாஸ்திரி அவர்களின் அன்புக் கட்டளையையும் அவருடைய அனுக்ரஹத்தையும் பெற்று அவர்களுடைய அவாவை பூர்த்திசெய்வதே நான் செய்யும் கைம்மாறு என்று கருதியே இந்த க்ரந்தம் வெளியிடப்படுகிறது. மேலும் இந்த க்ரந்தத்தின் இரண்டு வ்யாக்யானங்களின் ஸாராம்ஸத்தைகலந்து அதில் தெரிவிக்கப்படும் கருத்துக்களை மட்டுமே தெரிவிக்கின்ற முறையில் எழுதிஇருக்கின்றேன். ஆகவே இதை படிக்கின்ற பெரியோர்கள். இதில் ஏதேனும் பிழை இருக்குமானால் என் அறியாமைக்கு மனமிரங்கி அவைகளை தெரிவிப்பார்களானால் அதனால் நானும் பயன்பெறுவேன். பிழைகளை திருத்தி வெளியிடவும் உதவியாக இருக்கும்.

இந்த க்ரந்தம் சில இடங்களில் மிக்க கடினமாக இருந்ததால் அவைகளை மிக எளிதான முறையில் விளக்குவதற்கு உதவிபுரிந்த ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களின் சிஷ்யரான ஸ்ரீபரமார்த்தானந்த ஸ்வாமிஜீ அவர்களுக்கு என் நன்றி கலந்த நமஸ்காரங்களை தெரிவித்துக் கொள்கிறேன். இந்த இளம்வயதில் அவருக்கு இருக்கின்ற சாஸ்திர ஞானத்தையும், காரணகார்யங்களுடன் போதிக்கின்ற திறமையையும் கண்டு வியக்காமல் இருக்க முடியாது. குருவிற்கு ஏற்ற சிஷ்யராக திகழ்கின்றதை காண்கின்ற போது அந்த குருநாதரின் மஹிமையை அபார மஹிமா குரு மஹிமா என்று போற்றி புகழத்தான் வேண்டும்.

ஸாதுக்களின் ஸங்கம் என்பது எல்லோருக்கும் எளிதாக கிடைக்கக்கூடியது அல்ல. பகவத் க்ருபையால் நான்பிறந்தது முதலே எனக்கு அந்த பாக்யம் கிடைத்திருக்கின்றது. எனது பிதா ஸ்ரீரெங்கனாதமுதலியார் அவர்களும், எனது அத்தை வடபாதி மங்கலம் சோமசுந்தர முதலியார் அவர்களின் பார்யை ஜானகி அம்மாள் என்பவர்களும் ஸ்ரீரமணமஹரிஷியின் பக்தர்கள். எனது அத்தை அவர்கள் தாயம்மாள்

என்ற அம்மையாரை குருவாகக் கொண்டு முறைப்படி வேதாந்த விசாரம் செய்து வந்தார்கள். இயற்கையாகவே சாந்த ஸ்வபாவ முடையவராக ஸமதமாதிஷட்க்க ஸம்பத்தியுடையவராக இருந்ததால் தத்வ விசாரத்தில் நிஷ்ட்டையுடையவராக தபஸ்வியாகவே வாழ்ந்து வந்தார்கள். இவ்விதம் விசாரம் செய்து வருகின்ற போது பல இடங்களிலிருந்தும் வேதாந்த விசாரம் செய்கின்ற பல அம்மையார்களும் வந்து கலந்து கொள்வார்கள். அதேபோல் திருவாரூர் கோவிலுக்கு உபன்யாஸம் செய்வதற்கு வருகின்ற பல பெரியோர்களின் ஸத்ஸங்கமும் அடிக்கடி இருந்து கொண்டே இருக்கும். என்பிதா அவர்களும் ஸ்ரீத்யேகேசபெருமானிடம் அளவற்ற பக்தியுடன் செய்த ஸேவையின் (தொண்டின்) காரணமாக அவர்களும் வேதாந்தத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவராக இருந்தார்கள். பிறக்க முக்தி என்ற திருவாரூர் க்ஷேத்ரத்தில் என்னை பிறக்கும்படிச் செய்து அதற்கேற்ற மேற்கூறிய சூழ்நிலையில் வளர ஒருவாய்ப்பினை எனக்கு அருளிய ஸ்ரீத்யாகேசப் பெருமானின் அபார கருணையை நினைந்து அனவரதம் போற்றி நமஸ் கரிக்கின்றேன்.

இப்பேர்ப்பட்ட முன்னோர்களின் புண்யங்கள் எல்லாம் சேர்ந்தே அவர்களிடம் வளர்ந்த எனக்கும் ஸாதுக்களின் ஸங்கமும் அனவரதம் வேதாந்த விசாரத்தில் ஈடுபடுகின்ற பாக்யமும் பெற்றுள்ளேன். ஆகவே எனது பெற்றோர்கள் அத்தை முதலான பெரியோர்களின் பரிபூரண ஆசியினாலேயே இந்த க்ரந்தம் ஏற்பட்டிருக்கின்றது என்பதால் அவர்கள் பாதபத்மங்களில் நமஸ்கரிக்கின்றேன்.

கிடைத்தற்கரிய ச்ரோத்ரியராகவும் ப்ரஹ்மநிஷ்ட்டராகவும் இருந்து அருள் புரிகின்ற என்குருநாதராகிய ஸ்ரீஸ்வாமிஜீ அவர்களுக்கும், 'ஆசார்யவான் புருஷோவேத' என்ற வாக்யத்தின்படி ஆசார்யராக இருந்து அருள்புரிகின்ற ஸ்ரீ சாஸ்திரி அவர்களுக்கும் என் நன்றி கலந்த நமஸ்காரங்களை தெரிவித்து இந்த க்ரந்தத்தை அவர்கள் பாத பத்மங்களில் ஸமர்ப்பிக்கின்றேன்.

V. S. கமலாம்பாள்

ॐ

ओं श्रीगणेशाय नमः
ओं श्रीसद्गुरुमूर्तये नमः

सदाशिवसमारम्भां शङ्कराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥

ईश्वरो गुरुरात्मेति मूर्तिभेदविभागिने ।
व्योमवद्व्याप्तदेहाय दक्षिणामूर्तये नमः ॥

ஸர்வஞ்ஞாத்மமுனி என்ற நாமாவை உடைய இந்த க்ரந்தக்காரர் தனது இஷ்ட தேவதையான மஹாவிஷ்ணுவை, நிருபாதிகஸ்வரூபமாகவும், ஸோபாதிகஸ்வரூபமாகவும் அனுஸந்தானம் செய்து, இந்த மங்களச்லோகம் செய்திருக்கின்றார்.

இந்த மங்களச்லோகத்தின் மூலமாகவே, விஷயம், ப்ரயோஜனம், ஸம்பந்தம், அதிகாரி, என்ற அனுபந்தசதுஷ்ட்டயத்தை, முதல் நான்குச்லோகங்களில் தெரிவிக் கின்றார். இவ்விதம் தெரிவிப்பதால் ச்ரோதாக்கள் ச்ரத்தையுடன் இந்தக்ரந்தத்தை அறிய விரும்புவார்கள் என்று கருதி, அவர்களுடைய ப்ரவர்த்திக்கு அங்கமாக இவைகளை தெரிவிக்கின்றார். இந்த க்ரந்தத்திற்கு விஷயம் என்ன? என்பதை முதல் இரண்டு ச்லோகங்களில் தெரிவிக்கின்றார்.

1. अनृतजडविरोधिरूपमन्तत्रयमलबन्धनदुःखताविरुद्धम् ।
अतिनिकटमविक्रियं मुरारेः परमपदं प्रणयादभिष्टवीमि ॥

**ச்லோகார்த்தம் :** அந்ருத, ஜடங்களுக்கு விரோதமானதும், மூன்றுவித பரிச்சேதங்கள் அற்றதும், மலம், பந்தனம், துக்கம் என்பவைகளுக்கு விருத்தமானதும், அத்யந்தஸமீபமாக இருப்பதும், விகாரமற்றதும், ஸர்வோத்க்ருஷ்ட்டமானதுமான, முராரியின் பரமபதம் என்ற ஸ்வரூபத்தை பக்தியுடன் நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்மா என்பதும், ப்ரஹ்மமென்பதும் ஒன்றே என்ற விஷயம் அறியப்படாததால், அறியப்படாத ப்ரஹ்மமே இந்த க்ரந்தத்திற்கு விஷயம். (அஞ்ஞாதம் ப்ரஹ்ம விஷயம்) ஆகையால், முதல் ச்லோகத்தில் 'தத்பதார்த்தம்' என்பதை ப்ரதானமாகக்கொண்டு விசாரிக்கப்படுகிறது. ஆகவே ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிவிப்பதே இந்தக்ரந்தத்திற்கு விஷயம்.

1. இந்த ச்லோகத்தில் 'முராரியின் பரமபதம்' என்று சொல்லப்படுகிறது. இதனால் தத்பதார்த்தமான ஈச்வரனை ப்ரதானமாகக்கொண்டு முராரி என்ற ஈச்வரஸ்வரூபத்தை, முதலில் தெரிவித்து, அதன் பிறகு 'ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்ம' மென்று ஐக்யத்தை போதிப்பதற்காக முதல் ச்லோகம் ஆரம்பிக்கப்படுகிறது.
2. இரண்டாவது ச்லோகத்தில் த்வம்பதார்த்தமான ஜீவனைப்ரதானமாகக் கொண்டு, த்வம்பதார்த்தஸ்வரூபத்தை தெரிவித்து அதன் பிறகு ஜீவப்ரஹ்ம ஐக்யம் போதிக்கப் படுகிறது.
3. மூன்றாவது ச்லோகத்தில் ஜீவன் என்றும், பரமாத்மாவென்றும் வேறாக அறியப்படும் பேதம், புத்தியென்ற உபாதியினாலும், அதற்கு காரணமான மாயை என்ற உபாதியினாலும் தோற்றுவிக்கப்படுவதால், மாயை என்ற தத்பதார்த்த உபாதியையும்,

புத்தி என்ற த்வம்பதார்த்த உபாதியையும் விசாரித்து, அவை இரண்டையும் விடப்படுமானுல், ப்ரத்யக்ஸ்வரூபமே ப்ரஹ்மம் என்ற ஐக்ய ஞானம் ஏற்படும். இதுவே இந்த க்ரந்தத்தின் ப்ரயோஜனம் என்று இந்த மூன்ருவது ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஆகவே, அஞ்ஞாதமானப்ரஹ்மம் விஷயம். ஞாதமானப்ரஹ்மம் ப்ரயோஜனம்.

4. வாக்தேவதையான சரஸ்வதியை நமஸ்கரிக்கின்ற முறையில், விஷயம், பலம் என்ற இரண்டிற்கும், இந்த சாஸ்திரத்திற்கும் உள்ள ஸம்பந்தம் என்ன? என்பதை தெரிவிக்கப்படுகிறது.

முதல் ச்லோகத்திலுள்ள 'முராரி' என்ற பதத்திஞல் சுத்தஸத்வப்ரதானமான மாயாப்ரதிபலிதசைதன்யமே, ஜகத்ரக்ஷகரான விஷ்ணுவென்று குறிப்பிடப்படுகிறது. 'முராரே: பரமபதம்' என்பதால் 'பரமபதம்' என்ற பதம் விஷ்ணுவின் பரமஸ்வரூபமான மாயாஸம்பந்தம் அற்ற, பிம்பஸ்தானீயமான சைதன்யத்தை குறிக்கின்றது.

ஆகவே, 'முராரி' என்ற பதம் ஸோபாதிகஸ்வரூபத்தை தெரிவிப்பதாக இருந்தபோதிலும், மாயாப்ரதிபிம்பத்திற்கு காரணமாக இருக்கின்ற பிம்பஸ்தானீயமான நிர்விசேஷஸ்வரூபத்தையே குறிப்பிடப்படுகிறது என்பது 'முராரே: பரமபதம்' என்பதால் அறியப்படுகிறது. 'பதம்' என்பதற்கு பத்யதே, கம்யதே, அல்லது ஞாயதே என்ற அர்த்தம் சொல்லப்படுகின்றதால் முராரியின் உண்மையான ஸ்வரூபத்தை முமுக்ஷுக்களுக்கு அறிவிக்கிறது என்ருே, அல்லது அடைவிக்கிறது என்ருே அர்த்தம் சொல்லலாம். இந்த முறையில் 'முராரி' என்ற பதம் நிர்விசேஷசைதன்யத்தையே தெரிவிக்கின்றது.

மேலும், முரன் என்ற அசுரனை வதம் செய்த காரணத்திஞல் 'முராரி' என்ற பதம் ஸோபாதிகஸ்வரூபத்தையே குறிப்பிடுவதாக ஸாமான்யமாக அறியப்பட்ட போதிலும், இந்த இடத்தில் 'முராரி' என்ற பதம் நிருபாதிகசைதன்யத்தை குறிப்பிடுகிறது என்றே சொல்லவேண்டும். எப்படியெனில், 'முரதி' என்ற பதம் தாத்வர்த்தத்திஞல் ஆவரணம் என்ற அர்த்தத்தையும், 'அரி' என்ற பதத்திஞல் நாசம் செய்பவர் என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது. ஆகவே, 'முராரி' என்ருல் ஆவரணத்தை நாசம் செய்பவர் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. இந்தவிதம் முராரியின் உண்மையான ஸ்வரூபம் என்னவென்பதை அறியவொட்டாமல் மறைக்கின்ற அஞ்ஞானம் என்பதை நாசம் செய்பவர் முராரி என்று சொல்லப்படுகிறது. ஆகவே, 'முராரே: பரமபதம்' என்பதால் நிர்விசேஷஸ்வரூபமே குறிப்பிடப்படுகிறது.

**முராரே :** என்பதால் முராரிவேறு, அவருடைய பரமபதம் வேறு என்ற அர்த்தமில்லை. 'ராஹோ:சிர:' என்பது போல் நிர்விசேஷசைதன்யஸ்வரூபமே உண்மையான ஸ்வரூபம் என்று இதஞல் குறிப்பிடப்படுகிறது.

'பரமம்பதம்' என்பதிலுள்ள 'ம' என்ற பதமானது ப்ரமாணத்தைக்குறிக்கின்றது. (மா = ப்ரமாணங்கள்) ஆகவே, ஸர்வப்ரமாணங்களுக்கும் அதீதம் என்பதையே 'பரமம்' என்ற பதம் தெரிவிக்கின்றது என்றோ, அல்லது 'மா' என்ருல் 'அளவு' என்றும் ஒர் அர்த்தம் சொல்லப்படுகின்றதால், 'பரமம்' என்ற பதம், எதற்கு மேற்பட்ட அளவு என்பதே இல்லையோ' என்று அபரிச்சின்னம், வ்யாபகம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கிறது என்ருே சொல்லலாம்.

'பதம்' என்பதால் பத்யதே என்று அடையப்படவேண்டிய வஸ்துவாகச் சொல்லப் படுகிறதே? என்ருல், மோஹத்தினுல் அடையப்படவேண்டியது போல் இருக்கின்றதால் பத்யதே என்று சொல்லப்படுகிறது. பதம் அபிஷ்டவீமி = ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று அபேதமாக ஸ்வஸ்வரூபத்தை ஏகாக்ரசித்தத்துடன் ஸ்மரித்து நமஸ்கரிக்கின்றேன்.

இவ்விதம் நிர்விசேஷஸ்வரூபம் என்று சொல்லப்படுமாளுல், அதிநிகடம், அவிக்ரியம், என்று குணங்கள் இருப்பதாக, விசேஷணம் சொல்லப்படுவது எப்படிப் பொருந்தும்?

உபசாராத் ஆரோபிதமான குணங்களைக் கொண்டு விசேஷணம் சொல்லப்பட்ட போதிலும், உண்மையில் நிர்விசேஷஸ்வரூபமானதால் அதில் எவ்வித குணங்களும் இருக்கமுடியாது. இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தை ஸ்மரிப்பதற்கு என்ன காரணம்? என்பதை 'ப்ரணயாத்' என்ற பதத்தினுல் தெரிவிக்கப்படுகிறது.

**ப்ரக்ருஷ்யநய :** ப்ரணய: இழுத்துக்கொண்டு செல்வது, புத்தி, மாயை என்ற இரண்டு உபாதிகளுடன் ஸம்பந்தப்பட்ட ஸ்வரூபத்தை அந்த உபாதிகளிலிருந்து வேறுபடுத்தி, ப்ரத்யக்ஸ்வரூபத்திற்கு விரோதமாக இருக்கின்ற அம்ஸங்களை விட்டு தத்பதார்த்தத்தில் கொண்டுபோய் சேர்க்கின்றது என்று சொல்லலாம். அல்லது ப்ரணயாத் = பக்தியினுல் என்ற அர்த்தத்தைக் கொண்டு, பக்தியினுல் பஜிப்பவர்களை தத்பதார்த்தில் கொண்டு சேர்க்கின்றது என்றும் அர்த்தம் சொல்லலாம். "பக்தியுடன் எவர்கள் என்னை பஜிக்கின்ருர்களோ அவர்களை புத்தீயோகம் என்ற ஞானத்தை அடையச் செய்கிறேன்" என்று பகவாளுல் சொல்லப்பட்டிருக்கிறது.

**பூர்வ :** முராரியின் பரமபதம் என்பது ப்ரமாணங்களுக்கு எட்டாதது என்றும், வ்யாபகம் என்றும் அர்த்தம் சொல்லப்படுமாளுல், 'அஹம் இஹைவ அஸ்மி' என்று 'நான் இங்கு தான் இருக்கிறேன்' என்றும், ச்ருதிவாக்யம் விஸ்புலிங்கம் போல் ஆத்மா உண்டாகிறது என்று தெரிவிக்கின்றதாலும், ப்ரத்யகாத்மா என்பது, தேசத்தினுலும் காலத்தினுலும், வஸ்துவினுலும் பரிச்சேதம் உடையதாகவே அறியப்படுகிறது. ஆகவே, ப்ரத்யகாத்மாவிற்கு, பரமாத்ம ஸ்வரூபத்துடன் அபேதம் எப்படிச் சொல்லமுடியும்? அதாவது நான் இங்குதான் இருக்கிறேன் என்ற அனுபவத்தினுல் வேறிடத்தில் இல்லையென்ருகிறதால், தேசபரிச் சேதமும், ஆத்மா உண்டாகிறது என்று சொல்லப்படுவதால் ஆத்மாவைத் தவிர வேறு ஒரு வஸ்து இருப்பதாக அறியப்படுவதால் வஸ்து பரிச்சேதமும், இதனுலேயே காலபரிச்சேதமும் அறியப்படுகிறது. இவ்விதம் மூன்றுவித பரிச்சேதமுள்ள ப்ரத்யகாத்மாவிற்கு பரமாத்ம அபேதம் எப்படி ஏற்பட முடியும்? எப்படி அந்தஸ்வரூபத்தை நமஸ்கரிக்க முடியும்?

**சித்தா :** ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் என்பது, ஸ்வப்ரகாசம், சித்ரூபம் என்பதால், ப்ரமாணங்களுக்கு விஷயமில்லை என்று சொல்லப்படுகிறது. ஆனுல் ப்ரமாணம் என்று சொல்லப்படும் வேதாந்த வாக்யங்களினுல் ஏற்படும் அகண்டாகாரவ்ருத்தி மூலமாக, ஸ்வரூபத்திற்குவ்ருத்திவ்யாப்யத்வம் சொல்லப்படுகிறது. வித்வான்களின் அனுபவத்திற்கும் விஷயமாக இருக்கின்றது. ஆகவே ப்ரத்யகாத்மாவிற்கு பரமாத்ம அபேதம் என்பது ஸம்பவிக்க முடியும் என்பதால், அந்தஸ்வரூபத்தை ஸ்மரிப்பதென்பதும் ஸம்பவிக்க முடியும். ஆகையால் இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. ஸ்வயம்ப்ரகாசமாக, சித்ரூபமாக இருக்கின்ற ப்ரத்யகாத்மாவை அறிகின்ற விஷயத்தில் பலவ்யாப்யத்வமில்லை என்பதால் ப்ரமாணத்திற்கு விஷயமில்லை என்றும் சொல்கிறோம். ஆனுல் ப்ரமாணஜன்யமான அகண்டாகாரவ்ருத்தி வ்யாப்யத்வம் ஏற்படுவதால் ப்ரமாணத்தினுல் அறியப்படுகிறது என்றும்

சொல்லப்படுகிறது. வித்வான்களின் அனுபவத்தினுலும், 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற அகண்டாகார வ்ருத்திக்கு விஷயமாகின்றது என்பதும் அறியப் படுகின்றது. ஆகவே, இதில் எவ்விததோஷமுமில்லை. இவ்வித ஸ்வரூபம் ஸ்மரிக்கப்படுகிறது என்பதிலும் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

த்வம்பதத்தினுல் குறிக்கப்படும் ப்ரத்யகாத்ம ஸ்வருபம் அஞ்ஞானத்தினுல் தேசம் காலம் வஸ்து என்ற மூன்று விதமான பரிச்சேதங்களை உடையது போல் அறியப்பட்டபோதிலும், அவையெல்லாம் நிக்ருஷ்டமான உபாதி தர்மமேயன்றி, ப்ரத்யகாத்மஸ்வரூபதர்மமல்ல. பரிச்சேதம் என்று சொல்லப்படும் (அந்தத்ரயங்களுக்கும்) மூன்றுக்கும், வேறுபட்ட ஸ்வரூபமே வேதாந்த சித்தாந்த ஸ்வரூபம். அதுவே உண்மையான ஸ்வரூபம் என்பதை தெரிவிப்பதற்காகவே 'அந்ருதஜட விரோதி ரூபம்' என்று முதல் ச்லோகம் ஆரம்பிக்கப்படுகிறது. இதன்மூலம் அந்ருதமாகவும், ஜடமாகவும், இருக்கின்ற வஸ்துக்களுக்கு வேறுபட்ட ஸ்வரூபம் என்பதையே இந்தச்லோகத்தினுல் சொல்லப்படுகிறது.

இவ்விதம் அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கின்ற வஸ்துவையன்றி இந்த ஜகத்தில் அதற்கு விரோதியாக எந்த ஒரு வஸ்துவும் இருப்பதாக அறியப்படவில்லை. ஆகவே, அந்ருத ஜட விரோதிரூபமான வஸ்து என்பது ஆகாசபுஷ்ப்பம் போல் இல்லாத வஸ்து என்றே சொல்லவேண்டும் என்று வேதத்தை அறியாதவர்களால் சொல்லப்படுகிறது. இவர்களின் ஸந்தேகத்தை நிவர்த்திப்பதற்காகவே, 'அந்ருத ஜட விரோதி ரூபம்' என்று 'ரூபம்' என்றபதம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்ருத ஜட விரோதி ரூபமாக இருப்பது எதுவோ அதுவே இந்த ஜகத்திற்கு அதிஷ்ட்டானம். அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கின்றதால் இந்த ஜகத் மித்யை என்ருகிறது. மித்யையான இந்த ஜகத்திற்கு அதிஷ்ட்டானமாக ஸத்யமான ஒரு வஸ்து இருக்கவேண்டும் என்பதால் 'ரூபம்' என்ற பதத்திற்கு ஜகத்தின் உண்மையான ஸ்வரூபம் என்ற அர்த்தம் சொல்லப்படுகிறது. அதிஷ்டானத்திற்கு ரூபம் என்ற பெயர் ஏற்பட காரணம் என்ன? என்ருல், 'ரூப்யதே அனேனேதிரூபம் = ரூப்யதே அனேனஸர்வம் என்று ஜகத்திலுள்ள ஸர்வவஸ்துக்களும் 'இருக்கிறது' என்று அறியப்படுவதற்கு அதன் அதிஷ்ட்டானமே காரணம்.

ஸர்வஜகத்திற்கும் ப்ரத்யகாத்மாவே அதிஷ்ட்டானமாக இருப்பதாலும் ஸர்வத்திற்கும் ப்ரகாசகமாக இருப்பதாலும் ஸர்வமும் இருக்கிறதென்றும் ப்ரகாசிக்கிறதென்றும் அறிவதற்கு ஸாதகமாக இருப்பதால் ரூபம் என்ற பதத்தினுல் குறிப்பிடப்படும் வஸ்து, அந்ருத ஜட விரோதியாக இருக்கின்றது என்று தீர்மானிக்கப்படுகிறது. ஆகையால் ரூபம் என்று சொல்லப்படும் வஸ்து, ஆகாச புஷ்ப்பம் போல் இல்லாதது என்று சொல்லமுடியாது. அவ்விதம் ரூபம் என்ற வஸ்து இல்லையென்று சொல்லப்படுமாஞல் ஜகத் இருக்கிறதென்றோ ப்ரகாசிக்கிறதென்றோ சொல்லமுடியாது. அதனுல் ஜகத் இருக்கிறது, ப்ரகாசிக்கிறது என்று ஜகத் சித்திக்க வேண்டுமாஞல் அதற்கு அதிஷ்ட்டானமாக அந்ருத ஜட விரோதி ரூபமாக ஒரு வஸ்து இருக்கின்றது என்றே ஒப்புக்கொள்ளவேண்டும்.

**பூர்வ :** ஜகத் என்பது மித்யை என்று எப்படிச் சொல்லமுடியும்? ஜகத் என்பது ஸத்யம் என்றே சொல்லவேண்டும். ஸத்யமான இந்த ஜகத்திற்கு அதிஷ்ட்டானம் எதற்கு?

**சித்தா :** ஜகத் என்பது மித்யை தான் என்பதை யுக்திகளைக் கொண்டு மேலே சித்தம் செய்யப்போகிறோம். ஆகையால் இங்கு சாஸ்த்ரவாக்யங்களைக்கொண்டு ஜகத் மித்யை என்பதை நிரூபிக்கின்றோம். அதாவது, 'ப்ரஹ்மைவ இதம் ஸர்வம்' என்ற

வாக்யம், 'இது' என்று அறியப்படும் ஸர்வமும்ப்ரஹ்மமே' என்று தெரிவிக்கின்றது. இதனுல் ப்ரஹ்மத்தையன்றி இந்த ஜகத் என்பது வேறுபட்ட ஸ்வரூபமல்ல என்பது அறியப்படுகிறது. இதேபோல் 'வாசாரம்பணம்' என்றச்ருதிவாக்யம், ஸர்வமும் வாக் ஆலம்பனமேயன்றி, ப்ரஹ்மஸ்ரூபத்திற்கு வேருக ஒரு வஸ்து என்பதே கிடையாது என்றும் 'ப்ரஹ்ம' ஒன்றே ஸத்யம் என்றும் தெரிவிக்கின்றது. இதேபோல், 'இதம் ஸர்வம் யதயமாத்மா' என்ற வாக்யம், ஜகத் என்று சொல்லப்படும் ஸர்வமும் ஆத்மாதான். ஆத்மாவையன்றி வேருக எதுவுமில்லை என்று தெரிவிக்கிறது புராணம் முதலானவைகளிலும் "ஞானஸ்வரூபம் அத்யந்த நிர்மலம் பரமார்த்தத: ததேவஅர்த்தஸ்வரூபேண ப்ராந்திதர்சனத: ஸ்திதம்" என்று சொல்லப்படுகிறது. ப்ராந்தியினுல் தோன்றுகின்ற இந்த ஜகத்தின் உண்மையான ஸ்வரூபம் நிர்மலமான ஞானஸ்வரூபம் என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் ச்ருதி, ஸ்ம்ருதி புராணவாக்யங்கள் என்ற ப்ரமாணங்களினுல் 'பரத்ர பூர்வத்ருஷ்ட அவ பாஸ : அத்யாஸ :' என்று சொல்லப்படும் லக்ஷணத்தின் மூலமாக ஜகத் என்பது ப்ரஹ்மத்தில் அத்யஸ்த்தம் என்று சித்திக்கின்றதால், ஜகத் மித்யை என்று அறிய வேண்டும். அதனுல் ஜகத் ஸத்யமென்று சொல்வது சரியல்ல.

இந்தவிதம் அத்யஸ்த்தமான இந்த ஜகத் என்பதைக்காட்டிலும் வேறுபட்டதாக, அதிஷ்ட்டானமாக இருக்கின்ற ப்ரஹ்மஸ்வரூபம் என்பது, 'அந்ருத ஜட விரோதி ரூபம்' என்று இந்த ச்லோகம், ப்ரபஞ்ச ஸ்வரூபத்திலிருந்து ப்ரஹ்மஸ்வரூபத்தை வேறுபடுத்தி தெரிவிக்கின்றது.

எது பாதிக்கப்படுகிறதோ அது அந்ருதம். ஜடம் என்ருல் அசேதனம். அந்தத்ரயம் என்ருல் தேசம் காலம் வஸ்து என்ற மூன்றினுலும் ஸ்வரூப பரிச்சேதம். இந்த தன்மைகள் ப்ரபஞ்சத்தின் தர்மங்கள். இவைகளுக்கு மாறுபட்ட தன்மையில், 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்பது ப்ரஹ்மஸ்வருபமாக இருக்கின்றது என்று ச்ருதிகள் தெரிவிக்கின்றது.

இந்தவிதம் ப்ரபஞ்சம் என்பதை பாதித்து, பாதிக்கப்படும் விஷயம் எதுவோ அதற்கு அவதிஸ்வரூபமாக சேதனத்வம், நித்யத்வம், விபுத்வம் என்று, ஸர்வாத்மகமாகவும் ஏகத்வமாகவும் பரஹ்மஸ்வரூபத்தை ச்ருதி தெரிவிக்கின்றது. இந்தவிதம், ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் ஜகத் என்பது அத்யஸ்த்தம் என்று ச்ருதி வாக்யங்கள் தெரிவிக்கின்றதால், ஜகத் மித்யை என்று சித்திக்கின்றது.

இதுவரை ச்லோகத்தில் சொல்லப்பட்ட 'அந்ருத ஜட விரோதி ரூபம் அந்தத்ரயம்' என்ற பதங்களுக்கு அர்த்தம் சொல்லப்பட்டது. இதற்குமேல் 'மல பந்தன துக்கதா விருத்தம்' என்ற பதங்களின் அர்த்தம் விளக்கப்படுகிறது. மலம் என்ருல் ராகம் முதலானவை. பந்தனம் என்ருல் ஸ்வதந்தரமின்மை. 'துக்கதா' என்று துக்கத்தையே குறிப்பிடப்படுகிறது.

ரஜோ குணபரிணுமத்தினுல், இது வேண்டாம் என்று வெறுக்கப்படுவது எதுவோ அதுவே துக்கம். அவரவர்க்கு ப்ரதிகூலமாக இருப்பது எதுவோ அதுவே துக்கம். (ப்ரதிகூல வேதனீயம்) மலம், பந்தனம், துக்கம் என்பவைகள் எல்லாமே அந்த:கரண தர்மங்கள். இந்த தன்மைகளுக்கெல்லாம் மாறுபட்ட தன்மையில் இருப்பது எதுவோ அதுவே ப்ரஹ்மஸ்வரூபம். இப்பேர்ப்பட்ட ப்ரஹமத்தினிடம், ஜீவத்வம் என்பது உபாதியினுல் கல்பிக்கப்படுகிறு.

தத்பதார்த்தமான ஈச்வரன் ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டவர் என்று தார்க்கிகர்கள் ஈச்வரனை யுக்தியினுல் தடஸ்த்தம் என்று சொல்கிருர்களே? அவ்விதம் இருக்குமாஞல் ஈச்வரனும் ப்ரத்யகாத்மாவும் ஒன்று என்று எப்படி ஐக்யம் சொல்வது பொருத்தும்? என்ருல்,

இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் தெரிவிப்பதற்காக இந்தச்லோகத்தில் 'அதிநிகடம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதிநிகடம் என்ருல் மிகவும் ஸமீபம் = மிகவும் நெருங்கியது என்று அர்த்தம். அதாவது சரீரம், இந்த்ரியம், புத்தி, அவித்யை என்று பாஹ்யமாக அறியப்படும் விஷயங்களுக்கு அப்பாற்பட்ட ப்ரத்யக்ஸ்வரூபம் எதுவோ அதையே 'பரமபதம்' என்றும், 'அதிநிகடம்' என்றும் சொல்லப்படுகிறது. 'ஏஷ த ஆத்மா ஸர்வாந்தர: என்ற ச்ருதிவாக்யமும் ஸர்வத்திற்கும் ஆந்தரமாக (உள்ளே) இருக்கின்ற ஆத்மாவையே ப்ரத்யக்ஸ்வரூபம் என்றும் தெரிவிக்கின்றது. ஆகவே, அதிநிகடம் என்று ஆத்ம ஸ்வரூபமே சொல்லப்படுகிறது.

**பூர்வ :** "யதோ வா இமானி பூதானி ஜாயந்தே' 'யேனஜாதானி ஜீவந்தி' யத்ப்ரயந்தபி ஸந்விஸந்தீதி" என்ற ச்ருதிவாக்யம், ஜகத் உற்பத்தி ஸ்திதி, லயம் முதலானவைகளைக் கொண்டு தடஸ்த்தமாக பரஹ்மத்தை அறிவிக்கின்றதால், ப்ரஹ்மமென்பது மாறுதலை அடையக்கூடியதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் பரிணுமத்தை அடையக்கூடிய ப்ரஹ்மமென்பது அவிக்ரியம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** 'ந ஜாயதே' 'ம்ரியதே' என்றும் 'ந வர்த்ததே கர்மணு' என்றும் 'அபூர்வம்' 'அனபரம்' 'அவிஞசி' என்றெல்லாம் ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. பிறப்பு இறப்பு அற்றதும், ஷட்பாவ விகாரங்கள் அற்றதும், கார்யகாரணபாவம் அற்றதும், நாசமற்றதுமாக ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது. ஆகவே, எப்படி ம்ருத் என்பது கடமாக மாறுதலை அடைகிறதோ அதுபோல் ப்ரஹ்மமென்பது ஜகத்தாக மாறுபாட்டை அடைவதில்லை. மரயை என்ற உபாதி மூலமாக ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரணமாக சொல்லப்படுவதால் ப்ரஹ்மம் அவிக்ரியம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, விவர்த்தோபாதானம் ப்ரஹ்மமென்று சொல்லப்படுகின்றதால் 'கூடஸ்த்தம்' என்ற தன்மைக்கு விரோதம் ஏதும் இல்லை.

'ஸர்வஞ்ஞாத்மா' என்று லோகப்ரஸித்தமான மஹாமுனிவர், வேதாந்த சாஸ்த்ரங்களின் தத்வார்த்தங்களை நன்கு விசாரித்து நிர்ணயம் செய்திருக்கின்ருர். இந்த முறையில், பகவான் வ்யாஸரால் செய்யப்பட்ட 'சாரீரகமீமாம்ஸை' என்ற சூத்ரங்களுக்கு, பாஷ்யகாரரான சங்கரபகவத்பாதரால் பாஷ்யம் செய்யப்பட்டிருந்த போதிலும் அவைகளும் மிகவும் ஆழ்ந்த கருத்தை உடையதாக (கம்பீரமாக) இருக்கின்றதால் சாதர்ரணமாக எல்லோராலும் அவைகள் புரிந்து கொளளக்கூடியதல்ல. மேலும், பாஷ்யமானது மிகவும் விஸ்தாரமாக இருக்கின்றதால் சொல்லப்படும் விஷயங்களின் தாத்பர்யம் என்ன என்பதை சுலபமாக புரிந்துகொள்ள முடியாது. ஆகையால் சாதாரண ஜனங்களும் சுலபமாக புரிந்துகொள்ள வேண்டுமென்று கருதி, அவர்களுக்கும் இதன் பலன் கிடைக்க வேண்டுமென்று அனுக்ரஹித்து, 'சாரீரகம்' என்ற இந்த சாஸ்திரத்திற்கு வார்த்திகமாக இந்த 'ஸம்க்ஷேபசாரீரகம்' என்ற க்ரந்தம் செய்யப்படுகிறது. வார்த்திகம் என்று சொல்லப்படுவதற்கு உரிய காரணரங்களை மேலே சொல்லப்போகின்றதால் இங்கு அதை விஸ்தரிக்கவில்லை. பகவான்வ்யாஸர், ஆதி சங்கர பகவத்பாதர் என்பவர்களால் செய்யப்பட்ட இந்த சாரீரகமீமாம்ஸா சாஸ்த்ரம் எந்த தத்துவத்தை போதிக்கின்றதோ, அதே தத்வத்தை, இந்த க்ரந்தமானது

போதிக்கின்றதால், சாஸ்த்ரார்த்தத்தை தெரிவிக்கின்ற இந்த க்ரந்தமும் சாஸ்திரம் என்றே சொல்லலாம். இந்தக் க்ரந்தத்தை ப்ரகரணம் என்று சொல்லலாம். இந்த விதம் இந்த க்ரந்தமானது, வார்த்திகமென்றும், சாஸ்திரம் என்றும், ப்ரகரணம் என்றும் சொல்லக்கூடிய லக்ஷணங்களை உடையதாக இருக்கிறது என்பதை ஆங்காங்கே வ்யாக்யானம் செய்கின்ற போது மேலும் விளக்கப்படுகிறது.

இந்த சாஸ்திரத்திற்கு ஜீவப்ரஹ்ம ஐக்யமே விஷயம். அஞ்ஞானம், அதன் கார்யமான ஸம்ஸாரம் என்ற பந்தம், இவைகளிலிருந்து நிவர்த்தியும், ஸ்வஸ்வரூப பரமானந்த ஆவிர்பாவம் என்பதும், இந்த சாஸ்திரத்தினுல் போதிக்கப்படும் ஐக்ய ஞானத்திற்கு ப்ரயோஜனம்.

ஆகவே, இந்த க்ரந்தத்திற்கு விஷயம் என்ன? ப்ரயோஜனம் என்ன? என்புதை, இந்த முதல் ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'அந்ருத ஜட விரோதி ரூபம்' என்பதால் லக்ஷ்யமானப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் 'முராரே: பரமபதம்' என்பதால், விஷ்ணுவின் அவதாரமான கிருஷ்ணபரமாத்வையே முராரி என்ற பதம் குறிப்பிடுவதாக ஸாதாரணமாக அறியப்பட்ட போதிலும், விஷ்ணுவின் பரரூபமான = அதாவது விஷ்ணு சப்தவாச்யார்த் தத்திற்கு பரமஸ்வரூபம் எதுவோ, அந்த நிரதிசய நிர்விசேஷஸ்வரூபத்தையே முராரி என்ற பதம் தெரிவிக்கின்றது. அதிசயம் என்ருல் இல்லாத விசேஷங்களை இருப்பதாக காட்டக்கூடிய அதிசயத் தன்மை மாயைக்குத்தான் இருக்கிறது. ஆகையால் மாயா ஸம்பந்தம் அற்ற ஸ்வரூபம் என்பதை, நிரதிசயம் ஸர்வஉத்க்ருஷ்டட்டம் என்ற பதங்களால் போதிக்கப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தை 'அஹம் அபீஷ்ட்டவீமி' என்று சொல்லப்படுகிறது. அபீஷ்ட்ட வீமி =அபித: ஸர்வாத்மபாவேன, ஸ்தவீமி ='ஸ்து' என்ற தாத்வர்த்தத்தினுல், ஸ்தோத்ரம் செய்கிறேன் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. 'ச்ருதி ஸ்ம்ருதி இதிகாஸ புராணுதிகளில் 'முராரி'யின் பரஸ்வரூபம் எவ்விதம் சொல்லப்படுகிறதோ அந்த ப்ரத்யகபின்ன ஸ்வரூபத்தை ஸ்தோத்ரம் செய்கின்றேன். இவ்விதம் தெரிவிப்பதன் மூலமாக, இப்பேர்ப்பட்ட ப்ரஹ்மஸ்வரூபம் இன்னதென்று நிர்ணயம் செய்வதற்காகவே இந்த க்ரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது என்பது அறியப்படுகிறது. 'ப்ரணய:' என்ற பதத்தினுல் பரமபதம் ஒன்றே புருஷார்த்தம் என்று அறிந்து அதில் ஏற்பட்ட ப்ரீதியின் காரணமாகவே, இந்தக்ரந்தம் செய்யப்படுகிறதே அன்றி க்யாதியை உத்தேசித்தோ அல்லது என்னை பூஜிக்க வேண்டுமென்பதற்காகவோ செய்யப்படவில்லை என்று தெரிவிக்கப்படுகிறது. சாஸ்திரங்களிலிருந்து அறியப்பட்ட தத்வநிஷ்ட்டைக்கு எந்தவிதமானவிச்சேதமும் ஏற்படாமல் இருப்பதற்காக, (தத்சிந்தனம், தத்கதனம், அன்யோன்யம் தத்ப்ரபோதனம் ஏதத்ஏக பரத்வஞ்ச ப்ரஹ்மாப்யாஸம் என்று சொல்லப்பட்டபடி) சித்தத்தை இந்த விஷயத்திலேயே ஈடுபடுத்தவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது.

'பரமபதம்' என்பது 'இதுதான்' என்று வாக்கினுல் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியது அல்ல. அதனுல் 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம, என்ற வாக்யம், அந்ருதமில்லை, ஜடமில்லை, அந்ருத ஜட விரோதி ரூபம் என்று லக்ஷணையாக தெரிவிக்கின்றது. 'அந்ருதம்' என்ற பதத்தினுல் எந்த வஸ்து குறிக்கப்படுகிறதோ, அந்தவஸ்து, எந்த இடத்தில் எப்படி இருப்பதாக அறியப்படுகிறதோ அந்தவிதம் அந்த இடத்தில் அந்தவஸ்து இருக்கிறதா? என்று விசாரிக்கின்றபோது, அந்தவஸ்து இல்லாமற் போகுமானுல் அதையே 'அந்ருதம்' என்று சொல்லப்படும். உதாரணமாக, நம் கண்

முன்னால் காணப்படுகின்ற ஒரு வஸ்து இதம் ரஜதம் = இது வெள்ளி என்று அறியப்படுகிறது. மறுபடி அந்த வஸ்துவை நன்கு உற்று பார்க்கின்றபோது– இது வெள்ளி அல்ல–கிளிஞ்சல் என்று அறியப்படுகிறது. இந்தவிதம் முன்னால் வெள்ளி என்று ஏற்பட்ட ஞானத்திற்கு விபரீதமாக, கிளிஞ்சல் என்ற ஞானம் ஏற்படுமானல் முன்னல் பார்க்கப்பட்ட வெள்ளி என்பது அந்ருதம் என்ற விவகாரம் லோகப்ரஸித்தமாக இருக்கிறது. ஆகவே, எந்தவஸ்து எந்த இடத்தில் இருப்பதாக அறியப்படுகிறதோ, அந்த வஸ்து உண்மையில் அங்கு இல்லையென்று நிஷேதம் (பாதம்) செய்யப்படுமானல், அவ்விதம் நிஷேதம் செய்யப்படுகின்றவஸ்து எதுவோ அதையே அந்ருதம் என்று சொல்லப்படும்.

'ஜடம்' என்று எந்த வஸ்து குறிப்பிடப்படுகிறது என்றால், எந்த வஸ்துவானது தன்னுடைய சித்திக்காக, தனக்கு வேருக இருக்கின்ற ஸ்வபாவமுடைய ப்ரகாசம் என்பதை அபேக்ஷிக்கின்றதோ அதுவே ஜடம். கடம், படம், முதலானவைகள் தன்னைக் காட்டிலும் வேறுபட்டதான சைதன்யத்தினுல் ப்ரகாசிக்க வேண்டியிருக்கின்றது. இது போன்று, ஸர்வப்ரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்கள் எல்லாமே, சைதன்யத்தினுல் தான் ப்ரகாசிக்க வேண்டியிருக்கிறது என்பதால் சைதன்யத்திற்கு வேருன ஸர்வபதார்த்தங் களும் ஜடம் என்றே சொல்லவேண்டும். எது ஜடமோ அது அந்ருதமாகத்தான் இருக்கும், எது அந்ருதமோ அது ஜடமாகத் தான் இருக்கவேண்டும். ஜடம் என்றாலே கார்யம் என்றும் விகாரம் என்றும் அறியப்படுகிறது. அதுவே அந்ருதம் என்று அறியவேண்டும். ஜாட்யம் என்பதும் அந்ருதம் என்பதும் இரண்டும் வ்யபிசரிப்பதில்லை. இரண்டும் தொடர்ந்தே அந்தவஸ்துவில் இருக்கும். உதாரணமாக, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியென்பது அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கிறது. இதே போல் புத்திமுதல் தேஹபர்யந்தம் உள்ள எல்லாமே ஜடம் என்று அறிய வேண்டும். இவ்விதமே அத்யாத்மத்தில் உள்ள பஞ்சகோசங்கள், அதிதெய்வத்திலுள்ள கோசங்கள் எல்லாமே ஜடம் என்று அறியவேண்டும். ஏனெனில் தேஹாதிகளுக்கு வேறுபட்ட ஸ்வபாவம் உடைய சைதன்யத்தினுலேயே இவையெல்லாம் ப்ரகாசிக்க வேண்டி இருக்கிறது. புத்தி முதல் தேஹபர்யந்தமுள்ள ஜடமான இவையெல்லாமே உண்டாகி நசிக்கக் கூடியதாக இருக்கிறது. அதனுல் அவைகள் அந்ருதம். எப்படி கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி, முன்னுலும் இல்லாமல், பின்னுலும் இல்லாமல், நடுவில் தோன்றி மறைகின்றதோ, அது போல் தேஹாதிகளும் ஒருஸமயம் இருந்து, மற்றொரு ஸமயம் இல்லாமற்போகின்றதால் அந்ருதம் என்று சித்திக்கிறது. ஆகவே, 'அந்ருதம்' என்ற பதம், ஸத்யம் என்ற பதத்திற்கு எது லக்ஷ்யமோ, அதற்கு விரோதி. 'ஸத்யம்' என்று எந்த வஸ்து சொல்லப்படுகிறது என்றால், எந்த வஸ்து முதலில் இருக்கிறதாகத் தோன்றி, பின்னுல் அதை விசாரிக்கின்ற போது, அது இல்லை என்று நிஷேதம் செய்யப்படுகிறதோ அது அந்ருதம்,இப்பேர்ப்பட்ட அந்ருதமான வஸ்து எதில் இல்லை? எங்கு இல்லை? என்று நிஷேதம் செய்யப்படுகிறதோ அந்த நிஷேத அவதியாக இருக்கின்ற வஸ்து எதுவோ அதையே 'ஸத்யம்' என்று சொல்லப்படுகிறது.

உதாரணம் : கிளிஞ்சல் என்பது ஏதோ ஒருஸமயம் வெள்ளியென்று தோன்றுகிறது. அந்த இடத்தில் அது வெள்ளிதானு? என்று விசாரிக்கின்ற போது அவ்விதம் வெள்ளியென்று தோன்றிய ப்ராந்திஞானம் கிளிஞ்சல் என்ற உண்மையான வஸ்து ஞானத்தினுல் பாதிக்கப்படுகிறது. இவ்விதம் பாதிக்கப்படும் வெள்ளி அந்ருதம். பாத அவதியாக இருக்கின்ற கிளிஞ்சல் ஸத்யம் என்றும், அதே போல் இந்தகயிறுஸத்யம்.

இந்த கானல் ஸத்யம் என்று சொல்லப்படுகிறை போது 'இது' என்று 'இதம்' அம்ஸத்துடன் ஏதோ ஒரு விசேஷணத்தைச் சேர்த்தே இது ஸத்யம் என்று சொல்கிறோம் ஆனுல் விசேஷாம்ஸங்கள் எல்லாமே ஒருஸமயம் இருக்கும், ஒருஸமயம் இல்லாமற் போகும். அதனுல் விசேஷாம்ஸங்கள் எல்லாமே அந்ருதம் தான். ஆனுல் எல்லாவற்றிலும் தொடர்ந்து இருக்கின்ற இதம் என்ற அம்ஸம் மட்டும் ஒரு போதும் பாதிக்கப் படுவதில்லை. அதுவே ஸத்யம், விசேஷாம்ஸங்கள் எல்லாமே, அததற்குரிய காரணும் ஸமாத்ரமாகவே எஞ்சிநிற்கும். ஆகவே, ஸர்வத்திலும் பாதிக்கப்படாத இதம் அம்ஸம் ஒன்றே ஸத்யம்.

லோகத்தில், கடம் இருக்கிறது, படம் இருக்கிறது என்றும், நான் இருக்கிறேன் அவன இருக்கிருன் என்றும், இந்த தேஹம் இருக்கிறது, அந்த தேஹம் இருக்கிறது என்றும் சொல்லப்படுகின்றபோது, எல்லாவற்றிலும், தொடர்ந்து 'அஸ்தி' யென்றும் 'அஸ்மி' யென்றும் சொல்லப்படுகிறது. அதாவது இருக்கிறது என்றோ இருக்கிறேன், இருக்கிருன் என்றோ சேர்த்துச் சொல்லப்படுகிறது. இவ்விதம் கடம் இருக்கிறது என்று சொல்லும் போது கடம் என்ற விசேஷணத்தை விட்டுவிட்டால் இருக்கிறது என்ற ஒன்றே கடைசீயாக மிஞ்சி நிற்கிறது. அதுவேஸத்யம். அதுவேஸத்யபதத்தின் லக்ஷ்யார்த்தம்.

தேஹாதிகளுக்கு வெளியில் அறியப்படும் வஸ்துக்களை இதம் என்றும், தேஹாதிகளை அஹம் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இவ்விதம் இதம் என்பதிலும் அஹம் என்பதிலும் தொடர்ந்து வருகின்ற அஸ்தி என்பதும் அஸ்மி என்பதுமே ஸத்யம். மற்ற கடம், படம் என்ற விசேஷணங்களுடன் சேர்ந்தே கடம் அஸ்தி, படம் அஸ்தி, யென்றும் அதேபோல் தேஹமென்ற விசேஷணத்துடன் சேர்த்து அஹமஸ்மி என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இந்தவிதம் அறியப்படும் விசேஷணங்களை எல்லாம் விட்டு எது எல்லாவற்றிலும் தொடர்ந்து இருக்கின்றதோ அந்த வஸ்துவை மட்டும் பாகத்யாக லக்ஷணையினுல் அறியவேண்டும். அது ஒன்றேஸத்வம். அதுவே ஸத்ய பதத்தத்தின் லக்ஷ்யார்த்தம். இதுவரை அந்ருத ஜட விரோதிருபம் என்பது, ஸத்யம், ஞானம், என்று அர்த்தம் செய்யப்பட்டது.

'அந்தத்ரய, மல பந்தன துக்கதா விருத்தம்' என்ற பதங்களுக்கு என்ன அர்த்தம்? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

அந்த த்ரயம் = மூன்று வித முடிவு. காலம், தேசம் வஸ்து என்ற மூன்றினுலும் முடிவை உடையவஸ்துக்களை 'அந்தத்ரயம்' என்ற பதங்கள் தெரிவிக்கின்றது.

ஒரு இடத்தில் இருந்து மற்றோர் இடத்தில் இல்லாமல் இருக்குமானுல் அந்த வஸ்து தேசபரிச்சேதமுள்ளது. அதாவது தேசத்தினுல் முடிவுள்ளது என்று சொல்லப்படும். அதேபோல் ஒரு காலத்தில் இருந்து, மற்றோர் காலத்தில் இல்லாமல் இருக்குமானுல் அந்த வஸ்து காலபரிச்சேதம் உள்ளது என்றும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவாக இல்லாமல் இருப்பதால் அது வஸ்து பரிச்சேதமுள்ளது என்றும் சொல்லப் படும். ஆதியும், அந்தமும் உள்ளதாக இருக்கின்ற வஸ்து எல்லாமே தேசத்தினுலும், காலத்தினுலும், வஸ்துவினுலும் பரிச்சேதம் உடையதாகவே இருக்கின்றது. உதாரணமாக கடம், தேஹமல்ல, தேஹம் கடமல்ல. இது வஸ்துபரிச்சேதம். ஒருஸமயம் இருந்து மற்றோர் ஸமயம் இல்லாமல் இருப்பது கால பரிச்சேதம். இந்த இடத்தில் இருந்து மற்ற இடங்களில் இல்லாமல் இருப்பதை தேசபரித்சேதம் என்று சொல்லப்படும். கடம் படமல்ல, படம் கடமல்ல என்று ஒன்றுக்கொன்று எல்லாமே அபாவரூபமாகவே இருக்கிறது.

**பூர்வ :** ஆகாசம், காலம், திக், என்பவைகள் எல்லாமே வ்யாபகம் என்றும் நித்யம் என்றும் சொல்லப்படுகின்றதே?

**சித்தா :** ஆகாசம், காலம், திக் என்று ஒன்றுக்கொன்று வேறுபட்டதாக இருக்கின்ற தாலும், அன்யோன்ய அபாவமுள்ளதாக இருப்பதாலும் வஸ்து பரிச்சேதம் உள்ளதாகவே இருக்கின்றது. அதனுல் அவைகள் அநித்யமே. மேலும், உற்பத்தி ப்ரளயம் உள்ளதாக இருப்பதால் அவைகளுக்கும் முடிவு உண்டு என்பதை ச்ருதி வாக்யங்களே தெரிவிக்கின்றது. 'நேஹ நாஞஸ்தி கிஞ்சன' என்ற வாக்யம் இவைகள் எதுவுமே இல்லையென்று தெரிவிக்கிறது. இவ்விதம் முடிவு உள்ள வஸ்துக்கள் எல்லாம் 'எதில் இல்லை'யென்று பாதிக்கப்படுகின்றதோ (நிஷேதம் செய்யப்படுகிறதோ) அந்தவஸ்து, முக்காலத்திலும் தொடர்ந்து இருக்கிறது. அந்த வஸ்துவே, நிஷேத வஸ்துக்களின் அவதிஸ்வரூபமாக இருக்கிறது. இந்த ஸ்வரூபமே, அந்தத்ரய விரோதி ரூபம் என்று சொல்லப்படுகிறது. அந்தத்ரயங்களும் அற்றதான இந்தஸ்வரூபமே 'அனந்தம்' என்ற பதத்தினுல் குறிப்பிடப் படுகிறது.

எந்தவஸ்து இல்லை என்று நிஷேதம் செய்யப்படுகிறதோ அந்த வஸ்துவை நிஷேத ப்ரதியோகி என்று சொல்லப்படும். ஆகவே, இந்தவிதம் நிஷேத ப்ரதியோகியாக இருக்கின்ற ப்ரபஞ்சம் 'அந்தமுள்ளது' என்பதாக அறியப்படுகிறது. ஆகவே, முடிவு (அந்தம்) உள்ளதாக இருக்கின்ற வஸ்துக்கள் எல்லாமே நிஷேத ரூபமாக இருக்கின்றதால், நிஷேத அவதி ஸ்வரூபமாக எஞ்சி இருப்பது எதுவோ அதுவே அனந்தம் என்று லக்ஷ்யார்த்தமாக அறியப்படுகிறது. ஆகவே, 'அந்தத்ரய விரோதிரூபம்' என்பது லக்ஷணையாக 'அனந்தம்' என்ற பரமபதத்தையே போதிக்கின்றது.

மலவிருத்தமான இந்த பரமபதம் என்பது மலஸம்பந்தம் அற்றது. நித்யசுத்தம். கண்ணுடியானது சேற்றினுல் அசுத்தமாக இருக்குமாஞல் அதில் நமது ஸ்வரூபம் தெரியாது. அதுபோல் அந்த:கரணம் என்பது, ராகம், த்வேஷம் முதலான மலங்களால் அசுத்தமாக இருக்கின்றதால் அதில் நமது உண்மையான ஸ்வரூபம் ப்ரதிபலிக்க முடியாமல் அவைகள் இடையூருக இருக்கின்றது. ஆனுல், கண்ணுடியில் இருக்கின்ற மலங்கள் எப்படி நமது ஸ்வரூபத்தில் சம்பந்தப்படுவதில்லையோ அதுபோல் அந்த:கரணத்தில் உள்ள மலங்கள் பரமபதம் என்று சொல்லப்படும் ஸ்வஸ்வரூபத்தில் ஸம்பந்தப்படுவதில்லை. அதனுல் மலரஹிதம் = சுத்தம் என்று சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட சுத்தமான பரமபதம் என்பதை அறியவொட்டாமல், அநிர்வசனீயமான அவித்யையென்பது தடுக்கின்றது. 'அந்ருதேன ஹி ப்ரத்யூடா' என்று, மூடுபனியானது எப்படி இருக்கின்ற வஸ்துவை தெரியவொட்டாமல் மறைக்கின்றதோ, அதுபோல், அவித்யை என்பதும் நமது உண்மையான ஸ்வரூபத்தை தெரியவொட்டாமல் மறைக்கின்றது என்று சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றது. அவித்யையினுல் ஸ்வஸ்வரூபம், உண்மையில் எவ்விதம் இருக்கின்றதோ அவ்விதம் அறியப்படவில்லை என்பதற்கு அனேக ச்ருதிவாக்யங்களேப்ரமாணமாக இருக்கிறது. ஆகவே, அவித்யா ஸம்பந்தத்தினுல் ப்ரத்யகாத்மா அசுத்தம் என்று ராகத்வேஷங்கள் போன்ற விசேஷணங்களை விட்டு அறியப்படுகின்ற ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் எதுவோ, அதையே இங்கு மலவிருத்தம் என்று சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட சுத்தஸ்வரூபமே பரமபதம் என்று சொல்லப்படுகிறது.

**பந்தனவிருத்தம் :** பந்தனம் என்ருல் கட்டுப்பட்ட தன்மை = ஸ்வதந்த்ரமில்லாத தன்மை. கயிற்றினுல் கட்டப்பட்டிருக்குமாஞல் அதற்கு ஸ்வதந்திரம் கிடையாது. ஆகையால்

பந்தனம் இல்லாத தன்மையே முக்தி என்று சொல்லப்படும். (கட்டி இருக்கின்ற பசுவை அவிழ்த்து விட்டால் தான், அது ஸ்வதந்திரமாக இருக்க முடியும்.) இதே போல், சுத்த சைதன்யம், உபாதிஸம்பந்தத்துடன் அறியப்படுகின்ற போது பந்தம் இருப்பது போல் தோன்றுகிறது. உண்மையில் உபாதி அற்ற ஸ்வரூபம் ஸ்வதந்தரம் என்பதையே, 'பந்த விருத்தம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'விமுக்தச்ச விமுச்யதே' என்ற ச்ருதிவாக்யத்தின்படி முக்தபதமானது 'ஸத் சித் ஸ்வரூபமாத்ரமான பரமபதத்தையே லக்ஷணையாக தெரிவிக்கின்றது. இந்த விதம் 'பந்தன விருத்தம்' என்ற பதங்கள், 'நித்ய முக்த பரமபதம்' என்பதை லக்ஷணையினுல் போதிக்கின்றது என்று அறியவேண்டும்.

துக்கதா விருத்தம் : துக்கதா என்ருல் துக்கத்தின் தன்மை என்ற அர்த்தம் அறியப்படுகிறது என்ருலும், 'துக்கம்' என்றே அர்த்தம். துக்க விருத்தம் என்ருல் சுகம் என்பது லோகப்ரஸித்தம். இவ்விதம் லோகப்ரஸித்தமான போஜனம் முதலான அனேக விஷயங்களால் ஏற்படும் சுகம் என்பது, விஷயங்கள் மூலமாக ஏற்படுகின்றதால் அந்த சுகம், நிரூபாதிக ப்ரேமாஸ்பதமான சுகம் அல்ல. நிரூபாதிக ப்ரீதிவிஷயகமான சுகம் என்பது லௌகீகவிஷய சுகங்களில் கிடையாது. பஞ்ச இந்திரியங்களினுல் அனுபவிக்கப்படும் ரூப, ரஸ, கந்தம் முதலானவைகளில் 'சுகம்' என்பது தொடர்ந்து இருக்கின்றது என்ருலும் இந்த சுகம், அந்த:கரணவ்ருத்தி ப்ரதிபலிதரூபமாக அந்தந்த விஷயாகாரத்துடன் சேர்ந்தே அறியப்படுகிறது. ரூபம், ரஸம், என்ற விசேஷணங்களை விட்டு அந்த விஷயங்களில் அனுஸ்யூதமாக இருக்கின்ற, விசேஷணங்கள் அற்ற, அனவச்சின்னமான சுகம் எதுவோ அதுவே 'ஆனந்தம் ப்ரஹ்ம' என்று ஆனந்த சப்தத்தினுல் லக்ஷணையாக போதிக்கப்படுகிறது. ஆகவே, துக்கதாவிருத்தம் என்ற பதத்தினுல் ஆனந்தஸ்வரூபம் என்பதை லக்ஷணையினுல் போதிக்கின்றது.

இந்தவிதம் அந்ருத ஜட விரோதிரூபம் அந்தத்ரய மலபந்தனதுக்தாவிருத்தம் என்பதால் த்ரிவித பரிச்சேதமுள்ளதும், அசுத்தமாகவும், அஸ்வதந்தரமாகவும், நிரூபாதிகப்ரேமாஸ்பதமாக இல்லாததான இந்த ப்ரபஞ்சத்தின் தன்மைக்கு விரோதமாக இருக்கின்ற ஸத்யஞானனந்த சுத்தமுக்த பரமானந்தஸ்வரூபம் எதுவோ அதுவே பரமபதம் என்றும் இதுவே தத்பதலக்ஷ்யார்த்தம் என்பதும் இதனுல் நிர்ணயம் செய்யப்பட்டது.

**பூர்வ** : அந்ருத ஜட விரோதி ரூபம் என்ற பதங்கள், ஸத்யம் ஞானம் அனந்தம் என்று ப்ரஹ்மஸ்வரூபத்தையே லக்ஷணையினுல் போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது என்பது சரியே. ஆனுலும், விரோதித்வம் என்றவிசேஷணம் ஸத்யாதி பதங்களுடன் சேர்ந்து அறியப்படுகிறதே? அதனுல், லக்ஷ்யதா அவச்சேதகம் என்பதால் பேதம் இருப்பதாகவே, அறியப்படுகிறதே?

**சித்தா** : விசாரிக்கப்பட்ட முறையில் பேதம் இருப்பது போல் தோன்றினுலும், அகண்டார்த்த போதம் ஏற்படுமானுல் எந்தவிதமான பேதமும் அறியப்பட முடியாது என்பது ஞானிகளின் அனுபவத்தைக் கொண்டே சித்திக்கின்றது. ஆகவே, 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்ற லக்ஷ்யார்த்தத்தில் 'அந்ருத ஜட விரோதித்வம்' என்பது உண்மையில் இருப்பதாக நிரூபிக்க முடியாது' ஸத்யம் ஞானம் அனந்தம்' என்ற எல்லா பதங்களும் ஒன்ருகச் சேர்ந்து அகண்ட ஏக ரஸமான ஒரே வஸ்துவையே போதிக்கின்றது.

அதிநிகடம் = அதிஸமீபம். இதுவரை சொல்லப்பட்ட லக்ஷணங்களுடைய பரமபதம் என்பதும், ப்ரத்யகாத்மா என்பதும் ஒன்று தான் என்று எந்த யாதாத்ம்யம்

(ஐக்யம்) 'தத்வமஸ்யாதி' வாக்யங்களால் சித்திக்கின்றதோ, அந்தஸ்வரூத்தையே 'அதிநிகடம்' என்ற பதம் தெரிவிக்கின்றது. 'அதிஸமீபம்' என்ற விசேஷணத்தினுல் 'அதுவேதான்' 'அதையன்றி வேறில்லை' என்ற அர்த்தம் கிடைக்கின்றது. மூர்த்தமாக இருக்கின்ற க்ருத்திகாநக்ஷத்ரம் உதயமானுல் அதன் ஸமீபம் மூர்த்தமான ரோஹிணி நக்ஷத்ரம் இருக்கும் என்பது போல், ஒன்றுக்கு ஸமீபம் மற்றொன்று இருப்பது போல் ஸாமீப்யம் என்ற அர்த்தத்தில் சொல்லப்படவில்லை. என்பதை தெரிவிப்பதற்காகவே, அதிநிகடம் அதுவேதான் என்று தெரிவிக்கின்றது. ஆகவே அதிநிகடம் என்பதே பரமபதம்.

**பூர்வ :** அவிக்ரியம், என்றும் அதிநிகடம், என்றும், பரமபதம் என்பது போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுமானுல், கர்த்ருத்வ, போக்த்ருத்வமுள்ள விகாரியான ப்ரத்யகாத்மாவிற்கு இந்தலக்ஷணம் எப்படி பொருந்தும்?

**சித்தா :** நிரயவம், நிஷ்க்ரியம், கூடஸ்த்தம், என்று சொல்லப்படும் நிர்விசேஷ ப்ரஹ்மத்திற்கும், ப்ரத்யகாத்மாவிற்கும் பேதம் என்பதே கிடையாது. ஸ்வயமே ப்ரத்யகாத்மாவில் எந்த விகாரமும் கிடையாது. அந்த:கரணம் என்ற உபாதி அற்ற சுஷுப்தி அவஸ்த்தையில் எந்தவிதமான க்ரியையும் இருப்பதாக யாராலும் நிரூபிக்க முடியாது. ஆகவே, ப்ரத்யகாத்மாவில் அத்யஸ்த்தமான அந்த:கரணம் என்ற உபாதியில் இருக்கின்ற கர்த்ருத்வ, போக்த்ருத்வரூபமானக்ரியைகள் ஆத்மாவில் இருப்பதாக தோன்றுகிறது. உண்மையில் ப்ரத்யகாத்மாவில் எவ்வித விக்ரியையும் கிடையாது என்பதால் ப்ரத்யகபின்னப்ரஹ்மமென்பது அவிக்ரியம் என்றும் அதுவே பரமபதம் என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

இந்த ச்லோகத்தில், 'முராரி' என்ற சப்தமானது, சுத்தஸத்வ குணப்ரதானமான மாயை என்ற உபாதியில் ப்ரதிபிம்பிக்கின்ற ஈச்வரசைதன்யத்தையே குறிக்கின்றது. ஸத்வ குணப்ரதானமாகவும், விக்ஷேப லக்ஷணமுடையதாகவும் இருக்கின்ற காரண உபாதியான மாயை என்பதில் ப்ரதிபிம்பிக்கின்ற சைதன்யம், இது பிம்பம் இது ப்ரதிபிம்பம் என்று வேறுபடுத்தி அறியமுடியாமல், தத்பதவாச்யார்த்தமாக இருக்கின்ற ஸ்வரூபம் எதுவோ, அதுவே ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது. இதேபோல், ரஜோகுணம், தமோகுணம் மேலிட்ட மலின ஸத்வகுணமுடைய அந்த:கரண ப்ரதிபலன சைதன்யமே த்வம்பத வாச்யார்த்தமான ஜீவன் என்று சொல்லப்படுகிறது. அல்லது கார்ய உபாதியாகவும், ஆவரணலக்ஷணமுடையதாகவும் இருக்கின்ற அவித்யா ப்ரதிபிம்ப சைதன்யமே, த்வம்பதவாச்யார்த்தமான ஜீவன் என்று சொல்லப்படுகிறது.

இந்த விதம் ஒரே சைதன்யமே, காரண உபாதி என்ற மாயை, கார்ய உபாதி என்ற அவித்யை என்ற இரண்டிலும் ப்ரதிபலிக்கின்றது என்ருலும், சுத்தஸத்வம், மலினஸத்வம் என்ற குணதாரதம்ய பேதத்தினுல் ஈச்வரன் என்றும் ஜீவன் என்றும் பேதம் அறியப்படுகிறது. ஆகையால், கார்யம், காரணம் என்ற உபாதி பேதங்களை விட்டு, அவைகளில் தொடர்ந்து இருக்கின்ற சைதன்யம் எதுவோ அதுவே 'கூடஸ்த்தம்' அவிக்ரியம் என்று வாஸ்தவமான ஸ்வரூபம் போதிக்கப்படுகிறது.

'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம', 'விஞ்ஞானம் ஆனந்தம் 'ப்ரஹ்ம' என்ற உபநிஷத்வாக்யங்கள் எல்லாம் நிர்விசேஷப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற அவாந்தர வாக்யங்கள். அந்ருத ஜட விரோதி ரூபம் என்றும், அவிக்ரியம் என்றும் சொல்லப்பட்ட விசேஷணங்கள் எல்லாம், இந்த அவாந்தர வாக்யங்களின் தாத்பர்யமான 'தத்' பதார்த்த

லக்ஷ்யார்த்தத்தையே தெரிவிக்கின்றது. இவ்விதம் சொல்லப்பட்ட தத்பதலக்ஷ்யார்த்தத்துடன் 'அதிநிகடம்' என்றபதம் சேர்க்கப்பட்டிருப்பதால், தத்பதார்த்தம் எதுவோ அதுவே, த்வம்பதலக்ஷ்யார்த்தமானப்ரத்யகாத்மா என்று இரண்டிற்கும் அபேதம் போதிக்கப்படுகிறது. ஆகவே, மஹாவாக்யத்தின் தாத்பர்யார்த்தமே அதிநிகடம் என்ற பதத்தினுல் போதிக்கப் படுகிறது. இந்த விதம், அந்ருத ஜட விரோதி ரூபம், அவிக்ரியம், அதிநிகடம், என்ற பதங்கள் ஜீவபரமாத்ம ஐக்யத்தையே போதிக்கின்றது. இதனுல் இந்த க்ரந்தத்திற்கு விஷயம் என்ன? என்பதை இதன் மூலம் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தை அறிந்து கொள்வதால் என்னப்ரயோஜனம்? என்ருல், அந்தத்ரய, மல, பந்தன, துக்கதா விருத்தம் என்ற, இந்த விசேஷணங்கள் அற்றதானஸ்வரூபம் எதுவோ, அதுவே பரமபதம் என்றும், பரமபதம் என்பதே புருஷார்த்தமானதால் அதுவேப்ரயோஜனம். இதனுல் அஞ்ஞாதம்ப்ரஹ்ம விஷயம் ஞாதம்ப்ரஹ்ம ப்ரயோஜனம் என்பது சித்திக்கின்றது. அவித்யையோ, அதன் கார்யமோ ஸம்பந்தப்படாததும் அனவச்சின்னமாக (அபரிச்சின்ன) பரமானந்த லக்ஷணமுடைய ஸ்வரூபப்ராப்தி என்பதே இந்த க்ரந்தத்தின் ப்ரயோஜனம். ஆகவே, இந்த க்ரந்தத்திற்கு விஷயம் என்ன? ப்ரயோஜனம் என்ன? என்ற இரண்டையும் முதல் ச்லோகத்தின் மூலம் விளக்கப்பட்டது.

இந்த க்ரந்தத்திலுள்ள முதல் நான்கு ச்லோகங்களும், ஸ்ரீமத் சாரீரக சாஸ்திரத்திலுள்ள நான்கு சூத்ரங்களின் கருத்துக்களையே தெரிவிக்கின்றது.

**2. அவதாரிகை :** இதுவரை, இந்த க்ரந்தத்தின் முதல் ச்லோகத்தில், 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற இரண்டாவது சூத்ரார்த்தடான 'தத்பதார்த்தம்' பற்றி சுருக்கமாக விளக்கப்பட்டது. இவ்விதம் தத்பதார்த்தம் விளக்கப்பட்டதன் மூலமாக இந்த க்ரந்தத்திற்கு 'ஜீவப்ரஹ்ம ஐக்யம்' விஷயம் என்று தெரிவிக்கப்பட்டது. இப்போது, இந்த இரண்டாவது ச்லோகத்தில் 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரார்த்தத்தை விளக்குவதன் மூலமாக 'த்வம்பதார்த்தம்' பற்றி சுருக்கமாக விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** **स्वाज्ञानकल्पितजगत्परमेश्वरत्वजीवत्वभेदकलुषीकृतभूमभावा ।**
**स्वाभाविकस्वमहिमस्थितिरस्तमोहा प्रत्यक्चितिर्विजयते भुवनैकयोनिः ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மாவையே, ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானத்தினுல், ஜகத் என்றும், ஈச்வரனென்றும், ஜீவனென்றும் கல்பிக்கப்பட்ட பேதத்தினுல், ஸ்வாபாவிகமான தன்னுடைய பூர்ண தன்மை மறைக்கப்பட்டிருந்த போதிலும், உண்மையில் அஞ்ஞானமற்ற தன்னுடைய ஸ்வாபாவிக மஹிமையினுல்ஸ்திதி பெற்றிருப்பதால் எவ்வித மாறுபாடும் அடையாமல், ஜகத்திற்கு ஒரே காரணமாக ப்ரத்யக்சைதன்யம் ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்கின்றது.

**வ்யாக்யானம் :** த்வம்பத லக்ஷ்யமானதும், அஹங்கார உபலக்ஷிதமாகவும் இருக்கின்ற 'ஜீவசைதன்யம்' என்பதே, இங்கு ப்ரத்யக் சைதன்யம் என்று குறிப்பிடப் படுகிறது த்வம்பதலக்ஷ்யமான இந்தப்ரத்யக்சைதன்யம், உபாதி அற்ற ஸ்வாபாவிக ஸ்வரூபத்தில், தன் மஹிமையினுல் ப்ரகாசிக்கின்றது என்பதை 'ஸர்வோத்கர்ஷேண' என்ற விசேஷணத்துடன் தெரிவிக்கப்படுகிறது. இதன் மூலம், தத்பதலக்ஷயார்த்தத்துடன் சேர்ந்து ஏகரூபமாக ப்ரகாசிக்கிறது என்ற கருத்தை தெரிவிக்கப்படுகிறது.

ஸம்ஸாரியான ஜீவனுக்கு, தத்பதலக்ஷ்யார்த்தமான ப்ரஹ்மத்துடன் அபேதம் எப்படி ஸம்பவிக்க முடியும்? என்ற சங்கைக்கு உத்தரமாகவே, 'புவனைகயோனி:' என்று ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரே சித்ஸ்வரூபமே, கார்ய உபாதி என்ற அந்த:கரணத்தில் ப்ரதிபலிக்கின்றபோது ஜீவன் என்றும், அதே சைதன்யம் காரண உபாதியான மாயையில் ப்ரதிபலிக்கின்ற போது, ஜகத் காரணமான ஈச்வரன் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இந்த கருத்தையே "அனேன ஜீவேன ஆத்மனு அனுப்ரவிச்ய நாமரூபேவ்யாகரவாணி" என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. இந்த வாக்யத்தினுல், ப்ரஹ்மமே ஸர்வத்திலும் ஜீவ ரூபேண ப்ரவேசித்ததாகச் சொல்லப்படுகிறது. ஆகவே லக்ஷ்யார்த்தத்தில் எந்த விதமான பேதமும் கிடையாது.

**பூர்வ :** அப்படியானுல், துக்கித்வம், பரிச்சின்னத்வம் உள்ளவனுக ஜீவன் அறியப் படுவதற்கு காரணமென்ன?

**சித்தா :** ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயித்து, அதையே விஷயமாகக் கொண்ட அனுதிபாவரூபமான அஞ்ஞானம் என்பது, தனக்கு ஆச்ரயமாக இருக்கின்ற பூரண ஆனந்தஸ்வரூபத்தை மறைத்து, ஜீவன் ஈச்வரன், ஜகத் என்ற ஸர்வபேதங்களையும் தோற்றுவிக்கின்றது. இந்த காரணத்தினுல்தான் பரிச்சின்னம் உள்ளவனுகவும், துக்கம் உள்ளவனுகவும் அறியப்படுகிறுன். இந்த விதம் மூன்று விதமான பரிச்சேதமுள்ளதாக அறியப்படும் ஸ்வரூபம் எதுவோ அதுவே த்வம்பதவாச்யார்த்தம் என்று சொல்லப் படுகிறது. அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்பட்ட இந்த அப்ரஹ்மபாவத்தினுல், ஸ்வாபாவிக ப்ரஹ்ம பாவத்திற்கு எவ்வித ஹானியும் கிடையாது. ஆகையால், பூர்ணமான தன் ஸ்வாபாவிக ஸ்வரூபத்தில் ப்ரத்யகாத்மா தன்மஹிமையினுல் எப்போதும் ப்ரகாசிக்கின்றது. ஆகவே, அந்ருத ஜட விரோதி ரூபம், 'அவிக்ரியம், பரமபதம்', என்றும், 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம'/ என்றும் சொல்லப்படும் ப்ரஹ்மமே ப்ரத்யக்ஸ்வரூபம் என்பதையும், ஜீவேச்வரபேதம் ஸ்வஅஞ்ஞான/ கல்பிதம் என்றும் இந்த இரண்டாவது ச்லோகத்தில் விளக்கப்படுகிறது.

**பூர்வ :** 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்ற பதங்கள், அந்ருதம் முதலான விரோதிருபமான ப்ரஹ்மமென்பதை, ஸத்யாதிகளுடன் கூடினதாகவே போதிக்கின்றதால், ஸத்யாதிபதங்கள், லக்ஷணையாக ப்ரத்யகபின்னப்ரஹ்மத்தையே போதிக்கின்றதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் வாச்யார்த்தத்திற்கும் லக்ஷ்யார்த்தத்திற்கும் ஸம்பந்தம் என்பது இல்லையென்றுல் லக்ஷணையினுல். போதிக்க முடியாது. ப்ரகாசம் இருக்கின்ற போது இருள் இருக்க முடியாது. இருள் இருக்கின்ற போது ப்ரகாசம் இருக்கமுடியாது. ஆகவே, ஒன்றுக்கொன்று ஸம்பந்தமே இல்லையென்றுல் லக்ஷ்யலக்ஷணபாவம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. கிஞ்சிக்ஞுனை ஜீவனுக்கும், ஸர்வஞ்ஞுனை ஈச்வரனுக்கும் ஸம்பந்தம் என்பதே ஸம்பவிக்க முடியாது. அதனுல் லக்ஷ்யலக்ஷண பாவம் என்பதே ஸம்பவிக்கமுடியாது.

**சித்தா :** இது சரியல்ல. ப்ரத்யக்ஸ்வரூபம், உண்மையில் எந்த ஸம்பந்தமும் அற்றஸ்வரூபம். ஆனுலும் ப்ரத்யகாத்மாவை ஆச்ரயித்திருக்கின்ற அஞ்ஞானத்தினுல், வ்யாவகாரிக நிலையில் ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுவதில் எவ்வித தோஷமும் கிடையாது. ஸ்வஅஞ்ஞானம் என்று 'ஸ்வ' என்ற சப்தத்தினுல், முன்னுல் சொல்லப்பட்ட பரமபதமே, ப்ரஹ்மமென்றும், அந்த ப்ரஹ்மத்தையே, ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்டிருக்கின்ற இந்த அஞ்ஞானத்தையே ஸ்வஅஞ்ஞானம் என்றும் இந்தச்லோகத்தில் சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானமே கார்யகரணஸங்காத ரூபமான இந்த ஜகத்தை, அத்யாத்மம்—

அதி தெய்வம், அதிபூதம், என்ற பேதங்கள் உள்ளதாக கல்ப்பிக்கின்றது. இவ்விதம் கல்ப்பிதமான ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதானமாக ஸர்வத்திலும் அனுஸ் யூதமாகஇருக்கின்றசைதன்யம்கார்யகரணஸங்காதமான தேஹம் முதலானவைகளில் 'அஹம்' என்றும், தேஹத்திற்கு வேருக இருக்கின்ற வஸ்துக்களில் 'மம' என்றும் அபிமானமுண்டயதாக இருந்து, ஸர்வ விவகாரங்களையும் செய்கின்றது. அதனுலேயே 'ஜீவன்' என்று சொல்லப்படுகிறது. சுஷுப்தி நிலையில் எந்த விதமான விவகாரமும் கிடையாது. ஆகவே ஜீவன், ஈச்வரன், ஜகத் என்ற பேதங்கள் எல்லாமே அஞ்ஞான கல்பிதம். ப்ரஹ்மஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமாக இருக்கின்ற அனுதிபாவரூபமான அஞ்ஞானத்தினுல், உண்மை ஸ்வரூபமான பூமபாவம் மறைக்கப்படுகிறது. அதனுல் ஸர்வபேதங்களும் தோற்றுவிக்கப்படுகிறது.

'ப்ரத்யக்சிதி:' என்று குறிப்பிடப்படும் சைதன்யமே, முன்ச்லோகத்தில் 'பரமபதம்' என்பதால் சொல்லப்பட்டது. பூமபாவம் என்ருலும் ப்ரஹ்ம பாவம் என்ருலும் 'வ்யாபகம்' என்ற ஒரே அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்பதையே இந்தச்லோகத்தில், முதல் இரண்டு அடிகளில் சொல்லப்படுகிறது. ஆகவே, ப்ரத்யக்சைதன்யம் என்ற இந்த ஸ்வரூபமே, ஸ்வஅஞ்ஞானத்தின் மூலமாக ஜீவன், ஈச்வரன், ஜகத் என்ற பேதங்களுக்கும் 'பூ: புவ: ஸுவ:' என்ற மூன்று விதமான லோகங்களுடைய தோற்றத்திற்கும் காரணமாக ஆகிறது. இந்தவிதம் ஸர்வபுவனங்களுக்கும் அபிவ்யக்தி ஸ்தானமாக = அதிஷ்ட்டானமாக இருக்கின்ற சைதன்யம் என்பதே 'அஸ்தி பாதி, ப்ரியம்' என்று ஸர்வத்திலும் தொடர்ந்து இருக்கிறது. ஸர்வத்திலும் தொடர்ந்து இருக்கின்ற விசேஷ தன்மையையே, இங்கு 'விஜயதே' என்ற பதத்தினுல் சொல்லப்படுகின்றது. இந்த விதம் ஸர்வஜகத்தும் ப்ரஹ்மத்தில் கல்பிதம் என்று சொல்வதற்கு காரணம் என்ன? என்பதை பின்னுல் விஸ்தரிக்கப்போவதால் இங்கு விளக்கப்படவில்லை.

இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயத்திலிருந்து ப்ரபஞ்சம் என்பது கார்யம், காரணம் என்ற உபாதி இன்றி ஸ்வயமாக சித்திக்க முடியாது என்பதால் ஸர்வ பேதங்களும் உள்ளதாக அறியப்படும் இந்த ப்ரபஞ்சம் அந்ருதம் என்றே சித்திக்கின்றது. ஆகையால் இந்த ப்ரபஞ்சமும் ஸத்யம், ஜீவேச்வர பேதமும் ஸத்யம் என்று முன்னுல் செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இரண்டும் ஸத்யம் அல்ல என்று பதில் சொல்லப்பட்டது. உபாதிபேதத்தினுல் தான், ப்ரத்யக் சைதன்யம், ஜீவன் என்றவ்யவகாரத்திற்குரியதா கின்றது. அதனுல் உபாதி விசிஷ்ட்ட சைதன்யமே 'த்வம்பதவாச்யார்த்தம் என்று சொல்லப் படுவதால், வாச்யார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் ஸம்பந்தமில்லை என்று சொல்வது சரியல்ல. ப்ரபஞ்சத்திற்கு பரஹ்ம சைதன்யம் அதிஷ்ட்டானம் என்று சொல்லப்பட்ட முறையினுல், அதிஷ்ட்டான, அதிஷ்ட்டேய பாவஸம்பந்தம் இருக்கின்றது என்ற காரணத்தினுலும், ஸர்வத்திலும் காரணரூபமாக அனுகதமாக இருக்கின்ற காரணத்தினுலும், பரமபதம் என்ற லக்ஷ்யார்த்ததுடன், வாச்யார்த்தத்திற்கு ஸம்பந்தம் இருக்கின்றது. ஆகவே, பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு, வாச்யார்த்தத்தை விட்டு லக்ஷ்யார்த்தத்தில் அபேதம் சொல்லப்பட்ட விஷயத்தில் எந்தவித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**பூர்வ :** மாயை மூலமாகவோ, அல்லது அவித்யை மூலமாகவோ (விக்ரியை) மாறுதலை அடையக்கூடிய சைதன்யத்தை அவிக்ரியம் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** ப்ரத்யக்சைதன்யம் என்பது கூடஸ்த்தம், ஸத்சிதானந்தலக்ஷணம் என்ற மஹிமை உடையதாக இருக்கின்றது. இவ்விதம் ஸ்வமஹிமையுடன் ப்ரகாசிக்கின்ற சைதன்யத்தில்;

ஆரோபிதமாக இருக்கின்ற விக்ரியைகளால் ஆரோபிதமாக இருக்கின்ற அவஸ்தையில் கூட அதிஷ்ட்டானஸ்வரூபத்திற்கு எவ்வித ஹானியும் ஏற்படாது. 'ஸ்வேமஹிம்னேதிஷ்ட்டதி' என்ற இந்த கருத்தையே ச்ருதிவாக்யமும் தெரிவிக்கின்றது. மேலும், அவித்யைக்கு ஆச்ரயமாக இருக்கின்ற காரணத்திற்காக அதிஷ்டானஸ்வரூபத்தில் விகாரம் ஏற்படவேண்டும் என்ற நியமமில்லை. சூர்யன் ப்ரகாசிக்கின்ற போதே, இருள் இருப்பதுபோல் கற்பனை செய்யப்படுமானல் அதனல் சூர்யப்ரகாசத்தில் என்ன மாறுதல் ஏற்படமுடியும்? ஆகவே, அஞ்ஞானத்தில், ப்ரத்யக்சைதன்யமானது (தொடர்ந்து) அனுகதஸ்வபாவமாக இருக்கின்ற காரணத்தினல், ப்ரதயக்சைதன்யம் என்பதே தத்பதம்—த்வம்பதம் என்ற இரண்டிற்கும் வாச்யார்த்தமாகிறது. எந்த உபாதியினல் இவ்வித பேதங்கள் ஏற்படுகிறதோ அந்த உபாதியின் உற்பத்தி, ஸ்திதி, லயங்களுக்கும் இந்த சைதன்யமே சாக்ஷியாக இருக்கிறது. இந்தவிதம் ஸர்வத்திற்கும் சாக்ஷியாக, ஸர்வதா தன் ஸ்வாபாவீகமான, நித்ய ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபத்தில் ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற இந்த ப்ரத்யக்சைதன்யமே ஸத்யஞானனந்த ஸ்வரூபமான பரமபதம். ஆகவே ப்ரத்யக்சிதி: என்பதில் மோஹம் என்பது உண்மையில் கிடையாது. அதனல் எவ்விதஹானியும் ஏற்படாது.

**3. அவதாரிகை :** இதுவரை சொல்லப்பட்ட முதல் இரண்டு ச்லோகங்களில் தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம் என்ற இரண்டையும் விளக்கப்பட்டது. இதில் விதேயமான (அறியப்பட வேண்டிய) தத்பதார்த்தமே சிறந்தது என்பதால் முதல் ச்லோகத்தில் தத்பதார்த்தமென்பதை விளக்கப்பட்டது. அத்துடன் த்வம்பதார்த்தமே தத்பதார்த்தம் என்ற விஷயத்தையும் சொல்லப்பட்டது. இரண்டாவது ச்லோகத்தில் உத்தேச்யமான (ஜீவனை உத்தேசித்து) த்வம்பதார்த்தம் பற்றி விளக்கப்பட்டது. இந்த மூன்ருவது ச்லோகத்தில் த்வம்பதார்த்தத்திற்கும் தத்பதார்த்தத்திற்கும் அபேதம் என்று அறியப்படுவதால் ப்ரயோஜனம் என்ன என்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** प्रत्यक्प्रमाणकमसत्यपराक्प्रभेदं प्रक्षीणकारणविकारविभागमेकम् ।
चैतन्यमात्रपरमार्थनिजस्वभावं प्रत्यञ्चमच्युतमहं प्रणतोऽस्मि नित्यम् ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்வயம் ப்ரமாணமாக இருக்கின்ற இந்த ப்ரத்யக்ஸ்வரூபஞானம் ஏற்படுகின்றபோது, அஸத்யமாகவும், பராக்காகவும் அறியப்படும் இந்த ப்ரபஞ்சம் நாசத்தை அடைகின்றது. அதன்பிறகு இதுகாரணம், இதுகார்யம் என்ற பேதங்கள் அற்ற ஏகஸ்வரூபமாக தன் நிஜஸ்வரூபத்தில், எந்த சைதன்யம் ப்ரகாசிக்கின்றதோ, அப்பேர்ப்பட்ட ப்ரத்யக்ஸ்வரூபமான அச்யுதஸ்வரூபத்தை நான் நித்யம் நமஸ்கரிக்கின்றேன்.

**பூர்வ :** ப்ரத்யக் ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ற அச்யுதனை நிரந்தரம் சரணமடைகின்றதால் பரமபதம் என்ற ஸ்வரூபப்ராப்தி ஏற்படும் என்று சொல்லப்படுகிறது. 'என்னையே பஜிக்கின்றவர்கள் எவர்களோ அவர்களே மாயையிலிருந்து விடுபடுகிருர்கள், என்று கீதையில் பகவானல் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் சரணம் அடைபவன் வேறு—சரணீயமான ஈச்வரன் வேறு என்று அறியப்படுகின்றதால், இரண்டும் ஒன்றே என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** உபாதி பேதங்களைக்கொண்டு இந்த வாக்யங்கள் பேதம் உள்ளதாகத் தெரிவிக்கின்றதேயன்றி உண்மையில் தத்–த்வம் என்ற பதார்த்தங்களின் லக்ஷ்யார்த்தம் ஒன்றுதான். இந்த விஷயத்தை தெரிவிப்பதற்காகவே இந்த ச்லோகத்தில் அச்யுதம் ப்ரத்யக் என்ற இரண்டு பதங்களையும் ஸமானவிபக்தியில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனல் சின்மாத்ரமான அகண்டஏகரஸமான ஸ்வரூபமே இந்த வாக்யங்களின் தாத்பர்யமாக

சொல்லப்படுகிறது. அச்யுதம் ஸ்வரூபாத் அப்ரச்யுதம் தன் உண்மையான ஸ்வரூபத்திலிருந்து மாருததன்மை (நழுவாத நிலை).

இந்தவிதம் அச்யுதம் என்று சொல்லப்படுவது எதுவோ அதுவே தத்பத லக்ஷ்யார்த்த ஸ்வரூபம். இதுவே ப்ரத்யக் ஸ்வரூபம் என்று இந்தவாக்யத்திறுல் போதம் ஏற்படுகிறது. ஆகவே, அவித்யா நிவர்த்தி மூலமாக ப்ரத்யகாத்மா, ஸ்வஸ்வரூபத்தில் ஆனந்த ஏகரஸமாக ப்ரகாசிக்கின்றது. இவ்விதம் ஏற்படும் போதமே, பரம ப்ரயோஜனம். இதையே 'ஞாதம் ப்ரஹ்ம ப்ரயோஜனம்' என்று சொல்லப்படுகிறது.

**பூர்வ :** ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமாதா, என்ற பேதவிவகாரங்கள் இருக்கின்றபோது, அகண்டார்த்த ஸ்வரூப போதம் எப்படி ஏற்படமுடியும்?

**சித்தா :** 'அகண்ட ஏகரஸமான ப்ரஹ்மமே நான்' என்ற போதம் உபநிஷத்வாக்ய ஜன்யமான அகண்டாகாரவ்ருத்தியிஞல் ஏற்படுகின்றது. இந்த வ்ருத்தியிஞல் அவித்யை, அதஞல் கல்பிதமான ப்ரமாத்ராதிபேதங்கள் எல்லாமே நாசத்தை அடைகின்றது. அதஞல் ப்ரத்யக் ஸ்வரூபமே ப்ரஹ்மமென்ற அபேதம் சித்திக்கின்றது. \

**பூர்வ :** தத்பதார்த்தமான ப்ரஹ்மத்திலிருந்தே ஆகாசம் முதலான கார்யங்கள் உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது. அதஞல் ஜகத்காரணம் ப்ரஹ்மமென்றும், ப்ரபஞ்சம் அதன் கார்யமென்றும் பேதம் அறியப் படுகின்றதால் தத்பதார்த்தம் அத்வைதம் என்றும் ஸத்வயமாக அறியப்படும் த்வம்பதார்த்தமான ப்ரத்யகாத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று என்றும் அபேதம் சொல்வது எப்படிப்பொருந்தும்?

**சித்தா :** அவித்யாநிலையில், அவித்யை, மாயை என்ற உபாதிகளிஞல் கார்யம் என்றும் காரணம் என்றும் பலவிதமான பேதங்கள் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், தத்பதம்–த்வம்பதம் என்ற இரண்டு பதார்த்தங்களையும் விசாரிக்கின்றபோது இரண்டு பதார்த்தங்களிஞலும் ஏகரூபமான அத்விதீய சின்மாத்ர ஸ்வரூபமே லக்ஷ்யார்த்தமாக சித்திக்கின்றது. ஆகையால் அறியப்படும் பேதங்கள் எல்லாம் அவித்யா கல்ப்பிதம் என்றே சித்திக்கின்றது.

**பூர்வ :** உபநிஷத் வாக்யங்கள், 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது. அதஞல் ஸத்யத்வம், ஞானத்வம், அனந்தத்தவம் என்று வெவ்வேறு விசேஷங்கள் உடையதாகவே ப்ரஹ்மம் அறியப்படுகிறது. ஆகவே, 'நிர்விசேஷம் ப்ரஹ்ம' என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபலக்ஷணத்தை தெரிவிக்கின்றவாக்யங்கள் ஸத்யத்வாதி விசேஷணமுடையதாக தெரிவிக்கவில்லை. அந்ருதமில்லை, ஜடமில்லை, துக்கமில்லை, பரிசின்னமில்லை, என்று ப்ரபஞ்ச ஸ்வரூபத்திலிருந்து வேறுபடுத்தி ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகிறது. ஸத்யம், ஞானம் முதலானவைகள் ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லப்படுவதற்காக ப்ரஹ்மஸ்வரூபத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படாது. எப்படி ஒரேபுருஷனை, சிஷ்யனை அபேஷித்து ஆசார்யன் என்றும், புத்ரனை அபேக்ஷித்து பிதாவென்றும், மருமகனை அபேக்ஷித்து மாமன் என்றும் பலவிதசப்தங்களால் சொல்லப்பட்ட போதிலும் அந்த புருஷனுடையஸ்வரூபத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படுவதில்லையோ அதேபோல், பலவிதமான சப்தங்களிஞல் ப்ரஹ்மஸ்வரூபம் குறிக்கப்பட்ட போதிலும், கேவல சைதன்யமாத்ரமே உண்மையான ஸ்வரூபம் என்பதையே இந்த வாக்யங்கள் போதிக்கின்றது.

**பூர்வ :** இந்தவிதம் ஜகத் என்பது அஞ்ஞான கல்பிதம்தான் என்று சொல்லப் படுமானல், ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமாதா, ப்ரமை, என்ற எல்லாமே மித்யையென்ருகிறது. அப்படியானல், மித்யா ப்ரமாணத்தினுல் ஸத்யமான பரமபத ஞானம் எப்படி ஏற்படமுடியும்?

**சித்தா :** இந்தக் கேள்விக்கு பதில் சொல்வதற்குமுன், என்னுல் கேட்க்கப்படும் கேள்விகளுக்கு நீ பதில் சொல்லவேண்டும்.

1. **அதாவது :** ப்ரமாத்ராதிகள் (அஸத்யம்) மித்யை என்பதால், இந்த மித்யா ப்ரமாத்ராதிகளால், ஸத்யமான பரமபத சித்தி ஏற்படாது என்று சொல்கிருயா? அல்லது, பரமபத சித்தி ஏற்பட்டாலும், அதுவும் மித்யையாகத்தான் இருக்கும், ஸத்யமாக இருக்கமுடியாது என்று சொல்கிருயா? (என்று முதல் கேள்வியில் இரண்டு விகல்பங்கள் செய்யப்படுகிறது). அதாவது I.A.பரமபதஸ்புரணமே ஏற்படாது என்று பரமபத ஸ்வரூபஸ்பூர்த்தி அஸித்தி சொல்லப்படுகிறதா? அல்லது I.B.பரமபத ஸ்புரணம் ஏற்பட்டாலும், அவித்யா ப்ரதிபந்த நிவர்த்தி என்பது மித்யா ப்ரமாணத்தினுல் ஏற்படாது என்பதால், பரமபதசித்தி ஏற்படாது என்று சொல்லப்படுகிறதா?
2. பரமபதஸித்தி ஏற்படாது என்று சொல்லப்படுமானுல், அந்த பரமபத அஸித்தி என்பது என்ன?

இந்தவிதம் மூன்று விதமான விகல்பங்கள் செய்யப்பட்ட பிறகு, முதல் விகல்பத்திற்கு இப்போது பதில் சொல்லப்படுகிறது.

I.A. **சித்தா:** பரமபதம் என்பதே ஸ்வயம் ப்ரமாணமாக ஸ்வப்ரகாசமாக ப்ரகாசிக்கின்றதால் ப்ரமாத்ராதி அபேக்ஷை கிடையாது. அதுமட்டுமல்ல, ப்ரமாத்ராதிகளின் சித்தியே, ப்ரத்யக் ஸ்வரூபத்தினுல்தான் சித்திக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, ஸ்வப்ரகாசமாக ப்ரகாசிக்கின்ற பரமபதமானது ஸ்வத: சித்தம் என்பதால், அதனுடைய சித்திக்கு எந்தவித அபேக்ஷையும் கிடையாது. ஆகையால் ப்ரமாத்ராதிகள் மித்யையாக இருக்கின்றதால், ஸத்யமான பரமபத ஸ்பூர்த்தி ஏற்படாது என்று சொல்வதற்கு முடியாது.

மேலும் ப்ரமாத்ராதி விவகாரங்கள் அற்ற சுஷுப்திநிலையில் ஸ்வயமே சைதன்யம் ப்ரகாசிக்கின்றது. அதனுல், பரமபதஸ்புரணம் என்பது, ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களை அபேக்ஷித்து ஏற்படவில்லை என்ற கருத்தையே, 'ப்ரத்யக் ப்ரமாணகம்' என்று ச்லோகத்தில் சொல்லப் படுகிறது.

'ப்ரத்யக்' என்றபதமே, ஸர்வாந்தரம் ஸர்வத்திற்கும் ஸ்வரூபம் ஸர்வப்ரகாசகம், சித்ரூபம், ஆனந்தரூபம் என்று பஞ்சகோசங்களுக்கும் ஆந்தரமான ஸ்வரூபத்தையே தெரிவிக்கின்றது. சத்சித் ஆனந்த ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ற இந்த ப்ரத்யகாத்மாவே, 'பரமபதம்' என்றுசொல்லப்படும் விஷயத்தில், ஞானமாக இருக்கிறது. இந்தவிதம் ஸ்வயம் ப்ரமாணமாக இருக்கின்ற ப்ரத்யகாத்மாவையே, 'ப்ரத்யக்' என்ற பதம் தெரிவிக்கின்றது. அதனுல் பரமபத ஸ்பூர்த்தியே ஏற்படாது என்று சொல்வதற்குமுடியாது. (இவ்விதம் 'ப்ரமாணகம்' என்று சொல்லப்படும் விசேஷணம், ச்லோகத்தில் நான்காவது வரியில் சொல்லப்படும், ப்ரத்யஞ்சம் அச்யுதம் என்ற விசேஷ்யத்திற்கு விசேஷணமாக ஆகிறது.) ஆகவே. ஸ்வப்ரகாச சைதன்யமான பரமபதஸ்வரூப ஸ்புரணத்திற்கு ப்ரமாத்ராதிகளின் அபேக்ஷைகிடையாது என்று முதல் விகல்பத்திற்கு பதில் சொல்லப்பட்டது.

I.B. பரமபத ஸ்புரணம் ஏற்பட்டாலும், மித்யாப்ரமாணுதிகளால் அவித்யாப்ரதிபந்தம் நிவர்த்திக்காது என்று சொல்லப்படுமானுல், அதற்கு இப்போதுபதில் சொல்லப்படுகிறது:

'அஸத்யபராக்ப்ரபேதம்' என்று ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அவித்யை, அதன் கார்யம் எல்லாமே அஸத்யம், அறியப்படும் விஷயம். இவைகள் எல்லாம் எந்த அச்யுதஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமாக இருக்கின்றதோ, அந்த சைதன்யஸ்வரூபத்தினுல்தான் அவைகள் எல்லாமே ப்ரகாசிக்கின்றது. இவ்விதம் பராக்ப்ரபேதம் என்று சொல்லப்படும் த்ருச்யவஸ்துக்கள் எல்லாமே மித்யையானதால், "யக்ஷானுரூபோபலி:" என்ற ந்யாயத்தைக் கொண்டு மித்யாவஸ்து நிவர்த்திக்கு மித்யா ப்ரமாணமே போறுமானது. ஸ்வப்னசிரஸ் உடைவதற்கு ஸ்வப்னகற்களே போதுமானது. ஆகவே அவித்யையென்பது ஆரோபிதமானதால், அதன் கார்யமானப்ரதிபந்தகம் என்பதும் மித்யைதான். அதனுல் அவித்யை, அதன் கார்யமானப்ரதிபந்தகம் என்பதெல்லாமே மித்யா ப்ரமாணத்தினுல் நிவர்த்திக்கப்படலாம். ஆகவே, மித்யாபூதமான அகண்டாகாரவ்ருத்தி ஒன்றே மித்யாப்ரபஞ்சநாசத்திற்கு போதுமானது.

இரண்டாவது விகல்பம்:- பராக்ப்ரபேதம், என்ற வாக்யத்திலுள்ள, 'ப்ரபேதம் என்ற பதமானது ப்ரபித்யதே வினச்யதி என்று நாசத்தைக்குறிக்கின்றது. எந்த ப்ரமாணவ்ருத்தியினுல் த்ருச்ய (பராக்) பதார்த்தங்கள் எல்லாம் நாசத்தை அடைகிறதோ பாதிக்கப்படுகிறதோ அந்த பாத அவதியாக அனுயோகி ரூபமாக இருக்கின்ற பரமபதம் ஸத்யமாக சித்திக்கின்றது. ஆகவே, எந்த ப்ரத்யகாத்மஸ்வரூபத்தில் பராக் அர்த்தங்கள் எல்லாம் லயத்தை அடைகின்றதோ, அந்த அச்யுதஸ்வரூபம் பாதஅவதியாக அதிஷ்டான ஸ்வரூபமாக சித்திக்கின்றதால், மித்யாப்ரமாணத்தினுல் சித்திக்கின்ற பரமபத சித்தி என்பதும் மித்யையாகத்தானே இருக்கவேண்டும் என்ற ஆக்ஷேபத்திற்கு இடமே இல்லை. இவ்விதம் இரண்டாவது விகல்பத்திற்கு பதில் சொல்லப்பட்டது.

ப்ரமாத்ராதிகள் ஸத்யமாக இருந்தால்தானே ஸத்யமான பரமபத சித்தி ஏற்படும்? என்ற முதல் ஆக்ஷேபத்தில் வேறு ஒரு வித விகல்பம் செய்யப்பட்டு, அதற்கு பதில் சொல்லப்படுகிறது.

'ஸத்யம்' என்ற பதத்தினுல் எந்தவிதமான ஸத்யத்வம் குறிப்பிடப்படுகிறது? அபாத்யத்வ ரூபமான ஸத்யத்வம் குறிப்பிடப்படுகிறதா? அல்லது அர்த்த க்ரியா கார்யத்வ ரூபமான ஸத்யத்வம் குறிப்பிடப்படுகிறதா?

அபாத்யத்வரூபமான ஸத்யத்வம் என்பதே 'ஸத்யம்' என்ற பதத்தினுல் குறிப்பிடப் படுவதாகச் சொல்லப்படுமானுல், அந்த ஸத்யத்வம் ப்ரஹ்மத்தில் மட்டுமே இருக்கின்றது. வேறு எதிலும் கிடையாது.

அர்த்தக்ரியா கார்யத்வரூபமான ஸத்யத்வம் என்பதே 'ஸத்யம்' என்ற பதத்தினுல் குறிப்பிடப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், அந்த ஸத்யத்வம் ப்ரமாணுதிகளிலும் இருக்கின்றது. ஆகவே, சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தினுல் ஆத்மஸ்வரூபபோதம் ஏற்படுகின்றது. அதனுல் சாஸ்திர ப்ரமாணத்திற்கு அர்த்த க்ரியா கார்யத்வரூபமான ஸத்யத்வம் இருக்கின்றது. அதனுல், அர்த்த க்ரியா கார்யத்வ ரூப ஸத்யத்வம் இருந்தாலே பரமார்த்தவஸ்து விஷயக ஞானம் ஏற்படலாம். அபாத்யத்வ ரூபமான ஸத்யத்வம் இல்லையென்பதற்காக பரமபதஞானம் ஏற்படாது என்று சொல்வதற்கு முடியாது.

உதாரணமாக, கண்ணுடியில் தோன்றும் ப்ரதிபிம்பம் என்பது மித்யைதான். ஆனுல் அந்த ப்ரதிபிம்பத்தின் மூலம் ஸத்யமான பிம்பஸ்வரூபத்தின் ஞானம் ஏற்படுகிறது. அதேபோல், 'அக்ஷரம்' என்பதில் ஹ்ரஸ்வம், தீர்க்கம்–ப்லுதம், என்பதெல்லாம்

த்வனியைச் சேர்ந்ததேயன்றி அக்ஷரத்தை சேர்ந்ததல்ல. த்வனி என்பதில இருக்கின்ற ஹ்ரஸ்வாதிகள்தான், அக்ஷரம் என்றவர்ணங்களில் தோன்றுகிறது. ஆனாலும் ஹ்ரஸ்வாதிகள் என்ற ஸ்வரங்களுடன் கூடிய அக்ஷரப்ரதிபத்திக்கு ஹ்ரஸ்வாதிகள் காரணமாக இருக்கிறது. இந்தவிதம் மித்யாபூதமானஹ்ரஸ்வாதிகள் எப்படி ஸத்யமான அக்ஷர ப்ரதிபத்திக்கு காரணமாகின்றதோ, அதுபோல் மித்யா ப்ரமாணங்களினல் ஸத்ய வஸ்து ஞானம் ஏற்படலாம். ஆகவே, பரமபத ஞானம் ஏற்படாது என்று சொல்வதற்கு முடியாது. மேலும் பரமபத் ப்ரதிபத்தி என்பது ப்ரமாண ஜன்யமான ஞானத்தினல் (ப்ரமையினல்) ஏற்படுவதாகச் சொல்லமுடியாது ஏனெனில்' 'எதத் அப்ரமேயம் த்ருவம்' என்று சாஸ்திரமானது ப்ரமாணத்திற்கு விஷயமல்ல என்று தெரிவிக்கின்றது. ப்ரமாணத்தினல் அறியப்படுவதெல்லாம் ஏதாவது ஒரு தர்மமுள்ளதாகவே இருக்கும். அதனல் நிர்தர்மகமான 'பரமபதம்' என்பது ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விஷயமில்லை. அதுமட்டுமல்ல, பரமபதம் என்பது கார்யமுமில்லை, காரணமுமில்லை என்பதால் எந்த ப்ரமாணத்தினலும் க்ரஹிக்கக்கூடியது அல்ல. அனுமானப்ரமாணத்தினல் ஜகத்காரணமான ஈச்வரனை சித்தம் செய்யப்படுகிறதே? என்றல் எந்தக்கார்யமாக இருந்தாலும் அதற்கு ஒரு காரணம் இருக்கவேண்டும் என்று அனுமானத்தினல் ஈச்வரனை சித்தம் செய்தாலும், ஈச்வரஸ்வரூபம் இன்னதென்று அனுமானத்தினல் நிர்ணயம் செய்வதற்கு முடியாது.

'ஜகத்காரணம் ஈச்வரன்' என்று ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. அந்தவாக்யத்தைக் கேட்க்கின்றபோது, அதில் அஸம்பாவனபுத்தி ஏற்படலாம், எப்படி ஈச்வரன் ஜகத்காரணமாக இருக்கமுடியும்? என்ற ஸம்சயமான புத்தி ஏற்படுமானல், வாக்யத்தினல் ஏற்படும் ஞானம் ப்ரதிபந்தத்துடன் கூடியதாக ஆகிறது. இவ்வித ப்ரதிபந்தகத்தை நிவர்த்திப்பதற்காக, அனுமானம் என்ற யுக்திகளைக் கொண்டு, அஸம்பாவனபுத்தி (ஸம்பவிக்க முடியாது என்றபுத்தி) விலக்கப்படுகிறது. அதனல் ஈச்வரஞானம் ஏற்படுவதற்கு அனுமானம் என்பது அனுகூலமாக ஆகிறது. ஆகவே, ச்ருதி வாக்ய ஜன்யமான ஞானத்திற்கு அனுமானம் என்பது ஸம்பாவன ஹேதுவாக ஆகிறதேயன்றி நிச்சாயிகஹேதுவாக ஆகாது. வஸ்துசித்திக்காக அனுமானம் அபேக்ஷிக்கப் படுவதில்லை. அதனல் உபநிஷத் என்ற ப்ரமாணம் நேரிடையாக ப்ரத்யக்ஸ்வரூபத்தை போதிக்கவில்லை என்றலும், லக்ஷணையினல் போதிக்கின்றது என்றே சொல்லப்படுகிறது.

**பூர்வ :** ச்லோகத்தில், கார்யகாரணம் என்ற விபாகமற்ற ஸ்வரூபம் என்று தெரிவிக்கிறதேயன்றி, நிர்தர்மகம் என்று சொல்லப்படவில்லையே?

**சித்தர் :** எந்த வஸ்துவில் தர்மம் இருக்கின்றதோ அந்த வஸ்துவில்தான் கார்யத்வமோ காரணத்வமோ இருக்கமுடியும். எந்த தர்மும் இல்லாமல் இது கார்யம், இது காரணம் என்று விபாகம் செய்வதற்கே முடியாது. ஆகையால் ச்லோகத்தில் 'ப்ரக்ஷீணகாரணவிகாரவிபாகம்' என்று கார்யகாரணபாவத்தை நிஷேதம் செய்து தெரிவிப்பதாலேயே 'நிர்தர்மகம்' என்று சித்திக்கின்றது. 'ஏக மேவ அத்விதீயம்' என்று தெரிவிப்பதற்காகவே, ச்லோகத்தில் 'ஏகம்' என்றபதம் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவ்விதம், 'வஸ்து ஏக ரூபம்' என்று சொல்லப் படுவதால் பரிணமத்தை அடைவதில்லை, ஆரம்பமாவதில்லை, ஸங்காதத்தை அடைவதில்லை என்றும், அதனலேயே உற்பத்தி இல்லையென்பதும் அறியப்படுகின்றது. இவ்விதம் பரிணமமில்லை என்பதால் ஸத்கார்யவாதமான ஸாங்க்யவாதத்தையும், ஆரம்பமில்லை என்பதால் அஸத்கார்யவாதமான நையாயிக வாதத்தையும், ஸங்காதமில்லையென்பதால்

பௌத்த வாதத்தையும் இதன் மூலம் நிராகரிக்கப்பட்டது (விலக்கப்பட்டது) இதனுல் ப்ரஹ்மமென்பது எதற்கும் காரணமில்லை என்பதைச் சொல்லப்பட்டது. இதேபோல் ப்ரஹ்மமென்பது எதனுடைய கார்யமுமில்லை. ஏகரூபமான சிதாத்மஸ்வரூபம், கூடஸ்த்தம், அஸங்கம், அனவயவம், அத்விதீயம் என்பதால், இப்பேர்பட்ட சிதாத்மஸ்வரூபத்தில் காரண, கார்யபாவம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. ஏக ரூபமாக இருக்கின்றவஸ்து, வேறு எதையும் ஆச்ரயித்து இருக்கமுடியாது. ஏகரூபம், அஸங்கம், நிரவயவம் என்பதால் ஸங்காதமுடையது என்று சொல்லமுடியாது. 'கூடஸ்த்தம்' என்பதால் பரிணமமுடையது என்று சொல்ல முடியாது. ஆகவே, ப்ரஹ்மமென்பது கார்யமுமில்லை என்று சித்திக்கின்றது. ஸஜாதீயம் முதலான மூன்று விதமான பேதங்களும் அற்ற ஸ்வரூபம் என்பதாலும் அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கின்ற ப்ரபஞ்சரூபத்திற்கு விரோதி ரூபம் என்பதாலும் ச்ருதிவாக்யங்கள், ஏகஸ்வரூபம் என்றும் கேவலசைதன்யமாத்ரம், விஞ்ஞானகனம் என்றும் தெரிவிக்கின்றது.

ஆகவே சைதன்யம் என்பது தர்மமுமல்ல, எந்த தர்மத்துடன் கூடினதும் அல்ல என்று தெரிவிக்கின்றது. அதாவது கார்யமான தேஹாதிகளுடனே அதன் தர்மங்களுடனே கூடினதுமல்ல, காரணமான அஞ்ஞான தர்மத்துடன் கூடினதாக இருக்கலாமோ என்ற ஸந்தேகத்திற்கும் இடமில்லை. கேவல சைதன்யம்தான், பரமார்த்தமான நிஜஸ்வபாவம் என்று சொல்லப்படுவதாலேயே, அபரமார்த்தமான அஞ்ஞானத்தின் தர்மமுமில்லை ஈன்பது சித்திக்கின்றது. இந்தவிதம் மூன்றுவிதமான பேதங்களும் அற்ற அகண்ட ஸ்வரூபத்தை போதிப்பதற்காக அந்ருதம் முதலான விசேஷணங்களுடன் கூடிய ப்ரபஞ்சத்திலிருந்து வேறுபடுத்தி வஸ்துவை தெரிவிப்பதற்கு உபாயமாக, பலவித பேதங்களுடைய ப்ரபஞ்சம் என்பதை கல்பித்து, அதன்மூலமாக உண்மையான வஸ்துஸ்வரூபம் போதிக்கப்படுகிறது. அதாவது அந்ருதம், அஸத்யம் என்பவைகளி லிருந்து வேறுபடுத்தி 'ஸத்யம்' என்றும், குணத்துடன் கூடியவஸ்துவிலிருந்து வேறுபடுத்தி 'நிர்க்குணம்' என்றும், இது போன்ற பல சப்தங்களால் ப்ரஹ்மமானது போதிக்கப்படுகிறது. ஆனுல் வஸ்துவை அறிவதற்கு உபாயமான இந்த சப்தங்களால் உபேயமான வஸ்துவில் எவ்வித விசேஷமும் இருப்பதாகச் சொல்லமுடியாது.

1. இந்தவிதம் 'ப்ரத்யக் ப்ரமாணகம்' என்ற பதங்கள் ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபம் என்று தெரிவிக்கின்றதால் ப்ரமாத்ராதிகளின் அபேக்ஷை கிடையாது என்று சொல்லப்பட்டதால், ப்ரமாத்ராதிகள் மித்யையானதால் ஸத்யமான பரமபத சித்தி எப்படி ஏற்படமுடியும்? என்ற கேள்விக்குபதில் சொல்லப்பட்டது. ஆகையால் ப்ரமாத்ராதிகள் மித்யையா? ஸத்யமா? என்ற கேள்விக்கே இடமில்லை.
2. ஆரோபிதமான பந்த நிவர்த்திக்கு ப்ரமாத்ராதிகளின் அபேக்ஷை இருக்கிறதென்று சொல்லப்பட்டபோதிலும், மித்யா பந்த நிவர்த்திக்கு மித்யா ப்ரமாணமே போறுமானது. அதனுல் ப்ரமாணங்கள் ஸத்யமாக இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை.
3. மித்யா ப்ரதிபிம்ப ஞானத்தினுல் ஸத்யமான பிம்பஸ்வரூபஞானம் ஏற்படுகிறது என்பது ப்ரசித்தம் அதனுல் மித்யா ப்ரமாணத்தினுல் ஸத்யமானபரமபதசித்தி ஏற்படாது என்று சொல்வதற்குமுடியாது. ஆகவே சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தினுல், ஸத்யமான ஸ்வரூப போதம் ஏற்படலாம்.

பூர்வ : அப்படியானுல் பரமபதத்தை அறிவதற்கு ப்ரமாணமே தேவை இல்லையா?

**சித்தா :** பரமபதம என்பது, கடபடாதிகள்போல் ப்ரமாணங்களினுல் அறியக் கூடிய விஷயமில்லை. அறியப்படுகின்ற தன்மை (ப்ரமேயத்வம்) என்பது சைதன்யத்தினுல் ப்ரகாசப் படுத்தக்கூடியதன்மையில் உள்ளஸர்வ வஸ்துக்களில்தான் சொல்லலாம். ஆனுல் பரமபதம் என்ற ப்ரஹ்மஞானம் ஏற்படுவதற்கு, ப்ரஹ்ம ஸ்வரூப ஆகாரவ்ருத்தி ஒன்றே அபேக்ஷிக்கப் படுகிறது, சைதன்யம் என்ற பலவ்யாப்யத்வம் அபேக்ஷிக்கப்படவில்லை. அதனுல் ப்ரமாண அபேக்ஷை கிடையாது என்று சொல்லப்படுகிறது.

("விரிகின்ற ஜெகத்தைக்காண வ்ருத்தியும் பலமும் வேண்டும், புரிகின்ற வ்ருத்தி ஒன்றே போதும் மெய்ப்பொருள் காண்பதற்கே' என்று இதேகருத்தை கைவல்யநவ நீதம் என்ற க்ரந்தத்தில் சொல்லப்படுகிறது).

நிர்தர்மகமான ப்ரஹ்மஸ்வரூபம் கார்யகாரண பாவம் அற்றதாக இருப்பதால் ப்ரமாணப்ரவ்ருத்தி என்பது ஏற்படாது.

1. பரம பதம் என்பது, சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், என்று சொல்லப்படும் ஐந்து விதமான விஷயங்களாகவும் இல்லாததால் ப்ரத்யக்ஷம் என்ற ப்ரமாணத்தினுல் அறியமுடியாது.
2. இதேபோல், ப்ரத்யக்ஷமாக அறியப்படும் விஷயங்களில், எந்த இரண்டு விஷயங்களுக்கு வ்யாப்தி க்ரஹிக்கப்படுகிறதோ, அந்த விஷயத்தையே அனுமானத்தினுல் அறியமுடியும். ப்ரத்யக்ஷத்திற்கே விஷயமாக இல்லாத பரமபதம் என்பது அனுமானத்திற்கும் விஷயமாக முடியாது.

தார்க்கிகன், ஈச்வரனை அனுமானத்தினுல் சாதிக்கின்ருனே? என்ருல், "சிருஷ்டிக்கப்பட்ட பூ: புவராதிலோகங்களுக்கு கர்த்தா ஒருவன் இருக்கவேண்டும், ஏனெனில் கார்யமாக இருப்பதால் கடம்போல" என்று அனுமானத்தினுல் சாதிக்கப்பட்டபோதிலும் அந்த ஈச்வரன் சரீரமுள்ளவனு? அசரீரனு? சேதனனு? அசேதனனு? ஸர்வஞ்ஞனு? அஸர்வஞ்ஞனு? என்ற விசேஷங்கள் அனுமானத்தினுல் அறியமுடியாது. ப்ரத்யக்ஷத்தினுல்தான் அறியமுடியும். ப்ரத்யக்ஷத்தினுல் ஏற்கனவே அறியப்பட்டவிஷயத்தில்தான், அனுமானம் என்பது, வ்யாப்தியைக் கொண்டு, அந்தவஸ்துவை ஸாமான்யமாக அறிவிக்கிறதேயன்றி, விசேஷஸ்வரூபத்தை தெரிவிப்பதற்கு முடியாது. ஆகையால், ப்ரத்யக்ஷத்திற்கே விஷயமில்லாத பரமபதம், அனுமானத்தினுல் அறியப் படுவதாகச் சொல்லமுடியாது.

3. ஆகமம் என்ற சப்த ப்ரமாணத்தினுல், பரமபதம் அறியப்படுவதாகச் சொல்லலாமே? என்ருல், அதுவும் சொல்லமுடியாது. ஏனெனில், சப்தம் என்ற ப்ரமாணம், ஜாதி, குணம், க்ரியை, ஸம்பந்தம் என்ற நான்கு விதமான தன்மைகள் உடைய வஸ்துக்களையே தெரிவிக்கும். 'பரமபதம்' என்பது ஜாதியுமில்லை, குணமுமில்லை, க்ரியையுமில்லை, ஸம்பந்தமுமில்லை. ஆகவே, கார்ய, காரணங்களுக்கு வேறுபட்ட நிர்தர்மகமானப்ரஹ்ம விஷயத்தில் எந்த ப்ரமாணமும் ப்ரவர்த்திக்க முடியாது. ஆனுல், உபநிஷத் என்ற சப்த ப்ரமாணம் நேரிடையாக 'பரமபதம்' என்பதை போதிக்க முடியாது என்ருலும் லக்ஷணையாக போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இந்த கருத்தையே ச்ருதிவாக்யங்களும் 'அறியப்படுவதும் இல்லை, அறியப்படாததுமில்லை, அறியப்படும் பொருளுக்கும் அறியப்படாத பொருளுக்கும் வேறுபட்டது' என்று தெரிவிக்கின்றது. "அன்யதேவ / தத் விதிதாத் அதோ அவிதிதாத் அதி" என்றும் "அசப்தம், அஸ்பர்ஸம் அரூபம் (கேனே) அவ்யயம், ததா அரஸம், நித்யம் அகந்தவத் ச யத்" (கடோ)

என்றும் தெரிவிக்கின்றது. சைதன்யத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுபவைகளில் அறியப்பட்டது என்றும், அறியப்படாதது என்றும் இரண்டுவிதமான விவகாரங்கள் செய்யப்படுகிறது. ஆத்மா என்பது ஸ்வயம்ப்ரகாசகமானதால், அறியப்படும் வஸ்துவிற்கும், அறியப்படாத வஸ்துவிற்கும் வேறுபட்டது என்று சப்தமானது லக்ஷணையினுல் பரமபத ஸ்வரூபத்தை போதிக்கின்றது.

ப்ரபஞ்சம் என்ற பேதம் அறியப்படுவதால், ப்ரத்யகபின்னபரமாத்மஸ்வரூபம் என்று எப்படிச் சொல்லமுடியும்? என்றும், அந்ருத ஜடவிரோதி ரூபமாக இருக்கின்ற ஸத்யஸ்வரூபத்திற்கும், மித்யா ப்ரபஞ்சத்திற்கும் எப்படி லக்ஷ்ய லக்ஷணபாவ ஸம்பந்தம் ஏற்படமுடியும்? என்றும் முதல் ச்லோகத்தில் செய்யப்பட்ட விகல்பத்திற்கும், ஆரோபித, அதிஷ்ட்டானஸம்பந்தம் இருப்பதால் லக்ஷணையினுல் வஸ்துவின் உண்மையான ஸ்வரூபம் போதிக்கப்படலாம் என்று இந்த மங்கள ச்லோகத்தின் மூலமாகவே, எல்லாவிகல்பங்களுக்கும் பதில் சொல்லப்பட்டது.

இதுவரை கேவலசைதன்யஸ்வரூபமே ப்ரத்யகாத்மா என்பதை நிரூபணம் செய்யப்பட்டது. இந்த விதம்; ப்ரத்யகபின்னப்ரஹ்மஸ்வரூபமே பரமபதம் என்றும்; விஷ்ணுவென்றும் ஏகரூபமாக அறிவிக்கப்பட்ட ஸ்வரூபத்தை அனவரதம்; வாக், மனஸ், காயம் என்ற மூன்று கரணங்களினாலும் பக்தி சிரத்தையுடன் நமஸ்கரிக்கின்றேன் என்று நமஸ்காரரூபமங்களம் செய்யப்பட்டிருக்கிறது என்ற விஷயத்தை மிகவும் விஸ்தாரமாக விளக்கப்பட்டது.

**4. அவதாரிகை :** இப்போது இந்த சாஸ்திரத்திற்கு, அறியப்படாத ப்ரஹ்மமே விஷயம் என்றும், அறியப்பட்ட ப்ரஹ்மமே ப்ரயோஜனம் என்றும், சாஸ்திரத்திற்கும் – விஷயத்திற்கும் ப்ரதிபாத்யப்ரதிபாதகசம்பந்தம் இருக்கிறது என்று, விஷயம், ப்ரயோஜனம், சம்பந்தம் என்பவைகளையும் சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ப்ரஹ்மஞானம் என்பது சாஸ்திரத்தினுல்தான் அடையப்படவேண்டும் என்றும், சாஸ்திரம் ஒன்றே இதில் ப்ரமாணம் என்பதையும், ப்ரஹ்மஞானத்தினுல் ஏற்படும் ப்ரஹ்மபாவமே ப்ரயோஜனம் என்று தெரிவிக்க வேண்டுமென்ற விருப்பத்தினுல், மூன்ருவது சூத்ரமான 'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரத்தின் கருத்தை மிகவும் சுருக்கமாக விளக்கப்படுகிறது. அத்துடன் வாக்தேவதையான ஸ்ரீசரஸ்வதியையும் ஸ்துதி செய்து நமஸ்கரிக்கப்படுகிறது. சாஸ்திரயோனித்வாத் என்ற சூத்ரமானது இரண்டுவிதமான அர்த்தங்களை தெரிவிக்கின்றது. அதாவது, சாஸ்திரஸ்யயோனி: சாஸ்திரயோனி என்று ஜகத் உற்பத்திக்கு ப்ரஹ்மமே காரணம் என்பதால், வேதங்களுக்கு ப்ரஹ்மமே காரணம் என்று இந்த சூத்ரம் தெரிவிக்கின்றது.

'சாஸ்திரம் யோனி: அஸ்ய' என்று ப்ரஹ்மஸ்வரூபத்தை அறிவதற்கு சாஸ்திரமே ப்ரமாணம் என்று 'சாஸ்திரயோனி' என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் ப்ரஹ்மமே சாஸ்திரத்திற்கு காரணம் என்றும், ப்ரஹ்மத்தை அறிவிப்பதில், சப்தஸ்வரூபமான சாஸ்திரமே ப்ரமாணம் என்பதையும் தெரிவிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் சப்தஸ்வரூபமான வாக்தேவியை நமஸ்கரிக்கின்றேன் என்று இவ்வளவு விஷயங்களையும் உள்ளடக்கி இந்த ச்லோகம் சொல்லப்பட்டிருக்கிறது.

**ச்லோகம் :** औत्पत्तिकी शक्तिरशेषवस्तुप्रकाशने कार्यवशेन यस्याः ।
विज्ञायते विश्वविवर्तहेतोर्नमामि तां वाचमचिन्त्यशक्तिम् ॥

**4வது ச்லோககார்த்தம் :** சப்தப்ரஹ்மமென்று சொல்லப்படும் எந்த வாக்தேவியினிடமிருந்து, இந்த ப்ரபஞ்சமானது விவர்த்தமாகத் தோன்றுகிறதோ, எந்த வாக்தேவியின் ஸ்வாபாவீகமான நித்ய சக்தியினுல் சர்வபதார்த்தங்களும் ப்ரகாசிக்கின்றதோ (போதிக்கப்படுகின்றதோ) அப்பேர்ப்பட்ட அசிந்த்ய சக்தியாகவும் மூன்று வேதங்களின் ரூபமாகவும் இருக்கின்ற வாக்தேவியை நான் நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** 'விவர்த்தஹேதோ:' என்று விச்வம் தோன்றுவதற்கு காரணம் என்பதாக, இங்கு பஞ்சமியில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சப்தரூபமான வேதத்திலிருந்தே விவர்த்தமான இந்த ஜகத் சிருஷ்டி உண்டாயிற்று என்று வ்யாஸரால் சொல்லப்பட்டிருக்கிறது. மூன்று வேதரூபமான எந்த வாக்தேவதையினிடத்தில், எதற்கும் அங்கமாக இல்லாத சித்ரூபமான ப்ரஹ்மஸ்வரூபமானது மஹாவாக்யத்தினுல் போதிக்கக் கூடிய நித்ய சக்தி இருக்கின்றதோ அப்பேர்ப்பட்ட வாக்தேவியை நான் நமஸ்கரிக்கின்றேன் என்று சொல்லப்படுவதின் மூலமாக, மஹாவாக்யத்தினுல் ஏற்படும் போதத்தைக் கொண்டு, அந்த வாக்தேவியின் ஸ்வாபாவிகமான நித்ய சக்தியானது தீர்மானிக்கப்படுகிறது.

**பூர்வ :** வாக்கினுல் தெரிவிக்கமுடியாது என்று சொல்லப்படும் ப்ரஹ்மமென்பது சப்தத்தினுல் தெரிவிக்கப்படுகிறது என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** வாக்கினுல் தெரிவிக்கமுடியாத வஸ்துவை, சப்தம் தெரிவிக்கிறது என்பதால்தான் அசிந்த்யசக்தி என்று சொல்லப்படுகிறது. வேதமானது, வாக்கினுல் நேரிடையாக 'இதுதான்' என்று வஸ்துவை குறிப்பிட்டுச் சொல்லமுடியவில்லையென்ருலும், உபக்ரமம், உபஸம்ஹாரம் முதலான ஆறுவிதமான லிங்கங்களைக்கொண்டு தாத்பர்ய நிர்ணயகமான அர்த்தத்தை வாக்யமானது ப்ரஹ்மத்தை பாகத்யாகலக்ஷணையைக் கொண்டு போதிக்கின்றது. இப்பேர்ப்பட்ட ஸாமர்த்யம் சப்தத்தில் இருக்கிறது. இந்த சக்தியை லௌகிக விஷயங்களைக் கொண்டு அறியமுடியாது. அலௌகிகமான ஸ்வர்க்காதிகளையும், தர்மம், அதர்மம் முதலானவைகளையும், அதேபோல் ப்ரஹ்மதத்வத்தையும் போதிக்கக்கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்பதை வேத சப்தங்களை கேட்கின்றபோதே அறிந்துகொள்ளலாம், அதனுல்தான் வேதசப்தம் அசிந்த்யசக்தி உடையது என்று சொல்லப்படுகிறது. மேலும், எந்த அபேக்ஷையுமின்றி எதற்கும் அங்கமாக இல்லாமல், ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமாகவும், ஸர்வவஸ்துக்களின் ஸ்வரூபமாகவும் இருக்கின்ற காரணத்தினுல், அஸேஷவஸ்து விஷயகமான ப்ரஹ்மத்தை லக்ஷணையினுல் தெரிவிக்கக்கூடிய சஹஜமான சக்தி (நித்யசக்தி) அந்த சப்தத்தில் இருக்கிறது. மற்ற எந்த ப்ரமாணத்தினுலும் ப்ரமேயமாக அறிவிக்கமுடியாத அந்த ஸ்வரூபத்தை அறிவிக்கக்கூடிய சாமர்த்யம் இந்த சப்தம் ஒன்றிலேயே இருக்கின்றது. ஆகவே சப்தரூபமான சாஸ்திரம் ப்ரஹ்மதத்வத்தை அறிவிக்கக் கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

விவர்த்தமாகத் தோன்றும் இந்த ஜகத்தின் சிருஷ்டி என்பதே, வேதத்தினுல் தான் உண்டாயிற்று. (ஜகத் சிருஷ்டிக்கு வேதமே காரணம்) பரமாத்மாவினிடம் ப்ரளய காலத்தில் லயத்தை அடைகின்ற இந்த ஜகத் என்பது, மறுபடி சிருஷ்டி சமயத்தில் முதலில் வேதம் என்பதே தோன்றுகிறது. அந்த வேதத்தைக் கொண்டே, ஈச்வரன், தேவன், மனுஷ்யன் முதலான சேதனம், ஸ்தாவரம் போன்ற அசேதனம் முதலான பல வஸ்துக்களும் சிருஷ்டிக்கப்படுகிறது. இந்தவிதம் ஜகத் சிருஷ்டிக்கு காரணமான வேதமே, எந்தவித அபேக்ஷையுமின்றி ப்ரஹ்மதத்வத்தை போதிக்கின்றது. இவ்விதம் வேதம் என்ற ப்ரமாணத்தினுல், தெரிவிக்கப்படும் விஷயம், வேறு எந்த ப்ரமாணத்தினுலும்

பாதிக்கப்படுவதில்லை. இதுவரை அறியப்படாததும், (அனதிகதமானதும்) [illegible] எந்த ப்ரமாணத்தினுலும் பாதிக்கப்படமுடியாததுமான விஷயத்தை தெரிவிக்கக்கூடிய (சப்த) சக்தி வேதாந்த சாஸ்திரத்திற்கே இருக்கின்றது. இந்தவிதம் 'சாஸ்திர யோனித்வாத்' என்ற சூத்திரத்தின் கருத்தை தெரிவித்து அந்த சூத்ரத்தின் மூலமாகவே, வாக்தேவதையான ஸ்ரீசரஸ்வதியை நமஸ்காரம் செய்யப்படுகிறது.

**5. அவதாரிகை :** மேலே நிர்க்குணஸ்வரூப விஷயகமான, நிகிலசாரீரக சாஸ்திரத்தை சுருக்கமாகச் சொல்ல ஆரம்பிக்கப்படுகிறது. அதனுல், இந்த சாஸ்திரம் நிர்விக்னமாக முடிவு பெறவேண்டும் என்பதற்காகவும், இந்த சாஸ்திரம் எப்போதும் எல்லோருக்கும் ப்ரயோஜனமாக வேண்டும் என்றும், இதனுல் போதிக்கப்படும் தத்வம் எல்லோருக்கும் நன்கு ப்ரகாசிக்கவேண்டும் என்பதற்காகவும் ஸ்ரீவிக்னேச்வரரை நமஸ்கரித்து ப்ரார்த்திக்கப்படுகிறது.

प्रारम्भाः फलिनः प्रसन्नहृदयो यश्चेत्तिरश्चामपि नो चेद्विश्वसृजोप्यलं विफलतामायान्त्युपायोद्यमाः ।
विश्वैश्वर्यमतो निरङ्कुशमभूद्यस्यैव विश्वप्रभोः सोऽयं विश्वहिते रतो विजयते विघ्नेश्वरो विश्वकृत् ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வஉத்க்ருஷ்ட்டரான எந்த விநாயகர் ப்ரஸன்னராக இருப்பாராஞல், ஆரம்பிக்கப்படும் ஸர்வவிஷயங்களும் பலனைக் கொடுக்கின்றதோ, எவருடைய அருள் இல்லையாஞல், ப்ரஹ்மாவின் ப்ரயத்னங்களும் பலனை கொடுப்பதில்லையோ, எவருடைய ஐஸ்வர்யம் தங்குதடையின்றி இருக்கின்றதோ, எவர் ஸர்வஜகத் சிருஷ்டிகர்த்தாவாகவும், ஜகத்ரக்ஷகராகவும் ஸர்வேச்வரராகவும் இருக்கின்ருரோ, அப்பேர்ப்பட்ட ஸ்ரீவிக்னேச்வரரை நான் பக்தியுடன் நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** எந்தக்கார்யம் ஆரம்பிக்கப்பட்டாலும், அதற்கு எவ்விதமான இடையூறும் ஏற்படாமல் இருப்பதற்காக, ஸர்வவிக்னங்களையும் போக்குகின்ற விசேஷ சக்தியை உடைய ஸ்ரீவிக்னேச்வரரை பக்தியுடன் நமஸ்கரித்து ப்ரார்த்திக்க வேண்டும். எந்தக் கார்யசித்திக்கு எந்த தேவதாவிசேஷம் சொல்லப்படுகிறதோ அந்த தேவதையை பூஜித்தால்தான் அந்த கார்யம்சித்திக்கும்.

**பூர்வ :** விக்னேச்வரரை பூஜித்த போதிலும், சில சமயங்களில் விக்னங்கள் ஏற்படுகின்றதால், விக்னேச்வரர் விக்னங்களை தீர்ப்பவர் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** ஸ்ரீவிக்னேச்வரர்தான் எல்லோருக்கும் எப்போதும் அனுக்ரஹம் செய்கின்ருர். எல்லா விக்னங்களையும் நிவர்த்திக்கக் கூடிய தனிப்பட்ட சக்தி அவரிடம் தான் இருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை. ஆனுல் அவரை பூஜிக்கின்ற முறையில் ஏற்படும் குறைபாடுகளினுலோ, சிரத்தையின் தாரதம்யத்தினுலோ அல்லது அவரவரிடமுள்ள தோஷங்களின் ஆதிக்யத்தினுலோ கார்யம் பலிதமாகாமல் இருக்கலாமேயன்றி அவருடைய அனுக்ரஹ சக்தியில் எவ்வித குறைவும் கிடையாது. ஆகவே, தேவர்கள், மனுஷ்யர்கள், வானரம் முதலான சர்வ ஜீவராசிகளுக்கும் ஸ்ரீவிக்னேச்வரரின் ப்ரஸன்னதை இருக்குமாஞல் கார்யம் சித்திக்கும். அவ்விதமின்றி ஸ்ரீவிக்னேச்வரரை பூஜிக்காமல், அவர் அருளைப் பெருமல் இருப்பாரேயாஞல், ப்ரஹ்மா விஷ்ணு, ருத்ரன் முதலான ஈச்வரனுக இருந்தபோதிலும் அவர்களால் செய்யப்படும் கார்யங்கள் எதுவும் பலனைக் கொடுக்காது. ஸ்ரீவிக்னேச்வரரை பூஜிக்காத காரணத்தால், பகவான் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின், பசுக்களையும், கன்றுகளையும் மறைத்த ப்ரஹ்மாவின் எண்ணம் பலிக்கவில்லை

என்பது எல்லோரும் அறிந்த விஷயம்தான். ஆகவே, எப்பேர்ப்பட்ட பண்டிதராஞலும், விக்னமின்றி எடுத்த கார்யம் நிறைவேறவேண்டுமாஞல் அவர்களும் விக்னேச்வரரை பூஜித்து அவர் அருளைப் பெற்ருல்தான் கார்யம் சித்திக்கும் என்பதை இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விக்னேச்வரர் விக்னத்தை உண்டாக்குபவர்அல்ல. சர்வ விக்னங்களையும் விலக்குபவரே விக்னேச்வரர் என்று அறிந்து அவரை பூஜித்து அவர் அருளை பெறவேண்டும்.

**6. அவதாரிகை :** சாஸ்திரார்த்தங்களை விசாரிக்கின்றதால் போதிக்கப்படுகின்ற தத்வஞானத்தை அடைவதற்கு தடையாக இருக்கின்ற புத்தியிலுள்ளமலங்களை நீக்கி ஸ்வரூபப்ரகாசம் ஏற்பட வேண்டுமென்று பரமகுருவான ஸ்ரீவ்யாஸ பகவானை ப்ரார்த்தித்து நமஸ்கரிக்கப்படுகிறது. இந்த ச்தோத்ரம் ரூபகஅலங்காரமாகச் செய்யப்பட்டிருக்கிறது.

**ச்லோகம் :**

वाग्विस्तरा यस्य बृहत्तरङ्गा वेलातटं वस्तुनि तत्वबोधः ।
रत्नानि तर्कप्रसरप्रकाराः पुनात्वसौ व्यासपयोनिधिर्नः ॥

**ச்லோகார்த்தம் :** எவருடைய வாக்கானது ஜலாசயம் என்ற மஹாஸமுத்ரத்தின் பெரிய அலைகள் போன்று இருக்கின்றதோ, எவருடைய தத்வஞானம் ஜலாசயத்தின் கரையாக இருக்கின்றதோ, எவருடைய தர்க்கங்களான பரமதகண்டனம்என்ற அபூர்வ மானயுக்திகளே ரத்னங்களாக இருக்கின்றதோ, அப்பேர்ப்பட்ட வ்யாஸபகவாஞகிய ஸமுத்ரமானது என் புத்தியிலுள்ளமலங்களை நீக்கி பரிசுத்தமாக்கவேண்டும் என்று ப்ரார்த்திக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** "யஸ்யதேவேபராபக்தி: யதாதேவே ததாகுரௌ" என்று சொல்லப்பட்டபடி ஈச்வர பக்தியைப்போல் குருவினிடமும் பக்தி இருக்கவேண்டும். அவ்விதம் இருந்தால்தான் எதையும் சாதிக்கமுடியும். குருபக்திதான், தத்வத்தை அறிவதற்கு முக்யகாரணம் என்று உபநிஷத்வாக்யங்களும் தெரிவிக்கின்றது. அதனுல் கீழே தேவதைகளை நமஸ்கரித்து ஈச்வர பக்தியை தெரிவித்த பிறகு, குருபக்தி என்பது மிகவும் அவஸ்யம் என்பதை தெரிவிப்பதற்காக பரம்குருவான ஸ்ரீவ்யாஸபகவானை சமுத்ரத்திற்கு சமமாக வர்ணித்து நமஸ்கரிக்கப்படுகிறது. வேதாந்த சாஸ்திரத்தை சகலருக்கும் போதித்த ஸர்வகுருவான வ்யாஸர், உத்தரமீமாம்ஸை என்ற சாஸ்திரத்தை இயற்றியவர். இவ்வித மஹத்வம் வாய்ந்த வ்யாஸ பகவானை சமுத்ரத்திற்கு ஒப்பாக வர்ணிக்கப்படும் கா்ரணம் என்னவென்ருல், ஜலம் என்பதே, சர்வமலங்களையும் நீக்கி வஸ்துவை பரிசுத்தமாக்கும் தன்மை உடையதாக இருக்கின்றது. அதுபோல் சமுத்ரம் என்பதும் பரிசுத்தமாக்குகின்றது என்பது மட்டுமல்ல, மிகவும் உயர்ந்ததாகவும், மிகுந்த ஆழத்தையுடையதாகவும் இருக்கின்றது. அதுபோல் ஸ்ரீவ்யாஸபகவான், நம் புத்தியிலுள்ளமலங்களைப் போக்கி பரிசுத்தமாகச் செய்யவேண்டும் என்றும் அவரால் உபதேசிக்கப்படும் தத்வம் புத்தியில் நன்ருகப்ரகாசிக்க வேண்டும் என்றும் ப்ரார்த்தித்து நமஸ்கரிக்கின்றேன். மேலும், வ்யாஸரென்ற மஹாஹமுத்ரத்தின் அலைகள் போன்ற வாக்கானது அனேக சாகைகளுடன் கூடியதாக அனேகவிஷயங்களை தெரிவிக்கின்றதாக இருக்கின்றது. இவ்விதம் பல கிளைகள் போன்று விஸ்தாரத்தை அடைகின்ற வாக் என்ற அலைகளுக்கு தத்வபோதம் என்பதே கரையாக இருக்கிறது. வாக் என்ற இந்த அலைகள், அவரால் உபதேசிக்கப்படுவனின் ச்ரோத்ரேந்த்ரியங்களின் வழியாக, புத்தியில் போய்ச் சேர்ந்து, தத்வபோதத்தை உண்டுபண்ணுகின்றது. மேலும், தத்—த்வம் என்ற பதார்த்தங்களை விசாரித்து அதன் அர்த்தங்களை நிர்ணயம் செய்கின்ற விஷயத்தில்,

பரமதஸ்த்தர்களால் செய்யப்படும் ஆக்ஷேபங்களை அறிந்து, அதற்குத்தக்க யுக்திகளைக் கொண்டு கண்டனம் செய்து தத்வத்தை போதிக்கின்றதால், அந்த யுக்திகளை ரத்னங்கள் என்று வர்ணிக்கப்படுகின்றது. ஏனெனில் ரத்னங்கள் என்பது எப்படி வஸ்துவை ப்ரகாசிக்கச் செய்கின்றதோ அதுபோல் யுக்திகள் என்ற ரத்னங்கள் வஸ்துவை ப்ரகாசிக்கச் செய்கின்றது. யுக்திகளாகின்ற ரத்னம் அர்த்த அபிவ்யஞ்சகமாக இருக்கின்றதால், யுக்திகளை ரத்னத்திற்கு சமமாகச் சொல்லப்படுகிறது. மேலும் சமுத்ரத்திலுள்ள பெரிய அலைகள் எப்படி தனக்கு எவ்வித தடையும் ஏற்படாமல், தன்னிடம் எதையும் வரவொட்டாமல் அடித்துத் தள்ளுகின்றதோ அதுபோல் வ்யாஸருடைய வ்யாக்யானங்கள், மற்ற மதஸ்த்தர்களின் வாதங்களை நெருங்கவிடாமல் அவைகளை அடித்து தள்ளி தடை செய்கின்றதால், அவருடைய வாக் என்பதை, பெரிய தரங்கங்ளுக்கு ஒப்பாகச் சொல்லப்படுகிறது. இவ்விதமஹத்வம் வாய்ந்த பரமகுருவான ஸ்ரீவ்யாஸ பகவானை நான் நமஸ்கரிக்கின்றேன்.

**7. அவதாரிகை :** ஸத்ஸம்ப்ரதாயத்தை லோகத்திற்கு உபதேசித்து, அருளிய பாஷ்யகாரரான ஸ்ரீசங்கர பகவத்பாதரை நமஸ்கரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** वक्तारमासाद्य यमेव नित्या सरस्वती स्वार्थसमन्विताऽऽसीत् ।
निरस्तदुस्तर्ककलङ्कपङ्का नमामि तं शंकरमर्चितांघ्रिम् ॥

**ச்லோகார்த்தம் :** சப்த நித்ய சக்தி ரூபமாக இருக்கின்ற நித்யாஸரஸ்வதி என்ற வேதஸ்வரூபமான வாக்தேவதையானவள், எவரை வ்யாக்யாதாவாக அடைந்ததால், துஸ்தர்க்கம் என்ற சேற்றிலிருந்து விடுபட்டு, தன் அர்த்தத்தை தெரிவிப்பதில் பூர்ணத்வத்தை அடைந்தாளோ அப்பேர்ப்பட்ட சங்கரபகவத்பாதரை நான் நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** எல்லோருக்கும் மங்களத்தைக் கொடுப்பவர் என்பதால் ஸம்கரோதீதி சங்கரம் என்ற காரணப்பெயர் உடையவர் என்று சொல்லலாம். அல்லது ஸ்ரீபரமேச்வரரின் அவதாரம் என்பதால் சங்கரர் என்ற பெயர் ஏற்பட்டது என்று சொல்லலாம்.

இவ்விதம் முதலில் சூத்ரகாரரை நமஸ்கரித்த பிறகு, சம்ப்ரதாயசித்தமாக வேதார்த்தங்களை ப்ரசாரம் செய்த பாஷ்யகாரரான ஆசார்யாளை நமஸ்கரிக்கப்படுகிறது.

**பூர்வ :** வேதமும் நித்யம், அதன் அர்த்தமும் நித்யம் என்றால் ஆசார்யரால் விசாரிக்கப் படவேண்டிய அவசியம் என்ன?

**சித்தா :** வேதத்தினால் தெரிவிக்கப்படும் நித்யசித்தமான அர்த்தத்தை அறிந்து கொள்ளக்கூடிய சக்தி அற்றவர்களில் ஒரு சிலரால் துஸ்தர்க்கம் என்ற சேற்றைக் கொண்டு, தாத்பர்யார்த்தம் என்னவென்பதையே அறியமுடியாமல், ச்ருதிக்கு விரோதமாக அர்த்தம் செய்து ப்ரசாரம் செய்யப்படுகிறது. இவ்விதம் ச்ருதிக்கு விரோதமான துஸ்தர்க்கம் என்ற சேறுகளையெல்லாம் அப்புறப்படுத்தி, அந்தமதஸ்த்தர்களின் வாதங்கள் எல்லாம் ச்ருதிக்கு விரோதம் என்பதை காரணகார்யங்களுடன் எடுத்து விளக்குகின்றதன் மூலமாக, உண்மையான தாத்பர்யம் என்ன என்பதையும் தெரிவித்து, தன்னுடைய பாஷ்யத்தின் மூலம் லோகத்திற்கு மங்களத்தைச் செய்திருக்கின்றார். இவ்விதம் சகலரும் பூஜிக்கத்தகுந்த மஹாமஹிமையுடைய ஸ்ரீசங்கரபகவத் பாதரின் பாதாரவிந்தங்களில் பக்தியுடன் நமஸ்கரிக்கின்றேன்.

**8வது ச்லோக அவதாரிகை :** அதன்பிறகு எனது சாக்ஷாத் குருவான ஸ்ரீசுரேச்வராச்சாரியாரை நான் நமஸ்கரிக்கின்றேன்.

**ச்லோகம் :** यदीयसंपर्कमवाप्य केवलं वयं कृतार्था निरवद्यकीर्त्तयः ।
जगत्सु ते तारितशिष्यपङ्क्तयो जयन्ति देवेश्वरपादरेणवः ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வோத்க்ருஷ்ட்டமான எந்த பாததூளியின் சம்பந்தம் ஏற்பட்டதனுலேயே, நான் க்ருதார்த்தனுகவும், களங்கமற்ற கீர்த்தியுடையவனுகவும் இருக்கின்றேனே, எந்தபாத தூளியினுல் மற்றுமுள்ள பல சிஷ்யர்களும் கரை ஏற்றப்பட்டிருக்கின்ருர்களோ, அப்பேர்ப்பட்ட தேவேச்வரரென்ற என் குருவின் பாதரேணுக்களில் நான் நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** எனது குருவான ஸ்ரீசுரேச்வராச்சார்யாரின் உத்க்ருஷ்ட்டமான பாதரேணுக்களின் சம்பந்தத்தினுல் ஸம்ஸாரம் என்ற கடலிலிருந்து விடுவிக்கப்பட்டு க்ருதார்த்தர்களானேும் என்பது லோகப்ரசித்தம். அவருடைய பாதரேணுக்களின் சம்பந்தத்தினுலேயே, ப்ரஹ்மவித்யையென்பது உபதேசிக்கப்பட்டு விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்து க்ருதார்த்தர்களானேும் என்ருல், என்குருவின் பெருமையை எவ்விதம் வாக்கினுல் வர்ணிக்கமுடியும்? வாக்கினுல் வர்ணிக்கமுடியாத மஹிமை வாய்ந்த என் குருநாதரின் சரணூரவிந்தங்களில், அனவரதம் நமஸ்கரிக்கின்றேன்.

**9. அவதாரிகை :** இவ்விதம் குருவின் மஹிமையைச் சொல்வதன் மூலமாக நாங்கள் க்ருதார்த்தர்கள் என்று தற்பெருமையாக சொல்லப்படுவதாக நினைக்க நேரிடும். தற்புகழ்ச்சி இல்லையென்பதை தெரிவிப்பதற்காக, மேலும் குருவின் மஹிமையை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** गुरुचरणसरोजसंनिधानादपि वयमस्य गुणैकलेशभाजः ।
अपि महति जलार्णवे निमग्नाः सलिलमुपाददते मितं हि मीनाः ॥

**ச்லோகார்த்தம் :** குருவின் சரணமாகின்ற பாதகமலங்களின் சமீபத்தில் வஸித்தபோதிலும், அவரிடமுள்ள, வித்யைகளை பூர்ணமாக நான் அடைந்ததாகச் சொல்ல முடியாது. எப்படி அகண்டமான சமுத்ரத்தில் வஸிக்கின்ற மீன்கள் சமுத்ரஜலம் முழுவதையும் பருகமுடியாமல், தனக்கு தகுந்த அளவில்தான் பருகமுடிகின்றதோ, அதுபோல் அவருடைய அளவிடற்கரிய வித்யையும், குணுதிசயங்களையும் பூர்ணமாக பெறமுடியவில்லையென்ருலும், என்னுடைய புத்திசக்திக்கு தக்கவாறு மிகவும் ஸ்வல்பமாகவே பெற்றிருக்கிறேன்.

**வ்யாக்யானம் :** சகல சற்குணங்களுக்கும் சமுத்ரம் போன்றவரான எனது குருவினுடைய பாதகமலங்களின் சமீபத்தில் வாஸம் செய்யப்பட்டதாலேயே, அவரிடமுள்ள அத்தனை குணங்களையும் அடையவேண்டியதுதான் என்ருலும், அல்ப புத்திசக்தி உடையவர்களாக இருக்கின்றதால், அவரைப் போல் பூர்ணகுணமில்லாவிட்டாலும் சிறிதளவு ஏற்பட்ட குணவிசேஷங்களினுலேயே க்ருதார்த்தர்கள் ஆனேும். சமீபத்திலுள்ள குளத்தில் தாமரை மலர்ந்திருக்கின்றபோது, அதன் வாஸனை குளத்தின் கரையிலும் பரவி இருக்கும். அதுபோல் குருவின் பாதமாகிற தாமரையின் சமீபத்தில் இருப்பதனுலேயே அவருடைய குணுதிசயங்கள், அவர் சமீபத்திலுள்ள நமக்கும் ஏற்படவேண்டுமென்பதால், குருவின் பாதங்களை தாமரைக்கு, ஸமமாகச் சொல்லப்படுகிறது.

குருவானவர், தன்னிடமுள்ள வித்யைகளையும் குணங்களையும் நமக்குக் கொடுக்கவேண்டுமென்ற பரோபகார சிந்தையுடன் அனுக்ரஹம் செய்தபோதிலும் அதை க்ரஹிக்கக்கூடிய புத்திசக்தி நம்மிடம் இல்லாததால், அவர் பாதபத்மங்களின் சமீபம்

வாஸம் செய்த போதிலும், சமுத்ரம் போன்ற அவருடைய அளவிடமுடியாத குணங்கள் அனைத்தையும் நம்மால் அடையமுடியவில்லை. எப்படி சமுத்ரத்திலேயே வாஸம் செய்கின்ற மீன்களால் சமுத்ரஜலம் பூராவையும் பருகமுடியாமல், தன் வயிற்றின் அளவிற்கு தகுந்தவாறு சிறிதளவு ஜலத்தைத் தான் பருகமுடிகிறதோ அதுபோல் நம்முடைய புத்திசக்திக்கு தக்கவாறு ஸ்வல்பகுணங்களைத்தான் அடையமுடிகிறது. இப்பேர்ப்பட்ட அல்ப குணங்களையும், வித்யையும் பெற்ற நாங்களே க்ருதார்த்தர்கள் ஆனோம் என்றால், என் குருவின் மஹிமையை எவ்விதம் எடுத்துச் சொல்லமுடியும்? ஆகவே, தற்புகழ்ச்சிக்காக குருவின் பெருமை சொல்லப்பட்டதாக நினைக்கக்கூடாது என்பதற்காகவே உதாகரணத்தின் மூலம் விளக்கப்பட்டது.

**10.அவதாரிகை :** இந்த விதம் அல்பபுத்தி சக்தி உடையவன் என்று சொல்லப்பட்டதற்காக இப்பேர்ப்பட்ட க்ரந்தத்தை எழுதக்கூடிய ஸாமர்த்யம் எப்படி இருக்கமுடியும்? என்ற சந்தேகம் ஏற்படலாம். ஆனால் என்னுடைய வினயத்தை தெரிவிப்பதற்காக, சொல்லப்பட்டதால், அல்பபுத்தி சக்தியினால் எழுதப்பட்டது என்ற தோஷம் சம்பவிக்காது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் : शक्तो गुरोश्चरणयोर्निकटे निवासान्नारायणस्मरणतश्च निरन्तराय: ।
शारीरकार्थविषयावगतिप्रधानं संक्षेपत: प्रकरणं करवाणि हृष्यन् ॥

**ச்லோகார்த்தம் :** குருவின் சரணாரவிந்தங்களின் சமீபத்திலேயே வாஸம் செய்த காரணத்தினாலும் ஸ்ரீமந்நாராயணனையே நிரந்தரமாக அனுஸந்தானம் செய்த காரணத்தினாலும் இந்த க்ரந்தம் எழுதுவதற்கு எவ்விதப்ரதிபந்தகமும் இல்லாமல் இந்த சாரீரகம் என்ற சூத்ரபாஷ்யத்தின் அர்த்தத்தை ஸ்பஷ்டமாக அறிவிக்கவேண்டுமென்று விரும்பி மிகப்பெரிய சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களை மிகச்சுருக்கமாகவும், விஸ்தாரமாகவும் தெரிவிக்கக்கூடிய சக்தி உடையவனாக இருக்கின்றேன். பகவத்க்ருபையாலும், எனது குருவின் அனுக்ரஹத்தினாலும் எவ்வித இடையூறுமின்றி இந்த க்ரந்தம் முடிவுபெற ப்ரார்த்திக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** பூர்ணமான புத்திசக்தி இல்லாமல் இந்த க்ரந்தத்தை எழுதக்கூடிய ஸாமர்த்யம் எப்படி ஏற்பட்டது? மேலும் எப்பேர்ப்பட்ட ச்ரேயஸ்ஸை உடையவர்களாக இருப்பினும், அவர்களால் செய்யப்படும் கார்யங்களுக்கு பலவிதமான விக்னங்கள் ஏற்படலாம் என்பதை 'தஸ்ய ஹ ந தேவாச்ச நஅபூத்யா ஈசதே' என்று சொல்லப்படுகிறது. ஆகவே இந்த க்ரந்தமானது எப்படி பூர்த்தியாக முடியும்? என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இந்த சந்தேகத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது. அபூர்ணனாக இருந்தால் க்ரந்தம் எழுதமுடியாது. பூர்ணனாக இருந்தாலும் விக்னம் ஏற்படுமே? என்றால்,

ஆசார்யனிடம் இருக்கின்ற அத்தனை குணங்களும் என்னிடம் இல்லையென்று சொல்லப்பட்டதற்காக, இந்த க்ரந்தம் எழுதுவதற்குரிய சக்தி கூட என்னிடம் கிடையாது என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஆசார்யனுடைய சரணகமலங்களின் சமீபத்திலேயே வாஸம் செய்து அவருக்கு வேண்டிய ஸேவைகளைச் செய்கின்ற விஷயத்திலும் அவரால் உபதேசிக்கப்பட்ட வித்யையை அடைவதிலும், மிகவும் பாக்யத்தைச் செய்திருக்கின்றேன். ஆகவே அந்த ஆசார்யனுடைய பரிபூரண அனுக்ரஹத்தினாலேயே இந்த க்ரந்தத்தை எழுத ஆரம்பித்திருக்கின்றேன். சர்வமங்களத்தையும் அளிப்பவரான பகவான் ஸ்ரீமந்

நாராயணனை ஸதாஸ்மரணம் செய்பவர்களுக்கு எந்தவிதமான இடையூறும் ஏற்படாது என்றும், சர்வமங்களமும் உண்டாகும் என்றும் ஸ்ம்ருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, ஸதாஸர்வகாலமும் ஸ்ரீமந்நாராயணனே நான் என்று ப்ரத்யகபின்ன ப்ரஹ்மஸ்வரூபநிஷ்டையில் இருக்கின்ற எனக்கு எவ்வித இடையூறும் ஏற்படாது என்பதால் இந்த க்ரந்தம் எப்படி முடிவுபெறுமோ என்ற கவலையுமின்றி, மிக்க மகிழ்ச்சியுடனேயே இந்தக்ரந்தத்தை ஆரம்பிக்கின்றேன்.

**பூர்வ :** இதை ப்ரகரணக்ரந்தம் என்று சொல்லப்படுமானால் ஒரு பெரிய சாஸ்திரத்தின் ஒரு அம்ஸத்தை எடுத்து விளக்கப்படுவதின் மூலம் அந்த சாஸ்திரத்திற்கும் இந்த க்ரந்தத்திற்கும் ஒரு சம்பந்தம் இருக்கவேண்டும். அதனால் இந்த க்ரந்தமானது எந்த சாஸ்திரத்தின் ஏகதேச சம்பந்தம் உடையதாக இருக்கிறது?

**சித்தா :** "சாஸ்திர ஏகதேசஸம்பந்தம், சாஸ்திரகார்யாந்தரேஸ்திதம் ப்ராஹு: ப்ரகரணம் நாம க்ரந்தபேதம் விபச்சித:" என்று ப்ரகரண க்ரந்தத்திற்கு சொல்லப்படுகின்ற லக்ஷணத்தின்படி 'சாரீரகம்' என்ற சாஸ்திரத்துடன் சம்பந்தமுடையதாகவும், அந்த சாஸ்திரத்தில் தெரிவிக்கப்பட்ட விஷயங்களில் ஏற்படும் சந்தேகங்களை, பலயுக்திகளைக் கொண்டும் நிரூபணம் செய்யப்படும் விஷயத்தில் இந்த க்ரந்தம் கார்யாந்தரம் என்று சொல்லக் கூடியதாகவும் இருக்கின்றது. ஆகையால் இந்த க்ரந்தத்தை ப்ரகரணக்ரந்தம் என்று சொல்லலாம்.

மேலும், இந்த க்ரந்தத்திற்கு ஜீவப்ரஹ்மஐக்யமேவிஷயம்–ப்ரஹ்மாத்ம சாக்ஷாத்காரமேப்ரயோஜனம். இந்த விஷயத்தில் என்னுடைய கல்பனை எதுவுமில்லை. சாரீர: என்றால் ஜீவன் என்று அர்த்தம். 'க' என்பதால் காயதி = போதயதி என்று அறியப்படுகிறது. ஜீவனே ப்ரஹ்மமென்று போதிக்கின்றதால் 'சாரீரகம்' என்று சொல்லப் படுகிறது. சாரீரகம் என்ற சாஸ்திரத்தில், விசாரத்திற்கு, ப்ராதான்யம் கொடுக்கப் பட்டிருக்கிறது. இந்த க்ரந்தத்தில் அவகதி என்ற சாக்ஷாத்காரத்திற்கு ப்ராதான்யம் கொடுக்கப்படுகிறது. மூலசாஸ்திரத்தில் ஸகுணம் நிர்க்குணம் என்ற இரண்டையும் விசாரிக்கப்படுகிறது. இந்த க்ரந்தத்தில் நிர்க்குணப்ரஹ்மத்தை மட்டுமே விசாரிக்கப் படுகிறது. இந்தவிதம், விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட விஷயத்தை சுருக்கமாகத் தெரிவிப்பதால், அடையப்படவேண்டிய சாக்ஷாத்காரஞானம் ஏற்படுவதற்கு வேண்டிய விஷயங்களை மட்டும் முக்யமாக தெரிவிக்கப்படுகிறது. அத்துடன் மற்றமதஸ்த்தர்களின் தர்க்கங்களால் ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்திப்பதற்குரிய யுக்திகளைக் கொண்டு, தத்வத்தை நிர்ணயம் செய்து தெரிவிக்கப்படுகிறது. மேலும், பல பெரியோர்களால் பலக்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்ற விஷயங்களிலுள்ள ஸாராம்ஸத்தை மட்டும் எடுத்து இந்த க்ரந்தத்தில் விளக்கப்படுவதால், ப்ரஹ்மாத்ம சாக்ஷாத்காரம் என்ற விஷயம் மிகவும் தெளிவாக விளக்கப்படுகிறது. ஆகவே இந்தக்ரந்தம் வ்யர்த்தமல்ல என்று தெரிவிக்கிறேன்.

ஆகையால் வேதார்த்தங்களை அறிந்து தத்வஞானத்தை அடையவேண்டுமென்ற தீவிர இச்சையுடையவர்கள், அளவற்ற பக்தி சிரத்தையுடன் ஆசார்யனை அடைந்து அவரால் உபதேசிக்கப்பெற்று வேதாந்தார்த்த தாத்பர்ய விஷயத்தை க்ரஹிப்பதுடன் அதை தாரணமும் செய்யவேண்டும். அதன்பிறகு இதுவரை ச்ரவணத்தினால் அறியப்பட்ட விஷயத்தையும், தன்னுடைய அனுபவங்களையும் கொண்டு அதற்கு சமமான விஷயங்களுடன் பொருத்தி தன்னுடைய புத்தி சாதுர்யத்தினால் பலவிதமான யுக்திகளைக் கொண்டும் விசாரித்து தத்வத்தை நிர்ணயம் செய்யக்கூடிய சாமர்த்யமும் இருக்கவேண்டும். இப்பேர்ப்பட்ட குணங்கள்

எல்லாம் தன்னிடம் இருப்பதை எண்ணி இந்தக்ரந்தக்காரர் மிகுந்த மகிழ்ச்சியுடன் இந்த க்ரந்தத்தை ஆரம்பிக்கின்றார்.

**11. அவதாரிகை :** இந்த விதம் என்னுடைய குருவைப் பற்றி நான் ஸ்துதி செய்ததற்காக, மற்ற வித்வான்களான ஆசார்யார்களை அலக்ஷ்யம் செய்வதாக, அவர்கள் எண்ணுவார்களானால் இந்த க்ரந்தத்திற்கு அவர்களுடைய ஆதரவு கிடைக்காது. அதனால் இந்த க்ரந்தமானது ப்ரசாரத்தை அடையமுடியாது என்று இந்தக்ரந்தக்காரர் நினைத்து, எல்லோரும் பண்டிதர்கள்தான் என்பதை மேலே தெரிவிக்கின்றார்—:

**ச்லோகம் :**

पदवाक्यमाननिपुणा निपुणं विमृशन्त्विदं प्रकरणं मनसा ।
गुणदोषनिर्णयनिमित्ततया प्रथिता हि पण्डितजना जगति ॥

**ச்லோகார்த்தம் :** தர்க்கம்—மீமாம்ஸா—வ்யாகரணம் என்ற மூன்று சாஸ்திரங்களிலும் நிபுணர்களாக இருக்கின்ற வித்வான்கள், இந்த க்ரந்தத்தை நன்கு க்ரஹித்து, அவர்களுடைய புத்தி சாதுர்யத்தினால் இதிலுள்ள குணதோஷங்களை விமர்ஸனம் செய்யட்டும். ஏனெனில் இப்பேர்ப்பட்ட பண்டிதர்கள்தான் குணதோஷங்களை நிர்ணயிப்பதில் புகழ் பெற்றவர்களாக இருக்கின்றார்கள் என்பதால் அவர்களால் இந்த க்ரந்தம் விமர்ஸிக்கப்பட வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறேன்.

**வ்யாக்யானம் :** பகவத் அனுக்ரஹத்தாலும் ஆசார்யனுடைய அனுக்ரஹத்தினாலும் இந்த க்ரந்தத்தை எழுத சாமர்த்யம் உடையவனாக இருக்கிறேன் என்று சொல்லப் பட்டதற்காக, மற்ற வித்வான்களை அலக்ஷ்யம் செய்வதாக நினைக்கக்கூடாது. குருவைத் தவிர மற்றவர்களை அனாதரவு செய்வதாக நினைப்பார்களேயானால், இந்த க்ரந்தமானது துஷ்ப்ரசாரம் செய்வதற்கு காரணமாகலாம். ஆகையால் இந்தக்ரந்தத்தை எழுதுவதென்பது என் பொறுப்பாக இருந்தபோதிலும், அதிலுள்ள குணதோஷங்களை அறிந்து விமர்ஸனம் செய்யவேண்டியது பண்டிதர்களின் பொறுப்பாக இருக்கின்றதால் அவர்களை இந்த க்ரந்தத்திற்கு விமர்ஸனம் செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றேன்.

இந்த ச்லோகத்தில் 'பத, வாக்ய, மான, நிபுண' என்று சொல்லப்படுகிறது. அதாவது, பதம் என்பதால் வ்யாகரணத்தையும்—வாக்யம் என்பதால் மீமாம்ஸையையும் மான =ப்ரமாணம் என்பதால் ப்ரத்யக்ஷாதிகளையும் தர்க்கம் முதலான சாஸ்திரங்களையும் குறிப்பிடப்படுகிறது. இவைகளில் நிபுணர்களாக இருக்கின்ற வித்வான்களால் பரிசீலிக்கப்படவேண்டும் என்று சொல்லப்படுகிறது.

வர்ணஸமூகம்: பதம் = பல அக்ஷரங்களைக் கொண்டது பதம். இந்த 'பதம்' என்பது ஏற்கனவே, எந்த அர்த்தத்துடன் ஸங்கேதக்ரஹம் ஏற்பட்டு, அதன் அர்த்தம் என்னவென்று கிரஹிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்த அர்த்தத்தைத்தான் போதிக்கும் என்று, 'பதம்' அர்த்தஸ்வரூபமாத்ரபோதகம்' என்று வ்யாகரண சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இந்த வ்யாகரண சாஸ்திரத்தையே 'பதம்' என்று இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது.

வாக்யம் என்பது—பல பதங்கள் உள்ளதாகவும் அந்த பதங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று ஆகாங்க்ஷை யோக்யதை ஸன்னிதி முதலான தன்மைகளுடன் கூடினதாகவும் இருப்பதுடன், முக்யார்த்தத்தை போதிக்கக்கூடியதாகவும் இருக்குமானால், அதையே வாக்யமென்று சொல்லப்படும். இந்த விதம் வேத வேதாந்தவாக்யங்களை விசாரிக்கின்ற சாஸ்திரமே மீமாம்ஸாசாஸ்திரம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இங்கு வாக்யம் என்பது மீமாம்ஸாசாஸ்திரத்தை குறிக்கின்றது.

ப்ரமாணம் என்பதால் ப்ரத்யக்ஷம் அனுமானம் ஆகமம் என்ற ப்ரமாணங்களேயும் தர்க்க சாஸ்திரம் முதலான சாஸ்திரங்களேயும் குறிப்பிடப்படுவதால் இங்கு ப்ரமாணம் என்ற பதம் தர்க்க சாஸ்திரத்தை குறிக்கின்றது. ஆகவே, வ்யாகரணம் தர்க்கம் மீமாம்ஸா முதலான சாஸ்திரங்களே நன்கு அறிந்த பண்டிதர்களால், இதிலுள்ள ஸாரம் ஏன்னவென்பதையும் அஸாரம் என்ன என்பதையும் நிர்ணயம் செய்து விமர்ஸனம் செய்ய வேண்டுமென்று அவர்களே வேண்டிக்கொள்கிறேன்.

**12. அவதாரிகை :** பண்டிதர்களால் இந்த க்ரந்தம் விமர்ஸிக்கப்படுமாஞல் அவர்கள் இந்த க்ரந்தத்திலுள்ள குணவிசேஷங்களேத் தெரிவிப்பதுபோல் தோஷத்தையும் தெரிவிப்பார்கள். அதஞல் உமக்கு வருத்தம் ஏற்படலாமே? என்ருல் அவ்விதம் வருத்தம் ஏற்படாது என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** विद्वांसो यदि मम दोषमुद्गिरेयुर्यद्वा ते गुणगणमेव कीर्तयेयुः ।
तुल्यं तत् बहुमनुते मनो मदीयं कष्टं तद्वत मनुते यदाह मन्दः ॥

**ச்லோகார்த்தம் :** (இந்த க்ரந்தம்) வித்வான்களால் பரிசீலிக்கப்பட்டு, அதிலுள்ள தோஷங்களே தெரிவித்தாலும் சரி அல்லது அதிலுள்ள குணாதிசயங்களே புகழ்ந்தாலும் சரி இரண்டையும் சமமாகவே பாவித்து ஏற்றுக்கொண்டு தோஷங்களுக்கு பரிகாரம் செய்யவேண்டுமென்ற பொறுப்புடன் அவைகளே சந்தோஷமாக ஏற்றுக்கொள்வேன். அவித்வான்களால் விமர்ஸிக்கப்படுமாஞல் அதை பரிதாபகரமாக பாவித்து அந்த விமர்ஸனத்தை ஏற்றுக்கொள்ளமாட்டேன்.

**வ்யாக்யானம் :** வித்வான்களால், அவஸ்யம் இந்த க்ரந்தம் விமர்ஸிக்கப்பட வேண்டும். ஏனெனில் அவர்கள் எல்லோரும் வ்யாகரணம், மீமாம்ஸை, தர்க்கம் முதலான சாஸ்திரங்களில் பாண்டித்யம் பெற்றவர்களாக இருப்பதால் அவர்களால் சொல்லப்படும் தோஷங்களே மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வேன். ஏனெனில் அவ்விதம் தோஷத்திற்கு உரிய விஷயங்களில் என்னுடைய அஞ்ஞானம் நிவர்த்திப்பதுடன் அதற்குரிய பரிகாரங்களேயும் அறிந்துகொள்ள முடியும் என்பதால் குணங்களேத் தெரிவிக்கின்றபோது எவ்விதம் மகிழ்ச்சி அடைகின்றேஞே அதுபோல் மகிழ்ச்சியை அடைவேன்.

பாண்டித்யம் இல்லாதவர்கள் பண்டிதர்கள் என்று தன்னே நினைத்துக்கொண்டு இந்த க்ரந்தத்திற்கு விமர்ஸனம் செய்வார்களாஞல் அதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் அவர்களால் விமர்ஸிக்கப்படும் குணதோஷங்களே பண்டிதர்கள் ஏற்கமாட்டார்கள் என்பதுடன் அப்படி விமர்ஸிப்பவர்களே மதிக்கமாட்டார்கள். ஆகவே எனக்கு இதஞல் எவ்வித பாதகமுமில்லே.

**13. அவதாரிகை :** லோகத்தில் மந்தபுத்தியுடையவர்களாக இருந்தாலும் அவர்களே நாம் அவமதிப்பது சரியல்ல. அப்பேர்ப்பட்ட மந்தமதியுடையவர்களாக இருப்பவர்கள் இந்த க்ரந்தத்தின் மஹிமையை ப்ரசாரம் செய்யாவிட்டாலும், இதை தூஷிப்பதில் மிகவும் ஸமர்த்தர்களாக இருப்பார்களே? ஆகவே, இதை எப்படி நிவர்த்திப்பது? என்ருல்

**ச்லோகம் :** महामहिम्नामपि यश्चिकीर्षति स्वभावसंशुद्धतरं तिरो यशः ।
स नूनमाच्छादयितुं प्रवर्तते विवस्वतो हस्ततलेन मण्डलम् ॥

**ச்லோகார்த்தம் :** மஹாமஹிமைவாய்ந்தவர்களும் ஸ்வாபாவிகமாக அப்பழுக்கற்ற கீர்த்தியை உடையவர்களுமான பெரியோர்களின் பெருமையை ஒருவர் மறைக்க

வேண்டுமென்று நினைப்பாரானுல் சூர்யமண்டலத்திலுள்ள சூர்யப்ரகாசத்தை தன்கரங்களினுல் மறைக்க முயல்பவனுகவே ஆகிருன்.

**வ்யாக்யானம் :** மஹாமஹிமை வாய்ந்த இந்த க்ரந்தத்தை மந்தபுத்தியுடையவர் களாகவும்—பொருமைக்கே இருப்பிடமாகவும் இருக்கின்றவர்களால், இதில் இல்லாத தோஷங்களை கல்பித்து கூறப்படுமானுல் அதனுல் எனக்கு எவ்வித குறைவும் ஏற்படாது. அவ்விதம் விமர்ஸிப்பவர்களேயே பண்டிதர்கள் பரிகஸிப்பார்கள். ஆதித்யனின் ப்ரகாசத்தை தனது கரங்களைக் கொண்டு மறைப்பது போன்று பரிகஸிக்கத்தக்க செயலாகவே ஆகும்.

**14. அவதாரிகை :**

**பூர்வ :** இந்த விதம், விஷயம், ப்ரயோஜனம் முதலானவைகள் சம்பவிக்கின்றதால் இந்த க்ரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டபோதிலும், இந்த ப்ரகரணக்ரந்தமானது, வேதாந்த விசாராத்மகமாக இருக்கின்றதால், யுக்தி என்ற தர்க்கத்தையே ப்ரதானமாகக் கொண்டிருக்கிறது. தர்க்கம் என்பது ஸ்வயமே ப்ரமாணமாக ஆகாது. தர்க்கத்தினுல் ஜீவப்ரஹ்ம ஐக்யஞானம் என்பது நேரிடையாக ஏற்படமுடியாது.

**சித்தா :** தர்க்கம் என்பதால், நேரிடையாக ஐக்ய போதம் ஏற்படாது என்ருலும், ஐக்யபோதம் ஏற்படுவதற்கு ப்ரதிபந்தகமாக இருக்கின்ற தோஷங்களை நிவர்த்திப்பதற்கு ப்ரயோஜனமாக ஆகலாமே?

**பூர்வ :** வேதம் என்பது நிர்த்தோஷமான ப்ரமாணம். நிர்தோஷமான ப்ரமாணம் தெரிவிக்கின்ற ப்ரஹ்மாத்ம ஐக்ய விஷயகமான ஞானத்தில் என்ன தோஷம் சம்பவிக்கமுடியும்? ஆகையால் ப்ரமாணவிஷயகமான தோஷம் சம்பவிக்க முடியாது. அதனுல் இந்த க்ரந்தம் எதற்கு?

**சித்தா :** ப்ரமாணத்தில் எவ்வித தோஷமும் கிடையாது என்பதால் ப்ரமாண அஸம்பாவனை ஏற்படாது. ஆனுல் ப்ரமேயமான விஷயத்தில் அஸம்பாவனை, விபரீதபாவனை எல்லாம் ஏற்படலாம். அதாவது நிர்விசேஷமாகவும், நிஷ்க்ரியமாகவும் ஒருவஸ்து எப்படி இருக்கமுடியும் என்று ப்ரமேய அஸம்பாவனையும், ஆத்மாவை கர்த்ருத்வ, போகத்ருத்வம் உள்ளதாக அறியப்படும் விபரீதபாவனையும், நீங்குவதற்கு இந்த க்ரந்தம் ப்ரோயஜனமாக ஆகிறது. அஸம்பாவனை, விபரீதபாவனை என்ற புருஷதோஷம் இருக்குமானுல் ஸம்யக்ஸ்வரூபஞானம் ஏற்படமுடியாமல், இந்த தோஷங்கள் ப்ரதிபந்தகமாக இருக்கிறது. ஆகவே இந்த விஷயத்தை ஒரு த்ருஷ்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் : पुरुषापराधमलिना धिषणा निरवद्यचक्षुरुदयाऽपि यथा ।
न फलाय भर्च्छुविषया भवति श्रुतिसंभवापि तु यथाऽऽत्मनि धीः ॥

**ச்லோகார்த்தம் :** எப்படி பர்த்ஸு என்ற மந்திரியின் விஷயத்தில் புத்தியில் ஏற்பட்ட தோஷத்தினுல், தோஷமற்ற கண்களினுல் தெரிவிக்கப்பட்ட பர்த்ஸுவை பார்த்த போதிலும் கூட இவன் பர்த்ஸுதான் என்ற நிச்சயஞானம் ஏற்படாமல், (புத்திகலக்கத்தினுல்) ப்ரதிபந்தத்தினுல் முன்னுல் ஏற்பட்ட ஞானம் பலனை கொடுக்கவில்லையோ அதுபோல் நிர்த்தோஷமான ச்ருதிவாக்யங்களால் உண்மையான வஸ்து ஸ்வரூபஞானம் ஏற்பட்டும் புத்தியிலுள்ள அஸம்பாவனை முதலான ப்ரதிபந்தத்தினுல் முன்னுல் ஏற்பட்ட ஞானம் பலனை கொடுக்கவில்லை.

**வ்யாக்யானம் :** இதுவரையில், இந்த க்ரந்தம் ஆரம்பிப்பதற்காக தேவதை குரு முதலானவர்களுக்கு நமஸ்கார ரூபமான மங்களம் செய்யப்பட்டது. அந்த ச்லோகங்களின்

மூலமாகவே பல விஷயங்களை விளக்கப்பட்டது. அத்துடன் வித்வான்களால் இந்த க்ரந்தம் விமர்ஸிக்கப்படவேண்டும் என்பதையும் தெரிவிக்கப்பட்டது.

மேலே, தர்க்கரூபமான இந்த க்ரந்தம் அவஸ்யம்தானா? என்பதை கேள்வி பதில் ரூபமாக விசாரிக்கப்பட்டு அவஸ்யம் இந்த க்ரந்தம் தேவைதான் என்பதை நிச்சயம் செய்யப்படுகிறது.

**பூர்வ :** சாரீரக மீமாம்ஸா என்ற சாஸ்திரத்தையே, இந்த க்ரந்தத்தில் விசாரிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால், வ்யாஸரால் எழுதப்பட்ட சாரீரக மீமாம்ஸாசாஸ்திரத்தினால் அர்த்தபோதம் ஏற்படுகிறதா? இல்லையா? அந்த சாஸ்திரத்தினாலேயே அர்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானால், இந்த க்ரந்தம் எதற்கு?

சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தினால் அர்த்தபோதம் ஏற்படவில்லை என்றால், அதில் சொல்லப்படுகின்ற விஷயத்தைப் பற்றி இந்த க்ரந்தத்தில் விசாரிக்க வேண்டிய அவஸ்யம் என்ன? ஆகையால் இந்த க்ரந்தத்திற்கு விஷயமே இல்லாததால் இந்த க்ரந்தம் தேவையில்லை.

சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தினால் அறிந்துகொள்ள முடியாத விஷயத்தையே இங்கு விசாரிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால், அது பொருந்தாது. ஏனெனில் பகவான் வ்யாஸரால் எழுதப்பட்ட வேதாந்த சாஸ்திரம் என்பது ச்ரவணம் செய்த மாத்ரத்தினாலேயே அர்த்தபோதம் ஏற்படவேண்டும். அவ்விதம் அர்த்தபோதம் ஏற்படவில்லையென்றால், அந்த சாஸ்திரம் ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது. அது மட்டுமல்ல அந்த சாஸ்திரம் வ்யர்த்தம் என்றாகும். ஆகவே, சாஸ்திரத்திற்கு விஷயம் என்பதே சித்திக்காததால், சாரீரக மீமாம்ஸாசாஸ்திரமும் அதைப் பற்றி விசாரிக்கின்ற உங்கள் க்ரந்தமும் வ்யர்த்தமென்றாகிறது.

**சித்தா :** ஸத்யம். வேதாந்த சாஸ்திரம் ச்ரவணம் செய்த மாத்ரத்தினாலேயே, அர்த்தபோதம் ஏற்படவேண்டுமென்பது ந்யாயந்தான். ஏனெனில் சாஸ்திரம் என்பது சப்தப்ரமாணமானதால், அந்தப்ரமாணத்தினால் தெரிவிக்கப்படும் விஷயத்தின் ஞானத்தை அந்தப்ரமாணம் உண்டு பண்ணினால்தான் அதை ப்ரமாணமென்றே சொல்லலாம். ஆகையால் சாரீரகமீமாம்ஸா சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தினால் அர்த்தபோதம் ஏற்படுகிறது என்றே சொல்கிறேன்.

ஆனால், இவ்விதம் சாஸ்திரத்தினால் அர்த்தபோதம் ஏற்பட்டும், சிலருடைய புத்தியிலுள்ள, அஸம்பாவனை, விபரீதபாவனை என்ற தோஷங்களால், ப்ரதிபந்தம் ஏற்படுகின்றதால் சாஸ்திரத்தினால் ஏற்பட்ட ஞானம், பலபர்யந்தம் இல்லாமல், எப்படி ஜலத்தில் வீழ்ந்தவன் மூழ்கி, மூழ்கி எழுந்திருக்கின்றானோ அதுபோல்–ஏற்பட்ட ஞானம் நிலைத்திருப்பதில்லை. ஆகவே அஸம்பாவனை முதலான தோஷங்களை நிவர்த்தித்து த்ருடமான ஞானம் ஏற்படுவதற்கு இந்த க்ரந்தம் ப்ரயோஜனமாக இருக்கின்றதால் இதை வ்யர்த்தம் என்று சொல்லமுடியாது.

மேலும் சாரீரகமீமாம்ஸா சாஸ்திரமானது மிகவும் கம்பீரமாக (ஆழமான தாத்பர்யம்) இருக்கின்றதால் அதன் தாத்பர்யத்தை அறிந்து கொள்வதென்பது அவ்வளவு எளிதான கார்யமல்ல. ஆகவே இந்த க்ரந்தம் அவஸ்யம்தான் என்பதை மேலே நான்கு ச்லோகங்களில் த்ருஷ்டாந்தத்துடன் விளக்கப்படுகிறது.

முதல் ச்லோகத்தினால் ப்ரமாணம் என்ற ஸாமக்ரியையினால், அதற்குரிய ப்ரமேயமான விஷயஞானம் ஏற்பட்டபோதிலும் (ப்ரமேயத்தை ப்ரகாசிக்கச் செய்தபோதிலும்) புத்தியிலுள்ள

அஸம்பாவனை முதலான தோஷங்களினுல் தடை ஏற்படுமானுல், ஏற்பட்ட ஞானம் நிலைத்திருப்பதில்லை என்பதை குருபரம்பரையாக ஸம்ப்ரதாயமாகச் சொல்லப்படும் ஒரு கதையின் மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

**த்ருஷ்டாந்தம் :** ஒரு தேசத்தில் பர்த்ஸு என்ற பெயரையுடைய மந்திரியானவன், அந்த தேசத்தின் ராஜாவினிடத்தில் மிகுந்த விஸ்வாஸமுடையவனுகவும், புத்தி சாதுர்யமுடையவனுகவும், அதிபராக்ரமமுடையவனுக, மிகவும் புகழ்பெற்றவனுகவும் இருந்தான். இதனுல் மற்ற மந்திரிகள், ஸேவகர்கள் முதலானவர்களுக்கு பர்த்ஸு என்ற மந்திரியிடம் பொருமையினுல் த்வேஷம் உண்டாயிற்று. ஆகவே, இவ்விதம் ஏற்பட்ட பொருமையின் காரணமாக–பர்த்ஸு என்பவனை எப்படியாவது ஒழித்துவிட வேண்டும் என்று சதியாலோசனை செய்து, தூரதேசத்திலுள்ள கொள்ளைக்காரர்களை கொன்று வருவதற்கு பர்த்ஸுவை அனுப்பி வைக்கவேண்டுமென்று ராஜாவினிடம் தெரிவித்து, ராஜாவின் உத்தரவின்படி பர்த்ஸு அந்த தேசத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டார். ஏதோ ஸந்தர்ப்ப சூழ்நிலை காரணமாக கொள்ளையர்களை வென்று வருவதில் தாமதம் ஏற்பட்ட காரணத்தினுல் அதிகநாட்கள் தங்கநேர்ந்தது. இந்த ஸந்தர்ப்பத்தை பொருமைக்காரர்கள் பயன்படுத்திக்கொண்டு பர்த்ஸுவினிடமுள்ளத்வேஷத்தினுல், பர்த்ஸுவை கொள்ளையர்கள் கொன்றுவிட்டார்கள் என்றும், எங்கோ வனங்களில் பைசாச ரூபத்தில் அலைந்து கொண்டிருப்பதாகவும் ராஜ்யம் பூராவிலும் வதந்தியைப் பரவச் செய்ததுடன் பர்த்ஸுவின் வஸ்த்ரத்தைப்போன்ற வேறு வஸ்த்ரங்களை தயார் செய்து, அதேபோல் ஆபரணங்களையும் தயார் செய்து ராஜாவினிடம் காட்டி, ராஜாவையும் நம்பும்படி செய்துவிட்டார்கள். இதனுல் ராஜ்யம் பூராவிலும் பர்த்ஸு இறந்துவிட்டதாகவே நம்பினுர்கள்.

இவ்விதம் இருக்கின்ற நிலையில், கொஞ்ச நாட்களுக்குப் பிறகு பர்த்ஸுவானவன் கொள்ளையர்களை எல்லாம் வென்றுவிட்டு திரும்ப தன் தேசத்திற்குள் நுழைகின்றபோதே தன் மரணத்தைப் பற்றி எல்லோரும் பேசிக்கொண்டிருப்பதை அறிந்து, இதில் ஏதோ மர்மம் இருக்கிறதென்று அறிந்து கொஞ்சநாட்கள் பொறுத்திருந்து பார்ப்போம் என்றும் எப்படியோ ஒருநாள் ராஜா தன்னை சந்திப்பார் என்றும் நினைத்து–பக்கத்திலுள்ள ஒரு வனத்தில் ஒரு மரத்தினடியில் வஸித்துவந்தார். அப்போது ஒரு நாள் தெய்வகதியாய் ராஜாவானவர் அந்த வனத்திற்கு வந்தார். அப்போது ஒரு மரத்தினடியில் பர்த்ஸு உட்கார்ந்திருப்பதைக் கண்டார். ஆனுல், ராஜா தன்னுடைய தோஷமற்ற கண்களினுல் இவன் பர்த்ஸுதான் என்று அறிந்தும்கூட (பர்த்ஸுவின் ஞானம் ஏற்பட்டும் கூட) பர்த்ஸுவின் மரணச்செய்தி ராஜாவின் புத்தியில் த்ருடமாக இருக்கின்றதால் பர்த்ஸுவின் பைசாச ரூபந்தான் இது என்று விபரீதமாக நினைத்து பயந்து ஓடிவிட்டார். இதைத்தான் புருஷ அபராதம் என்று இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. அதாவது பர்த்ஸு இறந்துவிட்டதால் இங்கு எப்படி உட்கார்ந்திருக்கமுடியும்? என்ற அஸம்பாவனையினுல் சித்தத்தில் கலக்கம் ஏற்பட்டதால், தோஷமற்ற சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்தினுல் பர்த்ஸுவின் ஸ்வரூபஞானம் ஏற்பட்டும்–அந்த ஞானம் பலனைக் கொடுக்கவில்லை. இவ்விதம் ப்ரமேயத்தில் ஏற்பட்ட அஸம்பாவனை மட்டுமின்றி பிசாசு என்ற விபரீதஞானம் ஏற்பட்டதால் ப்ரமாணத்தினுல் வஸ்துஞானம் ஏற்பட்டும், அதன் பலனை அடையாமல் ஓடிவிட்டார் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இந்த த்ருஷ்டாந்தத்தில் சொல்லப்படுவதுபோலவே தார்ஷ்டாந்தத்திலும்

இந்த விஷயம் மிகவும் பொருத்தமாக இருக்கிறது. அதாவது, தோஷமற்ற ப்ரமாணமான வேதாந்த சாஸ்திரமானது, 'ப்ரத்யகபின்ன ப்ரஹ்மமே நீ' என்று போதித்தபோதிலும், வாக்யத்திஞல் ப்ரஹ்மஞானம் ஏற்பட்ட போதிலும் அந்த ஞானத்தின் பலஞன சாக்ஷாத்காரம் என்பது ஒரு சிலருக்கு ஏற்படுவதில்லை. ஏனெனில் பல கோடி ஜன்மாக்களில் ஏற்பட்ட தேஹாதிகளிலுள்ள ஆத்மத்வபுத்தியும்—தேஹத்திற்கு வேருன வஸ்துக்களில் என்னுடையது என்ற மமத்வபுத்தியும் த்ருடமாக இருக்கின்றது. அதஞல் வேதவாக்யம் என்ற ப்ரமாணத்திலிருந்து ஆத்மஸ்வரூபஞானம் ஏற்பட்டும்—புருஷபுத்தியிலுள்ள அஸம்பாவனை விபரீதபாவனை என்றதோஷங்களிஞல், முன்ஞல் ஏற்பட்ட ஞானம் த்ருடமாக நிலைத்திருப்பதில்லை. ஆகையால் சாஸ்திரம் வ்யர்த்தம் என்று சொல்வது சரியல்ல.

**15. அவதாரிகை :** அப்படியாஞல் பர்த்ஸுவின்ஞானம் போல, வேதாந்தஞானமும் நிஷ்பலமாகிவிடுமா? என்ருல், அவ்விதம் இந்த ஞானம் நிஷ்பலமாகாது என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** पुरुषापराधविगमे तु पुनः प्रतिबंधकव्युदसनात्सफला ।
मणिमन्त्रयोरपगमे तु यथा सति पावकाद्भवति धूमलता ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்தம் என்ற ப்ரமாணத்திஞல் ஏற்பட்ட ஞானமானது, புருஷ அபராதம் என்ற சித்ததோஷத்திஞல் ப்ரதிபந்தகமாக இருந்தாலும், எப்படி மணிமந்த்ராதிகளால் கட்டுப்படுத்தப்பட்ட அக்னியிலுள்ள உஷ்ணமானது மணிமந்த்ரம் என்ற ப்ரதிபந்தங்கள் நீங்கினவுடன் எப்படி வெளிப்படுகின்றதோ அதுபோல் புருஷ புத்தியிலுள்ள ப்ரதிபந்தகம் நிவர்த்திக்கின்றபோது—ப்ரமாண ஜன்யமான ஞானம் பலவத்தாக ஆகின்றது.

**வ்யாக்யானம் :** சப்தப்ரமாணமான சாஸ்திரங்களிலிருந்து ஏற்படுகின்ற ஞானம், சித்தத்திலுள்ள தோஷங்களிஞல் பலவத்தாக ஆகாமல் ப்ரதிபந்தகமாக இருக்குமாஞல், இப்பேர்ப்பட்ட விசாரக்ரந்தங்களை ஆசார்யன் மூலமாக ச்ரவணம் செய்கின்றபோது—சித்த தோஷங்கள் நிவர்த்தியாகி ஏற்பட்ட ஞானம் பலனைக் கொடுக்கின்றது. தூரத்திலுள்ள சமுத்ரத்தைப் பார்க்கின்றபோது, நீலநிறமாகத் தோன்றுவது ஜலம்தாஞ? அல்லது பூமியின் நிறமா? என்று சந்தேகத்துடன் கூடிய ஞானமே ஏற்படுகிறது. அதன்பிறகு சமீபத்தில் நெருங்கி பார்க்கின்றபோது இது ஜலம்தான் என்ற நிச்சயஞானம் ஏற்படுகிறது. இந்தவிதம் ப்ரமாணத்திஞல் ஞானம் ஏற்பட்டும் கூட ஒரு சிலருக்கு அதில் நிச்சயபுத்தி ஏற்படுவதில்லை. மேன்மேலும் விசாரிக்கின்றபோதுதான் த்ருடஞானம் ஏற்படுகிறது. இதேபோல, அக்னியென்பதில் தஹிக்கின்ற சக்தி இருந்தபோதிலும் மணிமந்த்ரங்களிஞல் அக்னிசக்தி தடுக்கப்படுகின்றபோது அந்த அக்னியுடன் சம்பந்தப்பட்ட எந்த வஸ்துவையும் அது தஹிப்பதில்லை. மணிமந்தரங்களின் ப்ரதிபந்தகம் நிவர்த்திக்கப்படுமாஞல் அந்த அக்னிதஹிக்கின்றது. ஆகவே, பர்த்ஸுவின் ஞானம், ராஜாவிற்கு ஏற்பட்டும், பலனைக் கொடுக்கவில்லை என்பதற்காக வேதாந்தவாக்யஜன்ய ஞானமும் பலனைக் கொடுக்காதோ என்ற ஸந்தேகத்திற்கே இடமில்லை. மேன்மேலும் விசாரம் செய்கின்றபோது புத்தியில் இருக்கின்ற அஸம்பாவனை விபரீதபாவனை என்ற ப்ரதிபந்தங்கள் நிவர்த்திக்கின்றதால், ஏற்பட்ட ஞானம் பலவத்தாக ஆகிறது என்பதையே அக்னி உதாகரணத்தின் மூலம் விளக்கப்பட்டது.

**16. அவதாரிகை :** (இந்தவிதம் விசாரக்ரந்தத்தினுல் அஸம்பாவனுதி ப்ரதிபந்தங்கள் நிவர்த்திப்பதால், ஏற்பட்ட ஞானம் பலவத்தாக ஆகிறது என்பதை பல உதாகரணங்களினுல் விளக்கப்பட்டது. இப்போது வேருெரு முறையில் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.)

**பூர்வ :** தர்மத்தைப்பற்றி விசாரிக்கின்றபோது, அந்தவாக்யமே தன் அர்த்தத்தை தெரிவிப்பதற்கு காரணமாகிறது என்று சொல்லப்படுகிறதேயன்றி ப்ரதிபந்த நிவர்த்திக்காக தர்மவிசாரம் என்று சொல்லப்படவில்லை. அதேபோல ப்ரஹ்மவிசாரம் என்பதும் வாக்யார்த்தஞானம் ஏற்படுவதற்கு காரணம் என்று சொல்லவேண்டுமேயன்றி ப்ரதிபந்த நிவர்த்திக்காக விசாரம் என்று ஏன் சொல்லவேண்டும்?

**சித்தா :** வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்கு, ப்ரதிபந்தகநிவர்த்தி என்பது காரணமில்லை. ஆனுல் வாக்யார்த்த ஞானத்தின் கார்யமான, பலன் ஏற்படுவதற்கு ப்ரதிபந்தக நிவர்த்தியென்பது காரணமாகின்றது. ப்ரதிபந்தகமில்லாமல் இருந்தால்தான், காரணம் என்பது கார்யத்தை உண்டுபண்ணும் என்பது பொதுவானதன்மை—சில இடங்களில் கார்யம் ஏற்படுவதற்குரியஸாமக்ரியைகள் இருந்தும் கார்யம் உண்டாகவில்லையென்ருல் ப்ரதிபந்தகம் இருக்கிறதென்று அறிந்து, அதை நிவர்த்திக்கப்படுமானுல் கார்யம் என்பது உண்டாகும். ஆகவே விசாரம் என்பதற்கு ப்ரதிபந்தகநிவர்த்தி என்பதே ப்ரயோஜனம்.

**ச்லோகம் :**

पुरुषापराधविनिवृत्तिफलः सकलो विचार इति वेदविदः ।
अनपेक्षतामनुपरुध्य गिरः फलवद् भवेत्प्रकरणं तदतः ॥

**ச்லோகார்த்தம் :** அஸம்பாவனை முதலான புருஷபுத்தியிலுள்ள கலக்கம் என்ற ப்ரதிபந்தத்தை நிவர்த்தி செய்வதே இந்த விசாரத்திற்கு பலன் என்று ஸகலவேதங்களையும் கற்றறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகின்றது. ஆகவே, வேத சப்தங்களின் ஸ்வத: ப்ராமாண்யத்தை பாதிக்காமலேயே இந்த விசாரக்ரந்தமானது பலவத்தாக ஆகின்றது.

**வ்யாக்யானம் :** ஸகலவிசாரமும் என்று சொல்லப்படுவதால் ப்ரஹ்மவிசாரம் மட்டுமின்றி தர்மவிசாரம் என்பதும்—தர்மத்தை தெரிவிக்கின்ற வாக்யார்த்தஞானம் ஏற்படுவதற்கு ஏதாவது ப்ரதிபந்தம் இருக்குமானுல் அதையும் நிவர்த்திப்பதற்கு தர்மவிசாரம் செய்யவேண்டுமென்றே சொல்லப்படுகிறது. ஆகவே, ஜைமினி முதலான மஹரிஷிகள் "அதாதோ தர்மஜிஞ்ஞாஸா" என்ற சூத்ரத்தின் கருத்தை தெரிவிக்கின்ற போது ஸம்சயம், விபர்யயம் முதலான ப்ரதிபந்த நிவர்த்திக்காகவே விசாரம் செய்யவேண்டுமென்பதை தெரிவிக்கின்ருர்கள்.

அதாவது 'அதாதோ தர்ம ஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரமானது தர்மஞானுர்த்தம் தர்மவிசாரம் க்ர்த்தவ்யம் என்று விதிப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகையால் இதன் மூலம் ப்ரதிபந்தக நிவர்த்திக்காக, விசாரம் செய்யவேண்டுமென்பதை பூர்வமீமாம்ஸகர்களாலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வேதமானது, தன்னுடைய அர்த்தத்தை போதிப்பதில் வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லையென்பதால்—வேதம் ப்ராமாண்யம் என்பதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. 'ஔத்பத்திகஸ்து சப்தஸ்யார்த்தேன ஸம்பந்த:' என்ற சூத்ரத்தின்படி பதம் பதார்த்தம் அதன் ஸம்பந்தம் என்பது எல்லாமே நித்யமென்று சொல்லப்படுவதால் வேதவாக்யமானது, தனது அர்த்தத்தை தெரிவிப்பதற்கு எதையும் அபேக்ஷிக்காமலேயே ஸ்வதந்த்ரமாகவே தன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது. அதனுல் வேதப்ராமாண்யத்திற்கு

ஹானிஏதும் இல்லை. ஆகையால் வாக்யார்த்தபோதம் ஏற்படுவதற்காக விசாரம் செய்ய வேண்டியதில்லை. வாக்யத்தினால் ஏற்பட்டபோதமானது பலவத்தாக ஆவதற்கு ப்ரதிபந்தகமாக இருக்கின்ற அஸம்பாவனாதிதோஷங்களை நிவர்த்திப்பதற்காகவே விசாரம் என்று சொல்லப்படுகிறது.

ஆகையால், வாக்யப்ரமாண்யத்தை பாதிக்காமலேயே ப்ரதிபந்தக நிவர்த்தித்வாரா விசாரக்ரந்தம் ப்ரயோஜனமாகிறது என்பதால் இந்த க்ரந்தம் அவஸ்யம் என்பது இதனால் சித்திக்கின்றது.

**17. அவதாரிகை :**

**பூர்வ :** சாஸ்த்ரார்த்த ஞானத்தினாலேயே புருஷ அபராதம் என்ற ப்ரதிபந்தக நிவர்த்தி ஏற்படலாமே? ப்ரதிபந்தக நிவர்த்திக்காக விசாரக்ரந்தம் எதற்கு?

**சித்தா :** புருஷ அபராதம் என்பது கணக்கிலடங்காது. பலவித்மான ஸம்சயங்கள், பல ஸமயங்களில் அவ்வப்போது ஏற்படுமானதால், அவைகள் எல்லாம் நீங்குவதற்காக ப்ரகரண க்ரந்தங்கள் அவஸ்யம் தேவைப்படுகிறது. அதனால் தான் பல, ப்ரக்ரணக்ரந்தங்கள் செய்யப்பட்டிருக்கிறது.

**ச்லோகம் :** पुरूषापराधशतसंकुलता विनिवर्तते प्रकरणेन गिरः ।
स्वयमेव वेदशिरसो वचनादथ बुद्धिरुद्भवति मुक्तिफला ॥

**ச்லோகார்த்தம் :** வேதசப்தங்களினால் அறியப்பட்ட ஞானத்தில் புருஷபுத்தி என்பது அனேகவிதமான ஸம்சய விபர்யயங்களினால் கலக்கத்தை அடைவதால் அதனால் ஏற்பட்ட, ப்ரதிபந்தகமானது இப்பேர்ப்பட்ட ப்ரகாணக்ரந்தங்களினால் நிவர்த்திக்கின்றது. அதன் பிறகு ஸ்வயமாகவே உபநிஷத் வாக்யங்களிலிருந்து ஏற்பட்ட முக்தியைப் பலமாகக் கொண்ட ஞானம் பலனை கொடுக்கிறது.

**வ்யாக்யானம் :** வ்யாஸர் முதலானவர்களால் வேதாந்தார்த்தம் என்ன? என்பதை விளக்கமாக தெரிவிப்பதற்கு முன்னாலேயே, வேதார்த்தங்கள் அந்த வாக்யத்திலிருந்தே ஏற்பட்டிருக்கிறதென்பது வ்யாஸருக்கு முன்னால் இருந்த பெரியோர்களாலேயே அறியப் படுகிறது. ஆகவே வாக்யத்திலிருந்து வாக்யார்த்த போதம் ஏற்படும் என்பதில் ஸந்தேகமே கிடையாது. ஆயினும் மந்த, மத்திம, அதிகாரிகளுக்கு வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானத்தில், ஸம்சயம் ஏற்படும். அவ்விதம் ஸம்சயாதிப் ப்ரதிபந்தகம் இருக்குமானால், வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானம் த்ருடமாக இல்லாததால் அந்த ஞானம் நிலைத் திருப்பதில்லை. ஆகவே புருஷ அபராதம் என்ற ஸந்தேக விபர்யங்கள் நூற்றுக்கணக்காக, அனேகவிதமாக, அனேகமுறை ஏற்படலாம். அதனால் புத்தி கலக்கத்தை அடைகின்றது. அதனால் வாக்யத்தினால் ஏற்பட்ட ஞானத்தில் நிச்சயபுத்தி ஏற்படுவதில்லை. இதையே ஞானத்திற்கு ப்ரதிபந்தகம் என்று சொல்லப்படும். இவ்விதம் ஏற்படும் ப்ரதிபந்தகங்கள், பல பெரியோர்களால், பலவிதமாக எழுதப்படும் ப்ரகரணக்ரந்தங்களால் நிவர்த்திக்கப்படுகின்றது. அதன் பிறகு வாக்யத்தினால் ஏற்பட்ட ஞானம் த்ருடப்படுகிறது.

இவ்விதம் பலவித ப்ரகரணக்ரந்தங்கள் இயற்றப்பட்டிருக்கிறது என்பதற்காக வேத வாக்யத்தின் ப்ராமாண்யத்திற்கு எந்தவித ஹானியும் ஏற்படாது. ப்ரதிபந்தக நிவர்த்திக்காக ப்ரகரண க்ரந்தங்கள் ப்ரயோஜனமாகிறது என்று சொல்லப்பட்டதால் இந்த க்ரந்தம் வ்யர்த்தம் என்று சொல்லமுடியாது. ஆகவே,. இதன் சாரம் என்னவென்றால், வேத வாக்யங்களிலிருந்தே அர்த்த போதம் ஏற்பட வேண்டும். அதனால் வேத வாக்யம் ஸ்வயம்ப்ரமாணம் என்பதில் ஸந்தேகத்திற்கே

இடமில்லை. ஆனால் ஏதோ ஒரு சிலருக்கு ஏற்பட்ட ஞானத்தில் ப்ரதிபந்தகம் இருக்குமானால் அதை நிவர்த்திப்பதற்கு ப்ரகரணக்ரந்தம் ப்ரயோஜனமாக இருக்கிறது.

**18. அவதாரிகை :**

**பூர்வ :** சப்தத்திலிருந்து அர்த்தஞானம் ஏற்பட வேண்டுமானால், அந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அதன் அர்த்தத்துடன் சக்தி ஞானம் ஏற்படவேண்டும். அதுபோல் வாக்யத்தின் தாத்பர்ய அர்த்தஞானம் ஏற்படுவதற்கு விசாரம் என்பது அவஸ்யம் தேவைப்படுகிறது என்பதால் வாக்யத்திற்கு அனபேக்ஷத்வ ப்ரமாண்யம் சொல்லமுடியாது.

**சித்தா :** விசாரம் என்பது வாக்யார்த்த தாத்பர்யார்த்த ஞானத்திற்கு அவஸ்யம் தேவையென்று சொல்லமுடியாது. ஆகவே விசாரம் என்பது வாக்யார்த்த ஞானத்திற்கு கரணமுமில்லை, காரகமும் இல்லையென்பதை மேலே விளக்குகின்றோம். ஆதலால் விசாரம் என்பது வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்காக அபேக்ஷிக்கப்படவில்லை.

**ச்லோகம் :**
स्वाध्यायवन्न करणं घटते विचारो नाप्यङ्गमस्य परमात्मधियः प्रसूतौ ।
सापेक्षताऽऽपतति वेदगिरस्तथात्वे ब्रह्मात्मनः प्रमितिजन्मनि तन्न युक्तम् ॥

**ச்லோகார்த்தம் :** பரமாத்மஞானம் ஏற்படுவதற்கு விசாரம் என்பது, ஸ்வாத்யாயத்தைப் போல் கரணமில்லை. அதேபோல் விசாரம் என்பது வாக்யார்த்த ஞானத்திற்கு அங்கமுமில்லை. அவ்விதம் விசாரம் என்பதை கரணமாகவோ அங்கமாகவோ சொல்லப்படுமானால் ப்ரஹ்மாத்ம ஐக்யஞானம் ஏற்படும் விஷயத்தில் வேதவாக்யங்களுக்கு ஸாபேக்ஷத்வம் சொல்ல நேரிடுகின்றதால் அவ்விதம் சொல்வது பொருந்தாது.

**வ்யாக்யானம் :** வேதவாக்யங்களிலிருந்து வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்கு விசாரம் என்பது கரணமா? அல்லது அங்கமா? என்று விசாரிக்க வேண்டும்.

ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: என்று 'ஸ்வாத்யாயேன அர்த்தஞானம் ஸம்பாதயேத்' என்று வேதார்த்தங்களை அறிந்துகொள்வதற்காக, அத்யயனம் செய்யவேண்டுமென்று வேதம் விதிக்கின்றது. இந்த வாக்யத்தினால் அத்யயனத்தின் மூலமாக வேதார்த்தங்கள் அறியப்படவேண்டும் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. இதுபோல் விசாரம் என்பது வாக்யார்த்த ஞானத்திற்கு கரணம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** ப்ரஹ்ம விசாரம்தான் ச்ரவணம் என்று சொல்லப்படுவதால், வேதார்த்த ஞானம் ச்ரவணத்தினால் தான் ஏற்படவேண்டுமானதால் விசாரம் என்பது அர்த்த ஞானத்திற்கு கரணம் என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஞானத்திற்கு எது ஸாதனமோ அதையே கரணம் என்று சொல்லவேண்டும். வேதாந்த வாக்யத்திலிருந்துதான் ஆத்மஸ்வரூப ஞானம் ஏற்படவேண்டும். அதனால் வாக்யந்தான் கரணம். வாக்யத்திலிருந்தே ஞானம் ஏற்படுவதால் அந்த வாக்யமே ப்ரமாணம். அதுபோல் விசாரம் என்பது கரணமல்ல. அதனால் விசாரம் என்பது ப்ரமாணமில்லை. விசாரம் என்ற தர்க்கமானது, ப்ரமாணத்தினால் தெரிவிக்கப்படும் விஷயத்தில் மேன்மேலும் பல யுக்திகளைக்கொண்டு விசாரிக்கின்றபோது, ஏற்பட்ட ஞானம் த்ருடப்படுகிறது. ஆக்வே ஏற்படும் விஷயஞானம் த்ருடமாவதற்கே விசாரம் ப்ரயோஜனமாகின்றது.

பூர்வபக்ஷம், சித்தாந்தம் என்ற முறையில் ஒரு விஷயமானது யுக்திகளுடன் கூடி விசாரிக்கப்படுகின்றபோது பூர்வபக்ஷங்களிலுள்ள தோஷங்கள் அறியப்படுகின்றதால்

உண்மையான ஸ்வரூபத்தினை தெரிவிக்கின்ற சிந்தாந்தம், மேன் மேலும் த்ருடப்படுகிறது. ஆகவே விசாரம் என்பது தர்க்க ரூபமே தவிர ப்ரமாண ரூபமல்ல. ப்ரமாணமாக இருந்தால்தான் ப்ரமேயஸ்வரூப போதத்தை உண்டுபண்ணும். ஆகவே, விசாரம் கரணமல்ல. வாக்யார்த்த ஞானத்திற்கு வாக்யமே கரணம்.

**பூர்வ :** அப்படியானால், வாக்யார்த்த ஞானத்திற்கு தர்க்காதிகள் ஸஹாயமாக இருப்பதால் விசாரம் என்பதை அங்கமாகச் சொல்லலாமே?

**சித்தா :** வாக்யத்திலிருக்கின்ற சக்தியே வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்கு போறு மானது. மேலும் ப்ரமாண அஸம்பாவனை நீங்குவதற்காக்வே, ச்ரவணம் என்பது விதிக்கப்படுகின்றதால் வாக்யார்த்த ஞானத்திற்கு விசாரம் தேவையில்லை என்பது மட்டுமல்ல, வாக்யார்த்த ஞானத்திற்கு விசாரம் சாதனம் என்று எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை. அதனால் விசாரம், அங்கமென்று சொல்வதற்கும் முடியாது.

**பூர்வ :** ப்ரமாண ஜன்யமான ஞானத்திற்கு விசாரம் உபகாரமில்லை என்றாலும், ப்ரமாதாவிற்கு அஸம்பாவனை முதலானவைகள் நீங்குவதற்காக விசாரம் தேவைப்படுகின்றதால் ப்ரமாதாவிற்கு விசாரம் அங்கம் என்று சொல்லலாமே?

**சித்தா :** வசிஷ்ட்டர் வாமதேவர் முதலானவர்களுக்கு விசாரம் இல்லாமலேயே ஞானம் ஏற்பட்டிருப்பதால் ப்ரமாதாவிற்கு அங்கமாகவும் சொல்லமுடியாது. ஏனெனில் விசாரம் இருந்தால்தான் ஞானம் ஏற்படும், விசாரம் இல்லையென்றால் ஞானம் ஏற்படாது என்று வ்யாப்தி சொல்லமுடிந்தால்தான், விசாரம் ப்ரமாதாவிற்கு அங்கம் என்று சொல்லமுடியும். வ்யாஸசூத்ரங்கள், ப்ரகரணக்ரந்தங்கள் என்பது எல்லாம் குறிப்பிட்ட காலத்தில்தான் ஏற்பட்டிருக்கிறது. வேதம் என்பதோ அனாதி. ஆகையால் வேதவாக்யார்த்த ஞானத்திற்கு விசாரசாஸ்திரங்கள் காரணம் என்று எந்த விதத்திலும் சொல்லமுடியாது.

**பூர்வ :** சூத்ரங்கள், ப்ரகரணங்கள் என்பதெல்லாம் குறிப்பிட்ட காலத்தில்தான் ஏற்பட்டது என்றாலும், அவைகளில் தெரிவிக்கப்படும் யுக்திகள், ந்யாயங்கள் எல்லாமே அனாதியானதால், அவைகளை அனுசந்தானம் செய்ததாலேயே முன்னோர்களுக்கு வாக்யார்த்த ஞானம் ஏற்பட்டதாகச் சொல்லலாமே? அதனால் விசாரம் என்பது வாக்யார்த்த ஞானத்திற்கு ஸஹகாரிகாரணம் என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபமும் சரியல்ல. எந்த ஞானமாக இருந்தாலும் அது ப்ரமாணத்திலிருந்தே ஏற்படவேண்டும், எப்படி ஸ்வாத்யாயம் என்பது வேதார்த்தங்களைத் தெரிவிப்பதில் கரணமாகின்றதோ அதுபோல் பரமாத்ம போதத்திற்கு (ஞானத்திற்கு) வேதவாக்யங்கள்தான் கரணம். அதனால்தான் வேதவாக்யம் ப்ரமாணம் என்று (ப்ரமா கரணம் ப்ரமாணம்) சொல்லப்படுகிறது.

விசாரம் என்பது, ப்ரமாணத்தினால் அறியப்பட்ட விஷயத்தையே யுக்திகளைக் கொண்டு நிச்சயம் செய்யப்படுகிறது. அதனால் வாக்யத்திலிருந்து அர்த்தஞானம் ஏற்பட்ட பிறகே விசாரம் செய்யப்படுகிறது.

உதாரணமாக ஆக்னேயாதிகள் போல், விசாரம் என்பது ஸ்வாத்யாயம் என்பதுடன் ஸமப்ரா தான்யம் என்று சொல்வதற்கும் முடியாது. அதாவது தர்சபூர்ணமாஸம் என்ற கர்மாவை அமா வாஸையில் 3 கர்மாக்களுடனும், பௌர்ணமியில் 3 கர்மாக்களுடனும் செய்யவேண்டுமென்று வேதம் தெரிவிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படுவதில், எது ப்ரதானம்? என்று சொல்லமுடியாது. அதனால் இரண்டுமே ப்ரதானம்தான் என்று நிச்சயக்கப்பட்டிருக்கிறது. அதுபோல் வாக்யமானது, தனது அர்த்தத்தை தெரிவிப்பதற்கு, வாக்யமும் ப்ரதானம் விசாரமும் ப்ரதானம் என்று

சொல்வதற்கு முடியாது. அதனால் வாக்யார்த்த ஞானத்திற்கு ஸ்வாத்யாயம் எப்படி கரணமோ அதுபோல் விசாரம் கரணமென்றும் சொல்லமுடியாது என்பதால் ஸமுச்சயமுமில்லை.

**பூர்வ :** ஆக்னேயாதி கர்மாக்களுக்கு ப்ரதான கர்மா வென்பது 3 ஆறுஆக இருக்கிறது என்பதால் 2க்கும் ஸமப்ரதானம் சொல்லப்படுகிறது. ஆனால் அதனுடன் வேறு சில அங்ககர்மாக்களும் செய்யவேண்டுமென்று சொல்லப் படுவதால் அதுபோல் விசாரம் என்பதற்கும் ஸமப்ராதான்யம் இல்லையென்றாலும் அங்கம் என்று சொல்லலாமே? பூமீமாம்ஸா சாஸ்திரத்தில் தர்மம் என்ன? அதர்மம் என்ன? என்பதை வாக்யங்களிலிருந்து அறிந்துகொள்வதற்கு விசாரம் என்பது உபகாரமாக இருக்கிறதால் விசாரம் தேவை என்று சொல்லப்படுகிறது. அதனால் விசாரம் என்பது வாக்யார்த்த ஞானத்திற்கு அங்கம் என்று சொல்லலாமே?

**சித்தா :** ஆக்னேயாதி கர்மாக்களின் ஸ்வரூபம் சித்திப்பதற்கு உபயோகமான வ்ரீஹி முதலான த்ரவ்யங்களை அங்கம் என்று சொல்லப்படுகிறது. யாகம் என்பது அங்கி கர்மா. அதற்கு வ்ரீஹி முதலானவைகள் காரகம். அதனால் அவைகள் யாகத்திற்கு அங்கம் என்று சொல்லப்படுகிறது. அவைகள் இல்லாமல் ஆக்னேயாதி கர்மா சித்திக்காது.

அதுபோல் வேதாந்த வாக்யமானது விசாரம் செய்தால் தான், அர்த்த போதகத்தை உண்டுபண்ணும் என்று சொல்லமுடியாது. மேலும், விசாரம் என்பது, வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணஸ்வரூபம் சித்திப்பதற்காக என்றும் சொல்லமுடியாது. அனாதியான வேதத்தின் ஸ்வரூபம் சித்திப்பதற்கு எதனுடைய அபேக்ஷையும் தேவையில்லை. வேதம் ஸ்வத : ப்ரமாணம்; ஆகவே எது தன்ஸ்வரூப சித்திக்காக எதை அபேக்ஷிக்கின்றதோ அதைத்தான் அங்கம் என்று சொல்லலாம். சப்தத்திற்கு அர்த்த ஞானத்தை உண்டு பண்ணக்கூடிய சக்தி, நித்யமாகவே இருக்கின்றதால் வேதமானது தன் அர்த்தத்தை போதிப்பதற்கு எதனுடைய அபேக்ஷையும் தேவையில்லை.

**பூர்வ :** ஜ்யோதிஷ்டோமம் என்ற ப்ரதானகர்மாவிற்கு ப்ரயாஜம், அனுயாஜம் என்பது முதலான ஐந்து கர்மாக்கள் அங்கமாகச் சொல்லப்படுகிறது. ப்ரதான கர்மாவின் பலன் சித்திப்பதற்காகச் சொல்லப்படும் அங்ககர்மாக்கள் இரண்டு விதம், அதாவது, குறிப்பிட்ட எந்த அங்ககர்மாவைச் செய்யாவிடில் கர்மாவே சித்திக்காதோ அதற்கு ஸ்வரூபோபகாரி என்றும், எந்த அங்க கர்மாவைச் செய்யாவிடில் அந்த கர்மாவின் பலன் என்பதே சித்திக்காதோ அதற்கு பலோபகாரி என்றும், அங்ககர்மாவை இரண்டு விதமாகப் பிரித்து வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதுபோல் வேதாந்த வாக்யங்களுக்கு விசாரம் என்பது பலோபகாரி அங்கம் என்று சொல்லலாமே?

**சித்தா :** ப்ரயாஜம் அனுயாஜம் என்பதான கர்மாக்களுக்கு, இவ்விதம் அங்க கர்மாக்களைச் செய்தால் தான் அந்த கர்மாவும் சித்திக்கும், அதன் பலனும் சித்திக்கும் என்று வேதத்திலேயே (விநியோஜக வாக்யம்) வாக்யம் இருக்கின்றது. அதுபோல் வேதாந்த வாக்யத்திலிருந்து, வாக்யார்த்த போதம் ஏற்படுவதற்கு விசாரம் அங்கம் என்று வேதத்தில் எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை. வேதம் என்பது அனாதி–ஸ்வத: சித்தம். வாக்யங்களிலிருந்து அர்த்தபோதகம் ஆகக்கூடிய சக்தியும் அந்த சப்தத்திற்கே இருக்கின்றதால் வேதாந்தவாக்யத்திலிருந்தே சாக்ஷாத்பலமான விஞ்ஞானம் ஏற்படுகிறது. அதனால் அஞ்ஞானநிவர்த்தி ஏற்படுகிறது. ஆகவே வேதாந்த வாக்யம் தன்ஸ்வரூப சித்திக்காகவும் எதையும் அபேக்ஷிப்பதில்லை.

வாக்யஜன்ய ஞானத்தை உண்டுபண்ணுவதற்கும் எதனுடைய அபேக்ஷையுமில்லை. அஞ்ஞானநிவர்த்தி என்ற பலத்திற்காகவும், எதையும் அபேக்ஷிக்கவில்லை. ஆகவே வேதாந்த வாக்யம் எந்தவிதத்திலும் விசாரத்தை அபேக்ஷிப்பதாகச் சொல்லமுடியாது.

அனபேக்ஷத்வாத் வேதம் ஸ்வதப்ரமாணம் என்று பாதராயணரால் சொல்லப் பட்டிருக்கிறது.

ஆகவே வேதாந்த வாக்யம் ஸ்வயமே ப்ரமாணம் என்று சொல்லப்படுவதற்கும் ப்ரதிபந்தகநிவர்த்திக்காக விசாரம் தேவை என்று சொல்லப்படுவதற்கும் ஒன்றுக்கொன்று முரண்பாடு ஏதுமில்லை. யாருக்கு ப்ரதிபந்தம் இருக்கின்றதோ அவர்களுக்கே விசாரம் என்பதால் விசாரம் என்பது வேதாந்த வாக்யத்திற்கு ஸ்வரூபகாரியாகவோ பலோப காரியாகவோ அங்கமாக ஆகிறது என்று சொல்வதற்கும் முடியாது. வாக்யத்திலிருந்தே போதம் ஏற்படுகின்றபோது அஞ்ஞான நிவர்த்தி என்ற பலம் ஏற்படுகின்றதால் ஸ்வரூ பசாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. அதனால் வேதம் நிரபேக்ஷம், ஸ்வத: ப்ரமாணம் என்பதில் ஆக்ஷேபத்திற்கிடமில்லை. அதற்காக, அஸம்பாவனுதி ப்ரதிபந்தகம் இருப்பவர்களுக்கு விசாரக்ரந்தம் தேவை என்பதால், விசாரக்ரந்தம் வ்யர்த்தம் என்றும் சொல்லமுடியாது.

**19. அவதாரிகை :**

சப்தத்திலிருந்து அதன் அர்த்தத்தை அறிந்துகொள்வதற்கு சக்திஞானம் என்பது எப்படி காரணமாகின்றதோ அதுபோல் தாத்பர்யஞானம் என்பதும் சாப்தபோதத்திற்கு காரணம் என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி தாத்பர்ய ஞானத்திற்கும் விசாரம் தேவையில்லை என்று சொல்லப்படுமானுல் விசாரம் என்பதே வ்யர்த்தம் என்று சொல்ல நேரிடும்.

**ச்லோகம் :**

**व्युत्पन्नस्य हि बुद्धिजन्म सहसा वाक्यश्रुतौ दृश्यते वाक्यार्थे न ततोऽस्ति बुद्धिजनने मीमांसनव्यापृतिः ।**
**तेनार्थत्करणादिभावजनने मीमांसनस्याऽऽश्रिते वेदार्थप्रमितौ तु वेदवचसः सापेक्षताऽऽयास्यति ॥**

**ச்லோகார்த்தம் :** பதார்த்த ஞான வ்யுத்பன்னனுக இருப்பவனுக்கு வாக்யத்தை கேட்ட மாத்திரத்திஞலேயே வாக்யார்த்த ஞானம் ஏற்படும் என்பதைக் காண்கிறோம். அதனுல் வாக்யார்த்த ஞானத்திற்கு வாக்யார்த்த விசாரம் என்பது தேவையில்லை. ஆகவே வாக்யார்த்த ஞானத்திற்கு விசாரத்தை கரணமாகவோ அங்கமாகவோ சொல்லமுடியாது. (அவ்விதம் சொல்லப்படுமானுல், வேதவாக்யார்த்த ஞானத்திற்கு ஸாபேக்ஷத்வம் சித்திக்கின்றதால் வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்று சித்திக்காது.)

**வ்யாக்யானம் :** வாக்யம் என்பது, ஆகாங்க்ஷை யோக்யதை, ஸன்னிதி என்பது முதலான லக்ஷணங்கள் உடையதாக இருக்குமானுல், அன்வயம் வ்யதிரேகம் என்பவைகளைக் கொண்டு வாக்யார்த்தம் என்னவென்பதை அறிந்துகொள்ளக்கூடிய வ்யுத்பன்னனுக்கு, வாக்யத்தை கேட்டவுடனேயே அர்த்தபோதம் ஏற்படும். ஆகாங்க்ஷை முதலானவைகள் இன்னதென்றே அறியாதவனுக இருப்பானுகில் அவனுக்கு வாக்யார்த்த ஞானம் ஏற்படாது. மேலும் ஒரு வாக்யத்தைக் கேட்டவுடன், இந்த வாக்யமானது என்ன கருத்தை தெரிவிக்கிறது? என்று ஸந்தேகம் ஏற்படுமானுல் அந்த வாக்யத்தை விசாரிக்கின்ற போது முதலில் ஏற்பட்ட அர்த்தத்திற்கு வேறுபட்ட அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று நிச்சயம் செய்யப்படுமானுல், அப்பேர்ப்பட்ட வாக்யங்களை அர்த்தவாத வாக்யமென்றும் ஸ்வார்த்தே தாத்பர்யமில்லையென்றும் சொல்லலாம் என்பது வேதவாக்யங்களுக்கு பொருந்தும்.

லோகத்தில் "ஹஸ்தேன தீர்க்கேண தண்டேன ப்ரஹரதி" என்று ஒருவன் வாக்யப்ரயோகம் செய்வானுகில் தன் கையிலிருக்கின்ற நீண்ட தடியினுல் அடிக்கிருன் என்றும் அர்த்தம் சொல்லலாம் அல்லது நீண்ட கையினுல் தடியைக்கொண்டு அடிக்கிருன் என்றும் சொல்லலாம். இந்தவிதம் அந்த வாக்யத்திலுள்ள 'தீர்க்கேண' என்ற பதம் ஹஸ்தத்திற்கும் விசேஷணமாகலாம். தண்டத்திற்கும் விசேஷணமாக ஆகலாம். இதனுல் வாக்யத்திலிருந்து போதம் ஏற்படுவதற்கு எவ்வித தடையும் இல்லே. ஆனுல் தீர்க்கம் என்ற பதம் எதற்கு விசேஷணம்? என்று தெரிந்து கொள்ள வேண்டுமென்ருல், அந்த ஸம்சய நிவர்த்திக்காக விசாரம் தேவைப்படுகிறது. ஆகவே வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்கோ— அதன் தாத்பர்யார்த்த ஞானத்திற்காகவோ விசாரம் தேவை என்று சொல்லமுடியாது. மேலும், வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்கு விசாரம் தேவையென்று சொல்லப்படுமானுல், வாக்யார்த்த ஞானம் ஏற்பட்ட பிறகே அதில் ஏற்படும் ஸந்தேக நிவர்த்திக்காக விசாரம் தேவைப்படுகிறது. ஆதலால் அன்யோன்ய ஆச்ரயதோஷம் என்பதும் ஸம்பவிக்கின்றது.

**பூர்வ :** 'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:' என்ற வாக்யமானது ஆத்மதர்சனத்தை உத்தேசித்து ச்ரவணம் என்ற விசாரத்தை வேதமே விதிக்கின்றதால் விசாரம் வாக்யார்த்த ஞானத்திற்கு கரணமில்லையென்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** ஆத்மஞானத்திற்கு சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணம். விசாரிக்கப்பட்ட சாஸ்திரந் தான் அர்த்தபோதத்தை உண்டுபண்ணுகின்றது என்பதால், சாஸ்திரத்திற்கு விசாரம் என்பது விசேஷணமாக ஆகிறது. விசாரித சாஸ்திரமே அர்த்த போதத்தை உண்டு பண்ணுகின்றது என்பதாலேயே சப்தத்தை கேட்டவுடனேயே அந்த வாக்யத்தின் விவக்ஷிதமான அர்த்தத்தை அறியக்கூடிய அந்த: கரண சுத்தியை உண்டு பண்ணுகின்றதால், ச்ரவணத்தையும் சப்தார்த்த ஞானத்திற்கு கரணம் என்பதாக உபசாராத் சொல்லப்படுகிறது என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் புருஷ தோஷங்களினுல் ஏற்படும் ப்ரதிபந்தநிவர்த்திக்காகவே விசாரித ச்ரவணுதிகளே கரண கோடியில் சேர்க்கப்படுகிறதேயன்றி உண்மையில் வாக்யார்த்த ஞானத்திற்கு விசாரம் கரணமாக ஆகாது.

சாஸ்திரம் என்பது விசாரத்தை அபேக்ஷிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் சப்தம் ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. அதனுல் வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்பதும் சித்திக்காது. மேலும் ப்ரஹ்மஞானமென்பது, துக்கநிவர்த்தி, சுகப்ராப்திக்கு காரணமா கின்றதால்தான், ஞானம் புருஷார்த்தம் என்று சொல்லப்படுகிறது. சாப்த ஞானத்திற்குப் பிறகே விசாரம் செய்யமுடியும். அதனுல் ஞானத்தை உத்தேசித்து விசாரம் விதிக்கப் படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே விசாரம் என்பதற்கு ப்ரதிபந்த நிவர்த்தியே பலம்.

பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்ற ஒரு கர்மாவில், அந்தக் கர்மாவைச் செய்கின்ற ரித்விக்குகள், சிகப்புத் தலேப்பாகையுடன் அக்னியை வலம் வரவேண்டுமென்று 'லோஹிதோஷ்ணீஷா: ரித்விஜ: வ்ரஜந்தி' என்ற வாக்யத்தில் சிகப்புத் தலேப்பாகையை ரித்விக்குகளுக்கு விசேஷணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல் ஞானத்திற்கு விசேஷணமாக விசாரம் என்பது விதிக்கப்படவில்லே. அப்ரதிபத்தமான ஞானத்தை உத்தேசித்து (ப்ரதிபத்தமாக இல்லாத ஞானம் ஏற்படுவதாக) விசாரம் விசேஷணமாக சொல்லப்படுகிறது ஆகவே, வாக்யார்த்த ஞானத்திற்கு விசாரம் தேவைஇல்லே. ஆகவே வாக்யார்த்தம் என்பது, அந்த வாக்யத்திலுள்ள பதங்களின் அர்த்தம் என்ன? என்பதை அறியா விட்டால் வாக்யார்த்த ஞானம் ஏற்படாது. ஆகையால் பதபதார்த்த ஞானமே வாக்யார்த்தத்திற்கு அவஸ்யம் என்பது போல் விசாரம் என்பது இல்லாவிடில் வாக்யார்த்த ஞானம் ஏற்படாது என்று சொல்லமுடியாது.

ரூபவத்தான வஸ்துவை தெரிவிக்கின்ற சக்ஷுஸ் என்ற ப்ரமாணமானது வேறு ஒரு ப்ரகாசத்தை அபேக்ஷித்துதான் அந்த வஸ்துவைப் ப்ரகாசப்படுத்துகின்றது. அதுபோல், வாக்யம், தன்னுடைய அர்த்தத்தை தெரிவிப்பதற்கு விசாரத்தை அபேக்ஷிப்பதில்லை. உதாரணமாக 'ஸைந்தவமானய' என்ற வாக்யமானது உப்பு என்ற அர்தத்தையும், குதிரை என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கின்றதால், எதைக்கொண்டு வருவது? என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. அதன் பிறகு சூழ்நிலையை அறிந்து, போஜனம் செய்கின்ற போது 'ஸைந்தவமானய' என்றால், உப்பைக் கொண்டுவரவேண்டும் என்று தீர்மானிக்கின்றோம். ஆனால், எந்த வாக்யமாக இருந்தாலும், இவ்விதம் விசாரம் செய்த பிறகுதான் வாக்யார்த்த ஞானம் ஏற்படும் என்று சொல்லமுடியாது. ஆகவே பத–பதார்த்தங்களில் வ்யுத்பன்னனாக இருப்பானாகில் அவனுக்கும் விசாரம் தேவையில்லை. ஏனெனில் அவனுக்கு ஸந்தேகம் ஏற்படுவதற்கே இடமில்லை. ஸந்தேகமே இல்லையென்றால் விசாரத்திற்கு தேவையில்லை. ஆகவே ஒரு வாக்யத்திலிருந்து வாக்யார்த்த ஞானம் ஏற்பட்ட பிறகே அபிதையினால் ஒரு அர்த்தமும் லக்ஷணையினால் ஒரு அர்த்தமும் அறியப்படுகின்றது. இந்தவிதம் ஏற்படும் வாக்யார்த்த ஞானத்தில் ஸந்தேகம் ஏற்படுமானால்தான் விசாரம் என்பது தேவைப்படுகிறது. அந்த விசாரத்தினால் ஸந்தேக நிவர்த்தி மூலமாக நிச்சயஞானம் ஏற்படுகிறது. ஆகையால் வாக்யார்த்த ஞானத்திற்காக விசாரம் தேவையில்லை.

**20. அவதாரிகை :**

இதுவரை வேதாந்த வாக்யங்களிலிருந்து ஏற்படும் ஜீவபரமாத்ம ஐக்யஞானம் என்பது பலவத்தாக ஆகாமல் ஏதாவது ப்ரதிபந்தகமாக இருக்குமானால் அந்த ப்ரதிபந்தக நிவர்த்திக்காக விசாரக்ரந்தம் அவஸ்யம் தேவைப்படுகிறது என்று நிச்சயம் செய்யப்பட்டது.

(இந்த விஷயத்தை ஒத்துக் கொள்ளாமல் இதில் ஒரு ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. அதாவது ஜீவபரமாத்ம ஐக்யம் என்பதே வேதாந்த சாஸ்திரத்திற்கு விஷயம் என்று சொல்லப் படுவதை ஒத்துக்கொள்ள முடியாது. ஏனெனில் ஜீவத்வம் என்ற பந்தமானது வாஸ்தவமாகவே இருக்கின்றதால், அந்த ஜீவபாவத்தை த்யாகம் செய்து ப்ரஹ்மபாவம் ஏற்படுவதாகச் சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது. அதனால் ஞானம் என்பதால் பந்தநிவர்த்தி என்ற ப்ரயோஜனம் ஏற் படுவதாகச் சொல்வது சரியல்ல. ஆகவே சாஸ்திரத்திற்கு விஷயமும் சித்திக்கவில்லை. ப்ரயோஜனமும் சித்திக்கவில்லை. ஆகையால் விசாரம் என்பதும் தேவை இல்லை (என்று நான்கு காரணங்களை தெரிவித்து ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

சதுர்வர்ணகம் என்று ப்ரதம சூத்ரத்தில் செய்யப்படும் ஆக்ஷேபங்களை இங்கு சொல்லப்படுகிறது.

1. விஷயம், ப்ரயோஜனம் என்ற இரண்டுமே சித்திக்காததால் சாஸ்திர விசாரம் தேவை இல்லை.
2. பூர்வமீமாம்ஸையிலேயே வேதார்த்தம் என்னவென்று ஜைமினியினால் விசாரிக்கப் பட்டிருப்பதால் இங்கு உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்தில் இதை விசாரிக்கத் தேவை இல்லை.
3. வேதாந்த சாஸ்திரத்திற்கு தீவிர வைராக்யமுடைய அதிகாரி என்பதே ஸம்பவிக்க முடியாது.
4. ப்ரஹ்மமென்பது ப்ரஸித்தமா? அப்ரஸித்தமா? என்ற கேள்விக்கு ப்ரஸித்தம் என்றோ அப்ரஸித்தம் என்றோ எந்த விதமான முறையிலும் உங்களால் பதில் சொல்லமுடியாது.

இந்தவிதம் விஷயம் ப்ரயோஜனம் ஸம்பவிக்காததால் விசாரம் தேவையில்லையென்றும்– முன்னாலேயே ஜைமினியினால் விசாரிக்கப்பட்டிருப்பதால், (கதார்த்தமாக இருப்பதால்) விசாரம்

தேவையில்லையென்றும், வேதாந்த சாஸ்திரத்திற்கு அதிகாரியே ஸம்பவிக்கமாட்டான் என்பதால் சாஸ்திரம் வ்யர்த்தம் என்றும் ப்ரஹ்மமென்பது ப்ரஸித்தமென்றோ, அப்ரஸித்த மென்றோ சொல்லமுடியாதாகையாலும் விசாரம் தேவையில்லை என்று ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

இவ்வித ஆக்ஷேபங்களுக்கு, 'அதாதோ ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தின் மூலமாக ஸமாதானம் சொல்லப்படுகிறது. அதற்கு முன், பந்தம் (மித்யை என்பதை) அத்யஸ்த்தம் என்பதை நிரூபணம் செய்தால்தான் மற்ற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்வதற்கு முடியும். ஆகையால் சாஸ்திரம் அவஸ்யம் தேவை என்பதும் இதனாலேயே சித்திக்கின்றது. ஆகவே ஸ்ரீ சங்கரபகவத்பாதரால், முதலில் உபோத்காத பாஷ்யமென்றும் அல்லது அத்யாஸபாஷ்யமென்றும் சொல்லப்படும் பாஷ்யத்தில் பந்தம் என்பது அத்யஸ்த்தம் என்பதை நிரூபணம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

**आच्छाद्य विक्षिपति संस्फुरदात्मरूपं जीवेश्वरत्वजगदाकृतिभिर्मृषैव ।**
**अज्ञानमावरणविभ्रमशक्तियोगादात्मत्वमात्रविषयाश्रयताबलेन ॥**

**ச்லோகார்த்தம் :** ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபமான், ஆத்மஸ்வரூபத்தையே, தனக்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானமானது, தன்னுடைய ஆவரணம், விக்ஷேபம் என்ற இரண்டு சக்திகளைக் கொண்டு ஸ்வப்ரகாசமான, ஆத்மஸ்வரூபத்தை மறைத்து ஜீவன் ஈச்வரன், ஜகத் என்ற பேதங்களையுடையதாக மித்யையாகத் தோற்றுவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** உண்மையில் எவ்விதபேதமும் அற்றதான, அகண்டஸ்வரூபமான ஆத்மதத்வமானது, ஜீவனென்றும் ஈச்வரனென்றும் ஜகத் என்றும் பலவித பேதங்கள் உள்ளதாக அஞ்ஞானமானது தோற்றுவிக்கின்றது. ஏகரூபமாக இருக்கின்ற ஆத்மதத்வம், அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருக்கின்ற காரணத்தினால், அனேகரூபமாக தோன்றுகிறது. ஆகவே, இவ்வித பேத தோற்றத்திற்கு கர்த்தாவாக (காரணமாக) அஞ்ஞானமே இருக்கின்றது. இதையே ச்ருதிவாக்யங்களும் 'தத்ஐக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி' என்றும் 'ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ' என்பது போன்ற பலவாக்யங்கள், அஞ்ஞானம் என்பது இல்லாத பேதங்களை உண்டுபண்ணி பலவிதமாகத் தோன்றச் செய்கிறது என்று தெரிவிக்கின்றது. இதையே இந்த ச்லோகத்திலும் ஆச்சாத்ய விக்ஷிபதி என்று சொல்லப்படுகிறது. அதாவது ஆத்மஸ்வரூபத்தை மறைத்து, இல்லாத பேதங்களை உண்டுபண்ணி பலவிதமாக தோன்றச் செய்கிறது என்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் இல்லாத வஸ்து இருப்பதாக அறியப்படுவதையே அர்த்தாத்யாஸம் என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் அஞ்ஞானத்தினால் விக்ஷேபமாக தோற்றுவிக்கப்படுகிறது என்று சொல்லப் பட்டதால் அன்யதாக்யாதி என்ற வாதமும் நிராகரிக்கப்பட்டதாக ஆகிறது. அதனால் தற்கால உற்பன்னமாக அநிர்வசனீயமாக தோன்றுவது எதுவோ அதுவே அர்த்தாத்யாஸம் என்பதற்கு, விஷயமாக ஆகிறது. உதாரணமாக கயிற்றில் ஸர்ப்பம் என்பது தோன்றுகின்ற ஸமயத்தில் மட்டும் ஸர்ப்பம் என்ற அர்த்தத்தை உண்டுபண்ணுகின்றதால் அர்த்தாத்யாஸம் என்று சொல்லப்படுகிறது.

மேலும், ஜீவன், ஈச்வரன், ஜெகத் என்ற மூன்று விதமான ஆக்ருதிகளினால், நிர்விசேஷமான ஆத்மவஸ்து அஞ்ஞானவஸாத் விசேஷமுள்ளதாக தோன்றுகிறது என்று

சொல்லப்படுவதால், ஸர்வம் ஞானம் யதார்த்தம் என்றும், ப்ராந்திஞானமென்பதே கிடையாது என்றும், சொல்லப்படும் அக்யாதிவாதத்தையும் இதனுல் நிராகரிக்கப்படுகிறது.

நிர்விசேஷமான ஸ்வரூபத்தில் விசேஷமான பேதங்கள் இருப்பதாக அறியப்படுவதே ஞானுத்யாஸம். மேலும் ஞானத்தை அன்றி வேறு ஞேயம் என்ற விஷயங்களே கிடையாது என்றும் ஞானமே அந்தந்த விஷயாகாரமாக பரிணமிக்கிறது என்றும் ஆத்மக்யாதிவாதிகளால் சொல்லப்படுகிறது. இந்த வாதமும் சரியல்ல.

ஏனெனில் விஷயம் எவ்விதம் இருக்கின்றதோ அந்தந்த விஷயாகாரமாகவே ஞானம் ஏற்படவேண்டும். ஆகையால் ஜீவனென்றும் ஜகத் என்றும் ஈச்வரனென்றும் ஆகார பேதங்கள் இருப்பதால்தான் அந்தந்த விஷயாகாரமாக ஞானம் ஏற்படுகிறது என்று சொல்லவேண்டும். ஆகையால் ஞானத்தையன்றி வேறு விஷயமே கிடையாது என்று சொல்லப்படும் ஆத்மக்யாதி மதமும் இதனுல் நிராகரிக்கப்படுகிறது.

இந்தவிதம் ஸத்க்யாதி அஸத்க்யாதி ஆத்மக்யாதி அக்யாதி அன்யதாக்யாதி என்பவைகள் நிராகரிக்கப்பட்டதால் அநிர்வசனீயக்யாதி என்பதுதான் சித்தமாகிறது.

ஆகவே, ஜீவேச்வரபேதங்கள் எல்லாமே அநிர்வசனீயமாக உண்மையில் இல்லாத ஒன்று தத்கால உத்பன்னமாக மித்யையாக அஞ்ஞானத்திலுல் தோற்றுவிக்கப் படுகிறது என்றே ஒத்துக் கொள்ளவேண்டும்.

ப்ரபஞ்சம், அநிர்வசனீயம் த்ருச்யத்வாத் சுக்திரஜதவத் என்று அநிர்வசனீயம் என்பதை அனுமானத்தினுல் சாதிக்கப்படுகிறது. (த்ருச்யத்வம் என்பது ஹேது, அநிர் வசனீயத்வம் என்பது ஸாத்யம். உதாகரணம் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி).

எதிரில் இருக்கின்ற வஸ்து கிளிஞ்சல்தான் என்றுலும் அதை வெள்ளியென்று நினைத்து, அதை எடுக்க ப்ரவர்த்திக்கின்றுன். ஆகவே எதிரிலிருக்கின்ற வஸ்துவின் உண்மையான தன்மை அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டு, வேருெரு வஸ்துவாக தோற்றுவிக்கப்படுவதால்தான் அதில் ப்ரவர்த்தி ஏற்படுகிறது. ஆகவே கிளிஞ்சலில் (அதஸ்மின்தத்புத்தி) ரஜதம் என்பது அத்யஸ்த்தம் என்று சொல்லவேண்டுமானதால், அநிர்வசனீயமாக ரஜதம் என்பது தத்கால உத்பன்னமாக தோற்றுவிக்கப்படுகிறது என்றே ஒத்துக்கொள்ளப்படவேண்டும்.

அநிர்வசனீயமாக தோன்றுகிறது என்பதை ஒத்துக்கொள்ளாமல் அக்யாதி மதஸ்த்தர் களால் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. அதாவது இதம் சுக்தி: என்று ஏற்படவேண்டிய இடத்தில், இதம் ரஜதம் என்று ப்ரமம் ஏற்படுகின்றபோது அந்த இடத்தில் இதம் என்று ஏற்படும் ஞானம் ப்ரத்யக்ஷமாக ஏற்படுகின்றதாகவும், ரஜதம் என்பது ஸ்மரணுத்மகமான ஞானம் என்றும் சொல்லப்படுகிறது. அதாவது இது வெள்ளி என்று விசிஷ்டமாக ஒரே ஞானமாக ஏற்படவில்லையென்றும் எதிரில் இருக்கின்ற வஸ்துவில் இது என்ற ஞானம் ப்ரத்யக்ஷமாக ஏற்படுவதாகவும், அதன் பின் இஷ்டமான வெள்ளிஞானம் புத்தியில் இருப்பதால் அந்த வஸ்து ஸ்மரிக்கப்படுவதாகவும் அதனுல் ஸ்மரணுத்மகமான ஞானம் ஏற்படுகின்றபோது, எதிரிலுள்ள வஸ்துவும் ஸ்மரிக்கப்படும் வெள்ளியும் வேறு என்று பேதம் க்ரஹிக்கப்படாததால் எதிரிலுள்ளதை எடுக்க ப்ரவர்த்திக்கின்றுன். ஆகையால் இந்த ஞானத்தை ப்ராந்தி என்று சொல்லமுடியாது. அதனுல் ஸர்வம் ஞானம் யதார்த்தம் என்று அக்யாதி மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல.

**வ்யாக்யானம் :** எதிரில் இருக்கின்ற வஸ்துவையே வெள்ளியென்று நினைத்து அதை எடுக்கப்ரவர்த்திக்கின்றான் என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி எதிரிலுள்ளதை இது என்று பார்க்கிறான், வெள்ளியைஸ்மரிக்கிறான், 2க்கும் உள்ள பேதம் க்ரஹிக்கப்படாததால் அதைவெள்ளி என்று எடுக்கிறான் என்று சொல்வதெல்லாம் அபத்தம் (பொருத்தமற்றது) ஏனெனில், லோகத்தில் எவ்வளவோ வஸ்துகள் இருக்கின்றது. அவைகளின் ஸ்மரணமும் இருக்கின்றது. அவைகளில் ஏதாவது ஒருவஸ்து இது என்று நினைத்து, (பேதம் க்ரஹிக்கப் படாததால்) எடுக்கிறான் என்று சொல்லலாமே? வெள்ளியை நினைக்கிறான், எதிரிலுள்ள கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும் பேதம் க்ரஹிக்கப்படாததால் அதை வெள்ளி என்று எடுக்கிறான் என்று ஏன் சொல்லவேண்டும்? ஆகவே இந்த ஸமாதானம் ஒத்துக்கொள்ளக்கூடியதல்ல. உதாரணமாக கடத்தை உண்டுபண்ணுவதற்கு அனேக காரணங்கள் இருக்கின்றது. அதில், கடத்தை உண்டுபண்ணக் கூடிய தண்டம் என்பதும் ஒரு காரணம். இந்த தண்டமென்பதும், கடத்தை உண்டுபண்ணினால்தான் அதை கடத்திற்கு காரணம் என்று சொல்லலாம். ஆகவே தண்டத்வமுள்ள தண்டம் எதுவோ அதுவே கடத்திற்கு காரணம் என்று சொல்லுவதே லகுவாக இருக்கும். அதே போல் எதிரிலுள்ள வஸ்துவில் வெள்ளியின் தன்மையை காண்கிறான். அதனால் வெள்ளி என்ற ஞானம் ஏற்பட்டு அதை எடுக்க ப்ரவர்த்திக்கின்றான் என்று ப்ரவர்த்திக்கு காரணம் வெள்ளியின் தன்மை என்று சொல்வதே மிகவும் சுலபம். இவ்விதம் சொல்லாமல் வெள்ளி என்பதற்கும் அங்குள்ள வஸ்துவிற்கும் பேதம் க்ரஹிக்கப்படாததால் எடுக்கிறான் என்று சொல்வதெல்லாம் பொருத்தமற்றது. உண்மையான வெள்ளியை எடுப்பதற்கு என்ன காரணமோ அதே தான் அயதார்த்த வெள்ளியை எடுப்பதற்கும் காரணம் என்றே சொல்லவேண்டும். ப்ரத்யக்ஷஞானத்திற்கும் ஸ்ம்ருதிஞானத்திற்கும் பேதம் அறியப் படவில்லை அதனால் எடுக்கிறான் என்று ஸ்வரூப பேதவாதியினால் சொல்லப்படுகிறது. அவ்விதம் பேதம் க்ரஹிக்கப்படவில்லை என்று சொல்வதும் சரியல்ல. இவ்விதம் மேன்மேலும் விசாரிக்கின்ற போது ஏதாவது ஒன்றை கல்பித்துச் சொல்லவேண்டியதாக இருக்கின்றது. இவ்விதம் வீணுகசிரமப்படவேண்டிய அவஸ்யமும் இல்லாததால் இந்த விதமான வாதங்கள் எல்லாம் ப்ரயோஜனமற்றது.

மேலும் சாப்தஞானம், அனுமானஞானம் ஏற்படும் இடங்களில் சப்தத்திலிருந்து ஞானம் ஏற்படவேண்டுமானால் ஆகாங்க்ஷை யோக்யதை ஸன்னிதி தாத்பர்யம் என்பது எல்லாம் இருந்தால்தான் சாப்த ஞானம் ஏற்படும் என்று சப்தம் முதலான ஞானம் ஏற்படுவதற்கு காரணமாக பாவ ரூபமாக இருக்கின்ற ஒன்றைத்தான் சொல்லவேண்டும். அவ்விதமின்றி யோக்யதாதிகள் இல்லாததால் சாப்தஞானம் ஏற்படவில்லை என்று அபாவத்தை காரணமாகச் சொல்வது சரியல்ல. இதேபோல் அனுமான ஞானம் ஏற்படும் போதும் வ்யாபகமானவன்னி ஞானம், வ்யாப்யமான தூம ஞானத்தின் மூலம் ஏற்படுகிறது என்று பாவரூபமானதூமஞானத்தை காரணமாகச்சொல்லப்படுகிறது. தூமஞானம் இல்லாததால் வன்னிஞானம் ஏற்படவில்லை என்று அபாவத்தை காரணமாகச் சொல்வதில்லை.

இதேபோல், சாப்தப்ரமம் அனுமிதிப்ரமம் என்பதும் விவகார நிலையில் ஏற்படுகின்றது, சரஸ்திரங்களிலும் சொல்லப்படுகிறது. உதாகரணம் சாப்தப்ரமம் என்பது என்னவென்றால், ஒருவன் ஒரு வாக்யத்தை சொல்லுகின்றபோது, அதைக் கேட்கின்றவன் அந்தவாக்யத்தின் தாத்பர்யம் என்னவென்பதை சரியாக அறிந்து கொள்ளாமல், மாறுபட்ட அர்த்தத்தில் அறிந்து

கொள்வானுகில் அதுவே சாப்தப்ரமம். இந்தவிதம் சாப்தப்ரமம் ஏற்படுவதற்கு காரணம் வாக்யத்திற்கு அதுதான் அர்த்தமென்று நினைக்கிறான் என்றே சொல்லவேண்டும். இதுவே சாப்தப்ரமத்திற்கு காரணம்.

இதேபோல் அனுமிதிப்ரமத்திற்கு என்னகாரணம்? என்றால், தூரத்தில் மலையின் உச்சியில் இருக்கின்றபனியானது உஷ்ணம் ஏற்படும்போது நீராவியாக மாறுகிறது, அதுவே புகை போல தோன்றுகின்றது. என்று அனுமிதிப்ரமத்திற்கு காரணம் சொல்லப்படுகிறது. ஆகவே, இந்தவிதம் ப்ரத்யக்ஷம் அனுமானம், சாப்தம் என்ற ப்ரமாணங்களினால் ஏற்படும் ஞானங்களில் சிலஸமயங்களில் பாவரூபமான ஏதோ ஒரு காரணத்தினால் ப்ராந்திஞானம் ஏற்படுகிறது என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படிக்கின்றி எதிரிலுள்ளது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்றும், எங்கோ பார்த்தவெள்ளியின் ஸ்மரணம் ஏற்படுகிறது (ஸ்ம்ருதி ஞானம்) என்றும், இது வெள்ளி அல்ல என்று கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும் உள்ள பேதம் க்ரஹிக்கப்படவில்லை என்றும், அதனால் எடுக்கிறான் என்று அபாவம் என்பதை ப்ரமகாரணமாகச்சொல்வதும் பொருந்தாது. இந்த்ரியஸன்னிகர்ஷம் எதிரிலுள்ள வஸ்துவிற்கு இருக்கவேண்டும். இந்த்ரியங்களுக்கும் விஷயங்களுக்கும் ஸம்பந்தம் இருந்தால் தான் (விஷய ஞானம்) வஸ்துஞானம் ஏற்படும் என்று கார்யகாரணபாவம் சொல்லவேண்டும்.

வெள்ளி என்பது, வெள்ளியின் தன்மை என்ற விசேஷணத்துடன் கூடியது. ஆகவே விசேஷணத்துடன் கூடியவெள்ளி என்ற வஸ்துவேப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்று சொல்லவேண்டும் என்பதால் எதிரில் எந்த வ்யக்தி தோன்றுகிறதோ அதில் விசேஷ்யமான ரஜதம், விசேஷணமான ரஜதத்வம் என்ற இரண்டும் சேர்ந்தே அதில் அறியப்படுகிறது, என்றே சொல்லவேண்டும். அப்படிக்கின்றி எங்கோ கடையில் இருக்கின்ற வெள்ளி என்ற விசேஷணம், ஸமீபத்தில் எதிரில் இருக்கின்ற (வ்யக்தி) விசேஷ்யத்தில் இருக்கிறது என்று சொல்வதை யாராலும் ஒத்துக்கொள்ளமுடியாது. ப்ரத்யக்ஷமாக அறியப்படும் விஷயம் ஸன்னிகர்ஷமாக இருக்கவேண்டும் என்று சொல்வது தான் பொருத்தமாக இருக்கும். அவ்விதம் சொல்லப்படாவிட்டால் அனுமிதி என்ற அனுமானஞானம் ஏற்படுமிடத்திலும் அதாவது பர்வதோ வன்னிமான் என்று அனுமானிக்கின்ற இடத்தில் பர்வதம் என்ற விசேஷ்யம் ஸன்னிகர்ஷமாக இருப்பதாலேயே விசேஷணமான வன்னிப்ரத்யக்ஷமும் ஏற்படவேண்டும் என்று சொல்ல நேரிடும். இந்தவிதம் விசேஷணம் என்பது விசேஷ்யத்தில் இல்லாமல் இருந்தாலும் ப்ரத்யக்ஷமாக வஸ்து ஞானம் ஏற்படலாம் என்று சொல்வதற்கு எந்த உதாரகணமும் கிடையாது. விசேஷணமான வன்னியுடன் இந்த்ரிய ஸம்பந்தம் இல்லாததால்தான் வன்னிப்ரத்யக்ஷம் ஏற்படவில்லை என்று சொல்லவேண்டும்.

**பூர்வ :** ரஜதம் என்பதின் ஸம்ஸ்க்காரம் தான் எதிரிலுள்ள வஸ்துவில் தோன்றுகிறது. அதனால் ரஜதஸம்ஸ்க்காரத்திற்கும் சக்ஷுஸ் என்பதற்கும் என்ன ஸம்பந்தம் என்றால்? பளபளப்பாகஇருக்கின்ற தன்மையை சக்ஷுஸ் என்ற இந்த்ரியம் க்ரஹிக்கின்றதால் ரஜதஸம்ஸ்க்காரத்துடன் ஸம்பந்தம் ஏற்பட்டு ரஜதம் தோன்றுகிறது என்று சொல்லலாம். அதனால் ரஜதத்வஞானத்திற்கு ஸம்ஸ்காரம் என்பதே இந்த்ரியஸன்னிகர்ஷ சம்பந்தத்திற்கு காரணம் என்று சொல்லலாமே?

**சித்தா :** ஸம்ஸ்க்காரம் என்பதை ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களான இந்த்ரியாதிகளுடன் ஸம்பந்தம் உள்ளதாகச் சொல்லமுடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால் எவ்வளவோ விஷயங்களின் ஸம்ஸ்க்காரம் புத்தியில் இருக்கின்றதால் அவைகள் எல்லாமே ப்ரத்யக்ஷமாக அறியப்படவேண்டும்.

இந்தவிதம் ஸ்மரிக்கப்படும் விஷயங்களெல்லாம் ப்ரத்யக்ஷமாக ஆகிறதென்று சொல்வதற்கு முடியாது. மேலும், ஸம்ஸ்க்காரம் எல்லாம் ப்ரத்யக்ஷமாக ஆகிறது என்று சொல்லப்படுமானால் லோகத்தில் ஸ்ம்ருதி என்பதே இருக்கமுடியாது என்பது மட்டுமல்ல, ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதற்கு என்னஸாமக்ரியைகள் வேண்டுமோ அவைகள் எல்லாம் ஸம்ஸ்க்காரத்திற்கும் இருக்கிறதென்று சொல்லமுடியாது. ஸம்ஸ்க்காரம் என்பது பரோக்ஷஞானத்திற்கு காரணம். இந்த்ரியஸன்னிகர்ஷம் ப்ரத்யக்ஷஞானத்திற்கு காரணம்.

**பூர்வ :** அப்படியானால் ஸம்ஸ்காரம் காரணமில்லை என்பது சரியே. ஏனெனில் சக்ஷுஸ் ஸம்பந்தம் ஸம்ஸ்க்காரத்திற்கு கிடையாது. ஆனால் ஸ்மரணம் என்பது சக்ஷுஸ் ஸம்பந்தமுள்ளது என்று சொல்லலாமே?

**சித்தா :** அதுவும் சொல்லமுடியாது. எந்த விஷயத்திற்கு இந்த்ரியத்துடன் ஸம்பந்தம் ஏற்படுகிறதோ அதுவே ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதற்கு காரணம் என்று சொல்லவேண்டும். அப்படிக்கின்றி ஸ்மரணம் என்பதின் ஸம்பந்தத்தினால் ஸ்மரிக்கப்படுகின்ற ரஜதமானது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால், காவ்யங்களைப்படிக்கின்ற போது அந்த காவ்யத்தில் கவியினால் வர்ணிக்கப்படும் பதார்த்தங்களின் ஸ்மரணம் ஏற்படுமானதால் அந்த பதார்த்தங்கள் எல்லாம் ப்ரத்யக்ஷமாக அறியப்படவேண்டும். ஆகையால் ஸ்மரணம் இருந்தாலே விஷயம் ப்ரத்யக்ஷமாக ஆகும் என்று சொல்வது பொருத்தமற்றது.

ஸ்ம்ருதி என்பதும் ப்ரத்யக்ஷம் என்பதும் சேர்ந்து ஒரு விஷயம் அறியப்படுமானால் அதை ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லப்படும். ஸ்ம்ருதி என்பது கேவலபரோக்ஷம், ப்ரத்யக்ஷம் என்பது கேவல அபரோக்ஷம், பரோக்ஷம் அபரோக்ஷம் என்ற இரண்டு அம்ஸங்களும் சேர்ந்து எந்த ஒரு விஷயம் அறியப்படுகிறதோ அதையே ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லப்படும் உதாரணமாக ஸோऽயம் தேவதத்த: என்ற வாக்யம் அவனே, இவன் என்று தெரிவிக்கின்றது. இதில் ஸ : (அவன்) என்ற அம்ஸத்தில் ஸம்ஸ்க்காரத்தினால் ஏற்பட்ட ஸ்ம்ருதியுடன் அயம் (இவன்) என்ற ப்ரத்யக்ஷஞானமும் சேர்ந்து ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகிறது.

ஆகவே இந்தவிதம் ப்ரத்யபிஞ்ஞையைப்போல் வேறு எந்த இடத்திலும் ஸ்ம்ருதியும் ப்ரத்யக்ஷமும் சேர்ந்து ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே இதம் ரஜதம் என்று ஏற்படும் ஞானத்தை ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லமுடியாது.

ப்ரத்யபிஞ்ஞையாக இல்லாத ப்ரத்யக்ஷஞானமாக இருக்குமானால், அந்த இடத்தில் ஸ்மரணம் என்பது பரோக்ஷமாகத்தான் இருக்குமானதால் இந்த்ரியஸன்னிகர்ஷம் ஏற்பட முடியாது. ஆகையால் ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதாகச் சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** ஸ்ம்ருதி என்பதற்கு சக்ஷுராதி இந்த்ரியஸன்னிகர்ஷம் இல்லையென்றாலும், மனஸ் என்ற இந்த்ரியஸம்பந்தம் உடையதாக இருக்கின்றதாலும், எந்த விஷயமாக இருந்தாலும் மனஸ் என்ற கரணத்தினால் தான் அறியப்படவேண்டும் என்பதாலும், மனஸ் என்ற கரணத்தினால் ஸ்ம்ருதி என்பது ப்ரத்யக்ஷமாகிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் மனஸ் என்ற இந்த்ரியத்தினாலேயே ஸர்வவிஷயஞானமும் ப்ரத்யக்ஷமாக ஏற்படலாம் என்று சொல்லப்படுமானால் பாஹ்யேந்த்ரியமான சக்ஷுராதிகளின் தேவையே இல்லாமல் கடாதி ஸர்வவிஷயங்களும் ப்ரத்யக்ஷமாகிறது என்று சொல்லநேரிடும். அதே போல், ஆத்மாவிற்கும் மனஸ் என்பதற்கும் ஸம்பந்தம் இருக்கின்றதால் ஆத்மஸ்வரூபமும், மனஸ் என்பதற்கும், சக்ஷுஸ் முதலானவைகளுக்கும் ப்ரத்யக்ஷமாகிறது

கொள்வானுகில் அதுவே சாப்தப்ரமம். இந்தவிதம் சாப்தப்ரமம் ஏற்படுவதற்கு காரணம் வாக்யத்திற்கு அதுதான் அர்த்தமென்று நினைக்கிறான் என்றே சொல்லவேண்டும். இதுவே சாப்தப்ரமத்திற்கு காரணம்.

இதேபோல் அனுமிதிப்ரமத்திற்கு என்னகாரணம்? என்றால், தூரத்தில் மலையின் உச்சியில் இருக்கின்றபனியானது உஷ்ணம் ஏற்படும்போது நீராவியாக மாறுகிறது, அதுவே புகை போல தோன்றுகின்றது. என்று அனுமிதிப்ரமத்திற்கு காரணம் சொல்லப்படுகிறது. ஆகவே, இந்தவிதம் ப்ரத்யக்ஷம் அனுமானம், சாப்தம் என்ற ப்ரமாணங்களினால் ஏற்படும் ஞானங்களில் சிலஸமயங்களில் பாவரூபமான ஏதோ ஒரு காரணத்தினால் ப்ராந்திஞானம் ஏற்படுகிறது என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படிக்கின்றி எதிரிலுள்ளது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்றும், எங்கோ பார்த்தவெள்ளியின் ஸ்மரணம் ஏற்படுகிறது (ஸ்ம்ருதி ஞானம்) என்றும், இது வெள்ளி அல்ல என்று கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும் உள்ள பேதம் க்ரஹிக்கப்படவில்லை என்றும், அதனால் எடுக்கிறான் என்று அபாவம் என்பதை ப்ரமகாரணமாகச்சொல்வதும் பொருந்தாது. இந்த்ரியஸன்னிகர்ஷம் எதிரிலுள்ள வஸ்துவிற்கு இருக்கவேண்டும். இந்த்ரியங்களுக்கும் விஷயங்களுக்கும் ஸம்பந்தம் இருந்தால் தான் (விஷய ஞானம்) வஸ்துஞானம் ஏற்படும் என்று கார்யகாரணபாவம் சொல்லவேண்டும்.

வெள்ளி என்பது, வெள்ளியின் தன்மை என்ற விசேஷணத்துடன் கூடியது. ஆகவே விசேஷணத்துடன் கூடியவெள்ளி என்ற வஸ்துவேப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்று சொல்லவேண்டும் என்பதால் எதிரில் எந்த வ்யக்தி தோன்றுகிறதோ அதில் விசேஷ்யமான ரஜதம், விசேஷணமான ரஜதத்வம் என்ற இரண்டும் சேர்ந்தே அதில் அறியப்படுகிறது, என்றே சொல்லவேண்டும். அப்படிக்கின்றி எங்கோ கடையில் இருக்கின்ற வெள்ளி என்ற விசேஷணம், ஸமீபத்தில் எதிரில் இருக்கின்ற (வ்யக்தி) விசேஷ்யத்தில் இருக்கிறது என்று சொல்வதை யாராலும் ஒத்துக்கொள்ளமுடியாது. ப்ரத்யக்ஷமாக அறியப்படும் விஷயம் ஸன்னிகர்ஷமாக இருக்கவேண்டும் என்று சொல்வது தான் பொருத்தமாக இருக்கும். அவ்விதம் சொல்லப்படாவிட்டால் அனுமிதி என்ற அனுமானஞானம் ஏற்படுமிடத்திலும் அதாவது பர்வதோ வன்னிமான் என்று அனுமானிக்கின்ற இடத்தில் பர்வதம் என்ற விசேஷ்யம் ஸன்னிகர்ஷமாக இருப்பதாலேயே விசேஷணமான வன்னிப்ரத்யக்ஷமும் ஏற்படவேண்டும் என்று சொல்ல நேரிடும். இந்தவிதம் விசேஷணம் என்பது விசேஷ்யத்தில் இல்லாமல் இருந்தாலும் ப்ரத்யக்ஷமாக வஸ்து ஞானம் ஏற்படலாம் என்று சொல்வதற்கு எந்த உதாரகணமும் கிடையாது. விசேஷணமான வன்னியுடன் இந்த்ரிய ஸம்பந்தம் இல்லாததால்தான் வன்னிப்ரத்யக்ஷம் ஏற்படவில்லை என்று சொல்லவேண்டும்.

**பூர்வ :** ரஜதம் என்பதின் ஸம்ஸ்க்காரம் தான் எதிரிலுள்ள வஸ்துவில் தோன்றுகிறது. அதனால் ரஜதஸம்ஸ்க்காரத்திற்கும் சக்ஷுஸ் என்பதற்கும் என்ன ஸம்பந்தம் என்றால்? பளபளப்பாகஇருக்கின்ற தன்மையை சக்ஷுஸ் என்ற இந்த்ரியம் க்ரஹிக்கின்றதால் ரஜதஸம்ஸ்க்காரத்துடன் ஸம்பந்தம் ஏற்பட்டு ரஜதம் தோன்றுகிறது என்று சொல்லலாம். அதனால் ரஜதத்வஞானத்திற்கு ஸம்ஸ்காரம் என்பதே இந்த்ரியஸன்னிகர்ஷ சம்பந்தத்திற்கு காரணம் என்று சொல்லலாமே?

**சித்தா :** ஸம்ஸ்க்காரம் என்பதை ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களான இந்த்ரியாதிகளுடன் ஸம்பந்தம் உள்ளதாகச் சொல்லமுடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால் எவ்வளவோ விஷயங்களின் ஸம்ஸ்க்காரம் புத்தியில் இருக்கின்றதால் அவைகள் எல்லாமே ப்ரத்யக்ஷமாக அறியப்படவேண்டும்.

இந்தவிதம் ஸ்மரிக்கப்படும் விஷயங்களெல்லாம் ப்ரத்யக்ஷமாக ஆகிறதென்று சொல்வதற்கு முடியாது. மேலும், ஸம்ஸ்க்காரம் எல்லாம் ப்ரத்யக்ஷமாக ஆகிறது என்று சொல்லப்படுமானால் லோகத்தில் ஸ்ம்ருதி என்பதே இருக்கமுடியாது என்பது மட்டுமல்ல, ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதற்கு என்னஸாமக்ரியைகள் வேண்டுமோ அவைகள் எல்லாம் ஸம்ஸ்க்காரத்திற்கும் இருக்கிறதென்று சொல்லமுடியாது. ஸம்ஸ்க்காரம் என்பது பரோக்ஷஞானத்திற்கு காரணம். இந்த்ரியஸன்னிகர்ஷம் ப்ரத்யக்ஷஞானத்திற்கு காரணம்.

**பூர்வ :** அப்படியானால் ஸம்ஸ்காரம் காரணமில்லை என்பது சரியே. ஏனெனில் சக்ஷுஸ் ஸம்பந்தம் ஸம்ஸ்க்காரத்திற்கு கிடையாது. ஆனால் ஸ்மரணம் என்பது சக்ஷுஸ் ஸம்பந்தமுள்ளது என்று சொல்லலாமே?

**சித்தா :** அதுவும் சொல்லமுடியாது. எந்த விஷயத்திற்கு இந்த்ரியத்துடன் ஸம்பந்தம் ஏற்படுகிறதோ அதுவே ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதற்கு காரணம் என்று சொல்லவேண்டும். அப்படிக்கின்றி ஸ்மரணம் என்பதின் ஸம்பந்தத்தினால் ஸ்மரிக்கப்படுகின்ற ரஜதமானது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால், காவ்யங்களைப்படிக்கின்ற போது அந்த காவ்யத்தில் கவியினால் வர்ணிக்கப்படும் பதார்த்தங்களின் ஸ்மரணம் ஏற்படுமானதால் அந்த பதார்த்தங்கள் எல்லாம் ப்ரத்யக்ஷமாக அறியப்படவேண்டும். ஆகையால் ஸ்மரணம் இருந்தாலே விஷயம் ப்ரத்யக்ஷமாக ஆகும் என்று சொல்வது பொருத்தமற்றது.

ஸ்ம்ருதி என்பதும் ப்ரத்யக்ஷம் என்பதும் சேர்ந்து ஒரு விஷயம் அறியப்படுமானால் அதை ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லப்படும். ஸ்ம்ருதி என்பது கேவலபரோக்ஷம், ப்ரத்யக்ஷம் என்பது கேவல அபரோக்ஷம், பரோக்ஷம் அபரோக்ஷம் என்ற இரண்டு அம்ஸங்களும் சேர்ந்து எந்த ஒரு விஷயம் அறியப்படுகிறதோ அதையே ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லப்படும் உதாரணமாக ஸோऽயம் தேவதத்த: என்ற வாக்யம் அவனே, இவன் என்று தெரிவிக்கின்றது. இதில் ஸ : (அவன்) என்ற அம்ஸத்தில் ஸம்ஸ்க்காரத்தினுல் ஏற்பட்ட ஸ்ம்ருதியுடன் அயம் (இவன்) என்ற ப்ரத்யக்ஷஞானமும் சேர்ந்து ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகிறது.

ஆகவே இந்தவிதம் ப்ரத்யபிஞ்ஞையைப்போல் வேறு எந்த இடத்திலும் ஸ்ம்ருதியும் ப்ரத்யக்ஷமும் சேர்ந்து ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே இதம் ரஜதம் என்று ஏற்படும் ஞானத்தை ப்ரத்யபிஞ்ஞை என்று சொல்லமுடியாது.

ப்ரத்யபிஞ்ஞையாக இல்லாத ப்ரத்யக்ஷஞானமாக இருக்குமானால், அந்த இடத்தில் ஸ்மரணம் என்பது பரோக்ஷமாகத்தான் இருக்குமானதால் இந்த்ரியஸன்னிகர்ஷம் ஏற்பட முடியாது. ஆகையால் ப்ரத்யக்ஷஞானம் ஏற்படுவதாகச் சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** ஸ்ம்ருதி என்பதற்கு சக்ஷுராதி இந்த்ரியஸன்னிக்ர்ஷம் இல்லையென்றாலும், மனஸ் என்ற இந்த்ரியஸம்பந்தம் உடையதாக இருக்கின்றதாலும், எந்த விஷயமாக இருந்தாலும் மனஸ் என்ற கரணத்தினால் தான் அறியப்படவேண்டும் என்பதாலும், மனஸ் என்ற கரணத்தினால் ஸ்ம்ருதி என்பது ப்ரத்யக்ஷமாகிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் மனஸ் என்ற இந்த்ரியத்தினாலேயே ஸர்வவிஷயஞானமும் ப்ரத்யக்ஷமாக ஏற்படலாம் என்று சொல்லப்படுமானால் பாஹ்யேந்த்ரியமான சக்ஷுராதிகளின் தேவையே இல்லாமல் கடாதி ஸர்வவிஷயங்களும் ப்ரத்யக்ஷமாகிறது என்று சொல்லநேரிடும். அதே போல், ஆத்மாவிற்கும் மனஸ் என்பதற்கும் ஸம்பந்தம் இருக்கின்றதால் ஆத்மஸ்வரூபமும், மனஸ் என்பதற்கும், சக்ஷுஸ் முதலானவைகளுக்கும் ப்ரத்யக்ஷமாகிறது

என்று சாக்ஷுஷமானஸ விஷயம் ஆத்மா என்று சொல்ல நேரிடும். ஆகவே, இந்த ஆக்ஷேபமும் சரியல்ல.

**பூர்வ :** கிளிஞ்சல் என்பது வெள்ளியாக எப்போதுமே தோன்றுகிறது என்று சொல்லமுடியாது. எந்த ஸமயத்தில் அந்த கிளிஞ்சலில் உள்ள நீலத்வம் முக்கோணத்வம் முதலானவைகள் அறியப்படவில்லையோ அப்போது தான் வெள்ளி தோன்றுகிறது. ஆகையால் கிளிஞ்சலின் உண்மையான தன்மை மறைந்திருப்பதே தோஷம். இந்த தோஷமே வெள்ளி என்ற ப்ரத்யக்ஷஞானத்துடன் ஸம்பந்தப்படுகிறது என்பதால் தோஷத்தை ஸம்பந்தத்திற்கு காரணமாகச் சொல்லலாமே?

**சித்தா :** எதிரில் இருக்கின்ற வஸ்துவின் உண்மையான ஸ்வரூபம் அறியப்படாமல், மறைந்திருக்கின்ற தன்மையை தோஷம் என்றும், அந்த தோஷத்தின் ஸம்பந்தம் சக்ஷுஸ்ஸிற்கு ஏற்படுகின்றபோது, வெள்ளி என்று ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்றும் 'ஸம்பந்தம்' என்பதை காரணமாகச்சொல்லப்படுமானால், பின்னால் அந்த தோஷம் நிவர்த்திக்கப்படும் போது, ஸம்பந்தம் என்பதும் பாதிக்கப்படுகின்றது. அப்போது 'இதுவெள்ளி அல்ல' என்ற ஞானம் ஏற்படுகிறது. இந்த விதம் ரஜதம் (வெள்ளி) என்ற ஞானம் பாதிக்கப் படுவதால் ஸர்வம்ஞானம் யதார்த்தம் என்று எப்படிச்சொல்லமுடியும்? அதனால் ஸர்வம் ஞானம் யதார்த்தம் என்ற சிந்தாந்தத்திற்கு ஹானி ஏற்படுகிறது.

இதேபோல், தோஷத்தினால் அறியப்பட்ட ரஜதம் என்பதும் தோஷ ஸம்பந்தம் பாதிக்கப்படுகின்ற போது, பாதிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டாலும் கூட, கடையில் இருக்கின்ற வெள்ளிதான் இங்கு கிளிஞ்சலில் தோன்றியது என்று சொல்லப்படுவதால் தோஷநிவர்த்தியினால் ரஜதஞானம் பாதிக்கப்பட்டபோதிலும், கடையில் இருக்கின்ற ரஜதம் பாதிக்கப்படவில்லை என்று சொல்லப்படும் அன்யதா க்யாதி வாதமும் சரியல்ல. எந்த இடத்தில் ரஜதம் தோன்றியதோ, அந்த இடத்திலேயே ரஜதமும், ரஜதஞானமும் பாதிக்கப்படுவதாகவே சொல்லவேண்டும்.

கிளிஞ்சல் என்ற வஸ்துவில், வெள்ளி என்ற வேறு ஒரு வஸ்து தோன்றுமானால் விசேஷ்யமான அனுயோகி, விசேஷணமானப்ரதியோகி என்ற இரண்டும் அதே இடத்தில் இருக்கவேண்டும். அவ்விதமின்றி எங்கோ தூரத்தில் இருக்கின்ற வெள்ளி என்ற வஸ்து ஸமீபத்தில் உள்ள கிளிஞ்சல் என்ற விசேஷ்யத்தின் விசேஷணமாக தோன்றுகிறது என்று சொல்வது பொருத்தமற்றது.

**பூர்வ :** வெகுதூரத்தில் இருக்கின்ற வஸ்துவையும், ஸமீபத்தில் இருப்பதுபோல் காண்பிக்கக் கூடிய (சக்தி) ஸாமர்த்யம், தோஷத்திற்கு இருப்பதாகச் சொல்லலாமே?

**சித்தா :** தோஷம் அற்ற கண்களால் ஸமீபத்தில் இருக்கின்ற வஸ்துவைத்தான் அறிய முடியும் என்றும், தோஷம் இருக்கின்ற கண்கள் தூரத்தில் இருக்கின்ற வஸ்துவையும் அறிவிக்கமுடியும் என்று சொல்லப்படுமானால், தூரத்திலுள்ள வஸ்துவை அறிவிக்கும் ஸாமர்த்யம் மட்டுமல்லாமல், வேறு ஒரு வஸ்துவை தோற்றுவிக்கக்கூடியஸாமர்த்யமும் இருப்பதாகச் சொல்ல நேரிடும். ஆகவே, இந்தவிதமான வாதங்கள் எல்லாமே நிராகரிக்கப்படவேண்டும். ரஜதமானது தற்கால உத்பன்னமாக அநிர்வசனீயமாக தோன்றுகிறது என்று தான் ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.

ஆத்மாஸ்வயம் ப்ரகாசம், அத்வைதம் என்பதே உண்மையான தத்வம். அதில் ஜீவனென்றும், ஈச்வரன் என்றும், ஜகத் என்றும் அனேகவிதமான பேதங்கள் ஆத்மஸ்வரூப அஞ்ஞானத்தினால் ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** ஆத்ம ஸ்வரூபத்தையே அஞ்ஞானம் மறைக்கின்றது என்றால் அஞ்ஞானம், அதன் கார்யம் என்பதெல்லாம் எதனால் சித்திக்கின்றது?

**சித்தா :** ஆத்மாவின் விசேஷஸ்வரூபமான ஆனந்தம் அத்வைதம் என்ற தன்மைகளையே அஞ்ஞானம் மறைக்கின்றதால் ஸாமான்யமான ஸ்வரூபப்காசம் என்பது மறைக்கப்படாததால் அஞ்ஞானம் அதன் கார்யம் என்பதெல்லாம் ஆத்மப்ரகாசத்தினாலேயே சித்திக்கின்றது.

**பூர்வ :** அஞ்ஞானம் என்பது ஞான அபாவமானதால் ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபமாகவும், பாவரூபமாகவும் இருக்கின்ற ஆத்மாவை எப்படி மறைக்கமுடியும்? அஞ்ஞானம் என்பது அபாவரூபமில்லையென்றும் பாவரூபந்தான் என்று சொல்லப்பட்டாலும் கூட, ஆத்மாவை மறைக்கிறது என்று சொல்லலாமேயன்றி வேறொன்றாக தோற்றுவிக்கின்றது என்று எப்படிச் சொல்வது? இருட்டு என்பது இருக்கின்ற வஸ்துவை மறைக்கலாமேயன்றி அந்த இருள் வேறு ஒரு வஸ்துவை தோற்றுவிப்பதாக எங்கும் காணப்படவில்லை.

**சித்தா :** ஆத்மா என்பது ஞானஸ்வரூபமானதால் ஞான அபாவம் என்பதே இருக்கமுடியாது. அதனால் அஞ்ஞானம் அபாவரூபமல்ல, பாவரூபம் என்றே சொல்லவேண்டும். அஹம் அஞ்ஞ: என்றும் மூடோஹமஸ்மி என்றும் அனுபவம் எல்லோருக்கும் இருக்கின்றதால் அஞ்ஞானம் என்பது பாவரூபம் என்றே சொல்லவேண்டும். சூர்யன்ப்ரகாசஸ்வரூபந்தான் என்றாலும் மேகங்களால் மறைக்கப்படுகிறது என்பதும், சூர்யப்ரகாசத்தினால் தான் அறியப்படுகிறது. இதே போல் ஸ்வப்ரகாசமான ஆத்ம ஸ்வரூபம், பாவரூபமான அஞ்ஞானத்தினால் மறைக்கப்படலாம்; வேறொன்றாகவும் தோற்றுவிக்கப்படலாம்.

எப்படி வேத்ரபீஜம் என்று சொல்லப்படும் பிரப்பம் பழத்தின் விதையானது காட்டுத்தீயின் ஸம்பந்தம் ஏற்படுமானால், அந்த விதை மறுபடி பிரம்புச்செடியாக முளைக்காமல், வாழை மரமாக முளைக்கின்றது என்று சொல்லப்படுகிறதோ, அதேபோல், அஞ்ஞான ஸம்பந்தத்தினால், ஆத்மஸ்வரூபம் மறைக்கப்படுகின்றபோது, ஸ்வரூபத்தை மறைக்ககூடிய சக்திமட்டுமின்றி, அந்தவஸ்துவை வேறொன்றாக தோற்றுவிக்கக்கூடிய சக்தியும் அந்த அஞ்ஞானத்திற்கு இருக்கிறது என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. ஆகவே அஞ்ஞானம் என்பது அபாவரூபமல்ல, பாவரூபம் தான் என்று சித்திக்கின்றது. இவ்விதம் விக்ஷேபம் என்பது பாவரூபமாகவும் மித்யாரூபமாகவும் இருக்கிறது என்பது அறியப்படுகின்றததால், அதன் காரணமான அஞ்ஞானம் என்பதும் பாவரூபம், மித்யாரூபம் என்றே சித்திக்கின்றது.

அகண்ட ஆனந்த ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ற ப்ரத்யகபின்னப்ரஹ்மஸ்வரூபம், இல்லை என்றும், தெரியவில்லை என்றும் சொல்வதற்கு காரணமாக இருப்பது எதுவோ அதுவே ஆவரண சக்தி. இருக்கின்றவஸ்துவை, இருக்கின்றவிதம் தெரிவிக்காமல் வேறுவிதமாக தோற்றுவிப்பது எதுவோ, அதுவே விக்ஷேபசக்தி. இவ்விதம், ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மறைத்து, ஜகத்தை தோற்றுவிப்பதற்கு காரணமான அஞ்ஞானம் என்பது பாவரூபம் என்றே சித்திக்கின்றது.

**பூர்வ :** அப்படியானால், அஞ்ஞானமே, ஜகத் காரணம் என்று சொல்லலாமே? ப்ரஹ்மமே ஜகத் காரணம் என்று ஏன் சொல்லவேண்டும்?

**சித்தா :** கேவலப் ப்ரஹ்மமோ, கேவல அஞ்ஞானமோ ஜகத்காரணம் என்று சொல்லமுடியாது. அறியப்படாதப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று சொல்லவேண்டும். அஞ்ஞானத்தினால்தான் ஏகமான ப்ரஹ்மமானது அனேகம் போல தோன்றுகிறது என்று இந்த்ரோ 'மாயாபி: புருரூப ஈயதே' போன்ற பல ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றன. அனேகம் போல தோற்றுவிக்கப் படுவதாகச் சொல்லப்படுவதாலேயே, ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரணம்

என்றே சொல்லப்படுகிறது. ஆகவே, ப்ரஹ்மஸ்வரூபத்தில் எவ்வித மாறுபாடும் ஏற்படாமலேயே அனேகவிதமான ப்ரபஞ்ச தோற்றத்திற்கு காரணமாகிறது. அஞ்ஞானம் என்பதே ஜகத்தாக பரிணாமத்தை அடைகின்றதால் அஞ்ஞானம் என்பது ஜகத்திற்கு பரிணாமி உபாதானகாரணம் என்று சொல்லப்படுகிறது. ரஜ்ஜு அஞ்ஞானத்தினால் ஸர்ப்பத்தோற்றம் என்றும், சுக்தி அஞ்ஞானத்தினால் ரஜததோற்றம் என்றும் சொல்லப்படுவது போல், ப்ரஹ்ம அஞ்ஞானத்தினால் ஜகத்தோற்றம் என்று சொல்லப் படுவதால், ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு விவர்த்தஉபாதான காரணம் என்று சொல்லப் படுகிறது. ஆகவே அஞ்ஞானபரிணமம் ஜகத் என்றாலும் சரி, ப்ரஹ்மவிவர்த்தம் ஜகத் என்று சொன்னாலும் சரி, தாத்பர்யத்தில் பேதம் எதுவுமில்லை. அதனால், ப்ரஹ்மாஞ்ஞானம் ஜகத்காரணம் என்று இரண்டையும் ஸம்பந்தப்படுத்தியே சொல்லபடுவதால், கேவல அஞ்ஞானமோ, கேவலப்ருஹ்மமோ ஜகத் காரணமில்லை என்றும், அஞ்ஞானத்வாரா ப்ரஹ்மமானது, ஜகத்திற்கு விவர்த்தோபாதானகாரணமாகிறது என்பதும் சித்திக்கின்றது. இந்த அஞ்ஞானமானது ஆத்மாவையே ஆச்ரயமாகக்கொண்டு, ஆத்மாவையே மறைக்கின்றதால், அஞ்ஞானத்திற்கு ஆத்மாவே ஆச்ரயம், ஆத்மாவே விஷயம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அஞ்ஞானம், ஆத்மாவை ஆச்ரயத்திருப்பதால் தான் வேறு ஒன்றை தோற்றுவிக்கக்கூடிய சக்தி உடையதாக ஆகிறது. அதேபோல அதிஷ்டானமான ஆத்மாவின் ஸத்தையைக்கொண்டே, ஆத்மாவை மறைக்கின்றது. இவ்விதம் சிதாபாஸஸம்பந்தமுடைய அஞ்ஞானமானது எப்படி தாமிரம் (செம்பு) என்ற உலோகம், ரஜதரஸத்தினால் பூசப்பட்டு, தன்னுடைய நிறம் மாறி வெள்ளியைப்போல் (ரஜதம் போல்) தோன்றுகிறதோ, அதேபோல், சைதன்ய ஸம்பந்தமுடைய அஞ்ஞானமானது, 'அஹம்' என்றும், 'இதம்' என்றும் ப்ரபஞ்சாகாரமாக தோன்றுகிறது. இவ்விதம் ஏகரூபமான சைதன்யத்தில் அத்யஸ்த்தமான அவித்யையினால் ஜீவனென்றும் ஈச்வரன் என்றும் பேதம் தோற்றுவிக்கப்படுகிறது. இதனால் அவித்யை, அவித்யாகார்யம் என்ற ஸர்வமும் மித்யை என்பது சித்திக்கின்றது. மேலும் 'அஹம் அஞ்ஞ:' என்றும் 'மாமஹம் ந ஜானமி' என்றும் எல்லோருக்கும் அனுபவம் இருக்கின்றது. 'என்னை எனக்குத்தெரியவில்லை' என்று சொல்வதே பொருந்தாது என்றாலும், இவ்வித அனுபவம் எல்லோருக்கும் இருக்கிறது என்பது ப்ரசித்தம். ஆகையால், ஸ்வஸ்ரூபத்தை அஞ்ஞானம் மறைக்கிறது என்பதற்கு அனுபவமே ப்ரமாணம். அதுமட்டுமல்ல எனக்கு அஞ்ஞானம் இருக்கிறது என்பதே ஞானஸ்வரூபமான ஆத்மாவினால் தான் ப்ரகாசிக்கவேண்டும். இவ்விதம் ஸர்வதா ஞானமேஸ்வரூபமாக இருந்து ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற போது, 'ஞான அபாவம்' என்பது எப்படி இருக்கமுடியும்? ஞான அபாவம் என்பதற்கு ஞானமே ப்ரதியோகி. இவ்விதம் ப்ரதியோகியான ஞானம் இருக்கின்றபோது 'ஞான அபாவம்' எப்படி இருக்கமுடியும்? ஆகையால் அஞ்ஞானம் என்பது பாவரூபம் என்றே சித்திக்கின்றது.

**21. அவதாரிகை :**

ஆத்மஸ்வரூபத்தை ஆச்ரயமாகக் கொண்டிருக்கின்ற கல்பித அஞ்ஞானமென்பது, துர்ப்பலமானதால், தனக்கு உபஜீவ்யமான ஆத்மஸ்வரூபத்தை உபஜீவகமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது எப்படி மறைத்து, வேறு விதமாக தோற்றுவிக்கமுடியும்? அவ்விதம் ஆத்மா மறைக்கப்படுமானால், ஆத்மாவே இல்லையென்றாகும். அது மட்டுமல்ல, ஆத்மாவைத் தவிர வேறுபலமுள்ளதாக இருக்கின்ற வேறொன்றையே அஞ்ஞானம் ஆச்ரயமாகக் கொண்டிருக்கிறதென்று சொல்லநேரிடும் அவ்விதம் சொல்லப்படுமானால் அத்வைதஹானி ஏற்படும்.

**ச்லோகம் :** प्रत्यक्त्वमात्रविषयाश्रयताबलेन प्रत्यक्स्वरूपमपिधाय पराग्विवर्तैः ।
प्रत्यञ्चमद्वयमशेषविशेषहीनं विक्षिप्य तिष्ठति तदग्रहणं मृषैव ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மாவையே விஷயமாகவும், ஆச்ரயமாகவும் கொண்டிருக்கின்ற அஞ்ஞானமானது ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தின் ஸாமான்யாம்ஸத்தை ஆச்ரயமாகக் கொண்டு அத்வயம் முதலான விசேஷாம்ஸத்தை மறைத்து ஸத்வயத்வம் முதலான தன்மைகள் உடையதாகவும் பாஹ்யவிஷயங்களாகவும் தோற்றுவிக்கின்றது. இந்த அஞ்ஞானம் என்பதும் மித்யைதான்.

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயமாகக் கொண்டிருக்கின்ற அஞ்ஞானம் என்பதும் கல்பிதம் என்பதால் ஆத்மாவைத்தவிர வேறு எதையும் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகச் சொல்லமுடியாது. அது மட்டுமல்ல ப்ரத்யகாத்மாவைத்தவிர வேறு எதுவும் ஆவரணம் விக்ஷேபம் என்ற இரண்டையும் செய்யக்கூடிய பலத்தை, ஜடமான அஞ்ஞானத்திற்கு கொடுக்கமுடியாது. ஏனெனில் அத்யஸ்த்தமான வஸ்துக்கள் எல்லாம் அதிஷ்ட்டான ஸ்வரூபத்தின் பலத்தைக் கொண்டே ஜீவிக்கவேண்டும். ஆகவே இப்பேர்ப்பட்ட அஞ்ஞானம், ஆத்மாவை மறைக்கின்றது என்று சொல்லப்படுவதும், அஞ்ஞானத்தைப் போலவே துர்நிரூபம். ஆகவே அஞ்ஞானமானது தனக்கு விரோதியான அனந்தத்வம், ஆனந்தத்வம், அத்வயத்வம், என்பது போன்ற விசேஷாம்ஸங்களைத்தான் மறைக்கின்றதேயன்றி தனக்கு ஸாதகமான ஸத்வத்தையோ, சித்வத்தையோ மறைக்கவில்லை. ஸாமான்யாம்ஸத்தை மறைக்கவில்லை என்றும், ஸத்தா ஸ்பூர்த்தி என்ற ஸ்வரூபத்தின் பலத்தைக்கொண்டே, அஞ்ஞானம் ஜீவிக்கின்றது என்பதாலும் உபஜீவ்யமானஸ்வரூபத்திற்கு விரோதமாக இல்லை.

**பூர்வ :** உபஜீவகமான அஞ்ஞானம் ஆத்மாவை மறைக்கிறதென்றும் அதே ஸமயம் மறைக்கவில்லை என்றும் ஒன்றுக்கொன்று விருத்தமாகச் சொல்வது எப்படிப் பொருந்தும்?

**சித்தா :** ஆத்ம சைதன்யத்தின் ஸத்தா ஸ்பூர்த்தி என்ற பலத்தைக்கொண்டே அஞ்ஞானமானது, ஆத்மாவின் விசேஷ தன்மைகளை மறைக்கின்றது. அதனால் உண்மையில் நிர் விசேஷமான ப்ரத்யக்ஸ்வரூபமானது பராக் விஷயமான, ஜீவத்வம் ஈச்வரத்வம் என்ற பேதங்களுடன், அநாத்மஸ்வரூப விசேஷங்களை ஆத்மாவில் தோற்றுவிக்கின்றது. இந்தவிதம் ஒன்றுக்கொன்று வேறுபடுத்தி தோற்றுவிக்கின்ற அஞ்ஞானமானது அநாதியென்று சொல்லப்பட்டபோதிலும், 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற ஆத்ம சாக்ஷாத்காரம் ஏற்படும் வரையில் தான், இந்த அஞ்ஞானம் ஆத்மஸ்வரூபத்தில் தன்னை பட்டாபிஷேகம் செய்து கொண்டு ஆக்ஷி செய்யமுடியும். இப்பேர்ப்பட்ட அஞ்ஞானமென்பது முக்காலத்திலும் உண்மையில் இல்லை.

**பூர்வ :** இப்பேர்ப்பட்ட துர்நிரூபமான அஞ்ஞானத்தை பாவரூபமென்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** எனக்கு அஞ்ஞானம் இருக்கிறதென்பது எல்லோருக்கும் அநுபவ சித்தமாக இருக்கிறது. அபாவமாக இருக்குமானால் அநுபவம் இருக்கமுடியாது. அதுமட்டுமல்ல. ஞானஸ்வரூபமான நான் இருக்கின்ற போது 'ஞான அபாவம்' எப்படி இருக்கமுடியும்? மேலும் என்னிடம் அஞ்ஞானம் இருக்கின்றது என்று அறியப்படுகின்றதனாலேயே ஞானம் இருக்கிறது என்றே சொல்லவேண்டும். ஆகவே, எனக்கு கடஞானம் இல்லை, படஞானம் இல்லையென்று ஞான விசேஷம் இல்லையென்று சொல்லலாமேயன்றி ஞானஸாமான்யம் இருக்கின்ற போது ஞானமே இல்லையென்று சொல்லமுடியாது. ஒரு வஸ்து இருக்கிறதென்று அறியப்படுவதற்கோ இல்லையென்று அறியப்படுவதற்கோ ஞானம் வேண்டும். அதனால் ஞான அபாவம், அஞ்ஞானம் என்று சொல்வதற்கு முடியாது.

எனக்கு ஞானமில்லை என்று பொதுவாகச் சொல்லமுடியாது. கடஞானம் இல்லை படஞானம் இல்லை என்று அபாவப்ரதியோகியான வஸ்து என்னவென்று சொல்லவேண்டும். அதாவது என்ன இல்லை? எங்கு இல்லை? எப்போது இல்லை? என்ற விசேஷங்களைச் சேர்த்தே சொல்லவேண்டும். ஆகவே ப்ரதியோகி விஷயகமான ஞானம் இருக்கின்ற போது எனக்கு ஞானமே இல்லையென்று சொல்வது பொருந்தாது.

**பூர்வ :** அபாவஞானத்திற்கு ப்ரதியோகி ஞானம் வேண்டுமென்று சொல்வது சரியே. ஆனாலும் குறிப்பிட்ட ஒருவஸ்துதான் விசேஷமாக ப்ரதியோகியாக இருக்க வேண்டுமென்ற அவஸ்யமில்லை. உதாரணமாக இருள் இருக்கின்ற போதுதான் ப்ரகாசத்தின் ஞானம் ஏற்படாது. ப்ரகாசம் இருக்கின்ற போது தான் ப்ரகாசத்தின் ஞானம் ஏற்படும். ப்ரகாசம் இல்லாத போது ப்ரகாசத்தின் ஞானம் ஏற்படாது. அதனால், அபாவ ப்ரதியோகி விஷயம் இன்னதென்று விசேஷமாக குறிப்பிட வேண்டிய அவஸ்யமில்லை.

**சித்தா :** அபாவ ப்ரதியோகி விஷயம் இன்னதென்று விசேஷமாக சொல்லாமலேயே குறிப்பிட்ட அந்த ' விஷய அபாவஞானம்' என்பது ஏற்படலாம் என்று சொல்லப்படுமானால், ஒரு வஸ்து இருக்கின்றபோதே அந்த வஸ்து இல்லையென்றும் சொல்லலாம் என்றாகும். ஏனெனில், உதாரணமாக ஒரு கடத்தைப் பார்க்கின்றபோது இது கடம் என்றும் ஞானம் ஏற்படலாம் இது ஒரு த்ரவ்யம் என்றும் ஞானம் ஏற்படலாம், இது ஒரு பதார்த்தம் என்றும் ஞானம் ஏற்படலாம். ஆகவே ஒரு கடத்தைப் பார்க்கின்ற போது இது த்ரவ்யம் என்று ஞானம் ஏற்படுமானால், கடம் இருக்கின்றபோதே கடமில்லை என்று கடோ நாஸ்தி என்று சொல்ல நேரிடும். த்ரவ்யரூபமாக கடம் இருக்கின்ற போது கடமில்லை என்று ஞானம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. (த்ரவ்யத்வ அவச்சேதக ஞானம் இருக்கின்றபோதே கடமில்லை என்ற அபாவஞானம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது) கட அபாவ ப்ரதியோகி ஞானம் இருந்தால் தான் கடம் இல்லை என்ற ஞானம் ஏற்படும்.

**பூர்வ :** எனக்கு ஞானமில்லை என்று சொல்கின்ற போது ஞானம் என்பதே அபாவப்ரதியோகி என்று சொல்லலாமே?

**சித்தா :** எதிரில் இருக்கின்ற கடமானது மஞ்சள் நிறமுடையதாக இருக்கிறது. அந்த கடத்தில் நீலரூபமில்லை என்று தெரிவிப்பதற்கு, நீலரூபமில்லை என்று சொல்லவேண்டுமேயன்றி 'ரூபம் நாஸ்தி என்று சொன்னாலே போறும் நீலரூபமில்லை என்ற ஞானம் ஏற்படும்' என்று சொல்வது எப்படி பொருந்தும்? ரூபம் நாஸ்தி என்றுல் ரூபமே இல்லையென்று தான் ஞானம் கிடைக்கும். மஞ்சள் ரூபம் என்பது இருக்கின்றதால் ரூபமே இல்லையென்ற ஞானம் ஏற்படமுடியாது.

இதேபோல், அஹம் நஜானாமி என்ற ஞானம் இருக்கின்றபோது, ஞான அபாவம் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**பூர்வ :** பாவரூபமான அஞ்ஞானம் என்பது ஆத்மாவை மறைக்கின்றதென்றும், ஆத்மாவில் இல்லாத பேதங்களையும் விக்ஷேபமாகத் தோன்றுவிக்கின்றது என்ற விஷயம், எந்த ப்ரமாணத்தைக் கொண்டு அறியப்படுகிறது? பாவரூபமான அஞ்ஞானம் இருக்கிற தென்று சொல்வதற்குரிய ப்ரமாண்மும் கிடையாது. அவ்விதம் ப்ரமாணம் இருப்பதாக ஒப்புக்கொள்ளப்படுமானால் அஞ்ஞானம் ஸ்வதந்திரம் என்றும் ஆத்மா பரதந்திரம் என்றும் சொல்ல நேரிடும். ஏனெனில், அஞ்ஞானம் ஆத்மாவைமறைத்து அந்த ஆத்மாவையே வேறொன்றாக தோற்றுவிக்கின்றது என்பதால் ஆத்மா பரதந்தரம் என்றாகிறது. அதற்காக ஆத்மஸ்வரூபத்தின் பலத்தைக் கொண்டே ஆத்மாவை

அஞ்ஞானம் மறைக்கின்றது என்று சொல்லப்படுமானால், ஆத்மாஸக்ரியம் என்று சொல்ல நேரிடும் அதனால் ஆத்மாவிகாரி என்றாகும். அதற்காக, ஆத்மஸஹாயம் ஆத்மாவிற்கு இருக்கிறது என்று சொல்லப்படுமானால் அஞ்ஞானம் அதன் கார்யத்தைஸ்வதந்த்ரமாகச் செய்யமுடியாது என்றாகிறது. இதேபோல் அஞ்ஞானம் என்பது இல்லாமல், ஆத்மா அஞ்ஞானத்தை ப்ரகாசப்படுத்துகிறதென்றோ, அஞ்ஞானம் ஆத்மாவின் கார்யமென்றோ சொல்லமுடியாது. ஆகவே இதனால் அன்யோன்ய ஆச்ரயதோஷம் என்பதும் ஸம்பவிக்கின்றது. ஆகையால் ஜீவன் ஈச்வரன், ஜகத் என்பதெல்லாம் அஞ்ஞான கல்பிதம், மித்யை என்று சொல்வது சரியல்ல. ஜீவேச்வர ஜகத் என்றதான பேதங்கள் உண்மையில் (பரமார்த்தமாக) இருக்கிறதென்றே ஒத்துக்கொள்ள வேண்டுமானதால், அவித்யாகல்பிதம் என்று சொல்வதற்கு ப்ராமாணமே இல்லை.

**சித்தா :** ஆத்ம ஸ்வரூபத்தில் ஜடமாக இருக்கின்ற அஞ்ஞானம் ஸ்வதந்தரமாக இருக்கிறது என்று சொல்வதற்கே முடியாது. அனாத்மாவான கடம் இருக்கின்ற போது, 'இது கடம்' என்று ஞானம் ஏற்படுவது போல், 'இது அஞ்ஞானம்' என்று, தனித்து அஞ்ஞானம் என்பது இருப்பதாக ஒருவருக்கும் ஞானம் ஏற்படுவதில்லை. என்னுடைய அஞ்ஞானம், உன்னுடைய அஞ்ஞானம், கடவிஷயகமான அஞ்ஞானம் படவிஷயகமான அஞ்ஞானம் என்று ஏதாவது ஒரு விஷயத்துடன் கூடினதாகவே அஞ்ஞானம் அறியப்படுகிறது. ஆகவே ஏதாவது ஒரு வஸ்துவை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கின்றதால் பராச்ரயம் அஞ்ஞானம் என்பதால், அஞ்ஞானம் ஸ்வதந்த்ரமென்று சொல்வதற்கே முடியாது. ஆகவே, நான் அஞ்ஞன் என்றோ அல்லது எனக்கு கடவிஷயகமான அஞ்ஞானம் இருக்கிறதென்றோ சொல்லப்படுவதால் சேதனனை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கிறதென்பது எல்லோருக்கும் அனுபவ சித்தமாக இருக்கின்றது. அதனால் அஞ்ஞானம் பரதந்த்ரமென்றே தீர்மானிக்கவேண்டும். மேலும் ஜடமான இந்த அஞ்ஞானமானது வேறொரு ஜடத்தை ஆச்ரயமாகவோ விஷயமாகவோ கொண்டிருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகையால் சேதனனை ப்ரத்யகாத்மாவே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருப்பதாகச் சொல்லவேண்டும். ஆகவே அஞ்ஞானமே இல்லையென்றால், ஆவரணம் செய்கிறதென்றோ விக்ஷேபமாக தோற்றுவிக்கின்றதென்றோ சொல்வதற்கு முடியாது. ஆவரணமோ விக்ஷேபமோ அஞ்ஞானம் இல்லாத இடத்தில் இருப்பதாகச் சொல்லப்படுமானால், எனக்கு எந்த வஸ்து அறியப்பட வில்லையோ, அந்த வஸ்து மற்றவனுக்கும் அறியப்படவில்லை என்று சொல்லநேரிடும். அதனால் அஞ்ஞானம் ப்ரத்யகாத்மாவை ஆச்ரயித்து அதையே விஷயமாகக் கொண்டது என்றே சொல்ல வேண்டும். இல்லாவிடில் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும்.

மேலும். ஒரு வஸ்துவானது அறியப்படாமல் இருக்கின்றபோது, அதில் அஞ்ஞாததை என்ற தன்மை இருக்கிறது என்றும் அதன் பிறகு அந்த வஸ்துவின் ஞானம் ஏற்படுகின்றபோது அந்த வஸ்துவில் ஞாததை என்ற தன்மையை ஞானம் உண்டு பண்ணுகின்றது என்றும் சொல்லவேண்டும். இவ்விதம் சொன்னால்தான் அந்தவஸ்து, ஞானத்திற்கு விஷயம் என்று சொல்லலாம். ஆகவே, இந்தவிஷயத்தில் ச்ருதிவாக்யங்களும் ப்ரமாணமாகின்றது. அதாவது 'நீஹாரேண ப்ராவ்ருதா ஜல்ப்யா ச', என்ற ச்ருதி வாக்யம், பனியானது, சூர்யனை எப்படி மறைக்கின்றதோ அது போல் ஆத்மாவை, அஞ்ஞானம் மறைக்கின்றது என்று தெரிவிக்கின்றது. மேலே இந்த விஷயத்தைப் பற்றி பலப்ரமாணங்களைக்கொண்டு விளக்கப்போகின்றதால் இங்கு அதிகம் விஸ்தரிக்கப்படவில்லை.

ஆத்மாவின் ஸஹாயத்தினால் அஞ்ஞானம் ஆவரணாதிகார்யங்களைச் செய்கிறது என்றால் ஆத்மாவிகாரி என்றாகிறதே? என்ற ஆக்ஷேபமும் சரியில்லை. ரஜ்ஜுவில் தோன்றும் ஸர்ப்பத்தினால் ரஜ்ஜுவிற்கு எவ்வித ஹானியும் ஏற்படுவதில்லை. ஆத்மசைதன்யத்தின்,

ஸன்னிதி மாத்ரேண அஞ்ஞானம் அதன் கார்யத்தைச் செய்யலாம். அதனால் அஞ்ஞான ப்ரேரகத்வம் ஆத்மாவிற்கு சொல்லமுடியாது என்பதால் அன்யோன்ய ஆச்ரயதோஷமும் ஸம்பவிக்காது.

ஜீவேச்வர, ஜகத், என்பது முதலான பேதங்களும், அஞ்ஞானம் இருக்கின்றபோது தான் தோன்றுகிறது. அஞ்ஞானமில்லாதபோது பேத தோற்றம் என்பது இருக்க முடியாது. அதனால் ஜீவேச்வராதி பேதங்கள் ஸத்யமென்று சொல்லமுடியாது. ஜீவன் ஈஸ்வரன் என்ற இரண்டிற்கும் சைதன்யமே ஸ்வரூபமானதால் அஞ்ஞானம் என்ற உபாதி இல்லாமல், பேதம் என்பதே இருக்கமுடியாது. ஜீவேச்வர பேதத்திற்கு காரணமான இந்த ஜகத் என்ற உபாதியும், உற்பத்தி ப்ரளயம் என்று அவ்வப்போது உண்டாகி நாசத்தை அடைகின்றதால், ரஜ்ஜு ஸர்ப்பம்போல அவித்யா கல்பிதம் என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். இந்த விதம் அவித்யை என்பதை காரணமாகச் சொல்லாவிடில் ஜகத் காரணம் என்னவென்றே நிரூபணம் செய்யமுடியாது. ஜகத்காரணம் என்பது பரமாணுவென்றோ, ப்ரதானமென்றோ கல்பிக்கமுடியாது என்பதை மேலே விளக்கப்போகின்றோம்.

ஆகவே சிதாத்மஸ்வரூபம் நிர்விசேஷம், அனந்த, ஆனந்தஸ்வரூபம் என்பதை, அஸ்தூலம், அனணு, அஹ்ரஸ்வம், என்றதாதி வாக்யங்களால் ச்ருதியானது ஆத்மஸ்வரூபத்தை தாத்பர்யத்துடன் போதிக்கின்றது. ஆகையால், இதற்கு முன்சொல்லப்பட்ட (20வது) ச்லோகத்தில், 'ஆச்சாத்ய விக்ஷிபதி' என்று சொல்லப்பட்ட விஷயத்தில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை (எவ்வித தோஷமும் இல்லை).

ஆகவே, அஞ்ஞானம் என்பது ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயித்து அதையே விஷயமாகக் கொண்டிருக்கின்ற தன்மையைத்தான், அஞ்ஞானத்திற்கு பலம் என்று சொல்லப்படுகிறது. இந்த விதம் சைதன்யத்தின் பலத்தைக் கொண்டே ஆத்மாவை மறைத்து விக்ஷேபமாக தோற்றுவிக்கிறது என்று சொல்லப்படுவதால் அஞ்ஞானம் ஸ்வதந்த்ரமில்லை. மேலும் அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்திற்கு விபரீதமான ஸ்வரூபத்தில் அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கின்றது. இப்பேர்ப்பட்ட அஞ்ஞானத்திலிருந்து, விசேஷாகாரமான அஹங்காராதி லக்ஷணமுடைய விப்ரீதமான ஸ்வரூபம் தோற்றுவிக்கப் படுகிறது. அதனால் ஸத்சிதானந்த ஸ்வரூபமான ப்ரத்யகாத்மா நாஸ்தி என்றும், ந ப்ரகாசதே என்றும் விவகாரம் செய்யப்படுவதற்கும், தேவன், மனுஷ்யன், த்ரியக், ஸ்தாவரம் என்று பலவித பேதங்கள் உடையதாக தோன்றுவதற்கும் இந்த அஞ்ஞானமே காரணமாகிறது. எப்படி கிளிஞ்சலை மறைத்து, வெள்ளியென்று தோன்றுவதற்கு அஞ்ஞானம் காரண மாகின்றதோ, அதுபோல், அஸாதாரணமான ஆத்மஸ்வரூபத்தின் விசேஷாம்ஸங்களை மறைத்து ஜீவேச்வர்ஜகத் என்ற பேதங்கள் உள்ளதாக தோற்றுவிப்பதற்கு, ஆத்மஸ்வரூபத்திலுள்ள அஞ்ஞானமே காரணமாகின்றது. இவ்விதம் காரணமாகின்ற அஞ்ஞானம் என்பதும் மித்யை என்பதால் அதன் கார்யமான ஜீவஜகத் என்ற ஸர்வபேதங்களும் மித்யை என்றே அறியவேண்டும்.

சுஷுப்தி நிலையில் எந்தவிதமான விசேஷ விஞ்ஞானமும் இல்லாமலேயே அஞ்ஞானம் என்பதும், சுகம் என்பதும், எப்படி வேருக அறியப்படுகிறதோ அதேபோல், ஜாக்ரத்நிலையிலும் அஞ்ஞானம் என்பது வேருக அறியப்படுவதாக சொல்லலாம் என்பதால், அஞ்ஞானம் என்பது எதையும் அபேக்ஷிக்காமல் தன்னுடைய ஸாமர்த்யத்திஞல் ஜகத் முதலான பேதங்களை தோற்றுவிப்பதாகச் சொல்லமுடியாது. அசேதனமான வஸ்துவிற்கு சக்தி இருந்தபோதிலும், சைதன்ய ஸம்பந்தமின்றி எதையும் செய்ய முடியாதாகையால், ஸ்வாதந்தர்யம் கிடையாது. அதற்காக கேவல சைதன்யமே ஜகத் முதலான பேதங்களை தோற்றுவிப்பதற்கு காரணமாகிறது என்றும் சொல்லமுடியாது. ஏனெனில் சைதன்யம் என்பது கூடஸ்த்தம், அவிகாரியென்பதால் அஞ்ஞானத்தின் மூலமாகவே விக்ஷேபத்தை தோற்றுவிக்க முடியும். விக்ஷேபமாக இருக்கின்ற வஸ்துவில்தான் அதிசயங்கள் இருக்கமுடியுமானதால் பலவிதமான பேதங்களுடன் இந்த ஜகத்தின் தோற்றம் இருக்கின்றது.

நிர்விசேஷமான ஆத்மஸ்வரூபம் ஏகம், அவிக்ரியம் அனுதேயம் அதிசயம், நித்யப்ரகாசஸ்வபாவம் என்று ச்ருதிப்ரமாணம் ஆத்மஸ்வரூபத்தை அறிவிக்கின்றதால், அதற்கு விபரீதமாக பேதமுள்ளதாகவோ, மாறுபாடுகளை உடையதாகவோ சொல்வதற்கு முடியாது. மேலும் ஆத்மாவையன்றி வேறு எந்த வஸ்துவும் உண்மையில் இருப்பதாக சொல்லமுடியாதாகையால் ஜீவ, ஜகத் பேதங்கள் எல்லாம் பரமார்த்தமில்லையென்றும் மித்யை என்றும் சித்திக்கின்றது. ஆகையால் அவித்யை என்றும், அஞ்ஞானம் என்றும் பல சப்தங்களால் சொல்லப்படுவதும், இன்னதென்று நிர்வசனம் செய்யமுடியாததுமான அநிர்வசனீயமான ஒன்றே இவ்வித விக்ஷேபத்திற்கு காரணம் என்று சொல்லவேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. அதனுல் அஞ்ஞானம், அதன் கார்யம் என்பதெல்லாமே, மித்யை என்றே ஒத்துக் கொள்ளப்படவேண்டும். ஆத்மாவிற்கு அன்யமாக எந்த வஸ்துவும் பரமார்த்தமாக இல்லையென்பதால் அஞ்ஞானம் என்பது ப்ரத்யகாத்மாவை ஆச்ரயத்திருக்கிறது என்றே சொல்லவேண்டும். ஆகையால் அஞ்ஞானம் ஆத்மாவை ஆச்ரயித்திருந்தாலும் ஆத்மாவையன்றி வேருன ஒரு வஸ்துவை மறைத்து விக்ஷேபத்தை தோற்றுவிக்கலாமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல அவ்விதம் சொல்லப்படுமாஞல் அத்வைதஹானி ஏற்படும்.

**பூர்வ :** ஆத்மாவையன்றி பரமார்த்தமாக வேறெரு வஸ்து இல்லையாஞலும் மித்யயான வஸ்துவையே அஞ்ஞானம் மறைத்து வேறென்ருகத் தோற்றுவிக்கலாமே?

**சித்தா :** மித்யை என்ருல் ஆரோபிதம் என்றே அறியவேண்டும். ஆரோபிதம் என்ருல் அதற்கு அதிஷ்ட்டானம் எதுவோ அதையே அஞ்ஞானம் மறைக்கின்றதால் ஆரோபிதமானவஸ்து 'தோன்றுகிறது' என்றே சொல்லவேண்டும். ஆகையால் எந்தவிதம் சொல்லப்பட்டாலும் அஞ்ஞானம் தான் அதற்கு காரணம் என்று சொல்லவேண்டும். மேலும் ஆவரணம் என்பதும் விக்ஷேபம் என்பதும் ஸமான அதிகரணத்தில் தான் ஏற்படவேண்டும். எந்த வஸ்துவை மறைக்கின்றதோ அந்த வஸ்துவையே வேறென்ருக தோற்றுவிக்கிறது என்றே சொல்லவேண்டும்.

அமூர்த்தமான ஆத்மஸ்வரூபம் அஞ்ஞானத்திஞல் தான் ஆவரணம் செய்யப் படுவதாகச் சொல்லவேண்டுமே தவிர மூர்த்தமான த்ரவ்யங்கள் ஒன்றை ஒன்று மறைப்பது போல் மறைப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் நிரவயவமான ஆத்மவஸ்துவானது எந்த ஒரு மூர்த்தமான த்ரவ்யத்திஞலோ குணத்திஞலோ மறைக்கப்படுவதாகச்சொல்லமுடியாது. அதனுல் ஆத்மஸ்வரூபம் அஞ்ஞானத்திஞல் தான் மறைக்கப்படுகிறது என்பது சித்திக்கின்றது. மேலும் அஞ்ஞானம் என்பது எப்படி துர்நிரூபமோ அதுபோல், அதன் கார்யமான ஆவரணம்,

விக்ஷேபம் என்பதும் துர்நிரூபம் என்பதால் உண்மையில் ஆத்ம ஸ்வரூபம் மறைக்கப் படுவதாகவும் சொல்லமுடியாது. அதனுல் ஆச்ரயமான ஆத்மஸ்வரூபத்திற்கு அஞ்ஞானம் தீங்கு செய்கிறது என்று சொல்லப்படுவதில் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை.

ஆகையால் அஞ்ஞானம் என்பது பாவரூபமென்றும் அந்த அஞ்ஞானம் ஆத்மாவையே ஆச்ரயித்து அதையே விஷயமாகக் கொண்டிருக்கிறது என்றும் சொல்லப்படுவதில் எவ்விதமான ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**22. அவதாரிகை :**

**பூர்வ :** ஸ்வப்ரகாசமாய், ஸர்வதாப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற ஆத்மஸ்வரூபம் என்பது ஞான அபாவரூபமான அஞ்ஞானத்தினுல் ஆவரணம் செய்யப்படுகின்றதால், ஜீவஜகத் முதலான பேதங்கள் தோற்றுவிக்கப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஆகையால் இவ்வித கல்பனைக்கு தேவையே இல்லை.

அதனுல், ப்ரஹ்மமென்பது ஏகமாக இருந்தாலும் அனேகாத்மகமாக, பேதாபேத ரூபமாக பரிணுமத்தை அடைகிறது என்று ஒத்துக்கொண்டு, ஜகத் முதலானவைகளும் ஸத்யமென்று சொல்லப்படும் பாஸ்கர மதஸ்த்தர்களின் கொள்கையை ஒத்துக்கொள்ளலாமே?

**சித்தா :** அவ்விதம் ஒப்புக் கொள்ளமுடியாது. ஏனெனில் நிரவயவமாக, கூடஸ்த்தமாக இருக்கின்ற ப்ரஹ்மமானது அஞ்ஞான மூலமாக பரிணுமத்தை அடைவதாக ஒப்புக் கொள்ளப்படலாமேயன்றி, வேறு எந்த முறையிலும் ப்ரஹ்மமானது ஜகத்தாக பரிணுமத்தை அடைவதாகச்சொல்லமுடியாது. அஞ்ஞானத்வாரா பரிணுமம் சொல்லப் படுமானுல், எங்கள் சித்தாந்தத்தையே ஒப்புக்கொண்டதாக ஆகிறது. ஆகையால் அகண்டமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் பரிச்சின்னமான இந்த ஜகத்தோற்றம் அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

प्रत्यक्षलिङ्गवचनानि हि दर्शयन्ति निर्दुःखनित्यसुखविग्रहतां प्रतीचः ।
निर्दुःखनित्यसुखविग्रहभूम्नि नास्मिन् संभाव्यते दृशि पुरोदितमल्परूपम् ॥

**ச்லோகார்த்தம :** ப்ரத்யக்ஷம் அனுமானம், ஆகமம், என்றப்ரமாணங்கள் எல்லாம் ப்ரத்யகாத்மா, துக்கமற்ற நித்யமான சுகஸ்வரூபம் என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் சுகஸ்வரூபமாக இருக்கின்ற த்ருக்ஸ்வரூபத்தில் அதற்கு விபரீதமாக துக்கித்வம்முதலான தன்மைகளும், எதிரே அறியப்படும் பரிச்சின்னமான ஜகத் முதலானவைகளும் பரமார்த்தமாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ஆத்மா நித்ய சுகஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷம் அனுமானம், ஆகமம் என்ற ப்ரமாணங்களால் அறியப்படுகிறது. ஆத்மா சுகஸ்வரூபம் என்பதாலேயே அபரிச்சின்னம் என்பதையும், ச்ருதியானது 'ந அல்பே சுகமஸ்தி' என்றும், 'யோ வை பூமா தத் சுகம்' என்றும் தெரிவிக்கின்றது. இந்தவிதம் வ்யாபகமாகவும் ஸ்வப்ரகாச ஸ்வரூபமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில் ஜீவத்வம் முதலான பரிச்சின்ன ரூபத்வம் உண்மையில் இருக்கமுடியாது. ஆகையால் இவையெல்லாம் ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்றும் இவ்வித அத்யாஸம் ஏற்படுவதற்கு, அநிர்வசனீயமான அஞ்ஞானம் காரணம் என்றும் சொல்லப்படுகிறது.

அஞ்ஞானம் தான் காரணம் என்பதில் என்ன ப்ரமாணம்? என்ருல், அகண்ட ஆனந்த கூடஸ்த்தஸ்வரூபம் ஆத்மா என்பது, ப்ரத்யக்ஷம் அனுமானம் ஆகமம் என்ற மூன்று

ப்ரமாணங்களாலும் அறியப்படுகிறது என்பதை மேல் வரும் ச்லோகங்களிஞல் விளக்கப்படுகிறது.

ஆகவே ஸர்வத்திற்கும் சாக்ஷியாக இருக்கின்ற சைதன்யஸ்வரூபத்தில் அதற்கு விபரீதமான தன்மையிலுள்ள ஜகத் முதலானவைகள் தோன்றுவதற்கு அஞ்ஞானத்தையன்றி வேறு எதுவும் காரணமாக இருக்கமுடியாது என்பதை மேலே நிரூபணம் செய்யப்படுகிறது.

**23. அவதாரிகை :**

ஆத்மா சுகஸ்வரூபம் என்பது, ப்ரத்யக்ஷயத்திஞல் எப்படி சித்திக்கின்றது? என்ருல்,

**ச்லோகம் :**

**प्राज्ञे सुखं समनुभूय समुत्थितः सन् सर्वप्रकारविषयप्रतिपत्तिशून्ये ।**
**सुप्तोऽहमत्र सुखमित्यनुसंदधानः सर्वोऽपि जन्तुरवगच्छति तस्य सौख्यम् ।।**

**ச்லோகார்த்தம் :** சுஷுப்தி அவஸ்தையில் எந்த விதமான விஷய ஞானமும் இல்லாமலிருந்தும் சுகமாக இருந்தேன் என்று ப்ராஞ்ஞனுக்கு சுகானுபவம் இருந்ததாக சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் ஸர்வஜீவராசிகளுக்கும் அனுபவித்த சுகம் அறியப் படுகின்றதால், ஆத்மா சுகஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகின்றது.

**வ்யாக்யானம் :** சுஷுப்தியவஸ்தையில் இருக்கின்ற, ப்ராஞ்ஞன் எவ்வித கலக்கமுமின்றி சுகத்தை அனுபவித்ததாக, எழுந்தவுடன் சுகமாக தூங்கினேன் என்று தெரிவிக்கிருன். சுஷுப்தி நிலேயில் எந்தவிதமான விஷய விஞ்ஞானமும் இல்லே. சுகானுபவம் மட்டுமே இருந்ததாலும் கேவல ஆத்மா பூர்ண சுகஸ்வரூபத்தில் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது என்று அறியப்படுகிறது. இவ்விதம் பூர்ணஸ்வரூபத்தில் ப்ரகாசித்துக் கொண்டிருந்தும், அஞ்ஞானத்திஞல் ஸ்வரூபம் ஆவ்ருதமாக இருந்ததால், அந்த சுஷுப்தி நிலையில், அனுபவிக்கப்பட்ட சுகம் ஆத்ம சுகந்தான் என்று அறிந்து கொள்ளமுடியவில்லை. ஆஞல் எழுந்தவுடன் சுகத்தின் அனுபவம் பராமர்ஸம் செய்யப்படுவதால் ஆத்மா சுகஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது.

ஸர்வபௌதிகப்ரபஞ்சமும் சுஷுப்தி அவஸ்த்தையில் லயத்தை அடைகின்றதால், சுஷுப்தி நிலையில் எவ்வித விஷய சுகமும் ஏற்படமுடியாது. அதஞல் ஆத்மசுகமே அனுவிக்கப்பட்டது, என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** 'சுகமஹம் அஸ்வாப்ஸம்' என்று அனுஸந்தானம் ஏற்படுகிறது என்பதற்காக, சுகத்தை அனுபவித்தான் என்று ஏன் சொல்லவேண்டும்? துக்கத்தை அனுபவித்தேன் என்ற ஞானம் இல்லாததால், சுகத்தை அனுபவித்தாகச் சொல்லலாமே? (துக்கானுபவ அபாவ ஞானம்).

**சித்தா :** ஸகல ஜீவராசிகளுக்கும், சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன், சுகமாக இருந்தேன் என்ற அனுபவம் தான் ஏற்படுகிறதேயன்றி இதுவரை துக்க அனுபவமில்லை என்று யாருக்கும் அனுமானத்திஞல் அறியப்படவில்லே. மேலும் சுஷுப்தியிலிருந்து விழிப்பு ஏற்படுகின்றபோது, முதலில் சைதன்யத்தின் ப்ரதிபலனம் அவித்யையில் சூக்ஷ்மமாக ஏற்படுகிறது. இதையே சிதாபாஸன் என்று சொல்லப்படுகிறது. அதன் பிறகு, இந்த சிதாபாஸ சைதன்யமானது. ஸ்தூலமான ப்ராணன் புத்தி மனஸ் இந்த்ரியம் சரீரம் இவைகளில் ஸம்பந்தப்பட்டு சக்ஷுஸ் முதலான இந்த்ரியங்கள் மூலம் அந்த:கரணவ்ருத்தியானது விஷயா காரமாக ஆகின்ற நிலே எதுவோ அந்த நிலேயைத்தான் விழிப்பு நிலே என்று சொல்கிருேம். இந்தவிதம் விழிப்பு என்ற ஜாக்ரத் அவஸ்தா ஏற்பட்டவுடனேயே எவ்வித காலதாமதமும்

இன்றி, நான் சுகமாகத் தூங்கினேன் என்று, அனுபவித்த சுகம் அனுசந்தானம் செய்யப் படுகிறது. இந்தவிதம் அனுபவித்த சுகமானது பராமர்ஸம் செய்யப்படுவதால் துக்க அபாவத்தை அனுமானம் செய்கிறுன் என்று சொல்வது பொருந்தாது.

**பூர்வ :** துக்கம் இருந்திருந்திருந்தால் துக்கம் இருந்தது என்ற ஸ்ம்ருதி ஏற்பட்டிருக்கும் அவ்விதம் ஸ்ம்ருதி ஏற்படாததால் துக்க அபாவத்தை அனுமானிக்கிறுன் என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் அனுபவிக்கப்படும் துக்கம் எல்லாமே ஞாபகத்தில் இருக்கவேண்டும் என்ற நியமம் சொல்லமுடியாது. அதனுல் துக்க அனுபவம் இருந்தாலும், ஸ்ம்ருதி இல்லாமல் இருக்கலாம். அதனுல் துக்கானுபவஸ்ம்ருதி இல்லையென்பதற்காக, துக்க அபாவம் அனுமானம் செய்யப்படுகிறது என்று சொல்வதற்கு, ஸ்ம்ருதி என்பது ஹேதுவாக (காரணமாக) ஆகமுடியாது.

**பூர்வ :** ஏற்கனவே எந்த விஷயம் அனுபவிக்கப்படுகிறதோ அந்த விஷய அனுபவமானது சித்தத்தில் ஒரு ஸம்ஸ்க்காரத்தை ஏற்படுத்துவதால் மறுபடி அந்த விஷயத்தின் ஸ்ம்ருதி ஏற்படுவதாகச் சொல்லலாம். உதாரணமாக ஏற்கனவே ஒரு கடமானது ப்ரத்யக்ஷமாக அறியப்பட்டிருந்தால்தான் அந்த கடமானது அந்த: கரணவ்ருத்தியினுல் க்ரஹிக்கப்பட்டு, அதனுல் சித்தத்தில் ஒரு ஸம்ஸ்க்காரம் ஏற்படுகிறது என்றும், அதை இப்போது ஸ்மரிக்கிறுன் என்றும் சொல்லமுடியும். ஆனுல் சுஷுப்தி அனுபவம் என்பது அந்த: கரணவ்ருத்திக்கு விஷயமில்லை. சாக்ஷியினுல் தான் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. சாக்ஷியென்பது நித்யமானதால் நித்யமானசாக்ஷி அனுபவத்திற்கு நாசமில்லை என்று சொல்லவேண்டும். அனுபவத்திற்கு நாசமில்லையென்றுல், ஸம்ஸ்க்காரம் ஏற்படாது. ஸம்ஸ்க்காரமே இல்லையென்றுல் அனுபவித்த சுகத்தை ஸ்மரிக்கிறுன் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் சுகமஹமப்ஸ்வாப்ஸம் நகிஞ்சித் அவேதிஷம் என்று ஒன்றுமே அறியாமல் சுகமாக தூங்கினேன் என்று எல்லோருக்கும் பராமர்ஸம் ஏற்படுவதால் சுகானுபவம், அஞ்ஞான அனுபவம் இரண்டும், சாக்ஷாத் அனுபவிக்கப்பட்டது என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். இந்த அனுபவம் கேவல சாக்ஷி அனுபவந்தான் என்பது சொல்லத்தேவையில்லை. சுஷுப்திநிலையில் அவித்யையென்பது ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் தாரதம்யமின்றி ஸமமான நிலையில் இருக்கின்றதால் அவித்யா பரிணுமம் ஏற்படுவதில்லை. ஆயினும் சுகானுபவமும் அஞ்ஞான அனுபவமும் ஏற்படுகின்றதால், அவித்யாவ்ருத்தி சூக்ஷ்மமாக இருந்தது என்பதை அனுபவத்தைக்கொண்டே ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஆகவே, கேவல சாக்ஷி அனுபவம் என்று சொல்லப்பட்ட போதிலும் சாக்ஷிக்கு நாசம் என்பது இல்லாததால், அவித்யா அவஸ்த்தையில் ஏற்பட்ட இந்த அனுபவத்தை, சாக்ஷிக்கு ஏற்பட்ட அனுபவம் என்று உபசாராத் சொல்லப்படுகிறது. ஆகவே சூக்ஷ்மமான அவித்யா வ்ருத்தியினுல் ஏற்பட்ட சுகானுபவஸ்ம்ருதி ஏற்படலாம். இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**பூர்வ :** அஞ்ஞானத்துடன் கூடி இருந்தவன் தான் சுகத்தை அனுபவித்தான் என்று சொல்லப்படுமானுல், எழுந்தவுடன் அந்த:கரணத்துடன் கூடினவனுக இருக்கின்ற போது அஞ்ஞானதசையில் ஏற்பட்ட அனுபவத்தை எப்படி ஸ்மரிக்க முடியும்?

**சித்தா :** அஞ்ஞானத்தைக்காட்டிலும், அந்த:கரணம் என்பது வேறல்ல. அந்த:கரணத்தின் சூக்ஷ்மாவஸ்தையைத்தான் அஞ்ஞான அவஸ்த்தை என்று சொல்லப்படுவதால், அனுபவித்தவன் வேறு, ஸ்மரிப்பவன் வேறு என்று சொல்லமுடியாது. ஆகவே, சுஷுப்தியில் அனுபவிக்கப்படும் சுகம், ஆத்மசுகந்தான் என்பதால், ஆத்மா சுகஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இந்தவிதம் சுஷுப்தி அனுபவம் என்பது ஸர்வஜனப்ரஸித்தம் என்பதையும் "ப்ராஞ்ஞே சுகம் ஸமனுபூய ஸமுத்தித: ஸன் ஸர்வோऽபி ஜந்து: அஹம் அத்ர சுகயதா ஸ்யாத்" என்று சொல்லப்படுவதாலும் ஸ்வரூபானந்த சுகத்தை எவ்வித தடையுமின்றி சாக்ஷாத் அனுபவிக்கின்றுன் என்றே சொல்லவேண்டும் ஆகவே, அஞ்ஞானம் என்ற உபாதி சுஷுப்தி அவஸ்த்தையில் இருந்தபோதிலும் சச்சிதானந்த லக்ஷணஸ்வரூபமாகவே சுகானுபவம் ஏற்படுகிறது.

**பூர்வ :** சுஷுப்தி நிலையில் ஸத்ஸ்வரூபத்தில் லயத்தை அடைந்து எதுவுமே அறியாமல் இருக்கிறுன் என்று ச்ருதி தெரிவிக்கின்றதால் ஆனந்தத்தை அனுபவிப்பதாக எப்படிச் சொல்வது?

**சித்தா :** சுஷுப்தியில் ஸத்ஸ்வரூபத்தில் லயத்தை அடைகிறுன் என்று தெரிவிப்பதற்கு காரணம் என்னவென்றுல், இந்த சுகம் மோக்ஷ சுகமில்லை என்றும், அஞ்ஞானத்திஞல் ஆவரணம் இல்லாத நிலை எதுவோ அதுவே (மோக்ஷம்) முக்தி நிலை என்று தெரிவிக்கிறதற்காகச் சொல்லப்படுகிறது. ஆகவே, சுஷுப்தி நிலையில் விக்ஷேபம் இல்லை என்பதால் சுகம் அனுபவிக்கப்படுகிறது. விக்ஷேபம் இருக்குமாஞல் சுகானுபவம் இருக்க முடியாது. ஆத்மா விக்ஷேபரூபேண இல்லையென்பதையே "ஸதி ஸம்பத்ய ந விது: ஸதி ஸம்பத்யா மஹே" (சா. 6.9.2) என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது.

**பூர்வ :** ஜாக்ரத் காலத்தில் எப்படி விஷய சுகத்தை அனுபவிக்கின்றுன் என்று சொல்லப்படுகிறதோ, அதுபோல் சுஷுப்தி காலத்திலும் அனுபவிக்கிறுன் என்று சொல்லாமல் ஸ்வரூப சுகத்தை அனுபவிக்கின்றுன் என்று ஏன் சொல்லவேண்டும்?

**சித்தா :** ஜாக்ரத்காலத்தில், சில விஷயம் பரோக்ஷமாகவும், சிலவிஷயம் அபரோக்ஷமாகவும் அறியப்படுகிறது என்றும், அனுபவிக்கப்படுகிறது என்றும், அதஞல் சில விஷயங்களின் ஸம்ஸ்க்காரத்திஞல் ஸ்ம்ருதியும் ஏற்படுவதாகச் சொல்லலாம். அதுபோல் சுஷுப்தியில் ஏதாவது ஒரு விஷயஞானமோ அல்லது விஷய அனுபவமோ ஏற்படுவதாகச்சொல்லமுடியாது. ஆகையால் சுஷுப்தி நிலையில் விஷயானந்தத்தை அனுபவிக்கிறுன் என்றோ அதை ஸ்மரிக்கின்றுன் என்றோ எப்படிச்சொல்ல முடியும்? ஆகவே, சுஷுப்தியில் எந்த விஷய சுகமும் இல்லையென்பதால் பாரிசேஷாத் ஆத்ம சுகத்தை அனுபவிக்கிறுன் என்றே சொல்லவேண்டும்.

இதே போல் சுஷுப்தியில் துக்கத்தையோ துக்க அபாவத்தையோ அனுபவிக்கிறுன் என்று சொல்வதற்குரிய விசேஷ விஞ்ஞான வ்ருத்தி ஏதுமில்லாததால் துக்க அபாவம் ஸ்மரிக்கிப்படுகிறது என்று சொல்வதற்கே முடியாது. சுஷுப்தியில் பாவவிஷயமாகவோ அபாவ விஷயமாகவோ ஞானம் ஏற்படுவதாகச் சொல்லப்படுமாஞல் அதை சுஷுப்தி அவஸ்தை என்றே சொல்லமுடியாது. அதஞல் சுஷுப்தியில் ஸ்வரூபசுகந்தான் அனுபவிக்கப்படுகிறது என்பது சித்திக்கின்றதால் ஆத்மா சுகஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது.

**24. அவதாரிகை :**

அனுமானத்தினுலும் ஆத்மா சுகஸ்வரூபம் என்பது சித்திக்கிறது.

**ச்லோகம் :**

**सर्वं यदर्थमिह वस्तु यदस्ति किञ्चित् पारार्थ्यमुज्झति च यन्निजसत्तयैव ।**
**तद्वर्णयन्ति हि सुखं सुखलक्षणज्ञास्तत्प्रत्यगात्मनि समं सुखताऽस्य तस्मात् ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரபஞ்சத்திலுள்ள ஸர்வ வஸ்துக்களும் எதற்காக இருக்கின்றதோ, எது மற்றதற்காக இல்லாமல் தனக்காகவே இருக்கிறதோ அதுவே சுகம் என்று, சுகம் என்பதின் லக்ஷணத்தை அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணம் ப்ரத்யகாத்மாவில் இருக்கின்றதால் ப்ரத்யகாத்மாவே சுகஸ்வரூபம் என்பது சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** இந்த ஜகத்தில் உண்டாகின்ற வஸ்துக்களில் 'அஸ்தி' என்ற இரண்டாவது பாவவிகாரத்தையுடைய அனுத்மவஸ்துக்கள் எல்லாம் எதற்காக இருக்கின்றதோ அதுவே சுகம். ஸர்வஸ்துக்களையும் தனக்கு அங்கமாகக்கொண்டு, தான் அங்கியாக இருப்பது எதுவோ அதுவே சுகம்.

**பூர்வ :** இந்தவிதம் சுகத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுமானுல், அந்த:கரணத்தில் ஸத்வாகார வ்ருத்தியில் சைதன்யம் ப்ரதிபலிக்கின்றபோது சுகம் அறியப்படுகின்றதால் அதிவ்யாப்தி என்றதோஷம் ஸம்பவிக்கின்றதே? சுகாகார வ்ருத்தியை வேறு எதற்கும் அங்கமாகச்சொல்லமுடியாதே?

**சித்தா :** சுகத்தின் அபிவ்யஞ்சகத்திற்காகவே வ்ருத்தி தேவைப்படுகிறது. (வ்ருத்தி இல்லாமல் சுகம் என்பது வெளிப்படமுடியாது). அதனுல் கேவல வ்ருத்தியென்பது சுகமில்லை. சுகத்தை வெளிப்படுத்தவில்லையென்ருல், வ்ருத்தியென்பதே தேவையில்லை. அதனுல் சுகத்திற்கு சொல்லப்பட்ட லக்ஷணம் சுகாகாரவ்ருத்திக்கு பொருந்தாது. ஸர்வத்திற்கும் ஸேஷியாக (அங்கி) இருப்பது எதுவோ அதுவே சுகம்.

**பூர்வ :** 'ஸர்வம்' என்ற சப்தத்தினுல் சுகம் என்பதும் சேர்த்துச் சொல்லப்பட்டதாகத் தானே ஆகிறது?

**சித்தா :** சுகத்திற்கே, சுகம் என்பது ஸேஷியாக இருக்கமுடியாது என்பதால் சுகத்தையன்றி வேருக இருக்கின்ற அனுத்மவஸ்துக்களையே சுகார்த்தம் என்று ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. சுகம் என்பது சுகத்திற்காகவே என்று, தன் ஸ்வரூபஸத்தையினுலேயே அன்யார்த்தம் இல்லையென்று மற்றுமொரு லக்ஷணமும் சுகத்திற்குச் சொல்லப்படுகிறது.

'ஆனந்தாத்ஹி ஏவகலு இமானி பூதானி ஜாயந்தே என்று சொல்லப்படும் ச்ருதி வாக்யமானது, ஜகத் சிருஷ்டிக்கு ஆனந்தம் என்பதை காரணமாகத் தெரிவிக்கின்றது. அதாவது ஜகத் உற்பத்திக்காக ஆனந்தம் தேவைப்படுகின்றதால், ஆனந்தம் என்பதை அங்கம் என்று சொல்லலாமே? அதனுல் ஆனந்தம் அங்கி என்று சொல்வது அஸம்பாவிதம் என்று அஸம்பவதோஷம் ஏற்படலாம்.

இவ்வித அஸம்பவ தோஷமென்பதும் ஏற்படாமல் இருப்பதற்காக 'ஸ்வரூபே' என்ற விசேஷணம் ச்லோகத்தில் சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே, ஸ்வஸத்தையினுலும் சுகஸ்வரூபத்திற்கு அங்கத்வம் சொல்லமுடியாது. நிர்விசேஷ சைதன்யத்தில் சிருஷ்டியென்பது அஞ்ஞானத்தின் மூலமாகவே ஏற்படுவதால்,

அவித்யா மூலமாக அங்கத்வம் சொல்லலாமே தவிர ஸ்வரூபேண அங்கத்வம் சொல்ல முடியாது என்பதால் அஸம்பவதோஷம் என்பதும் ஸம்பவிக்காது.

ஸர்வவஸ்துக்களிலும் சுகம் என்பது ஏற்படுகிறது. அதுபோல் 'சுகம்' என்பதிலிருந்து வேறு எதுவும் உண்டாகிறதில்லை. சுகம் என்பது சுகமாக இருக்கின்றதாலேயே அதை விரும்பப்படுகிறது. அதனுல் சுகம் அன்யார்த்தமில்லை.

உதாரணமாக, ப்ரயாஜாதிகளுக்கு தர்ஸபூர்ணமாஸம் என்ற கர்மாவில் உபயோகம் என்று சொல்வது போல், சுகம் என்பது வேறேன்றுக்காக உபயோகம் என்பதாக எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை. மேலும் சுகம் என்பதே புருஷார்த்தமாக இருக்கின்றதால், அந்த சுகம் வேறு ஒன்றுக்கு உபகாரகம் என்றே, அங்கம் என்றே சொல்லமுடியாது. சுகம் என்பது எந்தவ்ருத்தியில் அபிவ்யஞ்சகமாகின்றதோ அந்தவ்ருத்திக்குத்தான் அன்யாங்கத்வம் சொல்லலாமேயன்றி வ்ருத்திப்ரதிபலித சுகத்திற்கு அன்யாங்கத்வம் சொல்லமுடியாது. ஆகவே, ஸர்வத்திற்கும் அங்கியாக இருப்பது எதுவோ அதுவே சுகம். இந்த லக்ஷணம் ப்ரத்யகாத்மாவில் பூர்ணமாக இருப்பதால் ஆத்மாவே சுகஸ்வரூபம் என்பது சித்திக்கின்றது.

அனுமானம் ஆத்மாவே சுகஸ்வரூபம் (ஸாத்யம்) ஸ்வஸத்தையா = தான் இருப்பதனுலேயே, ஸேஷித்வாத் (மற்ற வஸ்துக்களுக்குப் ப்ரதானமாக இருக்கின்றதால்) (ஹேது) அல்லது, அனன்யார்த்தமாக இருப்பதால் (ஹேது), எப்படி கடாதிகள், தான் இருப்பதனுலேயே அன்யத்திற்கு ஸேஷமாக இருக்கிறதோ அதுபோல் சுகம் என்பது அன்யஸேஷமாக இல்லாததால் என்று வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் ஆத்மா சுகஸ்வரூபம் என்பது சித்திக்கின்றது. ஆகவே ஆத்மாவே சுகம், சுகமே ஆத்மா என்பது அனுமானத்தினுலும் சித்திக்கின்றது.

**பூர்வ :** எஜமானனுக்கு வேலைக்காரன், மனைவி புத்ரன் முதலானவர்களால் சுகம் ஏற்படுகின்றதால் அவர்களை சுகஸாதனம் என்று சொல்கிறேம். அதேபோல் வேலைக்காரன், மனைவி, முதலானேர்களுக்கும் யஜமானன் சுகஸாதனமாக ஆகின்றதால் யஜமானனும் அங்கம் என்று சொல்ல நேரிடுகிறதே?

**சித்தா :** சுகம் என்பதுடன், யஜமானன் பார்யை ப்ருத்யன் என்று எந்த ஒரு உபாதியைச் சேர்த்தாலும் அவைக்ளில் எல்லாம் சுகத்திற்குச் சொல்லப்பட்ட லக்ஷணம் பொருந்தாது. சுகம் என்பது எப்படி 'சுகம்' என்பதனுலேயே ப்ரீதிக்கு விஷயமாகின்றதோ அதுபோல் ப்ருத்யன், பார்யை, என்பதனுலேயே, ப்ரீதிக்கு விஷயமாகின்றது என்று சொல்லமுடியாது.

தன்னுடைய சுகத்திற்கு விஷயமாகிறது என்பதாலேயே அவைகளில் ப்ரீதி ஏற்படுகிறது. அதேபோல் புத்ரமித்ராதிகளில் ஏற்படும் சுகமும், தன்னுடைய சுகஸாதனமான உபாதியை அபேக்ஷித்தே ஏற்படுவதால் புத்ராதி சுகங்களும் சுகஸேஷம் என்றே சொல்ல வேண்டும். இந்த விதம் புத்ராதிகளை வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே ச்லோகத்தில் 'நிஜஸத்தையா' என்ற விசேஷணத்துடன் பெரியோர்களால் சுகலக்ஷணம் சொல்லப் பட்டிருக்கிறது.

ஆகவே, நிருபாதிக ப்ரீதிவிஷயத்வம் என்பது சுகம் என்பதில்தான் இருக்கின்றது. இந்தலக்ஷணம் ப்ரத்யகாத்மாவில் இருக்கின்றதால், ப்ரத்யகாத்மாவே சுகம் தன்னிடத்தில் இருக்கின்ற ப்ரீதி தனக்காகவேயன்றி மற்றவைகளுக்காக அல்ல என்பதால், சுகமே ஸேஷி மற்றதெல்லாம் ஸேஷம் என்று அனுமானத்தினுலும் சித்திக்கிறது என்பதை இதன் மூலம் விளக்கப்பட்டது.

**25. அவதாரிகை :**

இந்த விஷயத்தில், மற்றும் ஒரு அனுமானமும் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रेमाऽनुपाधिरसुखात्मनि नोपलब्धः स प्रत्यगात्मनि कृमेरपि नित्यसिद्धः ।
प्रेयःश्रुतेरपि ततः सुखतानुमानं नैय्यायिकोऽपि न दृगात्मनि निह्नुवीत ॥

**ச்லோகார்த்தம் :** நிருபாதிக ப்ரேமை என்பது, சுகஸ்வரூபமாக இல்லாத (கௌணாத்மா) ஆத்மாவில் காணப்படுவதில்லை. இவ்விதமான ப்ரேமையென்பது க்ருமிகீடாதிகளுக்கும் ப்ரத்யகாத்மாவில், நித்யமாக இருக்கின்றதாக அறியப்படுகின்றது என்ற காரணத்தினாலும் 'ப்ரேயஸ்' என்ற ச்ருதிவசனத்தினாலும் த்ருக்ஸ்வரூபமான ப்ரத்யகாத்மாவே, சுகஸ்வரூபம் என்ற அனுமானத்தை நையாயிகனாலும் மறுக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** 'ஆத்மா சுகஸ்வரூபம், நிருபாதிக ப்ரேமாஸ்பதமாக இருப்பதால், எந்தக் காரணத்தினால், எவையெல்லாம் நிருபாதிக ப்ரீதிக்கு விஷயமாக இல்லையோ, அவையெல்லாம் சுகஸ்வரூபமாக இல்லை, புத்ராதிகள் போல, என்று அனுமானத்தினால் விளக்கப்படுகிறது.

முதலில், புத்ராதிகளில் நிருபாதிகப்ரேமவிஷயத்வம் இல்லையென்பதை, வ்யதிரேக வ்யாப்தியைக் கொண்டு சித்தம் செய்யப்படுகிறது.

அனாத்மாவான புத்ர மித்ராதிகளில், ஆத்மாவிற்கு அனுகூலமாக இருந்தால் தான், ப்ரேமை, இல்லாவிடில் ப்ரேமை ஏற்படுவதில்லையென்பதால், நிருபாதிக ப்ரேமவிஷயத்வம் புத்ராதிகளில் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**பூர்வ :** ஆத்மாவில், நிருபாதிகப்ரேம விஷயத்வம் என்பது இருக்கிறதா? என்று நிரூபித்தால்தானே, பக்ஷதர்மம் என்பது சித்திக்கும்?

**சித்தா :** நிருபாதிக ப்ரேம விஷயத்வம் என்பது, ப்ரத்யகாத்மஸ்வரூபத்தில் இருக்கின்றதால்தான் க்ருமிகீடாதிகளுக்கும் 'மா ந பூவம் பூயாஸம்' என்று, நான் ஒரு போதும் இல்லாமல் இருக்கக்கூடாது, எப்போதும் நான் இருக்கவேண்டும், எனக்கு எந்தவிதமான துக்கமும் ஏற்படக்கூடாது என்று விரும்புகின்றது. அதனால் தான் க்ருமிகீடாதிகள்கூட, மரத்தின் நிழலைத்தேடி வஸிக்கின்றது. இதையே ச்ருதிவாக்யமும் 'ப்ரேய: புத்ராத்' என்று தெரிவிக்கின்றது.

**பூர்வ :** ஆத்மா என்பது சித்தவஸ்துவானதால், அதில் எப்படி ப்ரேமை ஏற்படமுடியும்? லோகத்தில் சித்தமாகவேண்டிய (ஸாத்யமான) வஸ்துவில்தானே, இச்சாத்மகமான ப்ரேமை ஏற்படும்?

**சித்தா :** ப்ரேமை என்பதும், இச்சையென்பதும் ஒன்றல்ல. இச்சையென்பது ஸாத்யமான வஸ்துவில் தான் ஏற்படும். ஆனால் ப்ரேமை என்பது சித்தமான வஸ்துவிலும் இருக்கலாம், ஸாத்யமான வஸ்துவிலும் இருக்கலாம். லோகத்தில் தனம் என்பது சித்தவஸ்துதான் அதிலும் எல்லோருக்கும் ப்ரேமை இருக்கின்றது. ஸ்வர்க்கம் என்பது சித்தமில்லை. ஆனால் ஸாத்யமாக இருந்தாலும் அதிலும் ப்ரேமை இருக்கலாம், அதை அடைவதற்கு இச்சையும் இருக்கலாம். ஆகவே ஆத்மா சுகஸ்வரூபம் என்பதை, ஆத்மாவை ஜடமென்றும் அசுகஸ்வரூபமென்றும் சொல்கின்ற நையாயிகனும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

அதாவது, ஆத்மாவில், சுகம் என்பது குணமாக இருக்கின்றதால் ஆத்மாவே சுகஸ்வரூபம் என்று சொல்லமுடியாது (என்று நையாயிகர்களால் சொல்லப்படுகிறது)

ஏனெனில் எல்லோரும் 'அஹம் சுகீ' என்றே சொல்லிகிருர்களேயன்றி 'அஹம் சுகம்' என்று சொல்வதில்லை. அதனுல் எல்லோருடைய அனுபவத்திற்கும் விரோதமாக, 'சுகஸ்வரூபம் ஆத்மா' என்று சொல்வது சரியல்லவென்று நையாயிகர்ளால் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

**சித்தா :** நிருபாதிகப்ரேமை என்ருல், எவ்வித காரணமுமின்றி ஏற்படும் ப்ரேமை. இந்தலக்ஷணம் அசேதன வஸ்துக்களில் அறியப்படவில்லை. ஆத்மாவிலும் சுகத்திலும் இந்தலக்ஷணம் அறியப்படுவதால் ஆத்மாவே சுகம். மேலும், சுகம் என்பது ஸ்வயமே, சைதன்யத்தைப்போல் ப்ரகாசிக்கின்றது. அசேதனமானத்ரவ்யம் போலவோ அல்லது குணத்தைப்போலவோ சுகம் என்பது ப்ரகாசிக்காமல் இல்லை.

**பூர்வ :** சுகம் இருக்கிறது என்று ஞானத்தினுல் தான் ப்ரகாசிக்கின்றது. அதனுல், சைதன்யத்தின் குணம் சுகம் என்று சொல்லலாமே? மேலும், சுகம் என்பதும் ஞானம் என்பதும் ஆத்மஸ்வரூபந்தான் என்று சொல்லும் பக்ஷத்தில், ஞானம் என்பதும், சுகம் என்பதும் அவ்வப்போது வந்து போகின்றதால் (உற்பத்தி, விநாசம் உடையதாக இருப்பதால்) அநித்யமான ஞானம், சுகம் இரண்டிற்கும், நித்யமான ஆத்மஸ்வரூபத்வம் எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** சுகம் என்பதும், ஞானம் என்பதும், நித்யமான் ஆத்ம ஸ்வரூபந்தான். ஆனுல் அந்த:கரணவ்ருத்தி மூலமாகத்தான் ஞானம், சுகம் என்பதெல்லாம் அபிவ்யஞ்சக மாகின்றதால், புத்திவ்ருத்தி ஏற்படுகின்றபோது தான் சுகம் இருப்பதாகவும், ஞானம் இருப்பதாகவும் அறியப்படுகிறது. அதனுல் அந்த:கரணவ்ருத்திக்குத்தான் அநித்யத்வம் சொல்லமுடியும். சுகம் என்பதும், ஞானம் என்பதும், நித்யம் என்பதால் ஆத்மா சுகஸ்வரூபம் என்றே சித்திக்கின்றது. ஆகவே, த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவே சுகஸ்வரூபம், சித்ஸ்வரூபம், அதுவே ப்ரத்யகாத்மா என்பதை அனுமானத்தினுலும் சாதிக்கப்பட்டதால், அனுமானத்திலும், தர்க்கத்திலும் நிபுணர்களான நையாயிகர்களும் இதை ஒத்துக் கொள்ளத்தான்வேண்டும் என்பதை சித்தம் செய்யப்பட்டதால் ஸாங்க்யர்களால், இது ஒத்துக்கொள்ளப்படவேண்டுமே என்ற ஸங்கைக்கும் இடமில்லை.

**26. அவதாரிகை :**

இந்த விதம் ப்ரத்யக்ஷம் அனுமானம் என்ற ப்ரமாணங்களால் ஆத்மா சுகஸ்வரூபம் என்று எப்படிசித்திக்கின்றதோ அதுபோல், ச்ருதி ப்ரமாணத்தினுலும் ஆத்மாசுகஸ்வரூபம் என்பது சித்திக்கின்றது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** आनन्दविग्रहमपास्तसमस्तदुःखं वस्तुस्वभावपरिवर्जितसर्वभेदम् ।
आत्मानमध्ययनविध्यनुसारिणस्तं प्रत्यक्षतः श्रुतिशिरःसु समामनन्ति ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வதுக்கங்களும் அற்றதான ஆனந்தஸ்வரூபம், ப்ரத்யகாத்மா என்றும், கல்பிக்கப்பட்ட ஸர்வபேதங்களும் அதிஷ்ட்டானஸ்வரூபம் என்றும், ச்ருதி வசனங்களாலும், வேதார்த்தங்களை அறிந்த வித்வான்களாலும் ப்ரத்யக்ஷமாகவே (நேரிடையாகவே) தெரிவிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** "ததேதத்ப்ரேய: புத்ராத்ப்ரேய: வித்தாத்ப்ரேய:" என்ற வாக்யங்களும், 'ஆத்மனஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி' என்ற ப்ரஹதாரண்ய வாக்யங்களாலும் 'விஞ்ஞானம் ஆனந்தம் ப்ரஹ்ம' என்றும், 'ஆனந்தம் ப்ரஹ்மேதிவ்யஜானுத்' என்றும் இது போன்ற எத்தனையோவாக்யங்கள் ஆத்மாசுகஸ்வரூபம் என்று தெரிவிக்கின்றது.

அதுமட்டுமல்ல, ஆத்மாவைத் தவிர, வேறு ஏதாவது ஒன்றை ப்ரியம் என்று நினைப்பானாகில், அந்தவஸ்து அவனை (அழவே செய்கின்றது) துக்கத்தை அடையச் செய்கிறது. ஏனெனில் அனாத்மாக்கள் எல்லாமே ஒரு ஸமயம் இருந்து ஒரு ஸமயம் பிரியக்கூடியதாக இருக்கின்றது.

ஆகவே ப்ரத்யகாத்மாவே ஆனந்த ஸ்வரூபம் அதுவே விஞ்ஞான ஸ்வரூபம் என்று 'விஞ்ஞானம் ஆனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யம் தெரிவிக்கின்றது. ஸத் என்பதும் சைதன்யம் என்பதும் சுகம் என்பதும் ஒரே ஸ்வரூபமானதால் ஞானம் வேறு ஆனந்தம் வேறு என்றெல்லாம் சொல்வது சரியல்ல.

இந்த விதம் நிர்விசேஷமான, கூடஸ்த்த ஆத்மஸ்வரூபம், சுகஸ்வரூபம், சைதன்ய ஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களால் சித்திக்கின்றதால் இதற்கு விபரீதமாக அறியப்படும் ப்ரபஞ்சம் என்பதெல்லாம், அவித்யாவிலாஸம் என்றே சித்திக்கின்றது.

**27. அவதாரிகை :**

**பூர்வ :** 'அஹம்' என்று ஒரே வஸ்து தான் அறியப்படுகிறதேயன்றி ஆத்மா என்பதில் அஹங்காரம் என்பது அத்யஸ்த்தம் என்று இரண்டு வஸ்துக்கள் இருப்பதாக ஒருவருக்கும் ப்ரதீதி (ஞானம்) ஏற்படாததால் அஹம் என்பதே ஆத்மா என்று அறியப்படுகிறது. அந்த ஆத்மாவில் தான் எல்லோருக்கும் பரமப்ரேமாஸ்பதமான ப்ரீதி விஷயத்வம் இருப்பதாகச்சொல்லப்படவேண்டும். ஆகையால் ஆத்மா என்பது அதிஷ்ட்டானம் என்றும், அதில் அஹம் என்பது அத்யஸ்த்தம் என்றும் இரண்டும் பரஸ்பர அத்யாஸத்தினுல் ஒன்ருகவே அறியப்படுகிறது என்றும் சொல்வதற்குரிய ப்ரமாணமும் இல்லாததால், அஹம் என்பதே ஆத்மா என்று தான் சொல்லவேண்டும்.
இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

**अध्यस्तमल्पवपुरस्य न वास्तवं तत् प्रत्यक्पराग्द्वयमिदं हि परस्परस्मिन् ।**
**अध्यस्ततां प्रति समर्थमबोधमात्रमन्योन्यरूपमिथुनीकरणे निमित्तम् ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மாவில் தோன்றுகின்ற பரிச்சின்னத்வம் முதலான தன்மைகள், அத்யாஸமேயன்றி உண்மையல்ல. ஆத்மா என்பது ப்ரத்யக் வஸ்து. அஹங்காரம் என்பது பராக்வஸ்து. இவ்விதம், ப்ரத்யக்காகவும், பராக்காகவும் இருக்கின்ற இரண்டு வஸ்துக்களுக்கு பரஸ்பரம் அத்யாஸம் ஏற்படுவதற்கு அஞ்ஞானம் ஒன்றே போதுமான காரணம்.

**வ்யாக்யானம் :** சத்சிதானந்த லக்ஷணமான ஆத்மஸ்வரூபம் அறியப்படாமல், அதற்கு விபரீதமான தன்மையில் அஹம் என்பது, அந்த:கரணம் என்ற அஹங்கார உபாதி ஸம்பந்தத்தினுல் பரிச்சின்னஸ்வரூபமாக அறியப்படுகின்றதால், இந்த அஹங்காரம் என்பது ப்ரத்யகாத்மாவில், அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும். எது அந்ருதமோ அது த்ருச்யம், எது த்ருச்யமோ அது அந்ருதமாகத்தான் இருக்கவேண்டும். எது த்ருச்யமோ அது அத்யஸ்த்தம், எது அத்யஸ்த்தமோ அதுவேமித்யை. அதனுல் அஹம் என்பது அறியப்படுவதாலேயே (த்ருச்யமானதால்) அஹம் என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். ப்ரத்யகாத்மாவே அஹம் என்றும், அஹம் என்பதே ப்ரத்யகாத்மா என்றும் 'பரத்ர பரஅவபாஸம்' என்ற அத்யாஸலக்ஷணம் இருக்கின்றதால், அஹம் என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும். (இருக்கின்ற ஒரு வஸ்துவானது,

இருக்கின்றபடி அறியப்படாமல், வேறு ஒரு வஸ்துவாக தோன்றுமானல் அதுவே அத்யாஸம்)

**பூர்வ :** அஹம் என்பதில் தான் எல்லோருக்கும் பரமப்ரீதி இருக்கின்றதால், அஹம் என்பதையே பரமப்ரேமைக்கு விஷயமான ஆத்மா என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. பரமப்ரேமைக்கு விஷயமான ஆத்மஸ்வரூபமே, அஹங்காரத்திற்கு அதிஷ்ட்டானமாக இருக்கின்றதால், அதிஷ்ட்டானத்தில் இருக்கின்ற ப்ரேமை, அதில் அத்யஸ்த்தமான அஹங்காரத்திலும் தோன்றுகிறது. அதனுல் 'அஹம்' என்பதை ப்ரேமாஸ்பதம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** அஹங்காரம் என்பது அத்யஸ்த்தம் என்பதற்காக அதை ஏன் மித்யை என்று சொல்லவேண்டும்? சுக்தியில் உள்ள ரஜதம் போல ஸத்யமென்றே சொல்லலாமே?

**சித்தா :** சுக்தியில் ரஜதம் என்பது அநிர்வசனீயம் = மித்யை என்று கீழேயே நிரூபணம் செய்யப்பட்டதால், சுக்தி ரஜதம் போல் ஸத்யமாக இருக்கட்டுமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல.

**பூர்வ :** இது சுக்தி என்று ஞானம் ஏற்படவேண்டிய இடத்தில், இது ரஜதம் என்று ப்ராந்தி ஞானம் ஏற்படும் ஸ்தலத்தில், இது என்ற அதிஷ்ட்டானும்ஸத்தில் ரஜதம் என்ற ஆரோபிதாம்ஸம் அத்யஸ்த்தம் என்று, அதிஷ்ட்டானும்ஸம் ஒன்று, ஆரோபிதாம்ஸம் ஒன்று, என்று இரண்டு அம்ஸங்கள் அறியப்படுகிறது. இதுபோல் அஹம் என்பதும் அத்யாஸம் என்று சொல்லப்படுமானுல், இந்த இடத்திலும் இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக அறியப்படவேண்டுமே? அவ்விதம் இரண்டு அம்ஸம் இருப்பதாக அறியப்படவில்லை என்பது மட்டுமல்ல, அஹம் என்பது ஏகரூபமாகத்தானே அறியப்படுகிறது? அதனுல் அஹம் என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** அஹம் என்பது ஏகரூபமாகத்தான் அறியப்படுகிறது ஆனுல், 'அஹம்' என்பது என்ன? என்று விசாரிக்கின்ற போது தான், அதில், 'த்ருக்' என்றும் 'த்ருச்யம்' என்றும் இரண்டு அம்ஸங்கள் இருக்கிறது என்று வேறுபடுத்தி அறியமுடியும். த்ருக் என்பது ப்ரத்யக் அம்ஸம், த்ருச்யம், என்பது பராக் அம்ஸம். இதில் இதம் என்ற ரூபமும் அநிதம் என்ற ரூபமும் ஒன்றுடன் ஒன்று கலந்து அக்னியுடன் ஸம்பந்தப்பட்ட இரும்பானது எப்படி ஒன்ருகவே தோன்றுகின்றதோ, அது போல் ஆத்மாவும் அஹங்காரமும் ஒன்ருகவே தோன்றுகிறது. அக்னியென்பதும் இரும்பு என்பதும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட தன்மையில் இருந்தும்கூட (விருத்தமான் தன்மையில்) பிரித்து அறியமுடியாமல் இரண்டும் ஒன்ருகவே எப்படித் தோன்றுகிறதோ அதுபோல் ப்ரத்யக் சைதன்யமும் ஜடமான அஹங்காரமும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட தன்மையில் இருந்தும் தாதாத்ம்ய அத்யாஸத்தினுல் ஒன்ருகவே அறியப்படுகிறது. ஆகவே, ஆத்மாவின் சைதன்ய தன்மை அனுத்மாவான அஹங்காரத்திலும் அஹங்காரத்தின் பரிச்சின்னத்வாதி தன்மைகள் ஆத்மாவிலும் பரஸ்பரம், (காய்ச்சப்பட்ட இரும்பைப்போல்) அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** அத்யஸ்த்தம் என்று சொல்லப்படும் இடங்களில் ஸாத்ருஸ்யம் இருக்கின்றது அதுபோல் ப்ரத்யகாத்மாவிற்கும் அஹங்காரத்திற்கும் என்ன ஸாத்ருச்யம் சொல்லமுடியும்? மேலும் ஆத்மஸ்வரூபம் என்பது சுத்தம். அதில் என்னதோஷத்தினுல் அத்யாஸம் ஏற்படுவதாகச் சொல்லமுடியும்?

ஆகவே ஸாத்ருஸ்யத்தினுலோ, வேறு தோஷத்தினுலோ அத்யாஸம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. அதேபோல், அய:பிண்டமும் அக்னியும் போல் பரஸ்பர அத்யாஸமென்றும் சொல்லமுடியாது. ஏனெனில், அயஸ் என்பதின் தன்மையும் அக்னியென்பதின் தன்மையும், தனித்தனியே அறியப்பட்டிருப்பதால் இரண்டிற்கும் பரஸ்பரம் அத்யாஸம் இருக்கிறதென்று சொல்லமுடியும். அதுபோல் ஆத்மா என்பதையும் அஹங்காரம் என்பதையும் ஒரு போதும் பிரித்து வேருக அறியப்படவில்லையே? அதனுல் இரண்டும் வேறு என்ற அனுபவமே இல்லாததால் ஸம்ஸ்க்கார்மும் ஏற்படாது. அத்யாஸம் ஏற்படுமிடத்தில் பூர்வஸம்ஸ்க்காரம் என்பதையும் ஒரு காரணமாகச் சொல்லப்படுவதால் இந்த இடத்தில் ஆத்மா, அஹங்காரம் இரண்டிற்கும் பூர்வஸம்ஸ்க்காரமும் சொல்லமுடியதாகையால் இரண்டிற்கும் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுவதாகச் சொல்வதற்கு முடியாது.

ஆகவே அத்யாஸத்திற்கு காரணமான ஸாத்ருஸ்யமோ, வேறு தோஷமோ அனுபவமோ இல்லையென்பதால் பூர்வஸம்ஸ்க்காரமும் இருக்க முடியாதாகையால் ஸ்ம்ருதியும் ஏற்படமுடியாது. ஆகவே ஆத்மாவில் அஹங்காரம் அத்யஸ்த்தம் என்று சொல்வது சரியல்ல.

**சித்தா :** இந்த விதமான ஆக்ஷேபம் சரியல்ல. எந்த இடத்தில் அத்யாஸம் ஏற்பட்டாலும் அந்த இடத்தில் ஸாத்ருஸ்யம் முதலான காரணங்கள் இருந்தால் தான் அத்யாஸம் ஏற்படும் என்று நியமமாகச் சொல்லமுடியாது.

ஒரு வஸ்துவானது அதன் உண்மையான ஸ்வரூபம் அறியப்படாமல் வேறு ஒரு வஸ்துவாகத் தோன்றுமிடத்தில், அங்கு உண்மையில் இருக்கின்ற வஸ்துவின் 'இது' என்ற ஸாமான்யாம்ஸம் மட்டும் அறியப்பட்டும், அந்த வஸ்துவின் விசேஷாம்ஸம் அறியப்படாமலும் இருப்பதே, அத்யாஸம் ஏற்படமுக்யகாரணமாக இருக்கிறது. அதனுல் வஸ்துவின் விசேஷாம்ஸம் அறியப்படாததே (அபோதமே) அத்யாஸத்திற்கு போதுமான முக்யகாரணம் என்று சொல்லவேண்டும். அனுபவசித்தமான ஆத்மஸ்வரூபத்தின் விசேஷாம்ஸமான ஸத்சிதானந்தஅகண்டஸ்வரூபம் என்பது அறியப்படாத காரணத்தினுல், அதில் அஹங்காரம் என்பது அத்யஸ்த்தமாகிறதால், ஆரோபிதமான அஹங்காரத்தின், பரிச்சின்னத்வம் முதலான தன்மைகளுடன் கூடினதாக, ஆத்மசைதன்யம் அஹம் என்று அறியப்படுகிறது. இந்தவிதம், ஆத்மஸ்வரூபம் அஹங்காரம் என்ற இரண்டு பதார்த்தங்களும், வேருகவே இருந்தும் இரண்டும் ஒன்று என்று அறியப்படுவதே அர்த்தாத்யாஸம். இவ்விதம் இரண்டும் ஒன்று என்று ஏற்படும் ஞானமே ஞானுத்யாஸம். ஆகவே விஷயமும் அயதார்த்தம். இந்த ஞானமும் அயதார்த்த ஞானம். ஆகையால் 'அஹம்' என்பது அத்யஸ்த்தம் என்றே அறியவேண்டும்.

**பூர்வ :** ஆத்மா என்பதும் அஹங்காரம் என்பதும் இரண்டும் வேறு என்பது உண்மைதான். ஆனுல் இரண்டும் வேறு என்றுக்ரஹிக்கப்படவில்லையென்று சொல்லலாமே? அத்யாஸம் என்று ஏன் சொல்லப்படுகிறது?

**சித்தா :** ஆத்மா அஹங்காரம் என்ற இரண்டும் சேர்ந்து ஒரே வஸ்துவாக அறியப்படுகிறது. அதனுல், அர்த்தாத்யாஸத்தினுலோ ஞானுத்யாஸத்தினுலோ ஆத்மாவின் விசேஷாம்ஸம் அறியப்படவில்லை என்றே சொல்லவேண்டும். அதனுல் ப்ரத்யக்ஸ்வரூபமான ஆத்மாவின் விசேஷாம்ஸமானது அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டு, அந்த:கரணமானது அதன் தர்மங்களுடன் ஆத்மாவில் அத்யஸ்தமாக இருக்கின்றதால் அந்த:கரணத்துடன் கூடிய ஆத்மாவே 'அஹம்' என்று அறியப்படுவதாகச் சொல்லவேண்டுமே தவிர இரண்டும் வேறு என்று க்ரஹிக்கப்படவில்லை என்று சொல்வது சரியல்ல.

ப்ரத்யக்சைதன்யம் என்பதை ஆச்ரயமாகக்கொண்ட இந்த அஞ்ஞானமே, அஹங்கார ரூபமாகவும், அஹங்காரம் ஆத்மா என்ற இரண்டும் ஒன்று என்ற ஞானாகாரமாகவும் (அஞ்ஞானமே) பரிணாமத்தை அடைகின்றது. உதாரணமாக கிளிஞ்சலைப்பார்த்து இது வெள்ளி என்று ப்ராந்தி ஞானம் ஏற்படுகின்ற போது, சுக்தி அவச்சின்னசைதன்யம், முதலில் இதம் என்று ப்ரகாசிக்கின்றது. அந்த ஸமயத்தில் சுக்தி அவச்சின்ன சைதன்யத்தில் இருக்கின்ற அஞ்ஞானமானது சுக்தியில் இருக்கின்ற விசேஷாம்ஸத்தை தெரியவொட்டாமல் மறைக்கின்றது. அப்போது ரஜதஸம்ஸ்க்காரத்துடன் கூடி இருக்கின்றவனுக்கு, இந்த அஞ்ஞானமே, சுக்தி அம்ஸத்தில், தாதாத்ம்ய ஸம்பந்தமுடைய ரஜதாகாரமாக பரிணமிக்கின்றது. அப்போது இதம் ரஜதம் என்று, சுக்தியில் ரஜதாகாரமான ஞானம் ஏற்படுகிறது. இந்த விதம், சுக்தியே ரஜதம் என்று பார்க்கப்படுகின்ற போது அந்த ரஜதமானது சாக்ஷியினால் ப்ரகாசப்படுத்தப்படுகிறது.

சாக்ஷிசைதன்யத்தினால் ப்ரகாஸப்படுத்தப்படும் ரஜதத்திற்கும், சாக்ஷி சைதன் யத்திற்கும் மத்தியில், அவை இரண்டிற்கும் ஸம்பந்தம் ஏற்படுவதற்கு வ்ருத்தி என்பது தேவைப்படுகிறது. ஆகவே சாக்ஷியானது அவித்யாவ்ருத்தி மூலமாக ரஜதத்தை ப்ரகாசப்படுத்துகின்றதால் ரஜத ஞானாகாரமாக அவித்யையே பரிணமிக்கின்றது.

ஆகவே, இதம் ரஜதம் என்று ப்ரமம் ஏற்படுமிடத்தில், 'இதம்' என்று ஏற்படும் ஞானம் அந்த:கரணவ்ருத்தி மூலமாக ஏற்படுகின்றதால் இதம் அம்ஸம் ஸத்யமென்றே சொல்லவேண்டும்.

அதன் பிறகு சுக்தி அவச்சின்ன சைதன்யத்திலிருக்கின்ற அஞ்ஞானமானது சுக்தியை மறைத்து ரஜதாகாரமாக பரிணாமத்தை அடைகிறது. இவ்விதம் ஆரோபிதமாகத் தோன்றும் ரஜதமானது அவித்யாவ்ருத்திமூலமாக சாக்ஷிசைதன்யத்தினால் ப்ரகாசப் படுத்தப்படுகிறது. இவ்விதம் ஏற்படும் அவித்யா பரிணாமமான ரஜதமும், ரஜதாகாரஞானமும் ஸத்யமல்ல. மித்யை என்றே சொல்லப்படவேண்டும்.

ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் அகண்டசச்சிதானந்தஸ்வரூபமாக இருந்தபோதிலும், ஆத்ம சைதன்யத்தில் இருக்கின்ற அஞ்ஞானமானது ஆத்மாவின் விசேஷ தன்மைகளை மறைத்து, அனாத்மாவான அஹங்காராதிகளின் தன்மைகளான, கர்த்ருத்வம், போக்த்ருத்வம், ப்ரமாத்ருத்வம், முதலான தன்மைகளை ஆத்மாவில் தோற்றுவிக்கின்றது. ஸ்வயமே ஜடமாக இருக்கின்ற அஹங்காரமானது ஆத்ம சைதன்ய ஸம்பந்தத்தினால் 'அஹம்' என்று ப்ரகாசிக்கின்றது.

இந்த விதம் அஹம் என்பதில் ப்ரத்யக் அம்ஸம் ஒன்று, பராக் அம்ஸம் ஒன்று என்று இரண்டு அம்ஸங்கள் இருந்த போதிலும், அஞ்ஞானத்தினால் இரண்டும் வேறு என்பதாக விவேகித்து அறியமுடியவில்லை. ஆத்மா என்பது ஸர்வதா தன் ஸ்வரூபத்தினாலேயே ப்ரகாசித்துக் கொண்டிருப்பதால், யாருக்கும், நான் இருக்கிறேனா? இல்லையா? என்ற ஸந்தேகமோ, அல்லது நான் இல்லை என்ற எண்ணமோ ஏற்படாததால் ஆத்மா நித்ய ஸ்வப்ரகாச ஸ்வரூபம் என்பது சித்திக்கின்றது. இந்த விஷயத்தில் யாருக்கும் ஸந்தேகமோ, விபர்யாஸமோ, அஞ்ஞானமோ, இருக்கமுடியாது. ஏனெனில் ஆத்மா ப்ரகாசித்தால்தான், மற்றதெல்லாம், இருக்கிறதென்றோ இல்லையென்றோ சொல்லமுடியும். ஆகையால், ஆத்மா என்பது எல்லாவற்றிற்க்கும் சாக்ஷியாக, ஸர்வதா ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறது. அதுபோல், 'அஹம்' என்பது ஸர்வதா தொடர்ந்து ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறதென்று

சொல்வதற்கு முடியாது. ஏனெனில் ஆத்மா ஸர்வதாப்ரகாசித்துக்கொண்டிருந்தபோதிலும், அஹம் என்பது சுஷுப்தி, மூர்ச்சை, முதலான அவஸ்தைகளில் ப்ரகாசிக்கவில்லை. ஆனால் ஜாக்ரத்அவஸ்தை ஸ்வப்னவஸ்தைகளில் மட்டும் 'அஹம்' என்று ப்ரகாசிக்கின்றது. அதனால் அந்த:கரணம் என்ற உபாதி ஸம்பந்தம் இருக்கின்ற போது தான் அஹம் என்று அறியப்படுகிறது என்பதையும், அஹம் என்பது அவ்வப்போது வந்து போகின்றது என்பதையும் விவேகித்து அறியப்படுமானல், அஹம் என்பது ஆத்மாவல்லவென்றும் நித்யசைதன்யஸ்வரூபமான ஆத்மாவில் அஹங்காரம் அத்யஸ்த்தம் என்பதும் அறியப்படும்.

இந்த விதம் ஆத்மாவும் அஹங்காரமும் வெவ்வேருன விபரீத ஸ்வபாவமுடையதாக இருந்தும், இரண்டும் ஒன்ருக அறியப்படுவதால் அதையே அத்யாஸம் என்று சொல்கிருேம் அத்யாஸமின்றி கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி என்பதும், கிளிஞ்சல் என்பதும், இரண்டும் ஒன்று என்ற ஞானம் ஏற்படாது. அதே போல் அஹங்காரம் என்பது யுஷ்மத் ப்ரத்யயகோசரம். ஆத்மா என்பது அஸ்மத் ப்ரத்யயகோசரம். இவ்விதம் இரண்டும் விபரீத தன்மையில் இருந்தும், அஹங்காரத்தின் தன்மைகள் ஆத்மாவிலும், ஆத்மாவின் தன்மைகள் அஹங்காரத்திலும், அத்யாஸம் செய்யப்படுகிறது. இந்த அத்யாஸத்திற்கு, ஆத்மஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானமே காரணம்.

ஸ்வயம் ஜடமானஅஹங்காரமானது, ஆத்மஸ்வரூபத்தில் தாதாத்ம்ய அத்யாஸத்தினல் தான் இருப்பதாகச் சொல்லவேண்டும். இல்லாவிடில், அஹங்காரம் இருக்கிறதென்ருே, தெரிகிறதென்ருே விவகாரம் செய்வதற்கே முடியாது. அதே போல் கூடஸ்த்தமான சைதன்யம் அஹங்காரத்தில் அத்யஸ்த்தம் என்று சொல்லாவிடில், அஹம் கர்த்தா, அஹம்போக்தா என்ற விவகாரங்களும் இருக்கமுடியாது. ஆகவே இதையே அன்யோன்ய அத்யாஸம் என்று சொல்லப்படுகிறது.

அனுத்மாவான அஹங்காரத்துடன், ஆத்மாவிற்கு தாதாத்ம்ய அத்யாஸம் ஏற்படுவதாகச்சொல்லாவிடில், ஜெகத் என்பதே ப்ரகாசிக்க முடியாது என்று சொல்லப் பட்டபோதிலும், சைதன்யத்திற்கு ஜடத்துடன் தாதாத்ம்ய அத்யாஸம் சொல்லமுடியாது. சைதன்யஸம்பந்தம் ஜடமான அந்த:கரணத்திற்கு ஏற்படுவதாகச் சொல்லலாம். அதனல் அஹங்காரத்தின் ஸ்வரூபமும் அதன் தர்மமும் சைதன்யத்தில் அத்யாஸம் செய்யப் படுகிறது. ஆகவே, ஆத்மஸ்வரூபம் அஹங்காரத்தில் அத்யஸ்த்தமில்லை. இவ்விதம் இரண்டும் வெவ்வேருக இருந்தும், அஹம் என்பது ஒன்ருகவே அறியப்படுவதால், அஹங்காரம் ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்று அறியவேண்டும்.

**பூர்வ :** ஆத்மாவில், அஹங்காரம் என்பது அத்யஸ்த்தம் என்பதால், அஹங்காரம் என்பது மித்யை என்ருகிறது. அதே போல் ஆத்மாவும் அஹங்காரத்தில் அத்யஸ்த்தம் என்று அன்யோன்ய அத்யாஸம் சொல்லப்படுமானல் ஆத்மாவும் மித்யை என்று சொல்லநேரிடும் அதனல் சூன்யம் என்பது தானே சித்திக்கின்றது?

**சித்தா :** இந்த விஷயத்தைப் பற்றி மேலே விளக்கப்படுகின்றதால் இங்கு அதைப்பற்றி விஸ்தரிக்கப்படவில்லை.

(அதாவது ஆத்மாவிற்கு ஸ்வரூபாத்யாஸம் கிடையாது ஸம்பந்தாத்யாஸம் மட்டுமே சொல்லப்படுகிறது என்பதைப்பற்றி மேலே விளக்கப்போகிருேம்)

**பூர்வ :** அத்யாஸம் என்பது சாத்ருஸ்யத்தினலோ கரணதோஷத்தினலோ அல்லது பூர்வஸம்ஸ்க்காரத்தினலோ ஏற்படுகிறது. அதுமட்டுமல்ல, எந்த விஷயம் அத்யாஸம்

செய்யப்படுகிறதோ, அந்த விஷயத்திற்கும், இந்த்ரியங்களுக்கும் ஸம்பந்தம் ஏற்படவேண்டும். ஆகவே, ஆத்ம அனாத்மஅத்யாஸம் ஏற்படுமிடத்தில் இந்தவித காரணங்கள் இருப்பதாக எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** அத்யாஸம் ஏற்படுவதற்கு சாத்ருஸ்யம் முதலான காரணங்கள் அவஸ்யம் இருக்க வேண்டுமென்று நியமம் கிடையாது. அஞ்ஞானம் ஒன்றே போதுமான காரணம். ஆகவே ஆத்ம அனாத்ம அத்யாஸம் இருக்கின்றதால் இந்த சாஸ்திரத்திற்கு விஷயம் ப்ரயோஜனம் என்ற இரண்டும் சித்திக்கின்றது.

**28. அவதாரிகை :**

அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாம் சாத்ருஸ்யம் இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லமுடியாதாகையால் சாத்ருஸ்யம் என்ற காரணம் வ்யபிசரிக்கின்றது. சாத்ருஸ்யம் இல்லாமலேயே அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सादृश्यधीप्रभृति न त्रितयं निमित्तमध्यासभूमिषु जगत्यनुगच्छतीदम् ।
ब्राह्मण्यजातिपरिकल्पनमात्मनीष्टं जात्या न साम्यमुपलब्धमिहास्ति किञ्चित् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரபஞ்சத்தில், அத்யாஸம் ஏற்படும் இடங்களில்எல்லாம் சாத்ருஸ்யம், ஸம்ஸ்க்காரம், தோஷம் என்ற மூன்று காரணங்களும் இருந்தால் தான் அத்யாஸம் ஏற்படும் என்று நியதமாகச் சொல்ல முடியாது. ஆத்மாவில் ப்ராஹ்மணத்வாதி ஜாதி அத்யாஸங்கள் இருப்பதாக எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. இவ்வித அத்யாஸங்களில் எவ்விதமான ஸாத்ருஸ்யாதிகளையும் காரணம் என்று சொல்வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** சாத்ருஸ்யம் முதலான மூன்று காரணங்களும் இருந்தால் தான் அத்யாஸம் ஏற்படும் என்று சொல்வதற்கு முடியாது. ப்ராஹ்மணோஹம் என்ற அத்யாஸம் ஆத்மாவில் ஏற்படுகிறது. இவ்வித அத்யாஸத்தை அனுவாதம் செய்து, ஆரோபிதமான ஜாத்யாதிகளைக் கொண்டு ப்ராஹ்மணன் இந்த யாகத்தைச்செய்யவேண்டும் க்ஷத்ரியன் இந்த கர்மாவைத்தான் செய்யவேண்டும் என்றும், ப்ராஹ்மணனைக் கொல்லக்கூடாது என்றும் பலவிதமான, விதி, நிஷேதங்களை வேதங்களில் விதிக்கப்படுகிறது. ஆனால் இவ்விதம் ஜாத்யாதி ஆரோபிதங்களுக்கு எந்த விதமான சாத்ருஸ்யமும் காரணமாக ஆகாது.

**பூர்வ :** சாதாரணமாக, அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாம் ஸாத்ருஸ்யம் ஸம்ஸ்க்காரம் தோஷ இந்த்ரியத்துடன் கூடிய அதிஷ்ட்டான ஸம்பந்தம் எல்லாம் இருக்கின்றதே?

**சித்தா :** ஆத்மா நிரவயவம், நிர்க்குணம், நிஷ்க்ரியம் என்பதால், அஸங்கமான ஆத்மஸ்வரூபத்தில் ஜாதி, குணம், க்ரியை ஸம்பந்தம் என்பதெல்லாம் ஏற்படமுடியாது. வஸ்துக்களுக்கு சாத்ருஸ்யம் இருக்க வேண்டுமானால் அவயவத்திலோ குணத்திலோ க்ரியையிலோ ஒற்றுமை இருந்தால் தான் சாத்ருஸ்யம் சொல்லமுடியும். ஆத்மாவிற்கு (ஈடாகவோ) ஸமமாகவோ, அதிகமாகவோ எதுவுமோ கிடையாது என்று, 'நதஸ்ய ப்ரதிமா' 'ந த்வத்ஸமோSஸ்த்யப்யதிக:குதோSன்யோலோகத்ரயேSபி அப்ரதிமப்ரபாவ:' என்ற கீதாவாக்யம் தெரிவிக்கின்றது. ஆகவே ஆத்ம அனாத்ம அத்யாஸத்தில் சாத்ருஸ்யம் இருப்பதாகச் சொல்வதற்கு முடியாது என்று வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகவே ஆத்ம அனாத்ம அத்யாஸத்தில் ஸாத்ருஸ்யம் இருப்பதாகச் சொல்வதற்கு முடியாது.

சுக்தியானது ரஜதமாக தோன்றும் இடத்தில், சுக்தி அஞ்ஞானத்தை அல்லாமல் சாத்ருஸ்யம் முதலான வேறு காரணங்களும் இருக்கிறது என்பதற்காக அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாமே இந்த மூன்று காரணங்களும் இருக்கத்தான் வேண்டுமென்ற நியமம் கிடையாது.

**29. அவதாரிகை :**

பதார்த்தம் (ப்ரமேயத்வம்) என்பதனல் இரண்டும் ஸமம் என்று சொல்லலாம் அதனல் ஸாத்ருஸ்யம் சொல்லலாமே? என்றல், பதார்த்தம் என்பதைக் கொண்டு இரண்டுக்கும் ஸாத்ருஸ்யம் சொல்லப்படுமானல், மனுஷ்யனுக்கும் பசுபக்ஷியாதிகளுக்கும் கூட ஸாத்ருஸ்யம் இருப்பதாகச் சொல்லநேரிடும். இவ்விதம் சொல்லப்படுமானல் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆக்வே இரண்டு வஸ்துக்களில் இருக்கின்ற குணங்கள், க்ரியைகள், அவயவங்கள் முதலான தன்மைகளில் அனேகதன்மைகளின் ஒற்றுமை இருக்கின்ற வஸ்துவில்தான் ஸாத்ருஸ்யம் சொல்லமுடியும். ஆகையால் ஆத்மாவிற்கும் ஜாதிக்கும் எந்தவிதமான சாத்ருஸ்யமும் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**ச்லோகம் :** भूयस्त्ववत्तनुगुणावयवक्रियाणां सामान्यपूगवपुरुक्तमिहाभियुक्तैः ।
सादृश्यवस्तु न चिदात्मनि किञ्चिदत्र जात्यादिभिः सह निरीक्षितमस्ति तादृक् ॥

**ச்லோகார்த்தம் :** அவயவம், குணம், க்ரியை, என்ற இவைகளெல்லாம் எந்த இரண்டு வஸ்துக்களில் பெரும்பாலும் ஒற்றுமையாக இருக்கின்றதோ, அப்பேர்ப்பட்ட வஸ்துக்களேயே ஸாத்ருஸ்யம் உள்ளதாக பெரியோர்களால் சொல்லப்படுகிறது. அதனல் ப்ரத்யகாத்மாவிற்கும், ஜாத்யாதிகளுக்கும் எவ்விதமான சாத்ருஸ்யமும் இருப்பதாகச் சொல்ல முடியாது. (ஸாத்ருஸ்யம் இருப்பதாக அறியப்படவில்லே.)

**வ்யாக்யானம் :** 'கோஸத்ருச:கவய:' என்று பசுவிற்கும் கவயத்திற்கும் ஸாத்ருஸ்யம் சொல்லப்படுகின்றது. இந்த இடத்தில் பசுவில் இருக்கின்ற அனேகதன்மைகள் கவயம் என்ற ப்ராணியினிடமும். இருக்கின்றது. அதனல் ஸாத்ருஸ்யம் சொல்லப்படுகிறது என்பதை ஜைமினி முதலிய பெரியோர்களால் சாத்ருஸ்யத்திற்கு லக்ஷணம் சொல்லப் பட்டிருக்கிறது. பசுவினிடம் சுக்லத்வம் தீர்க்கத்வம் என்பதெல்லாம் குணமாகவும் பாதம் ப்ருஷ்ட்டம் என்பதெல்லாம் அவயவங்களாகவும், கமனம் பக்ஷணம் என்பதெல்லாம் க்ரியையாகவும் இருக்கின்றது. இவ்விதம் அவயவம் குணம் க்ரியை முதலான தன்மைகளில் பசுவிற்கும் கவயத்திற்கும் பொதுவான சில தன்மைகள் பொருந்தி இருப்பதால் 'கோசத்ருச:கவய:' என்று சாத்ருஸ்யம் சொல்லப்படுகிறது. இதுபோல் ஆத்மாவிற்கு ஸ த்ருஸமாக எதைச் சொல்லமுடியும்? கோ என்பதும் கவயம் என்பதும் ரூபம் உள்ள வஸ்துவானதால், அனேகதன்மைகள் ஒற்றுமையாக இருக்கின்றதால் சாத்ருஸ்யம் சொல்லப்படுகிறது. ஆத்மா, அரூபமானதால் நிரவயவமானதால் சாத்ருஸ்யம் சொல்லமுடியாது.

சில ஸந்தர்ப்பங்களில், ஸர்ப்பங்கள் ஸஞ்சரிக்கும் இடங்களில் தாழம்பூவின் வாஸனே ஏற்படுகிறது. அங்கு தாழம்பூ என்பதே இல்லாமல் இருக்குமானல், இங்கு ஸர்ப்பம் ஸஞ்சரிக்கின்றதென்று, வாஸனே என்ற ஸாம்யத்தைக் கொண்டு அறிகிறோம். அதுபோல் நிர்க்குணமான ஆத்மவஸ்துவில் எந்த குணத்தைக் கொண்டு ஸாம்யம் சொல்லமுடியும்?

அதேபோல் யானை போன்ற நடையுடையவனை கஜகாமி என்றும், அன்னம் போன்ற நடை என்றும், நடக்கின்ற க்ரியைக் கொண்டு ஸாம்யம். சொல்லப்படுகிறது. அதுபோல் நிஷ்க்ரியமான ஆத்மவஸ்துவில் எந்த க்ரியையைக்கொண்டு ஸாத்ருஸ்யம் சொல்லமுடியும்? ஆகவே ஜாத்யாதிகள் என்பதும் எவ்வித ஸாத்ருஸ்யமும் இல்லாமலேயே ஆத்மாவில் தோன்றுகிறதால் ஸாத்ருஸ்யம் அத்யாஸத்திற்கு ஒரு காரணம் என்று சொல்ல முடியாது.

**பூர்வ :** 'ஆகாசவத்ஸர்வகத: நித்ய:' என்று ச்ருதிவாக்யமே ஸர்வகதத்வம் நித்யத்வம் என்பதை இரண்டிற்கும் ஸமானமாகச் சொல்லப்படுகிறதே? அவ்விதம் ஆத்மாவிற்கும் ஆகாசத்திற்கும் ஸமானதன்மை இருப்பதாகவே, வேதமே தெரிவிக்கின்ற போது, ஆத்மாவிற்கு ஈடாக எதுவுமே இல்லை என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** இந்த ச்ருதிவாக்யமானது, ஆத்மாவிற்கு சத்ருஸமாக ஆகாசத்தை தாத்பர்யமாக தெரிவிக்கவில்லை. ஆகாசம் என்பது ஸர்வகதமுமில்லை நித்யமுமில்லை. ஏனெனில் மாயை என்பதே ஆத்மாவில் அத்யஸ்த்தம். அந்த மாயையில் நூறில் ஒரு அம்ஸத்தில்தான் ஆகாசம் என்பது இருக்கின்றது. அதனால் ஆகாசத்திற்கு ஸர்வகதத்வம் சொல்ல முடியாது. மேலும் ஜாதி என்பது எப்படி அநித்யமோ அதுபோல் ஆகாசம் என்பதும் அநித்யமானதால் ஸர்வகதத்வம் நித்யத்வம் என்பதெல்லாம் பரமார்த்தமாக ஆகாசத்தில் கிடையாது. ஆகாசமே அநித்யமானதால் அதில் சொல்லப்படும். ஸர்வகதத்வம் என்பதும் அநித்யம்தான். ஆகவே ஆத்மாவிற்கு ஸமானமாக எதுவுமே கிடையாது.

**பூர்வ :** ஜாத்யாதிகள் நித்யமென்று தார்க்கிகர்களால் சொல்லப்படுவதால், ஜாத்யாதிகளும் நித்யம், ஆத்மாவும் நித்யம், என்று இரண்டிற்கும் ஸாம்யம் சொல்லலாமே?

**சித்தா :** ஜாத்யாதிகள் நித்யமென்று சொல்லமுடியாது. அதேபோல் ஜாத்யாதிகள் என்பது தொடர்ந்து இருக்கமுடியாது. ஆகையால், 'ஸர்வகதத்வம்' என்பதும் ஜாதியில் இருப்பதாகச் சொல்லமுடியாது.

'அதோ அன்யதார்த்தம்' என்று ஆத்மாவையன்றி வேறு எதுவும் நித்யமாகவோ ஸர்வகதமாகவோ இருக்கமுடியாது. வ்யக்தி என்பதில்தான் ஜாதி இருக்கமுடியும். ஜாதி என்பதில் ஜாதி இருக்கமுடியாது. அதனால் ஜாதி என்பதற்கு ஸர்வகதத்வம் சொல்ல முடியாது. மேலும், ரூபம்–ரஸம்–கந்தம் என்பது முதலான குணங்களைக்கொண்டோ அவயவயங்களைக்கொண்டோ அல்லது க்ரியையைக்கொண்டோ ஆத்மாவிற்கும் ஜாதிக்கும் ஸாத்ருஸ்யம் சொல்லமுடியாது. இவ்விதம் இருந்தும் ஆத்மாவில் ஜாத்யாதிகள், அத்யஸ்த்த மாகிறது என்பதால், அத்யாஸத்திற்கு ஸாத்ருஸ்யம் காரணம் என்று சொல்வதற்கு முடியாது.

**30. அவதாரிகை :** இதேபோல் விஷயதோஷமோ கரணதோஷமோ அத்யாஸத்திற்கு காரணம் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

विषयकरणदोषान्न भ्रमः संविदि स्यादपि तु भवति मोहात्केवलादेवमेव ।
भगवति परमात्मन्यद्वितीये विचित्रा द्वयमतिरियमस्तु भ्रान्तिरज्ञानहेतुः ॥

**ச்லோகார்த்தம் :** 'ஸம்வித்' என்பதில் ஏற்படும் ப்ரமமானது, விஷயதோஷத்தினாலோ, கரணதோஷத்தினாலோ ஸம்பவிக்க முடியாது. கேவல அஞ்ஞானத்தினாலேயே, ஸம்பவிக்கின்றது. அதனால் அத்விதீயமான பரமாத்மஸ்வரூபத்தில் விசித்ரமான, த்வைத ப்ரதீதியானது, அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட ப்ராந்தி என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** விஷயதோஷத்தினுலோ, கரணதோஷத்தினுலோதான் வஸ்து இருக்கின்றபடி அறியப்படாமல் வேறுவிதமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல. விஷயதோஷமோ கரணதோஷமோ இல்லாத இடத்திலும் அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை மேலே தெரிவிக்கின்ற உதாகரணத்தின் மூலம் அறியலாம். விஷயதோஷம் என்பது என்னவென்ருல் எந்தக்காரணத்தினுல், இருக்கின்ற விஷயம் இருக்கின்றபடி அறியப்படவில்லையோ அப்பேர்ப்பட்ட காரணத்துடன் கூடிய விஷயத்தையே விஷயதோஷம் என்று சொல்கிருேம். உதாரணமாக மந்த அந்தகாரத்தில் இருக்கின்ற கயிறுதான் ஸர்ப்பம் என்று ஏற்படும்அத்யாஸத்திற்கு காரணமாகிறது. அதேபோல் கிளிஞ்சலில் உள்ள நீலநிறம், முக்கோணத்வம் முதலானவைகள் பூமியில் பதிந்திருப்பதால்தான் கிளிஞ்சல் என்று அறியப்படாமல் வெள்ளி என்று தோன்றுவதற்கு காரணமாகிறது. இதேபோல் தூரத்திலுள்ள வஸ்துக்களும் அத்யாஸத்திற்கு காரணமாகலாம்.

இதேபோல், காசகாமாலே போன்ற இந்த்ரியதோஷங்களினுலும் அத்யாஸம் ஏற்படலாம். இவைகளை கரணதோஷம் என்று சொல்லப்படும்.

ஆகவே மந்த அந்தகாரத்துடன் கூடிய விஷயம், கிளிஞ்சல் என்று அறியப்படாமல் (அந்த தன்மைகள்) பூமியில் பதிந்து மறைபட்ட தன்மையுடன் கூடிய விஷயம், தூரத்வாதி தோஷத்துடன் கூடிய விஷயம், கரணதோஷத்துடன் கூடிய விஷயம். இவைகள்தான் அத்யாஸத்திற்கு காரணம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் இவ்விதம் விஷயதோஷமோ கரணதோஷமோ இல்லாமலேயே அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை தெரிவிக்கிருேம். அதாவது, ஆகாசம் என்பதில், நீலம் என்ற நிறமும் மலே வ்ருக்ஷம் போன்ற தோற்றங்களும் அத்யஸ்த்தம் ஆகிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம்தான். ஆகவே மானஸப்ரத்யக்ஷ விஷயமான ஆகாசத்திலும், விஷயதோஷமோ கரணதோஷமோ ஸாத்ருஸ்யமோ இல்லாமலேயே அத்யாஸம் ஏற்படுகின்றதால் அத்யாஸத்திற்கு இவைகளை காரணமாகச் சொல்லமுடியாது.

மேலும், 'ஸம்வித்' ஸ்வரூபமானசைதன்யப்ரகாசத்தினுல், சக்ஷுஸ் என்ற கரணத்திற்கும் கடம் என்ற விஷயத்திற்கும் ஸம்பந்தம் ஏற்படுகின்றபோது, 'இது கடம்' என்ற ஞானம் ஏற்படுகின்றது. இந்த 'ஞானம்' வேத்யம் என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்வது சரியல்ல. இந்த விஷயத்தில் வ்ருத்தி என்பதே வேத்யமாகிறது. 'ஞானம்' என்பது வேத்யமல்ல. ஆனுல் ஞானத்திற்கும் வ்ருத்திக்கும் உள்ள பேதத்தை அறியாதவர்களால் இந்தவிதம் சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ப்ரமமானது விஷயதோஷத்தினுலோ கரணதோஷத்தினுலோ ஏற்பட்டதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் நித்யஸ்வப்ரகாச ஸ்வரூபமான ஸம்வித் என்பது எதற்கும் விஷயமல்ல. ஆகையால் விஷயதோஷம் என்று சொல்லமுடியாது. 'ஸம்வித்' என்று ஸ்வரூபஞானத்தையும் சொல்லலாம். வ்ருத்தி ஞானத்தையும் சொல்லலாம். ஆனுல் வ்ருத்தி ஞானம் என்பது ப்ரமாணபலம். ஸ்வரூப ஞானம் என்பது ப்ரமாணபலம் அல்ல. நித்யஸ்வப்ரகாசஸ்வரூபமே ஸ்வரூபஞானம்.

ஆகவே, வ்ருத்திஞானம் என்பதையே இங்கு 'ஸம்வித்' என்று சொல்லப்படுகிறது. இந்த வ்ருத்திப்ரதிபலிதசைதன்யம், ஸ்வயம்ப்ரகாசம், நித்யம் என்று அறியப்படவேண்டும். அவ்விதமின்றி, வ்ருத்தியைப்போல் அதில் ப்ரதிபலிக்கின்ற சைதன்யத்தை ஜடம் என்று சொல்லப்படுமானுல், வ்ருத்தியோ அதன் விஷயம் என்பதோ எதுவுமே ப்ரகாசிக்க முடியாது. வ்ருத்தி ப்ரதிபலித சைதன்யமும் வ்ருத்தியைப் போல் ஜடம் என்று சொல்லப்படுமானுல், ஜடமாக இருந்தாலும் மற்றொரு ஜடத்தை ப்ரகாசிக்க செய்யமுடியும் என்று சொல்ல நேரிடும். அவ்விதம்

சொல்லப்படுமானுல் விஷயம் தாஞகவே ப்ரகாசிக்கலாம் என்றும். அதனுல் வ்ருத்திஞானம் தேவையில்லை என்ருகும். ஆகவே அஜடமான, வ்ருத்திப்ரதிபலிதசைதன்யம் ஸ்வயம் ப்ரகாசமென்றே சொல்ல வேண்டும். சைதன்யம் ஸ்வயம் ப்ரகாசமென்று சொல்லாவிடில் வேறு எதனுல் விஷயங்கள் ப்ரகாசிக்க முடியும்? அதுவேறெரு சைதன்யத்தினுல் ப்ரகாசிக்கிறது என்று சொல்ல நேரிடும். இவ்விதம் சொல்லப்படுமானுல் மேன்மேலும் கேள்விக்கு இடமுண்டாகிறதால் அனவஸ்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. ஆகையால் ஸம்வித் என்ருலே, ஸ்வரூபசைதன்யமாக இருந்தாலும்சரி அல்லது வ்ருத்திப்ரதிபலிதசைதன்யமாக இருந்தாலும்சரி, அதை ஸ்வயம் ப்ரகாசமென்றே சொல்லவேண்டும். அதேபோல் ஸம்வித் என்பது நித்யமென்றும் சொல்லப்படவேண்டும். அப்படிக்கின்றி 'ஸம்வித்' என்பது அநித்யம் என்று சொல்லப்படுமானுல் ஸம்வித் என்பது உண்டாவதற்கு உபாதான காரணம் என்ன? என்ற கேள்வி ஏற்படும். ஜடமான விஷயத்திலிருந்து ஸம்வித் உண்டாகிறதா? அல்லது ஜடமான கரணத்திலிருந்து உண்டாகிறதா? என்ற கேள்வி ஏற்படும்.

ஜடமான விஷயத்திலிருந்தோ அல்லது ஜடமான கரணத்திலிருந்தோ 'ஸம்வித்' உண்டாகிறதாகச் சொல்லப்படுமானுல் அந்த ஸம்வித் என்பதும் ஜடமாகத்தான் இருக்க வேண்டுமேயன்றி ஸ்வயம் ப்ரகாசகமாக இருக்கமுடியாது. அதற்காக, ஸம்வித் என்பது ப்ரமாதாவினுல் உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல. ஏனெனில் அந்த:கரணத்தில் ஸம்வித்ஸம்பந்தம் ஏற்பட்டபிறகுதான், ப்ரமாதாவாக ஆகிருன். ஆகையால், ஸம்வித் என்பது எதனுலும் உண்டாக முடியாது என்பதால், நித்யம் ஸ்வயம்ப்ரகாசம் என்பது சித்தமாகிறது.

இந்த ஸம்வித் என்பது, ஸாதாரணமாக சூர்யப்ரகாசம் போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தாலும் சூர்யன் எப்படி கண்ணுடியில் ப்ரதிபலிக்கின்றபோது, விசேஷமாக ப்ரகாசிக்கின்றதோ, அதுபோல் ஸம்வித் என்பதும் அந்த:கரணம் என்ற உபாதியில் ப்ரதி பலிக்கின்றபோது விசேஷப்ரகாசமாக அஹம் என்று ப்ரகாசிக்கின்றது. அதே சைதன்யம், பாஹ்யமான விஷயங்களுடன் ஸம்பந்தப்படுகின்றபோது அந்தந்த விஷயாகாரமாகவும் விசேஷமாக ப்ரகாசிக்கின்றது. இந்தவிதம் அந்த:கரணவ்ருத்தியானது சக்ஷுராதி ப்ரமாணங் களின் மூலம் அந்தந்த விஷயங்களுடன் ஸம்பந்தப்படுகின்ற போது, அந்தந்த விஷயஞானம் விசேஷமாக அறியப்படுகின்றது. அதனுல், அந்த ஞானமே உண்டாவதுபோல் (ஜன்யமென்று) தோன்றுகிறது. ஆனுல் ஸம்வித் என்பதற்கு உற்பத்தியும் இல்லை. நாசமும் இல்லை. வ்ருத்திதான் உற்பத்தி விநாசமுடையதாக இருக்கின்றது. ஆகையால் ஸம்வித் என்பதற்கு பரப்ரகாச்யத்வமோ உற்பத்தி விநாசமோ கிடையாது என்பதால் ஸ்வப்ரகாச ஸ்வரூபம் நித்யம் என்றே அறியவேண்டும். அநித்யம் போல் தோன்றுவதால் ப்ரமம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ஸம்வித் என்பதில், வ்ருத்தியிலுள்ள அநித்யத்வாதி தர்மங்கள் அத்யாஸம் செய்யப்படுகிறது என்றே சொல்ல வேண்டும். இப்போ்ப்பட்ட அத்யாஸமானது கரணதோஷத்தினுலோ விஷயதோஷத்தினுலோ ஸாத்ருஸ்யத்தினுலோ ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் 'ஸம்வித்' என்பதில் ஆரோபம் செய்யப்படும் ஜன்யத்வம் அநித்யத்வம் பரப்ரகாச்யத்வம் என்பதற்கும் ஸம்வித் என்பதற்கும் என்ன ஸாத்ருஸ்யம் சொல்லமுடியும்?

கடத்தைப் பார்த்து இது கடம் என்று ஞானம் ஏற்படுமானுல், அது உண்மையான ஞானமேயன்றி–ப்ராந்தி ஞானம் இல்லை. ஆகையால் அந்த:கரணவ்ருத்தி ஞானத்தை,

தோஷ இந்த்ரிய ஜன்ய ஞானமென்று சொல்லமுடியாது. ஆகையால் விஷயதோஷமோ கரணதோஷமோ ஸாத்ருஸ்யமோ இல்லாமலேயே ஸம்வித் என்பதில் அத்யாஸம் ஏற்படுகின்றது என்று அறியப்படுகின்றதால் அத்யாஸத்திற்கு அஞ்ஞானம் ஒன்றே காரணம் என்றுதான் ஒத்துக்கொள்ளவேண்டும்.

ஆகவே அத்விதீயமான ஆத்மஸ்வரூபத்தில் இருக்கின்ற விசேஷசக்தியினுல் தான் ப்ரபஞ்சம் முதலான ஸர்வ ஆரோபங்களும் தோன்றுகின்றது. அகண்ட நிர்விசேஷமான கேவலசைதன்யத்தில், ஜீவனென்றும், ஈச்வரனென்றும் ஜகத், என்றும் ஏற்படும் ப்ரமத்திற்கு அஞ்ஞானம் ஒன்றே முக்யகாரணம் என்று சொல்லவேண்டும். ஆனுலும் பூர்வ ஸம்ஸ்க் காரத்தையும் அத்யாஸத்திற்கு காரணமாகச் சொல்லலாம். ஸம்ஸ்க்காரம் என்பது பூர்வஞான (ப்ரதீதி) ஜன்யத்தினுல்தான் ஏற்படவேண்டும். அதாவது, ஏற்கனவே அறியப்பட்டதோ அல்லது அனுபவிக்கப்பட்டதோ எதுவாக இருந்தாலும், அது ப்ரமாண ஜன்யஞான ஸம்ஸ்க்காரமாகவும் இருக்கலாம், அல்லது ப்ராந்திஞானம் என்ற ப்ரமத்தினுல் ஏற்பட்ட ஸம்ஸ்க்காரமாகவும் இருக்கலாம். ஆகவே ஸம்ஸ்க்காரம் என்பது ப்ரமாண ஜன்யமாகத்தான் இருக்கவேண்டுமென்பது இல்லையென்பதால், ப்ரமம் என்பது அனுதிகாலமாக இருக்கின்றதாலும், அனுபவாஹித ஸம்ஸ்க்காரம் இருப்பதாகச் சொல்லலாம். (ஆகையால் ப்ரமாணத்தினுல் ஏற்பட்ட ஸம்ஸ்க்காரமாகத்தான் இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை).

**31. அவதாரிகை :**

**பூர்வ :** ஆத்மாவிற்கும் அஹங்காரத்திற்கும் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுவதாகச் சொல்லப்படுமானுல், அத்யாஸத்தினுல் ஏற்பட்ட ஆரோபிதங்கள் பாதிக்கப்படுகின்றதால், சூன்யம்தான் எஞ்சி நிற்கும் என்று சொல்லக்கூடிய நிலை ஏற்படுகிறதே?

**சித்தா :** அவ்விதம் சூன்யம் என்பது சித்திக்க முடியாது. ஏனெனில் எது பாதிக்கப்படுகிறதோ அந்த (பாத) விஷயத்திற்கு அவதியாக அனத்யஸ்த்தமான (அத்யாஸமாக இல்லாத) ஒரு வஸ்து எஞ்சி இருக்கின்றதால் 'சூன்யம்' என்பது சித்திக்காது.

**ச்லோகம் :**

**संसिद्धा सविलासमोहविषये वस्तुन्यधिष्ठानगीर्नाधारेऽध्यसनस्य वस्तुनि ततोऽस्थाने महान्संभ्रमः ।**
**केषांचिन्महतामनूनतमसां निर्बन्धमात्राश्रयादन्योऽन्याध्यसने निरास्पदमिदं शून्यं जगत्स्यादिति ॥**

**ச்லோகார்த்தம் :** கார்யத்துடன் கூடிய அஞ்ஞானத்திற்கு எது விஷயமாக இருக்கின்றதோ அந்த வஸ்துதான் அதிஷ்ட்டானமென்றுசொல்லப்படும். இவ்வித அத்யாஸம் ஏற்படுவதற்கு எது ஆதாரமாக இருக்கின்றதோ அதை அதிஷ்ட்டானமென்று சொல்லப்படுவதில்லை. ஆகையால் சூன்யம் என்ற ஸந்தேகத்திற்கு இடமே இல்லை. அதிமூடர்களான சிலமதஸ்த்தர்களின் பிடிவாதம் காரணமாகச்சொல்லப்படும் ஜகத் சூன்யம் என்ற வாதம் சிறிதும் ஆதாரமற்றது.

**வ்யாக்யானம் :** எதனுல் அஞ்ஞானம் என்பது (வ்யக்தமாக) வெளிப்படையாக அறியப்படுகிறதோ, அதுவே, அஞ்ஞான கார்யம் என்று சொல்லப்படுகிறது. அஞ்ஞான கார்யமான (மித்யையான) ரஜதத்துடன் கூடிய, அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட சுக்தியைத்தான், ரஜத அத்யாஸத்திற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுகிறது. கார்யத்துடன் கூடிய அஞ்ஞானம் எதை ஆச்ரயித்து இருக்கின்றதோ அதுவே

அதிஷ்ட்டானம். இந்த அதிஷ்ட்டான வஸ்துவானது அத்யஸ்த்தமாக இல்லாததா... அதிஷ்ட்டானம் பாதிக்கப் படுவதில்லே. அதனுல் சூன்யவாதம் சித்திக்காது.

**பூர்வ :** எதை ஆதாரமாகக் கொண்டு ஆரோபித வஸ்துக்கள் ப்ரகாசிக்கின்றதோ அதைத்தானே அதிஷ்ட்டானம் என்று சொல்லவேண்டும்? அந்த ஆதாரமான வஸ்துவும் ஆரோபிதவஸ்துவில் அத்யஸ்த்தம் என்று சொன்னுல்தானே பரஸ்பரஅத்யாஸம் ஏற்படுவதாகச் சொல்லலாம்?

**சித்தா :** 'இது ரஜதம்' என்று அத்யாஸம் ஏற்படும் இடத்தில், ஆரோபிதமான ரஜதம் ப்ரகாசிப்பதற்கு ஆதாரமாக 'இதம்' என்ற அம்ஸம் இருக்கின்றது. இந்த 'இதம்' என்ற அம்ஸத்தை அதிஷ்ட்டானமென்று சொல்வதில்லே. அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படும் சுக்தியில், சுக்தி அம்ஸம்–இதம் அம்ஸம் என்ற இரண்டு அம்ஸங்கள் இருக்கின்றது. இதில் 'ரஜதம்' என்ற அத்யாஸம் ஏற்படுகின்றபோது, அத்யஸ்த்தமான ரஜதத்துடன், இதம் அம்ஸம் என்பது ஸம்பந்தத்தை அடைந்து 'இதம்' என்று ப்ரகாசிக்கின்றதால் ரஜதஸம்ஸர்க்கத்துடன்கூடிய இதமம்ஸத்தை அதிஷ்ட்டரனம் என்று சொல்வதில்லே. இந்த இதமம்ஸத்தை ரஜத அத்யாஸத்திற்கு ஆதாரம் என்றே சொல்லப்படவேண்டும்.

அவ்விதமின்றி இதம் அம்ஸத்தை அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுமானுல், ரஜதஸம்பந்தமுடைய இதமம்ஸம் அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுவதால் அதிஷ்ட்டானமே அத்யஸ்த்தம் என்று சொல்லப்பட்டதாக ஆகும். இவ்விதம் அதிஷ்ட்டானத்தையே அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுமானுல், அதிஷ்ட்டானம் இருந்தால்தான் அத்யாஸம்– அத்யாஸம் இருந்தால்தான் அதிஷ்ட்டானம் என்று அன்யோன்ய ஆச்ரயதோஷம் ஏற்படும். அதனுல் 'இதம்' என்ற அம்ஸம் ஆதாரம் என்றும், 'சுக்தி' என்ற அம்ஸம் அதிஷ்ட்டானம் என்றே சொல்லவேண்டும்.

மேலும் ஒரு வஸ்து அஞ்ஞாதமாக இருந்தால்தான் அதில் அதற்கு விபரீதமான வேறு ஒரு வஸ்துவின் ப்ரமம் ஏற்படும். அஞ்ஞானம் என்பதே ஜடமானதால், அதற்கு ஆச்ரயமாக இருக்கின்ற வஸ்து ஜடமாக இருக்கமுடியாது என்பதை மேலே விளக்கப் போகின்ருேம். ஆகவே எந்த ப்ரமம் ஏற்பட்டாலும், அதற்கு அதிஷ்ட்டானமாக அஞ்ஞாதமான சைதன்யம்தான் இருக்கமுடியும். சில இடத்தில் கேவல அஞ்ஞானத்துடன் கூடிய சைதன்யமே (ப்ரமத்திற்கு) அத்யாஸத்திற்கு அதிஷ்ட்டானமாக இருக்கலாம். சில இடத்தில் விஷயாகாரமாக பரிணமிக்கின்றஅஞ்ஞாதசைதன்யம், அதிஷ்ட்டானமாகஆகலாம். ஆரோபித (வஸ்துவுடன்) விஷயத்துடன் ஸமான அதிகரணத்தில் எந்தஅம்ஸம் ப்ரகாசிக்கின்றதோ அதுவே ஆதாரம். அதாவது, ப்ராந்தியாக தோன்றும் ரஜதத்துடன் அபேதமாக எந்த வஸ்துவானது எதிரே ப்ரகாசிக்கின்றதோ அதையே ரஜத அத்யாஸத்திற்கு ஆதாரம் என்று சொல்லவேண்டும். ப்ராந்தி ஞானத்தில் ப்ரகாசிக்காமல் இருக்கின்ற விசேஷாம்ஸமான சுக்தி என்ற அம்ஸமே அதிஷ்ட்டானம் என்று சொல்லவேண்டும்.

இவ்விதம் ஆரோபிதமான ரஜதஸம்பந்தத்துடன் ப்ரகாசிக்கின்ற 'இதம்' என்ற அம்ஸமும், ஆரோபிதமான ரஜதாம்ஸம் பாதிக்கப்பட்டபிறகு, அதிஷ்ட்டானமான சுக்தியுடன் சேர்ந்து ப்ரகாசிக்கின்ற 'இதம்' அம்ஸமும் ஒன்றுதான். அதனுல் 'இதம்' என்ற அம்ஸமானது, ப்ரமவிஷயமான ரஜதத்திற்கும் (ப்ரமைக்கு) யதார்த்த ஞான விஷயமான சுக்திக்கும் ஸாதாரணம். அதுவே ஸன்மாத்ரமான சிதாத்மஸ்வரூபம்.

ஆகவே, அதிஷ்ட்டானம் என்ற அம்ஸம் அத்யாஸமாக இல்லாததால் (அனத்ய ஸ்த்தமானதால்) பரஸ்பரஅத்யாஸம் என்று சொல்லப்பட்டபோதிலும், அதிஷ்ட்டானஅம்ஸம் பாதிக்கப்படுவதில்லை.

சுக்தி அவச்சின்ன சைதன்யமானது, அவித்யையினுல் மறைக்கப்படுகின்றபோது, சுக்தி என்ற வ்யாவகாரிக வஸ்து விசேஷாகாரவேஷத்துடன் அவச்சின்ன சைதன்யம் அறியப் படவில்லை. அதனுல், சுக்தி அவச்சின்ன சைதன்யத்தை ஆரோபிதவஸ்துவிற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்கிறேம். அத்யஸ்த்தமான ரஜாதாகாரவேஷத்துடன் கலந்து அறியப்படுகின்ற இதம் அவச்சின்ன சைதன்யத்தை ஆதாரம் என்று சொல்கிறேம். அதனுல் ஆதாரம் அதிஷ்ட்டானம் என்ற இரண்டிற்கும் இவ்விதம் பேதம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

ஆரோபிதமான ரஜதாம்ஸம் பாதிக்கப்படுகின்ற போது அதனுடன் சேர்ந்து ப்ரகாசித்த இதம்அம்ஸம் என்பது பாதிக்கப்படுவதில்லை. இதமம்ஸத்துடன் ஸம்பந்த முடையதாகஅறியப்பட்ட ரஜதம் பாதிக்கப்படுகின்ற போது, இதம் அம்ஸ ஸம்பந்தம் மட்டுமே பாதிக்கப்படுகிறது. இதமம்ஸம்பாதிக்கப்படுவதில்லை. ரஜதமும் அதன் ஸம்பந்தமும் பாதிக்கப்பட்ட பிறகு இதமம்ஸத்துடன் சேர்ந்த சுக்தி அம்ஸமானது அதிஷ்ட்டானமாத்ரமாக, பாதஅவதியாக, எஞ்சிஇருக்கின்றதால், சூன்யம் என்ற வாதத்திற்கு ஆதாரமே கிடையாது. இவ்விதம் யுக்தி அனுபவம் இவைகளைக் கொண்டு தத்வம் என்னவென்பதை விசாரித்து அறியவேண்டும்.

**32. அவதாரிகை :**

அதிஷ்ட்டானமே ஆதாரம் என்று சொல்லவேண்டும். ஏனெனில், அதிஷ்ட்டான ஸ்வரூபத்தை மறைத்து, எந்தவஸ்து அதில் ஆரோபம் செய்யப்படுகிறதோ அதைத்தான் அத்யஸ்த்தம் என்று சொல்கிறேம். ஆகவே, இவ்விதம் அதிஷ்டமானமென்ற வஸ்துவைக் காட்டிலும் வேருக, ஆதாரம் என்று வேறு எதையும் சொல்லமுடியாது. அதனுல் சூன்யம்தான் மிஞ்சுகிறது என்று சொல்லப்பட்டது சரியே. ஆகையால் இதற்கு பரிகாரம் ஏதும் சொல்லப்படவில்லையே என்றுல்,

**ச்லோகம் :**

**अधिष्ठानमाधारमात्रं यदि स्यात् प्रसज्येत सत्यं तदा चोद्यमेतत् ।**
**न चैतत्सकार्यस्य मोहस्य वस्तुन्यधिष्ठानगीर्गोचरे लोकसिद्धा ॥**

**ச்லோகார்த்தம் :** அதிஷ்ட்டானம்தான் ஆதாரம், ஆதாரமே அதிஷ்ட்டானம் என்றிருக்குமானுல் உன்னுடைய ஆக்ஷேபம் சரியென்றுகும். ஆனுல், கார்யத்துடன் கூடிய் அஞ்ஞானத்தினுல் எந்த வஸ்து ப்ரகாசிக்கின்றதோ அதை அதிஷ்ட்டானமென்று லோகத்தில் விவகாரம் செய்யப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** எந்தவஸ்துவில் மித்யாரஜதம் தோன்றுகிறதோ அந்த அதிஷ்ட்டானவஸ்துவின் ஸாமான்யாம்ஸம் எதுவோ அதையே ஆதாரம் என்று சொல்லப் படுகிறது. ஸாமான்யாம்ஸத்தை அத்யாஸமாக தோன்றுகின்றவஸ்துவிற்கு அதிஷ்ட்டானமாகச் சொல்லக்கூடாது.

'இதம்' என்ற ஸாமான்யாம்ஸம் என்பதே ஆதாரம். இந்த ஆதாரமே அதிஷ்ட்டானம் என்று சொல்லப்பட்டால் தான், அதற்கு பாதம் ஏற்படுகின்றபோது சூன்யம் என்பது மிஞ்சுகிறது என்று சொல்லப்படும், உன் வாதம் சித்திக்கும். ஆனுல் ஆதாராம்ஸமான

இதம் அம்ஸம் அதிஷ்ட்டானமென்று சொல்லப்படவில்லை. ஏனெனில் ரஜதம் என்ற விக்ஷேபத்துடன் கூடிய அஞ்ஞானமானது, எந்த அம்ஸத்தை மறைக்கின்றதால் ரஜதம் தோன்றுகிறதோ அந்த மறைபட்ட விசேஷாம்ஸமான சுக்தி என்பதுதான், ரஜத அத்யாஸத்திற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்லவேண்டும். ஏனெனில் சுக்தி என்ற விசேஷாம்ஸத்தையே ரஜதப்ரமத்திற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்லவேண்டும். இதம் அம்ஸம் என்பது ஆரோபிதமான ரஜதத்திற்கு ஆதாரம் என்று லோகத்திலும் ப்ரசித்தமாகச் சொல்லப்படுகிறது. இவ்விதமான, லோகந்யாயத்தைக் கொண்டே சாஸ்த்ரார்த்தங்களும் அறியப்படுவதால் இதில் தோஷம் ஏதுமில்லை.

**பூர்வ :** அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும், நிர்விபாகமான சைதன்யத்தையே "ஆச்ரயத்வ விஷயத்வ பாகினி நிர்விபாக சிதிரேவகேவலா" என்று ச்ருதிவாக்யமானது தெரிவிக்கின்றது. அதனுல் இங்கு ஸாமான்யாம்ஸம் விசேஷாம்ஸம் என்று விபாகம் செய்து அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று ச்ருதிவாக்யத்திற்கு முரண்பாடாக எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** அஞ்ஞானம் என்பது, ப்ரதிபிம்பசைதன்யமான ஜீவனை ஆச்ரயித்து இருப்பதாக ஒரு சிலரால் சொல்லப்படுகின்ற வாதத்தை கண்டிக்கின்ற முறையில் ச்ருதியானது 'நிர்விபாகசிதிரேவகேவல' என்று தெரிவிக்கின்ற வாக்யத்தைக் கொண்டு அந்த வாதத்தை நிராகரிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படும் ப்ரதிபிம்பவாதத்தில் என்ன தோஷம் ஸம்பவிக்கின்றதோ, அந்ததோஷம் ஆபாஸவாதத்தில் ஸம்பவிக்கமுடியாது என்பதால் அந்த ஆபாஸவாதத்தை அனுசரித்து, இந்த இடத்தில் அஞ்ஞானத்திற்கு அவச்சேதகமாக இருக்கின்ற இரண்டு அம்ஸத்தைக் கொண்டு, இதம் அவச்சின்ன சைதன்யமென்றும், சுக்திஅவச்சின்னசைதன்யம் என்றும் இரண்டிற்கும் பேதம் சொல்லப்படுகிறது. ஆகவே–விசேஷாம்ஸமான சுக்தி அவச்சின்னசைதன்யமே அதிஷ்ட்டானமென்றும்–ஸாமான்யாம்ஸமான இதம் அவச்சின்ன சைதன்யமே ஆதாரம் என்றும் ஆபாஸபக்ஷத்தை அனுசரித்து சொல்லப்படுவதால் ப்ரதிபிம்பவாதத்தில் ஏற்படும்தோஷத்திற்கு இடமில்லை. ஆகவே, 'நிர்விபாகசிதிரேவகேவலா' என்ற ச்ருதிவாக்யத்திற்கு எந்தவிதமான முரண்பாடும் கிடையாது.

இந்த விஷயத்தில் வேறு சிலர், சுக்தியுடன் தோன்றும் இதம் அம்ஸம் வேறு என்றும், ப்ரமகாலத்தில் ரஜதத்துடன் தோன்றும் இதம் அம்ஸம் வேறு என்றும் சொல்கிருர்கள். இவ்விதம் அவர்களால் சொல்லப்படுவதற்கு காரணம் என்னவென்ருல், ப்ராந்திஞான விஷயத்தில் அறியப்படும் 'இதம்' அம்ஸம் ஸத்யவஸ்துவுடன் சேர்ந்து அறியப்படும் இதம் அம்ஸத்தைக் காட்டிலும் வேறு என்று அவர்களால் சொல்லப்படுகிறது. அவ்விதம் சொல்லப்படவில்லையென்ருல், ஸத்யமான இதம் அம்ஸம் ப்ராந்தி ஞானத்தில் விஷயமாகிறதாகச் சொல்லநேரிடும். இந்தவிதம், ப்ராந்தியுடன் சேர்ந்து ப்ரகாசிக்கின்ற விஷயம் எதுவோ அது அவித்யாவ்ருத்திக்கு விஷயமாக ஆகின்றதால் இதம் அம்ஸமும் பாதிக்கப்படுவதாகச் சொல்லநேரிடும். அதற்காக இதம் அம்ஸம் ப்ராந்தி அல்ல என்று சொல்லப்படுமானுல் ஸத்யாம்ஸமான இந்த இதம் அம்ஸம் என்பது ப்ராந்தி ஞானத்தில் ப்ரகாசிக்க முடியாது. ஆனுல் ப்ரமஸ்தலத்தில் 'இது ரஜதம்' என்றே இதம் அம்ஸமும் அறியப்படுகின்றதால், ரஜதத்துடன் தோன்றும் இதம் அம்ஸமும், சுக்தியுடன் தோன்றும் இதம் அம்ஸமும் ஒன்றல்ல. இரண்டும் வேறு என்றே சொல்லவேண்டும்.

மேலும் சுக்தியுடன் சேர்ந்து அறியப்படும் இதம்அம்ஸம், ஸத்யாம்ஸமாக இருப்பதால் அந்த:கரணவ்ருத்தியினுல் ப்ரகாசிக்கின்றது என்றும், ரஜதத்துடன் சேர்ந்து தோன்றும் இதம்அம்ஸம் அவித்யாவ்ருத்தியினுல் ப்ரகாசிக்கிறது என்றும், சொல்ல வேண்டும். அவ்விதம் சொல்லப்படாமல், இதம்அம்ஸம் என்பதும், ஸத்யாம்ஸம் என்று சொல்லப்படுமானுல் இதம் என்பது ப்ரமாணவ்ருத்தியினுலும் ரஜதம் என்பது அவித்யா வ்ருத்தியினுலும், ஒரேகாலத்தில், ஒரேவஸ்துவில் இரண்டு விருத்தியும் ப்ரவர்த்திப்பதாகச் சொல்லநேரிடும். அதனுல் இதம் ரஜதம் என்ற ப்ராந்தி ஞானத்தில் அறியப்படும் இதம் அம்ஸம் வேறு, இதம் சுக்தி: என்ற யதார்த்த ஞானம் ஏற்படுகின்ற போது அறியப்படும் இதம் அம்ஸம் வேறு என்றே சொல்லவேண்டும். மேலும் இதம் என்பது தோன்ருமல் ரஜதம் என்பது மட்டும் தோன்றுவதாகவும் சொல்லமுடியாது என்று சொல்கிருர்கள்.
**சித்தா :** 'இதம் சுக்தி'. என்ற யதார்த்த ஞானம் ஏற்படுகின்ற போது, 'இதம் ரஜதம்' என்ற ப்ரமம் நிவர்த்திக்கின்றது என்பதற்காக இரண்டு இதம் அம்ஸம் இருப்பதாக ஒத்துக்கொள்ள வேண்டிய அவஸ்யமில்லே. அவ்விதம் இரண்டு இதமம்ஸம் இருப்பதாக யாராலும் அறியப்படவுமில்லே. ஆகவே 'இதம் ரஜதம்' என்று ப்ராந்திஞானம் ஏற்படுகின்ற ஸ்தலத்தில், இதம்அம்ஸம் ஸத்யம்; ரஜதாம்ஸம் அந்ருதம், என்பதை மேலே விளக்கப் போகிருேம். அதனுல் இரண்டு இதம் அம்ஸம் இருப்பதாக ஒப்புக்கொள்ளவேண்டிய அவஸ்யமுமில்லே. அவ்விதம் இரண்டு அம்ஸம் இருக்கிறது என்பதற்கு ப்ரமாணமுமில்லே. ஆகையினுல் 'இதம்' என்ற ஸாமான்யாம்ஸமானது ப்ரமம், ப்ரமை என்ற இரண்டிற்கும் ஸாதாரணம் என்றே சொல்லவேண்டும்.

மேலும், அவித்யாவ்ருத்தி என்பதும், அந்த:காணவ்ருத்தியென்பதும் ஒரே விஷயத்தில் ஒரே ஸமயத்தில் ப்ரவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் அந்த:கரணம் என்பதற்கும், அவித்யை என்பதற்கும் விரோதம் ஏதுமில்லே. அந்த:கரணவ்ருத்தி 'இதம்' என்று தெரிவிக்கலாம். அவித்யாவ்ருத்தியினுல் ரஜதம் தோன்றலாம். அந்த:கரண வ்ருத்தியானுலும் அவித்யாவ்ருத்தியானுலும்–இரண்டிற்கும் அவச்சேதகமான சைதன்யம் என்பது ஒன்றுதான். ஒரேசைதன்யத்தினுல்தான் இரண்டிற்கும் ப்ரகாசம் ஏற்படவேண்டும். அதனுல் இரண்டும் சேர்ந்து 'இதம் ரஜதம்' என்று ஞானம் ஏற்படலாம். இதேவிஷயத்தை சித்சுகாசாரியாராலும், சைதன்யஸம்ஸர்க்கம் தான் அத்யாஸமாகிறதேயன்றி சைதன்ய ஸ்வரூபம் அத்யஸ்த்தமில்லே என்று சொல்லப்படுகிறது. ஆகவே இதம் ரஜதம் என்று அத்யாஸம் ஏற்படுமிடத்தில் ரஜதம் என்பது பாதிக்கப்படுகின்றபோது இதம்அம்ஸ ஸம்ஸர்க்கமே பாதிக்கப்படுகிறது, இதம் அம்ஸம் பாதிக்கப்படவில்லே. அதனுல் இதம் அம்ஸம் இரண்டு என்று ஒத்துக்கொள்ள வேண்டிய அவஸ்யம் இல்லே.

இது, சுக்தி என்று ஞானம் ஏற்படவேண்டிய இடத்தில் 'இது ரஜதம்' என்று ப்ராந்திஞானம் ஏற்படுவதற்கு இதம் என்ற அம்ஸமே ஆதாரம். சுக்தி என்ற அம்ஸமே அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுவதால் ஆரோபிதவஸ்து பாதிக்கப்பட்டபோதிலும் அதிஷ்ட்டானமான சுக்தி அம்ஸம், பாதிக்கப்படாததால் சூன்யம் சித்திக்கிறது என்ற வாதத்திற்கே இங்கு இடமில்லே.

**33. அவதாரிகை :**

ஆதாரம் வேறு, அதிஷ்ட்டானம் வேறு என்று சொல்லப்படுவதை ஒப்புக் கொள்ளாவிடினும், ப்ராந்தி ஞானம் ஏற்படும் இடங்களில் ஸத்யமான வஸ்துவும் அந்ருதமான வஸ்துவும் இரண்டும் கலந்தே அறியப்படுகின்றதால், இது ரஜதமல்ல என்று ரஜதாம்ஸம் பாதிக்கப்படுகின்றபோது, ஸத்யாம்ஸத்துடன் ஸம்பந்தப்பட்ட ஸம்ஸர்க்கம் தான் பாதிக்கப் படுகிறது. ஆதாரத்தின் ஸ்வரூபமான இதம் என்ற அம்ஸம் பாதிக்கப்படுவதில்லை என்பதால் 'சூன்யம்' என்பது சித்திக்காது.

**ச்லோகம் :**

**किं चानृतद्वयमिहाध्यसितव्यमिष्टं स्याच्चेत्तदा भवति चोद्यमिदं त्वदीयम् ।**
**सत्यानृतात्मकमिदं मिथुनं मिथश्चेदध्यस्यते किमिति शुन्यकथाप्रसङ्गः ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரமஸ்தலத்தில், அந்ருதமான இரண்டு வஸ்துக்கள் அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுமானால் (சூன்யம்) உன்னுடைய ஆக்ஷேபம் பொருந்தும். ஆனால், ஸத்யம் அந்ருதம் என்ற இரண்டிற்கும் பரஸ்பர அத்யாஸம் சொல்லப்படுவதால் இந்த இடத்தில் சூன்யவாதத்திற்கு அவகாஸம் ஏது?

**வ்யாக்யானம் :** அதிஷ்ட்டானம், ஆதாரம் என்ற இரண்டும் ஒன்றே என்ற வாதத்தை ஒப்புக்கொண்ட போதிலும், சூன்யப்ரஸங்கத்திற்கு இங்கு அவகாஸமில்லை. ஆத்மா என்பது ப்ரத்யக் வஸ்து, அனாத்மா என்பது பராக்வஸ்து. இதில் ஆத்மா என்பது ஸத்யம். அனாத்மா என்பது மித்யை. இந்த இரண்டிற்கும் அன்யோன்யஅத்யாஸம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் பரஸ்பரம் அத்யாஸம் இருக்கிறதென்று சொல்லப் படுவதற்காக இரண்டும் பாதிக்கப்படவேண்டும் என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் இரண்டு வஸ்துக்களும் (அந்ருதமாக) மித்யையாக இருந்தால்தான், இரண்டும் பாதிக்கப் படுவதாகச்சொல்லமுடியும். ஒன்று ஸத்யம், ஒன்று மித்யையானதால் இரண்டும் பாதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. மேலும் ஆத்மாவிற்கும், அனாத்மாவிற்கும் உண்மையில் பரஸ்பர அத்யாஸம் இருப்பதாகச் சொல்லப்படவில்லை. ஸத்யமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் ஸம்ஸ்ருஷ்ட்டரூபேண அந்ருதமாக இருந்தபோதிலும் (ஸ்வரூபேண) ஸ்வரூபத: ஸத்யம் என்றே அறிந்து கொள்ளவேண்டும். எந்த வஸ்து எதில் ஆரோபிதமாகின்றதோ, அந்த ஆரோபிதவஸ்துவிற்கு எது ஆதாரமோ அந்த ஆதாரமான வஸ்து ஆரோபிதத்திற்கு முன்னும் ஆரோபித காலத்திலும் ஆரோபித வஸ்து பாதிக்கப்பட்ட பிறகும் இருக்கவேண்டும். இந்தவிதம் முக்காலத்திலும் எந்த ஒரு வஸ்து பாதிக்கப்படவில்லையோ அதுவே ஆதாரவஸ்துவின் ஸ்வரூபம். ஆகவே, ஆரோபிதவஸ்து பாதிக்கப்படுகின்றபோது, ஆரோபிதவஸ்துவிற்கு, ஆதாரவஸ்துவுடன் தோன்றிய ஸம்ஸர்க்கம் (ஸம்பந்தம்) தான் பாதிக்கப்படுகிறதேயன்றி ஆதாரவஸ்துவிற்கு பாதம் என்பதே கிடையாது.

ப்ரத்யகாத்மாவில் ப்ராக்வஸ்துவான அந்த:கரணம் என்பது ஸ்வரூபேண அத்யஸ்த்தமாகின்றதால் அந்த:கரணமே முற்றிலும் பாதிக்கப்படுகிறது. ப்ரத்யகாத்மாவிற்கு ஸம்ஸர்க்கேண அந்த:கரணத்துடன் அத்யாஸம் ஏற்படுகின்றதால் ஸம்ஸர்க்கம் மட்டுமே பாதிக்கப்படுகிறது. ஸ்வரூபம் பாதிக்கப்படவில்லை.

ஆகவே, ஸத்யம் அந்ருதம் என்ற இரண்டு வஸ்துவும் சேர்ந்தே ப்ரமம் ஏற்படுகின்றதால், அந்ருதாம்ஸம் மட்டுமே பாதிக்கப்படுகிறது. ஸத்யாம்ஸம் பாதிக்கப்பட வில்லையென்று சொல்லப்படுவதால் சூன்யவாதத்திற்கு இடமில்லை.

**34. அவதாரிகை :**

**பூர்வ :** இவ்விதம் ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் அன்யோன்ய அத்யாஸம் இருக்கிற தென்பதில் ப்ரமாணம் என்ன? மேலும் சுக்தி என்பதில் ரஜதம் என்ற அத்யாஸம் ஏற்படுமிடத்தில், இதம், ரஜதம் என்று இரண்டு அம்ஸம் அறியப்படுவது போல, 'அஹம்' என்பது எதில் அத்யஸ்த்தம் என்பது ஸ்பஷ்ட்டமாக அறியப்படவில்லையே?

**சித்தா :** சுத்தியே ரஜதமென்று அறியப்படும் ப்ரமஸ்தலத்தில், பரஸ்பர அத்யாஸம் இருக்கிறது. அதேபோல், அஹங்கார அத்யாஸத்திலும் இரண்டு அம்ஸம் இருக்க வேண்டும் என்பதை உதாரணத்தின் மூலமாகவே அறியலாம்.

**ச்லோகம் :**

इदमर्थवस्त्वपि भवेद्रजते परिकल्पितं रजतवास्त्वदमि ।
रजतभ्रमेऽस्य च परिस्फुरणान्न यदि स्फुरेन्न खलु शुक्तिरिव ॥

**ச்லோகார்த்தம் :** எப்படி ரஜதமானது இதம் அம்ஸத்தில் கல்பிதமாக இருக்கின்றதோ அதுபோலவே, இதமம்ஸம் என்பதும் ரஜதத்தில் கல்பிதமாக இருக்கிறதென்றே அறியவேண்டும். ஏனெனில், இதமம்ஸம் என்பதும், ரஜத ப்ரமத்தில் ப்ரகாசிக்கின்றது. அவ்விதம் இதமம்ஸம் என்பது, ரஜதத்தில் கல்பிதமாக இல்லாவிடில் ப்ரமஸ்தலத்தில் சுத்தியைப்போல், இதமம்ஸமும் ப்ரகாசிக்காமல் இருக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'இதம் ரஜதம்' என்று ப்ராந்தி ஞானம் ஏற்படும் இடத்தில் 'இது' என்ற அம்ஸமும், 'ரஜதம்' என்ற அம்ஸமும் ப்ரகாசிக்கின்றது. இதம் என்ற அம்ஸமும் ரஜதம் போல அத்யஸ்த்தம் என்று சொல்லாவிடில், இதம் அம்ஸமென்பதும் சுக்தி அம்ஸம் போல் (ப்ராந்தி ஞானத்தில்) ப்ரகாசிக்காமல் இருக்கவேண்டும். இதமம்ஸம், அத்யஸ்த்தமாக இல்லாவிடில் ரஜதத்துடன் சேர்ந்து இதம் என்று தோன்றமுடியாது. ஆகையால், இதமம்ஸம் ரஜதத்திலும் ரஜதாம்ஸம் இதம் என்பதிலும் இரண்டிற்கும் பரஸ்பரஅத்யாஸம் ஏற்படுகிறதென்றே சொல்லவேண்டும். இதில் ரஜதம் என்ற ஸ்வரூபமே இதமம்ஸத்தில் அத்யஸ்த்தமாகின்றது என்பதால் ரஜதம் ஸ்வரூபாத்யாஸம் என்று சொல்லப்படுகிறது. இதுபோல் இதம் என்பது ஸ்வரூபாத்யாஸமில்லை. ஏனெனில் இதமம்ஸம் என்பது சுக்தியைச் சேர்ந்தது. அதனால் இதம் அம்ஸத்தின் ஸம்பந்தம்தான் ரஜதத்தில் அத்யஸ்த்தமாகத் தோன்றுகிறது. அதனால் ஸம்ஸர்க்க அத்யாஸம் என்றே சொல்லப்படுகிறது. இந்தவிதம் ப்ராந்தி ஞானத்தில் இதம் ரஜதம் என்றும், ரஜதம் இதம் என்றும் இரண்டும் பரஸ்பர அத்யாஸத்தினால் அபேதமாக அறியப்பட்டபோதிலும், ஒன்று ஸ்வரூபேண அத்யஸ்த்தம் ஒன்று ஸம்ஸர்க்கேண அத்யஸ்த்தம் என்பதால், ரஜதம் பாதிக்கப்படுகின்றபோது இதமம்ஸம்பாதிக்கப் படவில்லை. அதன் ஸம்பந்தமே பாதிக்கப்படுகிறது. ஆகவே, இதம் ரஜதம் என்ற அத்யாஸத்தில் எப்படி பரஸ்பர அத்யாஸம் இருக்கின்றதோ அதுபோல் ஆத்மாவிற்கும் அஹங்காரத்திற்கும் பரஸ்பர அத்யாஸம் இருக்கிறதென்றே அறியவேண்டும். ஆத்மா என்பது ஸத்யம். பராக்வஸ்துவான அந்த:கரணம் என்பது ப்ரத்யகாத்மாவில் ஸ்வரூபேண அத்யஸ்த்தம். ஆனால் ப்ரத்யகாத்மாவானது பராக் வஸ்துவான அந்த:கரண ஸம்பந்தத்தினால் அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுவதால், அந்த:கரணம்போல ஸ்வரூபேண அத்யஸ்த்தமில்லை. ஸம்பந்தத்தினால் அத்யஸ்த்தம். ஸம்ஸர்க்கத்தினால் அத்யஸ்த்தமாக இருக்கின்றதால் அந்த:கரணமும் அதன் சம்பந்தமும் தான் பாதிக்கப்படுகிறது. அதனால் ஸத்யமான ப்ரத்யகாத்மாவிற்கு பாதம் என்பதே கிடையாது. ஆகவே, ஸ்வரூபேண அத்ய ஸ்த்தமில்லையென்பதால் ஸ்வரூபம் ஸத்யம்.

மேலும் அத்யஸ்த்தத்திற்கு ஆதாரமாக எது இருக்கின்றதோ அந்த வஸ்து முக்காலத்திலும் இருக்கின்றது. ஆனுல், ஆரோபித வஸ்து என்பது முன்னுலும் இல்லை பின்னுலும் இல்லை, நடுவில் தோன்றும் காலத்திலும் உண்மையில் இல்லை. ஆகவே, மித்யை என்ருலே, ஸத்யம் +அந்ருதம் என்ற இரண்டும் சேர்ந்ததுதான் என்பதால், அந்ருதமான வஸ்து பாதிக்கப்பட்டபோதிலும், ஸத்யமான வஸ்துவிற்கு ஒருபோதும் பாதம் என்பதே கிடையாது. ஆகையால் சூன்யவாதத்திற்கும் இடம் இல்லை.

**35. அவதாரிகை :**

இவ்விதம் அன்யோன்ய அத்யாஸம் என்பது சுத்திரஜத ப்ரமஸ்தலத்தில் எப்படி ஏற்படுகின்றதோ, அதுபோல் ப்ரத்யகாத்மாவிற்கும் அஹங்காரத்திற்கும் அன்யோன்ய அத்யாஸம் என்பது ஏற்படலாம் என்பதற்கு என்ன ப்ரமாணம்?

**ச்லோகம் :**

रजतप्रतीतिरिदमि प्रथते ननु यद्वदेवमिदमित्यपि धीः।
रजते तथा सति कथं न भवेदितरेतराध्यसननिर्णयधीः ॥

**ச்லோகார்த்தம் :** எப்படி ரஜதப்ரதீதி என்பது இதம் அம்ஸத்தில் ஏற்படுகிறதோ, அதுபோல் இதம் என்ற ப்ரதீதியும் ரஜதத்தில் ஏற்படுகிறது. இவ்விதம் இருக்கின்றபோது ஏன் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்று நிர்ணயம் செய்யமுடியாது?

**வ்யாக்யானம் :** அனுமானம் என்ற ப்ரமாணத்தினுல் பரஸ்பர அத்யாஸம், இருக்கின்றதென்று விளக்கப்படுகிறது. 'இதம் அம்ஸம் என்பதும் அத்யஸ்த்தம்தான்'. ஏனெனில், ப்ராந்தி ஞானத்தில் ப்ரகாசிக்கின்றதால் (ப்ராந்திஞானத்தில் ப்ரகாஸிக்கின்ற) சுக்திரஜதம் போல் என்று அன்வயத்ருஷ்ட்டாந்தமும் சொல்லலாம், அல்லது சுக்தியைப் போல, ப்ராந்திஞானத்தில் ப்ரகாசிக்காமல் இல்லை என்று வ்யதிரேகத்ருஷ்ட்டாந்தமும் சொல்லலாம்.

ப்ரமஸ்தலத்தில் எது அத்யஸ்த்தமோ அதுதான் அந்த ப்ராந்திஞானத்தில் ப்ரகாசிக்கின்றது. எது அத்யஸ்த்தமில்லையோ அது ப்ராந்தி ஞானத்தில் ப்ரகாசிப்பதில்லை.

இது ரஜதம் என்று ப்ரமம் ஏற்படுமிடத்தில் இதம் என்ற அம்ஸம் உண்மையில் சுக்தியைச் சேர்ந்ததுதான், ஆனுல் அந்த இதம் என்ற அம்ஸத்தின் ஸம்பந்தம் ரஜதத்துடன் சேர்ந்து ப்ரகாசிக்கின்றதால், இது ரஜதம் என்று ப்ரகாசிக்கின்றது என்பது போல், 'ரஜதம் இது' என்று ப்ரகாசிக்கின்றது. இதமம்ஸம் என்பது அத்யஸ்த்தமாக இல்லாவிடில், ரஜத அத்யாஸத்துடன் சேர்ந்து இதம் என்பது ப்ரகாசிக்காது. சுக்தியைப் போல் இதம் அம்ஸமும் ப்ராந்தியில் ப்ரகாசிக்காமல் இருக்கவேண்டும். ஆகையால் பரஸ்பர அத்யாஸம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். மேலும் ப்ராந்தி ஞானத்தில் எவையெல்லாம் ப்ரகாசிக்கின்றதோ அவையெல்லாம் யதார்த்த ஞானம் ஏற்படுகின்ற போது பாதிக்கப்பட வேண்டும். இதில் ரஜதம் என்பது இதம் என்பதில் ஸ்வரூபேண அத்யஸ்த்தமானதால், ரஜதம் ஸ்வரூபேண முற்றிலும் பாதிக்கப்படுகிறது. இதம் அம்ஸம் என்பது ஸம்ஸர்க்கமாத்ரம் அத்யஸ்த்தமானதால் ரஜதம் பாதிக்கப்படுகின்றபோது இதமம்ஸத்துடன் ஏற்பட்ட ஸம்பந்தம் மட்டுமே பாதிக்கப்படுவதால் ஆதாரமான இதம் அம்ஸமும், அதிஷ்ட்டானமான சுக்தி அம்ஸமும் அபேதமாக அறியப்படுகிறது. இவ்விதம் லோகத்தில் இருக்கின்ற விவகாரத்தைக் கொண்டே பரஸ்பர அத்யாஸம் ஏற்படும் இடத்தில் இரண்டு அம்ஸம் இருக்கவேண்டும் என்பதை அனுமானத்தின்மூலம் அறியவேண்டும்.

**36. அவதாரிகை :**

மேலும், இவ்விதம் பரஸ்பரம் அர்த்தாத்யாஸம் ஏற்படுகிறது என்பதை அனுபவத்திலும் (ப்ரத்யக்ஷமாக) அறியலாம்.

**ச்லோகம் :** अध्यस्तमेव हि परिस्फुरति भ्रमेषु नान्यत्कथंचन परिस्फुरति भ्रमेषु ।
रज्जुत्वशुक्तिशकलत्वमरुक्षितित्वचन्द्रैकताप्रभृतिकानुपलम्भनेन ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமஸ்தலங்களில் எது அத்யஸ்த்தமோ அந்தவஸ்துதான் ப்ரகாசிக்கின்றதேயன்றி வேறு எதுவும் ப்ரகாசிப்பதில்லை. ஏனெனில் ஸர்ப்பம், ரஜதம், கானல்நீர், இரண்டு சந்திரன், முதலானவைகளே ப்ரமஸ்தலத்தில் தோன்றுகிறது. அந்த இடத்தில் ரஜ்ஜுத்வம் சுக்தித்வம் மருமரீசித்வம் ஏகசந்த்ரத்வம் என்பதெல்லாம் ப்ரகாசிப்பதில்லை என்பது அனுபவசித்தமாக அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** இதம் ரஜதம் என்றும், ரஜதம் இதம் என்றும் ஏற்படுகின்ற அத்யாஸத்தைக் கொண்டே பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை அறியலாம்.

**பூர்வ :** ப்ராந்திஞானத்தில் எது அறியப்படுகிறதோ அந்தவஸ்து அத்யஸ்த்தமாகத் தான் இருக்கவேண்டும் என்று சொல்லப்படுமானல், ப்ராந்திஞானத்தில் 'இதம்' என்ற அம்ஸமும் அறியப்படுகின்றதால், இதமம்ஸத்தையும் அத்யஸ்த்தம் என்று சொல்ல நேரிடுகிறதே? அப்படியானல் 'ஸர்வம் ஞானம் தர்மிணி அப்ராந்தம்' என்று சொல்லப்படும் ந்யாயத்திற்கு விரோதமாக இருக்கிறதே?

**சித்தா :** இதம் அம்ஸம் என்பது ஸ்வரூபேண ரஜதத்தில் அத்யஸ்த்தம் என்று சொல்லமுடியாது. இதமம்ஸ ஸம்ஸர்க்கம்தான் ரஜதத்துடன் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுவதால் ஸர்வம்ஞானம் தர்மிணி அப்ராந்தம் என்ற ந்யாயத்திற்கு விரோதமில்லை. இதம் என்ற தர்மிஅம்ஸம் ப்ராந்தி இல்லை. ஸம்ஸ்ருஷ்டரூபேண இதமம்ஸம் ப்ராந்திஞானத்தில் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை. அத்யஸ்த்தமாக இல்லாவிடில் ப்ராந்திஞானத்தில் தோன்றமுடியாது. ஸர்ப்பம் தோன்றுமானல் கயிறு தோன்றுவதில்லை. வெள்ளி தோன்றுமானல் கிளிஞ்சல் தோன்றுவதில்லை. ஆகவே ப்ராந்தி ஞானத்தில் எது அறியப்படுகிறதோ அது அத்யஸ்த்தம் என்றும், எது அறியப்பட வில்லையோ அது அனத்யஸ்த்தம் என்றும் அறியவேண்டும் என்று பூர்வ ஸ்லோகத்தில் அனுமானம் தர்க்கம் முதலியவைகளால் தெரிவிக்கப்பட்ட விஷயத்திற்கு அனுகூலமாக இந்த வ்யாப்தியைக் கொண்டு மேலும் விளக்கப்படுகிறது.

சுக்தி என்பதே ரஜதமாகத் தோன்றும் ப்ரமஸ்தலத்தில், சுக்தி என்பதின் உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்பட்டு இருப்பதால் ரஜதம் என்ற வேறோரு வஸ்துவாக (சுக்தியே) தோன்றுகிறது. அதாவது சுக்தித்வம் என்ற தன்மை மறைக்கப் பட்டு அதில் ரஜதத்வம் என்ற தன்மை தோன்றுகிறது. இதையே நிருபாதிகஅத்யாஸம் என்று சொல்லப்படும்.

வஸ்துவின் உண்மையான ஸ்வரூபம் (மறைபடாமல்) அறியப்படுகின்றபோதே ஸமீபத்திலிருக்கின்ற உபாதியின் ஸாமர்த்யத்தினலோ அல்லது கண்ணிலிருக்கின்ற தோஷத்தினலோ உண்மையாக இருக்கின்ற ஸ்வரூபத்திற்கு மாருக, விபரீதமாக தோன்றுமானல் அதையே ஸோபாதிக அத்யாஸம் என்று சொல்லப்படும். உதாரணமாக, சந்த்ரன் ஒன்றுதான் என்ற நிச்சய ஞானம் இருக்கின்றபோதே, கண்ணிலுள்ள தோஷத்தினல் இரண்டு சந்த்ரன் தோன்றுவது போலவும், எப்படி கண்ணுடி என்ற உபாதியில்

தோன்றும் முகம் என்பது உண்மையான முகமல்ல என்று அறிகின்றபோதே, தன்னையன்றி வேறு ஒரு முகம் இருப்பதாக அறியப்படுகிறதோ அதுபோல் உபாதிமூலம் ஏற்படும் அத்யாஸத்தை ஸோபாதிக அத்யாஸம் என்று சொல்லப்படும்.

த்ருஷ்டாந்தத்தில் சொல்லப்பட்டபடியே தார்ஷ்டாந்தத்திலும், ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் ஏற்படும் அத்யாஸம், அஜ்ஞானத்தினால் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்பட்டதால் ஏற்பட்ட அத்யாஸமாக இருப்பதால் சுக்தியில் தோன்றும் ரஜத அத்யாஸம் போல் நிருபாதிக அத்யாஸம் என்று அறியவேண்டும். ஆகவே, சுக்திரஜதப்ரம ஸ்தலத்தில் எப்படி பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறதோ, அதுபோல் ஆத்மாவிற்கும் அஹங்காரத்திற்கும் நிருபாதிக அத்யாஸம் இருக்கின்றதால் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

இவ்விதம் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகின்றதால்தான் இதம் என்பது வேறு, ரஜதம் என்பது வேறு என்று இரண்டு புத்திக்கு விஷயமாகாமல் எது இதம் என்று அறியப் படுகிறதோ அதுவே ரஜதம் என்றும், எது ரஜதம் என்று அறியப்படுகிறதோ அதுவே இதம் என்றும் அபேத ஞானம் ஏற்படுகிறது என்பது எல்லோருக்கும் அனுபவசித்தமாக இருக்கின்றது. இதேபோல் ப்ரத்யகாத்மாவிலும் அஹம் என்று அஹங்கார அத்யாஸமும், அஹங்காரத்தில் ஆத்ம அத்யாஸமும் பரஸ்பரம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். இந்த விஷயத்தில் அனுபவமே ப்ரமாணம்.

**37. அவதாரிகை :**

**பூர்வ :** சுக்தியே ரஜதம் என்று ப்ரமம் ஏற்படுகின்ற இடத்தில் இரண்டு அம்ஸம் இருப்பதாக அறியப்படுகிறது. அதுபோல் 'அஹம்' என்று ஏற்படும் ஞானத்தில் இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக அறியப்படவில்லையே?

**சித்தா :** ஆத்ம–அஹங்கார அத்யாஸம் என்பதும் சுக்திரஜதம் போல் நிருபாதிக அத்யாஸம் என்று சொல்லப்பட்டதால், (சுக்தி ரஜதம் போலவே) இந்த இடத்திலும் இரண்டு அம்ஸம் பரஸ்பர அத்யாஸமாகவே இருக்கின்றது என்பதை வேறொரு உதாரணத்தின் மூலம் விளக்குகின்றோம்.

**ச்லோகம் :**

इतरेतराध्यसनमेव तत श्चितिचेत्ययोरपि भवेदुचितम् ।
रजतभ्रमादिषु तथावगमान्नहि कल्पना गुरुतरा घटते ॥

**ச்லோகார்த்தம் :** சைதன்யத்திற்கும், சைதன்யத்தினால் ப்ரகாசப்படுத்தப்படும் விஷயத்திற்கும் (சேத்யத்திற்கும்) பரஸ்பர அத்யாஸம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஏனெனில், ரஜதம் முதலான ப்ரமஸ்தலங்களில் அவ்விதமே அறியப்படுகின்றதால் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகின்றதென்றே சொல்லவேண்டுமே தவிர வேறு எந்த கல்பனையாலும் கௌரவதோஷம் ஏற்படுமானதால் வேறு எதுவும் பொருந்தாது.

**வ்யாக்யானம் :** சிதி என்ற சைதன்யத்திற்கும் சேத்யமான அஹங்காரத்திற்கும் ஏற்படுகின்ற அத்யாஸத்தினால்தான் அஹம் என்று அறியப்படுகிறது. ஏனெனில், ரஜதம் என்பது எப்படி அத்யாஸமோ அதுபோல் 'அஹம்' என்பதும் அத்யாஸமாக இருப்பதால் அஹம் என்ற அஹங்காரத்திற்கும், சைதன்யத்திற்கும் இதர இதர அத்யாஸம் இருக்கின்றதாக சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லாவிடில் அத்யாஸம் ஏற்படும் இடங்களில் இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக சொல்லமுடியாது.

'அஹம் ஜானுமி, என்று சொல்லுமிடத்தில் ஜடமான அஹங்காரம் என்பதற்கு அறிகின்ற தன்மை இருப்பதாகச் சொல்லமுடியாது. அறிகிறேன் என்று சொல்லுகின்ற போதே அதில் சைதன்யாம்ஸம் இருக்கின்றது என்றும், அறிகின்ற க்ரியை என்பது அந்த:கரணத்தில்தான் ஏற்படும் என்பதையும் விவேகித்து அறியப்படுமானுல் 'அஹம்ஜானுமி' என்பதாலேயே, இரண்டு அம்ஸங்கள் கலந்திருக்கிறது என்று அறிந்து கொள்ளலாம்.

**பூர்வ :** லோகத்தில் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுமிடத்தில் இரண்டு அம்ஸங்கள் இருக்கிறதென்பது ப்ரசித்தம்தான், ஆனுல் 'அஹம்' என்பதில் அஹங்காரத்திற்கும் ஆத்மாவிற்கும் பரஸ்பரம் அத்யாஸம் ஏற்படுவதால் 'அஹம்' என்பதிலும் இரண்டு அம்ஸம் இருப்பதாக சொல்லப்படுவதை அறிந்து கொள்ளமுடியவில்லை. இவ்விதம் இரண்டு அம்சங்கள் இருப்பதாக அறியப்படாதது மட்டுமல்ல 'அஹம்' என்று ஒரே அம்ஸமாகத்தான் அறியப் படுகிறது. ஆகவே, இதம் ரஜதம் என்பது போல் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுவதாகவும், ஸாமான்யாம்ஸம் விசேஷம்ஸம் என்ற இரண்டு அம்ஸங்கள் இருப்பதாகவும் அறியப்படவில்லை.

**சித்தா :** அஹம்ஜானுமி என்று, (அஹம் உபலபே என்று) சொல்லுமிடத்தில் சிதி, சேத்யம் என்ற இரண்டிற்கும் இதரஇதர அத்யாஸம் இருக்கிறதென்பதை விவேசனம் செய்தே அறியவேண்டும். இந்தவிதம் பரஸ்பர அத்யாஸம் இருக்கிறது என்பதற்காக சைதன்யத்திற்கு எவ்வித பாதமும் ஏற்படாது. எப்படி ரங்கம் என்ற ஈயம் என்பது வெள்ளி என்று பார்க்கப்படுமானுல் அவ்விதம் அறியப்படும் வெள்ளி என்பதில் எவ்வித பாதமும் ஏற்படுவதில்லையோ. அதேபோல் சைதன்யத்திற்கு எவ்வித ஹானியுமில்லை. மேலும் அஹம் என்ற சப்தம் ஒன்ருகவே அறியப்பட்டபோதிலும் சைதன்யாம்ஸம், ஜடாம்ஸம் என்ற இரண்டும் கலந்தே இருக்கின்றது. உதாரணமாக, பல கலர்கள் உள்ள வஸ்துவை 'சித்ரம்' என்று ஒரே சப்தத்தால் குறிக்கப்பட்ட போதிலும் பல கலர்கள் உள்ளது என்பது அறியப்படுகிறது. அதுபோல், அஹம் என்ற சப்தமும் சித்ரசப்தம் போல் ஒரே சப்தமாக இருந்தாலும் ஸபளஸ்வரூபத்தையே அறிவிக்கிறது என்று சொல்லவேண்டும். சுக்திரஜத ஸ்தலத்தில் நிருபாதிகஅத்யாஸம் என்று எப்படிச் சொல்லப்படுகிறதோ அதுபோல் நிருபாதிக அத்யாஸமாக இருக்கின்ற ஆத்ம–அஹங்கார அத்யாஸத்திலும் இரண்டு அம்ஸம் இருப்பதாக அறியவேண்டும். 'அஹம் உபலபே' என்ற அனுபவம் இருப்பதனுலேயே பாஹ்ய வஸ்துவான அஹங்காரத்திற்கும் ப்ரத்யக்வஸ்துவான ஆத்மாவிற்கும் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்பது அறியப்படுவதாலேயே இரண்டு அம்ஸம் இருப்பதாக சொல்லவேண்டும். இதம் ரஜதம் என்பது இந்த்ரியத்தினுல் அறியப்படுகிறது. அதுபோல் ஆத்மா எதற்கும் விஷயமாக இல்லாததால் (இந்திரிய கோரசரமல்ல) இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக அறியப்படவில்லை. மேலும் அகண்ட ஆனந்த அத்வயஸ்வரூபம் என்ற விசேஷாம்ஸம் அறியப்படாமல், ஸாமான்யமாக அஹமஹம் என்று அறியப்படுவதால் ஸாமான்ய விசேஷாம்ஸம் என்று இரண்டு அம்ஸங்கள் சொல்லப்படுவதில் பொருந்தாதது ஏதுமில்லை. நிருபாதிக அத்யாஸமானதால் பரஸ்பர அத்யாஸம் இருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

**38. அவதாரிகை :**

ஆத்மாவிற்கும் அனுத்மாவிற்கும் இதர்இதர அத்யாஸம் இருக்கிறதென்று சொல்லப்பட்ட விஷயத்தை இப்போது முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :** अनुभूतियुक्त्यनुमितित्रितयादितरेतराध्यसनसिद्धिरतः ।
चितिचेत्यवस्तुयुगलस्य न चेत् त्रितयस्य बाधनमिहाऽऽपतति ॥

**ச்லோகார்த்தம் :** அனுபவம், யுக்தி, அனுமானம், என்ற மூன்றினுலும் சைதன்யத்திற்கும்—சைதன்யத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படும் வஸ்துவிற்கும், பரஸ்பர அத்யாஸம் இருக்கிறதென்றே சித்திக்கின்றது. இவ்விதம் ஒத்துக்கொள்ளப்படவில்லையென்ருல் மூன்றும் (ப்ரமாணங்களும்) பாதிக்கப்படும்.

**வ்யாக்யானம் :** சிதி சேத்யம் என்ற இரண்டும் கலந்து பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்ற விஷயம் யுக்தி, அனுபவம், அனுமானம், என்ற மூன்று ப்ரமாணங்களினுலும் சித்திக்கின்றது. இதை ஒத்துக்கொள்ளப்படவில்லையென்ருல் ப்ரமாணங்களையே இல்லை என்று சொல்ல நேரிடும். ப்ரமாணங்கள் இல்லையானுல் வ்யவகாரம் என்பதே ஏற்படாது.

ஆகவே, 'ரஜதப்ரதீதி:இதமி' என்ற ச்லோகத்தில் 'இதம்ரஜதம்' என்று எல்லோருக்கும் அத்யாஸம் ஏற்படுகிறது என்ற அனுபவத்தைக் கொண்டு விளக்கப் பட்டிருக்கிறது. அதேபோல் 'பூர்வபத்ய இதமர்த்த வஸ்துவபி' என்ற ச்லோகத்தில் யுக்தியையும் அனுமானத்தையும் கொண்டு விளக்கப்பட்டிருக்கிறது.

இந்த மூன்று ப்ரமாணங்களைக் கொண்டும் சிதி சேத்யம் என்ற இரண்டிற்கும் அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை ஒத்துக்கொள்வதுதான் ந்யாயம். அவ்விதம் ஒத்துக் கொள்ளப்படவில்லையென்ருல், உன்னுடைய வாதம் ப்ரமாணங்களுக்கு விரோதம் என்றே சொல்லவேண்டும்.

**39. அவதாரிகை :**

ஸ்வயம் ப்ரகாசமான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தில் அஞ்ஞாதாம்ஸம் இருப்பதாக ஒப்புக்கொண்டபோதிலும், ஸாத்ருஸ்யாதிரஹிதமாக இருப்பதாலும், அதிஷ்ட்டானமானது (நிரம்ஸமாக இருப்பதனுலும்) ஸாம்ஸமாக இல்லாததாலும், (ப்ரத்யக்ஸ்வரூபமாக இருப்பதாலும்) பராக்ஸ்வரூபமாக இல்லாததாலும், (விஷயியாக இருப்பதாலும்) விஷயமாக இல்லாததாலும், இப்பேர்ப்பட்ட ஆத்மஸ்வரூபத்தை ஆரோபிதத்திற்கு அதிஷ்ட்டானம் என்றும், அதில் அனுத்ம அத்யாஸம் ஏற்படுகிறதென்றும் எப்படிச் சொல்லமுடியும்? லோகத்தில் ஏற்படும் அத்யாஸங்கள் எல்லாம் பராக்வஸ்து விஷயமாக இருப்பதாலும், ஸாத்ருஸ்யமுள்ளதாகவும், ஸாவயவமாகவும், விஷயமாகவும், இருக்கின்றதால் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுவதாகவும் அதில் அதிஷ்ட்டானும்ஸம், ஆரோபிதாம்ஸம், என்பது இருப்பதாகவும் சொல்லமுடியும்.

இவைகளுக்கெல்லாம் நேர்விபரீதமான தன்மையிலுள்ள ஆத்மஸ்வரூபத்தில் அத்யாஸம் என்பது எப்படி ஏற்படமுடியும்?

**ச்லோகம் :**

सदृशसांशपराग्विषयेषु चेद् भवति दोषवशाज्जगति भ्रमः ।
भवतु तत्सकलं वदितुं वयं तदुपचारवशाद्दृशि शक्नुमः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரபஞ்ச விஷயத்தில் ஏற்படும் அத்யாஸங்கள் ஸாத்ருஸ்யம் ஸாம்ஸம் உடையதாகவும் பாஹ்ய வஸ்துக்களாகவும் தோஷம் காரணமாகவும் ப்ரமம் ஏற்படுகிறது என்று சொல்வது சரியே. ஆனுல் இதேபோல் ப்ரத்யகாத்மாவிலும் சாத்ருஸ்யம் முதலான ...வகள் அத்யாஸத்திற்கு காரணமாக இருக்கின்றதென்பதை உபசாராத் எங்களாலும் சொல்லமுடியும் என்பதை மேலே விளக்குகின்ருேம்.

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்மாவிலும் சொல்லப்பட்ட ஸாத்ருஸ்யாதிகள் காரணமாகவே அத்யாஸம் ஏற்படலாம் என்பதை ப்ரௌடிவாதத்தினுல் மேலே விளக்குகின்ருேம்.

ஸாத்ருஸ்யாதிகள் உண்மையில் ஆத்மஸ்வரூபத்தில் ஸம்பவிக்க முடியாது. ஆனுலும் வ்யவகார தசையில் இவைகளெல்லாம் ஸம்பவிக்கலாம் என்பதை தெரிவிக்கின்ருேம்.

அதாவது, தேஹம் இந்த்ரியம் முதலானவைகளைக்காட்டிலும் அந்த:கரணம் ப்ரத்யக்காக இருப்பதால் அந்தக் கரணத்திற்கும் ப்ரத்யகாத்மாவிற்கும் 'ப்ரத்யக்தவம்' என்பதில் ஸாத்ருஸ்யம் சொல்லலாம். அதேபோல் ஆத்மாவென்பது நித்யபுத்தஸ்வரூபம், அதேபோல், அந்த:கரணம் என்பதும் மற்ற கடபடாதி வஸ்துக்களைக்காட்டிலும் ஸ்வச்சமாக இருக்கின்றதால், ஸ்வச்சத்வம் என்ற தன்மை ஆத்மாவிற்கும் அந்த:கரணத்திற்கும் இருக்கின்றது. ஆத்மாவும் ஸூக்ஷ்மம், அந்த:கரணமும் ஸூக்ஷ்மம், என்று இவ்விதம் சைதன்யத்திற்கும் அந்த:கரணத்திற்கும் ஸாத்ருஸ்யம் இருப்பதாகவே சொல்லலாம்.

இதேபோல், அகண்ட சைதன்யம் நிரம்ஸமாக இருந்தபோதிலும் ஈச்வரத்வம் ஜீவத்வம் ப்ரஹ்மத்வம் என்று பல அம்ஸங்கள் இருப்பதாகவே விவகார தசையில் அறியப்படுவதால் ஸாம்ஸம் என்று சொல்லலாம். அந்த:கரணத்தில் சைதன்யப்ரதிபலனம் ஏற்படுகின்றபோது 'அஹம்' என்று அந்த:கரணத்துடன்கூடிய சைதன்யம் பாஹ்யமாகவே (ஸ்பஷ்ட்டமாகவே) அறியப்படுகிறது. ஆகவே, பராக்வஸ்துவென்றும் சொல்லலாம். பராக்காக அறியப் படுவதாலேயே விஷயம் என்றும் சொல்லலாம். ஆகவே, உண்மையில் ஆத்மவஸ்துவில் இந்த தன்மைகள் எதுவுமில்லையென்ருலும், வ்யவகார தசையில் ஆத்மாவில் அத்யஸ்த்தமான அந்த:கரணத்தினுல் இவ்வித விவகாரங்கள் இருப்பதாக அறியப்படுகிறது. இப்பேர்ப்பட்ட அத்யாஸம் அனுதிகாலமாக ஏற்பட்டிருப்பதால் ஸம்ஸ்க்காரமும் இருக்கிறதென்றே சொல்லலாம். இந்தவிதம் ஆத்ம அனுத்ம அத்யாஸம் ஏற்பட வேண்டுமானுல், சாத்ருஸ்யம் முதலான காரணங்கள் அவஸ்யம் வேண்டுமென்று ஆக்ஷேபம் செய்யப்பட்டதால் இந்த முறையில் பதில் சொல்லப்பட்டது. ஆனுல் அத்யாஸத்திற்கு இவைகள் எல்லாம் தேவையுமில்லை. இவைகள் முக்யகாரணமுமில்லை. ஆத்மஸ்வரூபத்தின் விசேஷாம்ஸம் அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டிருக்கிறதென்பது அனுபவசித்தம். இந்த அஞ்ஞானம் அனுதியாக அநிர்வசனீயமாக ஆத்மாவில் இருக்கின்றது. ஆகவே, அனுதிகாலந்தொட்டு இருக்கின்ற அஞ்ஞானமே பூர்வ, பூர்வஸம்ஸ்க்காரத்திற்கு காரணம் என்று சொல்லலாம். ஆகவே, அத்யாஸத்திற்கு ஸாத்ருஸ்யாதிகள் அவஸ்யம் வேண்டுமென்று செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு (ப்ரௌடிவாதேன) இந்த விதம் பதில் சொல்லப்பட்டது.

**40. அவதாரிகை :**

ஆத்மசைதன்யத்திற்கும், அஹங்காராதி அனுத்மாவிற்கும், அத்யாஸம் ஏற்படுவதற்கு வேண்டியகாரணங்கள் இருப்பதாக ஒப்புக்கொள்ளப்படுமானுல் வேதாந்த சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படுமே? என்ருல், அவ்விதம், எவ்விதமான ஹானியும் ஏற்படமுடியாது என்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अपिच भाष्यकृदेव तदब्रवीद्विषयताद्युपचारसमाश्रयात् ।
स्ववचसैव न तावदिति ब्रुवन्सकलमात्मनि विभ्रमसिद्धये ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மசைதன்யம் அஸ்மத்ப்ரத்யயத்திற்கு விஷயமாகின்றதால், ஆத்மா அவிஷயம் என்ருலும், விஷயம் என்று உபசாராத் சொல்லலாம் என்பதை பாஷ்யகாரரே

தெரிவிக்கின்றார். ஆகையால் ஆத்மாவில் அத்யாஸம் ஏற்படுவதற்குரிய காரணங்கள் இருப்பதாக (பாஷ்யகாரரே) ஆசார்யராலேயே தெரிவிக்கப்படுவதால் சித்தாந்தஹானி ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** ஆத்ம அனாத்ம அத்யாஸம் ஏற்படுகிறது என்ற விஷயத்தில், சாத்ருஸ்யாதிகள் இருப்பதாகச் சொல்லலாம் என்பதை பாஷ்யகாரரே தெரிவிக்கின்றார். ஆகையால் உண்மையில் எவ்வித தன்மைகளும் ஆத்ம சைதன்யத்தில் இல்லையென்றாலும் விவகார தசையில் உபசாராத் சொல்லப்படுவதில் எவ்விதமான சித்தாந்த ஹானியும் ஏற்படாது. இந்தவிஷயம் என்னால் சொல்லப்பட்டதல்ல. சூத்ரபாஷ்யத்தில் ஆரம்பத்திலுள்ள, அத்யாஸபாஷ்யத்தில் இந்த விஷயம் பற்றி வெகு விஸ்த்தாரமாக விசாரிக்கப்பட்டிருக்கின்றது. அந்த இடத்தில் அத்யாஸத்திற்கு சாத்ருஸ்யாதிகள் அவஸ்யம் வேண்டுமென்று சொல்லப்படுமானால் சாத்ருஸ்யாதிகள் இருப்பதாக உபசாராத் ஒப்புக்கொள்ளலாம் என்பதை ஆசார்யராலேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஸாத்ருஸ்யம் என்றாலே சில அம்ஸத்தில் ஒற்றுமை சில அம்ஸத்தில் வேற்றுமையும் இருக்கவேண்டுமேதவிர ஸர்வாம்ஸத்திலும் ஒற்றுமை இருக்கவேண்டுமென்று சொல்வதற்கு முடியாது.

ஆத்மா என்பது நிரம்ஸம், நிர்விசேஷம் ஏகரஸம் அகண்டம் என்பதே உண்மை. ஆனால் அஞ்ஞான ஸம்பந்தத்தினால் நிரம்ஸமான ஆத்மாவில் அஞ்ஞாதமான அம்ஸம் என்றும், ஞாதமான அம்ஸம் என்று அம்ஸபேதங்கள் இருப்பதாக அறியப்படுகிறது. அதனால் நிர்விசேஷமான ஆத்மசைதன்யத்தில் ஸாமான்யாம்ஸம் விசேஷாம்ஸம் என்று இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக விவகாரம் செய்யப்படுகிறது. ஸ்வயம்ஜ்யோதிஸ்வரூபமான ஆத்மசைதன்யம் பரிபூரண பரப்ரஹ்மஸ்வரூபத்தில் நிர்விசேஷமாக, நிர்விகல்பகமாக அறியப்பட வில்லையென்றாலும், ஆத்மசைதன்யம் அந்த:கரணத்தில் ப்ரதிபலிக்கின்றபோது ஆத்ம சைதன்யமும் அந்த:கரணமும் ஒன்றாகவே சேர்ந்து 'அஹம்' என்று அறியப் படுகிறது. இவ்விதம் ஆத்மசைதன்யமானது அஹம் என்று அறியப்படுகின்ற காரணத்தினாலே அதை விஷயமென்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் ஆத்ம அனாத்ம அத்யாஸமானது, அனாதிகாலமாக இருக்கின்றதால் பூர்வபூர்வப்ரமஸம்ஸ்க்காரமும் இருக்கின்றது. இவ்விதம் அனுபவாஹிதஸம்ஸ்க்காரம் இருக்கின்றதால் ப்ரமையினால் ஏற்படும் ப்ரமாஹிதஸம்ஸ்காரம் என்பது தேவையில்லை.

**41. அவதாரிகை :**

அத்யாஸம் ஏற்படுவதற்கு ஸாத்ருஸ்யாதிகள் அவஸ்யம் இருக்கவேண்டுமென்று செய்யப்பட்ட ஆக்ஷேபத்தை வாதத்திற்காக ஒப்புக்கொண்டு, ஆத்ம அனாத்ம அத்யாஸத்திலும் ஸாத்ருஸ்யாதிகள் இருக்கிறதென்று உபசாராத் சொல்லப்பட்டது. ஆனால் உண்மையில் அத்யாஸத்திற்கு இவைகள் எல்லாம் காரணமாக ஆகாது. எந்த இடத்தில் அத்யாஸமானது அபரோக்ஷமாக ஏற்படுகிறதோ, அந்த இடத்தில், அதற்கு அதிஷ்ட்டானமாக இருக்கின்ற வஸ்து அபரோக்ஷமாக அறியப்படவேண்டுமென்பது ஒன்றே அத்யாஸத்திற்கு காரணம். அதனால் ஸாத்ருஸ்யம் முதலான எதுவும் இருக்க வேண்டுமென்பது அவஸ்யமே இல்லை.

**ச்லோகம் :**

अपरोक्षरूपविषयभ्रमधीरपरोक्षमास्पदमपेक्ष्य भवेत् ।
मनसः स्वतो नयनतो यदि वा स्वपनभ्रमादिषु तथा प्रथिते: ॥

**ச்லோகார்த்தம் :** அபரோக்ஷரூப விஷயமான ப்ரமமானது, ஸ்வயமாகவோ மனஸினாலோ கண்ணினாலோ அபரோக்ஷமாகின்ற அதிஷ்ட்டானத்தை அபேக்ஷித்தே

ஸம்பவிக்கின்றது. ஸ்வப்னம் முதலான ப்ரமங்களும் இவ்விதமே ஏற்படுகின்றதால் அத்யாஸம் ஏற்படுவதற்கு வஸ்து அபரோக்ஷமாக இருக்கவேண்டுமென்பதுதான் முக்யகாரணம்.

**வ்யாக்யானம் :** அத்யாஸம் ஏற்படும் இடங்களில் அபரோக்ஷமான ரூபத்தையோ, அல்லது அபரோக்ஷமான வேறு விஷயத்தையோதான் (ப்ராந்தி) ப்ரமஞானம் அபேக்ஷிக்கின்றது. ஆரோபித வஸ்துவிற்கு எது அதிஷ்ட்டானமாக இருக்கின்றதோ அந்தவஸ்து அபரோக்ஷமாக அறியப்படவேண்டும் என்பதே அத்யாஸத்திற்கு முக்யகாரணம். இதைத் தவிர, இந்த்ரியத்தினுல் க்ரஹிக்கப்படும் விஷயத்தில்தான் அத்யாஸம் ஏற்படும் என்றோ ஸாத்ருஸ்யாதிகள் இருந்தால் தான் அத்யாஸம் ஏற்படும் என்றோ அத்யாஸத்திற்கு இவைகளையெல்லாம் காரணமாகச் சொல்ல முடியாது.

**பூர்வ :** இந்த்ரியஸன்னிகர்ஷ ஜன்யஞானம் தான் ப்ரத்யக்ஷம் என்று சொல்லப்படுவதால், இந்த்ரிய அகோசரமான ஆத்மஸ்வரூபம் அபரோக்ஷம் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** வஸ்து என்பது, ஸ்வயமே அபரோக்ஷமாக இருக்கலாம். அல்லது சில வஸ்து மானஸப்ரத்யக்ஷமாகவும் இருக்கலாம். சில வஸ்து இந்த்ரியப்ரத்யக்ஷ விஷயமாகவும் இருக்கலாம். அதனுல் வஸ்துப்ரத்யக்ஷமாகின்ற விஷயத்தில் அந்தந்த வஸ்துவின் தன்மையைப் பொறுத்தே அபரோக்ஷமாகிறது என்பதால் எந்த வஸ்துவானுலும் இந்த்ரியத்தினுல்தான் ப்ரத்யக்ஷமாகவேண்டுமென்ற நியமங்கிடையாது. ஸ்வப்னுவஸ்தையில் ஸ்வப்னவிஷயங்கள் மானஸப்ரத்யக்ஷ விஷயமாக ஆகின்றது. ஜாக்ரத்தில் இந்த்ரியம் மனஸ் என்ற இரண்டினுலும் விஷயம் அபரோக்ஷமாகின்றது. ஆத்மசைதன்யம் என்பது ஸ்வப்ரகாசஸ்வரூபமானதால் ஸ்வயமே அபரோக்ஷமாக 'அஹமஹம்' என்று ப்ரகாசிக்கின்றது. ஆகவே ஸ்வயம்ப்ரகாசமான, ஆத்மஸ்வரூபம் அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றதால், (அறியப்படுவதால்) அதில் அனுத்ம அத்யாஸம் ஏற்படலாம்.

மேலும், அதிஷ்ட்டானம் ஆரோபிதம் என்ற இரண்டும் ஏகஇந்த்ரியத்தினுல் க்ரஹிக்கப்படவேண்டுமென்று நியமமாகச்சொல்லப்படுவதும் சரியல்ல. வெவ்வேறு வ்ருத்தி ஞானத்தினுல் க்ரஹிக்கப்படும் விஷயங்கள் எல்லாம் ஸ்வயம் ப்ரகாசமான விஷயமல்ல. ஆரோபிதத்திற்கு எது அதிஷ்ட்டானமோ அந்தவஸ்து, விஷயமாக இல்லாமல் ஸ்வயமே அபரோக்ஷமாக இருந்தாலும் அதில் ப்ரமம் ஏற்படலாம். அவித்யை என்ற தோஷத்தினுல், ஆத்ம அனுத்மாவிற்கு தாதாத்ம்ய அத்யாஸம் ஏற்படுகிறது என்பதை மேலேயும் விளக்கப்போகின்றோம். அதனுல் அத்யாஸம் ஏற்படுவதற்கு, வஸ்து அபரோக்ஷமாக இருக்கவேண்டும் என்பதே முக்யகாரணம்.

## 42. அவதாரிகை :

**பூர்வ :** ஆத்மாவிற்கு வேறுபட்ட வஸ்துக்கள் எல்லாமே ஜடமாக இருக்கின்றதால் அவைகள் ஸ்வயம்ப்ரகாசம் அல்ல என்பதால் ஸ்வயமே அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்ற ஆத்ம வஸ்துவில் அனுத்மவஸ்துவின் அத்யாஸம் அபரோக்ஷமாக ஏற்படுகிறது என்று எப்படிச் சொல்வது? இதை நிரூபணம் செய்வதற்கு என்ன உதாரணம் சொல்லமுடியும்?

**சித்தா :** இந்த விஷயத்தை "ஆத்மனிச ஏவம் விசித்ராஸ்சஹி" என்று ப்ரஹ்ம சூத்திரத்தில் சொல்லப்படுகின்ற ஸ்வப்ன ப்ரபஞ்சத்தை உதாரணமாகத் தெரிவித்து இதை மேலே விளக்குகின்றோம்.

**ச்லோகம் :**

स्वतोऽपरोक्षा चितिरत्र विभ्रमस्तथापि रूपाकृतिरेव जायते ।
मनोनिमित्तं स्वपने मुहुर्मुहुर्विनापि चक्षुर्विषयं स्वमास्पदम् ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபமான அபரோக்ஷமான ஆத்மஸ்வரூபத்தில் ஸ்வப்னப்ரபஞ்சம் ஆரோபிதமாகின்றது. இந்த்ரியாதிகளின் விவகாரமற்ற ஸ்வப்னாவஸ்தையில் மனஸ் என்ற உபாதியுடன் கூடிய சைதன்யத்தில், வாஸனாரூபமாக சூக்ஷ்மமாக இருக்கின்ற பதார்த்தங்கள் அத்யஸ்த்தம் ஆகின்றது என்றே சொல்லப்படவேண்டுமேயன்றி அதிஷ்ட்டான வஸ்து, மனஸினாலோ இந்த்ரியத்தினாலோ க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. இந்தவிதம் ஸ்வயம் அபரோக்ஷ வஸ்துவில் அத்யாஸம் ஏற்படுகிறதென்பதை ஸ்வப்ன த்ருஷ்ட்டாந்த மூலமாகவே அறியலாம்.

**வ்யாக்யானம் :** கேவலசைதன்யம் ஸ்வயம்ப்ரகாசகமாக அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றது. ஆகையால் மற்ற அனாத்மவஸ்துக்கள் போல் இந்திரியத்தினாலோ மனஸினாலோ ப்ரகாசிக்க வேண்டியஅவஸ்யமில்லை. ஆத்மவஸ்து இருக்கிறதா? இல்லையா? என்ற ஸந்தேகத்திற்கே இடமில்லையாகையால், ஆத்மவஸ்து ஸ்வயமே அபரோக்ஷமாக இருந்து, ஸர்வப்ரமத்திற்கும் அதிஷ்ட்டானமாக ஆகிறது. ரூபாதிரஹிதமான ஆத்மஸ்வரூபத்தில், அத்யாஸத்திற்கு காரணமாகச்சொல்லப்படும் சாத்ருஸ்யம் முதலானவைகள் இல்லையென்றாலும் ஸ்வப்னப்ரமம் ஏற்படுகிறது என்பது லோகப்ரசித்தம்.

இவ்விதம் ஸ்வப்னப்ரமம் ஏற்படுவதற்கு நித்ரை என்ற தோஷம் ஒன்றே காரணமாக ஆகிறது. உண்மையில் ஸ்வப்னபதார்த்தங்கள் இல்லாமல் இருந்தும் ரூபாதிரஹிதமாக இருந்தும் ரூபாதிகள் இருப்பதாகவும் அதை இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படுவது போலவும் ப்ரமம் ஏற்படுகிறது. உண்மையில் ஸ்வப்னபதார்த்தங்கள் இந்த்ரியாதிகளினாலோ மனஸினாலோ க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே, ஜாக்ரத்காலத்தில், எப்படி பல அம்ஸங்களுடன் கூடிய ரூபமுள்ள த்ரவ்யத்தை அதிஷ்ட்டானமாகக்கொண்டு ப்ரமம் ஏற்படுகிறதோ அதுபோல், ஸ்வப்னகாலத்தில் ப்ரமம் ஏற்படுகிறதென்று சொல்லமுடியாது. ஸ்வப்ன ப்ரமத்திற்கு ஸாத்ருஸ்யாதிகளை காரணமாகச் சொல்லமுடியாது. நித்ரை என்ற ஒரே தோஷந்தான் ஸ்வப்னப்ரமம் ஏற்படுவதற்கு காரணம் என்று தினந்தோறும் எல்லோராலும் அறியப்படும் உண்மையாக இருப்பதால், இதையே ச்ருதிவாக்யமும் "ஸஹிஸ்வப்னோ பூத்வா" என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் ஸ்வப்னப்ரமத்திற்கு நித்ரை என்ற தோஷத்தையும் காரணமாகச் சொல்லலாம், அல்லது ஏற்கனவே அனுபவிக்கப்பட்ட விஷயங்களின் வாஸனை என்பது மனஸில் சூக்ஷ்மரூபமாக இருக்கின்றதால்—அதை நிமித்தமாகக் கொண்டு ஸ்வப்னபதார்த்த அனுபவம் ஏற்படுவதாகவும் சொல்லலாம். தைஜஸன் என்ற பெயரையுடைய ஸ்வப்னாவஸ்த்தையிலுள்ள ஜீவனுக்கு ஸ்வப்னபதார்த்தங்கள் போக்யமாக இருக்கின்றது. ஆகவே, வாஸனாரூபமான பதார்த்தங்களை அனுபவிக்கின்றான் என்றே சொல்லப்படவேண்டும்.

**பூர்வ :** ஸ்வப்னப்ரமத்திற்கு அதிஷ்ட்டானமாக ஸ்வயம்ப்ரகாசமான சைதன்யம் என்று சொல்லப்படுவது ப்ரஹ்மசைதன்யமா? அல்லது ஜீவசைதன்யமா? ஜாக்ரத் ப்ரபஞ்சத்திற்கு எந்த ப்ரஹ்மசைதன்யம் அதிஷ்ட்டானமென்று சொல்லப்படுகிறதோ, அதுவே ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கும் அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுமானால் ஸ்வப்னப்ரபஞ்சத்தையும் வ்யாவகாரிகம் என்று சொல்லநேரிடும். வ்யாவகாரிகப்ரபஞ்சம் என்பது அஞ்ஞாதசத்தை உடையது. அதாவது, ஒருவஸ்து அந்த இடத்தில் அந்த ஸமயத்தில் இல்லையென்றாலும்,

வேறு ஒரு இடத்தில் இருப்பதாகச்சொல்லலாம் (மறைக்கப்பட்டிருப்பதாகச் சொல்லலாம்) அதுபோல் ஸ்வப்னபதார்த்தத்திற்கு அஞ்ஞாதஸத்தை இருப்பதாகச்சொல்லமுடியாது. (அந்த:கரண தர்மாணும் ப்ராதிபாஸிக வஸ்தூனும் அஞ்ஞாதஸத்தாநாஸ்தி) தெரிந்தால்தான் இருக்கிறதென்று சொல்லலாம். தெரியாவிட்டாலும் இருக்கிறதென்று சொல்வதற்கு முடியாது.

ஆகவே, ப்ராதிபாஸிகமான ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மசைதன்யம் அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுமானுல் வ்யாவகாரிக ப்ரபஞ்சம்போல் அஞ்ஞாதசத்தை இருப்பதாகச் சொல்லநேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானுல் ஸ்வப்னப்ரபஞ்சம் வ்யாவகாரிகம் என்று சொல்லவேண்டும். ஆனுல் ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கு விழித்தவுடன் பாதம் ஏற்படுவதால் ப்ரஹ்மசைதன்யம் அதிஷ்ட்டானமென்று சொல்லமுடியாது.

அதற்காக ஜீவசைதன்யத்தையே ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுமானுல் விழித்தவுடன் ஸ்வப்னப்ரபஞ்சம் நிவர்த்திக்கின்றதால் இவ்விதம் ஏற்படும் நிவர்த்தியை பாதம் என்று சொல்வதா? அல்லது லயம் என்று சொல்வதா?

(ப்ரஹ்மஞானத்தினுல் நிவர்த்திப்பது எதுவோ அதை லயம் என்றும் ப்ரஹ்ம ஞானத்தையன்றி வேறு ஞானத்தினுல் நிவர்த்திப்பது எதுவோ அதை பாதம் என்றும் சொல்கிறுர்கள். சில இடங்களில் இதை மாற்றியும் சொல்லப்படுகிறது.)

**சித்தா :** இந்த விஷயத்தில் ஒரு சிலருடைய அபிப்ருயம் என்னவென்றுல், ஆத்ம சைதன்யம் என்புது ஜாக்ரத், ஸ்வப்னம், சுஷுப்தி என்ற மூன்று அவஸ்த்தைகளிலும் மூன்றுவிதமான உபாதிகளுடன்கூடி விவகாரம் செய்கின்றது. இதில் ஜாக்ரத் அவஸ்த்தையில் ஸ்தூலமான அந்த:கரண உபஹிதமாகவும் ஸ்வப்னுவஸ்த்தையில் வாஸனுமய அந்த:கரண உபஹிதமாகவும் சுஷுப்தி அவஸ்த்தையில் சூக்ஷ்மஅந்த:கரண உபஹிதமாகவும் இருக்கின்றது.

ஆகவே, ஜாக்ரத் அவஸ்த்தோபஹிதமான சைதன்யம் ஸ்வப்னப்ரமத்திற்கு அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுகிறது. அதன்பிறகு ஸ்வப்னப்ரமத்திலிருந்து விழித்தவுடன், ஜாக்ரத்அவஸ்த்தை ஏற்படுகின்றபோது அஹம் சைத்ரன் என்ற அதிஷ்ட்டானபோதம் ஏற்படுகின்றது. இவ்விதம் ஜாக்ரத் போதம் ஏற்படுகின்றபோது ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கு பாதம் ஏற்படுகிறது. அதேபோல் ஜாக்ரத்ப்ரபஞ்சமும் ப்ரஹ்மபோதம் ஏற்படும் போது பாதிக்கப்படுகிறது என்றும் சொல்கிறுர்கள்.

**பூர்வ :** ஸ்வப்னப்ரபஞ்சம் போல் ஜாக்ரத்ப்ரபஞ்சம் என்பதும் பாதிக்கப்படுமானுல் ஸ்வப்னம் ஜாக்ரத் என்ற இரண்டிற்கும் என்ன வித்யாஸம்?

**சித்தா :** (ஸதி ப்ரமாத்ரிபாத்யமானத்வம் ஸ்வப்னம். ப்ரமாத்ராபாவேன பாத்யமானத்வம் ஜாக்ரத்.) அதாவது ஜாக்ரத் காலத்தில் ப்ரமாதா என்பவன் இருக்கின்றபோதே எது பாதிக்கப்படுகிறதோ, அது ஸ்வப்னப்ரபஞ்சம். எந்த ஜாக்ரத்ப்ரபஞ்சம் ப்ரமாதாவுடன் சேர்ந்து பாதிக்கப்படுகின்றதோ அதுவே ஜாக்ரத்ப்ரபஞ்சம். இந்தவிதம் ஜாக்ரத்ப்ரபஞ்சத்திற்கும் ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கும் வித்யாஸம் இருக்கின்றதென்று அறிந்துகொள்ளவேண்டும். மேலேயும் இந்தவிஷயத்தைப்பற்றி விசாரிக்கப்போகின்றதால் இங்கு அதிகம் விஸ்தரிக்கவில்லே.

மேலும், ஜாக்ரத் அவஸ்த்தையிலிருந்து ஸ்வப்னுவஸ்த்தை ஏற்படுகின்றபோது, சில ஸமயம் ஸ்வப்னத்திலிருந்து ஜாக்ரத்திற்கு வருவானுகில் அப்போது ஸ்வப்னப்ரபஞ்சத்திற்கு பாதம் ஏற்படுவதாகச் சொல்லலாம். ஆனுல் சில ஸமயம் ஸ்வப்னத்திலிருந்து சுஷுப்திக்கும் போகலாம் என்பதால் அந்த நிலேயில் 'அஹம்ப்ரமாதா' என்ற ஞானம் ஏற்படாததால், அந்த

நிலேயில் ஸ்வப்ன சிருஷ்டிக்கு லயம் என்று சொல்லலாம். ஆகவே, இந்த அபிப்ருயத்தைக் 'தொண்டு க்ஷீணே்து தத்ரலயமேதி' என்று மேலே சொல்லப்படுவதால் இந்த விஷயத்தில் பூர்வோத்தரவிரோதம் ஏதுமில்லே.

ஆகவே, ஸ்வயம் அபரோக்ஷமான ஆத்மவஸ்துவில் ஸ்வப்னப்ரமம் ஏற்படுகிறது என்பது அனுபவசித்தம். ஸ்வப்னுவஸ்த்தையில் இந்த்ரியங்கள் லயத்தை அடைகின்றதால், இந்த்ரியங்களால் ஆத்மசைதன்யம் அபரோக்ஷமாக அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. அதேபோல், ஜடமானமனஸ் என்பதனுலும் ஆத்மா ப்ரகாசிப்பதாகச் சொல்லமுடியாது. அதனுல் ஆத்மசைதன்யம் ஸ்வயம் அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றது என்பது சித்தம். மனஸினுலோ. இந்த்ரியத்தினுலோ ஆத்மா அறியப்படாததால் ஆத்மா என்பது எதற்கும் விஷயமல்ல. அவிஷயம் என்றே சித்திக்கின்றது. ஆகையால் ஸ்வப்னகாலத்தில் ரூபாதிகளை க்ரஹிக்கக்கூடிய இந்த்ரியங்கள் இல்லேயென்ருலும், வாஸனுமயமான வாஸனைகளுக்கு ஆச்ரயமான மனஸானது அந்தந்த வஸ்துவாகாரமாக பரிணுமத்தை அடைகிறது. இவைகள் உண்மையான பாஹ்யவஸ்துக்களாக இல்லாததால் அவைகள் மனஸினுல், தன்னிடமுள்ள வாஸனுமயமான விஷயங்களை அபிவ்யக்தி செய்கிறது என்று சொல்லலாமேயன்றி மனஸினுல் க்ரஹிக்கப்படுவதாகச்சொல்லமுடியாது. ஆகவே, ஸ்வப்னம் என்பது தினந்தோறும் எல்லோராலும் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படுகின்ற விஷயமாக இருப்பதால், இதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லே.

**43. அவதாரிகை :**

ஆரோபிதம், அதிஷ்ட்டானம் என்ற இரண்டும் ஏக இந்த்ரியக்ராஹ்யம் என்று சிலரால் சொல்லப்படுகிறது. அதில் வ்யபிசாரம் இருக்கின்றது. எப்படியெனில் மனஸ் என்பதையும் ஒரு ப்ரமாணமென்று ஒத்துக்கொள்ளவேண்டுமென்று வாதம் செய்பவர்கள் நீலம் முதலான ஆரோபிதங்களுக்கு அதிஷ்ட்டானமான ஆகாஸம் என்பது மனஸ் என்பதால் க்ரஹிக்கப்படுகிறதென்றும், நீலம் முதலான ஆரோபிதங்கள் சக்ஷுஸ்ஸினுல் க்ரஹிக்கப் படுகிறதென்றும் சொல்கிருர்கள். இவ்விதம் ஆரோபிதம் அதிஷ்ட்டானம் இரண்டும் ஏக இந்த்ரியக்ராஹ்யம் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

**मनोवगम्येऽप्यपरोक्षताबलात्तथाऽम्बरे रूपमुपोल्लिखन्भ्रमः ।**
**सितादिभेदैर्बहुधा समीक्ष्यते यथाऽक्षिगम्ये रजतादिविभ्रमः ॥**

**ச்லோகார்த்தம் :** மனஸினுல் அபரோக்ஷமாக அறியப்படும் ஆகாசத்தில் சக்ஷுஸ் முதலான இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படும் நீலம் முதலான ப்ரமம் ஏற்படலாம். அதேபோல் கண்ணினுல் அறியப்படும் அதிஷ்ட்டானத்தில் ரஜதம் முதலான ப்ரமங்களும் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** மானஸப்ரத்யக்ஷத்திற்கு விஷயமான ஆகாசம் என்பது அபரோக்ஷமாக அறியப்படுகிறது என்ற காரணத்தினுல் மட்டுமே, அதிஷ்ட்டானமான அந்த ஆகாசத்தில், கண்ணினுல் அறியப்படும் நீலம் வெளுப்பு சிகப்பு என்ற பல ரூபங்கள் ஆரோபம் செய்யப்படுகின்றது என்று அறியப்படுகிறது. ஆகவே, ப்ரமம் ஏற்படும் இடங்களில் எல்லாம் ஏக இந்த்ரியக்ரஹ்யமாகத்தான் இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லமுடியாது.

அத்யாஸம் என்பது ஸ்வத:அபரோக்ஷமான வஸ்துவிலும் ஏற்படலாம். மனஸினுல் அபரோக்ஷமாகின்றவஸ்துவிலும் ஏற்படலாம். சக்ஷுராதி இந்த்ரியங்களினுல் அபரோக்ஷ மாகின்ற வஸ்துவிலும் ஏற்படலாம் என்பதை கீழேயும் விளக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அத்யாஸத்திற்கு வஸ்து அப்ரோக்ஷமாக இருக்கவேண்டுமென்பதுதான் முக்யம்.

ஸ்வப்னப்ரபஞ்சம் என்பது ஸ்வத: அபரோக்ஷமான சைதன்யத்தை அதிஷ்ட்டான மாகக் கொண்டே அத்யஸ்த்தமாகிறது. அதேபோல் மானஸ ப்ரத்யக்ஷமான ஆகாசத்தில் நீலம் முதலான அத்யாஸம் ஏற்படுகிறது. அதேபோல், சுக்தி ரஜத ப்ரமஸ்தலத்தில் இந்த்ரியத்தினுல் அபரோக்ஷமாகின்ற வஸ்துவில் ப்ரமம் ஏற்ப்படுகிறது. அதனுல் அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாம் இந்த்ரியக்ராஹ்யமாக இருக்க வேண்டுமென்ற நியமம் கிடையாது.

**பூர்வ :** ஆகாசம் என்பது பாஹ்யமான விஷயமாக இருக்கின்றதால்—பாஹ்ய விஷயங்கள், இந்திரியஸஹாயமின்றி, மனஸ் என்பது மட்டும் ஸ்வதந்த்ரமாக க்ரஹிக்கின்றது என்று எப்படிச்சொல்லமுடியும்? ஆகவே, ஆகாசம் என்பது மனோவேத்யமல்ல. சாக்ஷியினுல் அறியப் படுவதாகவே சொல்லவேண்டும்.

**சித்தா :** ஆகாசம் என்பது கேவல சாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச் சொல்லமுடியாது. ஸர்வம் வஸ்து ஞாததயா, அஞ்ஞாததயா சாக்ஷிபாஸ்யம் என்றே சொல்ல வேண்டும். ஆனுல் பாஹ்யமான விஷயங்கள், இந்த்ரியங்கள், மனஸ் என்ற கரணங்கள் இல்லாமல் அறியப்படுமானுல் அந்த வஸ்து அஞ்ஞாதரூபத்தில் சாக்ஷியினுல் தான் அறியப்படுவதாகச் சொல்லவேண்டும். அதேபோல் பாஹ்யவிஷயங்கள் இந்திரியங்கள் மனஸ் என்ற கரணங்களினுல் ஞாதரூபத்தில் அறியப்பட வேண்டுமென்ருலும் அதுவும் சாக்ஷியினுல்தான் ப்ரகாசப்படுத்தப்படவேண்டும்.

ஆகவே, ஆகாசம் என்பது பாஹ்யவிஷயமாகவும், எல்லோராலும் அறியப்படும் விஷயமாக (ஞாதமாக) இருப்பதாலும் இந்த்ரியத்தினுல் க்ரஹிக்கக்கூடிய விஷயமாக இல்லாததாலும் மானஸப்ரத்யக்ஷம் என்றே சொல்லவேண்டும். மனஸ் என்ற கரணமின்றி பாஹ்யமான ஆகாசம் அறியப்படுமானுல், அந்த ஆகாசம் அஞ்ஞாதமாகவே அறியப்படுமேயன்றி ஞாதமாக அறியப்படுவதாகச்சொல்லமுடியாது. ஆகவே, அந்த:கரணம் என்ற ப்ரமாணத்தினுலேயே ஆகாசம் அறியப்படுகிறது.

**பூர்வ :** அந்த:கரணத்தில் அறியப்படும் சுகாதிகளும் பாஹ்யவிஷயமான சுக்தியில் தோன்றும் ரஜதம் முதலானவைகளும் சாக்ஷிவேத்யம் என்று சொல்லப்படுகிறது. சுகாதிகளோ, அல்லது ப்ராந்திஞானத்தில் தோன்றும் ரஜதம் முதலானவைகளோ, சக்ஷுஸ் என்ற இந்த்ரியத்தினுலோ, மனஸினுலோ க்ரஹிக்கப்படவில்லை. அவ்விதமிருந்தும் அவைகள் எல்லாம் ஞாதம் என்று தானே அறியப்படுகிறது? சாக்ஷியினுல் மட்டும் க்ரஹிக்கப்படுமானுல் அவைகள் அஞ்ஞாத மாகத்தான் அறியப்படும் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** சுகாதிகள் அந்த:கரணதர்மமாக இருக்கின்றதால், அவைகள் எல்லாம் சாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்று சொல்வதில் ஆக்ஷேபத்திற்கு இடமில்லை.

சுகாதிகள் எப்படி அந்த:கரணவ்ருத்தி பரிணாமமாக இருக்கின்றதோ அதேபோல் கல்பிதமான ரஜதம் முதலானவைகளும் அந்த:கரணத்திலுள்ள ஸம்ஸ்க்காரத்தின் காரணமாக அவித்யாபரிணாமமாக, அந்த:கரணத்தில்தான் உருவெடுக்கின்றதால், ரஜதாதிகளும், ஆந்தரவிஷயம் என்றே சொல்லவேண்டும். அதனுல் ரஜதாதிகள் சாக்ஷிபாஸ்யம் என்றே சொல்லப்படுகிறது.

ஏனெனில், அந்த:கரணத்திலுள்ள ஸம்ஸ்க்காரத்தினுல் அஞ்ஞானமே ரஜதாகாரமாக உருவெடுக்கின்றதால், அந்தரஜதம் அந்த:கரணத்தில்தான் இருக்கிறது. அதனுல் சாக்ஷிக்கும் அந்த:கரணத்திற்கும் மத்தியில் ஆவரணம் எதுவும் கிடையாதாகையால் சாக்ஷியினுல்தான் ப்ரகாசப்படுத்தப்படுகிறது.

ஆனல் பாஹ்யமான ஆகாசம் என்பதற்கு பாஹ்யமான ஆவரணம் இருக்கின்ற காரணத்தினல் பாஹ்ய ஆவரணம் என்பது அந்த:கரணவ்ருத்தி மூலமாகத்தான் நிவர்த்திக்கப் படவேண்டும். ஆகாசம் என்பது இந்த்ரியக்ராஹ்யமாக இல்லாததால், மனோவ்ருத்தி மூலமாகவே அறியப்படவேண்டும்.

**பூர்வ :** 'மனஸாஹ்யேவபச்யதி' என்று சொல்லப்பட்டபோதிலும், மனஸ் என்பது பாஹ்ய விஷயங்கள் எதையும் ஸ்வதந்த்ரமாக க்ரஹிக்கமுடியாது என்பதால், இந்த்ரிய அபேக்ஷை யின்றி ஆகாசத்தை மனஸ் என்பதால் மட்டும் எப்படிக்ரஹிக்க முடியும்? (ஆகாசம் என்பது ரூபமுள்ள த்ரவ்யமாக இல்லாததால் இந்த்ரியங்களாலும் எப்படி க்ரஹிக்கமுடியும்?)

**சித்தா :** இந்த்ரியங்கள் ரூபமுள்ள வஸ்துவைத்தான் க்ரஹிக்கும் என்பது சரியே. ஆனலும், ரூபமாக இல்லாத ரூபத்திலுள்ள ரூபத்தையும் சக்ஷுஸ்ப்ரகாசப்படுத்துகின்றது. அதாவது, சங்கு என்பது சுக்லவர்ணமுடையது. அதிலுள்ள சுக்லவர்ணமானது தோஷமுள்ள சக்ஷுஸ் என்பதால் பீதவர்ணமுள்ளதாக க்ரஹிக்கப்படுகிறது. இந்தவிதம் சங்கு என்பதின் உண்மையான நிறம் வெண்மையாக இருந்தும்கூட அந்த வெண்மை நிறம் க்ரஹிக்கப்படாமல், அதில் இல்லாத மஞ்சள் நிறம் என்ற வேறு ஒரு ரூபம் சக்ஷுஸ் என்பதால் க்ரஹிக்கப்படுகிறதே?

**பூர்வ :** சக்ஷுஸ் என்பது சங்கினுடைய உண்மையான ரூபத்தைத்தான் க்ரஹிக்கின்றது. ஆனல் அதில் உள்ள உண்மையான வெண்மை நிறமான்து மறைபட்டிருக்கின்றதால் அறியப்படவில்லை. அதனல் அதில் இல்லாத வேறொரு ரூபத்தை க்ரஹிப்பதாகச் சொல்ல முடியாது. சங்கினுடைய ரூபத்தையே சக்ஷுஸ்க்ரஹிப்பதாக சொல்லவேண்டும்.

**சித்தா :** சுக்லத்வம் என்பது மறைபட்டிருப்பதாகவும், அதனல் சுக்லத்வம் அறியப்படவில்லை என்றும், சுக்லத்வம் என்பது அனுத்பூதமாக இருந்தாலும் சக்ஷுஸ் என்பது சுக்லத்வமுள்ள சங்கைத்தான் க்ரஹிக்கின்றது என்று சொல்லப்படுமானல் லோகத்திலுள்ள அனுத்பூதமாக (மறைபட்டிருக்கின்ற) இருக்கின்ற ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்ஸம் என்ற எல்லாமே அந்தந்த இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படுவதாகவே சொல்ல நேரிடும்.

உதாரணமாக தேஜஸ் என்பதின் கார்யம் தான் ஸ்வர்ணம். தைஜஸம் என்பது வெளேர் என்று வெண்மையாக ப்ரகாசிக்கின்ற தன்மையுடையது. ஆனல் ஸ்வர்ணம் என்பதில் கலந்திருக்கின்ற பார்த்திவாம்ஸமான மஞ்சள் நிறம்தான் கண்ணினல் க்ரஹிக்கப் படுகிறது. வெளுப்புத்தன்மை கண்ணினல் அறியப்படவில்லையென்ருலும் ஸ்வர்ணம் அறியப்படுகின்றபோது தைஜஸாம்ஸமான வெண்மையென்பதும், கண்ணினல் க்ரஹிக்கப் படுவதாகவே சொல்லநேரிடும். ஆகவே, அங்கு (இல்லாத) கண்ணினல் க்ரஹிக்கப்படாத (அறியப்படாத) இல்லாதரூபத்தை கண்ணினல் க்ரஹிக்கப்படுகிறது என்று சொல்வது சரியல்ல. ஆகாசாதிகளுக்கு ஸ்வயமே ரூபமில்லை. ஆனலும் ஆலோகம் முதலான உபாதியின் மூலம், சக்ஷுஸ் என்பது. ஆலோகத்துடன் உபஹிதமாக இருக்கின்ற ஆகாசத்தை க்ரஹிக்கின்றது என்று சொல்லலாம். இதில் விரோதம் ஏதுமில்லை என்பதை பரமத, த்ருஷ்டியைக்கொண்டு அத்யாஸபாஷ்யத்தில் ஆசார்யாளால் சொல்லப்பட்டிருக் கின்றது. (ஆனலும் உண்மையென்னவென்ருல் ஆகாசம் என்பது மானஸப்ரத்யக்ஷ விஷயமேயன்றி · இந்த்ரியப்ரத்யக்ஷவிஷயமல்ல.) ஆகாசம் என்பது ப்ரத்யக்ஷமல்ல, அப்ரத்யக்ஷந்தான் என்று ஆசார்யாளால் சொல்லப்படுகிறது.

(ஆலோகம் முதலான உபாதி என்னவென்றால் ஆகாசத்தில் சூர்யவெளிச்சத்திலல் அங்கு பறக்கின்ற பக்ஷியானது கண்ணினுல், க்ரஹிக்கப்படுகின்றது. அதன்மூலம் ஆகாசம் க்ரஹிக்கப்படுகிறது என்பதையே ஆலோகாதி உபாதி மூலம் ஆகாசம் க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது.)

**பூர்வ :** ஆகாசம் என்பது ஸ்வயமே ரூபமில்லாததாக இருந்தபோதிலும் அன்யரூபமத்தைக் கொண்டு க்ரஹிக்கப்படலாம் என்று சொல்வது சரியல்ல. ரூபமுள்ள சங்கு என்பது இருக்கின்ற ரூபத்தில் அறியப்படாமல் வேறொரு ரூபத்தில் அறியப்படுவதாகச் சொல்லலாம். ஆனுல் ரூபமே இல்லாத ஆகாசம் சக்ஷுஸ்ஸினுல் அறியப்படுவதாகச் சொல்வதற்கு முடியாது.

**சித்தா :** சக்ஷுஸ் என்பது ரூபமுள்ள வஸ்துவைத்தான் க்ரஹிக்கும் என்று சொல்வது சரியே. ஆனுல் அந்த ரூபம் என்பது உண்மையில் இருக்கின்ற ரூபமா? அல்லது உண்மையில் இல்லாத ரூபமா? என்ற கேள்வி தேவையற்றது. ஆகாசம் என்பது ஸ்தூலரூபத்தில் இல்லை. உத்பூதரூபமாக இருந்தால்தான் கண்ணினுல், அந்த ரூபம் க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லமுடியும். ஆகாசம் என்பது உத்பூதரூபமாக இல்லாததால் கண்ணினுல் க்ரஹிக்கமுடியாது. மானஸப்ரத்யக்ஷவிஷயம் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

இவ்விதம் ஆகாசமானது, மனஸினுல் அபரோக்ஷமாக அறியப்படுகின்றதால், அந்த ஆகாசத்தில் நீலம் முதலான நிறங்களின் ரூபம் அத்யாஸம் செய்யப்படுகிறது. ஆகையால் அபரோக்ஷமாக அறியப்படும் வஸ்துவில் ஆரோபிதமான நீல ரூபாதிகள் அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும். அபரோக்ஷமாக ஆகாசம் அறியப்படவில்லையென்றால், அதில் நீலரூபாதிகள் அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றதென்றே எவராலும் சொல்ல முடியாது. அதிஷ்டானம் என்பது பரோக்ஷமாக இருக்குமானுல் அதில் அபரோக்ஷமாக ப்ரமம் ஏற்படமுடியாது. ஜடமான ஆகாசம் என்பது ஸ்வத:ப்ரகாசமுமில்லை, ஸ்வப்ரகாசமுமில்லை என்பதால் மானஸப்ரத்யக்ஷ விஷயம் என்றே சொல்லவேண்டும். மனஸ் என்பது பாஹ்ய விஷயமான, ஆகாசத்தை ஸ்வதந்த்ரமாக எப்படி க்ரஹிக்கமுடியும்? என்றால், மனஸ் என்பது, ரூபம் முதலானவைகளுடன் கூடியே பாஹ்ய வஸ்துக்களை ப்ரகாசிக்கச் செய்கின்றது. ஆனுலும் எந்த விஷயமாக இருந்தாலும், அந்தந்த விஷயாகாரமாக இருக்கின்ற சைதன்யம்தான் அஞ்ஞாதமாக இருக்கின்றது. ஆகாசம் என்பது மானஸப்ரத்யக்ஷ அவிஷயமாகிறது என்று சொல்லப்பட்ட போதிலும், பாஹ்யவிஷயங்களை மனஸ் என்பது வ்யாபிக்கின்றது என்பது தெளிவாக அறியப்படவில்லை. ஆனுலும் அகஸ்மாத்தாக இந்த்ரியபரதந்திரமாக மனஸ் என்பது ஆகாசத்தை வ்யாபிக்கின்றபோது, ஆகாஸ அவச்சின்ன சைதன்யமே ப்ரகாசிக்கின்றது. இவ்விதம் ஆகாசத்துடன் கூடிய சைதன்யம் ப்ரகாசிக்கின்றபோது அதில் நீலம் முதலான நிறங்கள் அத்யஸ்த்தமாகத்தோன்றுகிறது. ஆகவே, ஆகாசம் இந்த்ரியக்ராஹ்யமுமல்ல ஸ்வத:க்ராஹ்யமுமல்ல என்பதால் மனேக்ராஹ்யம் என்றே சித்திக்கின்றது.

ஆகவே, இந்தவிதம் சொல்லப்பட்ட ஆகாசத்ருஷ்டாந்தத்தின்மூலம் அதிஷ்டானம் என்பதும் ஆரோபிதம் என்பதும், ஏக இந்த்ரியக்ராஹ்யம் என்று சொல்லமுடியாது. அதனுல் ஒரே ஞானத்திற்கு விஷயமென்று சொல்வதற்கும் முடியாது என்பதும் இதனுலேயே சித்திக்கின்றது.

ஆகாச அவச்சின்ன சைதன்யம் அபரோக்ஷமாக அறியப்படுகின்றதால் அதில் சாக்ஷுஷப்ரத்யக்ஷவிஷயமான ரூபாதிகள் ஆரோபம் செய்யப்படுகிறது. அதனால் பலவித ப்ரமங்கள் ஏற்படுகிறது. சுக்தி அவச்சின்ன சைதன்யம் ப்ரத்யக்ஷமாக அறியப்படுவதால் அதில் ரஜதம் முதலான ப்ரமங்கள் ஏற்படுகிறது. அந்த ப்ரமம் சக்ஷுஸ் என்பதால் க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. அதுபோல் ஆகாசத்திலும் ரூபாதிப்ரமங்கள் சக்ஷுஸ்ஸினால் அறியப்படுவதாகச் சொல்லப்படுகிறது.

**44. அவதாரிகை :**

லோகத்தில் ப்ராந்திஞானம் ஏற்படுகின்ற இடத்தில் எந்த வஸ்துவானது ப்ரமத்திற்கு அதிஷ்டானமாக இருக்கின்றதோ அந்த வஸ்துவின் ஸாமான்யாம்ஸம் அறியப்பட்டு விசேஷாம்ஸம் அறியப்படாதகாரணத்தினால் ப்ரமம் ஏற்படுவதாகச் சொல்வது பொருந்தும். ஆனால் நிரம்ஸமான ஆத்மஸ்வரூபம் ஸாமான்யமாக அறியப்படுகிறது என்றும் விசேஷாம்ஸம் அறியப்படவில்லை என்றும் எப்படிச் சொல்வது? என்றால் ஆத்மா என்பது நிரம்ஸம்தான், அம்ஸபேதமில்லாத அபேத ஸ்வரூபந்தான், இருந்தாலும் ஆத்மஸ்வரூபமானது அறியப்பட்டதாகவும், அறியப்படாததாகவும் இருக்கின்றதால், ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞாத அம்ஸம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

ज्ञातेऽपि तावति ततोऽनतिरिक्तरूपेऽप्यज्ञानतः स्फुरणमस्फुरणं च दृष्टम् ।
दूरस्थयोर्ननु वनस्पतिवस्तुनोस्तद्भेदो न दृष्टिविषयोऽवगते च ते नः ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு வஸ்து ஞாதமாக இருந்தபோதிலும், அஞ்ஞானத்தினால் அந்த வஸ்துவில் ஸ்புரணம், அஸ்புரணம் என்ற இரண்டு தன்மைகள் இருக்கின்றதாக அறியப்படுகிறது. தூரத்திலிருக்கின்ற வ்ருக்ஷங்களைப் பார்க்கின்றபோது, மரங்கள் என்று அறியப்பட்டபோதிலும், அவைகளின் ஸ்வரூபமாகவே இருக்கின்ற பேதம் என்பது அறியப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** ஒரு வஸ்துவானது ஞாதமாக (அறியப்பட்டதாக) இருந்தால், அஞ்ஞாதமாக, (அறியப்படாததாக) இருக்கமுடியாது என்றோ, அல்லது அஞ்ஞாதமாக இருந்தால் ஞாதமாக இருக்காது என்றோ சொல்வதற்கு முடியாது. அஞ்ஞானத்தினால் ஒருவஸ்துவின் சில தன்மைகள் அறியப்படாமல் இருக்கலாம். உதாரணமாக, தூரத்திலுள்ள பல வ்ருக்ஷங்களைப் பார்க்கின்றபோது, வ்ருக்ஷங்கள் என்ற தன்மை மட்டுமே அறியப் படுகிறது. ஆனால் ஒவ்வொரு வ்ருக்ஷத்திலும், மற்ற வ்ருக்ஷத்தின் வேறுபட்ட தன்மையானது அந்தந்த வ்ருக்ஷத்தின் ஸ்வரூபமாகவே இருந்தும், அந்த விசேஷ தன்மைகள் தூரத்வாதிதோஷம் காரணமாக அறியப்படுவதில்லை. அதேபோல் ஆத்மஸ்வரூபத்திலும் ஸாமான்யத்தன்மை அறியப்படுகிறது என்றும் விசேஷத்தன்மை அறியப்படவில்லை என்றும் சொல்லப்படுவதில் பொருந்தாதது ஏதுமில்லை.

**பூர்வ :** வ்ருக்ஷமென்பதும் அதன்பேதம் என்பதும் ஒன்று என்று எப்படிச் சொல்ல முடியும்? இரண்டு அம்ஸங்கள் இருப்பதால், இரண்டும் ஒன்று என்று அபேதம் சொல்வது சரியல்ல.

**சித்தா :** வ்ருக்ஷம் என்பதும் அதன் பேதம் என்பதும் ஒன்று என்றும் சொல்ல முடியாது. அல்லது வேறு என்றும் நிரூபணம் செய்ய முடியாது. ஏனெனில் வ்ருக்ஷமும் அதன் பேதமும் வேறு என்று சொல்லப்படுமானால் வேறாகச் சொல்லப்படும் பேதமும், முதலில் இருக்கின்ற பேதமும் ஒன்றா? வேறா? என்ற கேள்வி ஏற்படும். இதை மேன்மேலும்

விசாரிக்கின்ற போது அனவஸ்த்தாதி தோஷங்கள் ஏற்படும். வ்ருக்ஷமும் பேதமும் ஒன்றுதான் என்றும் சொல்லமுடியாது. அதனுல் பேதம் என்பது அந்த வஸ்துவைக் காட்டிலும் ஒன்ரு? வேரு? என்றே நிரூபணம் செய்யமுடியாததால் பேதம் அநிர்வசனீயம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இந்த பேதம் என்பது வ்ருக்ஷத்தைக்காட்டிலும் வேறு என்று சொல்ல முடியாததால் பேதம், வ்ருக்ஷஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும். இந்தவிதம் ஸ்வரூபமாகவே பேதம் இருந்தும், வ்ருக்ஷம் என்பது அறியப்படுகின்றபோது, ஸாமான்யாம்ஸம் மட்டும் அறியப்படுகிறது. விசேஷமான பேதம் அறியப்படவில்லை என்றே சொல்லவேண்டும். வ்ருக்ஷம் என்றும் அதன் பேதம் என்றும் சப்தபேதம் இருந்தபோதிலும் ஸ்வரூபத்தில் எவ்வித பேதமும் கிடையாது என்பதை வேறு ஒரு த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

அதாவது ஒருவன் மற்ருெருவனிடம் ஒரு விஷயத்தைப்பற்றி தெரிவிக்கின்ருன். அப்போது அந்த வாக்யத்தைக் கேட்பவன் நீ என்ன சொல்கிருய்? அதன் அர்த்தம் என்னவென்று தெரியவில்லையே? என்று சொல்கிருன். அப்போது முதலில் அந்த வாக்யத்தைக்கேட்டும்கூட அந்தவாக்யத்தின் அர்த்தம் என்னவென்றே பூராவும் போதமாகவில்லை என்று சொல்வதற்கு முடியாது. ஆனுலும் அதன்தாத்பர்யார்த்தம் என்னவென்று அறியாததால் மறுபடியும் கேட்கிருன் என்றே சொல்ல வேண்டும். இவ்விதம் ஒருவனுல் செய்யப்படும் வாக்யப்ரயோகத்திலேயே அறியப்பட்ட அம்ஸம், அறியப்படாத அம்ஸம் என்று இரண்டுவிதவிவகாரம் இருக்கின்றதால், ஒரே வஸ்துவில் ஞாதாம்ஸம் அஞ்ஞாதாம்ஸம் என்று இரண்டு அம்ஸங்கள் எப்படி இருக்க முடியும்? என்ற கேள்விக்கே இடமில்லை. ஞானம் என்பது எப்படி ஒரு விஷயத்தைப் பற்றியதாக இருக்கின்றதோ அதேபோல் அஞ்ஞானம் என்பதும் ஒரு விஷயத்தைப் பற்றியதாகவே இருக்கவேண்டும்.

அதாவது 'ஞானம்' என்று பொதுவாகச் சொல்லமுடியாது. என்ன ஞானம்? என்று சொல்லவேண்டும். அதேபோல் அஞ்ஞானம் என்பது எந்த விஷயத்தைப் பற்றிய அஞ்ஞானம் என்று சொல்லவேண்டும். கிளிஞ்சலைப் பார்த்து வெள்ளி என்ற ப்ராந்தி ஞானம் ஏற்படுமிடத்தில் கிளிஞ்சலின்தன்மை அறியப்படாததால். கிளிஞ்சலின் அஞ்ஞானம் இருக்கிறதென்று சொல்கிருேம். அதேபோல், இது கிளிஞ்சல் என்று அறியப்படவேண்டிய இடத்தில் இது என்று மட்டும் அறியப்படுமானுல், இது என்ற ஸாமான்யதன்மைமட்டும் அறியப்படுவதால் ஸாமான்யஞானம் இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. ஆகவே, இது என்ற தன்மை ப்ரமாண கோசரமாக இருக்கின்றதால் ஞானத்திற்கு நிரூபகம், சுக்தித்வம் என்ற விசேஷத்தன்மை அறியப்படாததால் அஞ்ஞானத்திற்கு நிரூபகம்.

**பூர்வ :** பிறருடைய புத்தியிலுள்ள விசேஷார்த்தங்கள் என்னவென்று நம்மால் அறிந்துகொள்ள முடியாது. ஆகையால் விசேஷார்த்தம் அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** ஸர்வம் வஸ்து ஞாததயா அஞ்ஞாதயா சாக்ஷிபாஸ்யம் என்றே சொல்லப்படுகிறது. அதாவது, இது சுக்தி என்று அறியப்படாமல் இது ரஜதம் என்று ப்ராந்தி ஞானம் ஏற்படுமிடத்தில் சுக்தி தெரியவில்லை என்று ப்ரகாசிக்கின்ற போதும் சாக்ஷிபாஸ்யம்தான். ரஜதம் என்று ப்ரகாசிக்கின்றபோதும் சாக்ஷிபாஸ்யம்தான். ஆனுல் இது என்று அறியப் படுகின்றபோது ஏற்படுகின்ற ஞானம், ப்ரத்யக்ஷமாகவே 'இது' என்று அறிவிக்கின்றதால், அதை அந்த:கரண பாஸ்யம் என்று சொல்கிருேம். ஆகையால் எந்த வஸ்து உண்மையாக இருக்கின்றதோ அந்த வஸ்து அறியப்படாமல் இருக்குமானுல் அந்த அஞ்ஞானமும்

சாக்ஷியிஞல்தான் ப்ரகாசிக்கின்றது. இதேபோல் பிறருடைய அந்த:கரணத்திலுள்ள (புத்தியிலுள்ள) விசேஷார்த்தம் என்பதும் அறியப்படாததால் அஞ்ஞாததயா சாக்ஷிவேத்யம் என்றே சொல்லவேண்டும். சைதன்யம் என்பது அஞ்ஞானத்திஞல் மறைக்கப்பட்டிருக்கிறது என்ருலும், மறைக்கப்பட்ட சைதன்யம் அஞ்ஞானத்திற்கு விரோதியல்ல என்பது எல்லோருடைய அனுபவத்தைக் கொண்டே அறியலாம்.

தூரத்திலுள்ள ஸமுத்ரத்தைப் பார்க்கின்றபோது, அதை ஜலமென்று அறியாமல், பூமியென்றே பார்க்கிருன். ஆனல் அடிக்கடி அதைப்பார்த்தவனுக்கு இதுஸமுத்ரம் என்று அறியப்படுகின்றதால், அவனுக்கு ப்ரமம் ஏற்படுவதில்லை. இந்தவிதம் அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாமே, அறியப்பட்ட அம்ஸம் என்பதும் அறியப்படாத அம்ஸம் என்றும் இரண்டு அம்ஸங்கள் இருக்கிறது. அதேபோல் ஆத்மாவிலும் ஸ்வப்ரகாசஸ்வரூபமாக இருந்தும் அதில் அஹங்காராதிகளின் அத்யாஸம் ஏற்படுகின்ற போது, அஹமஹம் என்று ப்ரகாசித்தபோதிலும், அகண்டத்வம், அத்வயத்வம், ஆனந்தத்வம் என்பதெல்லாம் ஆத்ம ஸ்வரூபமாகவே இருந்தும் அவ்விதம் அறியப்படவில்லை என்பது சொல்லப்பட்ட த்ருஷ்ட்டாந்தங்களின் மூலமாகவே அறிந்து கொள்ளலாம்.

**45. அவதாரிகை :**

கிளிஞ்சலே, வெள்ளி என்று பார்க்கின்ற இடத்தில் 'இது' என்ற ஸாமான்யாம்ஸம் ஞாதாம்ஸம் என்றும், 'சுக்தி' என்ற விசேஷாம்ஸம் அஞ்ஞாதாம்ஸம் என்றும் இரண்டு அம்ஸம் இருப்பதாக இரண்டுவிதமான சப்தபேதத்திஞல் அம்ஸபேதம் இருக்கிறதென்று அறியப்படுகிறது. அதுபோல் ஆத்மாவில் இரண்டு அம்ஸம் இருப்பதாக அறியப்படவில்லை. ஆகவே, நிரம்ஸமான ஆத்மஸ்வரூபத்தில் ஞாதத்வம், அஞ்ஞாதத்வம், என்ற இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக எப்படிச் சொல்லமுடியும்? என்றால் த்ருஷ்ட்டாந்தத்தில், இரண்டு அம்ஸங்கள் இருப்பதாகச் சொல்லப்பட்ட போதிலும் அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாம் இரண்டு அம்ஸங்கள் (அம்ஸபேதம்) இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை.

**ச்லோகம் :**

यत्रापि दैवगतितोऽस्त्यतिरिक्तभावो रूपात्प्रतीतिविषयादितरत्र रूपे ।
तत्राप्यबोधघटनां प्रति नाङ्गभावस्तस्यातिरिक्तवपुषोऽपुनरुक्तरूपात् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த இடத்தில் அகஸ்மாத்தாக 'இது' என்ற ஸாமான்யரூபம் அறியப்பட்டும், சுக்தி என்ற விசேஷரூபம் அறியப்படாமல் இருக்கின்றதோ அந்த இடத்தில்தான் இரண்டு அம்ஸம் வெவ்வேருக அறியப்படுகிறது என்ருலும், அத்யாஸம் ஏற்படும் இடங்களில் எல்லாம், ஸாமான்யாம்ஸத்திற்கு வேருன விசேஷாம்ஸம் இருந்தால் தான் அத்யாஸம் ஏற்படும் என்று அத்யாஸத்திற்கு அங்கமாக, அம்ஸபேதத்தை சொல் வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** 'இது கிளிஞ்சல்' என்று ஞானம் ஏற்படவேண்டிய இடத்தில் 'இது வெள்ளி' என்று ஞானம் ஏற்படுகின்றதால் எதிரே இருக்கின்ற வஸ்து 'இது' என்று ப்ரகாசிக்கின்றது. ஆஞல் அதிலுள்ள கிளிஞ்சல் என்ற விசேஷத்தன்மை ப்ரகாசிக்கவில்லை என்பதையே ஞாதாம்ஸம் அஞ்ஞாதாம்ஸம் என்று இரண்டு அம்ஸபேதம் இருப்பதாக ப்ராந்தி ஞானவிஷயத்தில் சொல்லப்படுகிறது. இந்தவிதம் ஸாமான்யம் விசேஷம் என்ற சப்தபேதம் இருப்பதற்காக அந்த வஸ்துவில் இதமாகாரம் வேறு, சுக்தி ஆகாரம் வேறு என்று சொல்லமுடியாது. ஏனெனில் இது வெள்ளி என்று வெள்ளியுடன் சேர்ந்து அறியப்படும் 'இது'

என்ற அம்ஸம்தான் யதார்த்த ஞானம் ஏற்படுகின்றபோது இது சுக்தி என்று கிளிஞ்சலுடன் ஒன்ருகவே சேர்ந்து அறியப்படுகிறது. ஆகவே, ஸாமான்யாம்ஸம் என்பதும், விசேஷாம்ஸம் என்பதும் உண்மையில் வெவ்வேருக இருக்குமானுல் யதார்த்த ஞானம் ஏற்படுகின்றபோது ஒன்ருக (அபேதமாக) அறியப்படமுடியாது. அதனுல் சுக்தி ரஜதஸ்தலத்திலும் அம்ஸ பேதம் கிடையாது. 'இது' என்று எந்த வஸ்து அறியப்பட்டதோ, அதுவேதான் 'சுக்தி' ஆகையால் இதம் வேறு சுக்தி வேறு என்று பசுவிற்கும், குதிரைக்கும் எப்படி அத்யந்தபேதம் இருக்கிறதோ அதுபோல் அத்யந்தபேதம் இருப்பதாகச் சொல்ல முடியாது. அவ்விதபேதம் இருப்பதாகச் சொல்வதற்குரிய ப்ரமாணமும் கிடையாது.

மேலும், ஸாமான்யம் விசேஷம் என்ற இரண்டிற்கும் அத்யந்த பேதம் இருப்பதாகச் சொல்லப்படுமானுல், அந்த இரண்டிற்கும் ஸாமான்ய விசேஷபாவம் என்பதே சொல்ல முடியாது. ஆனுல் வ்யவகாரத்தில் ஒரு வஸ்து ஞாதமாகவும் அஞ்ஞாதமாகவும் இருக்கின்ற காரணத்திஞல் இவ்விதம் கல்பிக்கப்படுகிறதேயன்றி உண்மையில் வஸ்துவில் அம்ஸபேதம் ஏதுமில்லை. ஆகவே, இவ்விதம் சொல்லப்படுவதில் பொருந்ததாத விஷயம் ஏதுமில்லை.

**46. அவதாரிகை :**

இது கிளிஞ்சல் என்ற ஞானத்தில், இதந்தத்வம், சுக்தித்வம் என்ற இரண்டு தர்மங்கள் வெவ்வேருக இருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஏனெனில் இதந்தத்வம் என்பது ஞாததா அவச்சேதகம். (அதாவது இது என்ற தன்மை அறியப்பட்ட தன்மையாக இருக்கிறது) சுக்தித்வம் என்பது அஞ்ஞாதா அவச்சேதகம். (சுக்தி என்ற தன்மை அறியப்படாததன்மையுடன் கூடினதாக இருக்கிறது). இந்தவிதம் இரண்டிற்கும் தர்மபேதம் இருக்கின்ற போது இரண்டும் ஒன்றுதான் என்று எப்படிச் சொல்வது?

இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

शुक्तीदमंशात्पृथगप्रतीता त्रिकोणता स्यान्नतु वस्तुवृत्त्या ।
तथाऽपि तत्स्थं न पृथक्त्वमिष्टं तदप्रबुद्धत्वनिमित्तभूतम् ।।

**ச்லோகார்த்தம் :** அறியப்படாத, த்ரிகோணத்வாதிகள் அறியப்பட்ட சுக்தியின் இதமம்ஸத்திலிருந்து உண்மையில் வேறுபட்டது அல்ல. அவ்விதம் இருந்தபோதிலும் அவைகளின் பேதமானது, விசேஷாம்ஸத்தின் அஞ்ஞானத்திற்கு காரணமாக இருக்க முடியாது. (த்ரிகோணத்வாதிகள் அறியப்படாததற்கு இதமம்ஸமும் சுக்தி அம்ஸமும் வேருக இருப்பதே காரணம் என்று சொல்லமுடியாது.)

**வ்யாக்யானம் :** மேலே விசாரிக்கப்பட்ட விஷயத்தையே மேலும் விளக்கப்படுகிறது. உண்மையில் எதிரில் இருக்கின்ற கிளிஞ்சலானது. (கிளிஞ்சல் என்று அறியப்படாமல்) முதலில் 'இது' என்று பொதுவாக ஒரு வஸ்துவென்றே அறியப்படுகிறது. அப்போது அந்த கிளிஞ்சலிலுள்ள நீலத்ரிகோணத்வாதிகள் அறியப்படவில்லை என்ருலும், அந்த நீலத் வாதிகள் 'இது' என்று அறியப்பட்ட அம்ஸத்தைக் காட்டிலும் வேறல்ல.

'இது' என்ற சப்தமும் நீலப்ருஷ்ட்த்வாதிகளுடன் கூடிய சுக்தி என்ற சப்தமும் ப்ரயோகம் செய்யப்படுகின்றபோது பேதம் இருப்பதுபோல் தோன்றினுலும் எதிரே அறியப்படுகின்ற வஸ்துவில் எவ்வித பேதமும் கிடையாது. ஆகவே, ப்ரதீதமான அம்ஸம் என்றும் அப்ரதீதமான அம்ஸம் என்றும் ஒருவஸ்துவில் இரண்டு அம்ஸம் இருப்பதாக ஒப்புக்கொண்ட போதிலும்கூட (ப்ருதக்த்வம்) வேறுபட்ட தன்மைதான் அப்ரதீதிக்கு

(அறியப்படாததற்கு) காரணம் என்று சொல்லமுடியாது. ஆகவே கீழே சொல்லப்பட்ட வ்ருக்ஷத்ருஷ்ட்டாந்தத்தின் மூலமாகவே, அறியப்படாமல் இருப்பதற்கு, பேதம் தான் காரணம் என்று சொல்லமுடியாது என்பதை விளக்கப்பட்டிருக்கிறது.

**47. அவதாரிகை :**

ஒரு வஸ்து அறியப்படுவதற்கும், அறியப்படாததற்கும் பேதத்தை காரணமாகச் சொல்வதில் வ்யபிசாரதோஷமும் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

यतः प्रपश्यन्नपि भेदिनः स्वं वनस्पते रूपमभिन्नमस्मात् ।
न भेदमस्य प्रतिपद्यतेऽक्ष्णा वनस्पतेः पार्श्वगतात्परस्मात् ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு வ்ருக்ஷத்தைக்காட்டிலும் வேறாக இருக்கின்ற வ்ருக்ஷத்தைப்பார்க்கின்றபோது, அந்தவ்ருக்ஷமானது மிகவும் ஸமீபத்தில் இருந்த போதிலும் அந்த வ்ருக்ஷத்தில் (ஸ்வரூபமாகவே) அபேதமாகவே இருக்கின்றபேதம் சக்ஷுஸ் என்பதால் அறியப்படுவதில்லை. ஆகவே ஒரு வஸ்து அறியப்படாமல் இருப்பதற்கு பேதத்தை காரணமாகச் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** இந்த வ்ருக்ஷத்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டு முன்னாலேயே இந்த விஷயம் விளக்கப்பட்டிருக்கிறது. ஒரு விருக்ஷத்தைக் காட்டிலும் மற்றொரு விருக்ஷம் பேதமுள்ளது என்று சொல்லப்படுகிறது. இவ்வித பேதம் என்பது விருக்ஷத்தின் தர்மமானதால் வ்ருக்ஷத்தை தர்மி என்று சொல்கிறோம். அதனால் தர்மி என்பதைக் காட்டிலும் அதன் தர்மம் என்பது வேறல்ல. இவ்விதம் வ்ருக்ஷத்தின் பேதம் வ்ருக்ஷ தர்மமாகவே (ஸ்வரூபமாகவே) இருந்தும்கூட தூரத்திலிருந்து வ்ருக்ஷத்தைப் பார்க்கின்றபோது அந்த பேதம் அறியப்படவில்லை என்பதற்காக அறியப்படுவதற்கோ அறியப்படாமல் இருப்பதற்கோ (பேதம்) வேறாக இருப்பதுதான் காரணம் என்று சொல்வதற்கு முடியாது. மேலும், பேதம் என்பது ஒரு வஸ்துவின் ஸ்வரூபம் என்று சொல்லப்படுவதால், பேதமே அந்தவஸ்து என்றோ, அல்லது பேதம் அந்த வஸ்துவைக்காட்டிலும் வேறு என்றோ நிரூபணம் செய்யமுடியாததால், அநிர்வசனீயம் என்று சொல்லப்பட்டது. ஆகவே பேதம் என்பது ப்ரமாணத்தினால் நிரூபணம் செய்யமுடியாத காரணத்தினால் விவகார காலத்தில், ஸ்வரூபமென்றும் தர்மம் என்றும் விவகாரம் செய்யப்பட்டபோதிலும் பின்னத்வ அபின்னத்வாப்யாம் துர்வசனம் என்பதால் அநிர்வசனீயம் என்றே அறியப்படுகின்றது. ஆகவே அறியப்படுவதற்கும் அறியப்படாததற்கும் பேதம் காரணம் என்று சொல்லப்படுவதில் வ்யபிசாரம் இருக்கிறதென்பதை இந்த வ்ருக்ஷத்ருஷ்ட்டாந்தம் மூலம் விளக்கப்பட்டது.

**48. அவதாரிகை :**

பேதம் என்பது வஸ்து ஸ்வரூபம் என்று சொல்லப்படுவதை வேறு சில மதஸ்த்தர்கள் ஒப்புக்கொள்ளாமல் பேதம் என்பது வஸ்து ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறு என்று சொல்கிறார்கள். அவ்விதம் வேறு என்று அபிப்ராயமுள்ளவர்களும், எது ஞாதமாக இருக்கின்றதோ அதுவே அஞ்ஞாதமாகவும் இருக்கிறதென்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்பதை ஒரு த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** सप्रत्यभिज्ञनयनोत्थधियो घटादेः स्वाभाविकात्स्ववपुषोऽनतिरिक्तरूपः ।
स्थेमाऽप्रबोधविषयो विषयत्वमेतीत्यङ्गीकृतं ननु मितेऽपि घटादिकेऽर्थे ॥

**ச்லோகார்த்தம் :** கடம் முதலான பதார்த்தங்களை முதலில் பார்க்கின்றபோது கடம் என்று மட்டுமே அறியப்படுகிறதேயன்றி அந்த கடாதிகளின் ஸ்திரத்தன்மை என்பது, கடாதிகளிலிருந்து வேறுபடாமல் கடஸ்வரூபமாகவே இருந்தும் கூட, முதலில் அறியப் படுவதில்லை. பிறகு மறுபடியும் அதே கடத்தைப் பார்க்கின்றபோது தான், ப்ரத்யபிஞ்ஞையுடன் கூடிய புருஷயுக்திக்கு அதன் ஸ்திரத்தன்மையும் சேர்ந்து விஷயமாகிறது என்பதை எல்லோராலும் அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒரு வஸ்து அறியப்படுகின்றபோதே அதன் ஸ்வரூபமாகவே இருக்கின்ற தன்மைகளில் சில தன்மைகள் அறியப்பட்டும் சில தன்மைகள் அறியப் படாமலும் இருக்கலாம் என்பதை உதாகரணத்தின் மூலம் அறியலாம். ஒரு கடத்தைப் பார்க்கின்றபோது இது கடம் என்று மட்டுமே அறிகின்றுன். அதே கடத்தை மற்றொரு ஸமயம் பார்க்கின்றபோதுதான் 'அதே கடந்தான் இது' என்ற ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகின்றபோதுதான் அதன் ஸ்திரத்தன்மை அறியப்படுகிறது. கடம் என்பதும் அதன் ஸ்திரத்தன்மை என்பதும் கடத்தின் ஸ்வரூபமாகவே இருந்தும்கூட முதலில் கடத்தைப் பார்க்கின்றபோது அறியப்படவில்லையென்பதும் பின்னுல் அறியப்படுகிறது என்பதும், எல்லோராலும் அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆகவே, ஒருவஸ்து அறியப்பட்டும் அறியப்படாமலும் இருக்கலாம் என்ற விஷயம் எல்லோராலும் அங்கீகரிக்கப்படவேண்டும்.

**49. அவதாரிகை :**

அதிஷ்டானமான ஆத்மஸ்வரூபம் நிரம்ஸமாக இருந்தபோதிலும் அதில் அத்யாஸம் ஏற்படலாம் என்று சொல்லப்பட்ட விஷயத்தை இப்போதுமுடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

एवं स्फुरत्यपि दृगात्मनि तत्स्वरूपेणास्फूर्तिभाजि परिकल्पिततोपपन्ना ।
स्वाज्ञानतो जगदिदं परमेश्वरोऽसौ जीवोऽहमित्यपि विभागवतोऽल्पकस्य ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் ஞானஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்றதும் ஆனந்த ஸ்வரூபமாக ப்ரகாசிக்காமல் இருப்பதுமான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தில், இது ப்ரபஞ்சம் அது ஈச்வரன் நான் ஜீவன் என்ற பேதமும், பரிச்சின்னத்வமும், அஞ்ஞானத்தினுல் கல்பிதம் என்று சொல்லப்படுவதில் பொருந்தாதவிஷயம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** கீழே சொல்லப்பட்ட இரண்டு த்ருஷ்டாந்தங்களின் மூலம் ஸ்வயம் ப்ரகாசமாகவும் ஞானஸ்வரூபமாகவும் ஸர்வதா ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில், நித்யத்வம், முக்தத்வம், அத்வயத்வம் என்பது முதலான தன்மைகளும் ஆத்மஸ்வரூபமாகவே இருந்தும்கூட, ஆத்மா அஹமஹம் என்று ஸாமான்யமாக அறியப்பட்டும், அதன் விசேஷ தன்மைகள் அறியப்படவில்லையென்பதை இதன் மூலம் விளக்கப்பட்டது. ஆகவே, இந்த விதம் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபமானது அஞ்ஞானத்தினுல் அறியப்படாத காரணத்தினுல் ஜீவன் என்றும் ஈச்வரன் என்றும் ஜகத் என்றும் பேதங்கள் உள்ளதாக அறியப்படுகின்றது. அதனுல் பரிச்சின்னத்வம் ஸத்வயத்வம், அநித்யத்வம், முதலான தன்மைகள் ஆத்மாவில் அத்யஸ்த்தம் செய்யப் படுகின்றது என்பதை எல்லோரும் அவஸ்யம் ஒத்துக்கொள்ளவேண்டுமென்பதை இதுவரை சாதிக்கப்பட்டது.

**50. அவதாரிகை :**

இந்தவிதம் ப்ரத்யகாத்மாவில் அஞ்ஞானத்தின் காரணமாக பரிச்சின்னத்வாதி கார்யங்கள் அத்யஸ்த்தமாகின்றதால் அதன் காரணமாக ஏற்படும் பந்தம் என்பதும் அதன் கார்யம் என்ன என்பதையும் அதேபோல் முக்தி என்பதும் அதன் காரணம் என்ன என்பதையும் அதன் ப்ரயோஜனம் என்ன என்பதையும் மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अल्पं रूपं बन्धनं प्रत्यगात्मा बद्धोऽनेन स्वच्छचैतन्यमूर्तिः ।
स्वात्माज्ञानं कारणं बन्धनेऽस्य स्वात्मज्ञानात्तन्निवृत्तिश्च मुक्तिः ॥

**ச்லோகார்த்தம் :** அகண்டஸ்வரூபமானதும் சுத்த சைதன்யஸ்வரூபமாகவும் இருக்கின்ற ப்ரத்யகாத்மஸ்வரூபமானது தன்னிடம் அத்யஸ்த்தமான அஞ்ஞானத்தின் காரணமாக, பரிச்சின்னத்வமுடையதாக அறியப்படுவதே பந்தம். ஸ்வஸ்வரூப அஞ்ஞானமே பந்த காரணமானதால் ஸ்வஸ்வரூபஞானமே முக்தி. அதனால் அஞ்ஞானநிவர்த்தி என்பதே ப்ரயோஜனம்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பதே பந்தத்திற்கு காரணம் என்பதால் அஞ்ஞானத்தின் கார்யம், பந்தம். இந்த பந்தத்தினால் ஏற்படும் பலம் அனர்த்தகரம். (துக்கந்தான்). ஆகவே ஞானம் என்பதே முக்திக்குக் காரணம். ஞானத்தின் கார்யம் முக்தி. அதுவே சுகரூபம். முக்திக்குபலம் சுகம். இவ்விதம் பந்தம், முக்தி, என்ற இரண்டிற்கும் காரணம் என்னவென்பதையும் அதன் கார்யம் என்ன? அதன் பலன் என்ன என்பதையும் அறிந்துகொள்ளவேண்டும். அகண்ட ஆனந்தஸ்வரூபமான ப்ரத்யகாத்மாவானது நாமரூபாத்மகமாகவும், கர்த்ருத்வாதி தர்மங்கள் உடையதாகவும் பரிச்சின்னத்வமுள்ளதாகவும் அநித்யத்வமுள்ளதாகவும் அறியப்படுவதுதான் பந்தம்.

கர்த்ருத்வம் முதலான தர்மங்கள் இல்லாத அகண்டானந்த ஆத்மஸ்வரூபத்தில் தர்மிதர்மபாவம் என்பது அஞ்ஞானத்தினால் அத்யஸ்த்தமாக இருக்கிறது. இவ்விதம் அறியப்படுவதே பந்தம். அதன் பலன் அனர்த்தகரம். ஆத்மஸ்வரூபம் ஸ்வச்சமாக இருந்தும் தன்னை அஸ்வச்சமென்றும், விஞ்ஞஸ்வரூபனை தன்னை அஞ்ஞனென்றும் ஆனந்தஸ்வரூபமாக இருந்தும் பசிதாகம் முதலான துக்கஸ்வரூப முள்ளவனாகவும் தன்னை நினைத்து தீ பிடித்த சிரஸினால், தப்பிக்கப்படுகின்றவன்போல் துக்கத்தினால் அலறுகிறான். இப்பேர்ப்பட்ட பந்தத்தின் காரணமாகவே, ஜனனம், மரணம், என்ற துக்கத்தில் சுழன்று கொண்டிருக்கின்றான். இதுவே பந்தத்தினால் ஏற்படும் பலம்.

**பூர்வ :** கூடஸ்த்தசிதேகரஸஸ்வரூபமான ப்ரத்யகாத்மாவிற்கு இவ்வித அவலநிலை எப்படி ஏற்பட்டது?

**சித்தா :** ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயித்து (அதையே மறைக்கின்றதால்) அதையே விஷயமாகக் கொண்ட அஞ்ஞானம்தான் இந்த பந்தத்திற்கு காரணம்.

**பூர்வ :** அப்படியானால் ஸஹஜமாக ஆத்மஸ்வரூபத்திலிருக்கின்ற இந்த அஞ்ஞானத்தினால் ஆத்மஸ்வரூபம் மறைக்கப்பட்டதால் ஏற்பட்ட இந்த பந்தத்திற்கு எப்படி நிவர்த்தி ஏற்படும்?

**சித்தா :** ஸ்வஸ்வரூபஅஞ்ஞானமே இவ்வித பந்தத்திற்கு காரணம் என்று சொல்லப்பட்டதால், அத்வயஆனந்தப்ரஹ்மஸ்வரூபமே ப்ரத்யகாத்மா என்ற ஞானத்தினால், அஞ்ஞானமானது நாசமாகின்றதால் அதன் கார்யமாக ஏற்பட்ட பந்தமும் நிவர்த்திக்கின்றது. ஆகவே, ஸ்வஸ்ரூப ஞானம் என்பதே முக்தி. அதற்கு காரணம் ஸ்வரூபஞானம். அதன் பலன் பூர்ணசுகம்.

இவ்விதம் பந்தம் அதன் கார்யம் அதன் பலன் என்பதும் முக்தி. அதன் காரணம் அதன் கார்யம் அதன் பலன் என்பதும் இதன்மூலம் விளக்கப்பட்டது.

**51. அவதாரிகை :**

அஞ்ஞானம் அனுதியென்றும் பாவரூபமென்றும் சொல்லப்படுவதால், ப்ரஹ்மத்தைப்போலவே, அஞ்ஞானத்திற்கும் நிவர்த்தி என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதனுல் அஞ்ஞானநிவர்த்தி ரூப முக்தி என்பதே பலம் என்று எப்படிச் சொல்லமுடியும்? என்ற ஸங்கைக்கு, அஞ்ஞானம் மித்யை என்பதால் ஞான்த்தினுல் நிவர்த்திக்கின்றது என்று சாதிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अज्ञानमप्यविदुषोऽस्य न तु स्वतोऽस्ति चैतन्यनिर्विकृतिताद्वयताविरोधात् ।
अज्ञातताऽप्यनवबोधनिबन्धनैव नाऽऽत्माश्रयत्वमपि चोदयितव्यमत्र ॥

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதம் என்று நிரூபிக்கப் பட்டால்தான் இந்த சித்தாந்தம் பொருந்தும் என்பதால், இந்த விஷயம் பற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

**பூர்வ :** ப்ரத்யகாத்மஸ்வரூபம் என்பது ஸ்வப்ரகாசம், சித்ரூபம், அவிகாரி, அத்வயம் என்று சொல்லப்படுவதால் இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது எப்படி இருக்கமுடியும்?

**சித்தா :** அஞ்ஞானம் என்பது அனுதியென்றும், பாவரூபமென்றும் சொல்லப்பட்ட போதிலும், அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதம் என்று சொல்லப்படுவதால் மித்யை என்றே சொல்லப்படுகிறது. அதனுல் ஞானத்தினுல் நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுகிறது. ஆகவே ப்ரஹ்மத்தைப்போல் அனாதியென்றோ பாவ ரூபமென்றோ சொல்லப்படவில்லை. 'ஆச்சாத்ய விக்ஷிபதி' என்று ஆரம்பிக்கின்ற (இருபதாவது) ச்லோகம் முதல் ஆரம்பித்து விசாரிக்கப்பட்ட முறையில் ஆத்மாவில் தோன்றும் பந்தம் என்பதும், ஸஜாதீய விஜாதீயஸ்வகதபேத ப்ரதீதி என்பதும் அவித்யா கல்பிதம் என்று சொல்லப்படுவதால் மித்யை என்றே சித்திக்கின்றது. ஆகையால் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பாரமார்த்திகமான ஐக்யம் இருக்கின்றது என்பதும், இந்த ஐக்யஞானத்தினுல் அவித்யை அதன் கார்யமான பந்தம் என்பது எல்லாமே நிவர்த்திக்கின்றது. அதனுல் பரமானந்தப்ராப்தி என்பதும் ஏற்படுகிறது. ஆகவே, இந்த சாஸ்திரத்திற்கு விஷயம், ப்ரயோஜனம் என்ற இரண்டும் சித்திக்கின்றது.

**பூர்வ :** அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதம் என்பது நிரூபிக்கப்பட்டால்தான், இந்த சித்தாந்தம் பொருந்தும். ஆனுல் ப்ரத்யகாத்மஸ்வரூபம் என்பது, ஸ்வப்ரகாசம், சித்ரூபம், அவிகாரி, அத்வயம் என்று சொல்லப்படுவதால், இப்பேர்ப்பட்ட ஆத்மஸ்வரூபத்தில், அப்ரகாசமாகவும், ஜடமாகவும், விகாரியாகவும், ஸத்வயமாகவும் இருக்கின்ற அஞ்ஞானம் என்பது விருத்தமான தன்மையில் இருக்கின்றதால், இருட்டும், ப்ரகாசமும் போன்ற விருத்த ஸ்வபாவமுள்ள அஞ்ஞானம் எப்படி இருக்கமுடியும்? அதனுல் ஆத்மஸ்வரூபத்தில், அஞ்ஞானம் என்பது ஸ்வாபாவிகமாக இருக்கிறதென்று சொல்லமுடியாது. அதற்காக, அஞ்ஞானம் என்பது ஆத்மதர்மமாக இருப்பதாகச் சொல்லப்படுமானுல், ஆத்மா விகாரி என்று சொல்ல நேரிடும். அதேபோல் அஞ்ஞானம் ஆத்மாவின் கார்யம் என்றும்

சொல்லமுடியாது. ஏனெனில், ஆத்மா அவிகாரி என்றும் அத்வயஸ்வரூபம் என்றும் சொல்லப்படுவதால், ஜகத் என்ற கார்யத்துடன் கூடிய ஸத்வயமான அஞ்ஞானம் என்பது ஆத்மகார்யம் என்று சொல்லமுடியாது. மேலும், அஸங்கமான ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது எந்த ஸம்பந்தத்திலுலும் இருக்க முடியாது. அதற்காக அஞ்ஞானம் என்பது ஸ்வஸம்பந்தத்திலுலேயே இருக்கிறது என்று சொல்லப்படுமானுல், ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகவே, ஆத்மஸ்வரூபத்தில், அனுதியாகவும், பாவரூபமாகவும் அஞ்ஞானம் இருக்கிறதென்று சொல்வது பொருந்தாது.

**சித்தா :** ஆத்மஸ்வரூபத்தில், அஞ்ஞானம் என்பது உண்மையில் இருக்கமுடியாது என்று சொல்லப்படுமானுல் அது ந்யாயந்தான். ஆனுல், அஞ்ஞானம் என்பது கல்பிதமாகவும் இருக்கமுடியாது என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில், பந்தம் என்பதும், அதன் காரணமான அஞ்ஞானம் என்பதும், அவித்வானிடம் இருக்கிறதென்பது அனுபவசித்தமாக இருக்கின்றது. அதனுல், ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது கல்பிதமாக இருக்கிறதென்றே ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனுல் உண்மையில் அஞ்ஞானமோ, அதன் ஸம்பந்தம் என்பதோ ஆத்மஸ்வரூபத்தில் இருக்க முடியாது என்பதுதான் உண்மை. ஆகவே, ஆத்மஸ்வரூபத்திற்கு விருத்தமான தன்மையில் உள்ள, அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதமாக இருக்கிறது என்று சொல்லப்படுவதால், அப்ரகாசமாகவும் விகாரியாகவும், ஸத்வயமாகவும், ஜகத் முதலான பேதங்களுடன் கூடியதாகவும் இருக்கின்ற அஞ்ஞானம் எப்படி ஸ்வப்ரகாசமாகவும் அவிகாரியாகவும், அத்வயமாகவும் அஸங்கமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில் இருக்கமுடியும் என்ற ஆக்ஷேபங்களுக்கு இடமில்லை. அஞ்ஞானமோ அதன் ஸம்பந்தமோ ஆத்மாவில் உண்மையில் இருப்பதாக எந்த ப்ரமாணத்தைக் கொண்டும், எந்த ந்யாயத்தைக் கொண்டும் நிரூபிக்கமுடியாது. (சித்தம் செய்ய முடியாது). ஆனுல் அனுபவசித்தமாக அஞ்ஞானம் இருக்கின்றது என்பதால், ஆத்மாவில் அஞ்ஞானமானது கல்பிதமாக ஸத்வ அஸத்வ விலக்ஷணமாக, அநிர்வசனீயமாக இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். இதேபோல் ஆத்மாவிற்கும் அஞ்ஞானத்திற்குமுள்ள ஸம்பந்தம் என்பதும் அஞ்ஞானத்திலுல் கல்பிதம் என்றே சொல்ல வேண்டும். ஆகையால் ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்க முடியாது. ஏனெனில் அஞ்ஞானத்தைப் போலவே, அதன் ஸம்பந்தம் என்பதும் அநிர்வசனீயம் என்று சொல்லப்படுவதால் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை. மேலும் ஸத்கார்யவாதியான ஸாங்க்யனுல் இருக்கின்ற வஸ்துவிற்கே அபிவ்யக்தி என்று சொல்லப்படுகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல், அபிவ்யக்தி என்பது ஏற்கனவே இருந்து ஏற்படுகிறதா? அல்லது இல்லாமல் இருந்தே ஏற்படுகிறதா? என்று விசாரிக்கின்ற போது, எந்தவிதமான பதில் சொல்லப்பட்டாலும், அதில் ஆத்மாச்ரயம் முதலானதோஷங்கள் ஸம்பவிக்கும். அதேபோல், அஸத்கார்யவாதியான நையாயிகர்பக்ஷத்திலும் இல்லாதது உண்டாகிறது என்று சொல்லப் படுகிறது. அந்த பக்ஷத்திலும் உற்பத்தி என்பது ஏற்கனவே, இருந்து உண்டாகிறதா? இல்லாமல் உண்டாகிறதா? என்று விசாரிக்கின்றபோது, அதிலும் அனேக தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. இவ்விதம் ஸத்கார்யவாதமானுலும் சரி, அஸத் கார்யவாதமானுலும் சரி, இரண்டு பக்ஷங்களிலும், ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது என்றுலும், அவைகளை தோஷமில்லை என்று சொல்லப்படுமானுல் மாயாவாதம் என்ற, அநிர்வசனீய வாதத்தில் இவ்வித ஆக்ஷேபங்களுக்கு எப்படி இடம் இருக்க முடியும்?

ஆகவே கல்பிதமான அஞ்ஞானம் அனாதியாகவும் பாவ ரூபமாகவும் ஆத்ம ஸ்வரூபத்தில் இருக்கின்றதென்பது அனுபவசித்தமாக இருக்கின்றதால் ஆத்மஸ்வரூப ஞானம் ஏற்படுகின்றபோது, அஞ்ஞானம், அதன் கார்யமான பந்தம் என்பதெல்லாம் நிவர்த்திக்கின்றது. ஆகையால் அஞ்ஞானம் ப்ரஹ்மத்தைப் போல் ஸத்யமென்று சொல்லமுடியாது என்பதால் ஆத்மஞானத்திற்கு, அஞ்ஞானநிவர்த்திரூபம் என்பது பலம் என்று சொல்லப்பட்ட விஷயத்திலும் பொருந்தாதது ஏதுமில்லை.

**பூர்வ :** ஆத்மஸ்வரூபத்தில், அஞ்ஞானத்தினால், ஜகத் என்பது (கல்ப்பிதம்) அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுமானால், அதே போல் அஞ்ஞானம் என்பது ஆத்மாவில் எதனால் அத்யஸ்த்தமாகிறது?

**சித்தா :** அனாதி அஞ்ஞானம் என்பது ஆத்மாவில் ஸ்வயமே கல்பிதம் என்றே சொல்ல வேண்டும். இவ்விதம் சொல்லப்படவில்லையென்றால், அனவஸ்தை முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும்.

**52. அவதாரிகை :**

ஆத்மஸ்வரூபத்தில், அஞ்ஞானம் என்பது (அஞ்ஞானத்தினாலேயே) ஸ்வயமே கல்பிதம் என்று சொல்லப்படுவதில் என்ன ப்ரமாணம்? என்றால்,

**ச்லோகம் :** द्वारं तमोऽन्वयमपेक्ष्य दृशा हि दृश्यं सङ्गच्छते सकलमत्र न नो विवादः ।
मोहोऽपि दृश्यवपुरत्र च संवदध्वे तस्मात्तदन्वयनिमित्तमपीह मोहः ॥

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானத்தின் மூலமாகவே, த்ருச்யமான விஷயங்களும் (அறியப்படும் விஷயங்களும்) த்ருக்ஸ்வரூபமான (அறிகின்ற) ஆத்மஸ்வரூபத்துடன் ஸம்பந்தப்பட்டிருக்கின்றது என்பதால், இந்த விஷயத்தில் விவாதம் செய்வதற்கே இடமில்லை. அஞ்ஞானம் என்பதும் த்ருச்யமாக அறியப்படுகிறதென்ற விஷயமும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. அதனால், அஞ்ஞான ஸம்பந்தத்திற்கும் அஞ்ஞானமே காரணம் என்று அறியவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட விஷயத்தில், ப்ரமாணம் என்ன? யுக்தி என்ன? என்று அறிய விரும்புவது சரியே. ஆனாலும், எந்த விஷயமாக இருந்தாலும் அது ப்ரமாணத்தினால் அறியப்படவேண்டும் என்று சொல்வதற்கு முடியாது. அஞ்ஞானம் என்பது ப்ரமாணசித்தமில்லை. ப்ரமாண சித்தமாக இருக்குமானால் அதை கல்பிதமென்று சொல்லமுடியாது என்பது மட்டுமல்ல, ப்ரமாணசித்தமாக இருக்குமானால் அஞ்ஞானத்திற்கு ஞானத்தினால் நாசம் ஏற்படுகிறது என்று சொல்வதற்கே முடியாது. அஹம் அஞ்ஞ: என்ற அஞ்ஞானமானது அவித்வான்களுக்கு அனுபவ சித்தமாக இருக்கின்றது. ஆகையால், அஞ்ஞானம் என்பது ஸ்வபரநிர்வாகம் என்றும், இந்த அஞ்ஞானம் என்பது கல்பிதம்தான் என்பதும் நிரூபிக்கப்படவேண்டும் என்பதால் மேலே இந்த விஷயம் விசாரிக்கப்படுகின்றது. த்ருக்ஸ்வரூபமாகவும், அஸங்கமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில், அஞ்ஞானமின்றி த்ருச்யமான எந்த வஸ்துக்களின் ஸம்பந்தமும் ஏற்படமுடியாது என்று உபநிஷத்வாக்யங்களும் தெரிவிக்கின்றது.

கடபடாதி அனாத்ம வஸ்துக்களுடன் அஸங்கமான ஆத்மஸ்வரூபத்திற்கு ஸம்பந்தம் ஏற்படமுடியாது. ஆனால் ஜடமான கடபடாதிகள் ப்ரகாசிக்கின்றதாலேயே ஆத்மசைதன்யத்திற்கும் கடாதிவஸ்துக்களுக்கும் மத்தியில், அஞ்ஞானம் என்பதே

ஸம்பந்தத்தை ஏற்படுத்துகிறது என்று அறியவேண்டும். ஆகவே த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவிற்கும் த்ருச்யமான பதார்த்தங்களுக்கும் உண்மையில் ஸம்பந்தம் கிடையாது என்ற போதிலும், அஞ்ஞானத்தினுல் ஸம்பந்தம் என்பது ஆத்யாஸிகமாக ஆத்மாவில் ஆரோபிதம் என்றே சொல்லவேண்டும். இவ்விதமிருந்தபோதிலும் ஸம்யோகஸம்பந்தமோ ஸமவாய ஸம்பந்தமோ சொல்லமுடியாது என்பதை "நஸங்கரோ நாபி சஸம்யுதி," என்ற ச்லோகத்தில் சொல்லப் போகின்றதால், இங்கு அதிகம் விஸ்தரிக்கப்படவில்லை. மேலும் "ஆத்மனே அனுத்மனு யோக: வாஸ்த்தவோ ந உபபத்யதே" என்று வார்த்திககாரராலும் சொல்லப்படுகின்றது. ஆகையால், ஆத்ம, அனுத்ம ஸம்பந்தம் என்பது மோஹநிமித்தம் என்பதை, இந்த ச்லோகத்தின்மூலம் விளக்கப்படுகிறது.

அனுத்மாவான த்ருச்யபதார்த்தங்கள் எல்லாம் ப்ரகாசிக்கின்ற காரணத்தினுலேயே, ஆத்ம ஸ்வரூபத்திற்கும் அனுத்மபதார்த்தங்களுக்கும் மத்தியில் அஞ்ஞான ஸம்பந்தம் இருக்கின்றதென்றே நிரூபிக்கின்ரேம். 'அஹம் அஞ்ஞ:' என்று அஞ்ஞான ஸம்பந்தம் என்பது அஞ்ஞானத்தினுலேயே ஆத்மாவில் ஏற்படுகிறது. த்ருச்யமாக இருக்கின்றதால், அஞ்ஞானகார்யமான (ஜகத்) ப்ரபஞ்சம் போல என்று அனுமானத்தைக் கொண்டே சித்திக்கின்றது. எப்படியெனில், 'அஹம் அஞ்ஞ:' என்று ஆத்மாவில் அஞ்ஞான ஸம்பந்தம் அறியப்படுவதால், இந்த ஸம்பந்தம் அஞ்ஞானத்தினுல்தான் ஏற்படுகிறது. ஆகவே, "ஆத்மாவில் அஞ்ஞானஸம்பந்தம் அஞ்ஞானத்தினுலேயே ஏற்படுகிறது (இது ப்ரதிஞ்ஞை) (ஹேது) ஏனெனில், 'அஞ்ஞான கார்யமாக இருப்பதால்,' (த்ருஷ்டாந்தம்) 'அஞ்ஞானகார்யமான ப்ரபஞ்சம் போல்,' என்று அனுமானத்தைக் கொண்டு சாதிக்கின்ரேம்.

**பூர்வ** : இந்த 'அனுமானத்தில் உபாதிதோஷம்' ஸம்பவிக்கின்றது. எப்படியெனில், அஞ்ஞானத்திற்கு அன்யமாக இருப்பதைத்தான் அஞ்ஞானுதீனம் என்று சொல்லலாம். மோஹ மாகவே இருப்பதால், அஞ்ஞான அன்யத்வம் எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே, மோஹ அனன்யத்வம் என்ற உபாதிதோஷம் ஸம்பவிக்கின்றது.

**சித்தா** : இந்த அனுமானத்தில் உபாதி தோஷம் என்பது ஸம்பவிக்க முடியாது. ஏனெனில் ஸாத்யவ்யாபகத்வமும் ஸாதன அவ்யாபகத்வமும் இருந்தால்தான் உபாதிதோஷம் என்று சொல்லலாம். ஆனுல் இங்கு ஸாத்யவ்யாபகத்வமும் ஸாதனவ்யாபகத்வமும் இருப்பதால் உபாதிதோஷம் இல்லை. எப்படியெனில் மோஹம் என்பதும் மோஹஸம்பந்தம் என்பதும் ஒன்றல்ல. இரண்டும் வெவ்வேருகவே அறியப்படுவதால் அஞ்ஞான அன்யத்வம் என்பது சித்திக்கின்றது. அதனுல் ஸாதன அவ்யாபகத்வம் என்று சொல்லமுடியாது. ஆகையால் உபாதி தோஷம் இல்லை. மேலும் மோஹம் மோஹஸம்பந்தம் த்ருச்யமான (அறியப்படும்) இந்த ஜகத் என்பதெல்லாம் அஞ்ஞானமென்ற மோஹாதீனம் என்று சொல்லப்படுவதுபோல் மோஹம் என்பது எதை அதீனமாகக் கொண்டது? என்று கேட்கப்படுமானுல், மோஹம் என்பதற்கு அந்த மோஹமே காரணம் என்ருல் ஆத்மாச்ரயதோஷம் ஏற்படும். அதற்காக, வேருெரு மோஹம் இந்த மோஹத்திற்கு காரணம் என்று சொல்லப்படுமானுல் அன்யோன்ய ஆச்ரயதோஷம் ஏற்படும். மூன்ருவது மோஹத்திற்கு முதல் மோஹம் காரணமென்று மேன்மேலும் சொல்லிக்கொண்டே போனுல் அதற்கு முடிவே இருக்க முடியாதாகையால் அனவஸ்தை என்ற தோஷம் ஸம்பவிக்கும். ஆகையால் மோஹம் என்ற அஞ்ஞானமானது தன்னுலேயே சித்திக்கிறது என்றே சொல்லவேண்டும்.

நையாயிகர் பரமாணுக்கள் ஒவ்வொன்றையும் வேறுபடுத்துவதற்காக அந்த பரமாணுக்கள் ஒவ்வொன்றிலும் ஒரு விசேஷம் இருப்பதாகச் சொல்கிருர்கள். பரமாணுவில் சொல்லப்படும் விசேஷங்கள் என்பது ஒன்ரு அல்லது ஒன்றுக்கொன்று வேறுபட்டதா என்று ஆக்ஷேபம் செய்யப்படுகின்றபோது, அந்த பரமாணுக்களில் இருக்கின்ற விசேஷங்கள் முதலில் தன்னைத்தானே வேறுபடுத்திக் கொண்டு மற்றவைகளையும் வேறுபடுத்துகிறது என்று சொல்லுகின்ருர்கள். அதேபோல், நூல் என்பதற்கும் அந்த நூலில் உள்ள (கலர்) நிறம் என்பதற்கும் என்ன ஸம்பந்தம்? என்ருல் ஸமவாய ஸம்பந்தத்தினுல் நூலில் அதன் நிறம் இருக்கிறது என்று சொல்கிருர்கள். அந்த ஸமவாய ஸம்பந்தம் என்பது, என்ன ஸம்பந்தத்தினுல் அந்த நூலில் இருக்கிறது? என்று கேட்கின்ற போது அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஏற்படும் என்பதற்காக, வேறு எதையும் காரணமாகச் சொல்லாமல், ஸமவாயம் என்பது, தானே அந்த நூலில் இருந்துகொண்டு அந்த கலரையும் தன்னுடன் ஸம்பந்தப்படுத்திக் கொள்வதாகச் சொல்கிருர்கள். இதேபோல் அஞ்ஞானம் என்பதும் தன்னையும் தன்ஸம்பந்தத்தையும் ஆத்மாவில் தோற்றுவித்துக்கொண்டு, ப்ரபஞ்சம் முதலான கார்யங்களையும் தோற்றுவிக்கின்றது என்பதால் அஞ்ஞானம் ஸ்வபரநிர்வாகம் என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபமும் இருக்கமுடியாது.

**53. அவதாரிகை :**

அஞ்ஞானத்திற்கு ப்ரபஞ்சத்தை தோற்றுவிக்கக்கூடிய சக்தி இருக்கிறதென்று சொல்லலாமேயன்றி தன்னையே கல்பித்துக் கொள்ளக்கூடிய சக்தி இருக்கிறதென்று சொல்வது எப்படிப் பொருந்தும்? என்ருல், ஸ்வபரநிர்வாகத்வம் அஞ்ஞானத்தில் இருப்பதாகவே ஒப்புக்கொள்ளவேண்டும்.

**ச்லோகம் :**

संविद्धुरं वहति तद्विषयोपयुक्तां स्वात्मन्यपि स्वरसतः स्वकरूपसिद्धेः ।
कार्यप्रपञ्चपरिकल्पनमात्ममोहान्मोहप्रकल्पनमपीति तथोपपन्नम् ॥

**ச்லோகார்த்தம் :** ஸம்வித் என்பது எப்படி, தான் விவகாரயோக்யமாக ஆகிறதற்கும், தன்னுடைய விஷயங்கள் விவகார யோக்யமாக ஆகிறதற்கும் உள்ள சக்தியை ஸ்வயமே ஏற்படுத்திக்கொள்கிறதோ, அதேபோல் அஞ்ஞானம் என்பதும் தன்னையும் கல்பித்துக் கொண்டு தன் கார்யமான ப்ரபஞ்சத்தையும் கல்பிக்கின்றது என்பதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** 'ஸம்வித்' என்ற ப்ரமாணபலபூதமான ஞானமானது (வ்ருத்திஞானம்) தன்னுடைய விஷயங்களான கடபடாதிகள் சித்திப்பதற்கும், தன்னுடைய சித்திக்கும் எப்படி ஸ்வயமே சக்தி உடையதாக இருக்கின்றதோ அதுபோல் அஞ்ஞானத்திற்கும் இந்த விதமான சக்தி இருப்பதாகச் சொல்லலாம். உதாரணமாக, கடம் என்ற ஒரு வஸ்துவானது, இது கடம் என்று சித்திப்பதற்கு, அந்த கட விஷயகமான அஞ்ஞானமோ அல்லது ஸம்சயமோ இல்லாமல் இருக்கவேண்டும். இவ்விதம் நிச்சிதமாக ஏற்படும் கடஞானத்தைத்தான் கடசித்தி என்று சொல்கிரேம்.

இதேபோல் ஞானம் என்பதின் சித்தியும், ஞான விஷயத்தின் சித்தியும் ஞானத்தினுலேயேதான் ஏற்படுகிறது. ஆகவே, இதேபோல் அஞ்ஞானம் என்பதும் தன்னையும் கல்பித்துக் கொண்டு, தன் கார்யமான ப்ரபஞ்சத்தையும் அதன் ஸம்பந்தத்தையும் கல்பிக்கிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படாவிட்டால் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கும். இவ்விதம் அனவஸ்தாதி தோஷங்கள் ஏற்படாமல்

இருக்கவேண்டுமென்பதற்காகவே இந்த ச்லோகத்தில் ஸ்வரஸத: என்று ஸ்வமஹிமையினுலேயே ஸம்வித் என்பது ப்ரகாசிக்கின்றது என்றும் மற்றவைகளேயும் ப்ரகாசிக்கும்படிச்செய்கிறது என்பதையும் சொல்லப்பட்டிருக்கிறது.

**54. அவதாரிகை :**

ஸம்வித்ஸ்வரூபமான ஆத்மா, ஸ்வயம்ப்ரகாசம் என்பதை ஒப்புக்கொள்ளாமல், வ்ருத்திஞானம் என்பதையே ஸ்வரூபஞானம் என்று நினைக்கின்ற ஒரு சிலர், ஆத்மா என்பதும் ஞானம் என்பதும் வேறு என்றும், அதனுல் ஞானம்ஸ்வப்ரகாசம் என்று எப்படிச் சொல்வது? என்று வாதம் செய்கிருர்கள் ஆகவே, இவ்விதம் வாதம் செய்கின்றவர்களும் ஒத்துக்கொள்ளக்கூடிய முறையில்; த்ருஷ்ட்டாந்த மூலமாக இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

आत्मा प्रसाधयति वेद्यपदार्थजातं स्वात्मानमप्यवगतिक्षमशक्तियोगात् ।
स्वाज्ञानमेवमिदमात्मपरप्रक्लृप्तौ शक्तं भवेदिति न किंचन दौस्थ्यमस्ति ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மாவானது, தன்னுடைய ஸ்வயம்ப்ரகாச சக்தியினுல், தன்னுல் அறிவிக்கப்படும் பதார்த்தங்களேயும் ப்ரகாசிக்கும் படிச்செய்து தானும் எப்படி ப்ரகாசிக்கின்றதோ, அதுபோல் அஞ்ஞானம் என்பதும், தன்னேயும் கல்பித்து மற்றவைகளேயும் கல்பிக்கக்கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்பதால் இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லே.

**வ்யாக்யானம் :** ஸம்வித்ஸ்வரூபமான ஆத்மா ஸ்வப்ரகாச ஸ்வரூபம் என்று ஒத்துக்கொள்ளாதவர்களும், அவஸ்யம் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் உதாகரணத்தின் மூலம் இதை விளக்கப்படுகிறது. ஸம்வித்ஸ்வரூபமான ஆத்மா, வேறு எதனுடைய அபேக்ஷை யுமின்றி தன்னே, ப்ரமாதா என்றும் ஞாதா என்றும் விவகாரம் செய்யப்படுவதற்குரியதாக, தானே ப்ரகாசிக்கின்ற சக்தி உடையதாக இருக்கின்றது என்பதை யாராலும் மறுக்கமுடியாது.

இந்தவிதம், ஆத்மஸ்வரூபம், வேருெரு ஞாதாவை அபேக்ஷிக்காமலேயே, தானும் ப்ரகாசித்து தனக்கு வேருன ஸர்வ வஸ்துக்களேயும் ப்ரகாசிக்கச் செய்யக்கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்று ஒப்புக்கொள்ளப்படவில்லேயென்ருல், அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். (இவ்விதம் ஆத்மப்ரகாசத்தினுல்தான் ஸர்வமும் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப் பட்டதற்காக ஆத்மா வேறு அதன் சக்தி வேறு என்று அர்த்தம் செய்வது சரியல்ல.) இதேபோல் அஹம் அஞ்ஞ: என்று எல்லோருக்கும் அனுபவசித்தமாக இருக்கின்ற அஞ்ஞானமானது, சிதாத்மஸ்வரூபத்தையே தனக்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்டு இருக்கின்றதால், அஞ்ஞானம் தன்னேயும் தோற்றுவித்து மற்றவைகளேயும் தோற்றுவிக்கக்கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்பதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லே.

**55. அவதாரிகை :**

த்ருஷ்ட்டாந்தமாகச் சொல்லப்பட்ட ஆத்மா, ஞானஸ்வரூபமாகவே இருக்கின்றதால், ஆத்மா, தன்னேயும் ப்ரகாசப்படுத்திக் கொண்டு, மற்றவைகளேயும் ப்ரகாசப்படுத்துகிறது என்று சொல்வது சரியே. இப்பேர்ப்பட்ட சக்தி சைதன்ய ஸ்வரூபத்தில் இருக்கலாம் என்ருலும், அஞ்ஞானம் என்பது பரதந்திரமானதால், ஆத்மாவின் சக்தியாக இருக்கின்றதென்று சொல்லப்படுமானுல் சக்திக்கு ஒரு சக்தி இருப்பதாக சொல்லப்பட்டதாக ஆகிறது. இவ்விதம் மேன்மேலும் சொல்ல நேரிடுமானதால் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக் கின்றது. ஆகவே பரதந்தரமான அஞ்ஞானத்திற்கு இவ்வித சக்தி இருக்கிறதென்று சொல்வது பொருந்தாது என்ற ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

भेदं च भेद्यं च भिनत्ति भेदो यथैव भेदान्तरमन्तरेण ।
मोहं च कार्यं च बिभर्ति मोहस्तथैव मोहान्तरमन्तरेण ॥

**ச்லோகார்த்தம் :** பேதம் என்பது, வேறு ஒரு பேதத்தை அபேக்ஷிக்காமலேயே, தன்னையும் வேறுபடுத்திக் கொண்டு, மற்றவைகளையும் வேறுபடுத்துகின்றது. அதேபோல் அஞ்ஞானம் என்பதும் வேறு ஒரு அஞ்ஞானத்தை அபேக்ஷிக்காமலேயே, தன்னையும் கல்ப்பித்துக் கொண்டு தன்னுடைய கார்யத்தையும் கல்ப்பிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'அஹம் அஞ்ஞ:' என்று அஞ்ஞானமானது ஆத்மாவை ஆச்ரயமாக் கொண்டே அறியப்படுகிறது. 'அஞ்ஞானம் இருக்கிறது என்று சொல்லப்படுகின்ற போதே, எவருக்கு அஞ்ஞானம்? என்றும் எந்த விஷயத்தைப் பற்றிய அஞ்ஞானம் இருக்கிறது? என்றும் ஆகாங்க்ஷை ஏற்படுகிறது. ஆகவே, அஞ்ஞானமானது தனக்கு ஆச்ரயத்தையும், அதற்கு ஒரு விஷயத்தையும் அபேக்ஷிக்கின்றது. அதனால் அஞ்ஞானம்பரதந்திரம் மேலும் அஞ்ஞானம் இருக்கிறது என்றோ, அறியப்படுகிறது என்றோ சொல்லப்படுமானால், ஆத்மாவின் ஸத்தாஸ்பூர்த்தியினால்தான் அஞ்ஞானம். அறியப்படுகிறது. இதுபோல் ஆத்மா தன்னுடைய ஸத்தைக்கும் ஸ்பூர்த்திக்கும் வேறு எதையும் அபேக்ஷிக்கவில்லை. அதனால் அஞ்ஞானசம்பந்தம் என்பது சித்திக்கின்றது. இவ்விதம் அஞ்ஞானமானது தன்னையும் கல்ப்பித்து, மற்றவைகளையும் எப்படி கல்ப்பிக்கிறது? என்றால், மேலே த்ருஷ்டாந்தத்தின் மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது. அதாவது, கடம் என்பது படத்தைக் காட்டிலும் பின்னம் (பேதம்) என்று சொல்கிறோம். (கடம் படம் அல்ல படத்தைக் காட்டிலும் வேறு) அதாவது கடத்தில் படபேதம் இருக்கிறது. படத்தில் கடபேதம் இருக்கிறது என்று வ்யவகாரம் செய்கிறோம். இவ்விதம் கடத்தில் இருக்கின்ற பேதம் என்பது, கடந்தானா? அல்லது கடத்தைக் காட்டிலும் வேறாக பேதம் என்பது இருக்கிறதா? என்று விசாரிக்கின்றபோது, பேதமே கடம் என்றோ, கடமே பேதம் என்றோ சொல்லமுடியாது. அதனால், பேதம் என்பது கடத்தைக் காட்டிலும் பின்னம் என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானால், இந்தபேதம் என்பது, முதலில் சொல்லப்பட்ட பேதம் என்பதைக் காட்டிலும் வேறா? அல்லது ஒன்றா? என்று விசாரிக்கப்படுமானால், மேன்மேலும் கேள்விக்கு இடம் உண்டாகின்றதால் அதற்கு முடிவு என்பதே இருக்கமுடியாதாகையால், அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. அதற்காக, முதலில் சொல்லப்பட்ட பேதமே, தன்னையும் வேறுபடுத்திக் கொண்டு, மற்றவைகளையும் வேறுபடுத்தி தெரிவிக்கக்கூடிய சக்தி உடையதாக இருக்கிறது என்றே சொல்லவேண்டும், என்று எப்படி மற்ற மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறதோ அதுபோல் அஞ்ஞானம் என்பதும் வேறு எதையும் அபேக்ஷிக்காமல் தன்னையும் கல்ப்பித்துக் கொண்டு மற்றவைகளையும் தோற்றுவிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**56. அவதாரிகை :**

**பூர்வ :** பந்தம் என்பது மித்யை என்று ப்ரஹ்மசூத்ரத்திற்கு முன்னுரையாக பாஷ்யகாரரால், அத்யாஸபாஷ்யம் என்பது செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதம் சித்தம் செய்யப்படுகின்ற பந்த அத்யாஸம் என்பது சாஸ்திர ஆரம்பத்திற்கு முன்னுரையாக செய்யப்படவேண்டுமானால் இந்த அத்யாஸம் பற்றி சூத்ரகாரரால் ஏன் சொல்லப்படவில்லை? மேலும் சூத்ரத்தில் எந்த விஷயங்கள்

அடங்கி இருக்கின்றதோ அந்த விஷயங்களை மட்டுமே பாஷ்யத்தில் வ்யாக்யானம் செய்யப்பட வேண்டும் என்ற ஸம்ப்ரதாயத்தை பாஷ்யகாரர் அனுசரிக்காமல் பாஷ்யம் செய்திருப்பது ந்யாயமில்லை.

**சித்தா :** சூத்ரகாரரால் சொல்லப்படாத எந்த விஷயமும் பாஷ்யகாரரால் சொல்லப்படவில்லை. ஆகவே, ஸம்பரதாயத்தை அனுசரித்தே பாஷ்யம் செய்யப்பட்டிருக்கிறது என்பது, மேலே சூத்ரார்த்தத்தை விளக்கப்படுகின்றதன்மூலம் அறிந்து கொள்ளலாம். ஆகவே ந்யாய விரோதம் ஏதுமில்லை.

**ச்லோகம் :**

ब्रह्मज्ञानं सूचयन्सूत्रकारो बन्धोत्पत्तेर्हेतुविध्वंसनाय ।
एतत्सर्वं सूचयामास तस्मादेतत्सर्वं भाषते भाष्यकारः ॥

**ச்லோகார்த்தம் :** பந்தத்திற்கு காரணமான அஞ்ஞானநாசத்திற்காக, 'ப்ரஹ்மஞானம்' என்பது ஸாதனம் என்று சூத்ரகாரர் தெரிவிக்கின்றதால் (பந்தம் அத்யஸ்த்தம் என்ற) இந்த விஷயம் சூசகமாக சூத்ரத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் பாஷ்யகாரர், பாஷ்யத்தில் அத்யாஸத்தை வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

**வ்யாக்யானம் :** 'அதாதோ ப்ருஹ்மஜிஞ்ஞாஸா' என்று ஆரம்பிக்கப்படும் சூத்ரமானது, முமுக்ஷுவிற்கு, ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா என்பது உபதேசமாக சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்தே சாஸ்திரத்திற்கு அதிகாரி முமுக்ஷு என்ற விசேஷணத்தையும், பந்தத்திற்கு ஹேதுவான அஞ்ஞானம்என்பது த்வம்ஸம் செய்யப்படவேண்டும் என்பதால், அதற்கு ப்ரஹ்ம ஞானம் ஒன்றே ஸாதனம் என்பதையும், இந்த சூத்ரம் சூசகமாக தெரிவிக்கின்றது. ஆகவே பந்தம் என்பது ஸத்யமாக இருக்குமானல், ப்ரஹ்மஞானத்தினல் நிவர்த்திக்கிறது என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே பந்தம் என்பது அத்யஸ்த்தம் என்பது முதலில் சித்தம் செய்யப்படவேண்டும் என்பதற்காகவே, சூத்ரத்தில் எந்த விஷயம் சூசகமாக தெரிவிக்கப் பட்டிருக்கிறதோ அதையே, பாஷ்யத்தில், வெளிப்படையாக, மிகத்தெளிவாக தெரிவிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, சூத்ரத்தில் சொல்லப்படாத விஷயம் பாஷ்யத்தில் சொல்லப் படவில்லை. 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரம், வேதாந்த விசாரத்தில் மோக்ஷ இச்சையுடையவனே அதிகாரி என்றும், அவித்யா நாசமே மோக்ஷமென்றும், பந்த ஹேதுவான அஞ்ஞான நாசத்திற்கு ப்ரஹ்மஞானம் ஸாதனம் என்று தெரிவிக்கின்றதனலேயே, பந்தம் என்பது மித்யை என்று சித்திக்கின்றது. ஆகவே பந்தம் அத்யஸ்த்தம் என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** பந்தம் என்பது ஞானத்தினல் நிவர்த்திக்கிறது என்பதற்காக பந்தம் அத்யஸ்த்தம் என்றும் மித்யை என்றும் ஏன் சொல்லவேண்டும்? அவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில், ஞானம் என்பதும் மித்யையான வஸ்துவைத் தான் நிவர்த்திக்கும் என்று சொல்வதற்கு முடியாது. அதே போல் மித்யாபூதமான வஸ்துக்களெல்லாம், ஞானத்தினல் தான் நிவர்த்திக்கின்றது என்று நியமம் சொல்வதற்கு முடியாது. உதாரணமாக-1. கடம் என்ற ஒரு வஸ்துவைப்பார்க்கின்ற போது 'இது கடம்' என்று ஞானம் ஏற்படுகிறது அதற்கு பிறகு படம் என்ற ஒரு வஸ்துவைப் பார்க்கின்ற போது 'இது படம்' என்ற ஞானம் ஏற்படுகிறது. ஆனல் கடம் என்று முதலில் அறியப்பட்ட வஸ்துஞானம் படம் என்ற வஸ்து ஞானம் ஏற்படும் போது இருப்பதில்லை. அதனல் படம் என்ற ஞானம் ஏற்படுகின்றபோது முன்னல் ஏற்பட்ட கடம் என்ற ஞானம் நிவர்த்திக்கிறது என்பதற்காக முன்னல் ஏற்பட்ட கடம் என்ற ஞானம் மித்யை என்று சொல்லப்படுவதில்லை. இதேபோல், ஸர்வ விஷயங்களிலும் அந்தந்தவிஷய உத்தரஞானம் ஏற்படுகின்ற போது, பூர்வ

ஞானம் இல்லையென்பதற்காக, பூர்வம் ஏற்பட்ட வஸ்து ஞானம் மித்யை என்று சொல்வதற்கு முடியாது.

2. இதே போல், ஒரு விஷயத்தைப் பற்றிய இச்சை ஏற்படுகின்ற போது, அந்த இச்சைக்கு எது விஷயமோ அந்த விஷயம் அடையப் பெறுமானால், அந்த இச்சை நிவர்த்திக் கின்றது. அதற்காக, ஏற்பட்ட இச்சையென்பது மித்யை என்று சொல்லப் படுவதில்லை.

3. இதேபோல், ஒருவனுக்கு துக்கம் ஏற்படுமானால் அதை, தனக்கு ப்ரியமான நண்பரிடம் தெரிவிக்கின்ற போது, அந்த துக்கம் நிவர்த்திக்கின்றது. என்று "ஸ்நிக்த ஜனஸம் விபக்தம் துக்கம் ஸஹ்யவேதனம் பவதி" என்று (சாகுந்தலம்) ஓரிடத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதம் துக்க நிவர்த்தி ஏற்படுகிறது என்பதற்காக ஏற்பட்ட துக்கம் மித்யை என்று சொல்லமுடியுமா?

4. இதேபோல் ஸேது தர்சனத்தினால் பாபம் நிவர்த்திக்கின்றது, என்பதற்காக, பாபம் என்பது மித்யை என்று சொல்லமுடியாது.

5. கருட மந்திரம் ஜெபிக்கப்படுமானால் ஸர்ப்பம் தீண்டியதால் ஏற்பட்ட விஷம், நிவர்த்திக்கின்றது. அதற்காக அந்த விஷம் என்பது மித்யை என்று சொல்லப்படுவதில்லை. மேலும் எந்த ஒரு கார்யத்திலும் ப்ரவ்ருத்திக்காமல் இருக்கின்ற ஒரு புருஷனைப்பார்த்து, இந்த கார்யத்தைச்செய் என்று மற்றொரு புருஷனால் ஏவப்படுகின்றபோது, அந்த புருஷன் ஏவப்பட்ட கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கின்றான். அதனால் முதலில் இருந்த ப்ரவ்ருத்தி ப்ராக் அபாவம் (ப்ரவ்ர்த்திக்காமல் இருந்தன்மை) நிவர்த்திக்கப்படுகிறது. அதற்காக ப்ரவ்ருத்திப்ராக் அபாவம் மித்யை என்று சொல்லப்படுவதில்லை ஆகவே, ஞானம் என்பது அத்யஸ்த்தமான விஷயத்தை மட்டுமே நிவர்த்திக்கிறது என்று நியமம் சொல்லமுடியாது. அதனால் ஞானத்தினால் நிவர்த்திப்பதெல்லாம் மித்யை என்றும் அத்யஸ்த்தம் என்றும் சொல்லமுடியாது. ஆகையால் பந்தம் அத்யஸ்த்தம் என்றும் மித்யை என்றும் சொல்வது சரியல்ல.

**சித்தா :** ஞானத்தினால் நிவர்த்திக்கின்றதால் பந்தம் மித்யை என்று சொல்லப்பட்டதற்காக எல்லா ஞானங்களும் ஞானம் தானே? அதனால் ஸர்வ விஷயகமான எல்லா ஞானமும் மித்யை என்று சொல்லமுடியுமா? என்று செய்யப்பட்ட ஆக்ஷேபங்கள் எதுவும் பொருந்தாது.

எந்த ஒரு வஸ்துவின், அதிஷ்ட்டான தத்வஞானம் ஏற்படுகின்றதால், எந்த ஞானம் நிவர்த்திக்கின்றதோ அதையே மித்யை என்று சொல்லப்படுகிறது.

ஆகவே, உன்னால் த்ருஷ்ட்டாந்தமாகச்சொல்லப்பட்ட, விஷயஞானம் என்பதெல்லாம் ப்ராந்திஞானமல்ல. எந்த வஸ்து இருக்கின்றபடி அறியப்படாமல், வேறு ஒரு வஸ்துவாக தோன்றுகிறதோ அந்த ஞானம், வஸ்துவின் உண்மையான ஞானம் என்று சொல்லமுடியாது. ஆகவே அதைப்ராந்தி ஞானம் என்று சொல்கிறோம். இந்தப்ராந்திஞானமானது அதற்கு அதிஷ்ட்டானமான உண்மையான வஸ்து ஞானம் ஏற்படுகின்றபோது, முன்னால் ஏற்பட்ட ப்ராந்தி ஞானம் பாதிக்கப்படுவதால், அந்த ஞானம், மித்யை என்று சொல்லப்படுகிறது.

1. கடம் என்ற ஞானமும் படம் என்ற ஞானமும் ஒன்றல்ல. ஒன்றுக்கொன்று விரோத ஞானமாக இருப்பதால், முதலில் ஏற்பட்ட ஞானம், நிவர்த்திக்கின்றது. ஆகையால் அந்த ஞானம் தத்வஞானத்தினால் நிவர்த்திக்கப்படவில்லை.

2. இச்சையென்பது அடையப்படாத விஷயத்தினால் ஏற்படுகிறது. விஷயம் அடையப்பட்டதும் இந்த இச்சாஞானம் நிவர்த்திக்கின்றது. ஆகவே விரோதி ஞானத்தினால் நிவர்த்திக்கிறதேயன்றி தத்வஞானத்தினால் நிவர்த்திக்கப்படவில்லை.

3. துக்கம் என்பதும் உள்ளன்புடன் இருப்பவர்களின் ஸமாதானங்களிலும் பரிவினுலும் (அனுதாபம்) நிவர்த்திக்கின்றதேயன்றி அதையும் தத்வஞான நிவர்த்தி என்று சொல்லமுடியாது.

4. ஸேது தர்சனம் என்ற க்ரியையினுல் பாபம் நிவர்த்திக்கப்படுகிறதேயன்றி தத்வஞானத்தினுல் ஏற்பட்டதல்ல. மேலும் ஸேது தர்சனம் பாபநிவர்த்தி என்று சாஸ்திரம் தெரிவிக்கிறது. அதனுல் சாஸ்திரம் எப்படி அந்த தர்சனத்தை விதிக்கின்றதோ அவ்விதம் செய்யாவிடில், பாபம் நிவர்த்திக்காது. தர்சனம் செய்கின்றபோதே பாபங்களைச்செய்பவர்களும் உண்டு. ஆகவே விதிக்கின்றபடி செய்கின்ற தர்சனமே, பாப நிவர்த்தி என்று அறியவேண்டும்.

5. இதேபோல் கருட ஜபம் என்பதும், க்ரியையானதால் ஜபக்ரியையினுல் விஷம் நிவர்த்திக்கின்றதேயன்றி தத்வஞானத்தினுல் நிவர்த்திக்கவில்லை.

6. ப்ரவர்த்தி ப்ராகபாவம் என்பது நாசமாவதற்கு காரணம் ப்ரவ்ர்த்தி என்று சொல்லப் படவேண்டுமேயன்றி அதுவும் தத்வஞானமென்று சொல்லமுடியாது.

ஆகவே, தத்வஞானத்தினுல் எதுநிவர்த்திக்கப்படுகிறதோ அதைத்தான் மித்யை என்று சொல்லப்படுகிறது.

**பூர்வ :** அப்படியாளுல் இதுவரை சொல்லப்பட்ட விஷயங்களிலிருந்து ஆத்ம ஞானத்தினுல்தான், பந்தம் என்ற மித்யாஞானம் நிவர்த்திப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே 'அஹம்' என்பது தானே ஆத்மஞானம்? அதனுல், பந்த நிவர்த்தி ஏற்படவில்லையே?

**சித்தா :** ஆத்மஞானம் என்றுல், ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபஞானமென்று அறியவேண்டும். அஹமஹம் என்று, அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடிய ஆத்மஞானத்தை ஆத்ம ஸ்வரூபஞானம் என்று சொல்லமுடியாது. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்று ஏற்படும் ஆத்மஞானம் தான் பந்த நிவர்த்தகமாக ஆகின்றது.

தத்வஞானமென்பது என்னவென்றுல், அஞ்ஞானத்துடனே, அஞ்ஞான கார்யமான புத்யாதிகளுடனே கூடியதும் ப்ரபஞ்ச உபஹிதமுமான ப்ரஹ்மஞானத்தை தத்வஞானமென்று சொல்லப்படவில்லை. மாயை என்பதோ அஞ்ஞானம் என்பதோ அதன் கார்யமோ இவைகளில், எதனுடனும் ஸம்பந்தப்படாத நிர்விசேஷமான விசுத்த கேவலசைதன்யமாத்ரமான ப்ரஹ்மஞானத்தையே தத்வஞானம் என்று சொல்லவேண்டும். ஆகையால் கேவல சைதன்யமாத்ரமான ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று அறியப்படும் ஆத்மதத்வஞானம்தான், பந்த நிவர்த்திக்கு காரணம் என்று சொல்லப்படுவதனுலேயே, பந்தம் மித்யை என்று சித்திக்கின்றது.

புத்தியாதிகளுடன் கூடிய ப்ரபஞ்ச உபஹித ப்ரஹ்மஞானம் தத்வஞானமில்லை என்று சொல்லப்பட்டதனுலேயே, அஞ்ஞான உபஹித ஞானமோ, அஞ்ஞான விசிஷ்ட்ட ஞானமோ, தத்வஞானமல்லவென்றும், நிர்விசேஷமான ப்ரஹ்மஞானமேதத்வஞானம் என்று அறியப்படுகிறது. ஆகவே, ப்ரபஞ்சம் என்பது ஸத்யமாக இருக்குமானுல் (நிஷ்ப்ரபஞ்ச ப்ரஹ்மஞானம் என்பதே ஏற்படமுடியாது) ப்ர்பஞ்ச அபாவமென்பதே இருக்க முடியாது.

**பூர்வ :** இப்போது நிகழ்காலத்தில் இருக்கின்ற ப்ரபஞ்ச அபாவத்தை நிஷ்ப்ரபஞ்சம் என்று சொல்லப்படவில்லை, வரப்போகின்ற ப்ரபஞ்ச அபாவத்தையே நிஷ்ப்ரபஞ்சம் என்று சொல்லப்படுவதாகச் சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் நிஷ்ப்ரபஞ்ச ப்ரஹ்மஞானம் என்பது ப்ரத்யக்ஷத்திற்கு (அபரோக்ஷமாக) விஷயமாக வேண்டுமென்றால். இப்போது இருக்கின்ற விஷயம்தான் ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாகுமேயன்றி, இப்போது இல்லாமல், வரப்போகின்ற ப்ரபஞ்ச அபாவம் என்பது ப்ரத்யக்ஷ விஷயமாகஆகிறது என்று சொல்வதற்கு முடியாது.

**பூர்வ :** ஸத்யமான ப்ரஹ்மமே ஜகத்திற்கு ஆச்ரயம் என்று சொல்லப்படுமானால் ப்ரபஞ்சம் இருக்கின்றபோது ப்ரபஞ்ச அபாவம் என்பது எப்படி ஏற்படமுடியும்? அதனால் ப்ரபஞ்சம் ஸத்யமென்றே சொல்லவேண்டுமேயன்றி மித்யை என்று சொல்வது சரியல்ல. மேலும் ஜகத்திற்கு உபாதான காரணம் ப்ரஹ்மமென்று அறிந்து கொள்வதும் தத்வஞானந்தானே?

**சித்தா :** கடம் என்பதற்கு ம்ருத் என்பதே உபாதானம் என்று அறியப்படுவதற்காக, கடம் என்பது நிவர்த்திப்பதில்லை. ஆகையால் உபாதான காரணஞானத்தை தத்வஞானம் என்று சொல்வதில்லை. ரஜ்ஜுவில், ஸர்ப்பம் என்ற ப்ராந்தி ஞானம் ஏற்படுகின்ற போது ஸர்ப்பம், தோன்றுவதற்கு எது அதிஷ்ட்டானமோ, அந்த ரஜ்ஜுஞானத்தையே தத்வஞானம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே லோக விவகாரங்களுக்கு விரோதமாக கல்பனை செய்வது பொருந்தாது. ப்ரபஞ்சம் தோன்றுகின்ற காலத்திலேயே ப்ரஹ்மமென்பது நிஷ்ப்ரபஞ்சம் என்று சொல்லப்படுகிறது. அதனால் ப்ரபஞ்சம் மித்யை என்றே சித்திக்கின்றது. 'யதஸத்பாஸமானம் தந்மித்யா' தோன்றும் காலத்திலேயே உண்மையில் இல்லாமல் இருப்பது எதுவோ அது மித்யையாகவே இருக்கவேண்டும். 'நேஹ நானஸ்தி கிஞ்சன' 'அதாதஆதேசோ நேதி நேதி' என்றெல்லாம் ப்ரபஞ்சத்தை நிஷேதம் செய்து ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றதால் ப்ரபஞ்சம் மித்யை என்றே அறியப்படுகிறது.

**பூர்வ :** ப்ரபஞ்சம் தோன்றுகின்றபோது, ப்ரபஞ்சம் இல்லையென்று அத்யந்த அபாவம் எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** ப்ரபஞ்சம் என்பது வ்யாவகாரிகம் அதனால் ப்ரபஞ்சத்திற்கு வ்யாவகாரிக அபாவம் என்பது சொல்லமுடியாது. ஆனால் ப்ரபஞ்சம் வ்யாவகாரிகமாக தோன்றினாலும் பாரமார்த்திகமாக ப்ரபஞ்சம் இல்லையென்று சொல்வதில் விரோதம் ஏதுமில்லை.வ்யாவகாரிகமாக தோன்றும் போது வ்யாவகாரிகமாகவும் தோன்றவில்லையென்று சொன்னால்தான், விரோதம்.

ஸமஸத்தை இருந்தால் தான் விரோதம். விஷமஸத்தையாக இருக்கின்றதால் எந்த விதமான விரோதமுமில்லை. உதாரணமாக, கிளிஞ்சல் என்பதை வெள்ளி என்று பார்க்கின்றபோது பாரமார்த்திகமாக வெள்ளி இல்லையென்றுதான் சொல்லப்படுகிறதேயன்றி, வெள்ளியாக தோன்றவில்லை என்று சொல்லப்படவில்லை. இல்லாத ஒரு வஸ்து இருப்பதாக தோன்றுவதால் தான் அதை மித்யை என்றே சொல்லப்படுகிறது. ஆகையால் இதேபோல் வ்யாவகாரிகமாக தோன்றும் ப்ரபஞ்சம், பாரமார்த்திகமாக இல்லையென்று சொல்லப்படுவதில் எவ்விதமான விரோதமும் கிடையாது.

கிளிஞ்சல் என்ற ஞானம் ஏற்பட்டவுடன் இதுவரை, அங்கு இல்லாத வெள்ளியை இருப்பதாகப் பார்த்தேன் என்று சொல்வதிலிருந்தே அவனுக்கு வெள்ளி என்று தோன்றிய போதும் உண்மையில் வெள்ளி இல்லை என்றே அவனால் சொல்லப்படுகிறது. ஆகையால் முக்காலத்திலும் உண்மையில் வெள்ளி என்பது, இல்லையென்றே அறியவேண்டும்.

மேலும் கடபாவ அபாவரூபம் என்பது பாவரூபம் அது போல் ப்ரபஞ்ச அபாவரூபம் என்பது அதிஷ்ட்டானரூபம் என்பதால், அத்யஸ்த்தத்திற்கு அதிஷ்ட்டானமான பாவரூபமான வஸ்து சித்திக்கின்றதால் அத்யந்த அபாவம் என்பதே சொல்லமுடியாது. அத்யஸ்த்தமான வஸ்துவை நிஷேதம் செய்யப்படுவதால் எவ்வித ஹானியுமில்லை.

ஆகவே ப்ரபஞ்சம் தோன்றுகின்றபோதே பாரமார்த்திகமாக ப்ரஹ்மத்தில் ப்ரபஞ்சம் இல்லையென்று சொல்வதில் எவ்வித விரோதமுமில்லை.

இவ்விதம், ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில், ப்ரமாத்ருத்வம் முதலான பந்தங்கள் உண்மையில் இல்லை. ஆனாலும் நான் என்றும், நீ என்றும் அவனென்றும், பலவித பேதங்கள் இருப்பதாக அறியப்படுகிறது. அநிர்வசனீயமான அவித்யா விலாஸத்தினால் அறியப்படும் இவ்விதமான பந்தங்கள் ஆத்மஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமாக அறியப்படுகிறது என்பதையே பாஷ்யகாரரால் அத்யாஸ பாஷ்யத்தில் சொல்லப்படுகிறது. 'அதாதோ ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்ற முதல் சூத்ரத்தில் 'அத' சப்தத்தினால் முமுக்ஷுவான அதிகாரியை மோக்ஷசாதனமான ப்ரஹ்மஞானத்தை அடைய வேண்டுமென்று தெரிவிப்பதாலேயே ப்ரஹ்மஞானம் என்பது புருஷார்த்தம் என்றோ அல்லது புருஷார்த்த ஸாதனம் என்றோ அறியவேண்டும். ப்ரஹ்மஞானம் என்பது பலம் என்றும் சொல்லலாம். அல்லது சாதனம் என்றும் சொல்லலாம். ஞானம் என்பது சுகமுமல்ல. துக்கநிவர்த்தியுமில்லை என்பதால் புருஷார்த்தமில்லையென்று ஆக்ஷேபிக்கப்படலாம். ஆனால் துக்கமில்லாத ஆனந்த ப்ராப்திஎன்ற புருஷார்த்தத்திற்கு ஞானம் ஸாதனம். ஆகவே, மோக்ஷமென்பது பந்த நிவர்த்திரூபம். பந்தம் என்பது ப்ரஹ்மஞானத்தினால் நிவர்த்திக்கிறது என்று சொல்லப்பட்டதனாலேயே, பந்தம் அத்யஸ்த்தம் என்று சித்திக்கிறது. ஆகவே, ப்ரபஞ்சம் என்பது இருக்கின்ற காலத்திலேயே ப்ரபஞ்சமென்பது, உண்மையில் இல்லையென்று சொல்லப்படுவதால் எவ்வித விரோதமும் கிடையாது.

ஆத்ம தத்வத்தில் ப்ரமாத்ருத்வம் முதலான பந்தங்கள், அறியப்பட்டபோதிலும் அவையெல்லாம் உண்மையில் கிடையாது. ஆனாலும் நீ என்றும் நான் என்றும் அவன் என்றும், பலவிதமான பேதங்கள் உள்ளதாக ஆத்ம ஸ்வரூபம் அறியப்படுகிறது. இவ்விதம் உண்மையில் இல்லாத பேதங்கள் ஆத்மஸ்வரூபத்தில் அறியப்படுவதற்கு, ஆத்மாவில் அத்யஸ்த்தமான அநிர்வசனீயமான அவித்யா விலாஸம்தான், காரணம். ஆகவே இந்த விஷயங்களையெல்லாம் உள்ளடக்கி சுருக்கமாகச் சொல்லப்படுவதையே சூத்ரம் என்று சொல்ல வேண்டும். ப்ரஹ்மஞானத்தை அடையவேண்டுமென்று சூத்ரத்தில் தெரிவிப்பதனாலேயே ஞானத்தினால் பந்தம் நிவர்த்திக்கின்றது என்று அறியப்படுகிறது. அதனால் பந்தம் அத்யஸ்த்தம் என்று சித்திக்கின்றதால் பாஷ்யகாரரால் இந்த விஷயம் விளக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதம், இந்த க்ரந்தமானது, விளக்கமாக விசாரிக்கப்படுவதாலேயே இந்தக்ரந்தத்தை வார்த்திகம் என்றும் சொல்லலாம்.

**57. அவதாரிகை :**

முதல் சூத்ரத்திலுள்ள, நான்குவர்ணகங்களில், முதல் வர்ணகமான அத்யாஸ வர்ணகம் என்பது இதுவரை நிரூபணம் செய்யப்பட்டது இதன் மூலம் விஷயம், ப்ரயோஜனம், என்ற இரண்டும் இந்த சாஸ்திரத்திற்கு ஸம்பவிக்கின்றது என்பதையும் சொல்லப்பட்டது. ஆகையால், இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கப்படவேண்டியதுதான் என்பதை தெரிவித்து, இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

**तस्मादध्यस्तमेतत्सकलमपि दृशौ भूमरूपातिरिक्तं रूपं स्वाज्ञानमात्रादिति भवति परब्रह्मधीबाध्यमेतत् ।**
**ईशित्रादिप्रभेदप्रतिहतिफलकज्ञानदौस्थ्यापनुत्त्यै श्रीमच्छारीरकार्थप्रकटनपटुताशलिशास्त्रं विदध्मः ॥**

**ச்லோகார்த்தம் :** பூமஸ்வரூபமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்திலிருந்து வேறாக அறியப்படும் ஸர்வபதார்த்தங்களும் அஞ்ஞானத்தினால் கல்பிக்கப்பட்டதேயாகும். அதனால்,

இவையெல்லாம் ப்ரஹ்மஞானத்தினுல் பாதிக்கப்படுகிறது. ஈச்வராதி ஸர்வபேதங்களும் நிவர்த்திக்கின்றது என்பதே ப்ரஹ்மஞானத்திற்கு பலம், என்ற விஷயத்தை எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லாத, முறையில், இந்த சாரீரக சாஸ்த்ரார்த்தத்தை, தெரிவிக்கக்கூடிய சக்தியுடைய இந்த க்ரந்தமானது என்னுல் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கர்த்ருத்வம் போகத்ருத்வங்களுடன்கூடிய இந்த ஸம்ஸாரமானது ப்ரத்யக்ஷமாக எல்லோராலும் அறியப்படுகிறது. இந்த ஸம்ஸாரம் என்பது அஞ்ஞானத்தினுல் ஞானஸ்வரூபமான ஆத்மாவில் அத்யஸ்த்தம் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில், வ்யாபகமான ஆத்மஸ்வரூபமானது பரிச்சின்னமாக அறியப் படுகின்றது. ஆகையால், வஸ்து உண்மையில் எப்படி இருக்கின்றதோ அப்படியே அறியப்படாமல், அதற்கு மாருன தன்மையில் அறியப்படுமானுல் அதை அத்யாஸம் என்றே சொல்லவேண்டும்.

இவ்விதம், அத்யாஸத்தினுல் ஏற்பட்ட பரிச்சின்னத்வாதி பந்தமென்பது ப்ரஹ்மஞானத்தினுல்தான், நிவர்த்திக்கப்படவேண்டும் என்பதையே முதல் சூத்ரார்த்தம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் ஜீவ பரமாத்ம ஐக்யமே இந்த க்ரந்தத்திற்கு 'விஷய' மென்பதும், ப்ரஹ்மஞானத்தினுல் ஏற்படும், அஞ்ஞான நிவர்த்தியே 'பலம்' என்றும் சொல்லப்படுவதால் இந்த க்ரந்தத்திற்கு ப்ரயோஜனம் என்பதும் சித்திக்கிறது இவ்விதம் சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தில் விசாரிக்கப்பட்ட விஷயத்தில் அஸம்பாவனே, விபரீதபாவனே என்பதெல்லாம் சிறிதளவும் ஏற்படாத முறையில் மிக்த்தெளிவாக இந்த க்ரந்தத்தில் விசாரிக்கப்படுகிறது. இந்தவிதம், ப்ரஹ்மசூத்ரத்தில், நான்கு அத்யாயங்களில் சொல்லப் பட்டிருக்கின்ற விஷயங்களே சாரமாகவும் சுருக்கமாகவும் இந்த க்ரந்தத்தில் தெரிவிப்பதால், இதை சாஸ்திரமென்றும் ப்ரகரணக்ரந்தம் என்றும் சொல்வது மிகவும் பொருத்தமே. ஏனெனில் சாஸ்திரமானது எந்த விஷயத்தைப் பற்றி தெரிவிக்கின்றதோ அதே விஷயத்தை, ஸங்க்ரஹமாகவும் விஸ்தாரமாகவும் தெரிவிப்பதால் சாஸ்திரம் என்றும், மூல சாஸ்திரத்தில் ஸகுணம், நிர்க்குணம் என்ற இரண்டையும்பற்றி விசாரிக்கப்பட்டிருந்தும் இந்தக்ரந்தத்தில் நிர்க்குணத்தைப்பற்றி மட்டும் விசாரிக்கப்படுவதால் ப்ரகரணம் என்றும் சொல்லப்படுகிறது. மேலும் மூலசாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விஷயத்தையே வேறு முறையில் மிகத் தெளிவாக விசாரிக்கப்படுவதாலும், மூலத்தில் சொல்லப்படாமல் விடுபட்டதும் மூலத்திற்கு அனுகூலமான சில விஷயங்களேயும் பற்றி எடுத்து விளக்கப்படுவதாலும், இந்த க்ரந்தத்தை வார்த்திகமென்றும் சொல்லலாம் என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**58. அவதாரிகை :**

(இதுவரையில் முதல் வர்ணகமான, அத்யாஸவர்ணகம் சொல்லப்பட்டது. மேலே அடுத்தவர்ணகமான அகதார்த்தவர்ணகம் விளக்கப்படுவதற்குமுன், வேருெரு முறையில் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.) அதாவது, எந்த ப்ரஹ்மமானது, விசாரிக்கப்படவேண்டுமென்று இந்த சாஸ்திரம், ஆரம்பிக்கப்படுகிறதோ, அந்த ப்ரஹ்மமென்பது, சாஸ்திரத்தையன்றி வேறு ப்ரமாணத்தினுல் சித்தமா? அல்லது அசித்தமா? வேறு ப்ரமாணத்தினுல் அறியப்பட்டது என்ருல், அந்த வஸ்துவை மறுபடியும் அறியவேண்டுமென்ற அவஸ்யம் என்ன? வேறு ப்ரமாணத்தினுல் அறியப்படவில்லே, அசித்தம் என்று சொல்லப்படுமானுல், ப்ரமாணத்தினுல் சித்திக்காத வஸ்துவைப்பற்றி விசாரிப்பதால் ப்ரயோஜனம் என்ன என்ருல் வேதாந்த சாஸ்திரத்தினுல், ஸாமான்யமாக அறியப்பட்ட ப்ரஹ்மமானது விசேஷமாக அறிந்து கொள்வதற்காக மேலே விசாரிக்கப்படுகிறது.

**பூர்வ :** வேதாந்த வாக்யத்திலிருந்து ஸாமான்யமாக அறியப்படுகிறது என்ருல் என்ன அர்த்தம்? வேதாந்த வாக்யங்களிலுள்ள பதங்களின், பதார்த்தமாக இந்த ப்ரஹ்மமென்பது அறியப்படுகிறதா? இல்லையா? பத, பதார்த்தங்களைக் கொண்டு அறியப்படுகிறது என்று சொல்லப்படுமாஞல் ஏற்கனவே ப்ரமாணத்திஞல் (ஸங்கேத க்ரஹத்திஞல்) இந்த பதத்திற்கு, இது அர்த்தம் என்று அறியப்பட்டிருக்கவேண்டும். அதற்காக ப்ரஹ்மமென்பது சித்தமில்லை அசித்தம் என்று சொல்லப்படுமாஞல், பதபதார்த்தங்களிஞலும், அதன் அர்த்தம் க்ரஹிக்கப்படவில்லையென்ருல் வாக்யார்த்தத்திலிருந்து ப்ரஹ்மமென்பது எப்படி அறியப் படமுடியும்? ஆகவே, வேதாந்தத்திலிருந்து ஸாமான்யமாக அறியப்பட்ட ப்ரஹ்மத்தை விசேஷமாக விசாரித்து அறியப்படுகிறது என்று சொல்வதற்கு முடியாது. மேலும் 'ப்ரஹ்ம' என்ற பதத்திலிருந்தே அதன் அர்த்தம் அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. அதஞல் ப்ரஹ்மதத்வ்யுத்பத்தியே இன்னதென்று சொல்லமுடியாதபோது ப்ரஹ்மபதங்களுடன் கூடிய வாக்யத்திலிருந்தும் அர்த்தம் அறிந்து கொள்ளமுடியாது. மேலும் ப்ரஹ்மபத அர்த்தம் ஸாமான்யமாக அறியப்பட்டிருக்குமாஞல், அதை இன்னதென்று தெரிந்து கொள்ள வேண்டுமென்ற இச்சைதான் ஏற்படுமேயன்றி அதை விசாரிக்க வேண்டுமென்பதற்கு, ஸாமான்யஞானம் (ஆபாதத ஞானம்) காரணமாக ஆகாது. ஆகையால் ப்ரஹ்ம விசாரம் என்பதே தேவையில்லை, இந்த விசாரத்திற்கு, பந்த நிவர்த்தி பலம் என்று சொல்வதும் சரியல்ல.

**ச்லோகம் :**

मीमांसितव्यमनयैव सदद्वितीयं मीमांस्यमेव च सदात्मतयाऽनयैतत् ।
ज्ञातं प्रयोजनमनेन पथेदमस्यास्तन्नान्तरीयकतया च तमोनिवृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** ஸத்ஸ்வரூபமாகவும் அத்விதீயமாகவும் இருக்கின்ற ப்ரஹ்மமே ஸதாத்மஸ்வரூபமான ப்ரத்யகாத்மா என்று விசாரித்து அறியப்படவேண்டும். இவ்விதம் செய்யப்படும் விசாரத்திஞல் அறியப்படும் ப்ரஹ்மஸ்வரூப சித்தியிஞல் அஞ்ஞானநிவர்த்தி என்ற பலனும் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** சாஸ்திரத்தையன்றி வேருக இருக்கின்ற ப்ரமாணத்திஞல், சித்தமாக இருக்கின்ற ப்ரஹ்மதத்வத்தையே இங்கு விசாரிக்கப்படுவதாகச் சொல்லப் படுமாஞல், அது பொருந்தாது. ஏனெனில் அத்விதீயமான ப்ரஹ்ம ஸ்வரூபமானது, உபநிஷத் என்ற ப்ரமாணத்திஞல்தான் அறியப்படவேண்டும் என்று சொல்லப்படுவதால், வேறு ப்ரமாணத்திஞல் அறியப்பட்டது என்று எவராலும் சொல்லமுடியாது. ஆகவே வேதாந்த வாக்யத்திலிருந்து ஜீவபரமாத்ம ஐக்யம் என்பது முதலில் ஸாமான்யமாக அறியப்படுகிறது. அதன் பிறகு ஜீவனும் ப்ரஹ்மமும் எப்படி ஒன்ருக இருக்கமுடியும்? என்ற ஸந்தேகம் ஏற்படுவதால், அந்த ஸந்தேகங்களை நிவர்த்தித்து த்ருடஞானம் ஏற்படுவதற்காக விசாரம் என்பது அவச்யமாகிறது. ஆகவே உபநிஷத் என்ற ப்ரமாணத்திலிருந்தே, ப்ரஹ்மமென்பது அறியப்படவேண்டும். அதஞல் முதலில் ப்ரஹ்மபதத்திற்கு அர்த்தம் என்ன? என்று விசாரிக்கின்ற போது 'ப்ருஹி வ்ருத்தௌ' என்று, யோக வ்யுத்பத்தியிஞல் ப்ரஹத் என்ற அர்த்தம் அறியப்படுகிறது. இந்த அர்த்தத்தைக் கொண்டே எது எல்லாவற்றிலும் தொடர்ந்து இருக்கின்றதோ அதுவே ப்ரஹ்மமென்று அறியப்படுகிறது. அதேபோல் ஆத்ம சப்தமும் "யச்சாப்னோதி, யதாதத்தே, யச்சாத்தி விஷயானிஹ, யச்சாஸ்ய ஸந்ததோபாவ:

தஸ்மாத் ஆத்மஇதிகீர்த்தித:" என்று ப்ரஹ்ம சப்தத்திற்கு, எது அர்த்தமோ அதுவே ஆத்மசப்தார்த்தமாக இருக்கின்றதால் இரண்டும் ஒன்றே என்று அறியப்படுகிறது. இந்தவிதம் ப்ரஹ்மமானது ஸர்வத்திலும்ஸத்தாஸ்புரணாத்மகமாக இருக்கின்றது என்பதும், அதுவே ப்ரத்யகாத்மா என்பதும் உத்தரமீமாம்ஸா சாஸ்திர விசாரத்திலிருந்தே அறியப்படவேண்டும். ஏனெனில், ஸத்ரூபமான ப்ரஹ்மத்திற்கு, ஆத்ம அபேதம் இருக்கின்றதென்பது அஞ்ஞானத்தினுல் அறியப்படவில்லை. அதனுல் ஜீவபரமாத்ம ஐக்யஞானம் சாஸ்திரத்தினுலேயே ஏற்படவேண்டும் என்பதால் ஜீவ பரமாத்ம ஏகத்வஞானமே ப்ரயோஜனம். ஆகவே சாஸ்திரத்திற்கு அஞ்ஞாதம் ப்ரஹ்ம விஷயம், ஞாதம்ப்ரஹ்ம ப்ரயோஜனம் என்று சித்தமாகின்றதால் வேதாந்தவர்க்யம் நியோகம் முதலான விதியை போதிப்பதாகச் சொல்வதற்கே முடியாது. ஆகையால் அபூர்வவிதியா? நியமவிதியா? அல்லது பரிஸங்க்யா விதியா? என்ற கேள்விக்கே இடமில்லை என்பதால் உத்தரமீமாம்ஸா சாஸ்திரம் விதிபரம் என்று சொல்வதற்கே முடியாது.

**பூர்வ :** ஜீவபரமாத்ம ஐக்யமே ப்ரயோஜனம் என்று சித்திக்குமானுல், அவித்யா அஸ்தமயோமோக்ஷ: என்று உங்களால் முன்னுல் சொல்லப்பட்ட விஷயத்திற்கு விரோதமாக இருக்கின்றது. அதுமட்டுமல்ல சாஸ்திரத்தினுல் பந்தநிவர்த்தி ஏற்படாது என்று ஆக்ஷேபிக்கப் பட்டதற்கு எவ்வித பரிகாரமும் சொல்லப்படவில்லை.

**சித்தா :** ஜீவபரமாத்ம ஐக்யஞானத்தினுலேயே அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது. அஞ்ஞான நிவர்த்தி என்ற ப்ரயோஜனத்திற்காக வேறு தனிப்பட்ட வ்யாபாரம் எதுவுமில்லை. தராசு என்பதில் ஒரு தட்டு கீழே இறங்குமானுல் மற்றேரு தட்டு மேலே ஏறுவதற்கு தனிப்பட்ட எந்த முயற்சியும் தேவையில்லை. அதுபோல் ஏகத்வஞானம் ஏற்படுகின்றபோதே அவித்யா நிவர்த்தியென்பது ஏற்படுவதால், அவித்யா நிவர்த்தி என்பதை தனித்த ஒரு பலமாகச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. அவித்யா நிவர்த்தி ஏற்படுமானுல் அதன் கார்யமான பந்தமென்பதும் நிவர்த்திக்கின்றது.

**பூர்வ :** அவித்யாநிவர்த்தியை அவித்யையின் அதிஷ்ட்டானமான ஆத்மஸ்வரூபம் என்று சொல்லப்படுமானுல், ஆத்மா என்பது ஏற்கனவே சித்தமாக இருக்கின்றதால், அவித்யா நிவர்த்தி என்பதும் முன்னுலேயே சித்தம் என்று தானே சொல்வேண்டும்? அதனுல் உபநிஷத் விசாரஜன்யமான ஞானத்திற்கு அவித்யா நிவர்த்தியை பலம் என்று எப்படிச் சொல்வது? ஆகையால் அவித்யா நிவர்த்தியை ஞானஸாத்யம் என்று சொல்வதற்கு முடியாது.

**சித்தா :** எது உண்டாவதற்கு முன்க்ஷணம் எது இருக்கின்றதோ, எது இல்லையென்றுல் எது இருக்காதோ அதை அந்த வஸ்துவினுல் ஸாத்யம் என்று சொல்லப்படும். உதாரணமாக கடம் என்ற வஸ்து ம்ருத் ஸாத்யம். அதாவது கட உற்பத்திக்கு முன்க்ஷணம் இருக்கின்ற ம்ருத்தானது கடம் என்ற கார்யம் உண்டாவதற்கு காரணமாகிறது. அதனுல் தான், ம்ருத்தின் கார்யம் கடம் என்று ஸாமான்யவ்யாப்தி சொல்லப்படுகிறது.

இதுபோல் தார்ஷ்ட்டாந்தத்தில் ஆத்மஸ்வரூப ஞானம் ஏற்படுகின்ற போது அடுத்த க்ஷணமே அஞ்ஞான நிவர்த்தி ரூபமான ஆத்மஸ்வரூபமானது ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்கின்றது (உண்மையான ஸ்வரூபத்தில் ப்ரகாஸிக்கின்றது. ஆகவே ஆத்மஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானத்தினுல் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் அறியப்படவில்லை என்பதால் ஞானம் ஏற்படுவதற்கு முன்க்ஷணம் அஞ்ஞானம் இருக்கின்றது. உபநிஷத்வாக்ய ஜன்யமான ஞானம் ஏற்படுகின்ற போது. ஆத்மாவில் அஞ்ஞானநிவர்த்திரூபத்வம்

இருப்பதாகச்சொல்லப்படுவதால் அஞ்ஞான நிவர்த்திரூபத்வத்தையே ஞான ஸாத்யம் என்று சொல்லப்படுகிறதேயன்றி, ஆத்மஸ்வரூபம் விசாரஞானத்தினால் சித்திப்பதாகச் சொல்லப்படவில்லை.

**பூர்வ :** அஞ்ஞான நிவர்த்தியென்று அத்யந்த அபாவத்தைச் சொல்லப்படுகிறதா? அல்லது அஞ்ஞான த்வம்ஸம் என்று சொல்லப்படுகிறதா? அஞ்ஞான நிவர்த்தி என்பது அத்யந்த அபாவம் என்று சொன்னால்தான், அனாதியான ப்ரஹ்ம அபேதம் சொல்லமுடியும். அவ்விதம் சொல்லாமல் அஞ்ஞான த்வம்ஸம் என்று சொல்லப்படுமானால், அஞ்ஞானமென்பது, இருந்து நாசத்தை அடைகிறது என்று சொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால், அஞ்ஞான அபாவம் என்பது அனாதி என்று சொல்லமுடியாதாகையால், ஆத்ம அபேதம் சொல்லமுடியாது. அதனால் அஞ்ஞானத்வம்ஸம் என்று சொல்வதும் சரியல்ல. அதாவது அஞ்ஞான நிவர்த்தி என்பது அத்யந்த அபாவம் என்று சொன்னால் தான், அனாதியான ப்ரஹ்ம அபேதம் சொல்லமுடியும். அவ்விதம் இன்றி, அஞ்ஞான நிவர்த்தியை ப்ரத்வம்ஸாபாவம் என்று சொல்லப்படுமானால் அநித்யமான ப்ரத்வம்ஸாபாவத்திற்கும், அனாதியான ப்ரஹ்மத்திற்கும் அபேதம் சொல்லமுடியாது. ஆகையால் அஞ்ஞான அத்யந்த அபாவம் சொல்லப்படுமானால், ப்ரஹ்மமும் அஞ்ஞான நிவர்த்தி ரூபமும் ஒன்று என்று சொல்லலாம்.

**சித்தா :** ப்ரதியோகியான அஞ்ஞானம் என்பது ஸமஸத்தை உடையதாக இருந்தால் தான் பாவாபாவ விரோதம் ஏற்படும் விஷம்ஸத்தை உடையதான அஞ்ஞானத்திற்கு, வ்யாவகாரிக அபாவம் சொல்லமுடியாது. ஆனால் பாரமார்த்திக அபாவம் சொல்லலாம், என்பதால் அஞ்ஞானத்வம்ஸம் என்று சொல்வதில், விரோதம் ஏதுமில்லை.

**பூர்வ :** வேதாந்தத்திலிருந்து ப்ரஹ்மமானது ஸாமான்யமாக அறியப்படுகிறது என்றும், அதன் பிறகு விசாரிக்கின்றபோது விசேஷமாக அறியப்படுகிறது என்றும் சொல்லப் படுமானால், ஸாமான்யமாக வேதாந்தத்திலிருந்து அறியப்படுகின்ற ப்ரஹ்மமானது வாக்யத்திலிருந்து அறியப்படுகிறதா? அல்லது பதத்திலிருந்து அறியப்படுகிறதா? பதத்திலிருந்து அறியப்படவேண்டுமானால் ஏற்கனவே சித்தமாக இருக்கின்ற ஒரு வஸ்துவாக இருந்து, அது வேறு ஒரு ப்ரமாணத்தினால், க்ரஹிக்கப்பட்டதாக இருந்தால் தான், பதத்திலிருந்து அறியப்படுவதாகச் சொல்லமுடியும். ப்ரஹ்மமென்பது வேறுப்ரமாணத்திற்கே விஷயமாக இல்லாததால், பதத்திலிருந்து அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. பதத்திலிருந்தே அறியப்படவில்லையென்றால், வாக்யத்திலிருந்து எப்படி அறியமுடியும்? அதற்காக வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்டதுதான், என்று சொல்லப்படுமானால் சப்தம் என்பது அனுவாதம் என்றாகுமானதால் ப்ரமாணமென்று சொல்லமுடியாது.

**சித்தா :** அத்விதீயமாகவும் ஸத்சப்தத்தினாலும் எந்தவஸ்துவானது வேதாந்தத்தினால் தெரிவிக்கப்படுகிறதோ, அந்த வஸ்துவைப்பற்றித்தான் விசாரிக்கப்படவேண்டும். 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தில் எந்த வஸ்துவை அறிந்து கொள்ளவேண்டும் என்று தெரிவிக்கின்றதோ அந்த வஸ்துவைப்பற்றியே இந்த சாஸ்திரத்தில், விசாரிக்கப்படவேண்டும். இவ்விதம் விசாரிக்கப்படவேண்டிய 'ப்ரஹ்மதத்வம்' என்பது, முயல் கொம்புபோல, அத்யந்தம் அப்ரசித்தமல்ல. அதனால் விசாரம் என்பதற்கு விஷயமே இல்லையென்றும் விசாரம் தேவையில்லை என்றும் சொல்வதற்கு முடியாது. அப்படியானால் ப்ரஹ்மமென்பது அத்யந்தம் ப்ரசித்தமா? என்றால் அவ்விதம் முற்றிலும் ப்ரசித்தம் என்றும் சொல்லமுடியாது.

ஆகவே வேதாந்தத்திலிருந்து ஸாமான்யமாக அறியப்படுகின்ற தத்வத்தை விசாரிக்கின்ற போதுதான் அந்த வாக்யங்களின் தாத்பர்யார்த்தமான ஜீவபரமாத்மஐக்யமே

சாஸ்திரத்திற்கு விஷயம் என்பதும் அறியப்படுகிறது. ஆகவே முதலில் ஸாமான்யமாக அறியப்பட்ட ப்ரஹ்மதத்வமே| ப்ரத்யகாத்மா என்று விசாரத்திஞல் தான் அறியப் படுகிறது. இதஞல் வேதாந்த வாக்யங்கள் உபாஸனுபரம் என்று சொல்லப்படும் வாதங்கள் எல்லாம் உண்மையல்ல என்பதும், அபேதம்தான் தத்வம் என்பதும் நிர்ணயம் செய்து, த்ருடஞானம் ஏற்படுவதற்கு விசாரம் என்பது அவஸ்யம் தேவையென்பதால் விசாரம் வ்யர்த்தம் என்று சொல்லமுடியாது. மேலும் ப்ரஹ்ம பதத்தின் அர்த்தமானது பதத்திலிருந்தே, அதன் அர்த்தம் லோகத்தில் ப்ரசித்தமாக அறியப்பட்டது தான். அதாவது ஸத் என்ற சப்தமானது 'இருக்கின்றது' என்பதையே தெரிவிக்கின்றது. அதேபோல் 'அத்விதீயம்' என்ற பதமானது 'இரண்டற்றது' என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. ஆகவே ப்ரஹ்மமென்பது 'ஏகம்' என்று அறியப்படுகிறது. அதேபோல் 'ப்ரஹ்ம' என்ற சப்தமானது 'பெரிது' என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. இவ்விதம் எந்த வஸ்துவையும் குறிப்பிட்டு அதற்கு மேல் பெரிது என்று தெரிவிக்காமல் 'பெரிது' என்று பெயர் சொல்லாலேயே சொல்லப்படுவதால், ப்ரஹ்மமென்பதற்கு மேல் பெரிது என்பதே இருக்கமுடியாது என்ற அர்த்தம் கிடைக்கின்றது. இந்தவிதம் ப்ரஹ்ம சப்தார்த்தம் அறியப்படவில்லையென்று சொல்லமுடியாது. அதஞல் ப்ரஹ்மமென்பது ஸாமான்யமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுவதால், எந்த விதமான தோஷமும் கிடையாது. ஆகவே சாஸ்திரத்திலிருந்தே ப்ரஹ்மமானது ஸாமான்யமாகவும் விசேஷமாகவும் அறியப்படுகிறது. உபநிஷத் என்ற ப்ரமாணத்திஞல் மட்டுமே இந்த ப்ரஹ்ம| தத்வமானது அறியப்படவேண்டும் என்பதால், ஸாமான்யமாகவோ அல்லது விசேஷ ப்ரதிபத்தியிஞலோ, வேறு எந்தவிதமான, வாதங்களாலோ ப்ரஹ்மதத்வம் அறியப்படமுடியாது. ஆகையால் ப்ரஹ்மதத்வமானது தர்க்கம் முதலான வேறு சாஸ்திரங்களிலிருந்தும் அறியமுடியாது. தர்க்காதி சாஸ்திரங்களும் (மற்ற எல்லா சாஸ்திரங்களும்) ஏற்கனவே அறியப்படும் பேதத்தை அனுவாதம் செய்தே அதன் விஷயங்களை போதிக்கின்றதாலும், பலமதஸ்த்தர்களால் பலவிதமாக வாதம் செய்யப்படுவதாலும் ப்ரஹ்மதத்வம் என்பது ப்ரத்யக்ஷப்ரசித்தம் (லோகப்ரஸித்தம்) என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே வேதாந்த சாஸ்திரம் ஒன்றே 'அத்வைதம் தத்வம்' என்று போதிக்கின்றதால், வேறு எந்த ப்ரமாணுத்திஞலும் அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே இந்த சாரீரக மீமாம்ஸையில் உபநிஷத் வாக்யங்களைத் தான் விசாரிக்கப்படுகிறது என்பதால் இந்த விசாரத்திற்கு ப்ரஹ்மமே விஷயம் என்று சொல்லப்பட்டதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. ச்ருதிவாக்யங்கள் எல்லாமே ஜீவபரமாத்ம ஐக்யத்தையே போதிக்கின்றது. உதாரணமாக 'அயமாத்மாப்ரஹ்ம' 'தத்வமஸி', 'ப்ரஞ்ஞானம் ப்ரஹ்ம' என்பது போன்ற எல்லா வாக்யங்களும் ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று, அபேதத்தையே போதிக்கின்றது. இவ்விதம் வேதாந்த வாக்யங்களால் போதிக்கப்படும் ஐக்யத்தை ஒத்துக்கொள்ளாமல் பலர் பலவிதமான அபிப்ருயங்களைக் கொண்டுவாதம் செய்கின்றதால் தத்வநிச்சயம் ஏற்படுவதற்கு முடியாது. ஆகவே அறியப்படும் பேதங்கள் எல்லாம் உபாதியிஞல் ஏற்பட்டபேதம் என்பதையும், ஸ்வபாவமாக ஆத்மஸ்வரூபத்தில் எவ்விதபேதமுதமில்லை என்பதையும் பலவித விசாரத்திஞல் நிர்ணயம் செய்யப்படுகிறது. ஸத்சப்தத்திஞல், எந்த வஸ்து போதிக்கப்படுகின்றதோ, அந்த ப்ரஹ்மமே பரமானந்தஸ்வரூபம். அதுவே, ப்ரத்யகாத்மா

என்று அறிவானாகில் ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி' என்று ப்ரஹ்மமாகவே ஆகிறான் என்று, ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. ப்ரஹ்மமே ஆனந்த ஸ்வரூபமானதால், அதுவே புருஷார்த்தம் என்பதாலேயே ஞாதம் ப்ரஹ்ம ப்ரேயோஜனம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று அறியப்பட்ட பிறகு அதற்கு மேல் அறியப்படவேண்டியதோ, அடையப்படவேண்டியதோ எதுவுமே கிடையாது. அஞ்ஞான நிவர்த்தி என்பது தத்வ ஞானத்தினாலேயே ஏற்படுவதால், அஞ்ஞான நிவர்த்திக்காக தனியாக முயற்சித்து சாதிக்க வேண்டிய கார்யம் ஏதுமில்லை. மேலும் அஞ்ஞானம் என்பதும், அதன் நிவர்த்தி என்பதும் ஆரோபிதம் என்பதால் அதிஷ்டான ஸ்வரூபமாத்ர ஞானம் ஏற்பட்டால் அதுவே பலம். இதையன்றி தனியாக அஞ்ஞான நிவர்த்தி என்ற பலம் ஏற்படுவதாகச் சொல்வதும் சரியல்ல.

**59. அவதாரிகை :**

இதுவரை வேதாந்த சாஸ்திரத்திற்கு விஷயம், ப்ரயோஜனம் என்ற இரண்டும் சித்திக்கிறது என்பதை சித்தம் செய்யப்பட்டது. இப்போது வேறொரு முறையில் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கப்படவேண்டிய அவஸ்யமில்லை என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது. அதாவது சாஸ்திரம் என்பது அந்தந்த சப்தார்த்தம் என்னவென்பதை போதிக்கின்றது. என்ற விஷயமானது பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்திலேயே விஜாரிக்கப்பட்டிருக்கின்றது. அதாவது. 'சாஸ்திரஸ்த்தாவாதந்நிமித்தத்வாத்' என்ற சூத்ரத்திலும், 'ஸந்திக்தேஷு வாக்யஸேஷாத்' என்ற சூத்ரத்திலும் 'அதாதோ தர்ம ஜிஞ்ஞாஸா' என்று ஆரம்பிக்கப் படும் முதல் சூத்ரத்தில் ப்ரதிஞ்ஞை செய்யப்பட்டபடி, ஜைமினியினால் வேதார்த்தங்கள் விசாரிக்கப்பட்டிருப்பதால் அவரால் விசாரிக்கப்படாத விஷயங்களே இல்லையென்பதாலும், இந்த சாஸ்திரத்தினால் விசாரிக்கப்படவேண்டிய விஷயமே எதுவும் இல்லாததால் இந்த சாஸ்திரம் தேவையில்லை. அறியப்பட்ட விஷயத்தையே (கதார்த்தத்தை) மேலும். விசாரிக்கத் தேவையில்லை என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

न च गतार्थमिदं प्रतिभाति नो न हि विधेः पदमात्मसमीक्षणम् ।
न खलु यागददातिजुहोतिवत्पुरुषतन्त्रमिहाऽऽत्मनिदर्शनम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்ம ஞானம் என்பது விதிக்கு விஷயமாக இல்லாததால் கதார்த்தம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் 'யஜேத' 'ததாதி' 'ஜுஹோதி' என்பவை களைப்போல் ஆத்மஞானம் என்பது புருஷதந்த்ரமல்ல. ஆகவே விதிக்கு விஷயமாக ஆகமுடியாது.

**வ்யாக்யானம் :** வேதம் என்பதில் இரண்டு பாகங்கள் இருக்கின்றது. அதில் முதல் பாகமானது சோதனா லக்ஷணோர்த்தோ தர்ம:என்று, தர்ம விஷயங்களைப்பற்றி, விசாரிக்கின்றதில் ப்ரமாணமாகின்றது. ஸமன்வயப்ரமாணகமான வேதாந்தம் என்ற இரண்டாவது பாகத்தில் சித்தார்த்தமான ப்ரஹ்மதத்வம் பற்றி விசாரிக்கப்படுகிறது. இந்தவிதம் விதிக்கு விஷயமான பூர்வமீமாம்ஸா சாஸ்திர விசாரம் என்பதும் விதிக்கு விஷயமாக இல்லாத உத்தரமீமாம்ஸா சாஸ்திரவிசாரம் என்பதும் ஒன்றல்ல. சித்தார்த்தை போதிக்கின்ற சாஸ்திர விசாரம் வேறு, தர்ம விஷயத்தை போதிக்கின்ற சாஸ்திர விசாரம் என்பது வேறு. ஆகவே பூர்வமீமாம்ஸையில் ஜைமினியினால் விசாரிக்கப்பட்ட விஷயத்தை இங்கு உத்ரமீமாம்ஸா சாஸ்திரத்தில் விசாரிக்கப்படுவதாகச்சொல்வது சரியல்ல.

**பூர்வ :** 'ஆத்மாவாऽரேத்ரஷ்ட்டவ்ய:' என்று சொல்லப்படும் வாக்யத்தில் 'தவ்யப்ரத்யயம்' இருக்கின்றதால், ஆத்மஞானம் என்பதும் விதேயம் தான். யாகாதிகள் போல விதிக்கு விஷயமாக இருக்கின்றதால், தர்மமென்றே சொல்லவேண்டும். ஆகையால் ஜைமினியால் விசாரிக்கப்பட்ட விஷயம் என்று சொல்லவேண்டுமேயன்றி முன்னால் அறியப்பட்ட அர்த்தமில்லையென்று சொல்வது சரியல்ல. (புதம் என்றால் விதிக்கு விஷயம்) சுதார்த்தமென்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** ஆத்மா என்பதும் விதிக்கு விஷயமாக ஆகாது. ஆத்மஞானம் என்பதும் விதிக்கு விஷயமில்லை. ஆகையால் விதேயம் என்று எதைச் சொல்லமுடியும்?

ஸ்வரூப சைதன்யம் என்பது நித்யமானதால் ஸ்வரூபசைதன்யம் விதிக்கு விஷயம் என்று சொல்லமுடியாது. சைதன்யம் என்பது விதியினால் அனுஷ்டிக்கப்படக்கூடிய வஸ்துவல்ல. அகண்டாகாரவ்ருத்தி என்ற சரமவ்ருத்தியினால் ஆத்மஸ்வரூபம் விதேயம் என்று சொல்லலாமே? என்றால், சரமவ்ருத்தியென்பதும் ப்ரமாணவ்ருத்தியாக இருக்கின்றதால், ப்ரமாணதந்த்ரம் (வஸ்துதந்த்ரம்) என்று சொல்லவேண்டுமேயன்றி அதை புருஷதந்த்ரமென்று சொல்லமுடியாது. ஆகையால், சரமவ்ருத்தியையும் விதேயம் என்று சொல்லமுடியாது. ஆகவே, ஆத்மாவோ ஆத்மஞானமோ விதிக்கு விஷயமாக ஆகமுடியாது. அவித்யாநிவர்த்தியை புருஷதந்த்ரம் (புருஷப்ரய்தனம்) என்று சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது. ஞானம் ஏற்படுகின்றபோது அஞ்ஞானம் தானே நிவர்த்திக்கின்றதால் அஞ்ஞான நிவர்த்திக்காக புருஷ முயற்சியினால் செய்யவேண்டிய கார்யம் ஏதுமில்லை.

**பூர்வ :** ஆத்மஸ்வரூபம் அகர்த்தா, அபோக்தா, என்று அறியப்படுமானால் ஆத்மஸ்வரூபத்தில் ஒரு ஸம்ஸ்க்காரம் ஏற்படுகிறது. அதனால் கர்மாவைச் செய்வதற்குரிய கர்த்தாவாக ஆகின்றதால், ஆத்மஞானம் விதேயம் என்று சொல்லலாமே?

**சித்தா :** நித்யசுத்தமான ஆத்மசைதன்யத்தில் ஸம்ஸ்க்காரம் என்பது எதற்கு? இல்லாத குணத்தை உண்டாக்குவதற்கா? அல்லது தோஷத்தை விலக்குவதற்கா? நித்யசுத்தமான சைதன்யத்தில் ஸம்ஸக்காரம் என்பதே ஸம்பவிக்க முடியாது. மேலும் யாகாதி கர்மாக்களைச் செய்வதற்கு ஆத்மஞானம் அங்கமாக ஆகின்றதால், ஆத்மஞானம் விதேயம் என்று சொல்லலாமே என்றால், அவ்விதமும் சொல்லமுடியாது. ஏனெனில் ஆத்மஞானத்தைப்பற்றிய விசாரம், கர்மப்ரகரணத்தில் இருக்குமானால் கர்மாவிற்கு அங்கம் என்று சொல்லலாம். அவ்விதம் கர்மப்ரகரணத்தில் சொல்லப்படவில்லை. அதுமட்டுமல்ல. ஆத்மஞானத்திற்கு தனியாக பலம் சொல்லப்பட்டிருப்பதாலும் கர்மாவிற்கு ஆத்மஞானம் அங்கம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** ஆத்மஞானத்திற்கு தனியாக பலம் இல்லையென்பதால் அதை அர்த்தவாதமென்று சொல்லலாமே.

**சித்தா :** யாகம் என்ற கர்மாவில் ஜுஹ்யாதிகள் எப்படி அவ்யபிசரிதமான (தொடர்ந்திருக்கின்ற) அங்கமோ அதுபோல், ஆத்மஞானம் என்பது கர்மாவிற்கு அங்கமென்று சித்தித்தால்தான் ஆத்மஞானத்தை அர்த்தவாதம் என்று சொல்லமுடியும். ஆத்மஞானம் யாகாதி கர்மாவிற்கு மட்டுமே உபயோகம் என்று சித்தித்தால் தான் யாகம் என்ற க்ரதுவிற்கு அங்கமென்று சொல்லலாம். லோகவ்யவகாரங்களுக்கும் ஆத்மஞானம் உபயோகமாகின்றதால் (வ்யபிசாரம் ஸம்பவிக்கின்றது) ஆத்மஞானம் கர்மாங்கம் என்று சொல்லமுடியாது. ஆகவே கர்மாங்கம் ஆத்மஞானம் என்று சித்தித்தால் தான் ஆத்மஞானம் அர்த்தவாதம் என்று சித்திக்கும் அர்த்தவாதம் என்று சித்தித்தால் தான் கர்மாங்கத்வம் சொல்லமுடியும் என்று அன்யோன்ய

ஆச்ரயதோஷம் ஸம்பவிக்கின்றது. அதற்காக ஏதாவது ஒரு லிங்கத்தைக் கொண்டு ஆத்மஞானம் க்ரத்வங்கம் என்று சொல்லலாமே? என்றால், அதுவும் முடியாது ஏனெனில் ஆத்மஞானத்திற்கும் கர்மாவிற்கும் ஏதாவது ஸாமான்யஸம்பந்தமாவது சித்தித்தால் தான் ஸம்பந்தவிசேஷம் என்னவென்று அறியலாம். பொதுவாக எந்த ஸம்பந்தமும் அற்றதான விஷயத்தில் லிங்கத்தைக்கொண்டு அங்கமென்று சொல்வதற்கும் முடியாது.

**பூர்வ :** கர்மாக்களைச் செய்வதற்கு எப்படி வேதார்த்தஞானம் அவஸ்யம் தேவைப்படுகிறதோ, அதுபோல் கர்மா, ஆத்மஞானத்தையும் அபேக்ஷிக்கின்றது என்று சொல்லலாமே? ஆத்ம ஞானம் என்பதும் வேதத்திலிருந்து அறியப்படும் விஷயந்தான் என்பதால் ஸாமான்யஸம்பந்தம் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** ஆத்மஞானம் என்பது ஆத்மஸ்வரூபஞானம். ஆத்மா பசிதாகம் முதலான துக்கமற்றஸ்வரூபம், அகர்த்தா, அபோக்தா என்று அறியப்படும் ஞானமே, ஆத்மஞானம். அகர்த்தா என்ற ஆத்மஞானம் கர்மாவிற்கு விரோதமான ஞானம். அதனால் ஆத்மஞானம் கர்மாவிற்கு அபேக்ஷிக்கப்படுகிறது என்று சொல்வது மிகவும் அபத்தம். மேலும், விதியென்பது புருஷனை யாகத்தைச்செய் என்று எப்படி ஏவுகின்றதோ அதுபோல் ஞானமென்பதும் புருஷதந்திரமாக இருக்குமானால் விதி என்பது ஸம்பவிக்கமுடியும். ஞானம் என்பது புருஷதந்த்ரமல்ல என்பதாலும் விதேயம் என்று சொல்லமுடியாது. க்ரியையாக இருக்குமானால் அந்த க்ரியையை செய்தாலும் செய்யலாம் செய்யாமலும் இருக்கலாம் வேறு விதமாகவும் செய்யலாம். ஏனெனில் க்ரியை என்பது புருஷதந்திரம். ஞானம் என்பது வஸ்துதந்த்ரம் (ப்ரமாணதந்த்ரமானதால்) புருஷனால் செய்யக்கூடியது அல்ல. உதாரணமாக துர்நாற்றம் வேண்டுமென்று விரும்பி அதை எவரும் ஸம்பாதிக்கமாட்டார்கள். ஆனால், புருஷன் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, க்ராணேந்த்ரியம் என்ற ப்ரமாணத்தின்மூலம் அந்த துர்க்கந்தம் என்ற வஸ்து ஞானம் ஏற்படுகிறது. அதேபோல் சக்ஷுஸ் என்பதால் அறியப்படும் ஒட்டாஞ் சல்லியானது நம்முடைய விருப்பதினால் ஸ்வர்ணமாக மாறுவதில்லை. ப்ரமாணதந்த்ரமாகவே ஞானம் ஏற்படுவதால், புருஷப்ரயத்னத்திற்கு இடமேயில்லை ப்ரயத்னத்தினால் ஞானம் ஏற்படாது. ப்ரயத்னம் செய்தாலும் வஸ்துமாறாது. வஸ்து இருக்கின்றபடியே ஞானம் ஏற்படும். ஆகவே, ஆத்மஞானம் விதிக்கு விஷயமாக ஆகமுடியாது.

**பூர்வ :** யோஷித் என்பதை அக்னியென்று உபாஸனை செய்வதுபோல் ஆத்மஞானம் உபாஸனாபரம் என்று சொல்லலாமே?

**சித்தா :** உபாஸனை என்பது அதஸ்மின்தத் புத்தியானதால், அதை ப்ராந்திஞான மென்றே சொல்லநேரிடும். ப்ராந்திஞானம் என்றால் அதை புருஷார்த்த ஸாதனமென்றும் சொல்லமுடியாது. அதுமட்டுமல்ல, ஞானம் என்பது வஸ்து தந்த்ரம் என்று சொல்லப்பட்டதாலேயே இந்த விதமான ஆக்ஷேபங்களுக்கு இடமேயில்லை.

**பூர்வ :** 'சோதனா லக்ஷணோர்த்தோ தர்ம:' என்ற சூத்ரத்திலுள்ள தர்மபதமானது வேதார்த்தபரமான ஸர்வத்தையும் குறிக்கின்றது என்று சொல்லலாமே? க்ரியாபரமான விஷயத்தைப்பற்றி மட்டும் குறிக்கப்படுவதாக ஏன் சொல்லவேண்டும்?

**சித்தா :** தர்மம் என்ற பதம் க்ரியா ரூபமான யாகாதிகளைத்தான் குறிக்கின்றது என்று சொல்வதில், பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. இவ்விதம் சொல்லப்படுவதில் எவ்வித அனுபபத்தியும் இல்லாததால் லக்ஷணையாகவும் வேதார்த்தம் பூராவையும் தர்மபதம் குறிப்பதாகச் சொல்வதற்கு முடியாது. ஆகவே பூர்வமீமாம்ஸா, சாஸ்திரத்தில் இருக்கின்ற

விதிவாக்யங்கள் மூலமாக யாகாதிக்ரியைகளையும் உபாஸனம் முதலான க்ரியைகளையும் அதற்குரியபலன்களையும் மட்டுமே விசாரிக்கின்றது. அதனால் பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்திலேயே உத்தரமீமாம்ஸா விஷயத்தைப்பற்றி விசாரிக்கப்பட்டிருப்பதாகச் சொல்வது பொருந்தாது. மேலும் வேதாந்த விசாரத்திலிருந்து ஏற்படும் ஆத்ம ப்ரஹ்ம ஐக்யவிஷயமானது நேரிடையாகவோ பரம்பரையாகவோ விதிக்கு விஷயமாக ஆகாது. யோகம், தானம், ஹோமம் செய்வது போல் எது புருஷப்ரயத்னத்திற்கு விஷயமாகிறதோ அதுவே சாக்ஷாத் விதிக்கு விஷயமாக ஆகும். ஆத்மதர்சனம் என்பது புருஷப்ரயத்னம் என்ற க்ரியையினால் சாதிக்கக்கூடியது அல்ல. ப்ரமாணம் வஸ்து என்ற இரண்டையும் அபேக்ஷித்தே ஞானம் ஏற்படவேண்டும். அக்னியை அக்னியென்று அறிவது ஞானம். அது உபாஸனமல்ல. அதுபோல், ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று அறியப்படுவதே ஆத்மஞானம், ஆத்மதர்சனம் என்று சொல்லவேண்டும்.

ஆகையால் ஆத்மஞானம் விதியுமல்ல விதிக்கு ஸேஷமுமில்லை. விதிக்கு விஷயமான தர்மங்களைப்பற்றி கர்மகாண்டத்தில் விசாரிக்கப்படுகிறது. ஞானகாண்டத்தில் தான், ஆத்மஸ்வரூபத்தைப்பற்றி விசாரிக்கப்படுகிறது. அதனால் அங்காங்கி பாவமும் சொல்ல முடியாது. ஆத்மஞானம் என்பது சாக்ஷாத்மோக்ஷரூபமான பலனையுடையது என்பதால் ஸ்வத: ப்ரயோஜனமுடையதாக இருப்பதால், அர்த்தவாத வாக்யம் என்றும் சொல்லமுடியாது. எந்த விதத்திலும் கர்மகாண்டத்திற்கும் உபநிஷத்காண்டத்திற்கும் ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லமுடியாது என்பதால், கதார்த்தம் (விசாரிக்கப்பட்டது) என்று சொல்வதற்கே முடியாது.

**60. அவதாரிகை :**

ஆகையால் வேதாந்த வாக்யங்கள் விதிபரம் என்று சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லாததால் ப்ரஹ்மஞானம் விதேயம் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अपि च रूपितगोचरता विधेर्न परमात्मधियोऽस्ति च रूपणम् ।
अविदिते परमात्मनि तद्धियो न खलु रूपितता घटनान्विता ॥

**ச்லோகார்த்தம் :** ஏற்கனவே அறியப்பட்ட விஷயத்தைத் தான் விதிக்கு விஷயமாகச் சொல்லமுடியும். ஆகையால் பரமாத்மஞானமானது ஏற்கனவே அறியப்பட்ட விஷயம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் பரமாத்மாவே இன்னதென்று அறியப்படாத போது பரமாத்ம ஞானம் என்பது ஏற்கனவே அறியப்பட்டது என்று சொல்வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** ஒரு கார்யத்தைச் செய் என்று ஆஜ்ஞையிட வேண்டுமானால், முதலில் அந்த கார்யம் என்னவென்று அறியப்பட்டிருக்கவேண்டும். அதாவது யாகாதிகளை விதிக்கின்றபோது அந்தக்கார்யங்களைப்பற்றி, முன்னால் அறிந்திருக்கவேண்டும். அதுபோல் ப்ரஹ்மஞானம் என்பது விதேயம் என்று சொல்லப்படுமானால் முன்னாலேயே ப்ரஹ்மஞானம் அறியப்பட்டிருக்கவேண்டும்.

ஜீவனை உத்தேசித்து ப்ரஹ்மமென்பது விதேயமாகிறது என்றால், விதேயமான ப்ரஹ்மமென்பது நம்மால் அறியப்பட்டதல்ல. அறியப்படாத ஒரு விஷயத்தை விதிக்கிறது என்று சொல்வதும் பொருந்தாது. அறியப்படாத ப்ரஹ்மவிஷயகமான ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று விதிப்பதாகச் சொல்வதும் பொருந்தாது.

**61. அவதாரிகை :**

'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலிருந்தே ப்ரஹ்மமென்ற விஷயமானது விதிக்கு முன்பே அறியப்படுகின்றது என்பதால் அந்த ஞானத்தைஸம்பாதிக்க

வேண்டுமென்று விதிப்பதாகச் சொல்லலாமே? இதில் என்ன தோஷம் ஸம்பவிக்கமுடியும்.?

**ச்லோகம் :**

विदितता परमात्मन इष्यते यदि वृथा विधिरस्य धियो भवेत् ।
निखिलभेदनिदाननिवृत्तितो भवति तद्विषयादि च दुर्लभम् ॥

**ச்லோகார்த்தம் :** பரமாத்ம ஸ்வரூபஞானம் என்பது ஏற்கனவே அறியப்பட்டது என்று சொல்லப்படுமானல், ப்ரம்மாத்மஞானம் என்ற விஷயத்தில் விதி என்பது வ்யர்த்தம் என்ருகிறது. ஸர்வபேதங்களுக்கும் காரணமான அஞ்ஞானம் என்பது நிவர்த்திக்கின்றதால், விதிக்கு விஷயம் முதலான எதுவுமே சித்திக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ஆத்மஞானத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று விதிக்கப் படுவதாகச் சொல்லப்படுவது சரியல்ல, விதிக்கு முன்னுலேயே 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யங்களால் ஆத்மா அறியப்பட்டது தான் என்று சொல்லப்படுமானல் மறுபடி ஆத்மஞானத்தைஸம்பாதிக்கவேண்டுமென்று விதிக்கவேண்டிய அவஸ்யம் என்ன? மேலும் விதிக்காக ஆத்ம ஞானம் என்றும், ஆத்மஞானத்திற்காக விதி என்றும் சொல்லப்படுமானல், அன்யோன்ய ஆச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது.

அதுமட்டுமல்ல, விதிக்கு முன்பே ஆத்மஞானம் ஸத்யஞாஞதி வாக்யங்களால் சித்தித்திருக்குமானல், அதன் பிறகு சகல பேதத்திற்கும் காரணமான அஞ்ஞானம் என்பதே நாசமாகின்றதால், அதிகாரி, விஷயம் என்ற எந்தவிதமான பேதமும் இருக்கமுடியாது. அகர்த்தா, அபோக்தா என்று ஏற்படும் ஞானத்திஞல் விதிக்கு அதிகாரியே ஸம்ப்விக்க முடியாது.

**62. அவதாரிகை :**

**பூர்வ :** விதிக்கு முன் ஆத்மஞானம், பரோக்ஷமாக ஏற்படுகிறது என்றும், அந்த ஞானத்தை அப்ரோக்ஷமாகும்படி செய்தால்தான் ஸர்வபேதங்களும் நிவர்த்திக்கும் என்பதால் பரோக்ஷஞானத்தை அபரோக்ஷமாகச் செய்யவேண்டுமென்று விதிப்பதாகச் சொல்லலாமே? மேலும் 'விஞ்ஞாய ப்ரஞ்ஞாம் குர்வீத' என்ற வாக்யமும், ஆத்மாவை அறிந்து, அதன்பிறகு ஆத்மஞானத்தை ஆவ்ருத்தி செய்யவேண்டுமென்று, இந்த வாக்யத்திற்கு ஒரு சிலரால் அர்த்தம் செய்யப்படுகின்றது. ஆகவே, இந்த வாக்யம் ஞாஞப்யாஸத்தை விதிக்கிறதென்று சொல்லலாமே? இதஞல் எவ்வித தோஷமுமில்லை. ஏனெனில், வேதாந்த வாக்யத்திஞல் ஏற்பட்ட பரோக்ஷஞானத்தை விதிக்கப்படுவதால் அப்யாஸம் செய்யவேண்டுமென்ற நியமம் கடைபிடிக்கப்படுகிறது. அதஞல் ஏற்படும் அபூர்வம் என்ற புண்யத்தின் ஸஹாயத்தைக்கொண்டு செய்யப்படும் அப்யாஸத்தின் பாவஞபலத்திஞல் ஆத்மசாக்ஷாத்காரம் என்ற அபரோக்ஷஞானம் சித்திக்கின்றது. அதஞல் அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது என்று சொல்லலாம். ஆகவே வாக்யத்திஞல் ஏற்பட்ட பரோக்ஷஞானத்தை, ஆவ்ருத்தி செய்யவேண்டும் என்று விதிக்கப்படுகிறது. பரோக்ஷஞான ஆவ்ருத்தி என்பதே தர்மமானதால் தர்மவிசாரங்கள் எல்லாம் ஜைமினியிஞலேயே செய்துமுடிக்கப்பட்டிருப்பதால் (கதார்த்தத்வம்) அறியப்பட்ட விஷயம் என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

इति न धर्मविशेषसमर्पणं श्रुतिशिरोवचनैः क्रियते ततः ।
भवति धर्मविचारगतार्थतानवसरः परमात्मविचारणे ॥

**ச்லோகார்த்தம் :** இந்த ப்ரகாரம் வேதாந்த வாக்யங்கள் க்ரியையை போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே பூர்வமீமாம்ஸாசாஸ்திரத்தில் தர்ம விசாரம் செய்யப்பட்டிருக்கின்றது என்றே சொல்லவேண்டும். பரமாத்மவிசாரம் செய்யப்படவில்லை. அதனால் கதார்த்தம் என்று சொல்வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மதததவத்தை விஷயமாகக்கொண்ட வேதாந்த வாக்ய விசாரமானது, ஞானுப்யாஸத்தையும் விதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் ஏகவாக்யதை என்பது பொருந்தாது. ஒரு வாக்யம், ஒரே அர்த்தத்தைத்தான் தெரிவிக்கவேண்டும். வேதாந்த வாக்யமானது ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது என்று சொல்வதால் ஏகவாக்யத்வம் என்பது ஸம்பவிக்கின்றது. இவ்விதம் ஏகவாக்யத்வம் ஸம்பவிக்கின்றபோது, ஸ்வரூபத்தையும் தெரிவிக்கின்றது அப்யாஸத்தையும் விதிக்கிறது என்று சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**பூர்வ :** "ஜ்யோதிஷ்டஹோமேன ஸ்வர்க்ககாமோ யஜேத" என்ற வாக்யம் ஸ்வர்க்கம் வேண்டுமென்று விரும்புகின்றவன் ஜ்யோதிஷ்டஹோமம் என்ற யாகத்தைச் செய்ய வேண்டுமென்று விதிக்கின்றது. இந்த கர்மாவில் அதற்குரிய தேவதாதிகள் அர்த்தாத் சித்திப்பதாகச் சொல்லப்படுகிறது. அதுபோல் வேதாந்த வாக்யமானது உபாஸனு பரமாகவே இருந்தபோதிலும் அர்த்தாத், அந்த வாக்யத்திலிருந்து ப்ரஹ்மஸ்வரூபம் சித்திக்கிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** இவ்விதம் அர்த்த கல்பனம் செய்வது பொருத்தமற்றது. ஏனெனில் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் பேதங்களைக் கொண்டு, உபாஸனை என்பது விதிக்கப்படுகிறது. ப்ரஹ்மமென்பதும் உபாஸனுபரம் என்று சொல்லப்படுமானுல் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் த்வைதம் பாதிக்கப்படமுடியாது. அத்வைதமான ப்ரஹ்மதத்வம் போதிக்கப்படுவதாலேயே அறியப்படும் ப்ரத்யக்ஷமான பேதங்கள் பாதிக்கப்படுகின்றது. ஆகவே உபாஸனத்தை விதிக்கிறது என்று சொல்லப்படுமானுல் அத்வைதமான ப்ரஹ்மதத்வத்தை வேதாந்தம் உபதேசிப்பதாகச் சொல்லமுடியாது. அதுமட்டுமல்ல, உபாஸனையினுல் ப்ரஹ்மசாக்ஷாத்காரம் சித்திக்குமானுல் அந்த ஞானம், பாவனுபலத்தினுல் ஏற்படுவதால், யதார்த்தஞானமென்று சொல்லமுடியாது. ம்ருத புத்ரசாக்ஷாத்காரம்போல ப்ராந்திஞானமாகத்தான் இருக்குமேயன்றி ப்ரமை என்று (வாஸ்தவஞானம்) சொல்லமுடியாது. அஞ்ஞான நிவர்த்தகமான ஞானம் ஏற்பட்டால்தான் ப்ரஹ்மஅபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்படமுடியும். ஆகையால் மோக்ஷசாதனமான ப்ரஹ்மாத்ம ஐக்யபரமான வேதாந்த விசாரம் என்பது உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்திலிருந்தே அத்வைத ஆத்மதத்வசாக்ஷாத்காரம் ஏற்படும் என்பதால், பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தினுலேயே விசாரிக்கப்பட்டதால், கதார்த்தம் என்று சொல்வது பொருத்தமற்றது.

**63. அவதாரிகை :**

இந்தவிதம், வேதாந்த வாக்யங்கள் விதிபரமான வாக்யம் இல்லையென்று சொல்லப்படுமானுல், 'ஆத்ம இத்யேவ உபாஸீத' ஆத்மாவா஽ரே ச்ரோதவ்ய: என்பது முதலான வாக்யங்களில் உள்ள லிங், தவ்ய ப்ரத்யயங்களுக்கு என்னகதி?

**ச்லோகம் :**

**अर्हाद्यर्थे च कृत्यस्मरणमभिमतं पाणिनेः प्रार्थनादौ लिङ्लोडादेश्च वृत्तिः प्रचुरमभिमता पाणिनेर्जैमिनेश्च ।**
**तस्माद्वेदान्तवाक्ये पठितमपि लिङाद्यन्यथा योजनीयं विध्यर्थासंभवेन स्फुटमुदितनयादेतदन्यागतार्थम् ॥**

**ச்லோகார்த்தம் :** தவ்யப்ரத்யயங்களுக்கு, அர்ஹாதி அர்த்தங்கள் உண்டு என்பதை பாணினியிஞல் சொல்லப்பட்டிருக்கிறது. அதேபோல், லிங்லோட் ப்ரத்யங்களுக்கும் ப்ரார்த்தனை முதலான அர்த்தங்கள் பாணினியிஞலும் ஜைமினியிஞலும் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் வேதாந்த வாக்யங்களில் லிங்முதலான ப்ரத்யயங்கள் ப்ரயோகம் செய்யப்பட்டிருந்தாலும், ஏற்கனவே சொல்லப்பட்ட முறையில் வித்யர்த்தம் என்பது ஸ்ம்பவிக்காது என்பதால், அவைகளுக்கு வேறு அர்த்தம் தான் சொல்லப்படவேண்டும். ஆகையால் ஆத்மவிசாரம் கதார்த்தம் என்று செல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** தவ்யப்ரத்யயங்களுக்கு அர்ஹாதி அர்த்தங்களும், லிஙாதிகளுக்கு ப்ரார்த்தனுதி அர்த்தங்களும் உண்டு என்பதை பாணினியிஞலேயே "அர்ஹேக்ருத்யத்ருதஸ்ச" என்ற சூத்ரத்திஞலேயும், "விதிநிமந்த்ரணுதீஷ்ட்ட ஸம்ப்ரச்ன ப்ரார்த்தனேஷுலிங் லோட்ச" என்று லிஙாதி ப்ரத்யயங்களுக்கு அனேக அர்த்தங்கள் உண்டு என்று சொல்லப்படுகின்றது. இந்த விஷயம் ஜைமினியிஞலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதாவது "விஷ்ணுருபாம்ஸு: யஷ்ட்டவ்ய: "ஜர்திலயவாக்வாஜுஹ்யாத்" என்ற தாதி வாக்யங்களில் விதிஸம்பவிக்க முடியாதாகையால் அன்யார்த்தமே இந்த வாக்யங்களுக்கும் சொல்லப்படுகிறது. இவ்விதம் க்ரியாபரமாக விதிக்கப்படும் வாக்யங்களிலேயே, விதி ஸம்பவிக்காது என்று ஜைமினியிஞலேயே வெவ்வேறு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது இதே போல் வேதாந்த வாக்யத்திலுள்ள தவ்யப்ரத்யயங்களுக்கும் விதி ஸம்பவிக்கமுடியாது என்பதால் அர்ஹார்த்தமே சொல்லவேண்டும்.

ப்ரார்த்தனை என்பதிலும் 'மங்களம் பூயாத்' என்றும் 'மங்களம் பவது' என்றும் 'மங்களம் ப்ரார்த்தயே தே மயா' என்றும் பலவாக்யங்கள் ப்ரயோகம் செய்யப்படுகிறது. இந்த வாக்யங்களும் விதிபரம் போல இருந்தாலும் மங்களம் குர்யாத் என்று விதிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே மங்களம் ஏற்படவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன் என்றே அர்த்தம் சொல்லவேண்டும். இதே போல, கர்ம காண்ட வாக்யங்களிலும், ஒரு கர்மாவில் காட்டுஎள், காட்டு கோதுமை இவைகளைக் கொண்டு ஹோமம் செய்யவேண்டுமென்று ஒரு வாக்யத்தில் விதிக்கப்படுகிறது. இந்த விதிவாக்யத்தையே மாற்றி, சொல்லப்பட்டத்ரவ்யங்களால், இந்த ஹோமம் செய்யப்படுவது ச்ரேஷ்ட்டமில்லையென்பதால், அவஸ்யம் பயஸ் என்பதைக் கொண்டே ஹோமம் செய்யவேண்டும் என்று அடுத்தவாக்யத்தில் தெரிவிக்கப்படுகிறது. இதஞல் முன்ஞல் சொல்லப்பட்டது விதிவாக்யமில்லையென்றும், அர்த்தவாத வாக்யமென்றும் தெரிவிக்கிருர்கள். இந்தவிதம் விதிவாக்யத்தையே விதிவாக்யமில்லையென்றும் பின்ஞல் சொல்லப்படும் பயஸ் என்பதைக் கொண்டு ஹோமம் செய்யவேண்டுமென்பதே விதிவாக்யம் என்றும், 'லிங்' ப்ர்யோகம் இருந்தாலும் அது அர்த்தவாதம் தான் என்றும் ஜைமினியிஞலேயே விதி வாக்யத்தையே விதி அல்ல என்று தள்ளப்பட்டிருக்கிறது.

ஆகவே, பூர்வமீமாம்ஸா சாஸ்திரம் விதிபரம் என்றும், உத்தரமீமாம்சாஸ்திரம் விதிபரம் இல்லை என்பது மட்டுமல்ல கர்மகாண்டவிசாரம்,என்பது வேறு, வேதாந்த விசாரம் என்பது வேறு விஷயம், என்றே சொல்லவேண்டும். ஆகவே ஜைமினியிஞல் விசாரிக்கப்பட்டதால் கதார்த்தம் என்று சொல்வதற்குமுடியாது.

**64. அவதாரிகை :**

**பூர்வ :** வேதாந்தத்திற்கு அதிகாரியே ஸம்பவிக்கமுடியாது. ஏனெனில் ப்ரஹ்மதத்வம் என்பது வேதாந்த விசாரத்திஞல் அறியப்பட வேண்டிய விஷயம். அவ்விதம் இருந்த போதிலும், லோகத்திலுள்ள ஸர்வஜனங்களும் அதீதவேத வேதார்த்தங்களை அத்யயனம்

செய்து, தர்மவிசாரங்கள் எல்லாம் செய்தபிறகு, அவரவர்க்கு இஷ்டமான பலன்களை அடைவதற்காக அதற்குரிய கர்மாவைச் செய்து அந்தந்த பலன்களை அடைய முயற்ச்சிப்பார்களேயன்றி வேதாந்தார்த்தங்களை அறிவதில் ப்ரவர்த்திக்கமாட்டார்கள். ஏனெனில் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும் சுகங்களை த்யாகம் செய்துவிட்டு எப்போதோ ஏற்படப்போகின்ற மோக்ஷ சுகத்தை எவரும் விரும்பமாட்டார்கள். மேலும் யாவத் ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹோதி என்ற வாக்யமானது, கர்மாவைச் செய்யமுடியாத வயோதிகம் ஏற்படும்வரை அக்னிஹோத்ராதி கர்மாவை செய்யவேண்டுமென்று விதிக்கின்றது. இந்த ச்ருதிக்கு விரோதமாக கர்மாக்களை த்யாகம் செய்வதென்பது இயலாத கார்யம். ஆகவே, வேதாந்த விசாரத்திற்குரிய முமுக்ஷுத்வம் உடைய அதிகாரியே ஸம்பவிக்கமுடியாது.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

**एकाहाहीनसत्रद्वयविधिविहितानेककर्मानुभावध्वस्तस्वान्तोपरोधाः कथमपि पुरुषाश्चिद्दिदृक्षां लभन्ते ।**
**यज्ञेनेत्यादिवाक्यं शतपथविहितं कर्मवृन्दं गृहीत्वा स्वोत्पत्त्याम्नानसिद्धं पुरुषविविदिषामात्रसाध्ये युनक्ति ॥**

**ச்லோகார்த்தம் :** ஏஹாஹம், அஹீனம், என்ற இரண்டு யாகங்களின்மூலம் விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்வதன் மூலமாக சித்தத்திலுள்ள ப்ரதி பந்தங்கள் நிவர்த்திக்கப்பட்ட சாதகனுக்கு, ஆத்மஞானத்தில் இச்சை ஏற்படுகின்றது. ஸதபத ப்ராஹ்மணத்தில் யஞ்ஞேன என்றதாதி வாக்யங்களினால் விதிக்கப்பட்டதும் உற்பத்தி விதி வாக்யங்களினால் சித்தமானதுமான கர்மாக்களை அனுவாதம் செய்து, அந்த வாக்யத்தினால் விதிக்கப்படுவதற்கு, விவிதிஷை என்பதையே பலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** வேதத்தை அத்யயனம் செய்து அதன் அர்த்தத்தை அறிந்தவர்கள். கர்மாவைச்செய்து, அதன் பலன்களை அனுபவிக்கவேண்டுமென்று விரும்புவார்கள் என்பது வாஸ்தவந்தான். ஏனெனில், ராகாதிகளினால் சித்தசுத்தி ஏற்படாதவர்கள் எல்லோரும் கர்மாவில்தான் ப்ரவர்த்திப்பார்கள். ஆனால் கர்மகாண்டத்தில் சொல்லப்படும் ஜ்யோதிஷ்ட் ஹோமாதி கர்மாக்களை, பலத்தில் இச்சையில்லாமல் செய்யப்படுமானால் சித்தசுத்தி ஏற்படும். இந்தவிதம் கர்மபலனை விரும்பாமல் கர்மாவைச்செய்து சித்த சுத்தி அடைந்தவர்கள் மிகச்சிலரே இருக்கமுடியும். இப்பேர்ப்பட்ட ஸத்புருஷர்களையே கச்சித்தீர என்று, ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது அதாவது ஸாதனஸம் பத்தியுடையவர்களில் சிலர் ஈச்வர அனுக்ரஹத்தினால் அநித்யமானகர்மபலன்களில் விரக்தி அடைந்து, நித்ய நிரதிசய ஆனந்தமான மோக்ஷத்தை அடையவிரும்பி அதற்கு ஸாதனமான வேதாந்த விசாரத்தில் ப்ரவர்த்தித்து ஆத்மஞானத்தை அடைய முயற்சிப்பவர்களே இதற்கு அதிகாரி என்று சொல்லப்படுவதால் அதிகாரியே ஸம்பவிக்கமாட்டான் என்று சொல்வது சரியல்ல.

**பூர்வ :** ஜ்யோதிஷ்ட்ஹோமாதி கர்மாக்களை, பலத்தில் இச்சையின்றி செய்தால் ஆத்ம ஞானத்தை அடைய இச்சை ஏற்படும் என்று சொல்வதில் என்ன ப்ரமாணம்?

**சித்தா :** கர்மகாண்டத்தில் அனேக கர்மாக்கள் அதாவது ஸ்வாத்யாயம் ஜெபம் முதலான எல்லா கர்மாக்களும் விதிக்கப்பட்டிருக்கின்றது. இதே கர்மாக்களை அனுவாதம் செய்து "தமேதம் வேதானுவசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஞ்ஞேனதானேன தபஸா அனாசகேன என்று பலனை விரும்பாமல் இந்த கர்மாக்களைச்செய்தால் அதுவே (விவிதிஷைக்கு) = ஆத்மஞானத்தை அடையவேண்டுமென்ற இச்சைக்கு காரணமாகிறது என்று தெரிவிக்கின்றதால் ச்ருதி வாக்யமே இதில் ப்ரமாணம்.

**பூர்வ :** கர்மாக்களுக்கு அந்தந்த (ஸ்வர்க்கம் முதலான) பலன்களை சொல்லப் பட்டிருப்பதால் அந்த கர்மாவிற்கே வேறு ஒரு பலம் சொல்வதென்பது எப்படி ந்யாயமாகும்?

**சித்தா :** இதில். ஏதும் தோஷமில்லை. ஒரே கர்மாவை பலத்தில் இச்சையுடன் செய்தால் விரும்பிய பலன் கிடைக்கும். பலத்தில் இச்சையில்லாமல் வேதத்தினுல் விதிக்கப்படுகிறது அதனுல் செய்யப்படவேண்டும் என்று செய்யப்படுமானுல் சித்தசுத்தி என்ற பலன் ஏற்படுகிறது. இதனுல், ந்யாயவிரோதம் ஏதுமில்லை. மேலும் 'ஏகஸ்யதூபயத்வே ஸம்யோக ப்ருதக்த்வம்' என்று ஜைமினினுலேயே ஒரு ந்யாயம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது காதிரேபத்னுதி, என்று ஒரு வாக்யமானது கருங்காலி மரத்தினுல் செய்யப்பட்ட யூபஸ்தம்பத்தை வைத்து ஒரு யாகம் செய்யவேண்டுமென்றும் தெரிவித்து அந்த யாகத்திற்குரிய பலனையும் தெரிவிக்கின்றது. அதே போல் வீர்யம் வேண்டுமென்று விரும்புபவன் காதிரம் என்பதைக் கொண்டு இந்த கர்மாவைச்செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் ஒரே கர்மா இரண்டுவிதமான பலனைக்கொடுப்பதாக தெரிவிக்கின்றது. ஆகையால் இவ்விதம் இரண்டு விதமான பலன் ஏற்படலாம் என்பது கர்மகாண்ட வாக்யங்களினுலேயே அறியப்படுவதால் இதில் பொருந்தாதது ஏதுமில்லை.

**பூர்வ :** கர்மகாண்டத்திலேயே, ஒரு கர்மாவை இரண்டு விதமாகச் செய்தால் இரண்டு விதமான பலன் கிடைக்குமென்று சொல்லப்பட்டிருக்கின்றதால் ஜைமினியினுல் சொல்லப்பட்ட 'ஸம்யோகப்ருதக்த்வ' ந்யாயம் என்பது பொருந்தலாம். ஸ்வர்க்கத்தைபலனுக தெரிவிக்கின்ற கர்மகாண்ட வாக்யத்திற்கும் விவதிஷையை பலமாகச்சொல்லப்படும் உபநிஷத்வாக்யத்திற்கும், எப்படி ஏகஸ்யதூபயத்வேஸம்யோக ப்ருதக்த்வம் என்ற ந்யாயம் சொல்லமுடியும்? இரண்டுகாண்டங்களும் வெவ்வேருக இருக்கின்றதால் கர்ம காண்டத்திலுள்ள கர்மாவிற்கு ஞானகாண்டவாக்யத்திலுள்ள விவதிஷையை பலமாகச் சொல்வது பொருந்தாது. தர்சபூர்ணமாஸ ப்ரகரணத்தில் ப்ரயாஜை முதலான கர்மாக்களை படித்திருப்பதால் இரண்டிற்கும் அங்காங்கீபாவம் சொல்லப்படுகிறது. அதுபோல் இங்குஸன்னிதி இல்லாததால் அங்காங்கீபாவம் சொல்லமுடியாது.

ப்ரயாஜம் யஜதி, ஸமிதோ யஜதி என்ற கர்மாக்களுக்கு அங்கபாவம் சொல்லப் படுவதுபோல், யஞ்ஞாதிகளால் விவதிஷை ஏற்படுவதாக இரண்டையும் ஸம்பந்தப் படுத்தி சொல்லியிருந்தாலோ, அல்லது கர்மநாமாவை தெரிவித்து வேறுகார்யத்தை தெரிவித் திருந்தாலும் அந்த நாமாவைக் கொண்டு ஸம்பந்தம் (கார்யத்திற்கு) இருப்பதாகச் சொல்லாம்.

யஜேத என்ருல் யஜுதாதுவிற்கு யாகம் என்பது அர்த்தம். பாவனை என்ருல் அந்த கர்மாவைச் செய்யவேண்டுமென்ற விதி அறியப்படுகிறது. இந்த பாவனைக்கும் பலத்திற்கும் தான் ஸம்பந்தம் சொல்லப்படுகிறதேயன்றி தாத்வார்த்தத்தை அது எதிர்பார்ப்பதில்லை. பாவனைக்கும் பலத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தையே எதிர் பார்க்கின்றதால் நாமாவினுல் கர்மா என்பது உபஸ்த்திதமாக இருந்த போதிலும் நாமாவிற்கும் பலத்திற்கும் அங்காங்கிபாவம் கிடையாது.

**சித்தா :** இந்த விதம் பாவனைக்கு பலத்தோடு ஸம்பந்தம் சொல்லப்படுமானுல் ஸ்வர்க்காதிகளை பலமாகக் கொண்டயஞ்ஞாதிகள் வேறு, விவதிஷையை பலமாகக் கொண்ட கர்மாக்கள் வேறு என்று சொல்லநேரிடும். இது சரியல்ல.

தாத்வர்த்தத்தைத் தவிர, பாவனை என்ற ஒன்றை தனியாக ஒத்துக் கொள்ளப்படவில்லை. 'யஞ்ஞேன விவிதிஷந்தி' என்ற வாக்யமானது, யஞ்ஞேன என்ற

பதம்யாகம் என்ற க்ரியையைத்தான் குறிக்கின்றது. விவிதிஷைக்கு ஸாதனம்யாகம் என்ற 'ஸம்பந்தம் ஏற்படுகிறது. ஆகவே பலத்தில் இச்சையின்றி செய்யப்படும் யாகாதிகள் சித்த சுத்திக்கு காரணமாகிறது என்பதை வ்யாஸரும் ஸர்வாபேக்ஷாச என்ற சூத்ரத்தில் தெரிவித்திருக்கிறுர்.

**பூர்வ :** 'யஜேத' என்ற வாக்யங்களில் எப்படி லிங்லோட் த்வ்யப்ரத்யயம் சொல்லப் பட்டிருக்கிறதோ அதுபோல் 'விவிதிஷந்தி' என்ற வாக்யத்தில் க்ரியையைச் செய் என்று விதிக்கவில்லேயே?

**சித்தா :** 'யஜேத' என்பதுபோல் சொல்லப்படவில்லே என்ருலும் ஸர்வாபேக்ஷாச என்ற சூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யஞ்ஞேன' என்று யஞ்ஞாதிகளேக் குறிக்கின்ற பதம் யாகாதிக்ரியைதான் குறிப்பிடுகின்றது. உதாரணமாக வ்ருக்ஷாக்ரே என்று வ்ருக்ஷத்தின் உச்சியில் கருடன் என்று ஸப்தமியில் சொல்லப்பட்டாலும், வ்ருக்ஷாக்ராத்பரத: என்று வ்ருக்ஷத்திற்கு மேலே கருடன் என்று பஞ்சமியில் சொல்லப்பட்டாலும் அர்த்தபேதம் ஏதுமில்லே.

அதேபோல் ப்ரதிதிஷ்ட்டந்தி என்று வர்த்தமான ப்ரயோகம் இருக்குமிடத்திலும் விதியை கல்பித்து ப்ரதிஷ்ட்டை வேண்டுமென்று விரும்புவன் ராஜசத்ரம் என்ற கர்மாவைச் செய்யவேண்டுமென்று கல்பிக்கப்படுகிறது.

ஆகவே இந்த விதம் 'விவிதிஷந்தி' என்ற வாக்யத்தில் லிங்லோட் தவ்யப்ரத்யயம் இல்லேயென்ருலும் வித்யயை விரும்புபவன் யாகாதிகளே பல இச்சையின்றி செய்ய வேண்டுமென்று சொல்லப்படுகிறது என்பதால், கர்மகாண்டத்தில் சொல்லப்பட்ட கர்மாவையே விவிதிஷைக்காகச் சொல்லப்படுகிறது என்று ஒத்துக்கொள்ளப்படவேண்டும்.

**65. அவதாரிகை :**

லோகத்தில் விஷயசுகங்களேயே பெரிதும் விரும்பி அதை அடையவே எல்லோரும் ப்ரவர்த்திக்கின்ருர்கள் என்று சொல்வது உண்மையே, ஆனுலும், பெரும்பாலானவர்கள் இவ்விதம் விஷயசுகத்தில் ஈடுபடுகிருர்கள் என்பதற்காக, மோக்ஷத்தை விரும்பி வேதாந்த விசாரத்தைச் செய்வதற்குரிய அதிகாரியே ஸம்பவிக்கமாட்டான் என்று சொல்வது சரியல்ல. துர்லபம் என்று சொல்லப்பட்டபோதிலும், முன்னுல் தெரிவித்தபடி "கச்சித்தீர: ப்ரத்யகாத்மானமைக்ஷத்" என்று சொல்லப்படும் ச்ருதிவாக்யத்தின்படி, அதிகாரி ஸம்பவிக்கலாம். இவ்விதம், விஷய சுகங்களில் வைராக்யத்தை அடைந்தவன் ப்ரஹ்மஞானத்தை அடைய வேண்டுமென்று விரும்புகின்றவன் 'தத்விஞ்ஞானர்த்தம் குருமேவாபிகச்சேத்' என்ற வாக்யத்தின்படி குருவை அடைந்து வேதாந்த விசாரத்தைச் செய்கிருன் என்பதால் அதிகாரியே ஸம்பவிக்கமாட்டான் என்று சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

उपससाद चतुष्टयसाधनो निशितबुद्धिरशुद्धिपरिक्षयात् ।
विविदिषुर्विहितैर्विविधाध्वरैर्विदितवेद्यतमं विधिवद्गुरुम् ॥

**ச்லோகார்த்தம் :** சாதன சதுஷ்ட்டய ஸம்பத்தியுடையவனும் அதிசூக்ஷ்மமான புத்தியுடையவனும் வேதத்தில் விதிக்கப்பட்ட பலவிதமான கர்மாக்களேச் செய்த காரணத்தினுல் சித்த தோஷங்கள் நிவர்த்திக்கப்பட்டதனுல் ஆத்மஞானத்தில் இச்சை ஏற்பட்டவனுன சாதகன் ஒருவன், ப்ரஹ்மஞானியான உத்தமமான குருவை விதிபூர்வகமாக அடைகிருன்.

**வ்யாக்யானம் :** இந்த க்ரந்தத்திற்கு விஷயம் ப்ரயோஜனம் என்ற இரண்டும் ஸம்பவிக்கின்றது என்பதை சித்தம் செய்த பிறகு அர்த்த க்ரமத்தை அனுசரித்து 'தத்விஞ்ஞானார்த்தம்

குருமேவாபி கச்சேத்' என்ற க்ரமத்தை அனுசரித்து, ஆத்ம ஞானத்தை அடையவிரும்பி ஆசார்யனை வந்தடைகிறுன் என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

வேதாந்த சாஸ்திரமானது குருசிஷ்ய பரம்பரையில் அனுதிகாலமாக உபதேசிக்கப்பட்டு தொடர்ந்து வருகின்றது என்பதைச் ச்லோகத்தில் உபஸஸாத என்று சொல்லுமிடத்தில் லிட் ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதால் தெரிவிக்கப்படுகிறது. அதாவது சாஸ்திர ப்ரவர்த்தியானது பரம்பரையாக குருசிஷ்ய பரம்பராரூபத்தில் அனுதி என்பது, லிட் என்ற ப்ரயோகத்திஞல் அறியப்படுகிறது. ஆகவே வேதங்களில் சொல்லப்படும் அனேக விதமான யாகாதி கர்மாக்களை, நிஷ்காமமாகச்செய்ததால், சித்தசுத்தி ஏற்பட்டவன் ஸாதன ஸம்பத்தியுடையவனுகவும், புத்தி சாதுர்யமுடையவனுகவும் இருக்கின்றவன் ஆத்மஞானத்தை அடைய விரும்பி ப்ரஹ்மவித் என்று சொல்லப்படும் உத்தமமான ப்ரஹ்மஞானியை ஆசார்யனுக அடைந்து சாஸ்திரத்தில் விதித்திருக்கின்றபடி 'ஸன்யஸ்யச்ரவணம் குர்யாத்' என்று சொல்லப்பட்டமுறையில் ஸர்வகர்ம ஸன்யாஸத்தை விதி பூர்வகமாகச்செய்து, வேதாந்த விசாரம் செய்து ப்ரஹ்மஞானத்தை அடைகிறுன். இந்தவிதம், இந்த ஸம்ப்ரதாயமானது அனுதிகாலமாக சிஷ்டர்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது என்பதை தெரிவிப்பதற்காகவே குருசிஷ்ய ஸம்வாதரூபமா. இந்த க்ரந்தமானது இயற்றப்படுகின்றது.

**66. அவதாரிகை :**

**பூர்வ :** நிஷ்காம கர்மாவைச் செய்தால்தான், சித்தசுத்தி ஏற்படும். சித்த சுத்தி ஏற்பட்டவன் தான் நிஷ்காம கர்மாவைச் செய்வான் என்று அன்யோன்ய ஆச்ரயதோஷம் ஸம்பவிக்கின்றதே? மேலும் விஷயசுகம் என்பது தான், லோகத்தில் ப்ரசித்தமாக அறியப்படுகிறது. அனுபவ சித்தமாகவும் இருக்கிறது. மோக்ஷசுகம் என்பது யாராலும் அனுபவிக்கப்படாததால் அதில் எப்படி இச்சை ஏற்படமுடியும்?

**சித்தா :** எனக்கு எப்போதும் எந்த விதமான துக்கமும் ஏற்படக்கூடாது என்றும், எப்போதும் சுகமாகவே இருக்கவேண்டும் என்றும் ஸகல ஜீவராசிகளுக்கும் இச்சை இருக்கின்றது. இதுவே மோக்ஷ இச்சை யென்பதால், முமுக்ஷுத்வம் என்பதே ஏற்படாது என்று சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

इह जगति हि सर्व एव जन्तुर्निरतिशयं सुखमुत्तमं ममास्तु ।
उपरमतु तथोपघातरूपं विषयजदु:खमिति स्पृहां करोति ॥

**ச்லோகார்த்தம் :** "நித்ய நிரதிஸயமும் உத்தமுமான சுகம் எனக்கு வேண்டும் விஷயங்களிலிருந்து உண்டாகும் துக்கம் என்ற கஷ்ட்டம் எனக்கு இல்லாமல் இருக்கவேண்டும் என்ற இச்சையானது இந்த லோகத்தில் எல்லா ஜீவராசிகளுக்கும் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** க்ருமி, கீடாதி முதல் ஸர்வ ஜந்துக்களுக்கும் துக்க கலப்பற்ற சுகம் என்பது எனக்கு எப்போதும் இருக்கவேண்டுமென்றும் ஸர்வதுக்கங்களும் நாசமடைய வேண்டுமென்றும் விரும்பாதவர்களே கிடையாது. என்பது லோகப்ரசித்தம் இதுவே மோக்ஷசுகம் என்றும் அதில் இச்சை ஏற்படுவதே முமுக்ஷுத்வம் என்று அறியவேண்டும். ஆகவே ஒருவருக்குமே மோக்ஷஇச்சை இருக்கமுடியாது என்று சொல்வது சரியல்ல.

எல்லோருக்கும் மோக்ஷத்தில் தான் இச்சை இருக்கின்றது. இதில் அன்யோன்ய ஆச்ரய தோஷம் என்பதும் ஸம்பவிக்கமுடியாது.

**67. அவதாரிகை :**

இப்பேர்ப்பட்ட இச்சை எல்லோருக்கும் இருக்கிறதென்பது ப்ரசித்தம்தான். ஆனால், இதையே மோக்ஷஇச்சையென்று எப்படிச் சொல்வது?

**ச்லோகம் :**

निरतिशयसुखं च दुःखजातव्युपरमणं च वदन्ति मोक्षतत्वम् ।
उभयमपि जनोऽभिवाञ्छतीति स्फुटतरमस्य सदाऽस्ति मोक्षवाञ्छा ॥

**ச்லோகார்த்தம் :** நிரதிசய சுகமும், துக்க உபரமமுமே, மோக்ஷமென்று சொல்லப்படும். இந்த இரண்டையும் எல்லோரும் விரும்புகின்றதால் எப்போதும் எல்லோருக்கும் மோக்ஷ இச்சை இருக்கிறதென்பது ஸ்பஷ்ட்டமாகவே அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** நிரதிசய ஆனந்தமென்பதோ துக்கமே அற்ற நிலை என்பதோ ஸம்ஸார நிலையில் இருக்க முடியாதே? ஆகையால் இப்பேர்ப்பட்ட ஆனந்தம் என்பது ஒருவராலும் அனுபவிக்கப்படாததால், அந்த ஆனந்தத்தில் எப்படி இச்சை ஏற்பட முடியும்?

விஷயசுகம் விஷயதுக்கம் என்பவைகள் எல்லோருக்கும் அனுபவத்தில் இருக்கின்றதால், எல்லோருக்கும் எப்போதும் துக்கமற்றநிலை வேண்டும் என்பதும் சுகப்ராப்தி, எப்போதும் இருக்கவேண்டும் என்றும் இச்சை ஏற்படுகிறது என்பதில் ஸந்தேகமே இருக்கமுடியாது. இதுவே மோக்ஷ இச்சையென்று அறியவேண்டும்.

**பூர்வ :** அனுபவிக்கப்படாத ஆத்மசுகத்தில் இச்சை என்பது எப்படி ஏற்படமுடியும்?

**சித்தா :** விஷயசுகம் என்பதே ஆத்மசுகந்தான். அந்தந்த விஷயங்களின் மூலமாக அனுபவிக்கப்படுகின்றபோது ஏற்படுகின்ற சுகத்தை வெவ்வேறு சுகம் என்று அறியாமையினுல் நினைக்கின்றுர்கள் ஆனுல் ஆனந்தம் என்பது ஒன்றுதான். அந்தந்த உபாதி மூலமாக ஆனந்தம் அபிவ்யக்தியாகின்றதால் (வெளிப்படுகின்றதால்) அந்தந்த உபாதி பேதத்தினுல் ஆனந்தம் என்பது அனேகவிதம் என்றும், அவ்வப்போது உண்டாகிறது என்றும் நினைக்கிறுர்கள். சுஷுப்தி நிலையில், எந்தவிதமான விஷயங்களோ விஷய இச்சையோ இல்லாமலேயே நிர்வ்ருத்திகமாக இருக்கின்றபோது, ஸ்வரூப ஆனந்தமே அனுபவிக்கப் படுகிறது. ஆகையால் விஷயசுகம் என்பதும் பரமாத்மஸ்வரூப ஆனந்தம்தான். இந்த சுகம், நித்யம் அனுபவசித்தமாக இருக்கின்றதால் இதற்கு ப்ரமாணுந்தரம் தேவையில்லை. ஆகவே, ஸ்வயம் ப்ரகாசகமான ஆத்மானந்தமே மோக்ஷம் என்று அறியப்படவேண்டும். இதேபோல், நி: ஸேஷ துக்க உபரமம் என்பதும் ஆத்மஸ்வரூபத்தையன்றி வேறல்ல. சுஷுப்தி நிலையில் எந்தவிதமான துக்கமும் அற்ற நிலை இருக்கின்றது என்பது அனுபவசித்தம். ஆகவே, துக்கம் என்பது அவ்வப்போது வந்து போகின்றதால் ஆத்ம ஸ்வரூபத்தைச் சேர்ந்ததல்ல சுஷுப்தியில் ஆத்மா ப்ரகாசித்துக் கொண்டிருந்தும் துக்கம் என்பது ப்ரகாசிக்கவில்லை. ஸதானந்த ஸ்வரூபமான, கூடஸ்த்த சைதன்யத்தில் துக்க ஸம்பந்தம் என்பது, உண்மையில் கிடையாது. ஆகந்துகமான துக்கம் அத்யஸ்த்தம் என்று அறியவேண்டும். ஆகையால் அத்யஸ்த்தமான துக்காதிகள், நிவர்த்திக்கப்படுமானுல் அதிஷ்ட்டானமான ஆத்மா, சுகஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்றது என்பது அனுபவசித்தமானதால், முமுக்ஷுத்வம் ஏற்படலாம் என்பதால் எவ்வித ப்ரமாணமும் தேவையில்லை.

**68. அவதாரிகை :**

**பூர்வ :** ஸர்வஜனங்களுக்கும் லௌகிக விஷயானந்தத்தில் தான் இச்சை என்பது ஏற்படும். அலௌகிக ஆனந்தம் என்பது எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாததால் அதில் இச்சை என்பது ஏற்படமுடியாது. நிரதிசயசுகம் என்பது யோகாப்யாஸங்களைச் செய்கின்ற பெரியோர்களால்தான் அனுபவிக்க முடியும். ஆகவே, ஆத்மஞானத்தினால் நிரதிசய சுகம் என்பது ஏற்படமுடியாது. அதனால் மோக்ஷமென்ற சுகத்திற்கு உபாயமாக இல்லாத வேதாந்த விசாரம் எதற்காகச் செய்யவேண்டும்?

**ச்லோகம் :**

उभयमपि परात्मनः स्वरूपं विमलचिदेकरसं स्वयंप्रकाशम् ।
इति भवति विना प्रमाणमस्मिन्नुदितनयादभिवाञ्छनोपपत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** நித்ய நிரதிசய சுகம் என்பதும், துக்க உபரமம் என்ற இரண்டும் பரமாத்மஸ்வரூபமாகவே இருக்கின்றதால் ப்ரமாணமின்றியே முன்னால் சொல்லப்பட்ட முறையில் மோக்ஷ விஷயத்தில் இச்சை என்பது ஏற்படலாம்.

**வ்யாக்யானம் :** முக்தி என்பதே, துக்கநிவர்த்தி சுகப்ராப்தி என்பதுதான். இந்த இரண்டுமே ஆத்மஸ்வரூபந்தான். ஆகையால் நிரதிசய ஆனந்தம் என்பது யோகத்தினால் அடையப்படுவதல்ல. நிரதிசய ஆனந்தம் என்பது நித்யமானதால், யோக ஜன்யமல்ல (உண்டாகிறதல்ல). யோகஜன்யமான ஆனந்தம் என்பது முக்தி அல்ல. நித்ய நிரதிசய ஆனந்த ஸ்வரூபமான ஆத்மஸ்வரூபம், அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருக்கின்றது. ஆத்ம ஆவாரகமான அஞ்ஞானநிவர்த்தியென்பது, ஆத்மஞானத்தினால்தான் ஏற்பட வேண்டும். ஆகவே, ஆத்மா ஆனந்தஸ்வரூபம் என்று ப்ரகாசிப்பதற்கு ஆத்மதத்வஞானம் அவஸ்யம் வேண்டும் என்பதால் வேதாந்த விசாரம்தான் அதற்கு உபாயம்.

**பூர்வ :** ஆத்மஸ்வரூபமே நிரதிசய ஆனந்தஸ்வரூபம் என்பதற்கு என்ன ப்ரமாணம்?

**சித்தா :** சிதேகரஸமான ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மா, ஸர்வதா ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற போது அதற்கு வேறு என்ன ப்ரமாணம் வேண்டும்?

**பூர்வ :** எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாத ஆத்மஸ்வரூபம் நித்ய நிரதிசய சுகஸ்வரூபம் என்பது ஒருவருக்கும் அனுபவிக்கப்படாததால் அதில் இச்சை என்பதே ஏற்படாது. எல்லோராலும் விஷயசுகமே அனுபவிக்கப்படுகிறது.

**சித்தா :** விஷயசுகம் என்பதெல்லாம் ஆத்மசுகம்தான். அந்தந்த விஷயங்களை அனுபவிக்கப்படுகின்றபோது ஏற்படுகின்ற ஆனந்தத்தை வெவ்வேறு விதமான விஷய சுகம் என்று, அறியாமையினால் நினைக்கின்றார்கள். ஆனந்தம் என்பது எந்த விஷயமூலமாக அபிவ்யக்தி ஆகின்றதோ அந்த விஷய பேதத்தினால் (உபாதி பேதத்தினால்) ஆனந்தம் அனேகம் என்றும் அவ்வப்போது வந்து போகிறதென்றும் நினைக்கின்றார்கள்.

ஆனால் சுஷுப்தி நிலையில் எந்தவிதமான விஷயமும் இல்லாதபோது, மனஸ் என்பது நிர்வ்ருத்திகமாக இருக்கின்றபோது, ஸ்வரூப ஆனந்தமே அனுபவிக்கப்படுகிறது. அதே ஆனந்தம்தான் ஜாக்ரத் ஸ்வப்னங்களிலும் அனுபவிக்கப்படுகிறது. ஆகையால் விஷயசுகம் என்பதும் பரமாத்ம ஸ்வரூபசுகம் தான். இந்தவிதம் எல்லோராலும் நித்யம் அனுபவிக்கப்படும் சுகம் என்பது அனுபவசித்தமாக இருக்கின்றதால் ஸ்வயம் ப்ரகாச சுகஸ்வரூபம் ஆத்மா என்று அறிவதற்கு வேறு என்ன ப்ரமாணம் வேண்டும்? அதேபோல், நி:சேஷ துக்க உபரமம்

என்பதும், ஆத்மஸ்வரூபமேயன்றி வேறல்ல. சுஷுப்தி நிலையில் துக்கம் என்பதே அறியப் படவில்லை. ஆகையால் துக்கம் என்பது அவ்வப்போது ஜாக்ரதாதிஅவஸ்த்தைகளில் வந்து போகின்றது என்பதால், துக்கம் என்பது ஆத்மஸ்வரூபத்தைச் சேர்ந்ததல்ல.

இந்தவிதம் ஸதா ஆனந்தஸ்வரூபமான கூடஸ்த்த சைதன்யத்தில், துக்க ஸம்பந்தம் என்பதே இருக்கமுடியாது என்பதால் துக்கம் என்பது அத்யஸ்த்தம் என்றே அறிய வேண்டும். ஆகையால் அத்யஸ்த்தமான துக்க நிவர்த்தியென்பது பரமானந்த ஸ்வரூபமான அதிஷ்ட்டானஸ்வரூப ஞானத்தினுல் ஏற்படவேண்டும். அதற்கு உபாயமாகவே வேதாந்த விசாரம் செய்யவேண்டுமென்பது சித்திக்கின்றது. ஆகையால், துக்க நிவர்த்தி ரூபமான சுகப்ராப்தி என்பதில் எல்லோருக்கும் இச்சை இருக்கின்றது என்பதால் மோக்ஷ இச்சையென்பது எல்லோருக்கும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

ஆகவே, சித்த சுத்தியின் மூலம் வைராக்யாதி ஸம்பத்தி ஏற்பட்டவனும் வேதாந்தத்தைப்பற்றிய ஸாமான்ய ஞானம் உடையவனுக இருக்கின்றவன் எவனே அவன்தான், இந்த லோகத்தில் ஏற்படும் கர்மபலன்கள் எல்லாம் எப்படி அநித்யமோ அதுபோல் புண்யலோக பலன்களும் அநித்யமான கர்மாவினுல் ஏற்படும் பலனுக இருப்பதால் அதுவும் நாசத்தை அடையக்கூடியதுதான் என்று விவேகித்து அறிந்து, அநித்யமான கர்மாவினுல் நித்யமான சுகத்தை அடையமுடியாது என்று தீர்மானித்து, முதலில் ஸாமான்யமாக அறியப்பட்ட வேதாந்தார்த்தங்களை நன்கு விசாரித்து அறியவேண்டுமென்று விரும்பி வேதாந்த விசாரத்தில் ப்ரவர்த்திக்கின்றுன். இந்தவிதம், மோக்ஷமார்க்கம் என்னவென்று அறிந்து அதில் ப்ரவர்த்தி ஏற்படவேண்டுமானுல் உதார புத்தியுடையவனும் கர்மாவை விட்ட ஸன்யாஸியாகவும் இருக்கின்ற மஹாத்மாவிற்குத்தான், இந்த வேதாந்த விசாரத்தில் ப்ரவ்ருத்தி இருக்கமுடியும். அவ்விதமின்றி வாஸனுவஸாத் ராகாதிகளினுல் ப்ரவர்த்திப்பவர்களுக்கு வேதாந்த விசாரத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படமுடியாது.

**69. அவதாரிகை :**

துக்க அபாவமும், சுகம் வேண்டுமென்ற இச்சையுமே மோக்ஷ இச்சை என்று இருக்குமானுல், எல்லோரும் கர்மாக்களையெல்லாம்விட்டு முக்திக்கு உபாயம் எதுவோ, அதில் ப்ரவர்த்திக்கவேண்டுமே? அவ்விதமின்றி எல்லோரும் கர்மாவில்தானே ப்ரவர்த்திக்கின்றுர்கள்?

**ச்லோகம் :**

कर्मकाण्डकृतबुद्धिशुद्धितस्तर्किते च खलु मोक्षवस्तुनि ।
अर्थिताऽस्य घटते प्रयोजकज्ञाननुत्रमनसो महात्मनः ॥

**ச்லோகார்த்தம் :** கர்மகாண்டங்களில் சொல்லப்பட்ட கர்மாக்களைச் செய்து எவனுக்கு சித்தசுத்தி ஏற்பட்டிருக்கிறதோ அவனுக்கே மோக்ஷம் என்றுல் என்ன என்று யூகித்து அறியமுடியும். அவ்விதம் அறிகின்றபோதுதான் அந்த வஸ்துவை அறியவேண்டுமென்ற விருப்பமும், அதற்கு உபாயம் என்ன என்பதையும் அறிந்து அதில் ப்ரவர்த்திப்பான். சித்தசுத்தி ஏற்பட்ட விவேகிக்கே இவ்வித புத்தி ஏற்படும்.

**வ்யாக்யானம் :** யஞ்ஞாதி கர்மாக்களை அனுஷ்டிப்பதால் பாவங்கள் நிவர்த்திக்கின்றது என்று 'தர்மேண பாபமபனுததி' என்ற வாக்யம் தெரிவிக்கின்றது. கர்மாவை நிஷ்காமமாகச் செய்து சித்தசுத்தி அடைந்தவனுக்கே புத்தி தீக்ஷ்ணயமாக இருக்கும் அவனுக்குத்தான் நித்யவஸ்து எது? அநித்யவஸ்து எது? என்று விவேகித்து அறியமுடியும். அதனுல் நித்ய

நிரதிசய ஆனந்தஸ்வரூபம் ஆத்மஸ்வரூபமே என்று யூகித்து அறிகின்றவன் எவனோ அவனுக்கே மோக்ஷரூபமான புருஷார்த்தம் வேண்டுமென்ற இச்சை ஏற்படும். இவ்வித தீவிர முமுக்ஷையே வேதாந்தவிசார ப்ரவ்ருத்திக்கு காரணமாக இருக்கின்றதால், அப்பேர்ப்பட்ட அதிகாரியே இந்த விசாரத்தில் ப்ரவர்த்திப்பான். இந்தவிதமான தீவிர இச்சையென்பது ஆயிரத்தில் ஒருவனுக்கே ஏற்படும். அதனால் தீவிர இச்சையுடையவனே ப்ரஹ்மஞானத்தில் அதிகாரி என்பதால், எல்லோரும் அதிகாரியாக ஆகமாட்டார்கள். ஆகவே, எல்லோரும் ஏன் ப்ரவர்த்திக்கவில்லை என்றால், சித்தசுத்தி இல்லாதவர்கள் மோக்ஷம் என்றால் என்ன? அதற்கு உபாயம் என்ன? என்பதை அறியாததால் எல்லோரும் ப்ரவர்த்திப்பதில்லை.

**70. அவதாரிகை :**

**பூர்வ :** வேதாந்த விசாரத்தில் அதிகாரியாக இருக்கின்றவன் ஸாங்க வேதார்த்தங்களை அறிந்து, தர்க்காதி சாஸ்திரங்களை படித்தவனும் அதிகூர்மையான (ஸூக்ஷ்மமான) புத்தியுடையவனுமாக இருப்பானாகில் அவனுக்கு, ஸ்வயமே வாக்யார்த்த நிர்ணயம் செய்யக்கூடிய ஸாமர்த்யம் இருக்குமானதால், தானே வேதார்த்தங்களையும் படித்து அறிந்தது கொள்ளலாமே? குருவை அடைந்தே விசாரம் செய்யவேண்டுமென்று சொல்வதற்கு என்ன காரணம்?

**ச்லோகம் :**

धर्मनिर्णयनिमित्तमिष्यते वेदवित्परिषदेव मानवे ।
तद्वदत्र गुरुणाऽस्य सङ्गतिस्तेन चास्य घटतेऽर्थिता गुरौ ॥

**ச்லோகார்த்தம் :** தர்மம் என்பதை நிர்ணயம் செய்கின்ற விஷயத்தில் வேத வித்துக்களின் ஸபைதான் நிர்ணயம் செய்யவேண்டுமென்று மனு சாஸ்திரம் தெரிவிக்கின்றது. அதேபோல் ப்ரஹ்மதத்வ நிர்ணயம் செய்யப்படும் விஷயத்திலும் (ப்ரஹ்மவித்துக்களான) குருவின் ஸங்கம் அவஸ்யம் வேண்டும். ஆகவே, குரு அவஸ்யம் தேவையென்று சொல்லப் படுவது சரியான ந்யாயம் என்றே அறியவேண்டும்.

**வ்யாக்யானம் :** தர்மம் இன்னதென்று நிர்ணயிக்கப்படுகின்ற விஷயத்தில் மனுதர்ம சாஸ்த்ரங்களை படித்தவனாகவும், அதிசுக்ஷ்ம புத்தி உடையவனாக இருந்தாலும் கூட, நான்கு வேதங்களையும் நன்கு விசாரித்து அறிந்த வேத வித்துக்களின் ஸபைகளில் எதை தர்மமென்று நிர்ணயம் செய்து அறிவிக்கப்படுகிறதோ அதையே ஒத்துக்கொள்ள வேண்டுமென்று மனுதர்ம சாஸ்திரமே தெரிவிக்கின்றது அவ்விதம் நான்கு வேதங்களையும் அறிந்தவர்களாக இல்லா விட்டாலும், அவஸ்யம் மூன்று வேதங்களை அறிந்தவர்களான பத்து பேர்களாவது அந்த ஸபையில் இருக்கவேண்டுமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. அவர்களால், எது தர்மமென்று நிர்ணயம் செய்யப்படுகின்றதோ அதுவே தர்மம் என்று அறியவேண்டும். இந்தவிதம், தர்ம விஷயத்தை நிர்ணயம் செய்வதற்கே வேத வித்துக்களான பத்துபேர்களைக்கொண்ட ஸபையில்தான் நிர்ணயம் செய்யப்படவேண்டுமென்று சொல்லப்படுமானால், அதிசூக்ஷ்மமான ப்ரஹ்மதத்வத்தை நிர்ணயம் செய்து அறிந்து கொள்ள வேண்டிய விஷயத்தில் ஆசார்யன் அவஸ்யம் தேவை என்று சொல்லவேண்டிய அவஸ்யமே இல்லை. 'ஆசார்யவான் புருஷோவேத' என்றும் 'ஆசார்யாத்வை' என்றும் பலவிதமான ச்ருதிவாக்யங்களும் குரு அவஸ்யம் வேண்டும் என்றும், குருமுகமாகவேச்ரவணம் செய்யவேண்டுமென்பதையும் தெரிவிக்கின்றது. ஏனெனில் சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மதரமான ப்ரஹ்மதத்வத்தை நிர்ணயம் செய்வதில் குரு அவஸ்யம் என்பதையும் கேவலதர்க்காதிகளினால் நிர்ணயம் செய்யக்கூடியது அல்ல என்பதையும்

"நைஷா தர்க்கேணமதிராபனேயா ப்ரோக்தாऽன்யேனைவஸுஞ்ஞாய ப்ரேஷ்ட" என்றும் (கடோபநிஷத்) வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகவே எப்பேர்ப்பட்ட அறிவாளியாக இருந்தாலும், ஆசார்யன் இல்லாமல் ப்ரஹ்மஞானத்தை அடைவதென்பது முடியாது.

ஸர்வவேத வேதார்த்தங்களை அறிந்த ப்ரஹ்ம நிஷ்டரானயாஞ்ஞவலக்யராலேயே 'சத்வாரோ வேத தர்மஞ்ஞா: பர்ஷத்ரை வித்யமேவ வா ஸா ப்ரூதே யம் ஸதர்ம: ஸ்யாத் ஏகோவாऽத்யாத்ம வித்தம:'

**71. அவதாரிகை :**

**பூர்வ :** 'அதாதோ தர்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தில் சொல்லப்படும், 'அத' சப்தமானது, 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்று, அர்த்தத்துடன் கூடிய வேதாத்யயனம் செய்த பிறகு தர்மவிசாரம் செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்றது. இந்த விஷயத்தில் ஸ்நாதகவ்ரதம் என்பதை அனுஷ்டித்த பிறகு, தர்ம விசாரம் செய்ய வேண்டுமென்று, ஒரு ஸ்ம்ருதி வாக்யம் தெரிவிக்கின்றதால் அதையே இந்த 'அத' சப்தார்த்தம் தெரிவிப்பதாக ஒரு சிலர் அபிப்ருயம் தெரிவிக்கின்றுர்கள். இது சரியல்ல என்று கண்டித்து, வேதாத்யயனம் செய்த பிறகே தர்மவிசாரம் செய்யவேண்டுமென்றே 'அத' சப்தம் தெரிவிக்கிறது என்று இந்த விஷயத்தை தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. அதேபோல், உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படும் 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்திலுள்ள 'அத' சப்தமானது உபநிஷத் அத்யயனத்திற்குப்பிறகு என்று அர்த்தம் செய்யப்படலாம் என்பதால், கர்மகாண்ட விசாரத்திற்கு அதிகாரி வேறு ப்ரஹ்மவிசாரத்திற்கு அதிகாரி வேறு என்று சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. பூர்வமீமாம்ஸையில் எப்படி, விதி ப்ரதிஷேதங்கள் என்ற ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டிலும் அதிகாரி சொல்லப்படுகிறதோ அதேபோல் உத்தரமீமாம்ஸையிலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி அதிகாரி சொல்லப்படுகிறது. ஆகவே, அதிகாரிபேதம் சொல்ல வேண்டிய அவஸ்யமில்லை. அதனுலேயே சாஸ்திர பேதமும் இல்லையென்றே சொல்ல வேண்டும்.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபம் சரியல்ல. சாஸ்திரங்கள் இரண்டும், தெரிவிக்கின்ற விஷயத்தில், பேதம் இருக்கின்றதால் சாஸ்திரம் இரண்டும் வேறு என்றே சொல்ல வேண்டும். அதனுல் அதிகாரி பேதமும் இருக்கின்றது என்றே சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

यः कर्मकाण्डविषयेऽभिहितोऽधिकारी सोऽयं प्रवृत्तिषु निवृत्तिषु तुल्यरूपः ।
अत्राभिधित्सितविशेषणपूगयुक्तोऽसाधारणस्त्वभिमतः पुरुषो निवृत्तौ ॥

**ச்லோகார்த்தம் :** கர்மகாண்டத்தில் எந்த அதிகாரி சொல்லப்படுகிறதோ அந்த அதிகாரியே, ப்ரவருத்தி விஷயத்திலும் நிவ்ருத்தி விஷயத்திலும் துல்யமாகவே (ஸமமாகவே) இருக்கின்றுன். ஆனுல் ஞானகாண்டத்திற்கு எவன் அதிகாரியோ, அவன் மேலே சொல்லப் போகின்ற விசேஷணங்களை உடையவனுக இருக்கின்றதால் கர்மாதிகாரியைக் காட்டிலும் வேறுபட்டவனுக இருக்கிறுன். இப்பேர்ப்பட்ட அதிகாரியானவன் நிவர்த்தியில் மட்டுமே ஈடுபட்டவனுக இருக்கின்றுன்.

**வ்யாக்யானம் :** பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படும் விஷயங்களை நன்ருக விசாரித்து அறிந்து அந்த கர்மாக்களைச் செய்து அதன் பலன்களை அடைய விரும்புவானுகில் அந்த கர்மாவை நன்கு அறிந்து அதை செய்வதற்கு ஸமர்த்தனுகவும் அதைச் செய்வதற்குரிய தனம் சரீரத்ருடம், மனுேத்ருடம் முதலானவைகளையுடையவனுகவும் இருக்கின்ற அதிகாரி எவனுே அவனே அந்த கர்மாக்களில் ப்ரவர்த்திக்க முடியும். மேலும்,

சாஸ்திரங்களினுல் நிஷேதம் செய்யப்படாதவனுகவும் இருக்கவேண்டும். அதேபோல் ப்ராஹ்மணவதம் பசுவதம் முதலானவைகளைச் செய்யக்கூடாது, என்று நிவர்த்தியையும் பூர்வமீமாம்ஸா சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இவ்விதம், கர்த்ருத்வம் போக்த்ருத்வமுள்ள அஞ்ஞனே ப்ரவ்ருத்திநிவ்ருத்தி என்ற இரண்டையும் அனுஷ்டிக்க வேண்டும் என்பது இதனுல் அறியப்படுகிறது. இப்பேர்ப்பட்ட அல்ப சுகங்களை அடைந்தாலே போதும் என்று நினைத்து கர்மாவைச் செய்கின்றதில் ப்ரவர்த்திக்கின்ற அதிகாரிகள் பூர்ணுனந்தத்தை அடைய வேண்டுமென்று விரும்பாதவர்கள், உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்திற்கு எப்படி அதிகாரியாக ஆக முடியும்?

தர்மாதிகாரிக்கு தர்மம் விஷயம் ப்ரஹ்மாதிகாரிக்கு ப்ரஹ்ம விஷயம். கர்மா, கர்மபலம் இவைகளில் இச்சையுடையவனே கர்மாதிகாரி கர்மா கர்மபலம் இவையெல்லாம் அநித்யமென்று அறிந்து, அதில் வைராக்யத்தை அடைந்து, நித்யாநித்ய வஸ்து விவேகத்தினுல், ஸாதன சதுஷ்ட்டயஸம் பத்தியுடையவன், ப்ரஹ்மாதிகாரி இதையே 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்திலுள்ள அத, அத, என்ற இரண்டு சப்தங்களும் தெரிவிக்கின்றது. அதாவது 'கர்மபலன்கள் அநித்யமென்று அறிந்து சாதன சதுஷ்ட்டயஸம்பன்னனுக இருக்கின்றவன் பரஹ்ம விசாரம் செய்யவேண்டுமென்று தெரிவிப்பதனுலேயே உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்திற்கு அதிகாரி விஷயம் என்பது எல்லாமே வேறு என்று அறியப்படுகிறது. வேதார்த்தங்களை அறிவதற்கு முன் வேதாத்யனம் செய்திருக்கவேண்டும் என்பது பொதுவாக, ஸாமான்யமாகச் சொல்லப்படும் ந்யாயம். இந்த ந்யாயத்தைக் கொண்டு, இரண்டு சாஸ்திரமும் ஒன்று என்று சொல்வது சரியல்ல.

**பூர்வ :** ஸம்ஸார நிவர்த்தி என்பதே வேதாந்த விசாரத்திற்கு பலம் என்று சொல்லப்படுமானுல் ப்ரத்யகாத்மாவின் ஸ்வரூபமே ஔதாசீன்யம் என்பதால், ஸம்ஸார நிவர்த்தி என்பது ஏற்படுவதற்கு–வேதவிஹிதமான கர்மாவைச் செய்தும் நிஷித்தகர்மாக்களைச் செய்யாமலும் இருந்தால், ஸம்ஸார நிவர்த்தி என்பது ஏற்படலாம். ஆகையால் இதற்காக கர்மாவை விட்டு வேதாந்த விசாரம் செய்யலாம் என்றும், கர்மாவை விட்டவனே உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்திற்கு அதிகாரி என்று, அதிகாரிபேதம் சொல்லத் தேவை இல்லை.

**சித்தா :** ஸம்ஸார நிவர்த்தி என்பது ஆத்மஞானத்தினுல்தான் ஏற்படவேண்டும். ஆத்மஞானத்தை அடைவதற்கு சாதனம் ப்ரஹ்மவிசாரம்தான். இந்த ப்ரஹ்ம விசாரத்திற்கு ஸாதன சதுஷ்ட்டய ஸம்பத்தியையும் நித்யாநித்யவஸ்து விவேக வைராக்யாதிகளையும் உடையவனே அதிகாரி என்று அதிகாரி விசேஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தவிதம் 'அதாதோப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்திற்கு பாஷ்யகாரரால் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றதால் கர்மாவில் எவன் அதிகாரியோ அவனே ப்ரஹ்ம விசாரத்தில் அதிகாரி என்று சொல்வது பொருத்தமற்றதாகும்.

கர்மாவில் அதிகாரியாக இருக்கின்றவன், ப்ராஹ்மணத்வாதி ஜாதி அபிமான முடையவனுகவும், கர்மாவை விடாமல் செய்யவேண்டுமென்றும், அதன் பலன்களை அடைய வேண்டுமென்றும் விரும்புகின்றவன் ஒரு போதும் கர்மாவை விடமாட்டான்.

ஆகவே, கர்மாவை விட்டவனுக்கே ப்ரஹ்ம விசாரம் ப்ரயோஜனமாகும். ஸர்வவிதமான ப்ரவர்த்தியிலும் ஔதாசீன்யமாக இருப்பனுக்கு கர்மாவில் எப்படி ப்ரவ்ருத்தி ஏற்பட முடியும்? மேலும் கர்மி என்பவனுக்கு ஸாத்யமான கர்மா, விஷயம். முமுக்ஷுவிற்கு சித்தமான ப்ரஹ்மமே விஷயம். ஒன்றுக்கு ஸம்ஸாரம் பலம். மற்றொன்றுக்கு மோக்ஷம் பலம்.

இவ்விதம் இரண்டிற்கும், விஷயம் என்பதும் பலம் என்பதும் வேருக இருக்கின்ற போது சாஸ்திரமும் வேறு, அதிகாரியும் வேறு ,என்றே சொல்லவேண்டும்.

**72. அவதாரிகை :**

**பூர்வ :** சாஸ்திரம் இரண்டும் வேறு என்பதற்காக அதிகாரி பேதம் கல்பிக்க வேண்டிய அவஸ்யமில்லை. இரண்டு சாஸ்திரங்களுக்கும் அதிகாரி ஒன்ருக இருக்கலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. சாஸ்திர பேதம் இருப்பதால், அதிகாரி பேதமும் இருக்கிறதென்றே சொல்லப்படவேண்டும்.

**ச்லோகம் :**

**शास्त्रं प्रवृत्तिषु निवृत्तिषु तुल्यरूपं साधारणस्य पुरुषस्य पुराऽभ्यधायि ।**
**अस्योच्यते सकलकर्मनिवृत्तिभाजः सर्वं निवृत्तिविषयं श्रवणादिशास्त्रम् ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரவ்ருத்தி விஷயத்தையும், நிவ்ருத்தி விஷயத்தையும் (ஸமானமாக) துல்யமாக தெரிவிக்கின்ற பூர்வமீமாம்ஸா சாஸ்திரமானது ஸாதாரண ஜனங்களுக்காகச் சொல்லப்பட்டது. ஆனால் ஞானகண்டத்திலோ ஸர்வகர்மாக்களிலிருந்தும் நிவ்ருத்தி அடைந்த புருஷனுக்கு கேவலநிவ்ருத்தி மாத்ரவிஷயமான ச்ரவணுதி சாஸ்திரங்களைச்சொல்லப்படுகிறது. (ஆகவே அதிகாரிபேதம் இருக்கிறது).

**வ்யாக்யானம் :** பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில்—சாதாரணமாக ராகத்வேஷாதிகளையுடைய புருஷர்களுக்கு வேத விஹிதமான கர்மாக்களைச் செய்யவேண்டும் என்றும்—அதேபோல் சில கார்யங்களைச் செய்யக்கூடாது என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று புருஷார்த்தங்களை விரும்பி அதில் ஈடுபடுகின்றவர்களுக்கே விஹிதத்தைச் செய் என்றும் நிஷித்தத்தைச் செய்யாதே என்றும் போதிக்கின்றது. மேலும் வர்ணுச்ரமங்களிலும் வயது முதலானவைகளிலும் அபிமானமுடையவனும் அந்த பலன்களில் இச்சையுடையவனும்தான் கர்மாவில் ப்ரவர்த்திக்க முடியும். அவனுடைய ப்ரயத்ன மூலமாகவே கர்மபலன்கள் சாத்யமாகஆகவேண்டி இருக்கிறது. இதுவே பூர்வமீமாம்ஸா சாஸ்திர விஷயம். ஆனுல், உத்தரமீமாம்ஸா சாஸ்திரம் என்பது இதற்கு நேர் விருத்தமான விஷயங்களை தெரிவிக்கின்றது. கர்மபலங்களில் வைராக்யத்தை அடைந்தவனுக்கு, அந்த கர்ம விஷயங்களிலிருந்து நிவர்த்திக்க வேண்டிய விஷயத்தைப் போதிக்கின்றது. ஏஷணு த்ரயங்களையும் விட்டவனும்—வர்ணுச்ரமாதி அபிமானங்கள் அற்றவனுமான ஸன்யாஸிக்கு வேதாந்த சாஸ்திரமானது நிவ்ருத்தியைத்தான் உபதேசிக்கின்றது. ஆகவே, சாஸ்திரம் இரண்டும் ஒன்று என்றும் சொல்லமுடியாது. அதிகாரி பேதம் இல்லையென்றும் சொல்ல முடியாது. இரண்டிற்கும் விஷயமும் வேறு, பலங்களும் வேறு, அதனுல், அதிகாரியும் வேறு என்றே சொல்ல வேண்டும்.

**73. அவதாரிகை :**

பூர்வமீமாம்ஸா சாஸ்திரம் கர்மாவை போதிக்கிறது என்றும் உத்தரமீமாம்ஸா சாஸ்திரம் ப்ரஹ்மத்தை போதிக்கிறது என்றும் இரண்டிற்கும் விஷயபேதம் இருப்பதாகச் சொல்லப்பட்டாலும், அதிகாரிபேதம் இருப்பதாக ஏன் சொல்லவேண்டும்?

**ச்லோகம் :**

**शास्त्रद्वैविध्यदृष्टेर्द्विविधमधिकृतेर्भेदमप्याश्रयन्ते तद्द्वैविध्योपलब्धेः पुरुषमधिकृतं शास्त्रयोर्भिन्नमाहुः ।**
**शास्त्रार्थद्वित्वहेतोः पुरुषमधिकृतं तद्गतं चाधिकारं नो चेद्भिन्नं प्रतीयुर्द्विविधमिह वृथा शास्त्रमापद्यते हि ॥**

**ச்லோகார்த்தம் :** சாஸ்திரத்திஞல் சொல்லப்படுகின்ற விஷயமானது இரண்டு விதமாக இருக்கின்றதால் அந்தந்த விஷயத்திற்குரிய அதிகாரி என்பதும் வேருகத்தான் இருக்க வேண்டும். இவ்விதம் அந்தந்த சாஸ்திரங்களுக்கு உகந்த அதிகாரியும் அவனிடத்திலுள்ள அதிகாரமும் வேறுபட்டதென்று ஒத்துக்கொள்ளாவிடில் இரண்டு விதமான சாஸ்திரங்களும் வ்யர்த்தம் என்ருகும்.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** இரண்டு சாஸ்திரங்களிலும் இருக்கின்ற விஷயபேதத்தைக் கொண்டு இரண்டு சாஸ்திரங்களும் வேறு என்று சொல்லப்படுமாஞல், அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். எப்படியெனில் கர்மகாண்டத்தில்தான் கர்மா உபாஸனம் என்ற இரண்டு விஷயங்களையும்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. கர்மா என்பதும் உபாஸனம் என்பதும் வெவ்வேறு விஷயங்கள்தான் என்ருலும் சாஸ்திரபேதம் சொல்லப் படவில்லை. ஆகவே, சாஸ்திரத்தில் விஷயம் பேதமாக இருப்பதற்காக சாஸ்திர பேதமோ விஷயபேதமோ சொல்லப் படுமாஞல் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. அதஞல் சாஸ்திரபேதத்தை ஒத்துக்கொண்டபோதிலும் அதிகாரி பேதம் சொல்லத் தேவையில்லை.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. கர்மா உபாஸனம் என்பது இரண்டும் கர்மகாண்டத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல, சரீரத்திஞலும் மனஸிஞலும் செய்யப்படும் கர்மாக்களையும் அதற்கான பலன்களையும் சொல்லப்படுகின்ற இரண்டும் க்ரியையிஞல் சாத்யமாகின்ற விஷயத்தைப்பற்றி தெரிவிக்கின்றது. ஆகவே, அந்தந்த பலன்களில் இச்சையுடையவனே அந்தந்த கர்மாவில் ப்ரவர்த்திப்பான் மேலும், கர்ம காண்டத்திலேயே சொல்லப்படுகின்ற கர்மாக்களுக்கெல்லாம் அதிகாரி ஒருவனே என்று சொல்லமுடியாது. உதாரணமாக, காரிரீயிஷ்டியைச் செய்பவனும், புத்ரகாமேஷ்டியைச் செய்பவனும் ஒன்று என்று சொல்லமுடியாது. அதஞல் விஷயபேதமும் பலபேதமும் இருக்குமாஞல், அதிகாரி பேதமும் இருப்பதாக ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இந்தவிதம் கர்மகாண்டத்திலேயே அதிகாரிபேதம் இருக்குமாஞல், நிவர்த்தி சாஸ்திரமான உத்தரகாண்டத்திற்கு அதிகாரி வேறு என்று சொல்வதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. போகாதிகளில் இச்சையுடையவனும், போகாதிகளில் விரக்தி அடைந்தவனையும் ஒன்று என்று எப்படிச்சொல்லமுடியும்? மேலும் ஒன்று சித்தமான விஷயத்தை போதிக்கின்ற சாஸ்திரம், மற்ருென்று சாத்யமான விஷயத்தை போதிக்கின்ற சாஸ்திரம், எந்த அதிகாரிக்கு, எந்த விஷயம் தேவையோ அந்த விஷயத்தை அந்த சாஸ்திரம் போதித்தால் தான் அதில் விருப்பமுடைய அதிகாரி அதில் ப்ரவர்த்திப்பான், அவ்விதமின்றி ஒரே ஸமயத்தில் ஒன்றுக்கொன்று விருத்தமான விஷயங்களை ஒரே அதிகாரி செய்யவேண்டு மென்று சாஸ்திரம் தெரிவிக்குமாஞல் அதில் யாருக்கும் ப்ரவ்ருத்தி என்பதே ஏற்படாது. அதஞல் சாஸ்திரம் இரண்டுமே வ்யர்த்தமென்ருகிறது. ஆகையால், சாஸ்த்ரம் அப்ரமாணம் என்று சொல்லநேரிடும்.

**74. அவதாரிகை :**

எப்படிச்சொல்லப்பட்ட போதிலும் வேதாந்த சாஸ்திரத்திற்கு அதிகாரி வேறு என்று, அதிகாரி பேதம் சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளமுடியாது. கர்மகாண்டத்தில் எப்படி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி என்ற இரண்டையும் போதிக்கப்படுகிறதோ அதேபோல், உத்தர காண்டத்திலும் யம நியமாதிகளை விதிக்கப்படுவதால் ப்ரவ்ருத்தி நிவர்த்தி இரண்டையும் போதிக்கிறதென்றே சொல்லவேண்டும். ஆகையால் அதிகாரி பேதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

**यमनियमविधानैर्वाङ्मनःकायचेष्टाव्युपरमणमशेषैः कथ्यते न प्रवृत्तिः ।**
**यदि भवति कदाचित्काचिदस्य प्रवृत्तिः श्रुतिविहितनिवृत्तेः कर्मणां कत्थनं स्यात् ॥**

**ச்லோகார்த்தம் :** வேதாந்த சாஸ்திரங்களில், யம, நியமாதி விதிகளினுல் வாக், மனஸ், காயம் என்ற மூன்று கரணங்களினுலும் செய்யப்படும் எல்லா சேஷ்டைகளிலிருந்தும், நிவ்ருத்தி ஏற்படவேண்டும் என்பதைத்தான் போதிக்கப்படுகிறது. ஆகவே, யம நியமாதிகளால் ப்ரவ்ருத்தி போதிக்கப்படவில்லை. எப்போதாவது ஏதாவதொரு ப்ரவ்ருத்தி ஏற்படுமாணுல் அது வேதவிஹிதமான நிவர்த்திக்கு முரண்பட்டதாக ஆகும்.

**வ்யாக்யானம் :** அஹிம்ஸா அஸ்தேயம் ஸத்யம் ப்ரஹ்மசர்யம் அபரிக்ரஹம் என்ற யமாதிகளை விதிக்கின்ற வாக்யமும், ஸௌசம் தபஸ் ஸந்தோஷம் ஸ்வாத்யாயம் ஈச்வர ப்ரணிதானம் என்ற நியமாதிகளை விதிக்கின்ற வாக்யங்களும் வாக், மனஸ், காயம் என்ற மூன்று கரணங்களினுல் எந்த ப்ரவருத்தி இருந்ததோ அதை தடை செய்கிறதேயன்றி இந்த கார்யத்தைச் செய் என்று, ப்ரவர்த்தியை போதிக்கவில்லை. இவ்விதம் யம நியமாதிகளை அனுஷ்டிக்கின்றபோதே ஏஷணுத்ரயங்களிலிருந்தும் விடுபட வேண்டுமென்பதும் அறியப் படுகிறது. "ஏதம் வை தம் ஆத்மானம் விதித்வா ப்ராஹ்மணு: புத்ரேஷணுயாச்ச வித்தேஷணுயாச்ச லோகேஷணுயாச்சவ்யுத்தாய அதபிக்ஷாசர்யம் சரந்தி" என்று வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகவே, லோகத்ரயசாதன ரூபமான வேதவிஹித ஸர்வகர்மாக்களையும் விட்டுவிட வேண்டுமென்று ச்ருதி வாக்யமே தெரிவிக்கின்றது. அதுமட்டுமல்ல, த்யாகேனைகே அம்ருதத்வமானஸு: என்று மோக்ஷத்திற்கு ஸர்வகர்ம பரித்யாகமே ஸாதனம் என்றும் தெரிவிக்கின்றது. இதேபோல் ச்ரவணுதி சாஸ்திரமும் நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது. ஆத்மாவாSரேத்ரஷ்டவ்ய: என்பது முதலான வாக்யங்களும் அனுத்ம விஷயங்களை சிந்தனை செய்யாதே என்றுதான் போதிக்கின்றது. ஸன்யாஸிகளுக்கு விதிக்கப்படும் யம, நியமாதிகளால் மூன்று கரணங்களின் ஸ்வாபாவிகமான ப்ரவ்ருத்தியை தடை செய்து அவைகளில் ஈடுபடக்கூடாது என்பதையே தெரிவிக்கின்றது. உதாரணமாக 'ஸத்யம்வத' என்ற வாக்யம் பொய் சொல்லாதே என்று தான் தடைசெய்கின்றது. ஆகவே ஔதாசீன்யம் என்பது சித்திப்பதற்காக ஸன்யாஸ விதியானது, இவ்விதம் நிவ்ருத்தியை போதிப்பதின் மூலம் ஸர்வகர்மப்ரவ்ருத்தியையும் தடை செய்கின்றது. இதையே வேதாந்த சாஸ்திரமானது, முக்யதாத்பர்யமாக போதிக்கின்றது என்று அறியவேண்டும். ஆகவே இரண்டு சாஸ்திரமும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டையும் போதிப்பதாகச்சொல்வது சரியல்ல. வேதாந்தம் கேவல நிவ்ருத்தி சாஸ்திரம் என்பதால், அதிகாரி பேதத்தையும் அவஸ்யம் ஒத்துக் கொள்ளப்படவேண்டும்.

**75. அவதாரிகை :**

**பூர்வ :** யம, நியமாதிகளை நிவ்ருத்திபரம் என்று சொல்வது சரியே. ஆனுலும், ச்ரவணுதிகளை விதிக்கின்ற வாக்யங்கள் ப்ரவ்ருத்திபரம் என்று தானே சொல்லவேண்டும்?

**ச்லோகம் :**

**औदासीन्यविशेषमेव हि परब्रह्मात्मधीजन्मने शास्तीदं श्रवणादिशास्त्रममुना त्वाक्षिप्यते व्यापृतिः ।**
**तां तां व्यापृतिमन्तरेण घटते सा सा न शास्त्रार्थधीरित्यर्थाल्लशुनादिभक्षणगतौदासीन्यबोधादिव ॥**

**ச்லோகார்த்தம் :** ச்ரவணுதி சாஸ்திரங்கள் பரமாத்ம ஸ்வரூபஞானம் ஏற்படுவதற்காக ஔதாசீன்யத்தையேபோதிக்கின்றது.ஔதாசீன்ய்ம்சித்திப்பதற்காகவே ச்ரவணுதிவ்யாபாரம்

என்பது அர்த்தாத் சித்திக்கின்றது. லஸுனுதிபக்ஷண நிஷேதம் செய்யப்படும் விஷயத்தில் எப்படி ஔதாசீன்யத்தினுல் ஸங்கல்பஞானம் அர்த்தாத் சித்திக்கின்றதோ அதுபோல் ச்ரவணுதிவ்யாபாரம் அர்த்தாத் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** ஏஷணுத்ரயங்களுக்கு சாதனமான ஸர்வகர்மாக்களையும் விடவேண்டுமென்று ஸன்யாஸ சாஸ்திரம் போதிக்கின்றது என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொண்ட போதிலும் மோக்ஷபலனை விரும்புகின்ற ஸன்யாஸிகள் அடையவேண்டிய ஞானத்திற்காக யம நியமாதிகளை அனுஷ்ட்டித்து ச்ரவணுதிகளைச் செய்யவேண்டுமென்று யம் நியம பூர்வகமான ச்ரவணுதி வ்யாபாரங்களை விதிக்கின்றது என்றும் அதனுல் அவைகளில் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்றும் சொல்லப்படுவதால், என்ன தோஷம் ஏற்படும்?

**சித்தா :** ப்ரஹ்மாத்ம ஐக்ய ஞானம், என்பதைத்தான் வேதாந்த சாஸ்திரம் போதிக்கின்றது. 'தத்விஞ்ஞானுர்த்தம் குருமேவாऽபிகச்சேத்' என்று குருமுகமாக ச்ரவணம் செய்ய வேண்டுமென்றும் 'ஸன்யஸ்யச்ரவணம் குர்யாத்' என்று ஸர்வகர்ம ப்ரவ்ருத்தியிலிருந்தும் நிவ்ருத்தி அடைந்து ச்ரவணம் செய்யவேண்டுமென்றும் தெரிவிக்கின்றது. இந்த விதமே 'ச்ரோதவ்யம்' முதலான வாக்யங்களும் அனுத்ம விஷயங்களில் ப்ரவ்ருத்தி ஏற்படக்கூடாது என்றும் அனுத்ம விஷயப்ரவ்ருத்தியிலிருந்து விடுபட்டு ஔதாசீன்யத்தை பரிபாலனம் செய்யவேண்டு மென்பதையே இந்த வாக்யங்கள் போதிக்கின்றது என்பதும் அர்த்தாத்சித்திக்கின்றது. லஸுனம் (வெள்ளைப்பூண்டு) முதலான பக்ஷணம், பரஸ்திரீசிந்தனம் என்பதெல்லாம் அனர்த்தகரம் என்பதையே அந்த வாக்யங்கள் போதிக்கின்றதாலேயே, ஔதாசீன்ய பரிபாலனத்தையே அந்த வாக்யங்கள் போதிக்கின்றது. பரஸ்திரீகளிடம் மாத்ருபுத்தி செய்யவேண்டும் என்ற வாக்யம் வாஸனுவஸாத் ஏதோ ஒரு ஸமயம் ப்ரவ்ருத்தி ஏற்படக்கூடும் என்பதால் அந்த ப்ரவ்ருத்தியை தடை செய்வதற்காகவே இந்த வாக்யங்கள் போதிக்கின்றது. ஆகவே, இவைகளிலிருந்து சாஸ்திரமானது ஔதாசீன்யத்தையே தாத்பர்யமாக போதிக்கின்றது என்பதை அறியவேண்டும்.

மேலும் அகர்த்தா அபோக்தா என்ற ப்ரஹ்மாத்ம ஞானத்தை விரும்புகின்ற ஸன்யாஸிக்கு எந்த ப்ரவ்ருத்தியிலும் விதி என்பதே இருக்கமுடியாது. விதி இருக்கிறதென்று நினைத்து எந்த ஒரு சிறு கார்யத்திலாவது ப்ரவ்ருத்திப்பானுகில் அதில் கர்த்ருத்வபாவம் ஏற்படும். ஆகையால் ஸன்யாஸிக்கு விதி என்பதே இருக்கமுடியாது. 'ஆத்மாவாऽரேத்ரஷ்ட்டவ்ய:' என்ற தாதி வாக்யங்கள் 'ஆத்மா, தர்சன அர்ஹ:' ('தரிசிக்க தகுந்தது') என்பதையே தெரிவிக்கின்றது. ஆத்மசாக்ஷாத்காரம் சித்திப்பதற்குரிய, ஔதாசீன்யபரிபாலனத்திற்காகவே இந்த வாக்யங்களும் உபதேசிக்கப்படுகிறது. ஸன்யாஸாஸ்ரமத்தை மேற்கொண்ட யதியானவனுக்கு ஔதாசீன்ய பரிபாலனத்தையே சாஸ்திரம் போதிக்கின்றது. அகர்த்ராத்ம ஞானத்திற்கு மற்ற எந்தப்ரவர்த்தி இருந்தாலும் விரோதம் என்பதால் ச்ரவணுதிகளில் ஈடுபடுகின்றுன். யாராக இருந்தாலும் ஒரு க்ஷணம் கூட எந்த விதமான கர்மாவையும் செய்யாமல் இருப்பதென்பது இயலாத கார்யம் என்பதை பகவானும் 'நஹிகச்சித்க்ஷணமபி' என்று தெரிவிக்கின்றுர். ஆகவே, சுஷுப்திபர்யந்தம் மரணபர்யந்தம் வேதாந்த சிந்தனையில் ஈடுபடுவானுகில் ஔதாசீன்யம் என்பது நிலைத்து இருக்கின்றது.

ஆத்மா அகர்த்தா என்ற ஞானம் வேதாந்த சாஸ்திரத்திலிருந்து ஏற்பட வேண்டுமென்பது அர்த்தாத் சித்திக்கின்றது. ஜீவபரமாத்ம ஐக்யஞானம் என்பது வேதாந்தம் என்ற ப்ரமாணத்தினுல்தான் ஏற்படவேண்டும் என்பதும், இதில் அஸம்பாவனை விபரீதபாவனை

என்பதெல்லாம் ஏற்படுமானுல் ஔதாசீன்யம் என்பதற்கு விச்சேதம் ஏற்படும் என்பதாலேயே ஆத்மாவாऽரே த்ரஷ்ட்டவ்ய: ச்ரோதவ்ய: மந்தவ்ய: நிதித்யாஸிதவ்ய: என்ற தாதி வாக்யங்கள் ஔதாசீன்யத்தையே அர்த்தாத் போதிக்கின்றது.

அன்யதா சித்தமான (வேறு முறையினுல் அறிந்து கொள்ளக்கூடிய விஷயத்தை சாஸ்திரம் தெரிவிக்காது. அர்த்தசித்தமான விஷயத்தை தெரிவிக்க வேண்டிய அவஸ்யமில்லை. ஆகவே ஸன்யாஸிக்கு எந்த விதிகளும் விஷயமாக முடியாது. (கட்டுப்படுத்தாது).

**பூர்வ :** 'ஸன்யஸ்யச்ரவணம் குர்யாத்' என்ற வாக்யமானது, ஸன்யாஸிக்கு ச்ரவணத்தை விதிக்கின்றதால், அதைச்செய்யாவிடில், ப்ரத்யவாயம் என்ற தோஷம் ஸம்பவிக்குமே?

**சித்தா :** ச்ரவணுதிகளை செய்யவில்லை என்பதற்காக தோஷம் ஏற்படாது. ஆனுல் ச்ரவண மில்லையென்ருல் ஔதாசீன்யத்திற்கு பங்கம் ஏற்படும். அதனுல் தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே, ஔதாசீன்ய பரிபாலனத்திற்காக ஸன்யாஸியானவன், தானே ச்ரவணுதிகளில் ஈடுபடுகிருன்.

**76. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானுல் நிஷேத வாக்யங்கள் எல்லாம் ஔதாசீன்யத்தை மட்டும் போதிக்காமல் அதைக் காப்பாற்றவேண்டும் என்ற க்ரியையைத்தானே தெரிவிக்கின்றது? இந்த விஷயத்தை, ஒரு த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

औदासीन्ये बोधिते शास्त्रवृन्दैरर्थादस्मात्प्रच्युतस्यास्त्यनर्थः ।
इत्यालोच्य प्रच्युतेः प्रापकस्य प्राबल्येऽर्थे प्रातिलोम्यं विधत्ते ॥

**ச்லோகார்த்தம் :** சாஸ்திரங்கள் ஔதாசீன்யத்தையே போதிக்கின்றது என்பதை அறிந்து, "அந்த ஔதாசீன்ய நிலையிலிருந்து நழுவிட நேருமானுல் அனர்த்தம்" என்பது அர்த்தாத் சித்திக்கிறது என்பதை ஆலோசித்து இவ்விதம் நழுவுவதற்கு காரணமான ராகாதிகள் ப்ரபலமாக இருக்கின்றபோது அதற்கு விபரீதமான ஸங்கல்பத்தை ஸ்வயமே செய்கிருன்.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** ச்ரவணுதி சாஸ்திரமானது ஔதாசீன்யத்தை மட்டும் போதிக்கின்றதா? அல்லது ஔதாசீன்ய பரிபாலனம் என்ற கார்யத்திலும் ப்ரவர்த்திக்கும் படிச்செய்கிறதா?

ஔதாசீன்யத்தை விதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் அதை ஸன்யாஸ விதியே போதிக்கின்றது என்பதால் ச்ரவணுதிகள் தேவையில்லை. ஔதாசீன்யத்தையும் தெரிவிக்கிறது, அதை காப்பாற்ற வேண்டிய கார்யத்தையும் அந்த வாக்யம் தெரிவிக்கிறது என்ருல் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. அதனுல் ச்ரவணுதி வாக்யங்கள் ச்ரவணுதிகளில் ப்ரவர்த்தியைத்தான் உபதேசிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. விதியென்பதே இல்லாமல் ச்ரவணுதி வாக்யங்கள் அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்தையே போதிக்கின்றதால், விதி என்பதே தேவையில்லை.

ஸன்யாஸ விதியினுல், போதிக்கப்பட்ட (விஷயத்திற்கு) ஔதாசீன்யத்திற்கு ஏதாவது ஒரு ஸமயம் வாஸனுவஸாத் ஏற்படும் ப்ரவர்த்தியினுல் பங்கம் ஏற்படுமானுல் அதை தடை செய்வதற்காகவே, தானுகவே ச்ரவணுதிகளில் ப்ரவர்த்திக்கின்ருனேயன்றி விதிப்பதால் ப்ரவர்த்தி என்று சொல்லமுடியாது.

**77. அவதாரிகை :**

ஸன்யாஸிகளுக்கு நிவ்ருத்தியை கர்த்தவ்யமாக போதிக்கப்பட்டபோதிலும் ப்ரவ்ருத்தி என்பது அனர்த்தஹேது என்று சொல்வதற்கு என்ன காரணம்? என்றால், அதை தாஷ்ட்டாந்தத்தின் மூலமே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

**औदासीन्यं बोधयच्छास्त्रमेतन्नित्यं पथ्यं बोधयत्यस्य पुंसः ।**
**पथ्यादस्मात्प्रच्युतस्यास्त्यपथ्यं बुद्ध्वाऽपथ्यप्रातिलोम्ये यतेत ॥**

**ச்லோகார்த்தம் :** ஔதாஸீன்யம் என்பதை போதிக்கின்ற இந்த சாஸ்திரமானது, புருஷனுக்கு பத்யத்தை போதிக்கின்றது. இந்த பத்யத்திலிருந்து நழுவ நேரிடுமானால் அபத்யம் ஏற்படும் என்பதை அறிந்து (அபத்யப்ரவர்த்திக்கு) விபரீதமான ஸங்கல்பத்தை செய்யவேண்டும்.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** ச்ரோதவ்யம் முதலான, ஸர்வ விதி வாக்யங்களுக்கும் ப்ரவ்ருத்தியில் தாத்பர்யமில்லை என்றும், ஔதாஸீன்யத்தையே போதிக்கின்றது என்றும் ஏன் சொல்ல வேண்டும்?

**சித்தா :** சாஸ்திரம் ப்ரவ்ருத்தியை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. ஏனெனில் ப்ரவ்ருத்தி என்பது ராகாதிகளை காரணமாகக்கொண்டு ஏற்படுகிறது. அதனால் அனர்த்தத்திற்கு காரணமான ராகாதிப்ரவ்ருத்திகளை சாஸ்திரம் போதிக்கின்றது என்று சொல்வது சரியல்ல. ப்ரவ்ருத்தியை போதிக்குமானால் அதை புருஷார்த்தம் என்றும் சொல்லமுடியாது.

மேலும் ச்ருதி என்ற மாதாவானவள் எல்லோருக்கும் ஹிதத்தையே போதிக்க வேண்டுமென்று நினைத்து, யம, நியமாதிகளையும் ச்ரவணாதிகளையும் ஔதாஸீன்ய நிஷ்ட்டை ஏற்படவேண்டுமென்பதற்காகவே போதிக்கின்றாள். ஔதாஸீன்யத்திலிருந்து நழுவுவானாகில் அது ஹிதமல்ல. நிவர்த்தி என்பது போதிக்கப்பட்டபோதிலும், அதை அனுஷ்டிப்பது என்பது மிகவும் துக்ககரமாக இருப்பதாக தோன்றுகிறது. ஆனால் நிவர்த்தியென்பதே அக்ஷய்யமான சுகம். ஆகவே, புருஷனுக்கு ஹிதத்தைச் செய்ய வேண்டுமென்று ச்ருதிமாதாவினால் ஔதாஸீன்யமே போதிக்கப்படுகிறது.

**78. அவதாரிகை :**

**பூர்வ :** ச்ரவணாதி சாஸ்திரங்களையும் நிவர்த்திபரம் என்று எப்படிச் சொல்வது? ஸன்யாஸத்தை விதிக்கின்ற சாஸ்திரமே ச்ரவணாதிகளையும் விதிக்கின்றதால் அதையும் நிவர்த்திபரம் என்று தெரிவிப்பதாகச் சொல்லப்படுமானால், அது சரியல்ல. ஏனெனில், காம்யாதிகர்மாக்களைத்தான் செய்யக்கூடாது என்று நிவர்த்திபரமாகச் சொல்லப்படுகிறதேயன்றி யம நியமாதிகளையும் ச்ரவணாதிகளையும் நிவர்த்திபரமாகச் சொல்லப்படவில்லை என்றே சொல்லவேண்டும்.

இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்படுவதின் மூலமாக ச்ரவணாதி சாஸ்திரம் நிவ்ருத்திபரம்தான் என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

**वृत्ता प्रवर्तकनिवर्तकशास्त्रसिद्ध्यै षष्ठे प्रवृत्तिविनिवृत्त्यधिकारिचिन्ता ।**
**अत्रैकमेव तु निवृत्त्यधिकारमार्गमाश्रित्य सूत्रकृदथात इति प्रवृत्तः ॥**

**ச்லோகார்த்தம் :** ப்ரவ்ருத்தக சாஸ்திரமும் நிவ்ருத்திக சாஸ்திரமும் சித்திப்பதற்காக பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் ஆறாவது அத்யாயத்தில் ப்ரவ்ருத்திக்கும் நிவ்ருத்திக்கும் உள்ள அதிகாரியைப்பற்றி, விசாரம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்தில்

சூத்ரகாரர் நிவர்த்தி மார்க்கத்தை மட்டுமே ஆச்ரயித்து, 'அத' 'அத:' என்ற இரண்டு சப்தங்களைத் தெரிவித்து சாஸ்திரத்தை ஆரம்பிக்கின்றார்.

**வ்யாக்யானம் :** ப்ரவ்ருத்தி, நிவ்ருத்திகளில் அதிகாரி யார் என்பதைப்பற்றி பூர்வமீமாம்ஸா சாஸ்திரம் ஆறுவது அத்யாயத்திலேயே விசாரித்து முடிவு செய்யப் பட்டிருக்கிறது. இதையே தான் உ.மீமாம்ஸா சாஸ்திரத்திலும் போதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால்—உ.மீ. சாஸ்திரத்தில் சூத்ரகாரர் நிவர்த்தியில் யார் அதிகாரி என்பதை, 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸர' என்ற முதல் சூத்ரத்தினால் தெரிவிக்கின்றார் என்றே வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. பூர்வமீமாம்ஸையில் விதி நிஷேதங்களுக்கு யார் அதிகாரி என்று விசாரிக்கப்பட்டதேயன்றி ஞானகாண்டத்தில் யார் அதிகாரி என்று விசாரிக்கப்படவில்லை. கர்ம காண்டத்திற்கு, எவன் அதிகாரியோ, அவனே ஞான காண்டத்திற்கும் அதிகாரி என்று சொல்லப்படுமானால், ப்ரஹ்மஞானம் கர்மாவிற்கு அங்கமென்று சொல்லநேரிடும். உதாரணமாக 'தர்ஸபூர்ணமாஸம்' என்ற கர்மாவைச் செய்பவனே ப்ரயாஜை என்ற கர்மாவைச் செய்வதிலும் அதிகாரி, இந்த அதிகாரியே பசு வேண்டுமென்று விரும்புவானாகில், கோதோஹனம் என்ற பாத்ர விசேஷணத்தைக் கொண்டு அதில் பாலை கறந்து ஹோமம் செய்யவேண்டும் என்று அந்த கர்மாவிற்கு அங்கமாக இதை சொல்லப்படுகிறது. அதுபோல், கர்மாதிகாரியே ப்ரஹ்மஞானத்திற்கும் அதிகாரி என்று சொல்லப்படுமானால், ப்ரஹ்மஞானம், கர்மாங்கம் என்று சொல்ல நேரிடும். நித்ய பலமான ப்ரஹ்ம ஞானம் கர்மாவிற்கு அங்கமென்று சொல்வது சரியல்ல. அதுமட்டுமல்ல ப்ரஹ்மஞானம் என்பது கர்மாவிற்கு விரோதியானதால் கர்மாங்கம் என்று சொல்வதற்கும் முடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால் கர்மா என்பதே சித்திக்காது. அஹம் அகர்த்தா, அபோக்தா, என்றும் ப்ரஹ்மாஹமஸ்மி என்றும் ஏற்படுகின்ற ப்ரஹ்மஞானம், அஹம் கர்த்தா, இது கர்மா, இது கர்த்தவ்யம், என்ற புத்தியை பாதிக்கக் கூடியது. ஆகவே, நிவர்த்திபரமான அதிகாரிக்கே ப்ரஹ்மஞானம் என்பது சித்திக்கும். அதனால்தான் ஸர்வ கர்ம ப்ரவ்ருத்தியையும் நிஷேதம் செய்து ஸன்யாஸிக்கு ச்ரவணாதி சாஸ்திரமானது ஔதாசீன்யத்தையே போதிக்கின்றது

**79. அவதாரிகை :**

ஸர்வகர்மப்ரவ்ருத்தியையும் (கர்மாஉபாஸனம்) சாஸ்திரம் ப்ரதிஷேதம் செய்வதாக எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

औदासीन्यप्रच्युतेः प्रापकौ च रागद्वेषौ नापरो हेतुरस्ति ।
रागद्वेषप्रातिलोम्ये प्रवृत्तिरौदासीन्यप्रापणाच्छास्त्रतोऽर्थात् ॥

**ச்லோகார்த்தம் :** ஔதாசீன்யத்திலிருந்து நழுவுவதற்கு ராகத்வேஷங்களைத் தவிர வேறு காரணம் கிடையாது. ஆகவே, ஔதாசீன்யத்தை போதிக்கின்ற சாஸ்திரமானது ராகத் வேஷாதிகளுக்கு விபரீதமான ப்ரவ்ருத்தியை ச்ரவணாதி வாக்யமூலமாக தெரிவிக்கின்றது என்பது அர்த்தாத் கிடைக்கின்றது.

**வ்யாக்யானம் :** கர்மகாண்டத்தில் சொல்லப்படும் விதிக்கு விஷயமாக இருப்பதெல்லாம் ப்ரவர்த்தகம்தான் என்று தீர்மானிக்கப்பட்டால்தான் விதி விஷயமான ப்ரவ்ருத்தியை நிஷேதம் செய்வது பொருந்தாது என்று சொல்லலாம். ஆனால் சாஸ்திரம் என்பது எதையும் செய் என்று யாரையும் கட்டாயப்படுத்தவில்லை. இந்த கர்மா இன்ன பலனுக்கு ஸாதனம் என்பதை மட்டுமே

விதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. ஆகவே, எந்த பலனை எவன் விரும்புகின்றானோ அதற்கு என்ன சாதனம் என்பதை கர்மகாண்ட வாக்யங்களிலிருந்து அறிந்து அந்த கர்மாவில் ப்ரவர்த்திக்கின்றான். ஆகவே, புருஷனுடைய ப்ரவ்ருத்திக்கு ராகத்வேஷம் தான் காரணமேயன்றி விதிவாக்யம் காரணம் இல்லை. வாக்யம் இது இஷ்டசாதனம் என்பதை தெரிவிக்கின்றதேயன்றி இதைச் செய் என்று விதிக்கவில்லை. மேலும், இதே கர்மாக்களை பலனை உத்தேசிக்காமல் செய்யப்படுமானால் சித்தசுத்தி ஏற்படும் என்பதையும் 'தமேதம் வேதானு வசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஞ்ஞேன தானேன தபஸா அனாசகேன' என்றும் சாஸ்திரமே தெரிவிக்கின்றது. அதனால் ப்ரவ்ருத்தியை சாஸ்திரம் போதிக்கவில்லை. ராகாதிகள் இருந்தால் புருஷன் ப்ரவ்ருத்திக்கிறான். ராகாதிகள் இல்லையானால் ப்ரவ்ருத்தி இல்லையென்பதை அன்வயவ்யதிரேகத்தைக் கொண்டே அறியலாம்.

சைதன்யஸ்வரூபமான ஆத்மா, நித்யமுக்தம், நிர்மலம், நிரதிசய ஆனந்த ஸ்வரூபம், என்பதே ஆத்மாவின் ஸ்வாபாவிகஸ்வரூபமாக இருந்தும், அஞ்ஞானத்தினால் தோற்றுவிக்கப்படும் விக்ஷேபத்தினால், ஸமஷ்டி வ்யஷ்டியாத்மகமாக ஸரீராதிகளில் ஆத்மா ப்ரகாசிக்கின்றபோது, அவிவேகத்தினால் அஹம் என்றும், தனக்கு வேறானவைகளில் என்னுடையது என்று அபிமானத்தினாலும் ராகத்வேஷங்கள் ஏற்பட்டு, அதனால் விஷயங்களில் ப்ரவர்த்திக்கின்றான். இவ்விதம் ஸ்வபாவப்ரவ்ருத்தியிலிருந்து யாரோ ஒருவன் ஜென்மாந்தர புண்யகர்மவஸத்தினால் சித்தசுத்தி ஏற்பட்டு, வைராக்யாதி ஸம்பன்னனாக இருக்கின்றவன் நிவ்ருத்திரூபமான சாஸ்திர விசாரத்தில் ஈடுபடுகிறான்.

ஆகவே, கர்மகாண்டமோ ஞானகாண்டமோ, இந்த பலனுக்கு இது ஸாதனம் என்பதையே தெரிவிக்கின்றது. ஏனெனில் சாஸ்திரம் என்பது ப்ரமாணம். ஆகையால் சாஸ்திரம் ஞாபகமே தவிர, காரகம் இல்லை. ஆகவே, ஔதாசீன்யத்தில் நிஷ்டையுடையவனாக இருக்க வேண்டுமானால், ச்ரவணாதிகளே ஸாதனம் என்று அறிந்து ஸ்வயமாகவே அதில் ப்ரவர்த்திகின்றான். இவ்விதம், கர்மகாண்ட விஷயங்களும், விதிக்கப்படவில்லை என்பதால் சாஸ்திரத்தினால் விதிக்கப்படுகின்ற கர்மாவை நிஷேதம் செய்யப்படுவதாகச் சொல்வது சரியல்ல. கர்மகாண்டமோ ஞானகாண்டமோ எல்லாமே நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது.

**80. அவதாரிகை :**

த்ருஷ்டபலமான ஔதாசீன்யத்தை அடைவிக்கின்ற காரணத்தினால், ச்ரவணாதி சாஸ்திரங்கள் நிவ்ருத்தியை போதிக்கின்றது என்று சொல்லலாம். ஆனால் ஸௌசாதிகளை கர்த்தவ்யமாக போதிக்கின்ற சாஸ்திரத்தினால் ப்ரவ்ருத்தி போதிக்கப்படவில்லை என்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अशुचेः प्रतिषेधशास्त्रतो न भवत्येव हि वेदचिन्तनम् ।
श्रवणादिनिवृत्तिशास्त्रतः स्वयमर्थादथ शौचमापतेत् ॥

**ச்லோகார்த்தம் :** அஸௌசியாக இருப்பனுக்கு வேத விசாரம் கிடையாது என்று நிஷேத சாஸ்திரத்தினால் அறியப்படுகிறது. ஆகையால் ச்ரவணாதி நிவ்ருத்தி சாஸ்திரத்திலிருந்து ஸௌசமானது ஸ்வயமே அர்த்தாத் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** வேத வேதாந்தார்த்தங்களை நன்றாக சிந்தித்து அறிவது என்பது தான் ச்ரவணம் என்று சொல்லப்படுகிறது. இந்த ச்ரணவமானது. பாஹ்ய சுத்தி, ஆந்த்ர சுத்தி என்ற இரண்டும் உடையவன்தான் செய்யமுடியும். இவ்வித சுத்தி இல்லாதவனுக்கு அத்யயனத்திலேயே

அதிகாரம் கிடையாது. பாஹ்யசுத்தி என்பது என்னவென்றால் ஸரீரம் என்பதும், இருக்கின்ற இடம் என்பதும், சுத்தமாக இருக்க வேண்டும். ஆந்தர சுத்தி என்பது ராகத்வேஷங்கள் அற்ற சித்த சுத்தியையே சொல்லப் படுகிறது. ஆகவே, ஸௌசாதிகளுக்கு அத்ருஷ்ட்டபலம் என்பது இருந்த போதிலும் த்ருஷ்ட்டபலமான அத்யயனம், ச்ரவணாதி முதலானவைகளுக்கும் உபகாரமாக இருக்கின்றதாலும் ச்ரவணாதிகள் இல்லாமல் ஔதாசீன்யமென்பதும் சித்திக்காது என்பதாலும், ஸௌசாதிகள், த்ருஷ்ட்ட பலத்திற்கும் அவஸ்யம் என்று அர்த்தாத் சித்திக்கின்றதால் அதில், தானே ப்ரவர்த்திக்கின்றான். அசுசி என்பது நிஷேதம் செய்யப் படுவதாலேயே ஸுசி என்பது அர்த்தாத் கிடைக்கின்றது.

'நாசுசி: ப்ரஹ்ம கீர்த்தயேத்' என்ற வாக்யமும் "தஸ்யவா ஏதஸ்ய யஞ்ஞஸ்ய த்வாவனத்யாயௌ யதாத்மாऽசுசி: யத்ருச:" என்றும் 'ஸவாத்யாய பூமிம் சாஸுத்தாம்' என்பது முதலான ஸ்ம்ருதி வாக்யத்தினாலும் சாஸ்திரம் அஸுசி என்பதை நிஷேதம் செய்திருக்கிறது.

**81. அவதாரிகை :**

ஸௌசாதிகள் என்பது அர்த்தாத் சித்திக்கிறது என்றாலும் அந்த ஸௌசாதிகள் யாரார் எத்தனை முறை செய்ய வேண்டுமென்ற விசேஷநியமங்களைசாஸ்திரமே தெரிவிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, அந்த நியமங்களை சாஸ்திரம் விதிக்கிறது என்று தானே சொல்லவேண்டும்? ஸன்யாஸிகளும் இந்த விதிகளை அனுசரித்து அதில் ப்ரவர்த்திகின்றார்கள் என்றுதானே சொல்லவேண்டும்?

**ச்லோகம் :**

अचतुर्गुणशौचवारणात् स्वयमेवास्य चतुर्गुणं भवेत् ।
अचतुर्ष्वशनस्य वारणात् स्वयमेवास्य चतुर्षु भोजनम् ॥

**ச்லோகார்த்தம் :** நான்கு முறைக்கு மேல்ஸ்நானம் செய்யக்கூடாது என்று நிஷேதம் செய்யப்படுவதாலேயே (ஸன்யாஸிகள்) நான்கு முறை தான் செய்ய வேண்டுமென்று ஸ்வயமே சித்திக்கின்றது. அதேபோல் நான்கு வர்ணத்தார்களையன்றி வேறு எவரிடமும் பிக்ஷை எடுக்கக்கூடாது என்று நிஷேதம் செய்வதிலிருந்தே நான்கு வர்ணத்தார்களிடம் தான் பிக்ஷை எடுக்கவேண்டுமென்பது சித்திக்கிறது.

**வ்யாக்யானம் :** ஸ்நானபானாதிகளை சாஸ்திரம் ஸாமான்யமாக தெரிவித்தபோதிலும், லோகத்தில் எல்லோரும் சாஸ்திரத்தினால்தான், ஸ்னானபானாதிகளைச் செய்யவேண்டுமென்று அறிந்து செய்கிறார்கள் என்று சொல்லமுடியாது. ஸ்வபாவமாகவே ஸ்னானாதிகளில் எல்லோருக்கும் ப்ரவ்ருத்தி இருக்கின்றது. ஆனால், யாரார் எத்தனைமுறை ஸ்னானம் செய்யவேண்டுமென்ற நியமங்களை சாஸ்திரத்தினால்தான் அறிந்து செய்ய வேண்டும். அதாவது ஏதத்ஸௌசம் க்ருஹஸ்த்தானாம் த்விகுணம், ப்ரஹ்மசாரிணாம் த்ரிகுணம் சவனஸ்த்தானாம் என்று சொல்லப்படுவதனாலேயே இந்த மூன்று ஆச்ரமத்தைத் தவிர நான்காவதாக ஸன்யாஸ ஆச்ரமம்தான் சொல்லப்படுவதால் ஸன்யாஸிக்கு 'யதினாம்து சதுர்குணம், என்று சொல்லாமலேயே கிடைக்கின்றது என்று சொல்லப்படுகிறது. இதேபோல் "சாதுர்வர்ண்யம் சரேத்பைக்ஷ்யம்' என்று தெரிவிக்கின்றது. இவ்விதமான வாக்யங்களினால் அவரவர்க்கு சொல்லப்பட்ட ஸ்நானம் முதலானவைகளைத் தவிர அவைகளுக்கு கூடுதலாகவோ குறைவாகவோ செய்யக்கூடாது என்பது அறியப்படுகிறது. அதுமட்டுமல்ல. ஸன்யாஸி நான்கு வர்ணத்தார்களைத் தவிர ஐந்தாவது வர்ணத்தார்களிடம் பிக்ஷை எடுக்கக்கூடாது என்பதும்

அர்த்தாத் கிடைக்கின்றது. ஆகவே, ஸன்யாஸிகளும் சுகத்தை உத்தேசித்து நியதகாலத்தைவிட்டு அதிக ஸ்நானம் செய்யக்கூடாது என்று தடை செய்கின்றது. 'த்ரிஸந்த்யாதென ஸ்நானம் ஆசரேத்' என்றதாதி வாக்யங்கள் அவரவர்களுக்கு சொல்லப்பட்டதற்கு மேலாகவோ குறைவாகவோ செய்யக்கூடாது என்பதையே தெரிவிக்கின்றது. பசியை போக்கிக் கொள்ளவேண்டியதற்காக போஜனம் செய், என்று சாஸ்திரம் தெரிவிக்கவேண்டியதில்லை. ஆனால் நிஷேதம் செய்யப்படுவை களை புஜிக்கக்கூடாது என்பதை சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இதேபோல் ஸன்யாஸிகளுக்கு பிக்ஷையைத் தவிர வேறு மார்க்கத்தினால் பசியை போக்கிக்கொள்ளமுடியாது. ஆனால் நான்கு வர்ணத்தார்களிடமே செய்யவேண்டும் என்று தெரிவிக்கின்றதால் மற்றவைகளை தடை செய்கின்றது. ஆகவே இந்த கார்யத்தை இன்னவிதம் யாரால் செய்யப்பட வேண்டுமென்பதை சாஸ்திரம் தெரிவிக்கின்றதன் மூலமாக, மற்றவைகளைச் செய்யக்கூடாது என்றே நிஷேதம் செய்கின்றது.

**82 அவதாரிகை :**

இதே ந்யாயத்தின்படி, ஸந்தோஷம் தபஸ் ஸ்வாத்யாயம் என்பதை தெரிவிக்கின்ற வாக்யங்கள் விதிக்கவில்லை. நிஷேதம் செய்வதின் மூலமாக நிவ்ருத்தியையே போதிக்கின்றது.

**ச்லோகம் :**

इति योजय सर्वमीदृशं कथितन्यायवशेन सादरम् ।
विधिहीननिवृत्तिशास्त्रतः कथितेऽस्मिन्नधिकारवर्त्मनि ॥

**ச்லோகார்த்தம் :** கீழே சொல்லப்பட்டபடி மோக்ஷ அதிகாரிக்கே நிவ்ருத்தி சாஸ்திரமானதால், விதிஸம்பவிக்கமுடியாது என்று, எந்த ந்யாயத்தைக் கொண்டு சொல்லப் பட்டதோ அதே ந்யாயத்தைக் கொண்டு ஸந்தோஷாதி வாக்யங்களிலும் பொருத்தி, ஆதரவோடு எல்லாவற்றிற்கும் அர்த்தம் செய்து கொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'ஸந்தோஷம்' என்பதால் துக்கபரிகாரத்தையும் 'தபஸ்' என்பதால் வேதவிஹிதமான கார்யத்தைய்ன்றி வேறு எதையும் செய்யக்கூடாது என்றும்— 'ஸ்வாத்யாயம்' என்பது (வேதாத்யயனம்) 'அன்யோ வாசோ விமுஞ்சத' என்றும் தெரிவிக்கின்றது. அதாவது, 'அஸந்துஷ்ட்டா: த்விஜா நஷ்ட்டா:' என்ற வாக்யம் அஸந்துஷ்ட்டனை ப்ராஹ்மணன் நாசத்தை அடைகிறான் என்றும், 'சாரீரம் கேவலம் கர்ம குர்வன் ஆப்னோதிகில்பிஷம்' என்ற வாக்யம் ஸரீரஸ்திதிக்கு மட்டும் வேண்டிய (பிக்ஷாதிதிகளினால்) போஜனாதி கார்யங்களில் மட்டும் ப்ரவ்ருத்திக்க வேண்டுமென்று தெரிவிப்பதால், அவஸ்யமற்ற கார்யங்களின் ப்ரவ்ருத்தியை தடை செய்கின்றது. இந்தவிதம், ப்ராஹ்மணன் எப்போதும் ஸந்துஷ்ட்டனாகவும் க்ருத்ஸ்ன சாந்த்ராயணாதி வ்ரதங்களை அனுஷ்டித்து வேதாத்யயனங்களை விடாமல் செய்யவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இவைகளை விட்டு மற்ற கார்யங்களில் ப்ரவ்ருத்தி இருக்குமானால் பாபம் ஸம்பவிக்கிறது என்பதையே இந்த வாக்யங்கள் அர்த்தாத் தெரிவிக்கின்றது. ஆகவே, ஸர்வசாஸ்திரங்களும் நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்றும், இவைகள் எல்லாம் பரிஸங்க்யா விதி என்றும் அறியவேண்டும். 'ச்ருதஹானி', 'அச்ருதகல்பனா', 'ப்ராப்தபாத:' என்ற மூன்றுவிதமான தோஷம் ஸம்பவிக்கின்றதே என்பதற்காக இவை களை பரிஸங்க்யா விதி இல்லையென்று சொல்ல முடியாது. பரிஸங்க்யா விதி என்றே ஒத்துக்கொள்ள வேண்டும். ஆகவே, ஸன்யாஸிக்கு விதி என்பதே ஸம்பவிக்காது. மோக்ஷாசாஸ்த்ரமானதால் நிவ்ருத்தியை போதிக்கிறது என்றே சொல்லவேண்டும்.

**83. அவதாரிகை :**

இந்த விஷயத்தில், வேதாந்திகளிலேயே ஒரு சிலருடைய அபிப்ருயம் என்னவென்பதை மேலே விளக்கப்படுகிறது. குரு சிஷ்ய ஸம்ப்ரதாய முறைப்படி அவர்களால் தெரிவிக்கப்படும் விஷயத்தை அனுவாதம் செய்து விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

इति केचन वर्णयन्ति तद्विपरीतं प्रवदन्ति केचन ।
प्रविभज्य तदप्युदीर्यते निपुणाचार्यपरम्परागतम् ॥

**ச்லோகார்த்தம் :** இதே விஷயத்தில் (வேதாந்திகளிலேயே வேறு சிலர்) வேறு சிலர் இதற்கு விபரீதமாக அர்த்தம் செய்கின்றுர்கள். அவர்களும் வேதாந்த சாஸ்திர நிபுணர்களின் பரம்பரை ஆசார்யர்களாக இருக்கின்றதால், அவர்களால் சொல்லப் படுவதையும் விசாரித்து, விபாகம் செய்து அறிந்து தீர்மானிப்பதற்காக மேலே விளக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** இதுவரை ஸர்வசாஸ்திரமும் நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று வேதாந்தங்களை நன்கு விசாரித்து அறிந்த ஆசார்யார்களால் தீர்மானிக்கப்பட்ட விஷயத்தைப்பற்றி விளக்கப்பட்டது. ஆனுல், வேதாந்திகளிலேயே வேறு ஒரு சிலர் இதை ஒத்துக்கொள்ளாமல் நேர் விபரீதமாக அபிப்ருயம் தெரிவிக்கின்றுர்கள். அவர்களும் ஸம்ப்ரதாய முறைப்படி சாஸ்த்ரார்த்தங்களை விசாரித்து அறிந்த பெரியோர்களானதால் அந்த பக்ஷத்தையும் விசாரித்து அறிந்த பிறகே தீர்மானிக்கப்பட வேண்டும் என்பதால் அதைப் பற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

**84. அவதாரிகை :**

ச்ரவணுதி சாஸ்திரம் நிவ்ருத்திபரமா? ப்ரவ்ருத்திபரமா? என்பதை விபாகம் செய்து தெரிவிப்பதாக கீழே ப்ரதிஞ்ஞை செய்யப்பட்டபடி அதை மேலே விசாரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उत्सर्गतः सकलकर्मनिवृत्तिनिष्ठा संन्यासशास्त्रशतकोटिभिरर्पिताऽस्य ।
अस्ति प्रतिप्रसवशास्त्रमुखात्प्रतीता चेष्टाऽऽत्मबुद्धिपरिपाकफलाऽपि काचित् ॥

**ச்லோகார்த்தம் :** ஸன்யாஸத்தை போதிக்கின்ற கணக்கிடலங்காத எத்தனையோ வாக்யங்கள், ஸாமான்யமாக ஸர்வகர்மாக்களிலிருந்தும் நிவ்ருத்தி ஏற்படவேண்டும் என்று போதிக்கின்றது. ஆனுல், இதற்கு அபவாதமாக இருக்கின்ற ப்ரதிப்ரஸவ வாக்யங்களிலிருந்து, ஆத்மஞானத்தின் பரிபாக பலத்திற்காக சில கர்மாக்களை விதிக்கின்றதாக அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** முமுக்ஷுக்களுக்கு ஸதகோடி சாஸ்திரங்களும் நிவ்ருத்தியைத்தான் போதிக்கின்றது. பூ.மீ–சாஸ்திரம் விதிபரம் என்றும் ப்ரவ்ருத்தியைத்தான் போதிக்கின்றது என்று சொன்னுலும், அதிலும் ஸாமான்யநியமம் விசேஷநியமம் என்று தெரிவிக்கின்ற முறையில் முதலில் இந்த கார்யத்தைச்செய்யக்கூடாது என்று தெரிவித்திருந்தாலும் விசேஷநியமத்தைக் கொண்டு, அதை அபவாதம் செய்து, அந்த கார்யத்தைச்செய்யலாம் என்று தெரிவிக்கின்றது. ஆகவே பூர்வமீமாம்ஸா சாஸ்திரம் ப்ரவ்ருத்திபரம் என்று ஒத்துக்கொண்ட போதிலும், உத்தரமீமாம்ஸா சாஸ்திரத்தை ப்ரவ்ருத்திபரம் என்று சொல்வதற்கேமுடியாது.

'யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்' என்ற வாக்யம், எந்த க்ஷணம் வைராக்யம் ஏற்படுகிறதோ அந்த க்ஷணமே ஸன்யாஸத்தை மேற்கொள்ளவேண்டும் (ஸ்வீகரிக்கவேண்டும்) என்று தீவிர வைராக்யமுடையவனுக்கு ஸர்வகர்மஸன்யாஸத்தை போதிக்கின்றது. மேலும்– சிகையஞ்ஞோப வீதம் என்பதையும் விடவேண்டும்மென்று சொல்லப் படுவதால் அவன் எந்த

கர்மாவிற்கும் அதிகாரியாக இருக்கமுடியாது. ஆகவே சாஸ்திரம் நிவ்ருத்தியை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** சாஸ்திரமானது சிலஸமயம் ஸாமான்ய ந்யாயத்தை அபவாதம் செய்து, விசேஷ ந்யாயத்தை அனுஷ்ட்டிக்கும்படி தெரிவிக்கின்றது. 'நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதானி' என்று எந்தப்ராணியையும் ஹிம்ஸிக்கக்கூடாது என்று ஸாமான்யமாக தெரிவித்தாலும் யாகாதி கார்யங்களில் விசேஷவிதியை அனுசரித்து அதைச்செய்யலாம் என்று தெரிவிக்கின்றது. அதுபோல் சாஸ்திரம் காம்யகர்மாக்களை நிஷேதம் செய்தாலும் நிஷ்காம கர்மாவை விதிக்கிறது என்று சொல்லலாமே?

இந்த ஆக்ஷேபம் சரியல்ல. கர்மகாண்டத்தில் 'நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதானி' என்ற நிஷேதத்தை அனுசரித்து, ஹனனுதி ஹிம்ஸையை செய்யக்கூடாது என்ற நிஷேதத்தை அனுசரிக்காதவன் யாகாதிகளில் ப்ரவ்ருத்திக்கக்கூடாது என்று நியமம் சொல்லப்படவில்லை. ஆனால் நிவர்த்தி சாஸ்திரமான உமீமாம்ஸா சாஸ்திரமானது அனுத்ம விஷயத்தில் ப்ரவ்ருத்திக்காதவனே ஆத்மஞானத்தில் அதிகாரி என்று, நிஷேத்துடன் கூடியவிதியை போதிக்கின்றது. மேலும் நிஷ்காம கர்மாக்களை செய்தவனுக்குத்தான் வைராக்யாதி ஸம்பத்தியுடன் முமுக்ஷுத்வம் ஏற்படுகிறது என்று அறியப்படுகின்றதால் எந்தக் கர்மாவிலும் ஸன்யாஸிக்கு அதிகாரமில்லை. யம, நியமாதிகளை விதிக்கப்படுகிறதே? என்றால், ஸன்யாஸாஸ்ரமம் ஸ்வீகரிப்பதற்கு முன்பே, சித்த சுத்தி ஏற்பட்டிருந்தும் கண்ணாடியின் முன்பு நின்று மூச்சுவிடுகின்றபோது அந்தக் கண்ணாடியானது மலினமாக தோன்றுகிறதோ அதுபோல் ஜன்மாந்தாரவாஸனுவஸாத் அனுத்மவிஷயத்தில் ஸ்வாபாவிக ப்ரவ்ருத்தி ஏற்படலாம். அதை தடை செய்யவேண்டுமென்பதற்காகவே யமாதிகளை ஸன்யாஸிக்கு போதிக்கப்படுகிறது. ஆகையால் ஒரே சாஸ்திரம் ப்ரவ்ருத்தியையும் நிவ்ருத்தியையும் போதிப்பதாக எப்படிச் சொல்லமுடியும் என்று ஒரு சிலரால் ஆக்ஷேபிக்கப்படுகிறது.

நிவர்த்திக்கு விரோதமான ப்ரவ்ருத்தியை எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை. ஆத்மஞானத்திற்கு விரோதமாக இருக்கின்ற ஸ்வாபாவிக ப்ரவ்ருத்தியிலிருந்து தடை செய்வதற்காக சில, யம நியமாதிகள் போன்ற விதி இருந்த போதிலும் அவைகள் எல்லாமே நிவ்ருத்தியைத் தான் த்ருடப்படுத்துகின்றது. ஆகையால் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டையும் போதிக்குமானல் ஏகவாக்யதை என்பது சாஸ்திரத்திற்கு பொருந்தாதே? என்ற கேள்விக்கு இடமில்லை ஏகவாக்யத்வம் ஸம்பவிக்கலாம்.

**85. அவதாரிகை :**

ப்ரவ்ருத்தி சாஸ்த்ரம் என்றால் என்ன? நிவ்ருத்தி சாஸ்திரம் என்றால் என்ன? என்பதை பிரித்து மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

**यमस्वरूपा सकला निवृत्तिस्तथा प्रवृत्तिर्नियमस्वरूपा ।**
**निवर्तकादत्र यमप्रसिद्धिः प्रवर्तकात्स्यान्नियमप्रसिद्धिः ॥**

**ச்லோகார்த்தம் :** நிவ்ருத்தி வாக்யங்கள் எல்லாமே யமஸ்வரூபம் என்றும் ப்ரவ்ருத்திவாக்யங்கள் எல்லாமே நியம ஸ்வரூபம் என்றும் அறியவேண்டும். இந்த வாக்யங்கள் எல்லாமே ப்ரவ்ருத்தியையும் நிவ்ருத்தியையும் போதிப்பதால் யமம் என்றும் நியமம் என்றும் சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** யமம், நியமம், ஆஸனம் ப்ராணயாமம் ப்ரத்யாஹாரம் என்று சொல்லப்படுபவைகளில் 'யமம்' என்பதால் அஹிம்ஸை ஸத்யம் ஸ்தேயம் ப்ரஹ்மசர்யம் அபரிக்ரஹம் என்று ஐந்து விதமான கார்யங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று தெரிவிக்கின்றது என்ருலும் இவைகளால் நிவர்த்தி என்பதே போதிக்கப்படுகிறது.

அதே போல் 'நியமம்' என்பதால் ஸௌசம் தபஸ் ஸந்தோஷம் ஸ்வாத்யாயம் ஈச்வரப்ரணிதானம் என்ற ஐந்து விதமான கார்யங்களை அனுஷ்டிக்க வேண்டுமென்று தெரிவிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படும் 'நியமம்' என்பதை ப்ரவ்ருத்தி என்று சொல்லப்பட்ட போதிலும் இந்த, யம, நியமாதிகள் இரண்டுமே ஆத்மஞானத்திற்கு சாதனமாக இருக்கின்றதால் இரண்டையும் நிவ்ருத்தி சாஸ்திரம் என்றே சொல்லலாம். அல்லது ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டையும் போதிக்கின்றது என்றும் சொல்லலாம். இதில் விரோதம் ஏதுமில்லை. ஆனுல், இதுபோல் கர்மகாண்டத்திலுள்ள ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி வாக்யங்கள் எல்லாம் ஒன்று தான் என்று சொல்லமுடியாது. ஏனெனில் 'நஹிம்ஸாஸர்வாபூதானி' என்று நிவ்ருத்தி வாக்யமும் 'அக்னிஷ்ஹோமீயம் பசுமாலரபேதா' என்ற ப்ரவ்ருத்திவாக்யமும் ஒன்றல்ல. ஒன்றுக்கொன்று விருத்தமாக இருப்பதாலும் பலன்களும் வெவ்வேருக இருப்பதாலும் ஒன்று ப்ரவ்ருத்தியையும், ஒன்று நிவ்ருத்தியையும் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். நிவர்த்தி சாஸ்திரத்தில் ச்ரவணுதிகள் விதிக்கப்பட்ட போதிலும் அவைகள் ஸ்வாத்யாயம் ஈச்வரப்ரணிதானம் முதலான நியமத்தில் சேர்ந்ததுதான். ஆகவே யம நியமாதிகளை பிரித்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டையும் போதிக்கின்றது என்று சொல்லப்பட்ட போதிலும் நிவ்ருத்தி சாஸ்திரம் என்று இரண்டையும் சொல்வதில் விரோதம் ஏதுமில்லை.

**86. அவதாரிகை :**

கர்மகாண்டம் ஞானகாண்டம் என்ற இரண்டிலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி என்ற இரண்டையும் சொல்லப்பட்டிருந்த போதிலும் இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுபட்டது என்பதை கீழே சொல்லப்பட்டது. இதற்குமேல், வேதாந்த பாகத்திலேயேசொல்லப்படும் நிவ்ருத்தி என்பதில் இரண்டுவிதம் இருக்கிறதென்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

निवृत्तिरस्ति द्विविधा बहिःस्थिता शरीरसर्वेन्द्रियसंयमात्मिका ।
तथाऽपराऽऽभ्यन्तरवस्तुसंश्रया सदात्मकूटस्थचिदेकविग्रहा ॥

**ச்லோகார்த்தம் :** நிவ்ருத்தி என்பது இரண்டுவிதம். சரீரம் இந்திரியம் முதலானவைகளின் ப்ரவ்ருத்தியை தடைசெய்வது பாஹ்ய நிவ்ருத்தி. மற்றொன்று கூடஸ்த்த சிதேகரஸஸ்வரூபமாக ப்ரத்யகாத்ம நிஷ்டையாக இருக்கின்றதே ஆந்த்ர நிவ்ருத்தி. (பாஹ்யநிவ்ருத்தி விதி. ஆந்த்ர நிவ்ருத்தி ஸ்வாபாவிகம்)

**வ்யாக்யானம் :** வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்படும் நிவ்ருத்தி என்பது இரண்டுவிதம் இதில் யமம் என்று சொல்லப்படும் நிவ்ருத்தி என்பது பாஹ்மயான சரீரம், இந்த்ரியம் முதலான வ்யாபாரங்களை ஒடுக்குவது என்பது ஒரு விதம். மற்றொன்று அப்யந்தரமான ஆத்மாவைப்பற்றி நிற்கின்ற நிவர்த்தி என்பது ஒன்று. அதாவது, கூடஸ்த்தமாகவும் சின்மாத்ஸ்வரூபமாகவும் இருக்கின்ற ப்ரத்யகாத்மஸ்வரூபமான நிவர்த்தி என்பது நித்யசித்தம் ஸ்வாபாவிகம். இதில் பாஹ்ய நிவ்ருத்தி என்பது ராகாதிகள் மூலம் ஏற்படும் ப்ரவ்ருத்தியை தடைசெய்வதின் மூலம் ஏற்படுகின்ற நிவ்ருத்தி. இந்த ஔபாதிகமான நிவ்ருத்தியைத்தான் சாஸ்திரம் விதிக்கின்றது. ஸ்வாபாவிக நிவ்ருத்தி என்பது விதிக்கு கட்டுப்பட்டதல்ல. 'ப்ரபஞ்சோபசமம்

சாந்தம் சிவம் அத்வைதம், என்று சொல்லப்படும் ஸத்ரூபமான, சித்ரூபமான கூடஸ்த்தமான ஆத்ம ஸ்வரூபம் என்பது நித்ய நிவர்த்தி ஸ்வரூபமானதால் அதில் விதிஸம்பவிக்காது. ஆத்மஸ்வரூபம் என்பது ஸத்ரூபம் என்று சொல்லப்படுவதால் பாஹ்யமான கடாதிகளிலும் ஆந்த்ரமான புத்யாதிகளிலும் ஸத்வம் என்பது இருந்தாலும் அவைகளிலுள்ள ஸத்வம், ஆத்மஸ்வரூபஸத்வந்தான் என்பதையும் ஆத்மாவில் ஸ்வாபாவிகஸத்வம் என்பதையும் தெரிவிப்பதற்காகவே—கூடஸ்த்தம் என்ற விசேஷணத்துடன் ஸத்ய ஆத்மஸ்வரூபம் தெரிவிக்கப்படுகிறது.

**87. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்டபடி பாஹ்யநிவ்ருத்தி என்பதுதான் விதிக்கு விஷயமாகின்றதால் அதை, கர்த்தவ்யமாக சாஸ்திரம் போதிக்கின்றது. ஆந்த்ர நிவ்ருத்தி என்பது விதிக்கு விஷயமாக ஆகமுடியாது என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

**तयोस्तु बाह्या विधिशास्त्रलभ्या प्रयत्ननिर्वर्त्यतया प्रतीतेः ।**
**विधानशास्त्रं विरहय्य लभ्या चितिस्वरूपा त्वितरा निवृत्तिः ॥**

**ச்லோகார்த்தம் :** இந்த இரண்டு வித நிவ்ருத்திகளில் பாஹ்யநிவ்ருத்தி என்பது ப்ரயத்தனத்தினல் அனுஷ்டிக்கப்பட்டு அடையப்படவேண்டியதாக இருப்பதால் விதி வாக்யத்தினல் போதிக்கப்படுகிறது. சிதிஸ்வரூபமான ஆந்த்ரநிவ்ருத்தி என்பது விதி என்பதில்லாமலேயே ஸ்வபாவசித்தமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** பாஹ்ய நிவ்ருத்தி என்பது ப்ரயத்னபூர்வகமாக அடையப்பட வேண்டியதாக இருக்கின்றதால் அதை விதியினல் சித்திப்பதாகச் சொல்லலாம். ஆனல் ஆந்த்ர நிவ்ருத்தி என்பது, சிதிஸ்வரூபமான ஆத்மாவென்பது நித்ய நிவ்ருத்திஸ்வரூபமாக இருக்கின்றதால் அதில் விதி ஸம்பவிக்கமுடியாது. ஸ்வபாவ சித்தமான ஆத்மா நித்யநிவ்ருத்தி ஸ்வரூபம் என்பது வேதாந்த விசாரம் செய்வதற்குமுன் ஸ்வரூப அஞ்ஞானத்தினல் அறியப்படவில்லை. அதனல் வேதாந்த விசாரத்திற்குப் பிறகு ஷட்விதலிங்க தாத்பர்ய நிர்ணயங்களைச் செய்து மஹாவாக்ய விசாரத்தினல் ஏற்படும் ஞானத்தினல் அஞ்ஞானம் என்பது நிவர்த்திக்கப்படுவதால் ஸ்வாபாவிகமான ஸ்வரூபமே நிவர்த்திரூபம் என்பது தானே சித்திக்கின்றது (ப்ரகாசிக்கின்றது). ஆகவே ஆந்த்ர நிவ்ருத்தி என்பதில் விதி ஸம்பவிக்கமுடியாது. மேலும் சிதிஸ்வரூபம் ஆத்மா என்பதால் ஞானம் என்பது விதேயம் அல்ல என்று அறியவேண்டும். அவிதேயமான ஆத்மஸ்வரூபமே நிவ்ருத்திரூபம்.

**88. அவதாரிகை :**

பாஹ்யம் ஆந்த்ரம் என்று இரண்டுமே நிவ்ருத்திரூபம் என்றல் ஒன்று விதிக்கு விஷயம் என்றும் ஒன்று விதிக்கு விஷயமல்ல என்று சொல்வதற்கும் என்ன காரணம்?

**ச்லோகம் :**

**मायामयी बाह्यनिवृत्तिरिष्टा चितिस्वरूपा परमार्थसत्या ।**
**तयोर्निवृत्त्योश्च निवृत्तिशास्त्रं विधायकं बाह्यनिवृत्त्यपेक्षम् ॥**

**ச்லோகார்த்தம் :** பாஹ்யநிவர்த்தி என்பது மாயாமயம் என்று ஒத்துக் கொள்ளப்படவேண்டும். சிதிஸ்வரூபமான ஆந்த்ரநிவ்ருத்தி என்பது பரமார்த்தஸத்யம். இந்த இரண்டுவிதமான நிவ்ருத்திகளில், நிவ்ருத்தி சாஸ்திரமானது, பாஹ்யநிவ்ருத்தியை அபேக்ஷித்தே விதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** இரண்டும் நிவ்ருத்தி தான் என்றாலும் ஒன்றை விதேயம் என்றும் மற்றொன்றை விதேயமில்லை என்று சொல்லப்படுவதற்கு என்ன காரணம் என்றால், ஒன்று புருஷமுயற்சியினால் அடையப்பட வேண்டியதாக இருக்கிறது. மற்றொன்று அவ்விதமில்லை. அதாவது மாயா பரிணாமமான தேஹம் இந்த்ரியம் முதலானவைகள் ராகம், த்வேஷம் என்பவைகளை காரணமாகக் கொண்டு பாஹ்ய விஷயங்களில் ஈடுபடுகின்றதால் இந்த வ்யாபாரத்தை புருஷமுயற்சியினால் தடுக்கப்படவேண்டியதாக இருக்கின்றது. அதனால் இந்த மாயாமயமான நிவ்ருத்தியென்பது, விதிக்கு விஷயம் என்று சொல்லப்படுகிறது. ஆத்மஸ்வரூப நிவர்த்தி என்பது ஸ்வாபாவிகமானதால் அந்த நிவ்ருத்தியென்பது புருஷனால் ஸம்பாதிப்பதற்கோ ஸம்பாதிக்காமல் இருப்பது என்பதற்கோ விஷயமல்ல. நித்ய சித்தம். ஆகவே வேதாந்த சாஸ்திரத்திலுள்ள யமநியமாதிகளை விதிக்கின்ற வாக்யங்கள் பாஹ்யநிவ்ருத்தியைத் தான் உபதேசிக்கின்றதேயன்றி, ஆந்த்ரநிவ்ருத்தியை போதிக்கவில்லை.

**89. அவதாரிகை :**

யம நியமாதிகளை சாஸ்திரம் விதிக்கின்றது என்றால் அந்த சாஸ்திரத்தை நிவ்ருத்தி சாஸ்திரம் என்று எப்படிச் சொல்வது? விதிக்கின்றது என்றாலே ப்ரவ்ருத்தியைத் தானே தெரிவிக்கின்றது? ஆகவே, விதி இருந்தாலும் அதை நிவ்ருத்தி என்று சொல்வதற்கு என்ன காரணம்? (என்ன விசேஷம்)

**ச்லோகம் :** **प्रवृत्तिशास्त्रेण समेऽपि सम्मते निवृत्तिशास्त्रस्य विधेयबोधने ।**
**निवृत्त्यनुष्ठाननिबन्धनत्वतो निवर्तकं शास्त्रमिदं प्रचक्षते ॥**

**ச்லோகார்த்தம்** : விதியை போதிப்பதில் நிவ்ருத்தி சாஸ்திரம் என்பது ப்ரவ்ருத்தி சாஸ்திரத்திற்கு ஸமமாக இருந்தபோதிலும், இந்த நிவ்ருத்தி சாஸ்திரமானது நிவ்ருத்தியை மட்டும் அபேக்ஷித்திருக்கின்றதால் இதை நிவ்ருத்தி சாஸ்திரம் என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** விதி என்றாலே அஞ்ஞாத ஞாபகமேயன்றி அப்ரவர்த்தக ப்ரவர்த்தனம் விதியல்ல. விஷயாதிகளில் ப்ரவ்ருத்தி ஏற்படுமானால் அது அனர்த்தகரம் என்பதையே யம, நியமாதி சாஸ்திரம் தெரிவிக்கின்றது. அதாவது, பாஹ்ய விஷயங்களில் ப்ரவ்ருத்தி ஏற்படுமானால் அது அனர்த்தகரம் என்று தெரியாத அம்ஸத்தை மட்டும் போதிக்கின்றது. அதேபோல், ஆத்மாஸ்வயம் நிவ்ருத்திரூபம் என்பது அறியப்படாத விஷயமாக இருக்கின்றதால் அதை மட்டும் நிவர்த்தி சாஸ்திரம் போதிக்கின்றது. இவ்விதம் ஒன்று பாஹ்ய விஷயம், ஒன்று ஆந்த்ரவிஷயம், இரண்டுமே அஞ்ஞாத ஞாபகம் என்று சொல்லப்பட்டபோதிலும் க்ரியையினால் அனுஷ்ட்டிக்கப்பட வேண்டியிருப்பதை, ப்ரவ்ருத்தகம் என்றும், மற்றொன்று க்ரியையில்லாத நிவர்த்தியை மட்டும் அனுஷ்ட்டிக்கப்படவேண்டுமென்பதால் நிவர்த்தி சாஸ்திரம் என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே அனுஷ்ட்டிக்கவேண்டிய முறையில் தான் இரண்டிற்கும் வித்யாஸம் சொல்லப்படுகிறது. உதாரணமாக ப்ரமாணம் ப்ரமேயம் ப்ரமாதா என்ற எல்லாமே ப்ரமேயம் தான். ஆனாலும் அதில் ஒன்றை ப்ரமாணம் என்றும், மற்றொன்றை ப்ரமாதா என்றும் எப்படி வித்யாஸம் சொல்லப்படுகிறதோ அதுபோல் அவாந்தரபேதத்தைக்கொண்டு இரண்டும் விதாயகமாக இருந்தபோதிலும், ஒன்று ப்ரவ்ருத்தி ஒன்று நிவ்ருத்தி என்று வித்யாஸம் சொல்லப்படுகிறது. யாகாதிகளை விதிக்கின்ற சாஸ்திரம் புருஷனை யாகாதி கார்யங்களில் ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றது. யம நியமாதி சாஸ்திரங்கள், அனுஷ்ட்டிக்க வேண்டுமென்று விதித்தபோதிலும் ப்ரவ்ருத்தியிலிருந்து நிவ்ருத்திக்கச் செய்கின்றது. செயலை விதிப்பது ப்ரவர்த்தக சாஸ்த்ரம். செயலை தடுப்பது நிவர்த்தக சாஸ்திரம் என்று அறியவேண்டும்.

**90. அவதாரிகை :**

**பூர்வ :** இவ்விதம் சொல்லப்படுமானுல் பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படுவது போல் உத்தர–மீ–சாஸ்திரத்திலும் ப்ரவ்ருத்திநிவ்ருத்தி இரண்டையும் கர்த்தவ்யமாகச் சொல்லப் படுமானுல் இரண்டு காண்டத்திற்கும் அபேதமே சித்திக்கின்றதால் இதில் எந்த வித்யாஸத்தைக் கொண்டு அதிகாரி பேதம் சொல்லமுடியும்?

**சித்தா :** இரண்டு சாஸ்திரங்களிலும் ப்ரவ்த்தி நிவ்ருத்தி என்ற விதி இருந்த போதிலும் இரண்டிற்கும் உள்ள பலம் வெவ்வேருக இருக்கின்றதால் இரண்டுக்கும்பேதம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

शास्त्रद्वयेन परिदर्शितसाधनेन साध्यस्पृहापरवशः पुरुषो मुमुक्षुः ।
शुश्रूषते गुरुमयेत्युदितः स चात्र वेदान्तवाक्यविषयश्रवणाधिकारी ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி என்ற இரண்டு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஸாதனங்களினுல், ஸாத்யத்தை அடைவதற்கு விரும்புகின்ற முமுக்ஷுவான புருஷன், குருவை அடைந்து சிச்ருஷைகளை செய்கின்ற, வேதாந்த சாஸ்திரத்திற்கு அதிகாரியாகச் சொல்லப்படும் அந்த புருஷனே 'அத' சப்த்தினுல் சொல்லப்படுகிருன்.

**வ்யாக்யானம் :** இதுவரை 'அதாதோப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்திலுள்ள 'அத' சப்தார்த்தம் சாதனஸம்பத்தி அனந்தரம் என்று அதிகாரி விசேஷணத்தை நிருபணம் செய்கின்றது என்று தெரிவித்து, இந்த விஷயத்தை இப்போது, ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது. கர்மகாண்ட விஷயத்தில் அதிகாரியாக இருக்கின்றவன் மேன்மேலும் அப்யுதய பலத்தில் இச்சையுடையவனுக இருக்கின்றதால் ப்ரவ்ருத்தியில் தான் நோக்கமுடையவனுக இருப்பான். ஞானகாண்ட விஷயத்தில் அதிகாரியாக இருப்பவன் அதற்கு விபரீதமாகமோக்ஷ இச்சையுடைய வனுகவும் விவிதிஷுவாகவும் இருக்கின்றவன் நிவ்ருத்தியைத் தான் விரும்புவானேயன்றி சிகீர்ஷுவாகவோ அப்யுதார்த்தியாகவோ இருக்கமாட்டான். இந்த காரணத்தினுலேயே கர்மகாண்ட அதிகாரி ராகி என்றும் ஞானகாண்டத்தில் அதிகாரி விராகி என்றும் பெரியோர்களாலும் சாஸ்திரங்களிலும் சொல்லப்படுகிறது. ஆகவே ஸாதன ஸம்பத்தியுடையவன் ஆத்மஞானத்தையே அடையவிரும்புகின்றதால் நிஷ்காமகர்மாக்களையும் பரித்யாகம் செய்து யமநியமாதிகளை அனுஷ்டித்து பரமஹம்ஸபாரிவ்ராஜ்யாச்ரமத்தை ஸ்வீகரித்து இதுவரை பரோக்ஷமாக அறியப்பட்ட விஷயத்தில் ஏற்படும் அஸம்பாவனுதிகள் நீங்கி, அபரோக்ஷஸாக்ஷாத்காரம் அடையப்படவேண்டும் என்று விரும்பி குருவை தேடி வந்து அடைகின்றுன். ஆகவே நிவர்த்தி சாஸ்த்திரண்படி நியமாதிகளை அனுஷ்ட்டிப்பவன் கர்மாதிகாரியைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று அறியவேண்டும்.

**91. அவதாரிகை :**

இந்த விதம் அதிகாரி நிருபணம் செய்த பிறகு அந்த அதிகாரியின் ஜிஞ்ஞாஸையை அனுசரித்து வேதாந்த சாஸ்த்ரார்த்தத்தை க்ரமமாக போதிப்பதற்காக மேலே ஆரம்பிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स परिपृच्छति कोऽहमसौ च कः सहजमस्य च तस्य च किं पृथक् ।
उत तयोरभिदेश्वरजीवयोरिति च संशयसंकुलमानसः ॥

**ச்லோகார்த்தம் :** ஸம்சயத்தினுல் வ்யாகூலத்தை அடைந்திருக்கின்ற சிஷ்யனுனவன் இவ்விதம் ப்ரச்னம் செய்கின்றுன்.

"நான் யார்? அந்த ஈச்வரன் யார்? ஜீவனுடையஸ்வரூபமும் ஈச்வரனுடைய ஸ்வரூபமும் ஸ்வாபாவிகமா? அல்லது ஔபாதிகமா? அந்த ஜீவ, ஈச்வரர்களுக்குள் ஸ்வாபாவிகமாகவே அபேதம் இருக்கின்றதா?" என்று இவ்விதம் ப்ரச்னம் செய்கின்ருன்).

**வ்யாக்யானம் :** இதுவரையில், இந்தக்ரந்தகாரர், இந்தக்ரந்தத்தை எழுதுவதற்குரிய அனுபந்த சதுஷ்டயம் இருக்கின்றதால் இதற்குரிய அதிகாரியும் ஸம்பவிக்கலாம் என்பதால் 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தினுல் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கப்படவேண்டியது தான் என்று தீர்மானிக்கப்பட்டது. இதற்கு மேல் இந்த சாஸ்திரம் எப்படி ஆரம்பிக்கப்படவேண்டும் என்ற க்ரமத்தை குருவினிடம் சிஷ்யனுனவன் ப்ரச்னம் செய்வதின் மூலமாக இந்த விஷயமானது விளக்கப்படுகிறது.

இவ்விதம் சாதனஸம்பத்தியுடைய அதிகாரியின் ஜிஞ்ஞாஸை என்ன? என்ருல், இதுவரை, ஓரளவு அத்யயனுதிகளால் அறியப்பட்ட வேதாந்தங்களிலிருந்து ஜீவபரமாத்ம ஐக்யம் தான் சாஸ்திரத்திற்கு தாத்பர்ய விஷயம் என்பதை அறிந்திருந்தாலும்கூட, இந்த விஷயத்தில் தன்னுடைய அனுபவங்களுக்கு விரோதமாக இருக்கிறதே என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. அத்துடன் மற்ற சாஸ்திரங்களினுல் பேதம் என்பதே ஸத்யம் என்று சொல்லப்படுவதினுலும் வேதாந்த சாஸ்திரமானது அபேதம் தான் தத்வம் என்று சொல்வதில் ச்ரத்தையுடையவனுக இருந்தாலும் அனுபவத்தினுலும் மற்ற சாஸ்திரங்களினுலும் புத்தி கலக்கத்தை அடைந்திருக்கிறதால் இந்த கலக்கத்தை நிவர்த்தி செய்து உண்மையானதத்வம் என்னவென்பதை அறியவேண்டுமென்ற தீவிர இச்சையுடன் ஆசார்யன் மூலமே இதை விசாரித்து அறியவேண்டுமென்பதையும் 'ஆசார்யவான் புருஷோ வேத' என்ற வாக்யத்தில் விச்வாஸமுடையவனுக இருக்கின்றதால் ஆசார்யனை தேடிவந்து அடைகின்ருன்.

இப்பேர்ப்பட்ட அதிகாரி ஸம்பன்னனுனவனுக்கு வ்யாகூலம் ஏற்பட என்ன காரணம்? என்ருல்,

ப்ரத்யக்ஷப்ரமாணம் ஜீவ, ஈச்வர பேதத்தைத் தெரிவிக்கின்றது. சாஸ்திரம் என்ற ப்ரமாணமோ ஜீவேச்வர அபேதத்தை தெரிவிக்கின்றது. ப்ரத்யக்ஷமென்ற ப்ரமாணத்தைக் கொண்டு நிர்த்தோஷமான அபௌருஷேயமான சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தை அப்ரமாணம் என்று தள்ளமுடியுமா? அல்லது சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தைக் கொண்டு ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தை தள்ளலாமா? என்று இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதமாக இருப்பதாலும் இரண்டும் ப்ரமாணமாக இருப்பதாலும் சிஷ்யனுக்கு வ்யாகூலம் ஏற்படுகிறது. மேலும் வேதாந்த சாஸ்திரங்களால் தெரிவிக்கப்படும் விஷயத்திற்கும் மற்ற சாஸ்திரங்களால் தெரிவிக்கப்படும் விஷயங்களுக்கும் விரோதம் இருக்கின்றது. அதுமட்டுமல்ல வேதாந்த சாஸ்திரத்திலேயே சொல்லப்படும் வாக்யங்களுக்கு பலர் பலவிதமான அர்த்தங்களை தெரிவிக்கின்ருர்கள் என்பதால் ஸஞ்சலத்தை அடைந்தவனுக இருக்கின்றதால் ஆசார்யனை அடைந்து சிஷ்யனுனவன் மேலே சொல்லப்படும் விஷயங்களைப்பற்றி ப்ரச்னம் செய்கின்ருன் –

'நான்' என்பது யார்? அஹம் என்ற ஆத்மபதார்த்தம் என்ன? தேஹமா? இந்த்ரியமா? மனஸா? புத்தியா? ப்ராணனு? அல்லது இவையெல்லாவற்றிர்க்கும் சாக்ஷியாக இருக்கின்ற சைதன்யமா? தேஹாதிகளுடன் கலந்து அறியப்படும் ஸம்ஸாரி ஆத்மாவா? அல்லது தேஹாதிகளுக்கு வேறுபட்ட அஸம்ஸாரி ஆத்மாவா? இந்தவிதம் த்வம்பதார்த்த வாக்யத்தில் ஏற்படும் ஸந்தேகங்களை நிவர்த்திக்கவேண்டுமென்று ப்ரச்னம் செய்கிருன்.

அதேபோல் ஜெகத் காரணம் என்று சொல்லப்படும் ஈச்வரன் என்பது யார்? ப்ரதானமா? அல்லது நையாயிகன் சொல்வதுபோல் குலாலன் போல் தடஸ்த்தமாக இருந்து ஜகத்தை சிருஷ்டிக்கின்றவன் ஈச்வரனா? அல்லது விசிஷ்ட்டாத்வைதிகளால் சொல்லப்படும் வாஸுதேவன் ஈச்வரனா? இவ்விதம் பல மதஸ்த்தர்களால் பலவிதமாக சொல்லப்படும், பரோக்ஷமாக அறியப்படுபவன் தான் ஈச்வரனா? இவ்விதம் ப்ரதானமாகவும் தடஸ்த்தமாகவும் வாஸுதேவன் என்றும் இன்னும் பலவிதமாகச் சொல்லப்படும் ஈச்வர ஸ்வரூபம் எல்லாவற்றிலுமே மஹத்வம் இருந்தபோதிலும் அவைகளுக்கும் மேலாக மஹத்வம் என்பது இருக்கமுடியும் என்பதால் நிரவக்ரஹ மஹத்வமுள்ளவன் ஈச்வரனா? அல்லது அதற்குமாறாக ஆபேக்ஷிக மஹத்வமுடையவன் ஈச்வரனா? என்று தத்பதார்த்த வாச்யத்தில் ஸந்தேகம் ஏற்படுகிறது. இவ்விதம் தத்பதம் த்வம்பதம் என்ற இரண்டுபதார்த்தங்களின் வாச்யார்த்தத்திற்கு இயற்கையாகவே பேதம் இருக்கின்றதா? அல்லது அறியப்படும்பேதம் உபாதியினாலா? என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. இவ்விதம் வாச்யார்த்தத்தில் அறியப்படும் பேதத்தை, லக்ஷ்யார்த்தத்தைக் கொண்டு தள்ளவேண்டுமா? என்ற ஸந்தேகமும் ஏற்படுகிறது. மேலும் உபநிஷத்தில் 'த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா' என்ற மந்த்ரத்தினால் தெரிவிக்கப்படும் சைதன்யம் இரண்டும் வெவ்வேறு சைதன்யமா? அல்லது நாமமாத்ரம் பேதம் சொல்லப்படுகிறதா? என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது.

மேலும் மஹாவாக்யங்கள் ஜீவேச்வர அபேதத்தை உண்மையாக தெரிவிக்க வில்லையென்றும் நாமமே ப்ரஹ்மமென்று உபாஸனையை செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்ற வாக்யங்கள் போல் ஜீவனே ப்ரஹ்மமென்று உபாஸனையை தெரிவிக்கின்றதா? அல்லது நீயே ப்ரஹ்மமென்று தத்வத்தை போதிக்கின்றதா? என்று இந்தவிதம் மஹாவாக்யத்தின் தாத்பர்யம் என்ன? என்பதை அறியவேண்டுமென்று விரும்புகின்ற அதிகாரியின் ஸந்தேகங்களில் ஒரு சிலவற்றை இங்கு உபலக்ஷணமாகச் சொல்லப்பட்டது. அதற்கு மேலும் ஏற்படும் ஸந்தேகங்களை க்ரமமாக அவ்வப்போது தெரிவிக்கப்படும். ஆகவே இந்தவிதம், சிஷ்யனானவன் குருவை அடைந்து தனக்கு ஏற்பட்ட ஸந்தேகங்களைப்பற்றி தெரிவித்து அந்த ஸந்தேகங்களை நிவர்த்தி செய்து அனுக்ரஹிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றான்.

**92. அவதாரிகை :**

இவ்விதம் சிஷ்யனால் ப்ரச்னம் செய்யப்பட்ட விஷயங்களைக்கேட்ட குருவானவர், 'யமேவ வித்யா: சுசிமப்ரமத்தம்' என்ற வாக்யத்தின்படி சிஷ்யனுக்கு வேண்டிய பூர்ணமான குணங்கள் அனைத்தும் இவனிடம் இருப்பதை அறிந்த குருவானவர் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து கருணையுடன் அவனுக்கு உபதேசிக்க ஆரம்பிக்கின்றார்.

**ச்லோகம் :**

तीर्थेन तं विविदिषन्तमनन्यभक्तं संसारसागरभयातुरचित्तवृत्तिम् ।
एकं मुमुक्षुमधिकारिणमात्मतत्त्वज्ञाने समीक्ष्य गुरुराह दयाविधेयः ॥

**ச்லோகார்த்தம் :** ஞானத்தையே விரும்புகின்றவனென்றும் அனன்ய பக்தன் என்றும் ஸம்ஸாரமென்ற ஸாகரத்தில் பயத்தை அடைந்த சித்தத்தையுடையவன் என்றும், முமுக்ஷு வென்றும் ஆத்மஞானத்தை அடைய விரும்புவர்களில் ஆயிரத்தில் ஒருவனாக இந்த சிஷ்யன் இருக்கின்றான் என்பதை அறிந்த குருவானவர் கருணை ஒன்றையே காரணமாகக் கொண்டு அவனுக்கு உபதேசிக்கின்றார்.

**வ்யாக்யானம் :** ஆத்மஞானத்தை அடைந்தேயாகவேண்டும் என்ற தீவிர இச்சையுடன் தான் தன்னை வந்து அடைந்திருக்கிறான் என்று நன்கு பரீக்ஷித்து அறிந்து, அதனால் கருணையுடன் உபதேசிக்க ஆரம்பிக்கப்படுகிறதேயன்றி தனத்தையோ கீர்த்தியையோ தன்னை எல்லோரும் பூஜிக்கவேண்டு மென்பதற்காகவோ உபதேசிக்கவில்லை. கருணை ஒன்றையே காரணமாகக் கொண்டே உபதேசிக்கப் படுகின்றது.

**பூர்வ :** இந்த சிஷ்யன் ஆத்மஞானத்தில் அதிகாரி என்பதை எதைக்கொண்டு தீர்மானிக்கப்பட்டது?

**சித்தா :** ('தீர்த்தேன தம் விவிதிஷந்தம்' என்று ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது) 'தீர்த்த :' என்பதற்கு சாஸ்திரம் என்று ஒரு அர்த்தம் இருக்கின்றது. சாஸ்திரமானது சிஷ்யன் எப்படி இருக்க வேண்டுமென்று தெரிவிக்கின்றதோ அந்த முறைப்படி இந்த சிஷ்யன் இருக்கிறான் என்பதை தீர்மானித்த பிறகே உபதேசிக்க ஆரம்கின்றார்.

ஏனெனில் சிஷ்யன் எப்படி இருக்க வேண்டுமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றதோ அதேபோல் குருவானவர் யாருக்கு உபதேசிக்க வேண்டும் யாருக்கு உபதேசிக்கக்கூடாது என்பதையும் சாஸ்திரம் தெரிவிக்கின்றது.

அதாவது சாஸ்திரம் தெரிவிக்கின்ற முறையில் தேவதா பக்தி குருபக்தி இல்லாதவனாகவோ அல்லது குருவின் பாண்டித்யத்தை அறியவேண்டும் என்பதற்காகவோ அவரிடம்வாதம் செய்து அவரை ஜெயிப்பதன் மூலம், தான் கீர்த்தியை அடையவேண்டுமென்று விரும்புபவனாகவோ குருவினிடம் அனன்யபக்தி இல்லாதவனாகவோ இருப்பானாகில் அவனுக்கு உபதேசிக்கக்கூடாது என்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. மேலும் வேறொருவரை குருவாக ஏற்றுக்கொண்டு அவரிடம் உபதேசம் பெற்றவனாக இருப்பானாகில் அவனுக்கும் உபதேசிக்கக்கூடாது. சாஸ்திராசார்யனிடத்தில் பக்தியுடையவனாக இருந்தாலும் ஸம்ஸாரத்தில் (அனுத்ம விஷயங்களில்) விரக்தி இல்லாமல் விஷயங்களில் ப்ரவ்ருத்திப்பவர்களுக்கும் உபதேசம் செய்வது ப்ரயோஜனமாகாது. தீராத வியாதியினால் பீடிக்கப்பட்டு தவிக்கின்றவன் எப்படியாவது அந்த வியாதியை நிவர்த்திக்கவேண்டுமென்று மிகுந்த பரபரப்புடன் வைத்யனை நாடி எப்படி ஓடிவருகின்றானோ அதுபோன்று ஸம்ஸாரம் என்ற வ்யாதியிலிருந்து விடுபடவேண்டுமென்று துடிப்புடன் கூடி ஆசார்யனை அடைவானாகில் அவனுக்கே உபதேசிக்க வேண்டும்.

ஆகவே ஸர்வலோக வ்யவகாரங்களிலிருந்தும் விடுபட்டு, சாந்தம் முதலான ஸமதமாதிகள் உடையவனாகவும் தேவதாகுருபக்தியுடன் சிஷ்யபாவமுடையவனாகவும் இருக்கின்ற அதிகாரிக்குத்தான் இந்த ஆத்மவித்யை உபதேசிக்க வேண்டும். இப்பேர்ப்பட்ட அதிகாரிக்குத்தான் ஆசார்யனால் உபதேசிக்கப்படும் அர்த்தத்தைக்காட்டிலும் மேலான அர்த்தங்கள் ப்ரகாசிக்கும். அவ்விதம் இன்றி குருவினால் உபதேசிக்கப்படும் விஷயங்களில் ச்ரத்தையின்றி கேட்பவனாக இருந்தாலோ அல்லது தன் இஷ்டம்போல் கேள்விகளை கேட்பவனுக்கோ சாஸ்த்ரார்த்தங்களை உபதேசிக்கக்கூடாது. எப்பேர்ப்பட்ட மேதாவியாக இருந்தபோதிலும் கீழே சொல்லப்பட்டபடி சிஷ்யன்குணஸம்பன்னனாக இல்லாவிடில் அவனுக்கு எந்தக் **காரணத்தைக்கொண்டும்** உபதேசிக்கக்கூடாது. ஜடம் போல் இருக்கவேண்டும். இவ்விதம்சொல்லப்பட்ட ஸர்வ குணங்களும் பொருந்தி இருக்கின்றவனாகசிஷ்யன் இருப்பானாகில் அவனுக்கு ஆசார்யன் வித்யோபதேசம் செய்வதற்கு, கருணை ஒன்றையே காரணமாகக்கொண்டு உபதேசிக்க வேண்டும். அவ்விதமின்றி தன்னை பூஜிக்க வேண்டுமென்பதற்காகவோ கீர்த்தியை வேண்டியோ அல்லது தனதிகளுக்காகவோ ராஜ்யத்தையே கொடுத்தபோதிலும் அவைகளிலுள்ள இச்சையினால் உபதேசிக்கக்கூடாது. இந்தவிஷயத்தைப்பற்றி தெரிவிக்கின்ற ச்ருதிவாக்யங்கள் என்னவென்றால்

'நாப்ரசாந்தாய தாதவ்யம் நாபுத்ராயாசிஷ்யாயவாபுன: யஸ்யதேவே பராபக்தி: யதாதேவ ததாகுரௌ!! தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மன:' என்ற (ஸ்வேதாஸ்வதர) 'நாப்ருஷ்ட்ட: கச்சித்ப்ரூயான் சான்யாயேன ப்ருச்சத: ஜானன், நபி சமேதாவி ஜடவல் லோகமாசரேத்': என்ற ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களை அறிந்து உபதேசிக்க வேண்டும்.

**93. அவதாரிகை :**

ஸத்குணஸம்பன்னனுகஇருக்கின்ற சிஷ்யனுக்கு, ஆசார்யனுக இருக்கின்ற தன்னிடம், இந்த கேள்விகளை கேட்க்கலாமா? கூடாதா? என்ற பயம் இருக்கலாம் என்று நினைத்து அந்தபயத்தைநிவர்த்தித்து அவனுக்கு உற்சாகத்தைஉண்டு பண்ணவேண்டும் என்று நினைத்த ஆசார்யன், சிஷ்யனைப்பார்த்து, நீ எந்த விதமான கேள்விகளையும் தயங்காமல் கேட்க்கலாம், அதற்குரிய பதிலை நான் தெரிவிக்கிறேன் என்று ஸுமுகமான வசனங்களால் அவனை உற்சாகப்படுத்தி அதன் பின், மஹா வாக்யத்தின் பதார்த்தம் என்ன என்பதை தெரிவித்து வாச்யார்த்தம் என்னவென்பதையும் தெரிவிக்கின்ருர்.

**ச்லோகம் :**

वक्ष्यामि वत्स तव वाञ्छितमत्यवस्थमत्यन्तमेव च हितं श्रृणु तन्मनस्कः ।
त्वं प्रत्यगव्यवहितं तव सुप्रसिद्धं ब्रह्माद्वितीयमुदितं च तदस्यजस्रम् ॥

**ச்லோகார்த்தம் :** ஹே! குழந்தாய்! நீ அறிய விரும்புவதும், அவஸ்த்தாத்ரயங்களுக்கு அதீதமானதும், ஹிதமானதுமான அந்தவஸ்துவைப்பற்றி, நான் உபதேசிக்கின்றேன். இதை நீ ஸாவதான மனதையுடையவனுக இருந்து கேட்ப்பாயாக. உனக்கு ப்ரசித்தமாகவும், அதிஸமீபத்தில் இருப்பதுமானப்ரத்யக்ஸ்வரூபமேநீ. சாஸ்திரத்தினுல் அறிவிக்கப்படும் அத்வீதியமானப்ரஹ்மமே அந்தஈச்வரன். எப்போதுமே நீ அந்த ப்ரஹ்மமாகவே இருக்கிருய்.

**வ்யாக்யானம் :** அறியவேண்டுமென்று உன்னுல் விரும்பப்பட்ட 'தத்வமஸி' மஹாவாக்யார்த்தத்தை உனக்கு, நான்இப்போது உபதேசிக்கின்றேன். அந்த விஷயத்தை மிகவும் கவனமாகக்கேட்க்கவேண்டும். வேறுவிஷயங்களில் மனதை செலுத்தாமல், ஜாக்ரதையுடனும் ச்ரத்தையுடனும் கேட்க்கவேண்டும். ஏனெனில், சொல்லப்போகின்ற தத்வமானது, ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்த்தாத்ரயங்களுக்கு அப்பாற்பட்ட, நிர்விசேஷ ஸ்வரூபமாக இருக்கின்றதால், இந்த தத்வம், ஸுலபமாக அறிந்து கொள்ளக் கூடியது அல்ல. ஆனுல், நம்மால் அவஸ்யம் அறியப்படவேண்டியதத்வமாகஇருக்கின்றதால், மிகுந்தகவனத்துடன் பக்தி ச்ரத்தையுடன் இருந்து அறிந்து கொள்ளவேண்டும். என்று ஆசார்யன் தெரிவித்து, உபதேசிக்க ஆரம்பிக்கின்ருர் :- முதலில் நான் யார்? என்று உன்னுல் ப்ரச்னம் செய்யப்பட்டது. அந்த ப்ரச்னத்திற்கு இப்போது பதில் சொல்கிறேன். தேஹாதிகள் நீ அல்ல. இந்த்ரியாதிகளும் நீ அல்ல. புத்தி முதலான அந்த:கரணமும் நீ அல்ல புத்தி முதலானவைகளுடன் ஆத்மாவிற்கு ஏற்பட்டிருக்கின்ற அன்யோன்ய அத்யாஸத்தின் காரணமாக தேஹாதிகளைச்சேர்த்து 'நான்' என்று எல்லோராலும் அறியப்படுகிறது. ஆனுல் ஆத்மஸ்வரூபம் என்பது 'இது' என்று யாராலும் சுட்டிக் காட்டக்கூடியது அல்ல. லோகத்திலுள்ள ஸர்வ வஸ்துக்களையும் 'இது' என்று குறிப்பிட்டு தெரிவிக்கமுடியும். ஆனுல், இதம் என்று குறிப்பிட்டுத்தெரிவிக்கமுடியாத ஸ்வரூபம் சிதாத்ம ஸ்வரூபம்

ஒன்றே. எந்த வஸ்துக்கள் அறியப்படுகிறதோ அவையெல்லாம் நசிக்க கூடியது (யத் த்ருச்யம் தந்நச்யம்) அநித்யம், உற்பத்தி விநாசமுடையது. ஆத்மா என்பதே நித்யம். இந்தவிதம், தேஹம் புத்தி முதலான ஸர்வமும் அனாத்ம வஸ்துக்களாக இருக்கின்றதால், இவைகளுக்கெல்லாம் எது சாக்ஷியாக இருக்கின்றதோ அதுவே ப்ரத்யகாத்மாவான உன்ஸ்வரூபம்.

ஆகையால் 'அஹமஹம்' என்று ஸர்வதா அனுபவசித்தமாக ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற ஆத்மவஸ்துவை அறிவதற்கு வேறு எந்த ப்ரமாணமும் தேவையில்லை. ஆகவே, ஸர்வஅனாத்மவஸ்துக்களையும் 'நான் அல்ல' என்று வேறுபடுத்தி 'சிதாத்மஸ்வரூபமே நான்' என்று அறிந்து கொள்ளவேண்டும். ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் ஸமீபமாக இருக்கக்கூடிய வஸ்து என்பதே எதுவும் இருக்க முடியாது.

ஏனெனில் நாமாகவே இருக்கின்றதால், நம்மையன்றி, ஸமீபமானவஸ்து என்பதே இருக்கமுடியாது. 'அஹமஹம்' என்று ஸர்வதா ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற போதே நம்முடைய உண்மையான ஸ்வரூபம் அறியப்படவில்லையென்றால் அஞ்ஞானத்தையன்றி வேறு எதுவும் காரணமாக இருக்கமுடியாது. இந்தவிதம் நமது ஸ்வரூபம், நமக்கு அறியப்படவில்லையென்பதும், ப்ரத்யகாத்மாவான நம்மால்தான் அறியப்படுகிறது. ஆகையால் அஞ்ஞானம் இருக்கிறதென்பதற்கு அனுபவமே சாக்ஷி. அதுவே ப்ரமாணமாகிறது. இவ்விதம், ஸர்வஜீவர்களுக்கும் அனுபவசித்தமாக ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற ப்ரத்யகாத்மஸ்வரூபமானது, மற்ற அனாத்ம வஸ்துக்களைப்போல் அறியப்படவேண்டியதாக இருக்குமானால், ப்ரத்யகாத்மாவும் ஜடம் என்றே சொல்லநேரிடும். அவ்விதம் ஜடமாக இருக்குமானால் இந்தஜகத் என்பதே ப்ரகாசிக்க முடியாது, ஆத்மாவைத்தவிர, மற்ற அனாத்ம வஸ்துக்கள் தான் வேறொன்றை அபேக்ஷித்து ப்ரகாசிக்க வேண்டி இருக்கிறது ஆத்மாவும் அதுபோல் ஜடம் என்றும் த்ருச்யம் என்றும் சொல்லப்படுமானால் ஆத்மாவின் ப்ரகாசத்திற்கு வேறொன்றின் அபேக்ஷை இருக்கிறதென்று சொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால் அனவஸ்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகவே, இதையே ச்ருதி வாக்யமும் "நத்ரஷ்ட்டேர் த்ரஷ்ட்டாரம் பச்யேத்" என்று தெரிவிக்கின்றது. "ஏன இதம் விஜானாதி தேனகம்விஜானீயாத்" என்று, எதனால் எல்லாம் அறியப்படுகிறதோ—அதை எதனால் அறியமுடியும்? என்று ஸ்வயம் ப்ரகாசமான ஆத்மா ஸ்வத: சித்தம் என்று தெரிவிக்கின்றது. ஆகவே, ஆத்மஸ்வரூபம் ஸ்வப்ரகாச ஸ்வரூபம். எந்த ப்ரமாணத்தினாலும் அறியக்கூடியதல்ல. தேஹம் முதல் புத்தி முதலான ஸர்வத்திற்கும் சாக்ஷியாக இருப்பவனே நீ, என்று த்வம்பத லக்ஷ்யார்த்தம் என்னவென்பதை முதல் ப்ரச்னத்திற்கு உத்தரமாகச் சொல்லப்பட்டது.

அதன் பிறகு தத்பதார்த்தத்தில் செய்யப்பட்ட ப்ரச்னத்திற்கு பதில் சொல்லப் படுகிறது. 'தத்' என்ற சப்தத்தினால் ப்ரஹ்ம சைதன்யமே குறிப்பிடப்படுகிறது. 'ப்ரஹ்ம' சப்தமானது மஹத் என்ற அர்த்தத்தை தெரிவித்தபோதிலும், எதற்கு மேற்பட்ட மஹத்வம் என்பதே, இருக்கமுடியாதோ அப்பேர்ப்பட்ட நிரவக்ரஹமான மஹத் என்பதை தெரிவிக்கின்றது. 'ப்ரஹ்ம' என்ற மஹத் சப்தமானது பெயர்ச் சொல்லாக (Noun) குறிப்பிடப்படுகின்றதால் இதைவிடபெரியது என்பதாக, 'அளவிட்டு' கூறமுடியாதது. அதாவது, தனத்தில் பெரியவன் வயதில் பெரியவன் என்பது போல் பெரியது என்றோ அல்லது எந்த வஸ்துவைக் குறிப்பிட்டும் அதைக்காட்டிலும் பெரியது என்றோ

சொல்லமுடியாது. அவையெல்லாம் ஸாவக்ரஹமுள்ளது. (Limited), ஆனல் ப்ரஹ்ம சப்தம் என்பது எவ்வித விசேஷணமுமின்றி 'ப்ரஹ்ம' என்று மட்டும் குறிப்பிடப்படுவதால் நிரவக்ரஹம். ஆதலால் ப்ரஹ்ம சப்தமானது பரிபூரணமான அத்விதீயதத்வத்தையே தெரிவிக்கின்றது என்பது சித்தம்.

'ஸதேவஸௌம்ய இதமக்ரமாஸித் ஏகமேவ அத்விதியம்' என்றும், 'தத்ரதத் ப்ரஹ்ம, அபூர்வம் அனபரம் அனந்தரம், அபாஹ்யம்' என்று, ஸர்வவிதமான விசேஷணங்களையும் நிஷேதம் செய்து, நிர்விசேஷமான ப்ரஹ்ம தத்வத்தையே ப்ரஹ்ம சப்தம் போதிக்கின்றது.

**பூர்வ :** ப்ரஹ்மதத்வம் என்பது வேதாந்தத்தினல் அறிவிக்கப்படுகிறது என்று சொல்லப் படுமானல், முன்னல் அறியப்பட்ட ப்ரஹ்மதத்வத்தை அனுவாதம் செய்து வேதாந்தம் தெரிவிக்கின்றதா? அல்லது அபூர்வமாகவே இந்த ப்ரஹ்மதத்வத்தை தெரிவிக்கின்றதா? அனுவாதம் செய்தே தெரிவிப்பதாகச்சொல்லப்படுமானல், வேதாந்தம் தாத்பர்யத்துடன் ப்ரஹ்மதத்வத்தை போதிக்கவேண்டுமென்று ப்ரவ்ருத்திக்கவில்லை யென்றே சொல்ல நேரிடும்.

இந்த ஸங்கைக்கு உத்தரமாக அத்விதீயமான ப்ரஹ்மதத்வத்தை போதிப்பதில் தான், வேதாந்த வாக்யங்களுக்கு தாத்பர்யம், என்பதை தெரிவித்து சிஷ்யனல் கேட்கப்பட்ட மூன்ருவது ப்ரச்னத்திற்கு பதில் சொல்லப்படுகிறது. என்று ச்லோகத்திலுள்ள 'ச' காரத்தினல் விளக்கப்படுகிறது. அதாவது ஜீவேச்வர அபேதம் தான் உண்மையானஸ்வரூபம். பேதம்பரமார்த்தமில்லை. "அத்விதீயம் ப்ரஹ்ம" என்று எந்த ஒரு ஸ்வரூபமானது சொல்லப்பட்டதோ 'அதுவே நீ ' ஆகையால் ஜீவேச்வரபேதம் என்பது உண்மையல்ல என்று அறிந்துகொள்ளவேண்டும். (இந்த கருத்தை ச்லோகத்தில் 'அஜஸ்ரம்' என்ற பதத்தினல் சொல்லப்படுகிறது). ஆகவே, ஸர்வவேதார்த்தங்களின் உபக்ரமஉபஸம்ஹாராதிகளின் தாத்பர்யம் என்னவென்றுவிசாரித்து அறியப்படுமானல், ப்ரஹ்மாத்மஸ்வரூபஐக்யம்தான் தாத்பர்யேணபோதிக்கப்படுகிறதென்று அறியப்படும். அதனல் ஸர்வபேதங்களும் அத்யாஸத்தை முன்னிட்டே தோன்றுகிறதால் பேதம்உண்மையல்ல. ஆகவே, நிர்விசேஷமான ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று அத்விதீய ஆத்மஸ்வரூபபோதம் ஏற்படுமானல் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை.

**94. அவதாரிகை :**

இந்தவிதம் 'தத்வமஸி' மஹாவாக்யமானது, ஜீவபரமாத்ம ஐக்யத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டபோதிலும், அதுஎப்படிப்பொருந்தும்? என்று பலவிதமான சந்தேகங்கள் ஏற்படுவதற்குரிய காரணங்கள் நிறைய இருக்கின்றது. அதனல் இவ்வித ஸந்தேகங்களே ஐக்யபோதம் ஏற்படுவதற்கு ப்ரதிபந்தகமாக இருக்கின்றது. அதனல் உபதேசத்தினல் ஏற்படவேண்டிய அனுபவகோசரமானஞானபலன் சித்திக்கவில்லை என்று அறிந்த சிஷ்யனனவன், தனக்கு ஏற்பட்டஸந்தேகங்களைக்கேட்பதற்கு ஆசார்யனை தன்னுடைய அனுமதியை எதிர்பார்க்கின்ருன் என்பதை ஆசார்யன் அறிந்து அவனை உற்சாகப்படுத்தி, உனக்கு எந்தவிதமான ஸந்தேகங்கள் இருந்தாலும் அவைகளையெல்லாம் நீ கேட்கலாம். நான், அவைகள்எல்லாவற்றிற்கும் பதில் சொல்கிறேன் என்று தெரிவிக்கின்ருர்.

**ச்லோகம் :**

यद्यत्र पश्यसि विरोधमुदीरय त्वं सद्यस्ततः परिहराणि तमप्रयत्नात् ।
वाक्यं निरस्तसकलप्रतिबन्धकं सत् त्वां बोधयिष्यति करार्पितबिल्वतुल्यम् ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம், ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று சொல்லப்பட்ட விஷயத்தில், உனக்கு ஏதாவது விரோதம் அறியப்படுமாஞல், அதை நீ தெரிவிப்பாயாஞல், அந்த விரோதத்திற்கு, உடனேயே (எவ்வித தாமதமுமின்றி) எவ்வித ஆயாஸமுமின்றி பதில் சொல்கிறேன். எந்தவிதமான ப்ரதிபந்தங்களும் அற்றதான வாக்யமானது, கரத்திலுள்ள பில்வபழத்தைப்போன்று (ஸ்பஷ்ட்டமான) தெளிவானஞானத்தைக் கொடுக்கும்.

**வ்யாக்யானம் :** தன்ஞல் உபதேஸிக்கப்பட்ட விஷயத்தைக்கேட்ட பிறகு, சிஷ்யனுடைய முகத்தில் ஏற்பட்ட (அப்ரஸன்னமான) பாவஜேயைக்கண்டு, அவனுக்கு இந்த விஷயத்தில் பலவிதமான ஸந்தேகங்கள் ஏற்பட்டிருக்கின்றது என்பதை ஆசார்யன் அறிகின்ருர். இவ்வித ஸந்தேகங்களே ஞானத்திற்கு ப்ரதிபந்தகமாக ஆகும் என்பதால் சிஷ்யஜேப் பார்த்து ஹே! ஸௌம்ய! உனக்கு இந்த விஷயங்களைப் பற்றிய ஸந்தேகங்கள் என்னென்ன இருக்கின்றதோ அவைகள் எல்லாவற்றையும் பயமின்றி கேட்டு தெரிந்து கொள். ந்யாயம்முதலான, பலவிததந்த்ரசித்தாந்தங்களையெல்லாம் முறைப்படி ஆசார்யனிட மிருந்து ஸம்ப்ரதாயமாக ச்ரவணம் செய்து வேதாந்தரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் நன்கு அறிந்திருக்கின்றேஞகையால் உன் ஸந்தேகங்கள் எல்லாவற்றிற்கும் எவ்வித ஆயாஸமுமின்றி பதில் சொல்லுகிறேன்.

ஜீவபரமாத்ம ஐக்ய ஞானம்தான் மோக்ஷஸாதனம். மஹாவாக்யத்திலிருந்தே அகண்டார்த்தபோதம் ஏற்படவேண்டும். ஆகவே, அஸம்பாவஜே, விபரீதபாவஜேயென்பவைகள் இருக்குமாஞல், ஞானம் அபரோக்ஷமாக ஏற்படமுடியாது. ஆகவே, மஹா வாக்யத்திஞல் தெரிவிக்கப்படும் விஷயத்தில் எந்தவிதமான விரோதமும் கிடையாது. அவ்விதம் ஏதாவது விரோதம் இருப்பதாக அறியப்படுமாஞல் அவையெல்லாம் ப்ராந்தியே தவிர உண்மையில் விரோதமில்லை. ஆகையால், உன் ஸந்தேகங்களை தெரிவிப்பாயாஞல் அவைகளுக்கு பதில் தெரிவிக்கின்றதன்மூலம் உன் ஸந்தேகங்ள் நிவர்த்திக்கப்பட்டு ப்ரத்யக்ஸ்வரூபமே ப்ரஹ்மமென்று, கரத்தில் இருக்கின்ற வில்வ பழத்தைப்போன்று தெளிவாக ப்ரகாசிக்கும்.

**95. அவதாரிகை :**

இந்தவிதம் குருவின் அனுக்ஞையைப் பெற்ற சிஷ்யஞனவன் தனக்கு ஏற்பட்ட ஸந்தேகங்களை கேட்பதற்குரிய ஸந்தர்ப்பம் கிடைத்ததால் குருவினிடம் தன் ஸந்தேகங்களைப் பற்றி தெரிவிக்கின்ருன். அதாவது : 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள 'தத்பதம்' 'த்வம்பதம்' என்ற இரண்டிற்கும் விரோதம் இருப்பதாகஅறியப்படுவதால், 'அதுவே நீ' என்று வாக்யத் திலிருந்து அன்வயம் ஏற்படுவதற்கு யோக்யமில்லாமல் இரண்டும் விருத்தமாக இருக்கின்றது. ஆகவே, ஜீவபரமாத்மஜக்யபோதம் என்பது இந்த வாக்யத்திஞல் எப்படி ஏற்படமுடியும்?

**ச்லோகம் :**

अत्राऽऽह सद्वयमहं मम रूपमीक्षे तत्त्वाद्वयं विगणयामि परोक्षमेव ।
पारोक्ष्यसद्वयविभागयुजोर्विरोधाद्वाक्यार्थबोधमतिदुर्लभमेव मन्ये ॥

**ச்லோகார்த்தம் :** இப்போது சிஷ்யஞனவன் தெரிவிக்கின்ருன். த்வம்பதவாச்யமான என்ஸ்வரூபத்தை நான் ஸத்வயமாகவேஅறிகிறேன். தத்பதமானஈச்வரஜே அத்வயமாகவும் பரோக்ஷமாகவும் அறிகிறேன். பாரோக்ஷ்யம் ஸத்வயத்வம் என்று இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டிஞல், விரோதம் அறியப்படுகின்றதால் வாக்யார்த்தபோதம் ஏற்படுவ தென்பது அதிதுர்லபம் என்று நிஜேக்கிறேன்.

**வ்யாக்யானம் :** குருவின் அனுக்ஞையைப் பெற்ற சிஷ்யனானவன், தன்னுடைய ஸந்தேகங்களை தெரிவிக்கின்றான்:- அதாவது, த்வம்பதார்த்தமானது, புத்தி முதலானவைகளுடன் கூடியதாகவும், த்வைத தர்மங்களை உடையதாகவும் அபரோக்ஷமாகவும் அறியப்படுகிறது என்பது எல்லோருக்கும் அனுபவசித்தமாக இருக்கின்றது. தத்பதார்த்தமாகச் சொல்லப்படும் ஈச்வரன் இதற்கு நேர் விபரீதமான தன்மையில், த்வைத தர்மங்கள் அற்ற அத்விதீய ஸ்வரூபமாகவும் பரோக்ஷமாகவும் கார்யமான இந்த ஜகத்திற்கு கர்த்தாவாகவும் அறியப்படுகிறது. இவ்விதம் ஸத்வயமாகவும், அபரோக்ஷமாகவும் இருக்கின்ற ஸ்வரூபமும், அத்வயமாகவும் பரோக்ஷ மாகவும் இருக்கின்ற (அறியப்படுகின்ற) ஸ்வரூபமும் ஒன்றுக்கொன்று விருத்தமான தன்மையில் இருக்கின்றதால், எப்படி இரண்டிற்கும் அபேதம் சித்திக்க முடியும்? இரண்டிற்கும் உள்ள விரோதம் ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகிறது.

ஸஜாதிய விஜாதீய ஸ்வகதபேதம்அற்ற ஸ்வரூபந்தான், அத்வயமாக இருக்க முடியும். அதனால் ஸத்வயமான அஹம்பதார்த்தம் எப்படி அத்வயமாக இருக்கமுடியும்? ஜீவர்களுக்குள் ஏற்படும் சுகதுக்கங்கள் வெவ்வேறாக இருப்பதால் ஸ்வகதபேதம் இருப்பதாக அறியப்படுகிறது. அதேபோல் ஜீவர்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் பேதம் இருக்கின்றதால் ஸஜாதீயபேதமும் அத்யாத்மத்திற்கும் (ஆத்மாவிற்கும்) அதிபூதமான ஜகத்திற்கும் பேதம் இருக்கின்றதால் விஜாதீயபேதமும் இருக்கின்றது. இந்தவிதம் ஸத்வயமாகவும் ஒன்றுக்கொன்று பேதமுள்ளதாகவும் ப்ரத்யக்ஷமாகவே நமது ஸ்வரூபம் அறியப்படுகிறது என்பது எல்லோருக்கும் அனுபவசித்தமாக இருக்கின்றது. ஆகவே, ச்ருதியானது, அத்வயம் தான் தத்வம் என்று, தத்–த்வம் பதார்த்தங்களுக்கு ஐக்யத்தை போதிக்குமானால், அந்த வாக்யத்தை எப்படி ப்ரமாணம் என்று சொல்லமுடியும்?

ப்ரத்யக்ஷம் என்பது ப்ரமாணமென்றாலும், ஆகமம் என்ற ப்ரமாணத்தினால் ப்ரத்யக்ஷத்தினால் அறியப்படும் அர்த்தமானதுபாதிக்கப்பட்டு, சாஸ்திரம் தன் அர்த்தத்தை போதிக்கலாமே? என்றால்,

இரண்டு ப்ரமாணங்கள் ஒரே விஷயத்தை தெரிவிக்குமானால், அதில் எது சரி? எது சரியல்ல என்று விசாரித்து தீர்மானிக்கலாம். ஆனால் ஆகமம் என்ற ச்ருதி ப்ரமாணமானது பரோக்ஷமான விஷயத்தைத்தான் தெரிவிக்கும். உதாரணமாக ஸ்வர்க்காதிகளைப்பற்றி ச்ருதி தெரிவிக்குமானால் அதுபரோக்ஷவிஷயமாக இருப்பதால் ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமில்லை. ப்ரத்யக்ஷம் எதை தெரிவிக்கின்றதோ அதையே ச்ருதியும் தெரிவிக்கின்றது என்று இருக்குமானால்தான் ஒன்றை பார்த்து மற்றொன்றை உண்மையென்று ஒத்துக்கொள்ள முடியும். அவ்விதம் ஜீவபரமாத்ம ஐக்யம் என்பது அபரோக்ஷமாக சித்திக்கிறது என்று சொல்வது ஆசைமாத்ரமாகத்தான் இருக்க முடியும். அபரோக்ஷமாக அறியப்படும் ப்ரத்யகாத்மாவே, அத்வயமான ப்ரஹ்மமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. தத்–த்வம் என்ற இரண்டுபதார்த்தங்கள் என்னவென்று விசாரித்து அறியப்படுகின்ற போது இரண்டும் ஒன்றே என்று ஐக்ய போதமானது வாக்யத்திலிருந்து ஏற்படும் என்ற விஷயத்தை ஆசார்யராலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே அபரோக்ஷமாக அறியப்படும் ப்ரத்யகாத்மஸ்வரூபமும் ஈச்வரனும் ஒன்றே என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றதால், ப்ரத்யக்ஷம் என்ற ப்ரமாணத்திற்கும் ச்ருதியென்றப்ரமாணத்திற்கும் விஷயம்வேறு என்று சொல்வது சரியல்ல. ஸர்வ வேதாந்த வாக்யங்களும் ஜீவபரமாத்ம ஐக்யத்தையே தாத்பர்யத்துடன் போதிக்கின்றது. மேலும் எல்லா ப்ரமாணங்களைக் காட்டிலும்

முக்யமான ப்ரமாணம் ச்ருதி என்பதால் வேதாந்த வாக்யார்த்தங்களை நன்கு வசாரித்து தத்வத்தை அறிந்து கொள்ளவேண்டும்.

(இந்த விஷயங்களைப்பற்றி மேலே 496வது ச்லோகமான 'க்ஷிதஜலதஹனனிலாம் பராணும்' என்று ஆரம்பிக்கப்படும் ச்லோகத்திலிருந்து ஆரம்பித்து, தத்—த்வம் பதார்த்தங்களில் ஏற்படும் விருத்தமான விஷயங்களைப்பற்றி விசாரித்து விரோதம் ஏதுமில்லை என்பதை விளக்கப்படுகிறது.)

**சிஷ்யன் :** இந்த இடத்தில் தத்பதார்த்தத்தைப் பற்றி முதலில் விசாரிக்கப்படுவதற்கு என்னகாரணம்? ப்ரஹ்மசூத்ரங்கள்எந்தக்ரமத்தில் விசாரிக்கப்படுகிறதோ அந்த க்ரமத்தில் தானே விசாரிக்கப்படவேண்டும்? அதாவது முதல் சூத்ரத்தில் ஸாதன ஸம்பன்னனை அதிகாரியே ப்ரஹ்மஞான விசாரம் செய்வதில் அதிகாரி என்று தெரிவிப்பதன் மூலம் த்வம்பதார்த்த நிரூபணம் செய்யப்படுகிறது. இரண்டாவதாக 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற ப்ரஹ்ம லக்ஷணசூத்ரத்தினுலும், சாஸ்திர யோனித்வாத் என்ற ப்ரமாண சூத்ரத்தினுலும்— தத்பதார்த்த நிரூபணம் செய்யப்படுகிறது. அதன் பிறகு நான்காவது 'தத்துஸமன்வயாத்' என்ற சூத்ரத்தினுல் ஜீவபரமாத்ம ஐக்யம் போதிக்கப்படுகிறது. ஆகவே, இந்த சாஸ்திரத்திலும், அந்த க்ரமத்தை அனுஸரித்து விசாரிக்காமல் முதலில் தத்பதார்த்தத்தை விசாரிப்பதற்கு என்ன காரணம்?

**சித்தா :** முதல் சூத்ரத்தில் த்வம்பதார்த்த விசாரம் செய்யப்படுவதாகச் சொல்வதே சரியல்ல. ப்ரஹ்ம விசாரம் என்பது தேவையா? இல்லையா? என்று விசாரித்து, ப்ரஹ்ம விசாரம் அவஸ்யம் கர்த்தவ்யம் என்பதையே தெரிவிக்கின்றதால் தத்பதார்த்த விசாரம் தான் முதலில் செய்யப் படுகிறது. அத்துடன் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கப்படவேண்டுமா? என்று விசாரித்து, அவஸ்யம் ஆரம்பிக்கப்படவேண்டும் என்பதற்குரிய காரணங்களை விளக்கப்பட்டிருக்கிறது. அதன் பிறகு இரண்டாவது, மூன்ருவது சூத்ரங்களில் ஜகத்காரணமான (ஈச்வரனை) ப்ரஹ்மத்தைப்பற்றிய விசாரம் செய்யப்படுகிறது. இந்த விஷயங்களைப் பற்றி இந்த இடத்தில் சுருக்கமாகவே தெரிவிக்கின்றோம். ஆனுல், மேலே 496வது ச்லோகத்திலிருந்து மிகவும் விஸ்தாரமாக விசாரிக்கப்படுகிறதால், இங்கு விஸ்தாரம் செய்யப்படவில்லை. ஆகவே, சூத்ர க்ரமத்திற்கு விரோதமாக இந்த இடத்தில் ஏதும் விசாரிக்கப்படவில்லையென்பதை அறிந்து கொள்ளவேண்டும்.

**96. அவதாரிகை :**

**குரு :** ஜீவனிடத்தில் ஸத்வயத்வமும் ஆபரோக்ஷ்யமும் அறியப்படுகிறது. ஈச்வரனிடம் அத்வயத்வமும், பாரோக்ஷ்யமும் அறியப்படுவதால், விருத்தமான தன்மைகள் உடைய் இரண்டிற்கும் எப்படி அபேதம் ஸம்பவிக்கமுடியும்? என்று உன்னுல் கேட்கப்பட்டது. ஸத்வயத்வம் பாரோக்ஷ்யம் என்பதெல்லாம் அத்யஸ்த்தமானதால் வாக்யார்த்தபோதம் ஏற்படுமானுல், அபேதம்தான் தத்வம் என்பது அறியப்படும்.

**சிஷ்யன் :** விரோதம் என்பது அத்யாஸத்தினுல்தான் தோன்றுகிறது என்றும், உண்மையில் விரோதம் இல்லையென்பதும் எப்படி வாக்யத்தை கேட்டமாத்ரத்தினுல் போதம் ஏற்படமுடியும்? சப்தத்திற்கு அவ்வித சக்தி இருப்பதாகச்சொல்லமுடியாது.

**ச்லோகம் :** यद्वस्तु सद्वयतयाऽवगतं स्वशब्दात्तस्याद्वयत्वमवगन्तुमशक्यमेव ।
यद्वस्तु च व्यवहितं प्रतिपादितं तत्प्रत्यक्तया न तु जनः प्रतिपत्तुमीशः ॥




**ச்லோகார்த்தம் :** எந்த வஸ்துவானது அதை போதிக்கின்ற பதத்தினுல் ஸத்வயமாகவே அறியப்படுகிறதோ அந்த வஸ்துவை அத்வயமாக அறியமுடியாது. எந்த வஸ்துவானது அதை போதிக்கின்ற பதத்தினுல் ப்ரோக்ஷமாக அறியப்படுகிறதோ, அந்த வஸ்துவை யாராலும் அபரோக்ஷமாக அறியமுடியாது.

**வ்யாக்யானம் :** ஒருவாக்யத்தின் அர்த்தமானது அதிலுள்ள பதங்களின் அர்த்தத்தைக் கொண்டே அறியப்படவேண்டும். ஏனெனில் பதார்த்தங்களின் ஸம்பந்தத்தையே வாக்யம் தெரிவிக்கவேண்டும். புத்திமுதலானவைகளுடன்கூடி அஹமஹம் என்று எல்லோராலும் அபரோக்ஷமாக அறியப்படும் த்வம்பதார்த்தத்திற்கும்; பரோக்ஷமாகவும் அத்விதீயமாகவும் இருக்கின்ற தத்பதார்த்தமான ஈச்வரனுடன் அபேதம் ஏற்பட முடியாது. ஒன்று ஆபரோக்ஷ்யம் ஒன்று பாரோக்ஷ்யம், ஒன்று ஸத்வயம் ஒன்று அத்வயம். இவ்வித விரோதத்தை பரிகாரம் செய்வதற்காக த்வம்பதார்த்தத்தில் அறியப்படும் ஸத்வயத்வத்தையும் தத் பதார்த்தத்தில் அறியப்படும் பாரோக்ஷ்யத்தையும் விட்டுவிட்டு அத்வயமான வஸ்துவிற்கும், ஆபரோக்ஷ்யமான வஸ்துவிற்கும் அபேதம் சொல்லப்படுமானுல் அது எப்படி பொருந்தும்? வாக்யத்தில் இருக்கின்ற பதங்களுக்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தத்தைவிட்டு, வேறு அர்த்தம் சொல்லப்படுமானுல், அந்த அர்த்தம், அந்த வாக்யத்திலுள்ள பதங்களின் அர்த்தம் என்று எப்படிச் சொல்வது? விசிஷ்டமாக இருக்கின்ற அந்த பதங்களின் அர்த்தம் அதிலுள்ள விசிஷ்டார்த்த ஸம்பந்தத்தைத்தானே அந்தவாக்யம் போதிக்கவேண்டும்? அவ்விதமின்றி அந்த வாக்யத்திற்கு முரண்பட்ட முறையில் அர்த்தம் செய்வது எப்படி பொருந்தும்? ஆகவே, அபரோக்ஷமாகவும், ஸத்வயமாகவும், கர்த்ருத்வாதிகளுடன் கூடி 'அஹமஹம்' என்று எல்லோருக்கும் ப்ரத்யக்ஷமாக, அனுபவசித்தமாக அறியப்படும் ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தை, ஆயிரக் கணக்கான ச்ருதிவாக்யங்கள் அத்வயம்தான் என்று சப்தம் (கோஷம்) போட்டு தெரிவித்தாலும், அதுபொருந்தாது. அதேபோல், பரோக்ஷமாகவும், அத்வயமாகவும் இருக்கின்றதாக அறியப்படும் ஈச்வரன் அபரோக்ஷம்தான், என்று ஆயிரக்கணக்கான வாக்யங்கள் போதித்தபோதிலும், அதை அறிந்து கொள்ளக்கூடிய ஸாமர்த்யம் எவருக்கும் இருக்கமுடியாது. ஆகையால், பராக்காக அறியப்படும் வஸ்துவும் ப்ரத்யக்காகஅறியப்படும் வஸ்துவும் ஒன்று என்றுசொல்லப்படுவது ப்ராந்தி ஞானமென்றே சொல்லவேண்டும்.

**97. அவதாரிகை :**

எதிரில் இருக்கின்ற கிளிஞ்சலைப் பாரத்து, இது வெள்ளி என்ற ப்ராந்தி ஞானம் ஏற்படுகிறது. கிளிஞ்சல் என்பதும் வெள்ளி என்பதும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட தன்மையில் இருந்தும்கூட, கிளிஞ்சலில் வெள்ளி என்ற ப்ராந்திஞானம் ஏற்படுகிறது. பிறகு இது வெள்ளி அல்ல, கிளிஞ்சல்தான் என்று அறிகின்றபோது முதலில் ஏற்பட்ட ப்ராந்திஞானம் பாதிக்கப்படுகிறது. அதுபோல் சப்தத்தினுல் ப்ராந்திஞானம் நிவர்த்தித்து, தத்வஞானம் ஏற்படுவதாகச்சொல்லலாமே?

**சிஷ்யன் :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் கிளிஞ்சல் வெள்ளியாக தோன்றும் ப்ராந்திஸ்தலத்தில், இது வெள்ளி என்ற ப்ராந்தி ஞானமும் சக்ஷுஸ்ஸினுல் தான் ஏற்படுகிறது. அதன்பின் இது வெள்ளி அல்ல என்ற யதார்த்த ஞானமும் சக்ஷுஸ்ஸினுல்தான் ஏற்படுகிறது. ஆனுல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யமானது ஜீவனும்பரமாத்மாவும், ஒன்றுஎன்று (சப்தப்ரமாணம்) தெரிவிக்கின்றது. ஜீவனும் பரமாத்மாவும் வேறு என்று ப்ரத்யக்ஷப்ரமாணம்தெரிவிக்கின்றது. ஆகையால், சப்தத்தினுல் தெரிவிக்கப்படும்

வஸ்துவிற்கும், சக்ஷுஸ் என்ற ப்ரத்யக்ஷப்ரமாணத்தினுல் அறியப்படும் வஸ்துவிற்கும் ஸம்பந்தம் சொல்லமுடியாது. சப்தசக்தி என்பது வேறு சக்ஷுஸ்சக்தி என்பது வேறு. வாக்யங்களில் உள்ள பதங்களின் அர்த்தம் எதுவோ, அவைகள்தான் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் ஏற்படுவதன்மூலம், வாக்யத்தின் அர்த்தத்தை போதிக்கமுடியும். ஆகையால் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் விரோதங்களுக்கு பரிகாரம் என்பது சப்தத்தினுல் போதிக்கப்படுகிறது என்று சொல்வது பொருந்தாது.

**ச்லோகம் :** आकाङ्क्षितं भवति पूरणशक्तियुक्तं यत्सन्निधौ पठितमस्य हि सङ्गतिः स्यात् ।
नाऽऽकाङ्क्षयैव न तु सन्निधिनैव वा स्यात सम्बन्धिता हि विरहय्य पदार्थशक्तिम् ।।

**ச்லோகார்த்தம் :** எந்த பதமானது ஆகாங்க்ஷை, யோக்யதை, ஸன்னிதி இவைகளுடன் கூடினதாக இருக்கின்றதோ, அந்தபதங்களுக்கே, இதரபதங்களுடன் அன்வயம் ஏற்படமுடியும். பதார்த்தசக்தி என்பது இல்லாமல் ஆகாங்க்ஷையினுல் மட்டுமோ அல்லது ஸன்னிதியினுல் மட்டுமோ, அன்வயம் என்பது ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** சக்ஷுஸ் என்பது ஸமீபத்திலுள்ள, ரூபமுள்ள வஸ்துவைத்தான் தெரிவிக்கும். வாக்யம் என்பது, அந்தவாக்யத்திலுள்ள பதபதார்த்தங்களின் ஸம்பந்தத்தை மட்டுமே போதிக்கின்றது. அதுமட்டுமின்றி, வாக்யத்திலுள்ள பதங்கள் ஒவ்வொன்றும், மற்றுமுள்ள இதரபதங்களை அபேக்ஷித்தே அந்தவாக்யார்த்தத்தை போதிக்கின்றது. ஆகவே, ஆகாங்க்ஷை, யோக்யதை, ஸன்னதி என்ற மூன்றையும் கொண்டபதங்கள்தான், ஒன்றுடன் ஒன்று அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிக்க முடியும். உதாரணமாக 'வன்னினு ஸிஞ்சதி' என்று நெருப்பினுல் நனைக்கிருன் என்று சொல்லப்படுமானுல், அந்த வாக்யத்தில் அன்வயம் பொருந்தவில்லை. 'ஜலேனஸிஞ்சதி' ஜலத்தினுல் நனைக்கிருன் என்று சொன்னுல்தான் அன்வயம் பொருந்தும். அதேபோல், 'தேவதத்த காம்' என்று சொன்னுல் போருது. 'தேவதத்த காம் ஆனய' என்று சொன்னுல் தான் வாக்யம் பூரணமாக அதன் அர்த்தத்தை தெரிவிக்கமுடியும். ஆகையால் வாக்யம் என்ருல், தேவையுள்ள பதத்தைச் சேர்க்காமலோ அல்லது தேவை அற்ற ஸம்பந்தமற்ற பதத்தை சேர்ப்பதனுலோ வாக்யம் அர்த்தபோதத்தை உண்டுபண்ணமுடியாது.

ஆகவே, 'தத்வமஸி' என்ற மஹாவாக்யம் ஆகாங்க்ஷையுடையதாக இருந்த போதிலும், அன்வய யோக்யமுள்ளதாக இல்லாததால் அர்த்தபோதம் ஏற்படுவதற்கு முடியாது.

**98. அவதாரிகை :**

'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள, தத்–த்வம் என்ற பதங்கள் இரண்டும் ஒன்றுக்கொன்று அன்வயயோக்யமாக இல்லையென்ருலும், ஸமான விபக்தியில் சொல்லப் பட்டிருப்பதால், அன்வய யோக்யம் இருக்கிறது என்று சொல்லலாமே?

**சிஷ்யன் :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயயோக்யமாக இல்லாவிடில் அர்த்தபோதமே ஏற்படாது. அதனுல் ஸாமானுதிகரண்யத்தினுல் மட்டும் வாக்யத்திற்கு அர்த்தபோத யோக்யதை ஏற்படுவதாகச் சொல்ல முடியாது.

**ச்லோகம் :**

योग्यत्वमत्र न च तत्त्वमसीति वाक्ये संबन्धितां प्रति पदार्थयुगस्य भाति ।
पारोक्ष्यसद्वयविभागविरोधहेतोर्गौरश्व इत्यभिहिते तु यथैव वाक्ये ।।

**ச்லோகார்த்தம் :** கௌ:, அஸ்வ:, என்று ஒரே வாக்யத்தில் இரண்டு பதங்களும் ப்ரயோகம் செய்யப்படுவதற்காக மட்டும், அந்த பதார்த்தங்களுக்கு, அபேத அன்வயம் சொல்லமுடியாது. அதேபோல்–பாரோக்ஷ்யம், ஸத்வயத்வம் என்ற பேதத்திஞல் இரண்டிற்கும் விரோதம் இருப்பதால், 'தத்வமஸி' என்ற வாக்யத்திலும் தத்–த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் அன்வயம் ஏற்படுவதற்குரிய யோக்யதை கிடையாது.

**வ்யாக்யானம் :** ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள் ஒரே விபக்தியில் இருப்பதற்காக அந்த பதார்த்தங்கள் இரண்டும் ஒன்றே என்று எப்படி அபேதஅன்வயம் சொல்ல முடியும்? ஸமானவிபக்தியில் இருந்தாலும் வஸ்து இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமான தன்மையில் இருக்கின்றதால் அபேத அன்வயம் ஏற்பட முடியாது. அதாவது த்வம்பதார்த்தம் என்பது ஸத்வயமாகவும், ஆபரோக்ஷ்யமாகவும் இருக்கிறது. தத்பதார்த்தம் என்பது அத்வயமாகவும், பாரோக்ஷ்யமாகவும் இருக்கிறது. இவ்விதம் விரோதமான தன்மையில் இருக்கின்ற வஸ்து இரண்டும், ஸமான விபக்தியில் இருப்பதற்காக இரண்டும் ஒன்றே என்று அபேதம் சொல்லப்படுமாஞல், அஸ்வ:, கௌ: என்று ஒரு வாக்யத்தில் ப்ரயோகம் செய்யப்படுமாஞல் அவை இரண்டும் ஒன்றுதான் என்று அபேதம் சொல்லநேரிடும். ஆகையால், விபக்தியைக்கொண்டு வேறுபட்டதன்மையிலுள்ளஇரண்டு வஸ்துக்களுக்கு அபேதம் சொல்வது பொருந்தாது. அதை ஒப்புக்கொள்வதற்கும் முடியாது.

**99. அவதாரிகை :**

**சித்தாந்தம் :** ஸோऽயம் தேவதத்த: என்ற வாக்யத்திலுள்ள, ஸ: என்ற பதமும் அயம் என்ற பதமும் வெவ்வேறு அர்த்தத்தையே குறிக்கின்றது. அதாவது 'ஸ:' என்ற பதம் 'அது' என்ற அர்த்தத்தையும், 'அயம்' என்ற பதம் 'இது' என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது. 'அது' என்ற பதமும் இது என்ற பதமும் ஒன்றல்ல. ஆஞலும் அந்த இரண்டு பதங்களிஞல் அறியப்படும் அர்த்தத்தில் உள்ள விரோதமான அம்ஸங்களை விட்டு, விரோதமில்லாத அம்ஸத்தை மட்டும் எடுத்துக்கொண்டு, வ்யக்திமாத்ரமான (ஸ்வரூபமாத்ரமான) அம்ஸத்தை லக்ஷணையிஞல் எப்படி அந்த வாக்யம் போதிக் கின்றதோ, அதுபோல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தில் உள்ள இரண்டு பதங்களிஞல் அறியப்படும் விரோதமான அம்ஸங்களை விட்டு விரோதமில்லாத அம்ஸங்களைக் கொண்டு வாக்யமானது, லக்ஷணையிஞல் அபேதார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லலாம்.

**சிஷ்ய :** அவ்விதம் சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

सोऽयंगिरोरिव न लक्षणयाऽपि वृत्तिर्मानान्तराधिगतिहीनतयाऽऽत्मनि स्यात् ।
मानान्तराधिगतगोचर एव दृष्टः शब्दप्रयोग इह लाक्षणिकस्तु लोके ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாணங்களிஞல் அறியப்படாத ஆத்ம விஷயத்தில் ஸோऽயம் என்ற பதங்களின் ப்ரயோகத்தைப்போல், லக்ஷணையிஞல் அர்த்தம் சொல்வதற்கு முடியாது. லோகத்தில் லக்ஷணர்த்தத்தில் சப்தப்ரயோகம் என்பது வேறு ப்ரமாணத்திஞல் அறியப்பட்ட விஷயத்தில்தான் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யம், வேதவாக்யமாக இருக்கின்றதால், அந்த வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படவில்லை என்ருல், வேதம் அப்ரமாணம் என்று சொல்லநேரிடும். மேலும் 'தத்' 'த்வம்' என்றபதங்கள் ஸாமாஞதி கரண்யமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதால், அபேத அன்வயம் சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்படவில்லையாஞல், வாக்யம்

அர்த்தபோதமுள்ளதாக ஆகாது. 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்றவாக்யம், ஸர்வவேதமும் அர்த்தமுள்ளது என்று வேதமே தெரிவிக்கின்றது. ஆகையால் வேதவாக்யம் அர்த்தமற்றது என்று தள்ளமுடியாது. அதனுல் வாக்யத்தில் அறியப்படும் விருத்தமான அம்ஸங்களைவிட்டு லக்ஷணையினுல் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். 'ஸோSயம் தேவதத்த: என்றவாக்யம், முன் ஒரு காலத்தில், ஒரு தேசத்தில் அறியப்பட்ட ஒரு புருஷனை குறிப்பிட்டு, எதிரில் இருக்கின்ற புருஷனை சுட்டிக்காட்டி, 'அவன்தான் இவன்' என்ற வாக்யப்ரோயகம் செய்கின்றபோது, லக்ஷணையினுல், வ்யக்தி மாத்ரபோதம் ஏற்படுகிறது. அதுபோல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலிருந்தும் லக்ஷணையினுல் அபேதார்த்த போதம் ஏற்படுவதாகச் சொல்லலாமே?

**சிஷ்யன் :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் த்ருஷ்ட்டாந்தமாகச்சொல்லப்பட்ட 'ஸோSயம் தேவதத்த:' என்ற வாக்யம், முன்னெரு காலத்தில் ப்ரமாணுந்தரத்திஞல் அறியப்பட்டபுருஷனையே, இந்தகாலத்தில் ப்ரத்யக்ஷமாகஇருப்பவனை, அவன்தான் இவன் என்று தெரிவிக்கின்றது. அதனுல், அந்தவாக்யப்ரயோகம்செய்கின்றபோது, வாக்யம் லக்ஷணையினுல் புருஷவ்யக்தியை மட்டும் போதிக்கின்றது என்று சொல்வது பொருந்தும். அதுபோல் மஹாவாக்யம், எந்தவஸ்துவை லக்ஷயார்த்தமாக தெரிவிக்கின்றதோ அந்தவஸ்து, ஏற்கனவே, வேறுப்ரமாணத்திஞல் அறியப்பட்டதாகவும், முக்யார்த்தத்துடன் ஸம்பந்த முள்ளதாகவும் இருந்தால்தான், சப்தமானது லக்ஷணையாக அந்தவஸ்துவை தெரிவிக்கிறது என்று சொல்லமுடியும். அவ்விதம் ஸம்பந்தமில்லை என்ருல், வாச்யார்த்தத்திலிருந்து லக்ஷயார்த்த போதம் ஏற்படுவதாகச்சொல்லமுடியாது.

**சித்தா :** சிதாத்மஸ்வரூபமானது, எப்போதும் அந்த:கரணத்துடன் கூடியதாகவே அறியப்படுகிறது. அதனுல் ப்ரமாணுந்திரத்திஞல் அறியப்படுவதாகவே சொல்லலாம். இவ்விதம், வாச்யார்த்தமாக அந்த:கரணத்துடன்சேர்ந்து அறியப்படுகின்ற சிதாத்ம ஸ்வரூபமே, லக்ஷணையினுல் (வாக்யார்த்தமாக) அபேதமாக அறியப்படுகிறது என்று சொல்லலாம். 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யம், எப்படி மாணுந்தரத்திஞல் அறியப்பட்ட தீரத்தை, தீரசப்தமானது தெரிவிக்கின்றதோ அதுபோல ஏற்கனவே அந்த : கரணத்துடன் சேர்த்து அறியப்பட்ட சிதாத்மஸ்வரூபத்தை வாக்யம் லக்ஷணையினுல் போதிக்கின்றது என்று சொல்லலாமே?

**சிஷ்யன் :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், அந்த:கரண விசிஷ்ட்டமாக இல்லாத சிதாத்மஸ்வரூபம், மாணுந்தரத்திஞல் அறியக் கூடியதாக இல்லாததால், மஹாவாக்யம் லக்ஷணையினுல் போதிக்கின்றது என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே, 'ஸோSயம் தேவதத்த:' என்றவாக்யமும், 'கங்காயாம்கோஷ:' என்ற வாக்யமும் எப்படி லக்ஷணையினுல் அர்த்தத்தை தெரிவிக்கிறதோ அதுபோல், 'தத்வமஸி' மஹாவாக்யம் அர்த்தத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது.

(இந்த ச்லோகத்திற்கு 152வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது.)

**100. அவதாரிகை :**

ஆகையால், வாக்யத்திற்கு முக்யார்த்தம் என்பதும் பொருந்தவில்லை, ப்ரமாணுந்தர கோசரமாகஇல்லாததால், லக்ஷணுவ்ருத்தியினுலும் அர்த்தம்சித்திக்கமுடியாது. அதனுல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யம் ப்ரஹ்மபோதகம் என்றுசொல்வது பொருந்தாது. அதனுல், இந்தவாக்யம் ப்ரமாணம் என்று சொல்வதும் பொருந்தாது.

**ச்லோகம் :**

तस्मादखण्डविषया न वचःप्रवृत्तिः संसर्गबोधनमपास्तमयोग्यभावात् ।
एवं न वाक्यगतशब्दसमन्वयोऽपि दूरे प्रमान्तरविरोधनिरासिद्धिः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் அகண்டார்த்தத்தை போதிக்கின்ற விஷயத்தில், இந்த வாக்யங்கள் ப்ரவர்த்திப்பதற்கு முடியாது. யோக்யதை இல்லாததால் ஸம்ஸர்க்கத்தை போதிக்க முடியாது. அதேபோல் வாக்யத்திலுள்ள சப்தங்களுக்கு ஸமன்வயமும் ஏற்படாது என்பதால், ப்ரமாணாந்தரத்தினால் ஏற்படுகின்ற விரோதத்தை பரிகாரம் செய்வதென்பது முடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் த்வைதத்தையே தெரிவிக்கின்றது என்பதால், ச்ருதிப்ரமாணத்தைக்கொண்டு, அதற்கு விருத்தமாக தெரிவிக்கின்ற ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களை அப்ரமாணம் என்று தள்ளவேண்டும். எப்படி 'ம்ருத்கடம்' என்று சொல்லப்படுகின்ற இடத்தில் ஸாமானாதிகரண்யப்ரயோகத்தைக்கொண்டு அபேதம் அறியப் படுகிறதோ அதுபோல், 'தத்வமஸி' மஹாவாக்யத்திலும் ஸாமானாதிகாண்யப்ரயோகம் இருக்கின்றதால், ச்ருதிப்ரமாணத்தைக்கொண்டு அபேதார்த்தம் அறியப்படலாமே? என்றால்,

ம்ருத்கடம்போல் வாச்யார்த்தத்தைக்கொண்டு அபேதம் சொல்லமுடியாது. மேலும், ச்ருதி ப்ரமாணத்தைக்கொண்டு எந்தஒருஅர்த்தம் போதிக்கப்படுகிறதோ அந்தவாக்யார்த்தம் ப்ரமாணம் என்று சித்திக்குமானால்தான், மற்றப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியப்படுவது அப்ரமாணம் என்றாகும். ப்ரத்யக்ஷாதிகள் அப்ரமாணம் என்றுசித்தித்தால்தான் ச்ருதி என்பது ப்ரமாணம் என்றாகும். இந்தவிதம் அன்யோன்யாச்ரய தோஷம் என்பதும் ஸம்பவிக்கின்றது.

'நீலம் உத்பலம்' என்பது போல் ஸாமானாதி கரண்யப்ரயோகம் செய்யப்படுவதால் அபேதஅன்வயம் ஏற்படுவதாகச் சொல்லலாமே? என்றால், நீலம், உத்பலம், என்ற இரண்டு பதங்களும் ஒன்றுக்கொன்று அர்த்தஅன்வயம் உடையதாக இருக்கின்றது. எது நீலமோ அதுவே உத்பலம், எது உத்பலமோ அதுவே நீலம் என்று அர்த்த அன்வயம் சொல்லமுடியும். அதுபோல், மஹாவாக்யத்தில் ஸமன்வயம் சொல்லமுடியாததால், இந்த வாக்யம் ஸமன் வயாதீன ப்ரமாண்யம் உடையது என்று சொல்வதற்கு முடியாது. மேலும், 'தத்வமஸி' என்ற வாக்யத்திற்கு, பேதார்த்தத்தைக்கொண்டோ, அல்லது அபேதார்த்தத்தைக்கொண்டோ அர்த்தம் சொல்வதற்கு முடியாது.

ஏனெனில் ச்ருதியானது பேதார்த்தத்தை தெரிவிப்பதற்காக ப்ரவர்த்திக்கவில்லை என்பதாலும், அபேதார்த்தம் என்பது பொருந்தவில்லை என்பதாலும் வாக்யம் இரண்டு விதமாகவும் அர்த்தத்தை போதிக்க முடியாது. மேலும் அந்தவாக்யத்திலுள்ள பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயிக்கின்ற முறையினாலோ, அல்லது அகண்டார்த்தத்தை, அஸம்ஸ்ருஷ்ட்டமாக போதிக்கின்றது என்றோ, வாக்யத்திலிருந்து அறியப்படும் அர்த்தத் திலிருந்து அறியப்படவில்லை.

(இந்த விஷயம் பற்றி கீழே விளக்கப்பட்டிருப்பதால் அதை இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.)

வேதமானது, தான், ப்ரமாணம் என்று சித்திப்பதற்குவேறுஎதையும் அபேக்ஷிக்கிற தில்லை என்றும், வேதம் ஸ்வதப்ரமாணம் என்றும் சொல்லப்படுவது சரியே. ஆனால், சப்தங்கள் என்பது, லோகத்தில் எந்த முறையில் அமைந்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கவேண்டுமென்ற நியதி இருக்கின்றதோ அதேமுறையில்தான், வேத சப்தங்களும் தன்அர்த்தங்களை தெரிவிக்க

வேண்டுமேயன்றி, ஸ்வதந்த்ரமாக எந்த அர்த்தத்தையும் தெரிவிக்கமுடியாது. 'ய ஏவ லௌகிக: சப்த: ஸஏவ வைதிக:' என்று சாஸ்திரமே தெரிவிக்கின்றது. ஆகவே, 'தத்வமஸி' என்ற வாக்யத்தைக்கேட்டவுடனேயே 'கௌ:அஸ்வ:' என்பதுபோல் விரோதமான அர்த்தமே அறியப்படுகிறது. அதனால் இரண்டிற்கும் ஸம்ஸர்க்கயோக்யம் என்பதே இல்லாததால், வாக்யத்திலிருந்து, அகண்டார்த்தம் சித்திப்பதாகச்சொல்லப்படுவது பொருந்தாது.

**101. அவதாரிகை :**

**பூர்வ :** வேதம் என்பது சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று சொல்லப் படுமானால் முன்னால் வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட வஸ்துவையே தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானால், வேறு ப்ரமாணாந்தரத்தை அபேக்ஷிக்கின்றதால், ஸாபேக்ஷத்வாத், வேதம் அப்ரமாணம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில், 'ஆம்னாயஸ்ய க்ரியார்த்தத்வாத் ஆனர்த்தக்யம் அததர்த்தானாம்' என்று (ஜைமினி வாக்யத்தைக்கொண்டு), க்ரியையை போதிக்கின்ற வாக்யமாக இருந்தால்தான் ப்ரமாணம் ஆகும். ஆகையால் சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யம், ப்ரமாணமென்றே சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

किं च प्रमान्तरमपेक्ष्य गिरः प्रवृत्तिः सिद्धेषु वस्तुषु जगत्युपलब्धपूर्वा ।
ब्रह्मात्मवस्तुनि तथा वचसः प्रवृत्तिर्युक्ताऽऽत्मनस्तु फलवत्परिनिष्ठितत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யமானது, (பதங்கள்) வேறு ப்ரமாணங்களை அபேக்ஷித்தே ப்ரவர்த்திக்கின்றது என்பது லோகத்தில் அறியப்பட்ட விஷயம். ஆகவே, ப்ர்ஹ்மாத்ம விஷயமென்பதும், பலம் போலவே சித்தவஸ்து விஷயமாக இருப்பதால், அந்தவிஷயத்தை தெரிவிக்கின்ற சப்தமும்ப்ரமாணாந்தரத்தை அபேக்ஷித்தே தெரிவிக்கின்றது என்று சொல்வதே பொருந்தும்.

**வ்யாக்யானம் :** 'நதி தீரத்தில் பழங்கள் இருக்கின்றது' என்றவாக்யம், வேறு ப்ரமாணத்தினால் முன்னால் அறியப்பட்ட விஷயத்தையே தெரிவிக்கின்றது. அதேபோல், சித்த வஸ்துவான ப்ரஹ்மத்தை, தெரிவிக்கின்றவாக்யமும் ப்ரமாணாந்தரஸாபேக்ஷமுடையதாக இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். ஆகவே, வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட விஷயத்தையே வேதாந்தவாக்யம் தெரிவிக்கின்றதால் அந்த வாக்யம் ப்ரமாணமென்றே சொல்லமுடியாது.

(இந்த ஆக்ஷேபத்திற்கு, 271 முதல் 278 வது ஸ்லோகம் முடிய பதில் சொல்லப் படுகிறது.)

**102. அவதாரிகை :**

**சித்தா :** சப்தமானது சித்த வஸ்துவை போதிக்கின்றது என்பதற்காகவே அந்த வஸ்து வேறு ப்ரமாணத்தை அபேக்ஷிக்கிறது என்று சொல்வதற்கு முடியாது. சித்த வஸ்துவாக இருந்தாலும் பௌருஷேயமாகஇருந்தால்தான், வேறுப்ரமாணத்தை அபேக்ஷித்தே தெரிவிக் கின்றது என்று சொல்லலாம். 'சித்த வஸ்து' என்பதற்காகவே, மானாந்தர அபேக்ஷை இருக்கிறது என்று சொல்வதற்கு முடியாது.

**பூர்வ :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், சித்த வஸ்துவை போதிக்கின்ற வாக்யங்கள் எல்லாமே ப்ரமாணாந்தரத்தை அபேக்ஷிக்கிறது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

नद्यास्तीरे फलमितिगिरः सिद्धवस्तुप्रवृत्तेर्दृष्टा स्वार्थप्रमितिजनने स्वान्यमानव्यपेक्षा ।
तद्वद्ब्रह्मण्यपि तु वचसो वैदिकस्याभ्युपेया तस्मादस्मिन्न खलु घटते मानभावः श्रुतीनाम् ॥

**ச்லோகார்த்தம் :** 'நதி தீரத்தில் பழங்கள் இருக்கிறது' என்ற வாக்யமானது, சித்தமான வஸ்துவை தெரிவிப்பதாலேயே, தன்னுடைய அர்த்தத்தை தெரிவிப்பதில் ப்ரமாணாந்தரத்தை அபேக்ஷிக்கின்றது. அதேபோல் சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்ற வேதாந்த வாக்யங்களுக்கும் ப்ரமாணாந்தர் ஸாபேக்ஷத்வம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும். ஆகையால் இந்த விஷயத்தில் ச்ருதி வாக்யத்திற்கு ப்ரமாணம் சொல்ல முடியாது.

**வ்யாக்யானம் :** 'நதிக்கரையில் பழங்கள் இருக்கின்றது' என்ற வாக்யமானது எப்படி சித்தவஸ்துவை தெரிவிக்கின்றதோ அதுபோல் ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற வாக்யமும் சித்த வஸ்து போதகமாக இருக்கின்றதால் சித்தார்த்த போதகம் என்பதில் இரண்டிற்கும் வேறுபாடு இல்லாததால் ப்ரமாண ஸாபேக்ஷத்வம் இரண்டிற்கும் ஸமம் என்றே சொல்லவேண்டும்.

**103. அவதாரிகை :**

வேதாந்தத்திலிருக்கின்ற மஹாவாக்யங்கள், அகண்டார்த்தத்தை போதிப்பதாகவே சொல்லமுடியாது. ஏனெனில், அந்த வாக்யத்தினால் போதிக்கப்படும் விஷயம் வேறு எந்த ப்ரமாணத்தினாலும் அறியக்கூடியதாக இல்லை. அதனால் லக்ஷணையாகவும் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கமுடியாதுஎன்று, முன்னால்ஆக்ஷேபிக்கப்பட்டது. அது மட்டுமல்ல, அகண்டார்த்தம் என்று சொல்லக்கூடிய வஸ்து என்பது எதுவுமே இருக்க முடியாது என்று இப்போது ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नाखण्डवस्तुविषया वचसः प्रवृत्तिर्लोकेऽपि दृष्टिपथमापतिता कदाचित् ।
नानापदार्थघटनाविषयत्वहेतोर्दूरेत्यता श्रुतिशिरोवचनेषु तस्याः ॥

**ச்லோகார்த்தம் :** அகண்டமான ஒரு வஸ்துவை போதிக்கின்ற விஷயத்தில் பதங்கள் (வாக்யம்) ப்ரவ்ருத்திக்கின்றது என்பதாக லோகத்தில் ஒரு போதும் அறியப் படவில்லை. அனேகபதார்த்தங்களின் ஸம்பந்தத்தை விஷயமாகக்கொண்டிருக்கின்ற வாக்யங்களுக்கு அகண்டார்த்தம் என்பது எந்த விதத்திலும் ஸம்பவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் ஏதாவது ஒன்று கல்பிக்கப்படவேண்டுமானால், அறியப்பட்ட விஷயங்களுக்கு விரோதம் இல்லாதமுறையில் கல்பிக்கப்படவேண்டும் லோகத்தில் எந்த வாக்யமும் அகண்டார்த்தத்தை போதிப்பதாக அறியப்படவில்லை. ஸோऽயம் தேவதத்த:என்ற வாக்யமும் அகண்டார்த்தத்தை போதிப்பதாகச்சொல்ல முடியாது. ஏனெனில், வாக்யம்என்பது அனேக பதங்களின் ஸம்பந்தத்தையே தெரிவிக்கின்றது.

யஜேத ஸ்வர்க்க காம: என்ற வாக்யமானது, யாகாதி க்ரியையை ஸ்வர்க்க ஸாதனமாக தெரிவிக்கின்றது. ஆனால் க்ரியை என்பது ஆச்சாதம் (ஆஸுஹாவிநாசி) என்பதால் பலனை அடையும் பர்யந்தம் அந்தக்ரியை இல்லாததால், க்ரியை முடிந்ததும் பலன் ஏற்படுவதற்கு மத்தியில் 'அபூர்வம்' என்பதை ப்ராபாகாரர் என்ற குருமதஸ்த்தர்களால் கல்பிக்கப்படுகிறது. இந்த விதம் வேதவாக்யங்களில் அபிதையினால் அறியப்படாத அர்த்தத்தை வேறுஎந்தப்ரமாணத்திற்கும் விரோதம்இல்லாதமுறையில் கல்பிக்கப்படலாம். ஆனால், அதுபோல் தத்வமஸி என்ற மஹாவாக்யமானது, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு

விரோதமில்லாத முறையில், அகண்டார்த்தத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. 'ஸோऽயம் தேவதத்த:' என்ற வாக்யமும் அந்தக்காலம், அந்த தேசம் இந்தக்காலம் இந்த தேசம் என்பவைகளை விட்டு விட்டு வ்யக்திமாத்ரபோதகமாக ஆகிறது என்று சொல்லப்படுகிறது. என்பது சரியே. ஆனாலும், வ்யக்தியென்பது கண்ணினால் தான் அறியப்படுகிறது. ஆகையால் சக்ஷுஸ் என்ற வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்டதைத்தான் சப்தம் தெரிவிக்கின்றதால் அந்தவாக்யம் ப்ரமாணமென்று சொல்லமுடியாது. அந்தவாக்யம் அகண்டார்த்தத்தை போதிப்பதாகவும் சொல்ல முடியாது. இந்த விதம் லோகத்தில் வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட விஷயத்திலேயே அகண்டார்த்தம் ஸம்பவிக்கவில்லையென்றால், வேறு எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாத ப்ரஹ்மாத்ம வஸ்துவை அகண்டார்த்தமாக மஹாவாக்யம் போதிக்கிறது என்று சொல்வதற்கு முடியாது. மேலும் வாக்யம் என்பது பதங்களின் அர்த்தத்தின் ஸம்ஸர்க்கத்தையே தெரிவிக்கின்றதால் அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தத்தை போதிப்பதாகச் சொல்வதற்கும் முடியாது.

**104. அவதாரிகை :**

லோகத்தில், ஒரு வாக்யமானது சக்தியினால் தன் அர்த்தத்தை தெரிவிக்கின்ற போதும் அந்தவாக்யத்திலுள்ள பல பதங்களின் ஸம்பந்தத்தை தெரிவிக்கின்ற போதும் வாக்யார்த்தமானது, ஸம்ஸர்க்கரூபமாகவே அறியப்படுகிறது என்ற நியமம் இருந்த போதிலும், அந்த வாக்யத்திலிருந்து லக்ஷணையினால் அர்த்தம் போதிக்கப்படுகின்ற போது இந்த நியமம் இடையாது. ஒரு வாக்யத்தில் அனேக பதங்கள் இருந்தபோதிலும் அதன் ஸம்ஸர்க்கம் விசாரிக்கப்படாமலேயே, அகண்டார்த்தம் எதுவோ அதையே இந்த வாக்யம் தெரிவிக்கின்ற தென்று பூர்வமீமாம்ஸையிலேயே சொல்லப்படுகிறது. அதுபோல் மஹாவாக்யங்கள் லக்ஷணையினால் அகண்டார்த்தத்தை போதிக்கின்றதாக சொல்லலாமே? என்றால் அவ்விதம் ஒத்துக்கொள்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

आदाय मुख्यगुणलाक्षणिकप्रवृत्तीरर्थं समर्पयति शब्द इति प्रसिद्धम् ।
आस्वेष नान्यतमयाऽपि वदत्यखण्डं शब्दान्तरात्तविषयादधिकार्थवृत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தம் என்பது சக்தி வ்ருத்தி குணவ்ருத்தி லக்ஷணாவ்ருத்தி என்ற மூன்று விதமாகவும் தன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்பது லோகப்ரஸித்தம் ஆனால் ஒரு சப்தமானது மற்றொரு சப்தத்தினால் அறியப்படும் அர்த்தத்திற்கு வேறுபட்டதான அர்த்தத்தை தெரிவிக்குமானால், இந்த மூன்றில் எந்த ஒரு வ்ருத்தியினாலும் அகண்டார்த்தம் போதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** சப்தம் என்பது அபிதையினாலும் (சக்தி வ்ருத்தியினாலும்) குணவ்ருத்தியினாலும், லக்ஷணாவ்ருத்தியினாலும் தன் அர்த்தத்தை போதிக்கின்றது என்பதால் முக்யவ்ருத்தியினால் வாக்யத்திலிருந்து ஸம்ஸர்க்கமான அர்த்தம் போதிக்கப் படுகிறது என்றாலும், குணவ்ருத்தியினாலோ லக்ஷணையினாலோ, அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லலாமே? பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்திலும், அர்த்தவாத வாக்யங்கள் அனேக பக்கங்களில் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அவையெல்லாம் சேர்ந்து சொல்லப்பட்ட கர்மா (வாயுரபேதமாலா) மிகச்சிறந்தது என்ற ஒரே அர்த்தத்தை அதாவது, 'ப்ராஸஸ்யம்' என்ற ஒரே அர்த்தத்தைத்தான், லக்ஷணையாக தெரிவிப்பதாகச் சொல்லப்படுகிறது. அதுபோல் மஹாவாக்யமும் லக்ஷணையினால் அகண்டார்த்தத்தை போதிப்பதாகச்சொல்லலாமே? என்றால்,

அவ்விதம் ஒத்துக்கொள்ளமுடியாது. சப்தமானது முக்யார்த்தத்தை தெரிவிக்கிறது என்பது தான் லோகப்ரஸித்தமாக இருக்கிறது. மேலும் ஒருவாக்யம் என்பதில் இருக்கின்ற பலபதங்கள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு அர்த்தத்தைபோதிப்பதாகத்தான் இருக்கவேண்டும். அதாவது, ஒரு பதம் எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதைவிட்டு மற்றொரு பதம் வேறு அர்த்தத்தை தெரிவிக்கின்றதாகச்சொன்னால்தான் வாக்யம் அர்த்தபோதகமாக ஆகும். அவ்விதம் சொல்லப்படாமல் ஒருபதம் எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதே அர்த்தத்தைத் தான் மற்ற பதமும் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானால் அதை (கடம் கலசம் என்பது போல்) பர்யாயபதம் என்றே சொல்லவேண்டும். அகண்டார்த்தத்தை போதிப்பதாகச்சொல்லமுடியாது. (இந்த ச்லோகத்திற்கு பதில் 161வது ச்லோகத்தில் சொல்லப்படுகிறது). சக்தி வ்ருத்தி குணவ்ருத்தி லக்ஷணாவ்ருத்தி என்பவைகளைப் பற்றி மேலே உதாகரணத்தின் மூலம் விளக்கப்போகின்றதால் இங்கு விஸ்தரிக்கப்படவில்லை.

**105. அவதாரிகை :**

அனேக பதங்கள் சேர்ந்து ஒரே வஸ்துவை போதிக்கின்றது என்பதற்காக, அதை புனருக்திதோஷமென்று பாதிக்கமுடியாது. ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பேதம் இருப்பதால் பர்யாயபதம் என்றும் சொல்லமுடியாது என்று சொல்லப்படுமானால், அதுவும் சரியல்ல.

**ச்லோகம் :**

आधिक्यमुत्सृजति शब्दगणो निजेर्थे शब्दान्तरात्तविषयादिति मन्यमानाः ।
वाक्यत्वमेव पदजातगतं विहन्युर्न ह्यस्ति हस्तकरशब्दगतं तदेषाम् ॥

**ச்லோகார்த்தம் :** ஒருவாக்யத்திலுள்ள, ஒருபதமானது எந்தஅர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அந்தஅர்த்தத்தைத்தவிரவேறு அர்த்தத்தை மற்றொருபதம் தெரிவிக்காது என்று சொல்பவர்கள், அந்தபதங்களுடைய வாக்யத்வத்தையே நிராகரிக்கின்றார்கள். ஹஸ்த:, கர:, என்று வாக்ய ப்ரயோகம் இருக்குமானால், அதை வாக்யமென்றே சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** சப்த கூட்டங்களில் (வாக்யங்களில்) இருக்கின்றபதங்களில் ஒவ்வொன்றும் வெவ்வேறு அர்த்தங்களை தெரிவிக்கவேண்டும். அவ்விதமின்றி அந்த வாக்யத்திலுள்ள ஒருபதம் என்னஅர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதே அர்த்தத்தையே மற்ற பதங்களும் தெரிவிக்கின்றது என்றும் அதைத்தவிர அதிகமான அர்த்தத்தை தெரிவிக்கவில்லை என்றும் சொல்லப்படுமானால் அப்பேர்ப்பட்ட பதங்களைச் சேர்க்கப்படுமானால் வாக்யமென்றே சொல்லமுடியாது ப்ரவ்ருத்தி நிமித்த பேதத்தைக்கொண்டு எல்லா பதங்களும் சேர்ந்து ஒரே அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்லலாமே? என்றால் அவ்விதம் சொல்வதற்கும் முடியாது. ஏனெனில், ஹஸ்தம் கரம் என்றும் கௌ: தேனு: என்றும், வாக்யத்தில் பல பதங்கள் இருந்தபோதிலும் எல்லாம் ஒரே அர்த்தத்தை தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால் ஒரு பதமே போறும், மற்றொரு பதம் அவஸ்யமில்லை என்றாகும். மேலும் கௌ: என்ற பதம் கோத்வஜாதியுடையது என்று குறிப்பிடுகிறது என்றும், தேனு: என்ற பதம் திநோதீதி தேனு: என்று த்ருப்தியை உண்டுபண்ணுவது தேனு:என்று, பதங்கள் இரண்டும் வெவ்வேறு ப்ரவ்ருத்தி நிமித்தத்தைக் கொண்டு சொல்லப்படுகிறது என்று சொல்லப்படுமானால் அதை வாக்யமென்றே சொல்ல முடியாது. ஆகவே, ஹஸ்த:, கர: என்பதுபோல் பர்யாயபதம் இல்லையென்றும் , கௌ:தேனு: என்பதில் ப்ரவர்த்திநிமித்தபேதம் இருக்கிறதென்றும் சொல்லப்பட்ட போதிலும் ஒருபதம் எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதைக்காட்டிலும் வேறு அதிகமான அர்த்தத்தை மற்ற பதம் தெரிவிக்கவில்லையென்றால் அதை வாக்யமென்றே

சொல்லமுடியாது. வாக்யம் என்றாலே அதிலுள்ளபதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயம் ஏற்படக்கூடிய யோக்யமுள்ளதாக இருக்கவேண்டும் எல்லாபதங்களுக்கும் ஒரே அர்த்தம் தான் என்றால், அந்த பதங்கள் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமுடையதாகவே ஆகாது. அதனால் அதை வாக்யமென்றே சொல்லமுடியாது.

இந்த விஷயத்தில் இரண்டுவிதமான வாதங்கள் இருக்கின்றது. அதாவது அன்விதாபிதானவாதம் என்றும் அபிஹிதான்வயவாதம் என்றும் இரண்டுவிதம் சொல்லப்படுகிறது. இதில் வாக்யத்திலுள்ளபதங்கள் அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்ற போதே, பரஸ்பரம் அன்வயித்து அன்விதமாகவே அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்றும் அதன் பிறகே பதார்த்தம் அறியப்படுகிறது என்று சொல்லப்படுகிறது இதற்கு அன்விதாபிதானவாதம் என்று பெயர்.

தனித்தனியே பதங்களின் அர்த்தம் அறியப்பட்ட பிறகே ஆகாங்க்ஷை ஸன்னிதியோக்யதை இவைகளால் அன்வயம் ஏற்படும் என்று சொல்கிறார்கள். அதாவது தனித்தனியே பதார்த்தம் அறியப்பட்டால் தான் ஸம்ஸர்க்கம் என்ன என்று ஆகாங்க்ஷை ஏற்படும் என்று சொல்லப்படுகிறது. இதுவே அபிஹிதஅன்வயவாதம் என்று சொல்லப்படுகிறது.

**106. அவதாரிகை :**

'தத்வமஸ்யாதி' வாக்யங்களில் ப்ரவ்ருத்தி நிமித்தபேதம் இருப்பதாகவே ஒப்புக் கொள்ளப்பட்டபோதிலும், ப்ரஹ்மமென்பது அப்ரமேயம் என்றும், எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமல்ல என்றும் சொல்லப்படுவதால் ப்ரவ்ருத்திநிமித்தபேதத்தைக்கொண்டு சப்தம் போதிக்கிறதென்று எப்படிச்சொல்வது?

**ச்லோகம் :**

किं च स्वयंप्रभमलुप्तचिदेकरूपं सर्वप्रमाणविषयाद्बहिरभ्युपेत्य ।
आत्मानमात्मनि च शास्त्रमुदाहरन्तः सिद्धान्तमभ्युपगतं परिपीडयन्ति ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்வயம் ப்ரகாசமாக நித்யசைதன்யஸ்வரூபமான ப்ரத்யகாத்மா என்பது ஸர்வ ப்ரமாணங்களுக்கும் அவிஷயம் என்று அங்கீகரித்த பிறகு, இந்த ஆத்ம விஷயத்தில் சாஸ்திரத்தை ப்ரமாணம் என்று சொல்வார்களானால் ஸ்வசித்தாந்தத்திற்கே ஹானி செய்கின்றவர்களாக ஆகிறார்கள்.

**வ்யாக்யானம் :** 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்ற ச்ருதி வாக்யமானது ஆத்மா, எந்தப்ரமாணத்தினாலும் அறியக்கூடியதுஅல்லவென்றும் அப்ரமேயம், த்ருவம், என்றும் தெரிவிக்கின்றது. அதனால் வாக்யம் ப்ரவ்ருத்தி நிமித்த பேதத்தைக் கொண்டும் ஆத்மாவை போதிக்கின்றதாகச்சொல்லமுடியாது.

கீழே, பலகாரணங்களைக்கொண்டு வாக்யம் அகண்டார்த்த போதத்தை உண்டு பண்ணமுடியாது என்று ஆக்ஷேபிக்கப்பட்டது. இப்போது வாக்யம் ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று சொல்வதாலேயே, சித்தாந்தஹானி ஏற்படும் என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

நித்ய ஞானஸ்வரூபமானதும், ஸ்வயம்ப்ரகாசமானதுமான ஆத்மசைதன்யம் என்பது, நேதி நேதி என்ற வாக்யத்தினாலும் ஏதத் 'அப்ரமயம்த்ருவம்' என்பது முதலான வாக்யங்களால் ப்ரஹ்மத்திற்கு சப்தவாச்யத்வமே கிடையாது என்றும் தெரிவிக்கின்றது. ஆகவே, எந்தப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாத ஆத்மஸ்வரூபம் 'மஹாவாக்யங்கள்' என்ற சப்தப்ரமாணத்திற்குமட்டும் விஷயமாகிறது என்று எப்படிச்சொல்வது? ப்ரமாணத்திற்கு விஷயமாகிறது என்று சொல்லப்படுமானால் 'அப்ரமயம்த்ருவம்' என்று எப்படிச்சொல்வது?

ஆகவே சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தைக்கொண்டு வஸ்துவை நிச்சயம் செய்கின்ற நீங்களே முன்னுக்குப்பின் முரணுகப் பேசுவது எப்படி? ஆகவே எந்த விதத்திலும் வாக்யமானது ப்ரஹ்மத்தை தெரிவிப்பதில் ப்ரமாணமாகிறது என்று சொல்வதை ஒப்புக்கொள்ளமுடியாது.

(இந்த ச்லோகத்திற்கு 245வது ஸ்லோகத்தில்) பதில் சொல்லப்படுகிறது.

**107. அவதாரிகை :**

மேலும், சைதன்யஸ்வரூபமானப்ரத்யகாத்மா ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபமாக இருக்கின்றதால் அதை வாக்யம் அறிவிக்கின்றது என்று சொல்வது சரியல்ல. அதாவது சப்தம் என்ற ப்ரமாணத்தின் பலமாக ப்ரத்யகாத்மாவை வாக்யமானது அனதிகதார்த்தமாக போதிக்கின்றது என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

सर्वत्र वस्तुषु जडेष्वजडप्रकाशं कुर्वत्प्रमाणमिति संप्रतिपन्नमेतत् ।
ब्रह्मात्मवस्त्वजडबोधवपुः कुतोऽस्मिन् वेदान्तवाक्यजनिताऽजडसंविदन्या ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வஜடவஸ்துக்களுக்கும், அஜடமானப்ரகாசத்தைக் கொடுப்பது எதுவோ, அதுவேப்ரமாணமென்று ஒத்துக்கொள்ளப்படுகிறது. அஜட சைதன்யஸ்வரூபமாக, நித்யஸ்வப்ரகாசஸ்வரூபமான ப்ரஹ்மாத்மவஸ்துவானது. வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணபலமாக ஆகிறது என்பதை எப்படி ஒத்துக்கொள்ள முடியும்? ஸர்வஜடத்திற்கும் ப்ரகாசத்தைக் கொடுக்கின்ற ஆத்மஸ்வரூபம் மற்றொரு ப்ரகாசத்தை எப்படி ஆபேக்ஷிக்கமுடியும்?

**வ்யாக்யானம் :** லோகத்திலுள்ள, ஸர்வஜடவஸ்துக்களுக்கு, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களைக் கொண்டும் சைதன்ய அபேக்ஷயினுலும் ஏற்கனவே அதில் இல்லாத ப்ரகாசம் ஏற்படுகிறது என்று சொல்லலாம். ஆனல் ஞானஸ்வரூபமாக ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கின்ற அஜடஸ்வரூபமான ப்ரஹ்மமானது வேறு ஒருப்ரமாணத்தினுல் அஜடஸ்வரூபமான ஸம்வித்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்? ஒருதீபம் மற்றொரு தீபத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச்சொல்வதுபோலாகும். ஜடவஸ்துக்களுக்கு எப்படி பலவ்யாப்யத்வம் (சைதன்யவ்யாப்யத்வம்) சொல்லப்படுகிறதோ அதுபோல் ப்ரத்யகாத்மாவிற்கும் பலவ்யாப்யத்வம் சொல்லப்படுமாஞல் ப்ரத்யகாத்மாவும் ஜடமென்றே சொல்லநேரிடும் ஆகையால் ப்ரஹ்மமென்பது அஜடமென்று சொல்லப்படுமாஞல்வாக்யஜன்ய ஞானத்திற்கு விஷயமாகிறது என்று சொல்லமுடியாது. வாக்யஜன்யஞானத்திற்கு விஷயமாகிறது என்று சொல்லப்படுமாஞல் ப்ரஹ்மம் அஜடம் என்று சொல்லமுடியாது. ஆகவே ப்ரஹ்மமென்பது அப்ரமேயம் என்ருல் வேதாந்தவாக்யஜன்யம் என்று சொல்லமுடியாது. ப்ரமாணம் என்ற க்ரியைக்கு விஷயமாகஇல்லாததால்தான் அப்ரமயம் என்று ச்ருதி தெரிவிக்கின்றது ஆகவே வாக்யம் ப்ரஹ்மத்தை தெரிவிக்கிறதென்ருல் ஸ்வசித்தாந்த ஹானி ஏற்படும். வேறு அன்யமான ஒன்றினுல் ப்ரகாசிக்கிறதென்று சொல்லப்படுமாஞல் சூர்யன் ஸ்வயமே ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றபோது தீபாதிகளைக் கொண்டு ப்ரகாசப்படுத்துவதாக சொல்வது போலாகும்.

**108. அவதாரிகை :**

ப்ரமேயமான ப்ரஹ்மஸ்வரூபத்தின் தன்மையைக்கொண்டு விசாரிக்கின்ற போதும் ப்ரஹ்மத்தை வாக்யம் என்ற சப்தப்ரமாணம் அறிவிக்கின்றது என்று சொல்லமுடியாது என்பதை கீழே சொல்லப்பட்டது. இப்போது ப்ரமாணம் என்று சொல்லப்படும் வாக்யத்தின்

தன்மையை விசாரிக்கின்ற போதும் வாக்யம் ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் ப்ரமாணமாக ஆகமுடியாது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

किंच क्रिया पदमपेक्ष्य पदानि वाक्यभावेन सम्यगिह सङ्गतिमाप्नुवन्ति ।
नात्र क्रियापदमपेक्षितमामनन्ति वाक्यं कुतो भवति वेदशिरस्तदानीम् ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் க்ரியாபதங்களை அபேக்ஷித்தே பதங்கள் வாக்யரூபத்தில் ஸம்பந்தத்தை அடைகிறது. உபநிஷத் வாக்யங்களிலுள்ள பதங்களானது, வாக்யத்வம் என்ற தன்மையை அடைவதற்கு அபேக்ஷிதமான க்ரியாபதஸம்பந்தமுடையதாகஇல்லை. இவ்வித மிருக்கின்றபோது உபநிஷத்திலுள்ளபதங்களின்ஸமூகத்தைவாக்யமென்று எப்படிச் சொல்வது?

**வ்யாக்யானம் :** ஒரு வாக்யம் என்றால், அதில் உள்ள பதங்கள் ஒன்றுக்கொன்று குணப்ரதானபாவேன (அங்க அங்கிபாவம்) அன்வயிக்க வேண்டுமானால் அங்கியான க்ரியாபதம் ப்ரதானமாக இருக்கவேண்டும். இவ்விதம் ஒன்றுக்கொன்று ஸம்பந்தத்தை அடைந்தால்தான், வாக்யம்அதன்அர்த்தத்தை தெரிவிக்கமுடியும். ஆகவே உபநிஷத்திலுள்ள மஹாவாக்யங்களில் க்ரியாபதமே இல்லாததால் அவைகளை வாக்யமென்றே சொல்லமுடியாது. அனேககாரகங்களால் உண்டுபண்ணப்படுகின்றக்ரியைதான் வாக்யத்திற்கு அர்த்தம் என்று "பாவனைவசவாக்யார்த்தஸ்வகாரக விசேஷிதா" என்று பூ–மீமாம்ஸகர்களால் சொல்லப் படுகிறது. "ஆம்னாயஸ்யக்ரியார்த்தத்வாத் ஆனர்த்தக்யம் அததர்த்தானாம்." என்று சொல்லப் படுகிறது. ஆகவே வேதாந்தவாக்யங்கள் சித்தவஸ்துவை போதிக்கின்றதால் வஸ்து நிஷ்ட்டமாகவே இருக்கின்றது. வாக்யம் க்ரியாநிஷ்ட்டமாகஇல்லையென்பதால் க்ரியாபதமின்றி நாமபதங்கள் ஒன்றுடன் ஒன்று அன்வயிக்க முடியாது. 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள 'அஸி' பதம், 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்பதிலுள்ள 'அஸ்மி' பதம் 'அயமாத்மாப்ரஹ்ம' என்பதிலுள்ள 'அஸ்தி' பதம் என்பதெல்லாம் க்ரியா பதமாகத்தானே? இருக்கிறது என்றால், அப்பேர்ப்பட்ட க்ரியாபதங்கள் க்ரியையை போதிக்கவில்லை என்பதை மேலே விசாரிக்கப்படுவதால், இங்கு விஸ்தரிக்கவில்லை ஆகவே, வேதாந்தவாக்யம் ப்ரமாணமாகவே ஆகாது. அதை வாக்யமென்றே சொல்லமுடியாது. இந்த விஷயத்திற்கு 280வது ச்லோகம் முதல் 282வது ச்லோகம் வரையில் பதில் சொல்லப்படுகிறது.

**109. அவதாரிகை :**

மேலும், பதங்கள் என்பது ஒவ்வொன்றும் அதனுடைய அர்த்தம் என்னவென்பதை தெரிவிக்குமேயன்றி, பதஸமூகம் ஒன்றுடன் ஒன்று விசிஷ்ட்டமாக அன்வயித்து அதன் அர்த்தத்தைதெரிவிக்கமுடியாது. ஏனெனில், பதங்கள் என்பது ஸ்ம்ருதியைத்தான் ஏற்படுத்துமேயன்றி, ஒன்றுடன்ஒன்று அன்வயித்து அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்ல முடியாது.

**ச்லோகம் :**

नापूर्वमर्थमुपलम्भयितुं पदानां सामर्थ्यमस्ति परिहृत्य तु वाक्यभावम् ।
स्वार्थस्मृतिं हि जनयन्ति पदानि लोके विज्ञातसंगतितया न तु कार्यमन्यत् ॥

**ச்லோகார்த்தம் :** பதங்களானது வாக்யபாவத்தை அடையாமல், அபூர்வமான அர்த்தத்தை போதிக்கமுடியாது. பதம் பதார்த்தம் என்ற இரண்டினுடைய ஸம்பந்தம் அறியப்படுவதால், பதங்களானது பதார்த்த ஸ்ம்ருதியை ஏற்படுத்துகின்றது. அதனால் அந்த பதங்களுக்கு வேறு எந்த ப்ரவ்ருத்தியும் கிடையாது.

**வ்யாக்யானம் :** க்ரியாபதம் இல்லாத, நாமபதஸமூகமானது ஆகாங்க்ஷை, ஸன்னிதியோக்யதை, என்பது இல்லாமல் இருப்பதால் அவைகளில் வாக்யத்வம் என்பதே இருக்கமுடியாது. ஆகையால் பதஸம்ஸர்க்கத்திஞல் ஏற்படும் அபூர்வார்த்தம் பதஸமூகத்திஞல் கிடைக்காது. கர்மகாண்டத்தில் 'பூஷாப்ரவிஷ்ட்ட பாக:' என்று ஒரு வாக்யம் சொல்லப்படுகிறது. இந்தவாக்யத்தில் க்ரியாபதம் இல்லை. ஆஞலும் க்ரியாபதத்தைச்சேர்த்து இந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படுகிறது. அதாவது ஆதித்யன், மாவிஞலான பக்ஷணத்தையே தனக்கு (ஹவிஸ்ஸாக) ஹோமத்ரவ்யமாகக் கொண்டிருப்பவன் என்று அர்த்தம் செய்யப்படுகிறது. ஆகவே நாமபதங்களே அகண்டார்த்தத்தை போதிப்பதாகச்சொல்லமுடியாது. பதங்கள் ஒன்றுடன்ஒன்று ஸம்பந்தப்பட்டு அபூர்வமான அர்த்தத்தை தெரிவிக்கவேண்டுமாஞல், க்ரியாபதம் அவஸ்யம் இருக்கவேண்டும். இவ்விதம் இருந்தால்தான் அதை வாக்யமென்றே சொல்லமுடியும்.

**110. அவதாரிகை :**

பதங்கள் எல்லாம், அந்தந்த பதங்களின் அர்த்தம் எதுவோ அதைமட்டும் ஞாபகப்படுத்துகின்ற தன்மையுடையது என்று சொல்லப்பட்டபோதிலும் அவ்விதம் ஸ்மரிக்கப்பட்டபதார்த்தங்கள், ஒன்றுக்கொன்று அன்வயித்து அதன்அர்த்தத்தை போதிக்கலாமே? என்ருல், வர்ணங்கள் (அக்ஷரம்) எல்லாம், ஒவ்வொன்றும் விபு என்றும், நித்யம் என்றும் பாட்டர்களாலும், வையாகரணர்களாலும் சொல்லப்படுகிறது. இதில், பதங்கள் ஒன்றுடன் ஒன்று ஸம்பந்தப்பட்டு அர்த்தத்தை போதிக்கவில்லை என்ருலும், பதத்திஞல் ஏற்கனவே அறியப்பட்ட அர்த்தங்கள் ஒன்றுடன் ஒன்று ஸம்பந்தப்பட்டு அர்த்த போதம் ஆகிறது என்று, பாட்டர்களால் சொல்லப்படுகிறது. இதில் வையா கரணர்களின்அபிப்ருயம் என்னவென்ருல், சப்தத்தைக்கேட்டவுடன் அர்த்தபோதம் ஏற்படுவதில்லை என்றும் பதத்தைக்கேட்டபிறகு ஏற்படும் ஞானத்திஞல் தான் அர்த்த போதம் ஏற்படுகிறதென்றும் சொல்கிருர்கள். இதையே ஸ்போட வாதமென்று சொல்லப்படுகிறது. (இதில் வர்ணஸ்போடம் பதஸ்போடம் வாக்யஸ்போடம் என்று மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது). உதாரணமாக தேவதத்தன் என்ற பதத்திலுள்ள 'தே' என்ற அக்ஷரத்தைக் கேட்டவுடன் புத்தியில் ஒரு ஸம்ஸ்க்காரம் ஏற்படுகிறது என்றும் அதேபோல் அதிலுள்ளஎல்லாபதங்களின் ஸம்ஸ்க்காரம் ஏற்பட்டபிறகே விசிஷ்ட்டமான தேவதத்தன் என்ற பதம்புத்தியில் ஏற்படுவதால் அதுவே அர்த்தபோதமாவதற்கு காரணமேயன்றி, சப்தராசிகள் அர்த்தபோதகமில்லை என்று சொல்கிருர்கள்.

**ச்லோகம் :**

हित्वा न वाक्यपदते प्रतिपत्तिहेतुर्वेदो भवेदिति कथञ्चन वक्तुमीशः ।
कश्चित्कदाचिदपि तत्र कुतः श्रुतीनां प्रामाण्यमात्मनि भवेदिति वर्णयन्ति ॥

**ச்லோகார்த்தம் :** ஈச்வரஞக இருந்தபோதிலும், வாக்யம், பதம், என்ற தன்மை இல்லாமல், வேறு எந்த விதத்திலும் வேதமானது அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று ஒருபோதும் சொல்லமுடியாது. இவ்விதம் இருக்கின்றதால் ஆத்மவிஷயத்தில் வேதங்களுக்கு எப்படி ப்ராமாண்யம் சொல்லமுடியும்?

**வ்யாக்யானம் :** வாக்யம் என்றால், அதில் வாக்யத்வமோ, பதத்வமோ இல்லாமல், வாக்யார்த்தபோதம் ஏற்படுவதாகச்சொல்லமுடியாது. ஏனெனில், வர்ணத்தினால் மட்டும் அர்த்தபோதமாகிறது என்று சொல்லப்படுமானால், 'ராஜா' என்ற பதத்திலும், 'ஜாரா' என்றபதத்திலும் ஒரேவிதமான அக்ஷரங்கள் இருப்பதால், இரண்டிற்கும் ஒரே அர்த்தம்தான் அறியப்படவேண்டும். அப்படிஇன்றி வெவ்வேறான அர்த்தத்தை தெரிவிக்கின்றதால் வர்ணத்தினால் மட்டும் அர்த்தபோதம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. வர்ணம் என்பது நித்யமாகவும் விபுவாகவும் இருந்தாலும்கூடபுத்தியில் ஏற்படும் ஸம்ஸ்க்காரத்தினால் (ஆனுபூர்வி) க்ரமம் என்பது கல்ப்பிக்கப்படுகிறது. அதனால் பதம் என்பதும் வாக்யம் என்பதும் ஸம்பவிக்கலாம். ஆகவே சப்தம்தான் அர்த்தபோதகம் என்று சொல்ல வேண்டுமேயன்றி வர்ணத்தினால் அர்த்த போதகம் என்று சொல்லப் படுவது சரியல்ல. அவ்விதம் வர்ணம்தான் அர்த்த போதத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லப்படுமானால் சப்தம் அப்ரமாணம் என்று சொல்லநேரிடும்.

**111. அவதாரிகை :**

**பூர்வ :** இந்தவிதம் வாக்யமானது ப்ரஹ்ம போதகமில்லை என்று சொல்லப்பட்டதற்காக, ப்ரஹ்மமென்பது, வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்டதுதான் என்றும், அதையே வேதாந்தம் அனுவாதம் செய்கிறது என்றும் சொல்லப்படுமானால், வேதாந்த வாக்யம் அப்ரமாண மென்றாகும். அதற்காக, அனுவாதமில்லையென்றும், வாக்யத்திலிருந்தே ப்ரஹ்மதத்வம் போதிக்கப்படுவதாகச்சொல்லப்படுமானால், 'சத், சித் ஆனந்தம்' (ப்ரஹ்ம) என்ற பதங்களுக்கு சக்திக்ரஹம் என்பதே ஏற்படாது. அந்த பதங்களிலிருந்தே சக்திக்ரஹம் ஏற்படுவதாகச்சொல்லப்படுமானால், அது மானாந்தரத்தினால் அறியப்பட்டது என்றே சொல்லநேரிடும். அதனால், வாக்யம் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது. இந்தவிதம், எந்த முறையில் சொல்லப்பட்டாலும் தோஷம் ஸம்பவிக்கின்றது என்பதால், இரண்டு பக்கமும் பாசக்கயிறுபோல் ஆகிறது.

**ச்லோகம் :**

किं च प्रमान्तरमिहाभ्युपयन्प्रतीचि वेदान्तवाक्यमनुवादकमभ्युपेयात् ।
मानान्तरं यदि च नेच्छति शब्दशक्तेस्तत्र ग्रहः कथमिति प्रतिपादनीयम् ॥

**ச்லோகார்த்தம் :** மேலும், ப்ரத்யாகாத்ம விஷயத்தில், ப்ரமாணாந்தரத்தை ஒப்புக் கொள்ளப்படுமானால், வேதாந்தவாக்யம் அனுவாதம், என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அதற்காக ப்ரமாணாந்தரத்தை ஒத்துக்கொள்ளாவிடில், சப்தத்தில் சக்திக்ரஹம் எப்படி ஏற்படுகிறது என்பதை ப்ரதிபாதனம் செய்யப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யமானது, ப்ரமாணாந்தரத்தை அபேக்ஷித்தே ப்ரஹ்மதத்வத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், வேதாந்தவாக்யம் அப்ரமாணம் என்றாகும். அதற்காக—வாக்யத்திருந்தே போதம் ஏற்படுவதாகச்சொல்லப் படுமானால் 'சத்சித் ஆனந்தம்' என்ற பதங்களிலிருந்து சக்திக்ரஹம் என்பதே ஏற்படமுடியாது என்பதால், பாசக்கயிறு போல் இரண்டுபக்ஷத்திலும் தோஷம் ஏற்படுகிறது.

**112. அவதாரிகை :**

மேலும், 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய :' என்ற வாக்யம், விதிவாக்யமாக இருப்பதால் தான், வேதம் என்பது எல்லோருக்கும் ப்ரயோஜனமாக ஆகிறது. ஏனென்னில், வேதமானது, அர்த்தபரத்வமாக இருக்கின்றதாலும், ப்ரயோஜனமான விஷயத்தை போதிக்கின்றதாலும்,

ப்ரமாணமாகிறதேயன்றி, கேவல அர்த்தத்தை தெரிவிப்பதால் மட்டும், ப்ரமாணமாகாது. சித்தவஸ்துவான 'கடம்' என்பது, சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்திஞல் 'கடம்' என்று அறியப்படுவதால் மட்டும் என்னப்ரயோஜனம் ஏற்படும்? அதுபோல், ப்ரவ்ருத்தி, நிவர்த்தி சாத்யமாக இல்லாத சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிப்பதால், வாக்யம் ப்ரமாணம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

किञ्च प्रवृत्तिविनिवृत्तिविहीनवस्तुतत्वप्रतीतिजननान्न च किञ्चिदस्ति ।
पुंसः प्रयोजनमतोऽपि न तत्र मानं वेदान्तवाक्यमिति युक्तिमदुच्यमानम् ॥

**ச்லோகார்த்தம் :** மேலும், ப்ரவ்ருத்தி, நிவ்ருத்திக்கு விஷயமாக இல்லாத வஸ்துவின் ஞானத்தை உண்டு பண்ணுவதன் மூலம், புருஷனுக்கு எவ்வித ப்ரயோஜனமும் கிடையாது. ஆகையால், இந்த விஷயத்தில் வேதாந்தவாக்யம் ப்ரமாணமில்லையென்று சொல்லப்படுவது யுக்தியுக்தமானதேயாகும். (பொருத்தமானதேயாகும்).

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது, ஹேயமுமல்ல, அனுபாதேயமுமல்ல, ஸாத்யமாக இல்லாத, வஸ்துமாத்ரபோதகமாக இருக்கின்ற ப்ரஹ்மமென்பது, வேதாந்தவாக்யத்திஞல் போதிக்கப்பட்டபோதிலும், அந்த வாக்யம் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், ப்ரவ்ருத்தியையோ, அல்லது நிவ்ருத்தியையோ போதிக்காத வாக்யம், புருஷனுக்கு எந்த விதப்ரயோஜனத்தையும் உண்டுபண்ணமுடியாது. அதஞல் ப்ரவ்ருத்தியோ நிவ்ருத்தியோ ஸம்பவிக்கமுடியாத கூடஸ்தமான ப்ரஹ்ம தத்வத்தை போதிக்கின்ற விஷயத்தில் சப்தம் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது. யுக்திக்கும் பொருந்தமில்லை.

(இதற்கு 300–301 ச்லோகத்தில் மறுபடி ஆக்ஷேபித்து ஸமாதானம் சொல்லப் படுகிறது)

**113. அவதாரிகை :**

அஞ்ஞாதமான அர்த்தத்தை தெரிவிப்பது எதுவோ, அதுவே ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. ப்ரமேயமான வஸ்துவிலிருக்கின்ற அஞ்ஞானத்தை நிவர்த்தித்தால் தான், அதை ப்ரமாணமென்றே சொல்லலாம் என்று ஜைமினி முதலான பெரியோர்களால் சொல்லப் படுகிறது. ஆகவே, சைதன்யஸ்வரூபத்தில், அஞ்ஞானம் என்பதே ஸம்பவிக்கமுடியாது என்பதால், வேதாந்தவாக்யம் என்ற ப்ரமாணத்திஞல் அஞ்ஞான நிவர்த்தியென்பது ஏற்பட முடியாது. ஆகையால், வேதாந்தம் அப்ரமாணம் என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

अज्ञातमर्थमवबोधयतः प्रमायां हेतुत्वमभ्युपगतं ननु वेदविद्भिः ।
अज्ञातता च परमात्मनि दुर्निरूपा विज्ञानमात्रवपुषीति न मानकृत्यम् ॥

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞாதமான அர்த்தத்தை எது தெரிவிக்கின்றதோ, அதுவே ஞானத்திற்கு ஹேதுவாக (காரணமாக) வேதவித்துக்களால், ஒத்துக்கொள்ளப்படுகிறது. விஞ்ஞானஸ்வரூபமாகஇருக்கின்ற பரமாத்மாவினிடத்தில், அஞ்ஞாததை என்பது இருக்கின்றது என்று நிரூபணம் செய்யமுடியாததால் அதில், ப்ரமாணம் என்பதால் செய்யக்கூடியகார்யம் ஏதுவுமில்லை.

**வ்யாக்யானம் :** விஞ்ஞானஸ்வரூபமாக இருக்கின்றஸ்வப்ரகாசமான ஆத்மஸ்வரூபம், அஞ்ஞாதமாக இருக்கின்றதென்று சொல்வதற்கு முடியாது. அவ்விதம் சொல்லப்படுமாஞல்,

ஆத்மாவிஞ்ஞானஸ்வரூபம் என்று எப்படிச்சொல்லமுடியும்? ஆகையால், அஞ்ஞான நிவர்த்தி என்பதற்காகவும், வேதாந்தம் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது.

**114. அவதாரிகை :**

ஆத்மா ஸ்வப்ரகாசஸ்வரூபமாக இருந்தபோதிலும் 'அஹம் அஞ்ஞ:' என்று எல்லோருக்கும் அனுபவம் இருக்கின்றதால் ஆத்மா அஞ்ஞாதம் என்று சொல்லலாமே? என்றால், ஸ்வப்ரகாசஸ்வரூபம் என்றால் அதில் அஞ்ஞானம் இருக்கின்றதென்பது நேர்விருத்த்மானது, என்று சிஷ்யனால் நிராகரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

बोधस्वभावकमबुद्धमनुष्णमुष्णं शीतस्वभावकमशीतमितीदृशानि ।
कः श्रद्दधीत पुरुषो वचनानि तस्मात् ब्रह्माप्रबुद्धमिति वाक्यमयुक्तमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** ஞானஸ்வரூபமான ஆத்மா, அஞ்ஞாதமாக இருக்கின்றதென்றும், உஷ்ணஸ்வபாவமுடையது அனுஷ்ணம் என்றும், சீதஸ்வபாவமுடையது. அசீதமாக இருக்கின்றதென்றும் சொல்லப்படும் வாக்யங்களினால் எந்த புருஷனுக்கு சிரத்தை இருக்க முடியும்? ஆகவே, ப்ரஹ்மஅஞ்ஞாதம்என்று சொல்லப்படும் வாக்யம் பொருத்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது ஞானஸ்வரூபம் என்றும், அது அப்ரபுத்தம் (அஞ்ஞாதம்) என்றும் சொல்லப்படுமானால், உஷ்ணமாக இருக்கின்ற வஸ்து உஷ்ணமில்லையென்றும், எனது மாதா மலடி என்று சொல்வது போல் பொருத்தமற்றதாக இருக்கிறது. இதேபோல், அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் இருக்கின்றது என்பதற்காக, விஞ்ஞானஸ்வரூபமான ஆத்மாவில் அஞ்ஞானம் இருக்கிறதென்று நேர் விருத்தமாக இருக்கின்ற விஷயத்தைச்சொல்வது முற்றிலும் பொருந்தாது.

**115. அவதாரிகை :**

அஞ்ஞாதமானவஸ்து, மானத்தினால் மேயமாகிறது (அறியப்படுகிறது) என்று சொல்லப்படுமானால், அதற்கு என்ன அர்த்தம்?

அஞ்ஞாத்மாகஇருக்கின்றவஸ்து, அஞ்ஞானம் என்ற விசேஷணத்துடன் கூடியதா? அல்லது அஞ்ஞான உபலக்ஷிதமா? அல்லது, அஞ்ஞான உபஹிதமா?

1. அஞ்ஞான விசிஷ்ட்டம் என்று சொல்லப்படுமானால், எப்போதும் அஞ்ஞானம் என்ற விசேஷணத்துடன் கூடினதாகவே இருக்கும். அதனால் ப்ரமாணபுத்திக்கு விஷயமாகின்ற போதும் விசிஷ்ட்டமாகவே அறியப்படும் அதனால் அஞ்ஞானம் என்பது ப்ரமாணத்தினால் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லநேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால் ப்ரமாணத்தினால் அஞ்ஞானம் நிவர்த்திக்கிறது என்று சொல்லமுடியாது.

2. ப்ரமாணபுத்திக்கு, அஞ்ஞானம் உபலக்ஷணம் என்று சொல்லப்படுமானால், ப்ரமாணத்தினால் உபலக்ஷிதமான ஸ்வரூபம், அறியப்பட்ட பிறகும், உபலக்ஷிதத்வம் என்ற தன்மை இருக்கின்றதால், மறுபடியும் மானமேயம் (ப்ரமாணத்தினால் அறியப்பட வேண்டியதாக) என்று சொல்லநேரிடும்.

3. அதற்காக ப்ரமாணபுத்திக்கு அஞ்ஞானம் என்பது உபாதி என்று சொல்லப் படுமானால், அதுவும் ஸம்பவிக்கமுடியாது என்று, ஆக்ஷேபிக்கப்படுகின்ற மூன்றாவது பக்ஷத்தைப்பற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उपाध्यभावे न भवेदुपाधिमत्तटस्थमज्ञानमुपाधिरिष्यते ।
प्रमाणबुद्धेर्न तदात्मवस्तुनि स्वयंप्रकाशे न ततोऽत्र मानधीः ॥

**ச்லோகார்த்தம் :** உபாதி என்பது இல்லையானுல், உபாதிமத் என்று சொல்ல முடியாது. தடஸ்த்தமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது, ப்ரமாணபுத்திக்கு உபாதி என்று சொல்லப் படுமானுல், ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்துவில் அஞ்ஞானம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதனுல் ஆத்மவிஷயத்தில் ப்ரமாணபுத்தி என்பதே ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பது, ப்ரமாணபுத்திக்கு, விசேஷணரூப உபாதியாகவோ உபலக்ஷணரூப உபாதியாகவோ சொல்லமுடியாது, அதேபோல் தடஸ்த்தரூபஉபாதி என்றும் சொல்லமுடியாது. உபாதிஎன்பது, உபஹிதமான்ஸ்வரூபத்தில், சேராமலேயே தடஸ்த்தமாக இருக்கிறது என்று சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் என்ற உபாதியைக்கொண்டு ஏற்படுகின்ற ப்ரமாணபுத்தி என்பது, உபாதி இல்லாமலேயே (உபாதி அபாவத்தினுல்) ஏற்படுவதாகச்சொல்லநேரிடும். அவ்விதம் சொல்வது பொருந்தாது.

மேலும், ஸ்வப்ரகாசமான ஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பதே இருக்கமுடியாது என்பது மட்டுமல்ல, அஞ்ஞானம் என்பது உபாதி என்று சொல்லப்படுமானுல், தன்னிடமுள்ள தர்மத்தை, தனக்கு ஸமீபமுள்ள வஸ்துவில் தோற்றுவிக்கவேண்டும். அவ்விதம், அஞ்ஞானமானது என்ன தர்மத்தை ஆத்மாவில் தோற்றுவிக்கிறது?

**சித்தா :** கட அஞ்ஞானத்திற்கு கடம் என்பது எப்படி விஷயமாகிறதோ அதுபோல் கட ஞானத்திற்கும் கடம் என்பதே விஷயமாகிறது. ஆகவே, அஞ்ஞானத்திற்கு ஏது விஷயமோ, அதுவே ஞானத்திற்கும் விஷயம். அதனுல் அஞ்ஞானம் தன்னிடமுள்ள விஷயித்வம் என்ற தர்மத்தை ஞானத்தில் தோற்றுவிக்கின்றது. (அதாவது, அஞ்ஞானத்திற்கு ஒரு வஸ்து விஷயம் என்று சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் என்பது விஷயீ என்ருகிறது. அதே வஸ்து ஞானத்திற்கு விஷயமாகின்ற போது ஞானம் என்பது விஷயீ என்ருகிறது).

ஆகவே, அஞ்ஞானத்தில் இருக்கின்ற விஷயித்வமே, ஞானத்தில் தோற்றுவிக்கப் படுகிறது என்பதால், ஆத்மவிஷயகமானஅஞ்ஞானம், என்பது உபாதி என்று சொல்லப் படுமானுல், அந்த அஞ்ஞானம் என்பது தன்னிடமுள்ள விஷயித்வம் என்ற தர்மத்தை ப்ரமாணபுத்தி என்ற ஞானத்தில் தோற்றுவிக்கின்றது. அதனுல் அஞ்ஞானம் என்பது உபாதி என்று சொல்லலாமே?

உதாரணமாக, ஞானம் என்பது இல்லாமல் இச்சையென்பது இருக்கமுடியாது. எந்த வஸ்து விஷயகமான ஞானம் ஏற்படுகிறதோ, அந்த விஷயத்தில் தான் இச்சை என்பது ஏற்படும். அதனுல் ஞானத்திற்கு எது விஷயமோ அதுவே இச்சைக்கும் விஷயம் என்று சொல்கிறேம். அதனுல், ஞானத்திலுள்ள விஷயித்வமே இச்சையிலும் ஏற்படுகிறது என்பதால் விஷயித்வம் என்பது இரண்டிலும் தொடர்ந்து (அவ்யபிசரிதமாக) இருக்கிறது. இதேபோல் அஞ்ஞானம் என்பது எந்த விஷயத்தைப்பற்றியதாக இருக்கிறதோ அதேபோல், அந்த விஷயத்தைப் பற்றியதாகவே ஞானம் ஏற்படுகிறது. அதனுல் இச்சையைப்போலவே, விஷயித்வம் என்பது இரண்டிலும் அவ்யபிசரிதமாகவே இருக்கின்றது. ஆகவே, அஞ்ஞானம் என்பது தன்னிடமுள்ள, விஷயித்வம்என்ற தர்மத்தை ப்ரமாணபுத்தி என்ற ஞானத்தில் தோற்றுவிக்கின்றது என்பதால், அஞ்ஞானம் என்பது உபாதி என்றே சொல்லலாமே?

மேலும் அந்தகாரணம் என்பது, ஸம்ஸாரம் என்ற விஷயத்தில், ப்ரமேயமான ஆத்மாவிற்கு, அந்தர்பூதமான உபாதி என்று சொல்லப்படுகிறது. அதுபோல் அஞ்ஞானம் என்பது ஆத்மாவிற்கு அந்தர்பூத உபாதியாக இல்லையென்றாலும் தடஸ்த்த உபாதி என்று சொல்லலாமே? எப்படி 'பசுத்வம்' என்பது 'த்ரிதிஹரி' என்ற சப்தத்தில் சேராமல், பாஹ்யமாகவே இருந்து கொண்டு, த்ரிதிஹரி சப்தத்திற்கு உபாதியாக இருக்கிறதோ அதேபோல், அஞ்ஞானம் என்பதும், தடஸ்த்தோபாதியாக இருக்கிறது என்று சொல்லலாமே?

**பூர்வ :** அஞ்ஞானம் என்பது தடஸ்த்த உபாதி என்று சொல்லப்படுமானால், ஸ்வரூபத்தில் அஞ்ஞானம் இல்லை என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானால், உபாதிமத் (உபாதியை உடையது) என்று சொல்லமுடியாது. மேலும் ஸ்வப்ரகாசமான சைதன்யஸ்வரூபத்தில் அஞ்ஞானம்என்பதே இருக்கமுடியாது என்பதாலும் அஞ்ஞாதமான (அறியப்படாத) வஸ்து ப்ரமாணபுத்திக்கு விஷயமாகிறது என்றும் சொல்லமுடியாது. இந்தவிதம், அஞ்ஞாதமானவஸ்து ப்ரமாணபுத்திக்கு விஷயம் என்று சொல்வதற்கே முடியாது' என்பதால், வேதாந்தம் என்றப்ரமாணம், அஞ்ஞாதமான ஆத்மவஸ்துவை போதிக்கின்றது என்றே சொல்லமுடியாது.

('த்ரிதிஹரி' சப்தம், தோலை திருடுகின்ற ப்ராணியைத்தான் குறிக்கும். மனுஷ்யனும் தோலைதிருடலாம். ஆனால் 'த்ரிதிஹரி' சப்தம் பசுவைத்தான் குறிக்கும் என்று பாணினியினால் சட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பசுத்வம் என்ற தர்மத்தைக் குறிக்கின்ற பதம் எதுவும் த்ரிதிஹரி சப்தத்தில் சேரவில்லை என்றாலும் பசுத்வம் என்பது பாஹ்யமாகவே இருந்து கொண்டு, த்ரிதிஹரி சப்தம் பசுவையே குறிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.)

**116. அவதாரிகை :**

ஆத்மஸ்வரூபம் ஒருப்ரமாணத்தினால் அறியப்படுவதாக எந்தவிதத்திலும் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अद्वैतमात्मपदमाहुरनन्यमानं द्वैतं प्रमाणमिह च प्रतिपादयन्ति ।
वाक्ये निजे पदविरोधमनीक्षमाणाः पाण्डित्यमप्रतिहतं प्रतिलभ्य धीराः ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மஸ்வரூபம் ப்ரமாணங்களினால் அறியக்கூடியதல்ல என்றும், அத்வைதம் என்றும் சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஆத்ம விஷயத்தில், த்வைதம் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானால், தன்னுடைய வாக்யத்திற்கே விரோதமாகின்றது. இதை அறியாமலேயே வித்வான்களால், (ஆத்ம விஷயத்தில் சப்தம் ப்ரமாணம் என்று) இவ்விதம் சொல்லப்படுமானால், அவர்களுடைய பாண்டித்யம் பரிகசிக்கதக்கதேயாகும்.

**வ்யாக்யானம் :** ஸ்வப்ரகாசமாகவும், அத்வைதமாகவும் இருக்கின்ற ஆத்ம ஸ்வரூபம், த்வைதமான வேதாந்தம் ஆசார்யன் முதலியவைகளால் அறிவிக்கப்பட வேண்டுமென்று சொல்லப்படுமானால், இப்பேர்ப்பட்ட விரோதமான வாக்யங்கள், முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறது. இந்த விதம் மிகவும் பாண்டித்யமுடையவர்களால், த்வைதத்தினால் அறிவிக்கப்பட வேண்டியதத்வம் அத்வைதம் என்று சொல்லப் படுவது பொருத்தமற்றதாக இருக்கின்றதால் பரிகசிக்கத்தக்கதேயாகும்.

**117. அவதாரிகை :**

ப்ரமாதா, ப்ரமாணம், என்பதெல்லாம் ப்ரஹ்மத்தின் கார்யமானதால், ப்ரஹ்மத்தைக் காட்டிலும் பின்னம் (வேறு) என்று சொல்லமுடியாது. அதனால் அத்வைதத்திற்கு ஹானியில்லை என்று சொல்வீர்களானால், வேறு ஒரு தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

मातृप्रमाणमितिमेयविभागभिन्नं ब्रह्मैव चेद् भवति तत्र च वर्णयामः ।
कूटस्थताऽपहृतिरेकरसत्वहानिः शाक्यैश्च सन्धिरिति दूषणमन्यदत्र ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாதா, ப்ரமாணம், ப்ரமேயம் என்ற மூன்றும், ப்ரஹ்மமே, என்று சொல்லப்படுமானுல், கூடஸ்த்தத்வவிரோதம், ஏகரஸத்வஹானி, பௌத்தமத ப்ரவேசம் என்ற தோஷங்கள் ஸம்பவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரமாத்ராதிகள் ப்ரஹ்மகார்யம் என்று சொல்லப்படுமானுல், ப்ரமாத்ராதிகளுக்கு, ப்ரஹ்மமென்பது உபாதான காரணம் என்றும் சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல், பரஹ்மம் விகாரி என்ருகும். விகாரி என்ருல் 'கூடஸ்த்தம் ப்ரஹ்ம' என்ரே, விஞ்ஞானம், ஏகரஸம் என்ரே சொல்வதற்கு முடியாது.

மேலும், ஞானத்தையன்றி ஞேயம் வேறல்ல என்று சொல்லப்படுமானுல் பௌத்த சித்தாந்தத்தை ஒத்துக்கொண்டதாக ஆகிறது. (க்ராஹ்யம், க்ராஹகம் என்பதெல்லாமே ஞானுகாரம் என்றும் ஞானத்தையன்றி ஞேயம்என்பது வேருக இல்லையென்பது பௌத்த சித்தாந்தம்). ஆகவே, ப்ரமாத்ராதிகள் ப்ரஹ்மகார்யம் என்றும் சொல்லமுடியாது, ப்ரஹ்மத்தையன்றி வேறல்ல என்றும் சொல்லமுடியாது. இந்தவிதம் ஒரு தோஷத்தை நிவர்த்தித்தால் மற்ருெரு தோஷம் ஸம்பவிக்கின்றது.

**118. அவதாரிகை :**

மாத்ரு மாஞதிகள், ப்ரஹ்ம பரிணுமம் என்று சொன்ஞல்தான் கீழே சொல்லப்பட்ட தோஷங்கள் ஸம்பவிக்கும். அவ்விதம் பரிணுமமென்று சொலப்பட்டவில்லை. ப்ரமாத்ராதிகள் என்பதும் மானபலம் என்பதும் எலலாமே ஆத்மாவில் அஞ்ஞானத்திஞல் கல்பிதம் என்று சொல்லப்படுவதால் தோஷம் ஏதுமில்லை, என்று சொல்லப்படுமாஞல், வேறு ஒரு தோஷம் ஸம்பவிக்கின்றது. அதாவது மேயம் 'என்பதும் கல்பிதம் என்று சொல்லப்படுமாஞல், மேயமானப்ரஹ்மமென்பதும் கல்பிதம் என்ருகும். அதஞல் ஸர்வமும் கல்பிதம் என்ருல் சூன்யவாதமே சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

अज्ञानकल्पितमनिर्वचनीयमिष्टं मात्रादिमानफलपर्यवसानमेतत् ॥
इत्युच्यते यदि तदा परमात्मनोऽपि मेयत्वतो भवति कल्पितताप्रसङ्गः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாதா முதல் ப்ரமாணபலம் முடிய ஸர்வமும் அஞ்ஞான கல்பிதம் என்று சொல்லப்படுமாஞல் பரமாத்மா என்பதும் ப்ரமேயமாக இருக்கின்றதால் அஞ்ஞான கல்பிதம் என்றேசொல்லநேரிடும்.

**வ்யாக்யானம் :** ப்ரமாத்ராதிகள் எல்லாம் ப்ரஹ்மத்தில் கல்பிதம் என்று சொல்லப்படுமாஞல் ப்ரஹ்மமென்பதும் ஒரு ப்ரமாணத்திஞல் அறியப்படவேண்டியதாக இருக்கின்றதால் ப்ரஹ்மமும் கல்பிதம் என்றே சொல்லவேண்டும். ப்ராந்திஞானத்திற்கு எது விஷயமோ, அது ஸத்யமாக இருக்கமுடியாது. ஆகவே, ரஜ்ஜுஸர்ப்பம் போல், ப்ரஹ்மமென்பதும் ப்ராந்திஞானத்திற்கு விஷயமாகிறது என்ருல், ப்ரஹ்மமென்பதும் மித்யை என்றே சொல்ல நேரிடும். அதற்காக, கல்பிதமாஞலும் ப்ரஹ்மமென்பது ஸத்யமென்று சொல்லப்படுமாஞல், சுக்தி ரஜதமும் ஸத்யமென்றே சொல்லநேரிடும்.

**119. அவதாரிகை :**

ப்ரஹ்மமென்பது மேயம் என்று சொன்ஞல்தான், கல்பிதம் என்று சொல்ல நேரிடும். ச்ருதியே ப்ரஹ்மமென்பது அப்ரமேயம் என்று தெரிவிப்பதால் ச்ருதிக்கு விரோதமாக அர்த்தம் செய்யமுடியாது என்று சொல்வீர்களாஞல், ப்ரஹ்மமென்பது வேதாந்தவேத்யம் என்று எப்படிச் சொல்லமுடியும்? மேலும், அப்ரமேயமான ஒரு வஸ்து சாஸ்திரத்திஞல்அறியப்படுகிறது

(மேயமாகிறது) என்றுசொல்லப்படுமானுல், அக்னியினுல் தஹிக்கமுடியாத ஒரு வஸ்துவை, அக்னிதஹிக்கிறது என்று சொல்வது போல், முரண்பட்டதாக ஆகும்.

**ச்லோகம் :**

ब्रह्म प्रमेयमथ नेष्टमिह प्रमाणं वेदान्तवाक्यमिति पक्षपराहतिर्वः ।
न ह्यप्रमेयमवबोधयदस्ति मानं नादाह्यदाहक इति प्रथितः कृशानुः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மமென்பது ப்ரமேயமில்லை என்று சொல்லப்படுமானுல், வேதாந்த வாக்யம் ப்ரமாணம்என்ற உங்கள்சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படும். ஏனெனில் அப்ரமேயமான வஸ்து ப்ரமாணத்தினுல் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், அக்னியால் தஹிக்க முடியாத வஸ்துவை அக்னிதஹிக்கிறது என்று சொல்வதுபோலாகும். லோகத்தில் அவ்விதம் யாராலும் சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது, எதற்கும் விஷயமல்ல (அப்ரமேயம்) என்று சொல்ப் படுமானுல், 'தந்து ஔபநிஷதம் புருஷம்' என்ற ச்ருதிவாக்யத்திற்கும், 'சாஸ்திரயோனித்வாத்' என்ற ஸூத்ரத்திற்கும் விரோதம் ஏற்படுகிறது. ஆகவே, ப்ரமேய மென்ருலும் அப்ரமேயமென்ருலும், இரண்டுபக்ஷத்திலும், இரண்டுவிதமான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. ஆகவே, ஒன்றுக்கொன்று முரண்பட்ட முறையில் சொல்லப்படுவது சரியல்ல. இவ்விதம் சொல்லப் படுமானுல், தஹிக்கமுடியாத வஸ்துவை அக்னிதஹிக்கிறது என்று சொல்வது போல் ஆகும்.

**120. அவதாரிகை :**

எந்தப்ரமாணத்திற்கும் ப்ரஹ்மம் விஷயமல்ல என்பதே உண்மையென்ருலும், ப்ரஹ்மத்தின் உண்மையானஸ்வரூபம் அறியப்படாமல், அதற்கு ஆவாரகமாக அநிர்வசனீயமான அஞ்ஞானம் என்பது இருக்கின்றதால், அந்தஅஞ்ஞானத்தை நிவர்த்திப்பதற்காகவே வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணம் ப்ரயோஜனமாகிறது என்று சொல்லப்படுமானுல், அவ்விதம் அநிர்வசனீயமான ஒரு வஸ்து லோகத்தில் இருப்பதாகவே அறியப்படவில்லை. அதனுல் அஞ்ஞானம் அநிர்வசனீயம் என்று சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

किं चाप्रसिद्धमिदमत्र जगत्त्रयेऽपि स्वाज्ञानकल्पितमनिर्वचनीयमेकम् ।
निःशेषतीर्थदृगुदीरिततन्त्रमार्गे सिद्धे यतः सदसती सकलेऽपि तन्त्रे ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் அஞ்ஞான கல்பிதமாக அநிர்வசனீயமான ஒரு வஸ்து என்பது மூன்று லோகத்திலும் அப்ரஸித்தமேயாகும். ஏனெனில் சாஸ்திரங்களை நன்கு அறிந்த வித்வான்களால் எழுதப்பட்ட ஸர்வக்ரந்தங்களிலும், ஸத், அஸத், என்ற இரண்டைப்பற்றியே ப்ரசித்தமாக சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸதஸத்விலக்ஷணமாக, அநிர்வசனீயமாக எந்த வஸ்துவும் எந்த லோகத்திலும் இருப்பதாக அறியப்படவுமில்லை, அறிவாளிகளாலும் சொல்லப்படவில்லை, சாஸ்திரங்களிலிருந்தும் அறியப்படவில்லை என்று சொல்வது சரியல்ல. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியை அநிர்வசனீயம் என்று தானே சொல்லவேண்டும்?

**பூர்வ :** இவ்விதம் சொல்வதும் சரியல்ல. ஸத் என்ரோ அல்லது அஸத் என்ரோ இரண்டு விதமான வஸ்துக்களைப்பற்றியே ஸர்வசாஸ்திரங்களும் தெரிவிக்கின்றது. 'ஸதஸதோ: பரஸ்பரவிரோதே அன்யதர நிஷேதே அன்யதரஸ்ய சித்தி:' என்ற ந்யாய்ப்படி ஒரு வஸ்து ஸத்தாகவோ, அஸத்தாகவோ தான் இருக்கிறதென்று சொல்லலாமேயன்றி ஸதஸத் விலக்ஷணமாக இருப்பதாகச்சொல்லமுடியாது. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி என்பதும்

வேறு ஏதோ ஓரிடத்தில் இருக்கின்ற வெள்ளியே கிளிஞ்சலில் தோன்றுகிறது என்று சொல்லவேண்டுமேயன்றி முயல்கொம்புபோல் எங்குமே இல்லாதவெள்ளி, கிளிஞ்சலில் தோன்றுகிறது என்று சொல்லமுடியாது. அதீந்த்ரிய விஷயங்களை அறிகின்ற வித்வான்களால் (தீர்த்தத்ருக்) சாஸ்திரார்த்தங்களை போதிப்பதற்கு உபாயமாக இயற்றப்பட்டிருக்கும் சாஸ்திரங்களிலும் ஸத், அஸத் என்ற இரண்டு விஷயங்களைப் பற்றித்தான் சொல்லப் பட்டிருக்கிறது. ஸதஸத்விலக்ஷணமாக அநிர்வசனீயமான ஒரு வஸ்து இருப்பதாகச் சொல்லப்படவில்லை. அதனால் இவ்வித கல்பனை பொருந்தாது. (இந்த ஆக்ஷேபத்திற்கு 336வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது).

**121. அவதாரிகை :**

மேலும், அஞ்ஞானம் என்பதே நி:ஸ்வரூபமானதால், பாவரூபமான இந்த ஜகத்திற்கு, நி:ஸ்வரூபமான அஞ்ஞானம் காரணம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

'கதம் அஸத: ஸஜ்ஜாயதே' என்று சாந்தோக்யச்ருதியும் நிஷேதம் செய்கின்றதால், த்வைதப்ரபஞ்சத்திற்கு அஞ்ஞானம் காரணம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अज्ञानमप्यसदभावतया प्रसिद्धेद्वैतप्रसूतिकृदतो न तदभ्युपेयम् ।
नासत्कदाचिदपि सज्जनने समर्थं वन्ध्यासुता न खलु पुत्रशतं प्रसूते ।।

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞாதம் என்பது அஸத்ரூபம், அபாவரூபம் என்பது ப்ரசித்தமாக இருக்கின்றது. அதனால், இப்பேர்ப்பட்ட அஞ்ஞானம், த்வைதப்ரபஞ்ச உற்பத்திக்கு காரணம் என்று சொல்வதற்கு முடியாது. அஸத் என்பது, ஒரு போதும் ஸத்வஸ்துவை உற்பத்தி செய்வதற்குரிய ஸாமர்த்யம் உடையதாக ஆகாது. வந்த்யாபுத்ரி அனேகபுத்ரர்களை உற்பத்தி செய்வதாக அறியப்படவே இல்லை.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் பாவரூபம் என்று சொல்வதற்குரிய ப்ரமாணமே கிடையாது மேலும், அஸத்தான வஸ்துவிலிருந்து, ஸத்தான ஒரு வஸ்து உண்டாகிறது என்று சொல்வதற்கும் முடியாது. அஞ்ஞானம் என்றாலே, ஞானமில்லை (ஞான அபாவம்) என்று தான் லோகத்தில் ப்ரசித்தமாக இருக்கின்றது. அதனால் நி:ஸ்வரூபமான அஞ்ஞானம் த்வைதப்ரபஞ்சத்திற்கு காரணமாக ஆகமுடியாது. (இந்த ஆக்ஷேபத்திற்கு 320வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது).

**122. அவதாரிகை :**

மேலும் 'சப்தம்' என்ற ப்ரமாணத்தின் தன்மையை விசாரிக்கின்ற போதும், சப்தம் பரோக்ஷ விஷயத்தையே தெரிவிக்கின்றது என்று அறியப்படுகிறது. அதனால் அபரோக்ஷமான ப்ரஹ்ம விஷயத்தில் சப்தம் ப்ரமாணம் என்று சொல்வதற்கே முடியாது.

**ச்லோகம் :**

वाक्यप्रसूतमतिरिन्द्रियजन्यधीवन्नार्थापरोक्ष्यजननी भवितुं समर्था ।
तेनास्तु वाक्यजनितात्मपरोक्षबुद्धिर्भ्रान्तिः सदाऽजडतयाऽनुभवेऽपरोक्षे ।।

**ச்லோகார்த்தம் :** வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானமானது, இந்த்ரிய ஜன்யஞானம் போல விஷயத்தில், ஆபரோக்ஷ்யம் என்பதை உண்டுபண்ணக்கூடியஸாமர்த்யம் உடையதாகஆகா... ஆகையால், எப்போதும் அஜடமாகவும், அனுபவரூபமாகவும், அபரோக்ஷமாகவும் இருக்கின்ற விஷயத்தில், வாக்யஜன்யமான பரோக்ஷஞானம் என்பது ப்ராந்தி என்றே சொல்லவேண்டும்.

(மேயமாகிறது) என்றுசொல்லப்படுமானல், அக்னியினுல் தஹிக்கமுடியாத ஒரு வஸ்துவை, அக்னிதஹிக்கிறது என்று சொல்வது போல், முரண்பட்டதாக ஆகும்.

**ச்லோகம் :**

ब्रह्म प्रमेयमथ नेष्टमिह प्रमाणं वेदान्तवाक्यमिति पक्षपराहतिर्वः ।
न ह्यप्रमेयमवबोधयदस्ति मानं नादाह्यदाहक इति प्रथितः कृशानुः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மமென்பது ப்ரமேயமில்லை என்று சொல்லப்படுமானல், வேதாந்த வாக்யம் ப்ரமாணம்என்ற உங்கள்சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படும். ஏனெனில் அப்ரமேயமான வஸ்து ப்ரமாணத்தினுல் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானல், அக்னியால் தஹிக்க முடியாத வஸ்துவை அக்னிதஹிக்கிறது என்று சொல்வதுபோலாகும். லோகத்தில் அவ்விதம் யாராலும் சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது, எதற்கும் விஷயமல்ல (அப்ரமேயம்) என்று சொல்ப் படுமானல், 'தந்து ஔபநிஷதம் புருஷம்' என்ற ச்ருதிவாக்யத்திற்கும், 'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரத்திற்கும் விரோதம் ஏற்படுகிறது. ஆகவே, ப்ரமேய மென்ருலும் அப்ரமேயமென்ருலும், இரண்டுபக்ஷத்திலும், இரண்டுவிதமான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. ஆகவே, ஒன்றுக்கொன்று முரண்பட்ட முறையில் சொல்லப்படுவது சரியல்ல. இவ்விதம் சொல்லப் படுமானல், தஹிக்கமுடியாத வஸ்துவை அக்னிதஹிக்கிறது என்று சொல்வது போல் ஆகும்.

**120. அவதாரிகை :**

எந்தப்ரமாணத்திற்கும் ப்ரஹ்மம் விஷயமல்ல என்பதே உண்மையென்ருலும், ப்ரஹ்மத்தின் உண்மையானஸ்வரூபம் அறியப்படாமல், அதற்கு ஆவாரகமாக அநிர்வசனீயமான அஞ்ஞானம் என்பது இருக்கின்றதால், அந்தஅஞ்ஞானத்தை நிவர்த்திப்பதற்காகவே வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணம் ப்ரயோஜனமாகிறது என்று சொல்லப்படுமானல், அவ்விதம் அநிர்வசனீயமான ஒரு வஸ்து லோகத்தில் இருப்பதாகவே அறியப்படவில்லை. அதனுல் அஞ்ஞானம் அநிர்வசனீயம் என்று சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

किं चाप्रसिद्धमिदमत्र जगत्त्रयेऽपि स्वाज्ञानकल्पितमनिर्वचनीयमेकम् ।
निःशेषतीर्थदृगुदीरिततन्त्रमार्गे सिद्धे यतः सदसती सकलेऽपि तन्त्रे ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் அஞ்ஞான கல்பிதமாக அநிர்வசனீயமான ஒரு வஸ்து என்பது மூன்று லோகத்திலும் அப்ரஸித்தமேயாகும். ஏனெனில் சாஸ்திரங்களை நன்கு அறிந்த வித்வான்களால் எழுதப்பட்ட ஸர்வக்ரந்தங்களிலும், ஸத், அஸத், என்ற இரண்டைப்பற்றியே ப்ரசித்தமாக சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸதஸத்விலக்ஷணமாக, அநிர்வசனீயமாக எந்த வஸ்துவும் எந்த லோகத்திலும் இருப்பதாக அறியப்படவுமில்லை, அறிவாளிகளாலும் சொல்லப்படவில்லை, சாஸ்திரங்களிலிருந்தும் அறியப்படவில்லை என்று சொல்வது சரியல்ல. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியை அநிர்வசனீயம் என்று தானே சொல்லவேண்டும்?

**பூர்வ :** இவ்விதம் சொல்வதும் சரியல்ல. ஸத் என்றோ அல்லது அஸத் என்றோ இரண்டு விதமான வஸ்துக்களைப்பற்றியே ஸர்வசாஸ்திரங்களும் தெரிவிக்கின்றது. 'ஸதஸதோ: பரஸ்பரவிரோதே அன்யதர நிஷேதே அன்யதரஸ்ய சித்தி:' என்ற ந்யாயப்படி ஒரு வஸ்து ஸத்தாகவோ, அஸத்தாகவோ தான் இருக்கிறதென்று சொல்லலாமேயன்றி ஸதஸத் விலக்ஷணமாக இருப்பதாகச்சொல்லமுடியாது. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி என்பதும்

வேறு ஏதோ ஓரிடத்தில் இருக்கின்ற வெள்ளியே கிளிஞ்சலில் தோன்றுகிறது என்று சொல்லவேண்டுமேயன்றி முயல்கொம்புபோல் எங்குமே இல்லாதவெள்ளி, கிளிஞ்சலில் தோன்றுகிறது என்று சொல்லமுடியாது. அதீந்த்ரிய விஷயங்களை அறிகின்ற வித்வான்களால் (தீர்த்தத்ருக்) சாஸ்திரார்த்தங்களை போதிப்பதற்கு உபாயமாக இயற்றப்பட்டிருக்கும் சாஸ்திரங்களிலும் ஸத், அஸத் என்ற இரண்டு விஷயங்களைப் பற்றித்தான் சொல்லப் பட்டிருக்கிறது. ஸதஸத்விலக்ஷணமாக அநிர்வசனீயமான ஒரு வஸ்து இருப்பதாகச் சொல்லப்படவில்லை. அதனால் இவ்வித கல்பனை பொருந்தாது. (இந்த ஆக்ஷேபத்திற்கு 336வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது).

**121. அவதாரிகை :**

மேலும், அஞ்ஞானம் என்பதே நி:ஸ்வரூபமானதால், பாவரூபமான இந்த ஜகத்திற்கு, நி:ஸ்வரூபமான அஞ்ஞானம் காரணம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

'கதம் அஸத: ஸஜ்ஜாயதே' என்று சாந்தோக்யச்ருதியும் நிஷேதம் செய்கின்றதால், த்வைதப்ரபஞ்சத்திற்கு அஞ்ஞானம் காரணம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अज्ञानमप्यसदभावतया प्रसिद्धेर्द्वैतप्रसूतिकृदतो न तदभ्युपेयम् ।
नासत्कदाचिदपि सज्जनने समर्थं वन्ध्यासुता न खलु पुत्रशतं प्रसूते ।।

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞாதம் என்பது அஸத்ரூபம், அபாவரூபம் என்பது ப்ரசித்தமாக இருக்கின்றது. அதனால், இப்பேர்ப்பட்ட அஞ்ஞானம், த்வைதப்ரபஞ்ச உற்பத்திக்கு காரணம் என்று சொல்வதற்கு முடியாது. அஸத் என்பது, ஒரு போதும் ஸத்வஸ்துவை உற்பத்தி செய்வதற்குரிய ஸாமர்த்யம் உடையதாக ஆகாது. வந்த்யாபுத்ரி அனேகபுத்ரர்களை உற்பத்தி செய்வதாக அறியப்படவே இல்லை.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் பாவரூபம் என்று சொல்வதற்குரிய ப்ரமாணமே கிடையாது மேலும், அஸத்தான வஸ்துவிலிருந்து, ஸத்தான ஒரு வஸ்து உண்டாகிறது என்று சொல்வதற்கும் முடியாது. அஞ்ஞானம் என்றாலே, ஞானமில்லை (ஞான அபாவம்) என்று தான் லோகத்தில் ப்ரசித்தமாக இருக்கின்றது. அதனால் நி:ஸ்வரூபமான அஞ்ஞானம் த்வைதப்ரபஞ்சத்திற்கு காரணமாக ஆகமுடியாது. (இந்த ஆக்ஷேபத்திற்கு 320வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது).

**122. அவதாரிகை :**

மேலும் 'சப்தம்' என்ற ப்ரமாணத்தின் தன்மையை விசாரிக்கின்ற போதும், சப்தம் பரோக்ஷ விஷயத்தையே தெரிவிக்கின்றது என்று அறியப்படுகிறது. அதனால் அபரோக்ஷமான ப்ரஹ்ம விஷயத்தில் சப்தம் ப்ரமாணம் என்று சொல்வதற்கே முடியாது.

**ச்லோகம் :**

वाक्यप्रसूतमतिरिन्द्रियजन्यधीवन्नार्थापरोक्ष्यजननी भवितुं समर्था ।
तेनास्तु वाक्यजनितात्मपरोक्षबुद्धिर्भ्रान्तिः सदाऽजडतयाऽनुभवेऽपरोक्षे ।।

**ச்லோகார்த்தம் :** வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானமானது, இந்த்ரிய ஜன்யஞானம் போல விஷயத்தில், ஆபரோக்ஷ்யம் என்பதை உண்டுபண்ணக்கூடியஸாமர்த்யம் உடையதாக ஆகாது. ஆகையால், எப்போதும் அஜடமாகவும், அனுபவரூபமாகவும், அபரோக்ஷமாகவும் இருக்கின்ற விஷயத்தில், வாக்யஜன்யமான பரோக்ஷஞானம் என்பது ப்ராந்தி என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்பட்ட ப்ரமாத்ராதிகளால், ஆத்மாவிற்கு ப்ரமேயத்வம் ஸம்பவிப்பதாக சொல்லப்படுவதையும், அதேபோல் அபாவரூபமான அஞ்ஞானத்திலிருந்து ப்ரமாத்ராதி த்வைதங்கள் உண்டாகிறது என்று சொல்லப்படுவதையும், ஒத்துக் கொண்டபோதிலும், ப்ரஹ்மவிஷயத்தில் சப்தம்ப்ரமாணம் என்று சொல்லப்படுவதை ஒத்துக் கொள்ளமுடியாது. ஏனெனில், சப்தம்என்பது பரோக்ஷவஸ்துவை தெரிவிக்கின்ற ப்ரமாணமாக இருக்கின்றதால், நித்யஅபரோக்ஷஸ்வரூபமான (ஸ்வபாவமான) ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், ப்ரஹ்ம விஷயகமாக ஏற்படும் அந்த ஞானம் ப்ராந்தி என்றே சொல்லவேண்டும். அதனுல், ப்ரஹ்மஸ்வரூபம், வேதாந்த வேத்யம் என்று சொல்வது பொருந்தாது இந்த்ரியங்களைப்போல் சப்தம்என்பதுஅபரோக்ஷஞானத்தை உண்டுபண்ணக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக ஆகாது. ஆகவே, அஜடஸ்வரூபமானதும் ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபமாகவும் இருக்கின்ற ப்ரஹ்மமென்பது, அதற்கு நேர்விருத்தமான தன்மையிலுள்ள சப்தத்தினுல் அறியப்படுகிறது என்ருல் அது ப்ராந்தியென்றே சொல்லவேண்டும்.

(341 ஸ்லோகத்தில் இதற்கு பதில் சொல்லப்படுகிறது)

**123. அவதாரிகை :**

**சித்தா :** ப்ரமாணம் என்பது ப்ரமேயமான வஸ்துஸ்வரூபம் எப்படி இருக்கின்றதோ, அவ்விதமே, அந்த வஸ்துவின் ஞானத்தை உண்டுபண்ணுகின்றது என்றே சொல்ல வேண்டும். அதனுல், சப்தம்என்ற ப்ரமாணமும் வஸ்துபரோக்ஷமாக இருந்தால் பரோக்ஷஞானத்தையும், வஸ்து அபரோக்ஷமாக இருந்தால் அபரோக்ஷஞானத்தையும் உண்டு பண்ணுகின்றது என்றே சொல்லவேண்டும். அதனுல் சப்தமானது அபரோக்ஷ வஸ்துவை, பரோக்ஷமாக தெரிவிக்கிறது என்று சொல்வதற்கு முடியாது.

**பூர்வ :** இதுசரியல்ல ஏனெனில் சப்தத்தின் ஸ்வபாவமே பரோக்ஷவஸ்துவைத்தான் தெரிவிக்கும் என்று சொல்லப்படுவதால், சப்தம்அபரோக்ஷ வஸ்துவை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் அது ப்ராந்திஞானமென்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

नित्यापरोक्षमपि वस्तु परोक्षरूपं वेदान्तवाक्यमवबोधयति स्वभावात् ।
प्रामाण्यमत्र कथमस्य वदोपपन्नं न ह्यन्यदन्यदिति बोधयतः प्रमात्वम् ॥

**ச்லோகார்த்தம் :** வஸ்து நித்ய அபரோக்ஷமாக இருந்தபோதிலும், (வேதாந்தவாக்யம்) சப்தமானது தன்னுடைய ஸ்வபாவத்தினுல் பரோக்ஷமாகத்தான் தெரிவிக்கமுடியும் என்பதால், இப்பேர்ப்பட்ட வேதாந்த வாக்யத்திற்கு ப்ராமாண்யம் எப்படி பொருந்தும்? ஆகவே ஸ்வபாவத்தில் பரோக்ஷவஸ்துவைத்தெரிவிக்கும் ப்ரமாணம், அபரோக்ஷவஸ்துவை தெரிவிக்கின்றது என்ற வாக்யம் ப்ரமாணமாக ஆகமுடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரமாணத்தின் தன்மையை (ஸ்வபாவத்தை) அனுசரித்தே ஞானம் ஏற்படுகிறது என்று சொல்லவேண்டுமேயன்றி, விஷயத்தை அனுசரித்து ஞானம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. இந்த்ரியாதிகள் ப்ரத்யக்ஷஞானத்தை உண்டுபண்ணும். சப்தம் பரோக்ஷஞானத்தையே உண்டுபண்ணும். அதேபோல் அனுமானம் என்பதும் பரோக்ஷஞானத்தையே உண்டுபண்ணும். அதனுல் ப்ரமாணத்தின் ஸ்வபாவத்தை அனுசரித்தே ஞானம் என்பது தீர்மானிக்கப்படவேண்டும். ப்ரமேயமான வஸ்துவைக் கொண்டு ஞானத்தை தீர்மானிக்க முடியாது.

**சித்தா :** ப்ரஹ்மமென்பது அபரோக்ஷம் என்றே சாஸ்திரம் போதிக்கின்றது. அதனுல் சப்தம் என்றப்ரமாணம் அபரோக்ஷமென்று தெரிவிக்கின்றபோது அபரோக்ஷகாரமாகத் தானே ஞானம்

ஏற்படவேண்டும்? ப்ரஹ்மம் பரோக்ஷமென்று சப்தம் தெரிவித்தால்தான் பரோக்ஷஞானம் ஏற்படும். ஆகவே, அபரோக்ஷமான வஸ்துவை சப்தம் அபரோக்ஷமாக தெரிவிக்கின்றதால், அதனுல் ஏற்படும் ஞானம் யதார்த்தஞானம் என்றே சொல்லவேண்டுமேயன்றி, ப்ராந்திஞானமென்று சொல்லமுடியாது. உதாரணமாக, எதிரில் இருக்கின்ற வஸ்து கயிறு தான். ஆனுல், அந்த கயிற்றில் ஸர்ப்பம் என்பது உண்மையில் இல்லாமலிருந்தும், இல்லாத ஸர்ப்பத்தை, சக்ஷுஸ் என்ற ப்ரமாணம் தெரிவிக்கின்றது என்று சொன்னுல் தான், அந்த ஞானம் ப்ராந்தி என்று சொல்லலாம். ஆனுல் சக்ஷுஸ் என்பது கயிற்றை கயிறு என்றே தெரிவிக்குமானுல் அதை ப்ராந்திஞானமென்று எப்படிச் சொல்லமுடியும்.? ஆகவே அபரோக்ஷமான ப்ரஹ்மத்தை சப்தம் அபரோக்ஷமென்று தெரிவிக்கின்றதால் அதை ப்ராந்திஞானமென்று சொல்லமுடியாது.

**பூர்வ :** சப்தம் என்ற ப்ரமாணம் மறைபட்டிருக்கின்ற வஸ்து ஞானத்தைத்தான் உண்டுபண்ணும். அதனுல் சப்தம் பரோக்ஷஞானத்தைத் தான் உண்டுபண்ணும் என்று சொல்லப்படுவதால், (அவ்யவஹிதமாய்) ஸ்வப்ரகாசமாக ப்ரகாசிக்கின்ற ப்ரஹ்மமானது சப்தத்தினுல் போதிக்கப்படுவதாகச் சொல்வது எப்படி பொருந்தும்? வஸ்து ஸன்னிஹிதமாக இருந்தாலும் சரி, அல்லது அஸன்னிஹிதமாக் இருந்தாலும் சரி, எப்படி இருந்தாலும் பரோக்ஷ ஞானத்தைத்தான் உண்டுபண்ணும். உதாரணமாக, மாம்பழம் என்ற வஸ்து ஸன்னிஹிதமாகவே இருந்தாலும் கூட அதன் ரூபம்தான் சக்ஷுஸ்ஸினுல் க்ரஹிக்கப் படுகிறதேயன்றி. அதிலுள்ள ரஸம் என்பது ஸன்னிஹிதமாக இருந்தும் அந்த ரஸத்தை சக்ஷுஸ்ஸினுல் க்ரஹிக்கப்படுவதில்லை. ஆகவே, வஸ்துவின் தன்மையை அனுசரித்து ப்ரமாணத்தின் தன்மையை தீர்மானிக்கமுடியாது. அதுபோல், ப்ரஹ்மமென்பது அபரோக்ஷமாக இருந்தபோதிலும், சப்தம் பரோக்ஷஞானத்தைத்தான் உண்டுபண்ணுகிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுவதற்காக, சப்தத்திற்கு ப்ராமாண்யம் இல்லையென்று சொல்லமுடியாது. ஏனெனில், உபநிஷத் என்ற சப்தப்ரமாணமானது, ஏகரூபமான ஆத்மாவை, ஏகரூபமென்றே தெரிவிக்கின்றது. ஆகவே, ப்ரத்யக்ஷம் அவ்யவஹிதத்தையே (மறைபடாதது) தெரிவிக்கும். அனுமானம், சப்தம் என்ற இரண்டும், வ்யவஹிதமான வஸ்துவை (மறைபட்டவஸ்துவை)த்தான் தெரிவிக்கும். அவ்யவஹிதமான ப்ரஹ்மத்தை வாக்யம் போதிக்கமுடியாது.

**சித்தா :** இவ்விதம் சொல்வது சரியல்ல. சக்ஷுஸ் என்ற ப்ரமாணம், ரூபவத்தான வஸ்து ஸமீபத்தில் இருக்குமானுல் அந்த வஸ்துவை அபரோக்ஷமாகத்தான் தெரிவிக்கும். ரூபவத்தான வஸ்து பரோக்ஷமாக இருக்குமானுல் அந்த வஸ்துவை சக்ஷுஸ்ஸினுல் க்ரஹிக்கமுடியாது. உதாகரணத்தில் சொல்லப்பட்டமாம்பழத்தின்ரஸம் என்பது சக்ஷுஸ்ஸுக்கு விஷயமல்ல. ரூபம் என்பதே சக்ஷுஸ்ஸுக்கு விஷயம். எந்தரூபம் சக்ஷுஸ் என்பதுடன் ஸம்பந்தப்படுகிறதோ அதைத்தான் சக்ஷுஸ்ஸினுல் க்ரஹிக்க முடியும். (இந்த்ரிய ஸன்னிகர்ஷ ஜன்யஞானம்தான் ப்ரத்க்ஷம்). ஆகவே, ப்ரமாணம் என்பது, வஸ்துவை அனுசரித்தே ஞானத்தை உண்டுபண்ணுகின்றது. அதனுல் அபரோக்ஷமான ப்ரஹ்மத்தை சப்தமானது பரோக்ஷமாக தெரிவிக்கமுடியாது. ஞானத்தில் பாரோக்ஷ்யம், ஆபரோக்ஷ்யம் என்ற தன்மைகள் கிடையாது. இந்த இரண்டு தன்மைகளும் வஸ்துவில் தான் இருக்கிறது. ஞானம் என்பது அவரவர்களுக்கு எப்போதும் அபரோக்ஷமாகவே ஏற்படுகிறது. ஆகவே, அபரோக்ஷமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபஞானம், என்பது அபரோக்ஷமாகத்தான் ஏற்படவேண்டும்.

**பூர்வ :** சப்தமானது ஒரு வஸ்துவை, அதன் ஜாதியையோ, அல்லது குணத்தையோ, அல்லது க்ரியையோ, அல்லது ஸம்பந்தத்தையோ முன்னிட்டே அந்த வஸ்துவை சப்தம் தெரிவிக்கமுடியும். ஆகையால், ஜாதிமுதலான, எந்தவிதமான தன்மைகளும் அற்றதான, நிர்விசேஷமாகவும், நிர்தர்மகமாகவும் இருக்கின்ற ப்ரஹ்மஸ்வரூபத்தை சப்தமானது நேரிடையாக தெரிவிக்கமுடியாது. ஆகவே, அவ்யவஹிதமாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் அபரோக்ஷமாக இருந்தபோதிலும், சப்தம் பரோக்ஷமாக தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி, சப்தம் அபரோக்ஷமாகவேப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானல், ப்ரமாணத்தின் ஸ்வபாவத்திற்கு விரோதமாக இருப்பதால், அதைப்ராந்தி ஞானமென்றே சொல்லவேண்டும்.

**124. அவதாரிகை :**

**பூர்வ :** சப்தம் என்ற ப்ரமாணமானது, வஸ்து எப்படி இருக்கின்றதோ அப்படியே ஞானத்தை உண்டுபண்ணுகின்றது என்றே சொல்லவேண்டும். அதனல் அபரோக்ஷமான ப்ரஹ்மத்தை அபரோக்ஷமாகவே தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும் என்பது ந்யாயந்தான். ஆனலும், பரோக்ஷஞானத்தை உண்டுபண்ணக்கூடிய சக்திதான் சப்தத்தில் இருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

वस्त्वस्तु नित्यमपरोक्षमिदं तु वाक्यं तद्वस्तु वक्तुमपरोक्षमशक्तमेव ।
न ह्यस्ति शब्दजनिताऽत्र जगत्त्रयेऽपि बुद्धिः करोति खलु या विषयापरोक्ष्यम् ॥

**ச்லோகார்த்தம் :** நித்ய அபரோக்ஷமாக வஸ்து இருந்தபோதிலும், வாக்யமானது அந்த வஸ்துவை அபரோக்ஷமாக அறிவிப்பதற்குரிய (சாமர்த்யம்) சக்தி உடையதாக ஆகாது. ஏனெனில், சப்தத்தினல் அபரோக்ஷஞானம் ஏற்படுவதாக, மூன்று லோகத்தில் எங்கு விசாரித்தபோதிலும் அறியப்படவில்லை.

**வ்யாக்யானம் :** ஆத்மாநித்ய அபரோக்ஷ வஸ்துவாக இருந்தபோதிலும், சப்தம் என்பது பரோக்ஷஞானத்தை மட்டுமே உண்டுபண்ணக்கூடிய சக்தி உடையதாக இருக்கின்றதால் அபரோக்ஷ வஸ்து ஞானத்தை உண்டுபண்ணமுடியாது. ஸ்வர்க்காதிகளை சப்தம் பரோக்ஷமாகவே தெரிவிக்கின்றது. அதேபோல் வேதாந்தவாக்யங்களும் சப்தமாக இருப்பதால் பரோக்ஷஞானத்தையே உண்டுபண்ணுகிறது என்றே சொல்லவேண்டும்.

**125. அவதாரிகை :**

கீழே 'ஸர்வத்ரவஸ்துஷு' என்று ஆரம்பிக்கப்படும் (107 வது) ச்லோகத்தில், நித்ய சைதன்யஸ்வரூபமாகவும், ஸ்வயம்ப்ரகாசமாகவும் இருக்கின்றஆத்மஸ்வரூபத்தில் ப்ரமாணத்தினல் உண்டுபண்ணக்கூடிய தன்மை என்ன இருக்கமுடியும்? என்றும், அதனல், அஜடமான ஆத்மஸ்வரூபவிஷயத்தில் ப்ரமாணத்திற்கு தேவையே இல்லை என்றும் ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு உத்தரமாக, ஸம்வித்ஸ்வரூபத்தில் ப்ரமாணம் என்பது இல்லாத எதையும் உண்டுபண்ணவில்லையென்றலும், ஞானத்தினல் நிவர்த்திக்கக்கூடிய அஞ்ஞானம் என்பது இருப்பதால் ப்ரமாணம் அவஸ்யம் தேவை என்று பதில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் சொல்லப்பட்ட சித்தாந்தத்தை கண்டனம் செய்வதற்காக அந்த சித்தாந்தத்தை பூர்வபக்ஷியினல் இங்கு அனுவாதம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

अत्राह यद्यपि किमप्युपनेयमत्र चैतन्यवस्तुनि न संभवति प्रमाणैः ।
अस्त्येव तत्र भवभीतिनिदानभूतमज्ञानमात्रमपनेयमनन्यमाने ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாணங்களினுல் சைதன்யஸ்வரூபத்தில் உண்டுபண்ணக் கூடிய விசேஷம் எதுவுமில்லையென்றுலும், ஸம்ஸாரமென்ற அனர்த்தத்திற்கு காரணமான அஞ்ஞானம் என்பது ஸ்வப்ரகாசஸ்வரூபமான ஆத்மாவில் இருக்கின்றதால் அதை நிவர்த்திக்க வேண்டும் என்று சித்தாந்தியினுல் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** இங்கு விசாரிக்கப்படுகின்ற விஷயமானது, பல, ச்லோகங்களுக்கு முன்பே விசாரிக்கப்பட்டிருந்தும், அநிர்வசனீயமான வஸ்து என்பதே எதுவும் இருக்க முடியாது என்று விவாதிக்கின்ற இந்த ஸந்தர்ப்பத்தில், மேலும் இந்த விஷயம் பற்றி விளக்கப்படுகிறது. அதாவது, ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்துவில், ஜடவஸ்துக்களைப் போல், ஸம்வித் என்ற ஞானத்தினுல் ப்ரகாசம் உண்டுபண்ணப்படவேண்டும் என்று சொல்லவில்லை. ஆனுல் ஸ்வப்ரகாசமான ஆத்மஸ்வரூபத்தில் இருக்கின்ற அஞ்ஞானம் என்பதை ப்ரமாணஜன்யஞானம் நிவர்த்திக்கின்றது. ஆகையால் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைக்கொண்டும், ப்ரமாணஸ்வபாவத்தைக் கொண்டும், அத்விதீயமான, ஸ்வப்ரகாசமான ப்ரஹ்ம விஷயத்தில் வேதாந்தம் ப்ரமாணமாக ஆகாது என்று செய்யப்பட்ட ஆக்ஷேபம் சரியல்ல. ப்ரமாணத்தினுல் உண்டுபண்ணக்கூடியது எதுவும் இல்லையென்றுலும், ப்ரமாணத்தினுல் நிவர்த்திக்கவேண்டிய விஷயம் (அபனேயம்) இருக்கின்றதால், ஆத்ம விஷயத்தில் ப்ரமாண விவகாரம் இல்லையென்று சொல்வதற்கு முடியாது.

**126. அவதாரிகை :**

ஆத்ம விஷயத்தில், அஞ்ஞானத்தை விலக்குவதற்காக ப்ரமாணத்தின் தேவை இருப்பதாகச்சொல்லப்படுவது சரியல்ல. ஆத்மவிஷயத்தில் விகல்பம்என்பதே ஸம்பவிக்காது.

**ச்லோகம் :**

नैतत्प्रमाणमपनेतृ सतो न तावन्नैतन्नियोज्यमसतोऽप्युपघातसिद्धयै ।
नाप्यन्यदस्ति सदसद्यदनेन हेयं तस्मात्प्रमाणमपनेतृ न कस्यचिद्वः ॥

**ச்லோகார்த்தம் :** இது சரியல்ல. ஸத்தான ஒரு வஸ்துவைப்ரமாணம் நிவர்த்திக்க முடியாது. அஸத்தான வஸ்து நிவர்த்திக்காக ப்ரமாணம் என்பது உபயோகமாக முடியாது. இதைத்தவிர வேறுக, ஸதஸத் என்ற ஒரு வஸ்து ப்ரமாணத்தினுல் நிவர்த்திக்கக் கூடியதாக இல்லை. ஆகவே, உங்கள் சித்தாந்தப்படி ப்ரமாணம் என்பது எதையும் நிவர்த்திக்க முடியாது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பது, ஞானஸ்வரூபமான ஆத்மாவில் இருக்கவே முடியாது என்பதாலும், அஞ்ஞானம் என்பது அபாவரூபம் என்று சொல்லப்பட்டதாலும், அஞ்ஞானம் ஸத்தா? அஸத்தா? ஸதஸத்தா? என்ற விகல்பத்திற்கே இடமில்லை என்று சொல்லப்பட்டதால், ப்ரமாணத்தினுல் அஞ்ஞானம் நிவர்த்திக்கப்படுகிறது என்று சொல்வதற்கே முடியாது. மேலும், ஸத் என்றுல் ஞானநிவர்த்யமென்று சொல்லமுடியாது. நிஜமான ஸர்ப்பத்தை, ஆயிரக்கணக்கான ப்ரமாணங்கள் இருந்தாலும் நிவர்த்திக்க முடியாது. அஸத் என்று சொல்லப்படுமானுல் அது நித்ய நிவர்த்யமாக இருப்பதால் ப்ரமாணத்தினுல் நிவர்த்திக்கப்பட வேண்டியது எதுவுமில்லை. ஸதஸத்தாக எந்தஒருவஸ்துவும் இல்லாததால் அஞ்ஞான நிவர்த்திக்காக ப்ரமாணம் அவஸ்யம் என்று சொல்லப்படுவதும் பொருந்தாது. (342வது ச்லோகத்தில் இதற்கு பதில் சொல்லப்படுகிறது.)

**127. அவதாரிகை :**

மேலும், ப்ரமாணம் என்பது ஞாபகமேயன்றிகாரகமில்லை. ஆகையால், இந்த காரணத்தைக்கொண்டும், அஞ்ஞானநிவர்த்திக்காக ப்ரமாணம் என்று சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

मानं न कारकमिति प्रथितं पृथिव्यां स्याचेत्क्रियावदिदमुज्झति मानभावम् ।
जन्यं न मानफलमित्यपि युष्मदीयाः संविद्रते न खलु जातुचिदक्षरेऽस्मिन् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாணம் காரகமில்லை என்பது லோகப்ரசித்தம். ப்ரமாணம் காரகமாக இருக்குமானல் (க்ரியையைப்போல்) ப்ரமாணம் என்ற தன்மையை இழந்து விடுகிறது. ப்ரமாணபலம் என்பது ஜன்யமல்ல. ப்ரமாணம் காரகம் என்று சொல்லப் படுமானல் அதுவும் ஜன்யமென்று சொல்லநேரிடும். நித்யமான ஸம்வித்ஸ்வரூபத்தில் க்ரியை என்பதே ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞாதஞாபகம் ப்ரமாணம். இல்லாத ஒரு வஸ்துவை உற்பத்தி செய்வது எதுவோ அது காரகம். ஆகவே, ப்ரமாணம் என்பது அஞ்ஞானத்தை நிவர்த்திக் கிறது என்று சொல்லப்படுமானல், மண்வெட்டி, கோடலி முதலானவை எப்படி காரகமோ அதுபோல் ப்ரமாணமென்பதும் காரகம் என்று சொல்லநேரிடும். ப்ரமாகரணம் ப்ரமாணம் என்று, ப்ரமையை உண்டு பண்ணுவது எதுவோ அது ப்ரமாணம் என்று சொல்லப்படுவதால், ப்ரமாணம் என்பது ஞாபகமாகவும் காரகமாகவும் இருக்கிறது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ஞானம் என்பது நித்யம், ப்ரமாண ஜன்யமல்ல. கடபடாதி ஜடவஸ்துக்களின் ஞானமே ப்ரமாண ஜன்யமல்ல என்று சொல்லப் படுவதால், ஸ்வரூபஞானம், ஜன்யமென்று எப்படிச் சொல்லமுடியும்?

அதாவது கடாதி விஷயங்களில், வ்ருத்திதான் ஜன்யமென்றும், ஞானம் ஜன்யமல்ல வென்றும், கடஅவச்சின்னசைதன்யம், கடம் என்ற உபாதியில் அபிவ்யக்தமாகிறது என்றும், வேதாந்திகளான உங்களால் சொல்லப்படுகின்றதால், கடாதி ஞானமோ, ஸ்வரூபஞானமோ ப்ரமாண ஜன்யமென்று சொல்லப்படுவது பொருந்தாது.

**128. அவதாரிகை :**

கீழே அஞ்ஞானம் என்பது ஸத் என்ருே அஸத் என்ருே, ஸதஸத் என்ருே சொல்ல முடியாது என்பதால், அநிர்வசனீயமாகவும், எந்த வஸ்துவும் சித்திக்க முடியாது என்றும், அஞ்ஞானம் என்பது ப்ரமாணத்தினுல் நிவர்த்திக்கப்படுகிறது என்று சொல்லப் படுமானல், ப்ரமாணம் என்பதை காரகம் என்று சொல்ல நேரிடும் என்றும் தோஷங்கள் சொல்லப்பட்டது. இவ்வித தோஷங்கள் எதுவுமில்லையென்று உங்களால் நிரூபணம் செய்யமுடியாது.

**ச்லோகம் :**

नाद्यापि वेद्म्यहमनिर्वचनीयभाषां सर्वप्रवादहृदयान्यपि गाहमानः ।
तात्पर्यतो न च तथाविधमस्ति किञ्चिल्लोकप्रसिद्धमपि यद्विषयेयमिष्टा ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வ சாஸ்த்ரங்களின் கருத்தை (ஹ்ருதயத்தை) விசாரித்த பிறகும், அநிர்வசனீயமாக ஒரு வஸ்து இருக்கிறதென்று அறிந்து கொள்ள யாராலும் முடியவில்லை. இப்பேர்ப்பட்ட ஒரு வஸ்து இருப்பதாக லோகத்திலும் ப்ரஸித்தமில்லை.

**வ்யாக்யானம் :** ஸர்வ சாஸ்திரங்களையும் விசாரித்தபோதும் கூட, அநிர்வசனீயமாக ஒரு வஸ்து இருப்பதாக சொல்லப்படவுமில்லை, லோகத்திலும் ப்ரஸித்தமாக இல்லை. ஆகவே,

ஸத் என்றோ அஸத் என்றோ ஸதஸத் என்றோ ஒரு வஸ்து சொல்ல முடியவில்லை யென்றால் ஸதஸத்விலக்ஷணமாகவும், அநிர்வசனீயமாகவும் எந்த ஒரு வஸ்துவும் இருப்பதாகச் சொல்ல முடியாது. ஏனெனில், அநிர்வசனீயம் என்ற அத்வைதபாஷையும் யாராலும் அறியப்படவில்லை. அதுமட்டுமல்ல, அநிர்வசனீயமான வஸ்துவின் லக்ஷணம் என்ன? அவ்விதம் ஒரு வஸ்து இருக்கிறதென்பதில் ப்ரமாணம் என்ன? என்று என்னாலும் அறியமுடியவில்லை, மற்றவாதிகளாலும் அறியமுடியவில்லை. நூற்றுக்கணக்கான வாதிகளின் ஹ்ருதயத்தினால் தீரவிசாரித்தும், அவர்களாலும் இந்த விஷயம் க்ரஹிக்கப்படவில்லை. ஆகையால் ஸதஸத்விலக்ஷணமாக அநிர்வசனீயமாக ஒரு வஸ்து இருக்கிறதென்று, உங்களால் சொல்லப்படும் வாதத்தை ஒப்புக்கொள்வதற்கு முடியாது. (339 & 340வது ச்லோகங்களில் இதற்கு பதில் சொல்லப்படுகிறது.)

**129. அவதாரிகை :**

ஆகவே, ஸாபேக்ஷமாக இருப்பதாலும், ப்ரயோஜனபர்யந்தம் இல்லாததாலும், ப்ரமாணபலம் ஸம்பவிக்கமுடியாது. அதனால் வேதாந்தமானது அத்யயனமாத்ரபலம் என்று சொல்லலாமேயன்றி ப்ரஹ்ம விஷயத்தில் ப்ரமாணமென்று சொல்லமுடியாது என்ற, ஸமன்வய சூத்ரத்திலுள்ள (இரண்டு பூர்வ பக்ஷங்களில்) முதல் பூர்வபக்ஷத்தை இதுவரை விளக்கப்பட்டது. இப்போது இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

तस्मात्प्रमाणफलमत्र निरूप्यमाणं ब्रह्मात्मवस्तुनि न संभवतीह किञ्चित् ।
कृत्यं विना न च निरूपयितुं प्रमाणं वेदान्तवाक्यमिह शक्यमनर्थकत्वात् ।।

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் விசாரிக்கப்பட்டதனால், ப்ரஹ்மாத்ம வஸ்து விஷயத்தில், எந்தவிதமான ப்ரமாணபலமும் ஸம்பவிக்கமுடியாது என்பதால் ப்ரமாணத்தினால் செய்யக் கூடிய கார்யம் எதுவுமில்லை. ஆகையால் வேதாந்த வாக்யம், அனர்த்தகம் என்பதால் ப்ரமாணமென்று நிரூபணம் செய்யமுடியாது.

**வ்யாக்யானம் :** வேதாந்தம் என்ற ப்ரமாணத்தினால் ப்ரஹ்ம விஷயமான ஞானம் ஏற்படுகிறது என்றும் சொல்லமுடியாது, அல்லது அஞ்ஞானம் நிவர்த்திக்கிறது என்றும் சொல்லமுடியாது. இந்தவிதம் விசாரிக்கப்பட்ட விஷயம் முடிவுபெறுகிறது.

**130. அவதாரிகை :**

இவ்விதம் சித்தவஸ்துவான ப்ரஹ்மதத்வத்தை போதிப்பதில் சப்தத்திற்கு சக்தி இருப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்ட போதிலும், ப்ரஹ்ம விஷயத்தில் வேதாந்தம் அப்ரமாணம் என்றே சொல்லவேண்டும். என்ற ஸமன்வய சூத்ரத்திலுள்ள இரண்டாவது பூர்வ பக்ஷத்தை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कार्यान्वयान्वयिनि वस्तुनि शब्दशक्तिं श्रोतुः प्रवर्तकधियं परिकल्प्य बालः ।
चेष्टावशात्पुनरपि प्रविभज्य भागं भागस्य वाचकमिति स्वयमेव वेति ।।

**ச்லோகார்த்தம் :** ச்ரோதாவின் ப்ரவர்த்தியிலிருந்தே, அவனுக்கு ஏற்பட்டிருக்கின்ற ப்ரவர்த்தக ஞானத்தை, பாலகன் ஒருவன் அனுமானிக்கின்றான். பிறகு வாக்யத்தை விபாகம் செய்து, அதிலுள்ள பாகங்கள் ஒவ்வொன்றும் வாக்யார்த்தத்தின் ஒவ்வொரு பாகத்தை தெரிவிக்கிறதென்று அறிகிறான். இவ்விதம் கார்யான்வயத்தில் அன்வயிக்கின்ற வஸ்துவில் தான் சப்தசக்தி இருப்பதாக அறிகிறான் என்று வேறு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** லோகத்தில், ஒருவரால் ஒரு வாக்யம் ப்ரயோகம் செய்யப்படுகின்ற போது, அந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு என்ன அர்த்தம்? எப்படி சக்தி க்ரஹம் ஏற்படுகிறது? என்றால், உதாரணமாக, 'காமானய' என்று உத்தமவ்ருத்தன் ஒரு வாக்யப்ரயோகம் செய்கிறான். இதைக் கேட்ட மத்திமவ்ருத்தன் எழுந்துபோய் பசுவைக் கொண்டு வருகிறான். அதன்பிறகு, 'அஸ்வமானய' 'காம்பதான' என்று உத்தமவ்ருத்தன், வாக்யப்ரோயகம் செய்கிறான். அதைக்கேட்ட மத்திமவ்ருத்தன், குதிரையைக் கொண்டு வருகிறான். பசுவைக் கட்டுகிறான். இந்த விவகாரங்களை கவனித்துக் கொண்டிருக்கின்ற பாலகன், உத்தமவ்ருத்தனால் சொல்லப்பட்ட வாக்யத்திலிருந்தே, மத்திமவ்ருத்தனுக்கு, இந்தக் கார்யத்தைச் செய்யவேண்டுமென்ற ஞானம் ஏற்பட்டிருக்கவேண்டுமென்று, தன்னுடை பூர்வ அனுபவத்தைக்கொண்டு, மத்திமவ்ருத்தனின் ஞானத்தை அனுமானிக்கின்றான். அதன்பிறகு 'காமானய' என்ற வாக்யத்திற்கு 'பசுவைக் கொண்டு வா' என்று முதலில் ஸாமான்யமாக அந்தவாக்யத்திற்கு அர்த்தத்தை க்ரஹிக்கின்றான். அதன்பின் 'அஸ்வமான்ய' 'காம்பதான' என்று வாக்யப்ரயோகம் செய்வதைக்கேட்ட மத்திமவ்ருத்தன், பசுவை கட்டுவதையும், குதிரையைக் கொண்டு வருவதையும் பார்த்து, இந்த செயல்களின் மூலமாகவே, அந்தந்த பதங்களுக்குரிய அர்த்தத்ததை விசேஷமாக அறிகிறான். அதாவது ஒரு பதத்தை மாற்றி மற்றொரு பதத்தை சேர்க்கின்றபோது ஏற்படும் செயல்களைக் கொண்டே அந்தந்த பதங்களுக்குரிய தனித்தனி அர்த்தத்தை அறிந்துகொள்கிறான். இந்தவிதம், ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள் ஒரு க்ரியையுடன் அன்வயித்தே அர்த்த போதமாகிறது என்பதில் வ்யபிசாரமே இருக்கமுடியாது. ஆகவே கார்யான்விதமாகவே பதங்கள் அர்த்தபோதகமாக முடியும்.

(இவ்விதம் சொல்லப்படுவது சரியல்லவென்று வேறு சிலரால் ஆக்ஷேபிக்கப் படுகிறது:) வாக்யங்கள் க்ரியான்விதமாக இருந்தால்தான் அர்த்தபோதகமாகும் என்று தீர்மானிக்கப்படுவது சரியல்ல. ஏனெனில் பதங்களுக்கெல்லாம் கார்யத்தில் அன்வயம் இருந்தால்தான் அந்தபதங்களின் அர்த்தம் அறியப்படும் என்று சொல்லப்படுமானால், க்ரியாபதம் என்பதும் பதமானதால், அது எதனுடன் அன்வயித்து தன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது? உதாரணமாக 'ஆனயனம்' என்ற பதம் 'கொண்டுவருவது' என்ற க்ரியையைத் தெரிவிக்கின்றது. இந்த க்ரியாபதத்துடன் மற்றொரு க்ரியாபதம் அன்வயிப்பதாகச் சொல்லவில்லையென்றும், க்ரியாபதத்தைக் காட்டிலும் அன்யமான ஒரு பதத்துடன் அன்வயிக்கிறது என்றும் சொல்லலாமே? என்றால், அன்யபதம் என்பது சித்தபதத்தைத் தவிர வேறு என்னபதம் இருக்கமுடியும்? ஆகவே, க்ரியாபதம் சித்த பதத்துடன் அன்வயித்து வாக்யம் அர்த்தபோதமாகிறது என்று சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானால் க்ரியான்விதே சப்தசக்தி: என்றும் சித்தான்விதே சப்தசக்தி: என்றும் இரண்டு சக்திகளை ஒத்துக்கொள்ள வேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது அதனால் கௌரவ தோஷம் ஏற்படும். இந்த தோஷத்தை பரிகாரம் செய்வதற்காக, கார்யம், அகார்யம் என்று சொல்லப்படும், சித்தபதம் சாத்யபதம் என்ற இரண்டிற்கும் ஒன்றுக்கொன்று அன்வயம் ஏற்படுவதால் அர்த்தபோதம் ஆகிறது என்று சொல்வதுசரியல்ல. அதனால் உத்தம, மத்திமவ்ருத்தவிவகாரத்தினாலேயே வாக்யம் அர்த்தபோதமாகிறது என்றே சொல்லவேண்டும் என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது.

**131. அவதாரிகை :**

இவ்விதம், லிஙாதிகளுக்கு எதுகார்யமோ, அந்த கார்யத்துடன் அன்வயிப்பது எதுவோ, அதில்தான் சப்தத்திற்கு சக்திக்ரஹம் ஏற்படும் என்று சொல்லப்படுமானால்,

ஒரே அர்த்தம் அவச்சேதகமாகவும், அவச்சேத்யமாகவும் ஆகிறது என்று சொல்லநேரிடுமே? என்றால்,

**ச்லோகம் :**

त्यक्तः कार्यान्वितार्थं वदितुमलमयं शब्द इत्येष पक्षो नोक्तो योग्येतरार्थान्वितमिति तु पुनः पूर्वमप्येष पक्षः ।
किं तु स्यादस्य शक्तिर्निजसहजवशादन्वितार्थाभिधाने योग्यत्वादेस्तु पश्चात्स्वयमुपनिपतत्यस्य कार्यैदमर्थ्यम् ॥

**ச்லோகார்த்தம் :** சப்தம், கார்யான்விதமான அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்ற பக்ஷத்தை விட்டுவிடுகிறேன். யோக்ய இதரான்விதே சப்தசக்தி என்ற பக்ஷத்தையும் முன்பே விடப்பட்டது. ஆனால் சப்தமானது தன்ஸ்வாபாவிக சக்தியினால் அந்தந்த பதங்களுடன் அன்வயமான அர்த்தத்தை தெரிவிக்கிறது என்றும், அதன்பின் யோக்யதை முதலான காரணங்களினால் கார்யம் என்பதையே (தாத்பர்யமாக) ப்ரதானமாக போதிக்கிறது என்றே சொல்லலாம்.

**வ்யாக்யாணம் :** இதுவரை விசாரிக்கப்பட்ட முறையில் க்ரியான்விதே சப்தசக்தி: என்றோ சித்தான் விதே சப்தசக்தி : என்றோ சொல்லமுடியாது என்றும்; அதேபோல் யோக்ய இதரான்விதே சப்த சக்தி: என்று யோக்யம் என்ற விசேஷணமும் தேவையில்லை என்றும் சொல்லப்பட்டது. பதங்கள் ஒவ்வொன்றும் தன்னைத்தவிரவேறான ஒருபதத்துடன்தான் அன்வயிக்கும் என்பதால், இதரான்விதே என்றும் சொல்லத்தேவையில்லை. அயோக்யமாகவும், அநிதரமாகவும் இருக்கின்றபதத்துடன் அன்வயம் என்பதே ஏற்படாது. ஆகையால், 'அன்விதே அர்த்தே சப்தசக்தி' என்று சொல்லப்படுமானால், எது அன்வயிக்கக்கூடிய யோக்யமுள்ளதாகவும், இதரமாகவும் இருக்கின்றதோ அதனுடன் பொருந்தி அதன் அர்த்தத்தை தெரிவிக்கிறது என்று சொன்னால் போறுமானது. உதாரணமாக 'நீலச்சாஸௌகடச்ச' என்ற வாக்யத்திலுள்ள நீலம் என்ற சித்த பதமும், கடம் என்ற சித்த பதமும் சேர்ந்து அர்த்த போதமாகிறது என்றே சொல்லலாம், ஆகவே, க்ரியாபதம் இருந்தால்தான் அர்த்தபோதம் ஏற்படும் என்று, சொல்கின்ற உன் இஷ்டம் நிறைவேறாது.

**பூர்வ :** ஒரு சித்தபதத்துடன் மற்றொரு சித்தபதம் அன்வயிக்கிறதென்று சொல்லமுடியாது. 'குணானாம்ச பரார்த்தத்வாத்' என்று ஜைமினியினால் சொல்லப்படும், ந்யாயத்தின்படி இது பொருந்தாது. அதாவது, குணம் என்பது விசேஷ்யத்துடன்தான் அன்வயிக்கமுடியும். ஆகவே, இரண்டும் சித்தபதமாக இருந்தாலும்சரி அல்லது இரண்டும் க்ரியாபதமாக இருந்தாலும்சரி, இரண்டும் ஒன்றுக்கொன்று அன்வயிக்கமுடியாது. சித்தபதம் கார்யபதத்துடனும் கார்யபதம் சித்தபதத்துடனும் அன்வயித்தே அர்த்த போதகமாகும் என்றே சொல்லவேண்டும் என்றாலும், கார்யபதத்திற்கே ப்ராதான்யம் சொல்லப்படவேண்டும். ஆகவே, ஸர்வம் வாக்யம் க்ரியாபரம் என்று 'பூதம் பவ்யாய உபதிச்யதே' என்ற ந்யாயத்தைக் கொண்டு, சொல்லப்படவேண்டும். எந்த வாக்யம் கார்யத்தை ப்ரதானமாக போதிக்கின்றதோ அந்த வாக்யமே ப்ரமாணம் என்று சொல்லவேண்டும்.

**132. அவதாரிகை :**

ஸர்வம் வாக்யம் கார்யம் என்று சொல்லப்படுமானால், வேதவாக்யங்கள், எந்த கார்யபதத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிக்கின்றது? கார்யம் என்றால் என்ன? அதன்லக்ஷணம் என்ன? என்றால்

**ச்லோகம் :**

प्रवृत्त्यभावस्य विरोधि कार्यं कालत्रयानन्वितमाहुरेके ।
स्वगोचरस्येप्सितसाधनत्वं विज्ञापयत्प्रेरकमाहुरन्ये ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரவ்ருத்தி அபாவத்திற்கு விரோதமாகவும், காலத்ரயஸம்பந்தம் அற்றதுமாக எது இருக்கின்றதோ அதுவே கார்யம் என்று சிலரால் சொல்லப்படுகிறது. வேறுசிலர், தன்னுடைய இஷ்டத்திற்கு ஸாதனம் என்று தெரிவிப்பதன் மூலம், எந்த கார்யமானது ப்ரேரகமாக இருக்கின்றதோ அதையே கார்யம் என்று சொல்லவேண்டும் என்று சொல்கிறார்கள்.

**வ்யாக்யானம் :** எந்தப்ரேரணையினால், ஒருவன் ஒருகார்யத்தைச்செய்வதற்கு ப்ரவர்த்திக்கின்றானோ, அதையே கார்யம் என்று சொல்லவேண்டும். லிங், லோட், தவ்ய ப்ரத்யயமான விதி என்பதின் சக்தியைத்தான், ஏவல்என்றும் ப்ரவர்த்தனை என்றும் கார்யம் என்றும் சொல்கிறோம். உதாரணமாக 'ஸ்வர்க்ககாமோயஜேத' என்ற சப்தப்ரயோகத்தைக் கேட்பதற்கு முன்பு, ப்ரவர்த்திக்காமல் இருந்த ஒரு புருஷனை 'யஜேத' என்ற சப்தமானது யாகத்தில் ப்ரவர்த்திக்கும்படிச்செய்கிறது. அதனால் ப்ரவர்த்தி அபாவத்திற்கு விரோதமான ப்ரேரணைஎன்பதே லிங்ர்த்தமான கார்யம் என்று சொல்லவேண்டும்.

இந்தவிதம் சொல்லப்படுமானால், கார்யத்திற்கு சொல்லப்பட்ட இந்தலக்ஷணம், ஈச்வரன், காலம், அத்ருஷ்டம், என்ற எல்லாவற்றிலும் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். அதனால் சொல்லப்பட்டலக்ஷணத்தில், அதிவ்யாப்திதோஷம் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில், எந்தக்கார்யத்தைச் செய்யவேண்டுமானாலும், ஈச்வரன், காலம், அத்ருஷ்டம் எல்லாம் சேர்ந்தே காரணமாகிறது. ஆகவே ப்ரவர்த்திக்கு காரணமாகின்றதன்மை இந்தமூன்றிலும் இருக்கின்றதால் அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கின்றது.

இந்த தோஷம் ஏற்படாது. ஏனெனில் ஏவல் என்ற ப்ரவர்த்தனை என்பது அந்த அதிகாரியை எப்படி குறிப்பிட்ட கார்யத்தில் ப்ரவர்த்திக்கச் செய்கின்றதோ, அதுபோல், ஈச்வரன் முதலானவைகள் குறிப்பிட்ட கார்யத்தில் மட்டும் ப்ரவர்த்திக்கச்செய்வதாகச் சொல்லமுடியாது. சாதாரணமாக ஈச்வராதிகள் ஸர்வகார்யங்களுக்கும் தேவை என்பதால் அவைகளை காரணம் என்று சொல்லப்படுகிறதேயன்றி ப்ரவர்த்திக்கு காரணம் என்று சொல்லப்படுவதில்லை. ஏவலைக் கேட்டவுடன் ப்ரவர்த்திப்பதற்கு ப்ரேரணை செய்வது எதுவோ, அந்தகார்யத்தையே அஸாதாரணகாரணம் என்று சொல்லவேண்டும். அதனால் அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கமுடியாது. மேலும், காலம் என்பது ப்ரவர்த்தி, நிவ்ருத்தி என்ற இரண்டிற்கும் காரணமாக இருக்கின்றது. அதனால் காலம் என்பதை ப்ரவ்ருத்தி அபாவ விரோதி என்று சொல்லமுடியாது. ஆகவே, ப்ரவ்ருத்தி அபாவ விரோதிரூபம் என்றும் காலத்ரய அனன்விதம் கார்யம் என்றும் விசேஷணம் சொல்லப்படுமானால், காலத்ரய ஸம்பந்த மில்லாமல் கார்யத்தில் ப்ரவர்த்திக்கச்செய்வது எதுவோ அது கார்யம் என்று சொல்லலாம். இந்தவிதம் சொல்லப்படுமானால் 'ராகம்' என்பதும் இதனால் வ்யாவ்ருத்தி செய்யப்படுகிறது. அதாவது, ராகம் என்பதும் ஒருவனை கார்யத்தில் ப்ரவர்த்திக்கச்செய்கிறது. அதனால் கார்யத்தில் சொல்லப்படும் மற்ற லக்ஷணம் ராகத்திலும் பொருந்துகிறது. அதனால் அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கலாம். அதனால் இந்த தோஷத்தை விலக்குவதற்காகவே, காலத்ரய அனன்விதம் என்று விசேஷணம் சொல்லப்படுகிறது. இதன் மூலம் ராகத்தை வ்யா வ்ருத்தி செய்து கார்யம் என்பதற்கு லக்ஷணம் சொல்கிறோம். ஆகவே சாப்தீபாவனை என்பதே ப்ரவர்த்தனை. காலத்ரய ஸம்பந்தமென்பது இல்லாமலேயே 'யஜேத' என்ற சப்தத்தைக் கேட்டவுடனேயே, யாகம் என்ற க்ரியையில் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. இவ்விதம் ப்ரவ்ருத்தி அபாவ விரோதி ரூபமாகவும், காலத்ரய அனன்விதமாகவும் இருப்பது எதுவோ அதையே கார்யம் என்று பாட்டர்களால் 'கார்யம்' என்பதற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது.

காலத்ரய அனன்விதம் என்பது கார்யத்திற்கு லக்ஷணம் என்று சொல்லப்படுமானல் 'கடம்' என்ற சப்தமும் காலத்ரய சம்பந்தம் இல்லாததால் அதையும் கார்யம் என்று சொல்லநேரிடுமே? என்ருல், 'கடம்' என்ற சப்தம் ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுவதற்கு ப்ரயோஜகமாகாது. கார்யம் என்பது ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுவதற்கு ப்ரயோஜனமாக இருக்கின்றது. அதனுல் கடம் என்பதை கார்யம் என்று சொல்லமுடியாது. ப்ரவ்ருத்தி அபாவவிசேஷணமும், காலத்ரய அனன்விதம் என்ற விசேஷணமும், அதிவ்யாப்தி தோஷத்தை நிவர்த்திக்கின்றது. ஆகவே 'இது என்னுல் செய்யப்படவேண்டும்' என்ற கர்த்தவ்யஞானமானது, காலத்ரய ஸம்பந்தமில்லாமலேயே ஏவல் என்ற ப்ரவ்ருத்தியை உண்டு பண்ணுகின்றது. அதனுல் ப்ரவ்ருத்தி ப்ரயோஜகம் கார்யம் என்று சொல்லலாம். இதனுல் லௌகிகமான 'கடமானய' என்ற வாக்யத்திற்கும், 'ஸ்வர்க்ககாமோயஜேத' என்ற வைதிக சப்தத்திற்கும் சொல்லப்பட்ட கார்யலக்ஷணம் பொருந்துகிறது. மேலும், ஸ்வர்க்கம் என்றபலனை அடைவதற்கு அனேக சாதனங்கள் இருக்கின்றது. அதாவது, ஜ்யோதிஷ்ட்ஹோமம் என்பதும், விஸ்வஜித்யாகம் என்பதும் நித்யகர்மானுஷ்ட்டானங்களும் ச்ரேயஸ் ஸாதனம் என்று, ஸ்வர்க்கத்திற்கு அனேக ஸாதனங்கள் சொல்லப்படுகிறது. அதனுல் ஜ்யோதிஷ்ட்ஹோமேன ஸ்வர்க்க காமோயஜேத' என்ற வாக்யத்தைக்கேட்டவுடன் இதுச்ரேயஸ்ஸுக்கு ஸாதனம் என்பதால் அந்த கார்யத்தில்ப்ரவர்த்திக்கின்ருன் என்று இஷ்ட்டஸாதனதாஞானம் ப்ரவர்த்தகம் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஏனெனில் ச்ரேயஸ் ஸாதனம் என்பது அனேகமாக இருப்பதால் அதிவ்யாப்தி தோஷம்ஸம்பவிக்கின்றது. ஆகவே இஷ்ட்ட ஸாதனதாஞானம் ப்ரவர்த்தகம் என்று சொல்லமுடியாது. காலத்ரய அனன்விதமாகவும் ப்ரவ்ருத்தி அபாவ விரோதியாகவும் இருப்பது எதுவோ அதுவே கார்யம் என்று சொல்லப்படுமானுல் அதிவ்யாப்திதோஷம் ஸம்பவிக்கமுடியாது.

கார்யம் என்பதற்கு வேறு ஒரு லக்ஷணம் சொல்லலாமே? அதவாது, வாக்யம் (சப்தம்) என்பது ஞாபகமேயன்றி ப்ரேரகமில்லே. அதனுல், தாத்வர்த்தத்தினுல் தெரிவிக்கப்படும் யாகாதி கார்யங்களைக் காட்டிலும் வேறுனது என்றும், அந்த கார்யம் என்பது தன்விஷயத்தில் இஷ்ட்ட ஸாதனம் என்பதைத் தெரிவிப்பதுடன், கார்யத்தைச் செய்வதற்கும் ப்ரேரகமாக இருப்பது எதுவோ அதையே கார்யம் என்று சொல்லலாமே? என்ருல்,

இந்தவிதம் கார்யம் என்பதற்கு லக்ஷணம் சொல்லப்படுமானுல் 'அஹரஹ: ஸந்த்யாம் உபாஸீத' என்ற விதி வாக்யத்திற்கு பலன் ஏதும் சொல்லப்படாததால் 'இது இஷ்ட்ட ஸாதனம்' என்று அறிந்து கொள்ளவே முடியாது. 'உபாஸீத' என்ற ஏவல் மட்டும் இருக்கின்றது. அதனுல் இந்த ஏவலுக்கு ஸந்த்யாவந்தனம்விஷயம் என்பது மட்டுமே இந்த வாக்யத்தினுல் அறியப்படுகிறது. அதனுல் இந்த வாக்யம் கார்யமா? இல்லையா? என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. அதனுல் இவ்விதம் சொல்லப்படும் கார்யலக்ஷணத்தில் 'அவ்யாப்தி' தோஷம் ஸம்பவிக்கின்றதே? என்ருல்,

'அஹரஹ: ஸந்த்யாம்உபாஸீத என்ற வாக்யத்தில் பலன் ஏதும் சொல்லப்படவில்லையானுலும், 'செய்' என்ற ஏவலே இஷ்ட்டஸாதனம் என்பதை தெரிவிக்கின்றது என்று சொல்லலாம். அதாவது ஏவல் என்ற நியோகமானது, உத்தரவை நிறைவேற்ற வேண்டுமென்ற இஷ்ட்டத்தினுல், ஏவலைக் கேட்டவுடன் ப்ரவர்த்திக்கிருன் அதனுல் நியோகத்தையே இஷ்ட்டம் என்று சொல்லலாமே? என்ருல், யாகம் இஷ்ட்ட ஸாதனம் என்ற ஞானமே ப்ரவர்த்திக்கு காரணம் என்று சொல்லப்படுமானுல் ஞானத்தில் அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கிறதே?

ஞானம் என்பது ஞாபகமேயன்றி ப்ரேரகமில்லே. அதனுல் அதிவ்யாப்திதோஷம் ஸம்பவிக்காது.

**133. அவதாரிகை :**

நியோகவாதிகளால், கார்யம் என்பதற்கு வேறொரு லக்ஷணம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

या नान्यमुद्दिश्य कृतिः प्रवृत्ता तयैव यद्व्याप्यतया प्रतीतम् ॥
तदेव कार्यं कथयन्ति केचिद् विचक्षणाः कार्यनिरूपणायाम् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த க்ருதியானது வேறு எதையும் உத்தேசிக்காமல், ப்ரவர்த்திக்கின்றதோ, அந்தக்ருதியினுல் எது வ்யாப்யமாக அறியப்படுகிறதோ, அதுவே கார்யம் என்பதாக, கார்ய நிரூபணத்தில் நிபுணர்களாக இருக்கின்ற வேறு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** க்ருதிவ்யாப்யம் எதுவோ அதுவே கார்யம் என்று சொல்லவேண்டும் என்பதாக, கீழே கார்யத்திற்கு சொல்லப்பட்ட இரண்டு லக்ஷணங்களைக் காட்டிலும் வேருக, மூன்ருவதாக ஒரு லக்ஷணம் சொல்லப்படுகிறது.

அதாவது 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற வாக்யத்தைக் கேட்டவுடன் அதன் பலனை அடையவேண்டுமென்று விரும்புகின்றவன் யாகத்தைச் செய்கிருன். ஆனுலும், ஸ்வர்க்கம் என்ற பலன் உடனே கிடைப்பதில்லை. ஜன்மாந்தரத்தில் தான் அடைகிருன். யாகம் என்ற க்ரியையில் 'செய்' என்ற நியோகத்தைக்கேட்டவுடனே, அந்த கார்யத்தில் ப்ரவர்த்திக்கிருன். அதனுல் யாகம் என்பதில், எப்படிநியோகம் இருக்கிறதோ அதுபோல் ஸ்வர்க்கம் என்பதில் நியோகமில்லை. அதனுல் ஸ்வர்க்கம் என்ற பலத்தில் க்ருதி வ்யாப்யத்வமில்லை. ஆகவே, நியோகத்தை உத்தேசித்தே கார்யத்தில் ப்ரவர்த்திக்கின்ருனேயன்றி ஸ்வர்க்கத்திற்காக கார்யத்தில் ப்ரவர்த்திக்கவில்லை. ஏவலை நிறைவேற்ற வேண்டுமென்ற இச்சையினுல் தான் ப்ரவர்த்தி ஏற்படுகிறது. அதனுல் நியோகமே ப்ரதானம். உத்தரவை நிறைவேற்றுவதால் ஏற்படும் பலன் ஸ்வர்க்கம் என்பதால். யாகத்தைச்செய்வது மட்டும் உத்தேச்யமில்லை, பலனும் உத்தேச்யம் தான்.

இவ்விதம் சொல்லப்படுமானுல் ஈப்ஸிதஸாதனத்வம் (இஷ்டஸாதனத்வம்) என்பது ஸ்வர்க்கத்தைஉத்தேசித்துயாகத்திற்கும் இருக்கின்றதால் ஸ்வர்க்கமென்பதும் கார்யமென்று சொல்லநேரிடுமே என்ருல்?

அவ்விதம், சொல்லமுடியாது. ஏனெனில், க்ருதிவ்யாப்யம் கார்யம் என்று சொல்லப்படுவதால், ஸ்வர்க்கம் இருக்கின்றபோது க்ருதிஇல்லை. க்ருதி இருக்கின்றபோது ஸ்வர்க்கமில்லை. அதனுல் கார்யத்திற்கு சொல்லப்படும்லக்ஷணம் ஸ்வர்க்கத்திற்கு ஸம்பவிக்காது. ஆகவே, 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற வாக்யத்தில் ஸ்வர்க்கம் என்பது விசேஷணமாக ஆகிறது. இந்த விசேஷணமே பின்னுல் பலனுக கிடைக்கின்றது. அதனுல் 'க்ருதிவ்யாப்யம் கார்யம்' என்று லக்ஷணம் சொல்வது மிகவும் பொருத்தமாகவே இருக்கிறது.

**134. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானுல், 'கர்த்தும் இச்சாசிகீர்ஷா' என்று, ராகம் என்பதே கார்யம் என்று சொல்லநேரிடுமே? என்ருல் அவ்விதம் சொல்லமுடியாது. ராகத்திற்கு வேருன ஒன்றையே கார்யத்திற்கு லக்ஷணமாகச் சொல்கிருேம்.

**ச்லோகம் :**

भूत्वा रागः कारणं पुंस्प्रवृत्तेर्नैवं कार्यं कार्यरूपं विहाय ।
रूपेणान्येनेष्यतेऽस्या निमित्तं भिन्दन्त्येवं रागकार्ये बहुज्ञाः ॥

**ச்லோகார்த்தம் :** ராகம் என்பது சித்தமாக இருந்து புருஷப்ரவ்ர்த்திக்கு காரணமாகிறது. ஆனுல் கார்யம் என்பது தன்னுடைய ஸாத்யரூபத்தைவிடாமலேயே புருஷப்ரவ்ருத்திக்கு

காரணமாகிறது என்று, ராகத்திற்கும், கார்யத்திற்கும் பேதம் இருக்கின்றது என்று மிகுந்த அறிவாளிகளால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கார்யம் என்று எது குறிப்பிடப்படுகிறதோ, அது ராகம் ஏற்பட்ட பிறகே ஏற்படுகிறது. அதனுல் ஏற்கனவே சித்தமாக இருக்கின்ற ராகத்தை கார்யத்திற்கு லக்ஷணமாகச் சொல்லமுடியாது. கார்யம் என்பது முதலில் சித்தமாக இருந்து ப்ரவ்ருத்திக்கு காரணமாவதில்லை. ஆகையால் எது ஸாத்யத்வம் என்ற தன்மையைவிடாமல், கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றதோ அதையே கார்யம் என்று சொல்கிறோம்.

கார்யத்திற்கு சொல்லப்படும் இந்த லக்ஷணம் லோகத்தில் ப்ரசித்தமாக இல்லை, ராகத்திஞல் தான் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்பதே லோகப்ரசித்தமாக இருக்கிறது. அதனுல் ராகம் என்பதற்கும் கார்யம் என்பதற்கும் பேதம் அறியப்படவில்லையே?

ராகம் என்பதற்கும் கார்யம் என்பதற்கும் சித்தம், சாத்யம் என்ற பேதம் இருக்கின்ற தென்பதை மிகுந்த அறிவாளிகளால்தான் அறிந்துகொள்ளமுடியும். அல்பபுத்தி உடையவர்களால் அறிவதற்கு முடியாது.

**135. அவதாரிகை :**

சப்தம் என்பது, கார்யான்விதமாக இருக்கின்ற அர்த்தத்தையே தெரிவிக்கும் என்று சொல்லப்படுமாஞல், கேவலம் சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்ற வாக்யங்களில் க்ரியாபதம் என்பதே இல்லாததால், வாக்யார்த்த போதமே ஏற்படமுடியாது. அதனுல் வேதாந்தம் என்பது ப்ரமாணம் என்று சொல்வதற்கே முடியாது.

**ச்லோகம் :**

आवापोद्वापहेतोः पदमिदममुकस्याभिधाने समर्थं स्वोत्पत्त्यैवेति शक्तिप्रतिनियममिमं पार्श्ववर्ती तटस्थः ।
जानात्यालोच्य भूयो नयनिपुणमतिर्भागशः कार्ययुक्ते वस्तुन्येतस्य हेतोरुपनिषदखिला कार्यशेषे प्रमाणम् ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு வாக்யத்தை ப்ரயோகம் செய்கின்ற இடத்திலிருக்கின்ற ஒரு புருஷன், முதலில் ஆவாப உத்வாபம் என்பதன் மூலமாக அந்தந்த பதங்களும் அதன் ஸ்வபாவத்திஞல் அந்தந்த அர்த்தத்தை அறிந்துகொள்வதற்கு ஸமர்த்தமாக இருக்கின்ற தென்று முதலில் பதசக்தியின் நியமத்தை அறிந்து கொள்கிறுன். மீண்டும் ஆலோசிக்கின்ற போது, பதபதார்த்த விபாகங்களைச்செய்து அதன் மூலம், அதன் அர்த்தத்தை கார்யான்விதம் என்று நிபுணமதியுடையவனுல் அறியப்படுகிறது. இந்தவிதகாரணத்திஞல் ஸர்வ வேதாந்தங்களும் கார்யஸேஷமாகவே, ப்ரமாணமாகின்றது என்று ஒத்துக்கொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'காமானய' என்ற வாக்யத்தைக் கேட்ட ஒருவன், பசுவைக் கொண்டு வருவதை, அருகில் இருக்கின்ற ஒருவன் பார்க்கின்றுன். இந்த க்ரியைக்கொண்டு, இந்த வாக்யம் 'பசுவை கொண்டுவா' என்று தெரிவிப்பதாக முதலில் பொதுவாக அர்த்தத்தை அறிந்து கொள்கிறுன். அதன்பின் 'பசுவை கொண்டுபோ' என்று 'காம்நயா' என்ற வாக்யத்தைக் கேட்டவுடன் பசுவை கொண்டுபோகிறுன். இந்த க்ரியையைப்பார்த்தவுடன், ஆவாப, உத்வாபங்களைக் கொண்டு அந்தந்த பதங்களின் விசேஷார்த்தத்தை அறிந்து கொள்கிறுன் இந்தவிதம் அன்வய வ்யதிரேகங்களைக்கொண்டு, பதபதார்த்தங்களை அறிந்தபிறகு சப்தம் என்பது கார்யான் விதமான அர்த்தத்தை போதிப்பதில்தான் ஸாமர்த்யம் உடையது என்று அறிந்து கொள்கிறுன். ஆகவே, வேதாந்த்வாக்யம் க்ரியையை போதிக்கின்ற வாக்யத்திற்கு ஸேஷமாக இருந்தே அதன் அர்த்தத்தை போதிக்கின்றது. அதனுல் வேதாந்தம், உபாஸனை முதலான க்ரியைக்கு அங்கமான கர்த்தாவை போதிக்கின்றதால்தான், ப்ரமாணமாகிறது என்பதால், சித்தவஸ்து போதகமாக இருப்பதால் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது.

**136. அவதாரிகை :**

ப்ரமாணத்திற்கு விஷயமாக இல்லாத கார்யத்தில் எப்படி வ்யுத்பத்தி (சக்திக்ஹம்) சொல்லமுடியும்? என்றுகேட்டால், அதற்குபாவஞதிமதசிந்தாந்தப்படி பதில் சொல்லப் படுகிறது.

**ச்லோகம் :**

आज्ञादिभेदेऽप्यनुवर्तमाने प्रवृत्त्यभावस्य विरोधिमात्रे ।
लिङादिशब्दस्य स वेत्ति शक्तिं प्रवर्तकाख्याविषयत्वयोग्ये ॥

**ச்லோகார்த்தம் :** ஆஞ்ஞை முதலானவைகளில் தொடர்ந்து வருகின்றதும் ப்ரவ்ருத்தி அபாவவிரோதியாக இருக்கின்றதும் ப்ரவர்த்தகமான சப்தங்களுடன் ஸம்பந்தப்பட்டிருக்கின்றதுமான கார்யத்தில் பாலகன் லிஙாதிகளின் சக்தியை அறிந்துகொள்கிறான்.

**வ்யாக்யானம் :** கார்யம் என்பது சாத்யம். இனிமேல் உண்டாக வேண்டும். சாத்யமான கார்யத்துடன் சப்தத்திற்கு அன்வயம் ஏற்பட்டு அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? கார்யமே இன்னதென்று அறியப்படவில்லையென்றால் கார்யான் வயத்தில் தான் பதங்களுக்கு சக்திக்ரஹம் என்று எப்படிச் சொல்வது? ஆகவே ப்ரவர்த்தனை என்ற சப்தத்தினால் சொல்லப்படும் நியோகம் என்ற கார்யத்தின் லக்ஷணம் என்ன? என்றால் அதற்குமேலே பதில் சொல்லப்படுகிறது.

'கோ' என்ற சப்தத்தைக் கேட்டவுடன், 'கோ' என்றபதத்திற்கு எதிரே இருக்கின்ற வ்யக்தியில் சக்திக்ரஹமா? அல்லது அந்தவ்யக்தியிலுள்ள ஜாதியில் சக்திக்ரஹமா? என்று விசாரிக்கின்றபோது, மீமாம்ஸகர்கள் ஜாதியில் தான் சக்திக்ரஹம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள். அதேபோல் லிஙாதி பதங்களுக்கு ப்ரவர்த்தனையில் தான் சக்திக்ரஹம் ஏற்படுகிறது என்றும் அதனால் கார்யம், நியோகம், என்பது முதலானபதங்களுக்கு 'காம் ஆனய' 'காம்நயா' என்ற பதங்களுக்கு எப்படிப் ப்ரத்யக்ஷமாக அர்த்தம் அறியப்படுகிறதோ அதுபோல் அறியப்படவில்லை. ஆனாலும் விதி ஆமந்தரணம் முதலான பலவிதமான சப்தங்களினால், ப்ரவ்ருத்தி அபாவவிரோதியான ஏதோ ஒன்று குறிப்பிடப்படுவதாக அறியப்படுகிறது. அதனால் ஸமான்யமாக லிஙாதிகளுக்கு சக்திக்ரஹம் ஏற்படுகிறது. ஆஞ்ஞை முதலானவைகளால் ஏற்படும் ப்ரவ்ருத்திகளில், ப்ரவ்ருத்திக்கும்படி ஏவப்படுகின்ற லிஙாதிகளில் மாற்றம் இருந்தாலும் அதில் தொடர்ந்து அறியப்படும் ஏவலில் தான் லிஙாதிகளுக்கு சக்திக்ரஹம் ஏற்படுகிறது. ஆஞ்ஞாதிகளில் சக்திக்ரஹம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது.

**137. அவதாரிகை :**

ப்ராசீனமான குருமதத்தில் (ப்ராபாகரமதம்) லோகத்தில் லிஙர்த்தம் என்பது தாத்வர்த்தமான க்ரியையை கார்யம் என்று தெரிவிப்பதாகவும், வேதத்தில் லிஙர்த்தம் நியோகம் என்ற ஏவலை தெரிவிப்பதாகவும் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஒருபதத்திற்கு, வித்யாஸமான அனேகார்த்தத்தை, அர்த்தமாக எப்படிச் சொல்லமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

अन्ये वदन्ति निरुपाधिनियोगरूपं वेदे भवत्यपुरुषप्रभवे स्वतन्त्रम् ।
लोके पुनः पुरुषधीरचितेषु कार्यं सोपाधिकं तदिति कारणतो वचःसु ॥

**ச்லோகார்த்தம் :** அபௌருஷேயமான வேதத்தில், நியோகம் என்பது, நிருபாதிகமாகவும், ஸ்வதந்தரமாகவும் இருக்கின்றது. ஆனால் லோகத்தில் புருஷபுத்தியினால் சொல்லப்படும் வாக்யங்களாக (பௌருஷேயமாக) இருக்கின்ற காரணத்தினால், கார்யம் என்ற நியோகம், ஆஞ்ஞாதிகள் போன்ற உபாதியுடன் கூடியதாகவே இருக்கிறது என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** லோகத்திலானாலும், வேதத்திலானாலும், இரண்டிலும் நியோகம் என்பது ஒன்றுதான். லோகவ்யவகாரத்தில் நியோகம் என்பது ஆஞ்ஞை முதலானவைகள் போன்ற உபாதியுடன் கூடியதாக அறியப்படுகிறது. வேதம் என்பதில் உபாதி எதுவுமின்றி ஸ்வதந்த்ரமாக நியோகம் அறியப்படுகிறது. ஏனெனில் வேதம் அபௌருஷேயமாக இருக்கின்றதால் ஆஞ்ஞைமுதலான உபாதிகள் ஏதுமில்லை. அதனால் பாரதந்த்ரியமாக இல்லையென்பதால் வேதத்தில் நியோகம் நிருபாதிகம். லோகத்தில் புருஷ அபிப்ருயத்தை அனுசரித்து நியோகம் என்பது ஆஞ்ஞாதிகளால் ஸோபாதிகமாக அறியப்படுகிறது. ஏனெனில் புருஷனுடைய அபிப்ருயம் என்பது ஒரு ஸமயம்ப்ரார்த்தனையாகவும் இருக்கலாம், அல்லது அன்பழைப்பாகவும் இருக்கலாம். இவ்விதம் பௌருஷேயவாக்யங்கள் ஸோபாதிகமாக இருந்தபோதிலும், லிஙர்த்தம் என்பதில் வித்யாஸம் ஏதுமில்லையென்றும், ஏகார்த்தம் என்றும் ப்ராபாகர மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது.

**138. அவதாரிகை :**

இது சரியல்ல. ஏனெனில், உபாதி அற்ற நியோகம் என்றும், உபாதியுடன் கூடிய நியோகம் என்றும் வித்யாஸம் இருக்கின்றதால் லிஙர்த்தம் ஒன்று தான் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

आज्ञायाच्चाद्युपाधिप्रणिपतितवपुः साधनेहानुबद्धं विज्ञातोपायभावं विषयमनुसरत् पौरुषेयीषु वाक्षु ।
वेदे कर्तृस्थरागाद्युपधिविरहितं कर्तृशून्ये ततोऽस्मिन् सर्वत्रैकस्वभावस्थितवपुषि भवेल्लब्धशक्तिर्लिङादिः ॥

**ச்லோகார்த்தம் :** லௌகீக வாக்யங்களில் கார்யம் என்பது ஆஞ்ஞை முதலான உபாதிகளுடன் ஸம்பந்தப்பட்டதாகவும், ஸாதனமானப்ரவ்ருத்தி ஸம்பந்தம் உடையதாகவும், இஷ்ட ஸாதனமென்று அறியப்பட்டதாகவும் இருக்கின்றது. வைதிக வாக்யங்களில் கர்த்தா இல்லாததால், கர்த்தாவினிடமுள்ள ராகாதிகள் என்ற உபாதிகள் அற்றதாக இருக்கிறது. ஆனாலும், லிஙாதிசப்தங்களின் சக்தியானது நியோகத்தை தெரிவிப்பதாகவும், லௌகிக, வைதிகவாக்யங்களில் ஸமானமாகவும் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** உத்க்ருஷ்ட்டமாக இருக்கின்ற ஒருவன் நிக்ருஷ்ட்டமாக இருக்கின்ற ஒருவனை ஆஞ்ஞையிடுவதையே ஏவல் என்று சொல்லப்படும். உத்க்ருஷ்ட்டமாக இருக்கின்றவனிடம், ஒருவன்யாசிக்கின்றபோது, அவன் யாசிப்பதைகொடுப்பதற்காக அந்தக்ரியையில் ப்ரவர்த்திக்கின்றான். புருஷனுடைய அபிப்ருயம் என்பதிலுள்ள பேதத்தினால் பலவிதமான ஏவல்கள் ஏற்படுகிறது. இந்தவிதம் உபாதிகளினால் ஏவல் வெளிப்படுகின்றபோது வ்யஞ்சகம் பலவிதமாக இருந்தாலும் ஏவல் என்பது ஒன்றுதான் என்பதால் நியோகத்தில்தான் சக்திக்ரஹம் ஏற்படுகிறது. ஆனாலும் ஏவல் என்பதை கேட்டமாத்ரத்தில் யாரும் ப்ரவ்ருத்திப்பதில்லை. இது எனக்கு இஷ்ட்டம் என்று அறிந்தால்தான், அதில் ஏற்படும் இச்சையினால் அந்த கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கின்றான்.

அந்த ப்ரவ்ருத்தியினுல் ஏற்படும் பலனுக்கு இது ஸாதனம் என்று தெரிவித்து, அந்த கார்யத்தில் ஏவப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

வேதம் என்பதில் கர்த்தா இல்லாததால் ஆஞ்ஞாதி உபாதி ஸம்பந்தமில்லே. அதனுல் புருஷஇச்சையை எதிர்பாக்கமலேயே ஏவப்படுகின்றதால், வேதத்தில் ஏவலே கார்யம் என்று சொல்கிறோம்.

லோகத்தில், கார்யம் என்பது புருஷனுடைய விஷயமாக இருக்கின்றதால் யாகம் என்பது கார்யம் என்று சொல்லப்படுகிறது. ஆஞ்ஞாதிகள் என்பது ஏவலுக்கு உபலக்ஷணமாகச் சொல்லப்படுவதால், ஆஞ்ஞாதிகளை விட்டு, ஏவலே மட்டும் க்ரஹிக்கவேண்டும். ஆகவே, லோகம், வேதம் என்று இரண்டிலும் லிஙாதிகளுக்கு கேவல நியோகம் தான் அர்த்தம். ஏனெனில் இரண்டிலும் ப்ரவ்ருத்திதான் போதிக்கப்படுகிறது.

**139. அவதாரிகை :**

நியோகவாதிகளில், வேறு சிலர், வேறுவிதமான அபிப்ருயத்தை, தெரிவிக்கின்ருர்கள்.

**ச்லோகம் :**

अन्ये भिन्नस्वभावं विविधमभिदधत्यानुरूप्येण कार्यं लोके धात्वर्थरूपं श्रुतिवचसि पुनस्तन्नियोगाख्यमेव ।
संमुग्धे तत्र शक्तिं शिशुरयमवगम्याऽऽदितो न्यायचक्षुः पश्चाद्वेदैकवेद्यं वदति लिङिति च प्रेक्षते निश्चयेन ॥

**ச்லோகார்த்தம் :** பின்னபாவமுள்ள வெவ்வேறுன நியோகத்தை, அதற்கு தக்கவாறு சொல்கின்ருர்கள். அதாவது லோகத்தில் கார்யம் என்பதை தாத்வர்த்தரூபமாகவும், வேத வாக்யங்களில் கார்யம் என்பதை நியோகம் என்றும் சொல்கிருர்கள். முதலில், அறியப்படாத விஷயத்தில் லிஙாதிகளுக்கு சக்தி என்பது ஸாமான்யமான நியோகத்தில் இருப்பதாக அறிகிருன் என்றும், அதன் பிறகு சாஸ்திரந்யாயங்களைக் கொண்டு லிஙாதிகள் வைதிக நியோகத்தை தெரிவிக்கின்றது என்று நிச்சயிக்கிருன் என்றும் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** லோகத்தில், தாத்வர்த்தமான 'யாகம்' என்பதே, ஸ்வர்க்கம், என்ற பலனைக் கொடுப்பதில், சாதனமாக இருக்கிறது. அதனுல் யாகம் என்ற க்ரியைதான் கார்யம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல், வேதத்தில், லிஙர்த்தமான நியோகமே கார்யம் என்று சொல்லப்படுகிறது என்பதை பின்னுல் சாஸ்திரந்யாயங்களைக்கொண்டு அறிகிருன். இந்தவிதம் யாகம் என்பதும், நியோகம் என்பதும் கார்யம் என்று முதலில் பொதுவாக (ஸாமான்யமாக) லிஙர்த்தம் கார்யத்தையே போதிக்கின்றது என்று அறிந்தபோதிலும், பின்னுல், தாத்வர்த்தமான யாகத்தில் லிஙர்த்தத்திற்கு சக்திக்ரஹம் இல்லையென்றும், நியோகத்தில் தான் சக்திக்ரஹம் என்றும் விசேஷமாக அறிந்துகொள்கிருன்.

லிஙர்த்தமானது, அனேகஅர்த்தத்தை போதிக்கின்றது என்று ஒத்துக்கொண்டு, க்ரியை என்ருலும், நியோகம் என்ருலும், இரண்டும் லிஙர்த்தமென்று சொல்லலாமே? என்ருல்,

ஒரு பதம், அனேக அர்த்தத்தை போதிக்கமுடியாது. ஏதோ ஒரு சிலபதங்கள் அனேக அர்த்தத்தை போதிக்கிறது என்று சொல்லப்பட்டாலும், எல்லாபதங்களும் அனேக அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. உதாரணமாக, 'ஸைந்தவம்' என்றபதத்திற்கு, உப்பு என்றும் குதிரை என்றும் அர்த்தம் இருக்கிறது என்பதற்காக எல்லா இடங்களிலும் இவ்விதம் சொல்லமுடியாது. அவ்விதம் ஒரு பதத்திற்கு இரண்டு அர்த்தங்கள் இருந்தபோதிலும் அதில் ஒரு அர்த்தமே முக்யமாக இருக்கமுடியும். 'கங்காயாம் கோஷ:' என்ற இடத்தில், 'கங்கை' என்பதும், 'தீரம்' என்பதும் முக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. அதனுல்தான், கங்காபதம்

லக்ஷணையாக தீரத்தைக் குறிப்பிடுகிறது என்று சொல்கிறோம். அதேபோல், லிங்ர்த்தமானது முக்யமாக நியோகத்தையும் லக்ஷணையாக யாகாதிகார்யத்தையும் தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். ஏனெனில், செய்யக்கூடிய செயல் இருக்கின்ற இடத்தில்தான் ஏவல் இருக்கமுடியும். யாகம் என்ற க்ரியை என்பது செயலை சாதித்துக்கொடுக்கின்றதால் லக்ஷணையினால் நியோகம் என்று சொல்லலாம். ஆகவே, யாகம் என்ற க்ரியையென்பது செய்யப்பட்டதும் முடிந்துவிடுகிறது, ஸ்வர்க்கம் என்ற பலன் ஏற்படும் வரையில் அந்தக்ரியை இருப்பதில்லை. அதனால் யாகம் என்பது ஸ்வர்க்கத்திற்கு நேரிடையானசாதனம் என்று சொல்ல முடியாது. இந்தவிதம் தாத்வர்த்தமானயாகம், லிங்ர்த்தமானகார்யம் என்று சொல்லமுடியாது. அதனால் நியோகமே கார்யம் என்று சொல்லவேண்டும்.

**140. அவதாரிகை :**

தாத்வர்த்தமான யாகம் என்ற க்ரியை லாக்ஷணிகம் என்றும், வைதிகமான நியோகமே லிங்ர்த்தம் என்பதற்கு முக்யார்த்தம் என்றும் ஏன் சொல்லவேண்டும்? இதற்கு விபரீதமாக, வைதிகமான லிங்ர்த்தமே லாக்ஷணிகம் என்றும், காத்வர்த்தம் முக்யார்த்தம் என்றும் ஏன் சொல்லக்கூடாது? (என்றால்).

**ச்லோகம் :**

धात्वर्थाख्यानशक्तो यदि भवति गुणाद्वर्तितुं वैदिकेऽयं संबन्धाज्ञानहेतोरनलमथ पुनर्वैदिके शक्तिमान्स्यात् ।
तत्संबन्धात्क्रियामप्यभिवदितुमलं लक्षणावृत्तितोऽयं लिङ्शब्दस्तेन कार्ये श्रुतिवचनगते शक्त इत्यध्यवस्येत् ॥

**ச்லோகார்த்தம் :** வைதிக லிங்சப்தமானது, தாத்வர்த்தத்தை தெரிவிப்பதில் ஸாமர்த்யமுடையதாக ஆகாது. அந்த சப்தத்தினால் அபூர்வம் (நியோகம்) என்பதற்கும் யாகம் என்பதற்கும் ஸம்பந்தஜ்ஞானம் இல்லாததால், லக்ஷணையினால் நியோகார்த்தம் போதிக்கப் படுவதாகச் சொல்லமுடியாது. ஆனால் லிங்சப்தார்த்தம் அதன் அர்த்தத்தை தெரிவிப்பதாக இருந்தால்தான், அந்த சப்தம் லக்ஷணையினால் தாத்வர்த்தத்தை போதிக்கமுடியும். ஏனெனில் லக்ஷ்யார்த்தமான தாத்வர்த்தத்திற்கு வாச்யார்த்தமான நியோகத்துடன் ஸம்பந்தம் இருக்கின்றது. அதனால் வைதிக லிங் சப்தத்தின் முக்யார்த்தமே நியோகம் என்று நிச்சயிக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** தாத்வர்த்தமான, யாகக்ரியை என்பதையே லிங்சப்தம் முக்யமாக தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால், வேதத்தில் நியோகம் என்பது லக்ஷணையாக போதிக்கப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில் வேதத்தில் அபூர்வம் என்பதே நியோகம் என்ற லிங்ர்த்தம் என்று தெரிவிப்பதாகச் சொன்னால்தான், அந்த லிங்ர்த்தமான ஏவலினால் தெரிவிக்கப்படும் அபூர்வம் என்பதை எப்படி ஸம்பாதிப்பது? என்ற கேள்வி ஏற்படுகிறது. அதனால் யாகம் என்ற க்ரியையைக்கொண்டு அபூர்வம் என்பதை ஸம்பாதிக்கவேண்டும் என்று யாகம் என்ற க்ரியைக்கும், அபூர்வம் என்பதற்கும் ஒரு ஸம்பந்தத்தை க்ரஹிக்கமுடியும். இவ்விதம் ஸம்பந்தம் என்பதே க்ரஹிக்கமுடியவில்லையென்றால் அதைலக்ஷணை என்றே சொல்லமுடியாது. ஆகையால், அபூர்வம் என்ற நியோகம், முக்யார்த்தமான லிங்ர்த்தம் என்று சொன்னால்தான், அதனுடன் ஸம்பந்தப்பட்ட யாகம் என்ற க்ரியை லிங்ர்த்தத்திற்கு லக்ஷ்யார்த்தம் என்று சொல்லமுடியும். லோகப்ரசித்தமாக இல்லாததும், ஸம்பந்தம்என்பதை க்ரஹிக்கமுடியாததுமான யாகம் என்பதை லிங்ர்த்தமுக்யார்த்தமாகச் சொல்லமுடியாதது. ஆகவே சக்யார்த்த ஸம்பந்தத்தைக் கொண்டே லக்ஷணை சொல்லவேண்டும்.

**141. அவதாரிகை :**

லிங், லோட், தவ்யப்ரத்யயங்கள் உபயோகிக்கப்படும் வாக்யங்கள் க்ரியாபரமாக இருக்கட்டும். ஆனால் சித்தவஸ்துவைத்தெரிவிக்கின்ற வாக்யங்களிலும், விசேஷண விசேஷ்ய பாவமுள்ள வாக்யங்களிலும் எப்படி அன்வயம் ஏற்படுகிறது? என்றால்,

**ச்லோகம் :**

एवं शब्दान्तराणां नयनिपुणमतिः शक्तिवित्सन्क्रमेण प्रक्षेपोद्धारदर्शी भवति कतिपयैर्वासरैस्तत्र तत्र ।
तस्मात्कार्यान्वितार्थे सकलमपि पदं शक्तिमद्बुध्यमानो भूतार्थप्रतीतिं प्रति विमुखमनाः शाश्वतः स्यान्मनुष्यः ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் ந்யாயநிபுணனாக இருக்கின்ற ஒருவன், ஆவாப, உத்வாபங்களின் மூலம் ஸர்வபதங்களுக்கும், க்ரியான்விதமாகவே தன் அர்த்தத்தை தெரிவிக்கிறது என்று அறிந்து கொள்கிறான். அதனால் அந்த புருஷன் சாஸ்திரங்களிலிருந்து சித்தார்த்தம் போதிக்கப் படுகிறது என்ற விஷயத்தை ஒத்துக்கொள்வதில்லை.

**வ்யாக்யானம் :** வ்யுத்பத்ஸுவானவன், முதன்முதலாக ஒரு வாக்யத்தின் அர்த்தத்தை க்ரியையுடன் ஸம்பந்தப்பட்டதாகவே அறிந்துகொள்கிறான். அதன்பிறகு ஒவ்வொரு பதத்திற்கும் என்ன அர்த்தம் என்பதை விசேஷமாக அறிந்து கொள்கிறான். உதாரணமாக, 'வெள்ளைப்பசுவை கொண்டுவா, சிகப்புப் பசுவை கொண்டுபோ' என்ற வாக்யப்ரோயகம் செய்யுமிடத்தில், அந்த வாக்யத்திலுள்ள பதங்களில் ஒன்றை எடுத்து, மற்றொன்றைச் சேர்த்து ப்ரயோகம் செய்கின்றபோது, அதைக்கேட்பவன் அந்த கார்யத்தைச் செய்கின்ற போது, சிகப்பு, வெள்ளை என்பது குணங்களையும், பசு என்பது (த்ரவ்யத்தை) அந்தப்ராணியையும் குறிக்கின்றது, என்று அறிந்து கொள்கிறான். இதேபோல் எந்த பதங்களும் க்ரியான் விதமாகவே அர்த்தத்தை போதிக்கின்றது என்று அறிகின்றான் என்றே சொல்லவேண்டும், இவ்விதமின்றி சித்தமான ஒரு வஸ்துவை, வாக்யம் போதிக்கின்றதாக அவன் அறிந்து கொள்வதாகச்சொல்லமுடியாது. அதனால், சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்றவாக்யம்அர்த்தபோதகமாகிறது என்று சொல்வதற்கேமுடியாது. ஆகவே, லிங்லோட்தவ்யம் ப்ரத்யயங்கள் இருந்தால் தான் வாக்யம் அர்த்தபோதமாகமுடியும்.

**142. அவதாரிகை :**

ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணக்கூடிய வாக்யம் தான், அர்த்தபோதகமாகும் என்று நியமம் சொல்லமுடியாது. சைத்ரன் என்ற பதமோ, அல்லது புத்ரன் பிறந்திருக்கிறான் என்ற வாக்யமோ, க்ரியாபதம் இல்லாமலேயே அர்த்தத்தை போதிக்கின்றதே? அதனால் வாக்யம் க்ரியாபரமாக இருந்தால்தான் அர்த்தபோதகமாகும் என்று எப்படிச்சொல்லமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

वाक्याद्भूतार्थनिष्ठाद्भवति न तु नृणां शब्दशक्तिप्रतीतिर्लिङ्गं श्रोतृस्थबुद्धेर्न हि किमपि भवेदत्र बालोपलम्भम् ।
न ह्येतत्पुत्रजन्माद्यवगतिनियतं नित्यवन्निश्चितं नो यद्वकादिप्रसादक्षितितलतुठनादीक्ष्यते श्रोतृदेहे ॥

**ச்லோகார்த்தம் :** சித்தமான அர்த்தத்தை போதிக்கின்ற வாக்யத்திலிருந்து ஒரு புருஷனால் சப்தசக்தியென்பதுக்ரஹிக்கப்படமுடியாது. ஏனெனில், ச்ரோதாவின்ஞானத்தை அறிவிக்கக் கூடியலிங்கம் எதுவும் இந்த இடத்தில் க்ரஹிக்கப்படுவதில்லை. ச்ரோதாவினிடம் ஏற்படும் முகமலர்ச்சி, அல்லது வேறு விதமான முகமாறுதல்களைக் காரணமாகக்கொண்டு,புத்ரஜன்மம் முதலானவைகளையே இந்த வாக்யம் தெரிவிக்கின்றது என்று நிச்சயமாக அறிந்துகொள்ளமுடியாது.

**வ்யாக்யானம் :** 'புத்ரஃதே ஜாதஃ' என்ற வாக்யமானது, புத்ரன் பிறந்திருக்கிறான் என்பதை தெரிவிக்கின்றதேயன்றி எந்தவிதமான க்ரியையும் போதிக்கவில்லையென்றாலும், புத்ரன் பிறந்திருக்கிறான் என்ற செய்தியைக் கேட்டு அவனுக்கு ஏற்படும் மகிழ்ச்சியினால் முகமலர்ச்சி ஏற்படுகிறது. அதனால்

முகமலர்ச்சியைக் கொண்டேயூகித்து அறியலாமே? என்றால், அவ்விதம் அறிவதற்குமுடியாது. ஏனெனில் சுகப்ரஸவம் என்பதும் முகமலர்ச்சிக்கு காரணமாகலாம் என்பதால், புத்ரன்பிறந்திருக்கிறான் என்ற வாக்யார்த்தபோதம் முகமலர்ச்சியினால் ஏற்படுவதாகச்சொல்லமுடியாது. ஆகவே, க்ரியாபதமின்றி, லிங்கத்தைக்கொண்டு வாக்யம் அர்த்தபோதகமாகிறது என்று சொல்லமுடியாது.

**143. அவதாரிகை :**

இவ்விதம் ஆக்ஷேபிக்கப்பட்ட காரணத்தினால், சித்தவஸ்து ப்ரமாண வாக்யங்களிலிருந்து அர்த்த போதம் ஏற்படாது. (சக்திக்ரஹம் ஏற்படாதமுடியாது) என்பதால் சித்தமான ப்ரஹ்ம வஸ்துவை, போதிக்கின்றவிஷயத்தில் வேதாந்தம் ப்ரமாணமாக ஆகமுடியாது. என்ற, இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

तस्मादाध्वं निराशाः श्रुतिशिरसि न तस्यास्ति निष्पन्नरूपे प्रामाण्यं कार्यशून्ये कथमपि च परब्रह्मणि स्वप्रधाने ।
भूतं भव्यप्रधानं भवति हि न पुनः स्वप्रधानं कदाचित् शास्त्रस्थाः शब्दशक्तिस्थितिनिपुणधियो विस्तरादेवमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** சித்தமாக இருக்கின்றதும், கார்யசூன்யமாக இருக்கின்றதான, பரப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிக்கின்றவிஷயத்தில், வேதாந்தவாக்யம் (க்ரியாபரமாக இல்லாததால்) எந்த விதத்திலும் ஸ்வப்ரதான ப்ராமாண்யமாக இருக்கமுடியாது. சாஸ்திரத்தில் நிபுர்ணகளானவர்களும் சப்த சக்தியை நிச்சயிக்கின்ற விஷயத்தில் ஸமர்த்தர்களாக இருப்பவர்களும் இந்த விஷயத்தை விசாரித்து, பூதவஸ்து, பவ்யத்திற்கு அங்கமாகத்தான் இருக்கமுடியுமேயன்றி ஒருபோதும் ஸ்வப்ரதானமாக இருக்கமுடியாது என்று தீர்மானித்திருக்கிறார்கள். அதனால் வேதாந்தம் சித்தார்த்தபோதகம் என்ற உங்கள் கொள்கையிலுள்ள இச்சையை விட்டுவிடுங்கள்.

**வ்யாக்யானம் :** வேதமானது, 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற வாக்யத்திலுள்ள 'ஸவர்க்கம்' என்ற சித்தவஸ்துவைத்தானே போதிக்கின்றது? அதனால் சித்தவஸ்துவை போதிக்கமுடியாது என்று எப்படிச் சொல்வது?

ஸ்வர்க்கம் என்பது யாகம் என்ற க்ரியையை விதிப்பதன் மூலமாக, விதிக்ரியைக்கு அங்கமாக, ஸ்வர்க்கம் என்ற பதம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது 'யாகத்தைச்செய்' என்று சொல்லும்போது, எந்தபலனை உத்தேசித்துச்செய்யவேண்டும்? என்றஆகாங்க்ஷை ஏற்படுகிறது. அதனால் ஸ்வர்க்கம் என்ற பலனுக்காக யாகத்தைச் செய்யவேண்டுமென்று யாகம் என்ற க்ரியைக்கு அங்கமாகவே சொல்லப்படுகிறது. அதேபோல் ப்ரஹ்மஸ்வரூப போதக வாக்யங்களும் விதிக்கு ஸேஷமாக (அங்கமாக) சொல்லப்படுகிறதேயன்றி ஸ்வதந்த்ரமாக ப்ரஹ்மத்தை போதிப்பதற்காக வாக்யம் ப்ரவர்த்திக்கின்றது என்று சொல்லமுடியாது. 'பூதம் பவ்யாய உபதிச்யதே' என்று பூதவஸ்து என்பது பவ்யத்திற்காகவே போதிக்கப்படுகிறது என்ற ந்யாயத்தைக்கொண்டு, விதி ஸேஷமாகவே, சித்தவஸ்துவான ப்ரஹ்மம் போதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இந்த விஷயத்தைப்பற்றி பாஷ்யத்தில் "ஏதஸ்ச யதைகஸ்மாத்பூர்வம்" என்று பாஷ்யகாரராலும் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் சித்தவஸ்து விஷயத்தில் சப்தம் தன் அர்த்தத்தை ஸ்வதந்த்ரமாக போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. அதனால் வேறு ப்ரமாணத்தைக் கொண்டு அறியப்படுவதாகச் சொல்லவேண்டும். அவ்விதமும் சொல்லமுடியாது. ஏனெனில், ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாச ஸ்வரூபம் என்று சொல்லப்படுவதாலும் ப்ரமாணத்திற்கே விஷயமல்ல என்றும் கூடஸ்த்தம், நித்யம் என்றும் சொல்லப்படுவதாலும், ப்ரஹ்மமென்பது சாத்யமல்ல என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. மேலும், ப்ரஹ்மமென்பது தள்ளத்தகுந்ததுமில்லை,

கொள்ளத்தகுந்ததுமில்லை, (ஹேயமுமில்லை, உபாதேயமுமில்லை) என்பதால் ப்ரஹ்ம மென்பதை அறிந்துகொள்வதால் எவ்விதப்ரயோஜனமுமில்லை, (க்ரியை என்பதால் தான் ப்ரயோஜனம்) மேலும் 'அகண்டஏகரஸம்பரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபம் பற்றி சொல்லப் படுவதால், பதங்கள் ஒன்றுடன் ஒன்று ஸம்பந்தப்பட்ட அர்த்தத்தைத்தான் சப்தம் தெரிவிக்கமுடியும் என்பதால், வாக்யம் என்பதே ஸம்ஸர்க்கபோதகமாகத்தான் இருக்குமேயன்றி, அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தத்தை வாக்யம் போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் வேதாந்தம், ஸ்வதந்த்ரமாக ப்ரமாணமாகிறது என்று தீர்மானிக்கவேண்டுமென்ற உங்கள் இச்சையைவிட்டுவிடுங்கள். மேலும் பூதவஸ்துவானது பவ்யத்திற்காகவே உபதேசிக்கப்படுவதாக மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது என்பதாலும், வேதத்தில் சிரத்தையுடைய பெரியோர்களால் நன்கு ஆராய்ந்து முடிவு செய்யப்பட்டிருப்பதாலும் இந்த விஷயத்தில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**144. அவதாரிகை :**

இதுவரை வேதாந்தவாக்யப்ராமாண்யத்தைப்பற்றி விசாரிக்கப்பட்ட விஷயம் இப்போது முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

तस्मादसङ्गतमिदं प्रतिभाति यन्मे वाक्यप्रमाणकमुदीरितमद्वयत्वम् ।
इत्येवमेष मम बुद्धिपथं विरोधः प्राप्तः प्रभो परिहरैनमनुग्रहाय ॥

**ச்லோகார்த்தம் :** ஆகவே, வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணத்தினால் போதிக்கப்படும் அத்விதீயத்வம் என்பது அஸங்கதம் என்று எனக்குத்தோன்றுகிறது. இப்பேர்ப்பட்ட விரோதபுத்தி என்னுடையசித்தத்தில் ஏற்பட்டிருக்கிறது. ஹே! ப்ரபோ, என்னை அனுக்ரஹிக்கும் பொருட்டு தாங்கள் இந்த விரோதங்களை பரிகாரம் செய்யவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரை, ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை போதிக்கின்ற விஷயத்தில் வேதாந்த சாஸ்திரம் ப்ரமாணம் என்று சொல்லப்படுவதை என்னால் ஒத்துக்கொள்ளமுடியவில்லை. ஏனெனில், என் சித்தத்திலுள்ள தோஷத்தின் காரணமாக தத்வம் என்ன? என்று அறிவதற்குரிய சாமர்த்யம் இல்லை தவிர, மீமாம்ஸகர்களால் ஆக்ஷேபிக்கப்படும் விஷயங்களைக் கொண்டும் என்னால் எதையும் தீமானிக்கமுடியவில்லை. மேலும், வேறு எந்தப்ரமாணத்திற்கும் விஷயமில்லை என்று சொல்லப் படுவதாலும் தத்வம் என்ன? என்று அறிந்துகொள்ளவேண்டும் என்ற தீவிர இச்சை இருக்கின்றது. ஆகவே, தாங்கள் தான் கருணை கூர்ந்து எனக்குதத்வத்தை உபதேசித்தருள வேண்டும். மற்ற மதஸ்த்தர்களால் ஆக்ஷேபிக்கப்பட்ட விஷயங்களிலுள்ள விரோதங்களை பரிகாரம் செய்வதன் மூலமாக என் சித்ததோஷங்களை நிவர்த்தித்து, ஜீவபரமாத்ம ஐக்யத்தை போதிக்கவேண்டுமென்று குருவினிடம் சரணமடைந்து சிஷ்யன் ப்ரார்த்திக்கின்றான்.

**145. அவதாரிகை :**

இவ்விதம் சிஷ்யனுக்கு ஏற்பட்டசந்தேகங்களை அறிந்து குருவானவர் அவைகளுக்கு பரிகாரம் செய்யவேண்டுமென்று எண்ணி, சிஷ்யனுக்கு உபதேசிக்கின்றார். தத்–த்வம் என்ற பதங்களின் முக்யார்த்தத்தில் அன்வயம் சொல்லப்படுமானால், இரண்டிற்கும் விரோதம் இருப்பதாகச் சொல்லலாம். ஆனால் வேதாந்தம் அகண்டார்த்தத்தில் அன்வயம் தெரிவிக்கின்றதால் தோஷம் ஏதுமில்லை என்று முதல் ஆக்ஷேபத்திற்கு பரிகாரம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

सत्यं यदाह गुरुमान् यदि वाक्यगम्यं संसर्गरूपमिह वेदशिरःस्वभीष्टम् ।
अस्त्येव तत्र पदयोरुभयोर्विरोधः पारोक्ष्यसद्वयविरोधकृतस्तदानीम् ॥

**ச்லோகார்த்தம் :** பல ஆசார்யர்களிடமிருந்து அறியப்பட்ட விஷயங்களைக் கொண்டு உனக்கு ஏற்பட்ட விரோத சங்கை ந்யாயமானதுதான். வேதாந்த வாக்யத்தினால் அறியப்படும் அர்த்தம் ஸம்ஸர்க்கரூபமாக இருக்குமானால் தத்–த்வம் என்ற இரண்டுபதங்களுக்கும் பாரோக்ஷ்யத்வம், ஸத்வயத்வம் என்ற இவைகளினால் விரோதம் ஏற்படும்.

**வ்யாக்யானம் :** இவ்விதம் சிஷ்யனால் ப்ரார்த்திக்கப்பட்ட காரணத்தினால், சிஷ்யனுக்கு ஏற்பட்டிருக்கின்ற ஸந்தேகங்களை அறிந்த ஆசார்யன் அவைகளுக்கு பரிகாரம் செய்வதற்காக மேலே உபதேசிக்கின்றார்.

'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள, தத்–த்வம் என்ற இரண்டு பதங்களின் வாச்யார்த்தத்தில் அன்வயம் சொல்லப்படுகிறதா? அல்லது லக்ஷ்யார்த்தத்தில் அன்வயம் சொல்லப்படுகிறதா? என்பதை விசாரித்து அறியவேண்டும்.

மஹாவாக்யத்திற்கு, ஸம்ஸர்க்கம் என்பதை வாச்யார்த்தமாகச்சொல்லப்படவில்லை. ஸம்ஸர்க்கத்தை வாச்யார்த்தமாகச் சொல்லப்படுமானால்தான், பாரோக்ஷ்யத்வம், ஸத்வயத்வம் என்பதற்கும், அபரோக்ஷ்யம் அத்வயத்வம் என்பதற்கும், விரோதம் இருப்பதாகச் சொல்லமுடியும். ஆனால் வேதாந்தம் ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தை போதிக்கவில்லை. அஸம்ஸ்ருஷ்டமான அர்த்தத்தையே போதிக்கின்றது என்பதால் எவ்வித தோஷமுமில்லை.

(95, 96 வது ச்லோகங்களின் செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இந்த ச்லோகத்திலும் இதற்கு மேல் வரும் ச்லோகங்களிலும் பதில் சொல்லப்படுகிறது).

**146. அவதாரிகை :**

பூர்வகாண்டத்தில், விசாரிக்கப்பட்ட முறையில், வேதமானது, ஸம்ஸர்க்கரூபமான பேதத்தையோ, அஸம்ஸர்க்கரூபமான அபேதத்தையோதான், போதிக்கின்றது என்று முடிவு செய்யப்பட்டிருக்கின்றது. அதனால் வாக்யம் ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தை போதிக்கவில்லையென்றும் அஸம்ஸ்ருஷ்டார்த்தத்தையே போதிக்கிறது என்றும் எப்படிச்சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

यत् कर्मकाण्डनिपुणैरुदितं पुरस्ताद्वाक्यार्थलक्षणमदः पुनरत्र नेष्टम् ।
भेदादिवर्जितमखण्डमुशन्ति यस्माच्छ्रीबादरायणमतानुगता महान्तः ॥

**ச்லோகார்த்தம் :** கீழே கர்மகாண்ட நிபுணர்களால் சொல்லப்பட்ட வாக்யார்த்த லக்ஷணத்தைக்கொண்டு, இந்த இடத்தில் அர்த்தம் சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளமுடியாது. பாதராயணமதத்தை அனுசரிக்கின்ற மஹாத்மாக்கள், பேதம் முதலானவைகள் இல்லாத அகண்டார்த்தத்தையே போதிக்கின்றார்கள்.

**வ்யாக்யானம் :** ஒரே வேதத்திலுள்ள, கர்மகாண்டம், உபாஸனாகாண்டம், ஞானகாண்டம் என்ற மூன்று காண்டங்களும் வெவ்வேறு விஷயங்களை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானால் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. அதாவது ஒரே வேதம், பேதஸம்ஸர்க்கத்தையும், அபேதஸம்ஸர்க்கத்தையும், அஸம்ஸர்க்கத்தையும் தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால் வாக்யபேதம் என்ற தோஷம் ஏற்படும். உதாரணமாக, 'தேவதத்தகாமானய' என்ற வாக்யம் பேதஸம்ஸர்க்கம், நீலோகடஎன்பது அபேதஸம்ஸர்க்கம் என்றும் இந்த இரண்டுவித ஸம்ஸர்க்கம் தான்

ஏற்படமுடியுமேயன்றி அஸம்ஸர்க்கமாக வாக்யம் அர்த்தத்தை போதிக்கமுடியாது என்பது ஆக்ஷேபம். அதனால் வேதம் பூராவும் ஒரே வாக்யம் என்று (அர்த்தைகத்வாத் ஏகம் வாக்யம்) சொல்லவேண்டும் என்று பூர்வமீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே, வாக்யம் என்றால் அதற்கு ஒரே அர்த்தம் தான் இருக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். இதில் இரண்டு விதமான பக்ஷங்கள் இருக்கின்றது. உதாரணமாக –: 'சுக்ல: கௌ:' என்ற வாக்யத்திற்கு, 'வெள்ளை பசு' என்று அர்த்தம் கிடைக்கின்றது. இதில் வெள்ளையென்பதும் பசு என்பதும் வேறல்ல என்றும், வெள்ளையாக இருப்பது எதுவோ அதுவே பசு என்றும், பசுவே வெள்ளையென்றும் அதனால் இரண்டும் வேறு இல்லையென்பதும் ஒரு பக்ஷம். இதுவே, அபேதஸம்ஸர்க்கம் என்று சொல்கிறார்கள். வேறு சிலர், கௌ : என்பது 'கோ' வ்யக்தியை தெரிவிக்கிறது என்றும், சுக்லம் என்பது குணமானதால் சுக்லம் என்ற குணமுடையது கோ என்றும் ஒன்றுக்கொன்று அனுரஞ்சனாத்மகமாக இருக்கின்றதால் பேதஸம்ஸர்க்கம்தான் வாக்யார்த்தம் என்று பாட்டர்களால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் பேதத்தையோ அபேதத்தையோ ஸம்ஸர்க்கமாகக்கொண்டே வாக்யம் அர்த்தத்தை போதிக்கின்றது என்று பூர்வமீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் வாக்யத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுவது ஒத்துக்கொள்ளக்கூடியதல்ல. ஏனெனில் ஞானகாண்டத்திலுள்ள வாக்யங்களுக்கு இந்த லக்ஷணம் பொருந்தாது. உத்தர மீமாம்ஸையில் பாண்டித்யம் பெற்றவர்கள் இதை ஒத்துக்கொள்வதில்லை. வாக்யத்தின் தாத்பர்யார்த்தம் எதுவோ அதுவே வாக்யார்த்தமாக இருக்கவேண்டும். ஆகையால் அபேதஸம்ஸர்க்கமோ அல்லது பேதஸம்ஸர்க்கமோ, அல்லது பேதத்தையோ வாக்யம் போதிக்கின்றது என்றாலும், வாக்யத்தின் தாத்பர்யமே வாக்யார்த்தம் என்றே சொல்லவேண்டும். ஆகவே வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யவிஷயம் என்னவென்றால், 'ஸர்வேஷாம் வேதாந்தானாம் அத்விதீய ப்ரஹ்மணிதாத்பர்யம்' என்று 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், உபக்ரமஉபஸம்ஹாரம் முதலான ஷட்விதலிங்கங்களைக் கொண்டு தாத்பர்யவிஷயம் என்னவென்று அறிந்து அதுவே வாக்யார்த்தம் என்று தீர்மானிக்கவேண்டும் என்று பாதராயணர், பாஷ்யகாரர் முதலான பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனால் அவரவர் புத்திகல்பனையைவிட்டு, பாரபக்ஷமின்றி, தத்வத்தை அறிந்த பெரியோர்களால் தீர்மானிக்கப்பட்ட தாத்பர்யவிஷயமே வாக்யார்த்தம் என்று அறியவேண்டும்.

**147. அவதாரிகை :**

கர்மகாண்டம், ஞானகாண்டம் என்ற இரண்டு காண்டங்களின் வாக்யத்திற்கும் வித்யாஸம் இருக்கின்றது என்பதால், பேதஸம்ஸர்க்கமோ அபேதஸம்ஸர்க்கமோ கர்மகாண்ட வாக்யங்களில் இருக்கலாம் என்பதை ஒத்துக்கொள்கிறோம். ஆனால் ஞானகாண்டத்திலேயே 'தமேதம் வேதானுவசனேன ப்ராஹ்மணாவிவிதிஷந்தி' என்பது போன்ற பலவாக்யங்கள் பேதத்தை தெரிவிக்கின்றதே? இவ்விதம் இருக்கின்றபோது, ஞானகாண்டம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று எப்படிச் சொல்வது?

**ச்லோகம் :**

भेदादिरूपमवबोधयितुं समर्थं यद्वाक्यमस्ति तदखण्डविलक्षणार्थम् ।
तल्लौकिकं भवतु वैदिकमेव वाऽस्तु नास्माकमत्र विषये विमतिः कदाचित् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த வாக்யம் பேதம் முதலானவைகளை போதிப்பதில் ஸமர்த்தமாக இருக்கின்றதோ, அந்த வாக்யம் அகண்டார்த்த போதகமான வாக்யத்திற்கு விலக்ஷணமாக

இருக்கின்றது. இப்பேர்ப்பட்ட வாக்யங்கள் லௌகிக வாக்யமாகவோ, வைதிக வாக்யமாகவோ இருக்கலாம் என்ற விஷயத்தில் ஒரு போதும் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**வ்யாக்யானம் :** ஞானகாண்டவாக்யங்கள் எல்லாமே அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று எங்களால் சொல்லப்படவில்லை. வாக்யம் என்பது பேதம், அபேதம் என்ற இரண்டையும் தெரிவிக்கலாம். அதேபோல் ஸம்ஸர்க்கார்த்தத்தையும் தெரிவிக்கலாம். அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தத்தையும் தெரிவிக்கலாம் என்று சொல்லப்படுவதால், கர்மகாண்டவாக்யம்போல், ஞானகாண்டவாக்யமும் வாக்யந்தானே? என்ற ஆக்ஷேபம் சரியல்ல 'தேவதத்தகாமானய' என்ற வாக்யம் பேதஸம்ஸர்க்கத்தையும், நீலோகட: என்பது அபேதஸம்ஸர்க்கத்தையும் தெரிவிக்கின்றது என்றே ஒத்துக்கொள்கிறோம். அதனால் எந்த வாக்யமானாலும் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படவில்லை. ஆகவே, பேதஸம்ஸர்க்கமோ, அபேதஸம்ஸர்க்கமோ, இந்த இரண்டும் அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தத்தை போதிக்கின்றதாகச் சொல்லப்படவில்லை. இந்த இரண்டிற்கும் விலக்ஷணம் அகண்டார்த்தபோதகவாக்யம் என்பதால், லௌகிக வாக்யமோ, வைதிகவாக்யமோ எதுவானாலும் தாத்பர்யவிஷயமே வாக்யார்த்தம் என்று அறியவேண்டும்.

**148. அவதாரிகை :**

வாக்யம், அகண்டார்த்தத்தை எவ்விதம் போதிக்கின்றது? என்றால்.

**ச்லோகம் :**

यद्वाक्यजातमथ वेदशिरोनिविष्टं यद्वापि लौकिकमखण्डमपास्य नान्यत् ।
शक्नोति वस्तु वदितुं तदशेषमेव ब्रूयादखण्डमिति तु प्रतिपादयामः ॥

**ச்லோகார்த்தம் :** சிலவைதிக வாக்யங்களும், சில லௌகிக வாக்யங்களும் அகண்டார்த்தத்தையன்றி வேறு எந்த அர்த்தத்தையும் போதிப்பதில்லை. இவ்வித வாக்யங்கள், எப்படி அகண்டார்த்தத்தை போதிக்கின்றது? என்று மேலே சொல்லப் போகின்றோம்.

**வ்யாக்யானம் :** வேதத்திலுள்ள 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்களும், லோகத்திலுள்ள ஸோऽயம்புமான் என்பது போன்ற வாக்யங்களும், அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. அதனால் வாக்யம் என்றாலே அகண்டார்த்தத்தையே போதிக்கும் என்று எங்களால் சொல்லப்படவில்லை. அதே போல் வாக்யம் என்பது பேதஸம்ஸர்க்கத்தையோ, அபேத ஸம்ஸர்க்கத்தையோ போதிக்கவில்லை என்றும் சொல்லப்படவில்லை. எந்த விஷயம் தாத்பர்யமாக போதிக்கப்படுகிறதோ அதுவே வாக்யார்த்தம் என்று சொல்கிறோம்.

ஆகவே, எந்த வாக்யத்திலிருந்து, பேதரூபமான அர்த்தம், ஸாமான்யமாக அறியப்படுகின்றதோ அந்தபேதம், ஒப்புக்கொள்ளமுடியாமல் பாதிக்கப்படுமானால், அந்தவாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று அறியவேண்டும். எந்த வாக்யத்தில் அறியப்படும் பேதம் பாதிக்கப்படவில்லையோ அதையே பேதஸம்ஸர்க்க வாக்யம் என்று அறியவேண்டும். இதேபோல் எந்த வாக்யம், விசேஷ்ய விசேஷண பாவத்தை தெரிவிக்கின்றதோ அதை அபேதஸம்ஸர்க்கவாக்யம் என்று அறியவேண்டும். லோகவ்யவஹாரத்தில், ஸோऽயம்புமான் என்ற வாக்யம் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று அறியவேண்டும்.

**149. ச்லோகம் :**

सोऽयं पुमानिति हि मुख्यपदार्थयुक्तवाक्यार्थबुद्धिजननस्य न वाक्यमेतत् ।
ईशीत वाच्यशबलस्थपदद्वयेन संसृष्टबुद्धिजनने पदयोर्विरोधात् ॥

**ச்லோகார்த்தம் :** 'ஸோSயம்புமான்' என்ற வாக்யமானது, முக்யார்த்தத்தை தெரிவிக்கின்றபதங்களைக் கொண்டு வாக்யார்த்த ஞானத்தை உண்டுபண்ணக்கூடிய ஸாமர்த்யமுடையதாக ஆகாது. ஏனெனில் முக்யார்த்தமான ஸபளார்த்தத்தை தெரிவிக்கின்ற இரண்டு பதங்களினுல் ஸம்ஸ்ருஷ்ட்டஞானம் ஏற்படுமானுல் அந்த இரண்டுபதங்களுக்கும் விரோதம் இருப்பதால் அன்வயம் ஏற்படாது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் 'ஸோSயம்புமான்' என்ற வாக்யமானது 'அவனே இந்த புருஷன்' என்று தெரிவிக்கின்றது. அதாவது முன் ஒரு காலத்தில், ஏதோ ஒரு தேசத்தில், ஏற்கனவே அறியப்பட்ட புருஷன்தான், 'இப்போது' இந்த காலத்தில், இந்த தேசத்தில், இங்கே எதிரில் இருக்கின்ற புருஷன் என்று சொல்லப்படுவதை கேட்க்கின்றபோது, 'அந்தக்காலம், அந்த தேசம்,' 'இந்தக்காலம், இந்த தேசம்' என்பவைகளின் ஸம்பந்தம் ஏதுமின்றி, கேவலம், அந்த புருஷனை மட்டும் (புருஷவ்யக்தியை மட்டும்) அறிகிருன். இதையே அகண்டார்த்தம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் இந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படாமல், தேசம், காலம் இவைகளுடன் சேர்த்தே அந்த புருஷனை இந்த வாக்யம் தெரிவிப்பதாகச் சொல்லப்படுமானுல், கால தேசங்களில் பேதம் இருக்கின்றதால், 'அவனே இவன்' என்று அறிந்து கொள்வதற்கு முடியாது. ஆகவே, வாக்யத்தில் அறியப்படும் பேதமான அம்ஸங்களை விட்டு, அபேதமான அம்ஸத்தில் அகண்டார்த்தம் க்ரஹிக்கப்படவேண்டும்.

**150. அவதாரிகை :**

இந்தவிதம் ஸம்ஸர்க்கமுள்ள வாக்யங்களினுல் வாக்யார்த்தபோதம் ஸம்பவிக்க வில்லையென்ருல், இப்பேர்ப்பட்ட வாக்யங்களை அப்ரமாணம் என்று தள்ளிவிடலாமே? என்ருல், அவ்விதம் தள்ளமுடியாது. ஏனெனில் ஆப்தவாக்யமாக இருக்கின்றதால் அப்ரமாணமென்று சொல்லமுடியாது. அதனுல் வாக்யத்தின் தாத்பர்யம் என்னவென்பதை அறிந்து லக்ஷணையினுல் அகண்டார்த்தத்தை ஸமர்ப்பிக்கமுடியுமானுல், அப்பேர்ப்பட்ட வாக்யங்களை அப்ரமாணமென்று தள்ளமுடியாது.

**150. ச்லோகம் :**

एतद्धि सोऽयमिति वाक्यमखण्डनिष्ठं वक्तव्यमत्र गतिरस्ति न काचिदन्या ।
तद्देशकालमनुकृष्य स इत्यनेन नायंपदार्थमुपढौकयते हि नैतत् ॥

**ச்லோகார்த்தம் :** 'ஸோSயம்புமான்' என்ற இந்த வாக்யமானது, அகண்டார்த்த போதகம் என்றே சொல்லவேண்டும். இதையன்றி வேறு எந்த முறையிலும் அர்த்தம் சொல்லமுடியாது. 'ஸ:' என்ற பதத்தினுல், தத்தேசம், தத்காலம், இவைகளை தெரிவித்த பிறகு, இந்த வாக்யமானது 'அயம்' என்ற பதத்தின் அர்த்தத்தை தெரிவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** 'ஸோSயம்புமான்' = 'அவனே இந்த புருஷன்' என்ற வாக்யமானது, 'நீலோற்பலம்' என்பது போல் அபேத ஸம்ஸர்க்கத்தை போதிக்கின்றது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், 'நீலோற்பலம்' என்னுமிடத்தில், 'எதுநீலமோ அதுவே உற்பலம்,' 'எது உற்பலமோ அதுவே நீலம்' என்று அர்த்தம் அறியப்படுகிறது. அதனுல், அந்த வாக்யம் அபேத ஸம்ஸர்க்கம் என்று சொல்லலாம். ஆனுல் 'ஸோSயம்புமான்' என்ற வாக்யம், அபேதஸம் ஸர்க்கம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், அந்த தேசம் அந்த காலம் என்பதும், இந்த தேசம், இந்த

காலம் என்பதும் ஒன்று என்று அபேதஸம்ஸர்க்கம் சொல்லமுடியாது. ஆகவே, ஒன்றுக்கொன்று விருத்தமான இரண்டு அம்ஸங்களுடன் கூடினவனை ஒரு புருஷனை தெரிவிக்குமானால், அதில் பேதம் தான் அறியப்படுமேயன்றி 'அவனே இவன்' என்ற அபேதம் அறியப்படமுடியாது. மேலும், 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யத்தினால் அறியப்படும் அந்த தேசம், அந்தகாலம் என்ற விருத்தாம்ஸங்களை மட்டும் விட்டு, இந்த தேசம், இந்த காலம் இவைகளுடன் கூடின புருஷனை அந்த வாக்யம் தெரிவிப்பதாகச் சொல்லலாமே? ஏன் இரண்டு அம்ஸங்களிலுமுள்ள விசேஷணங்களையும் விடவேண்டும்? என்றால், அவ்விதம் சொல்வதற்கு முடியாது. ஏனெனில், ஒரு அம்ஸத்தில் விசேஷணத்தை விட்டு மற்றொரு அம்ஸத்தில் விசேஷணத்துடன் கூடினதாக சொல்லப்படுமானால், விசேஷணமுள்ளதற்கும் விசேஷணம் அற்றதற்கும் அபேதம் என்பது ஸம்பவிக்கமுடியாது. அதுமட்டுமல்ல, ஒரே புருஷனை, ஒரே ஸமயத்தில் (காலத்தில்) இரண்டு தேச, கால, ஸம்பந்தமுடையவனாகச்சொல்லமுடியாது. இரண்டு புருஷர்களாக இருந்தால் அவன் அந்ததேசகால ஸம்பந்தமுடையவன், இவன் இந்த தேச காலஸம் பந்தமுடையவன், என்று சொல்லலாம். ஆனால், 'அவனே இவன்' என்று ஒரே புருஷன்தான் குறிப்பிடப்படுவதால், தேசம், காலம் என்ற விசேஷணங்களை, இரண்டு அம்ஸங்களிலும் விட்டு, புருஷ வ்யக்தியை மட்டும் இந்த வாக்யம் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டுமேயன்றி வேறு எந்த முறையிலும், இந்த வாக்யம் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. இவ்விதம் அர்த்தம் சொல்லப்படவில்லையென்றால் இந்த வாக்யம் ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. ஆகவே 'அவனே இந்த புருஷன்' என்று போதிப்பதற்கு தேசம், காலம் என்பவைகள் உபலக்ஷணமாக இருக்கிறது. தேசம், காலம் என்ற உபலக்ஷணத்தைக் கொண்டு உபலக்ஷிதமான அந்த புருஷனை 'ஸோऽயம் புருஷ:' என்று இந்தவாக்யம் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

இந்த விதம் லோக வ்யவஹாரத்திலும், எல்லோருடைய அனுபவத்தைக் கொண்டு, அறியப்படுகின்ற அகண்டார்த்தத்தை போதிக்கின்ற வாக்யத்தை, அப்ரமாணம் என்று யாராலும் தள்ளமுடியாது.

**151. அவதாரிகை :**

இதுவரை சொல்லப்பட்ட ந்யாயத்தைக் கொண்டு, வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று அறியவேண்டும்.

**ச்லோகம் :**

एवं सतीदमपि तत्वमसीतिवाक्यमाश्रित्य लाक्षणिकवृत्तिमखण्डनिष्ठम् ।
सोऽयं पुमानिति यथा वचनं तथाऽस्तु नो चेत् समं हि तदलाबुनिमज्जनोक्त्या ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் ஸோऽயம் புமான்' என்ற வாக்யம் போல, 'தத்வமஸி' என்ற வாக்யமும், லக்ஷணாவ்ருத்தியை ஆச்ரயித்து, அகண்டார்த்தபோதகம் என்று சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படாவிடில், காய்ந்த சுரைக்காய் ஜலத்தில் மூழ்கி விடுகிறது என்ற வாக்யம்போல, அப்ரமாணம் என்றாகிவிடும்.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள 'தத்பதம்' 'த்வம்பதம்' என்ற இரண்டும் மாயாவிசிஷ்ட்ட சைதன்யம், அந்த:கரண விசிஷ்ட்டசைதன்யம் என்ற இரண்டையும் முக்யார்த்தமாக தெரிவிக்கின்றது. இவ்விதம் முக்யார்த்தமாக அறியப்படும் சைதன்யம் என்பது, மாயை, அந்த:கரணம் என்ற விசேஷணத்துடன் கூடியதாக இருக்கின்றது. அதனால் இரண்டும் ஒன்றே என்று அபேதம் சொல்வதற்கு முடியாது. ஆகவே, இரண்டிலும்

அறியப்படும் விசேஷாம்ஸங்களை விட்டு, கேவல சைதன்யாம்ஸத்திற்கு மட்டும் அபேதம் சொல்லப்படுகின்றது. அதனால் மஹாவாக்யம் அகண்டார்த்த போதகம் என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் வாக்யம் என்பதில், முக்யார்த்தம் ஸம்பவிக்கவில்லையென்றால் லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும்.

தத்—த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் ஸாமானாதிகரண்யத்தைக்கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டிய அவஸ்யம் என்ன? வையதி கரண்யேன அன்வயம் சொல்லலாமே? எப்படி கடம் என்பது ம்ருதாத்மகம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் ஜீவன், ஈச்வராத்மகம் என்று தாதாத்ம்ய அர்த்தம் சொல்லப்படலாமே?

**சித்தா :** ஸமானவிபக்தியில் சொல்லப்படுகின்றதால், வையதிகரண்யேன அன்வயம் சொல்லமுடியாது. ம்ருத் என்பதிலிருந்து கடம் என்ற கார்யம் உண்டாவது போல், ஈச்வரனிடமிருந்து ஜீவன் உண்டாகிறதாக இருந்தால் தான் ஜீவன், ஈச்வராத்மகம் என்று சொல்லலாம். ஆனால் ஜீவன் என்பது ஈச்வரனுடைய கார்யம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** கார்யம் என்று சொல்லாவிடினும் ஈச்வர அம்ஸம் என்று சொல்லலாமே?

**சித்தா :** நிரம்ஸான ஆத்மாஸ்வரூபத்தில் அம்ஸ, அம்ஸிபாவம் என்பதே கிடையாது. ஆகவே 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்கள் பேதத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகையால் மஹாவாக்யங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கவில்லையென்றால், வேதம் அப்ரமாணம் என்றே சொல்லநேரிடும். ஏனெனில் முக்யார்த்தத்தைக்கொண்டு ஜீவ ப்ரஹ்ம அபேதம் சொல்லப்படுமானால் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு விரோதமாகும். எப்படி காய்ந்த சுரைக்காய் ஜலத்தில் மூழ்கிவிட்டது என்று தெரிவிக்கின்ற வாக்யம் அப்ரமாணம் என்றாகிறதோ அதுபோல் மஹாவாக்யமும் அப்ரமாணம் என்று தள்ளநேரிடும். ஆகவே பாகத்யாகலக்ஷணையினால் மஹாவாக்யங்கள் 'ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்ம்மென்று போதிப்பதாகத் தான் சொல்லவேண்டும்.

**152. அவதாரிகை :**

லோகத்தில் எந்த விஷயம் லக்ஷணையினால் அறிவிக்கப்படுகிறதோ அந்த விஷயம், ஏற்கனவே வேறு ஒரு ப்ரமாணத்தினால் அறியப்பட்டதாகவே இருக்கின்றது. அதுபோல் வேதாந்தம் 'ப்ரஹ்ம' மென்பதை லக்ஷணையினால் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானால் 'ப்ரஹ்ம' மென்பதும் மானாந்தர வேத்யம் என்றே சொல்லவேண்டும். ஆகவே எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாகாத 'ப்ரஹ்ம' மானது எப்படி லக்ஷணையினால் போதிக்கப்படுவதாகச் சொல்லமுடியும்? என்றால் அதற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :** मानान्तराधिगतगोचरगामिनी स्याच्छब्दस्य लाक्षणिकवृत्तिरिति प्रलापः ।
सिद्धत्वमात्रमिह लाक्षणिकप्रवृत्तेर्निर्वाहकारणमनङ्गमतोऽन्यदस्याः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தமானது ப்ரமாணாந்தரத்தினால் அறியப்பட்ட வஸ்துவைத்தான் லக்ஷணாவ்ருத்தியினால் போதிக்கமுடியும் என்ற நியமம் சொல்வதற்கு முடியாது. வஸ்து என்பது சித்தமாக இருக்கவேண்டுமென்ற ஒன்றே, லக்ஷணாவ்ருத்திக்கு காரணம் என்று சொல்லவேண்டும். வேறு எதுவும் காரணமாகச் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** சப்தமானது, எந்த ஒரு அர்த்தத்தை, லக்ஷணையினால் தான் தெரிவிக்கவேண்டுமென்ற அவஸ்யம் ஏற்படுகிறதோ அந்த வஸ்து ப்ரசித்தமாக இருக்க வேண்டுமேயன்றி ப்ரமாணாந்திரத்தினால் அறியப்பட்டதாகத்தான் இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லமுடியாது. ஆகையால் 'த்வம்பத் லக்ஷ்யார்த்தமானது ஸ்வப்ரகாச ஸ்வரூபமாக

இருக்கின்றதால், ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் எல்லோருக்கும் அனுபவசித்தமாக இருக்கின்றது. அதனுல் த்வம்பதார்த்தம் லோகப்ரஸித்தமாகவே இருக்கின்றது. தத்பதலக்ஷ்யார்த்தமாக எந்த சைதன்யம் போதிக்கப்படுகின்றதோ அந்த ஸ்வரூபம் அனுபவத்தினுலேயே சித்திக்கின்றது. ஆகவே மானுந்தரகோசரமாக இல்லலாததால் அபிதையினுலோ லக்ஷணையினுலோ 'ப்ரஹ்ம' மென்பது போதிக்கமுடியாது என்று சொல்வது பிதற்றல். ஆகையால் லக்ஷணையினுல் எந்த வஸ்து போதிக்கப்படுகிறதோ அந்த வஸ்து ப்ரசித்தமாக இருக்கவேண்டும் என்பதைத் தவிர, வேறு எதையும் காரணமாகச் சொல்லமுடியாது. மேலும்,

**153. அவதாரிகை :**

ஒரு சில இடங்களில் சப்தமானது லக்ஷணையினுல் அர்த்தத்தை தெரிவிக்கின்ற போது, அந்த வஸ்து மானுந்தரத்தினுல் அறியப்பட்டதாக இருக்கின்றது என்பதற்காக, லக்ஷணை சொல்லப்படும் இடங்களில் எல்லாம் லக்ஷ்யார்த்தமான வஸ்துமானுந்தர கோசரமாகத்தான் இருக்கவேண்டுமென்று சொல்லப்படுவது சரியல்ல என்ற விஷயத்தை மேலே உதாகரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

मानान्तराधिगतता हि न लक्षणायां किञ्चित्करी भवति पिङ्गलतावदग्नेः ।
धूमस्य जन्मनि हि पिङ्गलता न हेतुर्यद्यप्यवस्थितवती हुतभुक्शरीरे ॥

**ச்லோகார்த்தம் :** அக்னியிலுள்ள பிங்கள வர்ணமானது எப்படி தூமம் உண்டாவதற்கு காரணமாக இருப்பதில்லையோ, அதுபோல் ப்ரமாணுந்தரசித்தவிஷயத்வம் என்பது லக்ஷணு வ்ருத்திக்கு காரணமாக ஆகாது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் சாதாரணமாக லக்ஷணை சொல்லப்படும் இடங்களில் எதை லக்ஷ்யார்த்தமாகச் சொல்லப்படுகிறதோ, அந்தவஸ்து, ப்ரமாணுந்தரத்தினுல் அறியப்பட்டதாகத்தான் இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லமுடியாது. ஏனெனில், ப்ரமாணகோசரத்வம் என்பது லக்ஷணைக்கு காரணமில்லை. அக்னியென்பதே புகைக்கு காரணம் என்பதற்காக புகையை அக்னியின் கார்யம் என்று சொல்கிறோம். ஆனுல் புகைக்கு அக்னி காரணம் என்று சொல்வதற்காக அந்த அக்னியிலுள்ள சிகப்பு வர்ணம் இருந்தால் தான் புகை இருக்குமென்றோ நீலமாகவோ, வெளுப்பாகவோ மஞ்சளாகவோ இருந்தால் புகை இருக்காது என்றோ, சொல்வதற்குமுடியாது. ஆகையால், அக்னியென்பதே புகைக்கு காரணம் என்று சொல்லவேண்டுமேயன்றி, அக்னியின் வர்ணம் காரணம் என்று சொல்லப்படுவதில்லை, அதுபோல் லக்ஷணையினுல் தெரிவிக்கப்படும் வஸ்து, அறியப்பட்டதாக இருக்கவேண்டும் என்பதால், ஞாதத்வம் என்பதையே லக்ஷணைக்கு காரணமாகச் சொல்லவேண்டும். மேலும் 'வ்ரீஹின் அவஹந்தி' என்ற வாக்யம் நெல்லைக்குத்தி அரிசி எடுக்கவேண்டும் என்று தெரிவிக்கின்றது. நெல்லைகுத்தினுல் அரிசி கிடைக்கும் என்பது எல்லோராலும் அறியப்பட்ட விஷயம் தான் என்றுலும், இவ்விதமான நியமவிதியினுல் அபூர்வம் என்பது அறியப்படுவதாக, பூர்வ மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. அதாவது, 'அபூர்வம்' என்பது ப்ரமாணுந்தர சித்தமாக இல்லையென்றுலும், லக்ஷணையினுல் அபூர்வம் போதிக்கப்படுகிறது என்று அவர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே, 'யத்ரயத்ர லக்ஷ்யார்த்தத்வம், தத்ரதத்ரமானுந்தர சித்தத்வம்' என்று அன்வய வ்யாப்தி சொல்லப்பட்டபோதிலும், 'யத்ரயத்ரமானுந்தர சித்தத்வ அபாவ: தத்ரதத்ர லக்ஷ்யார்த்த அபாவ:' என்று வ்யதிரேக வ்யாப்தி சொல்லமுடியாது. ஆகையால் மானுந்தர சித்தத்வம் என்பது லக்ஷணுவ்ருத்திக்கு காரணமாக ஆகாது.

**பூர்வ :** ஆகாசம் என்பது ஸர்வ வஸ்துக்களுக்கும் அவகாசத்தை கொடுக்கக்கூடியது என்பதால், ஆகாசம் இருந்தால் தான் ஸர்வவஸ்துக்களும் இருக்கமுடியும் என்று அன்வயவ்யாப்தி சொல்லலாம். ஆனுல், ஆகாசம் இல்லாவிடில் எந்த வஸ்துவும் இருக்கமுடியாது என்று என்ன காரணத்தைக் கொண்டு வ்யதிரேக வ்யாப்தி சொல்லமுடியும்? ஆகவே, ஆகாசம் அவகாச ப்ரதம் என்று எப்படி அன்வய வ்யாப்தியைக் கொண்டே தீர்மானிக்கப்படுகிறதோ அதுபோல், லோகத்தில் ப்ரமாணங்களினுல் அறியப்படும் வஸ்துவில் தான் லக்ஷணை சொல்லமுடியும் என்று அன்வயவ்யாப்தியை கொண்டே தீர்மானிக்கலாமே? ஆகையால் ப்ரமாணுந்தரத்தினுல் அறியப்பட வில்லையென்ருல், லக்ஷணைக்கு விஷயமாக ஆகமுடியாது என்ற வ்யதிரேக வ்யாப்தி இருக்க வேண்டுமென்ற அவஸ்யமில்லை என்று சொல்லலாமே?

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல ஏனெனில், ஆகாசம் என்பது அமூர்த்தமான த்ரவ்யம் என்பது மட்டுமின்றி, ஆகாசம் என்பது இல்லாத இடமே கிடையாது. அதனுல் வ்யதிரேக வ்யாப்தி சொல்லமுடியவில்லை என்பதால் அன்வய வ்யாப்தியை மட்டும் கொண்டு தீர்மானிக்கின்ருேம். அதற்காக எந்த இடத்திலும் அன்வய வ்யாப்தி மட்டும் இருந்தால் போறும் என்று தீர்மானிக்கமுடியாது. சில இடத்தில், அன்வயவ்யாப்தியினுல் மட்டும் விஷயம் சித்திக்கலாம், சில இடத்தில் வ்யதிரேக வ்யாப்தியினுலேயே விஷயம் சித்திக்கலாம், வேறு சில இடங்களில், அன்வயவ்யாப்தி, வ்யதிரேக வ்யாப்தி இரண்டினுலும் சித்திக்கலாம். அதனுல், வ்யாப்தி என்பது இப்படித்தான் இருக்கவேண்டுமென்று நியமம் சொல்வதற்கு முடியாது. இதே போல் ப்ரமாணங்களினுல் அறியப்பட்ட வஸ்துக்களிலும் லக்ஷணை சொல்லலாம், ஸ்வயமே அறியப்படுகின்ற வஸ்துவிலும் லக்ஷணை சொல்லலாம். அதனுல், மானுந்தரத்தினுல் அறியப்பட்ட வஸ்துவில் தான் லக்ஷணை சொல்லலாம் என்று நியமம் சொல்லமுடியாது.

**154. அவதாரிகை :**

'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தில் தத்பதம், த்வம்பதம் என்ற இரண்டிற்கும் ஜஹல்லக்ஷணையை ஒப்புக்கொள்ளப்படுமானுல், வாச்யார்த்தம் என்பது முற்றிலும் விடப்படுகிறது. வாச்யார்த்தம் முற்றிலும் விடப்படுமானுல், அதனுல் ஜடம் என்பது எஞ்சி இருக்கின்றதால் தாத்பர்யார்த்தம் கிடைக்காது. அதாவது, ஆத்மஸ்வரூபம் என்பது வாக்யத்தின் அர்த்தம் என்று சொல்லமுடியாது. அதற்காக, அஜஹல்லக்ஷணையைக் கொண்டு சொல்லப்படுமானுல், அந்த:கரண அவச்சின்ன சைதன்யம், மாயாவச்சின்ன சைதன்யம், என்ற இரண்டையும் விடாமலேயே அர்த்தம் செய்யப்படுமானுல் இரண்டும் ஒன்றே என்ற அபேதார்த்தம் சித்திக்காது. ஆகையால் சொல்லப்பட்ட இரண்டு லக்ஷணைங்களைத் தவிர வேருன, எந்த லக்ஷணை சொல்லப்படுகிறதோ, அதைப்பற்றி மேல் வரும் ச்லோகங்களின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

शब्दस्य लाक्षणिकवृत्तिरपि त्रिधैषा काचिज्जहाति न जहाति च वाच्यमन्या ।
भागं जहाति न जहाति च भागमन्या सोऽयं त्रिधा भवति लाक्षणिकप्रकारः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்திலிருந்து ஏற்படும் லக்ஷணு வ்ருத்தி என்பது மூன்று விதம். வாச்யார்த்தத்தை த்யாகம் செய்வது ஒரு விதம். மற்ருென்று வாச்யார்த்தத்தை த்யாகம் செய்வதில்லை. இதைத்தவிர மூன்ருவதாக, வாச்யார்த்தம் என்பதில் ஒரு பாகத்தை விட்டு மற்ருெரு பாகத்தை விடாமல் எடுத்துக் கொள்வது என்று இந்தவிதம் லக்ஷணை என்பது மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸ்வயம் ப்ரகாசமான ப்ரஹ்ம வஸ்துவை தெரிவிக்கின்ற விஷயத்தில் சுத்தமானது லக்ஷணையினுல் வஸ்துவை போதிக்கின்றது என்று சொல்கிருேம். லக்ஷணை என்பது

மூன்று விதம். அதாவது, ஜஹல்லக்ஷணையென்றும், அஜஹல்லக்ஷணை என்றும் ஜஹதஜஹல்லக்ஷணை என்றும் மூன்றுவித லக்ஷணை சொல்லப்படுகிறது.

சப்தத்திலிருந்து முக்யார்த்தத்தை தெரிவிக்கின்றது எதுவோ, அந்த வ்ருத்தியை அந்தபதத்திலுள்ள சக்திவ்ருத்தி என்றும் அபிதை என்றும் சொல்லப்படும். அந்த சப்தத்திலிருந்து அமுக்யார்த்தத்தை தெரிவிக்கின்ற பதத்திலுள்ள சக்தியை லக்ஷணாவ்ருத்தி என்றும் சொல்லப்படுகிறது.

**155. அவதாரிகை :**

ஜஹல்லக்ஷணை என்றால் என்னவென்பதை லௌகீக உதாகரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** गंगापदं हि निजमर्थमपास्य तीरे यद्वर्तते भवति सा जहती प्रसिद्धा ।
शोणः स्थितो बहिरितीह तु लक्षणायामादाय शोणिमगुणं तुरगे प्रवृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** கங்காபதமானது, தன் வாச்யார்த்தத்தை விட்டு விட்டு, தீரம் என்ற அர்த்தத்தை தெரிவிக்குமானால், அதை ஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படும். 'சிகப்பு வெளியில் நிற்கிறது' என்ற வாக்யத்தில் உள்ள சிகப்பு என்ற பதம், சிகப்பு நிறம் என்ற தன் வாச்யார்த்தத்தை விடாமல், குதிரை என்ற அர்த்தத்தை தெரிவிக்குமானால் அதை அஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படும்.

**வ்யாக்யானம் :** 'கங்காயாம் கோஷ :' என்ற வாக்யத்திலுள்ள கங்காபதம் என்பது முக்யவ்ருத்தியினால் ப்ரவாகம் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. முக்யார்த்தமான ப்ரவாகம் என்ற அர்த்தமானது, கோஷம் என்ற பதத்துடன் சேர்ந்து அர்த்தத்தை தெரிவிக்கமுடியாததால், கங்காபதத்தை விட்டு விட்டு 'தீரம்' என்ற அர்த்தத்தை லக்ஷணையாகச் சொல்லப்படுகிறது. இதையே ஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படும்.

'சிகப்பு வெளியில் நிற்கிறது' என்ற வாக்யத்திலுள்ள 'சிகப்பு' என்ற பதத்திற்கு சிகப்பு நிறம் என்பதே வாச்யார்த்தம். ஆனால் நிறம் என்பது குணமானதால், அந்த குணம் எந்த வஸ்துவில் இருக்கிறதோ அந்த வஸ்துவையே குறிக்கின்றதால், சிகப்பு நிறம் என்ற வாச்யார்த்தத்தை விடாமலேயே, சிகப்பு நிறம் உள்ள 'குதிரை' என்று 'அந்த வஸ்துவை' இந்த சிகப்பு என்ற பதம் லக்ஷணையாக தெரிவிக்கின்றது. இதையே அஜஹல் லக்ஷணை என்று சொல்லப்படும். (அதாவது, வாச்யார்த்தத்தை விடாமல், வேறொரு அர்த்தம் போதிக்கப்படுமானால் அதை அஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படுகிறது).

**156. அவதாரிகை :**

இதே போல், மூன்றாவது லக்ஷணை என்னவென்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सोऽयं पुमानिति वचस्युभयप्रकारा देशादिभागपरिवर्जनतः प्रसिद्धा ।
पुंसश्च केवलमुपात्ततया पदाभ्यामेवं त्रिधा भवति लाक्षणिकी प्रवृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** 'ஸோSயம்புமான்' என்ற வாக்யத்திலுள்ள தேசம், காலம், என்ற பாகங்களை விட்டு விட்டு, கேவல புருஷனை மட்டும் பதங்களினால், க்ரஹிக்கப்படுகின்றதால் இதை ஜஹதஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸோSயம்புமான் 'என்ற வாக்யமானது,' அவனே இவன் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்ற போது, அந்த தேசம், அந்த காலம், இந்த தேசம், இந்த காலம்,

என்ற பாகங்களையெல்லாம் விட்டு விட்டு கேவலவ்யக்தி மாத்ரமாக, புருஷன் க்ரஹிக்கப்படுவதால், இதையே ஜஹதஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படுகிறது என்பது லோகப்ரசித்தமாகவே இருக்கிறது.

**157. அவதாரிகை :**

இந்த விதம் மூன்று விதமான லக்ஷணைக்கும் லௌகிக உதாகரணம் சொல்லப்பட்டது. இப்போது இந்த மூன்று விதமான லக்ஷணைக்கும் வைதிக உதாகரணம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

वेदेऽपि लाक्षणिकवृत्तिरियं त्रिधैषा यज्ञायुधीति वचने तु जहत्प्रवृत्तिः ।
वैश्वानरादिवचनेष्वजहत्प्रवृत्तिः तत्वंगिरोरुभयरूपतया प्रवृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** வேதத்திலும் லாக்ஷணிக வ்ருத்தி என்பது மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது. 'ஸஏஷயஞ்ஞாயுதீ' என்ற வாக்யத்தில் ஜஹல்லக்ஷணையும், 'வைச்வானரம் உபாஸ்வ' என்ற வாக்யத்தில் அஜஹல் லக்ஷணையும், 'தத்வமஸி' என்ற வாக்யத்தில் ஜஹதஜஹல் லக்ஷணையும், சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ஸஏஷ யஞ்ஞாயுதீயஜமானோஞ்ஜஸா ஸ்வர்க்கம் லோகம்யாதி' என்ற வேதவாக்யம், யாகத்தைச் செய்கின்ற யஜமான சரீரமானது யஞ்ஞத்தில் உபயோகின்ற அக்னி, தான்யம் முதலான ஆயுதங்களுடன் ஸ்வர்க்கம் செல்வதாக தெரிவிக்கின்றது. இவ்விதம் இந்த வாக்யத்திலிருந்து அறியப்படும் அர்த்தம் பொருந்தவில்லை. ஏனெனில், யஞ்ஞத்தில் உபயோகப்படுத்தப்பட்ட பாத்ரம் முதலான ஸர்வமும், யஜமானனுடைய தேஹ வியோகத்தின் போது, தேஹத்துடன் சேர்த்தே தஹனம் செய்யப்படுகிறது. ஆகையால் இவைகள் எதுவும் யஜமானனுடன் ஸ்வர்க்கத்திற்கு போகமுடியாது. அதனால், ஜடமான யஞ்ஞாயுதங்களுடன் கூடினவன் என்பதை விட்டு விட்டு, அந்த யஞ்ஞத்துடன் ஸம்பந்தப்பட்ட யஜமானனை மட்டும் இந்த வாக்யம் லக்ஷணையாக தெரிவிக்கின்றது. ஆகவே, யஞ்ஞத்தைச்செய்கின்றவன் ஸ்வர்க்கம் செல்கிறான் என்பதே இந்த வாக்யத்தின் அர்த்தம் என்று அறியப்படுகிறது. இந்த விதம் வாச்யார்த்தம் பூராவும் விடப்படுவதால் இதை ஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படுகிறது.

இதேபோல், 'வைச்வானரம் உபாஸ்தே' என்ற வாக்யம், வைச்வானர சப்த்தினால், ஜாடராக்னியையும், விராட் ஸ்வரூபத்தையும் தெரிவிக்கின்றது என்றாலும், ஜடமான அக்னியை உபாஸிப்பதென்பது ஸம்பவிக்காது. அதனால் ஜாடராக்னி என்ற பதம் மட்டும் இந்த வாக்யத்திற்கு அர்த்தமாக ஆகாது. ஜாடராக்னியென்பதை உபாதியாகக்கொண்ட உபஹித சைதன்யத்தையே இந்த வாக்யம் லக்ஷணையாக தெரிவிக்கின்றது என்று அறியப்படுகிறது. ஆகவே, வைச்வானரன் என்ற சப்தம், வாச்யார்த்தத்தை விடாமலேயே அர்த்தத்தை தெரிவிக்கின்றதால் அஜஹல்லக்ஷணை என்று சொல்லப்படுகிறது. ஜாடராதே : என்பதிலுள்ள ஆதி பதத்தினால் மனோமயம், ப்ராணமயம், என்ற வாக்யங்களுக்கும் அர்த்தம் செய்யப்படுகிறது.

**158. அவதாரிகை :**

'தத்வமஸி' 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற வாக்யங்களைக் கொண்டு ஜஹத ஜஹல்லக்ஷணை என்பதை விளக்கப்படுகிறது. அதாவது, 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள 'தத்' – 'த்வம்' என்ற இரண்டு பதங்களுக்கும், 'அயமாத்மாப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள, 'ஆத்மா ப்ரஹ்ம,' என்ற இரண்டு பதங்களுக்கும், ஸமானார்த்தமே வாச்யார்த்தம் என்றும், இந்த ஸமானார்த்தத்தில் எந்த அம்ஸம் எடுத்துக்கொள்ளப்படவேண்டும், எந்த அம்ஸம்விடப்படவேண்டும் என்ற விஷயத்தை விவேசனம் செய்து தெரிவிக்கப்படுகிறது. இதில் 'தத்வமஸி' என்ற

மஹாவாக்யத்திலுள்ள தத்பதத்திற்கு ஸமானமாக இருக்கின்ற, 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள 'ப்ரஹ்ம' சப்தவாச்யார்த்தமான சபளார்த்தம் என்னவென்பதை முதலில் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** ब्रह्माज्ञाने ह्यद्वितीयत्वमेकं ब्रह्मण्यन्यच्चाद्वितीयत्वमस्ति ।
तत्सम्पर्कात्तत्र चाद्वैतताऽन्या व्युत्पन्नोऽयं ब्रह्मशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்ம அஞ்ஞானத்தில் ஒரு அத்விதீயத்வம் இருக்கிறது. ப்ரஹ்மமென்பதில் (வேறு) ஒரு அத்விதீயத்வம் இருக்கிறது. இந்த இரண்டின் ஸம்பந்தத்தினுல் ஏற்படும் சபளார்த்தத்தில் ஒரு அத்விதீயத்வம் இருக்கிறது. இந்த மூன்ருவது அர்த்தத்தில் தான், ப்ரஹ்ம சப்தம் முக்யமாக ப்ரயோகம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் எந்த அஞ்ஞானம், தாதாத்ம்யேன அத்யஸ்த்தமாக இருக்கின்றதோ, அந்த அஞ்ஞானத்திலும், ப்ரஹ்ம அபேதம் (அத்விதீயத்வம்) இருக்கிறது. அத்யஸ்த்தமானவஸ்து என்பது, அதிஷ்ட்டான ஸ்வரூபத்தையன்றி வேருக இல்லையென்பதால், உண்மையில் பேதம் கிடையாது. காரணத்தை அன்றி கார்யம் என்பதும் வேறல்ல என்பதால், அஞ்ஞான கார்யமான, ஸ்தூல, ஸூக்ஷ்மப்ரஞ்சம் என்பதும், வேருக இல்லை (ததனன்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய:) என்பதால், ப்ரஹ்ம அஞ்ஞானத்தில் ஒரு அத்வைதத்வம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்லப்படும் அத்விதீயத்வம் என்பது வாஸ்தவமில்லை.

நிர்விசேஷமான ப்ரஹ்மஸ்வரூபத்தில், உண்மையில் அஞ்ஞானம் என்பதோ, அதன் கார்யம் என்பதோ கிடையாது. ஆகையால் அஞ்ஞானத்தில் சொல்லப்பட்ட கல்பிதமான அத்விதீயத்வம் என்பதைக்காட்டிலும் வேருக, ஸத்யமான அத்விதீயத்வம் என்பதும் ப்ரஹ்மத்தினிடம் இருக்கின்றது.

இந்தவிதம் நிர்விசேஷமான ப்ரஹ்மஸ்வரூபத்தில் கல்பிதமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது, அத்யஸ்த்தமாக இருக்கின்றபோது, பரஸ்பர அத்யாஸத்தினுல், அஞ்ஞானத்துடன் கூடிய ஸபளஸ்வரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தில், (கார்யம் அனேகமாக இருந்தாலும் காரணம் என்பது ஒன்றே என்ற முறையில்) ஒரு அத்விதீயத்வம் இருக்கிறது. ஆகவே, அஞ்ஞானத்திலுள்ள அபரமார்த்தமான அஞ்ஞானத்திற்கும் விலக்ஷணமாக ஸபளப்ரஹ்மத்தில் ஒரு அத்விதீயத்வம் இருக்கின்றது. இந்தவிதம், முதலில் அஞ்ஞானத்தில் சொல்லப்பட்ட அத்விதீயத்வம் வாஸ்தவமாக இல்லாததால், அந்த அத்விதீயத்வம் அஸாதாரணம். கேவல ப்ரஹ்மத்தில் சொல்லப்படும் அத்விதீயத்வம் என்பது வாஸ்த்தவம், வாஸ்த்தவமான இந்த அத்விதீயத்வம் என்பது வேறு எதிலும் இல்லாததால் அஸாதாரணம். ஸபளஸ்வரூபம், என்பதிலுள்ள அத்விதீயத்வம் என்பது, ஸத்யம் அந்ருதம் இரண்டும் கலந்திருக்கின்றதால் உபயஸாதாரணம், என்று சொல்லப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஸபளஸ்வரூபத்தையே, ப்ரஹ்மமென்று விசாரம் செய்யப்படுகிறது. ஸபளஸ்வரூபமான ப்ரஹ்மத்தையே, 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள, 'தத்' சப்தமும், 'அயமாத்மாப்ரஹ்ம' என்பதிலுள்ள 'ப்ரஹ்ம' சப்தமும் வாச்யார்த்தமாக தெரிவிக்கின்றது. 'யதோவா இமானி பூதானி' என்ற வாக்யமும், ஸபளப்ரஹ்மத்தையே போதிக்கின்றது. ஏனெனில் கேவலப்ரஹ்மத்தில் ஜகத் காரணத்வம் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே, 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்' என்ற வாக்யமும், 'தேவாத்ம சக்திம் ஸ்வகுணைர்நிகூடாம்' என்ற வாக்யமும், இது போன்ற மற்றுமுள்ள வாக்யங்களும், எந்த ஸபளப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றதோ அந்த ஸபளப்ரஹ்மமே, மஹாவாக்யத்திலுள்ள ப்ரஹ்ம சப்த வாச்யார்த்தம் என்று அறியவேண்டும்.

**159. அவதாரிகை :**

'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள தத்சப்தத்திற்கு ஸமானமாக 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற மஹாவாக்யத்திலுள்ள ப்ரஹ்ம சப்தம் வாச்யார்த்தமாகச் சொல்லப்பட்டது. இப்போது 'த்வம்' சப்தத்திற்கு ஸமானமான 'அயமாத்மாப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள ஆத்ம சப்தத்தின் வாச்யார்த்தம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रत्यग्भावस्तावदेकोऽस्ति बुद्धौ प्रत्यग्भावः कश्चिदन्यः प्रतीचि ।
प्रत्यग्भावस्तत्कृतस्तत्र चान्यो व्युत्पन्नोऽयं तत्र चात्मेति शब्दः ॥

**ச்லோகார்த்தம் :** புத்தியில் ஒரு ப்ரத்யக்த்வம் இருக்கிறது. ஆத்மாவில் வேருக ஒரு ப்ரத்யக்த்வம் இருக்கிறது. இவைகளின் அன்யோன்ய அத்யாஸத்திருல் ஏற்படும் ஸபளத்தில் வேறு ஒரு ப்ரத்யக்த்வம் இருக்கிறது. மூன்ருவதாகச் சொல்லப்பட்ட அர்த்ததத்தில்தான், 'ஆத்ம' சப்தம் முக்யார்த்தமாக ப்ரயோகிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** முன் ச்லோகத்தில் தத்சப்தமும், அதற்கு ஸமானமான ப்ரஹ்ம சப்தம் என்பதும், அவைகளின் வாச்யார்த்தம் என்ன, என்பதையும் விளக்கப்பட்டது. இந்தச்லோகத்தில் 'த்வம்' சப்தமும், அதற்கு ஸமானமான 'ஆத்ம' சப்தமும், அவைகளின் வாச்யார்த்தம் என்ன என்பதையும் விளக்கப்படுகிறது.

'அஹமஹம்' என்று விவகாரம் செய்யப்படும் புத்தியில் ஒரு ப்ரத்யக்த்வம் இருக்கிறது. புத்தியையே ஆத்மா என்று அத்யாஸத்திருல் விவகாரம் செய்யப்படுகின்றதால், புத்தியிலுள்ள ஆத்மத்வம் என்ற ப்ரத்யக்த்வம் கல்பிதம் என்பதால், இந்த ப்ரத்யக்த்வம் அபரமார்த்தம் என்றே சொல்லவேண்டும். தேஹாதிகளைக்காட்டிலும் புத்தி என்பது ஆந்தரமாக இருக்கின்றதால் புத்தியில் ப்ரத்யக்த்வம் சொல்லப்படுகிறது. ஆத்மஸ்வரூபம் விசேஷ ரூபமாக அபிவ்யஞ்சகமாவதற்கு புத்தி என்பதே உபாதியாக இருக்கின்றது என்பதாலும், ஆத்மஸ்வரூபத்திற்கு மிகவும் ஸமீபமாக இருக்கின்ற உபாதியாக இருப்பதாலும், புத்திக்கு ஆத்மத்வம் உபசாராத் சொல்லப்படுகிறது. இந்த விதம் புத்தியில் ஒரு ப்ரத்யக்த்வம் அபரமார்த்தமாக இருக்கிறது. இதைக்காட்டிலும் வேருக, பரமார்த்தமாக (வாஸ்தவமாக) ஒரு ப்ரத்யக்த்வம் என்பது, புத்திக்கும் சாக்ஷியாக இருக்கின்ற சைதன்யரூபமான ஆத்மஸ்வரூபத்தில் இருக்கிறது. இந்தப்ரத்யக்த்வம் என்பதே உண்மை. ஸர்வத்திற்கும் ஆந்தரமாய், சுகாதிகளுக்கெல்லாம் சாக்ஷியாக, ஆத்ம சைதன்யமே உண்மையில் ஸர்வப்ரத்யக் ஸ்வரூபமாக இருக்கின்றது.

இதைக் காட்டிலும் வேருக, சைதன்ய ப்ரதிபலனத்துடன் கூடிய புத்தியில் ஒரு ப்ரத்யக்த்வம், ஸத்யம், அந்ருதம் என்ற இரண்டும் கலந்த ஸபளஸ்வரூபம். இந்த ஸபளஸ்வரூபம் என்பதே, 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள ஆத்ம சப்த வாச்யமாகச் சொல்லப்படுகிறது.

**160. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படும் மஹா வாக்யத்தில் எந்த அம்ஸம் விடப்படவேண்டும், எந்த அம்ஸம் எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तच्छब्दवाच्यगतमद्वयभागमेकं प्रत्यक्त्वमात्रमविरोधमपेक्षमाणः ।
त्वंशब्दवाच्यशबलस्थमुपाददानो वाक्यादखण्डमथ तत्वमसीति विद्यात् ॥

**ச்லோகார்த்தம் :** ஜிஞ்ஞாஸுவானவன், (வாக்யத்திலுள்ள) விரோத பரிகாரத்திற்காக, 'தத்' சப்தத்தின் வாச்யார்த்தத்திலுள்ள, 'அத்வயத்வம்' என்ற அம்ஸத்தையும், 'த்வம்' சப்த வாச்யார்த்தத்திலுள்ள ப்ரத்யக்த்வம் என்ற அம்ஸத்தையும் எடுத்துக்கொண்டு, 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள அகண்டார்த்தத்தை அறிந்து கொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரை தத், த்வம் என்ற பதங்களின் வாச்யார்த்தம் என்னவென்பதை விளக்கப்பட்டது. இப்போது லக்ஷ்யார்த்தம் என்னவென்று விளக்கப் படுகிறது. தத், த்வம், என்ற இரண்டு பதங்களும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்ற போது, தத்சப்தவாச்யார்த்தத்தில் பாரோக்ஷ்யத்வம் என்பதும், த்வம் பத வாச்யார்த்தத்தில் ஸத்வயத்வம் என்பதும் அறியப்படுகிறது. இந்த விதம் இரண்டிற்கும் விரோதம் அறியப்படுவதால், தத் சப்த வாச்யார்த்தத்திலிருக்கின்ற பாரோக்ஷ்யத்வ உபாதியையும், த்வம் சப்த வாச்யார்த்தத்திலிருக்கின்ற ஸத்வயத்வ உபாதியையும் விட்டு விட்டு, 'தத்' சப்த வாச்யத்திலுள்ள விரோதமற்ற அம்ஸமான அத்விதீயத்வம் என்பதையும், த்வம் சப்த வாச்யத்திலுள்ள ப்ரத்யக்த்வம் என்ற அம்ஸத்தையும் எடுத்துக்கொண்டு, ப்ரத்யக்ஸ்வரூபமே அத்விதீயப்ரஹ்மமென்றும், அத்விதீயப்ரஹ்மமே ப்ரத்யக்ஸ்வரூபம் என்றும், ஜஹதஜஹல் லக்ஷணையைக்கொண்டு அறியப்படுமானல் எந்த விதமான விரோதமும் கிடையாது. ஆகவே, இந்தவிதம் வாக்யமானது அகண்டார்த்தத்தை போதிக்கின்றது.

இவ்விதம் தத்சப்த வாச்யத்திலுள்ள சைதன்யாம்ஸத்தில் 'அத்வயத்வம்' என்பது வாஸ்தவம். ஆகவே லக்ஷணையினுல் சைதன்யாம்ஸத்தை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும். இதேபோல் த்வம்சப்த வாச்யத்திலுள்ள சித்ரூபம் என்பதும் ப்ரத்யக்த்வம் என்பதும் வாஸ்தவம். அதனுல் லக்ஷணையினுல் இரண்டு பதங்களிலும் இருக்கின்ற விரோதமில்லாத சைதன்யாம்ஸத்தை மட்டும் எடுத்துக்கொண்டு, பாகத்யாகலக்ஷணையினுல் அகண்டார்த்தத்தை அறிந்து கொள்ளவேண்டும். இவ்விதம் ஸபளார்த்தத்தில் இருக்கின்ற உபாதி அம்ஸத்தை விட்டு, சைதன்யாம்ஸத்தை க்ரஹிக்கப்படுவதால், அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படவில்லையென்றுல், வாக்யம் அப்ரமாணம் என்று சொல்லநேரிடும். ஏனெனில் தத்பதத்திலுள்ள அத்வயத்வம் பாரோக்ஷ்யத்வம் என்பதற்கும் த்வம்பதத்திலுள்ள ஸத்வயத்வம், ஆபரோக்ஷ்யத்வம், ப்ரத்யக்த்வம் என்பதற்கும், அபேதம் என்பது ஸம்ஸர்க்கத்தினுலும் சித்திக்காது. தாதாத்ம்யத்தினுலும் சித்திக்காது. மஹாவாக்யம் அபேதத்தையே போதிக்கின்றதால் ஸ்வத : ப்ரமாணமான வேதத்திற்கு அப்ராமாண்யம் என்பது ஸம்பவிக்கமுடியாது. அதனுல், தத்பதார்த்தம் என்பதில், கார்யத்துடன் கூடிய அஞ்ஞானம்ஸத்தைவிட்டு, அதேபோல் த்வம்பதார்த்தம் என்பதில், விகாரத்துடன் கூடிய புத்தி அம்ஸத்தை விட்டு, ஸ்வப்ரகாச, சத்சிதானந்த ஸ்வரூபாத்மகமான அம்ஸத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அகண்டார்த்தமே வாக்யார்த்தம் என்று போதிக்கப்படுவதாலேயே வேதம் ரக்ஷிக்கப்படவேண்டும்.

**161. அவதாரிகை :**

தத்பதார்த்தத்தில் உள்ள அத்வைதத்வம் என்பதும், த்வம் பதார்த்தத்தில் உள்ள ப்ரத்யக்த்வம் என்பதும், வேறு என்று சொல்லப்படுமானுல், அகண்டார்த்தம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதற்காக, அத்வைதத்வம், ப்ரத்யக்த்வம் என்ற இரண்டும் வேறல்ல, ஒன்று தான் என்று சொல்லப்படுமானுல், அத்வைதத்வமே ப்ரத்யக்த்வம் ப்ரத்யக்த்வமே அத்வைதத்வம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல் கலசம், கடம் என்பது போல் புனருக்தி தோஷம் ஸம்பவிக்கும் இந்த சங்கைக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

आदेयांशे नाणुमात्रोऽपि भेदः यद्यप्येवं भिन्नमादाय शब्दौ ।
वर्तेते त्वय्यद्वयात्मप्रकाशे बाह्यं हेतुं जामिता नास्ति तस्मात् ॥

**ச்லோகார்த்தம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள (அத்வைதத்வம், ப்ரத்யக்த்வம்) ஆதேயாம்ஸத்தில் அணுவளவும் பேதமில்லையென்றாலும், தத்–த்வம் என்ற இரண்டு சப்தங்களினால் பின்னமான, பாஹ்யஹேது மூலம் (உபாதிகளைக் கொண்டு) அத்வயாத்மகமாய் ப்ரகாசஸ்வரூபமாக இருக்கின்ற உன் ஸ்வரூபத்தையே இந்த இரண்டு சப்தங்களும் போதிக்கின்றதால் இதில் புனருக்திதோஷம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** தத்–த்வம், என்ற பதங்களின் லக்ஷ்யார்த்த அம்ஸத்தில் பேதம் என்பது இருக்கின்றதா? இல்லையா? பேதம் இருக்கிறதென்றால் அகண்டார்த்தம் ஸம்பவிக்காது. பேதமே இல்லையென்றால் புனருக்திதோஷம் ஸம்பவிக்கின்றது என்ற சங்கைக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

ப்ரத்யக்ஸ்வரூபமே அத்வய சைதன்யஸ்வரூபம், அத்வயசைதன்ய ஸ்வரூபமே ப்ரத்யக் ஸ்வரூபம் என்று வாக்யத்தின் லக்ஷ்யார்த்தம் சொல்லப்படுகிறது. ஆகவே இந்த ஸ்வரூபத்தில் எள்ளளவும் பேதம் கிடையாது. ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேத மற்றதாக இருக்கின்றதால் ஆத்மஸ்வரூபம் ஸ்வாபாவிகமாகவே அத்விதீயஸ்வரூபந்தான். நீலம் உற்பலம் என்பது போல், தத்பதார்த்தத்திற்கும், த்வம் பதார்த்தத்திற்கும் தர்ம, தர்மிபாவம் கிடையாது. எது தத்பதார்த்தமோ அதுவே த்வம் பதார்த்தம், எது த்வம்பதார்த்தமோ அதுவே தத்பதார்த்தம் என்று சொல்லப்படும் வாக்யத்தின் லக்ஷ்யார்த்தத்தில் எவ்வித பேதமும் கிடையாது.

லக்ஷ்யார்த்தத்தில் ஸம்பந்தப்படாமல், வாச்யார்த்தத்தில் மட்டும் ஸம்பந்தமுள்ள, வேறுபட்ட மாயை, அந்தக்கரணம் என்ற உபாதியைக்கொண்டு தத் என்றும் த்வம் என்றும் இரண்டு சப்தங்களைக்கொண்டுபோதிக்கப்படுகிறது. அதனால், இதில் புனருக்திதோஷம் என்பதும் ஸம்பவிக்கமுடியாது.

(ப்ரவ்ருத்தி நிமித்த பேதத்தைக்கொண்டு) ஸாமானாதிகரண்யமாக, வாக்யம் போதிக்கின்றது. ஆகவே, 'அத்வயமாகவும், ஸ்வப்ரகாசமாகவும் இருக்கின்ற சைதன்ய ஸ்வரூபமே, உன்உண்மையான ஸ்வரூபம்' என்று மஹாவாக்யம் போதிக்கின்றது.

**162. அவதாரிகை :**

அத்வைதம் என்பது, த்வைதமில்லாத ஒரு வஸ்துவை குறிக்கின்றது. ப்ரத்யக்த்வம் என்பது, பராக்த்வம் இல்லாத ஒரு வஸ்துவை குறிக்கின்றது. ஆகவே, இரண்டிற்கும் ப்ரதியோகி பேதம் இருக்கின்றதால், இரண்டும் ஒன்றே என்று எப்படிச் சொல்லமுடியும்? என்ற சங்கைக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अद्वैतेऽर्थे प्रत्यगर्थोऽस्ति तद्वत् प्रत्यक्तत्वे चाद्वयस्यापि भावः ।
यद्यप्येवं नातिरेकावकाशः पुर्णे तत्वे तत्वमर्थोपपत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** அத்வயமான அர்த்தத்தில், ப்ரத்யக் அர்த்தம் அடங்கி இருக்கின்றது. (அந்தர் பூதமாக இருக்கின்றது.) இதே போல் ப்ரத்யக் அர்த்தத்தில் அத்வயார்த்தம் என்பது அடங்கி இருக்கின்றது. இந்த விதம் இருந்த போதிலும் இவை இரண்டிற்கும் பேதம் சொல்லமுடியாது. ஏனெனில், பூர்ணமான தத்வத்தை போதிக்கின்ற விஷயத்தில், தத், த்வம் பதங்களின் லக்ஷ்யார்த்தம் என்பது அபின்னமாக இருந்தால் தான் பொருந்தமாக இருக்கும்.

**வ்யாக்யானம் :** ப்ரத்யக்த்வம், அத்வயத்வம் என்ற இரண்டும், தத், த்வம் பதங்களின் லக்ஷ்யார்த்தமாக ஒத்துக்கொண்ட போதிலும், அதை அகண்டமென்று ஒத்துக்கொள்ளமுடியாது. ஏனெனில், பராக்த்வம், த்வைதத்வம் என்ற ப்ரதியோகி பேதங்கள் இருக்கின்றதால், இரண்டும் ஒன்றே என்று சொல்லமுடியாது. இவ்விதம், ப்ரதியோகி பேதம் இல்லையென்றால், 'தத்' என்ற பதமோ அல்லது 'த்வம்' என்ற பதமோ, ஏதாவது ஒருபதம் இருந்தாலேபோதுமானது. இரண்டு பதங்களால் ஒருவஸ்து, குறிப்பிடவேண்டிய அவஸ்யமில்லை.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. அத்வைதத்வம், ப்ரத்யக்த்வம், என்ற இரண்டு தன்மைகள், ப்ரதியோகிபேதத்தை அபேக்ஷித்து, இரண்டு சப்தங்களால் சொல்லப்படுகின்றது என்றாலும், உண்மையில் இரண்டு வஸ்துக்கள் இல்லை.

அத்வைதம் என்ற தத்பதலக்ஷ்யார்த்தத்தில் ப்ரத்யக் என்பது அடங்கி இருக்கிறது. அவ்விதம் இல்லை என்றும், ப்ரத்யக் என்பது வேறு என்றும் சொல்லப்படுமானால். தத்பதார்த்தம் அத்வைதம் என்று சொல்வதற்கே முடியாது.

இதே போல் ப்ரத்யகர்த்தமான த்வம்பதலக்ஷ்யார்த்தத்தில் அத்வயத்வம் எனபது பூர்ணமாக இருக்கின்றதென்று சொல்லாமல், அத்வைதார்த்தம் வேறு, ப்ரத்யகர்த்தம் வேறு என்று சொல்லப்படுமானால், அத்வைதார்த்தத்தை அபேக்ஷித்து ப்ரத்யகர்த்தம் ஸம்பவிக்காததால், பராக்த்வம் இருப்பதாக்ச்சொல்லநேரிடும். ஆகவே, இரண்டுபதங்களும், இரண்டு தன்மைகளுடைய ஒரே வஸ்துவை குறிப்பிடுவதாகவே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் தர்ம, தர்மிபாவம் உள்ளதாக அறியப்படுகிறதே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், பூர்ணமான தத்வமாக இருக்கின்றதால், லக்ஷணையினால் ஸ்வரூபேண ஒன்றுக்கொன்று அன்வயித்து அகண்டமான அர்த்தத்தையே போதிக்கின்றது. உதாரணமாக, ஒரே தண்டத்தில், நுனி என்றும் அடி என்றும் நடுவென்றும் சொல்லப்படுவதற்காக, அந்த தண்டத்தில் இவ்வித பேதங்கள் இருப்பதாகச்சொல்லமுடியாது. இதேபோல் தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம், என்பதில், உபாதிபேதம் இருந்தாலும் ஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் கிடையாது. அதனால், தத்பதமோ அல்லது த்வம்பதமோ ஏதாவது ஒருபதம் இருந்தால்போறும் என்று சொல்லமுடியாது. ஏனெனில், அத்வைதாம்ஸம், ப்ரத்யக்த்வாம்ஸம் என்பதில் பேதமில்லையென்றாலும், அந்த:கரணம், மாயை, என்ற இரண்டு உபாதிகளையும் அபேக்ஷித்து, இரண்டு பதங்கள் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி பேதங்களைக்கொண்டு சொல்லப்படுகிறது. பத பேதத்தினால் பதார்த்த பேதம் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், ஸ்வரூபத்தில் உண்மையில் எவ்விதமான பேதமும் கிடையாது. 'ஏகமேவ அத்விதீயம்' என்ற ச்ருதிவாக்யம் தத்பதார்த்தம் அத்விதீயம் என்று தெரிவிக்கின்றது. அதேபோல் ப்ரத்யக் அர்த்தம் 'ஸ: ஆத்மா ஸர்வாந்தர:' என்று ஸர்வத்திற்கும் ஆந்தரமாய், ஸர்வத்திற்கும் ஸ்வரூபமாக இருக்கிறது என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படாமல், இரண்டும் வேறு என்று சொல்லப்படுமானால், ஸஜாதீயம் முதலான மூன்று விதபேதரஹிதம் அத்விதீயம் என்று சொல்வதற்குமுடியாது. ஆகவே, தத்பதம்–த்வம்பதம் என்ற இரண்டிற்கும் ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் வேறு என்றே சொல்லவேண்டும். அதனால் மாயா உபாதியுடன் கூடின சைதன்யம் என்றும் அந்த:கரண உபாதியுடன் கூடினசைதன்யம் என்றும் அதிகரண பேதம் சொல்லவேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது. இவ்விதம் பத பேதத்தினால் அர்த்தபேதம் இருந்த போதிலும் வஸ்துவில் எவ்வித பேதமும் உண்மையில் கிடையாது என்று சொல்லப்படவேண்டும். இல்லையானால் பூர்ணத்வம் சித்திக்காது. ஆத்மதத்வம் அபரிச்சின்னம் என்றும் ஸர்வவிவாகாராஸ்பதம் என்றும் ஸ்வயம் ப்ரகாசம் என்றும் ச்ருதி, தாத்பர்யத்துடன்

போதிக்கின்றது. ஆகவே, அத்விதீயத்வம் என்பதும் ப்ரத்யக்த்வம் என்பதும் வேறு என்று சொல்வதற்குமுடியாது.

**163. அவதாரிகை :**

தத், த்வம், என்ற இரண்டு பதங்களும் வெவ்வேறான அர்த்தத்தை போதிக்கின்றது என்பதால், லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது என்றாலும், இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன? ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப்படுவதாலேயே மற்றொரு பதத்துடன் அன்வயம் ஏற்படும் என்பதால், ஸம்ஸர்க்கமே வாக்யார்த்தம் என்று சொல்லலாமே? என்றால், இது சரியல்ல.

**ச்லோகம் :**

न च विनिगमनायां कारणं किञ्चिदस्ति स्फुटमुभयपदस्था लक्षणा शस्यतेऽतः ।
न हि विनिगमनायां हेत्वभावे कदाचित् क्वचिदियमुपलब्धा सोऽयमित्यादिवाक्ये ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு பதத்தில் மட்டும் லக்ஷணை சொல்லவேண்டுமென்பதற்கு காரணம் ஏதுமில்லை, ஆகையால் இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லப்படுகிறது. 'ஸோऽயம்புமான்' போன்ற வாக்யங்களிலும், ஒரு பதத்தில் தான் லக்ஷணை சொல்லவேண்டும் என்பதற்கு காரணம் ஏதுமில்லையென்பதால், எந்த ஸமயத்திலும், எந்த இடத்திலும் ஒரு பதத்தில் மட்டும் லக்ஷணை சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லப்படுவது அனர்த்தகம் என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில் ஏகபதத்தில் லக்ஷணை சொல்வதென்பது லோகத்தில் சில இடங்களில் ஸம்பவிக்கலாம் என்று ஒத்துக்கொள்ளலாம். உதாரணமாக, 'கபீராயாம் நத்யாம் கோஷ:' என்ற வாக்யப்ரயோகம் செய்யுமிடத்தில், 'கபீராயாம் நத்யாம்' என்ற இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. நதி என்றாலே அது ஆழமாகத்தான் இருக்குமானதால், ஒரு பதத்தில் லக்ஷணை சொன்னாலே போதும். (கபீராயாம் என்பது தாத்பர்யக்ராஹகம்.) ஆனால் ஸோऽயம் தேவதத்த: என்ற இடத்தில் ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லமுடியாது. இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லவேண்டும். ஆகவே ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லவேண்டும் என்பதற்குரிய காரணம் இருந்தால்தான் அவ்விதம் சொல்லமுடியும்.

ஆகையால் வேதத்திலுள்ள தத், த்வம், என்ற பதங்களில் ஒரு பதத்தில் தான் லக்ஷணை சொல்லவேண்டும் என்பதற்குரிய காரணம் ஏதும் இல்லாததால் இரண்டு பதங்களிலும் லக்ஷணையை ஒப்புக்கொள்ள வேண்டியது அவஸ்யம் என்றே சொல்லவேண்டும். ஆகவே, இரண்டு பதங்களும், இரண்டுதன்மைகளுடைய ஒரே வஸ்துவை குறிப்பிடுவதாகவே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் தர்ம, தர்மிபாவம் உள்ளதாக அறியப்படுகிறதே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், பூர்ணமான தத்வமாக இருக்கின்றதால், லக்ஷணையினால் ஸ்வரூபேண ஒன்றுக்கொன்று அன்வயித்து அகண்டமான அர்த்தத்தையே போதிக்கின்றது. உதாரணமாக, ஒரே தண்டத்தில், நுனி என்றும் அடி என்றும் நடுவென்றும் சொல்லப்படுவதற்காக, அந்த தண்டத்தில் இவ்வித பேதங்கள் இருப்பதாகச் சொல்லமுடியாது. இதேபோல் தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம், என்பதில், உபாதிபேதம் இருந்தாலும் ஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் கிடையாது. அதனால், தத்பதமோ அல்லது த்வம்பதமோ ஏதாவது ஒரு பதம் இருந்தால் போதும் என்று சொல்லமுடியாது. ஏனெனில், அத்வைதாம்ஸம், ப்ரத்யக்த்வாம்ஸம் என்பதில் பேதமில்லையென்றாலும், அந்த:கரணம், மாயை என்ற இரண்டு உபாதிகளையும் அபேக்ஷித்து, இரண்டுபதங்கள் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி

பேதங்களைக் கொண்டு சொல்லப்படுகிறது. பதபேதத்தினால் பதார்த்த பேதம் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், ஸ்வரூபத்தில் உண்மையில் எவ்வித பேதமும் கிடையாது. 'ஏகமேவ அத்விதீயம்' என்ற ச்ருதி வாக்யம் தத்பதார்த்தம் அத்விதீயம் என்று தெரிவிக்கின்றது. அதேபோல் ப்ரத்யக்அர்த்தம் 'ஸ: ஆத்மா ஸர்வாந்தர:' என்று ஸர்வத்திற்கும் ஆந்தரமாய், ஸர்வத்திற்கும் ஸ்வரூபமாக இருக்கிறது என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படாமல், இரண்டும் வேறு என்று சொல்லப்படுமானால், ஸஜாதீயம் முதலான மூன்றுவித பேதரஹிதம், அத்விதீயம், என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே, தத்பதம், த்வம்பதம் என்ற இரண்டிற்கும் ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் வேறு என்றே சொல்லவேண்டும். அதனால் மாயாஉபாதியுடன் கூடின சைதன்யம் என்றும் அந்த:கரண உபாதியுடன் கூடின சைதன்யம் என்றும் அதிகரண பேதம் சொல்லவேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது. இவ்விதம் பதபேதத்தினால் அர்த்தபேதம் இருந்தபோதிலும் வஸ்துவில் எவ்வித பேதமும் உண்மையில் கிடையாது என்று சொல்லப்படவேண்டும். இல்லையானால் பூர்ணத்வம் சித்திக்காது. ஆத்மதத்வம் அபரிச்சின்னம் என்றும் ஸர்வவிவாகாராஸ்பதம் என்றும் ஸ்வயம்ப்ரகாசம் என்றும் ச்ருதி, தாத்பர்த்துடன் போதிக்கின்றது. ஆகவே, அத்விதீயத்வம் என்பதும் ப்ரத்யக்த்வம் என்பதும் வேறு என்று சொல்வதற்கு முடியாது.

**164. அவதாரிகை :**

**பூர்வ :** வேதத்தில், 'யோ ஹோதா ஸோऽத்வர்யு:' என்று ஒரு வாக்யம் இருக்கிறது. இதில் 'ஹோதா' என்று குறிப்பிடப்படுவர் ரிக்வேத கர்மாக்களைச்செய்பவர். 'அத்வர்யு' என்பவர் யஜுர் வேத கர்மாக்களைச் செய்பவர். இவ்விதம் (வெவ்வேறான) ஒன்றுக்கொன்று முரண்பட்ட கர்மாக்களை செய்கின்ற இரண்டு பேர்களும் ஒன்று என்று சொல்லமுடியாது. அதனால் அந்த வாக்யத்தில் முதலில் சொல்லப்படும் 'ஹோதா' என்ற பதத்திற்கு முக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டு, 'அத்வர்யு' என்ற பதத்திற்கு லக்ஷணையினால் 'ரித்விக்' என்று அர்த்தம் செய்யப்படுகிறது. வேறு இடங்களில் யஜுர் வேத கர்மாக்களைச் செய்பவர் தான் 'அத்வர்யு' என்று முக்யார்த்தம் சொல்லப்பட்ட போதிலும், இந்த வாக்யத்திலுள்ள 'ஹோதா' என்ற பதத்திற்கு விரோதமில்லாமல் 'உபக்ரம பலீயஸ்' என்ற ந்யாயத்தைக் கொண்டு 'அத்வர்யு' என்ற பதத்திற்கு லக்ஷணை சொல்லப்படுகிறது. இதே போல், 'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள தத்–த்வம் என்ற பதங்களில் முதலில் சொல்லப்படும் 'தத்' பதத்திற்கு முக்யார்த்தத்தை ஒத்துக்கொண்டு பின்னால் சொல்லப்படும் 'த்வம்' பதத்திற்கு மட்டும் லக்ஷணை சொல்லலாமே?

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

प्रथमचरमभावो निर्णये कारणं चेदयमपि नियमो न ह्यन्यथाऽप्यस्य दृष्टेः ।
प्रथमपठितमासीत्तत्पदं सामवेदे चरमपठितमेतद् दृष्टमध्वर्युवेदे ॥

**ச்லோகார்த்தம் :** பதங்கள் முன், பின் இருக்கின்ற காரணத்தைக்கொண்டு லக்ஷணை சொல்லவேண்டும் என்று நியமம் சொல்லமுடியாது. ஏனெனில், முன், பின், பாவமென்பது சில இடங்களில் மாறுகவே காணப்படுகிறது. ஸாமவேதத்தில் 'தத்' பதம் முன்னாலும், யஜுர் வேதத்தில் 'தத்' பதம் பின்னாலும் சொல்லப்படுவதால், லக்ஷணை சொல்வதற்கு (முன் பின் பாவமென்பதை) காரணமாகச் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள 'தத்–த்வம்' என்ற பதங்களில் 'தத்' பதம் முதலில் இருக்கின்ற காரணத்தினாலும் தத்பதார்தத்தில் முக்யார்த்தம்

சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லையென்பதாலும், அஸஞ்ஜாத விரோதம் என்ற ந்யாயத்தைக் கொண்டு தத்பதார்த்தத்திற்கு முக்யார்த்தத்தை ஒத்துக்கொண்டு, பின்னால் சொல்லப்படும் த்வம்பதார்த்தத்தில் மட்டும் லக்ஷணையை ஒத்துக்கொண்டு வாக்யத்திற்கு அர்த்தம் செய்யலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ஸாமவேதத்திலுள்ள சாந்தோக்ய உபநிஷத்தில் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. இதேபோல் யஜுர் வேதத்திலுள்ள ப்ரஹதாரண்யக உபநிஷத்தில் 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற மஹா வாக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. இதே போல் மற்ற உபநிஷத்துக்களில் இருக்கின்ற மஹா வாக்யங்களில் சில வாக்யங்கள் முதலில் 'தத்' பதத்தையும், சில வாக்யங்கள் முதலில் 'த்வம்' பதத்தையும் போதிக்கின்றது. அதனால் 'உபக்ரமபலீயஸ்' என்ற ந்யாயத்தைக் கொண்டு, முதலில் சொல்லப்படும் பதத்திற்கு முக்யார்த்தமும், பின்னால் சொல்லப்படும் பதத்திற்கு லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யவேண்டுமென்று சொல்வது முற்றிலும் பொருந்தாது.

வேதாந்த வாக்யங்கள் எல்லாம் ப்ரஹ்மத்தை ஏகரூபமாகவே போதிக்கின்றது. வேதங்களில் பேதம் இருந்தபோதிலும் அதேபோல் வாக்யத்திலுள்ள பதங்களில் பேதம் இருந்த போதிலும், அவைகளினால் போதிக்கப்படும் தத்வார்த்தத்தில் எவ்வித பேதமும் கிடையாது என்றாலும், பதபேதம் என்பது இருக்கின்றதால், இதில் எந்த பதத்திற்கு ப்ராதான்யம்? எதற்கு ப்ராதான்யமில்லை என்று சொல்லமுடியாது. ஏனெனில் பதங்களின் அர்த்தத்தின் தாத்பர்யத்தைக் கொண்டு விசாரிக்கின்ற போது ஜீவனே ப்ரஹ்மமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. அதனால் 'த்வம்' பதமே ப்ரதானம் என்று சொல்லநேரிடும். 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற வாக்யத்தில், முதலில் 'அஹம்' என்ற பதம் இருக்கின்றதால் 'அஸஞ்ஜாத விரோதம்' என்ற ந்யாயத்தைக் கொண்டு, முக்யார்த்தம் ஒப்புக்கொள்ளப்படுமானால், 'அஹம்' என்ற பதத்தில் லக்ஷணை சொல்லமுடியாது. அதனால் ப்ரஹ்மபதத்தில் மட்டும் லக்ஷணை சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் 'ப்ரஹ்ம' மென்பதில் உள்ள அத்விதீயத்வம் முதலானவைகளை விட்டு விட்டு, த்வம் பதத்துடன் அன்வயம் சொல்வதென்பது பொருந்தாது. ஆகவே, மஹாவாக்யங்களுக்கு இவ்விதம் அர்த்தம் செய்யப்படுமானால், அது விபரீதமாகவே ஆகும். ஆகவே, இந்த விதம் ஒத்துக்கொள்ளமுடியாது.

**165. அவதாரிகை :**

'ஸோऽயம்புமான்' என்ற லௌகிக வாக்யத்தில், 'ஸோऽயம்' என்ற இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லப்படுகிறது என்றாலும், 'ஸ:' என்ற பதம் பூர்வத்திலும், அயம் என்ற பதம் பின்னாலும் சொல்லப்படுகிறது. இந்த பதங்கள் இரண்டிலும் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யம் இல்லை. ஏதாவது ஒரு பதத்தில் லக்ஷணை சொன்னால் போறுமானது. அதே போல் மஹாவாக்யத்திலும் ஏகபதத்தில் லக்ஷணை சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

सोऽयं पुमानयमसाविति पौरुषेये वाक्ये तथा व्यतिहृतेऽत्र विशेषहेतुः ।
पूर्वापरत्वमिति शक्यमिदं न वक्तुं मुख्यत्वलाक्षणिकते प्रति शब्दवृत्योः ॥

**ச்லோகார்த்தம் :** 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யத்தில் 'ஸ: அயம்' என்றும் சொல்லலாம். 'புமான் அயம் அஸௌ' என்றும் சொல்லலாம் என்பதால், அதில் எது அஸஞ்ஜாத விரோதி, என்றும் சொல்ல முடியாதாகையால், எதில் லக்ஷணை சொல்லவேண்டும் என்பதை நிச்சயிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யத்திற்கு 'அவனே இவன்' என்றும் அர்த்தம் செய்யலாம், அல்லது 'இவனே அவன்' என்றும் அர்த்தம் சொல்லலாம். இந்த வாக்யத்தில் எந்த பதத்தை முதலில் சொல்லப்பட்டாலும், அதில் விரோதம் ஏதுமில்லை. வேதாந்த வாக்யத்தில் 'தத்' பதத்தில் தான் லக்ஷணை சொல்லவேண்டும் என்றோ, அல்லது த்வம்பதத்தில் தான் லக்ஷணை சொல்லவேண்டுமென்றோ சொல்லமுடியாது – அவஸ்யம் இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லப்படவேண்டும்.

**166. அவதாரிகை :**

**பூர்வ :** ஜீவனை உத்தேசித்து ப்ரஹ்மபாவம் விதிக்கப்படுகிறது. அதனால் விதேயத்திற்கே ப்ராதான்யம் சொல்லப்படவேண்டும். ஆகவே, அந்த:கரணப்ரதிபலனசைதன்யம் 'த்வம்' சப்தார்த்தமாக இருந்தபோதிலும், அந்த:கரணம் முதலான விசேஷணங்கள் தேவை இல்லாததால், உத்தேச்யமான 'த்வம்' பதத்தில் லக்ஷணையை ஒத்துக் கொண்டு, அதற்கு விபரீதமான, விதேயமான 'தத்' பதார்த்தத்தின் முக்யார்த்தத்தைக்கொண்டே வாக்யத்திற்கு அகண்டார்த்த அன்வயம் சொல்லப்படலாம். ஆகையால் 'தத்' பதத்தில் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யமில்லை என்று சொல்லலாமே?

**சித்தா :** இது சரியல்ல. ஏனெனில், ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப்படுமானால், வாக்யத்தில் அறியப்படும் விரோதத்திற்கு பரிகாரமே ஏற்படாது. ஆகையால் இரண்டு பதங்களிலும் அவஸ்யம் லக்ஷணை சொல்லப்படவேண்டும்.

**ச்லோகம் :**

न च भवति विरोधस्योत्थितस्यापनीतिः पदयुगलनिविष्टां लक्षणामन्तरेण ।
न हि भवति कदाचित् सद्वयस्याद्वयत्वं न च भवति परोक्षः प्रत्यगर्थोऽपि तद्वत् ॥

**ச்லோகார்த்தம் :** இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லப்படவில்லையென்றால், அந்த வாக்யத்தின் வாச்யார்த்தத்தில் அறியப்படும் விரோதத்திற்கு பரிகாரம் ஏற்படாது. ஏனெனில் எக்காலத்திலும் ஸத்வயமான வஸ்து, அத்வயமாக ஆகமுடியாது. அதேபோல் பரோக்ஷமாக இருக்கின்ற தத்பதார்த்தம், அபரோக்ஷமான ப்ரத்யகாத்மாவாக ஆகமுடியாது.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள,' தத்–த்வம்' என்ற இரண்டு பதங்களின் முக்யார்த்தமானது, ஒன்றுக்கொன்று விரோதமான தன்மையில் அறியப்படுகிறது. அதனால் இரண்டு பதங்களில், ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப் படுவதால் மட்டும் மற்றொரு பதத்தில் அறியப்படும் விரோதத்திற்கு பரிகாரம் ஏற்படாது. ஏனெனில், த்வம் பதலக்ஷ்யார்த்தம் என்பது, அபரோக்ஷமாக இருக்கின்ற ப்ரத்யக் சைதன்யம். தத்பதமுக்யார்த்தம் என்பது பரோக்ஷமாக இருக்கின்ற ப்ரஹ்மசைதன்யம். ஆகவே, அபரோக்ஷமான ப்ரத்யகாத்மாவிற்கும், பரோக்ஷமான (ப்ரஹ்மசைதன்யத்திற்கும்) தத்பதார்த்தத்திற்கும் அன்வயம் ஏற்படமுடியாது. ஆகவே, இரண்டு பதங்களிலும் இருக் கின்ற விசேஷணங்களை விட்டு விட்டு, இரண்டு பதங்களிலும் லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்பட்டால் தான் அகண்டார்த்த அன்வயம் ஏற்படமுடியும்.

**பூர்வ :** ஜீவனை உத்தேசித்து, ப்ரஹ்மபாவம் விதிக்கப்படுகின்றதால், ஜீவன் உத்தேச்யம் என்பதாலும், த்வம் பதார்த்தத்தில் அந்த:காரணம் முதலானவைகள் விசேஷமாக இருக்கின்றதாலும், அந்த விசேஷணங்களையெல்லாம் விட்டு, உத்தேச்யமான 'த்வம்' பதத்தில் மட்டும் லக்ஷணையை ஒத்துக்கொண்டு, அதற்கு விபரீதமான, விதேயமான தத்பதார்தத்தில் முக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டு அன்வயம் சொல்லலாம். ஆகையால், 'தத்'பதத்

திலக்ஷணை தேவைஇல்லை. உதாரணமாக, பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில், 'க்ரஹம்ஸம்மாஷ்டி' என்று ஒரு வாக்யம் இருக்கிறது. அதில் 'க்ரஹம்' என்ற பதம் ஏகவசனத்தில் சொல்லப் பட்டிருந்தாலும், 'ஏகத்வம்' என்பது விவக்ஷிதமில்லையென்று சொல்லப்படுகிறது. அதாவது 'க்ரஹம்' என்பது ஒரு பாத்ரவிசேஷம்; இந்த பாத்ரத்தைக்கொண்டு எந்த கர்மா செய்யப் படுகிறதோ, அந்த கர்மாபூர்த்தியான பிறகு அந்த கர்மாவில் உபயோகிக்கப்பட்ட எல்லா வற்றையும் ஸம்மார்ஜனம் செய்யவேண்டுமென்று இந்த வாக்யம் தெரிவிக்கின்றது. ஆனால் 'க்ரஹம்' என்று ஏகவசனத்தில் சொல்லப்படுகிறதே என்றால், இந்த இடத்தில் ஏகத்வம் விவக்ஷிதமில்லை என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதுபோல் த்வம் பதார்த்தத்திலுள்ள விசேஷணம் விவக்ஷிதமில்லையென்பதால், அந்த பதத்தில் மட்டும் லக்ஷணையை ஒத்துக் கொள்ளலாம். தத்பதார்த்தம் என்பது விதேயமாக இருக்கின்றதால் அதுமுக்யம். ஆகவே, தத்பதார்த்தத்தில் முக்யார்த்தத்தையே எடுத்துக்கொள்ளலாம். எப்படி 'பசும் ஆலபேத' என்ற வாக்யத்திலுள்ள 'பசு' என்று ஏகவசனத்தில் சொல்லப்பட்டிருப்பதை அப்படியே ஒத்துக்கொள்ளப்படுகிறதோ அதுபோல், தத்பதத்திலுள்ள விசேஷணங்கள் விவக்ஷி தமானதால், அதில் முக்யார்த்தத்தையே எடுத்துக்கொள்ளலாம். ஆகையால் த்வம்பத லக்ஷயார்த்தத்தையும், தத்பதமுக்யார்த்தத்தையும் எடுத்துக்கொண்டு இரண்டிற்கும் அன்வயம் சொல்லலாமே?

**சித்தா :** இவ்விதம் சொல்வது சரியல்ல. ஏனெனில், த்வம் பதார்த்தத்தில் அறியப் படும் 'ஸத்வயத்வம்' என்பதும் 'ஆபரோக்ஷயத்வம்' என்பதும், அதேபோல் தத்பதார்த்தத்தில் அறியப்படும், 'அத்வயத்வம்,' 'பாரோக்ஷயத்வம்' என்பதும் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கின்றது. ஆகையால் இரண்டு பதங்களிலும் லக்ஷணையை ஒத்துக் கொண்டால்தான் வாக்யார்த்தஅன்வயம் ஏற்படும்.

**பூர்வ :** அப்படியானால், த்வம்பதார்த்தத்தில் அறியப்படும் ஸத்வயத்வம் என்பதை விடுவதுபோல், ஆபரோக்ஷயத்வம் என்பதையும் விட்டு விடலாமே? இவ்விதம் ஸத்வ யத்வம், ஆபரோக்ஷயத்வம் என்ற இரண்டும் விடப்படுமானால் தத்பதார்த்தத்துடன் அன் வயம் சொல்லலாமே?

**சித்தா :** உத்தேச்யமான த்வம்பதார்த்தம் என்பது நித்யஅபரோக்ஷ ஸ்வரூபம். இவ்விதம் அபரோக்ஷமாக அறியப்படும் ஸ்வரூபத்திலுள்ள ஆபரோக்ஷயம் என்பது த்யாகம் செய்யப்படுமானால் த்வம்பதார்த்தம் என்பது உத்தேச்யம் என்றே சொல்ல முடியாது. அஹமஹமென்று எல்லோருக்கும் அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்ற வஸ்துவை பரோக்ஷம் என்று எப்படி விதிக்கமுடியும்? த்வம்பதார்த்தத்தில் உள்ள ஸத்வயத்வம் என்பது ஸ்வரூபமல்ல. அதனால் ஸத்வயத்வம் என்பதை விடமுடியும், அதுபோல் ஸ்வரூபமான ஆபரோக்ஷயத்வம் என்பதை எப்படி விடமுடியும்? ஸ்வரூபம் என்பதே விடப் படுமானால் வஸ்து எப்படி சித்திக்கமுடியும்? மேலும், ஸ்வரூபத்தை எப்படிவிடுவது?

'க்ரஹம் ஸம்மாஷ்டி' என்ற வாக்யத்திலுள்ள 'க்ரஹம்' என்ற பதத்தில், 'க்ரஹதவம்' 'ஏகத்வம்' என்ற தன்மைகள் இருக்கின்றது. இதில் ஏகத்வம் என்பது விவக்ஷித மில்லையென்று விட்டுவிடலாம். ஆனால் அதுபோல் க்ரஹத்வம் என்பதும் விவக்ஷித மில்லையென்றும் க்ரஹத்வம் என்பதையும் விடவேண்டும் என்று சொல்லப்படுமானால் 'க்ரஹம்' என்ற வஸ்துவே இல்லையென்றாகும். இதேபோல் த்வம்பதார்த்ததிலுள்ள ஸத்வ யத்வம் என்பதை விடுவதுபோல் ஆபரோக்ஷயத்வம் என்பதும் விடப்படவேண்டுமென்றால் த்வம்பதார்த்த ஸ்வரூபமே சித்திக்காது.

அபரோக்ஷமாக அஹமஹமென்று அனுபவசித்தமாக ப்ரகாசிக்கின்ற ஸ்வ ரூபத்திற்கு, பாரோக்ஷ்யமான தத்பதார்த்தத்துடன் எப்படி அன்வயம் ஏற்படமுடியும்? நான் எனக்கு பரோக்ஷம் என்று எவருக்கும் அனுபவம் கிடையாது. ஆகவே ஏகபத லக்ஷணை சொல்லமுடியாது.

**பூர்வ :** 'தத்' சப்தம் என்பது ஸர்வநாமா (ஸர்வத்தையும் அது என்றும், இது என்றும் குறிப்பிடலாம்.) ஏற்கனவே புத்தியில் க்ரஹிக்கப்பட்ட வஸ்துவையே (அறியப்பட்ட வஸ்துவையே) ஸர்வநாமா என்பது குறிப்பிடுகின்றதால், ஸர்வநாமா என்பது புத்திஸ்த்தம் என்றே சொல்லவேண்டும். ஆகவே, ப்ரஹ்மமென்பது புத்திஸ்த்தமாக இல்லாததால் 'தத்' சப்தத்தினுல், ப்ரஹ்மமென்பதை பராமர்ஸம் செய்யமுடியாது. அதனுல், தத்–த்வம் பதார்த் தங்களுக்கு சக்தி அர்த்தத்தைக் கொண்டே அன்வயம் ஏற்படலாமே?

**சித்தா :** இது சரியல்ல. 'தத்' என்ற ஸர்வநாமாவினுல் ஒரு வஸ்து குறிப்பிடப்பட்ட வேண்டுமானுல், அந்த வஸ்து புத்திஸ்த்தமாகத்தான் இருக்கவேண்டும் என்றும், அவ்விதம் புத்தியில் இருந்தால்தான் பராமர்ஸம் ஏற்படும் என்றும் நியமம் சொல்வதற்குமுடியாது. புத்தி ஸ்த்தம் என்பது ஸர்வநாமாவிற்கு விசேஷணமாக சொல்லமுடியாது. பொதுவாக 'அவனைப்பார்' என்று சொல்லுமிடத்தில் புத்திஸத்தமான அவனைப்பார் என்று அர்த்தம் சொல்லப்படுவதில்லை. புத்திஸ்த்தம் என்பது ஸர்வநாமாவிற்கு விசேஷணம் என்று சொல்லப்படுமானுல் ஸர்வநாமா என்பது பர்யாயபதம் என்று சொல்லநேரிடும் எப்படியெனில், உதாரணமாக, 'அவனைப் பார்' என்று சைத்ரன் என்பவனையும் சொல்லலாம். மைத்ரன் என்பவனையும் சொல்லலாம். புத்திஸத்வம் என்பது ஸர்வநாமாவிற்கு விசேஷணமாகச்சொல்லப்படுமானுல், யார்சைத்ரன்? யார்மைத்ரன்? என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகையால் புத்திஸ்த்வம் என்பது ஸர்வநாமாவிற்கு விசேஷணம் என்று சொல்லமுடியாது.

உபலக்ஷணமாக சொல்லப்படுமானுல், ஸன்னிஹிதமாக, ப்ரத்யக்ஷமாக அறியப் படுகின்ற ஒருவனை, 'இதம் ஏதத்' என்று சொல்லலாம். அப்போது எதிரில் இருப்பவனிடம் எந்ததர்மம் அறியப்படுகிறதோ அதையே ஸர்வநாமாவிற்கு விசேஷணமாகச் சொல்ல முடியும். ஆகவே, புத்திஸ்த்வம் என்ற பொதுவான தன்மையைவிட்டு அந்தந்த பதார்த் தங்களிலுள்ள விசேஷணத்தையே உபலக்ஷணமாகச் சொல்லப்படவேண்டும். இவ்விதம் சொல்லப்படவில்லையென்றுல், ஸர்வநாமா என்று சொல்லப்படும் 'தத்' பதம் 'த்வம்' பதம் இரண்டிற்கும் புத்திஸ்த்வம் என்ற விசேஷணம் சொல்லப்படுமானுல், இரண்டும் பர்யாயபதம் என்றே சொல்லநேரிடும். ஆகையால், 'த்வம்' சப்தார்த்தார்த்தமாக, ப்ரத்யக்ஷமாக எதிரே அறியப் படும் ஜீவனிடத்திலுள்ள அபரோக்ஷத்வம் முதலான தர்மங்களை விசேஷணமாகச் சொல்லப் படவேண்டும். இதேபோல், வ்யவஹிதமான, 'தத்' சப்தார்த்தம் என்பதும் அத : சப்தார்த்தம் என்பதும், அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றபோது, பரோக்ஷத்வாதி, தர்மங்களையே, விசேஷணமாக தெரிவிக்கின்றது. இந்தவிதம் 'த்வம் ததஸி' என்ற வாக்யத்திலுள்ள, த்வம் பதத்திற்கும், தத்பதத்திற்கும், அபரோக்ஷத்வம், பரோக்ஷத்வம் என்ற இரண்டு விருத்தமான விசேஷ ணங்களை தெரிவிக்கின்றதால், இந்த வாக்யம் அகண்டார்த்த போதகம் என்று சொல்வதற்கே முடியாது.

**பூர்வ :** தார்க்கிக சித்தாந்தத்தில், 'அநித்யா கௌ:' என்றும் 'நித்யா கௌ:' என்றும் இரண்டுவாக்யங்கள் சொல்லப்படுகிறது. இந்த இரண்டு வாக்யங்களாலும் லக்ஷணை இல்லாமலேயே அதன் அர்த்தத்தை ஸ்வயமே போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

அதாவது 'அநித்யா கௌ:' என்ற வாக்யத்திலுள்ள 'கோ' சப்தத்தினுல், கோத்வ ஜாதியும், 'கோ' வ்யக்தியும், அதன் ஸம்பந்தம் என்ற இந்த மூன்றும் அறியப் படுகிறது. இதில் ஜாதி என்பதும் நித்யம், வ்யக்திஎன்பது அநித்யம் என்பதால், அநித்ய சப்தம், ஜாதியில்சேராமல், ஸ்வயமே அநித்யத்வ, யோக்யமுள்ள வ்யக்தியில்தான் அன்வயிக் கின்றது. அதனுல் (நித்யமான) ஜாதியுடன் அன்வயிப்பதில்லை. அதேபோல், 'நித்யா கௌ:' என்ற வாக்யத்திலுள்ள 'நித்யம்' என்ற சப்தமானது, கோத்வஜாதியுடன்தான் அன்வயிக்கின்றது. வ்யக்தியுடன் அன்வயிப்பதில்லை. ஆகவே, விசேஷ்யமான வ்யக்தி என்பதும், விசேஷணமான கோத்வம் என்பதும், அதன் ஸம்பந்தம் என்பதும், மூன்றும் சேர்ந்து 'கோ' சப்தத்தினுல் அறியப்பட்டபோதிலும், 'அநித்யத்வம்' என்பது ஸ்வயமே, விசேஷ்யமான வ்யக்தியுடனும், நித்யத்வம் என்பது ஸ்வயமே விசேஷணமான ஜாதியுடனும், அன்வயிக்கின்றதென்றே சொல்லவேண்டும். இதேபோல், தத், த்வம் என்ற இரண்டு பதங்களும் விசேஷணங்களுடன் அறியப்பட்டபோதிலும், 'சிதம்ஸம்' என்பதில்தான் அன்வயம் ஏற்படமுடியும் என்பதால், லக்ஷணை இல்லாமலேயே வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** இவ்விதம் சொல்வது சரியல்ல. ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள், அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றபோது, அந்த பதார்த்தத்தின் (வஸ்துவின்) ஸர்வ அம்ஸங்களுடன்தான் அன்வயிக்குமேயன்றி, பதார்த்தத்தின் ஏகதேச அம்ஸத்தில் அன்வயிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே, 'கோ' சப்தமென்பதும் ஜாதி வ்யக்தி, அதன் ஸம்பந்தம் எல்லாவற்றுடன் சேர்த்தே அதன் அர்த்தத்தை அறிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். ஆகவே, நையாயிகனுக இருந்தாலும், லக்ஷணையைக் கொண்டே பதார்த்தத்திற்கு அன்வயம் சொல்லவேண்டும். நித்யா கௌ: என்ருலும் சரி அநித்யா கௌ: என்று சொன்னுலும்சரி, இரண்டிலும் வ்யக்தி என்பது விசேஷ்யமாகவே இருக்கிறது. ஆனுல் 'அநித்யா கௌ:' என்று சொல்கின்றபோது, அநித்யத்வம் என்பது வ்யக்தியுடன்தான் அன்வயிக்கின்றது. அதனுல் இந்த வாக்யத்திற்கு லக்ஷணை தேவை இல்லை. 'நித்யா கௌ:' என்று சொல்லப்படுகின்றபோதுதான், 'நித்யத்வம்' என்பது விசேஷ்யமான வ்யக்தியுடன் பொருந்தவில்லை. அதனுல் விசேஷ்யம் என்பதைவிட்டு விசேஷணத்தில் லக்ஷணை சொல்லப்படவேண்டியதாக இருக்கிறது. இதேபோல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தில், தத், த்வம் என்ற இரண்டு பதங்களின் விசேஷ்யாம்ஸம் என்பது சைதன்யாம்ஸமாகவே இருக்கின்றதால், விசேஷணமான அஹங்காரம், மாயை என்பதில்தான், லக்ஷணை சொல்லவேண்டியதாக இருக்கிறது. ஆகையால், மாயா அவச்சின்னசைதன்யம், அந்த:கரண அவச்சின்னசைதன்யம் என்பதில் இருக்கின்ற, விசேஷ்யமான சைதன்யாம்ஸம், என்பதில் அன்வயம் ஸ்வயமே ஸம்பவிக்கின்றது. ஆகையால் விசேஷணத்தில் மட்டும் லக்ஷணை சொன்னுல் போறுமானது. ஆகவே, அன்வயம் சொல்லப்படவேண்டிய பதார்த்தம் விசேஷ்யமாக இருந்தால் லக்ஷணை தேவையில்லை. விசேஷணமாக இருந்தால்தான், லக்ஷணையைக் கொண்டு அன்வயம் சொல்லவேண்டும்.

**பூர்வ :** ஆனுல் வேதாந்த சித்தாந்தத்தில், 'தத், த்வம்' பதார்த்தங்களில் அறியப்படும், மாயை என்பதும், அஹங்காரம் என்பதும், மித்யை என்றே சொல்லப்படுவதால், விசேஷ்யமான சைதன்யாம்ஸத்திற்கு ஸ்வயமே அபேதம் சித்திக்கலாமே? விரோதம் என்பது உண்மையாக இருந்தால்தானே அதை நிவர்த்திக்க லக்ஷணை சொல்லப்பட வேண்டும்?

**சித்தா :** லக்ஷணை இல்லாமலேயே, வாக்யத்திற்கு அபேத அன்வயம் சொல்லலாமே? என்ற ஆக்ஷேபம்சரியல்ல. ஏனெனில், வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களிலிருந்து, இரண்டு விதமான சக்தி அர்த்தம் அறியப்படுகின்றபோது, ஒன்றுக்கொன்று விருத்தமான அர்த்தமே அறியப்படுகிறது. அதனாலேயே இரண்டிற்கும் அன்வயம் சொல்லமுடியவில்லை. உதாரண மாக, 'பசுவைப்பார்' என்று ஒரு வாக்யப்ரயோகம் செய்கின்ற போது, கோத்வம் என்ற ஜாதியைவிட்டு, அந்தவ்யக்தியை மட்டுமோ, அல்லது, அந்தவ்யக்தியை விட்டு ஜாதியை மட்டுமோ, அந்த வாக்யத்தினால் அறியப்படுவதில்லை. அந்த வாக்யம் வ்யக்தி, ஜாதி, ஸம் பந்தம் எல்லாவற்றையும் சேர்த்தே அறிவிக்கின்றது. எந்த வஸ்துவையும் த்ரவ்யம் என்று சொல்லலாம். ஆனால் ஒன்றைக் குறிப்பிட்டு தெரிவிக்கின்றபோது, மற்ற த்ரவ்யங் களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதாகற்காகவே அதன் ஜாதியையோ, குணத்தையோ குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது. அதனால் கோத்வம் என்ற ஜாதியை சேர்த்து 'கௌ: அநித்யா' என்று சொல்லுமிடத்தில், ஜாதியை விட்டு கேவல வ்யக்தியைமட்டும் எடுத்துக் கொண்டு அதில் அநித்யத்வத்தை சேர்க்கமுடியாது. ஏனெனில் 'பசு' அநித்யமா? எருமை அநித்யமா? என்று அறிந்து கொள்ளமுடியாது.

அதனால் வ்யக்தி விசேஷணமின்றி, அநித்யத்வம் என்பது கேவல வ்யக்தியில் அன்வயிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே, 'அநித்யா கௌ:' என்ற வாக்யத்திலும் சக்தி அர்த்தம் பொருந்தாது. அதனால் விசேஷணத்தை விட்டு விட்டு லக்ஷணையைக் கொண்டே வ்யக்தி அநித்யம் என்று அறியவேண்டும்.

இதேபோல், தத், த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் விசேஷ்யமான சிதம் ஸத்தில் அபேத அன்வயம் ஏற்படலாம் என்று சொல்லப்படுவதும் சரியல்ல. ஏனென்றால், சிதம்ஸம் இரண்டிற்கும் அபேதம் என்று சொல்லப்படுமானால், எந்த இரண்டுசிதம்ஸம் என்று, இரண்டிற்கும் உள்ள விசேஷணங்களுடன் குறிப்பிட்டே சொல்லப்படவேண்டும். இந்தவிதம், மாயா அவச்சின்ன சைதன்யம் என்றும், அந்த : கரண அவச்சின்ன சைதன்யம் என்றும், தத், த்வம், என்றஇரண்டு பதங்களும் விசேஷணங்களுடன் சேர்த்துஅறியப்பட்டால் தான், த்வம்பதம் உத்தேச்யம் என்றும், தத்பதம் விதேயம் என்றும் சொல்லமுடியும். இவ்விதம், தத்த்வம், பதங்களின் வாச்யார்த்தமாக,விசேஷணங்களுடன் கூடிய ஸ்வரூபம் அறியப் படுகின்றபோது, விருத்தமான தன்மைகளையுடைய இவைஇரண்டிற்கும் அன்வயம், ஏற்படாததால் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது. ஆகவே, தத்பதார்த்தத்தில் அறியப்படும் பாரோக்ஷ்யத்வம், த்வம்பதத்தில் அறியப்படும் ஸத்வயத்வம் என்ற தன்மைகளை விட்டுவிட்டு இரண்டு பதங்களுக்கும் லக்ஷணையைக்கொண்டு, லக்ஷ்யார்த்தமான கேவல சைதன்யஸ்வரூபம் என்பதில்இரண்டிற்கும் அபேத அன்வயம் சொல்லப்படவேண்டும்.

அஞ்ஞான தசையில் தத்த்வம்பதார்த்தங்கள், விசேஷணங்களுடன் கூடிய விசிஷ்ட் டஸ்வரூபம் என்றும் அதில் விசேஷமென்பது மித்யையென்றும் விசேஷ்யமே ஸத்யம் என்றும், வாக்யத்திலிருந்து ஏற்படும் முக்யார்த்தத்தைக்கொண்டு அறிந்து கொள்ள முடியாது. விவேகியாக இருப்பவனுக்கே வாக்யத்தைக் கேட்டவுடன் அறியப்படும் முக் யார்த்தத்தில் விரோதம் இருக்கிறதென்று அறியப்படுகின்றதால், இந்த விரோதங்களை எப்படி பரிகாரம் செய்வது? என்று விசாரிக்கின்றபோது, அதில் இருக்கின்ற மித்யாத்வ அம்ஸங்களை விட்டு, லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தத்தை அறிந்து கொள்கிறான் என்றே சொல்ல வேண்டும். ஆகையால், வேதாந்த சித்தாந்தத்தில் எல்லாம் மித்யைதானே என்று ஆக்ஷேபிப்பது சரியல்ல. மேலும், விசேஷணங்கள் எல்லாம் மித்யை என்று போதிப்ப தற்காகவே, அவஸ்யம்

லக்ஷணை தேவைப்படுகிறது. இரண்டும் ஸத்யமாக இருக்குமானுல் விசேஷணம் என்பதை விடுவதென்பதே முடியாது. அபேத அன்வயமும் சொல்லமுடியாது. ஆகையால் இரண்டு பதங்களிலும் அவஸ்யம் லக்ஷணையை ஒத்துக்கொண்டு வாக்யத்திற்கு அர்த்தம் செய்ய வேண்டும் என்றே சொல்லவேண்டும்.

**167. அவதாரிகை :**

தத்–த்வம், என்ற இரண்டு பதார்த்தங்களும் உண்மையில் ஒன்று தான் என்று சொல்லப்படுமானுல், விசிஷ்டமாக இருக்கின்றபோதும், அந்த வஸ்து ஒன்றுதானே? விசேஷணம் என்பது பரஸ்பரம் விரோதமாக இருந்தபோதிலும், ஸ்வரூபேண ஒன்ருகவே இருப்பதால், ஏகத்வம் சொல்லலாமே? அதனுல் அபேதஸம்ஸர்க்கத்தினுலேயே வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களுக்கும் அன்வயம் சொல்லலாமே?

**சித்தா :** விசிஷ்டத்தைக் காட்டிலும் கேவலமானவஸ்து வேறு என்று சொல்லவேண்டும். ஆனுல் அத்யந்தம் வேறுபட்டது என்று சொல்லமுடியாது. அத்யந்தம் வேறுபட்ட இரண்டு பதார்த்தங்களுக்கு அபேத அன்வயம் என்பது லக்ஷணையினுலும் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अविरुद्धविशेषणद्वयप्रभवत्वेऽपि विशिष्टयोर्द्वयोः ।
घटते न यदैकता तदा नितरां तद्विपरीतरूपयोः ॥

**ச்லோகார்த்தம் :** விரோதமில்லாத விசேஷணங்களையுடைய இரண்டு விசிஷ்ட பதார்த்தங்களுக்கே ஐக்யம் ஏற்படமுடியாது என்ருல், விருத்தமான விசேஷணங்களையுடைய விசிஷ்டபதார்த்தம் இரண்டிற்கு ஐக்யம் என்பது ஒருபோதும் ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** சைத்ரன் என்பவன் ஒரு சமயம் தண்டத்துடன் இருக்கலாம். மற்ருெரு சமயம் தண்டம் இல்லாமல் இருக்கலாம். அதற்காக, தண்டிசைத்ரன் வேறு, கேவல சைத்ரன் வேறு என்று பேதம் அறியப்படுவதாக சொல்லமுடியாது. இப்போது அவனிடம் தண்டமில்லையென்றே அறியப்படுகிறது.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுமானுல், கடம் என்பது படத்தைக்காட்டிலும் வேறு என்று சொல்லப்படவேண்டிய இடத்திலும், கடத்தில் படத்வம் என்பது இல்லை என்று சொல்வது போலாகுமேயன்றி கடம், படத்தைக்காட்டிலும் பேதம் என்று சொல்லமுடியாது. அவ்விதம் ஒன்றுக்கொன்று வேறு என்று சொல்லாவிடில், பேதம் என்பதே இருக்கமுடியாது.

**பூர்வ :** அப்படியானுல் தண்டிசைத்ரனைக் காட்டிலும் கேவலசைத்ரன் வேறு என்று சொல்லப்படுமானுல், எவன் தண்டியாக இருந்தானே அவனே இவன் என்று ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகிறதே?

**சித்தா :** ப்ரத்யபிஞ்ஞை என்பது ஸ்வரூப விஷயம். ஆகையால் ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுவதைக் கொண்டு, விசேஷணத்துடன் கூடிய ஸ்வரூபத்திற்கும் விசேஷணங்கள் அற்ற கேவல ஸ்வரூபத்திற்கும் பேதமில்லை என்று சொல்லமுடியாது. தண்டத்துடன் இருப்பவன், தண்டமில்லாதவன் என்று விருத்தமான விசேஷணங்கள் இல்லாத இடத்திலேயே பேதம் அறியப்படுகிறது என்ருல், தண்டவிசேஷணத்துடன் கூடின சைத்ரன் என்பவனும், குண்டல விசேஷணத்துடன் கூடின சைத்ரன் என்பவனும் வேறு என்று பேதம் அறியப்படுவதாகச் சொல்லப்படுவதில் ஸந்தேஹத்திற்கே இடமில்லை. ஒரே புருஷன் தண்டமும் வைத்திருக்கலாம், குண்டலமும் தரித்திருக்கலாம். ஆனுல் குண்டலி தண்டியல்ல, தண்டிகுண்டலியல்ல. இந்த விதம் அவிருத்தமான (விரோதமற்ற) விசேஷணங்கள் இருக்கின்றபோதே அபேதம் சொல்ல

முடியவில்லையென்றால், விருத்தமான விசேஷணங்களுடன் கூடி இருக்கின்ற வஸ்துவிற்கு அபேதம் எப்படிச்சொல்லமுடியும்?

**பூர்வ :** விருத்தமான விசேஷணங்கள் எப்படி ஒரே வஸ்துவில் இருக்கமுடியும்?

**சித்தா :** ஒரே வஸ்துவாக இருந்தபோதிலும், காலபேதத்தினால் விசேஷணங்கள் மாறுபடலாம். அதாவது, ஸத்வயமாக இருக்கின்றபோது, அத்வயம் என்று விசேஷணம் சொல்லப்படுமானால் விரோதம். அதேபோல் பரோக்ஷமாக இருக்கின்றபோதே அபரோக்ஷம் என்று சொன்னால் தான் விரோதம். ஒருவன் முன்னால் அஞ்ஞனாக இருந்து பின்னால் விஞ்ஞனாக ஆகலாம். ஒரே ஸமயத்தில் அஞ்ஞனாகவும் விஞ்ஞனாகவும் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே, விருத்தமான விசேஷணங்கள் இருக்கின்றபோது அவைகளுக்கு அபேதம் சொல்லமுடியாது.

**168. அவதாரிகை :**

விசிஷ்டம் என்றாலே விசேஷணத்துடன்கூடி இருக்கின்ற வஸ்துவாக இருக்கின்றதால், பேதம் என்று சொல்லலாம். விசேஷ்யத்தைமட்டும் குறிப்பிடப்படுமானால் அபேதம் என்று சொல்லலாமே? அதுபோல் மஹாவாக்யங்களுக்கும் அர்த்தம் செய்யப்படலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अथ केनचिदात्मनैकता वचनेन प्रतिपाद्यते तयोः ।
तदसुन्दरमस्तमेति हि स्फुटमेवं त्रिविधापि लक्षणा ॥

**ச்லோகார்த்தம் :** ஏதோ ஒருவிதமாக பதங்களுள் இரண்டிற்கும் ஐக்யம் சொல்வதென்பது பொருந்தாது. அவ்விதம் சொல்லப்படுமானால், (லோக வ்யவகாரத்திலும்) மூன்று விதமான லக்ஷணைகளும் இல்லாமற்போய்விடும்.

**வ்யாக்யானம் :** தத், த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும், எந்தமுறையில் அபேதம் ஸம்பவிக்குமோ, அந்த முறையை அனுசரித்து ஸாமானாதிகரண்யப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யத்திலுள்ள 'கங்காயாம்' என்ற பதம் ஸப்தமியில் இருந்தபோதிலும், இந்த இடத்தில் சப்தமிப்ரயோகத்திற்கு ஸாமீப்யம் என்ற அர்த் தத்தைக் கொண்டு கங்காஸமீபம் என்று அர்த்தம் சொல்லலாம். ஆகையால் 'கங்காயாம்' என்ற பதத்திற்கு முக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டே அந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யலாமே?

**சித்தா :** இவ்விதம் அர்த்தம் செய்யப்படுமானால் லோகத்தில் லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும் என்ற விவகாரமே இருக்கமுடியாது. மேலும், 'த்வம் ததஸி' என்று வாக்யப்ரயோகம் செய்கின்றபோது, ஜீவனை உத்தேசித்து, ஈச்வரன் விதேயம் என்று சொல்லப்படவேண்டுமானால், ஏதோ ஒருமுறையில் அபேதம் சொல்வதென்பதுமுடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால் வாக்யார்த்தம் பொருத்தமாக இருக்காது. ஆகையால் த்வம் பதார்த்தமான ஜீவனை அனுசரித்து (உத்தேசித்து) ப்ரதானபூதமான விவக்ஷித வாக்யார்த்தமான விதேயம் எதுவோ அதை முக்யமாக உபதேசிக்கவேண்டும்.

அவ்விதமின்றி இரண்டும் ஒன்றே என்று அபேதம் சொல்லப்படுமானால், ஜீவனை ப்ரஹ்மமென்று உபதேசிப்பதாகச் சொல்லலாமேயன்றி, ப்ரஹ்மமே ஜீவன் என்று உபதேசிப்பதாகச் சொல்லமுடியாது. யாருக்கு எந்த பாவம் விதிக்கப்படுகிறது என்று அறிவதற்கே முடியாது.

மேலும், விசேஷணத்துடன் கூடிய விசிஷ்டத்தில் பேதம் இருந்தாலும், விசேஷ்யாம்ஸத்தில் பேதமில்லாததால், பேதமில்லாத அம்ஸத்தைக் கொண்டு ஸாமானாதிகரண்ய ப்ரயோகத்தினால் அபேதம் சொல்லப்படலாமே? என்று சொல்வது சரியல்ல. இவ்விதம் சொல்லப்படுமானால், சப்தத்திலிருந்து லக்ஷணையினால் அர்த்தம் செய்யப்படலாம் என்ற ஸம் ப்ரதாயமாக இருக்கின்ற மூன்று விதமான லக்ஷணைகளால் செய்யப்படும் லோக விவகாரம் என்பதே இல்லாமற்போய்விடும். ஆகவே, இரண்டு பதங்களிலும் லக்ஷணையை ஒத்துக் கொண்டு அர்த்தம் செய்யப்பட வேண்டுமென்பதை அவஸ்யம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

**169. அவதாரிகை :**

ப்ரௌடிவாதத்தை அனுசரித்து, ஜஹல்லக்ஷணையினாலும் வாக்யார்த்தம் ஸம்பவிக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

साभासाज्ञानवाची यदि भवति पुनर्ब्रह्मशब्दस्तथाहंशब्दोऽहंकारवाची भवति तु जहती लक्षणा तत्र पक्षे ।
नौरेषा रौति, लोहं दहति, विषधरो रज्जुरग्रे तवासावित्यत्रेवात्मवस्तुन्यपि भवतु जहल्लक्षणा को विरोधः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்ம சப்தவாச்யார்த்தம் என்பது ஸாபாஸ அஞ்ஞானம் என்றும், அஹம் சப்தவாச்யார்த்தம் என்பது ஸாபாஸ அஹங்காரம் என்றும் சொல்லப்படும் பக்ஷத்தில், ஜஹல்லக்ஷணை என்பது ஸம்பவிக்கும். 'ஓடம் அழுகின்றது' 'லோஹம்தஹிக்கின்றது' 'உன் எதிரில் தோன்றும் ஸர்ப்பம் கயிறுதான்' என்று சொல்லப்படுகின்ற த்ருஷ்டாந்தங்களைப் போல், ஆத்மவஸ்துவிலும் ஜஹல்லக்ஷணை ஸம்பவிக்கின்றது என்பதில் என்ன விரோதம்?

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது, சப்த விவகாரங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது என்பதால், சப்தத்தினால் அறியப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஆகையால், 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற வாக்யத்திலுள்ள 'அஹம்' பதம், 'ப்ரஹ்ம' பதம், இரண்டிற்கும் ஸபள ஸ்வரூபமே அர்த்தம் என்று சொல்லவேண்டும். ஆனால், 'ஸபளம்ப்ரஹ்ம' என்பதன் அர்த்தம், விவகாரத்திற்கு உட்படாத கேவல ப்ரஹ்மத்திற்கு சொல்லமுடியாது. அதுபோல், த்வமர்த்தமான 'அஹம்' என்ற பதத்திற்கு ஸபளம் என்ற அர்த்தம் சொல்லமுடியாது. ஏனெனில், விசேஷணமான அஹங்காரம், விசேஷ்யமான ஆத்மா, அவை இரண்டிற்கும்முள்ள ஸம்பந்தம் எல்லாம் அறியப்பட்டால்தான் ஸபளம் என்று சொல்லலாம். விவகாரத்திற்கு அப்பாற்பட்ட கேவல ஆத்மசைதன்யத்தை ஸபளம் என்று சொல்லமுடியாது.

ஸாபாஸ அஞ்ஞானம் தத்பதார்த்தமென்றும், ஸாபாஸ அஹங்காரம் த்வம்பதார்த்தம் என்றும் அறியப்படுகிறது. இந்த இரண்டுமே இரண்டு பதங்களின் வாச்யார்த்தமாக அறியப் படுகின்றதால், வாச்யார்த்தம் இரண்டிற்கும் அபேத அன்வயம் ஏற்படமுடியாது. அதனால் இரண்டிலும் வாச்யார்த்தம் என்பதை பூராவும் விட்டுவிட்டு, ஆபாஸம் ஏற்பட காரணமான, அதிஷ்டானாத்மகமான பிம்பசைதன்யம் என்பதை லக்ஷணையினால் அறிந்து கொள்ள வேண்டும். உதாரணமாக 'ஓடம் அழுகின்றது' என்று சொல்லுமிடத்தில் ஓடம் என்ற பதத்தின் வாச்யார்த்தத்தை முற்றிலும் விட்டுவிட்டு அதிலுள்ள மனிதர்கள் என்று அர்த்தம் செய்வது போலவும், 'அயோதஹதி' என்னுமிடத்தில் 'அயஸ்' என்பதை முற்றிலும் விட்டுவிட்டு அக்னி தஹிக்கிறது என்றும், ரஜ்ஜுஸர்ப்பம் என்னுமிடத்தில், ரஜ்ஜு என்பது ஸர்ப்பமாகாது என்பதால் ஸர்ப்பத்தை விட்டுவிட்டு அதற்கு அதிஷ்டானமான ரஜ்ஜுவை எடுத்துக்கொள்வது போல, அஞ்ஞானம், அஹங்காரம், என்ற வாச்யார்த்தங்களை விட்டு இவைகளுக்கு அதிஷ்டானமான ப்ரஹ்மசைதன்யத்தை எடுத்துக்கொள்ளப்படுமானால் அபேத அன்வயம்

பொருந்துகின்றது. ஆகையால் ஜஹல்லக்ஷணையினலும் அகண்டார்த்தம் ஸம்பவிக்கின்றது என்று சொல்லலாம்.

ஆனல் உண்மையில், நிர்விசேஷமான ப்ரஹ்மமென்பது, வாக், மனஸ், என்ற விவ காரங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது என்பதால், தத்–த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் ஸபளஸ்வரூபமே வாச்யார்த்தம் என்று சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படாவிட்டால், 'அஹம்' சப்தம் என்பதும் 'ப்ரஹ்ம' சப்தம் என்பதும், ஓரிடத்தில் ஸபளஸ்வரூபத்தையும், ஓரிடத்தில் நிர்விசேஷஸ்வரூபத்தையும் தெரிவிக்கின்றது என்று சொல்லநேரிடும்.

இவ்விதம் சொல்லப்படுமானல், ஒரே பதத்திற்கு அனேக அர்த்தங்கள் இருப்பதாக சொல்லநேரிடும். ஆகையால் ஸபளப்ரஹ்மமென்பது வாச்யார்த்தமாக ஆகலாம் என்பதால், 'ப்ரஹ்ம' மென்ருலே, வாக், மனஸ் என்பவைகளுக்கு அதீதம் என்று சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. மாயாவிசிஷ்ட்ட சைதன்யம், அந்த:கரண விசிஷ்ட்ட சைதன்யம் என்பதே தத்பதவாச்யார்த்தம்–த்வம்பத வாச்யார்த்தம் என்று சொல்லப்படுவதால், ஸபளப்ரஹ்மமென்பது சப்தவிவகாரத்திற்கு உட்பட்டதென்றே சொல்லலாம். இப்பேர்ப்பட்ட ஸபளஸ்வரூபத்தில் ஒரு பாகத்தைவிட்டு, மற்ருெரு பாகத்தைக்கொண்டு, அர்த்தம் செய்யப்படவேண்டிய அவஸ்யமில்லை. மாயாவிசிஷ்ட்ட சைதன்யம், அந்த:கரண விசிஷ்ட்ட சைதன்யம் என்பதே தத்பதவாச்யார்த்தம்–த்வம்பத வாச்யார்த்தம் என்று சொல்லப்படுவதால், அகண்டார்த்தம் போதிக்கப்படலாம். இதைத்தவிர வேறு எந்த முறையிலும் மஹாவாக்யத்திற்கு அர்த்தம் செய்வதென்பது பொருந்தாது. ஏனெனில், ப்ரஹ்ம சப்தமும், அஹம் சப்தமும் ப்ரத்யக் சைதன்யத்தையே குறிப்பிடுகின்றது என்று உபநிஷத் வாக்யங்கள் தெரிவிக்கின்றது.

இவ்விதம் சொல்லப்படுகின்றதால், சைதன்ய ஸ்வரூபத்தையே வாச்யார்த்தத்தில் சேர்க்காமல், கேவலஜடமான அஞ்ஞானம், அந்த:கரணம் என்பவைகளை மட்டும் வாச்யார்த்தமாக சொல்லப்படுமானல், ப்ரஹ்மசைதன்யமும் முக்யார்த்தத்தில் சம்பந்தப்படவில்லை என்று சொல்லநேரிடும். ப்ரஹ்ம மென்பது ஸ்வரூபத: விவகாரத்திற்கு உட்பட்டதுஅல்ல என்ருலும், அஞ்ஞானம் அஹங்காரம் என்ற உபாதி வஸாத் சப்த விவகாரங் களுக்கு உட்பட்டது என்றே சொல்ல வேண்டும். அதனல் தத்–த்வம் என்ற பதங்களுக்கு பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படுவதே முறையாகும், என்ற போதிலும், ப்ரௌடி வாதத்தை அவலம்பித்து ஜஹல்லக்ஷணையினலும் அபேதம் ஸம்பவிக்கலாம் என்று சொல்லப்பட்டது.

**170. அவதாரிகை :**

இதேபோல், கௌணீவ்ருத்தியைக்கொண்டும் அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்று ப்ரௌடி வாதத்தைக்கொண்டு, சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रत्यक्त्वादिगुणान्वयेन यदि वा गौण्यस्तु वृत्तिस्तयोर्ब्रह्माहंपदयोः परेतरदृशोर्मुख्ये विरोधो यतः ।
मुख्यार्थानुपपत्तिहेतुकतया गौण्यस्ति वृत्तिर्यतो लोके माणवको विभावसुरसौ सिंहः पुमानित्यपि ॥

**ச்லோகார்த்தம் :** இல்லாவிட்டாலும், ப்ரத்யக்த்வம் முதலான குணங்களின் சம்பந்தத்தைக் கொண்டு, கௌணீவ்ருத்தியினல் வாச்யார்த்தம் போதிக்கப்படலாம். ஏனெனில் ப்ரஹ்மசப்தம், அஹம்சப்தம் இரண்டிற்கும் முக்யார்த்தத்தை எடுத்துக்கொள்ளப்படுமானல் விரோதம் சம்பவிக் கின்றது. லோகத்தில் இவ்விதம் முக்யார்த்தம் ஸம்பவிக்காத இடத்தில், சிம்ஹோ மாணவக: என்றும், அக்னிர் மாணவக: என்றும் சொல்லப்படும் இடங்களில் கௌணீவ்ருத்தியைக்கொண்டு அபேதார்த்தம் போதிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மபதம், அஹம்பதம் இரண்டிற்கும் முக்யார்த்தத்தைக்கொண்டு அன்வயம் சொல்லப்டுமானல், விரோதம் ஏற்படுகிறது. அதனல் ஜீவபரமாத்ம ஐக்ய விஷயத்தில், கௌணீவ்ருத்தியை ஆச்ரயித்து அர்த்தம் செய்யப்படுகிறது. அதாவது, ப்ரஹ்மசைதன்யம் என்பதில் ப்ரத்யக்த்வம், சூக்ஷ்மத்வம், ஸ்வச்சத்வம் என்ற தன்மைகள் ஸ்வரூபமாகவே இருக்கிறது. ஆனல் விவகாரத்தை முன்னிட்டு ப்ரத்யக்த்வாதிகளை குணம் என்பதாக எடுத்துக் கொண்டு, அதேபோல் அஹம் என்ற ப்ரத்யக் சைதன்யத்திலும் ப்ரத்யக்த்வாதி தன்மைகள் இருக்கின்றதால், இந்தவிதம் இருக்கின்ற குணஸாம்யத்தைக் கொண்டு அஹம் பதார்த்தமான ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று கௌணீவ்ருத்தியினல் போதிக்கப்படுகிறது.

எப்படி அக்னியிலுள்ள மஞ்சள் நிறம், தேஜஸ் முதலானவைகளைக்கொண்டு, அக்னி சப்தமானது எப்படி மாணவகனை குறிப்பிடுகின்றதோ அதுபோல், ஆத்மத்வம், சித்வம் (ப்ரகா சத்வம்) சுகாதிகளுக்கு சாக்ஷியாக இருக்கின்றதன்மை என்பதெல்லாம், ப்ரத்யக் சைதன் யத்திலும், ப்ரஹ்மசைதன்யத்திலும் ஸமமாகவே இருக்கின்றதால், ப்ரஹ்மமேஅஹம், அஹமே ப்ரஹ்மமென்று கௌணீவ்ருத்தியைக்கொண்டே அகண்டார்த்தம் போதிக்கப்படலாம்.

ஆனல் உண்மை என்னவென்றல், சிம்ஹோமாணவக:என்றும் அக்னிமாணவக: என்றும் கௌணீவ்ருத்தியினல், சிம்ஹம் போன்ற பராக்ரமம் முதலானவைகளையும், அக்னி போன்ற தேஜஸ் உள்ளவன் என்றும், அவைகளிலுள்ள பல அம்ஸங்களின் ஒற்றுமையைக் கொண்டு அவைகளை உபமானமாகச்சொல்லப்படுகிறது. ஆகையால் சிம்ஹமே மாணவன் என்றே மாணவனேசிம்ஹம் என்றே சொல்லப்படவில்லை. உபமானம் என்றலே, உபமான மாகச்சொல்லப்படும் வஸ்து எதுவோ அதிலுள்ள பல அம்ஸங்களில் ஒற்றுமையும் பல அம்ஸங்களில் வேற்றுமையும் இருந்தால்தான் அதை உபமானமாகச்சொல்லலாம். எல்லா அம்ஸங்களிலும் ஒற்றுமையாக இருக்குமானல் அது உபமானமாகவே ஆகாது. அதேவஸ்து என்றேசொல்லவேண்டும். ஆகவே, அஹம்பதார்த்தத்திற்கும் ப்ரஹ்மபதார்த்தத்திற்கும், அஹமிவ ப்ரஹ்மமென்றே, ப்ரஹ்மமிவஅஹமென்றே உபமானம் சொல்லக்கூடாது. 'அஹமே ப்ரஹ்ம' என்றும் ப்ரஹ்மமேஅஹமென்றும், மஹாவாக்யங்கள் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. ஆகவே, 'அஹம்ப்ரஹ்ம' என்ற எவ்விதபேதமும் அற்ற வாக்யத்தில் கௌணீவ்ருத்தியைக் கொண்டு அபேதார்த்தம் சொல்லமுடியாது என்பதே உண்மை. ஆனல் ப்ரௌடி வாதத்தைக் கொண்டு இப்படியும் சொல்லலாம் என்பதையே சொல்லப்படுகிறது. "ப்ரத்யக்த்வாத், அதி சூக்ஷ்மத்வாத், ஆத்மத்ருஷ்டியனுசீலனத் அத: வ்ருத்தி: விஹாயஅன்யா அஹம் வ்ருத்யைவலக்ஷ்யதே" என்று தெரிவிக்கின்றது. அதாவது, அந்த: கரணம் என்பதும், ஆத்மா என்பதும், ப்ரத்யக்த்வம், சூக்ஷ்மத்வம், என்ற தன்மைகளைக்கொண்டு, ஆத்மஸ்வரூபத்தை பரிசீலனம் செய்கின்றபோது, அஹம் வ்ருத்தியினலேயே ப்ரத்யக்சைதன்யம் அறியப்படுகிறது என்று இந்த ச்லோகம் தெரிவிக்கின்றது.

இந்தவிதம், ப்ரத்யக்த்வம், சூக்ஷ்மத்வம் முதலானவைகள் ஆத்மாவில் இருப்பது போல் அந்த:கரணத்திலும் இருக்கிறது. அதேபோல், அஞ்ஞானம் என்பதிலும், ஜகத் காரணத்வம் என்பதும் அத்விதீயத்வம் என்பதும் இருப்பதாகச்சொல்லலாம். ப்ரஹ்ம மென்பதும் அத்விதீயமாகவும் ஜகத்காரணத்வமுள்ளதாகவும் இருக்கின்றது. அதனல் கௌணயாவ்ருத்தியினல் அபேதம் சொல்லலாம்.

'ப்ரஹ்ம' மென்பது ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமாக இருந்து, ஸர்வத்திற்கும் ஸத்தா, ஸ்பூர்த்தி என்பதை கொடுக்கின்றதால், ப்ரஹ்மமென்பதில் காரணத்வம் முதலான வைகள் முக்யமென்று சொல்லவேண்டும். அவித்யை என்பதில், காரணத்வாதிகள் ப்ரஹ்ம ஸம்பந்தத்தினுல் ஏற்பட்டதால் முக்யமில்லே. ப்ரஹ்மஸ்வரூபம் என்பதும், அஹம்சப்தத்தால் சொல்லப்படும் ப்ரத்யகாத்மஸ்வரூபம் என்பதும் ஸர்வப்ரகாஸகமாய் ஞானஸ்வரூபமாக இருக் கின்றதால் இரண்டும் ஒன்றே என்று அறியவேண்டும்.

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற வாக்யத்திலுள்ள அஹம் சப்தமானது அந்த:கரண அவச் சின்னசைதன்யத்தையும், ப்ரஹ்ம சப்தமானது, மாயாவச்சின்ன–சைதன்யத்தையும் குறிக் கின்றது. அதனுல் 'அஹம்' சப்தம், முக்யமாக ஸாபாஸஅஹங்காரத்தையே தெரிவிக் கின்றது. அதேபோல் 'ப்ரஹ்ம' சப்தம், ஸாபாஸ அஞ்ஞானத்தில் முக்யமாக ப்ரயோகம் செய் யப்படுகிறது. எப்படி சிம்மசப்தமானது சிம்மமென்பதில் முக்யமாக ப்ரயோகம் செய்யப் படுகிறதோ, அதேபோல், 'அஹம்' சப்தமும், 'பரஹ்ம' சப்தமும் முக்யார்த்தமாக ஸாபாஸ அஞ்ஞானத்தையும், அஹங்காரத்தையுமே குறிக்கின்றது.

சிம்ஹ சப்தம் என்பது எப்படி மாணவகனிடம் உபசாரமாக (கௌணம்) ப்ரயோகம் செய்யப்படுகிறதோ அதேபோல், 'அஹம்' சப்தம் கௌணீவ்ருத்தியினுல், ப்ரத்யக்சைதன்யத்தை போதிக்கின்றது அதேபோல், ப்ரஹ்ம சப்தம், பரப்ரஹ்மத்தில் உபசாராத் ப்ரயோகம் செய்யப் படுகிறது என்ருலும் கேவல ப்ரஹ்மசைன்யத்தையே போதிக்கின்றது. இந்த விதம் இரண்டு பதங்களாலும் கௌணீவ்ருத்தியினுல் சைதன்யமே போதிக்கப்படுவதால் அபேதம் போதிக்கப் படுகிறது என்று சொல்லலாம். அப்படியானுல் கௌணீவ்ருத்தியினுலேயே அபேத அன்வயம் ஏற்படுவதாகச்சொல்லலாமே? உபசாராத் அபேதம் என்று ஏன் சொல்ல வேண்டும்? இதனுல் என்னவிரோதம்?

**சித்தா :** 'ப்ரஹ்ம' சப்தம் பரோக்ஷமாக அறியப்படும் வஸ்துவை தெரிவிக்கிறது. 'அஹம்' சப்தம் அபரோக்ஷமாக அறியப்படும் வஸ்துவை தெரிவிக்கின்றது. இவ்விதம் பரோக்ஷத்வம், அபரோக்ஷத்வம் என்ற இரண்டிற்கும் விரோதம் அறியப்படுகின்றதால், முக்யார்த்தத்தில் அபேதம்சொல்லமுடியாது. மேலும், ப்ரத்யக்த்வம், சூக்ஷ்மத்வம், ஸ்வச்சத்வம் என்பதெல்லாம் ஆத்மாவில் முக்யமாக இருக்கின்றது. புத்தியில் ப்ரத்யக்த்வம் முதலானவைகள், ஆபேக்ஷிகமாக இருக்கின்றதால், உபசாராத்–புத்தியில் ப்ரத்யக்த்வாதிகள் இருப்ப தாகச்சொல்லப்படுகிறது. ஆகவே உண்மையில் அபேதம் சொல்லமுடியாது. எப்படி சிம்ஹ சப்தமும் அக்னி சப்தமும் மாணவகனிடம் உபசாராத் சொல்லப்படுகிறதோ, அதுபோல் ப்ரஹ்ம சப்தத்திற்கும் அஹம் சப்தத்திற்கும் உபசாராத் கௌணீவ்ருத்தியைக்கொண்டு அபேத அன்வயம் சொல்லப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

ஆகையால், லக்ஷணையைக்கொண்டே அகண்டார்த்தம் போதிக்கப்பட வேண்டுமென்பதுதான் ந்யாயமான முறையாகும்.

**171. அவதாரிகை :**

எந்த காரணத்தைக்கொண்டு, லக்ஷணுவ்ருத்திக்கும், கௌணீவ்ருத்திக்கும் பேதம் சொல்லப்படுகிறது? ஒரு சப்தத்திலிருந்து எந்த ஒரு அர்த்தம் முதலில் அறியப்படுகின்றதோ, அதைக்காட்டிலும் வேருன ஒரு அர்த்தத்தை தெரிவிக்கின்ற விஷயத்தில், லக்ஷணுவ்ருத்தி யென்பதும், குணவ்ருத்தி என்பதும் ஒன்ருகவே இருக்கின்றதால், இதில் என்னபேதம் சொல்லமுடியும்? இதில் ப்ரமாணம் என்ன? என்ருல், முக்யார்த்தத்தைவிட்டு வேருெரு அர்த்தத்தை தெரிவிக்கின்றது

என்பதில் இரண்டிற்கும் ஒற்றுமை இருந்தபோதிலும், இரண்டிலும் அவாந்தரபேதம் இருக்கின்றது.

**ச்லோகம் :**

परशब्दवृत्तिरपरत्र भवेदिति यद्यपीदमुभयोः सदृशम् ।
अनयोस्तथापि तु विभागकरं स्फुटमस्ति लक्षणमवान्तरकम् ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு அர்த்தத்தை தெரிவிக்கின்ற சப்தம், வேருேரு அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்ற விஷயம் இரண்டிற்கும் ஸமானமாகவே இருக்கின்றது. ஆனுல் இவைகளுக்கிடையில் அவாந்தரபேதம் என்பதை தெரிவிக்கக்கூடிய லக்ஷணங்களும் ஸ்பஷ்டமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** லக்ஷணுவ்ருத்திக்கும், குணவ்ருத்திக்கும் என்ன வித்யாஸம் இருக்கின்றது? வாக்யங்களில் அறியப்படும் முக்யார்த்தத்தைவிட்டு வேறெரு அர்த்தத்தை சப்தம் போதிக்கின்றது என்ற விஷயத்தில் இரண்டும் ஸமமாகத்தானே இருக்கிறது?

**சித்தா :** சப்தத்திஞல் அறியப்படும் முக்யார்த்தத்தைவிட்டு வேறெரு அர்த்தத்தை தெரிவிக்கிறது என்பதில் ஸமான்மாக இருந்தபோதிலும், இரண்டையும் வேறுபடுத்தி தெரிவிக்கக்கூடிய அவாந்தரலக்ஷணபேதம் என்பது ஸ்பஷ்ட்டமாகவே அறியப்படுகிறது. அதை மேலே தெரிவிக்கின்ருேம்.

**172. அவதாரிகை :**

லக்ஷணுவ்ருத்திக்கும் கௌணீவ்ருத்திக்கும் என்ன லக்ஷணபேதம்? என்ருல்,

**ச்லோகம் :**

गुणतो गुणवृत्तिरिष्यते ह्यपरा लाक्षणिकी तु सङ्गतेः ।
इति भेदकमस्ति लक्षणागुणवृत्योरिति वेदवादिनः ॥

**ச்லோகார்த்தம் :** குணத்தை முன்னிட்டு ஸாம்யம் சொல்லப்படுமாஞல், அதை கௌணீவ்ருத்தி என்று சொல்லப்படும். ஸம்பந்தத்தை முன்னிட்டு ஏகத்வம் சொல்லப்படுமாஞல் லக்ஷணுவ்ருத்தி என்று சொல்லப்படும். இந்தவிதம் லக்ஷணுவ்ருத்திக்கும், குணவ்ருத்திக்கும் பேதம் இருக்கின்றதென்று வேதவாதிகளால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'சிம்ஹோ மாணவக:' என்பது போன்ற வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில் சிம்மசப்தம், அதன் வாச்யார்த்த ஸம்பந்தத்தை அபேக்ஷிக்காமலேயே, லக்ஷிதமான சிம்ம குணங்களை நிமித்தமாகக்கொண்டு, அதற்கு ஸமமான ஸௌர்ய, பராக்ரமம் முதலானவைகள் உள்ள மாணவகனிடத்தில், இரண்டிலுமுள்ள குணஸாம்யத்தைக்கொண்டு அந்த மாணவகனை சிம்மசப்தத்திஞல் போதிக்கின்றது.

இவ்விதம் சொல்லப்படுமாஞல், சிம்ஹ வ்யக்தியில் சொல்லப்படும் சிம்ஹம் என்ற நாமா, மாணவகனிடம் சொல்லப்படுவதற்கு சிம்ஹலக்ஷணமே காரணம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அதனுல், அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கின்றதே? என்ருல், கௌணீவ்ருத்தியைக்கொண்டு சொல்லப்படுவதால் அதிவ்யாப்திதோஷம் ஏற்படாது.

**பூர்வ :** குண ஸம்பந்தத்தைக் கொண்டு சாத்ருச்யம் சொல்லப்படுமாஞல் சாத்ருச்யம் என்பதும் ஒருசம்பந்தம் என்று தானே சொல்லவேண்டும்? ஸம்பந்தம் என்பது அனேக விதமாக இருக்கலாமே?

**சித்தா :** சாத்ருச்யம் என்பது சம்பந்தம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், சிம்ஹம் போல் மாணவகன் இருக்கிருன் என்று சொல்லப்படுவதால் சிம்ஹத்திற்கும் மாணவகனுக்கும் சம்பந்தம் அறியப்படமுடியாது. சாத்ருச்யம் சொல்லுமிடங்களில், இதுபோல் அது இருக்கிறது என்று இரண்டிற்கும் உள்ள ஸமான தன்மைகளை கொண்டு சொல்லப்படுகிறது என்பதால் இரண் டும் ஒன்று என்று விசிஷ்டபுத்தி ஏற்படுவதில்லை. அதனுல் சாத்ருச்யம் என்பது சம்பந்தமில்லை.

**பூர்வ :** லக்ஷிதலக்ஷணை என்பதே கௌணீவ்ருத்தி என்று சொல்லலாமே? அதாவது, 'த்விரேபம்' என்றபதம் இரண்டுரகாரத்தை (ரேபத்தை) தனக்குள் கொண்டதாக இருக்கிறது. ஆகவேத்விரேபம் என்றபதம் முதலில் ப்ரமரம் என்ற அர்த்தத்தையும் அதன்பிறகு ப்ரமரசப்தம் வண்டு என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது. அதனுல் இதை லக்ஷிதலக்ஷணை என்று சொல்லப்படுகிறது. இதுபோல், சிம்ஹ சப்தம் லக்ஷித லக்ஷணையினுல் மாணவகனை குறிப்பிடுவதாகச்சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், சிம்ஹசப்தமென்பது நேரிடையாகவே, சிம்ஹவ்யக்தியைத்தான் குறிப்பிடுகின்றது. குணஸாம்யத்தைக்கொண்டு, குணவ்ருத்தியினுல் மாணவகனை குறிப்பிடுகிறது. ஆகையால் இந்த சிம்ஹசப்தத்தை லக்ஷித லக்ஷணை என்று சொல்லமுடியாது. த்விரேபம் என்ற பதத்திற்கு, முதலில் லக்ஷ்யார்த்தமாக ப்ரமரபதம் குறிக்கப் படுகிறது. அதன்பிறகு ப்ரமரபதத்திற்கும் 'வண்டு' என்பதற்கும் உள்ள ஸம்பந்தத்தைக்கொண்டு, த்விரேபபதம் லக்ஷித லக்ஷணையினுல் 'வண்டு' என்பதை போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

அதுபோல், சிம்ஹசப்தம் வேறு ஒருபதத்தை குறிப்பிடுகிறது. என்றும், அதன்பிறகு அந்த பதத்திற்கும் மாணவகனுக்கும் உள்ள ஸம்பந்தத்தைக்கொண்டு மாணவகனை தெரிவிக்கிற தென்றும் சொல்லமுடியாது. ஆகையால் 'சிம்ஹோ மாணவக:' என்னுமிடத்தில் கௌணீ வ்ருத்தியைக்கொண்டே மாணவகனிடம் சிம்ஹ சப்தப்ரயோகம் செய்யப்படுகிறது என்று சொல்ல வேண்டும். லக்ஷிதலக்ஷணை என்று சொல்வதற்குமுடியாது.

'கங்காயாம்கோஷ:' என்ற வாக்யப்ரயோகம் செய்யுமிடத்தில், கங்காபதத்திற்கு சக்யமாக (வாச்யார்த்தமாக) இல்லாததும் ஸத்ருசமாக இல்லாததுமான 'தீரம்' என்ற அர்த்தம் சக்யார்த்த ஸம்பந்தமுடையதாக இருக்கின்றகாரணத்தினுல், தீரம் என்பதை கங்காபதம் குறிப்பிடுவதாகச் சொல்லப்படுகிறது. இதைத்தான் லக்ஷணுவ்ருத்தி என்று சொல்லப்படும்.

இந்தவிதம் முக்யார்த்தத்திலுள்ள குணஸாம்யத்தைக்கொண்டு வேறு ஒரு அர்த்தத்தை சப்தம் தெரிவிக்குமானுல் அதை கௌணீவ்ருத்தியென்று சொல்லப்படவேண்டும் என்று ப்ராசீனமான ஆச்சார்யார்களால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 'அபிதேய அவினுபூதே ப்ரதீதே: லக்ஷணேஷ்யதே', லக்ஷ்யமாண குணை: யோகாத் வ்ருத்தே: இஷ்டாது கௌணதா || என்று சொல்லப்படும் ச்லோகத்தின்மூலம், இந்த கருத்து சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால், கௌணீவ்ருத்திக்கும், லக்ஷணுவ்ருத்திக்கும் இந்தவிதம் அவாந்தரபேதம் இருக்கிறதென்று அறியவேண்டும்.

**173. அவதாரிகை :**

'தத்வமஸி' 'ஸத்யம் ஞானம் அனந்தம்' முதலான வாக்யங்கள் எல்லாம் அகண்டார்த்த போதகவாக்யம் என்று கீழே வர்ணிக்கப்பட்டது. இதனுல்ஏற்படும் வாக்யார்த்த அனுபவம் என்ன? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नित्यः शुद्धो बुद्धमुक्तस्वभावः सत्यः सूक्ष्मः सन्विभुश्चाद्वितीयः ।
आनन्दाब्धिर्यः परः सोऽहमस्मि प्रत्यग्धातुर्नात्र संशीतिरस्ति ॥

**ச்லோகார்த்தம் :** நித்ய முக்த சுத்தஸ்வபாவமாக, ஸத்யமாக, ஸூக்ஷ்மமாக, வ்யாபகமாக, அத்விதீயமாக, ஆனந்தமேஸ்வரூபமாக, எந்த பரப்ரஹ்மஸ்வரூபம் இருக்கின்றதோ அந்த ப்ரத்யக் சைதன்யஸ்வரூபமே நான். இதில் எள்ளளவும் ஸந்தேகத்திற்கே இடமில்லை.

**வ்யாக்யானம் :** 'அஹம்' என்பதில் சிதம்ஸம், ஜடாம்ஸம் என்ற இரண்டு அம்ஸங்கள் இருந்தபோதிலும், இந்த இடத்தில் பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு அறியப்பட்ட, இதம் என்று குறிப்பிட்டமுடியாததான ப்ரத்யக்சைதன்யமே குறிப்பிடப்படுகிறது. ஏகரஸமான இந்தப்ரத்யக்சைதன்யம் தான், த்வம்பதலக்ஷ்யார்த்தமாக போதிக்கப்படுகிறது.

இதேபோல், பரசப்தமானது, தத்பதலக்ஷ்யார்த்தமாக, அத்விதீய நித்ய, சுத்த, முக்த, புத்த, ஸ்வபாவமான பரமாத்மஸ்வரூபத்தையே லக்ஷ்யார்த்தமாக தெரிவிக்கின்றது. இந்தவிதம், எந்தஅபரிமிதஆனந்தஸ்வரூபம், நித்யாதி விசேஷணங்களால் போதிக்கப்படுகிறதோ, அதுவே ப்ரத்யகாத்மஸ்வரூபம் என்று 'தத்வமஸி' முதலானவாக்யங்கள் போதிக்கின்றது. அதே போல், அகண்ட அத்வயஸ்வரூபமானவஸ்து.ஸ்வரூபத்தை போதிப்பதற்காக சொல்லப்படும் அவாந்தர வாக்யங்களாலும், 'ப்ரத்யகபின்னப்ரஹ்மமே நான்' என்ற அகண்டார்த்தபோதம், பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு போதிக்கப்படுவதால்தான் ஏற்படுகிறது. குணவ்ருத்தியைக் கொண்டு போதிக்கலாம் என்று ப்ரௌடிவாதத்தை அனுசரித்து சொல்லப்பட்டது.

**174. அவதாரிகை :**

ஸச்சித் ஆனந்தம் என்பதே ஸ்வரூபலக்ஷணம் என்றும் நித்யம், சுத்தம், புத்தம், முக்தம் முதலான விசேஷணங்கள் ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லமுடியாது என்று ஒரு சிலரால் ஆக்ஷேபிக்கப்படுகிறது. இதைப்பற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सच्चित्सुखाद्वयवपुः कथयन्ति केचित् सच्चित्सुखात्मकमिति प्रथयन्ति केचित् ।
ब्रह्मेतराणि किल नास्य वपूंषि तेषां बुद्धौ स्फुरन्त्यपररूपनिवृत्तिभावात् ॥

**ச்லோகார்த்தம் :** ஸச்சித் ஆனந்தம் அத்வயஸ்வரூபம் ப்ரஹ்மமென்று சிலரால் சொல்லப்படுகிறது. வேறுசிலரால், 'ஸச்சித் ஆனந்தம்' என்பதே ப்ரஹ்மஸ்வரூபமென்றும், அத்வயம், நித்யத்வம், முதலானவைகள், புத்தியினுல் க்ரஹிக்கப்படும் அநித்யத்வாதிகளை வ்யாவ்ருத்தி செய்கின்றதால், அவைகள் ப்ரஹ்மஸ்வரூபலக்ஷணமில்லை என்றும் சொல்கிறுர்கள்.

**வ்யாக்யானம் :** 'ஸச்சித் ஆனந்தம் அத்வயாத்மகம்ப்ரஹ்ம' என்ற இந்த நான்கும் ப்ரஹ்மஸ்வரூபலக்ஷணம் என்றும் ஒரு சிலரும் ஸச்சித் ஆனந்தமே ப்ரஹ்மஸ்வரூபம் என்றும் மற்றவிசேஷணங்கள் எல்லாம் ஸ்வரூபலக்ஷணமில்லை என்றும் இதரவ்யாவ்ருத்தகமாக பேத அபாவ உபலக்ஷிதமாக ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றது என்றும் வேறுசிலர் சொல்கிறுர்கள். இந்தவிதம் நித்யாதிகளை மட்டும் விட்டு, ஸச்சித் ஆனந்தம் அத்வயாத்மகம் என்று 'அத்வயம்' என்பதையும் சேர்த்து ஸ்வரூபலக்ஷணமாகச்சொல்வது சரியல்லவென்றும், அத்வயம் என்பதும் த்வய அபாவரூபமென்பதால், அதை உபலக்ஷணமாகவும் சொல்லமுடியாது என்பதால், அத்வயம் என்பது ஸ்வரூபலக்ஷணமில்லை என்று சொல்கிறுர்கள். அதனுல் நித்யாதி சப்தங்கள் போலவே இதர

வ்யாவ்ருத்தகமாக பேத அபாவஉபலக்ஷிதமாக ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகிறது என்று சொல்கிறார்கள்.

ஸத்ப்ரஹ்ம, என்பதுபோல், அத்வயம்ப்ரஹ்ம, நித்யம்ப்ரஹ்ம, என்று சொல்லலாமே? என்றால்,

ஸத்யத்வாதிகள்போல், நித்யத்வம் முதலானவைகளும் ஸ்வரூபம் என்று புத்தியினால் க்ரஹிக்கப்பட்டபோதிலும், அவைகள் எல்லாம், த்வயமில்லை, அநித்யமில்லை, அசுத்தமில்லை என்று வ்யாவ்ருத்திரூபமாக ப்ரஹ்மத்தை அறிவிக்கின்றதால், அபாவரூபமாக இருக்கின்றவைகளை ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லமுடியாது.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபங்கள் இரண்டுமே ஒத்துக்கொள்ளக்கூடியதல்ல. ஸத்யாதி பதங்கள் போலவே, அத்வயம் நித்யம் முதலான பதங்களும் ஸ்வரூபலக்ஷணம் என்றே சொல்ல வேண்டும். எப்படி ஸத்யாதி சப்தங்கள் ஸபளவாசியாக இருந்து, பாகத்யாகலக்ஷணையினால் ப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்றதோ அதேபோல் அத்வயம் முதலான பதங்களும் ஸபள வாசியாக இருக்கின்றதால், லக்ஷணையினால், ப்ரஹ்மஸ்வரூபத்தையே போதிக்கின்றது. நித்யாதி போன்றஸர்வபதங்களும், ப்ரஹ்மபரம்தான் என்பதை மேலே விளக்கப்போகின்றோம்.

**175. அவதாரிகை :**

**பூர்வ :** 'ஸத்யம்ஞானம் அனந்தம்ப்ரஹ்ம' என்ற வாக்யம், ஸத்யாதி லக்ஷணங்களையுடைய ப்ரஹ்மத்தை போதிப்பதாக எப்படிச்சொல்லமுடியும்? ஏனெனில், ப்ரஹ்மலக்ஷணமாகச் சொல்லப் படும் ஸத்யாதி சப்தங்கள், வேறொரு இடத்தில், 'ப்ராணாவைஸத்யம்' ம்ருத்திகேத்யேவஸத்யம் என்று அவைகளையும் ஸத்யம் என்று தெரிவிக்கின்றதே? ஆகையால், ஸத்யசப்தம், ப்ரஹ் மத்தையே போதிக்கின்றது என்று எப்படிச்சொல்வது?

**சித்தா :** 'ஸத்யஞானந்தம்ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள ஸத்யாதிசப்தங்கள், விசேஷ்யமான ப்ரஹ்மத்திற்கு விசேஷணமாக இருந்து த்ரிகால அபாத்யத்வரூபமான ஸத்யம், ப்ரஹ்மஸ்வரூபமென்று தெரிவிக்கின்றது. ப்ரஹ்மஸ்வரூபத்தையன்றி வேறாக இருப்பதெல்லாம் அதோऽன்யதார்த்தம் என்று ச்ருதியே தெரிவிக்கின்றது.

**ச்லோகம் :**

ब्रह्मेति शेषि पदमत्र हि लक्ष्यमेकं शेषाणि लक्षणसमर्पणमस्य कुर्युः ।
लक्ष्यार्पणेन सह लक्षणवाचि सर्वं संगच्छतेऽरुणपदं क्रयवाचिनेव ॥

**ச்லோகார்த்தம் :** இந்த இடத்தில், எந்த வஸ்துஸேஷியாகவும், லக்ஷயமாகவும் இருக்கின்றதோ, அந்த வஸ்துவையே ப்ரஹ்மசப்தம் தெரிவிக்கின்றது. மற்ற பதங்கள் எல்லாம் ப்ரஹ்மஸ்வரூபத்தின் லக்ஷணத்தை தெரிவிக்கின்றது. அருணபதமானது எப்படி க்ரீணாதி என்ற பதத்துடன் அன்வயிக்கின்றதோ, அதுபோல் லக்ஷணத்தை தெரிவிக்கின்ற பதங்கள் எல்லாம், லக்ஷயத்துடன் அன்வயித்தே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** இதுவரையில், மஹாவாக்யங்களால் அகண்டார்த்தபோதம் எப்படி ஏற்படுகிறது என்பதையும், அதன்பலனாக ஏற்படும் அனுபவத்தையும் சித்தம் செய்யப்பட்டது. இந்த காரணத்தினால், வேதாந்தம் ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் ப்ரமாணம் என்று சித்தம் செய்யப்பட்டது. இப்போது, ஸத்யம், ஞானம், அனந்தம் என்பது முதலான பதங்களும், ஒன்றுக் கொன்று விசேஷ்ய, விசேஷணபாவேன அன்வயித்து, லக்ஷயஸ்வரூபமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே போதிக்கின்றது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

அதாவது, அறியப்படவேண்டிய ப்ரஹ்மதத்வம் என்பது, லக்ஷணத்தினுல் அறியப்பட வேண்டிய லக்ஷ்யஸ்வரூபமாக இருக்கின்றது. அதனுல் ப்ரஹ்மத்திற்கே முக்யத்வம் என்பதால், ப்ரஹ்மமென்பதுஸேஷி என்றும், ஸத்யம் ஞானம் முதலானவைகள் ப்ரஹ்மலக்ஷணமாக இருப்பதால் அவைகளை ஸேஷம் (அங்கம்) என்றும் சொல்லவேண்டும்.

**பூர்வ :** 'ஸத்யம்ஞானம் அனந்தம்ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள பதங்களில், ஏதாவது ஒரு பதத்துடன் ப்ரஹ்ம சப்தத்திற்கு அன்வயம் சொல்லப்படுவதாலேயே, அந்த பதத்தின் ஆகாங்க்ஷை நிவர்த்திக்கின்றதே? அதனுல் மற்ற இரண்டுபதங்களுடன் ப்ரஹ்மத்திற்கு அன்வயம் எப்படி ஏற்படமுடியும்? அதாவது, ஸத்யம்ப்ரஹ்ம, ஞானம் ப்ரஹ்ம என்று தனித்தனியே ஒவ்வொரு பதத்துடனும் அன்வயம் ஏற்படுவதாலும் ஸத்யபதார்த்தம் வேறு, ஞானபதார்த்தம் வேறு, அனந்த பதார்த்தம் வேறு என்று சொல்லப்படவேண்டும் என்பதாலும், மூன்று பதங்களும் ஒன்ருக அன்வயித்து ஏகரஸமான ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்? அதனுல் ஸத்யாதிசப்தங்கள், தனித்தனி அர்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லவேண்டுமேயன்றி, அகண்டார்த்தமாக ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகிறது என்று சொல்லமுடியாது.

**சித்தா :** ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற சப்தங்களில் பேதம் இருப்பதாக ஸாமான்ய மாக அறியப்பட்டபோதிலும், இந்த பதங்கள் எல்லாம் பாகத்யாகலக்ஷணையினுல் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. விசேஷணமான ஸத்யாதி சப்தங்கள் விசேஷ்யமான லக்ஷ்யஸ்வரூபத்தில் ஏககாலத்தில் ஒன்றுடன் ஒன்று அன்வயித்து லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அகண்டார்த்தமாகவே ஸமர்ப்பணம் செய்கின்றது. (போதிக்கின்றது.)

'அருணயா, பிங்காக்ஷ்யா, ஏகஹாயன்யா ஸோமம் க்ரீணுதி' என்ற வாக்யம், சிகப்பு நிற முள்ளதும், மஞ்சள் நிற கண்களையுடையதும், ஒருவயதுடையதுமான கன்றை (கன்றுக்குட்டியை) க்ரயமாகக்கொடுத்து ஸோமலதையை வாங்கவேண்டுமென்று சொல்லப்படும் இந்த வாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாம் ஒன்ருக சேர்ந்து, க்ரயஸாதனமாக இருக்கின்ற ப்ரதானமான கன்றுக் குட்டியுடன் அன்வயித்து அதன் அர்த்ததை எப்படி போதிக்கின்றதோ அதுபோல் ஸத்யாதி பதங்களும் ஒன்ருகவே அன்வயித்து, ப்ரஹ்மஸ்வரூபத்தை அகண்டார்த்தமாகவே போதிக்கின்றது என்றே சொல்ல வேண்டும்.

## 176. அவதாரிகை :

**பூர்வ :** இவ்விதம் ஸத்யாதி பதங்களுக்கு அர்த்தம் செய்வது சரியல்ல. ஏனெனில், 'குணுனும்ச பரார்த்தத்வாத்' என்ற ந்யாயத்தின்படி, ஸத்யாதிபதங்களில் எதுப்ரதானம்? எது அப்ரதானம்? என்ற தாரதம்யம் இல்லாததாலும், மூன்றும் விசேஷணமாக இருக்கின்றதாலும், ஒவ்வொருபதமும் தனித்தனியே விசேஷ்யமான ப்ரஹ்மத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தையே போதிக்கு மேயல்லாமல், விசேஷணங்கள் ஒன்றுக்கொன்று அன்வயிக்கமுடியாது. ஏனென்ருல் மூன்றும் குணவிசேஷணங்களாக இருக்கின்றதால் ஸத்யமேஞானம் என்று ஒன்றுக்கொன்று அபேத அன்வயம் ஏற்படாது. அதனுல் ஏகரஸம். ப்ரஹ்ம' என்ற அர்த்தம் கிடைக்காது அனேகரஸம்ப்ரஹ்ம என்றே சொல்லநேரிடும்.

**சித்தா :** இதுசரியல்ல. ஸத்யாதிபதங்கள் முதலில் தனித்தனியே அர்த்தத்தைபோதித்தாலும் கூட, அவையெல்லாம் ஒன்றுக்கொன்று அன்வயித்து அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ற விஷயத்தை விளக்குகின்ருேம்—

**ச்லோகம் :**

पृष्ठात्परस्परयुजाप्रतिपत्तिरेषां एवंविधत्वमुपपादयितुं समर्था ।
लक्ष्यस्य तस्य महतः क्रयवस्तुवत्स्यात् सर्वस्य कारकपदस्य परस्परेण ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வகாரக பதங்களும் பரஸ்பரம் அன்வயித்து க்ரியஸாதனமான கன்றுக் குட்டியை போதிப்பதுபோல, ஸத்யாதிபதங்களும், பின்னுல் பரஸ்பரம் அன்வயித்து லக்ஷ்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தை ஏகரஸமாக போதிப்பதற்கு ஸாமர்த்யம் உடையதாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள ஸத்யாதி சப்தங்கள், ப்ரஹ்மத்திற்கு விசேஷணமாக இருக்கின்றதால், ஒவ்வொரு பதமும் தனித்தனியே விசேஷ்யமான ப்ரஹ்மத்துடன் அன்வயிக்கிறது என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மமென்பது ஏகரஸம் என்று சொல்லமுடியாது. அனேகரஸம் என்றே சொல்ல நேரிடும்.

**சித்தா :** ஸத்யாதி பதங்கள் தனித்தனி அர்த்தத்தை தெரிவித்தாலும் பின்னுல் எல்லா பதங்களும் ஒன்றுக்கொன்று அன்வயித்து ஒரே ப்ரஹ்மத்திற்கு ஸ்வரூபலக்ஷணமாக ஆகிறது. அதாவது, ஸத்யமே ஞானம், ஞானமே ஸத்யம், ஸத்யமாகவும் ஞானமாகவும் இருப்பது எதுவோ அதுவே அனந்தம் என்றும், அனந்தமாக இருப்பது எதுவோ அதுவேஸத்யம் ஞானம் என்றும் சொல்லப்படுகிறது என்பதாலும் இந்த வாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாம் ஸாமானுதி கரண்யேன ப்ரயோகம் செய்யப்படுவதால், இந்த பதங்கள் எல்லாம் லக்ஷகமாக இருந்து லக்ஷ்யமான அகண்ட ஏகரஸமாக ப்ரஹ்மத்தை போதிப்பதில்ஸாமர்த்தமுடையதாக இருக்கின்றது. எப்படி 'அருணயா' என்ற வாக்யத்திலுள்ள காரகபதங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று அன்வயித்து க்ரயஸாதனமான ஏகவத்ஸத்தை (ஒரே கன்றுக்குட்டியை) தெரிவிக்கின்றதோ அதுபோல் இந்த வாக்யத்திலும் பதங்கள் அன்வயித்து அகண்ட ஏகரஸமான அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

இவ்விதம் 'அருணயா' என்ற வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படாமல் அருணயா க்ரீணுதி–பிங்காக்ஷ்யாக்ரீணுதி என்று அர்த்தம் செய்யப்படுமானுல் அந்த வாக்யம் அர்த்தமுள்ளதாகவே ஆகாது. அதனுல் அந்த வாக்யத்திலுள்ள பதங்களும் ஒன்றுடன் ஒன்று அன்வியித்து ஒரேவத்ஸம் என்பதை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**177. அவதாரிகை :**

ஸத்யம், ஞானம், அனந்தம், என்ற பதங்கள் பர்யாயபதங்களாக இல்லாமல், ஒவ்வொரு பதமும் வெவ்வேறு அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. இவ்விதமிருக்கின்றபோது, ஸத்யாதிபதங்கள் அகண்டார்த்தத்தை போதிப்பதாக எப்படிச்சொல்வது? என்ருல், எப்படி 'தத்வமஸ்யாதி' வாக்யத்திலுள்ள, தத், த்வம் என்ற இரண்டுபதங்களும் பர்யாயமாக இல்லாமலிருந்தும் எப்படி பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறதோ அதுபோல், ஸத்யாதி பதங்களும் அகண்டார்த்தத்தை போதிக்கலாம்.

**ச்லோகம் :**

तत्वंपदार्थविषयो नय एव योज्यः सत्यादिवस्तुषु न तत्र विशेषकल्पः ।
सत्यादिशब्दविषयाः शबलास्तदर्थभागेषु लाक्षणिकवृत्तिरपीह तुल्या ॥

**ச்லோகார்த்தம் :** தத், த்வம் பதார்த்தங்களில் சொல்லப்படும் ந்யாயத்தைக்கொண்டே ஸத்யாதி பதார்த்த விஷயத்திலும் அர்த்தம் சொல்லப்படவேண்டும் இதில் விசேஷகல்பனை வேறெதுவுமில்லை. ஸத்யாதி சப்தங்கள் ஸபளார்த்தத்தையே தெரிவிக்கின்றதால், பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தத்தை போதிக்கின்ற விஷயத்தில், ஸத்யாதிபதங்கள், தத், த்வம் பதங்களுக்கு ஸமானமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஸத்யாதி சப்தங்கள் முதலில் ஒன்றுக்கொன்று வேறுபட்ட அர்த்தத்தை தெரிவிப்பதாக இருந்தபோதிலும், தத்வமஸ்யாதி வாக்யங்களுக்கு எந்தந்யாயத்தைக்கொண்டு அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்பட்டதோ அதேந்யாயத்தைக்கொண்டு ஸத்யாதிபதங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** ஸத்யாதி பதங்கள் ப்ரஹ்மஸ்வரூபலக்ஷணத்தை மட்டுமே போதிக்கின்றது. தத்வமஸ்யாதி வாக்யங்கள் அபேதத்தை போதிக்கின்றது. இவ்விதம் ஸத்யாதிபதங்கள் ஸ்வரூபமாத்ரபரமாக இருப்பதால் அது பதார்த்தவிஷயமாக இருக்கின்றது. தத், த்வம்பதங்கள் ஐக்யபரத்வமான வாக்யார்த்த விஷயமாக இருக்கின்றது. இவ்விதம் வித்யாஸம் இருக்கின்றதனுல் இரண்டும் அகண்டார்த்தத்தை போதிப்பதாக எப்படிச்சொல்வது?

**சித்தா :** இவ்விதம் ஸத்யாதி சப்தங்கள் ஸ்வரூபவிசேஷத்தினுல் லக்ஷ்யார்த்தை தெரிவிக்கிறதென்றும், மஹாவாக்யம் அபேதத்தை போதிக்கின்றது என்பதால் இரண்டிற்கும் ஒரே ந்யாயம் எப்படிச்சொல்லமுடியும்? என்ருல் இதில் விசேஷமான வித்யாஸம் ஏதுமில்லை. தத், த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் ஸபளஸ்வரூபமே வாச்யார்த்தம். அதேபோல் ஸத்யாதி பதங்களுக்கும் ஸபளமே வாச்யார்த்தம். அதனுல் பாகத்யாகலக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தமாக, சைதன்யஸ்வரூபமே போதிக்கப்படுகிறது என்பதில் இரண்டு வாக்யங்களுக்கும் வித்யாஸம் ஏதுமில்லை. மஹாவாக்யமானுலும் அவாந்தரவாக்யமானுலும், அவைகளுக்கு அகண்டார்த்தத்தை போதிப்பதில்தான் தாத்பர்யம் என்பதால், இரண்டிற்கும் ஒரே ந்யாயம் என்று சொல்லப்பட்டதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**178. அவதாரிகை :**

ஸத்யாதி பதங்களுக்கு ஸபளமே வாச்யார்த்தம் என்று எவ்விதம் சொல்லப்படுகிறது? என்ருல்.

**ச்லோகம் :**

आकाशादौ सत्यता तावदेका प्रत्यङ्मात्रे सत्यता काचिदन्या ।
तत्सम्पर्कात्सत्यता तत्र चान्या व्युत्पन्नोऽयं सत्यशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** ஆகாசம் முதலானவைகளில் ஒரு ஸத்யத்வம் இருக்கிறது. இதைத்தவிர, ப்ரத்யகாத்மாவில் ஒரு ஸத்யத்வம் வேருக இருக்கின்றது. இவைகளின் ஸம்பந்தத்தினுல் ஸபளார்த்தத்தில் வேறு ஒரு ஸத்யத்வம் இருக்கிறது. இந்த அர்த்தத்தில் தான் ஸத்யசப்தம் ப்ரயோகம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ஆகாசம் ஸத்யம்' என்ற வாக்யத்தைக்கேட்டவுடன் கேவல சைதன்யத்தின் ஞானமோ அல்லது கேவல ஆகாசத்தின் ஞானமோ ஏற்படுவதில்லை. ஆனுல் ஆகாச ஞானமும் ஸத்யத்வ ஞானமும் சேர்ந்தே ஏற்படுகிறது. இதையே ஸபளஸ்வரூபம் என்று சொல்லப்படுகிறது. அதிஷ்டான ஸத்யத்வமே, ஆரோபிதமான ஆகாசத்தில் தோன்றுகிறது. இந்தவிதம், ஆகாசாதிகளில் ஸத்யசப்த ப்ரயோகமும், புத்தி வ்ருத்திகளில்

ஞானசப்த ப்ரயோகமும் செய்யப்பட்டபோதிலும் கூட, ஆகாசம் என்பதும், புத்தி வ்ருத்தி என்பதும் அந்ருதமாகவும், ஜடமாகவும் இருக்கின்ற காரணத்தினால், அவை இரண்டும் ஸத்ய மாகவோ, ஞானமாகவோ இருக்கமுடியாது. இந்தவிதம் இருந்தபோதிலும், இவைகளுக்கு அதிஷ்ட்டானமான ஸ்வரூபம் ஸத்யமாகவும், ஞானமாகவும் இருக்கின்றதால், அந்த ஸத்ய ஞானாத்மகமான ப்ரஹ்மசைதன்ய ஸம்பந்தத்தை முன்னிட்டு, ஆகாசாதிகளும், புத்திவ்ருத்திகளும் ஸத்யாதி பதங்களுடன் சேர்ந்து அறியப்படுகிறது. கேவல ஆகாசமோ, கேவல ப்ரஹ்மமென்பதோ ஸத்யமென்று அறியமுடியாது. அதனால் ஸபளஸ்வரூபமே ஸத்யமென்று அறியப்படுகிறது. இந்தவிதம் ஆகாசம் ஸத்யம் என்று ஸபளஸ்வரூபம் போதிக்கப்படுகின்றபோது, ஆகாசசப்தத்தில் வ்யவஹாரபர்யந்தம் பாதிக்கப்படாத ஸத்யத்வம் இருக்கின்றது. இந்தவிதம் ஆகாசாதிகளில் இருக்கின்ற ஸத்யத்வம் என்பது ஒன்று. இதைத்தவிர த்ரிகால அபாத்யத்வமான ஸத்யத்வம் என்பது ஒன்று ப்ரத்யக்சைதன்யத்தில் இருக்கின்றது. இவ்விதம் ஒன்று வ்யாவகாரிக ஸத்யத்வமுள்ளதாகவும், மற்றொன்று பாரமார்த்திக ஸத்யத்வ முள்ளதாகவும் இருக்கின்றது. இதைத்தவிர, ஆகாசாதிகளுக்கும் ப்ரத்யகாத்மாவிற்கும் பரஸ்பர அத்யாஸம் காரணமாக இரண்டும் சேர்ந்த ஸபளஸ்வரூபத்தில் ஒரு ஸத்யத்வம் இருக்கிறது. இந்த ஸபளஸ்வரூபத்தையே ஸத்யசப்தம் வாச்யார்த்தமாக தெரிவிக்கின்றது.

**179. அவதாரிகை :**

இதேபோல் ஞானபத வாச்யமும் ஸபளஸ்வரூபமே என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

बुद्धेर्वृत्तौ ज्ञानता तावदेका प्रत्यग्बोधे ज्ञानता काचिदन्या ।
तत्संपर्काज्ज्ञानता तत्र चान्या व्युत्पन्नोऽयं ज्ञानशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** (ஞானசப்தமானது புத்திவ்ருத்தியையும் தெரிவிக்கின்றது என்பதால்) புத்தியில் ஒரு ஞானத்வம் இருக்கிறது. இதைக்காட்டிலும் வேறாக ப்ரத்யக் ஸ்வரூபமே ஞானம் என்பதால் அதில் ஒரு ஞானத்வம் இருக்கிறது. புத்தி வ்ருத்தி, சைதன்யம் என்ற இரண்டினுடைய பரஸ்பரஅத்யாஸத்தினால் ஸபளஸ்வரூபத்தில் ஒரு ஞானத்வம் இருக்கிறது. இந்தஸபளஸ்வரூபத்தில் தான் லோகத்தில் ஞானசப்தப்ரயோகம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** சைதன்யத்துடன் கூடிய புத்திவ்ருத்தியானது, ஸம்சய, விபர்யயத்துடன் கூடிய அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்து 'இது கடம்' என்ற ஞானம் ஏற்படும்படி செய்கின்றபோது, அந்த ஞானம் வ்யாவகாரிகஞானம் என்று சொல்லப்படுகிறது, இந்தவிதம் புத்திவ்ருத்தியில் ஒரு ஞானத்வம் இருக்கிறது. இதற்கு விலக்ஷணமாக, உண்மையான ஞானத்வம் என்பது ப்ரத்யகாத்மாவில்தான் இருக்கின்றது. இதையே பாரமார்த்திக ஞானம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் ப்ரத்யகாத்மாவே ஞானமாக இருக்கின்றதால் ஆத்மாவில் ஒரு ஞானத்வம் இருக்கிறது. மூன்றாவதாக, சைதன்யத்திற்கும் புத்திக்கும் ஏற்பட்ட ஸம்பந்தத்தினால் ஸபளார்த்தத்தில் ஒரு ஞானத்வம் சொல்லப்படுகிறது. லோகத்தில் ஞானசப்தம் ஸபளார்த்தத்தையே தெரிவிக்கின்றது.

**180. அவதாரிகை :**

இதேபோல் ஆனந்த பதத்திற்கு வாச்யார்த்தம் என்னவென்றால்,

**ச்லோகம் :**

बुद्धेर्वृत्तौ तावदानन्दतैका प्रत्यङ्मात्रे काचिदानन्दताऽन्या ।
तत्संपर्कात्तत्र चाऽऽनन्दताऽन्या व्युत्पन्नोऽयं तत्र चानन्दशब्दः ॥

**ச்லோகார்த்தம் :** (ஸத்வாகாரமான) புத்திவ்ருத்தியில் இருக்கின்ற ஆனந்தத்வம் என்பது ஒன்று. இதையன்றி வேருக ப்ரத்யக்ஸ்வரூபானந்தம் என்பது ஒன்று ப்ரமார்த்தமாக இருக்கின்றது. இதையன்றி ப்ரத்யக்சைதன்யமும் புத்திவ்ருத்தியும் கலந்த ஸபள ஸ்வரூபத்தில் இருக்கின்ற ஆனந்தத்வம் ஒன்று. இதையே ஆனந்த சப்தார்த்தமாக லோகத்தில் விவகாரம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** தர்மஜன்யமான சுகாகாரவ்ருத்தி அனுகூலமானதன்மையில் இருக்கின்ற போது புத்திவ்ருத்தியில் ஒரு ஆனந்தத்வம் இருக்கிறது. அதாவது, விஷயானந்தம் என்பதெல்லாம், புண்யவஸத்தினுல், த்ரிகுணுத்மகமான புத்திவ்ருத்தியில் ஏதோ ஒருஸமயம் ஸாத்விகாம்ஸம் அதிகமாகின்றபோது, அந்தவ்ருத்தியில் ஆனந்தம் தோன்றுகிறது. இவ்விதம் அனுகூலமான விஷயங்களினுல் ஏற்படும் ஆனந்த அனுபவம் என்பதே வ்யாவகாரிக ஆனந்தம் என்று சொல்லப்படுகிறது. இதைக்காட்டிலும் வேருக கேவல ப்ரத்யக் சைதன்யாம்ஸத்தில் பரமப்ரேமாஸ்பதமான ஸ்வரூபானந்தம் என்று ஒன்று இருக்கிறது. அதையே பாரமார்த்திக ஆனந்தம் என்று சொல்லப்படுகிறது. இதேபோல் ஸபளஸ்வரூபத்தில் ஒரு ஆனந்தத்வம் இருக்கிறது. இதையே லோகத்தில் ஆனந்த சப்தத்தினுல் விவகாரம் செய்யப்படுகிறது.

**181. அவதாரிகை :**

இதேபோல், நித்யசப்தார்த்தம் என்னவென்ருல்,

**ச்லோகம் :**

आकाशादौ नित्यता तावदेका प्रत्यङ्मात्रे नित्यता काचिदन्या ।
तत्सम्पर्कान्नित्यता तत्रचान्या व्युत्पन्नोऽयं नित्यशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** ஆகாசாதிகளில் இருக்கின்ற நித்யத்வம் என்பது ஒன்று இதைக் காட்டிலும் வேருக, ப்ரத்யகாத்மாவில் இருக்கின்ற நித்யதை என்பது ஒன்று. இந்த இரண்டின் ஸம்பந்தத்தினுல் (ஆரோபிதமாக) அறியப்படும் ஸபளார்த்தத்தில் வேருக ஒரு நித்யத்வம் அறியப்படுகிறது. நித்யசப்தம் (பொதுவாக) ஸபளார்த்தத்தையே குறிப்பிடுகின்றது.

**வ்யாக்யானம் :** ஆகாஸாதிகளில் ஒரு நித்யத்வம் இருக்கிறது. ஆகாசாதிகளில் சொல்லப்படும் நித்யத்வம் என்பது கடபடாதிகளில் உள்ள நித்யத்வம்போல், அதிசீக்ரம் நாசத்தை அடைவதில்லை. ஏனெனில் நிரவயவமாக இருக்கின்றதால், கடபடாதிகளைக்காட்டிலும் அதிககாலம் இருக்கின்றதால் ஆகாசம் என்பதில் ஒரு நித்யத்வம் சொல்லப்படுகிறது. இந்த நித்யத்வம் வ்யாவகாரிகம். இதைக்காட்டிலும் வேருக ப்ரத்யக் சைதன்யத்தில் பாரமார்த்திக நித்யத்வம் இருக்கின்றது. இதையன்றி வேருக பரஸ்பர அத்யாஸமான ஸபளஸ்வரூபத்தில் ஒரு நித்யத்வம் இருக்கின்றது. இதையே லோகத்தில் நித்ய சப்தார்த்தமாக விவகாரம் செய்யப்படுகிறது.

**182. அவதாரிகை :**

இதேபோல் சுத்தசப்தார்த்தம் என்னவென்ருல்.

**ச்லோகம் :**

आकाशादौ शुद्धता तावदेका प्रत्यङ्मात्रे शुद्धता काचिदन्या ।
तत्सम्पर्काच्छुद्धता तत्रचान्या व्युत्पन्नोऽयं शुद्धशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** ஆகாசாதிகளில் இருக்கின்ற சுத்தத்வம் ஒன்று. ப்ரத்யகாத்மாவில் இருக்கின்ற சுத்தத்வம் என்பது இதைக்காட்டிலும் வேருக ஒன்று இருக்கிறது. இரண்டும் கலந்த சபளஸ்வரூபத்தில் இருக்கின்ற சுத்தத்வம் என்பது வேருக இருக்கிறது. ஸபளார்த் தத்திலுள்ள இந்த சுத்தத்வமே, சுத்த சப்தத்தால் லோகத்தில் விவகாரம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஆகாசாதிகள் நிரவயவமானதால், அதில் மலம் முதலானவைகளின் ஸம்பந்தம் ஏற்படமுடியாது. அதனுல் ஆகாசத்தில் ஒரு சுத்தத்வம் இருக்கிறது. இது வ்யாவகாரிகசுத்தத்வம் என்று சொல்லப்படுகிறது. ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்திலிருக்கின்ற சுத்தத்வம் என்பதே பாரமார்த்திக சுத்தத்வம் அதுவே சுத்தசப்த முக்யார்த்தமாக இருக்கிறது. இதையன்றி வேருக பரஸ்பர அத்யாஸத்திஞல் ஏற்படும் ஸபளஸ்வரூபத்தில் இருக்கின்ற சுத்தத்வம் என்பதையே லோகத்தில் சுத்தசப்தார்த்தமாக விவகாரம் செய்யப்படுகிறது

**183. அவதாரிகை :**

இதேபோல் முக்ததை என்ருல் என்னவென்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

गोवत्सादौ मुक्तता तावदेका प्रत्यङ्मात्रे मुक्तता काचिदन्या ।
तत्सम्पर्कान्मुक्तता तत्रचान्या व्युत्पन्नोऽयं मुक्तशब्दस्तु तत्र ॥

**ச்லோகார்த்தம் :** கோ, வத்ஸம், முதலானவைகளில் உள்ள முக்ததா என்பது ஒன்று. (விடுபட்டதன்மை) இதையன்றி வேருக ப்ரத்யக்ஸ்வரூபத்தில் முக்ததை என்பது ஒன்று. இந்த இரண்டும் சேர்ந்த ஸபளார்த்தத்தில் இருக்கின்ற முக்ததை என்பது ஒன்று வேருனது. இதையே முக்தசப்தார்த்தமாக லோகத்தில் விவகாரம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** பசு, கன்று முதலான ப்ராணிகள் ஒருஸமயம் கட்டுப்பட்டும், ஒரு ஸமயம் விடுவிக்கப்பட்டும் இருக்கின்றதால் அவைகளில் உள்ளமுக்தத்வம் என்பது வ்யாவகாரிகம். நித்ய முக்தத்வம் என்பது ப்ரத்யகாத்மாவில் பாரமார்த்திகமாக இருக்கின்றதால், இதையே முக்தசப்தம் முக்யார்த்தமாக தெரிவிக்கின்றது. அதாவது ப்ரபஞ்சஉபசமரூபமானதும், ஸம்ஸாரமற்றஸ்வரூபமானதுமான ப்ரத்யக் சைதன்யத்தில்தான் நித்யமுக்தத்வம் என்பது பாரமார்த்திகமாக இருக்கின்றது. இந்த இரண்டின் பரஸ்பர அத்யாஸத்திஞல் ஏற்பட்ட ஸபளஸ்வரூபத்தில் உள்ள முக்ததை என்பதையே லோகத்தில்முக்த சப்தத்திஞல் விவகரிக்கப்படுகிறது.

**184. அவதாரிகை :**

இதேபோல் அஸ்திதை என்பது என்னவென்ருல்,

**ச்லோகம் :**

आकाशादावस्तिता तावदेका प्रत्यक्त्वे चास्तिता काचिदन्या ।
तत्सम्पर्कादस्तिता तत्र चान्या व्युत्पन्नोऽयं तत्र चास्तीति शब्दः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகாசாதிகளில் அஸ்திதை என்பது (இருப்புத்தன்மை) ஒன்று. ப்ரத்யகாத்மாவில் அஸ்திதை என்பது இதைக்காட்டிலும் வேருக ஒன்று இருக்கிறது. இந்த இரண்டின் சேர்க்கையிஞல் இருக்கின்ற அஸ்திதை என்பது வேறு ஒன்று இருக்கிறது. ஸபளஸ்வரூபத்தில் இருக்கின்ற இந்த அஸ்தித்வத்தையே அஸ்தீதி சப்தமாக விவகாரம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'அஸ்திதா' என்று சொல்லப்படும் 'ஸத்' சப்தப்ரவ்ருத்திக்கு விஷயம் என்னவென்ருல், 'இது இருக்கின்றது' 'அது இருக்கின்றது' என்று ஸர்வபாவ வஸ்துக்களிலும், புத்தியிஞல் க்ரஹிக்கக்கூடிய தன்மையில் எந்த வஸ்துக்கள் இருக்கின்றதோ, அவைகளில் அறியப்படும் அஸ்தித்வம் என்பது ஒன்று. இது வ்யாவகாரிக அஸ்தித்வம். ப்ரத்யகாத்மாவில் இருக்கின்ற அஸ்தித்வம் என்பது ஸர்வாஸ்பதமாக இருக்கின்றதால், அதுவே நித்யசித்தமான அஸ்தித்வம் இதுவே முக்யமான அஸ்தித்வம்.

இதேபோல் சூஷ்மத்வாதிகளுக்கும், அஸ்தித்வத்திற்கு சொல்லப்பட்ட லக்ஷணங்களை உபலக்ஷணமாக்க்கொண்டு அறிந்து கொள்ளவேண்டும். அதாவது, ஆகாசாதிகளில் சூக்ஷ்மத்வம் என்பது, ஆகாசாதிகள் அமூர்த்தமாகவும், நிரவயவமாகவும் இந்த்ரிய அகோசரமாகவும் இருக்கின்றதால் ஆகாசம் சூக்ஷ்மம் என்று சொல்லப்படுகிறது. இந்த சூக்ஷ்மதை ஆகாசாதிகளில் வ்யாவகாரிகமாகச் சொல்லப்படுகிறது. ஆனால் ஸர்வத்திற்கும் ப்ரத்யக்ஸ்வரூபமாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில்தான் அணுவிற்கும் அணு என்று சொல்லக்கூடிய உண்மையான சூக்ஷ்மத்வம் இருக்கின்றது. ஆகாசம் இந்த்ரிய அகோசரமானாலும் மனஸ் என்பதால் அறியக்கூடியது. ப்ரத்யகாத்மா என்பது மனதிற்கும் எட்டாமல், (மனஸிற்கும் ஸ்வரூபமாக இருக்கின்றதால்) நிரதிசய சூக்ஷமத்வம் என்பது நித்யசித்தமாக ப்ரத்யகாத்மாவில்தான் இருக்கின்றது. அதனால் பரத்யகாத்மாவிலேயே சூக்ஷமசப்தம், முக்யமாகச் சொல்லப்படுகின்றது. இரண்டும் கலந்த ஸபளஸ்வரூபத்தில்தான் சூக்ஷமசப்தார்த்தம் வ்யாவகாரிகமாக சொல்லப்படுகிறது.

இதேபோல், ஆகாசம் விபு : என்று சொல்லப்படும் வாக்யத்திலுள்ள விபு : என்ற (வ்யாபகம் என்ற) சப்த ப்ரயோகம் செய்யப்படுகிறது. ஏனெனில் 'ஆகாசவத் ஸர்வகதம்' ஆகாசம் போல் வ்யாபகம் என்று ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றது. ஆகாசம் போன்ற வ்யாபகத்வம் வேறு எதற்கும் கிடையாதாகையால், ஆகாசத்தில் வ்யாபகத்வம் சொல்லப்படுகிறது. ஆனால் இந்த வ்யாபகத்வம் ஸாதிசயம். ப்ரத்யகாத்மாவில் இருக்கின்ற வ்யாபகத்வம் என்பதே நிரதிசய வ்யாபகத்வம். அதுவே நித்ய சித்தமான விபுத்வம்.

இதேபோல் அனந்தத்வம், அத்விதீயத்வம் என்பது என்னவென்றால் தேசம், காலம், வஸ்து என்ற மூன்று பரிச்சேதங்கள் அற்ற ஸ்வரூபமே அத்விதீயம். அதுவே அனந்த சப்தார்த்தம். ஆனால் இந்த இடத்தில் வஸ்துபரிச்சேதம் இல்லாதது எதுவோ அதை அனந்த சப்தார்த்தமாகச் சொல்லப்படுகிறது. அதாவது ஸத்தாஸாமான்யம் என்பது எல்லா வஸ்துக்களிலும் இருக்கின்றது. இந்த ஸத்தை என்பதில்தான் (அத்விதீயம் என்ற அனந்த ஸப்தத்தினால்) ஒரு அனந்தத்வம் இருக்கிறது. ஆனால் இந்த அனந்தத்வம் முக்யமில்லை. ஏனெனில், ஸத்தா ஸாமான்யம் என்று சொல்கின்றபோது, அந்த விசேஷணத்திலும் ஸத்தை இருக்கின்றது. (அதாவது மரம் என்பது ஸாமான்யம் மாமரம் என்பது விசேஷணம். இந்த இரண்டிலும் ஸத்தை இருக்கின்றது). ஆகவே ஆத்மாவில்தான் ஏகரஸமான ஸத்தை என்பது சிதேகஸ்வரூபமாக அறியப்படுகின்றது என்பதாலும், பேதம் என்பது லேசமும் அறியப்படாததாலும், அனந்தத்வம் என்பது ப்ரத்யகாத்மாவில் தான் முக்யமாக நித்ய சித்தமாக இருக்கின்றது. ஸபளார்த்ததில் அனந்தசப்தார்த்தம் வ்யாவகாரிகமாக சொல்லப் படுகிறது.

இந்தவிதம் மூன்று விதமாகச் சொல்லப்படுவதன் தாத்பர்யம் என்னவென்றால், லோகத்தில், ஸத்யசப்தம் வ்யாவகாரிகமாகவும் ப்ராதிபாஸிகமாகவும், இதுஸத்யம் அது ஸத்யம் என்று ப்ரயோகம் செய்யப்படுகிறது. அதேபோல் நித்யம் சுத்தம் முதலான சப்தங்களுக்கு எவையெல்லாம் விஷயமாக ஆகின்றதோ அவைகளெல்லாம் அனேக விதமாக இருக்கின்றது. இவ்விதம் அனேகாகாரமாக இருக்கின்ற நித்யத்வாதிகள் எல்லாம் ஒன்றுதான் என்றாலும் அந்தந்த உபாதி விசேஷங்களைக் கொண்டு பலவிதமாக நித்யத்வாதிகள் இருப்பதாக சொல்லப்படுகிறது. ஆனாலும் உபாதி அம்ஸங்களை விட்டுவிட்டு ஸத்யசப்தார்த்தம் எதுவோ அதை மட்டும் க்ரஹிக்கவேண்டும். இதேபோல் ஸத்யாதிகள் போன்ற எல்லா சப்தார்த்தங்களிலும் அறிந்துகொள்ளவேண்டும். ஆகவே

ஸத்யாதி சப்தங்கள் பரமார்த்தமாக ப்ரத்யகாத்மாவையே போதிக்கின்றது என்பதே இதுவரை சொல்லப்பட்டதின் கருத்து.

**185. அவதாரிகை :**

இந்தவிதம் ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற சப்தங்கள் எல்லாம், ஸபளஸ்வரூபத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அவைகள் எல்லாம் அனேகவிதமான அர்த்தங்களை தெரிவிக்கின்றதால், (அதற்குரிய அர்த்தங்களை தெரிவிக்கின்றது என்பதால்) இந்த வாக்யம் அகண்டார்த்தத்தை எப்படி போதிக்கமுடியும்? என்ருல், தத்வமஸி மஹாவாக்யங்களால் எப்படி போதிக்கப்படுகிறதோ அதுபோல் லக்ஷ்யமான ஸ்வரூபம் அகண்டார்த்தமாக போதிக்கப்படுகிறது என்பதால் விரோதம் ஏதுமில்லை.

**ச்லோகம் :**

यो यः शब्दो यत्कृतेऽर्थे निरूढस्तत्रैवार्थे लक्षणावृत्तिरस्य ।
वक्तव्या स्यात्पण्डितैरेवमेतत्प्रत्यक्पूर्णं ब्रह्म वेदान्तवेद्यम् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த அதிஷ்ட்டான வஸ்துவினுல் எந்தெந்த பதங்கள் அதனுடைய வாச்யார்த்தத்தை தெரிவிக்கின்றதோ, அந்த அதிஷ்ட்டானவஸ்துவையே வாக்யம் லக்ஷணுவ்ருத்தியினுல் தெரிவிக்கின்றதென்று பண்டிதர்களாலும் சொல்லப்பட வேண்டும். இவ்விதம் ப்ரத்யக்ஸ்வரூபமான பூர்ணப்ரஹ்மமென்பது வேதாந்தத்தினுல் அறியப் படுகிறது.

**வ்யாக்யானம் :** ஆகாசம் முதலானவைகளில் அறியப்படும் ஸத்யத்வம், நித்யத்வம் என்பது போன்ற தன்மைகள் எல்லாம், அவைகளுக்கு அதிஷ்ட்டானமான ப்ரத்யக்சைதன்யத்தில் இருக்கின்ற காரணத்தினுல்தான், ஸத்யாதி சப்தங்கள் சபள ஸ்வரூபத்தில் ப்ரயோகம் செய்யப்படுகிறது. இவ்விதம் அபிதாவ்ருத்தியினுல் ஸபள ஸ்வரூபத்தில் அறியப்படும் அபரமார்த்திகமான ஸத்யத்வம் என்பது லக்ஷணையினுல் பாரமார்த்திகமான ஸத்யத்தையே போதிக்கின்றது..

இவ்விதம் ஸத்யம் முதலான சப்தங்கள் எந்த வஸ்துவில் ப்ரயோகம் செய்யப்பட்டாலும், அவையெல்லாம் அதிஷ்ட்டான ஸ்வரூபத்தின் ஸத்வம் என்றே அறியவேண்டும். ஆரோபித வஸ்துக்களில் தோன்றும் ஸத்யத்வாதிகள் எல்லாம் அதிஷ்ட்டானஸ்வரூபத்தையே சேர்ந்ததால் இரண்டிலும் வெவ்வேறு ஸத்வம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஸர்வத்திலும் இருக்கின்ற உபாதிஅம்ஸங்களை விட்டு அறியப்படும் ஸ்வரூபம் ஏகம் என்பதால், ஸத்யாதி சப்தங்கள் அகண்டார்த்தத்தையே லக்ஷணையினுல் போதிக்கின்றது. இதேபோல், நித்யம், சுத்தம், முக்தம் என்ற சப்தங்கள் சபளார்த்தத்தையே தெரிவித்தபோதிலும் அந்த பதங்களெல்லாம் எந்த அர்த்தத்தை நிமித்தமாகக்கொண்டு போதிக்கின்றதோ அந்த அர்த்தத்தை மட்டும் க்ரஹித்துக்கொண்டு மற்றவைகளை விட்டுவிடவேண்டும். இந்தவிதம் ஸர்வபதங்களும் பாகத்யாகலக்ஷணையைக் கொண்டு அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது.

'கோ' சப்தமானது, கோத்வஜாதியை தெரிவிக்க வேண்டுமென்ற காரணத்தினுல், கோத்வஜாதியுடன்சேர்ந்த வ்யக்தியுடன் சேர்த்தே தெரிவிக்கின்றது. இவ்விதம் போதித்தபோதிலும் 'கோ' சப்தம் அந்த வ்யக்தியில் பர்யவஸானத்தை (முடிவை) அடைவதில்லை. கோத்வரூபமான ப்ரவ்ருத்தி நிமித்தத்தில்தான் 'கோ' சப்தம் ஸ்திதி பெற்றிருக்கிறது. ஆகவே, எத்தனைவ்யக்திகள் இருந்தபோதிலும், அத்தனை வ்யக்திகளிலுமுள்ள கோத்வத்தை

தெரிவிப்பதற்காகவே 'கோ' சப்தம் ப்ரவர்த்திக்கின்றது என்பதால் வ்யக்திகளை போதிப்பதில் தாத்பர்யமில்லை. அதேபோல், ஸத்யாதி சப்தங்களும் ஆகாசாதிகளில் ப்ரயோகம் செய்யப்பட்டபோதிலும், ஆகாசாதிரூபங்களில் ஸத்யாதி சப்தங்கள் பர்யவஸானத்தை அடைவதில்லை (முடிவை அடைவதில்லை) ஏனெனில் ஸத்யத்வாதிகள் ஆகாசாதிகளில் ஸம்பவிக்கமுடியாது. ஆயினும், வேதங்கள் ஸத்யத்வாதி சப்தங்களை ஆகாசாதிகளில் ப்ரயோகிக்கப்படும் காரணம் என்னவென்றால், வேதங்களின் அர்த்தம் வேத சப்தங்களின் மூலமாகவே அறியப்படவேண்டியதாக இருக்கிறது. சப்தம் என்ற உபாயத்தைக் கொண்டு புருஷ விவக்ஷையினால் ஸ்வார்த்தமான அகண்டார்த்த ஸ்வரூபம் போதிக்கப்படமுடியாது. ஆனால் ஸத்யாதிசப்தத்திலிருந்து நேரிடையாக அறியமுடியாத தத்வத்தை அறிவதற்கு உபாயமாகவே, ஆகாசாதிகளில் அறியப்படும் ஸத்யத்வாதிகளை முதலில் தெரிவித்து, அதன்பிறகு உபேயமான லக்ஷ்யஸ்வரூபத்தில்தான் ஸத்யத்வாதிகள் இருக்கின்றதென்பதை தெரிவிக்கின்ற முறையில் ஸத்யத்வாதிகளை பொருத்தி அகண்ட ஏகரஸமான தத்வத்தை லக்ஷணையைக்கொண்டு போதிக்கப்படுகிறது.

வேதவாக்யங்களின் அர்த்தமானது, அந்த வேதசப்தத்திலிருந்தே அறியப்பட வேண்டியதாகஇருக்கிறது. அதனால் உபக்ரம, உபஸம்ஹாராதி தாத்பர்ய நிர்ணயக லிங்கங்களைக்கொண்டு அறியப்படவேண்டியதாக இருக்கின்றதால், இதில் புருஷ அபிப்ராயத்திற்கே இடமில்லை. இவ்விதம், பராக் அர்த்தமான ப்ரபஞ்சத்திற்கு வேறுபட்டதான ப்ரஹ்மஸ்வரூபம், ஸர்வஉபாதிகளிலும் தொடர்ந்து ஸர்வவஸ்துக்களின் ப்ரத்யக்ஸ்வரூபமாகவே இருக்கின்றது. ஆகவே, பூர்ணஸ்வரூபமான ப்ரஹ்மமே ப்ரத்யக்ஸ்வரூபம் என்று அறியவேண்டும். இவ்விதம் அகண்டார்த்தம் போதிக்கப்படுவதற்கு உபாயமாகவே, முதலில் ஸபளார்த்தத்தை தெரிவித்து, அதன் பின் வாச்யார்த்தத்தில் அறியப்படும் விரோத பரிகாரம் செய்வதற்காக லக்ஷணாவ்ருத்தியைக் கொண்டு லக்ஷ்யமான (உபேயமான) அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது. என்றாலும், வேத வாக்யத்திலிருந்தே ப்ரஹ்மஸ்வரூபம் அறியப்படுகிறது. ஆகையால் பரஹ்மபோதத்தில் வேதம் ப்ரமாணம் என்பதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**186. அவதாரிகை :**

ப்ரஹ்மமென்பது வேதவாக்யத்திலிருந்துலக்ஷ்யார்த்தமாக போதிக்கப்பட்ட போதிலும், அதனால் அகண்டார்த்தம் போதிக்கப்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்? ஏனெனில் ஸத்யம் என்ற சப்தம் ஒரு அர்த்தத்தையும், ஞானம் என்ற சப்தம் வேறொரு அர்த்தத்தையும் தெரிவிக்கின்றதால், பேதமுள்ள பதங்களால் அபேதார்த்தம் எப்படி போதிக்கமுடியும்? அதற்காக ஸத்யாதி பதங்களில் பேதமில்லையென்றும் எல்லா பதங்களும் ஒரே அர்த்தத்தைத்தான் தெரிவிக்கின்றது என்றும் சொல்லப்படுமானால், புனருக்திதோஷம் ஸம்பவிக்கின்றது. அதனால் ஸத்யம், ஞானம், அனந்தம் என்று பலபதங்கள் ப்ரயோகிக்காமல் ஒரே பதத்தினாலேயே தெரிவிக்கலாமே? என்றால், இந்த ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :** सत्येऽप्यस्ति ज्ञानता ज्ञानतायां सत्यत्वं च स्पष्टमस्त्येव तद्वत् ।
सत्यप्येवं नातिरेकावकाशः पूर्णे तत्वे ज्ञानसत्योपपत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** ஸத்யத்தில் ஞானத்வமும், அதேபோல ஞானத்தில் ஸத்யத்வமும் ஸ்பஷ்ட்டமாகவே இருக்கின்றது. இவ்விதம் இருந்தபோதிலும், இவைகளுக்கு பேதம் சொல்லமுடியாது. ஏனெனில் பூர்ணமான தத்வத்தில் ஞானத்வமும், ஸத்யத்வமும் ஸம்பவிக்கமுடியும்.

**வ்யாக்யானம் :** ஸத்யம் ஞானம் அனந்தம் என்ற பதங்களால் லக்ஷ்யார்த்தமாக போதிக்கப்படுகின்ற ப்ரஹ்மஸ்வரூபத்தில் பேதம் இருக்கிறதா? இல்லையா?

பேதம் இருக்கின்றது என்று சொல்லப்படுமானல், ப்ரஹ்மமென்பது அனேகாகாரம் என்று சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானல், நிரதிசயஏகரஸம்ப்ரஹ்ம (ஏகாகாரம்) என்று சொல்லமுடியாது. அதற்காக பேதமில்லையென்று சொல்லப்படுமானல் ஒரு பதம் போதுமே? பல பதங்கள் ப்ரயோகம் செய்யப்படுவது வ்யர்த்தம் தானே?

**சித்தா :** இந்த ஸந்தேகத்திற்கு இடமே இல்லை. ஏனெனில், 'ஸத்யம்' என்று எந்த வஸ்து போதிக்கப்படுகிறதோ அது ஞானஸ்வரூபமாகவே இருக்கவேண்டும். அவ்விதம் ஸத்யபதார்த்தம் ஞானமாக இல்லையென்றல், ஜடம் என்று சொல்லநேரிடும். ஜடமாக இருக்குமானல் அதற்கு ஸத்யத்வம் ஸம்பவிக்கமுடியாது. ஜடம் என்றல் அநித்யமானதால் அஸத்யம் என்று சொல்லநேரிடும். ஆகையால் ஸத்யமாக இருப்பது எதுவோ அது ஞானமாகத்தான் இருக்கவேண்டும். இதேபோல் ஞானம் என்று எந்த ஸ்வரூபம் போதிக்கப்படுகின்றதோ அது ஸத்யமாகத்தான் இருக்கவேண்டும். அவ்விதமின்றி ஸத்யபின்னம் ஞானம் என்று சொல்லப்படுமானல் ஞானம் என்பது அஸத்யம் மித்யை என்று சொல்லநேரிடும். மித்யை என்றல் அஞ்ஞானம். அதனல் ஞானம் என்பது அஞ்ஞானம் என்று சொல்லநேரிடும். அதனல் ஞானம் என்பதே ஸத்யம் என்றுதான் சொல்லவேண்டும்.

இவ்விதம் ஸத்யாதிபதங்கள் ஒன்றுக்கொன்று அந்தர்பாவமாக இருக்கின்றதால், இதில் பேதம் இருப்பதாக சொல்லமுடியாது. மேலும், ப்ரஹ்மென்பது, அபாத்யத் வஸ்வரூபமாகவும், அஜடஸ்வரூபமாகவும் தெரிவிக்கவேண்டி இருப்பதால்தான் ஸத்யம், ஞானம் என்ற இரண்டு பதங்களும் ப்ரவ்ருத்திக்கின்றது. எல்லாபதங்களும் சேர்ந்து ப்ரஹ்மமென்ற ஒரே (வஸ்துவை) அர்த்தத்தை தெரிவிக்கின்றதால், புனருக்திதோஷம் ஸம்பவிக்கிறது என்று சொல்லமுடியாது.

ஏனெனில் ஸத்யபதம், அபாத்யத்வம் என்ற அர்த்தத்தை எப்படி தெரிவிக்கின்றதோ அந்தஅர்த்தத்தை ஞானபதம்தெரிவிக்கமுடியாது ஞான பதத்திஞல்தான் (ஜடமில்லை என்று) அஜடஸ்வரூபம் என்று அறியப்படவேண்டும். அஜடம் என்ற அர்த்தம் ஸத்யபதத்திஞல் அறிவிக்கமுடியாது. இந்தவிதம் ஒவ்வொருபதமும் அதனுடைய அர்த்தத்தை வெவ்வேறு முறையில் போதிக்கின்றதால் ஒரேபதம் போறுமே என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** எப்படிச் சொன்னலும், ஸத்யபதம் ஞானபதம் இரண்டும் அந்ருதமில்லை, ஜடமில்லை என்று தெரிவிப்பதாகச்சொல்லப்படுமானல், ஸத்யம் என்ற பதம் அந்ருதவிரோதம் என்றும், ஞானம் என்ற பதம் ஜடவிரோதம் என்றும் போதிக்கின்றது என்பதால், இரண்டிற்கும் பேதம் இருப்பதாகத்தானே சொல்லவேண்டும்?

**சித்தா :** ப்ரஹ்மமென்பது, ஸத்யம் என்றே ஞானம் என்றே சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. அந்ருதமாகவும் ஜடமாகவும் இருக்கின்ற இந்த வஸ்துக்களிலிருந்து

வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே, ஸத்யாதி சப்தங்கள் ப்ரவர்த்திக்கின்றது என்பதால், உபாதிகளின் பேதத்தைக்கொண்டு பல சப்தங்களால் ப்ரஹ்ம ஸ்வரூபம் போதிக்கப்பட வேண்டியதாக இருக்கிறது. ஸத்யத்வாதிகள் ஔபாதிக தர்மமேயன்றி ஸ்வரூப தர்மமில்லை. இந்த ஸத்யத்வாதிகளைக்கொண்டு நிரூபாதிகமான எந்த லக்ஷ்யஸ்வரூபம் போதிகப்படுகிறதோ அந்த ஸ்வரூபத்தில் எவ்வித பேதமும் கிடையாது. (எப்படி விஷ்ணுவை, லக்ஷ்மியைக் கொண்டு ஸ்ரீபதி என்றும், வ்யாபகத்தன்மையைக் கொண்டு விபு என்றும் விஷ்ணுவென்றும் சொல்லப்பட்டபோதிலும் விஷ்ணு ஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் கிடையாது என்று சொல்லப்படுகிறதோ அதுபோல்)

ஆகவே, ஸத்யம், ஞானம், அனந்தம், ஆனந்தம் என்ற பதங்கள் எல்லாம் ஒன்றுடன் ஒன்று இணைந்து பூர்ணமான ஒரே தத்வத்தையே போதிக்கின்றது. இவ்விதம் எல்லாபதங்களும் ஒரே அர்த்தத்தை போதித்தபோதிலும், அந்த பதங்களின் அர்த்தங்களைக் கொண்டே ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படவேண்டியதாக இருக்கிறது. ஆகையால் பதபேதங்கள் அபேக்ஷிக்கப்படுகிறது.

**பூர்வ :** அப்படியானால், பதபதார்த்தபேதம் இருக்குமானால் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிப்பதாக எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** ஸத்யபத லக்ஷ்யமாக சொல்லப்படும் வஸ்துவில் ஞானத்வம் என்பதும் இருக்கிறது. ஞானபத லக்ஷ்யமாக எந்த வஸ்து சொல்லப்படுகிறதோ அதில் ஸத்யத்வம் இருக்கிறது. ஸத்யம் என்று சொல்லப்படும் வஸ்து ஞானமாக இல்லாவிடில் ஸத்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பதே ப்ரகாசிக்கமுடியாது, ஞானஸ்வரூபமான வஸ்து ஸத்யமாக இல்லையென்றால், அது துச்சம் என்றே சொல்லநேரிடும். துச்சமென்று சொல்லப்படுமானால் ஜகத் என்பதே, இருக்கின்றதென்றோ ப்ரகாசிக்கின்றதென்றோ சொல்லமுடியாது. ஆகையால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமுள்ள ஏகரஸமான ப்ரஹ்மமென்பதே ஸத்யஞானந்தஸ்வரூபம் என்று அகண்டார்த்தத்தையே இந்த வாக்யங்கள் போதிக்கின்றது.

ஸத்யம் என்றால் அந்ருதமில்லையென்றும் ஞானம் என்றால் ஜடமில்லை என்றும் சொல்லப்படும் அபாவரூபதர்மங்களால் எந்தவிதமான தர்மபேதமும் கிடையாது. ஆகையால், அகண்டஏகரஸமான ஸ்வரூபத்தையே, ஸத்யாதி சப்தங்கள் போதிக்கின்றது என்ற விஷயத்தில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**187. அவதாரிகை :**

ஸத்யம், ஞானம் என்ற பதங்கள் எந்தமுறையில் தன்அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்ற சொல்லப்பட்டதோ, அதேமுறையில் 'ஆனந்தம்' என்ற சப்தத்திற்கும் அர்த்தம் அறியப்படவேண்டும்.

**ச்லோகம் :**

आनन्दत्वे ज्ञानता ज्ञानतायामानन्दत्वं विद्यते निर्विशङ्कम् ।
सत्यप्येवं नातिरेकावकाशः पूर्णे तत्वे ज्ञानसौख्योपपत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** ஆனந்தம் என்பதிலும் ஞானத்வம் இருக்கிறது. ஞானத்திலும் ஆனந்தத்வம் இருக்கின்றது. இவ்விதமிருந்தபோதிலும் இவைகளுக்கு பேதம் சொல்லமுடியாது. ஏனெனில் பூர்ணமான தத்வத்தில்தான், ஞானம், ஆனந்தம் இரண்டும் ஸம்பவிக்கமுடியும்.

**வ்யாக்யானம் :** ஸத்யம், ஞானம் என்ற பதங்களுக்கு எந்த முறையில் அபேதார்த்தம் சொல்லப்பட்டதோ, அதே முறையில் ஆனந்த சப்தத்திற்கும் அர்த்தம் அறியப்படவேண்டும்.

ஞானம் என்பது ஆனந்த ஸ்வரூபமாக இல்லையென்றாலும், ஆனந்தம் என்பது ஞானஸ்வரூபமாக இல்லையென்றாலும், இரண்டும் புருஷார்த்தம் என்று சொல்வதற்கே முடியாது. ஏனெனில் ஞானம் என்பது ஆனந்தமாக இல்லையென்றால் அது தேவையில்லையென்றாகும் (புருஷார்த்தமில்லை என்றாகும்). ஆனந்தம் என்பது ப்ரகாச ஸ்வரூபமாக (ஞானமாக) இல்லை என்றால், அதுவும் புருஷார்த்தமாக ஆகமுடியாது. ஞான சப்தத்தினால் ஜடவிரோதித்வம் என்பதும், ஆனந்த சப்தத்தினால் துக்கவிரோதித்வம் என்பதும் ஒன்றுக்கொன்று பேதமுள்ளதாக அறியப்பட்டபோதிலும், அதனால் லக்ஷ்யமான சிதாத்மஸ்வரூபத்தில் எவ்வித பேதமும் கிடையாது. ஆகவே, ஆனந்தபதம் என்பதும் அகண்டார்த்தமான ப்ரஹ்மஸ்வரூபத்தையே போதிக்கின்றது.

**188. அவதாரிகை :**

ஞானம் என்பதும் ஆனந்தம் என்பதும் வேறல்ல என்று எப்படிச் சொல்லப்பட்டதோ, அதேபோல், ஸத்யபதமும், ஆனந்தபதமும் வேறல்ல என்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

आनन्दत्वे सत्यता सत्यतायामानन्दत्वं निर्विवादं प्रसिद्धम् ।
सत्यप्येवं नातिरेकावकाशः पूर्णे तत्वे सत्यसौख्योपपत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** ஆனந்தத்வமே ஸத்யத்வம், ஸத்யத்வமே ஆனந்தத்வம் என்பதால், இதில் விவாதித்திற்கே இடமில்லை, என்று சொல்லப்படுவதால், எவ்வித பேதத்திற்கும் இடமில்லை. ஆகையால் பரிபூர்ணமான 'தத்' பதத்தில், ஸத்யத்வம், ஸௌக்யத்வம் என்பதெல்லாம் இருக்கின்றது என்பது பொருத்தம் தான்.

**வ்யாக்யானம் :** ஆனந்தம் என்பது ஸத்யமாக இல்லாமல் இருக்குமானால், ஆனந்தம் அஸத்யம் என்று சொல்லநேரிடும். ஆனந்தம் என்பது கானல் நீர் போல் அஸத்யமாக இருக்குமானால் உபாதேயமாக ஆகாது. ஸத்யமான ஜலம் தான் தாகம் என்பதை தணிக்கின்றதால் உபாதேயமாக ஆகிறது. ஆகவே ஆனந்தம் என்பது ஸத்யமாக இல்லாவிடில், அந்த ஆனந்தம் அனுதேயமாக ஆகுமேயன்றி உபாதேயமாக ஆகாது. ஆகவே, அஸத்யமான ஆனந்தம் என்பது விடத்தக்கதாக ஆகும். அதனால் ஆனந்தம் என்பது ஸத்யத்தைக்காட்டிலும் வேறு என்று சொல்லமுடியாது. அதேபோல், ஸத்யம் என்பதும் ஆனந்தமாக இல்லையென்றால், காஷ்ட்டலோஷ்டாதிகள் போல் (கல்–கட்டை) அதை அடைவதால் புருஷார்த்தம் எதுவுமில்லை என்பதால் ஸத்யம் என்பது ஆனந்தம் என்றே சொல்லவேண்டும்.

**189. அவதாரிகை :**

ஸத்யம், ஞானம், ஆனந்தம் என்ற பதங்களுக்கு எந்தந்யாயத்தைக்கொண்டு அர்த்தம் செய்யப்பட்டதோ, அதே முறையில் மற்றுமுள்ள நித்யாதி சப்தங்களுக்கும் அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**ச்லோகம் :**

शेषेऽप्यूह्यं न्यायसाम्यादशेषमन्योऽन्यस्मिन्नस्तिता पूर्णता च ।
अन्योऽन्यस्याजामिता शब्दशक्तेरेवं सुस्थं सर्वमुक्तोपपत्तेः ॥

**ச்லோகார்த்தம் :** மேலே சொல்லப்பட்ட ந்யாயத்தைக்கொண்டு மற்றுமுள்ள பதங்களிலும், அஸ்தித்வம், பூர்ணத்வம் என்பதெல்லாவற்றிர்க்கும் புனருக்தி என்பது

கிடையாது என்பதை யூகித்து அறியவேண்டும். மேலே சொல்லப்பட்ட ந்யாயத்தினுல் எல்லாமே பொருந்துகின்றது.

**வ்யாக்யானம் :** ஸத்யம், ஞானம், ஆனந்தம் என்ற பதங்களுக்கு எந்த முறையில் அர்த்தம் செய்யப்பட்டதோ அதேமுறையில், ஸத், அத்வீதீயம், சுத்தம், முக்தம், புத்தம் முதலானபத்துபதங்களுக்கும் அர்த்தம் செய்யப்படவேண்டும். எப்படியெனில், அஸ்தித்வம், பூர்ணத்வம், என்பதெல்லாம் பரஸ்பரம் ஸ்வரூபமாகவே இருக்கின்றது. ஸத் என்பதே பூர்ணம், பூர்ணம் என்பதே ஸத். அஸ்திதை என்ற ஸத் என்பது, இல்லையென்ருல் பூர்ணமாக இருக்காது. பூர்ணமாக இல்லையென்ருல் பரிச்சின்னமென்ருகும். பரிச்சின்னம் என்ருலே அநித்யமாகத்தான் இருக்கும். அநித்யம் என்ருல், நாஸ்தி என்ருகும். அதனுல் அஸ்திதை என்பதே இருக்கமுடியாது. இதேபோல் நித்யத்வம், சுத்தத்வம் முதலான பத்து பதங்களுக்கும் அர்த்தம் தனித்தனியே இருந்தபோதிலும், ஒன்றுக்கொன்று அந்தர் பாவமாக இருக்கின்றதால், எல்லாபதங்களும் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இந்தவிதம், ஸத்யம், ஞானம், அனந்தம், (ஆனந்தம்) நித்யம், சுத்தம், புத்தம், முக்தம், சூக்ஷ்மம், விபு:, அத்வீதீயம், என்று ப்ரஹ்மலக்ஷணமாகச் சொல்லப்படும், பத்துபதங்களாலும், அந்ருதமில்லை, ஜடமில்லை, துக்கமில்லை, விஞசமற்றது, மலம்அற்றது, (நித்ய ப்ரகாசகம்) அஞ்ஞானமல்ல, ஸம்ஸாரமற்றது, அறியப்படுவதல்ல, பரிச்சின்னமல்ல, எவ்விதபேதமும்அற்றஸ்வரூபம், என்ற வ்யவச்சேத்யமான பதார்த்தங்கள் வெவ்வேருக இருக்கின்றதால், அவையெல்லாம் இல்லையென்று நிஷேதம் செய்து ஏகரஸாத்மகமானஸ்வரூபத்தை இந்தபத்து பதங்களாலும் போதிக்கப்படுகிறது. இந்த விதம், ஸத்யாதி சப்தங்களுக்கு விருத்தமான பதார்த்தங்களிலிருந்து, வ்யாவ்ருத்தி செய்து ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகின்றதால், ஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் கிடையாது. பதங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு அர்த்தத்தை தெரிவிப்பதால் பர்யாயபதம் என்று சொல்லமுடியாது. ஆகவே, மஹாவாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ற விஷயமும், வாக்யத்தினுல் ப்ரஹ்மஸ்வரூபம் அறியப்படுகிறது என்பதும், இந்த காரணங்களினுல் சித்தமாகிறது. அதனுல், இப்பேர்ப்பட்ட எங்கள் அத்வைத சித்தாந்தத்தை யாராலும் அசைக்கமுடியாது.

**190. அவதாரிகை :**

இந்தவிதம், ஸத்யாதி சப்தங்களுக்கு ஸபளஸ்வரூபமே வாச்யார்த்தம் என்று வாக்யார்த்த ஸமன்வயம் செய்யப்பட்டது. இதை ஒத்துக்கொள்ளாமல், ஸபளார்த்தமே வாச்யார்த்தம் என்று எந்த வித்வான்களாலும் சொல்லப்படுவதாக அறியப்படவில்லையே? என்ற ஸங்கையை, மேலே நிவர்த்திக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

बोधात्मत्वे निर्निमित्ते प्रतीचो बोधात्मत्वे तन्निमित्ते च बुद्धेः ।
बोधात्मत्वे बुद्धिधर्मौ च बुद्धेरुक्ते साक्षाद्वेदसिद्धान्तविद्भिः ॥

**ச்லோகார்த்தம் :** போதத்வம், ஆத்மத்வம் என்ற இரண்டும், ப்ரத்யகாத்மாவில், நிர்நிமித்தமாக இருக்கிறது. புத்தியில், போதத்வம் ஆத்மத்வம் என்ற இரண்டும், ப்ரத்யகாத்மாவை நிமித்தமாக கொண்டிருக்கிறது. போதத்வம், ஆத்மத்வம், என்பது புத்தியின் தர்மமாகவும் இருக்கின்றதென்று வேதாந்தார்த்தங்களை அறிந்த ஆசார்யர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்மாவில், போதத்வம், ஞானத்வம், ஆத்மத்வம் என்பது ஸ்வாபாவிகமாகவே, இருக்கின்றது என்பதால் ஸ்வத:சித்தம். இதேபோல் புத்தியில் போதத்வம், ஆத்மத்வம், என்பது இருக்கிறது என்றாலும், அவைகள், புத்தி என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தமாக இருப்பதால் ஏற்பட்டது. அதனால் ப்ரத்யக்ஸ்வரூப நிமித்தம், புத்தியில் போதத்வாதிகள் இருப்பதாக அறியப்படுகிறது. இதைத்தவிர புத்தி பரிணாமமான வ்ருத்திகளிலும், போதத்வம் ஆத்மத்வம் என்பது இருப்பதாக அறியப்படுகிறது. இந்தவிதம் ஆத்மத்வம், போதத்வம் என்பது ப்ரத்யகாத்மாவில், பரமார்த்தமாகவும், புத்தியில் ஆத்யாஸிக மாகவும், கேவலபுத்திபரிணாமமான வ்ருத்திகளில் வ்யாவகாரிகமாகவும் அறியப்படுகிறது. ஆகவே, கூடஸ்த்தசைன்யத்தில் போதத்வம், ப்ரத்யக்த்வம், என்பதெல்லாம், நிர்நிமித்தம், ஸ்வத:சித்தம் (ஸ்வாபாவிகம்) என்றும் அஹங்காராதிகளில்ஸநிமித்தம் என்று ஸ்ரீசுரேச்வராசார்யாராலேயே சொல்லப்பட்டிருக்கிறது. இந்தவிதம் ப்ரத்யகாத்மாவில் ஸ்வாபாவிகமாக இருக்கின்ற போதத்வம், ஆத்மத்வம் என்பதே புத்தியில் இருக்கின்ற போதத்வம், ஆத்மத்வத்திற்கு காரணம் என்று சொல்வதிலிருந்தே, ஸ்பளத்திற்கும் இதுவே காரணம் என்று புத்தி என்பதை உபலக்ஷணமாகச் சொல்லப்படுகிறது என்று அறிந்துகொள்ளலாம். அதாவது கீழே, ப்ரத்யக்த்வம், சூக்ஷ்மத்வம், என்பதெல்லாம் அனாத்மாவில் இருப்பது ஒன்று, ஆத்மாவில் இருப்பது ஒன்று, இரண்டும் கலந்த சபளஸ்வரூபத்தில் ஒன்று என்று சொல்லப்பட்டதெல்லாமே, ஸ்ரீசுரேச்வராசார்யாரின் அபிப்ருயத்தைக்கொண்டே சொல்லப்பட்டது. "கூடஸ்த்த போத:ப்ரத்யக்த்வம் அநிமித்தம் ஸ்தாத்மன:போத்ருதாஹந்தயோ:ஹேது:தாப்யாம் தேன உபலக்ஷ்யதோ" என்று நைஷ்கர்மய சித்தியில் சொல்லப்படுகிறது. இதன்கருத்து என்னவென்றால், சிதாத்மஸ்வரூபத்தில், நிர்விகாரமான நித்யபோதத்வம் என்பதும், ஸர்வாந்தரத்வம் என்பதும், ஸ்வாபாவிகமாக, நிர்நிமித்தமாக இருக்கிறது. இந்த போத்ருத்வம், ப்ரத்யக்த்வம் என்பதெல்லாம், ஆத்மாவில் அத்யஸ்த்தமான புத்தியில், சிதாபாஸ வ்யாப்தியினால், ஆகமாபாயியாக (ஒரு ஸமயம் வந்து போவதாக) வ்யாவகாரிக நிலையில் இருக்கிறது. புத்தியில் அறியப்படும் போத்ருத்வாதிகளுக்கு ஆத்மாவே காரணமாக இருக்கிறது. ஆகவே, இதன்மூலம், லக்ஷ்யமான ஆத்மஸ்வரூபம் போதாத்மத்வம் என்பது அறியப்படுகிறது என்று வேதாந்த சித்தாந்தத்தை நன்கு அறிந்த ஆசார்யாரால் சொல்லப்பட்டிருக்கிறது.

**191. அவதாரிகை :**

தத்–த்வம்பதார்த்தங்களுக்கு எந்த முறையில் அர்த்தம் செய்யப்பட்டதோ, அதே ந்யாயத்தைக்கொண்டு, ஸத்யாதி பதங்களுக்கும், (எந்த முறையிலும்) அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்று, மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

जहतीह च लक्षणा मता गुणवृत्तिश्च तथाऽभ्युपेयते ।
न विशेषविनिर्णयक्षमं किमपीहास्ति विशेषकारणम् ॥

**ச்லோகார்த்தம் :** இந்த இடத்தில் ஜஹல்லக்ஷணையையும், அதேபோல், கௌணீவ்ருத்தியையும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. (மஹாவாக்யத்திற்கு சொல்லப்படும் முறையிலிருந்து) வேறுவிதமாக நிர்ணயம் செய்வதற்கு, இந்த வாக்யத்தில் விசேஷகாரணம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** ஸத்யாதி சப்தங்கள் ஸாபாஸமான ஆகாஸாதிகளையே போதிக்கின்றது என்றும், சுபார்த்தத்தை போதிக்கவில்லையென்றும் (கேவல அஹங்காராதிகளையே போதிக்கின்றது

என்று) சொல்லப்படுமானல், ஸத்யாதி சப்தங்களால் அறியப்படும் வாச்யார்த்தத்தை முழுவதும்விட்டுவிட்டு, ஜஹல்லக்ஷணையினுல் ப்ரத்யக் சைதன்யத்தை போதிப்பதாகச்சொல்லலாம். அல்லது வேறுவிதமாகவும் சொல்லலாம்.

அதாவது, 'ஸத்யஸ்யஸத்யம்' என்று ஆத்மஸ்வரூபம் சொல்லப்படுகிறது. அதனுல் அஹங்காரதிகளில் சொல்லப்படும் ஸத்யத்வம் வ்யாவகாரிகம் என்பதால், ஆத்மாவிலுள்ள ஸத்யத்வம் என்பது, எப்படி சிம்ஹத்திலுள்ள பராக்ரமாதிகள் மாணவகனிடம் இருக்கின்றதோ, அதுபோல் குணயோகாத், லக்ஷணயாக லக்ஷ்யஸ்வரூபமான ப்ரத்யகாத்மாவை, ஸத்யாதி சப்தங்கள் போதிப்பதாகச்சொல்லலாம். இவ்விதம், ஸத்யத்வாதி சப்தங்கள், ஜஹல் லக்ஷணையினுலும், கௌணீவ்ருத்தியினுலும் அபேதார்த்தம் போதிக்கப்படலாம் என்று ப்ரௌடிவாதமாக சொல்லப்பட்டபோதிலும் உண்மையில், ஆத்மா என்பதும் அஹங்காரம் என்பதும் சேர்ந்து ஒன்ருகவே அறியப்படுகிறது என்றவிஷயம், அஞ்ஞானதசையில் யாராலும் அறிந்து கொள்ளமுடியாது. ஆகையால், 'அஹம்' சப்தம், அஹங்காரத்தை தெரிவிக்கின்றது என்ருே அல்லது சைதன்யத்தை தெரிவிக்கிறது என்ருே, அஞ்ஞான தசையில் விவேகம் செய்து அறிந்து கொள்ளமுடியாது. ஆகையால் சப்தங்கள் எல்லாம் முதலில் ஸபளஸ்வரூபத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அதன்பிறகு பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு ப்ரத்யகாத்மாவை போதிக்கின்றது என்று சொல்வதே ந்யாயமாகும். இந்தவிதம் மஹாவாக்யங்களுக்கு எந்த முறையில் அர்த்தம் செய்யப்படுகிறதோ, அதே முறையில் தான், மற்ற அவாந்தர வாக்யங்களுக்கும் அர்த்தம் செய்யப்படவேண்டும். ஆகையால் அவாந்தரவாக்யங்களுக்கு இந்த ந்யாயம் பொருந்தாது என்று சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லை.

**192. அவதாரிகை :**

ஸத்யாதி சப்தங்கள், எவ்விதம் ஸபளார்த்தத்தை தெரிவித்து, அதன்பிறகு, லக்ஷணையினுல் ஸ்வரூபத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டதோ, அதேபோல், 'ஈச்வர' பதமென்பதும் சபளார்த்தம் என்று ஒத்துக்கொண்டு, அதன்பிறகு லக்ஷணையாக ஸ்வரூபத்தை போதிக்கின்றது என்று சொல்லவேண்டும் என்பதாக ஒருசிலரால் சொல்லப் படுகிறது. இந்தவிதம் ஈச்வர சப்தத்திற்கு அர்த்தம் சொல்லமுடியாது என்று நிராகரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** ऐश्वर्यमप्यनुभवादिवदात्मरूपं तस्मादबोधगतमस्य च तानि कस्मात् ।
नेष्टानि पूर्ववदिति ब्रुवतो मुखस्य सद्यः पिधानमनुसृत्य वचांसि कुर्मः ॥

**ச்லோகார்த்தம் :** 'ஞானம்' என்பதைப்போல், ஐச்வர்யம் என்பதும் ஆத்மஸ்வரூபமாக இருக்கின்றது என்பது ஒன்று. மாயையென்பதில் இருக்கின்ற ஐச்வர்யம் வேறு ஒன்று. பரஸ்பரஸபளார்த்தத்தில் ஐச்வர்யம் ஒன்று என்று முன், சொல்லப்பட்டது போல் ஏன் ஐச்வர்யம் என்பதை ஒத்துக்கொள்ளப்படவில்லை என்று கேட்பவர்களின் வாயை உடனே மூடவேண்டுமென்று மேலே பதில் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸத்யம் முதலான சப்தங்கள், ப்ரஹ்மஸ்வரூபமாகவே இருந்து, லக்ஷணையினுல் ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று எப்படிச் சொல்லப்படுகிறதோ, அதுபோல் ஐச்வர்யபதம் என்பதும் ப்ரஹ்மஸ்வரூபமாகவே இருந்து, லக்ஷணையினுல் ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று ஏன்சொல்லப்படவில்லை? அனுபவம் முதலானவைகள்போல், ஆத்ம ஸ்வரூபத்தில் அந்தர்கதமாக இருக்கின்ற ஐஸ்வர்யம் என்பது ஒன்று. ஆத்ம ஸம்பந்தத்தினுல்

மாயையில் ஏற்பட்ட ஐச்வர்யம் என்பது ஒன்று. இந்த இரண்டிற்கும் ஏற்பட்ட பரஸ்பர அத்யாஸத்தின் காரணமாக ஏற்பட்ட ஐஸ்வர்யம் ஒன்று இவ்விதம் மூன்றுவிதமான ஐச்வர்யத்தை தெரிவித்து, அதன் பிறகு லக்ஷணையினுல் ஐச்வர்யம் என்பது ஸ்வரூபம் என்று தெரிவிக்கலாமே? இவ்விதம் சொல்ல இஷ்டப்படாததற்கு காரணம் என்ன? ச்ருதிவாக்யங்களும் 'ஏஷஸர்வேச்வர:' என்று ஈச்வரத்வம் இருப்பதாகத்தான் தெரிவிக்கின்றது. அதனுல் ஈச்வரசப்தமும் ஸ்வரூபத்தின் லக்ஷணத்தையே தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும் என்று ஆக்ஷேபிக்கின்றவர்களின் வாயை அடக்குவதற்காக, மேலே, பலகாரணங்களைக் கொண்டு, ஈச்வரசப்தம் ஸ்வரூபத்தை போதிக்கமுடியாது என்பதை விளக்கப்படுகிறது.

**193. அவதாரிகை :**

காரணம் என்ன? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

ऐश्वर्यवर्णनमतिस्फुटमेव कृत्वा नेतीत्यवादि बहुशः श्रुतिभिः प्रयत्नत् ।
सत्यादिवस्तुनि पुनर्न तथाऽस्ति पूर्वमुक्त्वा निषेधनमितीह विशेषयुक्तिः ॥

**ச்லோகார்த்தம் :** ச்ருதிவாக்யங்கள், ஐச்வர்யத்தை ஸ்பஷ்ட்டமாக தெரிவித்தபிறகு, நேதி 'முதலான வாக்யங்களினுல், பலவிதமாக முழு முயற்சியுடன் நிஷேதம் செய்கின்றது. ஆனுல், அதுபோல் ஸத்யாதிகளை முதலில் தெரிவித்து, பிறகு அதை நிஷேதம் செயப்பட வில்லையென்ற விசேஷம் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஸர்வஸ்யவசீ, ஸர்வஸ்யஈசான : என்று வசித்வம் முதலானவைகளும், 'ய:ப்ருதிவ்யாம் திஷ்ட்டன்' என்றும் 'ஏவமேவ அஸ்மின் ஆத்மனி ஸர்வாணி பூதானி' என்றும் பலவிதமாக, ஜகத் வ்யவகார ஆச்ரயத்வேன ஆங்காங்கே, சைதன்யஸ்வரூபத்தில் ஐச்வர்ய வர்ணனம் செய்யப்பட்டிருக்கின்றது. அதாவது, ஸர்வமும் ஈச்வரனுடைய வசமாக இருக்கிறதென்றும், ஸர்வத்திற்கும் ஈச்வரன் என்றும், ஸர்வத்திலும் ஈச்வரஸ்வரூபமே வ்யாபித்திருக்கிறதென்றும், ஸர்வப்ரபஞ்சமும் ஆத்மாவில் ஆரோபிதம் என்றும், ஸர்வ அதிஷ்ட்டான ஸ்வரூபமென்றும், இந்தவிதம் ஜகத் ஆச்ரயத்வம் என்பதும் ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படுகிறது. இவ்விதம் பலவாக்யங்களினுல் ஐச்வர்யத்வம் இருப்பதாக அறியப்பட்ட போதிலும், இந்த வாக்யங்களுக்குப் பிறகு 'ஸஏஷஆத்மா நேதி நேதி' என்றும், ஏதஸ்மின் கல்வக்ஷரே கார்க்கி ஆகாச: ஒதச்ச ப்ரோதச்ச' என்று தெரிவித்து, அதன்பின், அஸ்தூலம், அனனு, என்பது, முதலானவாக்யங்களினுல் நிஷேதம் செய்து, 'அதோ அன்யதார்த்தம்' என்றும் தெரிவிக்கின்றது. அதாவது ஸத்யத்வாதிவாக்யங்களைப்போலவே, ஐச்வர்யம் முதலானவைகளையும் ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது என்பது உண்மையே என்றுலும், அஸ்தூலம், அனனு என்பது போன்ற வாக்யங்களில் அபூர்வம் அனபரம் என்றும் தெரிவித்து, ஐச்வர்யாதிகளை நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது. ஐச்வர்யம் முதலானவைகள் ப்ரஹ்மஸ்வரூபமாக இருக்குமானுல், இவைகளை நிஷேதம் செய்யமுடியாது. ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு வேருக இருப்பதெல்லாம் அநித்யம் என்றே தெரிவிக்கின்றது. இதுபோல், ஸத்யாதிசப்தங்களால் சொல்லப்படுபவைகளை ப்ரதிஷேதம் செய்யப்படவில்லை. ஆனுல் ஐச்வர்யாதிகள் எதில் இருக்கிறதென்று சொல்லப்பட்டதோ, அதிலேயே இல்லையென்று ஐச்வர்யாதிகள் நிஷேதம் செய்யப்படுவதால், அவையெல்லாம் ஸ்துத்யர்த்தம் என்றே அறிய வேண்டும். ஏனெனில், ப்ரஹதாரண்யக ச்ருதிவாக்யம் போலவே, சாந்தோக்ய ச்ருதிவாக்யங்களும், 'ஸத்' வஸ்துவிலிருந்தே எல்லாம் உண்டாயிற்று என்று தெரிவித்து, கடைசியில் 'ஐததாத்ம்யம் இதம் ஸர்வம், தத்ஸர்வம்

ஸ: ஆத்மா' என்று, ஆத்மா ஒன்றே ஸத்யம் என்று தெரிவித்து, ஸர்வத்தையும் நிஷேதம் செய்து, கேவல ஸ்வரூபத்தைமாத்ரம் போதிக்கின்றது. இதேபோல் தைத்ரீயச்ருதி வாக்யத்திலும், 'ஸச்சத்யச்சாபவதி, நிருக்தஞ்ச அநிருக்தஞ்ச, நிலயனம்ச அநிலயனம்ச, விஞ்ஞானம்ச அவிஞ்ஞானம்ச ஸத்யம்ச அந்ருதம்ச ஸத்யமபவத் யதிதம் கிஞ்ச' என்று ஸர்வாத்மத்வேன ஐச்வர்யாதிகளை போதித்து அதன்பிறகு 'யதாஹ்யேஷ ஏதஸ்மின் அத்ருச்யே, அனாத்ம்யே அநிருக்தே அநிலயனே அபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே' என்று மறுபடி அவைகளையெல்லாம் ப்ரதிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது. இதே போன்று ஸர்வசாகைகளிலுமுள்ள உபநிஷத் வாக்யங்கள் எல்லாம், முன்னால் சொல்லப்பட்ட ஐச்வர்யாதிகளை பின்னால் நிஷேதம் செய்கின்றதால், ஐச்வர்யாதிகளை ஸ்வாபாவிகம் என்று சொல்லமுடியாது. இதுபோல் ஸத்யத்வாதிகள் நிஷேதம் செய்யப்படாததால் ப்ரஹ்மஸ்வரூபம் என்றே சொல்லப்படுகிறது. ஆகவே, ஐச்வர்யாதிகள் அர்த்தவாதம் என்றே அறியவேண்டும்.

**194. அவதாரிகை :**

ப்ரஹ்மமென்பது, ஸர்வபதங்களினால் லக்ஷணையாகவே அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால், ப்ரஹ்மமென்பது சப்தத்தினால் அறியப்படுகிறது என்று எப்படிச்சொல்லமுடியும்? அதனால் ப்ரஹ்மமானது, உபநிஷத் ப்ரதிபாத்யம் என்று சொல்வது முன்னுக்குப்பின் முரண்பாடாக இருக்கின்றதே? என்றால், அவ்விதம் முரண்பாடு ஏதுமில்லை. லக்ஷணையினால் அறியப்படுகிறது என்று சொல்லப்படுவதற்கும் உபநிஷத்ப்ரதிபாத்யம் என்று சொல்லப்படுவதற்கும் விரோதம் ஏதுமில்லை.

**ச்லோகம் :**

शब्दस्य लाक्षणिकमुख्यविभागभिन्ना वृत्तिर्हि लौकिकवचस्युपलब्धपुर्वा ।
यस्मादतो न घटते यदि मुख्यवृत्तिराश्रीयतामिह गिरश्वरमाऽपि वृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்திற்கு, முக்யவ்ருத்தியென்றும், லக்ஷணாவ்ருத்தியென்றும் இரண்டு வ்ருத்திகள் இருக்கின்றதென்பது லௌகீக வாக்யங்களினாலேயே அறியப்பட்ட விஷயந்தான். எந்த இடத்தில் முக்யவ்ருத்தி பொருந்தவில்லையோ, அந்த இடத்தில் லக்ஷணாவ்ருத்தியைக் கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரை 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்களுக்கும் ஸத்யம், ஞானம் அனந்தம், ஆனந்தம் முதலான பதங்களுக்கும், லக்ஷணையினால், அகண்டார்த்தம் ஸம்பவிக்கின்றது என்று சித்தம் செய்யப்பட்டது. இப்போது, இவ்விதவாக்யங்களுக்கு லக்ஷணையினால் அர்த்தம் செய்யப்படுமானால், வாக்யத்தின் நேரிடையான அர்த்தத்தைவிட்டு, வேறு அர்த்தம் கல்பிக்கப்படுகிறது என்பதால் 'ச்ருதஹானி, அச்ருத கல்பனம்' என்ற தோஷம் ஸம்பவிக்கின்றதே? என்றால்,

**சித்தா :** எந்த வாக்யத்தில் முக்யார்த்தம் ஸம்பவிக்கவில்லையோ, அந்த இடத்தில் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது என்பது லோகத்திலும் ப்ரசித்தமாகவே இருக்கிறது. அதேபோல், உபநிஷத் வாக்யங்களிலும், முக்யார்த்தம் ஸம்பவிக்காவிடில், லக்ஷணையினால் அர்த்தம் செய்யப்படுகிறது. இதில் எந்தவிதமான தோஷமும் கிடையாது. ஆகையால் 'தத்வமஸி' போன்ற மஹாவாக்யங்களில், லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது. இவ்விதம் லக்ஷணையினால் போதிக்கப்படுவதற்காக ப்ரஹ்மமென்பது சப்தத்தினால் போதிக்கப்படவில்லை என்று சொல்லப்படுவது சரியல்ல.

**195. அவதாரிகை :**

**பூர்வ :** அவித்தையினால் தான், பதங்களின் அர்த்தம் கிடைக்கின்றது. லக்ஷணை என்பதால் பதார்த்தம் கிடைக்கமுடியாது. ஏனெனில், லக்ஷணையினால் எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ, அந்த அர்த்தம்

பதங்களின் நேரிடையான அர்த்தம் என்று சொல்லமுடியாது. ஆகையால், ஏதோ ஒருபதம் அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்பட்டாலும்கூட, வாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படமுடியாது.

இந்த ஆக்ஷேபமும் சரியல்ல என்று தெரிவித்து, இந்த விசாரத்தை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :** तस्मादखण्डमवबोधयितुं समर्थो वेदान्तभूमिगतशब्दसमन्वयोऽतः ।
संसर्गलक्षणमपास्य विरोधहेतोर्वाक्यार्थमद्वयमखण्डमिहाश्रयस्व ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால், வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்ற பதங்கள், அகண்டார்த்தத்தை போதிப்பதில் சாமர்த்யம் உடையதாகவே இருக்கின்றது. (வாச்யார்த்தத்தில்) ஏற்படும் விரோதத்தினால் ஸம்ஸர்க்கமான அர்த்தத்தை விட்டுவிட்டு அத்வயமான அகண் டார்த்தத்தையே வாக்யார்த்தமாக ஒத்துக்கொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** வாக்யத்திலிருந்து அபிதையினால்தான் அர்த்தபோதம் ஏற்படுமென்றும், லக்ஷணையினால் அர்த்தபோதம் ஏற்படமுடியாது என்ற ஆக்ஷேபம் சரியல்ல. அதேபோல், ஏகபதலக்ஷணை என்பதும் ஸம்பவிக்கமுடியாது என்றும், தத்வமஸ்யாதி வாக்யங்கள் அகண்டார்த்தத்தை போதிப்பதில் சாமர்த்யமுடையது என்றும், ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற வாக்யங்களும் அகண்டார்த்தத்தை பாகத்யாகலக்ஷணையைக் கொண்டு போதிக்கின்றது என்று மிகவும் விஸ்தாரமாக முன்பே விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், வாக்யத்தில் அறியப்படும் விருத்தமான அம்ஸங்களைவிட்டு அவிருத்தமான அம்ஸத்தில்தான் லக்ஷணை சொல்லப்படுகிறது. அதனால் எல்லாபதங்களிலும் லக்ஷணையை ஒத்துக்கொள்ளவேண்டும். லோகவிவகாரத்திலும், 'விஷம்புங்க்த்வா' என்ற வாக்யத்தின் முக்யார்த்தத்தை விட்டு, சத்ருக்ருஹத்தில் போஜனம் செய்யாதே என்று எப்படி லக்ஷணையினால் அர்த்தம் செய்யப்படுகிறதோ, அதுபோல் எந்த இடத்தில் முக்யார்த்தம் பொருந்தவில்லையோ, அந்த இடத்தில் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்வது என்பது லோகப்ரசித்தமாகவே இருக்கின்றது. இதேபோல் வேத வாக்யங்களிலும், 'வாயுர்வை க்ஷேபிஷ்ட்டா' என்பது போன்ற அர்த்தவாதவாக்யங்களில் 'ப்ரஸஸ்த்தம்' என்று, எல்லாபதங்களுக்கும் சேர்த்து ஒரே அர்த்தத்தில் லக்ஷணை சொல்லப்படுகிறது. ஆகவே, இந்த முறையில் வாக்யங்களுக்கு வ்ருத்தியினால்தான் அர்த்தம் அறியப்படவேண்டும். ஆனால், அந்தவ்ருத்தி அபிதையாகத்தான் இருக்கவேண்டு மென்றோ, லக்ஷணாவ்ருத்தியாக இருக்ககூடாது என்றோ சொல்வதற்குமுடியாது. ஆகவே, வாக்யத்திலிருந்து அபிதையினாலோ, லக்ஷணையினாலோ அர்த்தபோதம் ஏற்படுகிறது என்பதை ஒத்துக் கொள்ளத்தான்வேண்டும். இதுவே சரியான முறை என்பதால், ஸத்யாதி பதங்களும் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்பது சித்தம். ஆகவே, வேதாந்த வாக்யத்திற்கு ஸம்ஸர்க்கரூபேணஅன்வயம் சொல்வதற்குமுடியாது என்றாலும், 'தத்வமஸி' வாக்யத்திலுள்ள 'தத்' என்ற பதமானது 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்பதிலுள்ள ப்ரஹ்மஸ்தானீய மாகவே இருக்கின்றது. முதலில் தத்பதம், ப்ரஹ்மத்தை பாரோக்ஷ்யமாகவே அறிவித்த போதிலும், லக்ஷணையைக்கொண்டு பாரோக்ஷ்யம் என்ற தன்மையைவிட்டு அகண்டசை தன்யத்தை லக்ஷணையினால் போதிக்கின்றது. இதேபோல், 'த்வம்' பதமென்பதும் 'அயமாத் மாப்ரஹ்ம' என்பதிலுள்ள ஆத்மஸ்தானீயமான, ஸ்த்விதீயமான ஆத்மாவையே வாச்யார்த்தமாக போதிக்கின்றது, அதன்பிறகு ப்ரத்யக்சைதன்யத்தை லக்ஷணையினால் போதிக்கின்றது.

இந்தவிதம் 'தத், த்வம் என்ற இரண்டு பதங்களின் ஸ்வரூபம் சின்மாத்ரம் ஏகரூபம் என்று வாக்யத்திலிருந்து அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தபேதம் ஏற்படுகிறது. ஆகவே, வாக்யத்திலிருந்து ஸம்ஸர்க்கமின்றியே வாக்யார்த்தபோதம் ஏற்படலாம் என்பதில் ஆக்ஷேபத்திற்கே இடமில்லை.

**196. அவதாரிகை :**

வாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் எப்படி ஏற்படுகிறது? என்ற க்ரமத்தை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सामानाधिकरण्यमत्र भवति प्राथम्यभागन्वयः पश्चादेष विशेषणेतरतया पश्चाद्विरोधोद्भवः ।
उत्पन्ने च विरोध एकरसके वस्तुन्यखण्डात्मके वृत्तिर्लक्षणया भवत्ययमिह ज्ञेयः क्रमः सूरिभिः ॥

**ச்லோகார்த்தம் :** முதலில் 'தத்வமஸி' என்ற வாக்யத்தில் தத், த்வம் பதங்களுக்கு ஸாமானாதி கரண்யம் அறியப்படுகிறது. அதன்பிறகு அவைகளுக்கு விசேஷ்ய விசேஷணபாவ அன்வயம் அறியப்படுகிறது. அதன்பின் அவைகளுக்கிடையில் விரோதம் ஏற்படுகிறது. அதன்பின் ஏகரஸமாகவும் அகண்டமாகவும் இருக்கின்றவஸ்து லக்ஷணை வ்ருத்தியினால் அறியப்படுகிறது என்ற இந்தக்ரமம் அறிவாளிகளால் அறிந்து கொள்ளப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது என்ற விஷயம், மிகுந்த பாண்டித்யமுடையவனாக இருந்தாலும், அறிந்துகொள்வதென்பது சுலபமல்ல. பதார்த்தங்கள் என்னவென்று அறிந்திருந்தாலும்கூட, வாக்யத்திலிருந்து அகண்டார்த்தம் எப்படி ஏற்படுகிறது? என்ற விஷயம் அறியப்படாததால், வாக்யம் எந்த க்ரமத்தில் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

ஒருவாக்யத்திலுள்ள அனேகபதங்கள் சேர்ந்து, ஒரே அர்த்தத்தை தெரிவிக்குமானால், அதற்கு ஸாமானாதி கரண்யம் என்றுபெயர். வாக்யத்திலுள்ள ஒவ்வொருபதமும் வெவ்வேறான அர்த்தங்களை தெரிவிக்குமானால் அதற்கு வையதிகரண்யம் என்றுபெயர். உதாரணமாக 'நீலம், மஹத், சுகந்தி, உத்பலம்' என்ற வாக்யத்திலுள்ள பதங்கள் ஏகவிபக்தி, ஏகவசனம், ஏகலிங்கத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இதேபோல் 'தத்வமஸி' என்ற வாக்யத்திலுள்ள 'தத், த்வம்' என்ற இரண்டுபதங்களும் ஏகவிபக்தி, ஏகவசனம், ஏகலிங்கத்தில் ப்ரயோகம் செய்யப்படுகிறது. அதனால் இந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு ஸாமானாதி கரண்யம் இருக்கின்றது என்பது முதலில் அறியப்படுகிறது. அதன்பிறகு, நீலமாக இருப்பதே உத்பலம், உத்பலமாக இருப்பதே நீலம் என்று பதங்களுக்கு அன்வயம் விசேஷ்ய விசேஷண பாவேன ஏற்படுகிறது. இதேபோல் தத்வமஸி வாக்யத்திலுள்ள 'தத், த்வம்' என்ற இரண்டு பதங்களுக்கும் விசேஷ்ய விசேஷணபாவேன அன்வயம் ஏற்படுகிறது. இவ்விதம் அறியப்படுகின்றபோது, நீலம் உத்பலம் என்பதில், உத்பலம் நீலமாக இருக்கலாம். நீலம் உத்பலமாக இருக்கலாம் என்று இந்த வாக்யத்தில் விசேஷண விசேஷ்யபாவம் பொருந்துகிறது. அதில் விரோதம் ஏதும் ஏற்படவில்லை. ஆனால் 'தத்' என்பதே 'த்வம்' என்றும், 'த்வம்' என்பதே 'தத்' என்றும் விசேஷண விசேஷ்யபாவம் சொல்வதற்கு முடியாமல் விரோதம் அறியப்படுகிறது. அதுமட்டுமல்ல, உத்பலம் என்பது த்ரவ்யம், நீலம் என்பது குணமாக இருக்கின்றதால், நீலகுணவிசிஷ்டம் என்று

லக்ஷணையினால் உத்பலத்துடன் அன்வயம் சொல்லமுடியும். உத்பல பதத்திற்கு லக்ஷணை தேவையில்லை. ஆனால் அதுபோல், தத், த்வம் என்ற வாக்யத்தில் ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லமுடியாது. ஆகையால் 'தத் த்வம்' என்ற இரண்டு பதங்களும் ஸம்ஸர்க்கமான அர்த்தத்தை தெரிவிக்கின்றபோது, விரோதம் அறியப்படுகிறது. அதனால் இரண்டு பதங்களுக்கும் விசேஷண விசேஷ்யபாவேன அன்வயம் ஏற்படமுடியாது என்பதால், இரண்டு பதங்களுக்கும் லக்ஷ்ய, லக்ஷணபாவேன அகண்டார்த்த அன்வயம் ஏற்படுகிறது என்பதால், இந்தமுறையில்தான் வாக்யத்திலிருந்து அகண்டார்த்த போதம் ஏற்படுகிறது என்று அறியவேண்டும்.

**197. அவதாரிகை :**

இந்தவிதம், ஸாமானாதிகரண்யமென்றும், விசேஷண விசேஷ்ய பாவமென்றும், லக்ஷ்யலக்ஷண பாவமென்றும், மூன்றுவிதமான ஸம்பந்தம் சொல்லப்பட்டது. இந்த ஸம்பந்தம் மூன்றும், பதங்களுக்கு சொல்லப்படுகிறதா? அல்லது பதார்த்தத்திற்கு சொல்லப்படுகிறதா? அல்லது வேறு எந்த முறையில் சொல்லப்படுகிறது என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. இந்த ஸந்தேகத்தை நிவர்த்திக்கும் பொருட்டு, மூன்றுவிதமான ஸம்பந்தங்களும், மூன்றுவித நிலைகளில் (அவஸ்த்தா விசேஷம்) சொல்லப்படுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सामानाधिकरण्यमत्र पदयोर्ज्ञेयस्तदीयार्थयोः संबन्धस्तु विशेषणतरतया ताभ्यां सहास्यात्मनः ।
संबन्धोऽप्यथ लक्ष्यलक्षणतया विज्ञेय एवं बुधैरेतान्यर्थपदानि बुद्धिपदवीमारोहणीयानि तु ॥

**ச்லோகார்த்தம் :** இந்த இடத்தில் 'தத்–த்வம்' பதங்களுக்கு ஸாமானாதி கரண்யமும், பதார்த்தங்களுக்கு விசேஷ்ய விசேஷணபாவமும், அவைகளுடன் ஆத்மாவிற்கு லக்ஷ்யலக்ஷண பாவஸம்பந்தமும் இருக்கின்றதென்று அறியப்பட வேண்டும். இந்த அர்த்தக்ரமம், அறிவாளிகளின் புத்தியினால் க்ரஹிக்கப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** ஸாமானாதி கரண்யம் என்றும், விசேஷண விசேஷ்ய பாவமென்றும், லக்ஷ்யலக்ஷணபாவமென்றும் சொல்லப்படும் இந்த மூன்றுவிதமான ஸம்பந்தமும் சப்தத்திற்கா? அல்லது சப்தார்த்தத்திற்கா? அல்லது சப்தம், அதன் அர்த்தம் இரண்டிற்கும் சொல்லப்படுகிறதா? என்று அறிய விருப்பம் ஏற்படுகிறது.

அதற்கு, மேலே பதில் சொல்லப்படுகிறது.

ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள் ஒரேவிபக்தியில் இருந்து, ஒரே அர்த்தத்தை தெரிவிக்குமானால், அந்த பதங்களுக்கே ஸாமானாதி கரண்ய ஸம்பந்தம் சொல்லப்படுகிறது. 'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள தத், த்வம் இரண்டு பதங்களுக்கும், இதேபோல், 'ஸத்யம் ஞானம், அனந்தம் என்ற பதங்களுக்கும், ஸாமானாதிகரண்ய ஸம்பந்தம் அறியப்படுகிறது. எல்லாபதங்களும் சேர்ந்து ஒரே அர்த்தத்தை தெரிவிக்கின்றதால், அந்த பதங்களுக்கு ஸாமானாதி கரண்ய ஸம்பந்தம் இருக்கின்ற தென்று அறியப்படுகிறது.

அதன்பிறகு, தத், த்வம்பதங்களுக்கு வாச்யார்த்தமாக எந்தஅர்த்தம் அறியப்படுகிறதோ அவைகளுக்கு விசேஷண விசேஷ்யபாவேன 'தத்' என்பதே 'த்வம்' என்றும், 'த்வம்' என்பதே 'தத்' என்றும் இந்த பதங்களுக்கு விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தம் அறியப்படுகிறது. அதாவது, விசேஷணம் என்பது எதில் இருக்கின்றதோ அந்த விசேஷ்யத்தை, மற்ற விசேஷ்யங்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. உதாரணமாக,

நீலம், மஹத், சுகந்தம், உத்பலம், என்பதில் முதல் மூன்று பதங்கள் விசேஷணங்கள். இந்த விசேஷணங்களால், விசேஷ்யமான உத்பலம் என்பது, மற்ற உத்பலங்களிலிருந்து, இந்த உத்பலத்தை வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. இதேபோல், விசேஷ்யம் என்பதும், இந்த விசேஷணங்கள் தன்னிடம் மட்டுமே இருக்கின்றதால், மற்றவைகளைக் காட்டிலும் தன் விசேஷணங்கள் வேறுபட்டது என்று தெரிவிக்கின்றது. இவ்விதமில்லையென்றால், விசேஷண விசேஷ்யபாவம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. இந்தவிதம் பதார்த்தங் களிலிருந்து விசேஷண விசேஷ்யபாவஸம்பந்தம் அறியப்படுகிறது. இந்த முறையில் மஹாவாக்யங்களுக்கு பதார்த்தங்களுக்கு விசேஷண விசேஷ்ய பாவஸம்பந்தம் அறியப்படுகின்றபோது, அவ்வித ஸம்பந்தம் சொல்லமுடியாமல் விரோதம் ஏற்படுகிறது. அதனால் வாக்யார்த்தம் என்ன? என்பதை லக்ஷ்யலக்ஷணஸம்பந்தத்தைக்கொண்டு அறியப்படுகிறது.

**பூர்வ :** இந்தவிதம் வாக்யார்த்தம க்ரமமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால், சப்தத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** 'தத், த்வம்' என்ற பதங்களினால் ஏற்படும் தாத்பர்யார்த்தத்தை அனுசரித்தே, இவ்விதம் லக்ஷணையினால் அர்த்தம் செய்யப்படுகிறது. அதனால் (ஔபநிஷதம்) உபநிஷத் ப்ரதிபாத்யம் என்று சொல்லப்படுவதற்கு ஹானிஏதுமில்லை. பதத்தினால் அறியப்படும் அர்த்தத்தில் அன்வயம் ஏற்படமுடியாமல் விரோதம் ஏற்படுவதாலேயே லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது.

இந்தவிதம், பதம், பதார்த்தம், ப்ரத்யகாத்மா என்ற மூன்றுக்கும், முறையே ஸாமானாதி கரண்யஸம்பந்தம் என்றும், பதார்த்தங்களுக்கு விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தம் என்றும், ப்ரத்யகாத்மாவிற்கு லக்ஷ்யலக்ஷணபாவ ஸம்பந்தமென்றும் நைஷ்ய கர்ம்யசித்தி என்ற க்ரந்தத்தில் ஸ்ரீசுரேச்வராசார்யராலும் சொல்லப்பட்டிருக்கின்றது. வாக்யார்த்தம் என்னவென்பதை அறிந்துகொள்வதற்கு இந்த மூன்றும் காரணமாக இருக்கிறது என்று புத்திமான்கள் அறிந்துகொள்ளவேண்டும். இதை மறக்கக்கூடாது.

**198. அவதாரிகை :**

லக்ஷணையினால் எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ, அந்த அர்த்தம், வாச்யார்த்த ஸம்பந்தமுடையதாக இருக்கவேண்டும். ஆகவே, எந்த வஸ்துவுடனும் ஸம்பந்தமற்ற நிர்விசேஷ ப்ரஹ்மமென்பது வாச்யார்த்த ஸம்பந்தமே இல்லாமல், எப்படி லக்ஷணையினால் போதிக்கப்படமுடியும்? அதற்காக சக்தி அர்த்தஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுமானால், சக்தி அர்த்தத்தினாலேயே ப்ரஹ்மம் போதிக்கப்படுகிறது என்று சொல்லலாமே?

எதற்காக, முதலில், ஸபளஸ்வரூபமே வாச்யார்த்தமாக அறியப்படுகிறது என்றும், அதன்பிறகு பாகத்யாகலக்ஷணையைக்கொண்டு 'சுத்தசைதன்யம்' போதிக்கப்படுகிறது என்று க்லேசகரமான ஸமாதானம் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன? இந்த ஆக்ஷேபத்திற்கு மேலேபதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :** नि:संधिबन्धनमिदं चिदचित्स्वरूपं संकीर्णमन्तरपरिस्फुरणेन शून्यम् ।
आ चित्तशुद्धिफलतः स्फुरितोपपत्तेः शब्दार्थसङ्गतिमिहैव तु गृह्णतेऽज्ञाः ॥

**ச்லோகார்த்தம் :** சிதசித் ஸ்வரூபம் என்பதற்கு மத்தியில் சிறிதளவும் பேதம் இருப்பதாக அறியமுடியாத நிலையில், இரண்டும் கலந்தே அறியப்படுகிறது. சித்த சுத்தியின்

பலனுக ஏற்படும் விசாரத்தின் மூலமாகவே, இரண்டு அம்ஸங்கள் இருப்பதாக அறியப்படுகிறது. அஞ்ஞநிலையில் ஸபளார்த்தமே க்ரஹிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** சப்தத்திலிருந்து முதலில் சிதசித் ஸ்வரூபமான ஸபளார்த்தம் தான், வாச்யார்த்தமாக அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். ஏனெனில், அஞ்ஞநிலையில், 'அஹம்' சப்தம் ஆத்மாவை குறிப்பிடுவதாகவே அறியப்படுகிறது. இந்த அஹம் சப்தார்த்தத்தில், அந்த:கரணம் என்ற ஜடாம்ஸமும், சைதன்யம் என்ற ஞானும்ஸமும் கலந்திருக்கின்றது என்ற விஷயம், அஞ்ஞநிலையில், யாராலும் அறிந்துகொள்ள முடியாது. ஆகவே, சித்தசுத்தியின் பலனுக விசாரம் செய்கின்றபோதே, சித்ஸ்வரூபம், ஜடமான அந்த:கரணம் என்ற இரண்டிற்கும் பரஸ்பர அத்யாஸம் ஏற்பட்டிருக்கின்ற காரணத்திஞல் இரண்டும் கலந்தே அறியப்படுகிறது என்பது அறியப்படுகிறது. ஆகவே, அவிவேக நிலையில் சப்தத்திலிருந்து வாச்யார்த்தமான ஸபளார்த்தம்தான் அறியப் படுகிறது. இந்த ஸபளஸ்வரூபத்தை, ஒருசிலர் குணகுணீபாவேன விவேகித்து அறிந்துகொள்ளலாமே? என்று சொல்கிருர்கள். இதுசரியல்ல. ஏனெனில், இதுகுணம், இது குணீ என்று பிரித்து அறியமுடியாமல் பரஸ்பர அத்யாஸம் இருப்பதால், குணகுணீ பாவேன விவேசனம் செய்து அறிந்து கொள்வதென்பது சுலபமல்ல. அதஞல் தான், ஹ்ருதயக்ரந்தி என்றே சொல்லப்படுகிறது. இந்த சித்ஜடக்ரந்தியென்பது அஞதியானதால், அதன்மூலகாரணமும் த்ருடமாக இருக்கின்றது என்பதால் சுலபமாக விவேகித்து அறியமுடியாது. ஆகவே, அஞ்ஞான அவஸ்த்தையில் ஸபளஸ்வரூபமே சப்தத்தின் சக்தி அர்த்தமாக அறியப் படுகிறது. கேவலசைதன்யஸ்வரூபம், சக்திஅர்த்தத்திஞல் க்ரஹிக்கப்படமுடியாது. எந்தசப்தம், எந்தஅர்த்தத்தில் ப்ரசித்தமாக இருக்கிறதோ அதையே அந்த சப்தார்த்தம் என்று சொல்லப்படவேண்டும்.

இதேபோல், ஆத்மசப்தம், ப்ரத்யக் ஸ்வரூபமான ஆத்மாவையே குறிப்பிடுகின்றது என்றே அறியவேண்டும்.

ஆகாசாதிகளில் எப்படி ஸத்யாதி பதங்கள் ப்ரயோகம் செய்யப்படுகிறதோ, அதுபோல் முதலில் ஸபளார்த்தமே அறியப்படுகிறது.

அதாவது, 'ஆகாசம்ஸத்யம்' என்று சொல்லப்படுகின்றபோது, ஆகாசம் என்பது ஸ்த்யசப்தத்திஞல் சொல்லப்படவில்லையென்றும், சைதன்யஸம்பந்தத்திஞல் ஆகாசம் ஸத்யமென்று சொல்லப்பட்டபோதிலும் ஸத்யசப்தம் சைதன்யத்தையே தெரிவிக்கிறது என்று அறியப்படுகிறது. ஆஞல் ஆகாசம் வேறு ஸத்யம் என்ற பதார்த்தம் வேறு என்று முதலில் விவேகம் ஏற்படுவதில்லை. அதஞல்தான், சப்தத்திற்கு முதலில் சபளார்த்தத்தில்தான் வ்யுத்பத்தி ஏற்படுகிறது என்பதை கிழேயும் விளக்கப்பட்டிருக்கிறது.

**199. அவதாரிகை :**

பதபதார்த்தங்களை விவேசனம் செய்து அறியப்பட்ட பிறகே, இந்த பதத்தில், சிதம்ஸம், அசிதம்ஸம் இரண்டும் கலந்திருக்கிறது. என்பதை அறியமுடியும். அதஞல் இவ்விதம் பதபதார்த்த விவேகம் ஏற்படுவதற்குமுன், பதார்த்தப்ரதீதீ (ஞானம்) ஏற்படுவதாகச்சொல்லமுடியாது. ஆகையால், ப்ரத்யகாத்மாவில் ஸத்யாதி சப்தங்களுக்கு சக்திக்ரஹம் என்பது, விவேசனத்திற்கு முன்பு ஏற்படமுடியாது. அதஞல் சபளார்த்தில்தான் சக்திக்ரஹம் என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

शब्दार्थसंगतिविदामथ सत्वशुद्धेरुत्पन्नतर्कदृढलोहशलाकया तु ।
दृश्यं दृशं च निपुणं द्वयमन्तरेण निक्षिप्तया दृगदृशोः क्रियते विभागः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்திற்கும் அர்த்தத்திற்குமுள்ள, ஸங்கதியை அறிகின்ற விவேகிகள், சித்தசுத்தியின் பலனுக ஏற்பட்ட 'ஸத்' தர்க்கம் என்ற உலோகசலாகையினுல், த்ருக்ஸ்வரூபம், த்ருச்யஸ்வரூபம் என்ற இரண்டிற்கும் மத்தியிலுள்ள வேறுபாடுகளை ஸாமர்த்யமாக அறிந்து, அவைகளை விவேசனம் செய்கின்றுர்கள்.

**வ்யாக்யானம் :** அனேக ஜன்மாவில் அனுஷ்டிக்கப்பட்ட ஸத்கர்மாவின் பலனுக, ஈச்வரானுக்ரஹம் ஏற்பட்டவர்களுக்கே சித்தசுத்தி ஏற்படுகிறது. இதன் காரணமாக யுக்தி என்ற சலாகையைக்கொண்டு, சித்திற்கும் ஜடத்திற்கும் மத்தியில் விசாரித்து இரண்டையும் பிரித்து இதுசித், இதுஜடம் என்று அறிவதற்குரிய சாமர்த்யம் ஏற்படுகிறது. இப்பேர்ப்பட்ட சூக்ஷ்மபுத்தியுடையவர்களுக்கே, ஸத்தர்க்கம் என்ற யுக்தியைக்கொண்டு, அஹங்காரம் முதலானவைகள், அதைத்தவிர வேருன ஒரு வஸ்துவினுல் ப்ரகாசப்படுத்தப்படவேண்டும் என்றும், ஏனெனில் ஜடமான கடாதிகள் போல், அஹங்காரம் என்பதும் அறியப்படுகின்றதால், அவைகள் ஸ்வயமே ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் ப்ரகாசக்ரியையில், கர்த்தா, கர்மா என்ற இரண்டும் ஒன்ருகவே இருக்கின்றது என்று கர்மகர்த்ருதோஷம் ஸம்பவிக்கின்றது. மேலும் அஹங்காரம் என்பதில் சுகம், துக்கம் என்ற இரண்டினுடைய அனுபவமும் ஏற்படுகிறது. துக்கானுபவம் என்பது இருக்கின்றதால், அதை கேவல ஸர்வப்ரேமாஸ்பதமான ப்ரத்யக்சைதன்யம் என்று சொல்லமுடியாது. அதேபோல், சுகானுபவம் இருக்கின்றதால் கேவல அஹங்காரம் என்றும் சொல்லமுடியாது. ஆகையால், அஹங்காரம் என்பதில் ஸர்வத்திற்கும் சாக்ஷியான சைதன்யாம்ஸம் ஒன்றும், ஜடாம்ஸம் ஒன்றும் கலந்திருக்கிறது என்று அறிந்து கொள்ளவதில் புத்திமான்கள் சாமர்த்யமுடையவர்களாக இருக்கின்றுர்கள். ஸர்வத்தையும், ப்ரகாசப்படுத்தக்கூடிய த்ருக் ஸ்வரூபமே த்ரஷ்ட்டா என்றும், ஸர்வ அவஸ்த்தாத்ரயங்களிலும் தொடர்ந்து இருக்கின்ற ஸ்வரூபம் எதுவோ, அதுவே நித்யம் ஏகஸ்வரூபம் என்றும், மற்ற ஸர்வமும் த்ருச்யம் என்றும் அறியப்படுகிறது. சுஷுப்தி அவஸ்த்தையில் புத்திவ்ருத்திக்கு நாசம் (லயம்) ஏற்படுவதாலும், மற்ற அவஸ்த்தைகளில் புத்திவ்ருத்தி அவ்வப்போது மாறுதலை அடைகின்றதாலும், இந்த அனுபவத்தைக்கொண்டும் ப்ரத்யகாத்மா த்ருக் ஸ்வரூபம் என்று அறியப்படுகிறது.

அஹங்காராதிகள் அவ்விதம் தொடர்ந்து இருப்பதில்லையென்றும் இவைகளுக்கெல்லாம் ப்ரகாசகமாக ஆத்ம ஸ்வரூபம் வேருக இருக்கின்றதென்பதை விவேகித்து அறிந்துகொள்ளப்படுகிறது. ஆகையால் அஞ்ஞர்களால் இவ்வித விவேசனம் செய்து அறிந்துகொள்ளமுடியாது என்பதால், ஸத்யாதி சப்தங்களுக்கு முதலில் சபளார்த்தத்தில் தான் சக்தி க்ரஹம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. சப்தார்த்தம் என்னவென்று அறிந்தபிறகே விவேசனம் செய்து அறிந்துகொள்ளமுடியும் என்பதால் பதங்கள் சபளார்த்தத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது

**200. அவதாரிகை :**

அஞ்ஞனுக இருக்கின்ற நிலையில் இது சபளார்த்தம் என்று அறியமுடியாது. அதனுல் அஞ்ஞனுக்கு சபளார்த்தத்தில் சக்தி க்ரஹம் ஏற்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்?

அஞ்ஞானவன் இரண்டும் ஒன்று என்றே அறிகிறான். ஆனால் அதன்பின் விசாரிக்கின்ற போதுதான் இதில் இரண்டு அம்ஸங்கள் கலந்திருக்கின்றது என்று அறிகிறான். அதனால் முதலில் சப்தமானது சபளார்த்ததையே தெரிவிக்கிறது என்று அறிந்துகொள்கிறான்.

**ச்லோகம் :**

शुद्ध्युत्थतर्कजनितं चिदचिद्विभागं प्राप्य स्थिताः पुनरिमां गिरमुद्गिरन्ति ।
सत्यादिशब्दगण एष तु तत्र तत्र व्युत्पत्तिमाञ्छबलवस्तुनि नो दृशीति ॥

**ச்லோகார்த்தம் :** ஸத்யாதி சப்தங்கள் முதலில் அந்தந்த சபளார்த்தத்தையே தெரிவிக்கின்றது என்றும் சுத்த சைதன்யமான ஆத்மஸ்வரூபத்தை தெரிவிப்பதில்லை என்றும் சித்த சுத்தியினால் ஏற்படும் ஸத்தர்க்கத்தினால், சிதசித் விபாகத்தை அறிந்த விவேகிகளினாலேயே சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸாமான்யமாக சாஸ்த்ரார்த்தங்களை விசாரித்து அறிவதற்கு முன், சபளார்த்தம்தான் இந்த ஸத்யாதி சப்தங்களால் அறியப்படுகிறது என்ற விஷயம் ஒருவராலும் அறிந்துகொள்ளமுடியாது. சித்தசுத்தி ஏற்பட்டதன் காரணமாக, எவர்கள் யுக்தியைக்கொண்டு சித், அசித் என்ற இரண்டு அம்ஸங்களும் கலந்தே அறியப்படு கிறது என்று விவேசனம் செய்து அறிந்துகொள்கிறார்களோ. அவர்களுக்கே சப்தசக்தி முதலில் சபளார்த்தத்தையே தெரிவிக்கின்றது என்றும் அதன்பிறகு பாகத்யாக லக்ஷணையினால் கேவல சைதன்யமே ஸத்யபதார்த்தம் என்றும் அறியப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை.

**201. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானால், ஒரே பதத்திற்கு ஸபளஸ்வரூபமும் அர்த்தம், சுத்தஸ்வரூபமும் அர்த்தம் என்று சொல்லப்பட்டதாகஆகிறது. இதனால் ஒரு பதத்திற்கு, அனேக அர்த்தத்தில் சக்தி கல்பனம் செய்யப்படுகிறது என்ற தோஷம் ஸம்பவிக்கின்றதே? என்றால் இவ்வித சங்கைக்கு இடமில்லை.

**ச்லோகம் :**

एकत्र शक्तिग्रहणेपपत्तावनेकक्लृप्तिः क्रियते किमर्थम् ।
सत्येतदेवं सति नास्ति चोद्यं पुराऽस्य पुंसः परमाविवेकात् ॥

**ச்லோகார்த்தம் :** ஒரே அர்த்தத்தில் சக்திக்ரஹம் ஸம்பவிக்கின்றபோது, அனேகார்த்தத்தில் சக்திக்ரஹம் என்ற கல்பனை எதற்காகச் செய்யப்படவேண்டும்? என்ற ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில் இது த்ருக், இது த்ருச்யம் என்ற விவேகம் முதலில் யாருக்கும் ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** ஸத்யாதி சப்தங்களுக்கு, த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவிலோ, த்ருச்யமான ஜடவஸ்துவிலோ, சக்திக்ரஹம் ஏற்படுகிறது என்று சொல்லாமல், ஒரு பதத்திற்கு அனேகார்த்தத்தில் சக்திக்ரஹம் இருப்பதாகச் சொல்லநேரிடும். அதனால் எந்த அர்த்தத்தில் சக்தி க்ரஹம் ஏற்படுகிறதோ, அதையே வாச்யார்த்தமாகச் சொல்லலாமே? அவ்விதமின்றி, சபளஸ்வரூபத்தில், த்ருக், த்ருச்யம் என்ற இரண்டு அம்ஸங்கள் இருக்கின்றதால், அதில் ஜஹல்லக்ஷணையைக்கொண்டு, த்ருச்யத்தை விட்டு விட்டு, த்ருக் ஸ்வரூபத்தை லக்ஷ்யார்த்தமாக சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன? ஆகவே, கேவல சித்ஸ்வரூபத்தில்தான், 'அஹம்' முதலான சப்தங்களுக்கு சக்திக்ரஹம் ஏற்படுவதாகவே

சொல்லவேண்டும். இல்லையானால் ஒரே பதத்திற்கு அனேக அர்த்தத்தில் சக்திக்ரஹம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. வாக்யத்திலுள்ள பதங்களுக்கு, பதார்த்த வ்யுத்பத்தி ஏற்படுவதற்கு முன்பு, இது த்ருக், இது த்ருச்யம் என்று இரண்டு அம்ஸங்கள் இருக்கின்றதென்றே அறியமுடியாது. அதனால் முதலில் சபளார்த்தத்தில் சக்தி க்ரஹம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதற்காக, அனேகார்த்தத்தில் சக்தி கல்பனம் பொருந்தாது என்று சொல்லமுடியாது. ஸத்யாதி சப்தத்தைக்கேட்டவுடன் ஒன்றாகவே அறியப்பட்டாலும், மித்யா பூதமான த்ருச்ய வஸ்துக்களில் ஸத்யபதம் முடிவை அடைய முடியாது. அதனால் த்ருக் ஸ்வரூபமான ஆத்மாவில்தான் ஸத்யாதி சப்தங்களுக்கு முடிவு ஏற்படுகின்றதால், அனேகார்த்தத்தில் சக்திக்ரஹம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது. அதுமட்டுமல்ல, பதங்களுக்கு சக்திக்ரஹம் ஏற்படுகின்றபோது, முதலில் வாச்யார்த்த மாகவும், அதன் பின் லக்ஷ்யார்த்தமாகவும் அறியப்படுகின்றது என்று சொல்லப்படுவதால், எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை.

**202. அவதாரிகை :**

சக்யஸம்பந்தமுள்ள வாச்யார்த்தமே சபளார்த்தம். இந்தசபளார்த்தத்தில் ஸம்பந்தப்பட்ட சைதன்யத்தில், பாகத்யாகலக்ஷணை சொல்லப்படுகிறதா? அல்லது வாச்யார்த்த ஸம்பந்த மில்லாத கேவல நிர்விசேஷ சைதன்யத்தில் பாகத்யாக லக்ஷணை சொல்லப்படுகிறதா? இவைகளில் எந்த முறையில் சொல்லப்பட்டாலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

अत्राऽऽह वाच्यशबलान्वितवस्तुनीयं तद्वर्त्मना भवति लाक्षणिकी प्रवृत्तिः ।
किं वा तदन्वितविलक्षणवस्तुनि स्याच्छब्दस्य नोभयमपि प्रतिभाति युक्तम् ॥

**ச்லோகார்த்தம் :** வாச்யார்த்தமான, ஸபளார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட வஸ்துவில் வாச்யார்த்தமூலமாக லக்ஷணை சொல்லப்படுகிறதா? அல்லது, வாச்யார்த்தத்தில் ஸம்பந்தப்படாத ஒரு வஸ்துவில் சப்தத்தின் லக்ஷணாவ்ருத்தி சொல்லப்படுகிறதா? இரண்டுமே பொருந்தாது என்று பூர்வ பக்ஷியினால் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாச்யார்த்தஸம்பந்தமுள்ள ஸபளார்த்தத்தில் ஸம்பந்தப்பட்ட சைதன்யத்திற்கு லக்ஷணை சொல்லப்படுகிறது என்று சொன்னாலும் சரி, அல்லது வாச்யார்த்த ஸம்பந்தமில்லாத கேவலசைதன்யத்திற்கு லக்ஷணை சொன்னாலும் சரி இரண்டிலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

**203. அவதாரிகை .**

இந்த விஷயத்தில் என்ன தோஷம் ஏற்படுகிறது என்றால்,

**ச்லோகம் :**

सम्बन्धिरूपं यदि वस्तुलक्ष्यमखण्डवाक्यार्थमतिः कुतस्त्या ।
अनन्वितं वस्तु पदार्थलक्ष्यं न लक्ष्यते कुत्रचिदत्र लोके ॥

**ச்லோகார்த்தம் :** வாச்யார்த்தஸம்பந்தமுள்ள வஸ்துவே லக்ஷ்யார்த்தமாகச் சொல்லப்படுகிறது என்றால், அகண்டார்த்தஜ்ஞானம் என்பது எப்படி ஏற்படமுடியும்? வாச்யார்த்த ஸம்பந்தமில்லாத வஸ்துவே லக்ஷ்யார்த்தமாக அறியப்படுகிறது என்பது லோகத்தில் எங்கும் அறியப்படவில்லை.

**வ்யாக்யானம் :** வாச்யார்த்த ஸம்பந்தமுள்ள சைதன்யத்தில்தான் லக்ஷணையினால் அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில், விசேஷண

விசேஷ்யபாவம் சொல்லப்படுமானால் அந்த இரண்டிற்கும் ஸம்பந்தம் அறியப்படுகிறது. அதனால் அகண்டார்த்தபோதம் ஏற்படாது. அதற்காக, வாச்யார்த்த ஸம்பந்தமில்லாத சைதன்யமே லக்ஷ்யார்த்தமாக அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால், லோகத்தில் சப்தத்திலிருந்து எந்தமுறையில் அர்த்தம் கிரஹிக்கப்படுகிறதோ அதற்கு மாறுபட்டமுறையில் அர்த்தம் செய்வது பொருந்தாது.

**204. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்ட தோஷங்கள் எதுவுமே ஸம்பவிக்கமுடியாது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

पूर्वक्षणे भवति वाच्यपदार्थभागभागित्वसंगतिरिहात्मनि निर्विभागे ।
मोहोपदर्शितवपुर्घटते ततोऽस्मिञ्छब्दस्य लाक्षणिकवृत्तिरदोषदुष्टा ॥

**ச்லோகார்த்தம் :** நிர்விபாகமான ஆத்மாவில், வாச்யார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் மத்தியில் இருக்கின்ற, பாக பாகித்வம் என்ற ஸம்பந்தம் என்பது, பூர்வக்ஷணத்தில் மித்யாரூபமாக இருக்கிறது என்று சொல்வது யுக்திக்கு பொருந்துகின்றது. ஆகையால், லக்ஷணாவ்ருத்தியினால், நிர்விபாகசைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவை, சப்தம் தெரிவிக்கின்றது என்று சொல்வதில் எவ்வித தோஷமும் கிடையாது.

**வ்யாக்யானம் :** நிர்விபாகமான கேவல ஆத்மசைதன்யத்திற்கு ஒரு போதும், பாகபாகித்வரூப ஸம்பந்தம் என்பது வாஸ்தவமாகக்கிடையாது. ஆனால், லக்ஷணையினால் அகண்டார்த்தபோதம் ஏற்படுவதற்கு முன்னால், ஸம்பந்தம் இருப்பதாக அறியப்பட்ட போதிலும், அந்த ஸம்பந்தம் அவித்யையினால் ஏற்பட்ட ஸம்பந்தம். அதனால் இந்த ஆத்யாஸிகஸம்பந்தத்தை விட்டு லக்ஷணையினால் லக்ஷ்யார்த்தம் போதிக்கப்படுகிறது என்று சொல்லலாம். எப்படி சுக்தியில் தோன்றும் ரஜதத்திற்கும், சுக்திக்கும் உண்மையில் ஸம்பந்தம் இல்லையென்றாலும் ஆத்யாஸிகஸம்பந்தம் இருக்கின்றதோ அதுபோல் இந்த இடத்திலும் ஸம்பந்தம் இருக்கிறது. சுக்தி என்று அறியாமல், சுக்தியை ரஜதம் என்று அறியப்படுகின்றபோது, 'இது ரஜதம்' என்று அறியப்பட்டபோதிலும் பின்னால் அந்தரஜதமும் அதன் ஸம்பந்தம் எல்லாமே பாதிக்கப்படுகின்றபோது, 'இது சுக்தி தான்' என்று எப்படி அறியப்படுகிறதோ, அதுபோல், ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் உண்மையான ஸம்பந்தம்கிடையாது. ஆனால் மித்யாஸம்பந்தத்தினால் வாச்யார்த்தத்துடன் சேர்ந்து அறியப்பட்டபோதிலும், லக்ஷணையினால் வாக்யார்த்தபோதம் ஏற்படுகின்றபோது இந்த ஸம்பந்தம் விஷயமாகாது. ஸம்பந்தம் என்பது வாக்யார்த்தத்தில் விஷயமானால்தான் அகண்டார்த்தத்திற்கு ஹானி ஏற்படும். சக்யார்த்த ஸம்பந்தம் லக்ஷணைக்கு இருக்க வேண்டுமென்று சொல்லப்படுவது சரியே. ஆனால் அந்த ஸம்பந்தம் வாஸ்தவமாக இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை. ஸம்பந்தம் ஸத்யமாக இருந்தால்தான் லக்ஷணையினால் அகண்டார்த்தபோதம் ஏற்படும் என்று சொல்வது கௌரவதோஷம். ஆகையால் உண்மையில் எவ்வித ஸம்பந்தமும் அற்ற அகண்டார்த்தம், லக்ஷணையினால் போதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இதில் எவ்விததோஷமும் கிடையாது.

**205. அவதாரிகை :**

ஸம்பந்தம் என்பது மித்யாபூதமாக இருந்தாலும், லக்ஷ்யார்த்தத்துடன் ஸம்பந்தம் இருந்தால்தானே லக்ஷணையினால் அர்த்தம் போதிக்கமுடியும்? இவ்விதம் ஸம்பந்தமிருக்கு மானால் அகண்டார்த்தம் எப்படி ஏற்படமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

संबन्धिता भवति लाक्षणिकप्रवृत्तेः सर्वत्र कारणमितीदमभीष्टमेव ।
संबन्धिताकरणमेव तु लाक्षणिक्या बुद्धेरनिष्टमिह तद्व्यभिचारदृष्टेः ॥

**ச்லோகார்த்தம் :** எல்லாஇடங்களிலும் லக்ஷணவ்ருத்திக்கு வாச்யார்த்தத்துடன் ஸம்பந்தம் இருக்கவேண்டுமென்பது எங்களுக்கும் இஷ்ட்டடம்தான். ஆனால் லக்ஷணவ்ருத்தியினால் ஏற்படும் ஞானத்திலும் (வாச்யார்த்தம்) ஸம்பந்தம் இருக்கவேண்டுமென்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளமுடியாது. ஏனெனில், இதற்குவ்யபிசாரம் இருக்கிறது.

**வ்யாக்யானம் :** லக்ஷயமான ப்ரத்யகாத்மாவிற்கு முக்யார்த்தத்துடன் ஸம்பந்தம் என்பது வாஸ்தவமாக இருந்தாலும் சரி, அல்லது கல்பித ஸம்பந்தம் என்றாலும்சரி, எந்தவிதமான ஸம்பந்தமாக இருந்தாலும், வாக்யார்த்தபோதம் ஏற்படுகின்றபோது, இந்த ஸம்பந்தத்துடன் அறியப்படுமானால், அதை எப்படி அகண்டார்த்தபோதம் என்று சொல்லமுடியும்?

**சித்தா :** லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் சொல்லப்படும் இடத்தில், சக்யார்த்த ஸம்பந்தம் இருக்கவேண்டுமென்பதை எங்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் எந்த இடமாக இருந்தாலும் இவ்விதமே சொல்லவேண்டும் என்ற நியமம் சொல்ல முடியாது. (இதில் வ்யபிசாரம் ஏற்படுகிறது). ஸம்பந்தம் என்பது விசிஷ்ட்டமாக இருந்தால் தான், ஒரு அர்த்தத்தை போதிக்கமுடியும் என்று சொல்லமுடியாது. ஸம்பந்தம் என்பது உபலக்ஷணமாக இருந்தும் அர்த்தத்தைபோதிக்கலாம். அதாவது, முக்யார்த்த ஸம்பந்தம் உபலக்ஷணமாக இருந்து, உபலக்ஷிதமான லக்ஷ்யார்த்தத்தை போதிக்கலாம். ஏனெனில், அந்த ஸம்பந்தம் என்பது அஞ்ஞானத்தினால் ஏற்பட்டதாக இருக்கின்றதால், வாக்யார்த்த போதம் ஏற்படும் க்ஷணம் வரையில் ஸம்பந்தம் இருந்தபோதிலும், வாக்யார்த்தபோதம் ஏற்பட்ட க்ஷணத்திலேயே, அஞ்ஞானம், அதனால் ஏற்பட்ட ஸம்பந்தம் இரண்டுமே நாசத்தை அடைகின்றது. அதனால் அவசிஷ்ட்டமான அகண்டஸ்வரூபம் ஒன்றே வாக்யார்த்தமாக சித்திக்கின்றது. ஆகையால் இதில் எவ்விததோஷத்திற்கும் இடமில்லை.

**பூர்வ :** 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யப்ரயோகம் செய்யுமிடத்தில் லக்ஷணையாக 'தீரம்' என்ற அர்த்தம் போதிக்கப்படுகின்றபோது, வாச்யார்த்தமான கங்கையுடன் ஸம்பந்தப்பட்ட கரை என்பதே அறியப்படுகிறது. ஆகவே, சீதத்வம், பாவனத்வம் முதலானவைகளும் சேர்ந்தே அறியப்படுகிறது. அதுபோல, இந்த இடத்திலும் ஸம்பந்தம் அறியப்படுவதாகவே சொல்லவேண்டும். அதனால் ஸம்பந்தம் என்பது விசேஷணமில்லை, என்றும் உபலக்ஷணம் என்றும் எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** லக்ஷணை சொல்லப்படும் இடங்களில் எல்லாம், ஸம்பந்தம் என்பது விசிஷ்ட்டமாகத்தான் இருக்கின்றது என்று சொல்வதற்குமுடியாது. உதாரணமாக, 'ஸோSயம் தேவதத்த:' என்ற வாக்யத்தில் லக்ஷணை சொல்லப்படுகின்றபோது, அந்த தேசம், அந்தகாலம் என்பதும், இந்ததேசம், இந்தகாலம் என்பதும் அவைகளின் ஸம்பந்தம் என்பதும் எதுவுமே அறியப்படுவதில்லை. 'ஸ:' என்று சொல்கின்றபோது, தேச காலங்கள் அறியப்பட்டபோதிலும், 'அயம்' என்று சொல்கின்றபோது தேசகாலங்கள் அறியப்படுவதில்லை. கேவலவ்யக்திமாத்ர போதமே ஏற்படுகிறது. ஆகவே, ஸம்பந்தம் விசிஷ்ட்டமாக இருக்கவேண்டுமென்ற நியமமில்லை

**206. அவதாரிகை :**

மேலும் ஸம்பந்தம் என்பது விசிஷ்டமாகத்தான் இருக்கவேண்டும் என்று சொல்லப்படுமானுல், அதில் வ்யபிசாரம் ஏற்படுகிறது என்பதை உதாகரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** यत्रैष काक इदमेव तु देवदत्तवेश्मेति लाक्षणिकवृत्तिरिहाभ्युपेता ।
काकास्पदत्वमवधीर्य तथाऽपि वेश्ममात्राकृतिर्भवति लाक्षणिकी तु बुद्धिः ॥

**ச்லோகார்த்தம் :** 'காகம் எந்த இடத்தில் உட்கார்த்திருக்கிறதோ அதுவே தேவதத்தனுடைய க்ருஹம்' என்று சொல்லப்படும் வாக்யத்தில் லக்ஷணுவ்ருத்தி ஒப்புக் கொள்ளப்படுகிறது. இந்த இடத்தில் காகாஸ்பதமாக க்ருஹம் அறியப்பட்டபோதிலும், லக்ஷணுவ்ருத்தியினுல் க்ருஹம்மட்டுமே அறியப்படுகிறது. (லக்ஷணுவ்ருத்தி ஞானம், க்ருஹத்தை மட்டுமே க்ரஹிக்கின்றது).

**வ்யாக்யானம் :** லக்ஷணை சொல்லப்படும் இடங்களில் எல்லாம், சக்யார்த்த ஸம்பந்தம் விசிஷ்டமாகத்தான் இருக்கின்றது என்ற நியமம் கிடையாது என்பதால், வ்யபிசாரம் ஸம்பவிக்கின்றது. ஸம்பந்தம் என்பது உபலக்ஷணமாகவும் இருக்கலாம். உதாரணமாக, தேவதத்தனுடைய க்ருஹம் எது? என்று அறியவிரும்புகின்றவன், ஒருவனைப்பார்த்து தேவதத்தனுடைய க்ருஹம் எது? என்று கேட்க்கிருன். அந்த ஸமயம், அந்த க்ருஹத்தில் ஒரு காக்கை உட்க்கார்ந்திருந்ததால், அதோ காக்கை உட்க்கார்ந் திருக்கிறதே, அதுவே தேவதத்தன் க்ருஹம் என்று பதில் சொல்கிருன். இந்த வாக்யத்தைக் கேட்பவனுக்கு அந்த க்ருஹம் மட்டுமே அறியப்படுகிறது. ஏனெனில் கேட்பவனுக்கு அந்த க்ருஹத்தை அறியவேண்டுமென்பதுதான் விவக்ஷை. அதனுல் க்ருஹத்தை மட்டுமே அறிகிருன். அவ்விதமின்றி காகத்துடன் சேர்த்து அந்த க்ருஹத்தை அறிவாஞுகில், அந்தக்ருஹத்தைப்போய் அடைவதற்குள் காகம் ஓடிப்போகு மானுல், க்ருஹத்தை அவன் அறிந்து கொள்ளமுடியாது. ஆகையால், வாக்யத்தைக் கேட்க்கின்றபோதே, முக்யார்த்த ஸம்பந்தமான காகத்தைவிட்டுவிட்டு, லக்ஷ்யார்த்தமான க்ருஹத்தை அறிகின்ருன் என்றே சொல்லவேண்டும். ஆகவே, கேள்வி எதைப்பற்றி கேட்க்கப்படுகிறதோ, அதைப்பற்றியே பதில்சொல்லப்படவேண்டும். ஆகவே, காகம் என்பதை விட்டுவிட்டு க்ருஹம் மட்டும் அறியப்படுவதால், காகம் என்பதும் உபலக்ஷணமாக இருந்தே க்ருஹத்தை அறிவிக்கின்றதேயன்றி விசிஷ்டமாகஇருந்து அறிவிக்கவில்லை. ஆகையால் ஸம்பந்தம் விசிஷ்டமாக இருக்கவேண்டுமென்பது வ்யபிசரிக்கின்றது.

**207. அவதாரிகை :**

காகாஸ்பதத்வம் என்பது உபலக்ஷணமாக இருக்கலாம். ஆனுல், சித், அசித், என்ற இரண்டும் கலந்த ஸபளார்த்தத்தில் அகண்டார்த்தம் என்பது எப்படி பொருந்தும்? 'காகவத்தேவதத்தக்ருஹம்' என்ற வாக்யம் எப்படி உபலக்ஷணமோ அதுபோல், இந்த இடத்தில் உபலக்ஷணம் என்று எப்படிச்சொல்லமுடியும்? என்ருல், 'ஸோSயம் தேவதத்த:' என்ற வாக்யம் எப்படி உபலக்ஷணமாக இருந்து அகண்டார்த்தத்தை போதிக்கின்றதோ அதுபோல் இந்த வாக்யத்கிலும் அகண்டார்த்தம் போதிக்கப்படலாம்.

**ச்லோகம் :**

सोऽयमित्यपि पदार्थरूपकं लक्षणं यदुपलक्षणं हि तत् ।
अंशिता यदि पदार्थलक्ष्ययोर्गृह्यते ननु पुनर्विरोधिता ॥

**ச்லோகார்த்தம் :** ஸோऽயம் தேவத்த : என்ற வாக்யத்தில் சொல்லப்படும் லக்ஷணை என்பதும் உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். இந்த இடத்தில் பதார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் அம்ஸ அம்ஸீ பாவம் சொல்லப்படுமானால் விரோதம் ஏற்படும்.

**வ்யாக்யானம் :** 'காகவத் தேவதத்த க்ருஹம்' என்ற வாக்யத்தினால் அறியப்படும் அந்த க்ருஹத்தில் 'காகம்' என்பது ஒரு அம்ஸமாகஇல்லை. அதனால் அந்த இடத்தில் 'காகம்' என்பது உபலக்ஷணம் என்று சொல்லலாம். ஆனால், மாயை, அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடிய சைதன்யமே ஸபளார்த்தமாக சொல்லப்படுவதால், இவ்வித விசேஷணங்களையுடைய சைதன்யமானது, உபலக்ஷணத்தினால், அகண்டார்த்தமாக போதிக்கப்படுகிறது என்று எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** ஸபளார்த்தம் என்பது லக்ஷணையினால் போதிக்கப்படுகின்றபோது அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது. அதாவது, மாயை, அந்த:கரணம் என்ற விசேஷணங்களுடன் கூடிய சைதன்யம், கேவலசைதன்யமாத்ரமாக லக்ஷணையினால் அறியப்படுகிறது. அதனால் இதில் விசேஷாம்ஸங்களும் சேர்ந்து அறியப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? லக்ஷணையினால் அர்த்தம் க்ரஹிக்கப்படுகின்றபோது; விசேஷணமும் சேர்ந்து அறியப்படுமானால், இரண்டிற்கும் விரோதம் ஸம்பவிக்கின்றதால், இரண்டும் ஒன்றே என்ற அகண்டார்த்தபோதம் ஏற்படமுடியாது. ஆகையால், ஸோऽயம் தேவதத்த: என்ற வாக்யம் எப்படி உபலக்ஷணமாக இருந்து அகண்டார்த்தத்தை போதிக்கின்றதோ அதுபோல், இந்த வாக்யமும் உபலக்ஷணமாகவே இருந்து அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**208. அவதாரிகை :**

இவ்விதம், லக்ஷணாவ்ருத்தியை அனுசரித்து, அகண்டார்த்தபோதம் ஏற்படலாம் என்பதை இதுவரை சித்தம் செய்யப்பட்டது. ஆனால் லக்ஷணையினால்தான் அகண்டார்த்தம் போதிக்கப்படவேண்டுமென்ற அவஸ்யமில்லை. லக்ஷணை இன்றியே அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்பதை ப்ரௌடிவாதத்தை அவலம்பித்து சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

एवं तावल्लक्षणावृत्तिहेतोरानीतैषाऽखण्डवाक्यार्थबुद्धिः ।
मुक्त्वाऽपीमां लक्षणावृत्तिमेषा वक्तुं शक्येत्युच्यतेऽनन्तरेण ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் லக்ஷணாவ்ருத்தியினால் அகண்டவாக்யார்த்தஞானம் ஏற்படும் என்பதை இதுவரை விளக்கப்பட்டது. மேல்வரும் ச்லோகங்களில் லக்ஷணாவ்ருத்தி இல்லாமலேயே அகண்டார்த்தஞானம் ஏற்படலாம் என்பதை விளக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படுவதாக இதுவரை லோகத்தில் அறியப்படவில்லையே? என்று கீழே பூர்வபக்ஷம் செய்யப்பட்டதற்கு, அதற்கு பரிகாரமாக, பலவிதமான உதாரணங்களை கொண்டும், யுக்திகளைக்கொண்டும், வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்று நிரூபணம் செய்யப்பட்டது. இப்போது, மேலும் ஒரு விஷயத்தை அதிகமாக தெரிவிக்கவேண்டுமென்று, லக்ஷணை இல்லாமலேயே

அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்பதை தெரிவித்து, இந்த விஷயத்தை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**209. அவதாரிகை :**

லக்ஷணையின்றி முக்யவ்ருத்தியைக்கொண்டே அகண்டார்த்தத்தை எப்படி போதிக்கமுடியும்? என்றால்.

**ச்லோகம் :**

भिन्नाभिन्नरवौ घटादिवचसा साकं समुच्चारितावन्यूनानधिके घटादिविषये तावत्प्रवृत्तौ तव ।
नोचेद्विश्वसृजोऽपि दुष्परिहरा भेदादिमालाऽऽगता भेदादेरपि तत्र वाच्यमपरं भेदादिकं स्यादिति ॥

**ச்லோகார்த்தம் :** கடம் என்ற சப்தத்துடன் உச்சரிக்கப்படும், பின்ன:, அபின்ன: என்ற இரண்டுபதங்களும், கடத்திலிருந்து வேறுபட்ட ஒரு அர்த்தத்தை தெரிவிப்பதில்லை. இவ்விதம் சொல்லப்படவில்லை என்றால் அதனால் ஏற்படும் பேதமாலை (அனவஸ்த்தை) முதலான தோஷங்களை ப்ரஹ்மாவினாலும் பரிகாரம் செய்யமுடியாது. ஏனெனில் பேதங்களுக்கும் வேறு ஒருபேதம் இருப்பதாக மேன்மேலும் சொல்ல நேரிடும்.

**வ்யாக்யானம் :** லக்ஷணைஇன்றியே வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்று சொல்லப்படும் விஷயத்தில், உதாகரணம் என்னவென்றால், லோகத்தில் 'பின்ன:' என்றும் 'அபின்ன:' என்றும் இரண்டுபதங்கள் 'கடம்' முதலான பதங்களுடன் சேர்த்து ப்ரயோகம் செய்யப்படுகிறது. இந்தவிதம் பின்னோ கட:, அபின்னோ கட: என்று வாக்யம் ப்ரயோகம் செய்யப்படுகின்றபோது, அந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும் என்று சாஸ்திரம் தெரிவிக்கவில்லை. ஆனால், 'பின்னோ கட:' என்ற வாக்யத்தில் இரண்டுபதங்கள் இருந்தபோதிலும், அந்த பதங்களால் 'கடம்' என்று, கடமாத்ரமான அகண்டார்த்தமே அறியப்படுகிறது. அதேபோல் அபின்னோகட: என்ற வாக்யத்தினாலும் கடமாத்ரமாகவே அர்த்தம் அறியப்படுகிறது. 'கடோபின்ன:' என்ற வாக்யத்தில் கடம் என்றும், பின்னம் என்றும் இரண்டு பதங்கள் ஸாமானாதி கரண்ய ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த வாக்யத்திலுள்ள 'கடம்' என்ற பதமும், பின்னம் என்றபதமும் ஒரே அர்த்தத்தைத் தெரிவிக்கின்ற பர்யாயபதங்கள் அல்ல. ஆனாலும் இரண்டுபதங்களும் சேர்ந்து கடம் என்ற ஒரே அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. கடம் என்பது எப்படி படத்தைக்காட்டிலும் பின்னமோ அதுபோல் பின்னம் என்பது கடத்தைக்காட்டிலும் பின்னமா? என்றால் இல்லையென்று, கட: அபின்ன: என்று சொல்லப்படுகிறது. ஆகவே, கடோ பின்ன : என்பதும், கடோ அபின்ன : என்பதும் கடத்தையன்றிவேறான ஒரு வஸ்துவை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. இந்த பதங்களினால் கடம் என்ற ஒரே வஸ்து அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லாமல், பின்னம் என்பதோ அபின்னம் என்பதோ கடத்தைக்காட்டிலும் வேறு என்று சொல்லப்படுமானால், எந்த பேதம் கடத்தில் இருக்கிறதாகச்சொல்லப் படுகிறதோ, அந்த பேதம் கடந்தானா? அல்லது கடத்தைக்காட்டிலும் வேறா? என்று விசாரிக்கின்றபோது வேறு என்று சொல்லப்படுமானால், கடமும், படமும் வேறு என்று சொல்வதற்காக எப்படி ஒருபேதம் சொல்லப்படுகிறதோ, அதுபோல், கடம் என்பதும், அதன் பேதம் என்பதும் வேறு என்று சொல்வதற்கு, வேறு ஒரு பேதத்தை ஒத்துக்கொள்ளநேரிடும். இவ்விதம் மேன்மேலும் சொல்லநேரிடுவதால் அனவஸ்தை என்ற தோஷம் ஸம்பவிக்கும். இதேபோல், கடஅபின்னம் என்பதிலும், அபின்னம் என்பது

கடந்தானு? அல்லது கடத்தைக்காட்டிலும் வேரு? என்று விசாரிக்கின்றபோது கட அபின்னம் என்று சொல்லப்படுமானுல் 'அபின்ன: அபின்ன:' என்று சொல்லப் பட்டதாகஆகிறது. இதனுல் அனவஸ்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகவே கடோபின்ன:, கடோ அபின்ன: என்ற வாக்யங்கள், 'ராகோ: சிர:' என்று வாக்யப்ரயோகம் செய்கின்றபோது ராகு என்பதும் சிரஸ் என்பதும் வேறல்ல என்றும் சிரஸ் என்தே ராகு என்பதுபோல் கடோபின்ன: என்பதற்கும் கடம் ஒன்றே அர்த்தம். கடோ அபின்ன: என்பதற்கும் கடந்தான் அர்த்தம். கடம் என்பதைக்காட்டிலும் வேருக பின்னம் என்பதோ அபின்னம் என்பதோ, தர்மதர்மி பாவேன கடம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லமுடியாது. பேதம், அபேதம் என்ற தன்மைகள் தர்ம தர்மிபாவேன கடத்தில் இருப்பதாக சொல்லமுடியாது. இவ்விதம் லக்ஷணை இல்லாமலேயே இந்த வாக்யத்திலுள்ள பதங்கள் வாக்யஸ்வபாவத்தினுலேயே அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே அறியவேண்டும்.

**210. அவதாரிகை :**

**பூர்வ :** கடோபின்ன:, கடோ அபின்ன:, என்ற வாக்யங்களிலுள்ள பின்னம், அபின்னம் என்ற இரண்டு சப்தங்களும் 'கடம்' என்ற ஒரே அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அவைகள் பர்யாயபதம் என்று தானே சொல்லவேண்டும்?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் இரண்டுபதங்களும் ப்ரவ்ருத்தி நிமித்தபேதம் உடையதாக இருக்கின்றதால், பர்யாயபதங்கள் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

परस्पराभावमुपाददानो निमित्तमर्थेषु हि भिन्नशब्दः ।
प्रवर्ततेऽन्ये तु घटादिशब्दा निजं निजं वाच्यमुपाददानाः ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு வஸ்துவுடன் பின்னம் என்ற சப்தத்தை சேர்த்து ப்ரயோகிக்கப்படுகின்றபோது, அதில் இருக்கின்ற அன்யோன்ய அபாவம் என்ற தன்மையை ப்ரவ்ருத்திநிமித்தமாகக்கொண்டு ப்ரயோகிக்கப்படுகிறது.

**பூர்வ :** 'கடம்' என்பதே அர்த்தம் என்று சொல்லப்படுமானுல், பின்னம், அபின்னம், கடம், என்ற மூன்று பதங்களும் பர்யாயபதம் என்றே சொல்லநேரிடும். பர்யாயபதமாக இருக்குமானுல் புனருக்தி என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**சித்தா :** அவ்விதம் மூன்றும் பர்யாயபதங்கள் என்று சொல்லமுடியாது. ஏனெனில், கடம், படமில்லை என்று சொல்லப்படுகின்றபோது, கடபேதம் படத்திலும், படபேதம் கடத்திலும் இருப்பதாக அறியப்படுகிறது. பேதம் என்பது எதில் இருக்கிறதோ அது அனுயோகி, எதனுடையபேதம் இருக்கிறதோ அதுப்ரதியோகி. ஆகவே, படத்தின்பேதம் கடத்தில் இருக்கின்றதால், படமாக இல்லாத தன்மையைக்கொண்டு பின்னசப்தம் ப்ரவ்ருத்திக்கின்றது. அதனுல் பின்னம் என்ற சப்தம், த்ரவ்யம் குணம் எல்லாவற்றிலும் ப்ரவ்ருத்திக்கின்றது. அதாவது, கடம், படத்தைக்காட்டிலும் பின்னம் என்று சொல்லலாம். அல்லது நீலம் என்ற குணம், சிகப்புகுணமல்ல. சிகப்பு என்பது மஞ்சள் அல்ல, என்று இவ்விதம் த்ரவ்யம், குணம், என்பவைகளில்பின்ன சப்தம் என்பது, அந்த வஸ்துவில் இல்லாத தன்மைகளை தெரிவிக்கின்றது. கடாதிவஸ்துக்களை தெரிவிக்கின்ற சப்தம் அந்தந்த ஜாதியைக்கொண்டு அந்தந்த வஸ்துவை குறிப்பிடுகின்றது. ஆகவே, பின்ன சப்தம், கடத்தில், படமாக இல்லாத தன்மையையும், படத்தில் கடமாக இல்லாத தன்மையையும் (பரஸ்பரம் இல்லாத தன்மையை) போதிக்கின்றது. கடம், படம் என்பதெல்லாம் அந்தந்த வஸ்துவின் ஜாதியை குறிக்கின்றது.

இந்தவிதம் கடத்வஜாதியையும், அதில் உள்ள தன்மையையும் கடோபின்ன: என்ற பதங்களால் குறிப்பிடப்படுகிறது. அதனுல் இரண்டுபதங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தபேதம் இருக்கிறது என்பதால், இரண்டும் பர்யாயபதம் என்று சொல்லமுடியாது.

மேலும், கடத்தை, கடம் என்று அறிவதற்கு வேருெரு வஸ்துவின் அபேக்ஷை கிடையாது. ஆனுல் கடம்பின்னம் என்று சொல்லவேண்டுமானுல், வேறு ஒரு வஸ்துவை முன்னிட்டு, அதைக்காட்டிலும் கடம் பின்னம் (வேறு) என்று சொல்லப்படவேண்டும். ஆகவே, பேதம் என்பது கடஸ்வரூபமல்ல, உபாதியைக்கொண்டு கடத்தில் ஏற்படும் தன்மை என்று அறியவேண்டும் இந்தவிதம் பின்னசப்தம், கடத்தில் விசேஷணமாக இல்லாமல், தடஸ்த்தமாக இருந்து அதன் அர்த்தத்தை போதிப்பதில் நிமித்தமாக இருக்கின்றது. ஆகவே, கட சப்தம், கடஸ்வரூபத்தையே போதிக்கின்றது. இவ்விதம் சொல்லப்படவில்லையென்ருல், அகண்டார்த்தம் என்பதே சித்திக்காது.

கட சப்தத்திற்கு பின்னம் என்பது வாச்யார்த்தமாக இல்லை. உபலக்ஷணமாகவே இருக்கின்றது.

**211. அவதாரிகை :**

இதேபோல் கடோऽபின்ன : என்ற வாக்யத்திலுள்ள அபின்னம் என்ற சப்தத்திற்கு நிமித்தம் என்ன? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** परस्पराभावविहीनभावादभिन्नशब्दस्य घटे प्रवृत्तिः ।
घटस्वरूपैकनिबन्धना तु घटादिशब्दस्य घटे प्रवृत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** பரஸ்பர அபாவம் என்பது இல்லாததால், அபின்னசப்தம், கடத்தை தெரிவிக்கின்றது. ஆகையால், கடாதி சப்தங்கள், கடஸ்வரூபத்தை மட்டும் நிமித்தமாகக் கொண்டே கடத்தை போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** கடோபின்ன: என்ற வாக்யத்திலுள்ள கட சப்தமானது கடத்வம் என்ற தன்மையை மட்டும் நிமித்தமாகக் கொண்டு கடத்தை போதிக்கின்றது. அபின்னசப்தமானது, கடத்தில் கடபேதம் இல்லாத தன்மையை முன்னிட்டு ப்ரவர்த்தித்து கடத்தைபோதிக்கின்றது. கடபேத அபாவம் என்பது கடத்தைக்காட்டிலும் வேறல்ல. ஆகையால், 'கடோபின்ன:' என்ற வாக்யம் கடம் என்ற ஒரே அர்த்தத்தையே போதிக்கின்றது என்பதால் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இதில் எவ்வித பாதகமும் இல்லை.

**212. அவதாரிகை :**

இதுவரை லக்ஷணை இல்லாமலேயே அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்று சொல்லப்பட்டது. இப்போது, ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப்பட்டாலும்கூட அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अबोधनाशश्चितिरित्यमुष्मिन्पदद्वये त्वेकरसात्मनिष्ठे ।
अगौणमेकं पदमन्यदत्र द्वितीयवृत्तीतरसंगमाय ॥

**ச்லோகார்த்தம் :** 'அபோதநாச:சிதி:' என்ற வாக்யத்தில் இரண்டுபதங்களும் அகண்டார்த்தத்தையே தெரிவிக்கின்றது. இதில் ஒரு பதம் முக்யமாகவும் மற்றொருபதம் அர்த்தபோதம் ஏற்படுவதற்காக லக்ஷணையாகவும் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப்பட்டபோதிலும்கூட அகண்டார்த்தம் போதிக்கப்படலாம். எப்படியெனில், அபோத நாச:சிதி: என்று ஒரு வாக்யம்

ப்ரயோகம் செய்யப்படுகிறது. அபோதம் என்றால் அஞ்ஞானம். ஞானத்தினால் நாசம் அடையக்கூடியது எதுவோ அது அஞ்ஞானம். அஞ்ஞானநாசம் என்பது அதிஷ்ட்டான ஸ்வரூபமாத்ரமாகவே இருக்கின்றதாலும், அதிஷ்ட்டானம் என்பது சித்ஸ்வரூபந்தான் என்பதால், இந்த வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்கிறோம். அஞ்ஞானநாச: சிதி: என்ற வாக்யத்தில் உள்ள இரண்டு பதங்களும் ஸாமானாதி கரண்யமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு பதங்களும் ஏகரஸமான சைதன்யத்தையே போதிக்கின்றது. ஆனால் இரண்டு பதங்களில் ஒன்று முக்யார்த்தமாக (அகௌணமாக) சைதன்யத்தை போதிக்கின்றது. மற்றொருபதம், முக்யவ்ருத்தியினால் தெரிவிக்கப்படும் பதத்துடன் ஸம்பந்தம் ஏற்படுவதற்காக லக்ஷணாவ்ருத்தியினால் அறிவிக்கப்படும் அர்த்தத்தை போதிக்கின்றது. அதனால், அபோதநாச:என்ற பதம் அகௌணம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இந்தவிதம் ஒரு பதத்தில் லக்ஷணை சொல்லப்படுவதாலேயே அகண்டார்த்தம் ஸம்பவிக்கலாம்.

**213. அவதாரிகை :**

இரண்டுபதங்களுக்குள், எது கௌணம்? எது அகௌணம்? என்றால்,

**ச்லோகம் :**

अज्ञाननाशपदमत्र हि मुख्यमिष्टं विद्यानिबन्धननिवृत्तिसमर्पकत्वात् ।
तेनान्वयाय चितिवाचि पदं स्ववाच्ये सौवं समुज्झति मतेः परिणामरूपम् ॥

**ச்லோகார்த்தம் :** இந்த வாக்யத்தில் 'அஞ்ஞானநாச:' என்ற பதம் முக்யார்த்தத்தையுடையது என்று சொல்லப்படுகிறது. ஏனெனில், அந்த பதம் வித்யையினால் ஏற்படும் அவித்யா நிவர்த்தி என்ற அதிஷ்ட்டான ஸ்வரூபத்தையே தெரிவிக்கின்றது. இந்த பதத்துடன் அன்வயிப்பதற்காக, சிதி: என்ற பதம், தன்னுடைய வாச்யார்த்தத்திலிருக்கின்ற அந்த:கரண பரிணாமம் என்பதை விட்டுவிடுகின்றது.

**வ்யாக்யானம் :** 'அபோதநாச:சிதி:' என்ற வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களில் ஒன்று கௌணம், மற்றொன்று அகௌணம் என்று சொல்வதற்கு என்ன காரணம்?

**சித்தா :** ப்ரஹ்மாகார அந்த:கரணவ்ருத்தியைத்தான், வித்யை என்றும், அகண்டாகார வ்ருத்தியென்றும் சொல்லப்படும். இந்த வ்ருத்தியே அஞ்ஞான நாசத்திற்கு காரணம். அஞ்ஞானநாசம் என்பதே அதிஷ்ட்டான ஸ்வரூபந்தான் என்பதால் அதிஷ்ட்டானரூபமான சைதன்யத்தையே 'அஞ்ஞானநாசம்' என்ற பதம் போதிக்கின்றது. அதாவது, ஆரோபித வஸ்து நாசம் என்பது, அதிஷ்ட்டான ஸ்வரூபமே என்பதால் 'அபோத நாச:' என்ற பதமே, அதிஷ்ட்டான சைதன்யத்தை நேரிடையாகவே போதிக்கின்றது. ஞானத்தினால் ஏற்படும் அஞ்ஞான நாசம் தான் புருஷார்த்தம்.

இந்தவிதம், 'அபோதநாச:' என்ற பதத்துடன் 'சிதி:' என்ற பதம் ஸாமானாதி கரண்யமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. அதனால் இரண்டு பதங்களுக்கும் அன்வயம் சொல்லவேண்டும். 'சிதி:' என்ற பதம், புத்திவ்ருத்தி ப்ரதிபலன சைதன்யத்தை ஸபளார்த்தமாக தெரிவிக்கின்றது. அகண்டகார வ்ருத்தியில்தான், சித்ஸ்வரூபஞானம் ஏற்பட்டு அதன் மூலமாக அஞ்ஞான நாசம் ஏற்படவேண்டும். சிதி: என்ற பதம் அகண்டாகார ப்ரதிபலன சைதன்யத்தையே தெரிவிக்கின்றது. அதனால் அகண்டாகாரவ்ருத்தியை சேர்த்துக் கொள்ளப்படுமானால், அதிஷ்ட்டானமான கேவல ஸ்வரூபம் போதிக்கப் படுவதாகச் சொல்லமுடியாது. ஆகையால் சிதி:என்ற பதத்தினால் அறியப்படும் அந்த:கரண

வ்ருத்தி, அதில ப்ரதிபலனமாகின்ற சைதன்யம் என்ற இரண்டுமே அர்த்தமாகின்றதால், அதில் அறியப்படுகின்ற அகண்டாகார வ்ருத்தியை விட்டு, பாகத்யாகலக்ஷணையைக்கொண்டு அதிஷ்ட்டான ஸ்வரூபத்துடன் அன்வயம் சொல்லப்படவேண்டும். ஆகையால், 'சிதி:' என்ற பதம் கௌணம் என்று சொல்லப் படுகிறது. வித்யை என்பதை காரணமாகக் கொண்டு ஏற்படும் நாசம் என்பது, அதிஷ்ட்டான ஸ்வரூபமாகவே இருக்கின்றதால் 'அபோத நாச:' என்ற பதம் அதிஷ்ட்டான சித்ஸ்வரூபமே என்பதால், அந்த பதத்திலேயே முக்யார்த்தம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும். (அதனால் அது அகௌணம்).

**214. அவதாரிகை :**

அபோதநாச: என்ற பதம் அபாவத்தை தெரிவிக்கின்றது. 'சிதி:' என்றபதம் பாவரூபமான அர்த்தத்தை போதிக்கின்றது. இவ்விதமிருக்கின்றபோது, விதி முகேன, பாவரூபமாக போதிக்கின்ற 'சிதி:' என்ற பதம் கௌணம் என்றும், அஞ்ஞான நிவர்த்தி என்ற அபாவபோதகமான பதம், முக்யமென்றும் விபரீதமாக அர்த்தம் செய்யப்படுவது எப்படிப்பொருந்தும்?

**சித்தா :** இதில் விபரீதம் ஏதுமில்லை என்பதை மேலே சொல்லப்போகின்ற காரணத்தைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.

**ச்லோகம் :**

विधिपदानि हि भागसमर्पणादपरभागनिराकरणादपि ।
अविषयात्ममतिं जनयन्ति नो न तु मृषार्थनिवृत्तिगिरस्तथा ॥

**ச்லோகார்த்தம் :** விதிமுகமான பதங்கள், ஒருபாகத்தை நிஷேதம் செய்து, மற்றொரு பாகத்தை தெரிவிப்பதன் மூலம் அவிஷயமான ஆத்ம ஞானத்தை உண்டு பண்ணுகின்றது. ஆனால் ஆரோபித வஸ்துவின் நிவ்ருத்தியை போதிக்கின்றபதங்கள் அவ்விதம் போதிக்கவில்லை.

**வ்யாக்யானம் :** 'சிதி:' என்ற பதம், லக்ஷணையாக அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்வது ந்யாயமல்ல. அதேபோல் அபோத நாச:' என்ற பதம் முக்யார்த்தத்தை தெரிவிக்கிறது என்று சொல்வதும் சரியல்ல. ஏனெனில் விதாயகபதமாக இருப்பதுதான், பாவ வஸ்துவை போதிக்கின்றது என்று சொல்லலாம். அபோதநாச: என்ற பதம் ஆரோபிதமான வஸ்துவின் நிவர்த்தியை போதிக்கின்றதேயன்றி, பாவரூபமான வஸ்துவை தெரிவிக்காது. ஆகவே, 'சிதி:' என்ற பதம் முக்யார்த்தத்தையும், 'அபோதநாச:' என்ற பதம் லக்ஷணையாக சைதன்யத்தையும் போதிக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** ஸபளார்த்தமாக இருப்பது எதுவோ, அதையே விதாயகமானபதங்கள், விசேஷ்யத்துடன் கூடிய பாவரூபமான ஒரே அர்த்தமாக போதிக்கின்றது. அதனால் முக்யவ்ருத்தியினால் கேவல சைதன்யத்தை போதிப்பதாகச்சொல்லமுடியாது. விசிஷ்ட்ட ஸ்வரூபத்திலுள்ள, அந்த:கரணம், அதன் வ்ருத்தியுடன் கூடிய சைதன்யமே 'சிதி:' என்ற பதத்தினால் தெரிவிக்கப்படுகிறது. அதனால் அவாஸ்த்தவமான அந்த:கரணம் முதலான விசேஷணங்களை, பாகத்யாகலக்ஷணையினால் விட்டுவிட்டு, வாஸ்தவமான சைதன்யாம்ஸத்தை மட்டும் அகண்டாகார வ்ருத்தியினால் அறிவிக்கப்படுகிறது என்று சொல்வதே சரியான முறையாகும்.

எப்படி, 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்பது போன்ற விதிமுகமாக தெரிவிக்கின்ற பதங்கள், ஸத்யத்வம் முதலான விசிஷ்ட்டமாகவே அதன் அர்த்தத்தை போதிக்கின்றதோ

அதுபோலவே, 'சிதி:' என்ற பதத்திற்கும் அர்த்தம் செய்யப்படவேண்டும். ஸத்யத்வம் முதலான தர்மங்களை விட்டு லக்ஷணையினுல் சைதன்யமாத்ரம் போதிக்கப் படுகிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படவில்லையென்றால், ஆத்ம சைதன்யம், வாக்கிற்கும், மனஸிற்கும் எட்டாதது என்றும், எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமல்ல என்றும் சொல்லப்படுவது பொருந்தாது. ஆகவே சப்தம் நேரிடையாக போதிக்கமுடியாத வஸ்துவை லக்ஷணையினுல் போதிக்கின்றது என்றே சொல்ல வேண்டும். 'அபோத நாச:' என்ற பதம் ஆரோபித நிவர்த்தியை தெரிவிக்கின்றது. ஆரோபித நிவர்த்தியே, சைதன்யஸ்வரூபமாக இருக்கின்றதால், முக்யவ்ருத்தியினுல் போதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதனுல் 'அபோத நாச:' என்ற பதம் அஞ்ஞான நாசத்தையே தெரிவிக்கின்றது என்பதால், ஆத்மஸ்வரூபம், வாக், மனஸ் என்பதற்கு அதீதம் என்று சொல்லப்படும் வாக்யங்களுக்கும் விரோதமில்லாமல், ஆரோபித வஸ்து நாசம் என்பதே அதிஷ்ட்டான ஸ்வரூபமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆகவே, லக்ஷணை இல்லாமலேயே 'அபோத நாச:' என்ற பதம் முக்யார்த்தமாகவே சைதன்யத்தையே போதிக்கின்றது என்று, அவித்யை என்ற உபாதியை முன்னிட்டே அதன் நிவர்த்தி சொல்லப்படுகின்றது. ஆகையால் அவித்யா நிவர்த்தி என்ற சப்தம் ஆத்மாவையே போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. ஆனுல், அவித்யா நிவர்த்தி சப்தம், ஸ்வஸ்வரூபேண ஆத்மாவை போதிக்கமுடியாது. ஏனெனில், ஆத்மா சைதன்யஸ்வரூபமானதால் ஸர்வதாப்ரகாசித்துக்கொண்டிருப்பதால், ஆத்மஸ்வரூபம் என்பதை அறிவதற்கு காரணம் ஏதும் தேவையில்லை. ஆகவே, ஸாபேக்ஷமாக அறியப்படும் ஆத்ம ஸ்வரூபத்தைக்காட்டிலும், நிரபேக்ஷமாக அறியப்படும் ஸ்வரூபமே அவாச்யமாக அறியப்படுகிறது என்பதே முக்யம். ஆகவே லக்ஷணையின்றி- அபோதநாச: என்ற பதம் வாச்யார்த்தமாகவே சைதன்யத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவதால், வாக், மனஸ் இவைகளுக்கு அவிஷயம் என்று சொல்வதற்கு விரோதம் ஏதுமில்லை. இதேபோல், 'சிதி:' என்ற பதமும் பாவரூபமாக ஸபளார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டபோதிலும், பாகத்யாக லக்ஷணையினுல் அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது என்பதால், இந்தவிதம் சொல்லப்படுவதனுலும், வாக், மனஸ் என்பதற்கு அவிஷயம் என்று சொல்லப்படுவதற்கு விரோதம் ஏதுமில்லை.

**215. அவதாரிகை :**

லக்ஷணை இல்லாமலேயே வாக்யத்தின் முக்யவ்ருத்தியினுலும் அகண்டார்த்தம் போதிக்கப்படலாம்.

**ச்லோகம் :** भेदो भिन्नश्चातिरेकोऽतिरिक्तोऽभेदोऽभिन्नः संविदः स्वप्रकाशाः ।
इत्येतस्मिन्विद्यते नार्थभेदो वेदान्तानामप्यखण्डस्तथाऽर्थः ॥

**ச்லோகார்த்தம் :** பேதம் என்பது பேதமுடையதாக இருக்கிறது. அபேதம் என்பது அபேதம் உடையதாக இருக்கிறது. வேறுபாடு என்பது, வேறுபாடு உடையதாக இருக்கிறது. ஞானம் என்பது ஸ்வப்ரகாசமுடையதாக இருக்கிறது என்று சொல்லப்படும் இந்த வாக்யங்களிலுள்ள பதங்களுக்கு எவ்வித அர்த்தபேதமும் சொல்லமுடியாது. இவ்விதமே வேதாந்த வாக்யங்களுக்கும் அகண்டார்த்தம் ஸம்பவிக்கின்றது.

**வ்யாக்யானம்** : பேத: பின்ன: என்றும், அபேத:அபின்ன: என்றும் அதிரேக: அதிரிக்த: என்றும்ஸம்வித்ஸ்வப்ரகாச : . என்றும் வாக்ய ப்ரயோகம் செய்யப்படுகின்ற இடங்களில், லக்ஷணை இன்றியே ஏகார்த்தம் போதிக்கப்படுகிறது. அதாவது, பேத: பின்ன: என்ற வாக்யத்திற்கு பேதம் உள்ளது பின்னம் என்று அர்த்தம் சொல்லவேண்டும். இந்த பேதம் என்பதும் பின்னம் என்பதும் ஒன்ரு? வேரு? என்று விசாரிக்கப்படுமாஞல் இரண்டும் வேறு என்று சொல்லவேண்டும். இரண்டும்வேறு என்று சொல்லப்படுமாஞல், அந்தபேதம் என்பதற்கும், பின்னம் என்பதற்கும், மத்தியில் ஒருபேதம் சொல்லவேண்டும். இந்த பேதம் முன்ஞல் சொல்லப்பட்ட பேதத்தைக் காட்டிலும் ஒன்ரு? வேரு? என்று கேட்க்க நேரிடும். இவ்விதம் மேன்மேலும் சொல்லப்படுமாஞல் அனவஸ்த்தை, ஆத்மாச்ரயம், அன்யோன்யாச்ரயம், சக்ரகம் என்பது முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். அதஞல் பேத: பின்ன: என்று ப்ரயோகம் செய்யப்படுமாஞல், பின்ன சப்தார்த்தம் பேத ஸ்வரூபம் என்றே சொல்லப்பட வேண்டும். இதேபோல் அபேத: அபின்ன: என்ற சப்த ப்ரயோகம் செய்யுமிடத்திலும், அதிரேகம் = பேதம், அதிரிக்தம் = பின்னம், என்னுமிடத்திலும் அர்த்தம் அறியப்பட வேண்டும். அதிரேகம், அதிரிக்தம், என்ற சப்தங்கள் பேதம் என்ற ஒரேஅர்த்தத்தை குறிப்பிட்டபோதிலும் சப்தங்களிலிருந்து இரண்டும் வேறுபட்டதுபோல் அறியப்படுகிறது. ஆகையால் ஸாமாஞதி கரண்யமாக பதங்கள் ப்ரயோகம் செய்யப்படுகின்றதால், விசேஷண விசேஷ்யபாவேன (தர்ம, தர்மி) இரண்டிற்கும் அர்த்தம் செய்யப்படவேண்டும் என்று ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

பேதம் உள்ளது பின்னம் என்று அர்த்தம் செய்யப்படுமாஞல் முன்ஞல், கடோபின்ன:, கடோஅபின்ன: என்ற இடத்தில் எப்படி தர்மதர்மி பாவம் சொல்லமுடியாது என்று கண்டனம் செய்யப்பட்டதோ அதையே இந்த இடத்திலும் அர்த்தமாக அறிந்து கொள்ளவேண்டும். உதாரணமாக —: 'ஸம்வித்ஸ்வப்ரகாச:' என்ற வாக்ய ப்ரயோகம் செய்கின்ற இடத்திலும், ஸம்வித், ஸ்வப்ரகாசம், என்ற இரண்டு பதங்களிஞலும், 'ஸம்வித்' என்ற ஒரே அகண்டார்த்தம்தான் போதிக்கப்படுகிறது. ஸம்வித் என்ற பதத்திற்கும், ஸ்வப்ரகாசம் என்ற பதத்திற்கும் அர்த்த பேதம் ஏதுமில்லே. ஸம்வித் என்ருல் சைதன்யம் என்று அர்த்தம். சைதன்யத்தைக்காட்டிலும் வேருக இருப்பதெல்லாம் ஜடம் என்பதால் 'ஸ்வப்ரகாசம்' என்பதிலுள்ள ஸ்வசப்தம், 'தான்' என்ற அர்த்தத்தை தெரிவித்தபோதிலும், ப்ரகாசமேஸ்வரூபம் என்பதையே தெரிவிக்கின்றது. ஆகையால், 'தான்' என்பது வேறு, 'ப்ரகாசம்' என்பது வேறு என்ற அர்த்தமில்லே. அதஞல் ஸம்வித் என்ருலும், ஸ்வப்ரகாசம் என்ருலும் 'சைதன்யம்' என்றே அர்த்தம் என்பதை அவஸ்யம் ஒப்புக்கொள்ளப்படவேண்டும். இந்தவிதம் அகண்டார்த்தம், என்பது முக்ய வ்ருத்தியிஞலேயே போதிக்கப்படலாம். இதேபோல் தத்வமஸ்யாதி முதலான வேதாந்த வாக்யங்களிலும் லக்ஷணை இன்றியே அகண்டார்த்தம் போதிக்கப்படலாம்.

**216. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்ட விஷயத்தை அனுவாதம் செய்து பாணினி என்ற மஹரிஷியிஞலும், "ப்ராதிபதிகார்த்தலிங்க பரிமாண வசன மாத்ரே ப்ரதமா" என்ற சூத்ரத்திஞல், ப்ரக்ருதி, விபக்தி என்ற இரண்டிற்கும் ஒரே அர்த்தம் தான் என்று, பதங்கள் இரண்டாக இருந்தாலும் அகண்டார்த்தம் போதிக்கப்படலாம் என்ற விஷயம், மஹரிஷி பாணியிஞலேயே ஒத்துக்கொள்ளப்படுகிறது என்று அறிந்துகொள்ளவேண்டும்.

**ச்லோகம் :**

एवं तावदखण्डवस्तुविषयः शब्दान्वयो दर्शितो लोके दृष्टनयेन पाणिनिवचोऽप्यस्यैव संसूचकम् ।
येनायं स्मरति प्रकृत्यभिहिते वृक्षादिके केवले तन्मात्रे प्रथमेतिसूत्रवचसैवाऽऽद्यं विभक्तिं मुनिः ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் அறியப்படும் உதாகரணங்களினுல், அகண்டார்த் தத்தில் பதங்களின் அன்வயம் என்பது போதிக்கப்பட்டது. பாணினியின் சூத்ரமும் இதே கருத்தை தெரிவிக்கின்றது. ஏனெனில் பாணினி மஹரிஷியினுல், 'தன்மாத்ரே ப்ரதமா' என்ற சூத்திரத்தினுல் ப்ரதமாவிபக்தியின் அர்த்தமானது, ப்ரக்ருதியினுல் சொல்லப்படும் வ்ருக்ஷம் முதலானவைகளையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** இதுவரையில், வாக்யார்த்தம் என்ருலே, அது ஸம்ஸர்க்க மாகவோ, அல்லது விசிஷ்ட்டமாகவோதான், அர்த்தபோதம் ஆகும் என்று சொல்ல முடியாது என்றும், அகண்டார்த்தமும் ஸம்பவிக்கலாம் என்பதை நியாயங்களைக் கொண்டு விளக்கப்பட்டது. இதன் மூலம் வேதாந்த வாக்யங்களுக்கு அகண்டார்த்தத்தை சாதிக்கப்பட்டது. மேலும் இந்த விஷயம் மஹரிஷிபாணினியினுலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

லோகத்தில், கடோபின்ன: கடோ அபின்ன: என்பது போன்ற வாக்யங்கள், எந்த முறையில் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்பட்டதோ அந்த ந்யாயத்திற்கு அனுகூலமாக மஹரிஷிபாணினியினுடைய சூத்ரமும் சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது, 'ப்ராதிபதிகார்த்தலிங்க பரிணும வசனமாத்ரே ப்ரதமா' என்ற சூத்ரத்தினுல் (ப்ராதிபதிகார்த்தமாத்ரேப்ரதம:) ப்ரதமாவிபக்தியென்பதற்கு ப்ராதிபதி கார்த்தத்தையன்றி வேருக எந்த அர்த்தமும் இல்லையென்று சொல்லப்படுகிறது. உதாரணமாக, வ்ருக்ஷ: என்பதற்கு 'வ்ருக்ஷம்' என்ற ஒரே அர்த்தம்தான் இருக்கிறது. சாதாரணமாக, ப்ரக்ருதி, ப்ரத்யயங்களுக்கு அர்த்தபேதம் உண்டு, அதாவது தசரதன், தாசரதி என்ற இரண்டு சப்தங்களும் வெவ்வேறு அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. தாசரதி என்ருல் தசரதனின் புத்ரனைக்குறிக்கின்றது. (தசரதன் என்பது தாசரதியின்பிதா தசரதன் என்பவனை குறிக்கின்றது). இவ்விதம் இந்த இடத்தில் ப்ரக்ருதி ப்ரத்யயங்களுக்கு அர்த்தபேதம் இருந்தபோதிலும், எல்லாஇடங்களிலும் இவ்விதம் அர்த்தபேதம் இருப்பதாகச்சொல்லமுடியாது. ப்ராதிபதிகத்திற்கு மேல் ப்ரதமாவிபக்தி இருக்குமானுல் இரண்டிற்கும் அர்த்தம் ஒன்றுதான். 'ராம' என்ருலும் ராமன்தான் அர்த்தம், ராம : என்று (விஸர்க்கம்) விபக்தி சேர்த்தாலும் ராமன்தான் அர்த்தம். தசரதன், தாசரதி என்பதில் ப்ரத்யயம் மாறுபடுகின்றதால் அர்த்தபேதம் ஏற்படுகிறது. அதுபோல் 'ராம' என்பதிலோ, 'ராம:' என்பதலோ அர்த்தபேதம் கிடையாது.

**217. அவதாரிகை :**

சூத்ரகாரரான ஸ்ரீவ்யாஸாசார்யாரின் அபிப்ருயத்தைக்கொண்டும், அகண் டார்த்தம் ஸம்பவிக்கிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सामानाधिकरण्यमन्वयगिरा हेतुं वदत्यादरात्तस्यैवाथ विशेषणं समिति च व्यावृत्तये गृह्यते ।
गौणामुख्यमयं भिनत्ति भगवान्व्यावर्तकेनामुना नीलेनोत्पलवस्तुवत्स्फुटतरद्वैविध्यसद्भावतः ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்ரீவ்யாஸாசார்யார், 'தத்துஸமன்வயாத்' என்ற சூத்ரத்தில் 'அன்வயம்' என்ற பதத்தினுல், ஸாமாஞதிகரண்யத்தை ஹேதுவாக தெரிவிக்கின்ருர்.

ஸாமாஞதி கரண்யம் என்பதை, கௌணஸாமாஞதி கரண்யத்திலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காக 'ஸம்' என்ற விசேஷணம் ஆதரவோடு சொல்லப்பட்டிருக்கிறது. 'நீல' பதத்திஞல் உத்பலத்ரவ்யம் வேறுபடுத்தப்படுவதுபோல, 'ஸம்' என்ற விசேஷணத்திஞல், கௌணஸாமாஞதிகரண்யத்திலிருந்து வேறுபடுத்தி, முக்யஸாமாஞதிகரண்யம் என்பதை தெரிவிக்கிருர்.

**வ்யாக்யானம் :** இதுவரை 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்கள் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்பதை, ச்ருதிப்ரமாணத்தைக்கொண்டும், யுக்தியைக் கொண்டும், பாணினி சூத்ரத்தைக்கொண்டும் விளக்கப்பட்டது. இப்போது சூத்ரகாரரான ஸ்ரீவ்யாஸாசார்யாராலும், இந்த விஷயம் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்பதை 'தத்து ஸமன்வயாத்' என்ற ஸமன்வய சூத்ரத்தைக்கொண்டு விளக்கப்படுகிறது. 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்திலுள்ள, 'அன்வயம்' என்ற சப்தமானது, 'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள, ஸமானவிபக்தியிஞல் சொல்லப்படும் ஸாமாஞதி கரண்யத்தைப் போல், இந்த இடத்திலும் ஸாமாஞதி கரண்யத்தை தெரிவிக்கின்றது. இவ்விதம் போதிக்கப்படுகின்ற ஸாமாஞதிகரண்யத்தில், 'அன்வயம்' என்ற பதத்துடன் 'ஸம்' என்ற விசேஷணத்தை ஆதரவோடு சேர்த்து, ஸமன்வயம் என்று தெரிவிக்கின்றது. இதன்மூலமாக, இது கௌணஸாமாஞதி கரண்யமில்லை, முக்யஸாமாஞதி கரண்யம் என்று, கௌணஸாமாஞதி கரண்யத்திலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கின்றது என்பது அறியப்படுகிறது. எப்படி நீலோற்பலம் என்னுமிடத்தில், அந்த உற்பலத்தை, மற்றுமுள்ள உற்பலங்களிலிருந்து வேறுபடுத்திநீலம் என்ற விசேஷணம் தெரிவிக்கின்றதோ, அதுபோல் 'ஸம்' என்ற விசேஷணம், ஸாமாஞதி கரண்யத்தை கௌணஸாமாஞதி கரண்யத்திலிருந்து வேறுபடுத்தி, முக்யஸாமாஞதி கரண்யம் என்று தெரிவிக்கின்றது. மேலும் 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்திலுள்ள 'து' சப்தமானது வேதாந்த வாக்யங்கள், ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தையோ, அல்லது, ஸம்ஸர்க்கத்தையோ போதிக்க வில்லை என்பதை தெரிவிக்கின்றது. 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்திலுள்ள 'தத்' சப்தமானது, கீழே 'தத்ப்ரஹ்ம' என்று, 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற சூத்ரத்திஞல் லக்ஷணம் சொல்லப்பட்டதும், 'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரத்திஞல், 'சாஸ்த்ரைக கம்யம்' என்று (சாஸ்திரமே ப்ரமாணம்) எந்த ப்ரஹ்மம் வேதாந்த தாத்பர்யவிஷயமென்று சொல்லப்பட்டதோ, தத் ப்ரஹ்ம வேதாந்த ப்ரமேயம்' என்று என்ன ப்ரதிஞ்ஞை செய்யப்பட்டதோ, அதற்கு ஹேதுவாக (காரணமாக) 'தத்துஸமன்வயாத்' என்ற சூத்ரத்தில், 'ஸம்' என்ற உபஸர்க்கத்தைச்சேர்த்து, 'ஸமன்வயம்' என்று சொல்லப்படுவதால், 'தத்'–'த்வம்' என்றபதங்களும் முக்யஸாமாஞதி கரண்யத்தையே போதிக்கின்றது என்பது அறியப் படுகிறது. ஆகவே, வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ற விஷயம் வ்யாஸாசார்யாராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது என்பது இந்த சூத்ரத்தின்மூலம் அறியப்படுகிறது.

**218. அவதாரிகை :**

ஸாமாஞதி கரண்யம் என்பது இரண்டுவிதம் என்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तद्धि द्विधैकाधिकरण्यमुक्तं गौणं च मुख्यं च विविच्य सद्भिः ।
संसर्गरूपार्थनिवेशि गौणं मुख्यं त्वखण्डार्थनिविष्टमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** கௌண ஸாமானுதி கரண்யமென்றும், முக்யஸாமானுதி கரண்யம் என்றும், இரண்டுவிதஸாமானுதி கரண்யம் சொல்லப்படுகிறது. அதில் ஸம்ஸர்க்கரூபமான அர்த்தத்தை தெரிவிப்பது எதுவோ, அது கௌணஸாமானுதி கரண்யமென்றும், அகண்டார்த்தத்தை தெரிவிப்பது எதுவோ அது முக்யஸாமானுதி கரண்யம் என்றும் வித்வான்களால் விவேசனம் செய்து சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** முக்யஸாமானுதி கரண்யமென்றும், கௌணஸாமானுதி கரண்யம் என்றும் இரண்டுவிதம் சொல்லப்படுகிறது. இதுபெரியோர்களாலும் ஒப்புக் கொள்ளப் படுகிறது. பேதகடிதமான ஸம்ஸர்க்கத்துடன் தாதாத்ம்யம் அறியப்படுமானல், அதை கௌண ஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படும். உதாரணமாக, நீலோற்பலம் என்னுமிடத்தில் நீல குணத்வமும், உத்பலத்வஜாதியும் சேர்ந்தே அந்த உத்பலத்தில் அறியப்படுகிறது. ஒரே வஸ்துவில் இவ்விதம் அனேகஸம்பந்தம் இருப்பதால், ஸம்ஸர்க் கரூபமாகவே அந்த வஸ்து அறியப்படுகிறது. அதனுல், அதை கௌண ஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது. வாக்யத்திலுள்ள பதங்கள், அஸம்ஸர்க்கமாக, விக்ஷேபமற்ற (அபேதார்த்தத்தை) ஏகரஸமான ஒரே அர்த்தத்தை போதிக்குமானல், அதையே முக்யஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, வாக்யம் ஸம்ஸர்க்க அர்த்த போதகமாக இருந்தால் கௌண ஸாமானுதி கரண்யம் என்றும், வாக்யம் அஸம்ஸர்க்கபோதகமாக இருந்தால், முக்யஸாமானுதி கரண்யம் என்றும் அறிந்து கொள்ளவேண்டும்.

**219. அவதாரிகை :**

எந்த ஸாமானுதி கரண்யம், முக்யமென்றும், கௌணம் என்றும் இரண்டுவிதமாக பிரிக்கப்படுகிறதோ அந்த ஸாமானுதி கரண்யத்தின் லக்ஷணம் என்ன? என்ருல்,

**ச்லோகம் :**

आदाय नानाविधकारणानि गिरामथैकत्र तु या प्रवृत्तिः ।
तामाहुरैकाधिकरण्यनाम्ना विपश्चितो वेदशिरःसु विप्राः ॥

**ச்லோகார்த்தம் :** அனேகவிதமான ப்ரவ்ருத்தியை காரணமாகக்கொண்டு பல பதங்கள் ஒரே விஷயத்தை போதிக்கின்ற தன்மையைத்தான் ஸாமானுதி கரண்யம் என்று வேதாந்தத்தில் நிபுணர்களான வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'நீலோற்பலம்' என்ற வாக்யமும், 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யமும், பின்னப்ரவ்ருத்தி நிமித்தங்களைக்கொண்ட அனேக பதங்களால் ஒரே வஸ்துவை போதிக்கின்றது. அதனுல் அந்த வாக்யம் ஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் இந்த இரண்டு வாக்யங்களில் ஒன்று முக்யஸாமானுதி கரண்யம் என்றும் மற்ருென்று கௌண ஸாமானுதி கரண்யம் என்றும் சொல்லப்படுகிறது.

'ஸாமானுதி கரண்யம்' என்று சொல்லப்படுவதின் ஸாமான்ய லக்ஷணம் என்ன? என்ருல், ஒரு வாக்யத்திலுள்ள, அனேக பதங்கள், அனேகவிதமான காரணங்களைக் கொண்டு, வெவ்வேறு விதமான ப்ரவ்ருத்தி நிமித்தம் உடையதாக இருந்து, அந்த பதங்கள் எல்லாம் சேர்ந்து ஒரே அர்த்தத்தையே தெரிவிக்குமானல் அதற்கு ஸாமானுதி கரண்யம் என்று பெயர். கடம், கலசம் என்பது போல் இல்லாமல், ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேருக இருக்கின்றதால், இதை பர்யாயபதம் என்றும் சொல்லமுடியாது. ப்ரவ்ருத்தி நிமித்த பேதங்கள் இருந்தாலும், அந்த பதங்கள், வெவ்வேறு அர்த்தத்தை தெரிவிக்காமல், ஒரே

அர்த்தத்தை தெரிவிக்கின்றதால், இந்த வாக்யம் வையதிகரண்யம் என்றும் சொல்லமுடியாது என்று தெரிவிப்பதற்காகவே, இந்த ச்லோகத்தில், 'ஏகத்ர அர்த்தேவ்ருத்தி:' என்று விசேஷணமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே, 'பின்னப்ரவ்ருத்தி நிமித்தானும் ஏக விபக்திகானும் ஏகத்ர அர்த்தே வ்ருத்தி:' ஸாமானுதி கரண்யம் என்று உபநிஷத்தாத்பர்ய அர்த்தங்களை அறிந்த வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**220. அவதாரிகை :**

இதில் கௌண ஸாமானுதிகரண்யம் என்றால் என்ன? என்பதற்கும், முக்யஸாமானுதி கரண்யம் என்றால் என்ன? என்பதற்கும், இரண்டிற்கும், இரண்டு உதாகரணங்களைக் கொண்டு விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नीलं सुगन्धि महदुत्पलमम्बुशायीत्येवंप्रकारमिह गौणमुशन्ति सन्तः ।
सोऽयं पुमानुदशरावगतो विवस्वानाकाशगो रविरसाविति मुख्यमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** ஜலத்தில் இருக்கின்ற உத்பலம், 'நீலம், மஹத், சுகந்தி' என்று சொல்லப்படும் வாக்யம் கௌண ஸாமானுதி கரண்யமென்றும், 'ஸோऽயம்புமான்' என்றும், ஜலபாத்ரத்திலுள்ள சூர்யனே, ஆகாசத்தில் உள்ள சூர்யன் என்றும் சொல்லப்படும் வாக்யமெல்லாம் முக்யஸாமானுதி கரண்யமென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** நீலம் ஸுகந்தி, மஹத், உத்பலம் அம்புஸாயி என்று பலபதங்கள் ஒரு புஷ்ப்பத்திற்கு (உத்பலத்திற்கு) விசேஷணமாகச்சொல்லப்படுகிறது. இதில், நீலம், சுகந்தம், என்ற இரண்டும் அந்த புஷ்ப்பத்திலுள்ள குணத்தையும், மஹத் என்பதால் அதன் பரிமாணத்தையும், உத்பலம் என்பது ஜாதியையும் குறிப்பிட்டு, ஒரே த்ரவ்யத்தையே இந்தவிசேஷணங்களைக்கொண்டு போதிக்கப்படுகிறது. இவ்விதம் பலவிசேஷணங்களைக் கொண்டு ஒரே வஸ்துவானது ஏகார்த்தமாக அறியப்பட்டபோதிலும், இதை கௌணஸாமானுதி கரண்யம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் அந்த வஸ்து விசேஷணத்துடன் கூடியதாகவே, (விசிஷ்டமாகவே) அறியப்படுகின்றதால், அதில் ஸம்ஸர்க்கம் அறியப்படுகிறது. அதனால் அதை கௌணஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது.

'ஸோऽயம்புமான்' என்ற வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களும் அந்த தேசம், அந்த காலம், இந்த தேசம், இந்த காலம் என்ற விசேஷணங்களுடன் கூடின புருஷனையே தெரிவிக்கின்றது என்றாலும், அந்தவாக்யத்திலிருந்து ஸ்வரூபமாத்ரமாக புருஷனை போதிக்கின்றதால், வ்யக்தி மாத்ரபோதமே ஏற்படுகிறது. அதனால் (ஸம்ஸர்க்கமின்றி) அஸம்ஸர்க்கமாக வ்யக்தி மாத்ர போதம் ஏற்படுவதால், 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யம் முக்யஸாமானுதிகரண்யம் என்று சொல்லப்படுகிறது. அதேபோல், ஜலபாத்ரத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற சூர்யனும், ஆகாசத்தில் இருக்கின்ற சூர்யனும் ஒன்றே என்று வாக்யப்ரயோகம் செய்கின்ற போது, விசேஷணங்கள் அற்ற (கண்டரஹிதமான) அகண்டார்த்தமான 'சூர்யன்' என்ற வஸ்துமாத்ரபோதம் ஏற்படுகிறது. ஆகவே, அஸம்ஸர்க்கமான அகண்டார்த்தத்தை போதிக்கின்ற பதங்களாக இருக்குமானல், அதையே முக்யஸாமானுதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது.

**221. அவதாரிகை :**

நீலோற்பலம் என்றும் ஸோऽயம்புமான் என்றும் சொல்லப்படும் இரண்டு வாக்யங்களினுலும், ஏகமான அர்த்தமே போதிக்கப்படுகிறது என்ற காரணத்தைக்கொண்டு

ஸாமானாதிகரண்யம் என்று சொல்லப்பட்டபோதிலும், அகண்டார்த்தத்தை போதிக்கின்ற வாக்யமே முக்ய ஸாமானாதிகரண்யம் என்றும், நீலம் உற்பலம் என்னுமிடத்தில் கௌணஸாமானாதிகரண்யம் என்றும் ஏன் சொல்லப் படுகிறது? என்றால்; 'ஸோऽயம்புமான்' என்ற வாக்யமே அகண்டார்த்தத்தை பூர்ணமாக போதிக்கின்றது, 'நீலம் உற்பலம்' என்ற வாக்யம் பூரணமான அகண்டார்த்தத்தை போதிக்கவில்லை.

**ச்லோகம் :**

एकत्र वृत्तिरिति लक्षणमत्र मुख्यं संसर्गवस्तुनि पुनर्न हि तद्घटेत ।
नानारसे हि विषये वचसां प्रवृत्तिर्नीलं सुगन्धि महदुत्पलमित्यमीषाम् ॥

**ச்லோகார்த்தம் :** எந்தவாக்யவ்ருத்தியானது ஒரே வஸ்துவை போதிக்கக்கூடியதாக, முக்யஸாமானாதிகரண்யம் என்ற லக்ஷணமுடையதாக இருக்கின்றதோ, அந்த வாக்யங்களில்தான் அகண்டார்த்தம் முக்யமாக பொருந்துகின்றது. ஸம்ஸர்க்கமாக வஸ்துவை தெரிவிக்கின்ற வாக்யங்களில் இந்த லக்ஷணம் பூர்ணமாக பொருந்துவதில்லை. 'நீலம் மஹத் சுகந்தி உத்பலம்' என்ற வாக்யம் அனேகரஸமான வஸ்துவையே போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஏகத்ரவ்ருத்தி என்ற லக்ஷணமுடையது ஸாமானாதி கரண்யம் அதாவது வாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாம் சேர்ந்து ஒரே வஸ்துவை போதிக்குமானால், அதையே ஸாமானாதி கரண்யம் என்று சொல்லப்படுகிறது. இதில் அத்யந்தம், ஏகரஸமான வஸ்துவை தெரிவிக்கின்ற வாக்யத்தில்தான் ஏகத்ரவ்ருத்தி என்ற லக்ஷணம் பூர்ணமாக இருக்கின்றது. உதாரணமாக 'ஸோऽயம்புமான்' என்ற லௌகிக வாக்யத்தில் ஏகத்ரவ்ருத்தி என்பது பூர்ணமாக இருக்கிறது. இந்த வாக்யத்தினால் அறியப்படும் புருஷன், தேசம், காலம், என்ற ஸம்பந்தங்கள் அற்றதான கேவலபுருஷனை மட்டும் போதிக்கின்றது என்பதால், அகண்ட ஏகரஸமான அர்த்தம் போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஏகார்த்தம் பூர்ணமாக போதிக்கப்படும் வாக்யமே முக்யஸாமானாதி கரண்யம் என்று சொல்லப்படும்.

'நீலம் உற்பலம்' என்ற வாக்யம் இதுபோல் அத்யந்த அபேதமான அர்த்தத்தை போதிக்கவில்லையென்றாலும், எல்லாம் சேர்ந்து ஒரே வ்யக்தியை போதிக்கின்றது என்பதால் ஏகார்த்தம் போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், நீலத்வம், உற்பலத்வம், சுகந்தத்வம், மஹத்வம் என்ற அனேக விதமான ஸம்ஸர்க்கங்களுடன் அந்த வஸ்து அறியப்படுவதால், ஏகார்த்த போதகத்வம் என்ற ஸாமானாதி கரண்யத்தின் லக்ஷணம் பூர்ணமாக பொருந்தாது. குணம், குணீ என்ற பேதம் அறியப்படுகின்ற காரணத்தினால் அந்த வாக்யத்திற்கு முக்யஸாமானாதி கரண்யம் சொல்லமுடியாது.

**222. அவதாரிகை :**

ஏகத்ரவ்ருத்தி என்பது ஸாமானாதி கரண்ய லக்ஷணம் என்று சொல்லப்பட்ட காரணத்தினால், அனேகத்ரவ்ருத்தி இல்லையென்பதை, இந்த லக்ஷணத்தினால் வேறுபடுத்தி தெரிவிக்கப்பட்டது. இப்போது, வையதிகரண்யம் என்பது இதைக்காட்டிலும் வேறுபட்டது என்று தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नानाविधैर्बहुभिरेव निमित्तभेदैर्भिन्नेषु वस्तुषु गिरामथ या प्रवृत्तिः ।
सर्वत्र वैयधिकरण्यमिति प्रसिद्धा सा शब्दवृत्तिकुशलव्यवहारभूमौ ॥

**ச்லோகார்த்தம் :** பலவிதமான ப்ரவ்ருத்தியை நிமித்தமாகக்கொண்டு பலபதங்கள், பின்னமான விஷயங்களை தெரிவிக்கின்ற தன்மையைத்தான், வையதிகரண்யம் என்று சப்த ப்ரவ்ருத்திவிஷயத்தில், நிபுணர்களான வித்வான்களின் விவகாரங்களினுல் ப்ரசித்தமாக அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒன்றுக்கொன்று வேறுபட்ட அர்த்தங்களை தெரிவிக்கின்ற அனேக பதங்களையுடைய வாக்யம், அனேக அர்த்தங்களை தெரிவிக்குமானுல் அந்த வாக்யத்தையே வையதிகரண்யம் என்று சொல்லப்படுகிறது. கீழே, 'ஆதாய நானுவித காரணுனீ' என்று ஆரம்பிக்கப்படுகின்ற ச்லோகத்தில், ஸாமானுதி கரண்ய லக்ஷணம் என்ன? என்று தெரிவிக்கின்றுபோது, 'ஏகத்ர' என்ற பதம் விசேஷணமாக சேர்க்கப்பட்டிருக்கிறது. அதனுல் வையதிகரண்யமில்லை என்று தெரிவிக்கப்பட்டது. இந்த ச்லோகத்தில் வையதிகரண்யலக்ஷணம் என்ன? என்பதை தெரிவிக்கப்படுகிறது. வாக்யத்திலுள்ள அனேக பதங்கள், அனேகவிதமான, ப்ரவ்ருத்தி நிமித்த பேதங்களுடன் அர்த்தத்தை போதித்த போதிலும், அந்த பதங்கள் அனேக அர்த்தத்தை போதிக்குமானுல் அதுவே வையதி கரண்யம் என்று லக்ஷணம் சொல்லப்படுகிறது. 'பின்னேஷு வஸ்துஷு' என்ற விசேஷணம் வையதிகரண்யத்திற்கு லக்ஷணமாகச் சொல்லப்படுகிறது. அதனுல் ஸாமானுதி கரண்யத்திலிருந்து இந்த விசேஷணம் வையதிகரண்யம் என்பதை வேறுபடுத்தி தெரிவிக்கின்றது.

**223. அவதாரிகை :**

பின்னப்ரவ்ருத்தி நிமித்தம் என்பதால் வேறுபடுத்தப்பட்ட பர்யாயபதங்களின் லக்ஷணம் என்ன? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अभिन्नहेतुर्विषये समाने विभिन्नवाचामथ या प्रवृत्तिः ।
पर्यायनाम्ना प्रवदन्ति धीराः प्रवृत्तिमेनां वचसां बहूनाम् ॥

**ச்லோகார்த்தம் :** பல பதங்கள், ஒரே ப்ரவ்ருத்தி நிமித்தமாகக்கொண்டு, ஒரு வஸ்துவையே தெரிவிக்கின்ற தன்மை உடையதாக இருக்குமானுல், அதையே பர்யாயபதங்கள் என்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒரே வஸ்துவை குறித்து பல பதங்கள் ப்ரவ்ருத்தி நிமித்த பேதமில்லாமல், போதிக்குமானுல் அதையே பர்யாயபதம் என்று சொல்லப்படும். அதாவது கலச:, கும்ப:, கட:, என்ற பதங்கள் எல்லாம் கடம் என்ற ஒரே வஸ்துவைத்தான் தெரிவிக்கின்றது இந்த பதங்களில் ப்ரவ்ருத்தி நிமித்தபேதமில்லை. அதனுல் தான் இப்பேர்ப்பட்ட பதங்களை, ஒரு வாக்யத்தில் ப்ரயயோகம் செய்யப்படுவதில்லை. ப்ரவ்ருத்தி நிமித்த பேதங்கள் இருக்கின்ற அனேக பதங்கள் ஒரு வஸ்துவை போதிக்குமானுல் அதை பர்யாயபதம் என்று சொல்லப்படுவதில்லை. ஆகவே, பர்யாயபதங்களுக்கு இதுவே லக்ஷணம் என்று சொல்லப்படுகிறது.

அப்படியானுல், ஸ்தம்பம், கும்பம், பர்வதம் போன்ற தனித்தனி பதங்கள், அததற்குரிய ஒரே அர்த்தத்தை தெரிவிப்பதால், அவைகளை பர்யாயபதம் என்று சொல்லலாமே? என்றுல் அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், ஒரே ப்ரவ்ருத்தி நிமித்தத்தைக்கொண்டு அதற்கு ஸமமான அனேக பதங்கள் ஒரே வஸ்துவை தெரிவிக்குமானுல்தான், அவைகளை பர்யாயபதங்கள் என்று சொல்லலாம். என்பதை தெரிவிப்பதற்காகவே, 'ஸமானவிஷயே' என்ற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும்,

கட:, கலச:, கும்ப:, என்ற பதங்களையே பர்யாயபதம் என்று சொல்லப்படுகிறதேயன்றி கட:, கட:, கட:, என்று பலமுறை ப்ரயோகம் செய்யப்படுமானுல் அதை பர்யாயபதம் என்று சொல்லப்படுவதில்லை. ஒரு பதமே பலமுறை ப்ரயோகம் செய்யப்படுமானுல், புனருக்திதோஷம் ஸம்பவிக்கும். ஆகையால் இந்த விஷயத்தை தெரிவிப்பதற்காகவே, 'விபின்னவாசாம்' என்று ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**224. அவதாரிகை :**

வையதிகரண்யம், பர்யாய்ம், என்ற இரண்டிற்கும், அதற்குரிய உதாகரணங்களைக் கொண்டு மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कुडयं गृहस्य सरसोऽम्बुजमस्य वस्त्रमित्यत्र वैयधिकरण्यमिति प्रसिद्धम् ।
एवं मुखं वदनमाननमित्यमीषां पर्यायताऽपि विदितैव पुरोक्तहेतोः ॥

**ச்லோகார்த்தம் :** முன்னுல் சொல்லப்பட்ட காரணங்களினுல், 'வீட்டின் சுவர்' 'ஒடையின் தாமரை' 'இவருடைய வஸ்திரம்' என்பது போன்ற வாக்யத்தின் ப்ரவ்ருத்தியானது வையதிகரண்யம் என்பது ப்ரசித்தம். அதேபோல், 'முகம்' 'வதனம்' 'ஆனனம்' முதலான பதங்கள் பர்யாய பதங்கள் என்று அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வையதிகரண்யம் என்பதை முன்னுலும், பர்யாயபதம் என்பதை பின்னுலும் விளக்கப்படுவதற்கு என்ன காரணம்? என்ருல், ஒரு சப்தமானது ஒரு பொருளைத்தான் குறிக்கவேண்டுமென்பது ஒரு ந்யாயம். ஒரே அர்த்தத்தை (பொருளை) அனேக சப்தங்கள் குறிக்கின்றது என்பது அநியாயம். (ந்யாயமில்லை) ஆனுல் கவிகளால், அனுதிகாலமாகவே இப்பேர்ப்பட்ட பதங்கள் ப்ரயோகம் செய்யப்படுகின்றதால் அதை ஒத்துக்கொள்ளவேண்டிய நிர்பந்தம் இருக்கின்றது என்பதால்தான், பர்யாயபதங்கள் என்று ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. கடம், கலசம், கும்பம் என்ற பதங்களில், கடம் என்ற பதம் தான் முக்யம், மற்றவை அமுக்யம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் எல்லாபதங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தம் என்பது ஒன்றுதான் என்பதால் பர்யாய பதங்கள் என்றே ஒத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகையால் வையதிகரண்யம் என்பதைவிட, பர்யாய பதங்களுக்கு பலம் குறைவாக இருக்கின்றதால் அதை பின்னுல் சொல்லப்படுகின்றது.

'வீட்டின் சுவர்' என்ற வாக்யத்திலுள்ள பதங்கள் இரண்டும் வெவ்வேறு ப்ரவ்ருத்தி நிமித்தங்களைக்கொண்டு, வீடு என்றும், சுவர் என்றும் வெவ்வேறு அர்த்தத்தை போதிக்கின்றது. இதேபோல், ஸரஸ: அம்புஜ: என்ற பதங்கள் ஒடையிலுள்ள அம்புஜமலர் என்றும் இவருடைய வஸ்திரம் என்ற பதங்களும், வெவ்வேறு ப்ரவ்ருத்தி நிமித்தங்களைக் கொண்டு வெவ்வேறு அர்த்தத்தை போதிக்கின்றதால், அதை வையதிகரண்யம் என்று சொல்லப்படுகிறது.

முகம், வதனம், ஆனனம் என்ற பதங்கள் எல்லாம் ப்ரவ்ருத்தி நிமித்த பேதமில்லாமல் முகம் என்ற ஒரேஅர்த்தத்தை போதிக்கின்றதால், அதற்கு பர்யாயபதங்கள் என்று சொல்லப்படுகின்றது.

**225. அவதாரிகை :**

இதுவரையில், வையதிகரண்யம், பர்யாயபதங்கள், கௌண ஸாமானுதிகரண்யம், முக்யஸாமானுதி கரண்யம் என்ற நான்கு விதமான விஷயங்களைப்பற்றி விளக்கப்பட்டது.

இவ்விதம் சொல்லப்பட்டவைகளில், மற்ற எல்லாவற்றையும் விட்டு விட்டு 'தத்வமஸி' என்ற மஹா வாக்யத்திற்கு, முக்யஸாமானுதி கரண்யத்தைக்கொண்டே அகண்டார்த்தம் போதிக்கப்படவேண்டும் என்று பிடிவாதமாகச்சொல்லப்படுவதற்கு என்ன காரணம்? என்றால், 'தத்வமஸி' மஹாவாக்யங்களில் மற்ற மூன்றும் ஸம்பவிக்க முடியாது என்பதை மேலே விளக்கப்படுகிறது,

**ச்லோகம் :**

पर्यायता न खलु तत्त्वमसीति वाक्ये नापीह संभवति भेदकभेद्यभावः ।
तत्त्वंपदार्थगतमेकरसैकभागं तत्त्वंपदे समुपलक्षयतो विरोधात् ॥

**ச்லோகார்த்தம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தில் பர்யாய பதங்கள் என்றோ, வையதி கரண்யம் என்றோ சொல்வதற்குமுடியாது. (ஏனெனில்) தத், த்வம் என்ற பதங்களின் வாச்யார்த்தத்தில் விரோதம் இருக்கின்றதால், வாச்யார்த்தத்தினுடைய ஏகதேசமான அகண்டசைதன்யத்தை தத், த்வம் என்ற பதங்கள், லக்ஷணையாக தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள தத்—த்வம் என்ற இரண்டுபதங்களும், ப்ரவ்ருத்தி நிமித்த பேதம் உடையதாக இருக்கிறது. அதனால் பர்யாயபதம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் வேதவாக்யமாக இருக்கின்றதால், ஒரே வாக்யத்தில் ஒரே ஸமயத்தில் ஒரே அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய இரண்டு பதங்கள் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது என்று சொல்லமுடியாது.

'ராஞ்ஞ: புருஷ:' என்ற வாக்யம் போல் தத்—த்வம் என்ற பதங்களுக்கு வையதிகரண்யேன அன்வயம் சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ராஜாவினுடைய புருஷன் என்று இரண்டுபதங்களும் வெவ்வேறு விபக்தியில் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல் தத்—த்வம் என்ற இரண்டுபதங்களும் வெவ்வேறு விபக்தியில் சொல்லப்படவில்லை. ஏகவிபக்தியில் சொல்லப்படுவதால் வையதிகரண்யேன அன்வயம் சொல்லமுடியாது. (ராஞ்ஞ: என்பது ஷஷ்டியிலும், புருஷ: என்பது ப்ரதமா விபக்தியிலும் சொல்லப்படிருக்கிறது.)

'தத்' என்பது 'ஈச்வரன்' என்றும், 'த்வம்' என்பது 'ஈசிதவ்யம்' என்றும் அர்த்தம் செய்யப்படுமானால் இரண்டிற்கும் ஸம்பந்தம் அறியப்படுவதாகச்சொல்லலாமே? என்றால், அவ்விதம் ஸம்பந்தத்தை தெரிவிக்கின்ற வாக்யமாக இருக்குமானால் 'தஸ்யத்வமஸி' என்றே வாக்யம் இருக்கவேண்டுமே தவிர, வாக்யம் 'தத்—த்வமஸி' என்று இருக்கமுடியாது.

**பூர்வ :** 'தத்' என்ற பதப்ரயோகம் இருந்தபோதிலும் 'ஷஷ்ட்யர்த்தே ப்ரதமா' என்று சில இடங்களில் ஷஷ்டி அர்த்தத்தில் ப்ரதமையை உபயோகம் செய்யப்படுவதால், அதேபோல் இந்த இடத்திலும் சொல்லலாமே? ஆகவே, ப்ரதமார்த்தத்தில் சொல்லப்பட்டிருந்தாலும் லக்ஷணையினால் ஷஷ்டி அர்த்தம் சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் வேதமானது, எந்த அர்த்தத்தை இந்த வாக்யத்தின் தாத்பர்ய விஷயமாக தெரிவிக்கின்றது என்பதை அறிந்தே, இந்த வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லப்படவேண்டும். சிருஷ்டி வாக்யங்களும், ப்ரவேச ச்ருதிவாக்யங்களும், ஏகத்வம் என்பதை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையதாக இருக்கிறது என்பதை உபக்ரம உபஸம்ஹாராதிகளைக்கொண்டு அறியப்படுகிறது. ஆகையால் தாத்பர்ய விஷயத்திற்கு விரோதமாக அர்த்தம் செய்வதற்குமுடியாது. அதனால் பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு, விரோதமில்லாதமுறையில் வாக்யத்திற்கு அகண்டார்த்தமே அர்த்தமாகச்சொல்லப்படவேண்டும்.

நீலம் உற்பலம் என்பதுபோல், விசேஷண விசேஷ்யபாவேன அன்வயம் சொல்லப்படுமானுல் ஸம்ஸர்க்கம் அறியப்படுகிறதென்றே சொல்லவேண்டும். அவ்விதம் ஸம்ஸர்க்கம் அறியப்படுமானுல் 'ப்ரஹ்ம' மென்பது ஸவிஸேஷம் என்று சொல்லநேரிடும் அதுமட்டுமல்ல. இரண்டுபதங்களுக்கும் வாச்யார்த்த விரோதம் ஏற்படும். அதனுல் விருத்தமான தன்மையுடைய இரண்டுபதார்த்தங்களுக்கு, விசேஷண விசேஷ்யபாவம் என்பதும் ஸம்பவிக்காது. ஆகையால் நீலோற்பலம் என்பது போல் கௌணஸாமானுதி கரண்யம் சொல்லமுடியாது. அதனுல் தத்–த்வம் என்ற இரண்டு பதங்களுடன்கூடிய 'தத்வமஸி' மஹாவாக்யம், முக்யஸாமானுதி கரண்யத்தினுல் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஆகையால் ஸம்ஸர்க்கமென்ரூ, பேதமென்ரூ, விசிஷ்ட்டம் என்ரூ சொல்லமுடியாது என்பதால், அஸம்ச்ருஷ்ட்டமான அக்ண்டார்த்தபரமான இந்த 'தத்வமஸி' மஹாவாக்யம் முக்யஸாமானுதி கரண்யம் என்பதையே, 'ஸமன்வயம்' என்பதிலுள்ள 'ஸம்' என்ற சப்தமானது தெரிவிக்கின்றது. ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம' என்ற அவாந்தர வாக்யமும், ப்ரஹ்மலக்ஷணத்தை தெரிவிக்கின்ற வாக்யமாக இருக்கின்றதால், அகண்டார்த்த போதகவாக்யமென்றே சொல்லவேண்டும். எப்படி 'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யம் அகண்டார்த்த போதகவாக்யமாக இருக்கின்றதோ அதுபோல், இந்த வாக்யமும் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

प्रकृष्टप्रकाशध्वनी व्यक्तिमेकां यथा लक्षणावर्त्मनोपक्षिपेताम् ।
शशाङ्कादिशब्दार्थसंकीर्तने सच्चिदानन्दशब्दाः परं ब्रह्म तद्वत् ॥

**ச்லோகம் :** 'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யப்ரயோகம் செய்யபடுகின்றபோது, ப்ரக்ருஷ்ட்ட:, ப்ரகாச: என்ற இரணடு பதங்களும் சந்த்ரன் என்ற ஒரேவ்யக்தியை மட்டும் எப்படி லக்ஷணையினுல் தெரிவிக்கின்றதோ, அதேபோல் 'சத்சித்ஆனந்தம்', என்ற சப்தங்களும் பரப்ரஹ்மத்தையே போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஆகாசத்தில், நக்ஷத்ரம், சந்த்ரன், என்ற எல்லாம் சேர்ந்து, ஜ்யோதிர்மயமாக ப்ரகாசிக்கின்றபோது, அதைப்பார்க்கின்ற ஒருவனுக்கு, இவைகளில் சந்த்ரன் என்பது எது? என்று தெரியவில்லை. அதனுல் மற்றவனைப்பார்த்து, 'சந்த்ரன்' என்பது எது? என்று கேட்க்கின்ருன். இதைக்கேட்டவன், 'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாச: சந்த்ர:' என்று பதில் சொல்கிருன். இதைக்கேட்டவுடன் அவனுக்கு கேவலசந்த்ர வ்யக்தி மட்டுமே அறியப்படுகிறது. இவ்விதம் ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம், என்ற மற்ற பதங்களின் அர்த்தத்தைவிட்டு எப்படி சந்த்ரவ்யக்தி மாத்ரம் க்ரஹிக்கப்படுகிறதோ அதுபோல், 'கிம்ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபத்தை அறியவிரும்புகிறவனுக்கு 'சத்சிதாத்மகம் ப்ரஹ்ம' என்று போதிக்கப்படும் வாக்யத்தினுல், அகண்டார்த்தமான ப்ரஹ்மஸ்வரூபமாத்ரம் அறியப் படுகிறது. சந்த்ரவ்யக்தி எது? என்று அறியவேண்டுமென்று விரும்புகின்றவனுக்கு, அவனுடைய ஜிஞ்ஞாஸையை அறிந்து ப்ரக்ருஷ்ட்டப்ரகாச: சந்த்ர: என்று பதில் சொல்லப்பட்டது. இதனுல் ப்ரக்ருஷ்ட்டம் என்பதால் அல்பப ப்ரகாசமுடைய நக்ஷத்திரமல்ல என்றும் ப்ரகாசம் என்று சொல்லப்பட்டதால் கும்மிருட்டு அல்ல என்றும் ஏற்கனவே தன்னுல் அறியப்பட்ட ப்ரக்ருஷ்ட்ட அம்ஸம், ப்ரகாச அம்ஸம் என்ற இரண்டையும்விட்டு, கேவல சந்த்ர வ்யக்தியை மட்டுமே அறிந்துகொள்கிருன். இதேபோல், 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யத்தினுலும் பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்த போதம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**227. அவதாரிகை :**

'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாச : சந்த்ர :' என்ற வாக்யத்திலும் ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசகமாக இருப்பது எதுவோ, அது சந்த்ரன் என்று தெரிவிக்கின்றபோது, மிகுந்த ப்ரகாசமுடையது சந்த்ரன் என்று ப்ரகாச ஸம்பந்தமுள்ளதாகவே சந்த்ரன் என்பது போதிக்கப்படுகிறது. அவ்விதம் இருந்தும், அந்த வாக்யம் ஸம்ஸர்க்கத்தை விட்டு அகண்டார்த்தத்தையே போதிப்பதாகச்சொல்லப்படுமானுல், அதேபோல் நீலம் உற்பலம் என்ற வாக்யத்திலும், நீலகுணம், உற்பலம் என்ற த்ரவ்யம் இவை இரண்டிலுமுள்ள ஸம்ஸர்க்கத்தைவிட்டு, ஒரே வ்யக்தியைமட்டும் இந்த வாக்யம் போதிக்கின்றது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

न नीलोत्पलाद्या गिरो व्यक्तिनिष्ठाः स्ववाच्यार्थसंसर्गमात्राभिधानात् ।
विरोधे हि वाच्यच्युतिर्नाविरोधे गिरां लक्षणाऽत्रापि चेदस्तु साम्यम् ॥

**ச்லோகார்த்தம் :** நீலோற்பலம் போன்ற வாக்யங்கள் வ்யக்திமாத்ர நிஷ்ட்டம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், அந்த பதங்கள் தன்னுடைய வாச்யார்த்தங்களின் ஸம்ஸர்க்கத்தையே தெரிவிக்கின்றது. வாச்யார்த்தத்தில் விரோதம் ஏற்பட்டால்தான், வாச்யார்த்த த்யாகம் செய்யப்படுகிறது. விரோதமில்லையென்ருல் வாச்யார்த்தம்விடப் படுவதில்லை. இந்த வாக்யத்திலும் லக்ஷணார்த்தமே சொல்லப்படுமானுல், இந்த வாக்யமும் ப்ரக்ருஷ்ட்டப்ரகாச: சந்த்ர: என்ற வாக்யம் போல் எடுத்துக்கொள்ளப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'நீலம் உற்பலம்' என்ற வாக்யம் ஸம்ஸர்க்கத்தை தெரிவிப்பதற்காகவே, ப்ரயோகம் செய்யப்படுகிறது. இந்த வாக்யத்தில் அறியப்படும் ஸம்ஸர்க்கமான வாச்யார்த்தத்திலுல் விரோதம் ஏதும் அறியப்படவில்லை. இவ்விதம் வாச்யார்த்தமே ஸம்பவிக்கின்றபோது, அதைவிட்டுவிட்டு லக்ஷணையைக்கொண்டு இஷ்ட்டம்போல் அர்த்தம் செய்யப்படுவதை ஒத்துக்கொள்ளமுடியாது. ஏனெனில், நீலம், மஹத், சுகந்தி, உற்பலம், என்ற அந்த உற்பலத்திலுள்ள விசேஷ தன்மைகளை தெரிவிக்கவேண்டுமென்ற நோக்கமுடையதாக இருக்கின்றதால், அந்த வாக்யத்தில் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யமே கிடையாது. வாக்யார்த்த ஸம்பந்தத்தில் விரோதம் இருந்தால்தான் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும். அல்லது, வாச்யார்த்த விரோதம் இல்லையென்ருலும், வ்யக்தியை மட்டும் போதிப்பதில்தான் வாக்யத்திற்கு தாத்பர்யம் என்று இருக்குமானுல், அந்த இடத்தில் லக்ஷணையை ஒத்துக்கொள்வதில் ஆக்ஷேபமில்லை. ஆகவே, 'நீலம் உற்பலம்' என்ற வாக்யமும், 'ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம' என்ற வாக்யம் போலவும், 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யம் போலவும், லக்ஷணையாக வ்யக்திமாத்ரபோதகம் என்று சொல்லப்பட்டாலும் கூட அதில் விரோதம் ஏதும் ஏற்படாததால், வ்யக்திமாத்ர போதகம் (அகண்டார்த்தம்) என்பதற்கு மேலும் ஒரு த்ருஷ்ட்டாந்தம் என்றே ஏற்றுக்கொள்ளலாம்.

**228. அவதாரிகை :**

'நீலம் உத்பலம்' என்ற வாக்யம், எப்படி அகண்டார்த்தத்தை போதிக்கின்றது? என்ருல்,

**ச்லோகம் :**

न नीलत्वजात्याश्रयव्यक्तितः स्याद्विभिन्नोत्पलत्वाश्रयव्यक्तिरेषा ।
तथैवोत्पलत्वाश्रयव्यक्तितः स्यान्न नीलत्वजात्याश्रयव्यक्तिरन्या ॥

**ச்லோகார்த்தம் :** நீலத்வ ஜாதிக்கு எது ஆச்ரயமோ, அதைக்காட்டிலும், உத்பலத்வஜாதிக்கு ஆச்ரயமான வ்யக்தி வேறுபட்டது என்று சொல்வதற்கு முடியவில்லை. அதேபோல் உத்பலத்வஜாதிக்கு ஆச்ரயமான வ்யக்தியைக்காட்டிலும், நீலத்வஜாதிக்கு ஆச்ரயமானவ்யக்தி என்பதும் வேறாக இல்லை.

**வ்யாக்யானம் :** நீலத்வம், உத்பலத்வம் என்பதால் லக்ஷிதமான வ்யக்தியில் பேதம் என்பது கிடையாது. குணகுணீபாவமென்பது கல்பனாமாத்ரமாக இருக்கின்றதால், வ்யக்தி மாத்ரம் அகண்டார்த்தமாகவே, அறியப்படுகிறது. நீலகுணம் என்பதையும், உத்பலம் என்பதையும், அந்தவ்யக்திக்கு விசேஷணமாகச்சொல்லப்பட்டால்தான் விசிஷ்டார்த்த போதம் ஏற்படும். அவ்விதமின்றி, நீலகுணத்தையும், உத்பலம் என்பதையும் உபலக்ஷணமாகச்சொல்லப்படுமானால், லக்ஷணையினால் வ்யக்தி மாத்ரம் போதிக்கப்படுவதாகச் சொல்லலாம்.

ஜாதி சக்திவாதிகளான மீமாம்ஸகர்கள், நீலம், உத்பலம் என்ற இரண்டு பதங்களும், நீலத்வ ஜாதி, உத்பலத்வஜாதி, என்ற இரண்டையுமே தெரிவிப்பதாகச் சொல்கிறார்கள். நையாயிகர்கள், நீலம் உத்பலம் என்ற பதங்கள் ஜாதியைமட்டும் போதிக்கவில்லையென்றும், ஜாதி விசிஷ்ட்ட வ்யக்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்கிறார்கள். ஆகவே, மீமாம்ஸகர்கள் பக்ஷத்தைக்கொண்டு, 'நீலம் உத்பலம்' என்ற வாக்யத்திற்கு அகண்டார்த்தம் சொல்லப்படவேண்டுமானால், ஜாதியைவிசேஷணமாகச் சொல்லாமல், உபலக்ஷணம் என்று தெரிவித்து, அகண்டார்த்தம் சொல்லப்படவேண்டும்.

நையாயிகர் பக்ஷத்தைக்கொண்டு அகண்டார்த்தம் சொல்லப்படவேண்டுமானால், ஜாத்யாதிகளுடன் விசேஷணமாகச்சேர்ந்து அறியப்படும் வாச்யார்த்தத்தில், ஜாத்யாதி அம்ஸங்களை விட்டு பாக்த்யாகலக்ஷணையைக்கொண்டு வ்யக்திமாத்ரம் போதிக்கப் படுவதாகச்சொல்லவேண்டும்.

**229. அவதாரிகை :**

'நீலோத்பலம்' என்ற வாக்யம், அகண்டார்த்தத்தை போதிக்கின்றதாக யாராலும் அறியப்படவில்லை. ஆகவே, அந்த வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று எப்படிச்சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

न नीलोत्पलादिप्रदेशेषु किंचिद्गिरां लक्षणाकारणं तेन तत्र ।
न नीलोत्पलत्वादिकव्यक्तिनिष्ठा गिरस्ता भवेयुः प्रमाणादृते नः ॥

**ச்லோகார்த்தம் :** 'நீலோத்பலம்' முதலான வாக்யங்களில் பதங்களுக்கு லக்ஷணை சொல்லவேண்டும் என்பதற்குரிய காரணம் ஏதுமில்லை. ஆகையால், இந்த இடங்களில் ப்ரமாணம் ஏதுமின்றி, நீலோத்பல வ்யக்தியை மட்டும் வாக்யம் தெரிவிக்கின்றது என்று சொல்லமுடியாது என்பதே எங்களுடைய அபிப்ராயம்.

**வ்யாக்யானம் :** நீலம் உத்பலம் என்ற வாக்யம் முக்யார்த்தத்தையே போதிக்கின்றது என்பதில் எந்த விதமான விரோதமும் கிடையாது. என்பதால் இந்த வாக்யம், ஸம்ஸ்ருஷ்டார்த்த போதகமாக இருந்தாலும், அதற்கு ப்ராமாண்யம் உண்டு. முக்யார்த்த

விரோதம் இல்லாவிட்டாலும், இந்த வாக்யம் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுமாஞல், அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும்.

'கங்காயாம் கோஷ :' என்று வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில், கங்கையில் கோஷம் என்ற முக்யார்த்தம் ஸம்பவிக்காததால், லக்ஷணையைக்கொண்டு 'தீரம்' என்று அர்த்தம் சொல்ல வேண்டிய காரணம் இருக்கின்றது. இதுபோல், 'கங்காயாம் மீஞ: சந்தி' என்று வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில், கங்கையில் மீன்கள் இருக்கின்றது என்று முக்யார்த்தத்தை தெரிவிக்கின்ற வாக்யமாக இருந்தாலும், அந்த வாக்யத்திலும் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப் படவேண்டுமென்று சொல்வது பொருந்தாது. இதேபோல், 'கங்காயாம் மீஞ : சந்தி :' என்ற வாக்யத்தில் லக்ஷணை சொல்லக்கூடாது என்பதற்காக, 'கங்காயாம் கோஷ :' என்ற வாக்யத்திலும் லக்ஷணை சொல்லக்கூடாது என்று சொல்வதும் பொருந்தாது. ஆகவே, இதேபோல், 'நீலம் உத்பலம்' என்ற வாக்யத்திலும் லக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தம் சொல்லப்படலாமே? என்ற கேள்வியை முன் னிட்டு, ப்ரௌடி வாதத்திஞல் பதில் சொல்லப்பட்டது. அதாவது, 'உத்பலம்' என்பது எது? என்று அறிய விரும்புவாஞகில் நீலமாக இருப்பது எதுவோ, அதுவே உத்பலம் என்று சொல்லாம் என்ப தையே இங்கு சொல்லப்பட்டது. இதேபோல் 'நீலகுணம்' எது? என்று அறியவிரும்புபவனுக்கு உத் பலமாக இருப்பது எதுவோ அதுவே நீலம் என்று அறிய விரும்புகின்றவனின் விருப்பத்தை அறிந்து போதிக்கப்படுகின்றபோது, அந்த வாக்யமும் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்று வாதத்திற்காக ஒப்புக்கொண்டு சொல்லப்பட்டது. ஆஞல் உண்மையில், 'நீலோத்பலம்' என்ற வாக்யம் அகண்டார்த்த போதகம் என்று சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** அப்படியாஞல் 'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யமும், ப்ரக்ருஷ்ட்டமாகவும், ப்ரகாசமாகவும் இருக்கின்ற சந்த்ரனையே அர்த்தமாக தெரிவிக்கின்றதால், அந்த வாக்யத்தையும் ஸம்ஸ்ருஷ்ட்டார்த்த போதகம் என்றே, சொல்லலாமே?

**சித்தா :** இந்த வாக்யத்தை அவ்விதம் சொல்லமுடியாது. 'நீலம் உத்பலம் என்ற' வாக்யம், நீலகுணத்தையுடையதும், உத்பலத்வ ஜாதியையுடையதுமான ஒரு வ்யக்தியைக் குறிக்கின்றது. அதுபோல் 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யம் போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில், உஷ்ணமாகவும், ப்ரகாசமாகவும் இருப்பது எதுவோ அதுவே அக்னி என்று 'உஷ்ணப்ரகாசாத்மக: வன்னி:' என்ற வாக்யம் தெரிவிக்கின்றது. அதேபோல், ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசாத்மகமாக இருப்பதே சந்த்ரன் என்று சொல்லப்படுவதால் சந்த்ர ஸ்வரூபமே ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே நீலம் உத்பலம் என்பது போல் ப்ரக்ருஷ்ட்டப்ரகாச: சந்த்ர: என்ற வாக்யம் ஸம்ஸ்ருஷ்ட்டார்த்த போதகம் என்று சொல்லமுடியாது. அதஞல் 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யம் லக்ஷணையிஞல் கேவல அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**230. அவதாரிகை :**

குணம், குணீ என்பதெல்லாம் கல்பஞ மாத்ரம் என்று சொல்லப்படுவதால், 'நீலம் உத்பலம்' என்னுமிடத்திலும் அபேதமே அறியப்படுகிறது என்பதால், இந்த வாக்யமும் லக்ஷ ணையிஞல் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில்,

**ச்லோகம் :** इदमुपेत्य किमप्युदितं मया न तु तयोरभिदा परमार्थतः ।
गुणगुणित्वकृतोऽतिशयस्तयोर्भवति लक्षणयाऽपि गृहीतयोः ॥

**ச்லோகார்த்தம் :** பூர்வபக்ஷியின் வாதத்தை ப்ரௌடமாக ஒத்துக்கொண்டு இந்தவிதம் அகண்டார்த்தம் ஸம்பவிக்கலாம் என்று என்னுல் சொல்லப்பட்டது. ஆனுல் உண்மை என்னவென்ருல், அந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அபேதார்த்தம் கிடையாது. லக்ஷ்யார்த்தத்தை எடுத்துக்கொண்டபோதிலும், அந்த பதங்களுக்கிடையே குணம், குணீ என்ற பேதம் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'நீலம் உத்பலம்' என்ற வாக்யத்திஞல் அறியப்படும் ஒரு சிறிதளவு அபேதத்தைக்கொண்டு, அகண்டார்த்தம் ஸம்பவிக்கலாம் என்று அப்யுபேத்யவாதமாக ஒப்புக்கொண்டு சொல்லப்பட்டது. ஆனுல், உண்மையில் குணம், குணி என்ற விவகாரம் இருக் கின்றதால் அத்யந்த அபேதம் சொல்லமுடியாது. ஏனெனில் நீலம் என்ற பதம் எந்த அர்த்தத்தை போதிக்கின்றதோ அந்த அர்த்தத்தை உத்பல, பதம் போதிக்கமுடியாது. உத் பலபதம் எந்த அர்த்தத்தை போதிக்கின்றதோ, அந்த அர்த்தத்தை நீலம் என்ற பதம் போதிக்கமுடியாது. அதனுல் அகண்டார்த்தம் என்பது ஸம்பவிக்கமுடியாது.

**பூர்வ :** நீலகுண விசேஷணமுள்ள வ்யக்தியும், உத்பலத்வ விசேஷணமுள்ள வ்யக்தியும் ஒன்று என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதமும் சொல்லமுடியாது. நீலத்வ ஜாதிக்கு ஆச்ரயமான வ்யக்தி என்பது, நீலகுணவ்யக்தி என்றும், உத்பலத்வஜாதிக்கு ஆச்ரயமானவ்யக்தி என்பது உத்பல வ்யக்தியென்றும் சொல்லப்படுவதால், லக்ஷணையிஞல் இந்த இரண்டு வ்யக்திகளும் ஒன்று என்று சொல்லமுடியாது. இரண்டையும் த்ரவ்யம் என்ற முறையில் அபேதம் சொல்லலாமே? என்ருல், அதுவும் சொல்லமுடியாது. ஏனெனில் நீலத்வஜாதிக்கு ஆச்ரயமானவ்யக்தி நீலகுணம். உத்பலத்திற்கு ஆச்ரயமானவ்யக்தி என்பது த்ரவ்யம். ஆகையால் நீலம் என்ற குணம், உத்பலம் என்ற த்ரவ்யம் இரண்டிற்கும் குணகுணீபாவேன ஸம்பந்தம் இருக்கின்றதென்பது லோகப்ரசித்தம். அதனுல் இரண்டிற்கும் பேதமில்லை என்று யாராலும் சொல்லமுடியாது.

**பூர்வ :** ஸன்மாத்ரேண இரண்டும் ஒன்றே என்று லக்ஷணையிஞல் சொல்லப்படலாமே?

**சித்தா :** உத்பலத்வஜாதி ஆச்ரயமான வ்யக்தியை ஸன்மாத்ரம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், நீலகுண ஆச்ரயம் உத்பலம் என்பதால், நீலம் என்பது, குணம், உத்பலம் என்பது குணீ என்ற பேத ப்ரதீதீ ஞானம் இருக்கின்றதால் ஸன்மாத்ரபோதகம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** நீலவ்யக்தி, உத்பலவ்யக்தி என்ற இரண்டும் ஸன்மாத்ரம் என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லப்படுமானுல் லக்ஷித லக்ஷணை என்ருகுமேயன்றி லக்ஷணையிஞல் ஸன்மாத்ரம் என்று அறியப்படுவதாகச்சொல்லமுடியாது. மேலும் நீலம் உத்பலம் என்பதை லக்ஷணையிஞல் ஸன்மாத்ரம் என்று சொல்லப்படுமானுல், ப்ரபஞ்சம் அனைத்தையும் ஸன்மாத்ரம் என்றே சொல்லலாம் என்ருகும். அதனுல் லோகத்தில் வ்யவஹாரம் என்பதே இருக்குமுடியாது. ஆகவே, இவ்வித ஆக்ஷேபங்கள் பொருந்தாது.

**231. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானுல், "ப்ரக்ருஷ்டப்ரகாச: சந்த்ர:" என்ற வாக்யமும் ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தையே போதிப்பதாகச்சொல்லநேரிடும்.

ஏனெனில், ப்ரக்ருஷ்டத்வம் என்பது ஒரு ஜாதி, ப்ரகாசத்வம் என்பது ஒரு ஜாதி. அதனுல் ப்ரக்ருஷ்டத்வம் என்பது ப்ரகர்ஷ ஆச்ரயத்தையும், ப்ரகாசத்வம் என்பது ப்ரகாச ஆச்ரயத்தையும்

போதிக்கின்றது. இந்த இரண்டு விசேஷணங்களும் சேர்ந்து, விசேஷ்யமான சந்த்ரவ்யக்தியை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், குணகுணிபாவஸம்பந்தத்தினால் பேதம் அறியப்படுகிறது. இவ்விதம் பேதம் அறியப்படுமானால், முக்யார்த்தம் ஸம்பவிக்காது. ஆகையால் ப்ரக்ருஷ்ட்டம் ப்ரகாசம் இரண்டும் சந்த்ரவ்யக்திபரம் என்று சொல்லவேண்டுமானால், மறுபடிலக்ஷணை சொல்லப்படவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் இந்த வாக்யம் லக்ஷித லக்ஷணையினால் போதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும், என்ற இந்த ஸங்கைக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रकृष्टप्रकाशत्वजाती हि लोके प्रकृष्टप्रकाशाभिधानाभिधेये ।
तयोरन्वये कीर्त्यमाने तु ताभ्यां शशाङ्काभिधानाभिधेयं न लभ्यम ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில், ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம், என்ற பதங்கள் ப்ரக்ருஷ்ட்டத்வஜாதி, ப்ரகாசத்வஜாதி என்பதை வாச்யார்த்தமாக தெரிவிக்கின்றது. இந்த இரண்டு பதங்களினால், ப்ரக்ருஷ்ட்டத்வ ஜாதிக்கும், ப்ரகாசத்வ ஜாதிக்கும் அன்வயம் சொல்லப்படுமானால் அந்த பதங்களுக்கு சந்த்ரன் என்ற அர்த்தம் சித்திக்காது.

**வ்யாக்யானம் :** ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம் என்ற பதங்களின் வாச்யார்த்தமான, ப்ரக்ருஷ்ட்டத்வஜாதி, ப்ரகாசத்வஜாதி என்பவைகளுடன் (ஸம்ஸ்ருஷ்ட்டமாக) சேர்த்து அர்த்தம் சொல்லப்படுமானால், சந்த்ரன் என்ற பதத்தினுடைய (ப்ராதிபதிகார்த்தம்) அர்த்தம் சித்திக்காது. (அதாவது சந்த்ரனெது? என்று தெரிவித்ததாக ஆகாது.) ஆகையால் ஜ்யோதிர்மண்டலத்தில் ப்ரகாசிக்கின்ற இவைகளில் சந்த்ரன் எது? என்ற கேள்விக்கு எது உத்தரமோ, அதை மட்டுமே உத்தரவாக்யத்தில் சொல்லப்படவேண்டும். ஏனெனில் கேள்வியும் பதிலும் ஒரே விஷயத்தைப்பற்றியதாக இருக்கவேண்டும் என்பது நியமம். அவ் விதநியமமின்றி கேள்வி ஒன்று, பதில்வேறு ஒன்றாக இருக்குமானால் (அனவதேயம்) ச்ரத்தையின்றி பதில் சொல்லப்படுவதாக ஆகும். அதுமட்டுமல்ல. கேள்விகேட்டவனின் ஆகாங்க்ஷையும் நிவர்த்திக்காது. ஆகவே, ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: என்ற வாக்யத்திலுள்ள, ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம் என்ற இரண்டினுடைய ஸம்பந்தம் வாச்யார்த்தத்தில் அறியப்பட்டபோதிலும், லக்ஷணையாக இரண்டுபதங்களும் சந்த்ரவ்யக்தியை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அதனால் தத்வமஸ்யாதி மஹா வாக்யங்களும் ஸத்யம் ஞானம் அனந்தம் என்பது முதலான வாக் யங்களும் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. மேலும், இந்தச்லோகத்தில் ப்ரக்ருஷ்ட்டத்வம், ப்ரகாசத்வம் என்ற இரண்டையும் ஜாதி என்பதாக இந்த க்ரந்தக்காரரால் சொல்லப்படுகிறது.

ஆனால் இவைகளை ஜாதி என்று சொல்லப்படுமானால் ஸாங்கர்யதோஷம் என்பது ஸம்பவிக்கும் என்று வைசேஷிகர்களால் சொல்லப்படுகிறது. ஆனால் இந்த க்ரந்தக்காரர் இவைகளை ஆதரிக்காமல் இந்த இடத்தில், ப்ரக்ருஷ்ட்டத்வம், ப்ரகாசத்வம் என்பவைகளை ஜாதி என்றே குறிப்பிட்டுச்சொல்கிறார்.

**குறிப்பு –:**

(ஸாங்கர்ய தோஷம் என்பது என்னவென்றால்: வெவ்வேறான இரண்டு அதிகரணங்களில் இருக்கின்ற வெவ்வேறான இரண்டு தர்மங்கள் வேறு ஒரு அதிகரணத்தில் சேர்ந்திருக்குமானால், அதையே ஸாங்கர்யதோஷம் என்று சொல்லப்படுகிறது. அதை ஜாதி என்று சொல்லமுடியாது.

அதாவது : ஆகாசம் முதலான பஞ்சபூதங்கள் 5, காலம், திக், மனஸ், ஆத்மா என்ற 4. ஆக இந்த ஒன்பதும் த்ரவ்யங்கள் என்று சொல்லப்படுகிறது இவைகளில் ஆகாசம் என்பதில் பூதத்வம் என்ற தர்மம் இருந்தாலும் மூர்த்தத்வம் என்ற தர்மம் கிடையாது. மனஸ் என்பதில் மூர்த்தத்வம் என்ற தன்மை இருந்தாலும் பூதத்வம் என்ற தர்மம் இல்லை மற்ற நான்கு பூதங்களிலும், மூர்த்தத்வம் பூதத்வம் என்ற இரண்டு தர்மங்களும் இருக்கின்றது. அதனால் மூர்த்தத்வம் என்பதும் பூதத்வம் என்பதும் ஜாதியல்ல என்று சொல்கிறார்கள். இதே போல் காடாந்தகாரம் என்ற கும்மிருட்டில் ப்ரகாசத்வமில்லை, ப்ரக்ருஷ்ட்டத்வம் இருக்கிறது. கத்யோதம் என்று சொல்லப்படும் மினிமினி பூச்சியில் ப்ரகாசத்வம் இருக்கிறது, ப்ரக்ருஷ்ட்டத்வமில்லை. சந்த்ரன் என்பதில் ப்ரகாசத்வம், ப்ரக்ருஷ்ட்டத்வம் என்ற இரண்டும் இருக்கின்றது. அதனால் ப்ரக்ருஷ்ட்டத்வம், ப்ரகாசத்வம் என்பது இரண்டும் ஜாதியல்ல என்று வைசேஷிகர்களால் சொல்லப்படுகிறது.)

**232. அவதாரிகை :**

சந்த்ரபதத்திற்கு அர்த்தம் கிடைக்காவிட்டால் என்ன? என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

शशाङ्काभिधानाभिधेये हि पृष्टे तदेवोत्तरेणापि निर्णेयमत्र ।
प्रकृष्टप्रकाशत्वजात्यन्वयोऽयं तदाक्षिप्ततद्व्यञ्जकव्यक्तिनिष्ठः ॥

**ச்லோகார்த்தம் :** சந்த்ரபதத்திற்கு அர்த்தம் என்னவென்று அறியவே சந்த்ரன் எது? என்று கேட்க்கப்படுகின்றதால், அதையே உத்தரவாக்யத்தில் தெரிவிக்கவேண்டும். ப்ரக்ருஷ்ட்டத்வஜாதி, ப்ரகர்ஷத்வஜாதி என்ற இரண்டிற்கும் நடுவில் இருக்கின்ற அன்வயம், குணத்திற்கும் வ்யக்திக்கும் உள்ள ஸம்பந்தத்தையே தெரிவிக்கும். (வ்யக்தியை தெரிவிக்காது.)

**வ்யாக்யானம் :** "க: சந்த்ர:" என்று சந்த்ரவ்யக்தி எது? என்று அறிய விரும்பி கேட்க்கின்றவனுக்கு சந்த்ர வ்யக்தியை போதிக்கின்றமுறையில்தான் பதில் சொல்லப் படவேண்டும். ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம், என்ற இரண்டும், ப்ரக்ருஷ்ட்டத்வ, ப்ரகாசத்வ ஜாதியை குறிப்பிடுவதாகச் சொல்லப்பட்டாலும்கூட, அந்தஜாதி இரண்டும் எந்த வ்யக்தியில் வ்யஞ்சகமாகின்றதோ (ப்ரகாசிக்கின்றதோ, வெளிப்படுகின்றதோ) அந்த வ்யக்தியையே இந்த வாக்யம் லக்ஷணையினால் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ப்ரச்னம் எதைப் பற்றியதோ அதைப்பற்றியே உத்தரம் இருக்கவேண்டுமென்பது லோகத்தில் நியமமாக இருக்கிறது. இந்த வாக்யம் ஸம்ஸ்ருஷ்ட்டமான அர்த்தத்தை போதிக்கின்றதாகச் சொல்லப் படுமானால் கேட்க்கப்பட்ட கேள்விக்கு பதில் சொல்லப்பட்டதாக ஆகாது. ஏனெனில் ப்ரக்ருஷ்ட்டத்வஜாதி ஆச்ரயமான வ்யக்தி ப்ரகாசத்வஜாதி ஆச்ரயமான வ்யக்தி இரண்டுமே சொல்லப்பட்டதாகவே ஆகும், சந்த்ரவ்யக்தி எது? என்று சொல்லப்பட்டதாக ஆகாது. மேலும், ப்ரக்ருஷ்ட்டத்வமாக இருப்பது ப்ரகாசகமாக இருக்கலாம், ப்ரகாசகமாக இருப்பது ப்ரக்ருஷ்ட்டமாக இருக்கலாம். இதில் அஸம்பாவிதம் ஏதுமில்லை. அதனால் இதில் லக்ஷணை சொல்லவேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. ஆகையால், இந்த வாக்யம் வ்யக்திமாத்ர போதகம் என்று சொல்லாமல் ஸம்பந்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், கேள்விக்கு பதில் சொல்லப்பட்டதாக ஆகாது. கேட்ப்பவனுக்கு உத்தேச்யம் சந்த்ரன் எது? என்று அறியவேண்டும் என்பதால், வ்யக்தியை மட்டுமே உத்தரமாக தெரிவிக்கவேண்டும். சந்த்ரன் ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாசமுள்ளவன் என்று ஸம்பந்தத்தை தெரிவிக்கின்ற வாக்யமாக

இருக்குமாஞல் சந்த்ரனே உத்தேசித்து பதில் சொல்லப்பட்டதாக ஆகும். அவ்விதம் சொல்லப்படுமாஞல், உத்தேச்யமாக இருக்கின்ற சந்த்ரன் முன்னதாகவே அறியப்பட்டது என்று சொல்லநேரிடும். ஆஞல், சந்த்ரன் என்பது எது? என்று அறியாதவஞல் கேட்கப்படும் கேள்விக்கு இந்தவிதம் பதில் சொல்வது பொருந்தாது. அதஞல் உத்தரமாகச் சொல்லப்படும் வாக்யத்தில் சந்த்ர வ்யக்தி என்பதே விதேயமாக போதிக்கப்பட வேண்டும். ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாசம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகின்றதால், அந்த அம்ஸங்களே போதிக்கவேண்டிய அவஸ்யமில்லே. அதேபோல் ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாசஸம்பந்தம் உள்ள ஒரு வ்யக்தியையும் ப்ரத்யக்ஷமாகப்பார்க்கின்ருன் ஆஞல் அதுவே சந்த்ரன் என்று சந்த்ரவ்யக்திதான் அவனுக்கு அறியப்படவில்லே. ஆகவே, ஸம்பந்தத்தை அறிய விரும்பவில்லேயென்றும், வ்யக்தியை மட்டுமே அறியவிரும்புகிருன் என்பதும் அறியப்படுகிறது. ஆகையால் அறியப்படாத வ்யக்திமாத்ர போதம் என்பது லக்ஷணேயிஞல் ஏற்படுகிறது என்று சொன்ஞல்தான் கேள்வி, பதில் இரண்டும் ஒரே விஷயத்தைப்பற்றியதாக இருக்கிறது என்று சொல்லலாம். இவ்விதம் வ்யக்திமாத்ரபோதம் ஏற்பட்டால்தான் அவனுடைய ஆகாங்க்ஷை என்பதும் நிவர்த்திக்கும். ப்ரக்ருஷ்ட: ப்ரகாசம் என்பது வ்யக்தி இல்லாமல் இருக்கமுடியாது. அதஞல் ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாசம் என்பது வ்யக்தியுடன் சேர்ந்தே அறியப்படுகிறது. அதஞல் வ்யக்தி மாத்ரபோதம் அபிதையிஞல் ஏற்படமுடியாது என்பதால் லக்ஷணேயிஞல் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். ப்ரக்ருஷ்ட்டப்ரகாச : என்ற பதங்களிஞல் லக்ஷணேயாக ஒரு வ்யக்தி அறியப்படுகிறது. சந்த்ரபதத்திஞல் ஒரு வ்யக்தி அறியப்படுகிறது என்று சொல்லப்பட்டாலும், அறியப்படும் வ்யக்தியில் பேதம் எதுவும் அறியப்படாததால் இந்த வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**233. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்டது போல் 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யத் திற்கு அர்த்தம் சொல்லப்படுமாஞல், அந்த அர்த்தம் சந்த்ர ப்ராதிபதிகார்த்தமாக ஆகாது.

**ச்லோகம் :**

शशाङ्काभिधानाभिधेयो न चेष्टः शशाङ्कस्य तेजोविशेषत्वहेतोः ।
ततश्चोपपन्ना जहल्लक्षणाऽतः पुरोक्ता पदाभ्यामखण्डार्थसिद्धिः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரகாசத்துடன் கூடியது சந்த்ரன் என்று சொல்லப்படும் அர்த்தம் இஷ்ட்டமில்லே. ஏனெனில் தேஜோவிசேஷத்துடன் கூடியது சந்த்ரனல்ல. தேஜஸ் ஸ்வரூபமே சந்த்ரன். ஆகையால், ப்ரக்ருஷ்ட்டத்வம், ப்ரகாசத்வம் என்ற வாச்யார்த்தத்தை விட்டு, முன் சொல்லப்பட்டமுறையில், ஜஹல்லக்ஷணேயிஞல் பதங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்பது சித்தம்.

**வ்யாக்யானம் :** எந்த அர்த்தம், விரும்பப்பட்டதோ, அந்த அர்த்தம், தேஜஸ் என்ற விசேஷாத்மகமாகவே இருக்கின்றதால், ப்ரக்ருஷ்ட்டத்வ, ப்ரகாசத்வ குணங்களுடன் கூடியது சந்த்ரன் என்று சொல்லமுடியாது. ஆகவே ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம் என்ற ஜாதியைக்குறிக்கின்ற வாச்யார்த்தத்தை விட்டுவிட்டு, தாத்பர்யவிஷயமான சந்த்ரவ்யக்தி மட்டுமே லக்ஷணேயிஞல் போதிக்கப்படுகிறது. அதஞல் இந்த வாக்யம், ஜஹல்லக்ஷணேயிஞல் அகண்டார்த்தத்தை போதிக்கின்றதால், பாகத்யாக லக்ஷணேயிஞல் அகண்டார்த்தம் போதிக்கப்படுவதாகச்சொல்லப்படவில்லே. ஏனெனில் ஸபளார்த்தமாக இருந்தால்தான் பாகத்யாக லக்ஷணேயைக்கொண்டு அகண்டார்த்தம் போதிக்கப்படவேண்டும்.

ஆகவே, தத்வமஸி மஹாவாக்யம் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்ற விஷயத்தை தெரிவிப்பதற்காக, 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யத்தை உதாகரணமாகச் சொல்லப்பட்டது.

**பூர்வ :** பாகத்யாக லக்ஷணையினுல் போதிக்கப்படும் மஹா வாக்யத்திற்கு உதாகரணமாக, ஜஹல் லக்ஷணையினுல் போதிக்கப்படும் வாக்யத்தை எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** வ்யக்தி மாத்ர போதகமான அகண்டார்த்தம் வாக்யத்திலிருந்து எப்படி ஸம்பவிக்கின்றது? என்ற அம்ஸத்தை விளக்குவதற்காகவே இந்த உதாகரணம் சொல்லப் பட்டது. மற்ற எந்த விஷயங்களுக்கும் இந்த வாக்யம் உதாகரணமாகச்சொல்லப்படவில்லை. 'ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசத்வனி' என்று ஆரம்பிக்கப்பட்ட (226 வது) ச்லோகத்திலிருந்து இது வரை இந்த விஷயம் பற்றி விசாரிக்கப்பட்டது. இதன் சாரம் என்னவென்ருல், சசாங்கபதத்தினுல் எந்த அர்த்தம் போதிக்கப்படுகின்றதோ அந்தவ்யக்தியே தேஜோ விசேஷரூபம் தான். ஆகவே, ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: என்பது, சந்த்ரனையன்றி வேருன ஒரு ஜாதியை குறிப்பிடுவதாகச்சொல்வது சரியல்ல. அதனுல் ஜாதி ரூபமான அர்த்தத்தை த்யாகம் செய்து கேவல வ்யக்தியைமாத்ரமே, பதவ்ருத்தி போதிக்கின்றது என்பதால், வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**234. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்பட்ட போதிலும், வாக்யத்திலிருந்து அகண்டார்த்தம் சித்திப்ப தாகச் சொல்லப்படுவது, ஒத்துக்கொள்ளக்கூடியது அல்ல. ஏனெனில் ப்ரக்ருஷ்ட்டத்வம் ப்ரகாசத்வம் என்ற இரண்டு ஜாதிகளையே இரண்டு பதங்களும் தெரிவிக்கின்றது. அதனுல் அந்த பதங்கள், ப்ரக்ருஷ்ட்டவ்யக்தி, ப்ரகாச வ்யக்தி என்ற இரண்டு வ்யக்திகளையே போதிக்கின்றதேயன்றி சந்த் ரவ்யக்தியை லக்ஷணையினுல் போதிக்கமுடியாது. அதனுல் லக்ஷிதலக்ஷணையினுல் அகண்டார்த்தமாக சந்த்ரவ்யக்தியை போதிக்கின்றது என்று சொல்லவேண்டுமேயன்றி லக்ஷணையினுல் நேரிடையாக போதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

प्रकर्षः प्रकाशातिरिक्तो न चात्र प्रकाशः प्रकार्षातिरिक्तो न चात्र ।
बहिश्चन्द्रमस्ति स्वरूपातिरेकस्तयोश्चन्द्रमस्येकतैवातिमात्रम् ॥

**ச்லோகார்த்தம் :** சந்த்ரன் என்பதில், ப்ரகர்ஷம் என்பது ப்ரகாசம் என்பதைக்காட்டிலும் வேருக இல்லை. அதேபோல் ப்ரகாசம் என்பது ப்ரகர்ஷம் என்பதிலிருந்து வேருகஇல்லை, சந்த்ரன் என்பதற்கு வேருக இருக்கின்ற பதார்த்தங்களில், ப்ரகர்ஷம், ப்ரகாசம் என்பது வேருக இருக் கிறது. ஆனுல் அவை இரண்டும் சந்த்ரஸ்வரூபமாகவே இருக்கின்றதால் அத்யந்த அபேதமாக ஏகமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** சந்த்ரன் என்பதைக்காட்டிலும் வேருக இருக்கின்ற கும்மிருட்டு அல்லது காடாந்தகாரம் என்று சொல்லப்படும் 'தமஸ்' என்பதில் ப்ரகர்ஷம் இருக்கின்றது. அதேபோல் (கத்யோதம்) மின்மினி பூச்சி என்பதிலும், நக்ஷத்ரம் என்பதிலும் ப்ரகாசம் என்பது சந்த்ரனைக்காட்டிலும் வேருக இருக்கின்றது. ஆகையால் ப்ரக்ருஷ்ட்ட, ப்ரகாசம் என்ற இரண்டிற்கும் வ்யக்திபேதம் இருக்கின்றதென்று, சந்த்ரனைத்தவிர வேறு இடங்களில் சொல்லலாம். ஆனுல் இந்த இடத்தில், ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம் என்ற இரண்டு பதங்களால் தெரிவிக்கப்படும் அர்த்தம் சந்த்ரவ்யக்தி ஒன்றுதான். ஆகையால் அத்யந்த ஐக்யமே இந்த வாக்யத்தினுல் போதிக்கப்படுகிறது. ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசாத்மகம் சந்த்ரன் என்றே சொல்லப்படுவதால்

லக்ஷணையினுல் அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும். லக்ஷிதலக்ஷணை என்று சொல்வதற்கே இடமில்லை. ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: என்ற பதார்த்தங்கள் வேறுபட்டது என்று சொல்வதற்கே முடியாது என்பதால் இந்த ஆக்ஷேபத்திற்கு இடமில்லை.

**235. அவதாரிகை :**

ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர: என்று ஒன்றுடன் ஒன்று கலந்து ஸம்ஸர்க்கமுடையதாகவே அறியப்படுகின்றதால், அஸம்ஸர்க்கமாக வ்யக்திமாத்ரம் போதிக்கப்படுவதாக எப்படிச் சொல்ல முடியும்? என்ருல் அவ்விதம் ஸம்ஸர்க்க ரூபமாக சந்த்ரன் அறியப்படுவதாக ஒருவருக்கும் அனுபவம் இல்லை.

**ச்லோகம் :**

न चन्द्रप्रकाशप्रकर्षं प्रकाशात्तदीयात्पृथक्कश्चिदुत्पश्यतीह ।
तथास्य प्रकर्षप्रकाशं प्रकर्षात्ततो नानयोरस्ति भेदे प्रमाणम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரகர்ஷம் என்பதற்கு வேருக ப்ரகாசம் என்பதோ, ப்ரகாசமில்லாமல் ப்ரகர்ஷம் என்பதோ, இந்த இரண்டைக்காட்டிலும் சந்த்ரவ்யக்தி என்பது வேருக ஒன்று இருக்கிறதென்ருே யாராலும் அறியப்படவில்லையென்பதுமட்டுமல்ல. எல்லாம் ஒன்ருகவே அறியப்படுகிறது. ஆகவே, ஒன்றுக்கொன்று வேருக அறியப்படுகிறது என்பதற்கு ப்ரமாணம் ஏதும் கிடையாது.

**வ்யாக்யானம் :** ப்ரகாசத்தின் ப்ரகர்ஷம் என்று சொல்லப்படுவதும் ப்ரகாசம்தான். ப்ரகர்ஷத்திற்கு அன்யமாக ப்ரகாசமில்லை. இதேபோல் இவை இரண்டும் சந்த்ரவ்யக்தியில், இது ரூபம், இது ரஸம் என்பதுபோல் பேதம் அறியப்படவில்லை. நீலம், சுகந்தம், உத்பலம் என்னுமிடத்தில் நீலம் சுகந்தமல்ல, உத்பலம் சுகந்தமல்ல, நீலமல்ல, சுகந்தம் உத்பலமல்ல நீலமல்ல என்ற பேதம் எல்லோராலும் அறியப்படுகிறது. அதனுல் அந்த வாக்யம் ஸம்ஸர்க்க போதகம் என்று சொல்லலாம். அதுபோல் இந்த வாக்யத்தில் ஸம்ஸர்க்கம் அறியப்படவில்லை என்பது மட்டுமல்ல, சந்த்ரனே ப்ரக்ருஷ்ட்ட ப்ரகாசம் என்று அபேதம் என்பதே அனுபவ விஷயமாக இருக்கின்றது. ஆகையால் ப்ரக்ருஷ்ட்டம், ப்ரகாசம் என்பவைகளைக் காட்டிலும் சந்த்ரவ்யக்தி வேருக இருக்கிறது என்பதில் ப்ரமாணமும் கிடையாது. அபேதமாக அறியப் படுகிறது என்பதால் அனுபவத்திற்கு விரோதமாகவும் இருக்கிறது. அதுமட்டுமின்றி இந்த அபேத ஞானத்திற்கு பாதகமாக வேறு எந்த ப்ரதீதியும் ஏற்படவில்லை. ஆகவே இந்த வாக்யம் வ்யக்தி மாத்ர போதகம் என்றே சித்திக்கின்றது.

**236. அவதாரிகை :**

இவ்விதம், ப்ரகர்ஷமின்றி ப்ரகாசமும், ப்ரகாசமின்றி ப்ரகர்ஷமும் இருக்கலாம் என்ற விருத்தமான தர்மங்களை போதிக்கின்ற 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்ற வாக்யமே அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ருல், 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபமாகவே இருக்கின்ற சப்தங்களும் தத்வமஸி மஹாவாக்யங்களும் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் என்ன ஆக்ஷேபம் இருக்க முடியும்? என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

तथा सच्चिदानंदशब्दास्तदर्थं तथा तत्वमावात्मनो ब्रह्मभावम् ।
विरोधान्मिथो लक्षणावर्त्मनेमौ किमर्थं न संभूय वक्तुं समर्थौ ॥

**ச்லோகார்த்தம் :** இதேபோல் சத்சிதானந்த சப்தங்களும், தத், த்வம் என்ற பதங்களும் ஜீவனே ப்ரஹ்மமென்றும் ப்ரஹ்மபாவத்தை ஏன் போதிக்கமுடியாது? வாச் யார்த்தத்தில் அறியப் படும் விரோதத்தை பாகத்யாக லக்ஷணையினால் பரிகாரம் செய்து தத்–த்வம் பதங்களும் அகண்டார்த்தத்தை போதிப்பதில் ஸமர்த்தம் என்றே சொல்லலாமே?

**வ்யாக்யானம் :** த்ருஷ்ட்டாந்தத்தில் சொல்லப்பட்ட, "ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:" என்ற வாக்யம், அகண்டார்த்த போதகம்தான் என்று சித்தம் செய்தபிறகு தாஷ்ட்டாந்தத்திலும் அதுபோல் அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது என்பதில் ஸந்தேகத் திற்கே இடமில்லை என்பதை தெரிவிக்கப்படுகிறது. க: சந்த்ர: என்று ('எது சந்த்ரன்') என்று கேட்ட கேள்விக்கு 'ப்ரக்ருஷ்ட்ட: ப்ரகாச: சந்த்ர:' என்று பதில் சொல்லப்படுகிறது. இந்த வாக்யம் எப்படி வ்யக்தியைமாத்ரம் போதிக்கின்றதோ அதே போல், 'கிம்ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மஸ்வரூபமாத்ரம் என்னவென்று அறியவேண்டுமென்ற ஆகாங்க்ஷையினால் செய்யப்பட்ட ப்ரச்னத்திற்கு, 'ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம' என்று போதிக்கப்படுகிறது. இதனால் தத்பதார்த்தஸ்வரூபம் என்பது லக்ஷணையினால் போதிப்பதில் ஸமர்த்தமுடையதாக ஆகமுடியாதா? முன்னால் சொன்னபடி ஸத்யாதிசப்தங்கள் அகண்டார்த்தத்தை போதிப்பதில் ஸமர்த்தமுடையதாகவே ஆகிறது. இதேபோல் தத்பதம், த்வம்பதம் என்ற இரண்டுபதங்களும் லக்ஷணையினால் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது எப்படியெனில், தத், த்வம் என்ற இரண்டு பதங்களையும் பரிசோதித்தபிறகு வாச்யார்த்தமான, மாயாஅவச்சின்னசைதன்யம், அந்த:கரண அவச்சின்ன சைதன்யம் என்ற இரண்டிற்கும் விரோதம் அறியப்படுவதால், விரோதாம்ஸங்களை மட்டும் விட்டு விட்டு, பாகத்யாக லக்ஷணையினால், ப்ரத்யக்சைதன்யமும், ஸத்யஞானந்த சப்தங்களால் லக்ஷணையாக போதிக்கப்படும் தத்பதார்த்தமான ப்ரஹ்ம சைதன்யமும் ஒன்றே என்று அகண்டார்த்தம் போதிக்கப்படுகிறது என்று ஏன் சொல்லமுடியாது? ஸத்யாதி சப்தங்களும் தாத்பர்யேண ஸ்வரூபத்தையே போதிக்கின்றதால், ஸ்வரூபத: பேதம் என்று சொல்வதற்கு சிறிதளவும் அவகாசமில்லை. மாயை, அந்த:கரணம் என்ற இரண்டு உபாதிகளினால் ஏற்படும் கல்பித பேதங்களை அனுவாதம்செய்து, அவாந்தரவாக்யங்களும், மஹாவாக்யங்களும், 'ஆத்மாவே ப்ரஹ்ம' என்றும், 'ப்ரஹ்மமே ஆத்மாவென்றும் போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் எவ்விதமான இடையூறும் இல்லை.

**237. அவதாரிகை :**

ப்ரத்யகாத்மாவிற்கு ப்ரஹ்மபாவம் என்பது கார்யகாரணபாவமாகவே சொல்லப் படவேண்டும். பால் எப்படிதயிராகிறதோ அதுபோல் ஸம்ஸர்க்க ரூபமாகவே சொல்லப் படவேண்டும் என்பதால் அகண்டார்த்தம் எப்படி ஸம்பவிக்கமுடியும்? என்றால், ஆத்மா, ப்ரஹ்ம என்ற இரண்டு சப்தங்களில்தான் பேதமிருப்பதாக அறியப்படுகிறதேயன்றி, லக்ஷ்யமான அம் ஸத்தில்பேதம் ஏதுமில்லையென்பதை காரணத்துடன் கீழே விளக்கப்பட்டதால் அகண்டார்த்தம் ஸம்பவிக்கலாம்.

**ச்லோகம் :**

प्रत्यक्तत्वं लक्षयेत्त्वंपदार्थस्तच्छब्दार्थो लक्षयेदद्वितीयम् ।
एवं पूर्णं प्रत्यगात्मानमेतौ शब्दौ ब्रूतो लक्षणावर्त्मनैव ॥

**ச்லோகார்த்தம் :** 'த்வம்' பதம் என்பது லக்ஷணையினால் ப்ரத்யக்சைதன்யத்தையே போதிக்கின்றது. அதேபோல் தத்பதம் என்பதும் லக்ஷணையினால் அத்விதீயமான சைதன்

யத்தையே போதிக்கின்றது. இவ்விதம் தத், த்வம் என்ற இரண்டு பதங்களும் பூர்ணமான சைதன்யத்தையே லக்ஷணையினுல் போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** முதலில் 'த்வம்' பதமானது, அந்த:கரண விசிஷ்ட்ட சைதன் யத்தையே வாச்யார்த்தமாக தெரிவிக்கின்றது. இந்த ஸபளார்த்தத்தில் அறியப்படும் துக்கித்வம் முதலான விரோத அம்ஸங்களை விட்டு லக்ஷணையினுல் சைதன்யாம்ஸம் மட்டும், ப்ரத்யக் ஸ்வரூபமாத்ரமாக அறியப்படுகிறது. அதேபோல், 'தத்' சப்தம் என்பதும் பாரோக்ஷ்யம் முதலானவைகளுடன் கூடிய ஸபளஸ்வரூபம் வாச்யார்த்தமாக முதலில் அறியப்படுகிறது. இவ்விதம் அறியப்படும் பாரோக்ஷ்யத்வம் முதலான விருத்தாம்ஸங்களை விட்டு விட்டு லக்ஷணையினுல் அத்விதீயமான சைதன்யஸ்வரூபமாத்ரமாக போதிக்கப்படுகிறது. இந்த விதம் பாகத்யாகலக்ஷணையினுல், தத், த்வம் என்ற இரண்டு பதங்களும் பூர்ணமான சைதன்யத்தை அகண்டார்த்தமாக போதிக்கின்றது. அத்யாத்மம், அதிபூதம் என்ற உபாதிகளைக்கொண்டு பரிச்சின்னமாக அறியப்படும் ஸ்வரூபம், லக்ஷணையினுல் விரோதாம்ஸங்கள் விடப்படுகின்றதால் ஏகரஸமான சைதன்யம் மாத்ரம் அபரிச்சின்னமாக போதிக்கப்படுகிறது.

**238. அவதாரிகை :**

பாகத்யாக லக்ஷணையினுல் துக்கித்வம், பரோக்ஷத்வம் போன்ற விரோத அம்ஸங்களை விட்டு விட்டு லக்ஷணையினுல் அர்த்தம் சொல்லப்பட்டபோதிலும், வாச்யார்த்த ஸம்பந்தமில்லாமல் லக்ஷ்யார்த்தம் அறியப்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்? ஆகையால் பாரோக்ஷ்யத்வம், துக்கித்வம் என்பதெல்லாம் நிவர்த்திக்கமுடியாது. ஏனெனில் 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யத்தில், 'தீரம்' என்ற லக்ஷ்யார்த்தஞானம் ஏற்பட்டபோதிலும், கங்காபதார்த்தமான ப்ரவாகம் என்பதின், சீதத்வம், பாவனத்வம், என்பவைகளுடன் கூடிய தாகவே தீரம் என்பது அறியப்படுகிறது. அதனுல் கங்காபதத்திற்கு நிவர்த்திஇல்லை. அதே போல் தத்வமஸ்யாதி வாக்யங்களும் லக்ஷணையினுல் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ருலும் துக்கித்வம் முதலானவைகளின் நிவர்த்தி ஏற்படமுடியாது. அதனுல் வேதாந்த ஜன்ய ஞானத்தினுல் என்னப்ரயோஜனம்? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

पारोक्ष्यं च ब्रह्मणि प्रत्यगर्थे दुःखित्वं च ध्वान्तसंभूतमाहुः ।
सम्यग्ज्ञानध्वस्तमोहस्य पुंसः प्रध्वंसेते हेत्वभावेऽफलत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** ஸம்யக்ஞானத்தினுல் யாருக்குமோஹம் என்பது நாசத்தை அடை கின்றதோ, அவருக்கே ப்ரஹ்மத்தில் அறியப்பட்ட பாரோக்ஷ்யத்வமும், ப்ரத்யகாத்மாவில் அறியப்பட்ட துக்கித்வம் என்பதும் 'ஹேத்வபாவே, பலாபாவ:' என்ற ந்யாயப்படி அஞ்ஞான நாசத்தினுல் துக்கித்வம் முதலானவைகளும் நாசத்தை அடைகிறது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது பாரோக்ஷ்யமாகவும், ப்ரத்யகாத்மா துக்கித்வம் உள்ளதாகவும், ப்ரஹ்மஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானத்தினுல் ஏற்பட்டது. அதனுல், அவை களெல்லாம் உண்மையில் ப்ரஹ்மத்தினிடம் இல்லையென்பதால், ப்ரஹ்மஸ்வரூபஞானம் ஏற் படுகின்றபோது பாரோக்ஷ்யத்வம், துக்கித்வம் முதலானவைகளுக்கு காரணமான அஞ் ஞானம் பாதிக்கப்படுகிறது. அதனுல் கார்யத்தோடுகூடிய அஞ்ஞானம் நாசத்தை அடைகின்றது. ஆகவே வாச்யார்த்தத்தில் அறியப்பட்ட பாரோக்ஷ்யத்வாதிகள், லக்ஷ்யார்த்தமாக அறியப்படும் ஸ்வரூபத்தில் அறியப்படும் என்று சொல்வதுசரியல்ல. மேலும் இந்த விஷயத்தில் உதாகரணமாகச்சொல்லப்படும் 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யம் 'தீரம்'

என்பதை லக்ஷணையாக போதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகின்றபோது, அதில் தெரிவிக்கப்படும் 'கங்கை' என்ற பதார்த்தம் அஞ்ஞானத்தினுல் ஏற்பட்டதல்ல. அதனுல் 'தீரம்' என்ற ஞானத் தினுல் கங்கை என்பது பாதிக்கப்படுவதில்லை. ஆகவே, கங்கை என்பதும் தீரம் என்பதும் அஞ்ஞான கார்யமல்ல என்பதால், கங்கை என்பதும் அறியப்படலாம், தீரம் என்பதும் அறியப்படலாம்.

**239. அவதாரிகை :**

மீமாம்ஸகர்களில் குருமதஸ்த்தர்கள் (ப்ராபாகரர்) ஒரு கார்யம் என்பதில், க்ரியா பலத்வம் என்பது அஞ்ஞதசையில் முதலில் அறியப்படுகிறது என்றும், அதன்பிறகு விவேகம் ஏற்பட்டு வைதிக கார்யங்கள் லிஙாதிகளில் எப்படி முடிவுபெறுகிறதோ அதுபோல் தத்வ விசாரணை செய்கின்றபோதும், அஞ்ஞதசையில் சப்தத்திலிருந்து ஸபளார்த்தத்தில் சக்திக்ரஹம் ஏற்பட்டபோதிலும் விவேகம் ஏற்படுகின்றபோது அகண்டார்த்தத்தில் சக்தியென்பது பர்யவஸானத்தை அடைகின்றதென்று சொல்லலாம். ஆகையால் இவ்விதம் சக்தியினுலேயே அகண்டார்த்தம் அறியப்படுமானுல் லக்ஷணையினுல் அர்த்தம் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் ஸம்பவிக்க முடியாது.

**ச்லோகம் :**

षष्ठीजातिगुणक्रियादिरहिते सर्वस्य विज्ञातरि प्रत्यक्षे परिवर्जिताखिलजगद्द्वैतप्रपञ्चे दृशौ ।
संत्यक्तव्यवधानके परमके विष्णोः पदे शाश्वते त्वय्यज्ञानविजृम्भिता नहि गिरो मुख्यप्रवृत्तिक्षमाः ॥

**ச்லோகார்த்தம் :** உன்னுடைய ஸ்வரூபமானது ஸம்பந்தம் ஜாதி குணம் க்ரியை என்பவைகள் அற்றதாகவும், ஸர்வ சாக்ஷியாகவும் அபரோக்ஷமாகவும், ஸகலத்வைதப்ர பஞ்சம் அற்றதாகவும், த்ருக்ஸ்வரூபமாகவும், அவ்யவஹிதமாகவும் பரமமாகவும் விஷ்ணுஸ்வரூபமாகவும் சாஸ்வதமாகவும் இருக்கின்றது. இப்பேர்ப்பட்ட உன்ஸ்வரூபத்தை அஞ்ஞானஜன்யமான பதங்களானது முக்ய வ்ருத்தியினால் தெரிவிக்க முடியாது.

**வ்யாக்யானம் :** நிர்விசேஷமான உன்னுடைய ஸ்வரூபத்தில், தத், த்வம் முதலான வாக்யங்கள் முக்யவ்ருத்தியினுல் ப்ரவர்த்திக்கமுடியாது. சப்தம் என்பது ஜாதி குணம் க்ரியை ஸம்பந்தம் முதலானவைகளைக்கொண்டே வஸ்துவை தெரிவிக்கவேண்டும். எந்த விசேஷமும் அற்றதான ஸ்வரூபத்தை சப்தம் சக்தியினுல் தெரிவிக்கமுடியாது. 'ராஞ்ஞபுருஷ:' என்பதும், தாசரதி என்பதும், ஒரு பதார்த்தத்திற்கும் மற்றொரு பதார்த்தத்திற்குமுள்ள ஸம்பந்தத்தை காரணமாகக்கொண்டு தெரிவிக்கின்றது அதாவது தசரதன் என்பதுடன் ஒரு ப்ரத்யயம் சேர்த்தால் தாசரதி என்ருகும். இந்த ப்ரத்யத்திற்கு 'தத்திதம்' என்று பெயர். அதேபோல் ராஞ்ஞபுருஷ: என்பதும் ஸம்பந்தத்தையே தெரிவிக்கின்றது. இவ்விதம் ஸமாஸம் தத்திதம் என்பவைகள் ஸம்பந்தத்தை நிமித்தமாகக்கொண்டு தெரிவிக்கின்றது. கவாதி சப்தங்கள் ஜாதியை நிமித்தமாகக்கொண்டு ப்ரவர்த்திக்கின்றது. சுக்லம் முதலானவைகள் குணத்தை நிமித்தமாகக் கொண்டிருக்கிறது. அதேபோல் பாசகம் முதலான சப்தங்கள் க்ரியையை நிமித்தமாகக் கொண்டிருக்கிறது. இவைகள் எதுவுமின்றி ஸ்வரூபத்தை மட்டும் முன்னிட்டு 'டித்தன்' முதலான சப்தங்கள் ப்ரவ்ருத்திக்கின்றது. இந்தவிதம் தத், த்வம் முதலான சப் தங்கள், ஜாதி, குணம், க்ரியை ஸம்பந்தம் இவைகளை நிமித்தமாகக்கொண்டு சக்தியினுல்

போதிக்கமுடியாது. டித்தன் முதலானவைகள் விவகார நிலேயில் ஒருவரால் ஒருவருக்கு கொடுக்கப்பட்ட பெயரானதால், விவகாரத்திற்கு அப்பாற்பட்ட ஸ்வரூபத்தில் இவ்வித பெயர்களும் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே சப்தம் என்பது ஸர்வத்தையும் அறிவிக்கின்ற தத்வமான ப்ரஹ்மத்தை அறிவிக்கமுடியாது. ஸர்வஸ்ய விஞ்ஞாதரி என்றும் ஸர்வத்திற்கும் சாக்ஷியென்றும் ஸர்வாந்தரம் என்றும் சொல்லப்படுவதால், சக்திக்ரஹம் ஏற்படக்கூடிய ப்ரமாணத்திற்கு விஷயமல்ல என்றே ச்ருதி வாக்யங்களும் தெரிவிக்கின்றது. இவ்விதம் ப்ரமாண கோசரமல்ல என்று சொல்லப்படுவதற்காக வஸ்துவே இல்லேயென்று சொல்ல முடியாது. ஏனெனில் நித்ய அபரோக்ஷம் ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபம் என்று ச்ருதியும் தெரிவிக்கின்றது. எல்லோருக்கும் அஹமஹம் என்று நித்ய அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றது என்பது அனுபவ சித்தமாகவும் இருக்கின்றது. இவ்விதமிருந்தும் அஞ்ஞனுக்கு, ஸர்வத்தையும் அறிகின்ற நானே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்ளமுடியவில்லே.

**பூர்வ :** விஞ்ஞாதா என்றால் அறிபவன், அறியக்கூடிய தன்மையுடையவன் என்று அர்த்தம் கிடைக்கின்றது. அதனால் இந்த தன்மையைக்கொண்டு சப்தத்தினால் போதிக்கப்படுகிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** மித்யாபூதமான விஞ்ஞேயங்களைக்கொண்டு விஞ்ஞாதா என்று சொல்லப்பட்டபோதிலும், உண்மையில் விஞ்ஞாதா என்றும் சொல்லமுடியாது. அப்படியானால், ப்ரபஞ்ச விஷயங் களுக்கெல்லாம் ப்ரஹ்மமென்பது விலக்ஷணம் என்று சொல்லப்படுமானல், இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தை அறிந்துகொள்வது எப்படி? அதனால் ப்ரஹ்மத்திற்கு ஜகத் காரணத்வம் சொல்லப்படுவதால், ஜகத்துடன் ஸம்பந்தப்பட்டதாக சொல்லப்படலாமே? அஸங்கமான ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஜகத் என்பது ஆரோபிதம் என்பதால் உண்மையில் ஜகத் காரணத்வம் என்பதும் ப்ரஹ்மத்திற்கு சொல்லமுடியாது என்பதையே, 'நதஸ்யகார்யம்கரணஞ்சவித்யதே' என்று ச்ருதி வாக்யமே தெரிவிக்கின்றது. ஆரோபிதமான ஜகத்திற்கு அதிஷ்டானமாக இருக்கிறது என்ற காரணத்தினால், விவகாரதசையில் ஜகத்காரணம் ப்ரஹ்ம என்று சொல்லப்படுகிறது. ஆகவே, தத், த்வம் பதார்த்தங்கள் இரண்டும் ஒன்றுக் கொன்று வேறுபட்ட ஸ்வரூபமல்ல. ஸ்வஸ்வரூபமே ப்ரஹ்மமானதால், தனக்குத்தானே (மறைவு) விவதானம் என்பதே இருக்கமுடியாது. ஆனால் அஞ்ஞானத்தினால் இரண்டும் வேறு போல தோன்றுகிறது.

ப்ரஹ்மமே நான் என்று அறியப்படவில்லேயே? என்றால், நான் ப்ரஹ்மமென்று அறியப் படவில்லே என்ற அனுபவம், அஞ்ஞானகல்பிதம். ஸ்வஸ்வரூபம் ஸ்வப்ரகாசஸ்வரூபமாக அபரோக்ஷமாக ப்ரகாசித்துக்கொண்டிருந்தாலும், அறியப்படவில்லேயென்றால், அநிர்வாச்யமான அஞ்ஞானத்தினால்தான் அறியப்படவில்லே என்றே சொல்லவேண்டும். இந்தவிதம் சுத்த ஸ்வரூபமாக இருக்கின்ற ப்ரஹ்ம தத்வம், எந்த விதமான லிங்கத்தைக்கொண்டும் அறிவிக்கமுடியாததால், எந்த சப்தத்தினால் போதிக்கப்பட்டபோதிலும், அதற்கு அர்த்த வ்யுத்பத்தி என்பது ஏற்படமுடியாது. ஆகையால் ப்ரஹ்ம ஸ்வரூபம் என்பது, சப்தத்தினால் போதிக்கப்படுகின்ற விஷயத்தில், சக்தி க்ரஹம் ஏற்படுகிறது என்று சொல்வதற்கேமுடியாது. 'கேவலம் நிர்க்குணம், நிஷ்களம், நிஷ்க்ரியம், அத்ருஷ்டம், அவ்யவஹார்யம்' 'நஸத்ரு– சேதிஷ்ட்டதி ரூபமஸ்ய' என்பது முதலான ச்ருதிவாக்யங்கள், ப்ரஹ்மமென்பது வ்யவஹாராதீதம் என்றும், குணம், க்ரியை, ஸம்ஞை என்பவைகளாலும் போதிக்கமுடியாது என்றும் தெரிவிக்கின்றது. நிர்தர்மகமானப்ரஹ்மமென்பது நிரவயவமானதால் சாத்ருச்யத்தினாலும் தெரிவிக்கமுடியாது. ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களாலும் அறியமுடியாது அதனால் சப்தம், சக்தி

அர்த்தத்தினுல் ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று சொல்வதற்குமுடியாது. த்ருக் ஸ்வரூபமானதால் த்ருச்யமாக ஆகமுடியாது. சித்ஸ்வரூபமாக அத்யந்த அபரோக்ஷமாக ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்றது. இவ்விதமிருக்கின்றபோது ஆத்மாபரோக்ஷம் என்று சொல்லப்படுமானுல், இதுவரை நடந்த விஷயங்கள் நடக்கின்ற விஷயங்கள், இனி நடக்கப்போகின்றவைகளை அனுசந்தானம் செய்வதென்பதே முடியாது. த்ரஷ்டா என்பதைவிட்டு ஆத்மா என்பது வேருக இருக்கமுடியாது. அனுத்மாப்ரகாசிக்கிறது என்ருலே ஆத்மா ப்ரகாசிக்கின்றதென்றே அறியப்படவேண்டும். அதனுல் ஆத்மா பரோக்ஷம் என்று யாராலும் சொல்லமுடியாது.

'அஹமஹம்' என்று எல்லோராலும் அறியப்படும் அஹங்காரமே ஆத்மா என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. அஹங்காரம், அதற்கு காரணமான அஞ்ஞானம், ஸமஷ்டிரூபமான மாயை, எல்லாவற்றிர்க்கும் அதீதமாய், சாக்ஷியாய் இருப்பது ஆத்மா, அதுவே ப்ரஹமமென்று முண்டகோபநிஷத் வாக்யமும், 'அக்ஷராத் பரதபரம், என்று மாயையைக் காட்டிலும் பரம் என்று தெரிவிக்கின்றது ஆகவே, ப்ரஹமமென்பது எந்தப்ரமாணத்திலுலும் அறியப்படுவதல்ல என்று சொல்வதற்காக, அறியவேமுடியாது என்று சொல்வதற்குமுடியாது. நித்ய அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்ற பரமானந்த ஸ்வரூபமே ப்ரத்யக்ஸ்வரூபம் என்று அறிவதே புருஷார்த்தம் என்பதால், அவஸ்யம் அறியப் படவேண்டும். இந்த ப்ரத்யக பின்னப்ரஹ்மமே, 'விஷ்ணோ: பரமம்பதம்' என்று ச்ருதி வாக்யங்கள் போதிக்கின்றது. ஸத்யவஸ்துவான ப்ரஹ்மத்திற்கும் மித்யாவஸ்துவான ப்ரபஞ்சத்திற்கும் ஸம்பந்தம் என்பதே இருக்கமுடியாது. வேதங்கள் என்பதும் ப்ரபஞ்ச வஸ்துக்களில் ஒன்ருகவே இருக்கின்றதால், வேதம் என்ற ப்ரமாணத்திலுலும் ப்ரஹ்ம மென்பது நேரிடையாக போதிக்கப்படுகிறது என்றும் சொல்லமுடியாது. இந்தவிதம் ப்ரஹ்ம மென்பது சப்தத்திலுல் போதிக்கக்கூடிய தன்மையுடையது என்ருே அல்லது ப்ரஹ்ம மென்பதை, சப்தம் போதிக்கக்கூடிய தன்மையுடையது என்ருே சொல்லமுடியாது. ஆகையால் லக்ஷணையைக்கொண்டே சப்தம் ப்ரஹ்மத்தை அறிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**240. அவதாரிகை :**

ஆத்மஸ்வரூபம் என்பது 'மனஸாஹ்யேவபச்யதி' என்று, மனசினுல் அறியப் படுவதாக ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றதால், ஆத்மா வ்யவகார அதீதம் என்று எப்படிச் சொல்வது? அதனுல் மனோவிஷயமாக இருக்கின்ற விஷயத்தில் வாக்என்பதும் ப்ரவர்த் திக்கலாமே? என்ருல்,

**ச்லோகம் :**

आस्तामत्र वचः प्रवृत्तिविरहः प्रत्यक्त्वहेतोर्दृशि व्यापाराय मनोऽपि न प्रभवति भ्राम्यत्पराग्भूमिषु ।
एवं चेदखिलप्रमाणपदवीः षोढा विभिन्ना भवानुल्लङ्घ्य व्यवतिष्ठते त्वयि गिरः स्यान्मुख्यवृत्तिः कथम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யக்ஸ்வரூபமான த்ருக்ஸ்வரூபத்தில் பதங்களின் ப்ரவ்ருத்தி ஏற்படாது என்பது ஒருபுறமிருந்தாலும், பாஹ்யவிஷயங்களில் ப்ரவர்த்திக்கின்ற புத்தியானது, ப்ரத்யகாத்ம விஷயத்தில் ப்ரவர்த்திக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக ஆகாது. ஆகவே, ஆறு ப்ரமாணங்களின் வரம்பிற்கு அப்பாற்பட்டு விளங்குகின்றஉன்னை, பதங்கள் முக்யவ்ருத்தியினுல் எப்படி அறிவிக்கமுடியும்?

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்ம ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பது, சப்தம் என்ற வாக்கினுல் அறிவிக்கமுடியாது என்று சொல்லப்பட்ட விஷயம், ஒன்றும் பெரிய விஷயமல்ல, மிகவும்

அல்ப்பமான விஷயம். ஏனெனில் மனஸினாலேயே அறியக்கூடியதல்ல என்று சொல்லப் படுவதால், வாக்கினால் அறியமுடியாது என்பது பெரிய விஷயமல்ல. இந்த்ரியங்களுக் கெல்லாம் ஆந்தரமாக இருப்பதுமனஸ் அதைக்காட்டிலும் ஆந்தரமாக இருப்பது ஆத்மா. ஆகவே ஸர்வப்ரத்யக்காக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் என்பது பாஹ்ய விஷயங்களிலேயே ப்ரவர்த்திக்கின்ற மனஸினாலும் க்ரஹிக்கமுடியாது. அபிதான, அபிதேய பாவஸம்பந்தத்தினால் பாஹ்ய விஷயமான கடாதிகள் அறியப்படுகிறது. இவ்விதம் பராக்வஸ்துவை க்ரஹிக்கின்ற கரணங்களால் அந்தராத்மாவை க்ரஹிக்கமுடியாது என்பதையே 'பராஞ்சிகானி' என்ற ச்ருதி வாக்யமும் தெரிவிக்கின்றது. ஸர்வமும் மனஸினால்தான் அறியப்படவேண்டும் என்று சொல்லப்பட்டபோதிலும், எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாததும், மனஸ் முதலான ஸர்வத்திற்கும் எது ப்ரகாசகமாக இருக்கின்றதோ அந்த வஸ்துவை, மனஸ் என்பது எப்படி க்ரஹிக்கமுடியும்? ஆகவே மனஸிற்கும் விஷயமல்ல என்றே சொல்லப்படவேண்டும். மனஸிற்கே விஷயமல்ல என்றால், வாக் என்பது ப்ரவர்த்திக்கமுடியும்? என்பதை கைமுதிக ந்யாயேன அறிந்துகொள்ளவேண்டும்.

ஆகவே, கீழே சொல்லப்பட்டமுறையில், ஜாத்யாதி ஸம்பந்தம் எதுமில்லாததாலும், ஸர்வப்ரமாணங்களுக்கும் அதீதம் என்று சொல்லப்பட்டதாலும், ப்ரத்யகாத்ம ஸ்வரூப மானது, சப்தத்தின் முக்யவ்ருத்தியினால் போதிக்கப்படுவதாகச் சொல்வதற்குமுடியாது.

**241. அவதாரிகை :**

ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் சப்தத்தின் சக்தி அர்த்தத்தினால் அறியப்படவில்லையென்றாலும், லக்ஷணையினால் அறியப்படுவதாகவே சொல்லப்படுகிறது. இவ்விதம் லக்ஷணையினால் அறியப் பட்டாலும் ஆத்மஸ்வரூபம், ஞானத்திற்கு விஷயமாகத்தானே ஆகிறது? ஆகவே ஆத்மாவிற்கு விஷயபாவம் (கர்மதவம் ஞேயத்வம்) இல்லையென்று தடை செய்வதற்குமுடியாது. அதனால் பலவ்யாப்யத்வம் என்ற கர்மத்வம் ஸம்பவிக்கின்றதே? என்றால், அவ்விதம் கர்மத் வம்ஸம்பவிக்கமுடியாது.

**ச்லோகம் :**

आत्मानं न तु कर्मतामुपनयञ्छब्दो वदेल्लक्षणामार्गेणापि यतः पराग्विषयवन्नास्येष्यते कर्मता ।
प्रत्यक्ता हि विरुध्यते यदि भवेदस्याऽऽत्मनः कर्मता यद्यत्कर्म न तस्य तस्य भवति प्रत्यक्स्वभावो यतः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தமானது லக்ஷணவ்ருத்தியினால் ஆத்மாவை தெரிவிக்கின்றது என்றாலும், ஆத்மாவிற்கு (கர்மத்வம்) விஷயத்வத்தை ஏற்படுத்துவதில்லை. ஏனெனில், பாஹ்யவஸ்துக்களைப்போல் ஆத்மாவிற்கு விஷயத்வம் சொல்லப்படுமானால் ஆத்மாவின் ப்ரத்யக் ஸ்வபாவத்திற்கு விரோதம் ஏற்படும். ஏனெனில், எந்தவஸ்து, விஷயமாக இருக்கிறதோ அதுப்ரத்யக்ஸ்வரூபமாகஇருக்கமுடியாது என்பதால் கர்மத்வம் ஒப்புக் கொள்ளப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** சப்தமானது, ப்ரத்யக் ஸ்வரூபத்தை லக்ஷணையினால்தான் போதிக்கின்றது என்று சொல்லப்பட்டதனாலேயே சக்தியினால் க்ரஹிக்கமுடியாது என்பது சித்தமாகிறது. இதனாலேயே சப்தத்திற்கு விஷயமல்ல என்று அறியப்படவேண்டும். மனஸ், புத்தி முதலான கரணங்களுக்கு எதுவிஷயமோ அவைகளுக்கே கர்மத்வம் ஸம்பவிக்கும். பல வ்யாப்யத்வரூபமான கர்மத்வம் எந்த விஷயத்திற்கு இருக்கின்றதோ அதற்கே ஞேயத்வம் (மேயத்வம்) சொல்லமுடியும். அதாவது ஞானத்தினால் எது ப்ரகாசப்படுத்தப்படுகிறதோ அதற்குத்தான் சைதன்யம் என்ற, பலவ்யாப்யத்வம் வேண்டும். ஞானஸ்வரூபமாகவே ப்ரகாசிக்கின்ற ப்ரத்யகாத்மஸ்வரூபம்

என்பதற்கு பலவ்யாப்யத்வம் சொல்லமுடியாது. வ்ருத்தி விஷயத்வம் உண்டு. வ்ருத்தி விஷயத்வம் என்பது கர்மத்வமில்லே.

**பூர்வ :** 'என்னே நான் அறிகிறேன்' என்று எல்லோருக்கும் அனுபவம் இருக்கின்றதால் பலவ்யாப்யத்வம் இருக்கிறதென்றுதானே சொல்லவேண்டும்? மேயத்வம் இல்லே என்று எப்படிச்சொல்வது?

**சித்தா :** ப்ரத்யகாத்மாவிற்கு கர்மத்வம் இருக்குமானல் ப்ரத்யக்த்வம் இருக்கமுடியாது கர்மத்வம் இருக்குமானல், அது ப்ரத்யகாத்மாவாக இருக்கமுடியாது. இரண்டும் விருத்தம். ஏனெனில் ஸர்வப்ரத்யக்ஸ்வரூபம் என்பது ஸர்வத்திற்கும் ப்ரகாசகமாக ஸ்ர்வசாக்ஷி என்று சொல்லப்படுமானல் அதைஞேயம் என்று பல வ்யாப்யத்வமுள்ளதாகச்சொல்வது எப்படி பொருந்தும்?

'நான் என்னே அறிகிறேன்' என்று சொல்கின்றபோது அந்த கரணத்துடன் கூடிய சைதன்யத்தையே, 'அஹம்' என்று விவகார தசையில் ஏற்படும் அனுபவத்தைப்பற்றியே சொல்லப்படுகிறது. அந்த ஞானம், கேவல ப்ரத்யகாத்மாவைப்பற்றியது அல்ல. ஆகவே ஜடமாக இருக்கின்ற வஸ்துப்ரகாசிப்பதற்குத்தான் வ்ருத்தி என்பதும், பலம் என்று சொல்லப் படும் சைதன்யவ்யாப்யத்வமும், தேவைப்படுகிறது. 'இது' என்று தனக்கு வேருக அறியப் படும் பதார்த்தங்களில் தான் கர்மத்வம் சொல்லமுடியும். கூடஸ்த்தமாகவும், ஸ்வப்ரகாசமாகவும் இருக்கின்ற ப்ரத்யகாத்மஸ்வரூபம் என்பது வேறென்றினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச் சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யமானது லக்ஷணேயினுல் தீரம் என்பதை போதிக்கின்றது என்ருலும் தீரம் என்பது எப்படி கர்மாவாக (பல வ்யாப்யமாக) இருக்கிறதோ அதுபோல் ப்ரத்யகாத்மாவும் லக்ஷணேயினுல் போதிக்கப்பட்டபோதிலும் கர்மத்வம் சொல்லப் படலாமே? இதில், என்ன ஆக்ஷேபம் இருக்கமுடியும்?

**சித்தா :** இவ்விதம் சொல்லமுடியாது, சப்தமானது பரத்யகாத்மாவை லக்ஷணேயினுல் போதிக்கின்றது என்ருலும், ஜடமான தீரம் முதலானவைகளே எப்படி பல வ்யாப்யத்வரூபமாக போதிக்கின்றதோ, அதுபோல் பலயாப்யத்வரூபமாக போதிப்பதாகச்சொல்லமுடியாது. அகர்மாவாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம், ப்ரமேயம் என்று சொல்வதற்கேமுடியாது. ஸர்வாந்தரமாய் ஸர்வத்திற்கும் ப்ரகாசகமாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் அஹமஹம் என்று ஸர்வதா. அபரோக்ஷமாக ப்ரகாசிக்கின்றது என்ற அனுபவம், எல்லோருக்கும் ப்ரசித்தமாக இருக்கின்றது. ஆகவே, 'தீரம்' முதலானவைகளேப்போல் கர்மத்வம் சொல்லலாமே என்ற அனுமானத்திற்கு இங்கு அவகாஸமே கிடையாது. அதனுல் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வம் சொல்லமுடியாது. ஆனுல் ப்ரத்யகாத்மாவிற்கு வ்ருத்தி வ்யாப்யத்வம் ஸம்பவிக்கின்றதால், லக்ஷணேயினுல், ப்ரத்யகாத்மா அறியப்படுகிறது, என்று மேயத்வம் சொல்லப்படுவதால் எந்த விதமான பாதகமும் கிடையாது. "யத்யத்கர்மா பலவ்யாப்யம், தத்தத் ஜடம், பராக்" என்று சொல்லப்படுகிறது. அதனுல் ஸர்வப்ரத்யக்ஸ்வரூபமான ஆத்மாவிற்கு பல வ்யாப்யத்வம் சொல்லமுடியாது.

**242. அவதாரிகை :**

ப்ரத்யகாத்மாவானது கரணவ்யாபாரத்திற்கு விஷயமாக இருக்கின்றதால், ஆத்மாவிற்கு கர்மத்வம் சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்வதற்குமுடியாது.

**ச்லோகம் :**

वागादेः खलु बाह्यवस्तु विषयो नात्मा यतो नात्मनि व्यापारं करणस्य कस्यचिदपि प्रेक्षामहे न्यायतः यत्किंचित्करणं जगत्त्रयगतं तत्प्रत्यगात्मेक्षितं बाह्ये वस्तुनि वर्ततेऽनुभवनं तत्र प्रमाणं मतम् ॥

**ச்லோகார்த்தம் :** வாக், மனஸ் முதலான கரணங்கள் பாஹ்ய விஷயமாகவே இருக்கின்றது. எந்த கரணமும் ஆத்மவிஷயத்தில் ப்ரவ்ருத்திக்கின்றதில்லையென்பது யுக்தியைக்கொண்டு விசாரிக்கின்றபோதும் அறியப்படுகிறது. ஆகவே சாக்ஷிபாஸ்யமாக இருக்கின்ற இந்த மூன்று உலகத்திலுள்ள கரணங்களும் பாஹ்ய வஸ்துக்களில்தான் ப்ரவ்ருத்திக்கின்றது. இதற்கு அனுபவம் என்பதே ப்ரமாணமாகின்றது.

**வ்யாக்யானம் :** வாக், மனஸ், என்ற கரணங்களுக்கெல்லாம், பாஹ்யவஸ்துக்கள்தான் விஷயமாக ஆகும். அதனுல் ப்ரத்யகாத்மஸ்வரூபம் கரணங்களால் விஷயீகரிக்கப்படுவதாகச் சொல்வதற்கு முடியாது. "சப்தம் என்பதும், மனஸ் என்பதும் ப்ரத்யகாத்மாவை விஷயீகரிக்க முடியாது. ஏனெனில், கரணமாக இருப்பதால், சக்ஷுராதிகள்போல," என்று அனுமானத்தைக் கொண்டே அறிந்துகொள்ளலாம்.

**பூர்வ :** இந்த அனுமானத்தில் உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது. அதாவது மனஸ் என்பதும், சப்தம் என்பதும் சக்ஷுராதிகள்போல பாஹ்யமாத்ர விஷய கரணமாக இருக்கின்றதால், ப்ரத்யகாத்மாவை அறிவிக்கமுடியாது என்று அனுமானம் சொல்லப்பட்டது. இந்த அனுமானத்தில் உபாதிதோஷம் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில், உதாகரணமாகச் சொல்லப்பட்ட சக்ஷுராதி கரணங்களில் பாஹ்யமாத்ர விஷயங்களை ப்ரகாசப்படுத்தக்கூடிய தன்மை தான் இருக்கிறது. அதுபோல் மனஸ் என்பது பாஹ்யமாத்ர விஷயத்தை மட்டுமே ப்ரகாசப்படுத்துகிறது என்று சொல்வதற்குமுடியாது. ஏனெனில், ஆந்த்ர விஷயமான சுகாதிகளையும் ப்ரகாசப்படுத்துகின்றதன்மை இருக்கின்றது. அதனுல் மனஸ் என்பது கரணமாக இருக்கின்றது என்பதற்காக பாஹ்யவிஷயங்களை மட்டுமே ப்ரகாசப்படுத்தமுடியும் என்றும், ஆந்த்ர விஷயமான ப்ரத்யகாத்மாவை அறிவிக்கமுடியாது என்றும் சொல்வதற்குமுடியாது. ஆகவே, சக்ஷுராதி கரணங்களில் கரணத்வமும் பாஹ்யமாத்ர விஷயத்வமும் ஆத்ம அவிஷயத்வமும் இருக்கிறது. (இது ஸாத்ய வ்யாபகத்வம்).

சப்தம் என்பதிலும் மனஸ் என்பதிலும் கரணத்வம் இருக்கிறது. ஆனுல் பஹிர்மாத்ர விஷயத்வம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் சுகாதி முதலான ஆந்த்ர விஷயங்களையும், மனஸ் என்பது ப்ரகாசப்படுத்துகின்றது. (இதுவே ஸாதன அவ்யாபகத்வம்). அதனுல் சக்ஷுராதிவத் கரணத்வாத் மனஸ் என்பது ஆத்மாவை அறிவிக்கமுடியாது என்று சொல்லப்படும் அனுமானத்தில் 'பஹிர்மாத்ர விஷயத்வம்' என்பது உபாதிதோஷமாக இருக்கிறது.

**சித்தா :** சப்தம் என்பதற்கும் மனஸ் என்பதற்கும் ஆத்மா விஷயமல்ல. ஏனெனில், 'சக்ஷுராதிகள் போல கரணமாக இருப்பதால்' என்று சொல்லப்பட்ட அனுமானத்தில் எந்த விதமான தோஷமும் கிடையாது. மனஸ் என்பது பாஹ்யவிஷயங்களையும் ஆந்த்ர விஷயங்களான சுகாதிகளையும் ப்ரகாசப்படுத்துவதாகச் சொல்லப்படுவது சரியல்ல. மனஸ் என்பது விஷயங்களை ப்ரகாசப்படுத்துவதாகச் சொல்லப்படுமானுல், மனஸ் என்பதும் ஒரு ப்ரமாணம் என்று சொல்லநேரிடும். அவ்விதம், மனஸ் என்பதை ப்ரமாணமாக ஒப்புக் கொள்ளமுடியாது. மேலும் ஆந்த்ரவிஷயமான சுகாதிகளையும் மனஸ் என்பது ப்ரகாசப் படுவதில்லை, அந்த:கரணத்தில் ஏற்படும் சுகாகார வ்ருத்திகளை சாக்ஷியே ப்ரகாசப் படுத்துகின்றது என்பதால் சுகாதிகள் சாக்ஷிபாஸ்யம் என்றே சொல்லப்படுகிறது. (அந்த:கரண

தர்மாணும், ப்ராதி பாஸிக வஸ்தூனும்சசாக்ஷி பாஸ்யம்) ஆகவே, மனஸ் என்பதற்கு சுகாதிகள் விஷயம் என்று சொல்லமுடியாது. அதேபோல் பாஹ்யவஸ்துக்களையும், சக்ஷுராதி கரணங்களின் அபேக்ஷையின்றி மனஸ் என்பது ப்ரகாசப்படுத்தமுடியாது. ஆகையால் மனஸ் என்பது தனிப்பட்ட முறையில் ஸ்வதந்த்ரமாக எந்த விஷயத்தையும் கிரஹிக்கின்றதாகச் சொல்லமுடியாது. (அதனால் மனஸிற்கு அஸாதாரண விஷயம் எதுவுமே கிடையாது)

ஆகையால் மனஸ் என்பது சக்ஷுராதி கரணங்களின் அபேக்ஷையுடன், பாஹ்யமாத்ர விஷயத்தையே கிரஹிக்கின்றது. ஆகவே மனஸ் என்பதில் கரணத்வம் இருந்தாலும் பாஹ்ய மாத்ர விஷயத்வம் சொல்லமுடியாது என்றும் அதனால் உபாதி தோஷம் ஸம்பவிக்கிறது என்றும் ஆக்ஷேபிக்கப்பட்டது சரியல்ல. அனுமானத்தில் ஸாதனமாகச் சொல்லப்படும் கரண த்வம் என்பது, சக்ஷுராதிகளில் இருப்பதுபோலவே, மனஸ் என்பதிலும், சப்தம் என்பதிலும், கரணத்வமும் இருக்கிறது, பஹிர்மாத்ர விஷயத்வமும் இருக்கிறது, ஆத்ம அவிஷயத்வமும் இருக்கிறது ஆகையால் ஸாதன அவ்யாபகத்வம் என்ற உபாதிதோஷம் இல்லை. ஸாதன வ்யா பகத்வம் இருக்கின்றது.

ஆத்ம அவிஷயத்வம் பாஹ்யமாத்ர விஷயத்வம் என்பது கரணமான சக்ஷுரா திகளில் இருப்பதே ஸாத்யவ்யாபகத்வம். ஆகவே ஸாத்ய வ்யாபகத்வேஸதி ஸாதன வ்யா பகத்வம் என்பது இருக்கின்றதால் இந்த அனுமானத்தில் உபாதிதோஷம் கிடையாது. ஆகவே, 'யத்ர, யத்ர கரணத்வம், தத்ர தத்ர பாஹ்யமாத்ர விஷயத்வம்' அல்லது 'அனாத்ம விஷயத்வம்' என்று சொல்லப்படுவதில் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை.

ஸ்வப்ரகாசமான ப்ரத்யகாத்மஸ்வரூபம், வேறொன்றினால் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச் சொல்லமுடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால் ஆத்மா ஜடம் என்று சொல்லநேரிடும் ஆகவே தர்க்கம் என்பதைக்காட்டிலும் சாஸ்திரம் என்பது பலவத். ஸ்வப்ரகாசமான ஆத்மா, மனஸ் என்பதால் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச்சொல்லபடுமானால் சாஸ்திர விரோதமும் அனுபவ விரோதமும் ஏற்படும்.

**பூர்வ :** நம்முடைய மனஸிற்கும் வாக்கிற்கும் ஆத்மா அவிஷயம் என்று சொல்லப்படுவது சரி. ஆனால் விராட்புருஷனுடைய மனஸிற்கும் சப்தத்திற்கும் ஆத்மா விஷயமாகலாமே?

**சித்தா :** அவ்விதமும் சொல்லமுடியாது. ஏனெனில், ஸமஷ்டி, வ்யஷ்டியாத்மகமான ப்ரஹ்மாமுதல் ஸ்தம்பபர்யந்தம் கரணம் என்பது ஒன்றுதான். கரணம் என்றாலே விஷயங்களைத் தான் தெரிவிக்குமேயன்றி கர்த்தாவான ஆத்மாவை தெரிவிக்கமுடியாது. ஆகவே, ஸர்வஞ்ஞனை விராட்புருஷனின் கரணமானாலும் சரி, க்ருமி கீடாதிகளின் கரணமானாலும் சரி ஆத்மாவை தெரிவிக்கமுடியாது என்பதைத்தான் இந்த ச்லோகத்தில் 'யத்கிஞ்சித் கரணம் ஜகத்ரயகதம்' என்று சொல்லப்படுகிறது. கரணம் என்றாலே, அது பாஹ்ய விஷயமாகத்தான் இருக்கும் என்பதை, கடோநிஷத் வாக்யமும், "பராஞ்சிகானி வ்யத்ருணத் ஸ்வயம்பூ:, தஸ்மாத் பராங்பச்யதி ந அந்தராத்மன்" என்று தெரிவிக்கின்றது மேலும் கேவல சைதன்யம் என்றாலும் சரி, அல்லது சாக்ஷிசைதன்யம் என்று சொல்லப்பட்டாலும் சரி, நேரிடையாக எந்த விஷயத்தையும் ப்ரகாசப்படுத்துவதாகச் சொல்லமுடியாது. சிதாபாஸ ஸஹிதமான அந்த:கரணத்தின் மூலமாக விஷயங்களை ப்ரகாசப்படுத்துகின்றது. இவ்விதம் சைதன்யமானது ஸ்வயம் கர்த்தாவாக இல்லாமல் இருந்தும்கூட, ஆத்மா பாஸகம், அந்த:கரணம் பாஸ்யம் என்ற விவேகம் இல்லாத காரணத்தினால், ஆத்மாவிற்கு ப்ரமாத்ருத்வம் சொல்லப்படுகிறது. இந்த விதம் சாக்ஷியினால்

ப்ரகாசப்படுத்தப்படுகின்ற மனஸ் என்ற கரணமானது, ஸதாத்மகமாகவும், சிதாத்மகமாகவும் ஆகின்ற காரணத்திஞல் ஜடமான மனஸ் என்பதே சேதனன் என்று அனுபவம் ஏற்படுகிறது. ஆகவே அவித்யாவ்ருத்தி ஸம்பந்தமுள்ள விஷயப்ரகாசகமான சைதன்யம் என்பதை சாக்ஷி என்றும், அந்த:கரண ஸம்பந்தத்துடன் விஷயப்ரகாசமாக இருக்கின்றசைதன்யம் ப்ரமாதா என்றும் சொல்லப்படுகிறது.

இந்த விதம், கரணங்கள் ஜடமாக இருந்தபோதிலும் ஸத்சிதாத்மகாமாக, (சைதன்ய ஸம்பந்தத்திஞல்) ஆகின்றதால் விஷயப்ரகாசமாக ஆகிறது. ஆகையால் ப்ரத்யகாத்மாவிற்கு கரணப்ரகாச்யத்வம் என்ற கர்மத்வம் சொல்வதற்குமுடியாது.

எந்த விஷயங்களையும் கரணங்கள்தான் ப்ரகாசப்படுத்தவேண்டும். ஆனால் ஜடமான காரணங்களுக்கு சைதன்ய அபேக்ஷை இருக்கின்றதால் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வம் ஸம்பவிக்கின்றது. அதுபோல் ஆத்மாவிற்கும் கரணவ்யாப்யத்வம் சொல்லப்படுமாஞல், ஆத்மாவிற்கும் பல வ்யாப்யத்வம் சொல்லநேரிடும். அவ்விதம் சொல்லப்படுமாஞல் ஆத்மா ஜடமென்ருகும்; ஆகவே கடபடாதிகள் போல் ஆத்மாவிற்கு கரணவிஷயத்வம் சொல்லப்படுமாஞல் ஜகத் என்பதே ப்ரகாசிக்க முடியாது.

மேலும் ஸர்வ விஷய ப்ரகாசமும், சைதன்யத்திஞல் தான் ஏற்படுகிறது என்பதை கேஞேபநிஷத்தில் மிகத்தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றது. அதாவது 'கேனேஷிதம்பததி ப்ரேஷிதம் மன:' என்று, ஒவ்வொரு கரணங்களும், தானே விஷயங்களில் ப்ரவ்ருத்திக்கின்றதா? அல்லது வேருென்றின் உதவியிஞல் ப்ரகாசிக்கின்றதா? என்ற கேள்விக்கு பதில் சொல்லப்படுகின்றமுறையில், 'ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம்' சக்ஷுஷ: சக்ஷு: என்று சைதன்யத்திஞல் தான் கரணங்கள் விஷயத்தை ப்ரகாசப்படுத்துகின்ற சக்தி உடையதாக இருக்கிறதென்பதை சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ஜாக்ரத் காலத்தில் மனஸ் என்பது இருக்கின்றதென்பதையும் சுஷுப்தி காலத்தில் மனஸ் என்பது லயத்தை அடைகின்றது என்பதையும், ப்ரத்யகாத்மாவிஞல்தான் அறியப்படுகிறது. இவ்விதம் இருக்கின்றபோது மனஸ் என்ற கரணம் ப்ரத்யகாத்மாவை (தெரிவிக்கின்றது) அறிவிக்கின்றது என்று எப்படிச்சொல்லமுடியும்? ஆகையால், ஆத்மா கரணவ்யாபாரத்திற்கு விஷயமாக இருக்கிறதென்றும் அதஞல் கர்மத்வம் சொல்லலாம் என்றும் ஆக்ஷேபம் செய்வது சரியல்ல.

இப்பேர்ப்பட்ட ஆத்மஸ்வரூபமே ப்ரஹ்மமென்று அறிவாஞகில் அவனே ம்ருத்யுவை தாண்டுகிருன் என்றும் அவனே தீரன் என்றும், ச்ருதி வாக்யங்களும் போதிக்கின்றது வித்வான்களின் அனுபவமும் இதில் ப்ரமாணமாக ஆகின்றது.

**243. அவதாரிகை :**

இந்தவிதம் சொல்லப்பட்ட காரணங்களிஞல் ப்ரத்யகாத்மாவானது சப்தத்திஞல் நேரிடையாக (அபிதையிஞல்) போதிக்கப்படவில்லை என்று சொல்லப்பட்ட விஷயத்தை இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रत्यग्रूपमतो न शब्दविषयो बुद्धेरवेद्यं यतो बुद्धिर्यत्र हि विद्यते स विषयः शब्दस्य नात्मन्यसौ ।
तेनात्मानमसौ न गोचरयितुं शब्दः क्षमो मुख्यया वृत्त्या वेतरयाऽपि तेन न तया तस्यात्मनः कर्मता ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மா, புத்தியிஞல் அறியக்கூடியதுஅல்ல. அதஞல் சப்தத்திற்கும் விஷயமாக ஆகாது. எது புத்திக்கு விஷயமாகின்றதோ அதுவே சப்தத்திற்கும் விஷயமாகஆக முடியும். ஆத்மா புத்திக்கு விஷயமல்ல. அதஞல் சப்தமானது நேரிடையாகவோ

லக்ஷணையினுலோ ஆத்மாவை ப்ரகாசப்படுத்துவதாக சொல்லமுடியாது. அதனுல் ஆத்மாவிற்கு கர்மத்வம் என்ற விஷயத்வம் கிடையாது.

**வ்யாக்யானம் :** கீழே சொல்லப்பட்ட காரணங்களினுல் ப்ரத்யகாத்மாவானது சப்தத்திற்கு விஷயமாக ஆகாது. ஏனெனில் ப்ரத்யகாத்மா என்பது மனஸினுலேயே க்ரஹிக்கமுடியாது என்ருல் வாக்கினுல் எப்படி அறிவிக்கமுடியும்? மனஸிற்கு எது விஷயமோ அது தான் சப்தத்திற்கும் விஷயமாக ஆகமுடியும். ஆகையால், வாக் என்ற சப்தமானது அபிதையினுலோ, லக்ஷணையினுலோ ஆத்மாவை ப்ரகாசப்படுத்தமுடியாது. (அறிவிக்கமுடியாது).

**பூர்வ :** ப்ரத்யகாத்மா புத்திக்கு விஷயமில்லை என்பதற்காக சப்தத்திற்கும் விஷய மில்லை என்று எப்படிச்சொல்வது? உதாரணமாக சப்தம் என்பது கண்ணிற்கு விஷயமல்ல என்பதற்காக, காதிற்கும் விஷயமில்லை என்று சொல்லமுடியுமா? மேலும் ச்ருதியே 'தந்துஔபநிஷதம்புருஷம்' என்று, ஆத்மா உபநிஷத்திற்கு விஷயம் என்றுதானே தெரிவிக்கின்றது? அவ்விதமிருக்க ஆத்மா சப்தத்திற்கு விஷயமில்லை என்று எப்படிச்சொல்வது?

**சித்தா :** எந்த ப்ரமாணமாக இருந்தாலும் மனஸ் என்ற கரணத்துடன் சேர்ந்தே விஷயத்தை ப்ரகாசப்படுத்தவேண்டும். மனஸ் என்பதில்லாமல் சக்ஷுராதி கரணங்கள் எந்த விஷயத்தையும் ப்ரகாசப்படுத்தமுடியாது. ஆகவே மனஸ் என்பதே ஆத்மாவை ப்ரகாசப்படுத்தமுடியாது என்ருல், சப்தம் என்பதும் தெரிவிக்கமுடியாது. எந்த வஸ்துவானுலும் அந்த வஸ்துவாகாரவ்ருத்தி புத்தியில் ஏற்பட்டால்தான் அதை சப்தம் தெரிவிக்கமுடியும். சப்தத்திற்கோ புத்திக்கோ விஷயமாகக்கூடிய வஸ்து ஜடமாகத்தான் இருக்கமுடியும். ஆகவே சைதன்யஸ்வரூபமானஆத்மா, ஜடமானபுத்திவ்ருத்திக்கு விஷயமாகக்கூடிய யோக்யதை உடையது அல்ல. மேலும், சப்தம் கண்ணினுல் க்ரஹிக்கப் படவில்லையென்பதற்காக, காது என்பதாலும் க்ரஹிக்கமுடியாது என்று எப்படிச்சொல்லமுடியும்? என்று சொல்லப்பட்ட உதாகரணம் பொருத்தமற்றது. ஏனெனில் கண் என்பது ரூப விஷயகமான ப்ரமாணம். காது என்பது சப்தவிஷயத்தில் ப்ரமாணம் இவ்விதம் இரண்டிற்கும் விஷயபேதம் இருக்கின்றது. ஆனுல் (தார்ஷ்டாந்தத்தில்) இந்த இடத்தில் மனஸ் என்பதற்கும் சப்தம் என்பதற்கும் ஆத்மா என்பது ஒன்றே விஷயமாக இருக்கின்றது. ஆகவே, சொல்லப்பட்டத்ருஷ்டாந்தம் பொருந்தாது.

ஆகவே, 'யத்ரயத்ர சப்த வேத்யத்வம் தத்ரதத்ரபுத்திவேத்யத்வம் என்பது இருக்கின்றது. யத்ரயத்ர புத்திவேத்யத்வ அபாவ: தத்ரதத்ர சப்தவேத்யத்வஅபாவ:'. புத்தியானது ஆத்மாவை விஷயீகரிக்கவில்லையென்ருல் சப்தமும் விஷயீகரிக்கமுடியாது. ஆகவே, ஆத்மாவானது சப்தத்தின் மூலமாக லக்ஷணாவ்ருத்தியினுல் அறியப்படுவதாகச் சொல்லப்பட்டபோதிலும் ஆத்மாவிற்கு விஷயத்வம் சொல்லமுடியாது என்பதே இதன் கருத்து. வாக்யத்திலிருந்து ஏற்படும் வ்ருத்தி வ்யாப்யத்வம் ஆத்மாவிற்கு உண்டு என்பதை ஒத்துக்கொள்ளப்படுவதால் உபநிஷத் என்பது ஆத்மாவை அறிவிப்பதில் ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் பலவ்யாப்யத்வம் என்பது கிடையாது என்பதால் லக்ஷணையினுலும் சப்தம் ஆத்மாவை ப்ரகாசப்படுத்தாது என்று சொல்லப்பட்டது.

## 244. அவதாரிகை :

சாஸ்திரத்திற்கும் ப்ரத்யகாத்மா விஷயமில்லையென்று சொல்லப்பட்டது. "சாஸ்திர யோனித்வாத்" என்ற சூத்ரமானது, சாஸ்திரத்தினுல்தான் அறியப்படவேண்டும் என்று தெரிவிக்கின்றது. அதனுல், ப்ரத்யகாத்மா சப்தத்தினுலும் அறியக்கூடியதல்ல என்று சொல்லப் படுமானுல், சாஸ்திரயோனி என்ற ப்ரதிஞ்ஞைக்கு விரோதமாக ஆகிறது. அதற்காக சப்த

வேத்யம் தான் என்று சொல்லப்படுமானல், 'தத்துஸமன்வயாத்' என்ற சூத்ரத்திஞல் ஸம்யக்அன்வயம் என்று சொல்லப்படுவதால், உபக்ரம, உபஸம்ஹாராதி தாத்பர்யவிஷயமாகச் சொல்லப்படுகிறதேயன்றி சப்தத்திற்கு நேரிடையான விஷயமில்லை என்று ஸமன்வயம் செய்யப்படுவதற்கு ஹேதுவாக சொல்லப்படுகின்ற சூத்ரத்திற்கு முரண்பட்டதாக ஆகின்றது.

**ச்லோகம் :**

नन्वज्ञेयमिदं भवेद्यदि मम प्रत्यक्स्वरूपं ततः प्रामाण्यं कथमस्य वेदशिरसस्तत्र प्रतिज्ञायते ।
यन्मेयं न भवेत्कदाचिदपि तद्वेदान्तवेद्यं भवेदित्येतद्वचनं पराहतपदं वक्तुं न युक्तं बुधैः ॥

**ச்லோகார்த்தம் :** என்னுடைய ப்ரத்யகாத்ம ஸ்வரூபமானது, அறியப்படும் தத்வமல்ல, என்று சொல்லப்படுமானல், இந்த ஆத்மவிஷயத்தில் வேதாந்தவாக்யமே ப்ரமாணம் என்று எப்படி ப்ரதிஜ்ஞை செய்யமுடியும்? எந்த ஒரு வஸ்துவானது, எக்காலத்திலும், எதனலும் அறியக் கூடியதல்ல என்று சொல்லப்படுமானலும், அப்பேர்ப்பட்ட வஸ்துவை வேதாந்தம் தெரிவிக்கின்றது என்று முன்னுக்குப்பின் முரண்பட்டதான வாக்யத்தை வித்வானன தாங்கள் சொல்வது பொருந்தாது.

**வ்யாக்யானம் :** என்னுடைய ஸ்வரூபம் என்ன? என்பதை வாக்யத்திஞல் தான் அறிந்து கொள்ளவேண்டும் இவ்விதம் இருக்கின்றபோது சப்தம் என்பதற்கு அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய ஸாமர்த்யம் இருந்தபோதிலும் ப்ரத்யகாத்மாவை சப்தம் தெரிவிக்கமுடியாது என்று எப்படிச்சொல்வது? 'தந்து ஔபநிஷதம் ப்ரஹ்ம' என்று சொல்லப்படும் வாக்யத்திற்கும் 'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரத்திஞல் செய்யப்படும் ப்ரதிஜ்ஞைக்கும் விரோதமாக சப்த அவேத்யம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

ப்ரத்யகாத்மாவை, வேதாந்தம் என்ற சப்தப்ரமாணத்திஞல் தான் அறியவேண்டும் என்று சொல்லப்படுமானல் ப்ரத்யகாத்மா ப்ரமாணவிஷயமென்றே சொல்லவேண்டும் இவ்விதம் சொல்லப்படுமானல் ஆத்மாஜ்ஞேயம் என்று சொல்லவேண்டும். அதற்காக ப்ரத்யகாத்மா சப்தத்திற்கு விஷயமல்ல என்ருல், உபநிஷத் ப்ரதிபாத்யம் என்ற ச்ருதி வாக்யத்திற்கும் 'சாஸ்த்ரமேயோனி' என்று சொல்லப்படும் சூத்ரத்திற்கும் விரோதம் ஏற்படுகின்றது. இவ்விதம் முன்னுக்குப்பின் முரணகை, வித்வான்களில் சிறந்தவரான தாங்கள் பேசுவது பொருந்தாது.

**245. அவதாரிகை :**

ப்ரஹ்மமானது எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமல்ல என்று சொல்லப்படுவதற்கும், ப்ரஹ்ம ஸ்வரூபம் வேதாந்த வாக்யத்திஞல் தான் அறியப்படவேண்டும் என்று சொல்லப்படும் வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் சொல்லப்படும் விஷயத்திற்கும் எவ்வித விரோதமும் இல்லை.

**ச்லோகம் :**

नैतद्वस्तुनि कल्पितस्य जगतो वाक्यप्रसूतप्रमाबुद्धिर्मूलधगिष्यते तव निजस्वाकारमात्रग्रहात् ।
कर्मत्वं न करोति वाक्यजनिता बुद्धिः स्वरूपे तव स्वाकारग्रहणेन केवलमियं संसारमूलं दहेत् ।।

**ச்லோகார்த்தம் :** உன்னல் செய்யப்படும் ஆக்ஷேபம் சரியல்ல. வாக்யத்திலிருந்து ஏற்படுகின்ற புத்தி வ்ருத்தியானது, உன் ஸ்வரூபாகாரத்தை மட்டும் க்ரஹிக்கின்றதின் மூலம் ஆத்மாவில் கல்பிதமான, ஜகத்திற்கு மூலகாரணமான அஜ்ஞானம் என்பது தஹிக்கப் படுகின்றது. இவ்விதம் ஏற்படுகின்ற புத்திவ்ருத்தியானது உன் ஸ்வரூபத்தில் கர்மத்வத்தை (விஷயத்வத்தை) ஏற்படுத்தாது. ஸம்ஸாரகாரணமான அஜ்ஞானத்தையே ஸ்வரூபாகார வ்ருத்தி நாசமடையச்செய்கிறது.

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யத்திலிருந்து உன்னுடைய உண்மையான ஸ்வரூப ஆகாரமாக ஏற்படும் புத்தி வ்ருத்தியானது, சைதன்யத்துடன் கூடியதாகவே இருக்கின்ற காரணத்திஞல், ஆத்மாவில் அத்யஸ்த்தமான, ப்ரபஞ்சதோற்றத்திற்கு மூலகாரணமான அஜ்ஞானம்

என்பதை தஹிக்கூடியதாக இருக்கின்றது. ஆகையால் வேதாந்த வாக்யம், அகண்டாகார வ்ருத்தி மூலமாக ஆத்ம ஆவாரகமான அஞ்ஞானம் என்பதை நாசம் செய்கின்றது என்பதால் வாக்யம் ப்ராமாண்யம் என்று சொல்லப்படுகிறது.

**பூர்வ :** இவ்விதம் சொல்லப்பட்ட போதிலும் கடாதிகள்போல ப்ரத்யகாத்மா என்பதும், வ்ருத்தி ப்ரதிபலித சைதன்யத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்பதால் ஆத்ம விஷயத்திலும் கர்மத்வம் (ப்ரகாச்யத்வம்) என்பது ஸம்பவிக்கின்றது ஆகவே, கர்மத்வம் இல்லையென்று எப்படி சொல்லமுடியும்?

**சித்தா :** ஜடமான வஸ்துவை ப்ரகாசப்படுத்துவதற்குத்தான், வ்ருத்தி ப்ரதிபலன சைதன்யம் தேவை. அஜடமான ஸ்வயம் ப்ரகாசமான ப்ரத்யகாத்மாவை அறிவதற்கு வ்ருத்தி ஒன்றே தேவை. அதனுல் பலவ்யாப்யத்வமான கர்மத்வம் என்பது ப்ரத்யகாத்மாவில் ஸம்பவிக்க முடியாது.

**பூர்வ :** அப்படியானுல் அஞ்ஞான நிவர்த்திக்கு வ்ருத்தி ப்ரதிபலன சைதன்யம் தேவை என்று தானே சொல்லவேண்டும்?

**சித்தா :** மஹாவாக்யத்திலிருந்து ஏற்படும் வ்ருத்தியானது, ப்ரத்யகாத்மாகாரமாகவே ஏற்படுகின்றதால், அந்த அகண்டாகார வ்ருத்தியே அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது. ஸ்வரூபம் தானே ப்ரகாசிக்கின்றது என்பதால், ஆத்ம விஷயத்தில் வேறு சைதன்ய அபேக்ஷை இருப்பதாகச் சொல்லமுடியாது. அதனுல், பலவ்யாப்யத்வம் என்ற கர்மத்வம் சொல்லமுடியாது ப்ரத்யகாத்மசைதன்யம் என்பதும், வ்ருத்தி அவச்சின்னசைதன்யம் என்பதும் வேறல்ல என்பதால் பலவ்யாப்யத்வம் சொல்லமுடியாது.

கடபடாதி ஜட வஸ்துக்கள் என்பது ஸம்வித்ஸ்வரூபமல்ல அதனுல், கட ஆவாரக அஞ்ஞானமானது கடாகார வ்ருத்தி அவச்சின்ன சைதன்யத்தினுல், அஞ்ஞான நிவர்த்தி ஏற்பட்டு சைதன்யத்தினுல் ஜடமான கடம் ப்ரகாசிக்கவேண்டி இருக்கின்றது. அதனுல்தான் கடாதி விஷயத்தில் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வம் சொல்லப்படுகின்றது.

ஆகவே வேதாந்த வாக்யமானது, 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற ஆத்மாகாரமான வ்ருத்தி ஏற்படுவதற்கு காரணமாக இருக்கின்றது. இந்த வ்ருத்தியானது, ஆத்ம சைதன்யாகார மாகவே ஏற்படுகின்றதால், அஞ்ஞானம் அதன் கார்யமான ப்ரபஞ்சம் முதலான ஸர்வத்தையும் நாசம் செய்கின்றதால், வாக்யம் ப்ரமாணமென்று சொல்லப்படுகிறது. அது மட்டுமல்ல வாக்யத்திலிருந்தே உண்மையான வஸ்து ஆகாரஞானம் ஏற்படுகின்றதால் வாக்யம் ப்ரமாணம் என்ருகிறது. இதையே, திரவிடாச்சார்யார் என்பவராலும் 'சித்தம்து நிவர்த்தகத்வாத்' என்று "வேதாந்த வாக்யம் ஆத்மாகாரமான வ்ருத்தியை உண்டு பண்ணுகின்றது என்பதுடன் அஞ்ஞானத்தையும் நிவர்த்திக்கின்றதால் ப்ரமாணமாகிறது என்று நிச்சயம் செய்யப்படுவதாக சொல்லப்பட்டிருக்கிறது.

**பூர்வ :** வ்ருத்தியானது, கடபடாதிகளிலுள்ள அஞ்ஞாததை என்பதைப்போக்கி, ஞாததை என்ற அதிசயத்தை உண்டு பண்ணுகின்றதால் தான், கடாதிகள் ப்ரகாசிக்கின்றது. அதுபோல் இந்த வ்ருத்தியானது ஆத்ம ஸ்வரூபத்தில் என்ன அதிசயத்தை உண்டு பண்ணுகிறது?

**சித்தா :** அகண்டாகார வ்ருத்தியானது, ஆத்ம ஆவாரகமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது என்பதே அதிசயம். ஆகவே அஞ்ஞானம், அதன் கார்யம் என்பதுடன் நாசமாகிறது என்ருல், இதைவிட வேறு என்ன அதிசயம் இருக்கமுடியும்? இவ்விதம் ஆத்மாவில் ஆரோபிதமான அஞ்ஞான நாசத்தினுல், அதிஷ்டான ஸ்வரூபத்தில் எந்தவிதமான மாறுதலும் ஏற்படாது.

அஞ்ஞானம் என்பது கேவல புத்திவ்ருத்தியினுலோ கேவலசைதன்யத்தினுலோ நிவர்த்திக்காது. வ்ருத்தியும், அதில் ப்ரதிபலனமாகின்ற சைதன்யமும் சேர்ந்தே அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது. அக்னி என்பது அயஸ் என்ற உபாதியிலோ அல்லது கட்டை போன்ற உபாதியிலோ ஸம்பந்தப்பட்டால்தான் வஸ்துவைதஹிக்க முடியும். உபாதி ஸம்பந்தமில்லாத அக்னியென்பதோ அக்னிஸம்பந்தமில்லாத அயஸ்முதலான உபாதியோ எதையும் தஹிக்கமுடியாது. ஆகவே விஷயாகார வ்ருத்தி ப்ரதிபலன சைதன்யம் தான் அஞ்ஞானத்தை தஹிக்கின்றது ஆனுல் சைதன்யம் தான் வ்ருத்திமூலமாக அஞ்ஞான நாசகமாக ஆகிறது.

இந்த காரணத்தினுலேயே கேவலசைதன்யம் அஞ்ஞானத்திற்கு ப்ரகாசமாக இருக்கின்றதால் விரோதம் இல்லேயென்றும், வ்ருத்திப்ரதிபலித சைதன்யமே அஞ்ஞானத்திற்கு விரோதி என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் சைதன்யம் என்பது ஸ்வயம் ப்ரகாசகமாக ஸர்வதாப்ரகாசித்துக்கொண்டிருந்தபோதிலும் விஷயாகாரவ்ருத்தி ஏற்படுகின்றபோது அந்த வ்ருத்தி அவச்சின்ன சைதன்யமும் அந்தந்த விஷயாகாரமாகஆகிறது என்ருலும், ஜடமான வஸ்துக்கனே சைதன்யத்துடன் கூடிய புத்திவ்ருத்தியானது ப்ரகாசிக்க செய்கின்றபோது, அந்த வ்ருத்தியே விஷயங்களுடன் ஸம்பந்தப்படுகின்றபோது அந்தந்த விஷயாகாரமாகஆகிறது என்பதே புத்தியின் ஸ்வபாவம். ஆகவே புத்திவ்ருத்தி ஜடவஸ்துக்களுடன் ஸம்பந்தப் படுகின்றபோது ஜடாகாரமாகஆகிறது சைதன்யத்துடன் ஸம்பந்தப்படுகின்றபோது சைதன்யா காரமாகஆகிறது. ஆகையால் புத்திவ்ருத்தி ஜடவஸ்துவை க்ரஹிக்கின்ற விஷயத்திலோ சைதன் யத்தை க்ரஹிக்கின்ற விஷயத்திலோ விசேஷம் எதுவுமில்லே. ஆகையால் வேதாந்தம் என்ற ப்ரமாணத்தின் சக்தியினுல் ஆத்மாகாரமான அந்த:கரணவ்ருத்தி ஏற்படுகிறது. அதனுல் அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது. ஆத்மா ஸ்வரூபேண ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபமாகவே ப்ரகாசிக்கின்றது. அதனுல் பல வ்யாப்யத்வமில்லே. ஆகவே, கர்மத்வம் இல்லாததால் ஆத்மா ப்ரமாணத்திற்கும் அவிஷயம் என்றும், வ்ருத்திவ்யாப்யத்வம் இருப்பதால் வேதாந்த வேத்யம் என்று சொல்லப்படுவதால், வேதாந்த ப்ரமாண்யத்திற்கு ஹானியுமில்லே. எவ்வித முரண்பாடும் இல்லே.

**246. அவதாரிகை :**

ஞானஸ்வரூபமான ப்ரத்யகாத்மாவை போதிக்கின்ற விஷயத்தில் வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணமானது தன்னுடைய விஷயமான ஆத்மாவையன்றி வேருரு ஸம்வித் என்பதை அபேக்ஷிக்கப்படுவதில்லே என்ற விஷயம், மற்ற மதஸ்த்தர்களாலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

**ச்லோகம் :**

संविद्व्युत्पादकं यद्वचनमभिमतं कर्ममीमांसकानाम् तत्कर्मत्वं न तावत्क्षिपति घटपटाद्यर्थसंवित्स्वरूपे ।
किं त्वज्ञानापनुत्या फलवदभिमतं तत्र शिष्यस्य तद्वत् सर्वं वेदान्तवाक्यं फलवदिदमपि प्रत्यगात्मस्वरूपे ॥

**ச்லோகார்த்தம் :** கடம் முதலானவைகளின் ஞானத்தின் ஸ்வரூபத்தை அறிவிக்கின்ற வாக்யத்தை கர்ம மீமாம்ஸகர்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அந்த வாக்யம், கடபடாதி ஞானத்தில் கர்மத்வம் என்பதை உண்டுபண்ணுது. ஆனுல் சிஷ்யனுடைய ஸந்தேகத்தை நிவர்த்திப்பதற்காக அந்த வாக்யம் பலம் உள்ளது என்று சொல்லப்படுகிறது. அதுபோல் வேதாந்த வாக்யம் என்பதும் ப்ரத்யகாத்ம விஷயத்தில் பலம் உடையதாக ஆகிறது.

**வ்யாக்யானம் :** கடவிஷயகமான ஞானம் ஏற்படுகின்றபோது அந்த கடத்தில், ஞானத்தினுல் ஞாததை என்ற ஒரு தர்மம் ஏற்படுகிறது என்றும், இந்த ஞாததை என்பதே

ஸம்வித் என்றும், அதுவே ஸ்வப்ரகாசம் என்றும் பாட்டர்களால் சொல்லப்படுகிறது. கடத்தில் எந்த ஞானத்தினுல், ஞாததை என்ற தர்மம் ஏற்படுகிறதோ அந்த ஞானமே ஸம்வித் என்றும் ஸ்வப்ரகாசம் என்றும் ப்ராபாகரர்களால் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஸம்வித் என்பதைப் பற்றி இரண்டுவிதமான அபிப்ருயங்கள் இருக்கின்றதென்பதை அறிந்த சிஷ்யன் ஒருவன், ஸர்வத்தையும் ப்ரகாசப்படுத்துகின்ற ஸம்வித் என்பது என்ன? அந்தஸம்வித் என்பது எதனுல் அறியப்படுகிறது? ஸ்வஸம்வேத்யமா? அல்லது பரவேத்யமா? என்று கேட்கிருன். இந்த கேள்விக்கு உத்தரமாக "ஸம்வித் ஸ்வஸம்வேத்யம்" என்று (பதில்) சொல்லப்படுகிறது. இவ்விதம் உத்தரமாகச்சொல்லப்படும் வாக்யம் 'பரவேத்யமில்லே' என்றே போதிக்கின்றது என் பதால், ஸம்வித் என்பதில், வேறு எதனுலும் எந்தவிதமான ப்ரகாசமும் உண்டு பண்ணப்படவில்லே. ஆகையால் ஸம்வித் என்பதையன்றி வேருக ஒரு ஸம்வித் என்பதால் ஸம்வித் என்பதற்கு ப்ரகாசம் ஏற்படவில்லே என்று கர்மமீமாம்ஸகர்களால் சொல்லப் படுகிறது. ஞானம் என்பதும் ஞாததை என்றும் ஸ்வப்ரகாசம் என்றும் சொல்லப்படுவதால், கடத்தில் ஏற்படும் ஞாததை என்பதும் ஸ்வப்ரகாசம் என்றே சொல்லப்படுகிறது. கட விஷயகமான ஞானமும் ஸ்வப்ரகாசம் என்பதால், அதில் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வம் ஏற்படாது என்று கர்மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது.

ஆகையால் 'ஸம்வித் ஸ்வஸம்வேத்யம்' என்ற வாக்யம் எப்படி ப்ரமாணமாகின்றதோ, அதுபோல் வேதாந்த வாக்யம் ப்ரஹ்மஸ்வரூபத்தை அறிவிப்பதில் ப்ரமாணமாகின்றது. கடாதிகளே தெரிவிக்கின்ற வாக்யம் ப்ரமாணத்திற்கு விஷயமான பிறகு அந்த கட விஷயகமான ஸம்சயமோ விபர்யயமோ ஏற்படுவதில்லே. அதேபோல், வேதாந்த வாக்யம் என்பதும் 'ப்ரஹ்ம' மென்பதை தெரிவிப்பதில் ப்ரமாணமாகின்றது. ப்ரமாணத்திற்கு விஷய மான கடாதிகள் எப்படி ஸம்சயவிபர்யயமின்றி அறியப்படுகிறதோ அதேபோல் வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாணத்தினுல் ஏற்பட்ட ப்ரத்யகாத்மஞான விஷயத்திலும் ஸந்தேகமோ விபர்யயமோ ஏற்படாததால் வேதாந்த வாக்யங்களும் ப்ரமாணமாகின்றது.

ஞானம் ஸ்வப்ரகாசம் என்ற வாக்யம், ஞானத்தில் இல்லாத ப்ரகாசத்தை உண்டு பண்ணவில்லே. ஆனுல் ஞானம் என்ற ஸம்வித் என்பது பரப்ரகாச்யமா என்ற ஞானத்தைப்பற்றிய அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றதால் அந்த வாக்யமானது ஸ்வஸம் வேத்யம் என்று ஸந்தேக, விபர்யயத்திற்கு இடமின்றி போதிக்கின்றது. அதுபோல் மஹா வாக்யங்களும் ஆத்ம ஆவாரகமான அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதன் மூலமாகவே ப்ரமாணமாகின்றது.

இந்தவிதம் விசாரிக்கப்பட்டதனுல் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வம் என்பது ஆத்ம ஸ்வரூப விஷயத்தில் ஸம்பவிக்க முடியாது என்பது சித்தமாகிறது.

## 247. அவதாரிகை :

ஜடமான கடாதி வஸ்துக்களில், வாக்யமானது கடவிஷயகமான ப்ரகாசத்தை, ஸம் வித் என்பது உண்டு பண்ணுகின்றதால், அந்த வாக்யம் கடாதி விஷயங்களில் ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. மஹாவாக்யங்களில் ஸம்வித் என்பதின் தேவையே இல்லாமல், அஞ்ஞான நிவர்த்தியினுலேயே வாக்யம் ப்ரமாணமாகிறது என்று சொல்லப்படுகிறது. இந்த விதம் ப்ரமாணம் என்ற ஒரே விஷயத்தில், எப்படி வித்யாஸம் சொல்லமுடியும்? என்ருல், லோகத்திலுள்ள விவகாரங்களே அனுசரித்தே இவ்வித வித்யாஸம் சொல்லப்படுகிறது என்பதை மேலே உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अकार्यस्वरूपस्य कार्यत्वमिष्टं तथा कारकैर्मूर्तमुत्सारयद्भिः ।
तथैवाप्रमेयस्य मेयत्वमिष्टं प्रमाणैस्तमस्तज्जमुत्सारयद्भिः ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் காரகம் என்று சொல்லப்படும் கடப்பாறை முதலியவை களால், மூர்த்தமாக இருக்கின்ற மண் முதலானவைகளை விலக்கப்படுகின்றபோது, அகார்ய மான ஒரு வஸ்துவை கார்யமென்று சொல்லப்படுகின்றது. அதேபோல் ப்ரமாணம் என்பதும், அஞ்ஞானம் அதன் கார்யம் என்பவைகளை நிவர்த்திக்கின்றபோது அப்ரமேயமான ஆத்ம வஸ்துவில் ப்ரமேயத்வம் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** சமையல் என்ற பாக க்ரியைக்கு விறகு ஜலம் முதலான ஸாத னங்கள் தேவைப்படுகிறது. இந்த கரணங்கள், பாகம் செய்யப்படுகின்ற வஸ்துவில் ஒரு மாறுதலை ஏற்படுத்துகிறது. (விக்ருத்யனு கூல:) ஆகவே இந்த கரணங்கள் அரிசி என்பதில், அன்னமென்ற மாறுபட்ட தன்மையை உண்டுபண்ணுகிறது. இதைத்தான் கார்யம் என்று சொல்கிறோம். ஆனால் கோடலி கடப்பாறை முதலான கரணங்களைக்கொண்டு, கிணறு என்பது வெட்டப்படுகின்றபோது, அந்த மண்ணை எடுக்கின்றானேயன்றி அந்த இடத்தில், இந்த கரணங்களைக்கொண்டு ஆகாசம் என்பது உண்டு பண்ணப்படவில்லை. அதனால் ஆகாசத்தை உண்டு பண்ணினான் என்று ஒருவராலும் சொல்லப்படுவதில்லை. ப்ரதி பந்தகமாக இருக்கின்ற மண் முதலான வஸ்துக்களை வெளிப்படுத்துகின்றதால் கரணம் என்றும், ப்ரதிபந்த நிவர்த்தி ரூபமான ஆகாசத்தை கார்யம் என்றும் விவகாரத்தில் சொல்லப் பட்டபோதிலும் ஆகாசம் என்பது கரணத்தினால் உண்டுபண்ணப்படாததால் அகார்யம் என்றே சொல்லவேண்டும். இதேபோல் கடாதி வஸ்துக்கள் ஸம்வித் என்பதின் ப்ரகாசத்தினால்தான் ப்ரகாசிக்கவேண்டியதாக இருக்கிறது. அதனால் கடாதி விஷயங்களில் கடவிஷயகமான வாக்யமானது ஸம்வித் என்பதை உண்டுபண்ணி (வாக்யம்) ப்ரமாண மாகின்றது என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஆத்மவிஷயத்தில் ப்ரகாசத்தின் தேவையில்லாததால், அஞ்ஞான நிவர்த்தி த்வாரா வாக்யம் ப்ரமாணமாகிறது. என்று சொல்லப்படுகிறது.

இந்தவிதம் ஸம்வித் என்பது ஸ்வயம்ப்ரகாசம் என்று ஒத்துக் கொள்ளாதவர் களுக்காக 'ஸம்வித்ஸ்வஸம்வேத்யம்' என்று த்ருஷ்டாந்தம் சொல்லப் பட்டது. இந்தவிதம் சொல்லப்படுவதையும் ஒத்துக்கொள்ளாதவர்களுக்காக பாகம் என்ற க்ரியையில் ப்ரயோஜனமாகின்ற கரணம் என்பதும் கிணறு வெட்டும் க்ரியையில் ப்ரயோஜனமாகின்ற கரணம் என்பதும் இரண்டும் கரணமாக இருந்தபோதிலும் ஒன்று கார்யத்தை உண்டுபண்ணுகின்றதன்மூலம் கரணமாகிறது. மற்றொன்று ப்ரதிபந்த நிவர்த்தி மூலமாக கரணமாகிறது என்பதை, இந்த த்ருஷ்டாந்தத்தின்மூலம் விளக்கப்பட்டது. இல்லாத ஒன்றை உண்டு பண்ணுவதால் காரகம் என்று சொல்லலாம் அல்லது ஆகாசத்தின் அபிவ்யக்திக்கு காரணமாக இருப்பதையும் காரகம் என்று சொல்லலாம். இதேபோல் கடவிஷயகமான வாக்யமானது கடவிஷயஞானம் (ஸம்வித் என்பதை) என்பதை உண்டுபண்ணுகின்றதால் அந்த வாக்யம் ப்ரமாணம் என்று சொல்லலாம்.

ஆத்ம விஷயத்தில் வேதாந்தவாக்யம், ஆத்மவிஷயகமான அஞ்ஞானம், அதன் கார்யம் எல்லாவற்றையும் நிவர்த்திக்கின்றதால் ப்ரமாணம் என்றும், அஞ்ஞான நிவர்த்தி த்வாரா ஸ்வரூப அபிவ்யக்திக்கு காரணமாகின்றதால் ப்ரமாணம் என்றும் சொல்லலாம். ஆகையால் வாக்யம் ப்ரமாணமென்றும் ஆத்மா ப்ரமேயம் என்றும் சொல்லப்படுவதில் எந்த விதமான தோஷமுமில்லை.

**248. அவதாரிகை :**

வாக்யத்திலிருந்து ஏற்படும் வ்ருத்தியினுலேயே, அஞ்ஞானம் அதன் கார்யம் என்ப தெல்லாம், மூலத்துடன் தஹிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானுல் "ச்ருண்வந்தோபி பகவ: யம்ன வித்யு:" என்ற வாக்யத்திற்கு விரோதமாகிறது. மேலும் "ச்ரோதவ்ய: மந்தவ்ய: நிதித்யாஸிதவ்ய:" என்ற வாக்யம் விதிக்கப்படவேண்டிய அவஸ்யம் என்ன? என்ருல், வாக்யங்களைக் கேட்க்கப்பட்டபோதிலும், புருஷ அபராதம் என்ற ப்ரதிபந்தகம் இருக்குமானுல், வாக்யத்திலிருந்து ஏற்பட்ட ஞானமானது த்ருடமாக இருக்கமுடியாது. அதனுல் ஆத்ம ஸ்வரூப நிச்சயம் த்ருடமாக ஏற்படுவதற்கு சித்தத்திலுள்ள மலங்கள் நாசத்தை அடையவேண்டும். இவ்விதம் சித்த சுத்தி ஏற்பட்டால் தான் ஆத்மஸ்வரூபச்சாயை அந்த:கரணத்தில் ப்ரதி பலிக்கின்றது. அதன்மூலமாகவே அஞ்ஞான நாசம் ஏற்படுகின்றதால் அதன் பலனும் சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

**वाक्योत्थापितबुद्धिवृत्तिरमला यज्ञादिभिर्निश्चला वेदान्तश्रवणादिभिः स्फटिकवत्स्वच्छा सती तावकम् ।**
**रूपं दर्पणवद्बिभर्ति परमं विष्णोः पदं संनिधेरेतस्मादिह कारणादत भवेत्संसारबीजक्षयः ॥**

**ச்லோகார்த்தம் :** வாக்யத்தினுல் ஏற்படும் புத்திவ்ருத்தியானது யஞ்ஞாதிகளினுல் நிச்சலமாகவும் வேதாந்த ச்ரவணுதிகளால் சுத்தமாகவும் ஆகின்ற இந்த புத்திவ்ருத்தியே கண்ணுடியைப்போல ஸமீபத்திலுள்ள விஷ்ணுவின் பரமபதமான ஆத்மஸ்வரூபத்தை ப்ரகாசிக்கச் செய்கின்றது. அதனுல் ஸம்ஸாரபீஜமான அஞ்ஞானம் நாசத்தை அடைக்கின்றது. யஞ்ஞாதி கர்மாக்களை நிஷ்காமமாகச் செய்து அதனுல் சித்தசுத்தி ஏற்பட்ட புத்தியில்தான், வேதாந்த வாக்யத்தினுல் அகண்டாகாரவ்ருத்தி ஏற்படும். இப்பேர்ப்பட்ட அகண்டாகார வ்ருத்தியினுல்தான் அஞ்ஞான நாசம் என்பது ஏற்படுகின்றதால் முக்தி என்ற பலன் சித்திக்கின்றது. ஆகவே, வேதாந்தம் என்ற ப்ரமாணத்தின் மூலமாக ஏற்படுகின்ற புத்தி வ்ருத்தி தான் அஞ்ஞானம் அதன் கார்யம் எல்லாவற்றையும் நாசம் செய்யக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக இருக்கின்றது. இவ்விதம் சித்தசுத்தி இல்லாமல் காமம் க்ரோதம் முதலான மலங்களால் நிறைந்திருக்கின்ற புத்திவ்ருத்தியானது, ஸதாகாலமும் அனுத்மாவான வெளி விஷயங்களிலேயே ஈடுபட்டிருக்கின்றதால் எத்தனைமுறை ச்ரவணம் செய்யப்பட்ட போதிலும். ஆத்மஸ்வரூபத்தில் அந்த புத்திவ்ருத்தியானது ஈடுபடுவதில்லை. ஆகவே மனஸ் என்பது வெளிவிவகாரங்களில் ஈடுபடாமல் இருப்பதற்குவேண்டிய பரிகாரங்களை சாஸ்திரம் தெரிவிக்கின்றமுறையில் செய்யப்படுவதன்மூலம், புத்தியானது ஸ்வச்சமாக ஸ்படிகம்போல ஆகின்றது. அப்போதுதான் வேதாந்த வாக்யங்களால் ஏற்படும் அகண்டாகாரவ்ருத்தியினுல் மாயை என்ற உபாதி ரஹிதமான உன் உண்மையான ஸ்வரூபம் அறியப்படுகின்றது. அதுவே முக்தி என்ற பலம்.

**பூர்வ :** புத்தியானது ஸ்படிகம்போல ஸ்வச்சமாக ஆவதற்கு என்னசெய்யவேண்டும்?

**சித்தா :** யஞ்ஞாதி கர்மாக்களை நிஷ்காமமாகச் செய்யப்படுமானுல் விவேகம் வைராக்யம், ஸமதமாதிகள் எல்லாம் ஏற்படும். அதன்மூலம் ச்ரவணுதிகளில் இச்சை ஏற்படுகின்றதால், ச்ரவணுதிகளைச்செய்கின்றபோது பாஹ்ய விஷயங்களில் ஈடுபடாமல் புத்தியானது ஆத்மா விசாரத்திலேயே ஈடுபடுகின்றது. இவ்விதம் ச்ரவணம் செய்கின்ற போது, பலமதஸ்த்தர்களின் அபிப்ருய பேதத்தினுல், அனேக சாகைகளைக்கொண்ட உபநிஷத் வாக்யங்களில் பலவிதமான ஸந்தேகங்களும், ஜீவனும் ப்ரஹ்மமும் எப்படி ஒன்ருக இருக்க முடியும்? என்று, ப்ரமாணத்திலும்

ப்ரமேயத்திலும் அஸம்பாவனை ஏற்படுகின்றதால் ச்ரவணம் செய்தும்பலன் சித்திப்பதில்லை. ஆகவே இவ்வித அஸம்பாவனைகள் இருக்கின்றவர்கள் அடிக்கடி ச்ரவணம், மனனம் முதலானவைகளைச்செய்யவேண்டும். இவ்வித ச்ரவண, மனனங்களினாலும் சாக்ஷாத்காரம் ஏற்படவில்லையென்றால், பல ஜன்மாக்களில், தொடர்ந்து இருக்கின்ற தேஹமே நான் என்ற த்ருடமான தேஹவாஸனையானது நாசமடையவில்லை என்று அறியவேண்டும். இவ்விதம் அனாதிகாலமாக இருக்கின்ற விபரீதவாஸனையானது, தேஹம் நானல்ல என்று பாவனை செய்வதால், புத்திவ்ருத்தி ஸ்வச்சமாக ஆகின்றது. அதன் பிறகு நிர்மலமான இந்த புத்திவ்ருத்தியானது ஸமீபத்திலுள்ள ஆத்மஸ்வரூபாகாரமாக ஆகின்றதால் சாக்ஷாத்காரம் ஏற்படுகின்றது. ஆகவே சித்த ஏகாக்ரதையுடன், ச்ரவணம் செய்யப்படுமானால் ப்ரமாண அஸம்பாவனை நிவர்த்திக்கின்றது. மனனத்தினால் ப்ரமேய அஸம் பாவனையும் நிதித்யாஸத்தினால் தேஹமே நான் என்ற விபரீதபாவனையும் நிவர்த்திக்கின்றது. கண்ணாடி அசுத்தமாக இருந்தாலும் முகம் தெரியாது, கண்ணாடி ஆடிக்கொண்டே இருந்தாலும் முகம் தெரியாது. கடாதிகளில் ஸ்வச்சத்வம் இல்லை. கண்ணாடியில் ஸ்வச்சத்வம் இருக்கிறது. கண்ணாடி ஸமீபத்தில் இருப்பதைத்தான் ப்ரதிபலிக்கும். ஆகவே, கண்ணாடியைப் போல், அந்த:கரணம் என்பதும், அனாத்மவிஷயங்களில் ஈடுபடாமல் நிர்மலமாகவும் நிச்சலமாகவும் ஸ்வச்சமாகவும் இருக்கவேண்டும். இப்பேர்ப்பட்ட அந்த:கரண வ்ருத்தியில்தான் அதன் ஸமீபத்திலுள்ள ஆத்ம ஸ்வரூபம் ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்கும். இந்த விஷயத்தையே 'அதா ஆதர்ச தலப்ரக்யே பச்யத் ஆத்மானம் ஆத்மனி' என்ற ஸ்ம்ருதி கண்ணாடியை உதாரணமாகத் தெரிவிக்கின்றது.

இந்தவிதம், ஆத்மாவின் அஸாதாரணமான, ஸ்வரூபம் 'ஸத்சித் ஆனந்த ஸ்வரூபம்' என்று தெரிவிக்கின்ற வேதாந்த வாக்யங்கள் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை மறைக்கின்ற அஞ்ஞானத்தை மட்டும் நிவர்த்திக்கின்றது என்றும் ஸ்வரூபப்ரகாசம் என்ற பலவ்யாப்யத்வம் இல்லையென்பதையும் சொல்லப்பட்டது. ஆகையால், அஞ்ஞானநிவர்த்தி என்ற பலம் சேர்ந்த வாக்யத்தினால்தான் ஏற்படுகிறது என்பதால் வேதாந்தம் ப்ரமாணம் என்பதும் இதனால் சித்திக்கின்றது என்ற விஷயத்தையும் சொல்லப்பட்டது. மேலும், வேதாந்த வாக்யார்த்தங்களை க்ரஹிக்கக்கூடிய புத்திவ்ருத்தி ஏற்படுவதற்கு வேண்டிய ஸாதனம் என்னவென்றும் தெரிவிக்கப்பட்டது. இதன்மூலம் இந்தவிஷயம் ஒரு முடிவிற்கு கொண்டுவரப்பட்டது.

**249. அவதாரிகை :**

'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரத்தினாலும் 'தத்துஸமன்வயாத்' என்று சொல்லப்பட்ட சூத்ரத்தினாலும் ப்ரதியகபின்னப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்ட விஷயத்தில் விரோதம் ஏதுமில்லை என்று தெரிவிக்கப்பட்ட விஷயத்தை இப்போது ஒருமுடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

एवं वेदशिरः प्रमाणमुदितं प्रत्यक्स्वरूपे तव कर्मत्वं विरहय्य तत्र न हि नो बाधः प्रतिज्ञागिरः ।
कर्मत्वं न करोति बोधयति च स्पष्टं वचो वैदिकं रूपं तावकमेवमस्य भवति प्रामाण्यमत्राऽऽत्मनि ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் ப்ரத்யகாத்ம விஷயத்தில் கர்மத்வம் என்பதை ஏற் படுத்தாமல், வேதாந்தவாக்யம் ப்ரமாணமாகிறது என்று சொல்லப்பட்டது. அதனால் முன்சொல்லப்பட்ட ப்ரதிஞ்ஞா வாக்யத்திற்கு முரண்பாடு ஏதுமில்லை. வேதவாக்யமானது உன் ஸ்வரூபத்தில்

விஷயத்வம் என்பதை ஏற்படுத்தாமலேயே, ஸ்பஷ்ட்டமாக ஸ்வரூபத்தை அறிவிக்கின்றது. ஆகையால் ப்ரத்யகாத்ம விஷயத்தில் வாக்யம் ப்ரமாணமாகின்றது.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் உன்னுடைய ப்ரத்யக்ஸ்வரூபமானது கரண வ்யாபாரங்களுக்கு விஷயமாக இல்லாததால் பலவ்யாப்யத்வரூபமான கர்மத்வமும் சொல்ல முடியாது என்பதால், வேதாந்த வாக்யம் அஞ்ஞான நிவர்த்திமூலமாக ப்ரமாணமாகிறது என்று சொல்லப்பட்டது. மேலும் 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்று (விதி முகேன) பாவரூபமாக ப்ரஹ்மமானது போதிக்கப்படுகிறது. ஆகவே ப்ரஹ்மாத்ம ஐக்யவிஷயத்தை போதிப்பதில் வேதாந்தவாக்யம் ப்ரமாணமாகிறது என்று சித்தம் சொல்லப்பட்டது.

**250. அவதாரிகை :**

வேதாந்த வாக்யமான 'நேதி நேதி' என்ற நிஷேத வாக்யங்களினாலேயே அத்வைதமான தத்வம்சித்திக்கின்றதால், லக்ஷணை எதற்கு? என்ற மண்டனமிஸ்ரமதத்தினரின் அபிப்ருயத்தை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

पृष्ठेन पूर्णवपुषा क्रियते प्रतीतिर्नेतीतिवाक्यजनिता जगतो निषेध्री ।
प्राधान्यमस्तु विधिना सममेवतस्मात्तस्याथ वा भवतु तद्वचनं प्रधानम् ।।

**ச்லோகார்த்தம் :** நேதி நேதி என்ற நிஷேதவாக்யத்திலிருந்து உண்டாகின்ற ஜகத்தின் நிஷேத ஞானமானது, பின்னால் ஏற்படும் போதத்தினால் பரிபூர்ணமான ஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது. அதனால் நிஷேதவாக்யமும் விதிவாக்யத்துடன் ஸமப்ரதானம் என்றே சொல்லலாம். அல்லது நிஷேத வாக்யமே ப்ரதானம் என்றும் சொல்லலாம்.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்களினால் முக்திக்கு காரணமான அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லப்பட்டது. இவ்வித விஷயத்தில், வேறு ஒரு விதமாக, வேறொருவரின் அபிப்ருயம் இருக்கின்றதென்ற விஷயத்தை மேலே விளக்கப்படுகிறது. அதாவது வேதாந்த சாஸ்திரத்தில் இருக்கின்ற 'நேதி நேதி' என்ற நிஷேத வாக்யமானது, முக்ய வ்ருத்தியினாலேயே, மூர்த்தமாகவும் அமூர்த்தமாகவும் இருக்கின்ற இந்த ப்ரபஞ்சம் அனைத்தையும் நிஷேதம் செய்கின்றது. ஆனால், 'இதல்ல, இதல்ல' என்று நிஷேதம் செய்வதால் மட்டும், ப்ரஹ்மஸ்வரூபஞானம் ஏற்படாது. ஏனெனில், இல்லையென்று சொல்லப்படுமானால், எது இல்லை? எதில் இல்லை? எப்போது இல்லை? என்றெல்லாம் ஸந்தேகம் ஏற்படும் ஆகையால் எந்த வஸ்து இல்லையென்று நிஷேதம் செய்யப்படுகிறதோ அந்த வஸ்து எதில் இல்லை? எங்கே இல்லை? என்று நிஷேத அவதி ஸ்வரூபம் அறியப்படவேண்டும். இந்தவிதம் ப்ரபஞ்சத்திலுள்ள ஸர்வமும் இல்லையென்று நிஷேதம் செய்யப்படுவதாலேயே, நிஷேத அவதியாக இருக்கின்ற வஸ்து பரிச்சின்னமாக இருக்கமுடியாது என்று அறியப்படுவதால் அபரிசின்னமான ஒரு வஸ்து இருக்க வேண்டுமென்பது கிடைக்கின்றது. ஆகவே, பரிச்சின்ன வஸ்துக்களின் நிஷேதத்தினாலேயே, அவைகளுக்கு விலக்ஷணமான பூர்ணஸ்வரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில்தான் இவைகள் இல்லையென்று நிஷேதம் செய்யப்படுவதாக அறியப்படுகிறது. அதனால் விதி வாக்யம் போலவே நிஷேத வாக்யங்களாலும் ப்ரஹ்மாகாரவ்ருத்தி ஏற்படலாம் என்பதால், நிஷேத வாக்யங்களுக்கு ஸமப்ராதான்யம் சொல்லலாம். அல்லது "அதாதஆதேசநேதிநேதி" என்று போதிக்கின்ற

வாக்யமானது எதை உபதேசிக்கவேண்டுமோ அதை உபதேசிக்கிறேன் என்று தெரிவித்தபிறகு நேதி நேதி என்று உபதேசம் செய்ய ஆரம்பிக்கின்றதால் இந்த நிஷேதவாக்யம்தான் ப்ரதானம் என்று சொல்லவேண்டும். ஆகவே தர்மி என்ன வென்பதை சொல்லப்படாமல் நிஷேதம் செய்யமுடியாது என்றாலும் நிஷேதம் செய்யப்படும் வஸ்துக்கள் பரிச்சின்னமாக இருக்கின்றதால் இவைகளுக்கெல்லாம் அவதிஸ்வரூபமாக அபரிச்சின்னமான, ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகதபேதங்கள் அற்றதான அகண்ட ப்ரஹ்ம ஸ்வ ரூபஞானம் அர்த்தாத் கிடைக்கின்றது. ஆகவே, தத்வமஸ்யாதி மஹாவாக்யங்கள் 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்ற விதிமுகவாக்யங்கள் எல்லாம் எப்படி முக்திக்குகாரணமாகின்றதோ, அதுபோல் நிஷேதமுகவாக்யங்களும் முக்தி என்ற பலனை உண்டுபண்ணுகின்றதால், ஸம ப்ரதானம் சொல்லலாம், அல்லது நிஷேதமுகவாக்யமே ப்ரதானம் என்றும், விதிமுக வாக்யங்கள் அப்ரதானம் என்றே சொல்லலாம்.

**251. அவதாரிகை :**

விதிமுக வாக்யத்திற்கும், நிஷேதமுகவர்க்யத்திற்கும் ஸமப்ராதான்யம் எப்படிச் சொல்லமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

अद्वैतीकरणं निषेधवचनादुत्पन्नबुद्धेरपि तुल्यं तत्वमसीतिवाक्यजनितप्रत्यक्प्रतीत्या सह ।
आर्थं शाब्दमथपि वा भवतु तत्किं तेन यद्वा विधिर्नाकर्तुं शबलार्थगोचरतया निर्भेदमर्थं क्षमः ॥

**ச்லோகார்த்தம் :** நிஷேத வாக்யங்களிலிருந்து உண்டாகின்ற அத்வைதஞானமானது, 'தத்வமஸி' என்ற விதிமுகமானவாக்யத்தினால் உண்டாகின்ற ப்ரத்யகாத்மஞானத்திற்கு ஸமமாகவே இருக்கின்றது. விதிமுகவாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானம் அர்த்தாத் (மறை முகமாக) கிடைப்பதாக இருந்தபோதிலும் அதனால் பாதகமில்லை. விதிமுகவாக்யத்தினால் ஸபளார்த்தமே போதிக்கப்படுகின்றதால், பேதமற்றஞானம் போதிக்கப்படமுடியாது.

**வ்யாக்யானம் :** விதிமுக வாக்யங்களும், நிஷேதமுக வாக்யங்களும் ஸமம் என்றோ, அல்லது, நிஷேதமுக வாக்யமே ப்ரதானமென்றோ சொல்லப்படுவதற்கும், விதிமுக வாக்யம் அப்ரதானம் என்று சொல்லப்படுவதற்கும் காரணம் என்ன என்பதை மேலே விளக்கப் படுகிறது. 'தத்வமஸி' முதலான விதிமுக வாக்யங்களினால் எந்த ஞானம் ஏற்படுகின்றதோ, அந்த அத்வைத்தத்வ ஞானமே, நிஷேதமுகவாக்யத்தினால் ஏற்படுகின்றது. இவ்விதம் ஏற் படும் அகண்டாகாரவ்ருத்தியினால் அஞ்ஞானநாசம் என்பதும் ஏற்படுகிறது. ஆகவே, இரண்டும் ஒரேவிதமாக இருக்கின்றதால் ஸமப்ராதான்யம் சொல்லலாம். விதிமுக வாக்யம்போல், நிஷேதமுகவாக்யத்தினால் நேரிடையாக அர்த்தபோதம் ஏற்படவில்லையே? என்றால், அர்த்தாத் அர்த்தபோதம் ஏற்பட்டபோதிலும், அஞ்ஞானநிவர்த்தி என்ற பலம் ஏற்படுகின்றதால் விதிமுகவாக்யம்போல், நிஷேதமுகவாக்யமும் ஸமமாகவே இருக்கிறது என்று சொல்லலாம். இவ்விதம் இரண்டும்ஸமம் என்று சொல்வதைக்காட்டிலும், நிஷேதவாக்யமே ப்ரதானம் என்றே சொல்லலாம். எப்படியெனில், விதிமுக வாக்யங்கள் எல்லாம் முதலில், நேரிடையாக ஸகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. நிஷேதமுகவாக்யமே அர்த்தாத் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. ஆகையால் லக்ஷணை இல்லாமலேயே நிஷேதமுக வாக்யங்கள் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றதால் நிஷேதவாக்யமே ப்ரதானம் என்று சொல்லலாம். விதிமுகவாக்யம் முதலில் ஸகண்டார்த்தத்தை தெரிவித்து அதன்பிறகு மாயை, அந்த:கரணம் முதலானவைகளை நிஷேதம் செய்து, பாகத்யாகலக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தத்தை போதிக்கின்றது.

அதனுல் விதிமுகவாக்யம் அப்ரதானம் என்றும், நிஷேதமுகவாக்யம் ப்ரதானம் என்றே சொல்லவேண்டும்.

**252. அவதாரிகை :**

பாகத்யாகலக்ஷணையினுல் விதிமுகவாக்யங்களும், நிர்பேதாகாரமானபுத்தி வ்ருத்தியை உண்டுபண்ணுவதற்கு காரணமாக இருக்கின்றதால், நிஷேதமுகவாக்யத்திற்கே ப்ராதான்யம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

**ச்லோகம் :** संबन्धजातविरहान्न च लक्षणाऽस्मिन्संभाव्यते परिहृताखिलदृश्यराशौ ।
ब्रह्मात्मवस्तुनि ततः प्रतिषेधवाक्यशेषत्वमेतु विधिरित्यपि केचिदन्ये ॥

**ச்லோகார்த்தம் :** எந்த ஸம்பந்தமும் சொல்லமுடியாததால், த்ருச்யபதார்த்தங்கள் எதுவுமில்லாத ப்ரஹ்மத்தினிடம் லக்ஷணை என்பது ஸம்பவிக்காது. அதனுல் ப்ரஹ்மாத்ம விஷயத்தில் விதிமுகவாக்யமானது, ப்ரதிஷேதவாக்யத்திற்கு அங்கம் என்றே சொல்ல வேண்டும், என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'அஸங்கோஹ்யயம் புருஷ :' என்ற வாக்யம், ப்ரஹ்மத்திற்கு எதனுடனும் ஸம்பந்தம் கிடையாது என்று தெரிவிக்கின்றது. ஆகவே, சக்யஸம்பந்தமின்றி லக்ஷணையினுல் தெரிவிப்பதற்குமுடியாது. பாகத்யாக லக்ஷணையைக்கொண்டு வாச்யார்த்தத்திற்கும் லக்ஷ்யார்த்தத் திற்கும் ஸம்பந்தம் இருப்பதாக கீழே விளக்கப்பட்டிருந்தாலும்கூட, சக்யார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் வாஸ்தவமான ஸம்பந்தமில்லையென்று சொல்லப்படுகின்றதால், அவாஸ்த்தவமான லக்ஷணையினுல் தெரிவிக்கப்படும் வஸ்துவும் அவாஸ்த்தவமாகவே இருக்குமானதால், நிஷேத முகவாக்யமே ப்ரதானம் என்று சொல்லவேண்டும்.

**253. அவதாரிகை :**

இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

वाक्यं मुक्तिफलां धियं जनयति स्पष्टं विधिव्यापृतं साक्षादेव तव स्वरूपकथनान्नैवं निषेधात्मकम् ।
अध्यारोपितरूपभेदविलयव्यापारनिष्ठं तव स्वाकारग्रहणक्षमां न हि धियं कर्तुं समर्थं यतः ॥

**ச்லோகார்த்தம் :** விதிமுகவாக்யம், நேரிடையாகவே ஸ்வரூபத்தை தெரிவிக்கின்றதால், மோக்ஷமென்ற பலனைக்கொடுக்கக்கூடிய ஞானத்தை ஸ்பஷ்டமாகவே உண்டுபண்ணுகின்றது. நிஷேதமுகவாக்யம் அத்யஸ்த்தமான பேதங்களையே இல்லையென்று தெரிவிக்கின்றது. அதனுல் உன்னுடைய ஸ்வரூபத்தை க்ரஹிக்கக்கூடிய ஞானத்தை உண்டுபண்ணக்கூடிய சாமர்த்யம் உடையதாக ஆகாது.

**வ்யாக்யானம் :** விதிமுகவாக்யமே, நேரிடையாக உன் ஸ்வரூபத்தையே போதிக்கின்றது. நிஷேதமுகவாக்யம் ஸ்வரூபத்தை நேரிடையாக போதிக்கமுடியாது. ஏனெனில், நிஷேதவாக்யம், எதை நிஷேதம் செய்கின்றதோ, அந்த வஸ்து அபாவ ப்ரதியோகியாக அறியப்படுகிறது. அதாவது, 'இல்லை' என்று சொல்லப்படுமானுல் எது இல்லை? எங்கே இல்லை? என்று விசாரித்தபிறகே, அர்த்தாத் வஸ்துவை போதிப்பதாகச்சொல்லமுடியும். ஆகவே, விதிமுக வாக்யமே, அவாஸ்த்தவமான சக்யஸம்பந்தத்தைக்கொண்டு, லக்ஷணையாக பாவரூபமான அகண்டார்த்தத்தை போதிக்கின்றது.

**பூர்வ :** இதேபோல் நிஷேதமுகவாக்யத்தினுலும் அர்த்தாத்பாவரூபமான வஸ்துபோதம் ஏற்படலாமே?

**சித்தா :** அவ்விதம் ஏற்படமுடியாது. ஏனெனில் நிஷேதமுக வாக்யத்தினுல், எந்த வஸ்து இல்லையென்று போதிக்கப்படுகிறதோ, அந்த வஸ்துவிற்கு அதிஷ்ட்டானமாக ஒரு வஸ்து இருக்கவேண்டுமென்று அறியப்படுமேயன்றி, அந்த அதிஷ்ட்டான வஸ்துவின் ஸ்வரூபம் என்ன? என்பதை நிஷேதவாக்யத்தினுல் போதிக்கமுடியாது. அதனுல் அதிஷ்ட்டான வஸ்துவின் ததாகாரவ்ருத்தியென்பது நிஷேதவாக்யத்தினுல் ஏற்படமுடியாது. மூர்த்தம் அமூர்த்தம் என்ற எந்தவிதமான ப்ரபஞ்சமும்இல்லையென்று தெரிவிப்பதுடன், நிஷேத வாக்யத்தின் வ்யாபாரம் முடிந்துவிடும். நிஷேத அவதிஸ்வரூபமான பூர்ணஸ்வரூபாகாரபோதம் ஏற்படாது.

**பூர்வ :** நிஷேதிக்கப்படுகின்ற தர்மங்களைக்கொண்டு அதற்குதர்மியான ஸ்வரூபம் இருக்கவேண்டும் என்று அறியப்படலாமே?

**சித்தா :** தர்மமென்பது நிஷேதம் செய்யப்படுமானுல், தர்மி என்பது சித்திக்கின்றது என்று சொல்வதே பொருந்தாது. மேலும் நிஷேதவாக்யத்தினுல், நிஷேத அவதியாக ஏதோ ஒரு வஸ்து இருக்கவேண்டுமென்று லிங்கத்தைக்கொண்டு வஸ்து அனுமானிக்கப்பட வேண்டியதாக இருக்கிறது. ச்ருதி, லிங்கம் என்பவைகளில், ச்ருதி என்பதே ப்ரமாணம் என்பதால் ச்ருதிவாக்யம்தான் ப்ரதானம். லிங்கத்தைக்கொண்டு அர்த்த நிர்த்தாரணம் செய்ய வேண்டுமென்றுலும்கூட, ச்ருதிப்ரமாணத்தைக்கொண்டே நிச்சயிக்கப்படவேண்டும். மேலும், நிஷேதவாக்யங்கள் ப்ரபஞ்சத்தை நிஷேதம் செய்வதிலேயே நோக்கமுடையதாக இருக்கின்றதால் பாவரூபமான வஸ்துவை போதிப்பதில் ப்ரவர்த்திக்காது. விதிமுகவாக்யங்கள், சாக்ஷாத் ஜீவபரமாத்ம ஐக்யத்தை போதிக்கின்றதால் முக்தி என்ற பலத்தைக்கொண்டதாக இருக்கிறது. ஸந்தேகத்திற்கோ, விபர்யயத்திற்கோ, இடமில்லாமல், உன்ஸ்வரூபத்தை விதிமுகவாக்யமே நேரிடையாக போதிக்கின்றது. இதுபோல் நிஷேத வாக்யம் முக்தி என்ற பலனை கொடுக்கக்கூடிய சாமர்த்யம் உடையதுஅல்ல.

சித்ஸ்வரூபத்தில், ஜகத் என்பது அத்யஸத்தமாக இல்லையென்றுல், இந்த ஜகத் என்பதே சித்திக்கமுடியாது. அதனுல் சித்ஸ்வரூபத்திற்கும், ஜகத்திற்கும் ஆத்யாஸிகஸம்பந்தம்தான் சொல்லமுடியும். ஆகையால் லக்ஷணையினுல் லக்ஷ்யார்த்தமானவஸ்து அறியப்படுவதற்கு, வாச்யார்த்தம் லக்ஷ்யார்த்தம் என்ற இரண்டிற்கும் உள்ள ஸம்பந்தம் ஸத்யமாக இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை. மேலும் நிஷேத வாக்யத்தினுல், நிஷேதம் செய்யப்படும் வஸ்துவிற்கும், நிஷேத அவதியாகச்சொல்லப்படும் வஸ்துவிற்கும் ஸம்பந்தம் என்பது உண்மையாக இருக்குமானுல் நிஷேதம் செய்யப்படும் வஸ்துவும் உண் மையாகவே இருக்கவேண்டும். இவ்விதம் நிஷேத்யமான வஸ்துவும், அதன் ஸம்பந்தமும் ஸத்யமாக இருக்குமானுல் அவைகளை நிஷேதம் செய்வதென்பதே முடியாது. ஆகையால், அதிஷ்ட்டான ஸ்வரூபத்திற்கும் ஆரோபிதமான ப்ரபஞ்சத்திற்கும் கல்பித ஸம்பந்தம்தான் இருக் கிறது. த்ருச்யமானபதார்த்தங்களுக்கு ஸ்வயமே ஸம்பந்தம் சொல்லமுடியாது. அதனுல் த்ருக் ஸ்வரூபமான சைதன்யத்திற்கும், த்ருச்யமானப்ரபஞ்சத்திற்கும், சித்ப்ரதிபிம்பத்தின் மூலமாகவே ஸம்பந்தம் சொல்லப்படவேண்டும். இவ்விதம் கல்பிதமான ஸம்பந்தத்தைக்கொண்டு விதிமுக வாக்யங்கள் லக்ஷணையினுல் ப்ரஹ்மாகாரவ்ருத்தியை உண்டுபண்ணுகின்றதால், விதிமுகமான வாக்யமே ப்ரதானம் என்று சொல்லவேண்டும்.

**254. அவதாரிகை :**

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற அபேத ஆகார ஞானமே, மோக்ஷம் என்ற பலனை, அஞ் ஞான நிவர்த்தி மூலமாக கொடுக்கின்றது என்று ஏன் சொல்லவேண்டும்? அஸ்தூலம்,

அனனு, அஹ்ரஸ்வம், போன்ற நிஷேதமுக வாக்யங்களின் மூலமாக அவித்யா நிவர்த்தி ஏற்பட்டு மோக்ஷமென்ற பலனை கொடுக்கின்றது என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

**अस्थूलादिवचः समुत्थितमतिर्नाऽऽकारमादास्यते साक्षादद्वयवस्तुनस्तव विभोरज्ञानविच्छेदिनः ।**
**अज्ञातस्य हि वस्तुनो न हि धिया स्वाकारसंवेदनं मुक्त्वा तद्विषयस्य विभ्रमकृतो ध्वान्तस्य विध्वंसनम् ॥**

**ச்லோகார்த்தம் :** அஸ்தூலம், அனனு போன்ற நிஷேதமுக வாக்யங்களிலிருந்து உண்டாகின்றஞானம், அத்விதீயமும்; வ்யாபகமும், அஞ்ஞானநாசகமுமாக இருக்கின்ற உன் ஸ்வரூபத்தை க்ரஹிப்பதில்லை. ஆகவே, புத்திவ்ருத்தியினுல் அஞ்ஞாதமான வஸ்துவின் ஸ்வரூபஞானம் ஏற்படாமல், ஸம்ஸாரத்திற்கு மூலகாரணமான அஞ்ஞானம் என்பது நாசத்தை அடையாது.

**வ்யாக்யானம் :** அஸ்தூலம் முதலான நிஷேத வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானத்தினுல் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் நான் வேருனவன் என்ற பேதஞானம் நிவர்த்திக்காது. அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட இந்தபேதஞானம் என்பது ப்ரத்யக்ஸ்வரூபமே ப்ரஹ்மமென்ற ப்ரஹ்மாகாரவ்ருத்தியினுல்தான் நிவர்த்திக்கப்படவேண்டும். அபேதம் என்பதே உண்மையான ஸ்வரூபஞானம். இவ்விதஸ்வரூபஞானம், அஞ்ஞானத்தினுல்அறியப்படாதகாரணத்தினுல் அபேத ஸ்வரூபாகாரஞானமே ஏற்படவேண்டும். அஞ்ஞானம் எந்த விஷயத்தைப்பற்றியதாக இருக்கின்றதோ, அந்த விஷயத்தைப்பற்றிய ஞானம் ஏற்பட்டால்தான், அந்த விஷயக அஞ்ஞானம் நிவர்த்திக்கும் ஆகையால், விதிமுக வாக்யம் தான் ஸ்வரூபாகாரஞானத்தை உண்டு பண்ணமுடியும்.

அஸ்தூலாதி வாக்யங்களால் இதல்ல, இதல்ல என்றுதான் போதிக்க முடியுமேயன்றி வஸ்துவின் ஆகாரம் என்னவென்று போதிக்கமுடியாது. நிஷேதஅவதியாக ஒரு வஸ்து இருக்கவேண்டுமென்பது அர்த்தாத் அறியப்பட்டபோதிலும் அந்த வஸ்து என்ன? அதன் ஸ்வரூபம் என்னவென்று ஏற்படும் ஆகாங்க்ஷை நிவர்த்திக்காது. ஜகத்திற்கு அதிஷ்டானம் ப்ரஹ்மமா? அல்லது வேறு வஸ்துவா? என்று மறுபடி ப்ரமாணத்தைக்கொண்டே அறிய வேண்டும். ஆகையால், விதிமுகமான வாக்யங்கள், லக்ஷணையினுல் வஸ்துவை தெரிவிக்கின்ற போது, மூர்த்தா மூர்த்தங்களை நிஷேதம் செய்து, பாகத்யாக லக்ஷணையினுல் வஸ்துவை போதிப்பதற்கு, நிஷேதமுகவாக்யம் உபகாரகமாக இருக்கின்றதால் விதிமுகவாக்யத்திற்கு நிஷேதவாக்யம் அங்கமென்று சொல்லலாம்.

**பூர்வ :** அனர்த்தகரமான த்வைதங்கள் எல்லாம் நிஷேதம் செய்யப்படுமானுல், ஸ்வப்ரகாசமான ஆத்மா, பூர்ணுகாரமாக ப்ரகாசிக்கின்றது. அதனுல் மோக்ஷம் என்ற பலன் ஏற்படலாமே?

**சித்தா :** ஸ்வஸ்வரூபம், அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டிருப்பதனுலேயே ப்ரமம் ஏற்படுகிறது. ஆகையால், புத்தியில் சாக்ஷாத் ப்ரஹ்மாகாரவ்ருத்தி ஏற்பட்டால்தான், ப்ரஹ்மஸ்வரூப அஞ்ஞானம் நிவர்த்திக்கும். அதிஷ்டான சாக்ஷாத்காரம் இல்லாமல், நிஷேதவாக்யத்தினுல் மட்டும் அஞ்ஞானம் நிவர்த்திக்காது என்பதால் நிஷேதவாக்யம் ப்ரதானம் என்று சொல்ல முடியாது. ஸ்வரூபாகாரவ்ருத்தி விதிமுகவாக்யத்தினுல் தான் ஏற்படவேண்டுமென்பதால், விதி வாக்யமே ப்ரதானம்.

**255. அவதாரிகை :**

ரஜ்ஜுவைப்பார்த்து ஸர்ப்பம் என்று பயந்து ஓடுகின்றவனைப்பார்த்து, மற்ருெவன், 'இது ஸர்ப்பமல்ல' என்று சொல்கின்றபோது, அதைக்கேட்க்கின்றவனுக்கு, அந்த வஸ்து அஞ்ஞானம்

நிவர்த்திக்கின்றதே? அதனுல் நிஷேதவாக்யத்திஞல் அஞ்ஞான நிவர்த்தி ஏற்படாது என்று நியமமாக எப்படிச்சொல்வது?

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில், ஸர்ப்பமில்லை என்ற வாக்யத்தைக்கேட்டவுடனேயே, அந்தவஸ்துவின்அஞ்ஞானம் நிவர்த்திப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில், சர்ப்பமில்லை என்பது சரி, ஆனுல் அங்கு இருப்பது என்ன? என்று அறியவிரும்புகிருன். அங்கு இருப்பது கயிறுதான் என்ற அதிஷ்ட்டானவஸ்து ஞானம் ஏற்படும் வரை அவனுக்கு பயம் நிவர்த்திக்காது. ஆகவே, அதிஷ்ட்டான சாக்ஷாத்காரம் என்பது நிஷேதமுகவாக்யத்திஞல் கிடைக்கமுடியாது என்பதால் அதிஷ்ட்டான ஸ்வரூப அஞ்ஞானம் நிவர்த்திக்கவில்லை என்றே சொல்லவேண்டும்.

**255. ச்லோகம் :**

**रज्जवज्ञानविजृम्भितस्य फणिनो रज्जुप्रकाशक्षमं विज्ञानं विरहय्य न प्रशमनं दृष्टं निषेधे कृते ।**
**तद्वत्प्रत्यगविद्यया विरचितं संसारदुःखं न तत्संवित्तिं विरहय्य शाम्यति धिया नेतीति शब्दोत्थया ॥**

**ச்லோகார்த்தம் :** ரஜ்ஜு ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துகின்ற புத்திவ்ருத்தி ஏற்படாமல், 'ஸர்ப்பமல்ல' என்று நிஷேதம் செய்யப்படுவதால் மட்டும், ரஜ்ஜுஅஞ்ஞானத்திஞல் ஏற்பட்ட ஸர்ப்பநிவர்த்தி என்பது ஏற்படுவதாக அறியப்படவில்லை. அதேபோல், ப்ரத்யகாத்மாவின் ஸ்வரூபஞானம் ஏற்படாமல் நேதி நேதி என்ற நிஷேத வாக்யஜன்யத்திஞல்மட்டும், ஆத்ம அஞ்ஞானத்திஞல் ஏற்பட்ட ஸம்ஸாரதுக்கம் நிவர்த்திக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** 'இது கயிறு' என்று அறியப்படாததால்தான்,' 'இது ஸர்ப்பம்' என்ற ப்ராந்திஞானம் ஏற்படுகிறது. இந்தவிதம் கயிற்றின் அஞ்ஞானத்திஞல் தோற்றுவிக்கப்பட்ட ஸர்ப்பப்ராந்தி, இது சர்ப்பமல்ல என்ற வாக்யத்தைக்கேட்டவுடன், ஸர்ப்பம் என்ற ப்ரமம் நீங்கினபோதிலும், வேறு ஏதாவது துஷ்ட்ட ஜந்துக்களாக இருக்கலாமோ என்ற சந்தேகம் இருப்பதால், ஸர்ப்பத்தோற்றத்திற்கு காரணமான கயிற்றின் அஞ்ஞானமும், அதன்கார்யமான பயம் நடுக்கம் முதலானவைகளும் நிவர்த்திப்பதில்லை. 'ஸர்ப்பமல்ல' என்று அறிவதால் ஒரளவு பயம் நீங்கிஞலும் முற்றிலும் (பயமற்ற) சாந்தி என்பது ஏற்படாது. 'ஸர்ப்பமல்ல' என்று கேட்டவுடன், முன்ஞல் ஏற்பட்ட ஸர்ப்பப்ராந்தியானது, அதன் காரணமான அஞ் ஞானத்தில் லயமாகின்றதேயன்றி, அஞ்ஞானத்துடன் சேர்ந்து முற்றிலும் நாசமாகின்றதில்லை. ஆகையால், 'இது கயிறுதான்' என்ற நிச்சயஞானம் ஏற்படாத வரையில், மறுபடி ப்ரமமும், ஸந்தேகமும் ஏற்படலாம். ஆகவே நிஷேதத்திஞல் மட்டும் அதிஷ்ட்டான ஸ்வரூப அஞ்ஞான நிவர்த்தி என்பது ஏற்படமுடியாது. இதேபோல் அவித்யாகார்யமான ஸம்ஸாரதுக்கம் என்பதும், 'தத்வமஸ்யாதி' விதிமுக வாக்யங்களிஞல்தான் நிவர்த்திக்கப்படவேண்டும். நேதி நேதி என்ற நிஷேதவாக்யங்களிஞல், அதிஷ்ட்டானஸ்வரூப அஞ்ஞானம் என்பது நிவர்த்திக்கமுடியாது விதிமுகவாக்யத்திஞல் ஏற்படும் அதிஷ்ட்டான தத்வ ஞானத்திஞல் தான் அஞ்ஞான நிவர்த்தி என்பது ஏற்படமுடியும்.

**256. அவதாரிகை :**

இந்தவிதம் நிஷேதமுகவாக்யங்களுக்கு பலன் ஏதுமில்லையென்று சொல்லப்படுமாஞல், நிஷ்ப்ரயோஜனமான நிஷேதவாக்யங்கள் ப்ரமாணமில்லையென்று சொல்ல நேரிடுமே?

அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் பலமுள்ள விதிமுகவாக்யங்களுக்கு உபகாரகமாக இருக்கின்றதால், விதிமுகவாக்யத்துடன் அங்கமாகச்சேர்ந்து நிஷேத வாக்யங்களும் ப்ரமாணமாகிறது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

**अस्थूलादिवचो निषेधकतया भेदस्य संशोधनाद्वाक्यार्थान्वयसिद्धये तु घटते वाच्यार्थलक्ष्यार्थयोः।**
**एवं तत्त्वमसीति वाक्यगतयोस्तत्वं पदोक्तार्थयोः संशुद्ध्यैव तु नेति नेति वचनं मोक्षाय साक्षान्न तु ॥**

**ச்லோகார்த்தம் :** அஸ்தூலம், அனணு முதலான நிஷேதவாக்யங்கள், வாச்யார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் உள்ள பேதத்தை விலக்கி தெரிவிக்கின்றதால் அதன்மூலம் வாக்யார்த்த அன்வயம் ஏற்படுவதற்கு உபகாரகமாக இருக்கின்றது. இதேபோல், தத்வமஸி மஹாவாக்யத்திலுள்ள தத் த்வம் பதார்த்தங்களின் அர்த்தத்தை தெரிவிப்பதன் மூலம், மோக்ஷமென்றபலனுக்கு ப்ரயோஜனமாக இருக்கின்றதேயன்றி நேரிடையாக நிஷேதவாக்யம் உபகாரகமாக இல்லை.

**வ்யாக்யானம் :** அஸ்தூலம், அனணு முதலான வாக்யங்கள், ஸ்தூலமில்லை, அணு இல்லை என்றுதான் போதிக்கின்றதேயன்றி, எந்த வஸ்து ஸ்வரூபத்தையும் போதிக்கவில்லை. 'நஞ்' அர்த்தம் என்பது ஆறுவிதமாக இருக்கிறது என்றாலும், இந்த இடத்தில், ஸ்தூலமில்லாதது, அணுஇல்லாதது என்று 'நஞ்' என்பது முக்யார்த்தத்தையே போதிக்கின்றது. உதாரணமாக, 'அசூர்யம் பச்யா ராஜதாரா' என்ற வாக்யம் ராஜ பத்னிகளுக்கு சூர்யதர்சனம் இல்லையென்று தெரிவிக்கின்றதேயன்றி, வேறு ஒன்றை தர்சிக்கிறார்கள் என்று அர்த்தம் சொல்லமுடியாது. இதுபோல், 'தத்வமஸி' என்ற மஹாவாக்யம் லக்ஷ்யார்த்தத்தினால் ஜீவப்ரஹ்ம அபேதத்தை போதிக்கின்றது. இவ்விதம் லக்ஷ்யார்த்தத்தினால் அறியப்படும் அபேதார்த்தம் வாச்யார்த்தத்தினால் அறியப்படவில்லை அதுமட்டுமல்ல, விபரீதமாக பேதம் என்பதே வாச்யார்த்தமாக அறியப்படுகிறது. ஆகையால், இந்தவிதம் அறியப்படும் பேதங்கள் எல்லாம் மித்யை என்று தெரிவித்து, அதற்கு காரணமான உபாதிகளை விட்டு லக்ஷ்யார்த்தத்தை அறிவதற்கு, நிஷேதமுகவாக்யங்கள் ப்ரயோஜனமுடையதாகஆகிறது. இந்த முறையில் விதிவாக்யத்துடன் சேர்ந்து நிஷேத வாக்யங்களும் அங்கமாக இருந்து, ப்ரமாணமாகின்றது என்றே சொல்ல வேண்டும். ஆனால், அகண்டார்த்தத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லமுடியாததால், நிஷேதவாக்யம் ப்ரமாணமென்று சொல்லமுடியாது.

**பூர்வ :** 'அதாத ஆதேசோ நேதி நேதி' என்ற ப்ரஹதாரண்யக உபநிஷத்வாக்யத்தினால், சாக்ஷாத் அபேதமே போதிக்கப்படுகிறது என்று ஆசார்யாளால் சொல்லப்படுகிறதே?

**சித்தா :** இந்த இடத்தில் ஆச்சார்யார், ப்ரௌடிவாதத்தை அனுசரித்து சொல்லி இருக்கின்றாரேயன்றி தாத்பர்யத்துடன் சொல்லவில்லை. தத், த்வம், பதங்களை சோதனம் செய்கிற முறையில் நிஷேதவாக்யங்கள் உபகாரகமாக இருக்கிறது என்பதைத் தவிர, வேறு எந்த முறையிலும் அர்த்தம் செய்வதற்குமுடியாது. அதாவது, அஸ்தூலம் முதலான நிஷேத வாக்யங்கள், ஸ்தூலத்வம் முதலான தர்ம பேதங்களுடைய ப்ரபஞ்சங்கள் உண்மையில் இல்லையென்று தெரிவிப்பதன்மூலமாக, வாச்யார்த்தத்திற்கும், லக்ஷ்யார்த்தத்திற்கும் அன்வயம் ஏற்படுவதற்கு உபகாரகமாக இருக்கிறது. இதனால் மஹாவாக்யங்களுக்கு அன்வயம் சித்திக்கின்றது. இதேபோல் 'அதாத ஆதேசோ நேதி நேதி' என்ற வாக்யத்தினாலும் தத் த்வம் பதார்த்த சோதனை செய்வதன் மூலம் பதார்த்த அன்வயம் ஏற்பட்டு அதன்மூலம் அபேதார்த்த போதம் ஏற்படுவதற்கு உபகாரகமாக இருக்கிறது. அதனால் அத்யஸ்த்த வஸ்து நிவர்த்திக்கப்படுமானால் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்ற தாத்பர்யத்தில் ஆசார்யரால் சொல்லப்படுகிறதேயன்றி, மஹாவாக்ய அபேக்ஷை இல்லாமலேயே அகண்டார்த்தபோதம் ஏற்படும் என்று சொல்லப்படவில்லை. மேலும், விதாயகமான மஹாவாக்யங்கள் இல்லாமல், அகண்டார்த்த சித்தி ஏற்படாது என்று உபதேச

ஸஹஸ்ரியில் ஆசார்யர் தெரிவிக்கின்ருர். ஆகையால் நிஷேதமுகவாக்யங்கள் நேரிடையாக முக்திக்கு ஸாதனமான, அஞ்ஞானத்தை நிவர்த்திக்காது. அதனுல் விதிவாக்யம் போல் நிஷேத வாக்யத்திற்கு ஸமப்ராதான்யம் சொல்லமுடியாது. ஸமப்ராதான்யமே கிடையாது என்ருல், நிஷேதவாக்யம் ப்ரதானம் என்று சொல்வதற்கும் முடியாது. அதற்காக, வேதாந்தவாக்யமான நிஷேத வாக்யங்கள் ப்ரமாணமில்லையென்றும் சொல்லமுடியாது. விதிமுகவாக்யத்திற்கு ப்ரயோஜனமாக இருக்கின்றதால், விதி வாக்யத்திற்கும் அங்கமாக இருந்து ஏகவாக்யமாக ஆகின்றதால், நிஷேத வாக்யங்களுக்கு அங்கத்வேனப்ராமாண்யம் சொல்லப்படவேண்டும். அதனுல் நிஷேத வாக்யங்கள் அப்ரமாணமென்ருகுமே என்ற ஸங்கைக்கு இடமே இல்லை.

**257. அவதாரிகை :**

"தர்சபூர்ணமாஸாம்பாயம் யஜேத" என்ற வாக்யத்திற்கு அங்கமாக, ப்ரயாஜாதி 'வாக்யங்கள் பூர்வமீமாம்ஸையில் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல், விதிமுகவாக்யங் களுக்கும், "அதாத ஆதேசோ நேதி நேதி' என்ற நிஷேத வாக்யங்களுக்கும் ஏக வாக்யத்வம் சொல்லலாம் என்று கீழே சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது, 'ஐரங்க்ருத்வா உத்கேயம்' என்ற விதி வாக்யத்துடன், நகிராகிரா என்று அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்தை தெரிவிக்கின்ற அர்த்தவாத வாக்யமான இந்த நிஷேத வாக்யத்திற்கு எப்படி ஏகவாக்யத்வம் சொல்லப்படுகிறதோ, அதுபோல், மஹா வாக்யமென்ற விதிமுக வாக்யத்திற்கும், நிஷேத முகவாக்யத்திற்கும், நிஷேத முகவாக்யத்திற்கும், அங்கம், ப்ரதானம் என்ற முறையில் ஏகவாக்யத்வம் சொல்லாமல், விதிவாக்யம் அர்த்தவாதவாக்யம் என்ற முறையில் ஏகவாக்யத்வம் சொல்லலாமே? என்பது ஒரு சிலர் அபிப்ருயம். இந்த விஷயத்தை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अन्ये पुनर्विधिवचोजनितात्मबुद्धिं सामर्थ्यसिद्धमनुवक्ति निषेधवाक्यम् ।
द्वैतोपमर्दमिति शासति शिष्यवर्गं तच्च प्रशस्तमनवद्यमभीष्टमेव ॥

**ச்லோகார்த்தம் :** விதிமுக வாக்யத்தினுல் ஏற்படும் ஆத்மஞானத்தின் பலனுக, சித்தமாகின்ற த்வைதநாசத்தையே நிஷேதவாக்யம் அனுவாதம் செய்கின்றது என்று வேறு சிலர், சிஷ்யர்களுக்கு போதிக்கின்ருர்கள். இவ்விதம் சொல்லப்படுவது, நிர்த்தோஷமாகவும், ப்ரஸஸ்த்தமாகவும் இருக்கின்றதால், இதில் எங்களுக்கும் ஸம்மதந்தான்.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' முதலான, விதிமுகவாக்யங்களிலிருந்து, எந்த ஆத்ம ஞானம் அகண்டார்த்தமாக அறியப்படுகிறதோ, அந்த ஞானம் ஏற்பட்டவுடனேயே ஸர்வத்வைதங்களும் இல்லையென்று அர்த்தாத் சித்திக்கின்றது. எப்படியெனில், த்வைதம் என்பது இருக்குமானுல் ப்ரஹ்மம் அகண்டம் என்ற ஞானம் சித்திக்காது. இந்தவிதம், விதிமுக வாக்யத்தினுல் எந்த அர்த்தம் சித்திக்கின்றதோ, அதே விஷயம், ப்ரஹ்மத்தில் முக்காலத்திலும் த்வைதமில்லை என்று அனுவாதம் செய்து, நிஷேத வாக்யங்கள் உபதேசிக்கின்றதால், இந்த நிஷேதவாக்யங்கள், அர்த்த வாதவாக்யமாக இருந்து விதிவாக்யத்துடன் ஏகவாக்யத்வத்தை அடைகின்றது என்று ஸ்ரீபத்ம பாதாசார்யாரால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, 'தத்வமஸி' போன்ற மஹாவாக்யங்கள், ஸத்யம் ஞானம் அனந்தம் போன்ற வாக்யங்கள் எல்லாம், அகண்டார்த்தமான ப்ரஹ்மஞானத்தை உண்டுபண்ணுகின்றது. இதனுல் அத்வைதமே, தத்வம்

என்பதையே விதிவாக்யங்கள் போதிக்கின்றது. அதனுல் அந்த வாக்யங்களுக்கு விரோதமாக த்வைதம் என்பது இருக்கமுடியாது என்பது அர்த்தாத் சித்திக்கின்றது என்பதால் இதையே நிஷேதவாக்யம் அனுவாதம் செய்து தெரிவிக்கின்றது. அதனுல் அர்த்தவாதமாக ஸ்துதி செய்கிறது என்றே சொல்லவேண்டும். அர்த்தவாதம் என்பது ப்ரஸம்ஸையாகவும் இருக்கலாம் அல்லது, ப்ரத்யக்ஷமாக அறியப்படுவதையே அனுவாதம் செய்கிறதென்றும் சொல்லலாம். இதனுல் சித்தாந்தத்திற்குஹானி ஏதுமில்லே. அதுமட்டுமல்ல விதிமுகவாக்யமே ப்ரதானம் என்றும், நிஷேதமுகவாக்யம் அங்கம் என்றும் சொல்லப்படுவதால், தாத்பர்யார்த்தம் மிகவும் த்ருடமாக ஆகிறது என்பதால் இந்த விஷயத்தை ஒத்துக்கொள்வதில் எங்களுக்கும் ஸம்மதம்தான்.

**258. அவதாரிகை :**

இதேவிஷயத்தை, லோகத்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

दृष्टश्च रज्जुविधिनाऽवगतार्थवस्तुसामर्थ्यसिद्धभुजगप्रशमानुवादः ।
रज्जुस्तवाग्रत इयं न भुजङ्गमोऽयमित्यत्र तद्वदिह योजयितव्यमेतत् ॥

**ச்லோகார்த்தம் :** 'எதிரில் இருப்பது கயிறுதான்' என்று விதிமுகமாக போதிக்கப்படுகின்றபோதே, இது சர்ப்பமல்ல என்ற அர்த்தம், தானே கிடைக்கின்றது. ஆயினும், 'நாயம் ஸர்ப்ப:' என்று 'இது ஸர்ப்பமல்ல' என்று முன்னுல் கிடைத்த அர்த்தத்தையே நிஷேதத்திலுல் அனுவாதம் செய்து தெரிவிப்பதனுல், கிடைத்த ஞானம், த்ருடப்படுகிறது. இதுபோல் வேதாந்த வாக்யங்களும் போதிக்கின்றது என்று அறிந்துகொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** எதிரில் உன்னுல் பார்க்கப்படுவது 'கயிறுதான்', என்று போதிக்கப் படுகின்றபோது, அதைக்கேட்டவுடன், ஸர்ப்பமென்று பயந்தவனுக்கு 'கயிறுதான்' என்ற விதிமுகமான வாக்யத்திலுலேயே 'ஸர்ப்பமல்ல' என்ற ஞானம் கிடைக்கின்றது. ஆனுலும் 'நாயம் ஸர்ப்ப:' என்று, 'இது ஸர்ப்பமில்லே' என்று நிஷேதமுகமாக தெரிவிக்கின்ற வாக்யத்தைக் கேட்டவுடன், முதலில் ஏற்பட்ட ஞானம் த்ருடப்படுகிறது என்பது லோகத்ருஷ்ட்டாந்தம் மூலமாக அறியப்படுகிறது. இதேபோல் வேதாந்தவாக்யத்திலுல் முதலில் விதிவாக்யத்திலுல் எந்த அர்த்தம் அறியப்பட்டதோ அதையே அனுவாதம் செய்து, அதாத ஆதேசநேதிநேதி என்ற நிஷேத வாக்யத்திலுல், முன்னுல் ஏற்பட்ட ஞானம் மேலும் த்ருடமாக ஆகின்றது என்றே சொல்லலாம்.

**259. அவதாரிகை :**

'தத்வமஸி' முதலான விதிமுக வாக்யங்களே ப்ரதானம் என்றும், நேதி, நேதி என்ற நிஷேத வாக்யங்கள் அப்ரதானம் என்றும் சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில், விதிவாக்யங்களை கேட்டபிறகும் உடனே அஞ்ஞானம் நிவர்த்திப்பதில்லே. ஆகையால் அனுவாதமான நிஷேத வாக்யங்களைச்சேர்த்து க்ரஹிக்கப்படுகின்றபோதுதான் அஞ்ஞானநிவர்த்தி ஏற்படுகிறதென்று சொல்லலாமே? இவ்விதம் சொல்லப்படுமானுல், விதிவாக்யம், நிஷேதவாக்யம் இரண்டும் ஒன்றுக்கொன்று அபேக்ஷித்து அதன் அர்த்தத்தைபோதிக்கின்றது என்று, இரண்டிற்கும் ஸமப்ராதான்யம் சொல்லப்படலாமே? என்றுல்,

**ச்லோகம் :** अस्यैव तत्त्वविनिवेदनशक्तिभाजः संसारमूलविनिवृत्तिफलप्रसूतौ ।
सामर्थ्यमस्ति पटुभिः परिबृंहितत्वाद्वेदान्तभूमिगतपञ्चविधार्थवादैः ॥

**ச்லோகார்த்தம் :** தத்வத்தை போதிக்கக்கூடிய சக்தியுடைய விதிவாக்யங்களுக்கே, வேதாந்தத்தில் சொல்லப்படுகின்ற பஞ்சவிதமான அர்த்தவாதத்தின் ஸஹாயத்துடன் ஸம்ஸார மூலமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கக்கூடிய ஸாமர்த்யம் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** வேதாந்தத்தில் சொல்லப்படும் ஐந்து விதமான அர்த்தவாத வாக்யங்களைக் கொண்டு விசாரிக்கின்றபோது, விதிமுகவாக்யத்திற்கே அகண்டார்த்தத்தை போதிக்கக் கூடியசக்தி இருக்கிறதேயன்றி, நிஷேதமுகவாக்யத்திற்கு தத்வத்தை போதிக்கக்கூடியசக்தி இருப்பதாகச்சொல்லமுடியாது. விதிவாக்யம் எந்த பாவரூபமான வஸ்துவை போதிக்கின்றதோ, அதை ஸ்பஷ்ட்டமாகவே தெரிவிக்கின்ற அர்த்தவாதவாக்யங்களும் இருக்கின்றது. நிஷேத வாக்யத்திஞல் பதார்த்தம் சுத்தம் செய்யப்பட்டு அறிவிக்கப்படுகிறது என்ற ஒரே ப்ரயோஜனம்தான் சொல்லமுடியும். எப்படியெனில், 'தத்வமஸி' முதலான விதிமுக்வாக்யங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது. அவ்விதம் உபாதிகள் அற்ற ஸ்வரூபத்தை தெரிவிக்கின்றபோது, அதற்கு அனுகூலமாக நிஷேதவாக்யங்கள், உபாதியானத்வைதங்களை நிஷேதம் செய்து பதார்த்தத்தை சுத்திசெய்து தெரிவிக்கின்றது. இவ்விதம் விதி வாக்யத்திஞல் ஏற்பட்ட த்வைதநிவர்த்தியை அனுவாதம் செய்து நிஷேதமுகேன போதிக்கின்றதால், விதிவாக்யத்திஞல் ஏற்பட்டஞானம் த்ருடப்படுகிறது. இந்தக்காரணத்திஞல் விதி வாக்யத்திற்கு நிஷேதவாக்யம் அங்கம் என்று சொல்லலாம். ஆஞல் சாக்ஷாத்வஸ்துவை போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் அகண்டார்த்தமான ப்ரஹ்மஸ்வரூபஆவாரகமாக இருக்கின்ற, அஞ்ஞானநிவர்த்தி என்பது விதிமுகமான அகண்டப்ரஹ்மாகார வ்ருத்தியிஞல் தான் ஏற்படவேண்டும். ஆகவே ஐந்து விதமான அர்த்தவாத வாக்யங்களும், விதிவாக்யத்திற்கு உபகாரகமான விஷயத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். நிஷேத வாக்யத்தை அனுசரித்து விதிவாக்யம் அர்த்தத்தை போதிக்கவில்லை. அதஞல் ஸமப்ராதான்யம் சொல்ல முடியாது.

**260. அவதாரிகை :**

ஐந்தவித அர்த்தவாதவாக்யங்கள் என்ன? விதிவாக்யத்திற்கு அவைகள் எப்படி உபகாரகமாக ஆகிறது? என்ருல்,

**ச்லோகம் :**

सृष्टिस्थितिप्रलयसंयमनप्रवेशव्यापारजातकथनच्छलतः प्रवृत्तैः ।
सानुग्रहादवगतिः खलु तत्वमादेर्वाक्यात्परस्य घटते न ततोऽपरस्मात् ॥

**ச்லோகார்த்தம் :** சிருஷ்டி, ஸ்திதி, லயம், ஸம்யமனம், ப்ரவேசம், என்ற ஐந்து விதமான அர்த்த வாதங்களால் தெரிவிக்கப்படும் அர்த்தத்தின்மூலம், விதிவாக்யங்களுக்கு உபகாரகமாக இருக்கின்ற மஹாவாக்யங்களிலிருந்தே ப்ரஹ்மபோதம் ஏற்படுகிறது. வேறு எந்த வாக்யத்திலிருந்தும் அகண்டார்த்தபோதம் ஏற்படமுடியாது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானிபூதானி ஜாயந்தே' என்ற வாக்யமானது, எதிலிருந்து இந்த ஜகத் எல்லாம் உண்டாயிற்ருே என்றும், 'யேனஜாதானி ஜீவந்தி என்று, உண்டான இந்த ஜகத், எதஞல் ஜீவித்திருக்கின்றதோ என்றும், 'யத்ப்ரயந்தி' என்று, எதில் எல்லாம் லயத்தை அடைகின்றதோ என்று, 'ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, லயம், என்பவைகளுக்கு எது காரணமோ அதுவே ப்ரஹ்ம' மென்று சிருஷ்டியாதிகளை தெரிவிக்கின்றவாக்யம், ப்ரஹ்மத்திற்கு தடஸ்த்த லக்ஷணமாக இருந்து ப்ரஹ்ம தத்வத்தை (தைத்ரீயவாக்யம்) போதிக்கின்றது. இதேபோல், 'ய:

அந்தரேயமயதி' என்ற ப்ரஹதாரண்யகவாக்யமும், ஸர்வத்திற்கும் அந்தர்யாமியாக இருந்து ஸர்வத்தையும் நியமனம் செய்கிறது என்று ஸம்யமனவாக்யம் தெரிவிக்கின்றது. 'தத் ச்ருஷ்ட்வாததேவானுப்ராவிசத்' என்ற தைத்ரீய வாக்யமும் ஸர்வத்தையும் சிருஷ்டித்து அதுவே ஸர்வத்திலும் ப்ரவேசித்தது என்று ப்ரவேசவாக்யம் தெரிவிக்கின்றது இதேபோல், "ஸயச்சாயம் புருஷே, யச்சாஸாவாதித்யே, ஸஏக:" என்று ஆதித்யனில் இருக்கின்ற புருஷனும், ப்ரத்யகாத்ம ஸ்வரூபமாக இருப்பதும் ஒன்றே என்று அபேதத்தை போதிக்கின்றது. 'ஏஷத ஆத்மா அந்தர்யாமி' என்றும் தெரிவிக்கின்றது. சாந்தோக்ய உபநிஷத்தில், 'பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி' என்று ஆரம்பித்து கடைசியில், 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தினுல் 'அதுவே நீ' என்று போதிக்கின்றது. இதுபோன்றே ஸர்வ உபநிக்ஷத்துக்களிலும் இருக்கின்ற அர்த்த வாதவாக்யங்கள் எல்லாம், விதிவாக்யத்துடன் சேர்ந்தே பலனைக்கொடுக்கின்றது. இவ்விதம், 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தை உபதேசித்தபிறகு, "தஸ்யதாவதேவசிரம் யாவந்நவிமோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே" என்ற வாக்யமானது, மஹாவாக்யத்தினுல் ஏற்படும் அகண்டார்த்தஞானமே, மோக்ஷமென்ற பலனைக்கொடுக்கின்றது என்று தெரிவிக்கின்றது. ஆகவே, விதிவாக்யமே ஸ்வரூபபோதத்தை உண்டுபண்ணுகின்றதால் அதுவே ப்ரதானம் என்று சொல்லவேண்டும். நிஷேதவாக்யம், த்வைதமில்லையென்றுதான் போதிக்கின்றதேயன்றி, தர்மி ஸ்வரூபத்தை போதிக்கவில்லை. ஆனுல் விதிவாக்யத்திற்கு இவைகள் உபகாரகமாக இருக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

1. ஆகவே, சிருஷ்டி வாக்யத்தினுல் 'ஸர்வம் ப்ரஹ்மாத்மகம்' என்று ஸர்வாத்மியம் சித்திக்கின்றது. ஸர்வம் ப்ரஹ்ம கார்யம் என்பதால், 'ஸர்வம் கலுஇதம்ப்ரஹ்ம' என்பது அறியப் படுகிறது.

2. ஸ்திதி வாக்யத்தினுல், ஸர்வத்திற்கும் ப்ரஹ்மமே அதிஷ்ட்டானம் என்று, ஸர்வ அதிஷ்ட்டானத்வம் சித்திக்கின்றது.

3. ப்ரளயத்தை தெரிவிக்கின்ற வாக்யத்தினுல், ஸர்வப்ரபஞ்சமும் லயம் அடைந்த பிறகு எஞ்சிஇருப்பது ப்ரஹ்மஸ்வரூபமே என்றும் அதுவே அத்விதீயம் என்றும் போதிக்கின்றது.

4. ஸம்யமன வாக்யத்தினுல், ஸர்வத்திற்கும் ப்ரஹ்மமேஸ்வரூபம் என்ற ஸர்வந்த ரத்வம் சித்திக்கின்றது.

5. ப்ரவேசவாக்யம், ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை போதிக்கின்றது. இந்தவிதம், சிருஷ்டி முதலானவைகளை தெரிவிக்கின்ற வாக்யங்களுக்கு, தன் அர்த்தத்தை தெரிவிப்பதில் தாத்பர்யமில்லை என்பதாலும், முக்திக்கு ஸாதனமான அகண்டாகார, ப்ரஹ்ம ஸ்வரூபஞானம் ஏற்படுவதற்கு உபகாரகமாக, ப்ரஹ்மஸ்வரூபஞானத்தையே இந்த வாக்யங்கள் போதிக்கின்றது என்பதாலும், ஜீவபரமாத்ம ஐக்ய ஞானத்தை உண்டுபண்ணக்கூடிய ஸாமர்த்யம் இந்த வாக்யங்களுக்கு கிடையாது. ஆகவே, அர்த்தவத்தான வாக்யத்திற்கு எது உபகாரகமாக இருக்கின்றதோ, அதற்கே அர்த்தவாதவாக்யம் என்று பெயர். அதனுல் நேரிடையாக இந்த வாக்யங்கள் ப்ரதானவஸ்துவை போதிக்கமுடியாது. பலமுள்ள விஞ்ஞானத்தை உண்டு பண்ணக்கூடிய விதிவாக்யத்திற்கு ஸேஷமாகத்தான் இருக்கிறதேயன்றி, தனிப்பட்ட பலம் உடையதுஅல்ல. ஆகவே, 'சிருஷ்டிஸ்திதி, லயம் என்பவைகளுக்கு எது காரணமோ' என்று தெரிவிப்பதால் ஸர்வம் ப்ரஹ்மகார்யம் என்றும், ப்ரஹ்மத்தையன்றி வேருகஇல்லை என்றும் தெரிவிக்கின்றதால், ப்ரபஞ்சம் மித்யை என்பது போதிக்கப்படுகிறது. அதனுல் த்வைதமில்லை என்பது சித்திக்கின்றது.

ப்ரவேசவாக்யத்திஞலே, சிருஷ்டித்து அதுவே ஸர்வசரீரங்களிலும் ப்ரவேசித்தது என்று சொல்லப்படுவதால், ஸஜாதீயம் முதலான எவ்வித பேதங்களும் அற்றது என்ற அர்த்தமும், ஜீவப்ரஹ்ம ஐக்யம் என்பதும் சித்திக்கின்றது.

ஸம்யமனம், என்பதால் ஸர்வமும் ப்ரஹ்மஅதீனம் என்பதும், எதற்கும் ப்ரஹ்மமென்பது அதீனமல்ல, என்றும், போக்தாவென்றும், போக்யம் என்றும் அறியப்படும் ஸர்வத்வைதமும், அதிஷ்ட்டானஸ்வரூபத்தையன்றி வேறல்ல என்று 'வாசாரம்பணம்' என்ற ச்ருதிவாக்யத்திஞல் ப்ரபஞ்ச அபேதம், ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படுகின்றது. இதஞலேயே, ப்ரபஞ்சம் மித்யை என்று சித்திக்கின்றது. இந்தவிதம், சிருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம், ஸம்யமனம், ப்ரவேசம், என்ற ஐந்து விதமான ஸ்துத்யர்த்தவாத வாக்யங்களின் உபகாரம், 'தத்வமஸி' முதலான விதி வாக்யங்களுக்கு இருக்கின்றது என்பதால், விதிவாக்யங்களே ப்ரதானம் என்று சித்திக்கின்றது. ஆகவே, த்வைதமில்லை என்று நிஷேதம் செய்கின்ற வாக்யங்கள் பாவரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிப்பதில் உபகாரகமாக இல்லை. விதிவாக்யத்திஞல் அறியப்பட்ட அர்த்தத்தை அனுவாதம் செய்து தெரிவிக்கின்றதால், விதிவாக்யத்திஞல் ஏற்பட்ட ஞானம் த்ருடப்படுகிறது என்ற முறையில் நிஷேதவாக்யங்கள் உபகாரகமாக இருக்கின்றது.

**261. அவதாரிகை :**

சூத்ரகாரரும் விதிமுகவாக்யமே ப்ரதானம் என்று தெரிவிக்கின்ருர் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सूत्रं तत्तु समन्वयादिति विधिव्यापारनिष्ठं वचो मोक्षायेति निवेदनाय कृतवान्वेदान्तवेदी मुनिः ।
न्यायेनाऽऽकलयन्नशेषवचनव्यापारमूरीकृतस्वातन्त्र्यः सकलेऽपि वेदशिरसि स्वैरं चरन्नीश्वरः ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்த சாஸ்திரத்தை நன்கு அறிந்தவரும், ஸமஸ்த்த வேதாந்த சாஸ்திரங்களில் ஸ்வதந்த்ரமாக ஸஞ்சரிப்பவருமான ஸ்ரீ பகவான் வ்யாஸாசார்யார், வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யம் என்ன என்று, ந்யாயத்திஞல் நிர்ணயம் செய்திருக்கின்ருர். அந்த ந்யாயக்ரந்தத்தில், விதிமுகவாக்யமே மோக்ஷத்திற்கு ஹேது என்ற விஷயத்தை 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்தில் தெரிவித்திருக்கிருர்.

**வ்யாக்யானம் :** 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திஞல் அகண்டார்த்தத்தை போதித்த பிறகு, 'தஸ்ய தாவதேவ சிரம்' என்ற வாக்யத்திஞல் அந்த ஞானத்திற்கு பலம்; மோக்ஷம் என்று சாந்தோக்யவாக்யங்களும் தெரிவிக்கின்றது. இதஞல் விதிமுகமான வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானமே மோக்ஷஸாதனம் என்று அறியப்படுகிறது.

'ப்ரதிதிஷ்ட்டந்தி ஹவாய ஏதா ராத்ரி: உபயந்தி' என்ற வாக்யமானது ராத்ரி சத்ரகர்மாவைச் செய்கின்றவர் எவரோ, அவர் ப்ரதிஷ்ட்டையை அடைகின்ருர் என்று தெரிவிக்கின்றது. இந்த வாக்யத்தில் விதி என்பது இல்லையென்ருலும், 'ப்ரதிஷ்ட்டாகாம: ராத்ரி சத்ரம் குர்யாத்' என்று ப்ரதிஷ்ட்டையை விரும்புகின்றவன், ராத்ரி சத்ரம் என்ற கர்மாவைச் செய்ய வேண்டுமென்று, ப்ரதிஷ்ட்டை என்பது பலமாகவும், ராத்ரி சத்ரம் என்ற கர்மா, அதற்கு ஸாதனமாகவும் இந்த வாக்யம் விதிக்கின்றது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதுபோல் இந்த இடத்திலும் "மோக்ஷகாம : தத்வமஸ்யாதிவாக்ய விசாரேண ஞானம் ஸம்பாதயேத்" என்ற கருத்தையே, 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரம் போதிக்கின்றது. அதாவது, "ஸர்வேஷாம் வேதாந்தாஞம் அத்விதீயே ப்ரஹ்மணி தாத்பர்யம்" என்பதையே 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரம் போதிக்கின்றது. இந்தவிதம், மோக்ஷமென்ற புருஷார்த்தத்தை அடையவேண்டுமாஞல்

ப்ரஹ்மஞானத்தை அடையவேண்டும் என்று ப்ரஹ்மஞானத்திற்கு மோக்ஷம் பலம் என்று விதிமுகவாக்யத்திலுல் ஏற்படும் ஞானத்திற்கே மோக்ஷபலத்துடன் ஸம்பந்தம் சொல்லப் படுகிறது. ஆகவே, 'தத்து நிஷேதாத்' என்று சூத்ரம் செய்யப்படாமல், 'தத்து ஸமன்வயாத்' என்றே சூத்ரம் செய்யப்பட்டிருக்கின்றதால், லக்ஷ்யார்த்தத்தை தெரிவிப்பதற்கு அனு கூலமாக, ஒன்றுடன் ஒன்று அன்வயித்து அர்த்தபோதத்தை ஏற்படுத்துகின்றது என்றும், அந்த ஞானமே மோக்ஷமென்ற பலனைக்கொடுக்கின்றது என்றும் சொல்லப்படுவதால், பாவரூபமாக வஸ்துவைத்தெரிவிக்கின்ற விதிமுகவாக்யமே மோக்ஷஸாதனம் என்று வேதாந்தார்த்தங்களை விசாரித்து அறிந்த பிறகே இந்த சூத்ரத்தை பகவான் ஸ்ரீவ்யாஸாசார்யரால் செய்யப்பட்டிருக்கிறது. ஈச்வரனுடைய சிருஷ்டியென்பது, எப்படி லோகானுக்ரஹத்திற்காக ஏற்பட்டதோ, அதுபோல் மஹாவிஷ்ணு அவதாரமான வ்யாஸபகவானும் லோகானுக்ரஹத்தின் பொருட்டு ஸர்வவேதாந்தார்த்தங்களையும் அறிந்து, மூலப்ரமாணத்தைக்கொண்டு, ச்ருதிக்கு விரோதமில்லாத அர்த்தங்களையே தன்னுடைய யுக்தியைக்கொண்டும் இந்த சூத்ரங்களைச் செய்திருக்கின்றார். ஆகையால், (புருஷபுத்தியைக் கொண்டு மற்றமதஸ்தர்கள் ஸ்வதந்தரமாக சாஸ்திரார்த்தங்களை எழுதியிருக்கின்றதால் அவைகளில் தோஷம் இருக்கும்). மற்ற சாஸ்திரங்களைப்போல் இதில் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை. ஆகவே, நிஷேத வாக்யத்திலுல் எந்த அர்த்தம் போதிக்கப்படுகின்றதோ, அந்த அர்த்தம் விதிவாக்யத்திலிருந்தே கிடைக்கின்றதால், விதிவாக்யமே ப்ரதானம். உதாரணமாக, 'பரிவ்ராஜகன்' என்றுலே 'ப்ராஹ்மணஸன்யாஸி' என்ற அர்த்தம் கிடைக்கின்றதால், ப்ராஹ்மணபரிவ்ராஜகன் என்று சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. அதுபோல் விதி வாக்யத்திலுலேயே அர்த்தாத் (மறைமுகமாக) ப்ரபஞ்ச நிஷேதம் கிடைக்கின்றதால், நிஷேதவாக்யம் தேவைஇல்லை. ஆகவே, இந்தவிதம், வேத வேதாந்தங்களை எல்லாம் முன்பின் சொல்லப்பட்ட விஷயங்களைக்கொண்டு நன்கு ஆராய்ந்து அறிந்தபிறகே, இந்த சூத்ரங்களைச் செய்திருக்கின்றார் என்பதால், ஸ்ரீவ்யாஸருடைய சூத்ரத்திலுலும் விதிவாக்யமே ப்ரதானம் என்பது சித்திக்கின்றது.

**262. அவதாரிகை :**

நிஷேதவாக்யங்கள், விதிவாக்யத்திற்கு அங்கம் என்றே சொல்லவேண்டுமென்றும், விதிவாக்யத்திற்கு ஸமானமாகவோ, அல்லது அதற்கு மேலாகவோ சொல்லமுடியாது என்றே சூத்ரகாரர் தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

वाक्यार्थान्वयितत्पदार्थकथने नेतीति वाक्यं पुनः साक्षात्सूचयति स्म सूत्रकृदतस्तत्तत्परं निश्चितम् ।
एवं हस्ततलार्पितामलकवत्तात्पर्यसंवेदने सत्यन्यादृगुदीरयन्ति यदि तत्क्षन्तुं कथं शक्नुमः ॥

**ச்லோகார்த்தம் :** வாக்யார்த்தத்தில் அன்வயிக்கின்ற தத்பதார்த்தத்தை தெரிவிப்ப தற்காகவே, நேதி முதலான நிஷேதவாக்யங்கள் ப்ரவர்த்திக்கின்றது என்று சூத்ரக்காரர் நேரிடையாகவே தெரிவிக்கின்றார். இவ்விதம் நிஷேதவாக்யங்கள், தத்பதார்த்தபோதகம் என்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல் சித்திக்கின்றபோது, அந்த நிஷேத வாக்யங்களுக்கு வேறு விதமான அர்த்தம் செய்யப்படுவதை எப்படி ஒத்துக்கொள்ளமுடியும்?

**வ்யாக்யானம் :** விதிவாக்யமான 'தத்வமஸி' வாக்யத்திலுள்ள, தத், த்வம், என்ற பதங்களை சோதனை செய்கின்றபோது, 'ப்ரக்ருதைதாவத்வம் ஹி ப்ரதிஷேததிததோ ப்ரவீதீசபூய:' என்ற சூத்ரத்திலுல், நிஷேதவாக்யங்கள், விதிவாக்ய அன்வயத்திற்கு உபகாரகமாக இருக்கிறது

என்று தெரிவிக்கின்றார். அதனால் வாக்யார்த்த சோதனத்திற்காகவே நிஷேத வாக்யங்கள் இருக்கிறதேயன்றி மோக்ஷஸாதனபரமான வாக்யமாக இல்லை. அதனால் நிஷேத வாக்யம் ஸ்வதந்தரமாக அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. விதிமுக மானவாக்யத்திலிருந்தே அஞ்ஞானத்தை நாசம் செய்யக்கூடிய ஞானம் ஏற்படுகிறது. ஆகவே நிஷேதமுகவாக்யங்கள் தத்பதார்த்த சோதனமேயன்றி, தத்பதார்த்த உபதேச வாக்யமில்லை. ஆகையால்; விதிவாக்யத்தினால் மோக்ஷஸாதனமான ஆத்மஞானம் ஏற்படுகிறது என்றும் அதற்கு அங்கமாகவே நிஷேதவாக்யங்கள் இருக்கின்றது என்பதை ஸூத்ரக்காரரால் மிகத்தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கின்றது.

**263. அவதாரிகை :**

விதிமுகமான வாக்யத்திற்கு நிஷேதமுகமானவாக்யங்கள் எந்தவிதம் உபகாரகமாக இருக்கிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

**सत्यं ज्ञानमनन्तमित्यभिहिते संभावनाऽऽनीयते नास्थूलादिवचः समुद्भवधिया द्वैतोपमर्दं विना तेनावान्तरवाक्यलक्ष्यविषयां बुद्धिं दृढीकुर्वता सर्वद्वैतनिषेधकेन वचसा वाक्यार्थधीर्जन्यते ॥**

**ச்லோகார்த்தம் :** அஸ்தூலம், அனனு, முதலான நிஷேதவாக்யங்களிலிருந்து ஏற்படும் ஞானத்தின்மூலம் த்வைதநாசம் என்பது ஏற்படாமல், 'ஸத்யம்ஞானம் அனந்தம்' என்ற வாக்யத்தினால் ஏற்படும் ஞானம் த்ருடமாக இருக்கமுடியாது. ஆகையால் ஸர்வத்வைத நிஷேத வாக்யங்களும், அவாந்தரவாக்யங்களின் லக்ஷ்யார்த்தமான தத்பதார்த்தஞானம் என்பதை த்ருடம் செய்வதன்மூலம் வாக்யார்த்தஞானம் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்று ப்ரஹ்மஸ்வரூபலக்ஷணத்தை தெரிவிக்கின்ற வாக்யம், அத்வைதமே தத்வம் என்று போதிக்கின்றது என்றாலும், ஸ்தூலம் முதலான ஸர்வ த்வைத ப்ரபஞ்சத்தின் ப்ரதீதி இருக்கின்ற காரணத்தினால், அஸ்தூலம், அனனு முதலான நிஷேதவாக்யத்தினால், ஸர்வத்வைதங்களும் நிஷேதம் செய்யப்படுவதால் ஏற்படும் ஞானத்தினால்தான், அத்வைதமே தத்வம் என்று த்ருடமான நிச்சயஞானம் ஏற்படுகிறது. அதனால் நிஷேதவாக்யங்களைக்கொண்டே அஸம்பாவனை முதலான ஸந்தேகங்கள் நிவர்த்திக்கப் படவேண்டும். அதன்பிறகே, அகண்டார்த்தஞானம் த்ருடப்படுகிறது. அதனால் நிஷேத வாக்யங்கள் தத்பதார்த்தத்தை சோதனம் செய்கின்ற விஷயத்தில் உபகாரகமாக இருக்கின்றது. எப்படியெனில், தத்பதவாச்யார்த்தம் என்பது, த்வைதத்துடன்கூடிய சைதன்யமாக (ஸபளார்த்தமாக) அறியப்படுகின்றதால், த்வைதாம்ஸத்தைவிட்டு, சுத்தசைதன்யமே அகண்டார்த்தம் என்று விதிவாக்யத்தினால் போதிக்கப்பட்டபோதிலும், நிஷேதவாக்யங்களால், த்வைதங்களை நிஷேதம் செய்து போதிக்கப்படாத வரையில், அஸம்பாவனை முதலான ஸந்தேகங்கள் நிவ்ருத்தியாகாது. ஆகவே, ஸந்தேகமற்ற த்ருடநிச்சயம் ஏற்படுவதற்கு உபகாரகமாக இருக்கின்றதால், ஸத்யாதிவாக்யங்கள், நிஷேதவாக்யங்களுடன் ஏகவாக்யமாக அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிக்கின்றது. ஆகையால், நிஷேதவாக்யத்தினால் மட்டும், அவித்யாநிவர்த்தி என்பதோ, அத்வைதமே தத்வம் என்ற ஞானமோ ஏற்படாது.

**264. அவதாரிகை :**

இந்தவிதம் நிஷேதவாக்யங்களின்மூலம், த்வைதங்கள் விலக்கப்பட்டபிறகு, விதிமுக வாக்யத்தினால் சோதனம் செய்யப்பட்ட லக்ஷ்யார்த்தமான அகண்டார்த்தத்தில் எந்தவிதமான ஸந்தேகங்களும் இல்லாமல், நீ சாக்ஷாத்காரத்தை அடையவேண்டும்.

**ச்லோகம் :**

अस्थूलादिवचो निरस्तनिखिलद्वैतप्रपञ्चं परं जाग्रत्स्वप्नसुषुप्तिवर्जितमिदं प्रत्यक्स्वरूपं तथा ।
एकीकृत्य परस्परेण पदयोरर्थद्वयं तत्त्वतः प्रत्यक् चाद्वयमद्वयं च तदिति प्रेक्षस्व निःसंशयम् ॥

**ச்லோகார்த்தம் :** அஸ்தூலம் முதலான வாக்யத்தினுல் நிஷேதம் செய்யப்பட்ட த்வைதப்ரபஞ்சமற்ற, அந்தப்ரஹ்மஸ்வரூபமே, ஜாக்ரத், ஸ்வப்னம், சுழுப்தி என்ற அவஸ்த்தைகளற்றதான ப்ரத்யகாத்ம ஸ்வரூபம் என்று தத்த்வம் பதார்த்தங்கள் பரஸ்பரம் ஒன்றே என்பதால், ப்ரத்யகாத்மாவே, பரப்ரஹ்மம், அதுவே அத்வயப்ரஹ்மமென்று அறிந்து கொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** நிஷேதவாக்யங்களினுல் லக்ஷ்யார்த்த சோதனம் செய்தபிறகு, விதி வாக்யங்களினுல், இரண்டும் ஒன்றே என்று எப்படி வாக்யார்த்தஞானம் ஏற்படுகிறது? என்ருல், ஸர்வ நிஷேதவாக்யங்களால், த்வைதங்களெல்லாம் நிஷேதம் செய்யப்பட்டபிறகு, 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற தத்பதலக்ஷ்யார்த்தம் அறியப்படுகிறது. அதன்பிறகு அவஸ்த்தாத்ரயங்களுக்கு சாக்ஷியாய், அவஸ்த்தைகளுக்கு அன்யமாய், அவஸ்த்தாதிகளின் ஸம்பந்தம் அற்றதான த்வம்பதலக்ஷ்யார்த்தமான சைதன்யம் அறியப் படுகிறது. இவ்விதம் தத், த்வம் என்று இரண்டுபதங்களினுலும், வாச்யார்த்தமான மாயாவச்சின்னசைதன்யம், அந்த:கரண அவச்சின்னசைதன்யம் என்று உபாதிகளுடன் அறியப்பட்டால் ஸ்வரூபங்களிலுள்ள, உபாதி இரண்டையும்விட்டு, ப்ரபஞ்ச அதிஷ்ட்டானமான தத் பதார்த்தமும், கேவல சைதன்யஸ்வரூபந்தான் என்று அறியவேண்டும். இவ்விதம் அறியப்படுகின்றபோது, தத்பதத்தில் அறியப்பட்ட பாரோக்ஷ்யம் என்பதும், த்வம்பதத்தில் அறியப்பட்ட ஸத்வயத்வமும் நீங்கி, ப்ரத்யகபின்ன பரமாத்ம ஸ்வரூப போதம் ஏற்படுகின்றது. உபாதியின்றி பேதம் என்பதே இருக்கமுடியாது. ஆகவே, ப்ரத்யக்ஸ்வரூபமே ப்ரஹ்மமென்று அறிவதற்கு இந்தமுறையில நிஷேதவாக்யம் விதிவாக்யம் இரண்டினுலும் ஏற்படும் அகண்டார்த்தஞானமே காரணமாகின்றது.

**265. அவதாரிகை :**

அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட ப்ரஹ்மஸ்வரூபம், பரோக்ஷமாகவே இருக்கின்றதால், அபரோக்ஷமாக ப்ரஹ்மஸ்வரூபம் அறியப்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்? என்ருல், பதார்த்த சோதனம் செய்து உபாதிகளை விலக்குகின்றபோது மறைவு நீங்கி, அபரோக்ஷமாக அறியப்படுகிறது.

**ச்லோகம் :**

अद्वैतं परिशोधितं भगवतो विष्णोः परं यत्पदं तच्छब्देन समर्पितं परिगृहीतादेयमात्मप्रभम् ।
यच्चोपाधिविवर्जितं तव निजं साक्षात्स्वरूपं तयोरेकत्वं परिवर्जितव्यवधिकं प्रत्यक्षमीक्षस्व भोः ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் அஸ்தூலாதி வாக்யங்களால் சோதனம் செய்யப்பட்டதும், விஷ்ணுவின் பரமபதம் என்று சொல்லப்படுவதும், அனுதேயமான அனுத்மவஸ்துக்கள் அற்றதும், ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபமாக இருப்பதுமான அத்வைத தத்வமே, தத்பதத்தினுல் சொல்லப்பட்டது. உபாதிகளற்ற ப்ரத்யகாத்மஸ்வரூபமே உன்னுடைய அபரோக்ஷமான ஸ்வரூபம் என்று, இவைகளுக்கிடையில், அவ்யவஹிதமான ஐக்யத்தை ப்ரத்யக்ஷமாக அறிந்துகொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** பரோக்ஷமாக அறியப்படும் ப்ரஹ்மஸ்வரூபமும், அபரோக்ஷமாக அறியப்படும் ப்ரத்யக்ஸ்வரூபமும் ஒன்று என்று எப்படிச்சொல்லமுடியும்? என்ருல்,

'விஷ்ணோ: பரமம்பதம்' என்று எந்த பகவானுடைய ஸ்வரூபம், நித்யசித்தமான நிரங்குச ஐச்வர்யமுடையதாகவும், ஜகத்காரணத்வமுடையதாகவும், ஸத்யஞானனந்த லக்ஷண முடையதாகவும் அறிவிக்கப்படுகிறதோ அந்த ஸ்வரூபத்தில், விருத்தமாக அறியப்படும் தன்மைகள் எல்லாம் உபாதியினுல் ஏற்பட்டதென்று அறிந்து, ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபமே தத்பதார்த்தம் என்று அறிந்துகொள்ளவேண்டும். அதேபோல் உனது ஸ்வரூபத்தில் அறியப்படும் தேஹம், ப்ராணன், அஹங்காரம் முதலான உபாதிகளைவிட்டு, கேவல ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபமே த்வம்பதார்த்தம் என்று அறிந்துகொள்ளவேண்டும். இதனுல், அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட மறைவுநீங்கி, இரண்டும் ஒன்றே என்ற அபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. ஆகவே, இந்தவிதம் பதார்த்த சோதனத்தினுல் அஞ்ஞானம் நிவர்த்திக் கின்றதால், பரோக்ஷமாக அறியப்படும் ஸ்வரூபம் அபரோக்ஷமாக அறியப்படுகிறது.

**266. அவதாரிகை :**

பதார்த்தசோதனம் செய்யப்பட்டபிறகும், ப்ரத்யகாத்மாவிற்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் ஏற்படுவதாகச்சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளமுடியவில்லை. ஏனெனில், தத்பதார்த்தம், 'ஸத்யம்ஞானம் அனந்தம் ஆனந்த ஸ்வரூபமாக இருக்கிறது. என்னுடைய ஸ்வரூபம் அதற்கு நேர்விபரீதமாக அந்ருதஜடதுக்காத்மகமாக அனுபவத்தினுல் அறியப்படுகிறது. அதனுல் இரண் டும் ஒன்ருக எப்படி இருக்கமுடியும்?

**ச்லோகம் :**

अनृतजडविभक्तदुःखतुच्छासहनवपुः परमं पदं मुरारेः ।
परिहृतसकलप्रपञ्चमात्मा तव तदवेहि तमो निरस्य वाक्यात् ॥

**ச்லோகார்த்தம் :** அந்ருதம், ஜடம், துக்கம், த்வைதம் என்பவைகளுக்கு விரோதியாக இருப்பதும், த்வைதப்ரபஞ்சம் அற்றதுமான விஷ்ணுவின் பரமபதமே உன், உண்மையான ஸ்வரூபம் என்பதை, அஞ்ஞானநிவர்த்திமூலமாக அறிந்துகொள்ளவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தம்' என்று எந்த ப்ரஹ்ம ஸ்வரூபம் தத்பார்த்தத்தினுல் சொல்லப்பட்டதோ, அந்த ஸ்வரூபமே உன் உண்மையான ஸ்வரூபம் என்று அறியவேண்டும். அந்ருதமாகவும், ஜடமாகவும், துக்கமாகவும் அறியப்படுவதற்கு அஞ்ஞானமே காரணம். ஆகையால் வாக்யஜன்யஞானத்தினுல், 'ஸத்யஞானனந்த ஸ்வரூபமே நான்' என்று ஸர்வ உபாதிகளும் அற்றதான ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளவேண்டும். அந்ருதம், ஜடம், துக்கம், துச்சம், த்வைதம் என்பதெல்லாம் ப்ரபஞ்சத்தின் தன்மைகள். இவைகளை, அஸ்தூலம் முதலான நிஷேதவாக்யங்களினுல் நிஷேதம் செய்கின்றபோது, ஸத்ரூபம், சித்ரூபம், சுக ஸ்வரூபம் என்றும், ஸத்வமாக இருப்பதால் துச்சமில்லையென்றும், அத்வைதமானதால், ஸர்வபேத ரஹிதம் என்றும் அறியப்படுகிறது. இவ்விதம் த்வைதப்ரபஞ்சங்களை விலக்கினபிறகு முராரியின் உண்மையான ஸ்வரூபம் எதுவோ அதுவே உன் ஸ்வரூபம் என்று அறிந்து கொள்ளமுடியும்.

**பூர்வ :** தமஸ் என்பதை விலக்கி உன் ஸ்வரூபத்தை அறிந்துகொள் என்று சொல்லப் படுகிறது. ஆனுல் ஸ்வரூபஞானம் ஏற்பட்டால்தானே அஞ்ஞானநிவர்த்தி ஏற்படமுடியும்?

**சித்தா:** 'முகம் வ்யாதாய ஸ்வபிதி' என்ற வாக்யம், வாயை திறந்து கொண்டு தூங்குகிருன் என்று தெரிவிக்கின்றது. அதுபோல் இந்த இடத்திலும் ஒத்துக்கொள்ளவேண்டும். அதாவது, தூங்கினபிறகே வாய் திறக்கும் ஆனுலும், வாயை திறந்து கொண்டு தூங்குவதாக வழக்கத்தில் சொல்லப்படுகிறது. அதுபோல் அஞ்ஞான நிவர்த்திக்குப்பிறகு ஞானம் என்று சொல்லப் படுகிறது. இதில் தவறு ஏதுமில்லை.

**பூர்வ :** பதார்த்த சோதனத்திலும், யுக்திகளைக்கொண்டும் நிரூபணம் செய்து தெரிவிக்கின்றபோது, ப்ரஹ்மமும் நானும் ஒன்றே என்று அறிந்தபோதிலும், என்னுடைய ஸ்வரூபம் அதற்கு விபரீதமான தன்மையில் இருப்பதாக அனுபவத்தினால் அறியப்படுகிறதே?

**சித்தா :** வாக்ய ஜன்ய ஞானத்தில் மனதை நிலைநிறுத்தி, நிதித்யாஸனாதிகளை செய்ய வேண்டும். அதனால் சித்தத்திலுள்ள ப்ரதிபந்தங்கள் நிவர்த்திக்கின்றது. அனாதிகாலமாக தேஹாதிகளில் அஹம் என்ற புத்தி தொடர்ந்து இருக்கின்றதால் அதற்கு விபரீதமாக தேஹாதிகள் நான்அல்ல என்ற த்ருடஞானம் ஏற்படவேண்டும். அதற்காகவே, நிதித்யாஸனங்கள் செய்யப்படவேண்டும். இதனால் அஞ்ஞான நிவர்த்திமூலமாக பேதஞானம் நிவர்த்திக்கப்படுவதால் ப்ரஹ்மலக்ஷணமும் ப்ரத்யகாத்ம லக்ஷணமும் ஒன்றே என்று, லக்ஷண ஐக்யாத் வஸ்து ஐக்யம் ஏற்படுகிறது.

**267. அவதாரிகை :**

இந்தவிதம் குருவானவர், பெருமுயற்சியுடன், ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மமென்று ச்ருதி, யுக்தி, அனுபவம் முதலானவைகளைக்கொண்டு விளக்கப்பட்டபோதிலும், ஜன்மாந்தரங்களில் தொடர்ந்து இருக்கின்ற வாஸனையினால், சிஷ்யனுக்கு தன் உண்மையான ஸ்வரூபம் அறியப் படவில்லையென்றால், குருவினிடத்திலும், சாஸ்திரத்தினிடத்திலும், சிரத்தையுடையவனாக இருந்து, ஞானம் ஒன்றே முக்திக்கு ஸாதனம் என்பதை அறிந்து, ச்ரவண, மனனாதிகளை ச்ரத்தையுடன் செய்து ஸந்தேகத்திற்கு இடமின்றி தத்வத்தை அறியவேண்டும்.

**ச்லோகம் :**

श्रद्धत्स्व सौम्येति हि शास्ति शास्त्रं श्रद्धाधनत्वश्रुतिरस्ति चान्या ।
श्रद्धा तु यस्येत्यपरं च वाक्यमधीयते संशयकुत्सनाय ॥

**ச்லோகார்த்தம் :** சிஷ்யனின் ஸந்தேகத்தை நிவர்த்திப்பதற்காக, ஹே! ஸௌம்ய! ச்ரத்தையுடையவனாக இரு என்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இதேபோல் மற்றொரு ச்ருதி ச்ரத்தையே தனம் என்று தெரிவிக்கின்றது. எவனுக்கு ச்ரத்தை இருக்கின்றதோ அவனுக்கு ஸம்சயம் இல்லை என்று இவ்விதம் அனேக ச்ருதிவாக்யங்கள் ஆத்மஞானத்திற்கு சிரத்தை என்பது மிகவும் அவஸ்யம் என்று தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** உள்ளங்கை நெல்லிக்கனிபோல, ஆத்மவஸ்துவை அதிசுலபமாக அறிந்துகொள்ளும்விதம் உபதேசித்தபோதிலும், சிஷ்யனுக்கு ஸந்தேகம் நிவர்த்திக்க வில்லையென்றால், ச்ரத்தை என்பது த்ருடமாக இல்லையென்றே சொல்லவேண்டும். ஆத்ம தத்வம், அதிசூக்ஷ்மமான விஷயமாக இருப்பதால், ச்ரத்தை என்பதும், அதிகமாக இருக்க வேண்டுமென்பது மிகவும் அவஸ்யம் என்பதை சாஸ்திரமே தெரிவிக்கின்றது. சாந்தோக்ய உபநிஷத் என்பதிலும், ப்ரஹதாரண்யகஉபநிஷத்தில் மாத்யந்தினச்ச்ருதியிலும் ச்ரத்தையைப் பற்றி தெரிவிக்கின்ற வாக்யங்களில் ஒரு சிலவற்றை இங்கு சொல்லப்படுகிறது. அதாவது, மாத்யந்தினச்ருதியில், 'ச்ரத்தா வித்தோ பூத்வா, ஆத்மன்யேவ ஆத்மானம் பச்யதி' என்றும், 'யஸ்யஸ்யாதத்தா நவிசிகித்ஸாஸ்தி' என்று ச்ரத்தை உள்ளவனுக்கே ஸந்தேகமின்றி ஸ்வரூபம் ப்ரகாசிக்கும் என்று சாந்தோக்யச்ருதியும், காண்வச்ருதியும் தெரிவிக்கின்றது. ச்ரத்தாவான்லபதே ஞானம் என்று பகவானாலும் கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விதம் சாஸ்திரம் என்ற ப்ரமாணசித்தமான அர்த்தத்தில் ஸந்தேகம் ஏற்படுமானால் அவனுக்கு ச்ரத்தை இல்லையென்றே சொல்லவேண்டும். ச்ரத்தை இல்லாதவனை சாஸ்திரமே நிந்தை செய்கின்றது.

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆலவ்ருக்ஷத்தின்வித்தை, உதாரணமாக காண்பித்து, இந்த சிறிய விதையிலிருந்தே இத்தனை பெரிய ஆலவ்ருக்ஷம் உண்டாகி இருக்கிறது என்று சொல்லப் படுவதை கேட்டபோதிலும், இதிலிருந்து எப்படி இந்த வ்ருக்ஷம் உண்டாகமுடியும்? என்ற ஸந்தேகமின்றி, விஷயத்தை சிரத்தையுடன் கேட்க்கவேண்டும் என்று தெரிவிக்கின்றது. அதன் பிறகு, இதேபோல், அதிசூக்ஷ்மமான ஆத்ம வஸ்துவிலிருந்தே இந்தப்ரபஞ்சம் உண்டாயிற்று என்பதை அறிந்துகொள்ளவேண்டும் என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. இவ்வித ச்ரத்தை தான் மிகவும் அவஸ்யம் என்று தெரிவிக்கின்றகாரணத்தினால் சாஸ்திரார்த்தங்களை ச்ரத்தையுடன் விசாரித்து அறியப்படுமானால் அஞ்ஞானநிவர்த்தி ஏற்பட்டு, தத்வம், ஸ்வரூபேண ப்ரகாசிக்கும் என்பதில் ஸந்தேகத்திற்கே இடமில்லை.

**268. அவதாரிகை :**

இதே விஷயம் கீதையிலும், பகவானால் சொல்லப்பட்டிருக்கிறது.

**ச்லோகம் :**

अज्ञो विनश्यति पुमानतिमूढभावादश्रद्धयोपहतबुद्धिरतोऽपि कष्टः ।
कष्टाच्च कष्टतर एव तु संशयात्मा दुःखी सदेति भगवानपि वासुदेवः ॥

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானியாக இருப்பவன், அமூட பாவத்தினால் நாசமடைகின்றான். அச்ரத்தையினால் ப்ரதிபத்தமான புத்தியை உடையவன் மிகுந்த கஷ்ட்டத்தை அடைகிறான். ஆனால் ஸம்சயமுடையவனே எல்லாவற்றிர்க்கும் மேலான கஷ்ட்டத்தை அடைகின்றதால் எப்போதும் துக்கமுடையவன் என்று பகவானால் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** முக்திக்கு என்ன உபாயம் என்பதை அறியாதவனே அஞ்ஞன். அவன் ஸம்ஸாரத்திலேயே உழன்று கஷ்ட்டத்தை அடைகின்றான். அஞ்ஞனாக இருந்தாலும் ச்ரத்தையுடையவனாக இருப்பானாகில், இந்த ஸம்ஸாரமென்ற துக்கத்தை போக்குவதற்கு உபாயம் என்ன? என்பதை பெரியோர்களிடம் கேட்டறிந்து, குருவைத்தேடி, அவரை அடைந்து, அவரிடமிருந்து உபதேசங்களைப்பெற்று, அதன்மூலம் துக்கநிவர்த்தியை அடைகிறான். இந்த விதமின்றி, அச்ரத்தையுடையவனாகவும், அஞ்ஞனாகவும் இருப்பானாகில், அவனுடையகஷ்ட்டம் அளவிடமுடியாது என்று இந்தவிஷயத்தைப்பற்றி கீதையில் பகவானாலும் சொல்லப் பட்டிருக்கிறது. "அஞ்ஞச்ச, அச்ரத்ததானச்ச ஸம்சயாத்மா வினச்யதி" என்று கீதாவசனம் தெரிவிக்கின்றது. அதாவது, அஞ்ஞனாகவும் ச்ரத்தை இல்லாதவனாகவும் இருப்பானாகில், அவன் சாஸ்திரார்த்தம் என்னவென்று ஸந்தேகமின்றி அறிந்துகொள்ளமுடியாது. அதனால் சாஸ்திர விஹிதமான கர்மாவிலும், அதன் பலன்களிலும் ஸந்தேகம் ஏற்படுவதுடன், ச்ரத்தை இல்லாததால் க்ர்மாக்களையும் விட்டுவிடுகிறான். அதேபோல் வேதாந்த சாஸ்திரார்த்தங்களை அறிந்து ஆத்மஞானத்தையும் அடையமுடியாது என்பதால் உபயப்ரஷ்ட்டனாக ஆகிறான். அதனால் மிகுந்த கஷ்ட்டங்களை அடைகின்றான் என்று தெரிவிக்கின்றது. ஆகவே அஞ்ஞனைவிட அச்ரத்தையுடையவன் விஷயங்களை ஒரளவு அறிந்தவனாக இருந்தும் அதில் விஸ்வாஸமில்லாத காரணத்தினால் புருஷார்த்தத்தை அடையமுடியாது. அதனால் எப்போதும் கலக்க முடையவனாகவே இருக்கின்றான் என்று தெரிவிக்கின்றது. ஆகவே, இப்பேர்ப்பட்டவன் ஸ்வரூப ப்ராப்தி இல்லாததால் நாசத்தை அடைகின்றான்.

**269. அவதாரிகை :**

இவ்விதம் வேத வாக்யங்களும், ஸ்ம்ருதிவாக்யங்களும் ஸ்பஷ்ட்டமாக உபதேசிக்கின்றபோது, எப்படி இந்த விஷயத்தில் அச்ரத்தையோ, ஸம்சயமோ ஏற்படமுடியும்? என்று ஆச்சர்யம் அடைகின்ற சிஷ்யனைப்பார்த்து, ஆசார்யனனவர், இந்த விஷயத்தைப்பற்றி மேலும் விளக்குகின்ருர்.

**ச்லோகம் :**

रूपं तावकमुज्झितद्वयमभूदद्वैतमेवाञ्जसा तच्चाद्वैतमपास्य मोहजनितं पारोक्ष्यमात्मा ह्यभूत् ।
एवं वेदशिरःपदान्वयवशादेकत्वमेकान्ततः सिद्धं प्रत्यगनन्तयोरिति तव श्रेयःसमाप्तिं गतम् ॥

**ச்லோகார்த்தம் :** த்வைதமற்ற அத்வைத ஸ்வரூபமே, உன் உண்மையான ஸ்வரூபம் என்ருலும், அஜ்ஞானத்தினுல் பாரோக்ஷ்யமாகவே அறியப்படுகிறது. வேதாந்தவாக்யங்களிலுள்ள பதங்களின் அன்வயத்தினுல், அறியப்படும் பாரோக்ஷ்யம் நீங்கி, ப்ரத்யகாத்மாவே பரமாத்மா என்ற பரிபூர்ணமான ஐக்யஞானம் ஏற்படுகின்றதால், மோக்ஷமென்ற புருஷார்த்தம் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யகாத்மாவே அத்வயமானப்ரஹ்ம ஸ்வரூபம் என்றும், ஸத்வயத்வம் பாரோக்ஷ்யத்வம் என்பதெல்லாம் உபாதியினுல் ஏற்பட்டது என்றும் சாஸ்த்ரார்த்த விசாரணையினுல் நன்கு அறியப்படுமானுல், தத்த்வம் பதார்த்தங்களின் சோதனையினுல் லக்ஷ்யார்த்த ஸ்வரூபம் அறியப்படுகிறது. இவ்விதம் அகண்டார்த்தபோதம் ஏற்படுகின்றபோது, தத்–த்வம் பதார்த்தங்களின் ஸ்வாபாவிகமான ஏகத்வம் என்பது சித்திக்கின்றது. இதுவே, ச்ரேயஸ்; இதுவே புருஷார்த்தம். இந்தவிதம் கார்யகாரணபாவமற்ற ஸ்வரூபஞானம் ஏற்படுமானுல், அதுவே க்ருதக்ருத்யதை என்று சொல்லப்படுகிறது. அதன் பிறகு செய்ய வேண்டியது என்பதோ அறியவேண்டியது என்பதோ எதுவும் இல்லை. ஆத்மலாபத்திற்கு மேலான லாபம் என்பது எள்ளவும் எதுவுமில்லை என்றே சாஸ்திரம் தெரிவிக்கின்றது.

**270. அவதாரிகை :**

இதுவரை வேதாந்தவாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்பட்டது. இந்தவிதம் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்ற விஷயத்தை, வைசேஷிகர்களாலும் (நையாயிகர்கள்) ஒத்துக்கொள்ளப்படுகின்றது. அதனுல் இதில் எவ்வித அஸம்பாவனையும் ஏற்படுவதற்கு இடமில்லையென்று மேலே சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

सम्बन्धः समवाय इत्यपि पदे वैशेषिकोच्चरिते नाखण्डव्यतिरिक्तवस्तु वदितुं शक्तोऽनवस्थाभयात् ।
पञ्चानां समवायितेति वचनव्याघातभीतेरपि सम्बन्धान्तरमस्य नाभिमनुते वैशेषिकः कातरः ॥

**ச்லோகார்த்தம் :** வைசேஷிகர்களால் 'ஸமவாய: ஸம்பந்த:' என்ற வாக்யப்ரயோகம் செய்கின்றபோது, அனவஸ்த்தா பயத்தினுல் அகண்டார்த்தத்தையே ஒத்துக்கொள்ளவேண்டியதாக இருக்கின்றது. ஐந்து பதார்த்தங்களுக்கே ஸமவாயம் ஏற்படும் (இருக்கின்றது) என்ற வசனத்திற்கு விரோதம் ஏற்படும் என்ற பயத்தினுல் வேறு எந்த ஸம்பந்தத்தையும் வைசேஷிகர்கள் ஒத்துக்கொள்வதில்லை.

**வ்யாக்யானம் :** 'ஸமவாய: ஸம்பந்த:' என்று வைசேஷிகனுல் சொல்லப்படும் வாக்யம் அகண்டார்த்தத்தையே தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இதையன்றி வேறு எந்த முறையிலும் அந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யமுடியாது. உதாரணமாக, நூல் என்பதும் அதன் கலர் என்பதும் பிரிக்கமுடியாமல் அவை இரண்டிற்கும் ஒரு ஸம்பந்தம் இருக்கின்றதென்றும் அதுவே, ஸமவாயஸம்பந்தம் என்றும் வைசேஷிகர்களால் சொல்லப்படுகிறது. மேலும், த்ரவ்யம், குணம், கர்மா, ஸாமான்யம், விசேஷம் என்ற இந்த

ஐந்துக்கு மட்டுமே ஸமவாய ஸம்பந்தம் இருக்கின்றது என்று ப்ரஸஸ்த்தபாதர் என்ற ந்யாய சித்தாந்தகாரரால் சொல்லப்படுகிறது. அதாவது, ஸமவாயஸமவாயி ஸம்பந்தம் என்பது, அவயவ அவயவினோ:; குணகுணினோ:; க்ரியா க்ரியாவத்வயோ:; ஜாதிவ்யக்தியோ:வைசேஷிக நித்ய பதார்த்தயோ: என்ற இந்த ஐந்து பதார்த்தங்களுக்கு மட்டுமே ஸம்பந்தத்தை ஒத்துக் கொள்கிறார்கள். ஆகவே, ஸமவாயஸம்பந்த: என்று சொல்லப்படுமானால், சொல்லப்படும் ஸம்பந்தம், எந்த ஸம்பந்தத்தினால் ஸமவாயத்தில் ஏற்படுகிறது? என்று கேட்டால் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. ஸ்வரூபஸம்பந்தம் என்று சொல்லப்படுமானால், அந்த ஸம்பந்தம் ஸ்வரூபத்தையன்றிவேறாக இல்லாததால், இந்த வாக்யம் அகண்டார்த்தத்தை தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படாமல், ஸமவாயம் என்பதற்கும் ஸம்பந்தம் என்பதற்கும் மத்தியில் ஸம்யோகம் என்ற ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுமானால், அதுவும் பொருந்தாது. ஏனெனில் இரண்டும்த்ரவ்யமாக இருந்தால் தான் ஸம்யோகஸம்பந்தம் ஏற்படும். ஸமவாயம் என்பதோ, ஸம்யோகம் என்பதோ இரண்டும் த்ரவ்யமுமில்லை, குணமுமில்லை, கர்மாவுமில்லை, ஸாமான்யமாகவோ, அல்லது விசேஷ்யமாகவோ இல்லை. இவ்விதம் ஸமவாயபதார்த்தத்திற்கு, ஸம்பந்த பதத்துடன் ஸம்பந்தம் சொல்லப்படுமானால் வைசேஷிக சித்தாந்தத்திற்கே ஹானி ஏற்படும்.

**271. அவதாரிகை :**

இதேபோல், கர்மமீமாம்ஸகர்களான ப்ராபகரர்களும், வாக்யத்தினால், அகண்டார்த்தவஸ்து ஞானம் ஏற்படுகிறதென்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

**ச்லோகம் :**

शब्दो गकार इति लौकिकमस्ति वाक्यं विस्पष्टमस्ति च पदद्वयमत्र वाक्ये ।
प्राभाकरे च समये न गकारमात्रादन्यत्पदद्वयनिगद्यमभीष्टमस्मिन् ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில், சப்த: ககார: என்ற வாக்யப்ரயோகம் செய்யப்படுகிறது. இதில் இரண்டு பதங்கள் இருக்கின்றதென்பது ஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. இந்த வாக்யத்தினால், 'ககாரம்' என்ற அகண்டார்த்தத்தையன்றி வேறாக எந்த அர்த்தமும், அந்த இரண்டு பதங்களினால் அறியப்படவில்லை என்ற விஷயம், ப்ராபகர்களாலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ககார: சப்த:' என்ற வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களுக்கு, ககாரம் என்ற ஸ்வரூபத்தையன்றி வேறு எந்த ஒரு அர்த்தமும் இருப்பதாகச்சொல்லமுடியாது. அதனால் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்பதை ப்ராபாகரர்களாலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது.

**272. அவதாரிகை :**

'சப்த: ககார:' என்ற வாக்யத்திலுள்ள, சப்தம், ககாரம், என்ற இரண்டு பதங்களும், வெவ்வேறு அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். எப்படியெனில், சப்தம் என்பது சப்தத்வம் என்ற ஜாதியையும், ககாரம் என்பது அக்ஷர விசேஷத்தையும் குறிப்பிடுகின்றதால், இந்தவாக்யம் ஸம்ஸ்ருஷ்டார்த்தபோதகம் என்றே சொல்லவேண்டும். (ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்பட்ட அர்த்தத்தையே தெரிவிக்கின்றதால்) இந்த வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

शब्दत्वजातिवचनो न हि शब्दशब्दः श्रोत्रोपलम्भनतया तु निबन्धनेन ।
वर्णान्ब्रवीति न हि जातिरिहाभ्युपेता साक्षाद्गकारमयमाह गकारशब्दः ॥

**ச்லோகார்த்தம் :** சபதம் என்ற பதம், சப்தத்வ ஜாதியை தெரிவிப்பதில்லே. சப்தம் என்பது ச்ரோத்ரக்ராஹ்யத்வ உபாதியைக்கொண்டு, வர்ணங்களேயே (அக்ஷரங்களேயே) தெரிவிக்கின்றது. இந்த இடத்தில் ஜாதியை ஒத்துக்கொள்வதில்லே. ககாரசப்தம், ககாரம் என்பதை நேரிடையாகவே தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'சப்த: ககார:' என்ற இரண்டு பதங்களுடைய வாக்யத்திஞல், ககாரம் என்பதற்கு என்ன அர்த்தமோ அதுவேதான் சப்தம் என்பதற்கும் அர்த்தமாக அறியப்படுகிறது. ஆகையால் அகண்டார்த்தம் என்றே ப்ராபரகரராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதஞல் ககாரம் என்பது அக்ஷரத்தையும் சப்தம் என்பது சப்தத்வம் என்ற ஜாதியையும் குறிக்கின்றது என்று சொல்லமுடியாது. எந்த சப்தமாஞலும், அதில் ச்ரோத்ரத்திஞல் க்ரஹிக்கப்படும் தன்மை இருக்கின்றது. ஆகவே அக்ஷரங்களிலும் ச்ரோத்ர க்ராஹ்யத்வம் என்ற தன்மை இருக்கின்றது என்று சப்த சப்தம் தெரிவிக்கின்றது. ககாரம் என்பதும் அக்ஷரமாக இருக்கின்றதால், இவ்விதம் ச்ரோத்ரக்ராஹ்யத்வம் என்பது அக்ஷரத்திற்கு தடஸ்த்த உபாதியாக இருக்கிறதேயன்றி அக்ஷரத்திற்கு விசேஷணமாகஇல்லே. அக்ஷரத்திலுள்ள தர்மத்தை போதிக்காததால், ச்ரோத்ர க்ராஹ்யம் என்ற உபாதியிஞல் சப்தம் என்ற சப்தமும், ககாரம் என்ற அக்ஷரத்தையே போதிக்கின்றது. அதையன்றி அக்ஷரம் என்பது ஒன்று, சப்தம் என்பது ஒன்று என்ற வேறுபாடு இல்லாததால், இரண்டு சப்தமும் சேர்ந்து 'சப்த: ககார:' என்று 'ககாரம்' என்ற அக்ஷரத்தையே போதிக்கின்றது. அதஞல் ப்ராபாகரர்களும் இதை அகண்டார்த்தம் என்றே ஒப்புக் கொள்ளவேண்டும். ஆகவே, ச்ரோத்ரக்ராஹ்யத்வம் என்ற உபாதியிஞல், ஸர்வ அக்ஷரங்களேயும் சப்தம் என்றே சொல்லலாம் என்பதால், சப்தஜாதியை கல்பிக்கவேண்டிய அவஸ்யமில்லே. அதஞல்தான் சப்தத்வஜாதியையும், கத்வஜாதியென்பதையும் ப்ராபகரர்கள் ஒத்துக்கொள் வதில்லை. ஆகவே, 'சப்த:ககார' என்பதிலுள்ள இரண்டு பதங்களும் 'ககாரம்' என்ற ஒரே அக்ஷரமாத்ரத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**273. அவதாரிகை :**

ஆகையால், வாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படமுடியுமா? என்று விவாதம் செய்வதற்கு யாராலும்முடியாது.

**ச்லோகம் :**

तस्मादखण्डविषये वचने विवादं प्राभाकराः परिहरन्तु न चेदशक्यम् ।
निर्वोढुमेतदिह वाक्यमितोऽन्यथा चेदस्यार्थकल्पनमभीप्सितमिष्टहानिः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகவே, அகண்டார்த்தபோதம் ஏற்படும் விஷயத்தில், ப்ராபாகார்கள் வாதம் செய்வதை விட்டுவிடவேண்டும். இல்லேயெனில், 'சப்த: ககார:' என்ற வாக்யத்திற்கு அவர்களால் அர்த்தம் சொல்வதற்கேமுடியாது. வேறுவிதமாக அர்த்தம் செய்யப்படுமாஞல், அவர்களுடைய சித்தாந்தத்திற்கேஹானி ஏற்படும்.

**வ்யாக்யானம் :** இவ்விதம் வாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது என்ற விஷயத்தை ப்ராபாகரர்களும், நையாயிகர்களும் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டுமேயன்றி, வேறு எந்தமார்க்கமும்கிடையாது. ஏனெனில், 'ஸமவாய : ஸம்பந்த :' என்ற வாக்யத்திஞலும், 'சப்த : ககார :' என்ற வாக்யத்திஞலும் அகண்டார்த்தமே (ஏகார்த்தமே) போதிக்கப்படுவதாகச் சொல்லாவிடில், 'சப்தம்' என்பது ஜாதியல்ல என்று சொல்லப்படும் அவர்கள்

சித்தாந்தத்திற்குஹானி ஏற்படும். ஆகவே, அஸம்ஸ்ருஷ்டார்த்தமான, அகண்டார்த்தமே போதிக்கப்படுவதாகச் சொல்லவேண்டும்.

**274. அவதாரிகை :**

வ்யாகரண சாஸ்திராசார்யரான பாணினி மஹரிஷியும், வாக்யத்திலிருந்து அகண் டார்த்தபோதம் ஏற்படுகிறது. என்றே தெரிவிக்கின்ருர்.

**ச்லோகம் :**

प्रातिपदिकान्यनतिरिक्तविषयाणि प्राह भगवान्प्रथमशब्दितविभक्त्या ।
पाणिनिरतः सकलतर्कसमयज्ञो वष्टि वचसोरनतिरिक्तविषयत्वम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரதமாவிபக்தியானது, ப்ராதிபதிகத்திலிருந்து வேருன அர்த்தத்தை தெரிவிப்பதில்லை என்று பகவான் பாணினியிளுலும் தெரிவிக்கப்படுகிறது. ஆகவே, ஸகல தர்க்கசாஸ்திரங்களையும் அறிந்தபாணினியும், பதங்களில் அகண்டார்த்தம் ஸம்பவிக்கிறது என்பதை ஒத்துக்கொள்கிருர்.

**வ்யாக்யானம் :** ப்ராதிபதிகார்த்தங்கள் எல்லாம், ப்ரதமாவிபக்தியினுல் எந்த அர்த்தம் போதிக்கப்படுகின்றதோ, அதேஅர்த்தத்தைத்தான் போதிக்கின்றதேயன்றி வேறு அர்த்தத்தை போதிக்கவில்லை என்று ஸகலசாஸ்திரங்களிலும் விற்பன்னரான பாணினி மஹரிக்ஷியினுலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. உதாரணமாக 'ராம:' என்ற பதமானது ஒரு பதமல்ல. 'ராம' என்பது ஒருபதம். ': =ஹ' என்பது மற்ருெருபதம். இந்த இரண்டு பதங்களும் 'ராமன்' என்ற ஒரே அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதாவது, 'ராம' என்ற ப்ராதிபதிகார்த்திளுலும், ': ஹ' என்பது ப்ரதமாவிபக்தியினுலும் சொல்லப்படுகிறது. இந்த விதம் ப்ரக்ருதி, ப்ரத்யயம் என்ற இரண்டிற்கும் ஒரே அர்த்தம்தான் என்பதை ஸகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து யுக்தியினுலும் நன்கு விஜாரித்து, அறிந்தபாணினி மஹரிஷி யினுலேயே ஒத்துக்கொள்ளப்பட்ட விஷயமாக இருப்பதால் ஸர்வவாதிகளும் இதை ஒத்துக் கொள்ளவேண்டும்.

**275. அவதாரிகை :**

அகண்டார்த்தத்தை போதிக்கக்கூடிய வாக்யம் என்பதே லோகத்தில் ப்ரசித்தமாக அறியப்படவில்லையே? என்று சொல்லப்படுவதும் சரியல்ல. லோகத்திலும் இவ்வித ப்ரயோகம் இருக்கிறது என்பதை மேலே சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

इयं घटव्यक्तिरितीदृशेषु च प्रसिद्धमेवैकरसार्थगोचरम् ।
पदद्वयं लोकवचःसु तेन च प्रशस्यते नात्र विवादसंग्रहः ॥

**ச்லோகார்த்தம் :** 'இயம் கடவ்யக்தி:' என்பதுபோன்ற லௌகிகவாக்யங்களிலும், இரண்டுபதங்களும் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்பது ப்ரசித்தம். ஆகவே, வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்பதில் எவ்வித விவாதத்திற்கும் இடமே இல்லை.

**வ்யாக்யானம் :** 'இயம் கடவ்யக்தி:' என்ற வாக்யத்திலுள்ள இயம் என்ற சப்தமும், கடம் என்ற சப்தமும், ஒரே கடவ்யக்தியைத்தான் போதிக்கின்றது. இயம் என்ற சப்தமானது ஸர்வநாமா. அதாவது இது என்று எந்த வஸ்து குறிப்பிடப்படுகிறதோ, அந்த வஸ்துவின் ஆகாரம் புத்தியில் இருக்கிறது. புத்தியில் இருக்கின்ற அந்த வ்யக்தியைத்தான் 'இயம்' என்ற சப்தம் தெரிவிக்கின்றது. ஆகவே இது கடவ்யக்தி என்று ஸாமானுதிகரண்யேன

சொல்லப்படும் இந்த வாக்யத்திலுள்ள 'இது' என்ற பதமும், கடம் என்ற பதமும், வ்யக்தி என்ற பதமும் சேர்ந்து, ஒரே கடவ்யக்தியைத்தான் தெரிவிக்கின்றது. இந்தவிதம் லோகவ்யவகாரத்திலும், பதங்கள் இரண்டாக இருந்தாலும் ஒரே அர்த்தத்தையே போதிக்கின்றது என்று அறியப்படுகிறது. ஆகையால் லௌகிக வாக்யமோ, வேதவாக்யமோ எதுவாக இருந்தாலும், வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்பது இதனால் சித்திக்கின்றது.

**276. அவதாரிகை :**

ப்ரஹ்மமென்பது, சப்தம் என்ற ஒரே ப்ரமாணத்தினால்தான் அறியப்படும் என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் ப்ரஹ்மமென்பது சித்தவஸ்துவாக இருப்பதால், பலம் (பழம்) போல், ப்ரமாணாந்தர விஷயம் என்றே சொல்லவேண்டும் என்று அனுமானத்தினால் சாதிக்கலாம். ஆகவே, வேறு ப்ரமாணங்களுக்கும் விஷயமாகிறது என்றே சொல்லலாம்.

**சித்தா :** இந்த அனுமானம் சரியல்ல. இதில் ஸதர்மகத்வம் என்ற உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

न च प्रमाणान्तरयोग्यतायां प्रयोजकं स्यात्परिनिष्ठितत्वम् ।
यतः प्रमाणान्तरयोग्यतायां प्रयोजकं रूपरसादिमत्वम् ॥

**ச்லோகார்த்தம் :** சித்தத்வம் என்பது ப்ரமாணாந்தர விஷயமாக ஆவதற்கு காரணமாக ஆகாது. ஏனெனில், ரூபம், ரஸம் என்ற தர்மங்களுடன் கூடினது எதுவோ அதுவே ப்ரமாணாந்தரவிஷயமாக ஆகமுடியும். ஆகவே ப்ரமாணாந்தர விஷயமாவதற்கு ஸதர்மகத்வமே காரணம்.

**வ்யாக்யானம் :** இதுவரை வேதாந்தவாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கலாம் என்று சித்தம் செய்யப்பட்டது. இப்போது, ப்ரஹ்மமென்பது சித்தவஸ்துவாக இருப்பதால், வேறு ப்ரமாணங்களினாலும் அறியப்படலாம். அதனால் சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணம் என்று சொல்ல முடியாது என்றும், சாஸ்திரம் என்பது க்ரியாரூபமாக இருப்பதையே தெரிவிக்கவேண்டும் அதனால் சித்தவஸ்துவான ப்ரஹ்மமென்பது சாஸ்திரத்தில் அனுவாதம் செய்யப்படுகிறதேயன்றி, சாஸ்திரம் அபூர்வமாக போதிக்கவில்லை. அதனால் ப்ரஹ்ம விஷயத்தில் சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணம் என்று சொல்லப்படுவது சரியல்ல என்பதை, அனுமானத்தைக்கொண்டே சாதிக்கின்றேன் 'ப்ரஹ்மம் மானாந்தரயோக்யம், சித்தத்வாத் பலவத்' என்று சாதிக்கலாம் என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில் இந்த அனுமானத்தில் 'ஸதர்மகத்வம்' என்ற உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில் சித்தவஸ்துவான பலம் (பழம்) முதலானவைகள், ரூபம், ரஸம் முதலான அனேக தர்மங்களுடன்கூடியதாக இருக்கிறது. அதனால் ப்ரமாணாந்தரத்தினால் அறியமுடியும். ஆனால் ப்ரஹ்மமென்பது நிர்தர்மகம். நிர்தர்மகம் என்ற காரணத்தினாலேயே, பழம்போல மானாந்தர கோசரம் என்று சொல்லமுடியாது. பலம் (பழம்) என்பது சக்ஷுஸ் முதலான ப்ரமாணங்களினால் க்ரஹிக்கக்கூடிய ரூபம் ரஸம் முதலான தர்மங்களுடன் கூடியதாக இருக்கிறது. ஆகவே, ப்ரஹ்மமென்பது பழம் போல சித்தவஸ்துவாக இருந்தபோதிலும், ஸதர்மகமாக இல்லாததால், மானாந்தர விஷயம் என்று சொல்லமுடியாது. 'யத்ரயத்ரசித்தத்வம், தத்ரதத்ரமானாந்தர விஷயத்வம்' என்று சொல்லமுடியாது.

ஆகவே, சித்த வஸ்துவாக இருந்தாலும் நிர்தர்மகமான ப்ரஹ்மமென்பது ப்ரமாணாந்தர விஷயமாக ஆகாது. அதனால் சொல்லப்பட்ட அனுமானத்தில் 'ஸதர்மகத்வம்' என்ற உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றதால் இந்த அனுமானத்தை ப்ரமாணம் என்று ஒத்துக் கொள்ளமுடியாது.

**277. அவதாரிகை :**

உன்னால் சொல்லப்பட்ட, அனுமானத்தில் ஸாதன அவ்யாபகத்வம் இல்லையென்று சொல்லமுடியாது, ஏனெனில் ப்ரஹ்மமென்பது ஸதர்மகம் என்று சொல்லமுடியாததால் ஸாதனவ்யாபகத்வமில்லை. அதனால் மானாந்தரவேத்யத்வம் இருப்பதாகச்சொல்லமுடியாது. ஆகவே சாஸ்திரம் ஒன்றே, வேறு ப்ரமாணத்தின் அபேக்ஷைஇன்றி ப்ரஹமத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

ततस्तु रूपादिविहीनरूपे प्रमान्तरागोचरचित्स्वरूपे ।
वचः प्रमाणान्तरनिःस्पृहं सत् प्रमाणमत्रात्मनि निर्विवादम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால், ரூபம், ரஸம் முதலான தர்மங்கள் அற்றதும், ப்ரமாணாந்தர அகோசரமாக இருப்பதுமான ஆத்மவிஷயத்தில், (சப்தம் என்ற) உபநிஷத் வாக்யங்களே, வேறு எந்தப்ரமாணங்களின் அபேக்ஷைஇல்லாமல், ஸந்தேகமற்ற ப்ரமாணமாகஆகிறது.

**வ்யாக்யானம் :** உன்னால் சொல்லப்பட்ட அனுமானத்தில் ஸாதனவ்யாபகத்வமில்லை. அதாவது சித்தவஸ்துவான எந்தப்ரஹ்மத்தை மானாந்தர வேத்யம் என்று சாதிப்பதற்காக, எந்த சாதனம் சொல்லப்பட்டதோ, அந்த சாதனத்தோடு கூடிய பலம் என்பதில் உள்ள தர்மங்கள் சாத்யமான (சாதிக்கப்படும்) ப்ரஹ்மத்தில் இல்லை. நிர்தர்மகமான வஸ்துவை, ஸதர்மகமான வஸ்துவை உதாரணமாகக்கொண்டு எப்படி சாதிக்கமுடியும்? ஆத்மவஸ்து அசப்தம், அஸ்பர்ஸம், அரூபம், அரஸம், அகந்தம் என்று தெரிவிக்கின்றதால் எந்த ப்ரமாணத்திற்கும் ஆத்மாவிஷயமாகமுடியாது. சக்ஷுராதிப்ரமாணங்கள் ரூபாதிதர்மங்களுடன் கூடிய விஷயங்களையே தெரிவிக்குமேயன்றி ரூபாதி ரஹிதமான, நிர்தர்மகமான ஆத்ம வஸ்துவை தெரிவிக்கமுடியாது. ஆகையால் ஸதர்மகத்வம் என்பது இந்த அனுமானத்தில் உபாதி என்ற தோஷமுடையதாக இருக்கின்றதால் இந்த அனுமானம் ப்ரமாணமில்லை.

**பூர்வ :** ஸதர்மகமாக இருந்தால்தான் மானாந்தரயோக்யமாக ஆகும் என்று சொல்வது சரியல்ல. ஏனெனில்,- காலம், ஆகாசம், என்பதெல்லாம் நிர்தர்மகமாக இருந்தபோதிலும் மானாந்தர யோக்யமாகத்தானே இருக்கிறது? ஆகவே, உபாதி என்பதில் ஸாத்யவ்யாபகத்வம் என்பது இல்லை. அதாவது ஸதர்மகமாக இருந்தால்தான் மானாந்தரவேத்யமாக இருக்கும் என்று (ஸதர்மகம் என்ற காரணம்) சொல்லமுடியாது. ஆகையால் ஸாத்ய அவ்யாபகத்வமே இருக்கிறது. ஸாத்யவ்யாபகத்வமில்லை. அதனால் உபாதிதோஷம் இருப்பதாக சொல்லமுடியாது.

**சித்தா :** காலம் என்பதிலும், ஆகாசம் என்பதிலும், காலத்வம் முதலான விசேஷ குணங்களுடன் கூடினதாகவே இருக்கின்றது. ரூபமற்றதாக இருக்கிறதென்பதற்காக நிர்தர்மகம் என்று சொல்லமுடியாது. காலம் ஆகாசம் என்பதெல்லாம் நிர்தர்மகமாக இருக்குமானால் அவை கனாயும் ஸத்யம் என்றே சொல்லநேரிடும். ஆகையால், யத்ரயத்ர மானாந்தர விஷயத்வம், தத்ரதத்ர ஸதர்மகத்வம் என்று அறியப்படுகின்றதால் ஸதர்மகத்வம் என்பது ஸாத்யவ்யாபகம் என்றே சொல்லவேண்டும். அதனால் இந்த அனுமானத்தின் உபாதிதோஷம் இருக்கின்றது.

**278. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்பட்ட தோஷத்தையன்றி, மேலும் ஒரு உபாதி தோஷம் ஸம்ப விக்கின்றது.

**ச்லோகம் :**

लोकप्रसिद्धपदगोचरतानिमित्तमन्यप्रमाणविषयत्वमिह प्रसिद्धम् ।
लोकप्रसिद्धपदगोचरता न चास्मिन् ब्रह्मात्मनीति च तदत्र निवारणीयम् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த வஸ்துவானது லௌகிக பதங்களுக்கு விஷயமாக இருக்கின்றதோ அந்த வஸ்துவே ப்ரமாணாந்தர விஷயம், என்பது லோகப்ரசித்தம். ஆனால் ப்ரஹ்மாத்ம வஸ்து என்பது லௌகிகபதங்களுக்கு விஷயமாக இல்லை. ஆகையால் ப்ரமாணாந்தர விஷயத்வம் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** ஒரு வஸ்து, லோகப்ரசித்தமான சப்தத்தினால், (பதத்தினால்) அதன் அர்த்தம் தெரிவிக்கக்கூடியதாக இருந்தால்தான் அதை மானாந்தர கோசரம் என்று சொல்லலாம். ப்ரஹ்மமென்பது அவ்விதம் லோகப்ரசித்தமான வாக்யங்களால் ஸ்வதந்தரமாக அதன் அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகையால் ப்ரஹ்மமென்பது லௌகிக சப்த விஷயமல்ல. அலௌகிகமான ப்ரஹ்மவிஷயத்தில் வேதாந்தம், ஒன்றேப்ரமாணமாக ஆகிறது. ஆகவே, இந்த இடத்தில் "லௌகிக பதவாச்யத்வம்" என்ற உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது.

**279. அவதாரிகை :**

ஸர்வம்வாக்யம் க்ரியாபரம் என்றும் அந்த வாக்யங்கள்தான் ப்ரமாணம் என்றும் சித்த வஸ்துவை போதிக்கின்ற வாக்யங்கள் எல்லாம் அறியப்பட்ட விஷயத்தையே அனுவாதம் செய் கின்றதால் அப்ரமாணம் என்று சொல்லப்படும் தோஷம் உன்னுடைய மதத்தில் தான் ஸம்ப விக்கின்றது (வேதாந்தபக்ஷத்தில் இந்த தோஷம் ஸம்பவிக்காது).

**ச்லோகம் :**

लोकप्रयुक्तपदगोचरताऽस्ति कार्ये तेनास्तु कार्यपरवाक्यमशेषतस्ते ।
मानान्तरेषु परतन्त्रतयाऽप्रमाणं स्वार्थे न दूषणमिदं श्रुतिमस्तकेषु ॥

**ச்லோகார்த்தம் :** கார்யம் என்பது லௌகிக வாக்யங்களுக்கு விஷயமாக இருக்கிறது. ஆகையால் கார்யபரமான வாக்யங்களெல்லாம் ப்ரமாணாந்தர விஷயமாக இருக்கின்றதால் ஸ்வார்த்தம் என்று சொல்லுமிடத்து அதாவது ஸித்தாந்தத்தில் அப்ரமாணம் என்றே சொல்லவேண்டும். இந்ததோஷம் வேதாந்த சித்தாந்தத்தில் ஸம்பவிக்காது.

**வ்யாக்யானம் :** நியோகம் என்ற ஏவலையே, லிங்முதலான பதங்களுக்கு அர்த்தமாகச் சொல்லப்படுகிறது. அதாவது, இதைச்செய் என்று ஏவுகின்றதே லிஙர்த்தம் என்று லோக ப்ரசித்தமாக இருக்கின்றது. அதையே வேதவாக்யங்களும் போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுவதால், ஸர்வவேத வாக்யங்களும் வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட அர்த்தத்தையே போதிக்கின்றது என்ற தன்மை உன்னுடையபக்ஷத்தில் தான் ஸம்பவிக்கின்றது. வேதாந்தவாக்யம் க்ரியையை போதிக்காததால் இந்த தோஷம் ஸம்பவிக்காது. ஏனெனில் லிங் முதலான பதங்கள்போல இதைச் செய், இதைக்கொடு, கொண்டுபோ, கொண்டுவா, என்பது போன்ற லோகப்ரசித்தமான பதங்களாக வேதாந்தவாக்யத்திலுள்ள 'ப்ரஹ்ம' முதலான பதங்கள் லோகப்ரசித்தமாக இல்லை. அதனால் ப்ரமாணாந்தர விஷயத்தை, வேதம் அனுவாதம் செய்கின்றது என்று சொல்லப்படுமானால், அப்ரமாணம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**280. அவதாரிகை :**

க்ரியாபதம் இல்லாத வாக்யம் என்பது வாக்யமாகவே ஆகாது என்று கீழே ஆக்ஷேபம் செய்யப்பட்டது. அவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல என்று இங்கு நிராகரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

न च क्रियाकारितसंहतीनि पदानि लोके नियमेन वक्तुम् ।
समीहते पक्वमतिः पदानां क्रियां विनाऽप्यन्वयदर्शनेन ॥

**ச்லோகார்த்தம் :** க்ரியாபதத்தினுல்தான், பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயிக்கின்றது என்று நியமம் சொல்லமுடியாது. ஆகவே பக்குவமதியை உடையவர்கள் இதை விரும்புவதில்லை. ஏனெனில் க்ரியாபதம் இல்லாமலேயே பதங்களுக்கு அன்வயம் ஏற்படுகிறது என்பது அனுபவத்தினுல் அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாக்யம் என்பது, க்ரியாபதம் இல்லாமல ஒன்றுடன் ஒன்று சேர்ந்து அர்த்தத்தை போதிக்கமுடியாது என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யங்களும் ஒன்றுடன் ஒன்று அன்வயித்து அர்த்தத்தை போதிக்கின்றதால் க்ரியாபதத்தைமுக்யமாகக் கொண்டே வாக்யம் அர்த்த போதத்தை உண்டுபண்ணுகின்றது என்ற நியமம் சொல்லமுடியாது.

**281. அவதாரிகை :**

உதாகரணத்தின்மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

महीभुजोऽयं पुरुषो मनस्वी वनस्पतेस्तत्फलमित्यपीह ।
क्रियां विनाऽप्यन्वयवन्ति लोके पदानि दृष्टानि बहूनि वक्तुः ॥

**ச்லோகார்த்தம் :** 'இந்த ஸாத்விகமான புருஷன் ராஜாவைச் சேர்ந்தவன்' என்றும் 'அந்தபழமானது இந்த மரத்தினுடையது' என்றும் வக்தாவினுல் ப்ரயோகிக்கப்படும் பலவித் வாக்யங்கள், க்ரியாபதம் இல்லாமலேயே அன்வயிக்கின்றதென்பது அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** க்ரியாபதம் இல்லாமலேயே ஒரு வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அன்வயம் ஏற்பட்டு அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்பதை உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. "ஸாத்விகமான இந்த புருஷன் ராஜாவைச்சேர்ந்தவன்" என்ற வாக்யமும், 'இந்த பழங்கள் இந்த மரத்தினுடையது' என்ற வாக்யமும் எந்த விதமான க்ரியாபதமும் இல்லாமலேயே அதன் அர்த்தத்தை போதிக்கின்றது. இந்த வாக்யங்கள், ராஜாவிற்கும் அந்த புருஷனுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் மரத்திற்கும் அதன் பழத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தையும்தான் தெரிவிக்கின்றது என்றுலும் வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுகின்றதால் க்ரியாபதம் இருந்தால்தான் வாக்யம் அர்த்த போதகமாகும் என்று சொல்வதுசரியல்ல.

**282. அவதாரிகை :**

வாக்யங்களில் க்ரியாபதம் அவஸ்யம் இருக்கவேண்டுமென்று பிடிவாதகமாகச் சொல்லப்படுமானுல் வேதாந்தவாக்யத்திலும் க்ரியாபதம் இருப்பதாகச் சொல்லலாம்.

**ச்லோகம் :**

क्रियापदं वेदशिरःस्वपीष्यते विवक्षितार्थानुगुणं तु तन्मतम् ।
विवक्षितार्थप्रतिपत्तिघाति तु क्रियापदं स्वीकृतमप्यनर्थकम् ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்த வாக்யங்களிலும் க்ரியாபதம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனுல் அந்த க்ரியாபதம் விவக்ஷிதார்த்தத்திற்கு அனுகுணமாக இருந்தால் ஒத்துக்

**278. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்பட்ட தோஷத்தையன்றி, மேலும் ஒரு உபாதி தோஷம் ஸம்ப விக்கின்றது.

**ச்லோகம் :**

लोकप्रसिद्धपदगोचरतानिमित्तमन्यप्रमाणविषयत्वमिह प्रसिद्धम् ।
लोकप्रसिद्धपदगोचरता न चास्मिन् ब्रह्मात्मनीति च तदत्र निवारणीयम् ॥

**ச்லோகார்த்தம் :** எந்த வஸ்துவானது லௌகிக பதங்களுக்கு விஷயமாக இருக்கின்றதோ அந்த வஸ்துவே ப்ரமாணாந்தர விஷயம், என்பது லோகப்ரசித்தம். ஆனால் ப்ரஹ்மாத்ம வஸ்து என்பது லௌகிகபதங்களுக்கு விஷயமாக இல்லை. ஆகையால் ப்ரமாணாந்தர விஷயத்வம் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** ஒரு வஸ்து, லோகப்ரசித்தமான சப்தத்தினால், (பதத்தினால்) அதன் அர்த்தம் தெரிவிக்கக்கூடியதாக இருந்தால்தான் அதை மானாந்தர கோசரம் என்று சொல்லலாம். ப்ரஹ்மமென்பது அவ்விதம் லோகப்ரசித்தமான வாக்யங்களால் ஸ்வதந்தரமாக அதன் அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்லமுடியாது. ஆகையால் ப்ரஹ்மமென்பது லௌகிக சப்த விஷயமல்ல. அலௌகிகமான ப்ரஹ்மவிஷயத்தில் வேதாந்தம், ஒன்றேப்ரமாணமாக ஆகிறது. ஆகவே, இந்த இடத்தில் "லௌகிக பதவாச்யத்வம்" என்ற உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது.

**279. அவதாரிகை :**

ஸர்வம்வாக்யம் க்ரியாபரம் என்றும் அந்த வாக்யங்கள்தான் ப்ரமாணம் என்றும் சித்த வஸ்துவை போதிக்கின்ற வாக்யங்கள் எல்லாம் அறியப்பட்ட விஷயத்தையே அனுவாதம் செய் கின்றதால் அப்ரமாணம் என்றும் சொல்லப்படும் தோஷம் உன்னுடைய மதத்தில் தான் ஸம்ப விக்கின்றது (வேதாந்தபக்ஷத்தில் இந்த தோஷம் ஸம்பவிக்காது).

**ச்லோகம் :**

लोकप्रयुक्तपदगोचरताऽस्ति कार्ये तेनास्तु कार्यपरवाक्यमशेषतस्ते ।
मानान्तरेषु परतन्त्रतयाऽप्रमाणं स्वार्थे न दूषणमिदं श्रुतिमस्तकेषु ॥

**ச்லோகார்த்தம் :** கார்யம் என்பது லௌகிக வாக்யங்களுக்கு விஷயமாக இருக்கிறது. ஆகையால் கார்யபரமான வாக்யங்களெல்லாம் ப்ரமாணாந்தர விஷயமாக இருக்கின்றதால் ஸ்வார்த்தம் என்று சொல்லமுடியாது. ஆகையால் உன்சித்தாந்தப்படி அப்ரமாணம் என்றே சொல்லவேண்டும். இந்ததோஷம் வேதாந்த சித்தாந்தத்தில் ஸம்பவிக்காது.

**வ்யாக்யானம் :** நியோகம் என்ற ஏவலையே, லிங்முதலான பதங்களுக்கு அர்த்தமாகச் சொல்லப்படுகிறது. அதாவது, இதைச்செய் என்று ஏவுகின்றதே லிஙர்த்தம் என்று லோக ப்ரசித்தமாக இருக்கின்றது. அதையே வேதவாக்யங்களும் போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுவதால், ஸர்வவேத வாக்யங்களும் வேறு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட அர்த்தத்தையே போதிக்கின்றது என்ற தன்மை உன்னுடையபக்ஷத்தில் தான் ஸம்பவிக்கின்றது. வேதாந்தவாக்யம் க்ரியையை போதிக்காததால் இந்த தோஷம் ஸம்பவிக்காது. ஏனெனில் லிங் முதலான பதங்கள்போல இதைச் செய், இதைக்கொடு, கொண்டுபோ, கொண்டுவா, என்பது போன்ற லோகப்ரசித்தமான பதங்களாக வேதாந்தவாக்யத்திலுள்ள 'ப்ரஹ்ம' முதலான பதங்கள் லோகப்ரசித்தமாக இல்லை. அதனால் ப்ரமாணாந்தர விஷயத்தை, வேதம் அனுவாதம் செய்கின்றது என்று சொல்லப்படுமானால், அப்ரமாணம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**280. அவதாரிகை :**

க்ரியாபதம் இல்லாத வாக்யம் என்பது வாக்யமாகவே ஆகாது என்று கீழே ஆக்ஷேபம் செய்யப்பட்டது. அவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல என்று இங்கு நிராகரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

न च क्रियाकारितसंहतीनि पदानि लोके नियमेन वक्तुम् ।
समीहते पक्वमतिः पदानां क्रियां विनाऽप्यन्वयदर्शनेन ॥

**ச்லோகார்த்தம் :** க்ரியாபதத்தினால்தான், பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயிக்கின்றது என்று நியமம் சொல்லமுடியாது. ஆகவே பக்குவமதியை உடையவர்கள் இதை விரும்புவதில்லை. ஏனெனில் க்ரியாபதம் இல்லாமலேயே பதங்களுக்கு அன்வயம் ஏற்படுகிறது என்பது அனுபவத்தினால் அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாக்யம் என்பது, க்ரியாபதம் இல்லாமல ஒன்றுடன் ஒன்று சேர்ந்து அர்த்தத்தை போதிக்கமுடியாது என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யங்களும் ஒன்றுடன் ஒன்று அன்வயித்து அர்த்தத்தை போதிக்கின்றதால் க்ரியாபதத்தைமுக்யமாகக் கொண்டே வாக்யம் அர்த்த போதத்தை உண்டுபண்ணுகின்றது என்ற நியமம் சொல்லமுடியாது.

**281. அவதாரிகை :**

உதாகரணத்தின்மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

महीभुजोऽयं पुरुषो मनस्वी वनस्पतेस्तत्फलमित्यपीह ।
क्रियां विनाऽप्यन्वयवन्ति लोके पदानि दृष्टानि बहूनि वक्तुः ॥

**ச்லோகார்த்தம் :** 'இந்த ஸாத்விகமான புருஷன் ராஜாவைச் சேர்ந்தவன்' என்றும் 'அந்தபழமானது இந்த மரத்தினுடையது' என்றும் வக்தாவினால் ப்ரயோகிக்கப்படும் பலவித வாக்யங்கள், க்ரியாபதம் இல்லாமலேயே அன்வயிக்கின்றதென்பது அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** க்ரியாபதம் இல்லாமலேயே ஒரு வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அன்வயம் ஏற்பட்டு அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்பதை உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. "ஸாத்விகமான இந்த புருஷன் ராஜாவைச்சேர்ந்தவன்" என்ற வாக்யமும், 'இந்த பழங்கள் இந்த மரத்தினுடையது' என்ற வாக்யமும் எந்த விதமான க்ரியாபதமும் இல்லாமலேயே அதன் அர்த்தத்தை போதிக்கின்றது. இந்த வாக்யங்கள், ராஜாவிற்கும் அந்த புருஷனுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் மரத்திற்கும் அதன் பழத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தையும்தான் தெரிவிக்கின்றது என்றாலும் வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுகின்றதால் க்ரியாபதம் இருந்தால்தான் வாக்யம் அர்த்த போதகமாகும் என்று சொல்வதுசரியல்ல.

**282. அவதாரிகை :**

வாக்யங்களில் க்ரியாபதம் அவஸ்யம் இருக்கவேண்டுமென்று பிடிவாதகமாகச் சொல்லப்படுமானால் வேதாந்தவாக்யத்திலும் க்ரியாபதம் இருப்பதாகச் சொல்லலாம்.

**ச்லோகம் :**

क्रियापदं वेदेशिरःस्वपीष्यते विवक्षितार्थानुगुणं तु तन्मतम् ।
विवक्षितार्थप्रतिपत्तिघाति तु क्रियापदं स्वीकृतमप्यनर्थकम् ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்த வாக்யங்களிலும் க்ரியாபதம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனால் அந்த க்ரியாபதம் விவக்ஷிதார்த்தத்திற்கு அனுகுணமாக இருந்தால் ஒத்துக்

கொள்ளலாம். விவக்ஷிதார்த்தத்திற்கு விரோதியாக இருக்கும் க்ரியாபதங்களை எடுத்துக் கொள்ளமுடியாது. ஏனெனில் அது நிரர்த்தகமாக ஆகிவிடும்.

**வ்யாக்யானம் :** எந்தவிதமான க்ரியாபதத்தை ஒத்துக்கொண்டால் அந்த வாக்யம் வஸ்துபரம் என்று சொல்வதற்கு எந்தவிதமான இடைஞ்சலும் ஏற்படாதோ. அப்பேர்ப்பட்ட க்ரியாபதத்தைத் தான் சேர்க்கமுடியும். ஏனெனில் வாக்யத்தில்தாத்பர்ய விஷயத்திற்கு பங்கம் ஏற்படாமல் இருக்கவேண்டும். ஆகவே, லிங் லோட் தவ்யப்ரத்யயமான கார்யபரமான பதங்களை உபநிஷத் வாக்யங்களில் சேர்க்கமுடியாது. 'அக்னி ஹோத்ரம் ஜுஹுயாத்ஸ்வர்க்ககாம:' என்ற வாக்யமானது, அக்னி ஹோத்ரம் என்ற கர்மாவை விதிக்கின்றது அதன்பிறகு 'தத்னேனேந்திரிய காமஸ்ய ஜுஹுயாத்' என்ற வாக்யமானது முன்னால் சொல்லப்பட்ட அக்னிஹோத்ரம் என்ற கர்மாவில் ததி என்பதைச் சேர்த்து ஹோமம் செய்யப்படுமானல், அவனுடைய இந்த்ரியங்கள் எல்லாம் மிகவும் சக்தியுடையதாக இருக்கும் என்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் 'தத்னேனேந்த்ரியகாமஸ்ய ஜுஹுயாத்' என்ற வாக்யத்திலுள்ள 'ஜுஹுயாத்' என்ற க்ரியாபதமானது, புதிதாக ஒரு கர்மாவை விதிக்கின்றதா? அல்லது கீழே விதிக்கப்பட்ட கர்மாவை அனுவாதம் செய்து அதில் ததிஸம்பந்தத்தை தெரிவிக்கின்றதா? என்ற ஸங்கை ஏற்படுகின்றது. அந்த இடத்தில் புதிதாக ஒரு கர்மாவிதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானல் மீமாம்ஸாசாஸ்திரத்திற்கே விரோதம் ஏற்படுகிறது என்றும், விவக்ஷிதமான அர்த்தத்திற்கு (தாத்பர்யார்த்தத்திற்கு) பங்கம் ஏற்படுகிறது என்பதால், இந்த வாக்யம் குணவிதியானதால், கீழே சொல்லப்பட்டகர்மாவை அனுவாதம் செய்தே தெரிவிக்கிறது என்றும், 'ஜுஹுயாத்' என்ற பதம் இருந்தாலும் அந்த வாக்யம் தனியாக ஒரு கர்மாவை விதிக்கவில்லையென்றும், ததி (தயிர்) ஸம்பந்தத்தைத்தான் தெரிவிக்கின்றது என்றும் உங்களாலேயே சொல்லப்படுகிறது. ததியைச் சேர்த்து ஹோமம் செய்யப்படுமானல் இந்த்ரியங்கள் வீர்யமுடையதாக ஆகிறது என்பதை தெரிவிப்பதில்தான் இந்த வாக்யத்திற்கு தாத்பர்யம். ஆகவே இதேபோல், வேதாந்தவாக்யத்திலும் வாக்யத்தின் தாத்பர்யவிஷயம் எதுவோ, அதற்கு அனுகுணமாக (பொருத்தமாக) இருக்கின்ற க்ரியா பதத்தைத்தான் சேர்க்கமுடியும்.

**283. அவதாரிகை :**

வேதாந்தவாக்யத்திற்கு அனுகூலமாக என்னக்ரியாபதம் இருக்கிறது? என்ருல்.

**ச்லோகம் :**

अस्त्यस्म्यसीति च पदं प्रचुरं क्रियाया वेदान्तवाक्यगतमादरतः पठन्ति ।
तन्मात्रतः सकलवेदशिरःपदानां संघातसिद्धिरिति वेदशिरोनिषण्णाः ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்தவாக்யங்களில், 'அஸ்தி அஸ்மி அஸி' என்ற பல விதமான க்ரியாபதங்கள், வேதாந்தவாக்யங்களுடன் அன்வயித்து அர்த்தத்தைபோதிக்கின்றது என்று வேதாந்தத்தை நன்கு அறிந்த வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**பூர்வ :** வேதாந்தவாக்யங்கள் க்ரியாபதத்துடன் அன்வயிக்கின்றபோதிலும் வாக்யம் சித்தவஸ்துவை போதிக்கின்றது என்று சொல்லப்படும் விஷயத்திற்கு விரோதமில்லை என்று எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** 'அஸ்தி ப்ரஹ்ம' என்ற வாக்யம், 'ப்ரஹ்ம இருக்கிறது' என்று தெரிவிக்கின்றது. 'இருக்கிறது' என்ற எண்ணத்துடன் ப்ரஹ்மத்தை அறியமுயற்சிப் பவனுக்கே ப்ரஹ்ம சாக்ஷாத்காரம் 'ஏற்படும்' என்று கடோபநிஷத்மந்த்ரம் தெரிவிக்கின்றது. இதேபோல் 'அஹம் ப்ருஹ்மாஸ்மி' என்ற

வாக்யத்தினுல் 'நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன்' என்று சொல்லப்படுகிறது. இதே போல் 'தத்த்வம்அஸி' என்ற வாக்யம் 'நீ ப்ரஹ்மமாக இருக்கிருய்' என்று தெரிவிக்கின்றது. இந்தவிதமான க்ரியாபதங்கள் வேதாந்தவாக்யங்களில் இருக்கின்றது. இந்தவிதமான க்ரியாபதங்கள் வஸ்துவின் ஸத்வத்தை மாத்ரமே போதிக்கின்றது. க்ரியைக்கு ப்ராதான்யமில்லை என்பதை ஏற்கவேண்டும். அதனுல் ஸத்தை என்ற க்ரியையை போதிப்பதாகச் சொல்லமுடியாது. வஸ்துவின் ஸ்வரூபமே 'ஸத்' என்பதாக சொல்லப்படுகிறது. அஸு என்ற தாதுவானது ஸத்வத்தைத்தான் போதிக்கின்றது. உதாரணமாக 'த்ரவ்யம் ஸத்' என்று சொல்லப்படுகின்றபோது த்ரவ்யத்தின் ஸத்வம்தான் சொல்லப்படுகின்றது என்று சொல்லவேண்டும். அவ்விதமின்றி ஸத்தை என்ற க்ரியையை போதிப்பதாகச் சொல்லப்படுமானுல் த்ரவ்யம் என்பது ஸத் அல்ல, அஸத் என்றே சொல்லநேரிடுமானதால் த்ரவ்யம் என்பதே சித்திக்காது. ஆகவே வஸ்துஸ்வரூபமான ஸத்தையைத்தான் அஸு என்ற தாதுவானது க்ரியாபதம்போல உபசாராத் சொல்லப்படுகிறது என்று பாணினியினுலும் சொல்லப்படுகிறது. ஆகவே இப்பேர்ப்பட்ட க்ரியாபதங்களினுல் வாக்யமானது வஸ்துபரம் (சித்த வஸ்துபோதகம்) என்ற தன்மைக்கு எவ்விதமான ஹானியும் ஏற்படாது.

**284. அவதாரிகை :**

இந்தவிதம் சொல்லப்படுமானுல் உபநிஷத் என்பது ஸ்வதந்த்ரமாக ஒரு அர்த்தத்தை தெரிவிக்கமுடியாதாகையால் (ஸாபேக்ஷத்வம்) வேறு ஒன்றை அபேக்ஷித்து அர்த்தத்தை தெரிவிக்குமானுல், வேதாந்தத்திற்கு ப்ராமாண்யம் எப்படிச்சொல்லமுடியும்? என்று ஆக்ஷேபிக்கின்ற ப்ராபகார்களின் வாதத்தைமேலே சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

यत्तु प्रमाणमनुभूतिरिति प्रमाणसामान्यलक्षणमनूद्य पुनर्वदन्ति ।
सत्ता प्रमाणघटनां प्रति योग्यताऽतो नास्त्यर्थनिष्ठवचनेष्वनपेक्षतेति ॥

**ச்லோகார்த்தம் :** அனுபவமே ப்ரமாணம் என்ற, ப்ரமாண ஸாமான்யலக்ஷணத்தை அனுவாதம் செய்து ப்ராபாகரர்களால் இவ்விதம் சொல்லப்படுகிறது. அதாவது ப்ரமாணப்ரவ்ருத்திக்கு எது யோக்யமாக இருக்கிறதோ அதுவே ஸத்தை என்று சொல்லப்படும். ஆகையால் 'அஸ்தி' என்ற க்ரியா பதம் ஸத்தை என்ற அர்த்தத்தை தெரிவிப்பதால் அந்த வாக்யங்கள் நிரபேக்ஷமாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரமாணம் என்ருல் அனுபூதி: அனுபவம் என்று ப்ராபாகரர்களால் லக்ஷணம் சொல்லப்படுகிறது. அதன்பிறகு எது ப்ரமாணத்தினுல் அறியப்படுகின்றதோ அந்த தன்மையைத்தான் ஸத்தை என்பதாகச் சொல்கிருர்கள். (அதாவது ப்ரமாணத்தினுல் 'இருக்கிறது' என்று அறியப்படும் இருப்பு த்தன்மையை ஸத்தை என்று சொல்லப்படுகிறது). ஆகவே சித்த வஸ்துவை போதிக்கின்ற வாக்யங்கள் க்ரியையை போதிக்காமல், அஸி, அஸ்தி, அஸ்மி, என்பது முதலான ஸத்தையை போதிக்கின்ற வாக்யமாக இருக்குமானுல், வேதாந்தவாக்யங்கள் ஸத்தையை போதிக்கின்ற ப்ரமாணுந்தரங்களை அபேக்ஷித்தே அதன் அர்த்தத்தை தெரிவிக்கவேண்டியிருப்பதால் நிரபேக்ஷத்வப்ராமாண்யம் வாக்யங்களுக்கு சொல்லமுடியாது. ஸாபேக்ஷத்வமாக இருப்பதால் ஸ்வத: ப்ரமாணமென்றும் சொல்லமுடியாது என்பது ப்ராபாகாரின் ஆக்ஷேபம். இந்த ஆக்ஷேபம் பொருந்தாது. ஏனெனில் ஸம்வித் என்ற அனுபவமே ப்ரமாணம் என்று ப்ரமாண லக்ஷணம் சொல்லப்படுவதால் வேறு ஒரு ப்ரமாணத்தை அபேக்ஷிக்கிறது என்று சொல்வது பொருந்தாது என்பதை மேலே சொல்கிருேம்.

**285. அவதாரிகை :**

ப்ராபகார்களால் செய்யப்படும் ஆக்ஷேபம் எந்தவிதத்தில் பொருந்தவில்லையென்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तद्दुर्घटं न खलु संविदियं स्वयोग्या नह्यात्मनि स्थितिमुपैष्यति योग्यताऽस्याः ।
वस्त्वन्तरोपनिहितस्वपदत्वहेतोर्नह्यात्मरूपदहने दहनस्य शक्तिः ॥

**ச்லோகார்த்தம் :** இது பொருந்தாது. ஏனெனில், 'ஸம்வித்' என்பது தனக்கே விஷயமாக ஆகாது. ஸம்வித் விஷயத்வம், ஸம்வித் என்பதிலேயே இருக்கமுடியாது. ஸம்வித்திற்கு வேறுக இருக்கின்ற ஒரு வஸ்துதான், ஸம்வித்திற்கு விஷயமாக இருக்கமுடியும். அக்னியென்பது, தன்னுடைய ஸ்வரூபத்தையே எரிக்கக்கூடிய சக்தியுடையதாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** அனுபூதி என்பதே ப்ரமாணம் என்றும், அந்த ப்ரமாணத்தினுல் எது அறிவிக்கப்படுகிறதோ அதுவே ஸத்தை என்றும் சொல்வது பொருந்தாது. ஸம்வித் என்பது ஸம்வித் என்பதாலேயே அறிவிக்கப்படும் தன்மையில் இருப்பதாகச்சொல்லமுடியாது. ஸம்வித் என்பது தனக்கு வேருக இருக்கின்றவஸ்துவைத்தான் தெரிவிக்கிறது என்று சொல்ல வேண்டும். மேலும் ஒரு விஷயமானது ப்ரமாணத்திற்கு விஷயமாக ஆகவேண்டுமானுல் அந்த வஸ்து, ப்ரமாணத்திற்கு விஷயமாகும் தன்மையுடையதாக இருக்க்வேண்டும். ஸம்வித் என்பதே ஸத்வம். ஸம்வித் என்பதற்கு ஸத்வமில்லை என்றும், வேறொரு ஸம்வித் என்பதால் ஸத்வம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல் அனவஸ்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகவே ஸம்வித் என்பது ஸ்வயமே ஸத்ரூபம். ஸம்வித் என்பதற்கு வேறு ஒன்றினுல் ஸத்வம் என்று சொல்லப்படுமானுல் அந்த ஸம்வித் என்பது ஆத்மாவாகவே (ஸம்வித்தாக) இருக்கமுடியாது. அஸத்தாக இருக்கின்ற வஸ்து எதுவோ அதற்கே ஸத்தின் ஸம்பந்தத்தினுல் ஸத்வம் என்று சொல்லப்படலாம். இது கடம் என்று ஞானம் ஏற்படுகின்றபோது, அந்த ஞானத்தினுல்தான் கடம் இருக்கின்றது என்று கடத்திற்கு ஸத்வம் சித்திக்கின்றது. ஞானம் என்பது ஸ்வயம் ப்ரகாசம், ஸத்ரூபம், என்பதால், ஞானம் என்ற ஸம்வித்திற்கு வேறு எதனுலும் ஸத்வம் சித்திக்கவேண்டியதில்லை. ஆகவே க்ராஹ்யம் க்ராஹகம் என்ற தன்மைகள் ஸம்வித் என்ற அனுபவம் ஒன்றுக்கு மட்டும் இருக்கமுடியாது. 'ஸம்வித்' என்பதையன்றி வேருக இருக்கின்ற எல்லாவற்றிலும் க்ராஹ்யம் என்றும் க்ராஹகம் என்றும் பேதங்கள் இருக்கமுடியும். அக்னி யென்பது, தஹிக்கக்கூடியதன்மை உடையதுதான் என்ருலும் அந்த அக்னி தனக்குவேருன மற்ற வஸ்துக்களைத்தான் எரிக்குமேயன்றி தன்னைத்தானே எரிக்கின்றது என்று சொல்ல முடியாது. ஆகவே ஸம்வித்திற்கு விஷயமாகிறது என்று சொல்லப்படுமானுல் ஸம்வித்திற்கு வேருன ஜடவஸ்துக்களே ஸம்வித்திற்கு விஷயமாக ஆகமுடியும். ஒன்றுக்கொன்று பேதமாக இருந்தால்தான், இதற்கு, இது விஷயம் என்று சொல்லலாம் அதனுல் அனுபூதி என்பதே ப்ரமாணமானதால் அனுபூதி ஸ்வரூபமான ஸம்வித் என்பது ஒரு ப்ரமாணத்தினுல் க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகையால் ப்ரமாணயோக்யத்வமாக இருப்பது எதுவோ அதுவே ஸத்தை என்று சொல்லப்படுமானுல் 'ஸம்வித்' ஸத்தை என்று சொல்ல முடியாது. அதனுல் அனுபூதி என்பது அஸத் என்று சொல்லநேரிடும்.

**286. அவதாரிகை :**

இவ்விதம் ஸம்வித் என்பதற்கு ஸத்வம் (ஸத்தை) என்பதேஸ்வரூபம் என்று சொல்லப்படுவதால் என்ன லாபம்? என்ருல்,

**ச்லோகம் :**

संवित्प्रमाणघटनां प्रति योग्यतां चेन्नेयं बिभर्ति न सती भवितुं समर्था ।
तद्योग्यतैव यदि मातृघटादिसत्ता तस्याप्यसत्वमिति शून्यमुपाजिहीथाः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாண விஷயத்வம் என்பது ஸம்வித் என்பதற்கு ஸம்பவிக்கமுடியாது. ஆகையால் ப்ரமாண விஷயத்வம் இருந்தால்தான் ஸத்வம் என்று சொல்லப்படுமானுல் ஸம்வித் என்பதற்கே ஸத்வம் என்ற யோக்யத்வம் இல்லேயானுல் மாதா, மானம், மேயம், என்பவைகளுக்கும் ஸத்வம் சித்திக்கமுடியாது. அதனுல் சூன்யவாதமே சித்திக்கும்.

**வ்யாக்யானம் :** ஒரு வஸ்து ப்ரமாண விஷயமாகஆகவேண்டுமானுல், அந்த வஸ்து, ப்ரமாணத்திற்கு விஷயமாக்ககூடியதன்மையில் இருக்கவேண்டும். ஸம்வித் என்பது ப்ரமாண விஷயமாக இல்லாததால், ஸம்வித் என்பதே இல்லேயென்று சொல்லநேரிடும் என்பதற்காக ஸம்வித்திற்கு ஸ்வரூபமே ஸத் என்று ஏன்சொல்லவேண்டும்? ஸம்வித் அஸத் என்று சொல் வதால் என்ன பாதகம்?

**சித்தா :** ஸம்வித்தே அஸத் என்ருகுமானுல், ஜடமான கடபடாதிகளும், மாதா, மானம், மேயம், என்பவைகள் எதுவுமே சித்திக்கமுடியாதாகையால், அனுபூதியுமில்லே. அதற்கு விஷயமுமில்லேயென்பதால் சூன்யவாதத்தையே ஒப்புக்கொண்டதாக ஆகும். ஆகவே மான விஷயந்தான் ஸத்வம் என்று சொல்வது சரியல்ல. அனுபூதி என்பதும் வேறு ப்ரமாணத்திஞல் சித்திக்கவேண்டுமென்ருல், அந்தப்ரமாணம் என்பது ஸம்வித்தா? அல்லது ஜடமா? என்று விசாரிக்கின்றபோது, அதுவும் வேருெரு ஸம்வித்திஞல் சித்திக்கவேண்டுமென்று சொல்லப்படுமானுல் அனவஸ்தாதி தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகவே ஸம்வித் என்பதே ஸத், என்றே சொல்லவேண்டும். இல்லேயென்ருல் சூன்யம்தான் சித்திக்கும்.

**287. அவதாரிகை :**

ஆகவே ப்ரமாண விஷயத்வம் ஸத்வம் என்று சொல்வது பொருந்தாது. அதனுல் வேறுமுறையில்தான் ஸத்வம் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும்.

**ச்லோகம் :**

वस्तुस्वभाव इति सत्वमतो गृहाण तच्च द्विधेथ वितथाऽवितथत्वभेदात् ।
सत्वं द्विरूपमितरेतरसंकरेण सच्छब्दवाच्यमिति च व्यवहारकाले ॥

**ச்லோகார்த்தம் :** ஆகவே, ஸத்வம் என்பது வஸ்துஸ்வபாவம் என்றே அறிந்து கொள்ளவேண்டும். இந்த ஸத்வம் பாரமார்த்திகம் வ்யாவகாரிகம் என்று இரண்டு வகைப்படும். இவைகள் ஒன்றுக்கொன்று பரஸ்பரஅத்யாஸத்திஞல் வ்யவகாரகாலத்தில் ஸத் சப்தவாச்யமாக ஆகிறது.

**வ்யாக்யானம் :** முக்காலத்திலும் பாதிக்கப்படாதது எதுவோ அதுவே, ஸத்வம் என்று சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி ப்ரமாணயோக்யத்வம் ஸத்வம் என்று சொல்வது பொருந்தாது. ஆகவே சித்தவஸ்துவை போதிக்கின்ற வேதாந்தவாக்யங்கள் சித்தமான ஆத்மஸ்வரூப நிஷ்டமானதால் அந்த வாக்யங்களுக்கு ஸாபேக்ஷத்வமில்லே. ஆகவே அபாத் யத்வரூபம் ஸத்வம் என்றே சொல்லவேண்டும். (இந்த ஸத்வம் தன்னுலோ தனக்கு அன்யமான ஒன்றிஞலோ பாதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது).

**பூர்வ :** ப்ரஹ்மமென்பது அவாங்மனோகோசரம் என்ருல், ப்ரஹ்மாஹமஸ்மி என்ரோ தத்வமஸி என்ரோ அஸி அஸ்மி அஸ்தி என்ரோ அஸு என்ற தாதுவிஞல் ஸத்வம், என்ற வாக்கிஞல் சொல்லப்படுவதாக எப்படிச்சொல்லமுடியும்?

**சித்தா :** அஸ்மி அஸ்தி அஸி என்ற பதங்கள் சுத்த சைதன்யஸ்வரூபத்தை தெரிவிப்பதாகச் சொல்லமுடியாது. அதனால் ஸபளமான ஸ்வரூபத்தை தெரிவிப்பதாகவே சொல்லவேண்டும். ஸத்வம் என்பது இரண்டுவிதம். இதில் பரமார்த்த ஸத்வம் என்ற ப்ரஹ்மமானது விவகாரங்களுக்கு எட்டாதது. (அதீதம்). ஆகவே ஸபளஸ்வரூப ஸத்வத்தையே சப்தம் வாச்யமாக தெரிவிக்கின்றது. அதாவது 'கட: ஸன்' என்று சப்தம் தெரிவிக்கின்றபோது கடம் என்ற வஸ்துவானது அந்த: கரணமூலமாக சைதன்யத்தில் அத்யஸ்த்தமாகிறது. அந்த கடத்தில் ஸத்வம் அத்யஸ்த்தமாகிறதேயன்றி கடத்தில் ஸத்வம் என்பது உண்மையில் கிடையாது. ஆகவே சுத்த ஸத்வம் சப்தவாச்யமாக ஆகாது. சித்தும் ஜடமும் கலந்த ஸபள ஸ்வரூபத்தில் அறியப்படும் ஸத்வமே சப்தவாச்யமாகஆகின்றது. ஆகவே ப்ரஹ்ம ஸத்வம் என்பதும் ஸ்வரூபத: சப்தவாச்யமில்லை. சப்தவ்ருத்தி கோசரத்வம் என்பது உபாதியுடன் கூடிய ஸபளார்த்தத்தின்தான் சொல்லமுடியும். ஆகவே த்ரிகால அபாத்யத்வமான வஸ்துஸ்வரூபமே ஸத்வம் என்று சொல்ல வேண்டும். அதனால் வேதாந்தவாக்யத்திற்கு ஸாபேக்ஷத்வம் சொல்வதும் பொருந்தாது.

**288. அவதாரிகை :**

ஸபளார்த்த ஸ்வரூபமே 'ஸத்' என்ற சப்தத்தால் வாச்யார்த்தமாக தெரிவிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால், அந்த வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அபேத அன்வயம் ஏற்படமுடியாமல் விரோதம் ஏற்படுகிறதே? என்றால், அபாத்யரூபத்வமான ஸத்வம் சொல்வதற்கு எந்த அம்ஸம் விரோதமாக இருக்கின்றதோ அந்த அம்ஸத்தை பாகத்யாக லக்ஷணையினால் விட்டுவிட்டு அபேத அன்வயம் சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

उत्सृज्य तत्र वितथांशमथेतरस्मिन् संवित्स्वरूपपरमार्थसति स्वरूपे ।
बुद्धिं कुरु प्रणिदधत्प्रणयेन भूम्नि ब्रह्माहमस्मि परमार्थसदित्यजस्रम् ॥

**ச்லோகார்த்தம் :** (ஸபளம்தான் அந்தந்த பதங்களில் அர்த்தம்என்று அறியப் படுவதாகச்சொல்லப்பட்டபோதிலும்) வ்யாவகாரிக அம்ஸத்தை விட்டுவிட்டு, பரமார்த்த ஸத்ரூபமாகவும் ஸம்வித்ஸ்வரூபமாகவும் இருக்கின்ற பூமவஸ்துவில் ஆதரவுடன் மனதை ஒரு முகப்படுத்தி "பரமார்த்த ஸத்வஸ்துவான ப்ரஹ்மஸ்வரூபமாகவே நான் இருக்கிறேன்" என்று நிரந்தரமான ஞானத்தில் நிலைபெற்றிருக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** அஸ்மி, அஸ்தி அஸி என்ற பதங்களுடன் கூடிவாக்யமானது ஸபளார்த் தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால் விரோதம் ஏற்படுகிறதே? என்றால், வாக்யத்திலிருக்கின்ற எந்த அம்ஸம் த்ருச்யமாக அறியப்படுகிறதோ அந்த அம்ஸத்தை வாக்யவிசாரத்தினால் சோதனை செய்து, எந்த அம்ஸம் விரோதமாக இருக்கின்றதோ அந்த அம்ஸத்தை மட்டும் விட்டுவிட்டு, லக்ஷணையினால் எந்த அர்த்தத்தில் அந்த வாக்யார்த்தம் முடிவை அடைகின்றதோ, அதுவே ஸத்வம் என்று அறிந்துகொள்ளவேண்டும். இந்தவிதம் லக்ஷணையாக வாக்யமானது அர்த்தத்தை தெரிவிக்கின்றதால் இந்த விஷயத்தில் அந்த வாக்யத்தை ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. சப்தமென்பது அபிதையினாலும்தன் அர்த்தத்தை தெரிவிக்கலாம், லக்ஷணையினாலும்தன் அர்த்தத்தை தெரிவிக்கலாம் (அலங்கார சாஸ்திரங்களில் சொல்லப்படுவதுபோல் வ்யஞ்சனையாகவும் அர்த்தம் தெரிவிக்கப்படலாம்). ஆகவே எப்படி இருந்தாலும் சப்தம்தான் லக்ஷணையாகவும் அர்த்தத்தை தெரிவிக்கின்றது. ஆகவே ஸம்வித் என்பதே பரமார்த்த ஸத்வமாகவும் ஸம்வித்ரூபமாகவும் இருக்கின்றது என்பதால் இப்பேர்ப்பட்ட பரிபூர்ணஸம்வித்ஸ்வரூபத்தை புத்தியில் நிலைநிறுத்தி, அதுவே நான் என்று அனவரதம் ஆதரவுடன் ஸ்வரூபத்தில் நிலைத்திருக்கவேண்டும்.

**289. அவதாரிகை :**

முன்பு (III வது ஸ்லோகத்தில்) 'கிம்ச ப்ரமாணுந்தரம்' என்று ஆரம்பிக்கப்பட்ட ச்லோகத்தில் செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இந்த ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

ब्रह्म स्वयंप्रभमतः शबलेषु तस्य मानान्तरानधिगतेष्वपि शब्दशक्तिः ।
रूपेषु वृद्धजनसंव्यवहारहेतोः शक्या गृहीतुमुदितेन पथानभिज्ञैः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மமென்பது ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபமாகவே இருக்கிறது என்பதால், மாணுந்தர விஷயமாக இல்லை என்றுலும், ஸபளஸ்வரூபமானது, சப்தத்திற்கு விஷயமாகஆகிறது. இந்த சப்தசக்தியைப்பற்றி முன்பு சொல்லப்பட்டவ்ருத்த வ்யவஹாரத்தைக் கொண்டு அறிஞர்கள் எப்படி அறிந்து கொள்கிருர்கள் என்று எந்த முறையில் சொல்லப்பட்டதோ அதேமுறையில் இந்த வாக்யங்களுக்கும் சக்திக்ரஹம் ஏற்படலாம்.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது மாணுந்தரத்திஞல் அறியப்பட்டதா? அறியப்படாததா? அறியப்பட்டதுதான் என்ருல் அந்தப்ரஹ்மத்தை வேதாந்தம் போதிக்கின்றது என்ருல், அனுவாதம் என்ருகிறதேயன்றி வாக்யம் ப்ரஹ்மத்தைபோதிப்பதில் ப்ரமாணம் என்று சொல்லமுடியது அதற்காக மாணுந்தரகோசரத்வமில்லை என்று சொல்லப்படுமாஞல் சப்தத்திற்கு சக்திக்ரஹம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. அதஞல் ப்ரஹ்மவிஷயத்தில் வேதாந்தம் ப்ரமாணமாக ஆகாது என்று கீழே ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு இந்த ச்லோகத்திஞல் பதில் சொல்லப்படுகிறது. ஸ்வப்ரகாச ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாசமாக இருக்கின்றதால் அது மாணுந்தரவேத்யமென்று சொல்வது பொருந்தாது. ப்ரத்யக் என்றும் ஆத்மா என்றும் ப்ரஹ்மமென்றும் சொல்லப்படும் சப்தங்கள் எல்லாம் வ்ருத்தர்களின் (பெரியோர்கள்) விவாகரத்தை அனுசரித்து அந்த சப்தங்களுக்கு சுலபமாக சக்திக்ரஹம் ஏற்படலாம். வஸ்து சித்தமாகவும் அஞ்ஞாதமாகவும் இருக்குமாஞல் அந்தவஸ்துவில் சப்தத்திற்கு வ்ருத்தவிவகாரத்திஞல் சக்தி க்ரஹம் ஏற்படலாம் என்பதை கீழேயே 'நிச்சந்தி பந்தனம்' என்ற 198 வது ச்லோகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. அதாவது 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்ற பதங்களுக்கு எப்படி சக்தி க்ரஹம் ஏற்படுகிறதோ அதுபோல் ஏற்படலாம். அதஞல் அனுவாததோஷமோ, மாணுந்தர கோசரம் என்ற தோஷமோ ஸம்பவிக்காது.

**290. அவதாரிகை :**

வேதாந்த ப்ரதிபாத்யமான ப்ரஹ்மசப்தமானது அலௌகிகமான சப்தம். லோகாதிகளில் ப்ரஸித்தமாக இல்லை. மாயை, ஸபளம், பூமா, ப்ரஹ்ம, என்ற சப்தங்கள் எல்லாமே லோகப்ரசித்தமில்லை. அதஞல் இந்தவிதமான பதங்களுக்கு எப்படி சக்திக்ரஹம் ஏற்பட முடியும்?

**ச்லோகம் :**

लोकप्रसिद्धार्थपदान्तराणां समीपसङ्कीर्तनतोऽपि शक्तिः ।
ब्रह्मादिशब्दस्य सुखावसेया यथा हि यूपादिगिरस्तथैव ॥

**ச்லோகார்த்தம் :** எவ்விதம் யூபம் முதலான பதங்களின் அர்த்தம் நிச்சயிக்கப்படுகிறதோ அதேபோல் லோகப்ரசித்தமான வேறுசில பதங்கள் ஸமீபத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதால், 'ப்ரஹ்ம' முதலான பதங்களின் சக்தியானது அனுயாஸமாக நிச்சயம் செய்யப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'யதோ இமானி பூதானி ஜாயந்தே' என்பது முதலான வாக்யங்களைக் கொண்டு, எதிலிருந்து இந்த ஜகத் உண்டாயிற்றே எதில் ஸ்திதிபெற்றிருக்கிறதோ எதில்

லயத்தை அடைகிறதோ அதுவே ப்ரஹ்மமென்று தெரிவிக்கின்ற வாக்யத்திலிருந்தே ஜெகத்திற்கு மூலகாரணமாக, அத்வைதமான ஒருவஸ்து இருக்கின்றதென்றும், அதுவே 'ப்ரஹ்ம' மென்றும் அறிந்துகொள்ளப்படுகிறது. அதன் பிறகு 'யத்ர ந அன்யத் பச்யதி', ந அன்யத் ச்ருணோதி,' என்பது போன்ற வாக்யங்களினால், த்வைதமற்ற (எதுவுமே இல்லாத) ஒரு நிலையை 'பூம' சப்தமானது தெரிவிக்கின்றது என்று அறியப்படுகிறது. சுஷுப்தி அனுபவத்தைக்கொண்டே எதுவுமற்ற ஒரு நிலையில் ஸ்வரூபமாத்ர ப்ரகாசம் இருக்கின்றது என்பதை அறிந்துகொள்ளமுடியும்.

இதேபோல் கர்மகாண்டவாக்யத்தில் 'யூபே அஸ்வம் பத்னாதி' என்ற வாக்யத்திலுள்ள 'யூபம்' என்ற பதத்திற்கு அர்த்தம் அறியப்படவில்லையென்றாலும் எட்டு பட்டையாக செதுக்கப் பட்டது யூபம் என்று தெரிவிக்கின்ற வாக்யத்திற்கு அடுத்தவாக்யத்தினால் அறியப்படும் அர்த்தத்தைக்கொண்டு இது ஒரு மரம் என்று அறியப்படுவதால் குறிப்பிட்ட மரத்தினை எட்டு பட்டையாகச் செதுக்கப்பட்ட ஸ்தம்பத்தையே 'யூப' சப்தம் தெரிவிக்கிறது என்று அறியப்படுகிறது. இதேபோல் 'ஆஹவனீயம் ஜுஹோதி' என்ற வாக்யத்திலுள்ள 'ஆஹவனீயம்' என்ற பதத்திற்கு என்ன அர்த்தம்? என்று அறியப்படவில்லை. ஆனால் அக்னியைமந்த்ர பூர்வகமாக எடுக்கவேண்டுமென்ற வாக்யத்திலிருந்தே, மந்த்ரபூர்வகமான அக்னிக்கு ஆஹவனீயம் என்று பெயர் என்பது அறியப்படுகிறது. இதேபோல், கீழே, ஸத்யபதத்திற்கு என்ன அர்த்தம் என்பதை கேவல ப்ரஹ்மத்தில் பாரமார்த்திகஸத்யத்வம், ஆகாசத்தில் அபாரமார்த்திகஸத்யத்வம், ஸபளஸ்வரூபத்தில் ஒரு ஸத்யத்வம் என்றும் அது மித்யை என்றும் சொல்லப்பட்டது. ஆகவே இதே போல், பூமசப்தம் ஸபளசப்தம் ப்ரஹ்மசப்தம் என்ற பதங்களுக்கும் சக்தி க்ரஹம் ஏற்படலாம். லோகப்ரஸித்தமான பதங்களுடன் சேர்த்தே 'ப்ரஹ்ம' சப்தம் போன்ற பதங்கள் ப்ரயோகம் செய்யப்படுவதால் அவைகளுக்கு சக்திக்ரஹம் ஏற்படலாம். யோகவ்யுத்பத்தியைக் கொண்டு, ப்ரஹ்ம சப்தார்த்தம் என்னவென்று விசாரிக்கின்றபோது 'ப்ரஹி வ்ருத்தௌ' என்று எல்லாவற்றிற்கும் பெரிது, சிறந்தது மஹத்வமுள்ளது என்ற அர்த்தம் அறியப்படுகிறது. எப்படியெனில் 'ப்ரஹ்ம' என்ற பதம் பெரிது என்ற அர்த்தத்தை பெயர்ச்சொல்லாகவே தெரிவிக்கின்றது. அதனால் எல்லையற்றது, எல்லாவற்றையும்விடபெரிது என்ற அர்த்தம் கிடைக்கின்றது.

(இதைவிட பெரிது என்று விசேஷணம் குறிப்பிடப்படாததால் 'ப்ரஹ்ம' சப்தம் பெயர்ச் சொல் என்று சொல்லப்படுகிறது.)

**291. அவதாரிகை :**

உபநிஷத் வாக்யங்களிலுள்ள 'ப்ரஹ்ம' சப்தம் போன்றவைகளுக்கு சக்திக்ரஹம் இல்லாமலேயே அர்த்தம் அறியப்படலாம் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

विनापि शक्तिग्रहणं पदानां परात्मनोर्वाचकभावभाजाम् ।
भवेत्परब्रह्मणि वेदवाक्यात् प्रतीतिरन्यप्रतिषेधनेन ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்ம சப்தம், ஆத்மசப்தம் இரண்டும் பரமாத்மா, ஜீவாத்மா என்ற இரண்டையும், சக்திக்ரஹம் இல்லாமலேயே தெரிவிக்கின்றது என்று சொல்லலாம். எப்படியெனில் அஸ்தூலம் ப்ரஹ்ம, அனணுப்ரஹ்ம, என்று அன்யப்ரதிஷேதமானவாக்யங்களிலிருந்தும், ப்ரஹ்ம சப்தமானது அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லலாம்.

**வ்யாக்யானம் :** 'ப்ரஹ்ம' முதலான சப்தங்களுக்கும், ப்ரஹ்ம வஸ்துவில்தான் சக்தி க்ரஹம் ஏற்படுகிறது என்பதை சொல்லத்தேவையில்லை. 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்ற வாக்யமானது,

இங்கு எதுவுமே இல்லையென்று நிஷேதம் செய்து தெரிவிக்கின்றதன்மூலமாகவே, நிஷேதிக்கப்பட்ட வஸ்துக்களின் அதிஷ்டானமாக ஒரு வஸ்து இருக்கின்றது என்று சொல்லப்படுவதால் சக்திக்ரஹம் இல்லாமலேயேவாக்யம் அர்த்தபோதமாகலாம். தத்பதமானது பரமாத்மாவையும் த்வம்பதமானது ஜீவாத்மாவையும் குறிக்கின்றது என்று அறியப்படுகின்றதால் ப்ரஹ்ம ஆத்ம சப்தங்கள் அனாத்ம நிஷேதத்தின்மூலமாகவே ப்ரஹ்ம ஸ்வரூபத்தை வேத வாக்யம் போதிக்கின்றது என்று சொல்லலாம்.

**292. அவதாரிகை :**

பதங்களினால் சக்திக்ரஹம் ஏற்படாமலேயே, வாக்யங்கள் அர்த்த போதமாகலாம் என்று சொல்லப்படுமானால், எந்த பாஷையாக இருந்தாலும், (அதை அறியாதவர்களுக்கும்) வாக்யத் திலிருந்து அதன் அர்த்தபோதம் ஏற்படுவதாகச் சொல்லநேரிடும். அதனால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்குமே? என்றால், அவ்விதம் தோஷம் ஸம்பவிக்காது. ஏனெனில், நிஷேத வாக்யத்தில் இருக்கின்ற அனாத்ம பதத்தினுடைய சக்திக்ரஹத்தினாலேயே அதிஷ்டான வஸ்து ஞானம் ஏற்படுகிறது என்பதால் இதில் அதிப்ரஸங்கதோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**ச்லோகம் :**

नञः प्रपञ्चप्रतिपादकस्य च प्रतीत्य शक्तिं व्यवहारतः स्थितः ।
पदस्य शक्नोति परं समीक्षितुं श्रुतेः प्रपञ्चप्रतिषेधमार्गतः ॥

**ச்லோகார்த்தம் :** 'நஞ்' என்ற பதம், ப்ரபஞ்சம் என்ற பதம் என்ற இவை இரண்டினுடைய அர்த்தங்கள் என்னவென்று அறிந்து வ்யவகாரம் செய்கின்றவனுக்கு அறிந்துகொள்ளமுடியும். இவ்விதம் அறிந்து கொள்ளப்படுமானால் ப்ரபஞ்ச ப்ரதிஷேதம் செய்கின்ற பதங்களினாலேயே ப்ரஹ்ம முதலான சப்தங்களுக்கு சக்திக்ரஹம் இல்லாமலேயே அர்த்தத்தை அறிந்து கொள்ளமுடியும்.

**வ்யாக்யானம் :** 'அதாத ஆதேச நேதி நேதி மூர்த்தஞ்ச, அமூர்த்தஞ்ச' என்ற வாக்யத்தி லிருந்து நஞர்த்தம் என்னவென்பதும் மூர்த்தம், அமூர்த்தம் என்பவைகளின் அர்த்தமும் அறியப் படுகிறது. இதனால், மூர்த்தமாகவும், அமூர்த்தமாகவும் இருக்கின்ற வஸ்துக்கள் எதுவுமே இல்லை யென்று ப்ரபஞ்சம் அனைத்தையும் நிஷேதம் செய்து தெரிவிப்பதன்மூலமாக நிஷேதத்திற்கு அனுயோகியாக எது இருக்கின்றதோ அதாவது எதில் இவைகள் இல்லையென்று நிஷேதம் செய்யப்படுகிறதோ அதுவே அனுயோகியாக இருக்கின்றதால் அந்த வஸ்துவையே ப்ரஹ்ம பதம் ஆத்மபதம் தெரிவிக்கின்றது. நிஷேதிக்கப்படும் வஸ்துக்கள் பரிச்சின்னமென்பது அறியப் படுவதால் இவைகளுக்கு அதிஷ்டானம் அபரிச்சின்னம் என்பது ஸ்வயமே அறியப்படுகிறது. ஆகவே 'அஸ்தூலம் ப்ரஹ்ம' 'அனனுப்ரஹ்ம' என்ற தாதி வாக்யங்களிலிருந்தும், ப்ரஹ்மமானது ஸ்தூலமில்லை, சூக்ஷமில்லை, மூர்த்தமில்லை, அமூர்த்தமில்லை என்று ஸர்வ அனாத்ம வஸ்துக்களான த்ருச்ய பதார்த்தங்கள் எல்லாவற்றையும் நிஷேதம் செய்யப்படுவதாலேயே, ப்ரஹ்ம ஸ்வரூபம் இவைகளுக்கெல்லாம் விலக்ஷணம் என்று அறியப்படுகிறது. இதனாலேயே அபரிச்சின்னமான ஆத்ம ஸ்வரூபம் ஏகம் என்பதும் அறியப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஸர்வநிஷே தங்களுக்கும் அவதியாக இருக்கின்ற அந்த ப்ரஹ்மதத்வம், அபாதிதம் என்பதும் அறியப் படுகிறது. ஆகவே சக்திக்ரஹமின்றியே வாக்யபோதம் ஏற்படலாம் என்று சொல்லப்படுவதில் அதி ப்ரஸங்கம் முதலான எவ்விததோஷமுமில்லை.

**பூர்வ :** முன்பு அகண்டார்த்தபோதம், விதிமுக வாக்யத்தினால்தான் ஏற்படுவதால் அதுவே ப்ரதானம் என்று சொல்லப்பட்டதே?

**சித்தா :** அகண்டார்த்த போதம் விதி வாக்யத்தினுல் ஸ்வதந்தரமாக போதிக்கப்படுவதால் விதி வாக்யமே ப்ரதானம் என்று சொல்லப்பட்டது. இந்த இடத்தில் ஸன்மாத்ரமான ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் நிஷேதவாக்யம் உபகாரகமாக இருக்கிறது என்றும், ப்ரஹ்மசப்தார்த்தம் நிஷேதவாக்யத்திலிருந்தே ஏற்படலாம் என்றும் சொல்லப்படுவதில் முரண்பாடு ஏதுமில்லே.

**293. அவதாரிகை :**

கீழே லிங்லோட்தவ்ய ப்ரத்யயங்களால், ப்ரவர்த்தியை நிமித்தமாகக்கொண்டு எந்த வாக்யம் அர்த்தத்தை போதிக்கின்றதோ அதுவே ப்ரமாணம் என்றும், சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யம் ப்ரமாணமில்லேயென்றும் ஆக்ஷேபிக்கப்பட்டது. இது சரியல்ல. ப்ரவர்த்தி நிமித்தங்களேப் போதிப்பதென்பது ப்ரமாணத்திற்கு காரணமில்லே. ப்ரமையை உண்டுபண்ணினுல் அதைப்ரமாணம் என்று சொல்லவேண்டும். மேலும் ப்ரவர்த்திக்கு எது விஷயமோ அதுவே (மேயமாக) அறியப்படக்கூடிய தன்மையுடைதாக இருக்கும் என்று சொல்வதும் சரியல்ல. எந்த வஸ்து அஞ்ஞாதமாக இருக்கின்றதோ அதுவே மேயமாக ஆகும். ஆகவே அஞ்ஞாதத்வம்தான், மேயத்வத்திற்குகாரணம் (அறிபடுவதற்கு காரணம்).

**ச்லோகம் :**

ब्रह्मास्मीति वचोनिविष्टपदयोर्मानं भवेदन्वयः साक्षाद्द्वयवस्तु तस्य च भवेन्मेयं ततस्तद्गतेः ।
यद्यत्र प्रमितिं करोति भवति प्रामाण्यमत्रास्य च स्पष्टं दृष्टमिदं हि युक्तिघटितं रूपे यथा चक्षुषः ॥

**ச்லோகார்த்தம் :** 'ப்ரஹ்மாஸ்மி' என்ற வாக்யத்தில், அன்விதமாக இருக்கின்ற பதங்கள், ப்ரமாணமாக இருக்கிறது. அபரோக்ஷமான அத்வைதவஸ்துவே, அதற்கு ப்ரமேயமாகிறது. ஏனெனில், அந்த பதங்களிலிருந்து அத்வைத வஸ்து ஞானம் ஏற்படுகிறது. ரூபவிஷயத்தில் சக்ஷுஸ் என்பதைப்போல், எந்த கரணமானது, எந்த விஷயஞானத்தை உண்டுபண்ணுகின்றதோ அந்த கரணமானது, அந்த, விஷயத்தில் ப்ரமாணமாகின்றது. இந்தவிஷயம் அனுபவத்தினுலும் ஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. யுக்தியுக்தமாகவும் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரவர்த்தியை உண்டுபண்ணினுல்தான் வாக்யம் ப்ரமாணமென்ருகும் என்று சொல்லமுடியாது. வஸ்து விஷயகமான ஞானத்தை எது உண்டுபண்ணுகின்றதோ அதுவே ப்ரமாணம். மஹாவாக்யங்களில் ஸாமானுதி கரண்யப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த வாக்யத்தினுல் அபேதரூபமான ஸம்பந்தம் அறியப்படுகிறது. அதனுல் ஜீவபரமாத்ம ஐக்யத்தை போதிக்கின்ற விஷயத்தில் இரண்டு பதங்களும் ஒன்றுடன் ஒன்று அன்வயித்து ஐக்ய ஞானத்தை உண்டுபண்ணுவதில் ப்ரமாணமாகின்றது. ஆகவே எதனுல் எந்த விஷயம் அறிவிக்கப்படுகின்றதோ அந்த விஷயத்தை அறிவிப்பது ப்ரமாணம். அதனுல் அறியப்படும் விஷயம் ப்ரமேயம் ஞானம் என்பது விஷயமில்லாமல் ஏற்படாது. விஷயத்தை ப்ரகாசப்படுத்துவதுதான் ஞானத்தின் ஸ்வபாவம்.

**பூர்வ :** கண் என்பது ரூபத்தை தெரிவிப்பதில் ப்ரமாணம். ஆனுல் கண்ணேத்திறந்தால் ஸர்ப்பம் தெரிகிறது. அந்த ஸர்ப்பம் உண்மையல்ல. அதனுல் ஸர்ப்பத்தை தெரிவிப்பதில் கண் என்பது ப்ரமாணமென்ருே, அந்த ஸர்ப்பம் ப்ரமேயம் என்ருே சொல்லமுடியுமா?

**சித்தா :** எந்த ப்ரமாணமானது எந்த விஷயத்தை தெரிவிக்கின்றதோ அந்த விஷயம் மறுபடி பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும். பாதிக்கப்படுமானுல் அதை ப்ரமாணமென்று சொல்ல முடியாது. அவ்விதம் பாதிக்கப்படும் விஷயத்தையும் ப்ரமேயமென்று சொல்லமுடியாது. ஆகவே

சக்ஷுராதி ப்ரமாணங்களால் ஏற்படும் எந்த விஷய ஞானம், பாதிக்கப்படாமல் இருக்கிறதோ அந்த விஷயத்தை தெரிவிப்பதில் சக்ஷுஸ் என்பது ப்ரமாணம் என்று சொல்லமுடியும். இவ்விதம் இந்த்ரிய ஜன்யஞான விஷயங்கள், சில ஸமயம் வேறு ப்ரமாணத்தினுல் பாதிக்கப்படுகின்றதால் சக்ஷுராதிகளை ப்ரமாணமில்லை என்று சொல்லநேரிடலாம். ஆனுல் வேதாந்தவாக்யஜன்ய ஞானமானது வேறு எதனுலும் பின்னுல் பாதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகையால் வேதாந்த வாக்யங்களில் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை. ஆதனுல் வேதாந்தம் ப்ரமாணம் என்பதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமே கிடையாது.

**294. அவதாரிகை :**

'ஸோऽரோதீத்' என்ற அர்த்தவாத வாக்யத்திற்கும் ஸ்வார்த்தே ப்ரமாண்யம் சொல்ல முடியுமா? என்றுல் அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

मानान्तरानधिगतं परिनिष्ठितं यद्वेदः समर्पयति चेतसि तत्परः सन् ।
तत्तथ्यमेव भवतीति समाश्रयस्व श्रेयस्करो विधिगिरोऽवगतो यथैव ॥

**ச்லோகார்த்தம் :** விதிவாக்யங்களிலிருந்து ச்ரேயஸ்கரமான (அனதிகதமானதுமான) அர்த்தம் என்பது யதார்த்தமாக அறியப்படுகிறது. அதேபோல் ப்ரமாணுந்தரங்களால் அறியப்படாத எந்த சித்தவஸ்துவை வேதம் தாத்பர்யத்துடன் போதிக்கின்றதோ அந்த வாக்யமே யதார்த்தம் என்று அறியப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'ஸோऽரோதீத்' என்ற வாக்யமானது, எந்த அர்த்தத்தை போதிக்கின்றதோ அந்த அர்த்தத்தை தெரிவிப்பதில் ச்ருதிக்கு தாத்பர்யம் கிடையாது. எந்த விஷயமானது வேறு ப்ரமாணுந்தரத்திற்கும் விஷயமாகாமல் வேதவாக்யத்திற்கு மட்டும் தாத்பர்ய விஷயமாக இருக்கின்றதோ, அந்த வஸ்து சித்தமாக இருந்தாலும், அந்த வஸ்துவை போதிக்கின்ற வாக்யமே ப்ரமாணம் என்று சொல்லப்படவேண்டும். ஆகையால் ப்ரமாணத்தினுல் தெரிவிக்கப்படும் விஷயம் சித்தமாக இருந்தாலும்சரி, சாத்யமாக இருந்தாலும் சரி, இதுவரை வேறு எதனுலும் அறியப் படாததாகவும் எதனுலும் பாதிக்கப்படாமலும், தாத்பர்ய விஷயமாகவும் எந்த வாக்யமானது தன் அர்த்தத்தை போதிக்கின்றதோ, அந்த வாக்யமே ப்ரமாணம் என்று சொல்லவேண்டும். கர்மகாண்ட வாக்யங்களும், வேறு ப்ரமாணத்தினுல் அறியப்படாத ஸ்வர்க்காதி பலன்களையும் அதற்குரிய ஸாதனமான யாகாதிகளையும், போதிக்கின்றது என்ற காரணத்தினுல்தான் கர்ம காண்ட வாக்யங்களுக்கும் ப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. அதாவது அனதிகதார்த்தமானதும் பலமுடையதும், தாத்பர்யவிஷயத்தை போதிப்பதாகவும் இருப்பதால்தான் கர்மகாண்டத்திலுள்ள விதிவாக்யங்கள் ப்ரமாணமாகின்றது.

**பூர்வ :** ஸோऽரோதீத் என்ற வாக்யமானது 'அக்னி பகவான் அழுதார்' என்று இதுவரை அறியப்படாத ஒன்றைத்தானே தெரிவிக்கிறது? அதேபோல், அவர் அழவில்லையென்று மறுபடிவேறு எதனுலும் பாதிக்கப்படவில்லை என்று சொல்லப்பட்டபோதிலும் ஸ்வார்த்தேப்ரமாண்யமில்லை என்று சொல்லப்படுகிறது. ஏனெனில், இந்த வாக்யம் கார்யம் எதையும் போதிக்கவில்லை என்பதாலேயே ப்ராமாண்யமில்லை என்று சொல்லப்படுகிறது. அதேபோல் 'ஸப்த த்வீபா வஸுமதி' என்ற வாக்யம், பூமியைச்சுற்றிலும் ஏழுத்வீபங்கள் இருக்கிறதென்று தெரிவிக்கின்றது. இந்த வாக்யமும் ப்ரவ்ருத் தியையோ நிவ்ருத்தியையோ போதிக்காததால் ப்ரமாணமில்லை என்று சொல்லவேண்டும். இதே போல் சித்தவஸ்து போதகமான வேதாந்தவாக்யமும் ப்ரமாணமில்லை என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. 'ஸோऽரோதீத்' என்ற வாக்யத்தினுலும் 'ஸப்தத்வீபா வஸுமதி' என்ற வாக்யத்தினுலும் எந்த் அர்த்தம் அறியப்படுகிறதோ அந்த அர்த்தத்தை அறிந்து

கொள்வதால் பலன் ஏதும் கிடையாது என்பதால் அவைகள் அர்த்தவாதம் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் க்ரியையை போதிக்காததால் அந்த வாக்யங்கள் ப்ரமாணமில்லை என்று சொல்வதுசரியல்ல அனதிகதமான, அபாதிதமான பலம் உடையதான அர்த்தத்தை எந்த வாக்யம் போதிக்கின்றதோ அதுவே ப்ரமாணம் என்று ப்ரமாண லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, சித்தவஸ்துவை போதிக்கின்றவாக்யமும், அனதிகதார்த்தமாக அபாதிதமாக பலவத் அர்த்தபோதகமாக இருக்குமானால் அந்த வாக்யம் ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது.

**பூர்வ :** அப்படியானால் 'வாயுர்வை க்ஷேபிஷ்ட்டா' என்பதுபோன்ற அர்த்தவாத வாக்யங்களும் எந்த கர்மாவை விதிக்கின்றதோ அந்த கர்மாவின் பலனை உத்தேசித்தே விதிக்கப்படுகின்றதால் அவ்விதம் வாயுதேவதாத்மகமான கர்மாவில் வாயுவை ஸ்துதிக்கின்ற வாக்யமும் சேர்ந்து பலவத்தாக ஆகின்றதால், ப்ரஹ்மபோதகவாக்யம்போல், அர்த்தவாத வாக்யங்களுக்கும் ப்ராமாண்யம் உண்டு என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது ஏனெனில் ப்ரஹ்மத்தை போதிக்கின்ற வாக்யங்களினால் ஏற்படும் ஞானத்தினாலேயே அஞ்ஞான நிவர்த்தி என்ற பலம் உடனே ஏற்படுகிறது. அதுபோல் அர்த்தவாத வாக்யங்களுக்கு ஸ்வார்த்தேபலம் கிடையாது. மேலும் கர்ம காண்டத்திலுள்ள விதிவாக்யங்கள் ப்ரயோஜனமுடையதாகவும், ச்ரேயஸ்ஸை கொடுக்கக் கூடியதுமான தர்மங்களை போதிக்கக்கூடியதாக இருக்கின்றதால் ப்ரமாணமாகின்றது. இவ்விதம் விதிவாக்யம் தர்மங்களை தெரிவிப்பதால் எப்படி ப்ரமாணமாகின்றதோ அதுபோல் சித்தவஸ்துவான ப்ரஹ்மதத்வத்தை போதிக்கின்ற விஷயத்தில் வேதாந்தவாக்யம் ப்ராமாண்யமாகிறது. ஆகவே தாத்பர்யவிஷயமான, தனது அர்த்தத்தை போதிப்பதால் கர்மகாண்டம் ஞானகாண்டம் இரண்டும் ப்ரமாணமாக ஆகிறது.

**295. அவதாரிகை :**

ப்ரஹ்மமென்பது அஞ்ஞாதம் என்று சொல்லப்பட்டபோதிலும்-வேதம் என்ற ப்ரமாணத்திற்கு ப்ரமேயமாக ஆகமுடியாது. ஏனெனில் கார்யமாக இல்லாததால், ப்ரஹ்மத்தை போதிக்கின்றவாக்யம் ப்ரமாணம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், அஞ்ஞாதமாக இருந்த போதிலும், ஸமன்வயமாக இருந்தாலும், (சித்த வஸ்துவாக இருப்பதால்) கார்யமாக இல்லாததால் ப்ரமாணமாக ஆகாது. இந்த ஆக்ஷேபமும் சரியல்ல.

**ச்லோகம் :**

निष्पन्नमेव यदि वा पुरुषप्रयत्ननिष्पाद्यमस्तु तदनङ्गमिह प्रमेये ।
एवं विधिर्भवतु शब्दसमन्वयो वा प्रामाण्यकारणमिदं न वदन्ति सन्तः ॥

**ச்லோகார்த்தம் :** சாஸ்திரத்தினால் தெரிவிக்கப்படும் விஷயமானது சித்தமாகவும் இருக்கலாம், புருஷப்ரயத்னத்தினால் ஸாத்யமாகவும் இருக்கலாம். ஆனால் (சித்தம் சாத்யம் என்பது) இவைகளை ப்ரமேயத்வத்திற்கு காரணமாகச் சொல்லமுடியாது. அதேபோல் வாக்யமானது, விதிரூபமாகவோ ஸமன்வயரூபமாகவோ இருக்கலாம் இவைகளை ப்ராமாண்யத்திற்கு காரணமாக வித்வான்களால் சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** சாஸ்திரத்தினால் தெரிவிக்கப்படும் விஷயம் என்பது ஸாத்யமான தர்மமா? சித்தமான ப்ரஹ்மமா? என்ற கேள்விக்கே இடமில்லை. அதாவது சாஸ்திரார்த்த விஷயத்தில் தர்மம் என்ற க்ரியாரூபமான விஷயம்தான் ப்ரமேயம் என்றோ, அல்லது சித்தமான ப்ரஹ்ம விஷயம்தான் ப்ரமேயம் என்றோ இருந்தால்தான் சப்தம் என்பது ப்ரமாணமாகும் என்று சொல்வதற்குமுடியாது. ப்ரமேயத்வம் என்பதற்கு நிஷ்பன்னத்வம் என்பதோ நிஷ்பாத்யத்வம் என்பதோ காரணமாக ஆகாது. ஆகவே அனதிகதமாகவும் தாத்பர்ய விஷயமாக இருப்பதும்

எதுவோ அதுவே ப்ரமேயம் என்று சொல்லவேண்டும். ஆகையால் ப்ரமாணம் என்று சித்திப்பதற்கு விதிவாக்யமா? சித்த வஸ்து போதகவாக்யமா? என்ற கேள்விக்கே இடமில்லை. அஜ்ஞாதார்த்தமாகவும் தாத்பர்யார்த்த போதகமாகவும் இருக்குமானல் அந்த வாக்யம் அந்தவிஷயத்தில் ப்ரமாணம் என்றே சொல்லவேண்டும் இவ்விதமில்லாமல் வாக்யமானது லிங்லோட் தவ்யப்ரத்யயகடிதமாக, புருஷப்ரயத்னத்தினுல் சாதிக்கக்கூடிய க்ரியையை போதிக்கக்கூடியதாக இருந்தால்தான் ப்ரமாணமாகும் என்று சொல்வது சரியல்ல. புருஷப்ரயத்ன சாத்யமாக இல்லையென்பதற்காகவோ சோதனுவிஷயத்வமாக (விதி வாக்யமாக) இல்லையென்ற காரணத்திற்காகவோ, வாக்யத்திற்கு அப்ராமாண்யம் சொல்ல முடியாது. ப்ரமாணம் என்று சித்திப்பதற்கு வேண்டிய 'அஜ்ஞாதத்வம்' 'தாத்பர்யவிஷயத்வம்' என்பது சித்தமான ப்ரஹ்மவிஷயத்திலும் இருக்கிறது. தர்மத்தைபோதிக்கின்ற வாக்யத்திலும் இருக்கின்றது. ப்ரமேயமான அர்த்தம் சித்தவஸ்துவா? அல்லது க்ரியாஸாத்யமா? என்ற கேள்விக்கே இடமில்லை, என்பதால் விதிபரமான வாக்யமானுலும்சரி சித்தவஸ்து பரமான வாக்யமானுலும் சரி இரண்டும் ப்ரமாணம் என்றே சொல்லவேண்டும்.

**296. அவதாரிகை :**

ஒரே வேதமானது ஒரு பாகத்தில் ஸாத்யமான விஷயத்தையும் ஒரு பாகத்தில் சித்த வஸ்துவையும் இரண்டுவிதமான விஷயத்தை போதிக்கின்றது என்று எப்படிச்சொல்லமுடியும்? ஆகையால் கர்மகாண்டவாக்யங்களும் வேதாந்தவாக்யங்களும் கார்யபரமான விஷயத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் இரண்டு காண்டங்களுக்கும் விஷயம் ஒன்றே என்று சொல்வது தான் பொருத்தமாக இருக்கும். ஆகவே ஸர்வம் வாக்யம் க்ரியாபோதகம் என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் ஆக்ஷேபிப்பது சரியல்ல.

**ச்லோகம் :**

नीलैकगोचरतया नियतं न चक्षुर्नाप्यस्य पीतविषये नियमोऽस्ति शक्तेः ।
तद्वन्न वेदवचसामपि शक्तियोगः कार्यादिवस्तुषु कथञ्चन पक्षपाती ॥

**ச்லோகார்த்தம் :** சக்ஷுஸ் என்ற ப்ரமாணமானது நீல குணத்தைத்தான் தெரிவிக்கும் என்ரூே, அல்லது மஞ்சள் என்ற கலரைத்தான் தெரிவிக்கும் என்ரூே, நியமம் சொல்வதற்கு முடியாது. அதேபோல் வேதம் என்ற ப்ரமாணமும் (வேத வாக்யங்களின் சக்தியும்) கார்யபரமான விஷயத்தை மட்டுமே தெரிவிக்கும் என்று சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்திற்கு ரூபம் என்பதே ப்ரமேயமாக ஆகும் என்று சொல்லவேண்டுமேயன்றி அந்த ரூபமானது நீலமாக இருந்தால்தான் சக்ஷுஸ் என்பது தெரிவிக்குமென்ரூே அல்லது மஞ்சளாக இருந்தால்தான் தெரிவிக்குமென்ரூே சொல்வது சரியல்ல. அதேபோல் வேதவாக்யங்கள் அதன் அர்த்தத்தை தெரிவிப்பதில் அந்த அர்த்தம் கார்யமா? அல்லது சித்தமா? என்பதைக்கொண்டு, அந்த சப்தத்திற்கு அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்ற சக்தி இருப்பதாகச் சொல்வது பொருந்தாது. ஆகவே, வேதமானது போதிக்கின்ற விஷயம் அஜ்ஞாதமாகவும் தாத்பர்ய விஷயமாகவும் இருக்கவேண்டுமென்பதே காரணம். ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களானுலும் சரி சப்தம் என்ற வேத ப்ரமாணமாக இருந்தாலும் சரி. அனதிகதமாக அபாதிதமாக தாத்பர்ய விஷயமாக இருக்குமானுல் அதுவே ப்ரமாணமாகும் என்று சொல்லப்படுமானுல் வேதத்திலுள்ள எல்லா வாக்யங்களுக்கும் இந்த நியமம் பொருந்துகின்றது.

**297. அவதாரிகை :** ஜைமினி மஹரிஷியும் விதிவாக்யமாக இருந்தால்தான் ப்ராமாண்யம் உண்டு என்று தெரிவிக்கவில்லை. எந்த வாக்யம் வேறு எதையும் அபேக்ஷிக்காமல் தன் அர்த்தத்தை போதிக்கின்றதோ அதுவே ப்ரமாணம் என்று ஜைமினியினுலும் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

यद्बादरायणमतं परिगृह्य पूर्वं श्रेयस्करेऽनधिगते खलु चोदनायाः ।
प्रामाण्यमुक्तमिदमस्य समन्वयस्य वस्तुस्वरूपकथनेऽप्यविशिष्टमस्ति ॥

**ச்லோகார்த்தம் :** பூர்வ மீமாம்ஸையிலும், பாதராயணமதத்தை ஒப்புக்கொண்டு, ச்ரேயஸ்கரமாகவும், அனதிகதமாகவும் இருக்கின்ற விஷயத்தில் வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் உண்டு என்று (அஞ்ஞாதமான தர்மத்தை போதிக்கின்ற) விதி வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. இதேமுறையில் வஸ்து ஸ்வரூபத்தை தெரிவிப்பதில் ஸமன்வயமாகின்ற வேதாந்த வாக்யங்களுக்கும் ப்ராமாண்யம் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஆம்னயஸ்யக்ரியார்த்தத்வாத் ஆனர்த்தக்யம் அததர்த்தானும் என்ற ஜைமினியின் சூத்ரமானது வேதங்கள் எல்லாம் க்ரியைத்தான் போதிக்கின்றது என்றும் க்ரியாபோதகமாக இருப்பதால்தான் வேதம் ப்ரமாணமாகிறது என்றும் இந்த சூத்ரத்தினுல் தெரிவிக்கின்ருர். ஆகவே அஞ்ஞாத ஞாபனம் ப்ரமாணம் என்று ஜைமினியினுலும் ஒப்புக்கொள்ளப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** "ஔத்பத்திகஸ்து சப்தஸ்ய" அர்த்தேன ஸம்பந்த: தஸ்ய ஞானம் உபதேச:, அவ்யதிரேகச்ச அர்த்தேன அனுபலப்தே தத்ப்ரமாணம்" என்று ஜைமினியினுல் சொல்லப் பட்ட சூத்ரமானது சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தம் நித்யம் என்றும், அனுபலப்தமான அர்த்தத்தில் சாஸ்திரமே ப்ரமாணமென்றும், வேறு எதையும் அபேக்ஷிக்காமல் வஸ்து ஞானத்தை போதிப்பது சாஸ்திரம் என்றும் தெரிவிக்கின்றது. 'ஆம்னயஸ்ய க்ரியார்த்தத்வாத்' என்ற சூத்ரம் சொல்லப்பட்டபிறகு 'அர்த்தேன அனுபலத்தே தத்பரமாணம்' என்று ஜைமினியானவர் இந்த சூத்ரத்தினை சொல்லியிருக்கின்ருர். ஆகவே பாதராயண மதத்தில் சொல்லப்படும் அஞ்ஞாதஞாபகம் ப்ரமாணம் என்பதை ஜைமினியினுலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது என்றே சொல்லவேண்டும். மேலும், மற்ருேர் இடத்தில் அனதிகதமான தர்மம் என்பதை வேறு எதையும் அபேக்ஷிக்காமல் வேதம் போதிக்கின்றது என்று அனதிகதார்த்த போதகத்வம் அனபேக்ஷத்வம் என்ற இரண்டையும் ப்ரமாண லக்ஷணமாக ஜைமினியினுலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே ப்ரமாண லக்ஷணம் பூர்ணமாக பொருந்தி இருக்கின்ற வேதாந்த வாக்யம் ப்ரமாணம் என்பதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**பூர்வ :** அப்படியானுல் 'ஆம்னயஸ்ய' என்ற சூத்ரத்தினுல் க்ரியாபரமான வாக்யமே ப்ரமாணம் என்று சொல்லப்படுவதின் தாத்பர்யம் என்ன?

**சித்தா :** கர்ம காண்ட வாக்யங்களில் அர்த்தவாதவாக்யங்களும் இருக்கின்றது. அந்த வாக்யங்களுக்கு ஸ்வயமே ப்ரயோஜனம் ஏதுமில்லை. அதனுல் அர்த்தவாத வாக்யங்கள் க்ரியாபரமான வாக்யங்களுடன் சேர்ந்தே ப்ரமாணமாகிறது என்று அந்த வாக்யங்களுக்கு ப்ரமாண்யம் சித்திப்பதற்காக சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி வாக்யம் க்ரியாபரமாக இருந்தால்தான் ப்ரமாணமாகும் என்று ஜைமினியினுல் சொல்லப்படவில்லை.

**298. அவதாரிகை :**

மேலும் –

**ச்லோகம் :**

मानान्तरानधिगतं त्ववगम्यमानं मेयं भवेदिति हि मेयविदो वदन्ति ।
मानान्तरानधिगते विषयेऽवबोधं कुर्वत्प्रमाणमिति मानविदां प्रसिद्धिः ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு ப்ரமாணத்திஞல்மட்டும் அறியப்படுவதும் வேறு ப்ரமாஞந்தரங்களிஞல் அறியப்படாததுமான வஸ்து எதுவோ அதுவே ப்ரமேயம் என்று, ப்ரமேயத்தை அறிகின்ற வித்வான்களால் சொல்லப்படுகிறது. அதேபோல் மாஞந்தரத்திஞல் அறியப்படாத விஷயத்தின் ஞானத்தை எது உண்டுபண்ணுகின்றதோ அதுவே ப்ரமாணமென்று ப்ரமாணத்தை அறிகின்ற வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கீழே, பாதராயணரால் சொல்லப்பட்ட ஸூத்ரத்தை ஜைமினியிஞல் எப்படி ஒத்துக்கொள்ளப்படுகிறதோ அதுபோல் ஜைமினி ஸூத்ரங்களுக்கு வ்யாக்யானம் செய்திருக்கின்ற ஸபரஸ்வாமிகளாலும் அஞ்ஞாதார்த்த ஞாபகம் ப்ரமாணம் என்று ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. மேலும் அஞ்ஞாதமாக இருந்து, அறியப்படும் வஸ்து எதுவோ அதுவே மேயம் என்றும், அனதிகதமான விஷயத்தை (அஞ்ஞாதார்த்தத்தை) தெரிவிப்பது எதுவோ அதுவே ப்ரமாணம் என்று பாட்டமதஸ்த்தர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

**299. அவதாரிகை :**

இதுவரை விசாரிக்கப்பட்டதிலிருந்து தர்மம் என்பதும், வேறு ப்ரமாணத்திஞல் அறியக் கூடியதல்லவென்றும் வேதம் என்ற ஒரே ப்ரமாணத்திஞல்தான் அறியப்படவேண்டும் என்றும் நிச்சயம் செய்யப்பட்டதால், தர்மவிஷயம் என்பதே மேயம் அந்த தர்ம விஷயத்தை போதிக்கின்ற வேதமே ப்ரமாணம் என்று சொல்லப்பட்டது. அதேபோல் வேதாந்த வாக்ய (ஸமன்வயத்)த்திஞல் அறியப்படும் ப்ரஹ்மமென்பது மாஞந்தர அனதிகதம். உபநிஷத் என்ற ப்ரமாணத்திஞல்தான் அறியப்படவேண்டும். ஆகவே தர்மவிஷயத்தில் சொல்லப்பட்ட தன்மைகள் அனைத்தும் ப்ரஹ்ம விஷயத்திலும் பொருந்தி இருக்கின்றதால், ப்ரஹ்மமென்பது மேயம் என்றும், அதை போதிக்கின்ற (வேதம்) வேதாந்தம் ப்ரமாணம் என்றும் ஒத்துக்கொள்ளவேண்டும்.

**ச்லோகம் :**

एवं सतीह यदि वेदशिरो न मानं श्रेयस्करे विधिगिरोऽपि न मानता स्यात् ।
श्रेयस्करे विधिगिरो यदि मानता स्याद्वस्तुस्वरूपकथनेऽपि समन्वयस्य ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் ச்ரேயஸ்கரமான வஸ்துஸ்வரூப விஷயத்தில் வேதாந்தம் ப்ரமாணம் இல்லையென்று சொல்லப்படுமாஞல் விதிவாக்யங்களும் ச்ரேயஸ்கரமான விஷயத்தில் ப்ரமாணமாக ஆகமுடியாது. ச்ரேயஸ்கரமான விஷயத்தில் விதிவாக்யங்களுக்கு ப்ராமாண்யம் உண்டு. என்று சொல்லப்படுமாஞல் வஸ்துஸ்வரூபத்தை தெரிவிக்கின்றதில் ஸமன்வயமாகின்ற வேதாந்த வாக்யங்களுக்கும் ப்ராமாண்யம் சொல்லப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞாதார்த்தத்வம் என்பது தர்மத்திலும் இருக்கிறது. ப்ரஹ்மத்திலும் இருக்கின்றது. ஆகவே அனதிகதத்வம், தாத்பர்யவிஷயத்வம் என்ற இரண்டும் இரண்டிலும் இருக்கின்றது. ஆகவே ப்ரமேயத்வத்திற்கு எது காரணமோ, அந்த காரணம் இரண்டிலும் இருக்கின்றதால் தர்மமென்பதும் ப்ரஹ்மமென்பதும் ப்ரமேயம் என்றே வேதங்களை அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே தர்மவிஷயத்தில் விதிவாக்யம் ப்ரமாணம் என்று சொல்பவர்கள், வேதாந்த வாக்யமும் ப்ரமாணமென்றே ஒத்துக்கொள்ளவேண்டும். அவ்விதம் ஒத்துக்கொள்ளாவிடில், கர்மகாண்ட வாக்யங்களும் ப்ரமாணமில்லை என்று சொல்ல நேரிடும். ஆகையால் அனதிகத அபாதித பலவத் அர்த்த போதகமான வாக்யம் எதுவோ அந்த வாக்யம்

ப்ரமாணம் என்றும் அந்த வாக்யத்திஞல் அறிவிக்கப்படும் விஷயம் எதுவோ அது ப்ரமேயம் என்றும் சொல்லவேண்டுமேயன்றி, வேறு எந்த முறையிலும் ப்ராமாண்யம் சொல்வதற்குமுடியாது.

**300. அவதாரிகை :**

ப்ரயோஜனமுள்ளதான அர்த்தத்தைபோதிக்கின்றதால்தான் சப்தத்திற்கு ப்ராமாண்யம் என்று 'பலவத் அர்த்தபோதகம் ப்ரமாணம்' என்று ப்ரமாணத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஆகவே வஸ்துமாத்ரமாக போதிக்கின்றவாக்யம் பலவத் அர்த்த போதகமாக ஆகாது. ஆஞல் க்ரியாபரமான விதிவாக்யங்கள் எந்த கார்யத்தை விதிக்கின்றதோ அந்த கார்யத்தை செய்வதால் சுகம் ஏற்படுகிறது என்றும், எந்தக் கார்யத்தைச் செய்யக்கூடாது என்று தெரிவிக்கின்றதோ, அதைச்செய்தால் துக்கம் ஏற்படும் என்றும் விதிவாக்யமானது பலாபலன்களை தெரிவிக்கின்றது. ஆகவே, விதிவாக்யம் சுகதுக்கங்களுக்கு ஸாதனம் எதுவோ அதை தெரிவிக் கின்றதால் அது ப்ரமாணம் என்று சொல்லலாம் அதுபோல் வேதாந்தவாக்யம் தெரிவிக்காததால் வஸ்துமாத்ர போதகமாக இருப்பதால் விதிவாக்யம் போல் ஸமன்வயவாக்யமும் ப்ரமாணம் என்று சொல்வதற்குமுடியாது.

**ச்லோகம் :**

वस्तुस्वरूपकथने ननु नास्ति पुंसः किञ्चित्फलं विधिवचःसु पुनः प्रवृत्तिः ।
सम्भाव्यते फलमतः किल वस्तुनिष्ठं वाक्यं विधिस्तुतिपरं त्विति जैमिनीयाः ॥

**ச்லோகார்த்தம் :** கேவல வஸ்து ஸ்வரூபத்தை உபதேசிப்பதால் அதை அறிகின்ற புருஷனுக்கு பலன் ஏதும் கிடையாது. ஆஞல் விதிவாக்யங்களிஞல் புருஷனுக்கு ப்ரவ்ருத்தியும் ஏற்படுகிறது பலனும் ஏற்படுகிறது. ஆகவே வஸ்து நிஷ்ட்டவாக்யங்களெல்லாம் விதிவாக்யத்தை ஸ்துதிப்பதில்தான் தாத்பர்யமுடையதாக இருக்கிறது என்று ஜைமினியைச் சேர்ந்தவர்களால் (பூ.மீ.) சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** சப்தம் என்பது ப்ரயோஜனமுள்ள அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொன்ஞல்தான், அதைப்ரமாணம் என்று சொல்லலாம். 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய' என்ற வாக்யம், அத்யயனம் செய்த பிறகு அதஞல் விதிக்கப்படும் கார்யங்களை அறிந்து அந்த கார்யங்களைச் செய்தால்தான் அதற்குரியபலன் சித்திக்கும் என்று அறிவிக்கின்றது ஆகவே வேதம் என்ருலே, அதுபலமுடைய விஷயத்தையே தெரிவிக்கவேண்டும். ப்ரயோஜனமில்லாத விஷயத்தை தெரிவிக்குமாஞல் அதை அர்த்தவாதவாக்யம் என்றே சொல்லவேண்டும் புருஷனுடைய ப்ரயத்னமில்லாமல், வஸ்துஸ்வரூபமாத்ரம் அறியப்படுமாஞல் அதஞல் எவ்வித ப்ரயோஜனமும் ஏற்படாது ஆகவே வேதாந்தவாக்யம் ப்ரமாணமாக ஆகாது என்று பூமீமாம் ஸகர்களால் சொல்லப்படுகிறது.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுமாஞல் வேதத்திலுள்ள வஸ்துநிஷ்ட்டமான வாக்யங்களுக்கு கதிஎன்ன?

**பூர்வ :** அந்த வாக்யங்கள், விதிக்கப்படும் கர்மாவிற்கு கர்த்தாவாக இருக்கின்ற புருஷனேயே ஸ்துதி செய்கிறது என்றே சொல்லவேண்டும். ஆகவே ஸ்துத்யர்த்தமாக இருந்து விதிவாக்யத்திற்கு (ஸேஷமாக) அங்கமாக ஆகின்றதால் அந்த வாக்யங்களும் ப்ரமாணமாக ஆகின்றது.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படும் பூர்வமீமாம்ஸகர்கள் பக்ஷத்தை ஒப்புக்கொள்ள முடியாது. என்பதையே இந்த ச்லோகத்தில் 'கில' என்ற பதத்திஞல் தெரிவிக்கப்படுகிறது.

**301. அவதாரிகை :**

வேதாந்தவாக்யங்கள் க்ரியையை போதிக்கவில்லையென்பதற்காக, அந்தவாக்யங்கள் ப்ரயோஜனமில்லை என்று சொல்வதற்குமுடியாது. சித்தவஸ்துவை போதிக்கின்றவாக்யமாக இருந்தாலும் அவைகள், பலமுள்ளதாகவும், அர்த்தபோதகமாகவும் இருக்கின்றதால் அவைகளுக்கும் ப்ராமாண்யம் உண்டு என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स्यादेतदेवमनवद्यपुमर्थसिद्धिर्वेदान्तवेद्यविषयावगतौ न चेत्स्यात् ।
स्वाराज्यमत्र कबलीकृतभोगभूमिसंपूर्णमस्य विदुषो भवतीति दृष्टम् ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்த வேத்யமான ஆத்மவிஷயத்தை அறிவதன்மூலம், நிர்த்தோஷமான புருஷார்த்தம் அடையப்படவில்லை என்று இருக்குமானால்தான், வேதாந்தம் ப்ரமாணமில்லை என்று சொல்லமுடியும். ஆனால் வித்வான்களுக்கு ஸ்வர்க்காதி பலங்களை கபளீக்ருதம் செய்யக்கூடிய பரிபூர்ணமான ஸ்வாராஜ்யம் கிடைக்கின்றது என்பது அனுபவசித்தமாக இருக்கிறது.

**வ்யாக்யானம் :** வேதம் என்பது, ப்ரயோஜனமான அர்த்தத்தை போதிக்கின்றது என்பது சித்தமானால்தான், அது ப்ரமாணமென்று சொல்வதற்குமுடியும். ஆனால் வேதாந்தவாக்யங்கள் சித்தவஸ்துவை போதிக்கின்றதால், அதற்கு பலன் கிடையாது. அதனால் சித்த போதகமானவாக்யம் ப்ரமாணமில்லை என்று செய்யப்படும் ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில், வேதாந்தவாக்யத்தினால் போதிக்கப்படும் ப்ரஹ்மஞானத்திற்கே ஸ்வராஜ்யம் என்ற ஸம்பூர்ணமான பலன் சித்திக்கின்றது. ஞானம் ஏற்பட்டால், ஸ்வராட்டாக ஆகிறான் என்று ச்ருதி வாக்யமும் 'ஸ ஸ்வராட் பவதி' என்று தெரிவிக்கின்றது. அதனால் சித்தவஸ்துவை போதிக்கின்ற வாக்யத்திற்கு பலன் இல்லை என்று எப்படிச் சொல்லமுடியும்?

**பூர்வ :** விஷயம் என்பதே இல்லாத மோக்ஷசுகம் என்பதை அடைவதால் என்ன ப்ரயோஜனம்? அதனால் மோக்ஷசுகம் என்பதை சுகம் என்றே சொல்லமுடியாது.

**சித்தா :** இவ்வித ஸந்தேகத்தை நிவர்த்திப்பதற்காகவே, ச்லோகத்தில், 'கபளீக்ருத போகபூமி' என்ற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஸ்வர்க்கம் முதலான போகங்களினால் ஏற்படும் ஆனந்தத்தை கபளீகாரம் செய்து (விழுங்கி) அதற்கும் மேலான ஆனந்தம் என்பது ப்ரஹ்ம ஞானத்தினால் ஏற்படுகிறது என்று தெரிவிக்கப்படுகிறது. மோக்ஷமென்ற ஆனந்தத்தின் துளிகள்தான் மற்ற ஆனந்தங்கள் என்று ச்ருதியே தெரிவிக்கின்றது. ஆகையால் யாகாதிகளால் கிடைக்கின்றபலனும் பூர்ணப்ரயோஜனம் என்று சொல்லமுடியாது. 'ஸ்வாத்யாயோ' என்ற விதிவாக்யத்திற்கும் வேதாந்தத்திற்கு ப்ரமாண்யம் சொன்னால்தான் பூர்ணமான ப்ரயோஜனம் என்பது சித்திக்கும். மேலும் வேதாந்த வாக்யத்தினால் ஏற்படும் ப்ரஹ்மஞானம் என்பதே தோஷஸம்பந்தமற்ற ஆத்மானந்தம் என்ற பலனைக்கொடுக்கின்றது. ஸ்வர்க்காதி பலன்களால் ஸம்பூர்ணமான ஆனந்தம் கிடைக்காது என்று வித்வான்களின் அனுபவத்தினாலும் அறியப்படுகிறது. ஆகவே, போகபூமி என்று சொல்லப்படும் ஆனந்தம் எல்லாமே, ஸ்வராஜ்யம் என்று சொல்லப்படும் ஸம்பூர்ண ஆனந்தத்திற்கு உட்பட்டதுதான் என்பதை அனேக ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. அதாவது, 'ப்ரஹ்மவித் ஆப்னோதிபரம்' என்றும், 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி' என்றும், 'ஸ்வஸ்வராட்பவதி' என்றும் 'ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான்ந பிபேதிகுதச்சன' என்றும் உபநிஷத்வாக்யங்கள் எல்லாம், மோக்ஷானந்தமே, மஹத்தான ஆனந்தம் என்று தெரிவிக்கின்றதால், இதைவிட வேறு என்ன ப்ரயோஜனம் இருக்க முடியும்?

**302. அவதாரிகை :**

ஸ்வராஜ்யத்தை அடைந்தவனுக்கும், 'ஸயதி பித்ருலோககாமோ பவதி' என்று பித்ரு லோக தர்சனமும் கிடைக்கும் என்று சாந்தோக்யவாக்யமும் தெரிக்கின்றது. அதனுல் ஸ்வாராஜ்யம் என்ற மோக்ஷசுகத்தைக்காட்டிலும், ப்ரஹ்மலோகாதிகளினுல் அடையப்படும் சுகம் அதிகம் என்றே அறியப்படுகிறது. அதனுல் எல்லாசுகங்களும் மோக்ஷசுகத்தில் அடங்கியது தான் என்று எப்படிச்சொல்வது? என்ருல்,

**ச்லோகம் :**

यस्यापि विप्लुषि कृतार्थतया निषण्णाः शक्रादयो जलचरा इव सागरस्य ।
प्रत्यक्स्वभावकमपास्तसमस्तदुःखं तद्वैष्णवं सुखमवाप्तवतः किमन्यत् ॥

**ச்லோகார்த்தம் :** ஸமுத்ரத்திலுள்ள மீன்களைப்போல், இந்த்ராதி தேவர்கள் ப்ரஹ்மானந்தத்தின் திவலைகளான (ஸ்வர்க்காதி விஷய) சுகங்களை அடைந்தே க்ருதார்த்தர்களாக இருக்கின்ருர்கள் என்ருல், ப்ரத்யக் ஸ்வரூபமாகவும், ஸர்வதுக்க ரஹிதமானதுமான அந்த வைஷ்ணவசுகத்தை அடைந்தவனுக்கு வேறு அடையப்படவேண்டிய சுகம் என்ன இருக்கிறது?

**வ்யாக்யானம் :** ஸமுத்ரம் போன்றது ப்ரஹ்மானந்தம். அந்த ஸமுத்ரத்தின்திவலைகள் போன்றது விஷயானந்தம். ஆகவே ஸ்வர்க்காதி லோக போகமான சுகங்கள் எல்லாமே ப்ரஹ்மானந்தத்தின்லேசம் தான் என்ருலும், இந்த ஆனந்தமே பேரானந்தம் என்று இந்த்ராதி தேவர்களெல்லாம் நினைத்து, கடலிலுள்ள ப்ராணிகள் எப்படி ஜலத்தின் துளிகளை குடித்து அதையே மஹத்தானசுகம் என்று நினைத்து மகிழ்ந்து ஜீவத்திருக்கின்றதோ அதுபோல் விஷய சுகத்திலேயே திளைத்து தங்களை க்ருதார்த்தர்கள் என்று நினைப்பதுடன் அந்த சுகங்களுக்கு ஏதும் பங்கம் ஏற்படக்கூடாது என்று அதை ரக்ஷிப்பதிலேயே கருத்துடையவர்களாய் இருக்கின்ருர்கள். ஸமுத்ரஜலம் போன்ற அகண்ட ஆனந்தம் என்பது தன்னுடைய ஸ்வரூபசுகமாகவே இருந்தும் அதை அடைய விரும்பாமல் துக்கஸம்பந்தமுள்ள விஷய சுகத்திலேயே திளைத்து அனுபவித்துக் கொண்டிருக்கிருர்கள். ஆனுல் விஷய சுகங்கள் தாரதம்யமுள்ளது, அநித்யம், துக்க கலப்புடையதாக இருக்கிறது என்பதை அறிந்த வித்வான்கள், அவைகளை அறவே ஒழித்து ப்ரத்யகாத்மாவே ப்ருஹ்மமென்று அறிந்து பேரானந்தத்தில் திளைத்திருக்கின்ருர்கள். இவ்விதம் ப்ரத்யகாத்மாவே அகண்ட ஆனந்த ஸ்வரூபம் என்று அபரோக்ஷமாகவே அறியப்படுவதால் இந்த ப்ரஹ்மானந்தம் பரோக்ஷமுமில்லை, தூரமுமில்லை. ப்ரத்யகாத்மாவைக் காட்டிலும் அபரோக்ஷமான வஸ்து எதுவுமே கிடையாது. ஆகவே ப்ரஹ்மலோக ப்ராப்தியினுல் ஏற்படும் பிதுர்லோகாதி தர்சனங்கள் எல்லாம் ஸகுண உபாஸனுபலனுக ஏற்படுகிறது. அந்த வாக்யங்கள் அர்த்தவாத வாக்யங்கள். ப்ரஹ்மானந்தம் என்ற ப்ரஹ்மஞானபலனை அடைந்தவனுக்கு, அல்ப்பலமான இவைகளில் விருப்பம் என்பதே ஏற்படாது. அகண்டானந்தம் என்ற மோக்ஷசுகத்தை அடைந்தவன் வேறு எதை விரும்பமுடியும் எதையும் விரும்பமாட்டான் என்பதை ச்ருதிவாக்யங்கள் ஸ்ம்ருதி வாக்யங்கள், எல்லாமே தெரிவிக்கின்றது. "ஏதஸ்யைவாSஆனந்தஸ்யான்யானிபூதானி மாத்ராம் உபஜீவந்தி" என்றும் "ஸோSஸ்னுதேஸர்வான் காமான் ஸஹ ப்ரஹ்மணு விபச்சிதா" என்றும். "யாவானர்த்த உதபானே' என்றும் பலவாக்யங்கள் தெரிவிக்கின்றது. வித்வத் அனுபவமும் இருக்கின்றது. ஆகவே விஷய சுகங்களையே சுகமென்று நினைப்பவர்களின் வாதங்கள் ப்ரமாணமில்லை. அதனுல் அவைகள் தள்ளத்தகுந்தது என்று அறியவேண்டும்.

**303. அவதாரிகை :**

மோக்ஷசுகம் என்பது, துக்கக்கலப்பற்ற பேரானந்தமென்ற ப்ரஹ்மஞானம். இந்த ப்ரஹமஞானமானது கர்மாவுடன் சேர்ந்தே நிரதிசயமான மோக்ஷசுகத்திற்கு காரணமாகிறது என்றே சொல்லவேண்டும். ஏனெனில், பித்தம் அதிகரிப்பதால் நாக்கில் ருசி என்பது மாறுபட்டிருக்கின்றபோது, வெல்லம் திதிக்கின்றது என்று சொல்வதைக்கேட்பதால்மட்டும் வெல்லத்தின் திதிப்பை எப்படி அறியமுடியும்? அதனுல், பித்தநிவர்த்திக்கு ஏற்ற ஔஷதத்தை புஜித்து அதன்மூலம் அந்த ரோகத்தை நிவர்த்தி செய்தால்தான் வெல்லம் ருசிக்கும். அதுபோல், புருஷ தோஷத்தை விலக்கக்கூடிய கர்மாவையும் செய்து, ஞானத்தையும் அடைந்தால்தான் மோக்ஷசுகம் சித்திக்கும் என்று பாஸ்கராதி மதஸ்த்தர்களால், ஞானகர்மஸமுச்சயம் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

अज्ञानमात्मविषयं भवहेतुभूतं प्रच्छादकं च परमात्मसुखस्य तूर्णम् ।
त्रय्यन्तवाक्यजनितात्ममतिर्विपाकमासाद्य हन्ति यदि तत्र किमर्थनीयम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்ம விஷயகமான அஞ்ஞானமே, ஸம்ஸாரத்திற்கு காரணமாகவும், பரமாத்ம சுகத்தை மறைக்ககூடியதாகவும் இருக்கிறது. வேதாந்தவாக்யத்தினுல் ஏற்படுகின்ற ப்ரதிபந்தரஹிதமான ஆத்மஞானமே இந்த அஞ்ஞானத்தை சிறிதும் தாமதமின்றி நிவர்த்திக்குமானுல், வேறு அடையப்படவேண்டியது என்ன இருக்கமுடியும்?

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பதே, ப்ரத்யகாத்மாசுகஸ்வரூபம் என்பதை அறியவொட்டாமல் மறைக்கின்றது. இந்த காரணத்தினுல்தான் ஸம்ஸாரமென்ற துக்கம் ஏற்படுகிறது. இவ்விதம், ஆத்மாவை மறைக்கின்ற அஞ்ஞானம் என்பது, ஆத்மஞானத்தினுல்தான் நிவர்த்திக்கப்படவேண்டுமேயன்றி, வேறெதுவும் அஞ்ஞானநாசத்திற்கு காரணமாக ஆகாது. ஆகவே, வாக்யஜன்ய அகண்டார்த்த ஞானத்தினுல், அஞ்ஞானம் முற்றிலும் நிவர்த்திக்கின்றது என்ற காரணத்தினுல், ஞானத்தின் பலனுகசுகம் என்பது தாமதமின்றி, க்ரியாபலம் போலவே கிடைக்கின்றதால், ஞானத்தையன்றி வேறு எதனுடைய அபேக்ஷையும் கிடையாது.

**பூர்வ :** அப்படியானுல் மனன நிதித்யாஸனங்களை விதிக்கவேண்டிய அவஸ்யம் என்ன?

**சித்தா :** ப்ரதிபந்தகம் இருப்பவர்களுக்கே, மனனநிதித்யாஸனங்கள் சொல்லப் பட்டிருக்கின்றதேயன்றி, எவரானுலும், மனனநிதித்யாஸனங்களைச் செய்தால்தான் ஞானம் உண்டாகும் என்று சொல்லப்படவில்லை. உதாரணமாகச் சொல்லப்பட்ட பித்தரோகாதிகள், க்ரியையை அபேக்ஷித்தே நிவர்த்திக்கப்படவேண்டும். அதனுல் ரோகாதிகள் ஞானநிவர்த்யம் என்று சொல்லமுடியாது. அஞ்ஞானம் என்பது ஞானத்தினுல் தான் நிவர்த்திக்கப்படவேண்டுமேயன்றி க்ரியா நிவர்த்யமில்லை ஆகவே, சொல்லப்பட்ட உதாகரணம் பொருந்தாது. மேலும் 'நாஸ்தி அக்ருத. க்ருதேன' என்று அக்ருதமான = நித்யமான மோக்ஷமென்பது கர்மாவினுல் அடையமுடியாது என்பதை உபநிஷத்வாக்யமே தெரிவிக்கின்றது. அதுமட்டுமல்ல, கர்மாவென்பது பந்தமானதால் மோக்ஷத்திற்கு சாதனமில்லை என்றும், ஞானம் ஒன்றே மோக்ஷஸாதனம் என்பதையும் "கர்மணு பத்யதே ஜந்து:" வித்யயா சவிமுச்யதே' 'தஸ்மாத் கர்ம நகுர்வந்தி யதய: பாரதர்சின:' என்று மோக்ஷம் என்ற பலத்திற்கு வித்யை ஒன்றே ஸாதனம் என்று அறிந்த விவேகியான பெரியோர்கள் ஸன்யாஸிகள் கர்மாவையெல்லாம் விட்டுவிட்டு ஞானத்தை அடைவதற்காக ப்ரயத்னம் செய்கிறுர்கள்.

**பூர்வ :** ச்ருதி ஸம்ருதிகளாலும் வித்வான்களாலும் ஸ்துதிக்கப்படும் மஹத்தான இந்த மோக்ஷசுகானந்தம் சித்திப்பதற்கு, மஹத்தான ப்ரயாஸையின்றி சுலபமாக ஞானத்தினாலேயே கிடைப்பதாகச் சொல்வது எப்படிப்பொருந்தும்?

**சித்தா :** மோக்ஷசுகம் என்பது ப்ரத்யகாத்ம சுகந்தான். ப்ரத்யகாத்மாவே சுகஸ்வரூபம் என்பதை அறியவொட்டாமல், அந்தப்ரத்யகாத்மாவையே ஆச்ரயித்து அதையே மறைக்கின்ற அஞ்ஞானமானது நாசமாவதற்கு, ஆத்மஞானம் தான் ஏற்படவேண்டும். எந்த விஷய அஞ்ஞானமானது யாருக்கு இருக்கிறதோ அவனுக்கு அந்த விஷய ஞானம் ஏற்பட்டால் தான் அந்த அஞ்ஞானம் நிவர்த்திக்கும். ஆகவே ஸ்வஸமான ஆச்ரய விஷயமான அஞ்ஞானத்தை அந்த விஷயஞானம் ஏற்பட்டவுடனேயே, நிவர்த்திக்கின்றது. ஏதோ ஒரு சிலருக்கு அஸம்பாவனாதி தோஷங்கள் ப்ரதிபந்தகமாக இருக்குமானால் அதை மனனாதிகள்மூலம் நிவர்த்திக்கப்படுகின்றபோது முன்னால் ஏற்பட்ட ஞானம் பலனை கொடுக்கின்றது. ஆகவே பரமானந்தமென்ற மோக்ஷசுகத்திற்கு ஞானத்தையன்றி வேறு என்ன தேவை? என்று ஒன்றும் தேவையில்லை என்பதை நிச்சயார்த்தமாகவே 'யதி' என்ற சப்தம் தெரிவிக்கின்றது. (குமாரிலபட்டரை பௌத்தர்கள் மலை உச்சியிலிருந்து தள்ளிவிட்டார்கள். அப்போது குமாரிலபட்டர் 'வேதா: ப்ரமாணம் ஸ்யு:' என்று வேதங்கள் ப்ரமாணமாக இருக்குமானால் எனக்கு எவ்வித ஆபத்தும் நேராது என்று சொன்னாராம். ப்ரமாணபூதமான வேதங்கள் என்னைக் காப்பாற்றட்டும் என்பதுதான் அவரால் சொல்லப்பட்டவாக்யத்தின் தாத்பர்யமேயன்றி வேதம் ப்ரமாணமா? இல்லையா? என்ற ஸந்தேகத்தினால் அவ்விதம் சொல்லப்படவில்லை. அதுபோல் இந்த இடத்திலும் ஞானத்தையன்றி வேறு என்னவேண்டும்? என்று சொல்லப்படுகிறது.

**304, 305. அவதாரிகை :**

ஆத்மசுகம் என்பது நித்யப்ராப்தம்தான் அடையப்படவேண்டிய தன்மையில் இல்லை. ஆனாலும் ஞானம் என்ற ஸாதனத்தினால் ஆத்ம சுகம் என்பது அடையப்படவேண்டியதாகச் சொல்லப்படுவதற்கு என்ன காரணம்? இல்லாத ஒன்றை அடைவதென்பதுதான் புருஷார்த்தமாகும். இருக்கின்றதையே அடைவதென்றால் அதை புருஷார்த்தமென்று எப்படிச் சொல்வது? என்றால், லோகத்தில் ப்ராப்தமான வஸ்துவிலேயே அஞ்ஞானத்தினால் அப்ராப்தமென்று ப்ரமம் ஏற்படுகிறது. அந்த ப்ரம நிவர்த்திக்காக அந்த வஸ்துஞானம் என்ற ஸாதனம் தேவைப்படுகிறது. இந்த ஞானத்தினால் ஏற்படும் ப்ரமநிவர்த்தியைத்தான் புருஷார்த்தம் என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

करमुष्टिनिविष्टमुत्तमं कनकं प्रस्मरणादलब्धवत् प्रतिभाति तदाप्तवाक्यतः प्रतिपत्त्या लभते यथा जनः ।
परमात्मपदं पराकृतद्वितयं प्राप्तमपि स्वभावतः अनवाप्तवदेव लिप्सते लभते चैवमयं प्रमाणतः ॥

**ச்லோகார்த்தம் :** தன் கரத்திலேயே இருக்கின்ற ஸ்வர்ணமானது, மறதியினால் அடையப்படாததுபோல் இருக்கின்றது. பிறகு ஆப்தவாக்யத்தினால், கையிலிருப்பதை அறிவதன்மூலம் அந்த புருஷன் அதை அடைகிறான். அதேபோல் அத்வைதமான பரமாத்மபதமும் ஸ்வபாவமாகவே அடையப்பட்டதாகவே இருந்தும்கூட புருஷனானவன் அதை அடைய ஆசைப்படுகிறான் பிறகு வேதாந்தம் என்ற ப்ரமாணத்தினால் அதை அடைகிறான் அதுவே புருஷார்த்தம்.

**வ்யாக்யானம் :** லோகத்தில் அடையாத ஒன்றையே அடையவேண்டும் என்றும் நிவர்த்திக்கப்படாததே நிவர்த்திக்கப்படவேண்டும் என்பதே புருஷார்த்தம் என்று சொல்லப் படுகிறது. அதனால் அடையப்பட்டதையோ நிவர்த்திக்கப்பட்டதையோ புருஷார்த்தம் என்று

சொல்வதில்லை. அதனால் ப்ராந்தி ஞானத்திற்கு காரணமான அஞ்ஞான நிவர்த்தியை புருஷார்த்தம் என்று சொல்லமுடியாது.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ப்ராந்தி நிவர்த்தி என்பதும் புருஷார்த்தம்தான். அடையப்பட்ட வஸ்துவாக இருந்தாலும் மறதியினால் அடையப்படவில்லை என்று தோன்றுகிறது. இந்த மறதி நிவர்த்திக்கின்றபோது, அடையப்பட்டதுபோல்நினைக்கின்றான். ஆகவே, அடையப்பட்டதாகஆகிறது என்பதால் அதுவும் புருஷார்த்தம்தான் உதாரணமாக, தன் கையிலேயே இருக்கின்ற தங்கக்கட்டியை மறந்து, தன்னிடமில்லை என்ற அப்ராப்த ப்ரமம் ஏற்படுகிறது. அந்த ஸமயம் ஆப்தனுடைய வாக்யத்தினால், அது தன்னிடமே இருக்கின்றதென்ற ஞானம் ஏற்பட்டவுடன், அப்ராப்தப்ரமத்திற்கு காரணமான அந்த வஸ்து அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது. இதையே, ப்ராப்தஸ்யப்ராப்தி: என்று அடையப்பட்டதே அடையப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதேபோல் தன் காலில் இருக்கின்ற ஆபரணத்தை மறந்து, காலில் ஏதோ ஸர்ப்பம் சுற்றிக்கொண்டிருக்கிறது என்ற ப்ரமத்தினால் பீதி ஏற்படுகிறது. அப்போது 'அது ஸர்ப்பமில்லை' உன்காலில் இருக்கின்ற ஆபரணந்தான் என்ற ஆப்தவாக்யத்தைக்கேட்டு ஏற்படுகின்ற ஞானத்தினால் ஸர்ப்பப்ரமம் நீங்குகிறது. இந்தவிதம் அபரிஹார்யமாக இருந்தாலும் பரிகாரம் செய்யப்படுகிறது என்பது லோகப்ரசித்தம். அதுபோல் த்வைதமற்ற அத்வைத ஸ்வரூபமான ப்ரத்யகாத்மா நித்யப்ராப்தமாக இருந்தபோதிலும், அவ்விதம் அறியப்படாமல் இருப்பதால், மஹா வாக்யஜன்யஞானத்தினால், அஞ்ஞான நிவர்த்திக்கப் படுகின்றபோது ப்ரத்யகாத்மா ஸ்வரூபேண அறியப்படுகிறது. இந்தவிதம் ஏற்கனவே அடையப் பட்டதாக இருந்தபோதிலும், அடையப் படவில்லை என்ற ப்ராந்தி இருக்கின்றதால், அதை அடையவிரும்புகிறான். அதனால் ப்ராந்தி நிவர்த்திக்குப்பின் அடையப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

ஸமன்வயசூத்ரத்தில் முதல் வர்ணகத்தில் சொல்லப்பட்ட ந்யாயத்தைக்கொண்டு ப்ரஹ்மமென்பது சித்தவஸ்துவாக இருந்தபோதிலும், சாஸ்திரம் என்பது சித்த வஸ்துவை போதிக்கின்றது என்றாலும் சாஸ்திரத்திற்கு ப்ரமாண்யம் உண்டு என்று சொல்லப்பட்டதால், ப்ரஹ்மானந்தம் என்ற லாபம், பலமாகக்கிடைக்கிறது என்று சொல்லப்பட்டது பொருத்தம்தான். இதில் ஆக்ஷேபதிற்கு இடமில்லை. ஆனால் ஒரு சிலர் வேதங்கள் எல்லாம் கார்யபரமாக இருந்தால்தான் ப்ரமாணமாகும் என்றும் ப்ரஹ்மமென்பது கார்யம் என்று சொல்ல முடியாவிட்டாலும், கார்யஸேஷம் என்று சொல்லவேண்டும் என்றும் சொல்கிறார்கள் இந்தவிதம் சொல்லப்படுவது சரியல்ல என்று மேலே நிராகரிக்கப்படுகிறது. மோக்ஷமென்பது க்ரியாபலமல்ல.

**ச்லோகம் :**

न स्वाध्यायवदाप्यता न च पुनस्त्रेताग्निवज्जन्यता न व्रीह्यादिवदस्य संस्कृतियुजा नो सोमवद्विक्रिया ।
पाठाधानजलोक्षणाभिषवणैः कूटस्थरूपं हि तद् ब्रह्मापास्तविकारजन्ममरणं निःश्रेयसं साधनैः ॥

**ச்லோகார்த்தம் :** பாடம், ஆதானம், ப்ரோக்ஷணம், அபிஷவணம் (பிழிவது) என்ற ஸாதனங்களால், கூடஸ்த்தமானதும் ஜன்ம மரணவிகாரம் அற்றதும், மோக்ஷஸ்வரூபமானதுமான ப்ரஹ்மென்பது ஸ்வாத்யாயம்போல் அடையப்படுவதில்லை த்ரேதாக்னியைப்போல் உற்பத்தி செய்யப்படுவதில்லை, வ்ரூஹீயாதிகள் போல் ஸம்ஸ்காரம் செய்யப்படுவதில்லை. ஸோமலதையைப்போல் (விகாரம்) பிழியப்படுவதில்லை. ஆகவே மோக்ஷமென்பது க்ரியா பலமல்ல.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பதே நிச்ரேயசம், அதுவே மோக்ஷம், மோக்ஷமென்பதே ப்ரஹ்மமென்பதால், ப்ரஹ்மத்தையன்றி வேறு அன்யமாக மோக்ஷமென்பது எதுவுமில்லை அதனாலேயே விதிக்கு விஷயமான க்ரியைக்குப் பலமாக மோக்ஷத்தைச் சொல்லமுடியாது. ஆகவே மோக்ஷம் க்ரியாபலமென்றும் சொல்லமுடியாது விதிபலமான கார்யம் என்றும் சொல்லமுடியாது. ஏனெனில், ஆத்மதத்வம் என்பதில் க்ரியை என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதாவது உற்பத்தி ஆப்தி விகார்யம் ஸம்ஸ்க்கார்யம் என்பது தான் க்ரியையினால் ஸம்பவிக்கமுடியும். கூடஸ்த்த நித்யமானதாலும் நித்ய அனர்த்த நிவர்த்தி ஸ்வரூபமானதாலும் ப்ரஹ்மமானது எந்தவிதமான க்ரியையினாலும் ஸாத்யமாகும் தன்மையில் இல்லையென்பதால் க்ரியாபலம் என்று சொல்லமுடியாது.

1. நித்யசித்தமானதால் அத்யயனம் போன்ற படனக்ரியையினால் அடையப்படுவதல்ல.

2. வ்ரீஹி முதலான தான்யங்கள் எப்படி ப்ரோக்ஷணத்தினால் ஸம்ஸ்க்கார்யமாகின்றதோ அதுபோல், நித்ய சுத்தமான ஆத்மாவில் எவ்வித ஸம்ஸ்க்காரத்தினாலும் குணம் ஏற்படுகிறதென்றோ, அல்லது தோஷங்கள் நிவர்த்திக்கின்றது என்றோ சொல்லமுடியாது.

3. ஸோமலதையை பிழிகின்றபோது, அந்த ஸோமலதையானது எப்படி ரஸமாக மாறுபாட்டை அடைகின்றதோ அதுபோல் நித்யகூடஸ்த்தமான ஸ்வரூபம் எந்த கார்யத்தினாலும் விகாரத்தை அடைவதாகச் சொல்லமுடியாது.

4. ஆதானம் என்ற க்ரியையினால் அக்னியானது, எப்படி ஹோமத்திற்கு உபயோக மாகிறதோ அதாவது மந்த்ர பூர்வகமான அக்னியை ஆவஹனீய ஜன்யம் என்று சொல்வது போல், ஆத்மாவை சொல்லமுடியாது.

ஆகவே, ஆப்தி, உற்பத்தி, விகாரம், ஸம்ஸ்க்காரம் என்ற நான்கு விதமான க்ரியா பலமாகவும், ப்ரஹ்மமென்பதை சொல்லமுடியாது.

**307. அவதாரிகை :**

உபநிஷத்தில் 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்று சொல்லப்படும் வாக்யம், ப்ரஹ்ம பாவம் என்பது அடையப்படுவதாக தெரிவிக்கின்றது. அதனால் முக்தி என்பது விதிபலம் என்றே சொல்லப் படவேண்டும். ஆகவே ஆப்யக்ரியைக்கு ப்ரஹ்மம் விஷயமென்றேவாக்யம் தெரிவிக்கின்றதென்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் அந்த வாக்யத்திற்கு அடையப்படுகிறது என்ற அர்த்தம் சொல்லமுடியாது. ஏனெனில்,

**ச்லோகம் :**

ब्रह्मैव सन्निति वचः प्रथमश्रुतत्वादप्येतिशब्दमुपसंहरणस्थमुच्चैः ।
प्रच्यावयत्स्वविषयादुचितादुबलीयो ब्रह्मात्मनोरनतिरेकमसाध्यमाह ॥

**ச்லோகார்த்தம் :** 'ப்ரஹ்மைவஸன்' என்று முதலில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றதால், அது மிகவும் பலமுடையதாக இருக்கிறது. இந்தவித ப்ரயோகம், உபஸம்ஹாரத்தில் சொல்லப்படும் அப்யேதி என்ற பதத்தினுடைய வாச்யார்த்தத்தை விலக்கி, அடையப்படாமல் இருக்கின்ற ப்ரஹ்மாத்ம ஐக்யத்தை போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்ற வாக்யமானது ப்ரஹ்மமென்பது ஆப்யக்ரியைக்கு விஷயமாகிறது என்றே தெரிவிக்கின்றது. அதனால் எந்த க்ரியைக்கும் விஷய மில்லை என்று எப்படிச்சொல்வது? என்று ஆக்ஷேபிக்கப் படுகிறது.

**சித்தா :** 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்ற வாக்யத்தில் முதலில் 'ப்ரஹ்மைவஸன்' என்பதே இருக்கிறது, அதாவது 'ப்ரஹ்மமாகவே இருக்கிறான்' என்று உபக்ரமத்தில் சொல்லப் படுகிறது.

அந்த அர்த்தம்தான் பலவத். முதலில் சொல்லப்படுவதற்கு விரோதமாக பின்னால் உபஸம்ஹாரத்தில் சொல்லப்படுமானால் பின்னால் சொல்லப்படுவதையே மாற்றி அர்த்தம் செய்யப்படவேண்டும் என்று பூமீமாம்ஸையிலேயே சொல்லப்பட்டிருக்கின்றது." ஆகவே உபஸம்ஹாரத்திலுள்ள அப்யேதி சப்தம் அடையப்பெறாத ஒன்று அடையப்படுவதாக அர்த்தம் அறியப்பட்டபோதிலும் அந்த அர்த்தமானது முன்னால் சொல்லப்படுவதற்கு முரண்பட்டதாக இருப்பதால் அப்யேதி என்ற முக்யார்த்தம் தடைசெய்யப்படுகிறது. அதனால் 'அப்யேதி' என்பதற்கு அடைகிறான் என்ற வாச்யார்த்தத்தைவிட்டு லக்ஷணையாக ஸ்வரூபத்தில் இருக்கிறான் என்ற அர்த்தத்தை அறியவேண்டும். மேலும் 'ப்ரஹ்மைவஸன்' என்று ஏவகாரம் போட்டிருக்கின்றதால் ப்ரஹ்மமாகவே இருக்கிறான் என்ற அர்த்தம்தான் த்ருடமாக இந்தவாக்யத்தினால் போதிக்கப்படுகிறது. அதனால் அடையப்பட்டதைத்தான் அடையப்படுவதுபோல் உபசாரமாகச் சொல்லப்படுகிறது.

**308. அவதாரிகை :**

வாக்யம் என்றாலே அதில் க்ரியாபதம் தான் ப்ரதானம் (இந்த க்ரியாபதம் திஙந்தம்) அந்த வாக்யத்திலுள்ள நாமபதம் (ஸுபந்தம்) என்பது அப்ரதானம் என்று மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. இதில் ப்ரதானத்தை அனுசரித்து அப்ரதானத்தை மாற்றுவதா? அல்லது அப்ரதானத்தை அனுசரித்து ப்ரதானத்தை மாற்றுவதா? என்ற ஸந்தேகம் ஏற்படுமானால் ப்ரதானமானக்ரியாபதத்தை அனுசரித்தே நாம பதத்தை மாற்றவேண்டும். ஆகவே, 'அப்யேதி' என்ற க்ரியாபதம் பின்னால் சொல்லப்பட்டிருந்தபோதிலும், அதுவே முக்யார்த்தமாக அறியப்படவேண்டும் ப்ரஹ்மைவஸன் என்றபதமானது நாமபதமானதால் அப்ரதானமானதால் அப்யேதி என்ற அர்த்தத்திற்கு அனுகூலமாகவே 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதத்திற்கு அர்த்தம் செய்யவேண்டும். 'தேவோ பூத்வா தேவானப்யேதி' என்ற வாக்யத்தில் தேவனாக ஆகி தேவ லோகத்தை அடைகிறான் என்று சொல்வது பொருந்தாதால் தேவோபூத்வா என்பது அர்த்தமாக ஆகாது என்று நாமபதத்தை விட்டு க்ரியாபத ப்ரதானமாக அந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படுகிறது. அதுபோல் இந்த வாக்யத்திற்கும் அர்த்தம் செய்யவேண்டும் என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

இந்த ஆக்ஷேபம் சரியல்ல. 'அப்யேதி' என்ற பதம் (லிங்லோட்தவ்யப்ரத்யயம்) ஆக்யாதம் இல்லை. ஏனெனில் திஙந்தமாக இருந்தால் ஆக்யாதம் என்றும் ஸுபந்தமாக இருந்தால் நாமபதம் என்றும் நியமம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

आग्नेय इत्याद्यपि तद्धितान्तमष्टाकपालादिसमन्वितं सत् ।
आख्यातशब्दस्य धुरं बिभर्ति भव्यार्थसंवित्तिनिबन्धनत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** 'ஆக்னேய:' என்ற தத்திதாந்த பதமானது, 'அஷ்டாகபால:' என்ற வாக்யத்துடன் சேர்ந்து ஸாத்யார்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதனால் 'ஆக்னேய:' என்ற பதம் 'ஆக்யாதம்' என்ற சப்தத்தினால் தெரிவிக்கப்படும் க்ரியையில்தான் ப்ரவ்ருத்தியை ஏற்படுத்துகிறது.

**வ்யாக்யானம் :** ஒருவாக்யத்தில் இருக்கின்ற க்ரியாபதம் என்பதே ப்ரதானமாக இருக்கின்றதால் அந்த வாக்யத்திலுள்ள ப்ரதானமான க்ரியாபதத்தை அனுசரித்தே அப்ரதானமான நாமபதத்திற்கு அர்த்தம் செய்யவேண்டும். ஆகவே 'ப்ரஹ்மைவஸன்' ப்ரஹ்மாப்யேதி' என்ற வாக்யத்திலுள்ள 'அப்யேதி' என்ற க்ரியாபதத்தை அனுசரித்து, ப்ரஹ்மைவஸன் என்ற நாமபதத்தின் அர்த்தத்தை

மாற்றவேண்டும். ஏனெனில் அப்யேதி என்பதே முக்யார்த்தம், மற்ற பதம் கௌணார்த்தம் என்றே சொல்லவேண்டும். அப்யேதி என்பதே, திஙந்தம். 'ப்ரஹ்மைவ' என்பது ஸுபந்தம் என்பதால் ப்ரஹ்மைவ என்பதை மாற்றப்படவேண்டும்.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபம் சரியல்ல.

பூதார்த்தம் என்ற சித்தார்த்தத்தை போதிப்பது எதுவோ அது நாம பதம், பவ்யார்த்தத்தை போதிப்பது எதுவோ அது ஆக்யாதம், க்ரியாபதம் என்றே சொல்லவேண்டுமேயன்றி ஸுபந்தங்களெல்லாம் நாமபதம் திஙந்தங்களெல்லாம் க்ரியாபதம் (ஆக்யாதம்) என்று விபாகம் செய்வது சரியல்ல. ஆகவே அப்யேதி என்று பதம் (ஆக்யாதம்) க்ரியாபதம் போல் இருந்தாலும் அது க்ரியாபதம் இல்லை. நாமபதமாக இருந்தாலும் அது ஆக்யாதமாக ஆகலாம் என்பதை உதா கரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. பூமீமாம்ஸையில் "ஆக்னேயோऽஷ்டாகபாலோ பவதி" என்ற ஒரு வாக்யம் இருக்கின்றது. இந்த வாக்யமானது அஷ்டாகபால: ஆக்னேய: என்று சொல்லப்படுவதால் அஷ்டகபாலங்களில் ஸம்ஸக்காரம் செய்யப்பட்ட த்ரவ்யத்தைக்கொண்டு அக்னிதேவதைக்கு ஹோமம் செய்யவேண்டுமென்று தெரிவிக்கிறது. இந்தவிதம் சொல்லப் பட்டிருக்கின்ற வாக்யமானது த்ரவ்ய தேவதா ஸம்பந்தமான க்ரியையை போதிக்கின்றது. இந்த வாக்யத்திலுள்ள 'ஆக்னேயபதமானது அக்னிதேவதா அஸ்ய இதி ஆக்னேய: என்று நாம பதமாகத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் த்ரவ்யதேவதா ஸம்பந்தத்தை போதிக்கின்ற ஆக்னேய: என்ற பதம் க்ரியாபதமாக இல்லாமலிருந்தும் சாத்யார்த்தத்தை போதிக்கின்றதால் இந்த ஆக்னேய: என்ற பதத்தை ப்ரதானமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே சித்தார்த்த போதகமாக இருந்தால் நாமபதம் என்றும், சாத்யார்த்தத்தை போதிப்பதாக இருந்தால் ஆக்யாதம் (க்ரியாபதம்) என்று சொல்லவேண்டுமேயன்றி, ஸுபந்தமாக இருந்தால் நாமபதம் திஙந்தமாக இருந்தால் க்ரியாபதம் என்று விபாகம் செய்து சொல்வதற்கு முடியாது. ஆக்னேய: என்ற பதம் அஷ்டா கபாலம் என்ற பதத்துடன் சேர்ந்தே அர்த்தத்தை போதிக்கின்றது. ஆக்னேய: என்ற பதம் ஸுபந்தமாக இருந்தும் க்ரியையை போதிக்கின்றது. ஆகவே 'யஜேத ஸ்வர்க்ககாம:' என்ற வாக்யத்திலுள்ள 'யஜேத' என்ற பதத்திற்கு எப்படி 'யாகம் குர்யாத்' என்ற அர்த்தம் சொல்லப்படுகிறதோ அதே அர்த்தத்தைத்தான் ஆக்னேயபதம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் 'ஆக்னேயம்' முதலான வாக்யங்கள்போல் 'ஐந்த்ராக்னி' என்ற தாதி வாக்யங்கள் இந்திரனையும் அக்னியையும் தேவதையாகக் கொண்டு அங்கு தெரிவிக்கப்படும் கார்யத்தைச் செய்யவேண்டுமென்றும் அஷ்டாகபாலம் என்பதுபோல் த்வாதசகபாலம் என்றும் பலவிதமான வாக்யங்கள் சொல்லப்படுகின்றது. இந்த வாக்யங்களும் த்ரவ்யதேவதாஸம்பந்தத்தையே போதிக்கின்றது. மேலும், ஆக்னேய: என்ற பதம் அக்னி தேவதாகமான கர்மாவை தெரிவிப்பதனால் அது நாமபதமாக இருந்தபோதிலும் 'யஜேத' என்று சொல்லப்படும் க்ரியாபதங்களைப்போலவே, க்ரியாபதம் என்றே சொல்லவேண்டும் ஆகவே பவ்யார்த்தத்தை தெரிவிப்பது எதுவோ அதுவேக்ரியை என்று சொல்லப்படவேண்டும் (ஸாத்யமாக்கூடியது பவ்யார்த்தம்) சித்தமான வஸ்துவை தெரிவிப்பது நாமபதம் ஆகவே, 'அப்யேதி' என்ற பதமும் சித்தமான விஷயத்தையே தெரிவிப்பதால் அதை க்ரியாபதம் என்று சொல்லமுடியாது.

**309. அவதாரிகை :**

திஙந்தமாக இருப்பதற்காக 'ஆக்யாதம்' என்று சொல்லமுடியாது, திஙந்தமாக இருந்தாலும் சித்தவஸ்துவை போதிக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

आख्यातमेव सदिदं भवतीति नाम भव्येतरार्थमपि जन्मनिबन्धनत्वात् ।
अप्येतिशब्दमपि तद्वदिमं प्रतीमो भव्येतरार्थगतबुद्धिनिबन्धनत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** பவதி என்ற பதமானது ஆக்யாதமாக (க்ரியாபதமாக) இருந்தபோதிலும் ஸாத்யமில்லாத அர்த்தத்தை தெரிவிக்கின்றதால் நாமபதம் என்றே சொல்லவேண்டும். அதேபோல் அப்யேதி என்ற சப்தமும் ஸாத்யமாக இல்லாத அர்த்தத்தை தெரிவிப்பதால் நாமபதம் என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** 'ஆக்னேயோ அஷ்ட்டா கபாலோ பவதி' என்ற வாக்யத்தில் 'பவதி' என்ற பதம் திஙந்தமாக இருப்பதால் ஆக்யாதம் என்று சாத்யமான ஒரு அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. 'பவதி' என்ற பதமானது அனுஷ்ட்டேயமான க்ரியையை போதிக்கவில்லை. அதனால் சித்தார்த்தத்தையே போதிக்கின்றதால் திஙந்தபதமாக இருந்தபோதிலும் ஆக்யாதம் என்று (க்ரியாபதம்) சொல்லமுடியாது. நாமபதம் என்றே சொல்ல வேண்டும். இந்த ந்யாயத்தைக்கொண்டே 'அப்யேதி' என்ற பதமும் அந்த வாக்யத்தின் அர்த்தத்தை அனுசரித்து, ஸாத்யரூபமான க்ரியாபதம் என்று சொல்லமுடியாது. அந்த வாக்யத்தில் முதலில் 'ப்ரஹ்மைவஸன்' என்று சொல்லப்பட்டதால், உபக்ரமத்திற்கு விரோதமில்லாமல் பின்னால் சொல்லப்படும் பதத்திற்கு அர்த்தம் செய்யப்படவேண்டும். ஆகவே அப்யேதிபதமும் திஙந்தமாக இருந்தாலும் நாமபதம் என்றே சொல்லவேண்டுமேயன்றி ஆக்யாதம் (க்ரியாபதம்) என்று சொல்லமுடியாது 'தேவோ பூத்வா தேவானப்யேதி' என்ற வாக்யத்தில் தேவனாக ஆகிறான் என்று சொல்லப்பட்டபிறகு அப்யேதி என்ற பதத்திற்கு தனித்த அர்த்தம் எதுவும் கிடையாது. 'பவதி' என்ற சப்தம் திஙந்தம்போல் இருந்தாலும் அர்த்தத்தை விசாரிக்கின்றபோது அந்த பதமும் நாமபதமாக ஆகிறது என்றே சொல்ல வேண்டும். ஆகவே 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்ற வாக்யத்திலுள்ள அப்யேதி என்ற பதம் உபக்ரமபதத்திற்கு விரோதிமில்லாமல் நாமபதம் என்றே அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**310. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்பட்டமுறையில், 'அப்யேதி' என்ற பதமானது, க்ரியாபதமாக இருந்தபோதிலும் அதற்கு ப்ராதான்யமில்லை.

**ச்லோகம் :**

ब्रह्मैव सन्निति गिरं प्रति शेषितायै नाप्येतिगीरियमलं कथितोपपत्तेः ।
आख्यातमेव खलु नामपदस्य शेषि नाख्यातमेतदनृतत्वनिवेदकत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** மேலே சொல்லப்பட்ட யுக்தியினால் 'அப்யேதி' என்ற பதமானது, 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதத்திற்கு (ஸேஷி) அங்கி என்று சொல்லமுடியாது. ஆக்யாதத்தையே நாமபதத்திற்கு ஸேஷியாக சொல்லமுடியும். ஆகையால் உபக்ரமத்திற்கு விருத்தமான அர்த்தத்தை தெரிவிப்பதால், 'அப்யேதி' என்ற பதம் ஆக்யாதம் என்று சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** 'ப்ரஹ்மைவஸன்' என்ற வாக்யத்திலுள்ள 'அப்யேதி' என்ற பதமானது, உபஸம்ஹாரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதால், உபக்ரமம், உபஸம்ஹாரம் என்ற இரண்டில் உபஸம்ஹாரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றபதம் துர்ப்பலமாக இருக்கின்றதால், அப்யேதி என்ற பதத்திற்கு ப்ராதான்யம் சொல்லமுடியாது, 'அப்யேதி' சப்தமானது திஙந்தமாக இருந்தபோதிலும், க்ரியையை போதிக்காததால் ஆக்யாதம் என்று சொல்லமுடியவில்லை அதனால் அப்யேதி என்ற

பதத்திற்கு ப்ராதான்யம் கிடையாது. ஆகையால் 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதத்திற்கு 'அப்யேதி' என்ற பதத்தை ஸேஷியாகச்சொல்லமுடியாது. (அப்யேதி பதம் அங்கி என்று சொல்லமுடியாது). திஙந்தமான ஆக்யாதபதமே, க்ரியையை போதிக்கின்ற பதமாக இருக்குமானுல், அதற்கு ப்ராதான்யம் சொல்லாம். ஆனுல் இந்த இடத்தில் 'அப்யேதி' என்ற பதம் ஸாத்யமான ஒரு அர்த்தத்தை போதிக்காததால் அதற்கு ப்ராதான்யம் இல்லையென்றே சொல்லப்படுகிறது.

**311. அவதாரிகை :**

ஆகையால், 'ப்ரஹ்மைவஸன்' என்ற வாக்யத்திலுள்ள 'அப்யேதி' என்ற பதம் அப்ரதானம் (உபசரிதம்) என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

ब्रह्मैव सन्निति ततः प्रथमश्रुतं सदप्येतिशब्दमपसारयति स्ववाच्यात् ।
अस्याङ्गभावविरहादमुना सहातो ब्रह्मात्मनोरनतिरेकमुशन्ति धीराः ॥

**ச்லோகார்த்தம் :** 'அப்யேதி' என்ற சப்தம் அங்கமாக இல்லாததால், முதலில் சொல்லப்பட்ட ப்ரஹ்மைவஸன் என்ற பதமானது அப்யேதி என்ற பதத்தை, தன்னுடைய வாக்யார்த்தத்திலிருந்து நழுவும் படிச்செய்கின்றது. ஆகையால் வித்வான்கள் ப்ரஹ்மாத்ம அபேதத்தை தெரிவிக்கின்ருர்கள்.

**வ்யாக்யானம் :** 'ப்ரஹ்மைவஸன், ப்ரஹ்மாப்யேதி' என்ற வாக்யத்திலுள்ள 'அப்யேதி' என்ற பதத்திற்கு, முக்யார்த்தம் ஸம்பவிக்காததால் லக்ஷணையினுல், ப்ரஹ்மஆத்ம அபேதத்தையே லக்ஷ்யமாகத் தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதமானது, 'அப்யேதி' என்ற பதத்திற்கு அங்கபாவமாக இல்லாததால் ' ப்ரஹ்மைவஸன், ப்ரஹ்மாப்யேதி' என்ற பூரா வாக்யத்திற்கும், ஜீவ ப்ரஹ்ம அபேதம் தான் தாத்பர்யார்த்தம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில், அப்யேதி என்ற பதமானது வாச்யார்த்தம் எதுவோ அதை போதிக்கமுடியாமல் நழுவுகின்றதால், ப்ரஹ்மைவஸன் என்ற பதத்துடன் அங்க அங்கி பாவ ஸம்பந்தம் என்பதே ஏற்படமுடியாது. ஆகவே வித்வான்களினுலும் (இந்த வாக்யத்திற்கு) இதே கருத்து ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

**312. அவதாரிகை :**

வேதாந்த வாக்யங்களெல்லாம், பூதார்த்தத்தையே போதிக்கின்றதால், க்ரியையை போதிப்பதாகச் சொல்வதற்குமுடியாது. ஆகையால், இதுவரை ஆக்யாதபதம் வாக்யத்தில் இருப்பதுபோல ஒத்துக்கொண்டு (அப்யுபேத்யவாதமாக) அதற்கு ப்ராதான்யம் இல்லையென்று சொல்லப்பட்டது. ஆனுல் வேதாந்தத்தில் க்ரியாபதம் என்பதே இருக்க முடியாது நாமபதம்தான் ப்ரதானமாக இருக்கவேண்டும். ஏனெனில், மோக்ஷமென்ற புருஷார்த்தத்திற்கும் விதிக்கும் ஸம்பந்தமே கிடையாது.

**ச்லோகம் :**

भव्याय भूतमिति किंच विधिप्रधाने काण्डे नयोऽयमिह तद्विपरीतमाहुः ।
भूताय भव्यमिति भूतपरं हि सर्वं वेदावसानमिति सूत्रकृदाचचक्षे ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் கர்மகாண்டத்தில் சித்த வஸ்துக்களைப்பற்றி சொல்லப்பட்டிருந்தாலும் அவைகள் எல்லாம் 'சாத்யமான வஸ்துவை அடைவதற்காகவே' என்ற ந்யாயம் இருக்கிறது. ஆனுல் ஞானகாண்டத்தில், அதற்கு விபரீதமாக ஸாத்ய வஸ்துவைப்பற்றி

சொல்லப்படுவதெல்லாம், 'சித்தவஸ்துவை அறிவதற்கே' என்ற ந்யாயம் சொல்லப்படுகின்றது. ஆகவே, 'ஸர்வவேதாந்தங்களும் சித்த வஸ்துபரம்' என்றே சூத்ரகாரராலும் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'பூதம் பவ்யாய உபதிச்யதே' என்று கர்மகாண்டவாக்யமானது வேதத்தில் உபதேசிக்கப்படும் சித்த வஸ்து போதகமான பதங்கள் எல்லாம் க்ரியையை போதிப்பதற்காகவே சொல்லப்படுகிறது என்று தெரிவிக்கின்றது. இந்த ந்யாயம், விதிக்கு ப்ராதான்யம் சொல்லப்படும் கர்மகாண்டவாக்யத்திற்கு மட்டுமே பொருந்தும். ஆனல் வேதாந்தவாக்யங்களெல்லாம் சித்தமான வஸ்துவை போதிப்பதில்தான் ப்ராதான்யம் (தாத்பர்யம்) உள்ளதாக இருக்கின்றது. அதனல் 'பூதம் பவ்யாய' என்று சொல்லமுடியாது. அதற்கு விபரீதமாக, 'பவ்யம் பூதாய உபதிச்யதே' என்று சொல்லவேண்டும். 'ஸர்வாபேக்ஷாச யஞ்ஞாதி ச்ருதே:' என்ற சூத்ரத்தினுல், ஸர்வகர்மாக்களும் சித்த சுத்தி த்வாரா ஞானம் ஏற்படவேண்டும் என்பதற்காக அபேக்ஷிக்கப்படுகிறது என்று சூத்ரகாரரும் தெரிவிக்கின்ருர். ஆகவே, மோக்ஷத்திற்குசாதனமான ஞானம் ஏற்படுவதற்காகவே கர்மாவின் அபேக்ஷை என்பதால், க்ரியை என்பது ப்ரதானம் என்று சொல்லமுடியாது. அதனல் ஸர்வ வாக்யங்களிலும், ஆக்யாதம் என்ற க்ரியாபதம்தான் ப்ரதானம் என்று சொல்வது சரியல்ல. வேதாந்தவாக்யங்களெல்லாமே சித்த வஸ்து போதகமானதால், பூதார்த்தமே ப்ரதானம், பவ்யார்த்தத்தில் ப்ராதான்யமில்லை. இதே கருத்தையே, 'தத்து ஸமன்வயாத்' என்ற சூத்ரத்தின்மூலம், ஸர்வவேதங்களும் கர்மாவையோ அல்லது உபாஸனத்தையோ தெரிவித்தபோதிலும், எல்லாம் முடிவில் சித்தமான ப்ரஹ்மாத்மபரம்தான் என்று சூத்ரக்காரராலும் சொல்லப்பட்டிருக்கிறது. இதேபோல், 'ஸர்வம் கர்மாகிலம் பார்த்த! ஞானே பரிஸமாப்யதே' என்று எல்லாக்கர்மாக்களும் ஞானத்தில்தான் முடிவு பெறுகிறது (ஞானத்திற்காகவே அபேக்ஷிக்கப்படுகிறது) என்று பகவானுலும் சொல்லப்படுகிறது. இந்த கருத்தையே 'ஸர்வாபேக்ஷாச யஞ்ஞாதிச்ருதே:' என்ற சூத்ரமும் தெரிவிக்கின்றது.

**313. அவதாரிகை :**

கீழே கர்ம காண்டத்தில் 'த்ரயோ வேதா' என்று சொல்லப்படும் வாக்யத்தில் உபக்ரமத்திற்கு ப்ராபல்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை உதாரணமாகத்தெரிவித்து இந்த இடத்திலும் உபக்ரமத்திற்கு ப்ராபல்யம் என்று சொல்லப்பட்டது. ஆனல் இப்போது அதைத்தவிர வேறு ஒரு கா்ரணமும் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

ब्रह्मैव सन्निति ततोऽपि बलिष्ठमेतदप्येतिशब्दमवसानगतं व्यपेक्ष्य ।
तस्मादमुष्य परिपीडकमेतदेव ब्रह्मैव सन्निति पदं गुणकल्पनायै ॥

**ச்லோகார்த்தம் :** 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதம் 'அப்யேதி' என்ற பதத்தைக்காட்டிலும் பலமுள்ளது. ஏனெனில், 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதம் உபக்ரமத்தில் இருக்கின்றதால் 'அப்யேதி' என்ற சப்தார்த்தத்தை பாதிக்கின்றது. அதனல் 'அப்யேதி' பதம் கௌணம் என்பதால் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படவேண்டும் என்பதை 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதம் தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யம் சித்தவஸ்துவை போதிப்பதில்தான், தாத்பர்யமுடையது என்பதால், 'பூதாயபவ்யம்' என்று பூதபரமேயன்றி க்ரியாபரமில்லை என்ற ந்யாயத்தைக் கொண்டு, சித்த வஸ்துபரமான வாக்யமே ப்ரதானம். அதுமட்டுமின்றி பவ்யார்த்தமும் பூதார்த்தத்தை

தெரிவிப்பதற்காகவே என்று தீர்மானிக்கப்படுவதால் இந்த விஷயத்தில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. மேலும், ப்ரஹ்மைவஸன் என்பது முதலில் சொல்லப்பட்டிருக்கின்றதால் அதற்கு ப்ராதான்யம் என்பது மட்டுமல்ல. வேதாந்தவாக்யமாக இருப்பதாலும் ப்ராதான்யம் இருக்கின்றது. பின்னல் சொல்லப்படும் 'அப்யேதி' பதம் தன்னுடைய வாச்யார்த்தத்தை போதிக்கக்கூடியதன்மையில் இல்லாமல் நழுவுகின்றதால் அப்யேதி பதம் கௌணம் என்றே அறியப்படுகிறது. ஆகவே 'ப்ரஹ்மைவஸன்' என்ற பதத்தினுல் 'அப்யேதி' பதத்தின் முக்யார்த்தம் பாதிக்கப்படுவதால் லக்ஷணையினுல் அப்யேதிபதமும் ப்ரஹ்மாத்மபரம் என்றே சொல்ல வேண்டும்.

**314. அவதாரிகை :**

ப்ரஹ்மாத்மபரமான வேதாந்தவாக்யங்களில் க்ரியாபரமான வாக்யங்களே ஸம்பவிக்க முடியாது. ஏனெனில் க்ரியாபலமான ஆப்யம் விகார்யம் உத்பாத்யம் ஸம்ஸ்க்கார்யம் என்ற இந்த நான்கு விதமான கார்யங்களால் மோக்ஷமென்ற பலன் சித்திக்கமுடியாது. ஆகவே யஞ்ஞாதி கர்மாவினுலும் மோக்ஷத்தை அடையமுடியாது என்பது மட்டுமல்ல ப்ரஹ்மாத்ம ஐக்ய ஞானத்தினுலும் மோக்ஷம் அடையப்படுவதாகச்சொல்லமுடியாது. ப்ரஹ்மஞானத்தினுல் அஞ்ஞான நிவர்த்தகம்தான்பலன் ஆகவே ஞானகர்மஸமுச்சயத்தினுலும் மோக்ஷம் என்பது அடையப்படுவதல்ல. வித்யையினுல் அவித்யா நிவர்த்திதான் பலன் என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

निश्रेयसं न खलु साध्यमतः क्रियाभिर्ज्ञानेन वा द्वयसमुच्चयवर्त्मना वा ।
उत्पत्तिराप्तिविकृती न च संस्कृतिश्च यस्मान्न सम्भवति वर्णितवर्त्मनेह ॥

**ச்லோகார்த்தம் :** கீழே சொல்லப்பட்டமுறையில் ஆத்மாவிற்கு, உற்பத்தி ஆப்தி விகாரம் ஸம்ஸ்க்காரம் என்பவைகள் எல்லாம் ஸம்பவிக்கமுடியாதாகையால் நிச்ரேயஸமான வஸ்துவை கர்மாவினுலோ ஞானத்தினுலோ, ஞானகர்மஸமுச்சயத்தினுலோ அடைய முடியாது.

**வ்யாக்யானம் :** முக்தி என்ற நிச்ரேயஸ் என்பது ஞானத்திலோ அல்லது யஞ்ஞாதி கர்மாவினுலோ அல்லது உபாஸனம் கர்மா என்ற ஞான கர்மஸமுச்சயத்தினுலோ அடையக்கூடியதல்ல. ஏனெனில் க்ரியையினுல் அடையப்படுவது நான்கு விதமாகத்தான் இருக்கமுடியும் என்பதை கீழேயே சொல்லப்பட்டிருக்கிறது. நித்யமான ப்ரஹ்ம ஸ்வரூப ப்ராப்தி என்பது எந்த க்ரியையினுலும் அடையப்படுவதல்ல 'நதஸ்யப்ராணுஉத்க்ராமந்தி' என்று நிர்விசேஷப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிந்தவனுக்கு ப்ராணுத்மகமான லிங்கசரீரம் (உத்க்ரமணத்தை அடைவதில்லை) மேலே கிளம்புவதில்லையென்றும் 'அத்ரைவஸம வனீயந்தே' என்று இங்கேயே இப்போதே ப்ரஹ்மஸ்வரூபப்ராப்தி என்று தெரிவிக்கின்றது. லிங்க சரீரம் ஸாவயவம், ஜடம், விகாரத்தை அடையக்கூடியது அவிக்ருதமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அடைவதென்பது ப்ராணனுக்கு ஸம்பவிக்கமுடியாது. ப்ராணன் என்ற உபாதியின்றி ஜீவனுக்கு கமனுகமனம் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே உபாதியைப் பொறுத்தே கமனுகமனம் ஜீவனுக்கு ஏற்பட்டபோதிலும் உபஹிதஸ்வரூபமான சைதன்யத்திற்கு ஸ்வத: இவைகளெல்லாம் ஸம்பவிக்காது. ஆகவே முக்தி என்பது எந்த கர்மாவினுலும் அடையப்படுவதல்ல. நித்யசித்தமான மோக்ஷமென்பது ஞானத்தினுல் அடையப்படுவதாக உபசாராத்சொல்லப்பட்டபோதிலும்; ஞானத்தினுல் அஞ்ஞானநிவர்த்திதான் ஏற்படுகிறது. அதனுல் மோக்ஷமென்பது நித்யமஹிமா என்றும் ப்ரஹ்மஞானிக்கு ப்ரஹ்மபாவம் என்பது நித்யமஹிமா என்று ச்ருதியினுலும் வித்வத் அனுபவத்தினுலும் அறியப்படுகிறது.

ஆகையால், ஆத்மஸ்வரூபம் என்பது கர்மாவினலோ ஞானத்தினலோ வளர்வதும் இல்லை, குறைவதும் இல்லை.

**315. அவதாரிகை :**

ஆகையால் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி விலக்ஷணம் என்று சொல்லப்படுவதில் எவ்வித தோஷமும் இல்லை. ஏனெனில் மோக்ஷமென்றபலன் சாத்யமாக இல்லை.

**ச்லோகம் :**

तस्मात्प्रवृत्तिविनिवृत्तिविवर्जितत्वं ब्रह्मात्मवस्तुविषयावगतेर्न दोषः ।
सर्वप्रवर्तकनिवर्तकमूलदाहात् स्वाराज्यहेतुरिति भूषणमेव तत्रः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் ப்ரஹ்மாத்ம ஐக்ய ஞானத்தினல் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி அற்ற தன்மை ஏற்படுகிறது என்பதால் எவ்வித தோஷமுமில்லை. ஸர்வ ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கும் மூலகாரணமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது நர்சமாக்கப்படுவதால் அது ஸ்வாராஜ்யத்திற்குஹேதுவாக இருக்கிறது. ஆகையால் இவ்விதம் சொல்லப்படுவது எங்களுக்கு அலங்காரம் என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மாத்ம ஐக்யஞானம் என்பது ஸர்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திக்கு விஷயமல்ல என்று சொல்லப்படுவதால், அது குணம் என்றே சொல்லவேண்டும். அதனல் எவ்வித தோஷமோ குறைவென்பதோ கிடையாது. ராகம் என்பதும் த்வேஷம் என்பதும்தான் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திக்கு மூலகாரணம். ராகத்வேஷங்களுக்கு அஞ்ஞானமே மூலகாரணமானதால் ஞானம் ஏற்படுகின்றபோது அஞ்ஞானம் அதன் கார்யமான ராகத்வேஷம் என்பது எல்லாமே சிறிதளவும் மிச்சமின்றி நாசத்தை அடைகின்றது. அதனல் அதன்பிறகு கர்மாக்களில் ப்ரவ்ருத்தி என்பதே இருக்கமுடியாது. ஆகவே ஞானம் என்பது கர்மாவை நாசம் செய்து முக்திக்கு ஸாதனமாகிறது என்று சொல்லப்படுவது தோஷமல்ல என்பதுமட்டுமல்ல, பூஷணம் என்றே அறியவேண்டும். 'ரஸோப்யஸ்யபரம் த்ருஷ்ட்வா' ப்ரஹ்மபாவம் ஏற்படுமானல் அஞ்ஞானம் அதன் கார்யம் எல்லாமே நாசத்தை அடைகிறது என்று ஸ்ம்ருதியும் தெரிவிக்கின்றது. ஆகையால் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தியினல் ஸாத்யமில்லாத வஸ்துவை வேதாந்தம் போதிக்கின்றதால் வேதாந்தம் ப்ராமாண்யமாக ஆகாது என்று சொல்லப்பட்டதோஷமானது எங்கள் சித்தாந்தத்தில் அது தோஷமாகவே ஆகாது என்பது மட்டுமல்ல, பூஷணமாகவும் இருப்பதால் குணம் என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி வேதாந்தமும் ப்ரவ்ருத்திபரம் என்று சொல்லப்படுமானல், ப்ரவ்ருத்யாதிகளினல் ராகாதிகளுக்கு நாசம் ஏற்படாது. அதனல் அனர்த்த நிவ்ருத்தி என்ற புருஷார்த்தம் சித்திக்காது.

(இந்த விசாரத்தை இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.)

**316. அவதாரிகை :**

ஸ்வப்ரகாசமாகவும் ஞான ஸ்வரூபமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பதே இருக்கமுடியாதே? அதனல் அஞ்ஞானம் அதன் கார்யம் என்பவைகளுக்கு நாசம் ஏற்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अज्ञातताऽपि घटतेऽत्र दृशोऽनुभूतेर्जानामि नाहमिति दृश्यपि दृश्यते हि ।
अज्ञातताऽनुभवनं न च वास्तवं तदज्ञाततोद्वहति कल्पितता हि तस्याः ॥

**ச்லோகார்த்தம் :** த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவினிடம் அஞ்ஞாததை (அஞ்ஞான விஷயத்வம்) என்பது அனுபவத்தினல் ஸம்பவிக்கின்றது. 'நான் என்னை அறியவில்லை' என்ற

அனுபவம் ஆத்மஸ்வரூபத்தில் அறியப்படுகிறது. இந்த அஞ்ஞாதத்தை என்பது அஞ்ஞானத்தினுல் கல்பிதமாக இருக்கின்றதால் அஞ்ஞான அனுபவம் என்பது வாஸ்தவமாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** வேதாந்தம் என்பது அஞ்ஞாதார்த்த ஞாபகம் என்று சொல்லப்படுமாளுல்தான் வேதாந்தம் ப்ரமாணமென்றே சொல்லமுடியும். ஸ்வப்ரகாச, ஞானஸ்வரூபமான ஆத்மா (அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டு) அஞ்ஞாதமாக இருக்கிறதென்று சொல்ல முடியாதாகையால் வேதாந்தம் அஞ்ஞாதார்த்தபோதகம் என்று சொல்லமுடியாது. ஞான ஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது உண்மையில் இருக்கமுடியாது என்பது ஒத்துக் கொள்ளப்படவேண்டியதுதான். ஆனுலும் 'அஹம் அஞ்ஞ:' என்றும் 'அஹம் நஜானுமி' என்றும் எல்லோருக்கும் அஞ்ஞானம் என்பது அனுபவ சித்தமாக இருக்கிறது. மேலும் அஞ்ஞானம் என்பது ஒரு வஸ்துவை மறைக்கின்றது என்ருலே, எது ப்ரஸக்தப்ரகாசமாக இருக்கிறதோ, அதைத்தான் மறைக்கவேண்டும். அதனுல் ஞான ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ற ஆத்ம ஸ்வரூபத்தையே, அஞ்ஞானம் என்பது மறைக்கின்றது என்று சொல்லலாம். ஆத்மாவைத்தவிர வேறு வஸ்துக்கள் எல்லாமே ஜடமாக இருக்கின்றதால், அவைகளை மறைக்கதேவையே இல்லை. ஆகவே, ஸ்வப்ரகாசமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில்தான் அஞ்ஞானம் ஸம்பவிக்கமுடியும் என்பதால், அஞ்ஞானம் எப்படி ஸம்பவிக்கமுடியும்? என்ற ஸந்தேகத்திற்கே இடமில்லை. எல்லோருக்கும் அஞ்ஞானம் என்பது அனுபவசித்தமாக இருக்கிறது. ஆனுல் அந்த அஞ்ஞானம் உண்மையில் இருப்பதாகச் சொல்லமுடியாது. அதனுல் அனுபவம் என்பது ப்ரமாணமில்லை. ஏனெனில் ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் உண்மையில் இருக்கின்றதா? என்று விசாரிக்கின்றபோது அஞ்ஞானம் பாதிக்கப்படுகிறது. பாதிக்கப்படாத அனுபவமே ப்ரமாணமாக ஆகும். அதனுல் கல்பிதமாக அஞ்ஞானம் ஆத்மஸ்வரூபத்தில் இருப்பதாக ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இதனுல் எவ்விததோஷமும் கிடையாது. ஏனெனில், உதாரணமாக கயிற்றில் ப்ராந்தியாக ஸர்ப்பம் தோன்றுகின்றபோது, இரண்டும் ஸமஸத்தை என்று சொல்லப்படவில்லை. கயிறு என்பது வ்யாவகாரிகம், ஸர்ப்பம் என்பது ப்ராதிபாஸிகம் என்பதால், ஸமஸத்தாகமில்லை. ஸமஸத்தாகமாக இருந்தால்தான் விரோதம் ஏற்படும். ஆகவே, பாரமார்த்திகமான ஸ்வப்ரகாச ஆத்மஸ்வரூபத்தில், வ்யாவகாரிகமாக அஞ்ஞானம் இருக்கிறது என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை. ஆகையால் ஆத்மஸ்வரூபத்தில் அனுபவசித்தமாக அஞ்ஞானம் இருக்கின்றதால், கல்பிதமான அஞ்ஞானம் இருக்கிறதென்றே தீர்மானிக்கப்படவேண்டும். அதனுல் ஆத்மஸ்வரூபம், உண்மையில் இருக்கின்றபடி அறியப்படாததால் அஞ்ஞாதம் ஆத்மதத்வம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் வேதாந்தம் அஞ்ஞாதமான அர்த்தத்தை போதிக்கின்றதால் ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது.

## 317. அவதாரிகை :

மேலும் அஞ்ஞானம் என்பது ஞான அபாவரூபம் இல்லை. அவ்விதம் ஞான அபாவரூபம் அஞ்ஞானம் என்று சொல்லப்படுமாளுல் சித்ரூபமான ஆத்மஸ்வரூப அபாவம் என்று சொல்லப்பட்டதாக ஆகும். அதனுல் ஞானம் என்பது எப்படி பாவரூபமோ அதுபோல் அஞ்ஞானமும் பாவரூபமென்றே சொல்லவேண்டும். ஏனெனில் ஞானத்தினுல் அஞ்ஞானம் நாசமாகக்கூடியதாக இருக்கின்றது அதனுல் ஞான விரோதி அஞ்ஞானம் என்று பாவரூபமாகவே ஒப்புக் கொள்ளப்படவேண்டும்.

**ச்லோகம்** : अज्ञानमित्यजडबोधतिरस्क्रियात्मा जाड्यं च मौढ्यमिति च प्रकृतिः प्रसिद्धा ।
सा चातिदुःस्थितवपुर्दृशमद्वितीयामालिङ्गतिस्म घृतपिण्ड इवाग्निमिद्धम् ॥

**ச்லோகார்த்தம் :** அஜடபோத ஸ்வரூபமாக இருக்கின்ற ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கின்ற அஞ்ஞானமானது, ஜாட்யம் என்றும் மௌட்யம் என்றும் ப்ரக்ருதி என்றும் ப்ரசித்தமாக இருக்கின்றது. அநிர்வசனீயஸ்வரூபமாக இருக்கின்ற அந்த அஞ்ஞானமானது, கெட்டியான நெய்யானது (ப்ரதிபத்தமான) அக்னியுடன் எவ்விதம் ஸம்பந்தம் உடையதாக இருக்கிறதோ அதுபோல் அத்விதீயமான ஆத்மஸ்வரூபத்துடன் அஞ்ஞானம் ஸம்பந்தமுடையதாக இருக்கிறது.

**வ்யாக்யானம் :** கேவல ஞானஸ்வரூபமாகவும் ஸ்வப்ரகாசமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் என்பது அஞ்ஞானத்தினுல் மறைக்கப்படுகின்றது என்பதால் ஆத்மாவை மறைக்கக்கூடிய தன்மை அஞ்ஞானத்தில் இருக்கிறது என்றும் அதுவே, இந்த ஜகத் தோற்றம் என்ற விக்ஷேபத்திற்கு உபாதான காரணமாக ஆகிறது என்றும் சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானத்தையே ப்ரக்ருதி என்றும் சொல்லப்படுகிறது. இதையே கீதையிலும், 'அஞ்ஞானேன ஆவ்ருதம் ஞானம்' என்று சொல்லப்படுகிறது. அதேபோல் 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்திமாயினந்துமஹேச்வரம்' என்ற வாக்யம் ப்ரக்ருதி என்று தெரிவிக்கின்றது. இந்த அஞ்ஞானம் பாவரூபமென்றே சொல்லப்படவேண்டும்.

**பூர்வ :** 'நஜாநுமி' என்று சொல்வதால் ஞான அபாவம் தான் அறியப்படுகிறதேயன்றி வேறு ஒரு ரூபமும் அறியப்படாததால் அஞ்ஞானம் என்பதை ஞான அபாவரூபம் என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஜகத் என்பது ஜடம். அதற்கு உபாதான காரணமாக சித்திக்கின்ற ஜடமான அஞ்ஞானம் என்பது ஒன்றுதான். அஞ்ஞானம் என்பது அனேகம் இல்லை, ஒன்று தான் என்று சொல்வதே லாகவம். ஜடமான அஞ்ஞானம் தான் இந்த ஜகத்திற்கு உபாதான காரணமாக இருக்கின்றதால் கார்யமான இந்த ஜகத்திலும் ஜாட்யம் என்பது அனுஸ்யூதமாக தொடர்ந்து இருக்கிறது. கார்யம் என்பதில் தொடர்ந்து இருப்பது எதுவோ, அதுவே அந்த கார்யத்திற்கு உபாதானகாரணம். ஆகவே, அஞ்ஞானம் என்பதைத்தவிர வேறு எதுவும் கார்யமான இந்த ஜகத்திற்கு உபாதானகாரணமாக இருக்கிறது என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏது மில்லை. கார்யத்தில் அறியப்படும் ஜாட்யத்தைக்கொண்டே அதற்கு காரணமான அஞ்ஞானமும் ஜடம் என்றே சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானம் ஜடம் என்று சொல்வதற்கு அஞ்ஞானமே காரணம். அதற்கு வேறு காரணம் ஏதுமில்லை. கடபடாதிகள் அறியப்படவேண்டியதன்மையில் இருப்பதால் ப்ரமேயம் என்று சொல்கிறோம். அதுபோல் ப்ரமேயத்வம் என்பது எதனுல் ப்ரமேயமாகிறது? என்றுல் அதுவே அதற்கு காரணம் என்றே சொல்லவேண்டும்.

அஞ்ஞனென்றும், மூடன் என்றும், மௌட்யம் என்றும் சொல்லப்படுவது எல்லாமே அஞ்ஞானம்தான். அஞ்ஞானம், அதன்கார்யம், எல்லாவற்றிலும் ஜாட்யம் என்பது எப்படி தொடர்ந்து இருக்கின்றதோ, அதுபோல் 'அஹம் அஞ்ஞ:' 'அஹம்மூட:' என்று சொல்லப்படுகின்றபோது சைதன்யத்திலும் ஜாட்ய ஸம்பந்தம் ஏற்படுகிறது. மௌட்யம் என்ற தன்மையும் அஞ்ஞானத்தைக் காரணமாகக் கொண்டே ஏற்படுகின்றதால் அஞ்ஞானம் பாவரூபமென்றே சொல்லவேண்டும். அஞ்ஞானம் அபாவரூபமென்று சொல்லவேண்டுமானுல் அபாவ ப்ரதியோகி ஒன்று இருக்கவேண்டும். ப்ரதியோகி இல்லாததால் அஞ்ஞானம் பாவரூபமென்றே சொல்லவேண்டும். (உதாரணமாக கட அபாவத்திற்கு கடம் ப்ரதியோகி என்பதுபோல் ப்ரதியோகி ஒன்று இருக்கவேண்டும்). மேலும் ஞானம் என்பது நித்யமானதால் அதற்கு நாசம் என்பதே கிடையாது.

அதனால் வேறு எந்த வஸ்துவின் அபாவமாகவும் அஞ்ஞானத்தைச் சொல்லமுடியாது என்பதால், பாவரூபமென்றே சித்திக்கின்றது. கட அபாவத்திற்கு கடம் ப்ரதியோகி என்று சொல்லாம், ஆனால் பாவரூபமான கடத்திற்கு ப்ரதியோகி ஏதுவுமில்லை. அது போல் அஞ்ஞானம் என்பது எதனுடைய அபாவரூபம் என்று ப்ரதியோகியாக எதையும் சொல்லமுடியாததால் அஞ்ஞானம் பாவரூபமென்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** அப்படியானால், அஞ்ஞானம் என்பதே ப்ரக்ருதி என்று சொல்லப்படுமானால், சாங்க்யன் சொல்வதுபோல், ப்ரக்ருதியை ஸத்யம் என்றே சொல்லலாமே? அநிர்வசனீயம் என்று ஏன் சொல்லவேண்டும்? மேலும் அஞ்ஞானம் என்பது பாவரூபம் என்றால், பாவ ரூபமான இரண்டு வஸ்துக்களுக்கு விரோதம் ஏற்படமுடியாது. அதனால் பாவம், அபாவம் என்ற இரண்டிற்குமே விரோதம் என்று சொல்லவேண்டும். அதனால் ஞானத்தினால் அஞ்ஞானம் நாசத்தை அடைகிறது என்று சொல்லமுடியாது.

**சித்தா :** அஞ்ஞானம், ஞானம், என்ற இரண்டிற்கும் நாச்ய நாசக பாவ விரோதம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். கீரியும், ஸர்ப்பமும்போல், பாவரூபமான இரண்டிற்குத்தான் விரோதம் ஏற்படும் ஆகவே, அஞ்ஞானம் என்பது, பாவரூபமாகவோ, அபாவரூபமாகவோ இருக்கிறது என்பதற்காக விரோதம் இருப்பதாகச் சொல்லமுடியாது. நாச்ய நாசகபாவ விரோதம் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். மேலும் அஞ்ஞானம் என்பது ஸத் என்றோ அஸத் என்றோ சொல்லமுடியாது. அஞ்ஞானம் என்பது நிலைத்து இருக்கக்கூடிய தன்மையில் இல்லாததால் ஸதஸத்விலக்ஷணம் என்றும் கல்பிதம் என்றும் சித்திக்கின்றது. அதனால் ஸத்ய மென்று சொல்லமுடியாது.

**பூர்வ :** ஞானத்தினால் அஞ்ஞானம் நாசமாகிறது என்றால், ஞான ஸ்வரூபமான சைதன்யத்தினால் அஞ்ஞானம் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** தஹிக்கக்கூடிய சக்தியுள்ள அக்னியென்பது, குளிர்ச்சியான ப்ரதேசங்களில் அக்னியின் தாஹகசக்தி கட்டுப்படுத்தப்படுகிறது. அப்பேர்ப்பட்ட குளிர் ப்ரதேசங்களில் கெட்டியான நெய்யை அக்னியில் வைத்திருந்தாலும் அந்த நெய் உருகுவதில்லை. அதுபோல் அனாதி காலமாக ஸ்வரூப சைதன்யத்தில் இருக்கின்ற அஞ்ஞானம், அந்த சைதன்ய சக்தியை ஆவரணம் செய்கின்றதால், மந்தப்ரகாசமுடைய சைதன்யத்துடன் அஞ்ஞானமும் சேர்ந்தே இருக்கின்றது. இதனால்தான் அஹம் அஞ்ஞ: அஹம் மூட: என்று ஞானஸ்வரூபமான தன்னையே நினைக்கின்றான். அதனால் போதஸ்வரூபமான ஆத்மாவை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கிறதென்பது அனுபவசித்தம்.

மேலும் ஞான அபாவம் என்றால் என்ன? ஸ்வரூபஞான அபாவமா? அல்லது வ்ருத்தி ஞான அபாவமா? என்று விசாரிக்கப்படுமானால், ஸ்வரூபஞானம் என்பது நித்யமானதால், ஸ்வரூபஞான அபாவம் என்று சொல்லமுடியாது. வ்ருத்திஞான அபாவம் என்றால், வ்ருத்திக்கு எது விஷயமோ அந்த விஷயத்தில்தான் வ்ருத்திஞான அபாவம் ஸம்பவிக்க முடியும். ஆத்மா என்பது வ்ருத்திக்கு விஷயமல்ல. வ்ருத்திக்கு எது விஷயமாகிறதோ அது ஜடமாகத்தான் இருக்கமுடியும். அதனால் ஸ்வரூபஞான அபாவமென்றோ, வ்ருத்திஞான அபாவமென்றோ சொல்லமுடியாது. ஆகவே ஞான அபாவம் அஞ்ஞானம் என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** அப்படியானால், ஞான பின்னம் அஞ்ஞானம் என்று, ஞானத்திற்கு வேறுபட்டது அஞ்ஞானம் என்று சொல்லலாமே? என்றால்,

**சித்தா :** ஞானபின்னம் அஞ்ஞானம் என்று சொல்லப்படுமானால் கடாதிகளும் ஞான பின்னமாக இருக்கின்றதால் அவைகளையும் அஞ்ஞானம் என்று சொல்லநேரிடும்.

**பூர்வ:** அப்படியானால் அஞ்ஞானம் என்பது ஞான விரோதி என்று சொல்வதற்கு ப்ரமாணம் எதுவுமில்லாததால் அஞ்ஞானம் என்பது என்ன? அதன் ஸ்வரூபம் என்ன? (அஞ்ஞானம்கிம் ரூபம்?)

**சித்தா :** ஞான விரோதி அஞ்ஞானம் என்றே சித்தம் செய்கிறோம். ஸ்வப்ரகாசமான ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கக்கூடிய தன்மையில் இருப்பது எதுவோ அதையே அஞ்ஞானம் என்று சொல்கிறோம். ஆத்ம சைதன்யம் என்பது ஸ்வப்ரகாசம் என்பதால், ஆத்ம ஸ்வரூபம் எதையும் அபேக்ஷித்து ப்ரகாசிக்க வேண்டியதில்லை. ப்ரகாசம் ஸ்வத: சித்தம். இப்பேர்ப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கக்கூடிய தன்மையுடைய ப்ரக்ருதியைத்தான், ஞானபின்னம் என்ற வ்யுத்பத்தியைக் கொண்டு, அஞ்ஞானம் என்பது, அஸ்வச்சம். அப்ரகாசம் ஜடம் என்றும் சொல்லப்படுகிறது. அதனால் ஞான விரோதி அஞ்ஞானம் என்றும், அஸ்வச்சமாக இருப்பதால் மௌட்யம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானத்தைப்பற்றி ச்ருதி, ஸ்ம்ருதி, புராணாதிகளிலும் ப்ரசித்தமாக சொல்லப்பட்டிருப்பதால் ப்ரமாணமில்லை என்று சொல்லமுடியாது. 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்திமாயினந்து மஹேச்வரம்' என்றும், 'நீஹாரேண ப்ராவ்ருதி:' என்றும் 'தம ஆஸீத்' 'தமஸா கூடம்' 'மமமாயாதுரத்யயா' 'தரதி அவித்யாம் விததாம்' என்பது போன்ற ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றதால் ப்ரமாணமில்லை என்று சொல்லமுடியாது. ஆகையால் அஞ்ஞானம் பாவரூபம் என்றே சித்திக்கின்றது. அதர்மம் என்பது தர்ம அபாவமல்ல, தர்மத்தைக்காட்டிலும் பின்னம். தர்மத்திற்கு விரோதி அதர்மம். அதுபோல், அஞ்ஞானம் என்பதும் ஞானபின்னம், ஞான விரோதி என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** இந்தவிதம் ஆத்ம ஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது ப்ரமாணசித்தம் என்றும் அதனால் அஞ்ஞானம் ஆத்மஸ்வரூபத்தில் இருக்கின்றதென்பதில் விரோதம் ஏதுமில்லை என்று சொல்லப்படுமானால், ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதம் என்றும், ஞானத்தினால் அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது என்றும் எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** அஞ்ஞானம் என்பது இருக்கின்றது என்று சாதிக்க வேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. ஆனால் ஞானம் என்பது எப்படி அனுபவசித்தமோ அதுபோல், அஞ்ஞானம் என்பதும் அனுபவ சித்தமாகவே இருக்கிறது. இந்த அஞ்ஞானம், நிலையற்றதன்மையில் இருந்த போதிலும் அத்விதீயமான ஆத்மஸ்வரூபத்தை ஆலிங்கனம் செய்துகொண்டது என்று பூர்வகாலப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றதால், சைதன்யம் போலவே அஞ்ஞானம் என்பது அனுபவசித்தம் என்றே சொல்லவேண்டும். ஆகையால் பாவா பாவயோ: விரோதமில்லை, நாச்ய நாசகபாவ விரோதம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். பாவ அபாவ விலக்ஷணமான இந்த அஞ்ஞானமே ஜகத்திற்கு உபாதானம் என்று முன்னாலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அஞ்ஞானம் அபாவரூபம் என்று எந்தமுறையிலும் நிரூபிக்கமுடியாது. ஆகவே, ஆத்ம ஸ்வரூபத்தில் இருக்கின்ற அஞ்ஞானம், அதை நாசமாக்கக்கூடிய ஞானம் ஏற்படும்வரை ஆத்மஸ்வரூபத்தில் இருப்பதாகவே சொல்லவேண்டும். சூர்யன் ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்றபோதே, மேகம் என்பது சூர்யனை மறைக்கின்றது. அப்போது, சூர்யப்ரகாசமும் இருக்கின்றது மேகமும் இருக்கின்றது. சூர்யப்ரகாசத்தினால்தான் மேகம் இருக்கிறதென்பதே அறியப்படுகிறது. ஆனாலும் மேகம் மறைக்கின்றபோதுசூர்யப்ரகாசம் மந்தமாகவே இருக்கின்றது. அந்த சூர்யப்ரகாசமே தீவிரமாகின்றது, மேகமும் கலைந்து இருந்த இடம் தெரியாமல் போய்விடுகிறது. இதேபோல் வன்னிமரத்திலான அரணிக்கட்டையில் எப்போதும் அக்னி இருக்கின்றது. அக்னியென்பதும், மரக்கட்டை என்பதும் விரோதபாவம் உள்ளதுதான் என்றாலும் அக்னியென்பது அபிவ்யக்தமாகாததால் கட்டையை எரிப்பதில்லை. அந்தக் கட்டையை கடைந்தபிறகே அக்னி அபிவ்யக்தமாகி கட்டையை எரிக்கின்றது. இதேபோல், அஞ்ஞானம் என்பது ஞானஸ்வரூபமான ஆத்மாவுடன் சேர்ந்து இருந்தபோதிலும், அந்த அஞ்ஞானம் ஸ்வரூபஞானத்தினால் நாசத்தை அடைவதில்லை. வேதாந்தவாக்ய ஜன்யமான அகண்டாகார வ்ருத்திஞானம் ஏற்படுகின்றபோதுதான், ஆத்மஆவாரக அஞ்ஞானத்திற்கு நாசம் ஏற்படுகிறது.

**318. அவதாரிகை :**

'அஹம் அஞ்ஞ:' என்றப்ரதீதி எல்லோருக்கும் இருக்கின்றது என்பது உண்மையே. ஆனாலும், மௌட்யம் என்பது ஆத்மாவிற்கு உபாதியான அந்த:கரணத்தில் இருப்பதாகவே அறியப்படுகிறது. அதனால் சின்மாத்ரமான ஆத்மஸ்வரூபம் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருக்கின்றதென்று எப்படிச் சொல்லமுடியும்? 'அஹம் ப்ரஹ்ம நவேதி' என்று எனக்கு ப்ரஹ்மம் அறியப்படவில்லை என்ற அனுபமே எல்லோருக்கும் இருக்கின்றதால் அஞ்ஞானம் சைதன்யநிஷ்ட்டம் என்று சொல்வது சரியல்ல.

இது சரியல்ல. அஞ்ஞானம் என்பது ஜடமான அந்த:கரணத்தை ஆச்ரயமாக கொண்டிருக்கமுடியாது என்பதை மேலே விளக்கப்படும். ஆகவே, சின்மாத்ரஸ்வரூபநிஷ்ட்டமாகவே பாவரூபமான அஞ்ஞானம் இருக்கின்றதென்பது அனுபவசித்தம்.

**ச்லோகம் :**

चिद्वस्तुनश्रिति भवेत्तिमिरं तमिस्रं तामिस्रमन्धतमसं जडिमा तमिस्रा ।
माया जगत्प्रकृतिरच्युतशक्तिरान्ध्यं निद्रा सुषुप्तिरनृतं प्रलयो गुणैक्यम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மவிஷயகமான அஞ்ஞானம், ஆத்மாவில்தான் இருக்கமுடியும். அந்த அஞ்ஞானத்தையே, தாமிச்ரம், தமஸ், ஜடிமா, மாயா, ஜகத்ப்ரக்ருதி, அச்யுதசக்தி, ஆந்த்யம், நித்ரா, சுஷுப்தி, அந்ருதம், ப்ரளயம், குணஸாம்யம் என்ற பலவிதமான (சப்தங்களால்) பதங்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கேவல சின்மாத்ரஸ்வரூபத்தையே ஆச்ரயித்து, அதையே விஷயமாகக் கொண்டிருக்கின்ற அஞ்ஞானம் என்பது மேலே சொல்லப்பட்டபலபதங்களால் குறிப்பிடப்படுகின்றது. திமிரம், தமிச்ரம், அந்ததமஸ், என்ற சப்தங்களால் அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியை குறிக்கின்றது என்று ச்ருதிஸ்ம்ருதிகளில் ப்ரசித்தமாகச் சொல்லப்படுகிறது. இருள் (இருட்டு) என்பது இருக்கின்றவஸ்துவை தெரிவிப்பதில்லை, ஆகவே தமிச்ரம் என்று சொல்லப்படும் இருள், வஸ்துவை மறைக்கின்ற தன்மையுடையது என்பதால், அஞ்ஞானத்தை தமிச்ரா என்ற சப்தத்தினால் சொல்லப்படுகிறது. அஞ்ஞான கார்யமான, ஜாக்ரத் ஸ்வப்னவஸ்த்தைகளில் இருக்கின்ற பதார்த்தங்களெல்லாம் சுஷுப்தி அவஸ்த்தையில் காரணமான அஞ்ஞானமாத்ர மாகலயத்தை அடைகின்றது என்ற தன்மையைக் கொண்டு நித்ரை, சுஷுப்தி, ப்ரளயம், குணஸாம்யாவஸ்த்தை என்ற சப்தங்களால் அஞ்ஞானம் குறிப்பிடப்படுகிறது.

**பூர்வ :** சித்ரூபமான ஸ்வப்ரகாசமான ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது உண்மையில் இருக்கமுடியாது என்று சொல்லப்படுமானால், அந்த அஞ்ஞானம் என்பதை ச்ருதி யுக்தி அனுபவங்களைக் கொண்டுசித்தம் செய்யவேண்டிய அவஸ்யம் என்ன? ஆகவே, சின்மாத்ரஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பதே ஸம்பவிக்கமுடியாதாகையால், வேறு ஏதாவதொன்றை அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகச் சொல்லலாம், அவ்விதம் இல்லையானால், அஞ்ஞானம் இல்லையென்றே சொல்லலாமே? இவ்வளவு சிரமத்துடன் அஞ்ஞானம் ஆத்மாவில்தான் இருக்கின்றதென்று சித்தம் செய்யவேண்டிய அவஸ்யம் என்ன?

**சித்தா :** 'அஹம் அஞ்ஞ:' என்று எல்லோருக்கும் அனுபவ சித்தமாக இருக்கின்ற அஞ்ஞானத்தை இல்லையென்று யாராலும் சொல்லமுடியாது. மேலும், அஞ்ஞானம் பாவரூபம் தான் என்பதும் தமஸ், தாமிச்ரம் போன்ற பல சப்தங்களால் ச்ருதிஸ்ம்ருதி புராணாதிகளில் சொல்லப்படுகிறது. அதனால் ஆத்மாவையே ஆச்ரயித்து, அதையேவிஷயமாகக் கொண்டது அஞ்ஞானம் என்று சொல்லப்படுவதிலும் அஸம்பாவிதம் ஏதுமில்லை. ஏனெனில், அஞ்ஞானம் என்பது சித்ஸ்வரூபத்தை

மறைக்கின்றது என்பதால் அஞ்ஞானம் பாவரூபம் என்பதும் ச்ருதி, ஸ்ம்ருதி, அனுபவம் முதலானவைகளால் சித்தம் செய்யப்பட்டது. அதனுல் சிதாத்மாவான ஸ்வப்ரகாசஸ்வரூபத்தையே மறைக்கின்றது என்று சொல்ல வேண்டுமேதவிர ஜடத்தை மறைப்பதாகச் சொல்லமுடியாது என்பதை மேலேயும் விளக்கப்போகிறோம். திமிராதி சப்தங்களும் தனிப்பட்ட முறையில் அஞ்ஞானம் பாவரூபம் என்பதையே தெரிவிக்கின்றது. அதனுல் அதர்மம் என்பது எப்படிதர்மத்திற்கு வேறுபட்டது என்று (தர்மபின்னம் அதர்மம்) தெரிவிக்கின்றதோ அதுபோல் அஞ்ஞனம் என்பதும் பாவரூபம் (ஞானபின்னம் அஞ்ஞாணனம்) என்றே அறியவேண்டும்.

**319. அவதாரிகை :**

சின்மாத்ரமான ஆத்மஸ்வரூபத்தையே அஞ்ஞானம் ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்டிருக்கிறதென்று எப்படிச்சொல்லமுடியும்? 'அஹம் பரஹ்ம ந வேதி' என்று அஹம்சப்தத்தினுல் ஜீவனைதெரிவித்து, ஜீவனையே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும், ப்ரஹ்மமென்பது அறியப்படவில்லையென்று ப்ரஹ்மென்பது விஷயமாகவும் சொல்லப்படுகிறது என்றேசொல்லவேண்டும். ஏனெனில் எனக்குப்ரஹ்மம் தெரியவில்லை என்றே லோகத்தில் சொல்லப்படுகிறது. அதனுல் அஹங்காரவிசிஷ்ட்டசைதன்யம்தான் அஞ்ஞான ஆச்ரயம் என்றே சொல்லவேண்டும். இந்த ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

आश्रयत्वविषयत्वभागिनी निर्विभागचितिरेव केवला ।
पूर्वसिद्धतमसो हि पश्चिमो नाश्रयो भवति नापि गोचरः ॥

**ச்லோகார்த்தம் :** ஜீவஈச்வரவிபாகங்கள் அற்றகேவல சைதன்யமே, அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கமுடியும். ஏனெனில் பூர்வசித்தமான அஞ்ஞானத்திற்கு (பச்சாத்) பின்னுல் சித்திக்கின்ற ஜீவன் ஆச்ரயமாகவோ, விஷயமாகவோ இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** கேவலசின்மாத்ரமானஸ்வரூபமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருக்கிறதென்று சொல்லமுடியாது. ஏனெனில், எப்படி ஞானத்திற்கு ஆச்ரயம் வேறு, விஷயம் வேறு என்று சொல்லப்படுகின்றதோ அதுபோல், அஞ்ஞானத்திற்கும் ஆச்ரயம், விஷயம், இரண்டும் வேறு என்றே சொல்லப்பட வேண்டும். 'அஹம் அஞ்ஞ:' என்று அஹங்காரவிசிஷ்ட்ட சைதன்யத்தில்தான், அஞ்ஞத்வ அனுபவம் இருக்கிறது. அதனுல் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்றும், பரமாத்மாவே, அஞ்ஞானத்திற்கு விஷயம் என்றும் சொல்லவேண்டும்.

**சித்தா :** இதுசரியல்ல, ஜீவஈச்வர, விபாகம் ஏற்படுவதற்கு முன்பே, நிர்வவிசேஷமாகவும், நிர்விபாகமாகவும் இருக்கின்ற கேவலசைதன்யம் என்பதையே, அஞ்ஞனம் ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டிருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஏனெனில், ஜீவன், ஈச்வரன், என்ற விபாகம் ஏற்படுவதற்கே காரணம் அஞ்ஞானம்தான். ஆகையால் ஜீவபாவம் ஏற்பட காரணமாக இருக்கின்ற அவித்யையென்பது, ஜீவாச்ரயம் என்றோ, ஜீவனை விஷயமாகக் கொண்டது என்றோ சொல்லமுடியாது. ஆகவே, அஹங்கார விசிஷ்ட்டசைதன்யம் ஆச்ரயமுமில்லை, விஷயமுமில்லை. அஹங்கார உபலக்ஷிதமானப்ரத்யகாத்மசைன்யமே, ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கிறது. அதனுல்தான் அஞ்ஞனை இருப்பவனுக்கே 'அஹம் ப்ரஹ்ம ந வேதி' என்ற அனுபவம் இருக்கிறது. ஷடஸ்மாகம் அனுதி என்று சொல்லப்படுகிறது. அதில் அஞ்ஞானம் என்பது எப்படி அனுதியோ அதுபோல் ஜீவேச்ரவிபாகம் என்பதும் அனுதி என்பது வேதாந்த சித்தாந்தம் என்றுலும், அஞ்ஞானம் என்பதே பூர்வசித்தம்.

அதன்பிறகே ஜீவேச்வர விபாகம் என்பது அனுதிகாலமாக இருந்துவருகிறது. வேதம் என்பது அனுதி என்று சொல்லப்பட்டாலும்கூட வர்ணங்கள் சேர்ந்தால்தான்பதம், பதங்கள் சேர்ந்தால்தான் வாக்யம் என்பது போல் இந்த விஷயத்திலும் சிறிது வித்யாஸம் தோற்றுகிறது. (வர்ணங்கள் என்பது எப்படி நித்யமோ அதுபோல், பதங்களும் வாக்யங்களும் நித்யம்தான். இதில்க்ரமம் எதுவும் கிடையாது.)

**பூர்வ** : கேவல சின்மாத்ரமான ப்ரஹ்மத்தையே, அஞ்ஞானம் ஆச்ரயித்திருக்கிறது என்று சொல்லப்படுமானல், சுத்த சித் என்றும், விசிஷ்ட்டசித் என்றும், இரண்டும் வேருகச் சொல்லப்படுவதால், ஜீவனுக்கு ஸம்ஸாரம் என்று எப்படிச்சொல்வது? ஏனெனில் அஞ்ஞானம் எதை ஆச்ரயித்திருக்கின்றதோ, அதில்தானே, அஞ்ஞான கார்யமானஸம்ஸாரம் ஏற்படவேண்டும்? ஆகையால் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்றும் ஸம்ஸாரம் (ஜீவனிடம் என்றும்) ஜீவாச்ரயம் என்றும் சொல்வது எப்படி பொருந்தும்?

**சித்தா** : அஞ்ஞானம் என்பது உபாதி. உபாதி என்பது ப்ரதிபிம்பபக்ஷபாதி. அதாவது ப்ரதி பிம்ப பக்ஷபாதித்வம் என்ருல், தன்னிடத்திலிருக்கின்ற தர்மத்தைப்ரதிபிம்பத்தில் தோற்றுவிப்பதையே, ப்ரதிபிம்பபக்ஷபாதித்வம் என்று சொல்லப்படும்.

**பூர்வ** : இவ்விதம், ப்ரதிபிம்பக்ஷபாதித்வம் என்று சொல்லப்படுமானல், அஞ்ஞான விஷயத்தில் இதுபொருந்தாது. ஏனெனில், அஞ்ஞத்வம் என்பதோ கர்த்ருத்வம் போக்த்ருத்வம் முதலானவைகளோ அஞ்ஞானதர்மமல்லவே? அவ்விதம் அஞ்ஞானதர்மமாக இல்லாதவைகளும் ப்ரதிபிம்பமான ஜீவனிடத்தில் தோன்றுகிறதே? அஞ்ஞானகார்யம் என்பதுபேதம். பேதம் என்பது ஜீவனிடத்தில் மட்டும் இல்லை. ஜீவனைக்காட்டிலும் ப்ரஹ்மம் வேறு என்பதைப்போல், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் ஜீவன் வேறு என்றே சொல்லப்படவேண்டும். அதனுல், பிம்பஸ்வரூபமான ப்ரஹ்மம்வேறு, ப்ரதிபிம்பஸ்வரூபமான ஜீவன்வேறு என்று சொல்லப்படவேண்டும் என்பதால் அஞ்ஞானகார்யம் என்ற பேதம், பிம்பம், ப்ரதிபிம்பம் என்ற இரண்டிலும் இருப்பகதாகவே சொல்லவேண்டும் என்பதால், அஞ்ஞானம் என்ற உபாதிக்குப்ரதிபிம்பபக்ஷபாதித்வம் சொல்லமுடியாது.

**சித்தா** : அஞ்ஞானம் என்பது, தன்னுடையதர்மத்தையோ, தன் கார்யத்தையோ தோற்றுவிக்கவில்லையென்றும், கார்யம் என்பது அதன்தர்மத்தை தோற்றுவிக்கிறது என்று சொல்லாமே?

**பூர்வ** : அவ்விதம் அஞ்ஞான கார்யத்தின் தர்மமென்று சொன்னுலும்கூட அதுவும் பேதம்தான். பேதம் என்பது உபயநிஷ்ட்டம் என்பதால் பிம்பம், ப்ரதிபிம்பம் இரண்டிலும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். மேலும் தர்ப்பணம் என்பது தன்னிடமுள்ள நீலம் முதலான கலர்களையே ப்ரதிபிம்பத்தில் தோற்றுவிக்கிறதேயன்றி தர்ப்பணத்தின் கார்யதர்மம் என்று எதையும் தோற்றுவிப்பதில்லை. அதனுல் ஸ்வகார்யதர்மபாஸகத்வம் என்று சொல்வதுசரியல்ல. மேலும், சுத்த சைதன்யமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானமே, ஜீவ, ஈச்வரவிபாகம் ஏற்பட காரணமென்றும் சொல்லப்படுகிறது. அதனுல் அஞ்ஞானத்தினுல் ஏற்படும் ஸம்ஸாரம் என்பதும் ஜீவன், ஈச்வரன் என்ற, பிம்பசைதன்யம், ப்ரதிபிம்பசைதன்யம் என்ற இரண்டிலும் தானே ஏற்பட வேண்டும்? ஏனெனில், ஒரேசைதன்யம்தான் பிம்பமாகவும், ப்ரதிபிம்பமாகவும் இருக்கின்றது என்பதாலும், பிம்பம், ப்ரதிபிம்பம் என்ற விபாகங்களுக்கு காரணமான அஞ்ஞான கார்யமாக ஜீவன் ஈச்வரன் என்ற இரண்டிலும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், உபாதியினால் ஏற்படும் தர்மங்களுக்கு ப்ரதிபிம்பம் என்பதில் அத்யாஸம் கட்டாயம் இருந்தேயாக வேண்டும் என்ற நியமம் சொல்லமுடியாது. 'உபாதிக்ருததர்மாணுமத்யாஸோ நியமேனயத் ப்ரதிபிம்பே பவத்யே ஷோபாதேஸ்தத்பக்ஷபாதிதா ' என்று சொல்லப்படுகிறது. உதாரணமாக, சக்ஷுஸ் என்ற உபாதியில் எதிரேயுள்ள (வெளியில் உள்ள) புருஷனின் ப்ரதிபிம்பம் தோன்றுகிறது. எதிரிலுள்ளபிம்பத்தைக்காட்டிலும் சக்ஷுஸ் என்ற உபாதிமிகவும் சிறியது. ஆகவே, இந்த உபாதியிலுல்ள அல்ப்பத்வம் என்பது ப்ரதிபிம்பமான அக்ஷிபுருஷனிடம் தான் அத்யாஸம் செய்யப்படுகிறதேயன்றி பிம்பபுருஷனிடத்தில் அத்யாஸம் ஏற்படுவதில்லை. ஆகவே, அஞ்ஞானம் என்ற உபாதியினால் ஏற்படும் தர்மங்களான, அஞ்ஞத்வம் கர்த்ருத்வம், ஸம்ஸாரித்வம் என்பதெல்லாம் ப்ரதிபிம்பத்தில்தான் ஏற்படுகிறதேயன்றி பிம்பத்தில் ஏற்படுவதில்லை. இதையேப்ரதிபிம்பபக்ஷபாதித்வம் என்று சொல்லப்படுகிறது.

**பூர்வ :** அப்படியானால் அல்ப்பத்வம் என்பது கோளகதர்மம் என்று சொல்லாமல், கோளகத்தினால் உண்டுபண்ணப்படும் தர்மம் என்று ஏன்சொல்லவேண்டும்?

**சித்தா :** கோளகம் என்பது அக்ஷிபுருஷனைவிட பெரிதாக இருக்கிறது. அதனால் உபாதிதர்மத்தின் கார்யம் என்று சொல்லப்படுகிறது. இதேபோல், ஜீவனிடம் தோன்றுகின்ற அஞ்ஞத்வம், கர்த்ருத்வம் முதலான எல்லாமே, அஞ்ஞானத்தினால் ஏற்படுகின்றதர்மமேயன்றி, அஞ்ஞானத்தில் இருக்கின்றதர்மமில்லை. அஞ்ஞானத்தினால் உண்டுபண்ணப்படும் தர்மங்களைத்தான் ப்ரதிபிம்பசைதன்யத்தில் ஆரோபம் செய்யப்படுகிறது. சேதனனிடத்தில்தான் கர்த்ருத்வாதிகள் ஸம்பவிக்க முடியுமேயன்றி ஜடமான அஞ்ஞானத்தில் ஸம்பவிக்கமுடியாது. மேலும் ப்ரத்யகாத்மாவிற்கு உபாதியாகச் சொல்லப்படும் அஞ்ஞானம் என்பது ஜடமானதால், அந்த அஞ்ஞானம் ஜடமான ஒன்றை ஆச்ரயமாகக் கொண்டிருக்கிறதென்று சொல்லமுடியாது. கண்ணாடி என்பதில், பிம்பத்தைக் காட்டிலும் வேறாக இருக்கின்ற தன்மை என்பது இருக்கிறது. இவ்விதம் அறியப்படும் பேதம் என்றதன்மையை ப்ரதிபிம்பத்தில் அத்யாஸம் செய்கின்றது. அதனால் தான் பிம்பம்வேறு ப்ரதிபிம்பம் வேறு என்றப்ரதீதி ஏற்படுகிறது. ஆகவே, கண்ணாடியில் உள்ள கலர், மலினம் முதலானதன்மைகளை பிரதிபிம்பத்தில் தான் அத்யாஸம் செய்கிறதேயன்றி பிம்பத்தில் அத்யாஸம் செய்யப்படுவதில்லை. ஆனால் பேதம் என்றதர்மத்தை மட்டும், பிம்பம், ப்ரதிபிம்பம் என்ற இரண்டிலும் அத்யாஸம் செய்யப்படுகிறது. த்ருஷ்ட்டாந்தத்தில் இவ்விதம் இருந்த போதிலும், தார்ஷ்ட்டாந்தத்தில் அஞ்ஞானம் என்பது தன்னிடமுள்ள ப்ரஹ்ம பேதத்தை, உபஹிதமான சைதன்யத்தில் (ஜீவனிடத்தில்) தான் ஆரோபம் செய்கிறதேயன்றி ஸர்வஞ்ஞனை பிம்ப சைதன்யத்தில் ஆரோபம் செய்வதில்லை. ப்ரஹ்மம் என்பது அஞ்ஞானமில்லை. அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மமில்லை என்றாலும்., ப்ரஹ்மபேதம் அஞ்ஞானத்தில் இருக்கலாம். ஆனால் அஞ்ஞானபேதம் ப்ரஹ்மத்தில் இருக்கமுடியாது. அஞ்ஞானத்தில் இருக்கின்ற ப்ரஹ்மபேதம் என்பது, ப்ரஹ்மத்தில் ஆரோபம் செய்யமுடியாது. ஆகவே, அஞ்ஞானத்தில் இருக்கின்றபிம்பபேதம், ப்ரதிபிம்பத்தில்தான் அத்யாஸம் செய்யப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படாமல், அஞ்ஞானத்திலுள்ள பிம்பபேதம், பிம்பமான ப்ரஹ்மத்திலும் இருப்பதாகச் சொல்லப்படுமானால் அஞ்ஞானம் என்ற உபாதியும், பிம்பமும் ஒன்று என்று சொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால் ப்ரஹ்மமென்பதும் ஜடம் என்றாகும்.

தர்ப்பணத்திலிருக்கின்றபிம்பபேதம், ப்ரதிபிம்பத்தில்தான் ஏற்படமுடியும், அதனுல்தான் ப்ரதிபிம்பத்தில் பிம்பத்தின் பேதம், அறியப்படுகிறது. ஆனுல் தர்ப்பணத்திலுள்ள பிம்பபேதம் என்பது பிம்பத்தில் ஏற்படுவதில்லே. பிம்பத்திலும் பிம்பபேதம் என்பது ஏற்படுமானுல், பிம்பம் என்பது, பிம்பமில்லேயென்று சொல்லப்பட்டதாக ஆகும். ஆனுல் அவ்விதம் அறியப்படவில்லே. ஏனெனில், கண்ணுடியைப்பார்க்கின்றபோது பிம்பமும் நம் கழுத்தில் இருப்பதாகவே அறியப்படுகிறதேயன்றி கழுத்தில் இல்லேயென்றப்ரதீதி ஏற்படுவதில்லே. அதேபோல் அஞ்ஞானத்தில் இருக்கின்ற ப்ரஹ்மபேதம் என்பது, ப்ரதிபிம்பசைதன்யத்தில் ஏற்படமுடியும். அவ்விதமின்றி ப்ரஹ்மபேதம் ப்ரஹ்மத்தில் ஏற்படுமானுல், ப்ரஹ்மம் ஜடமென்ருகும். அதனுல், பிரதிபிம்பசைதன்யமான ஜீவனுக்குத்தான்ஸம்ஸாரம், பிம்பத்தில் ஸம்ஸாரம் இருக்கமுடியாது. அஞ்ஞானம் என்பது ஈச்வரனுக்கு வஸமாக இருக்கின்றதால், ஈச்வரனே அஞ்ஞானம் ஆவரணம் செய்து ப்ரமத்தை உண்டுபண்ணுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே ஜீவனுக்கேஸம்ஸாரம் என்பது சித்திக்கின்றது.

**பூர்வ :** கேவல நிர்விபாக சின்மாத்ரஸ்வரூபமே அஞ்ஞானத்திறகு ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருப்பதாக எப்படிச்சொல்வது? ஏனெனில் ஞானம் என்பதற்கு எப்படி ஆச்ரயம் வேறு, விஷயம் வேறு என்று சொல்லப்படுகிறதோ, அது போல், அஞ்ஞானத்திற்கும் ஆச்ரயம், விஷயம் இரண்டும் வேருகத்தானே இருக்கவேண்டும்? 'அஹம் அஞ்ஞ:' என்று அஞ்ஞான அனுபவம் என்பது ஜீவனை ஆச்ரயித்தே இருக்கிறது. 'ப்ரஹ்மநஜானுமி' என்றும் ப்ரஹ்மமென்பது எனக்கு அறியப்படவில்லே என்று அஞ்ஞானத்திற்கு விஷயம் வேருகத்தானே அறியப்படுகிறது?

**சித்தா :** கேவல நிர்விபாக சிதி: ஸ்வரூபமே அஞ்ஞானத்திறகு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கின்றதென்றுச்ருதிவாக்யமே தெரிவிக்கிறது. கேவலம் என்றபதம் ஸஜாதீயவிஜாதீய பேதங்கள் அற்றஸ்வரூபம் என்பதையும், 'சிதிரேவ' என்று ஏவகாரத்தினுல் ஸ்வகதபேத மற்றஸ்வரூபம் என்பதையும் தெரிவிக்கின்றது. அதனுல் எவ்விதபேதங்களும் அற்றஸ்வரூபமே, ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருக்கின்றது என்று தெரிவிக்கின்றது. அதுமட்டுமல்ல. ஜீவனென்றும் ஈச்வரன் என்றும் விபாகம் ஏற்படும் முன்பே அஞ்ஞானம் சித்தம் என்று சொல்லப்பட்டதால், அஹங்காரம் என்பதோ, அஹங்காரவிசிஷ்டசைதன்யமோ, அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகச்சொல்லமுடியாது. கார்யம் என்பதே காரணத்தை ஆச்ரயித்து இருக்குமேயன்றி காரணம் என்பது கார்யத்தை ஆச்ரயித்து இருப்பதாகச் சொல்லமுடியாது. அஹம் என்று விசிஷ்டமாகப்ரகாசிக்கின்ற போது, அஹம்பதவாச்யார்த்தம் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருக்கமுடியாது. அஹம்பதலக்ஷயார்த்தமே அஹம்பதத்திற்கு ஆச்ரயம். அதனுல் அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் ஏற்படுகின்றபோது அந்த:கரண உபலக்ஷிதமானப்ரத்யக்ஸ்வரூபம் என்ற நிர்விபாக சித்ஸ்வரூபத்தையே ஆச்ரயித்திருக்கின்றது, அதையே விஷயமாகச் கொண்டிருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

**320. அவதாரிகை :**

அஞ்ஞானமென்பது அபாவரூபம் என்று, அஞ்ஞானம் அஸத்என்பதாகச் சொல்லப்படுவது சரியல்ல என்பதை இங்கு தூஷணம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :** नाभावताऽस्य घटते वरणात्मकत्वान्नाभावमावरणमाहुरभावशौण्डाः ।
अज्ञानमावरणमाह च वासुदेवस्तद्भावरूपमिति तेन वयं प्रतीमः ॥

**ச்லோகார்த்தம்** அஞ்ஞானம் என்பது ஆவரண ரூபமாக இருக்கின்றதால் அபாவரூபமென்று சொல்வது பொருந்தாது. அபாவவிஷயத்தில் குசலர்களான தார்க்கிகர்களாலும், அபாவம் ஆவரண ரூபமென்று ஒத்துக்கொள்ளப்படவில்லை. அஞ்ஞானமே ஆவரணம் என்று பகவானும் கீதையில் தெரிவிக்கின்றார். அதனால் அஞ்ஞானம் பாவரூபமென்றே அறிப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் மறைக்கின்ற தன்மையுடையதாக இருக்கின்றதால் பாவரூபமாகத்தான் இருக்கவேண்டும். பாவரூபமாக இருக்கின்ற சுவர் எப்படி மறைக்கின்றதோ அது போல் அஞ்ஞானம் என்பது மறைக்கின்றதால் அஞ்ஞானம் பாவரூமென்றே சொல்லவேண்டும். (மறைக்கின்றது என்பதே ஹேது). சுஷுப்தியில் ஆத்மஸ்வரூபம் அஞ்ஞானத்தினால் ஆவரணம் செய்யப்படுகிறது. அதனால்தான் அஹம் என்றோ, இதம் என்றோ விசேஷ ரூபமாகப்ரகாசிக்கவில்லை. சுஷுப்திநிலையில் ப்ரஹ்மமென்பது ப்ரகாசித்துக்கொண்டிருந்தும், அஞ்ஞானத்தினால் மறைக்கப்படுவதனாலேயே, ஸ்வஸ்வரூபம் ப்ரகாசிக்கின்றது என்பது அறியப்படவில்லை.

**பூர்வ :** ஜீவன் வேறு ப்ரஹ்மமென்பதுவேறு. அதனால்தான் சுஷுப்தியில் ப்ரஹ்மென்பது ப்ரகாசித்துக் கொண்டிருந்தும் அறியப்படவில்லை யென்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஜீவனேப்ரஹ்மென்று சாஸ்திரமேபோதிக்கின்றது. 'ஸ்வம் அபீதோபவதி' என்று சுஷுப்தியில் ஜீவன்ஸ்வஸ்வரூபத்தை அடைகிறான் என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் ஜீவன் ப்ரஹ்மபாவத்தை அடைந்தும்கூட அந்த நிலையில் அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட ஆவரணம் காரணமாக நான் ப்ரஹ்மமென்று அறியப்படவில்லை.

**பூர்வ :** ஜீவன், சுஷுப்திநிலையில் தன்னை அறிவதற்குரிய, மனஸ், இந்தரியம் என்பதெல்லாம் இல்லாததால், தன்னை ப்ரஹ்மென்று அறியவில்லை என்றுசொல்லாமே?

**சித்தா :** ஸ்வப்ரகாசஸ்வரூபமாய் ஸதாப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றதால் தன்னை அறிவதற்கு காரணம் எதுவும் தேவை இல்லை. அதனால் அஞ்ஞானம் என்பது ஆவரணம் செய்வதாலேயே அறியப்படவில்லையென்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** அஞ்ஞானத்தையன்றிவேறு ஏதோ ஒன்று மறைப்பதாகச் சொல்லலாம். அல்லது அஞ்ஞானமே இல்லையென்று சொல்லலாமே?

**சித்தா :** 'நகிஞ்சித் அவேதிஷம்' என்று சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் பராமர்ஸம் ஏற்படுகின்றது. அதனால் அஞ்ஞானமில்லை என்று சொல்லமுடியாது. அதுமட்டுமல்ல. அஞ்ஞானத்தையன்றி வேறு எதுவும் சுஷுப்தியில் இருக்கிறதென்பதற்கோ, அதனால் மறைக்கப்படுகிறது என்பதற்கோப்ரமாணம் ஏதுமில்லை. ஆனால் 'நீ ஹாரேணப்ராவ்ருதா:' என்பது போன்ற பலவாக்யங்களால் அஞ்ஞானம் ஆவரணம் செய்கிறது என்று தெரிவிக்கின்றதால் அஞ்ஞானம் இருக்கிறதென்பதற்கு ப்ரமாணம் இருக்கிறது. அனுபவத்தினால் அறியப்படுகிறது. அபாவம் என்பது ஆவரணம் செய்கிறது என்று அபாவரூபமாக சொல்லப்படுமானால், அஞ்ஞானகார்யமான இந்த ஜகத் என்பதும் அபாவரூபமாகவே இருக்கவேண்டும். அவ்விதமிருந்தால் இந்த்ரியங்களால் ஜகத் என்பது க்ரஹிக்கப்படமுடியாது. க்ரஹிக்கப்படுகின்றதால் ஜகத் என்பது அபாவரூபமில்லை என்றுசித்தமாகிறது. ஜகத் என்ற கார்யம் அபாவரூபமில்லையென்றால், ஜகத்திற்கு உபாதானகாரணமான அஞ்ஞானம் என்பது அபாவரூபமென்று சொல்லமுடியாது. 'அஞ்ஞானேன ஆவ்ருதம் ஞானம்' என்று ஞானஸ்வரூபமான ஆத்மஸ்வரூபம்

அஞ்ஞானத்தினுல் ஆவ்ருதம் என்று பகவானுலும் சொல்லப்பட்டிருக்கிறது. இதேபோல் மாயை என்பது ஈச்வரனுக்கு வஸப்பட்டது என்றும் ஜீவனேபந்தப்படுத்துகிறது என்றும் தெரிவிக்கின்றது. ஆகவே, 'அஞ்ஞானம் பாவரூபம்,' ஆவாரகத்வாத், படவத் என்று அனுமானத்திலும் அபாவரூபமில்லே என்று சித்திக்கின்றது.

**321. அவதாரிகை :**

ஹேதுவான ஆவாரகத்வம், அஞ்ஞானத்தில் இல்லேயென்று யாராலும் சொல்லமுடியாது என்று பகவான் ஸ்ரீவ்யாஸரும் இதேவிஷயத்தை தெரிவிக்கின்ருர்.

**ச்லோகம் :**

एकः शत्रुर्न द्वितीयोऽस्ति शत्रुरज्ञानतुल्यः पुरुषस्य राजन् ।
येनावृतः कुरुते संप्रमत्तो घोराणि कर्माणि सुदारुणानि ॥

**ச்லோகார்த்தம் :** ஹே! ராஜன், புருஷனுக்கு சத்ரு ஒன்றேதான். அஞ்ஞானம் என்ற சத்ருவிற்கு ஸமானமாக இரண்டாவதாக வேறு ஒரு சத்ரு என்பதே கிடையாது. இந்த அஞ்ஞானத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டதனுல்தான், தன் அறிவை இழந்த புஷனுனவன் கோரமான கர்மாக்களேச் செய்கிருன்.

**வ்யாக்யானம் :** எந்தபுருஷன் அஞ்ஞானத்தினுல் அறிவு என்பது மறைக்கப்பட்டு, கோரமானகர்மாக்களைச் செய்கின்ருனே, அவன் இந்த ஜன்மாவிலும் பயங்கரமான துக்கத்தை அடைகிருன். அதேபோல் மறுபிறவிகளிலும் பயங்கரமான் துக்கத்தையே அடைகின்ருன். ஆகவே, ஹே! ராஜன்! அஞ்ஞானம் ஒன்றே மனுஷ்யனுக்குசத்ரு. இரண்டாவது சத்ரு என்பது எதுவுமே இல்லே என்று வ்யாஸபகவானும் தெரிவிக்கின்ருர். அஞ்ஞானத்தினுல் ஆவ்ருதம் செய்யப்படுகிறது என்றும், அனர்த்தத்திற்கு காரணமான கர்மாவைச்செய்து அதனுல் ஏற்படும் பாவத்தின்பலனுக துக்கத்தையே அனுபவிக்கிருன் என்றும் இதிகாஸபுராணுதிகளிலும் தெரிவிக்கப்படுகிறது.

**322 அவதாரிகை :**

கீழே, ஆகமம் என்ற சப்தப்ரமாணத்தினுலும், அனுமானம் என்றப்ரமாணத்தினுலும் அஞ்ஞானம் பாவரூபம் என்று சித்தம் செய்யப்பட்டது. இப்போது அஞ்ஞானம் பாவரூபம் என்பதை அர்த்தாபத்திப்ரமாணத்தினுலும் சித்தம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

जाड्यं जगत्यनुगतं खलु भावरूपं मौढ्यं च पुंगतमिति प्रतिभाति तादृक् ।
जाड्यं च मौढ्यमिति चानुभवप्रसिद्धमज्ञानमाहुरपवर्गपिधानदक्षम् ॥

**ச்லோகார்த்தம் :** ஜகத்தில அனுஸ்யூதமாக இருக்கின்ற ஜாட்யமும், புருஷனிடத்தில் உள்ள மௌட்யமும், பாவரூபமாகவே அறியப்படுகிறது. இவ்விதம் ஜாட்யமென்றும் மௌட்யம் என்றும் அனுபவத்தில் ப்ரசித்தமாக இருப்பது எதுவோ, அதையே அஞ்ஞானமென்று சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானமே மோக்ஷ மென்றபுருஷார்த்தத்திற்கு தடையாகவும் இருக்கிறது.

**வ்யாக்யானம் :** ஸர்வ அசேதன வஸ்துக்களிலும் ஜாட்யம் என்பது அனுஸ்யூதமாக இருக்கிறதென்பது எல்லோருக்கும் அனுபவசித்தமாகஇருக்கிறது. ஆகவே ஜடமான கார்யத்திற்கு உபாதானகாரணமாக இருப்பது எதுவோ அதுவும் ஜடமாகத்தான் இருக்கவேண்டும். பாவரூபமாக இருப்பதையே ஜாட்யம் மௌட்யம் என்ற சப்தங்களால் சொல்லப்படுகிறது. ஸர்வஜீவர்களிடம் இருப்பது மௌட்யம் என்பது எல்லோருக்கும் அனுபவசித்தம். ஸர்வ அனுத்மவஸ்துக்களிலும் ஜாட்யம் என்பது அறியப்படுகிறது. ஆகவே, ஞானம் என்பதை

ப்ரதியோகியாகக் கொண்டு, ஞான அபாவம் அஞ்ஞானம் என்ற சப்தம் தெரிவிக்கவில்லை என்பதை, ஜாட்யம், மௌட்யம் என்ற சப்தங்களாலேயே தெரிவிக்கப்படுகிறது. ஆகவே, அஞ்ஞானம் என்பது கடாபடாதி வஸ்துக்களில் ஜாட்யரூபமாகவும், சேதனனுடைய புருஷனிடத்தில் மௌட்யரூபமாகவும் இருக்கின்றதென்பது அனுபவசித்தமாக இருக்கிறது. இதுவே பந்தத்திற்கு காரணமாகவும் மோக்ஷத்திற்கு தடையாகவும் இருக்கிறது.

**பூர்வ :** கடாதிகளுக்கு அஞ்ஞானம், உபாதானம் என்று ஏன் சொல்லவேண்டும்?

**சித்தா :** சேதனன் கடபடாதி ஜடவஸ்துக்களுக்கு உபாதானமாக ஆகமுடியாது. ஜடமான வஸ்துவேஜடத்திற்கு உபாதான மென்று சொல்லமுடியும். அதனுல் அஞ்ஞானமே உபதானகாரணம் என்பது சித்தமாகிறது. அபாவம் என்பது எந்தகார்யத்திற்கும் உபாதானமாக ஆகமுடியாது. அதனுல் ஜடமானகார்யங்களுக்கு உபாதானமாக இருக்கின்றவஸ்து ஜடமாகவும் பாவரூபமாகவும் இருக்கின்றது என்பது அர்த்தாபத்தி ப்ரமாணத்தைக்கொண்டு யூகிக்கப்படுகிறது. ஜகத்திலுள்ள ஜாட்யம், புருஷனிடத்திலுள்ள மௌட்யம் என்பது அனுபவத்தினுலேயே எல்லோருக்கும் அறியப்படுகிறது. அனுமானத்தினுலும் சித்திக்கின்றது. அதுமட்டுமல்ல மோக்ஷமென்றபுருஷார்த்தை தடுக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாகவும் இருக்கின்றது. அதாவது பரமானந்தப்ரஹ்மாத்ம ஸ்வரூபத்தை மறைத்து அதனுல் விக்ஷேபத்தை ஏற்படுத்தி ஸம்ஸாரம் என்ற துக்கத்தை உண்டுபண்ணுகின்ற காரணத்திலேயே அஞ்ஞானம் பாவரூபம் என்றே சித்திக்கின்றது.

**323. அவதாரிகை :**

அஞ்ஞானம் என்பது பந்தகாரணம் என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் 'யதோவா இமானிபூதானி' என்பதுமுதலானச்ருதிவாக்யங்கள் ப்ரஹ்மமே ஜகத்திற்கு உபாதான காரணம் என்று தெரிவிப்பதால், ஜடமான அஞ்ஞானம் எப்படி உபாதான காரணமாக அனுஸ்யூதமாக இருக்கமுடியும்? என்ருல்,

**ச்லோகம் :**

साभासमेतदुपजीव्य चिदद्वितीया संसारकारणमिति प्रवदन्ति धीराः ।
साभासमेतदिति संसृतिकारणत्वे द्वारं परं भवति कारणता दृशस्तु ॥

**ச்லோகார்த்தம் :** ஸாபாஸ அஞ்ஞானம் என்பதை ஸஹாயமாக (உபஜீவ்யமாகக்கொண்டு)க் கொண்டு அத்விதீயமான சைதன்யம் ஸம்ஸாரத்திற்கு காரணம் என்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. இந்தஸாபஸ அஞ்ஞானமானது ஸம்ஸார காரணவிஷயத்தில் த்வார (மூல)காரணம் என்றே சொல்லவேண்டும். ஆகையால் சைதன்யம் என்பதே முக்யகாரணம்.

**வ்யாக்யானம் :** அத்விதீயமான சைதன்யஸ்வரூபத்தில், த்வைதமாகிறஸம்ஸாரம் என்பது உண்மையில் இருக்கமுடியாது. அதனுல் அஞ்ஞானம் என்பதைத்வாரமாக்கொண்டே ஜகத் என்ற கார்யத்திற்கு ப்ரஹ்மென்பது விவர்த்த உபதான காரணமாக ஆகிறது. கேவல சைதன்யம் உபாதானகாரணமாக ஆக முடியாது என்பதை 'ததனன்யத்வம் ஆரம்பண சப்தாத்' என்ற அதிகரணத்தில் வ்யாஸராலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**பூர்வ :** ப்ரஹ்மத்திற்கு எதனுடனும் ஸம்பந்தம் ஏற்படமுடியாது என்றும், அஸங்கம் என்றும் சொல்லப்படுவதாலும், ப்ரஹ்மமே அசிந்த்ய சக்தியுடையது என்றும் சொல்லப்படுவதால், அஞ்ஞானஸம்பந்தம் என்பதும் ஏற்படமுடியாது. ஆகையால் ஸர்வசக்தியுடையப்ரஹ்மம் என்பது அதற்கு உபஜீவ்யமாக இருக்கின்ற அஞ்ஞானத்தை ஸஹாயமாகக் கொண்டு

உபாதானகாரணமாக ஆகிறது என்று ஏன்சொல்லவேண்டும்? அஞ்ஞானமின்றிப்ரஹ்மம் சிருஷ்டிக்க முடியாது என்ருல், அஞ்ஞானமே சிருஷ்டிப்பதாகச்சொல்லலாமே? அஞ்ஞானத்வாராப்ரஹ்மமே சிருஷ்டிக்கின்றது என்று ஏன் சொல்லவேண்டும்.

**சித்தா :** கூடஸ்த்தமாகவும், அஸங்கமாகவும் இருக்கின்றப்ரஹ்மத்திற்கு ஆபாஸத்துடன் கூடிய அவச்சேதகமான அஞ்ஞானஸம்பந்தம் இல்லாமல், காரணத்வம் என்பதே ஸம்பவிக்கமுடியாது.

**பூர்வ :** 'ஆத்மன ஏவ இதம்ஸர்வம்' என்றும், 'ஆத்மன ஆகாச:ஸம்பூத:' என்றும் சொல்லப்படும் ச்ருதிவாக்யங்கள் ஆத்மாவிலிருந்தே சிருஷ்டி ஏற்பட்டதாக தெரிவிக்கின்றதே? இவ்விதம் இருக்கின்றபோது, அஞ்ஞானத்வாரா ஆத்மாவே காரணமாகிறது என்று எப்படிச்சொல்லுவது?

**சித்தா :** 'ஆத்மா வா அரே இதமக்ரமாஸீத் என்றும் ' 'ஸதேவஸௌம்யமிதமக்ர ஆஸீத்' என்றும் ப்ரஹ்மத்திற்கு ப்ராதான்யம் கொடுத்து, சிருஷ்டிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. 'மாயாந்துப்ரக்ருதிம்வித்தி மாயினந்து மஹேச்வரம்' என்று ஈச்வரனை ப்ரதானமாகவும், மாயை என்பதை அப்ரதானமாகவும் தெரிவிக்கின்றது. அதனுல் ஜகத்காரணத்வம், த்ருக்ஸ்வரூபமான சிதாத்மாவிற்கே சொல்லமுடியும். ஆனுல் கூடஸ்த்தஸ்வரூபமாக இருப்பதால் மாயை என்பதை ஸஹாயமாகக்கொண்டு, மாயத்வாரா சிருஷ்டிக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஜடமான அஞ்ஞானம் எப்படி காரணமாகிறது? என்ருல், சைதன்யஸ்வரூபத்தில் அவித்யை என்பது அத்யஸ்த்தமாக இருக்கிறதால் ஜகத்காரணமாக ஆகிறது. ஆனுல் 'தேவாத்மசக்திம்' என்று ஈச்வரசக்தியாகவே மாயை என்பதை சொல்லப்படுகின்றதால் சக்தி என்பது, சக்திமத்பரதந்த்ரம். (சக்தியுடையவனுக்கு பரதந்த்ரம்). அதனுல் அவித்யைக்கு ப்ராதான்யமில்லை, சைதன்யத்திற்கே ப்ராதான்யம் என்று சொல்லப்படுவதால், ஜகத்காரணம் ப்ரஹ்மமென்றே சொல்லவேண்டும். கயிறு என்பது எப்படி அஞ்ஞானத்வாரா ஸர்ப்பமாக தோன்றுகிறதோ, அதுபோல், ப்ரஹ்மமென்பதும் அஞ்ஞானத்வாரா ஜகத்திற்கு விவர்த்த உபாதான காரணமாக ஆகிறது என்றே சொல்லப்படுகிறது.

### 324. அவதாரிகை :

ஜகத்திற்கு ப்ரதானத்தையோ அல்லது பரமாணுவையோதான், காரணமாகச் சொல்ல வேண்டுமென்று சாங்க்யன், தார்க்கிகன் முதலானேர்களால் சொல்லப்படுகிறதே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

यावद्दृशोऽन्यदिह संसृतिकारणं तद्वेदान्तवादिसमये न मतं जडत्वात् ।
यद्यज्जडं भवति संसृतिकारणं तन्नेति स्फुटं वदति सूत्रकृदत्र यस्मात् ॥

**ச்லோகார்த்தம் :** எது ஜடமாக இருக்கிறதோ, அதுஸம்ஸாரத்திற்கு காரணமாக இருக்கமுடியாது என்று சூத்ரகாரராலும் சொல்லப்படுகிறது. ஆகையால் சைதன்யத்திற்கு வேருக இருக்கின்ற எந்த ஜடவஸ்துவும் ஸம்ஸாரகாரணம் என்று வேதாந்த சாஸ்திரத்தில் ஒத்துக்கொள்ளப்படவில்லை.

**வ்யாக்யானம் :** அசேதனமான வஸ்துவிற்கு சேதனனுடைய ஸம்பந்தமின்றிஸ்வதந்தரமாக ஜகத்காரணத்வம் ஸம்பவிக்க முடியாது என்பதை 'ஈக்ஷதேர் நாசப்தம்' என்ற சூத்ரத்தில் சூத்ரகாரரால் சொல்லப்பட்டிருக்கின்றது. ஞானஸ்வரூபமான ஆத்மாவிற்கு அன்யமாக இருக்கின்ற வஸ்துக்கள் எதுவாஞலும் அதுஜடமானதால், அவைகள் ஜகத்காரணமாக ஆகமுடியாது.

'ரசனுனுபத்தேச்ச ந அனுமானம்' என்ற சூத்ரத்தினுல், அனுமானம் ந= ப்ரதானமில்லேயென்றும், ஜகத்என்பது ப்ரதானத்திலிருந்து உண்டாக முடியாது என்றும், 'உபயதாபி ந கர்மாதஸ்ததாபாவ:' என்ற சூத்ரத்தினுல் பரமாணுவும் ஜகத்காரணமில்லேயென்று நையாயிகமதம், சாங்க்யமதம் இரண்டையும் கண்டனம் செய்யப்பட்டிருக்கிறது.

**325. அவதாரிகை :**

ஜகத்திற்கு ஜடமான ஒருவஸ்து காரணமாக ஆகமுடியாது என்று எப்படிச் சொல்லமுடியும்? ச்ருதியே ஆகாசாத் வாயு :, வாயோர் அக்னி என்று ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும் உண்டாகிறதென்றுதெரிவிக்கின்றதே? இதனுல் ஜடமான ஆகாஸாதிகளிலிருந்தே ஜகத் உண்டாகிறது என்று அறியப்படுகிறதே? என்ருல்;

**ச்லோகம் :**

अजडकारणभावनिबन्धनं सकलमेव जडं न तु कारणम् ।
इति हि वेदशिरस्सु विचक्षणाः कपिलपक्षनिराकरणे जगुः ॥

**ச்லோகார்த்தம் :** ஸர்வஜடவஸ்துக்களும், சைதன்யம் ஜகத்காரணமாக ஆகிறதற்கு ஸஹாயமாக இருக்கிறதேயன்றி, அந்தஜடவஸ்துக்களே காரணமாக ஆகமுடியாது என்று சாங்க்யமத (கபிலமத) நிராகரணத்தின்போது வேதாந்தவிற்பன்னர்களால் சொல்லப் பட்டிருக்கின்றது.

**வ்யாக்யானம் :** சாங்க்யபக்ஷம் சரியல்ல என்பதை வேதாந்தவித்துக்களான பெரியோர்களால் கண்டனம் செய்யப்பட்டிருக்கிறது. 'ரசனுனுபத்தேச்ச ந அனுமானம்' என்ற சூத்ரத்தினுல், சூத்ரக்காரராலும், பாஷ்யகாரராலும் கண்டனம் செய்யப்பட்டிருக்கிறது. அஜடமான சித்ஸ்வரூபம் ஜகத்காரணபாவத்தை அடையவேண்டுமானுல், ஜடமானமாயை என்றஸஹகாரி காரணத்தைக்கொண்டே அடையமுடியும். அவ்யாக்ருதம் முதல் ஆரம்பித்து, அதன் பிறகு உண்டானஸர்வ ஜடவஸ்துக்களும் ஸ்வயமே ஜகத்காரணமாக ஆகமுடியாது. அதனுல் சுத்தசைதன்யத்தையே, இங்கு 'தஸ்மாத்வா, ஏதஸ்மாத், ஆத்மன: ஆகாச: ஸம்பூத: 'ஆகாசாத்வாயு:' என்று ஆத்மசப்தத்தினுல் ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. அதனுல் அன்யதா அனுபத்தியினுல் தமஸ் என்பதை ஸஹகாரி காரணமாகக் கொண்டு சைதன்யம் காரணபாவத்தை அடைகிறது என்றே சொல்லவேண்டும். 'ஆகாசாத் வாயு:' என்னுமிடத்திலும் ஆகாச ரூபமாக இருக்கின்ற சைதன்யத்திலிருந்தே வாயு உண்டாகிறது என்றே சொல்லவேண்டும்.

**326. அவதாரிகை :**

இந்தவிஷயத்தில் வேதாந்திகளில் ஒருசிலர், சுத்தசைதன்யம், மாயை என்ற இரண்டும் சேர்ந்த ஸபளஸ்வரூபமே ஜகத்காரணம் என்று சொல்கிருர்கள்.

**ச்லோகம் :**

शबलमात्मपदेन निगद्यते सकलमात्मजमित्यपि च श्रुतिः
शबलमात्मपदं जगतस्ततः प्रकृतिरित्यपरे तु जना जगुः ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மசப்தம் ஸபளஸ்வரூபத்தையே தெரிவிக்கின்றது, ஸர்வவஸ்துக்களும் ஆத்மாவிலிருந்தே உண்டாகிறது என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றதால், ஸபளமான ஆத்மஸ்வரூபமே ஜகத்திற்கு உபாதான காரணம் என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'தஸ்மாத் ஏதஸ்மாத் ஆத்மன: ஆகாச: ஸம்பூத:' என்று சொல்லப்படும் வாக்யத்திலுள்ள, ஆத்மசப்தமானது, ஸர்வமும் ஆத்மாவிலிருந்தே உண்டாகிறது என்றுதெரிவிக்கின்றது. ஆனால் இந்த வாக்யத்திலுள்ள ஆத்மசப்தம் அஞ்ஞானத்துடன் கூடிய சைதன்யத்தையே தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ப்ரஹ்மசப்தம், ஸத்யாதிசப்தங்கள், ஆத்மசப்தம் முதலான எல்லாமே முதலில் சபளார்த்தத்தை யேதெரிவிக்கின்றது என்றும், அதன்பிறகு லக்ஷணையாக சுத்தஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது என்றும் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் மாயாஸபளமான ஆத்மசைதன்யமே ஜகத்காரணம் என்று சொல்லவேண்டும். அவ்விதமின்றி ப்ரஹ்மந்தான் ஜகத்காரணமன்றும் மாயைஸஹகாரி காரணம் என்றும் (மாயாத்வாரா) சொல்லப்படுமானால், ஸஹகாரி காரணம் என்பது கார்யத்தில் தொடர்ந்து இருக்க முடியாது. ஆனால் ஜாட்யம் என்பது ஸர்வத்திலும் தொடர்ந்து இருக்கின்றதால் மாயையென்பதும் சேர்ந்தே ஜகத்காரணம் என்று சொல்லவேண்டும். மேலும் 'தேவாத்மசக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்' என்றும் 'இந்த்ரோமாயாபி: புருரூப:ஈயதே' என்றும் ச்ருதிவாக்யமே மாயையுடன் கூடிய சைதன்யமே ஜகத்காரணம் என்று தெரிவிக்கின்றது. 'ஸதேவ ஸௌம்ய இதமக்ர ஆஸீத்' என்பதில் ஆத்மபதம் இல்லை. ஆனால் 'ததோவை ஸதஜாயத' என்று ஜகத்காரணமாகச் சொல்லப்படும் சப்தமும் 'தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மன:' என்ற சப்தமும் ஸபளஸ்வரூபத்தையே தெரிவிக்கிறது. அதனால் கேவலசைதன்யமோ, கேவல அஞ்ஞானமோ ஜகத்காரணம் என்று சொல்லமுடியாது. இரண்டும் கலந்தஸ்வரூபமே காரணம் என்றே சொல்லவேண்டும்.

**327. அவதாரிகை :**

ஜகத்திற்கு ஸபளமே உபாதான காரணம் என்பதுபோல் நிமித்தகாரணமும் ஸபளஸ்வரூபத்திறகு சொல்லமுடியுமா? அதாவது கர்த்ருத்வாதிகளைச் சொல்லமுடியமா? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

सुकृतदुष्कृतकर्मणि कर्तृतां मतिगतात्मचितिप्रतिबिंबकम् ।
व्रजति तद्वददः परमात्मनो जगति याति तमःप्रतिबिंबकम् ॥

**ச்லோகார்த்தம் :** அந்த:கரணப்ரதிபலன சைதன்யமே, புண்யபாபகர்மாக்களுக்கு கர்த்தாவாக ஆகிறது. அதேபோல் ஸபளமானப்ரஹ்ம சைதன்யமே ஆகாசாதி ஜகத்திற்கு நிமித்தகாரணமாக ஆகின்றது.

**வ்யாக்யானம் :** சுஷுப்தி அவஸ்த்தையில் ஆத்மாவிற்கு கர்த்ருத்வமோ, போக்த்ருத்வமோ எதுவும் கிடையாது. அந்த:கரண ஸம்பந்தத்தினால் சைதன்யம் அதில் ப்ரதிபிம்பிக்கின்றபோது தான் கர்த்ருத்வாதிகள் இருப்பதாக அறியப்படுகிறது. இவ்விதம் புண்யபாபரூபமான கார்யத்திற்கு கர்த்தாவாக அந்த:கரணப்ரதிபலிதசைதன்யத்திற்கே கர்த்ருத்வம் சொல்லப்படுகிறது. அதேபோல் மாயாப்ரதிபலிதசைதன்யத்திற்கே ஜகத்கர்த்ருத்வம் சொல்லவேண்டும், இதையே 'கர்த்தா சாஸ்த்ரார்த்தத்வாத்' என்றசூத்ரம், ஆத்மா கர்த்தாஇல்லையென்று சொல்லப்படுமானால் சாஸ்திரம் அப்ரயோஜனம் என்றாகும் என்று தெரிவிக்கின்றது. ஆகவே. அந்த:கரண உபாதியுடன் கூடினவன் எப்படி கர்த்தா என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் அஞ்ஞான உபாதியுடன் கூடின ஈச்வரனுக்கே ஜகத்கர்த்ருத்வம் சொல்லப்படவேண்டும். ஆகையால் மாயாவிசிஷ்டசைதன்யத்திற்கு ஜகத்காரணத்வமும், மாயாப்ரதிபலித சைதன்யத்திற்கு ஜகத்கர்த்ருத்வமும் சொல்லவேண்டும்.

**328. அவதாரிகை :**

இவ்விதம் மாயாவிசிஷ்ட்ட சைதன்யத்திற்கு உபாதான காரணத்வமும், மாயாப்ரதிமிம்பசைதன்யத்திற்கு நிமித்த காரணத்வமும் (ஜகத்கர்த்ருத்வம்) என்று இரண்டுவிதமாக பிரித்துச் சொல்லப்படுவதற்கு என்ன காரணம்? உபாதானத்வம், கர்த்ருத்வம், என்ற இரண்டுமே ப்ரதிபிம்பசைதன்யத்திற்கே சொல்லலாமே? என்ருல்,

**ச்லோகம் :**

सुकृतदुष्कृतयोः शबला यथा भवति कारणमात्मचितिस्तथा ।
गगनवायुपुरःसरकारणं परमचेतनता शबलाकृतिः ॥

**ச்லோகார்த்தம் :** ஸுக்ருத, துஷ்க்ருத கார்யங்களில், ஸபளமான ஆத்மஸ்வரூபத்திற்கு எப்படி காரணத்வம் சொல்லப்படுகிறதோ அதேபோல், ஆகாசம் வாயு முதலான ஜகத்திற்கும் காரணமாக ஸபளப்ரஹ்ம சைதன்யமே காரணம் ஆகின்றது என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** புண்யாபுண்யரூபமான கார்யங்களுக்கு கர்த்தாவாக, அந்த:காரணப்ரதிபலிதசைதன்யமான ஜீவனையே சொல்லப்படுகிறது. ஏனெனில் புண்யாபுண்யம் என்பது வரப்போகின்ற ஜன்மாவிற்கு காரணமான பாவரூபமானவஸ்து. இவ்விதம் புண்யாபுண்ய ரூபமான பரிணமத்தை அந்த:கரணத்திற்கே சொல்லமுடியும். கூடஸ்த்தமான ஆத்மசைதன்யம் ஸ்வயமேபரிணமத்தை அடையமுடியாது. அதனுல் உபாதிமூலமாக பரிணமத்தை அடைவதாக விவகாரம் செய்யப்படுகிறது. ஆகவே, அந்த:கரணவிசிஷ்ட்டசைதன்யம் எப்படி புண்யாபுண்யரூபபரிணமத்தை அடைவதற்கு காரணமாகிறதோ அதுபோல் ஆகாசாதி பாவஸ்துக்களின் பரிணமத்திற்கு மாயாவிசிஷ்ட்டசைதன்யம் காரணம் என்று சொல்லவேண்டும். இவ்விதம் இல்லையென்ருல், ஜகதாகாரேணபரிணமம் ஏற்படுவதாகச் சொல்வதற்கே முடியாது. ஆகையால் மாயாஸபளஸ்வரூபமே உபாதான காரணம் என்றும் மாயாபிரதிபிம்பசைதன்யமே நிமித்த காரணம் என்றும், ஜகத்கர்த்ருத்வத்தை ப்ரதிபிம்பத்திற்கே சொல்லப்படவேண்டும் ஆகவே, கேவலசைதன்யத்திற்கோ, கேவலமாயை என்பதற்கோ ஜகத்பரிணமிகாரணத்வம் சொல்லமுடியாது. அதனுல் ஸபளஸ்வரூபமே உபாதானகாரணம் என்று சொல்லப்படவேண்டும்.

**329. அவதாரிகை :**

இந்தவிதம், ஏகதேசியினுல் ஆக்ஷேபிக்கப்பட்ட விஷயம் சரியல்ல என்பதை இந்தக்ரந்த காரரால் மேலே தூஷிக்கப்படுகிறது. ஜகத்காரணத்வம் என்பது சைதன்யத்திற்கு மாயாத்வாரா முக்யகாரணத்வம் எப்படிச்சொல்லப்படுகிறதோ அதுபோல் மாயைக்கு முக்யகாரணத்வம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

शबलताकवलीकृततावशात् परमचेतनतैव निगद्यते ।
शबलमात्मपदेन न कथ्यते शबलमात्मनि वृत्तिनिबन्धनम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மசப்த வாச்யார்த்தமான ஸபளம் ஜகத்காரணமில்லை. ஸபளதை என்பது கபளீகரம் செய்யப்படுவதால் ஆத்மசப்தம் கேவலசைதன்யத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. (அதாவது) ஆத்மசப்தம் ஸபளார்த்தத்தை தெரிவிக்கவில்லை. ஆத்மசப்தம் தன் அர்த்தமான கேவலசைதன்யத்தை தெரிவிப்பதற்கு ஸபளம் என்பது நிமித்தமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஸர்வ உபாதிகளும் அற்றதான நிர்விசேஷசுத்தசைதன்யமே, நம்மால் அறியப்பட வேண்டிய தத்வமாக போதிக்கப்படுகிறது. 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்ற தைத்ரீயவாக்யம், ஜிஞ்ஞாஸ்யமாக இந்த ஆத்மதத்வத்தையே தாத்பர்ய விஷயமாகத்தெரிவிக்கின்றது. 'யத்பர: சப்த: ஸ:சப்தார்த்த:' என்று தாத்பர்யம் எதுவோ அதுவே சப்தார்த்தம் என்று மீமாம்ஸகர்களாலும் சொல்லப்படுகிறது. அதனால் ஸபளஸ்வரூபம் ஜகத்காரணம் என்று சொல்லப்படுவதாகச்சொல்லமுடியாது. ஸபளம் என்றாலே அனாத்மஸம்பந்தம் ஏற்படுகிறது. அதனால் ஜகத்காரணம் அனாத்மா என்றே சொல்லநேரிடும். அதற்காக சுத்தசைதன்யமே ஜகத்காரணம் என்று சொல்லாமே? என்றால், சுத்தசைதன்யம் என்பதுமனஸ், வாக் என்பதற்கெல்லாம் எட்டாதது என்பதால் சுத்தம் என்பது எந்த சப்தத்தினாலும் போதிக்கக்கூடியது அல்ல. அதனால் ஸபளத்தை நிமித்தமாகக் கொண்டு போதிக்கப்பட வேண்டும். ஸபளத்துடன் ஸம்பந்தமின்றி நிர்விசேஷசைதன்யம் வாசகமாக ஆகாது. அதனால் ஸபளம் என்பதில் அந்தர் பூதமாக இருக்கின்ற சைதன்யமே பாகத்யாக லக்ஷணையினால் போதிக்கப்படுகிறது. ஆகவே, ஜிஞ்ஞாஸிதவ்யமான சுத்தசைதன்யத்திற்கே, மாயாத்வாராஜகத்காரணத்வம் சொல்லப்படுகிறது.

**330. அவதாரிகை :**

ஆத்மசப்தம் நிர்விசேஷமான சுத்தசைதன்யத்தையே போதிக்கின்றது என்றால் அதைஸபளவாசி என்று ஏன் சொல்லப்படுகிறது?

**ச்லோகம் :**

शबलतापरिधानसमन्वयात् परमेचेतनतात्मगिरः पदम् ।
भवति तेन जनस्य तु विभ्रमः शबलमात्मगिरः पदमित्ययम् ।

**ச்லோகார்த்தம் :** ஆத்மசப்தம் அஞ்ஞானவ்யவஹிதமாக (ஸபளமாக) இருப்பதனாலேயே, கேவலசைதன்யத்தை தெரிவிப்பதற்கு ஸபளம் நிமித்தமாக இருக்கிறது. ஆகையால் ஆத்மசப்தத்தினால் ஸபளமே போதிக்கப்படுவதாக எல்லோருக்கும் ப்ரமம் ஏற்படுகின்றது.

**வ்யாக்யானம் :** ஸபளஸ்வரூபத்தின் மூலமாகவே, தாத்பர்ய விஷயமான சுத்த சைதன்யம் போதிக்கப்படவேண்டும். அதனால் ஆத்மா என்பதே, ஆத்மபதத்திற்கு வாச்யம் என்று எல்லோருக்கும் ப்ரமம் ஏற்படுகிறது. அஞ்ஞானஸம்பந்தமுள்ள ஸபளஸ்வரூபமே ஆத்ம சப்தத்தினால் போதிக்கப்படுவதாக வேதாந்திகள் தெரிவிக்கின்றார்கள்.

**331. அவதாரிகை :**

விவகாரங்களுக்கு அதீதமான சுத்தசைதன்யத்திற்கு காரணத்வம், வாச்யத்வம் என்பதெல்லாம் எப்படிச் சொல்லமுடியும்? என்றால், மாயை என்ற உபாதியைக்கொண்டு காரணத்வம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

बहु निगद्य किमत्र वदाम्यहं श्रृणुत संग्रहमद्वयशासने ।
सकलवाङ्मनसातिगता चितिः सकलवाङ्मनसव्यवहारभाक् ॥

**ச்லோகார்த்தம் :** இந்த விஷயத்தில் அதிகம் சொல்வதற்கு என்ன இருக்கிறது? அத்வைத சித்தாந்தத்தை சுருக்கமாகத் தெரிவிக்கின்றேன் கேள். கேவலசைதன்யம் என்பது ஸகலவாக், மனோ, விவகாரங்களுக்கு அதீதமாக இருக்கிறது. அந்த சைதன்யமே ஸர்வ வாக்மனோ விவகாரங்களுக்கு விஷயமாகவும் இருக்கிறது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யேகமாக இந்த விஷயத்தைப் பற்றி ஒவ்வொரு விஷயமாக விவரிக்கவேண்டிய அவஸ்யமில்லை. அதனால் சுருக்கமாகத்தெரிவிக்கின்றேன். வேதாந்தமதத்தில் கேவலசைதன்யம் விவகார அதீதமாக இருந்த போதிதலும், சுத்தசைதன்யமே தன்னிடம் அத்யஸ்த்தமான கடாதிகளுக்கு அதிஷ்ட்டானமாக இருக்கின்ற தன்மை உடையதாக இருக்கின்றது. அதனால் ஆரோபிதமான கடபடாதிகளை உபாதியாகக் கொண்டுமாயாவஸாத் அந்தந்தவஸ்துஸ்வரூபமாக சைதன்யம் ப்ரகாசிக்கின்றது. அதனால் தான் ஸர்வக்ரியா, காரக விவகாரங்களுக்கு காரணமாகின்றது. உதாரணமாக, கயிறு என்பது ஸர்ப்ப விவகாரத்திற்கு விஷயமில்லை. இந்தவிதம் விவகாரத்திற்கு உட்படாத ரஜ்ஜுவானது அஞ்ஞானத்தினால் எப்படிவிவகாரத்திற்கு விஷயமாக ஆகிறதோ, அதுபோல் ஸர்வவிவகாரத்திற்கும் விஷயமாகாத சுத்தசைதன்யம் அஞ்ஞானம் என்ற உபாதியினால் ஸர்வ சப்த விவகாரங்களுக்கு விஷயமாக ஆகிறது. ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானம்ப்ரஹ்மசைதன்யம் என்பதால், கட: ஸன் பட: ஸன் என்றும், நீ ஸ்திரீ, நீ புருஷன் என்றும் அந்தந்த உபாதியைக் கொண்டு (அத்யஸ்த்தமானவஸ்துக்களைக் கொண்டு) சைதன்யத்திற்கு விவகார விஷயத்வம் சொல்லப்படுகிறது. ஸ்வத:சைதன்யம் எவ்வித விவகாரத்திற்கும் விஷயமல்ல. எப்படி ஒரேகிளிஞ்சலானது, அஞ்ஞானத்தினால் ரஜதம், ரங்கம், ஈயம், என்ற விவகாரத்திற்கு விஷயமாகின்றதோ அதுபோல் ப்ரஹ்மமென்பதும் வாக், மனஸ் போன்ற விவகாரங்களுக்கு விஷயமாகின்றது. இவ்விதம் உபநிஷத்வாக்யங்களிலுள்ள ஆத்மசப்தங்கள் எல்லாமே சபளத்வாரா சுத்தசைதன்யத்தையே போதிக்கின்றது. உதாரணமாக ம்ருத் என்பதே கடத்திற்கு காரணம். ஆனாலும் அந்தம்ருத் என்பது மிருதுவாகச்செய்யப்பட்டால்தான் கடம் செய்ய உபயோகமாக ஆகும். அதற்காக ம்ருதுத்தன்மைதான் கடத்திற்கு காரணம் என்று சொல்லவதற்கு முடியாது. அதுபோல் சைதன்யம் என்பது உபாதிஸம்பந்தத்தினால்தான் ஜகத்காரணமாக ஆகிறது என்று சொல்லப்படுவதற்காக, உபாதியே ஜகத்காரணம் என்று சொல்லமுடியாது. ஆகவே கேவலசைதன்யம் உண்மையில் ஸகல வாக்மனஸ் என்பதெற்கெல்லாம் அதீதம் என்றாலும், ஆரோபிதமானவஸ்துக்களுடன் கலந்து அறியப்படுகின்றபோதுதான் அதை சப்தம் தெரிவிக்கின்றது. ஆகையால் ஆத்மசப்தமோ ஸத்சப்தமோ, ப்ரஹ்மசப்தமோ முதலில் ஸபளத்தையே போதிக்கின்றது என்றாலும், தாத்பர்யேண சுத்த சைதன்யமே போதிக்கப்படுகின்றது. 'அக்ஷமா பவத கேயம் ஸாதகத்வ, ப்ரகல்பனே: கிம்நபச்யஸி ஸம்ஸாரம் தத்ரைவ அஞ்ஞானகல்பிதம், என்று ஜகத்காரணம் ப்ரஹ்மமே என்று சொல்லப்படுவது ஏன் உன்னால் பொறுக்கமுடியவில்லை? ஸம்ஸாரம் என்பதெல்லாமே ப்ரஹ்மத்தில் கல்பிதம் என்பதே உண்மை நிலை என்பதையே இந்தச்லோகத்தினால் சொல்லப்படுகிறது. ஆகவே, மாயாத்வாரா சுத்தசைதன்யமே ஜகத்காரணம் என்றே சொல்லவேண்டும்.

**332. அவதாரிகை :**

சுத்தசைதன்யமே ஜகத்காரணம் என்றே சொல்லிவிடலாமே? அஞ்ஞானத் வாராசைதன்யம்காரணம் என்று ஏன் சொல்லவேண்டும்?

चित्रायागः पशुफल इति श्रूयमाणेऽपि चित्राऽपूर्वं द्वारं पशुफलतयाऽऽक्षिप्यते तत्र तद्वत् ।

**ச்லோகம் :** चैतन्यात्मा जगदुदयकृच्छ्रूयतेऽत्रापि पश्चान्मायादीनां भवति जगति द्वारभावः फलेऽस्मिन् ॥

**ச்லோகார்த்தம் :** சித்ரா என்ற யாகத்தினுல் பசுபலம் ஏற்படும் என்று வேதத்தில் சொல்லப்படுகிறது என்ருலும், சித்ராஎன்ற யாக அபூர்வமே பசுபலத்திற்குத்வாரம் என்று கல்பிக்கப்படுகிறது. அதேபோல் சைதன்யஸ்வரூபமான ஆத்மா என்பதே, ஜகத் உற்பத்திக்கு காரணம் என்று வேதத்தினுல் சொல்லப்படுகின்றபோதும், மாயைமுதலானவை ஜகத் உற்பத்தி என்ற பலத்திற்குத்வாரம் என்றே கற்பிக்கிப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'சித்ரயா யஜேத பசுகாம:' என்ற வாக்யமானது 'சித்ரயா' என்ற யாகக்ரியையினுல் பசுக்கள் என்பது பலமாகக்கிடைக்கின்றது என்பதை தெரிவிக்கின்றது. யாகக்ரியாபலமாக கிடைக்கின்ற பசுக்கள் காலாந்தரத்தில்தான் கிடைக்கின்றது. ஆனுல் யாகக்ரியை என்பது பலன் ஏற்படும் பர்யந்தம் இருப்பதில்லை. பலன் கிடைக்கின்றபோது க்ரியை இல்லை. க்ரியை இருக்கின்றபோது பலன் இல்லை. அதனுல் பசுவை பலமாக பெறுவதற்கு இந்த யாகம்தான் காரணமென்று எப்படிச்சொல்லமுடியும்? ஆனுல் வேதவாக்யமோ 'இந்தபலனுக்கு இதுஸாதனம்' என்று தெரிவிக்கின்றதேயன்றி வேறெதுவும் தெரிவிப்பதில்லை. ச்ருதிவாக்யமாக இருக்கின்றதால், அர்த்தாத் க்ரியைக்கும், பலத்திற்கும் நடுவில் அபூர்வம் என்பது கல்பிக்கப்படுகிறது. அதாவது, அபூர்வத்வாரா, யாகம் என்பது பசுபலத்திறகு காரணமாகின்றது என்று கல்பிக்கப்படுகிறது. அதே போல் நிர்விசேஷமான ப்ரஹ்மசைதன்யதையே 'ஸத்யம் ஞானம் அனந்தம்ப்ரஹம' என்று ப்ரஹ்ம ஸ்வரூபலக்ஷணத்தை தெரிவிக்கின்ற வாக்யமானது 'யோ வேத நிஹிதம் குஹாயாம்' என்றெல்லாம் சொல்லி முடித்தபிறகு, இப்பேர்ப்பட்ட ஆத்மஸ்வரூபத்திலிருந்தே 'ஆத்மன: ஆகாச: ஸம்பூத:' என்றெல்லாம் ஆகாசாதிகார்யங்கள் உண்டாயிற்று என்று தெரிவிக்கின்றது. இந்த இடத்தில் ஸபளஸ்வரூபத்தை ஆத்ம சப்தம் தெரிவிக்கவில்லை. 'ஸத்யம் ஞானம் அனந்தம்ப்ரஹ்ம' என்று எந்த ஸ்வரூபம் சொல்லப்பட்டதோ, அதிலிருந்தே ஆகாசாதிகள் உண்டாகிறது என்று தெரிவிக்கின்றது. எவ்விதம் இப்போர்ப்பட்ட ஆத்மாவிலிருந்து ஜகத் உண்டாக முடியும்? என்ருல் ப்ரஹ்மத்தில் அத்யஸ்த்தமான அவித்யையினுல், காமம், கர்மா என்பதெல்லாம் ஏற்படுவதால், அந்த கர்மபலமாகவே இந்த ஜகத் உண்டாகிறது. ஆகவே., உண்மையில் நிர்விசேஷமான ப்ரஹ்மமென்பது ஜகத்தாகவோ, ஜகத்காரணமாகவோ ஆகமுடியாது. ஆனுல் வேதமோ, ப்ரஹ்மமே, காரணம் என்று தெரிவிக்கின்றது. அதனுல் வேதாந்தவாக்யம் தாத்பர்யத்துயடன் எதை தெரிவிக்கிறது? என்பதை அறிந்து அதற்கு தகுந்தபடி வேதாந்தவாக்யங்கள் 'மாயாபி: புருரூப: ஈயதே' என்பது போன்ற வாக்யங்களைக்கொண்டு மாயாத்வாரா ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்று தெரிவிக்கின்றது.

**333. அவதாரிகை :**

சுத்தசைதன்யமே அஞ்ஞானத்வாரா ஜகத்காரணமாகிறது என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कारणत्वमुपलक्षणं चितेर्ब्रह्मणो न खलु तद्विशेषणम् ।
इत्यपीदमुपपद्यते तदा चेतना भवति कारणं यदा ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மசைதன்யம்தான் ஜகத்காரணம் என்று ஒத்துக் கொண்டால்தான் காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணம் என்றும் விசேஷணமில்லை என்றும் சொல்லப்படுவது பொருந்தும். (அதனுல் கேவலசைதன்யத்திற்கே ஜகத்காரணத்வம் சொல்லப்படவேண்டும்).

**வ்யாக்யானம் :** லக்ஷ்யமான ப்ரஹ்மத்திற்கு ஜகத்காரணத்வம் என்பது விசேஷணமில்லை. உபலக்ஷணம் என்றே சொல்லப்படுகிறது. அதனால் கேவலப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று சொன்னால் தான் காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணம் என்று சொல்லமுடியும். இதைப்பற்றி மேலேயும் விளக்கப்போகிறோம். ஆகவே கேவல அஞ்ஞானத்திற்கோ, அல்லது சபளஸ்வரூபத்திற்கோ ஜகத்காரணத்வம் சொல்லப்படுமானால் விசேஷணம் என்று சொல்லப்படு வேண்டுமேயன்றி உபலக்ஷணம் என்று சொல்லமுடியாது. ச்ருதிவாக்யங்கள் ஜகத்காரணத்வம் உபலக்ஷணம் என்றே தெரிவிக்கின்றதால் சுத்த சைதன்யத்திற்கே காரணத்வம் சொல்லப்படவேண்டுமேயன்றி வேறு எந்த முறையிலும் காரணத்வம் சொல்லமுடியாது. இந்தவிதம் ஜடமான ப்ரபஞ்சத்தின் காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படுவதாலும், பின்னால் அந்த காரணத்வத்தையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்றதாலும், ப்ரஹ்மத்திற்கும், ப்ரபஞ்சத்திற்கும் மத்தியில் நிவர்த்தியாகக் கூடிய ஒரு வஸ்துவை கல்பிக்க வேண்டி இருப்பதால், அஞ்ஞானமென்றும் மாயை என்றும் சொல்லப்படும் வஸ்து கல்பிக்கப்படுகிறது. இந்த மாயை என்பதும், லோகசித்தமான அத்ருஷ்டம், காலம், எல்லாம் சேர்ந்ததுதான். அதனால் ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு மாயத்வாரா உபாதான காரணமாக ஆகிறது என்று சாஸ்திரத்தினால் அறியப்படுகிறது. அதனால் ஸாபாஸ அஞ்ஞானத்வாரா காரணமாகிறது என்று சொல்வதே பொருந்தும். சிதாத்மாவிற்கு காரணத்வம் சொல்லப்படவில்லை என்றால், ப்ரஹ்மத்திற்கு காரணத்வம் என்பது உபலக்ஷணமாகவோ, விசேஷணமாகவோ சொல்லமுடியாது. ஆகவே மாயாத்வாரா ஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாக சொல்லப்பட்டால்தான் ப்ரஹ்மஸ்வரூபத்தை போதித்தபிறகு மாயை நிவர்த்திக்கிறது என்று சொல்லலாம். அவ்விதமின்றி விசிஷ்டம் காரணம் என்றால், அந்தலக்ஷணத்துடன் அறியப்படும் லக்ஷ்யஸ்வரூபமும் விசிஷ்டம் என்றே அறியப்படுமேயன்றி சுத்தசைதன்யஸ்வரூபமாக அறிந்து கொள்ள முடியாது. விசிஷ்டமாக அறியப்படுமானால் 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்றலக்ஷணவாக்யத்திற்கு உபகாரகமாகஆகிறது. ஆகவே கேவலசைதன்யமே ஜகத்காரணம் என்றே அறியவேண்டும்.

**334. அவதாரிகை :**

ஸபளஸ்வரூபத்திற்கு காரணத்வம் சொல்லப்படுவதனாலேயே சுத்தசைதன்யத்தை உபலக்ஷணமாக தெரிவிக்கமுடியும் என்றால், சுத்தசைதன்யத்திற்கே காரணத்வம் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

**ச்லோகம் :**

अन्यदेव यदि कारणं भवेत् कारणत्वमुपलक्षणं कथम् ।
चेतनस्य घटतेऽन्यगामिना वस्तु नान्यदुपलक्ष्यते यतः ।।

**ச்லோகார்த்தம் :** ஜகத்காரணத்வம் என்பது (கேவல சைதன்யத்திற்கு சொல்லப்படாமல்) வேறு ஒன்றுக்கு (விசிஷ்டத்திற்கு) சொல்லப்படுமானால், அதனால் கேவ லசைதன்யத்திற்கு காரணத்வம் என்பது எப்படி உபலக்ஷணமாக இருக்கமுடியும்? ஏனெனில் ஒருவஸ்துவில் இருக்கின்ற காரணத்வம் என்றலக்ஷணத்தினால், வேறொரு வஸ்துவை லக்ஷ்யமாக தெரிவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** விசிஷ்டம் என்பது வேறு, சுத்தசைதன்யம் என்பதுவேறு. அதனால் காரணத்வம் விசிஷ்டத்திற்குச்சொல்லப்படுமானால், அந்தலக்ஷணம் சுத்த சைதன்யத்திற்கு உபலக்ஷணம் என்று எப்படிச் சொல்லமுடியும்? யஞ்ஞதத்தன் வீட்டின் மேல் உட்க்கார்ந்திருக்கின்றகாகம் என்பது யஞ்ஞதத்தனுடைய வீட்டிற்கு உபலக்ஷணமாக

ஆகுமேயன்றி தேவதத்தனுடைய வீட்டிற்கு உபலக்ஷணமாக ஆகாது. ஆகவே, சுத்தசைதன்யமே அஞ்ஞானத்வாரா ஜகத்காரணமாகிறது என்றே சொல்லவேண்டும். எந்தவஸ்து எந்த லக்ஷணத்தினால் குறிப்பிடப்படுகிறதோ, அந்தலக்ஷணத்தினால் வேறு ஒரு வஸ்துவை குறிப்பிட முடியாது. இவ்விதம் லக்ஷணத்திற்கும், லக்ஷ்யத்திற்கும் ஸம்பந்தம் இல்லையென்றால், எந்த லக்ஷணத்தைக்கொண்டும் எந்த வஸ்துவையும் லக்ஷ்யமாக குறிப்பிடலாம் என்றாகும். இதனால் அதிப்ரஸங்கம் என்றதோஷம் ஸம்பவிக்கும். பசுவிற்குச் சொல்லப்படும் லக்ஷணம் குதிரைக்கும் சொல்லலாம் என்றாகும். ஆகவே அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மத்திற்கு ஜகத்காரணத்வம் சொல்வதற்கு காரணமாக இருக்கின்றது. கூடஸ்த்தமான சிதாத்மாவானது ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமாக இருக்கின்றதால், ஸர்வ ஜடவஸ்துக்களுக்கும், ஸத்வம் என்பதையும் ப்ரகாசம் என்ற தன்மையையும் கொடுத்து, பேதமுள்ளதாக அறியப்படும் ஸர்வப்ரபஞ்சத்திற்கும், ஸத்தாஸ்பூர்த்தி ரூபமாக சைதன்யம் தொடர்ந்து இருக்கின்றது. அதனால் ஸர்வத்திற்கும் உபாதானமாக மாயாப்ரதிபிம்பத்வாரா, ஸர்வவஸ்துவாகாரமாக ஆகின்றது. ஆகவே கேவல சைதன்யமே அஞ்ஞானத்வாரா, அஞ்ஞான கார்யமான ஆவரணவிக்ஷேபங்களுக்கு சைதன்யஸம்பந்தமே காரணமாகின்றது என்பதால் சைதன்யமே, ஸ்வயம் கார்ணமாகிறதென்றே சொல்லவேண்டும்.

**335. அவதாரிகை :**

இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயத்தினால், அஞ்ஞானம் பாவரூபம் என்றே சித்திக்கின்றது. ஆகையால் 'அஞ்ஞாத மர்த்தம் அவபோத யத:' என்று (113 வது ச்லோகம் முதல்) ஆரம்பிக்கப்பட்டு ஆக்ஷேபம் செய்யப்படும் விஷயங்களுக்கெல்லாம் இதுவரை பரிகாரம் செய்யப்பட்டது. அதனால் ஆத்மஸ்வரூபம் ச்ருதிக்குவிஷயம் என்றே சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

अनवबुद्धमतः श्रुतिमस्तकैर्विषयतामुपपादयितुं क्षमम् ।
अनुभवात्मपदं तमसा यतः पिहितमेतदिह प्रतिभासते ॥

**ச்லோகார்த்தம் :** ஆத்மவஸ்து அறியப்படாமல் இருக்கின்றதால் ச்ருதிக்கு விஷயமாகிறது என்பது பொருந்தும். ஞானஸ்வரூபமான ஆத்மா, அஞ்ஞானத்தினால், மறைக்கப்படுவதால்தான், ஆத்மா, ஸ்வஸ்வரூபேண அறியப்படவில்லை யென்று எல்லோருக்கும் அனுபவத்திலும் அறியப்படுகிறது. ஆகவே ச்ருதிக்கு விஷயம் என்று சொல்லப்படுவது (பொருந்தாதவிஷயம் ஏதுமில்லை) பொருத்தம்தான்.

**வ்யாக்யானம் :** கீழே சொல்லப்பட்ட ச்ருதிகளினாலும், சாஸ்திரங்களில் சொல்லப்படும் யுக்திகளினாலும், அஞ்ஞானம், ப்ரஹ்மத்தையே ஆச்ரயித்து, அதையேவிஷயமாகக் கொண்டிருக்கிறது என்பதை சித்தம் செய்யப்பட்டது. இவ்விதம் ப்ரஹ்மஸ்வரூபம் அஞ்ஞாதமாக இருக்கின்றதென்பதை சாதிக்கப்பட்டகாரணத்தினால், ஆனந்தஸ்வரூபமானப்ரஹ்மமென்பது ஞாதமாக ஆகின்றபோது, அதுவே ப்ரமாணத்திற்கு பலமாகவும் ஆகின்றது. அதனால் இந்த விஷயத்தில் வேதாந்தம், வேறு எதையும் அபேக்ஷிக்காமல் ஸ்வயமேப்ரமாணமாகிறது என்ற விஷயமும் சித்திக்கின்றது. இந்தவிதம் ஸர்வவிகார அதீதமாக இருக்கின்ற ப்ரஹ்மமானது அஞ்ஞானத்தினால் விகாரவிஷயமாக ஆகிறது. எப்படியெனில் ஆத்மா ஸ்வஸ்வரூபேணப்ரகாசிக்காமல் அஞ்ஞானத்தினால் மறைக்கப்படுகின்றதால், ஸம்ஸாரதசையில், நித்ய அனுபவஸ்வரூபமாகவே இருக்கின்ற ஆத்மதத்வம் அறியப்படவில்லையென்ற

அனுபவத்திற்கு விஷயமாகின்றது. அதனுல் வேதாந்த சாஸ்திரத்தினுல் ஆத்மஸ்வரூபம் அறிவிக்கப்படுகிறது என்ற விவகாரத்திற்கு விஷயமாகிறது. ஆகவே, இந்தவிஷயத்தில் பொருந்தாதது ஏதுமில்லை.

**336. அவதாரிகை :**

ஆத்மவஸ்து உண்மையில் எந்தப்ரமாணத்திற்கும் விஷயமில்லை, அப்ரமேயம் என்று சொல்லப்பட்டபோதிலும், அஞ்ஞானத்தினுல் ஆவ்ருதமாக இருப்பதால், அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று சொல்லப்படுகிறது. ச்ருதிஎன்பதும் ஆசார்யன் என்பதும் பரமார்த்தமில்லையென்பதால் மித்யாபூதம் என்று சொல்லப்பட்டபோதிலும், ப்ரஹ்மவிஷயத்தை அறிவிக்கின்றதில் இவைகள் ப்ரமாணமாகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது. இந்த விஷயத்தைப்பற்றி முன்பு 'கிஞ்ச அப்ரசித்தம்' என்று சொல்லப்படும் ச்லோகத்தில் ஆக்ஷேபம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஆக்ஷேபத்திற்கு இந்த ச்லோகத்தில் பரிகாரம் சொல்லப்படுகிறது.




**ச்லோகம் :**

अज्ञानकल्पितमनिर्वचनीयमस्मिन्नाबालवृद्धमविवादपदं प्रसिद्धम् ।
स्वप्ने तथा च भगवानपि वक्ष्यतीदं सन्ध्येऽस्ति सृष्टिरिति पक्षनिराससिद्ध्यै ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்வப்னத்தில் அநிர்வசனீயமான வஸ்துக்கள், அஞ்ஞானத்தினுல் ஆத்மாவில் கல்பிக்கப்படுகிறது என்பது எல்லோருக்கும் ப்ரசித்தமாகவே இருக்கிறது. சூத்ரக்காரரும் 'ஸந்த்யே ச்ருஷ்டிராஹஹி:' என்ற சூத்ரத்தில் ஸ்வப்னம் ஸத்யம் என்ற பக்ஷத்தை நிராகரித்து, அஞ்ஞானகல்பிதம் ஸ்வப்னம் என்றே தெரிவிக்கிருர்.

**வ்யாக்யானம் :** வேதாந்த சாஸ்திரம் என்ற ஒன்றே எவையெல்லாம் அஞ்ஞானகல்பிதமோ அவையெல்லாம் அநிர்வசனீயம் என்று சாதிக்கின்றது. இது சரியல்ல. ஏனெனில் ப்ரமாதா ப்ரமாணம், ப்ரமேயம் என்றுப்ரத்யகாத்மாவே விவகாரம் செய்யப்படுகிறது என்பதால் இவைகளை அநிர்வசனீயம் என்று சொல்லமுடியாது. ப்ரமாத்ராதிகள் த்வைதம் ஸத்யம் என்று சாதிப்பதற்கு அனுகூலமாக இருக்கின்றது. இவ்விதம் சொல்லப்படவில்லையென்ருல், (ப்ரதிகூலமாகச்சொல்லப்படுமானுல்) ப்ரஹ்மமென்பதும்மித்யை என்ருகும். ஏனெனில் ப்ரமாத்ராதிகள் மேயமாக (அறியப்படுவதாக) இருப்பதால் அஞ்ஞானகல்பிதம் என்று சொல்லப்படுமானுல், ப்ரஹ்மமென்பதும் அறியப்படவேண்டியதாக இருப்பதால், மாத்ராதிகள் போல அஞ்ஞான கல்பிதம் என்று சொல்லநேரிடும். இதனுல் ப்ரஹ்மமென்பது ப்ரமேயமில்லை என்று சொல்லப்படுமானுல், ப்ரஹ்மமென்பதே இல்லையென்றே சொல்லநேரிடும். ஆகையால் ப்ரமாத்ராதிகள் அஞ்ஞானகல்பிதம் என்று ஒருவ்ராலும் சொல்லப்படவில்லை என்பதால் ப்ரமாத்ராதிகள் மித்யை என்பது அப்ரசித்தம்.

**சித்தா :** அஞ்ஞானத்தினுல் கல்ப்பிக்கப்படுவது எல்லாம் அநிர்வசனீயம் என்பது சாஸ்திரத்தில் மட்டும் சொல்லப்படவில்லை. பாலர்முதல்பெரியோர்கள் வரை ப்ரசித்தமாக அறியப்படும் விஷயம்தான். இதில் விவாதத்திற்கே இடமில்லை. ஸ்வப்னபதார்த்தங்களில் அநிர்வசனீயத்வம் இருக்கிறதென்பது லோகப்ரசித்தம். அதேபோல் ரஜ்ஜு அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்படும் ஸர்ப்பமும், சுக்தி அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்படும் ரஜதமும் அநிர்வசனீயம் என்பதும் அறியப்பட்டவிஷயந்தான். ஆகவே, ப்ராந்திவிஷயம், ப்ராந்திஞானம் என்ற இரண்டுமே மித்யை என்பதில் யாரும் விவாதம் செய்வதற்கே முடியாது. இந்த விஷயம் லோக அனுபவம்

மட்டுமல்ல, ந்யாயம் (யுக்தி) தர்க்கம் வ்யாஸ ஸூத்ரம் முதலானவைகளாலும், அநிர்வசனீயமாகவஸ்து இருக்கிறது என்றே ஒத்துக்கொள்ளப்படுகிறது.

ஸ்வப்னம் என்பது ஸத்யம் என்பதாக 'ஸந்த்யே ஸிருஷ்டிராஹஹி' என்ற சூத்ரத்தினுல் ஸ்வப்னசிருஷ்டி வாஸ்தவந்தான் என்றும் அதேபோல், 'அத ரதான், ரதயோகான்பத: ஸ்ருஜதே' எனறு ச்ருதிவாக்யம், ரதம்குதிரைமுதலானவைகளை சிருஷ்டிக்கிருன் என்று தெரிவிக்கிறது. ஆதனுல் ஸ்வப்னம் ஸத்யமேன்றே சொல்லவேண்டும் என்ற பூர்வபக்ஷத்திற்கு, ஸ்வப்னம் ஸத்யமல்ல என்று பலகாரணங்களைக் கொண்டு விளக்கப்படுகிறது. அதன் மூலமாக, 'மாயாமாத்ரந்து கார்ஸ்ன்யேன அனபிவ்யக்தஸ்வரூபத்வாத்' என்ற வ்யாஸசூத்ரத்தின் மூலம் சித்தம் செய்யப்படுகிறது. எப்படியெனில், ஸ்வப்னபதார்த்தம் ஸத்யம் என்று சொல்லமுடியாது. அதேபோல் ஸ்வப்னம் ஸ்ம்ருதி ரூபம் என்றும் சொல்லமுடியாது. ஸ்வப்னத்தில் காணப்படுகின்ற வஸ்துக்கள், எந்த தேசத்தில் இருப்பதாக காணப்படுகிறதோ அந்த தேசத்தில் அந்தவஸ்து இருப்பதாக இதுவரை ஜாக்ரத்தில் அறியப்பட்டதாக சொல்லமுடியாது. ஏற்கனவே பார்த்தவஸ்துவாக இருந்தால்தான் ஸ்ம்ருதி ரூபமாக ஸ்வப்னத்தில் காணப்படுவதாகச் சொல்லமுடியும். ஏற்கனவே பார்க்காத பதார்த்தத்தை ஸ்ம்ருதிரூபமாக இருப்பதையே ஸ்வப்னத்தில் பார்க்கப்படுகிறது என்று சொல்வது பொருந்தாது. மேலும் ஏற்கனவே பார்த்தவஸ்துவைத்தான் ஸ்வப்னத்தில் பார்க்கப்படுகிறது என்று சொல்வதற்கும் முடியாது. ஏனெனில் இதுவரை பார்க்கப்படாத விஷயங்களும் பார்க்கப்படுவதால் ஸ்ம்ருதிரூபம் என்று சொல்வது சரியல்ல. ஜாக்ரத்காலங்களில் அனேக வஸ்துக்களைப் பார்க்கின்றதால், அந்த வஸ்துக்களின் ஸம்ஸ்க்காரத்தினுல், வெவ்வேருக அறியப்பட்ட சில வஸ்துக்களை ஒன்றுடன் ஒன்று சேர்த்துப்பார்க்கப்படுவதாகச் சொல்லலாமே என்ருல், அவ்விதமும் சொல்லமுடியாது. வஸ்துவின் அனுபவம் எப்படி ஏற்படுகிறதோ அந்தவிதமே ஸ்ம்ருதிஏற்படும். அதனுல் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து ஸ்ம்ருதி ஏற்படுவதாக சொல்வதற்கு காரணமும் இல்லை. ப்ரமாணம் என்பதும் கிடையாது.

**பூர்வ :** அப்படியானுல் ஸ்வப்னம் என்பது சக்ஷுஸ் முதலானவைகளாலேயே அறியப்படுவதால், ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** இந்தரியங்கள் எல்லாம் ஒடுங்கிய நிலை எதுவோ அதையே ஸ்வப்னம் என்று சொல்லப்படுகிறது. (அக்ஷாணும் விலய:ஸ்வப்ன:) அதனுல் ஸ்வப்னம் ப்ரத்யக்ஷமாக பார்க்கப்படுகிறது என்று சொல்லமுடியாது.

**பூர்வ :** ஸ்வப்னம் என்பது மனஸ் என்பதால் க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லலாமே?

**சித்தா :** மனஸ் என்பது, இந்திரியஸஹாயமின்றி சுகதுக்காதிகளைக்ரஹிக்கமுடியுமே தவிர, பாஹ்யவிஷயங்களை இந்த்ரியஸஹாயமின்றி மனஸ் என்பது க்ரஹிக்கமுடியாது. அப்படியானுல் அஸத்தான (இல்லாத) வஸ்துக்களே ஸ்வப்னத்தில் தோன்றுகிறது என்று சொல்லலாமே? என்ருல், ஸ்வப்னத்தில்வஸ்துக்கள் அபரோக்ஷமாகவே அறியப்படுகின்றது, அனுபவிக்கப்படுகின்றது. அஸத்என்ருல் தோன்றவே முடியாது. ஆகவே அஸத் என்று சொல்வதற்கும் முடியாது. ரஜ்ஜுவில் தோன்றும் ஸர்ப்பம், ஸ்மரிக்கப்படவில்லை, தோன்றுகிறது. முயல்கொம்பு (தோன்றவில்லை) பாஸிக்கவில்லை. ஆகவே, ப்ரஹ்மத்தினிடம் ஸர்வப்ரபஞ்சமும் அத்யஸ்த்தம் என்றே சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்பட்டால் தான், ஆரோபித வஸ்துக்கள் எல்லாம் அதிஷ்டானத்துடன் சேர்ந்து ப்ரத்யக்ஷமாக ப்ரகாசிக்கின்றது என்று சொல்லமுடியும். ஸ்வப்னப்ரபஞ்சமும்ப்ரத்யக்ஷமாக பார்க்கப்படுவதாலேயே அனுபவம் இருக்கிறது என்ருலும்,

அந்தவஸ்துக்கள் இருப்பதாக தோன்றுகிறது என்றே சொல்லவேண்டும். இவ்வித காரணங்களால் ஆத்மஸ்வரூபத்தில் ஸ்வப்னப்ரபஞ்சம் ஆரோபிதம் என்றே சித்திக்கின்றது. எந்த வஸ்து, உசிதமானதேசமோ, காலமோ இல்லாமல் தோன்றுகிறதோ அவையெல்லாம் மாயா மாத்ரம் என்றே அறியவேண்டும். இதையே சூத்ரகாரரும் 'மாயாமாத்ரந்து கார்த்ஸ்ன்யேன அனபிவ்யக்தஸ்வரூபத்வாத்' என்று தெரிவிக்கின்றார். இப்பேர்ப்பட்ட வஸ்துக்களையே மித்யை என்றும் அநிர்வசனீயம் என்றும் சொல்லப்படுகிறது. இதேபோல் ஏது அஞ்ஞானகல்பிதமோ அவையெல்லாமே அநிர்வசனீயம் என்பதால் ப்ரமாத்ராதிகளும் மித்யை என்றே சொல்லவேண்டும். ஸ்வப்னத்திலும் ப்ரமாத்ராதிபேதங்கள் இருப்பதாகவே அறியப்படுகிறது. அவையெல்லாம் அனிர்வசனீயம் என்பது எல்லோருக்கும்ப்ரசித்தமாக அறியப்படுகிறது. அதேந்யாயத்தைக்கொண்டு ஜாக்ரத்காலத்திலும் ப்ரமாத்ராதி பேதங்கள் அநிர்வசனீயம் என்றே தீர்மானிக்கவேண்டும். ஏனெனில் ஸ்வப்னப்ரபஞ்சம் நித்ரைஎன்ற அஞ்ஞானத்தினால் கல்பிக்கப்படுகிறது. அதேபோல் ரஜ்ஜுவில் தோன்றும் ஸர்ப்பமும் அஞ்ஞானகல்பிதம் என்றே அறியப்படுவதால் அவைகளும் மித்யை என்பது எல்லோருக்கும் ப்ரசித்தம்தான். இதேபோல் ஜாக்ரத்ப்ரபஞ்சமும் மித்யை என்றே ச்ருதிவாக்யங்களும் (காரணகார்யங்களைக் கொண்டு நிரூபணம் செய்வதால்) தெரிவிக்கின்றதால் அநிர்வசனீயமாக ஒருவஸ்து இருக்கிறதென்றே சொல்லமுடியாது என்ற ஆக்ஷேபம் சரியல்ல.

**337. அவதாரிகை :**

ஸ்வப்னம் போல் ப்ரமாத்ராதிகளும் மித்யை என்று சொல்லப்படுமானால், ஆசார்யன், ச்ருதி முதலான எல்லாமே மித்யை என்றே சொல்லநேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால் மித்யாப்ரமாணம் முதலானவைகளால் ஸத்யமானப்ரஹ்ம போதம் எப்படி ஏற்படமுடியும்? என்றால், எப்படி பாஷ்பதூமத்தினால் ஸத்யமான வன்னி சித்திக்கின்றதோ அதுபோல் சித்திக்கலாம்.

**ச்லோகம் :**

मिथ्यामुषिः सवितृमण्डलमध्यवर्त्ती प्रत्यक्षदृष्टिपथमापतितोऽचिरेण ।
द्रष्टुः शरीरकरणप्रविभागरूपं मृत्युं निवेदयति सत्यमिति प्रसिद्धम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆதித்யமண்டலத்தில் (சூர்யமண்டலத்தில்) சூர்யனிடம், மித்யையாகக்தோன்றும் துவாரமானது ப்ரத்யக்ஷமாக காணப்படுமானால், அந்த புருஷனுக்கு சீக்கிரத்தில் சரீர, கரண, வியோகம் என்ற மரணம் ஸத்யமாக ஏற்படுகிறது என்று அறியப்படுகிறது என்பது ப்ரசித்தம்.

**வ்யாக்யானம் :** சாஸ்திரம், ஆசார்யன், என்பதெல்லாம், மித்யையாக இருந்தாலும் ஸத்யமானப்ரஹ்ம போதம் ஏற்படலாம். நித்ரை என்ற அஞ்ஞானத்தினால் ஸ்வப்னத்தில ப்ரமாத்ராதிகளின் விவகாரம் மித்யை என்று சொல்லப்படுவது சரி என்றே ஒப்புக்கொள்ளப்பட்ட போதிலும், ஜாக்ரத் அவஸ்த்தையில் ஏற்படும் ப்ரமாத்ராதி பேத விவகாரங்கள் அஞ்ஞானத்தினால் ஏற்படுகிறதா? அல்லது விஞ்ஞானத்தினால் ஏற்படுகிறதா? என்று விசாரிக்கவேண்டும்.

ஜாக்ரத் என்பதும் ஸ்வப்னம்தான் என்பதால் அஞ்ஞானகார்யம் என்றே சாஸ்திரம் தெரிவிக்கின்றது. ஜாக்ரத்விவகாரம் என்பதும் ஆத்மஸ்வரூபஞானசாக்ஷாத்காரம் ஏற்படும் வரையில்தான் இருக்கிறது. ஞானத்தினால் அஞ்ஞான நாசம் ஏற்படுகின்ற போது ப்ரமாத்ராதி

பேத விவகாரம் என்பதும் இல்லையென்றே அறியப்படுகிறது. அதனால் ஜாக்ரத் என்பதும் ஸ்வப்னம் போல் மித்ய்ய என்பதை, அஞ்ஞானம் இருந்தால் ப்ரமாத்ராதி பேத விவகாரங்கள் இருக்கிறது; அஞ்ஞானமில்லையென்றால், ப்ரமாத்ராதி பேத விவகாரங்கள் இல்லையென்பதை அன்வயவ்யதிரேகத்தைக்கொண்டு அறிந்துகொள்ளவேண்டும். ஆகவே, அஞ்ஞானகல்பிதமான இந்த ஜகத் என்பதும் மித்யை என்றே சித்திக்கின்றது.

ப்ரஹ்மமென்பதுப்ரமேயம் என்று சொல்லப்படுமானல், அதுவும் மித்யை என்றாகும், அப்ரமேயம் என்றால் வஸ்துவேசித்திக்காது என்று செய்யப்பட்ட ஆக்ஷேபமும் சரியல்ல. ப்ரஹ்மமென்பது அப்ரமேயம்தான். ஆனால் வேதாந்த சாஸ்திரத்திற்கு ப்ரமேயம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் சாஸ்த்ரம் என்றப்ரமாணத்தினால் தான் ப்ரஹ்மஸ்வரூபம் என்ன? என்பதை அறிந்து கொள்ளமுடியும். (ஆனாலும் சப்தம் நேரிடையாகதெரிவிக்கவில்லை லக்ஷணையாகவே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டிருக்கிறது.) ஆனால் சாஸ்திரமானது ப்ரஹ்ம, ஸ்வரூப, ஆவாரகமான அஞ்ஞானத்தையே நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்பட்டிருக்கின்றதால், இந்த விஷயத்தை மேலும் விளக்கப்பட வேண்டிய அவஸ்யமில்லை.

ஸத்யமானப்ரஹ்மமானது, மித்யையான சாஸ்த்ராசார்யனால் எப்படிபோதிக்கமுடியும்? என்று செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு, அதற்குரியத்ருஷ்டாந்தத்தின் மூலம் இந்தவிஷயம் விளக்கப்படுகிறது. அதாவது சூர்யனிடத்தில் ஒருத்வாரம் இருப்பதுபோல் ஒரு புருஷனுக்கு காணப்படுமானல் அவன் அதிசீக்ரம்மரணத்தை அடைகிறான் என்று கர்ம காண்டத்தில் ஐதரேயப்ராஹ்மணத்தில், 'நசிரமிவ ஜீவிஷ்யதி ஸசித்ர இவ ஆதித்யோத்ருச்யதே' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸவித்ருமண்டலத்தில் காணப்படும் துவாரம் என்பது மித்யைதான் என்றாலும் அதுவே ஸத்யமான மரணத்திற்கு காரணமாகின்றது. இதேபோல் பாஷ்பதூமம் என்பது மழையினால் பூமியில் உள்ள உஷ்ணமானது நீராவியாக வெளிப்படுகின்றபோது புகைபோல தோன்றும். இதுமித்யா புகைதான் என்றாலும் சில சமயம் தெய்வாதீனமாக அங்கு அக்னியும் இருக்குமானல், பாஷ்பதூமமே வன்னிஞானத்திற்கு காரணமாக ஆகிறது என்று நையாயிகனாலும் சொல்லப்படுகிறது. அதுபோல் ப்ரமாத்ராதிகள் மித்யை யானாலும் ஸத்யமான ப்ரஹ்மஞானத்திற்கு காரணமாக ஆகலாம்.

**338. அவதாரிகை :**

இதுவரை சொல்லப்பட்ட்விஷயம், எங்களுடைய ஸ்வயகல்பனை என்று சொல்லமுடியாது. இவைகள் ப்ரமாணத்தை மூலமாகக்கொண்டே சொல்லப்படுகிறது என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स्वप्नः शुभाशुभफलागमसूचकः स्यात् मिथ्याऽपि सन्निति च सूत्रकृदाह यत्नात् ।
गुर्वादिसर्वमिदमद्वयबुद्धिहेतुर्मायानिबन्धनमिति प्रतिपादनाय ॥

**ச்லோகார்த்தம் :** மித்யையாக இருந்தாலும் ஸ்வப்னம் என்பது இனி ஏற்படப்போகின்ற ஸுபாஸுபங்களுக்கு சூசகமாக இருக்கின்றது. இதே போல் குரு சாஸ்திரம் என்பவைகள் எல்லாம் மித்யையாக இருந்தாலும் ஸத்யமான அத்வயஸ்வரூபத்தை தெரிவிப்பதில் காரணமாகலாம் என்று தெரிவிப்பதற்காக சூத்ரக்காரர் பெருமுயற்சியுடன் இந்த விஷயத்தை தெரிவிக்கின்றார்.

**வ்யாக்யானம் :** ஸ்வப்னம் என்பது மித்யைதான். ஆனாலும் வரப்போகின்ற ஸுபாஸுபங்களுக்கு சூசகமாக இருக்கிறது என்று 'ஸுசகச்சஹிச்ருதேராசக்ஷதே சதத்வித:' என்ற ப்ரஹ்மசூத்ரத்திலும், 'யதாகர்மஸுகாம்யேஷு ஸ்த்ரியம் ஸ்வப்னேஷுபச்யதி' 'ஸம்ருத்திம் தத்ர ஜானீயாத்' என்றச்ருதி வாக்யத்திலும் தெரிவிக்கப்படுகிறது. இந்த விஷயத்தைப்பற்றிய விசாரம் சூத்ரபாஷ்யத்தில் விஸ்தாரமாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் குரு சாஸ்திரம் என்பதெல்லாம் மித்யை என்றாலும், அதனால் ஸத்யமான ப்ரஹ்ம ஞானம் ஏற்படலாம் என்பதை ஸ்வப்னத்ருஷ்ட்டாந்தத்தின் மூலமாகவே தெரிவிக்கப்படுகிறது. அதாவது: காம்யகர்மாக்களைச் செய்கின்ற போது ஸ்வப்னகாலத்தில் சுமங்கலியானஸ்தீரியை காண்பானாகில் அது மங்களத்திற்கு சூசகமாக ஆகிறது என்று தெரிவிக்கப்படுகிறது. இதேபோல் குருசாஸ்திரம் முதலானவை மித்யையானாலும் ஸத்யமான வஸ்து ஞானம் ஏற்படகாரணமாக ஆகலாம்.

**339. அவதாரிகை :**

சுக்தியைப்பார்த்து ரஜதம் என்று ப்ராந்தி ஏற்படுகிறது. அந்தஞானம் மித்யைதான். ஏனெனில் ரஜதத்தில் ஏற்பட வேண்டிய ஞானம், சுக்தியில் ஏற்படுகின்றதால் வ்யதிகரணப்ராகாரமாக இருக்கின்றதால் அந்தஞானம் தான் தோஷமுள்ளது அநிர்வசனீயம் என்று சொல்லலாம். ஆனால் ரஜதம் என்ற வஸ்துவே அநிர்வசனீயம் என்று சொல்லத் தேவையில்லை.

**ச்லோகம் :**

भ्रान्तिप्रतीतिविषयो न च सन्न चासन्नाकाशतत्कुसुमयोर्न हि सास्ति नापि ।
तस्या भवेत्सदसदात्मकगोचरत्वं न ह्यस्ति तत्किमपि यत्सदसत्स्वरूपम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ராந்திஞானத்திற்கு விஷயமானவஸ்து ஸத்என்றோ அஸத் என்றோ சொல்லமுடியாது. ஏனெனில் ஆகாசம் என்பதும் ஆகாசபுஷ்ப்பம் என்பதும், ப்ராந்தி ப்ரத்யயத்திற்கு விஷயமாகிறதில்லை. ஸதஸதாத்மகமான வஸ்துவும் ப்ராந்தி ஞானத்தில் விஷயமாகிறதில்லை. ஏனெனில் ஸதஸத்ரூபமுள்ளதாக எந்தவஸ்துவும் இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** கிளிஞ்சலைப் பார்த்து வெள்ளி என்று ஏற்படும் ஞானத்தையே, ப்ராந்திஞானம் என்று சொல்கிறோம். இந்த விஷயத்தில், எது ப்ராந்தி ஞானத்திற்கு விஷயமோ அவையெல்லாமே அநிர்வசனீயம் என்று சொல்ல முடியாது என்று தார்க்கிகர் முதலான சில மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது. இதுசரியல்ல. ப்ராந்தி ஞானம் என்றால் என்ன? என்றால், சுக்தியைப்பார்த்து, இது ரஜதம் என்று ரஜதாகாரவ்ருத்தி ஏற்படுகிறது. எந்தவஸ்து எப்படி இருக்கிறதோ அவ்விதம் அறியப்படாமல் வேறொருவஸ்துவாக , தெரிவிக்கின்ற அவித்யாவ்ருத்தியைத்தான் ப்ராந்திஞானம் என்று சொல்லப்படுகிறது. இந்தப்ராந்தி ஞானத்திற்கு எதுவிஷயமோ அந்த விஷயத்தை ஸத்என்றோ அல்லது அஸத் என்றோ சொல்லமுடியாது, பாதிக்கப்படுவதால், ஆகாசம் போல் என்று வ்யதிரேகத்ருஷ்ட்டாந்தம் சொல்லப்படுகிறது. (ஆகாசம் என்பது ஸத் என்பதால் ப்ராந்திஞானத்திற்கு விஷயமாக முடியாது) கடையில் இருக்கின்ற வெள்ளியே இங்குதோன்றுகிறது என்று சொல்லலாமே? என்றால், எங்கோ ஓரிடத்தில் இருக்கின்றவஸ்து மற்றொரு இடத்தில் தோன்ற முடியாது. அதற்காக இல்லாத ஒரு வஸ்துவே தோன்றுகிறது என்று சொல்லலாமே? என்றால், இல்லாமல் தோன்றுவது எதுவோ அதையே ப்ராந்தி என்று சொல்கிறோம். முயல்கொம்பு போல் அஸத் என்றால், அதை ப்ராந்தி ஞானத்திற்கு விஷயம் என்றே சொல்லமுடியாது. ஸத்தாகவும்

அஸத்தாகவும் இருக்கின்ற வஸ்துவே தோன்றுகிறது என்று சொல்லலாமே? என்ருல் ஸதஸத்ரூபமாக எந்த வஸ்துவும் இருப்பதாக லோகத்தில் அறியப்படவில்லை. அதற்கு த்ருஷ்ட்டாந்தமே கிடையாது. இந்தவிதம் ஸத்தான ஆகாசம் என்பது ப்ராந்திஞானத்திற்கு விஷயமாக ஆகாது. அஸத்தான ஆகாச புஷ்ப்பமும் ப்ராந்திஞானத்திற்கு விஷயமாகாது அதனுல் ப்ராந்தி ஞானத்திற்கு எது விஷயமோ அது ஸத்அஸத்விலக்ஷணம், அநிர்வசனீயம் என்றே சித்திக்கின்றது.

**340. அவதாரிகை :**

ப்ராந்திஞானம் என்பது விஷயம் இல்லாமலேயே, (ஆலம்பனம் இல்லாமலேயே) தோன்றுகிறது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

आलम्बनं च विरहय्य न विभ्रमस्य ज्ञानात्मनो भवति जन्म कदाचिदत्र ।
सिद्धं ततः सदसती व्यतिरिच्य किंचिदालम्बनं भ्रमधियः सकलप्रवादे ॥

**ச்லோகார்த்தம் :** ஆலம்பனமின்றி, ப்ராந்திஞானம் என்பதின் உற்பத்தி ஒருபோதும் ஏற்படாது. அதனுல் எந்த மதஸ்த்தர்களானுலும், ஸதஸத்விலக்ஷணமான ஒரு வஸ்துவே ப்ராந்தி ஞானத்திற்கு விஷயம் என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

**வ்யாக்யானம் :** ஆலம்பனம் என்பதே இல்லாமல ஞானம் என்பது ஏற்படமுடியாது. அவ்விதம் ஒருவருக்கும் அனுபவமும் இல்லை. அதனுல் விஷயம் இல்லாமல் ப்ராந்திஞானம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது.

**பூர்வ :** அஸத்க்யாதி, அன்யதாக்யாதி, அக்யாதி, ஆத்மக்யாதி என்ற இந்த நான்குமே இல்லையென்று சொல்லப்படுமானுல், ப்ராந்திஞானத்திற்கு விஷயமில்லை என்று தானே சொல்ல வேண்டும்? அதனுல் நிராலம்பனமாக ஞானம் ஏற்படாது என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** விஷயமில்லாமல், அபரோக்ஷமாக ஞானம் ஏற்படுகின்றது என்று யாராலும் சொல்லமுடியாது. உதாரணமாக, கிளிஞ்சல் என்பதில், வெள்ளி என்ற விஷயம் தோன்றவில்லை என்ருல், அதை எடுக்கயாரும் ப்ரவர்த்திக்கமாட்டார்கள். அதேபோல், கயிற்றில், ஸர்ப்பம் என்ற விஷயம் தோன்ருமல், அதைப்பார்த்து யாரும் ஓடமாட்டார்கள். இதை ஒத்துக்கொள்ளாமல், ப்ராந்திஞானத்திற்கு விஷயமே இல்லை யென்று சொல்லப்படுமானுல் ப்ரவர்த்திப்பதற்கோ, நிவர்த்திப்பதற்கோ என்ன காரணம்? என்று யாராலும் சொல்லமுடியாது. அதனுல் ப்ராந்திஞானத்திற்கு விஷயம் இருக்கிறதென்றே ஒத்துக்கொள்ள வேண்டும். ஆனுல் அந்த விஷயம் ஸத்என்ருே, அஸத்என்ருே சொல்லமுடியாததால் ஸதஸத்விலக்ஷணம் அநிர்வசனீயம் என்றே சித்திக்கின்றது. ஞானம் என்பதில் நிர்வசனீயம் என்ருே அநிர்வசனீயம் என்ருே ஏதுவும் சொல்லமுடியாது. விஷயம் என்பதைக்கொண்டே ஞானம் தீர்மானிக்கப்படுகிறது.

**341. அவதாரிகை :**

'வாக்யப்ரஸூதமதி:' என்று ஆரம்பிக்கின்ற 122வது ச்லோகத்தில் சப்தம் என்றப்ரமாணம், பரோக்ஷஞானத்தைத்தான் உண்டுபண்ணுமேயன்றி, அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணுது என்றும் அபரோக்ஷ ஞான ஜனகத்வம் என்பது இந்த்ரியங்களுக்குத்தான் சொல்லமுடியும், அதனுல் வேதாந்தம், அபரோக்ஷமானப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது, ஏனெனில் சப்தம் பரோக்ஷவிஷயத்தை அபரோக்ஷமாக தெரிவிக்கின்றது என்ருல், வேதாந்தம் அப்ரமாணம் என்றே சொல்லநேரிடும். அதனுல் ப்ரஹ்மமென்பது சப்தத்தினுல் போதிக்கப்படுகிறது என்று சொல்வது சரியல்ல என்று

ஆக்ஷேபிக்கப்பட்டது. இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில் 'தசமஸ்த்வமஸி' என்ற விஷயத்தில் வாக்யத்திலிருந்தே அபரோக்ஷ ஞானம் ஏற்படுகின்றதால், சப்தத்திலிருந்து பரோக்ஷ ஞானம்தான் ஏற்படும் என்று சொல்வதில் வ்யபிசாரம் இருக்கிறது. மேலும் வஸ்து அபரோக்ஷமாக இருந்தால், அந்த வஸ்து ஞானமும் அபரோக்ஷமாகவே ஏற்படும் என்பதால் உன்னால் சொல்லப்படும் அனுமானத்தில் உபாதிதோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

ब्रह्मात्मवस्तु निरवद्यचिदेकरूपं वह्न्युष्णतावदपरोक्षवपुः स्वभावात् ।
निर्दोषवेदशिरसो वचनादतोऽस्मिन् ब्रह्मात्मवस्तुनि भवेदपरोक्षबुद्धिः ॥

**ச்லோகார்த்தம் :** வன்னி என்பது எப்படி உஷ்ணஸ்வரூபமோ அதுபோல்ப்ரஹ்மமென்பது அபரோக்ஷஸ்வரூமாகவே இருக்கின்றது. அதனால் நிர்தோஷ சைதன்யஸ்வரூபமாகவே இருக்கின்றப்ரஹ்மமென்பது, நிர்தோஷமான வேதாந்த வாக்யங்களிலிருந்து ப்ரஹ்மாத்ம விஷயகமான அபரோக்ஷ ஞானம் ஏற்படமுடியும்.

**வ்யாக்யானம் :** வன்னி என்பது எப்படி உஷ்ணஸ்வரூபமாக இருகிகிறதோ, அதுபோல் பரஹ்மமென்பது அபரோக்ஷஸ்வரூபமாகவே இருக்கின்றது என்பது அதன்ஸ்வபாவம். ஏனெனில் சைதன்யஸ்வரூபமானதால் எப்போதும் ஸ்வப்ரகாசயமாய் அபரோக்ஷமாக ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது. ப்ரஹ்மவிஷயத்தில் நிர்தோஷமான வேதவாக்யத்தினால் ஏற்படுகின்ற ஞானம் அபரோக்ஷமாகவே ஏற்படுகிறது. அதனால் இதைப்ராந்திஞானம் என்று சொல்வதற்கு முடியாது. அதுமட்டுமல்ல. இந்திரியஜன்யஞானமாக இருந்தால் தான், ஞானம் அபரோக்ஷமாக ஏற்படும் என்று சொல்வது சரியல்ல. சுகாதிகள் இந்த்ரிய ஜன்யஞானமல்ல. ஆனாலும் அபரோக்ஷமாகவே சுகாதிகள் அறியப்படுகிறது. அனுபவிக்கப்படுகிறது. ஆகையால் வஸ்துபரோக்ஷமாக இருந்தால் பரோக்ஷ ஞானமும், வஸ்து அபரோக்ஷமாக இருந்தால் அபரோக்ஷ ஞானமும் ஏற்படுகிறதென்றே சொல்ல வேண்டும். இந்த விஷயத்தைப்பற்றி விசாரிப்பதற்கு முன்பு, அஞ்ஞானம் என்பது அபாவரூபமில்லை, பாவரூபந்தான் என்பதை சாதிக்கப்பட்டது. அதனால் ப்ரஹ்மமென்பது (பாவரூபமான) அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று சொல்லப்பட்டதால், ப்ரஹ்மமென்பது அஞ்ஞாதமாக இருக்கிறதென்று சொல்லப்படுவதால் வேதாந்தவாக்யம் அஞ்ஞாதமான விஷயத்தை போதிக்கின்று என்று சொல்லப்பட்டது. இந்த விசாரத்தின் மத்தியில், ப்ரசங்கவஸாத் சப்தம்பரோக்ஷவிஷயமா? அபரோக்ஷவிஷயமா? என்று ஆக்ஷேபம் செய்யப்பட்டது. சித்ரூபமான ப்ரஹ்மமென்பது நித்ய அபரோக்ஷஸ்வரூபந்தான் என்றும் உபாதிஸம் பந்தத்தினாலேயே, கடபடாதிகள் போல் ஒருஸமயம் அறியப்படுகிறது என்று மற்றொரு ஸமயம் அறியப்படவில்லை என்று சொல்லப்படுகிறது. ஆகையால் கேவல சைதன்யம் என்பது நித்ய அப்ரோக்ஷஸ்வரூபம் என்பதையே, வன்னிக்கு எப்படி உஷ்ணம்ஸ்வபாவமோ அதுபோல் 'அபரோக்ஷ வபு:ஸ்வபாவாத்' என்று ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஆகவே இப்பேர்ப்பட்ட அபரோக்ஷஸ்வரூபத்தை வேதாந்தவாக்யம் அபரோக்ஷமாக தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். நிர்த்தோஷப்ரமாணமான வேதாந்தவாக்யமே ப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்றதால் இதில் அப்ரமாண்ய சங்கைக்கே இடமில்லை. ஆகவே, 'சப்தம் பரோக்ஷ விஷயத்தைதான் தெரிவிக்கும், ஏனெனில் இந்த்ரியஜன்யவிஷயமாக இருந்தால்தான் அபரோக்ஷஞானம் ஏற்படும்' என்று சொல்லப்பட்ட அனுமானத்தில், இந்திரியஜன்ய விஷயத்வம் என்பது உபாதிதோஷமாக இருக்கிறது.

**342. அவதாரிகை :**

வேதாந்த வாக்யத்தினுல் அபரோக்ஷமான ப்ரஹ்மஞானம் ஏற்படுகிறது என்று சொல்லப்பட்டது. இவ்விதம் அகண்டாகாரவ்ருத்தியினுல் ஏற்படும் ப்ரஹ்மஞானத்தினுல் நிவர்த்திக்கப்படுவது என்ன? அவ்விதம் நிவர்த்திக்கப்படும் வஸ்து ஸத்தா? அஸத்தா? ஸத் என்ருல் நிவர்த்திக்க முடியாது. அஸத் என்ருல் எதை நிவர்த்திப்பது? என்று 126வது ச்லோகத்தில் ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு இங்குபதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

सा चोपनेयरहिते विषयिण्यनन्तेऽनिर्वाच्यमग्रहणमात्रमपाकरोति ।
स्वोत्पत्तिलब्धनिजवस्तुबलेन तत्र तापत्रयं समुपशाम्यति निर्निमित्तम् ॥

**ச்லோகார்த்தம் :** விசேஷம் என்பதே ஏற்பட முடியாததும் அனந்தமுமானப்ரஹ்மாத்ம வஸ்துவில், அநிர்வசனீயமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பதை ப்ரஹ்மாகார வ்ருத்திநிவர்த்திக்கின்றது. இந்தஞானம் தன்னுடைய உற்பத்தியினுலேயே அஞ்ஞானகார்யமான தாபத்ரயங்களும் அதன் காரணமில்லாததால் நாசத்தை அடையும்படிச்செய்கிறது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** சத்சிதானந்தஸ்வரூபமான ப்ரஹ்மமென்பதில், வ்ருத்தி ஞானத்தினுல் புதிதாக சேர்க்க வேண்டியவிஷயமுமில்லை, அதேகாரணத்தினுல் விலக்கவேண்டியவிஷயமுமில்லை. அதனுல், வேதாந்த வாக்யத்தினுல், நித்யசிதாத்மஸ்வரூபமாகவும், நிர்விசேஷமாகவும் இருக்கின்றப்ரஹ்மஸ்வரூபத்தில் என்னவிசேஷம் ஏற்படுகிறதென்று சொல்லமுடியும்? அதனுல் வேதாந்தம் நிஷ்ப்ரயோஜனம் என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** நிர்விசேஷமானப்ரஹ்மஸ்வரூபம், உண்மையில் எந்தப்ரமாணத்திற்கும் விஷயமில்லை. ஆனுலும் அநிர்வசனீயமான அஞ்ஞானத்தினுல், ப்ரஹ்மஸ்வரூபம் ஆவ்ருதமாக இருக்கிறது என்று முன்பே சித்தம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே, வேதாந்தவாக்யஜன்யமான அகண்டாகாரவ்ருத்தி ஏற்பட்டவுடனேயே, அஞ்ஞான நிவர்த்தி என்பது ஏற்படுகிறது. அதனுல் ப்ரஹ்மஸ்வரூப அபிவயக்திக்கு அகண்டாகாரவருத்திகாரணமாகிறது என்று சொல்லப்படுகிறது.

கடம் என்பது ஜடமாக இருக்கின்ற காரணத்தினுல், அந்த கடம்பரகாசிப்பதற்கு கடாகாரவ்ருத்தியும், வருத்திப்ரதிபலிதசைதன்யமும் அபேக்ஷிக்கப்படுகிறது. அதனுல்தான் ஜடமான கடம்ப்ரகாசிக்கவேண்டும். ஆனுல், ப்ரஹ்மவிஷயத்தில், ப்ரஹ்மமென்பது சைதன்யஸ்வரூபமாகவே இருக்கின்றதால், வேதாந்தவாக்யஜன்ய ப்ரஹ்மாகாரவ்ருத்தி ஒன்றே அபேக்ஷிக்கப்படுகிறது. பலவயாப்யத்வமில்லை. ஆகவே, அகண்டாகாரவ்ருத்தி ஞானம் ப்ரஹ்ம ஆவாரகமான, அநிர்வசனீயமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுகிறது. அதனுல் வ்ருத்தியினுல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் புதிதாக உண்டாக்கப்படுவதற்கோ, கொண்டுவருவதற்கோ எதுவுமில்லை. ப்ரஹ்ம ஆவ்ாரக அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதன் மூலம் வேதாந்த வாக்ய ஜன்யவ்ருத்திஞானம், ப்ரஹ்மத்திற்கு ஞாபகமாக ஆகிறதேயன்றி காரகமில்லை. அதனுல் இல்லாததை உண்டுபண்ணுகின்றதா? இருப்பதை நிவர்த்திக்கின்றதா? என்ற கேள்விக்கே இடமில்லை. காரகமாக இருந்தால் தான் இந்த கேள்வி பொருந்தும். மேலும், ஸதஸத்விலக்ஷணம் அநிர்வசனீயம் அஞ்ஞானம் என்று சொல்லப்படுகின்றதால் அஞ்ஞானம் ஆரோபிதம் என்றே சித்திக்கின்றது. ஆரோபிதவஸ்து பாதிக்கப்படுமானுல் அதிஷ்டான மாத்ரமாகப்ரகாசிக்கின்றது. அநாதிபாவரூபமான அஞ்ஞானம் முக்காலத்திலும் பாதிக்கப்படாத

ஸத்வமுடையதாக இருக்குமானல், அதை எதனலும் நிவர்த்திக்கமுடியாது. அஞ்ஞானம் அபாவரூபமாக இருக்குமானல் எதையும் மறைக்கமுடியாது. அதனல் பாவாபாவ விலக்ஷணம், ஸதஸத்விலக்ஷணம் அநிர்வசனீயம் என்றே சொல்லவேண்டுமேயன்றி வேறு எந்த முறையிலும் அஞ்ஞானத்தை நிரூபணம் செய்யமுடியாது என்று கீழேயே சாதிக்கப்பட்டது. ஆகையால் வஸ்து ஞானம் ஏற்படுவதற்கு, வேதாந்த வாக்யம் என்ற ப்ரமாண ஜன்யஞானம் ஸஹாயமாக இருக்கிறது. ஞானம் ஏற்பட்டவுடனேயே, அஞ்ஞானம், அதன்கார்யம் என்பதெல்லாமே நாசத்தை அடைகின்றது. (ஞானம் ஏற்படுகின்றபோதே உண்மையானவஸ்துப்ரகாசிக்கின்றது). அதனல், ப்ரஹ்மாகாரமாகவே வ்ருத்தி ஏற்படுகின்றதால், அதனுடையப்ரகாசத்திற்கு (ஸ்வப்ரகாசத்திற்கு) வேறு எதனுடைய அபேக்ஷையும் கிடையாது. ஆகவே, ப்ரஹ்மாகாரவ்ருத்திஞான உற்பத்திக்குமட்டுமே வாக்யத்தின் ஸஹாயம் தேவைப்படுகிறது. அதனல்தான் ஞானம் என்பதற்கு காரகத்வம் இல்லையென்ருலும், ஞாபகத்வம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஞானஉற்பத்திக்குப்பிறகு வேறு எதுவுமே தேவைஇல்லை. ஞானம் ஏற்பட்டதுமே, அஞ்ஞானம் அதனல் ஏற்பட்ட அனர்த்தகரமானப்ரமாத்ராதிபேதங்கள், அதனல் ஏற்பட்டபந்தம், பந்தத்தினல் ஏற்பட்ட தாபத்ரயங்கள் எல்லாமே ஞானத்தினல் நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுவதால் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமேஇல்லை. இதுவரை சொல்லப்பட்டதன் சாரம் என்னவென்ருல், ஞானம், தன்னுடைய உற்பத்திக்காக மட்டுமே வாக்யத்தை அபேக்ஷிக்கின்றது அந்தவாக்யத்தினல் ப்ரஹ்மாகாரவ்ருத்தி ஞானம் ஏற்படுகின்றபோதே, ப்ரஹ்ம ஆவரகமான அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது. அதன்பிறகு தன்ஸ்வரூபப்ரகாசத்திற்கோ, அஞ்ஞான நிவர்த்திக்காகவோ எதையும் அபேக்ஷிக்கவில்லை. ஞானம் ஏற்பட்ட பிறகு காரகத்தினல் உண்டுபண்ணவேண்டிய கார்யம் ஏதுவுமில்லை ஏனெனில் அஞ்ஞானம் நிவர்த்திக்காவிடில் ப்ரஹ்மாகாரஞானம் என்பதே ப்ரகாசிக்க முடியாது. இவ்விதம் காரகத்தினல் செய்யக்கூடியது எதுவுமில்லை என்பதால் வ்ருத்தி என்பது காரகமாக இல்லை என்பதற்காக எவ்வித தோஷமும் கிடையாது. வாக்யத்தினலேயே ஞானம் ஏற்படவில்லையென்ருல், அப்யாஸம் செய்வதால் மட்டும் எப்படி ஞானம் ஏற்படமுடியும்? ஆகவே அப்யாஸத்தையும் எதிர்பார்க்கவில்லை. அதேபோல் வேறு ஸஹாயத்தையும் எதிர்பார்க்கின்றதில்லை. ஆகையால் ஞானம் தன் உற்பத்திக்கு மட்டுமே வாக்யத்தை அபேக்ஷிக்கின்றது. வேறு எந்த விவகாரத்தையும் அபேக்ஷிப்பதில்லை.

**343. அவதாரிகை :**

முக்தி என்பது க்ரியாஸாத்யம் என்று சொல்லமுடியாது. அதனல் வேதாந்தம் கார்யபரமில்லலை என்று கீழே சொல்லப்பட்டது. இப்போது வேதாந்தவாக்யம் எதுவுமே கார்யபரமில்லை என்று தெரிவிப்பதற்காக, எந்த வாக்யமாக இருந்தாலும் அது கார்யத்தையே போதிக்கின்றது என்று சொல்வது சரியல்ல. அதனல் வாக்யம் கார்யபரம் என்று சொல்லப்படும் வாதத்தை கண்டனம் செய்வதற்காக முதலில் அவர்களுடைய வாதம் என்ன வென்பதை அனுபாஷணம் செய்து மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

वाक्यात्प्रवर्त्तकनिवर्त्तकरूपभाजः पुंसः प्रवृत्तिमुपलभ्य धियोऽनुमानात् ।
कार्यान्विते शिशुरवैति पदस्य शक्तिमित्युच्यते यदि तु तत्र वयं वदामः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரவர்த்தக, நிவர்த்தக வாக்யங்களிலிருந்து ஒரு புருஷனிடம் ஏற்படும் ப்ரவ்ருத்தியை பார்த்தபிறகு, பாலகன் ப்ரவர்த்தக ஞானத்தை அறிகிருன். இதிலிருந்து பதத்தினுடைய சக்தி கார்யான்விதமாக இருக்கிறதென்று தெரிந்து கொள்கிருன் என்று மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. இதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒரு புருஷன், மற்றொரு புருஷனைப்பார்த்து 'காம்ஆனய' பசுவைக்கொண்டுவா என்று சொல்கிறான். இந்த வாக்யம் ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகின்றதால், ப்ரவர்த்தக வாக்யம் என்றும், அதேபோல் 'அங்குஸர்ப்பம் இருக்கின்றது அங்கு போகாதே' என்று தெரிவிக்கின்றவாக்யம் நிவர்த்தக வாக்யமென்றும் சொல்லப்படுகிறது. இந்த வாக்யங்களைக்கேட்ட புருஷனுடையப்ரவ்ருத்தியையும், நிவ்ருத்தியையும் பார்த்துக்கொண்டிருக்கின்ற பாலகனுக்கு உத்தமவ்ருத்தனால் சொல்லப்பட்ட வாக்யத்திலிருந்தே, அதைக்கேட்ட மத்திமவ்ருத்தனால், இந்த கார்யத்தைச் செய்ய வேண்டும் என்ற கர்த்தவ்யதா ஞானம் ஏற்பட்டிருக்கவேண்டும். என்று முதலில் பாலகன், மத்திமவ்ருத்தனுக்கு ஏற்பட்டஞானத்தை அனுமானிக்கிறான். அதனால் வாக்யத்திற்கு இவ்விதம் க்ரியான்விதமான அர்த்தத்தை போதிக்கக்கூடிய சக்தி இருக்கிறதென்று அறிகிறான். அதனால் கிரியான்விதமான வாக்யமே அர்த்தபோதகமாகும் என்று குருமதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது. இவ்விதம் கார்யான்விதமான வாக்யமே அர்த்த போதகம் ஆகும் என்பதால் சித்த வஸ்து விஷயகமான வாக்யத்தினால் லோகத்தில் விவகாரம் எதுவும் ஏற்படமுடியாது என்பதால் சித்தவஸ்துவான ப்ரஹ்மத்தை போதிக்கின்ற வேதாந்த வாக்யம் ப்ரமாணமாக முடியாது. வேதாந்தம் சித்தவஸ்து போதகமில்லை என்று கீழே ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆக்ஷேபம் சரியல்ல என்பதை மேலே கண்டிக்கப்படுகிறது.

**344. அவதாரிகை :**

வ்ருத்த விவகாரம் என்பதில் வாக்யம் க்ரியையை போதிக்கின்றது. என்றும் அதனால் தான் சப்தத்திற்கு அர்த்தத்தை போதிக்கக்கூடியசக்தி இருக்கிறதென்றும் சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

योग्येतरान्वितपदार्थनिवेदने तु शब्दस्य शक्तिरिह वृद्धजनप्रयोगे ।
विज्ञायते न खलु कार्यसमन्वितेऽर्थे कार्याभिधायिषु पदेष्वपि तत्प्रसङ्गात् ॥

**ச்லோகார்த்தம் :** வ்ருத்தவிவகாரத்தில் சப்தத்தினுடைய சக்தியானது யோக்யமான மற்றொரு பதத்தில் அன்விதமான விஷயத்தைத்தான் தெரிவிக்கின்றதேயன்றி கார்யான்விதமான அர்த்தத்தைத்தான் தெரிவிக்கிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில் கார்யத்தை தெரிவிக்கின்ற பதங்களிலும் கார்யான்விதம் என்பது ஸம்பவிக்கின்றதால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'காமானய' என்றவாக்யம் க்ரியையுடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது' என்பதற்காக, எந்த வாக்யமாக இருந்தாலும், க்ரியையுடன் அன்வயித்தே தன்அர்த்தத்தை போதிக்கவேண்டும் என்று சொல்லப்படுவது சரியல்ல. இவ்விதம் சொல்லப்படுவதில் வ்யபிசாரம் ஏற்படுகிறது. எப்படியெனில் பதங்கள் எல்லாம் 'க்ரியான்விதே சக்தி:' என்று சொல்லப்படுமானால் க்ரியாபதம் என்பதும் பதமாக இருக்கின்றதால், ஒருக்ரியாபதம் மற்றொருக்ரியாபதத்துடன் அன்வயித்தே அதன் அர்த்தத்தை தெரிவிக்கவேண்டும் என்று சொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லமுடியாததால், கார்யத்தைக் குறிப்பிடுகின்ற லிஙாதி பதங்களுக்கு க்ரியான்விதே சப்த சக்தி: என்று சொல்லமுடியாது அதனால் இதரான்விதே சக்தி: என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால், க்ரியாபதம் காரகபதத்துடனும், காரகபதம் க்ரியாபதத்துடனும் அன்வயித்து வாக்யம் அர்த்த போதகம் ஆகிறது என்று சொல்லலாம். மேலும் 'வன்னினா ஸிஞ்சதி' என்று, நெருப்பினால்

நனைக்கிறுன் என்பது இதரான் விதமாக இருந்தபோதிலும் யோக்யமாக இல்லை. ஜலத்திஞல் நனைக்கிறுன் என்பதே பொருந்தும். ஆகவே, வாக்யத்திலுள்ள பதங்கள் ஒவ்வொன்றும், ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்பட்டு அர்த்தத்தை தெரிவிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். அதஞல் யோக்ய இதரான்விதேசக்தி: என்று சொல்வதே பொருந்தும் வேறு எந்த விதம் சொன்ஞலும் பொருந்தாது.

**345. அவதாரிகை :**

லிஙாதிபதங்களுக்கு கார்யான் விதமான அர்த்தத்தில் சக்தி சொல்லப்படுகிறதா? அல்லது, சித்தமான அர்த்தத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிப்பதில் சக்தி சொல்லப்படுகிறதா? என்று விசாரிக்கின்றபோது, கார்யான்விதேசக்தி: என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

कार्यान्वितार्थविषया यदि शब्दशक्तिः कार्यार्थवाचिषु लिङादिषु कार्यमन्यत् ।
वक्तव्यमापतति तत्र च तत्र चान्यद्वक्तव्यमेव भवतीत्यनवस्थितिः स्यात् ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்தின் சக்தியானது கார்யான் விதமான விஷயத்தில் இருக்கிறது என்று சொல்லப்படுமானால் கார்யார்த்தத்தை தெரிவிக்கின்ற லிஙாதி சப்தங்களும் வேறொரு கார்யத்தை தெரிவிப்பதாகச் சொல்லவேண்டும். அதற்கும் வேறு ஒரு கார்யத்தை கல்பிக்க நேரிடும். இவ்விதம் அனவஸ்த்தை ஏற்படுகின்றது.

**வ்யாக்யானம் :** லிஙாதிபதங்களுக்கு கார்யத்தில் அன்வயிக்கின்றமற்றொரு பதத்துடன் தான் சக்தி சொல்லப்படவேண்டும் என்று சொல்லப்படுமாஞல், லிஙாதி பதம் எந்த கார்யத்துடன் அன்வயிக்கின்றதோ அந்தபதம், வேறு ஒரு கார்யத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கவேண்டும். இதேபோல் ஒவ்வொருபதத்திற்கும் மற்ருெருக்ரியாபதத்துடன்தான் அன்வயம் என்று சொல்லப்படுமாஞல் அனவஸ்த்தா தோஷம் ஏற்படும். முதல்கார்யம் இரண்டாவது கார்யத்துடனும், இரண்டாவது முதல் கார்யத்துடனும் அன்வயிக்கின்றது என்ருல், அன்யோன்யஆச்ரயதோஷம்ஸம்பவிக்கும், கார்யம்என்பது மற்ருெருகார்யத்துடன் அன்வயிக்காமலேயே, தானே ஸ்வார்த்தத்தை தெரிவிக்கும் என்று சொல்லப்படும் பக்ஷத்தில், ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். அதஞல் எவ்விததோஷத்திற்கும் இடமில்லாமல் 'இதரான் விதே சப்தசக்தி:' என்று சொல்வதே பொருந்தும்.

**346. அவதாரிகை :**

அப்படியாஞல் க்ரியான்விதேசக்தி: என்று சொல்லாமல் சித்தான் விதேசக்தி : என்று சொல்லலாமே? என்ருல், அதுவும் முடியாது.

**ச்லோகம் :**

सिद्धान्वितं यदि लिङादिपदानि कार्यं ब्रूयुर्विनश्यति तदा नियमस्त्वदीयः ।
यो वर्णितः सकलमेव पदं स्वमर्थं कार्यान्वितं वदति नान्यदिति स्वशास्त्रे ॥

**ச்லோகார்த்தம் :** லிஙாதி பதங்கள் சித்தான்விதமான கார்யத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமாஞல், உன்னுடைய நியமத்திற்கு பங்கம் ஏற்படுகிறது. ஏனெனில் உங்கள் சாஸ்திரத்தில் எல்லாபதங்களும் தன் அர்த்தத்தை கார்யான் விதமாகவே போதிக்கின்றது என்ற நியமம் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** இதுவரை எல்லாபதங்களும் கார்யத்துடன் அன்வயித்த தன் அர்த்தத்தையே தெரிவிக்கும் என்று உன்னுல் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் சித்தான் விதே சக்தி: என்று சொல்லப்படுமானுல் உன்சாஸ்திரநியமத்திற்கு பங்கம் ஏற்படும்.

**347. அவதாரிகை :**

பதங்கள் தன் அர்த்தத்தை தெரிவிக்கின்ற விஷயத்தில் அந்தபதங்களுக்கு எதனுல் அர்த்த சக்தி ஏற்படுகிறது என்பதை தெரிவிக்க லகுவான ஒரு முறை இருக்கின்ற போது, இவ்வளவு சிரமப்பட்டு அதிகமாக ஒருமுறையை கல்பிக்க வேண்டிய அவஸ்யமில்லே என்ற நியமத்தை அனுசரித்து, மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

योग्येतरान्वितनिमित्तकशब्दशक्तिव्युत्पत्तिरेव यदि संभवभागिनी स्यात् ।
आश्रीयते किमिति कार्यसमन्वितेऽर्थे शब्दस्य शक्तिरसदर्थविशेषणेन ॥

**ச்லோகார்த்தம் :** சப்தசக்தியானது, யோக்யமான மற்றெரு பதத்தில் அன்விதமாக இருக்கிறது என்பதே பொருத்தமாக இருக்கின்றது. அதனுல் கார்யான்விதே சப்தசக்தி: என்று வ்யர்த்தமான விசேஷணத்தின் மூலம் ஏன் தெரிவிக்கவேண்டும்?

**வ்யாக்யானம் :** காரகபதமானுலும், க்ரியாபதமானுலும், ஒன்றுடன் ஒன்று அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய யோக்யமுள்ளதாக இருக்கவேண்டுமென்ற நியமம் ஸம்பவிக்கின்ற போது, வேறு விதமாக அர்த்தம் சொல்லப்பட வேண்டிய காரணம் ஏதுமில்லே. இந்தவிதம் அர்த்தம் செய்யப்படுவதால், க்ரியாபதம், காரகபதம் என்ற இரண்டுமே பொருந்துகிறது. அதனுல் க்ரியான் விதே சப்தசக்தி: என்று சொல்ல வேண்டிய அவஸ்யமே இல்லே.

**பூர்வ :** யோக்ய இதரான் விதேசக்தி: என்று உங்களால் சொல்லப்படுவது இருக்கட்டும். ஆனுல் சித்தத்திற்கு கார்யத்துடனும், கார்யத்திற்கு சித்தத்துடனும் அன்வயம் சொல்லப்பட்ட போதிலும், எப்படி இருந்தாலும் கார்யத்துடன் அன்வயிக்கவேண்டும் என்று சொல்லப்படும் என்னுடைய பக்ஷத்தில் என்ன தோஷம் இருக்கிறது?

**சித்தா :** க்ரியான்விதே சப்த சக்தி என்பதை உன்னுல் நிரூபிக்க முடியாதபோது, உன்னுடையநியமத்திற்கு ஹானி இல்லேயென்று எப்படிச் சொல்வது? அதனுல் யோக்ய இதரான் விதே சக்தி என்ற சொல்வதே பொருந்தும்: மேலும் சித்தமான அர்த்தத்தில் சப்த சக்தி இல்லேயென்று நிச்சயமானுல் தான், சித்தமான அர்த்தத்துடன் அன்வயமாகும் பதம் க்ரியாபதமாகத்தான் இருக்க வேண்டுமென்று சொல்லலாம். ஆனுல் அவ்விதம் சித்தமான அர்த்தத்தில் சப்தசக்தி இல்லேயென்று சித்தம் செய்யப்படவில்லேயே? அதேபோல் பதங்கள் க்ரியான் விதமாக இருந்தால் தான் சப்தசக்தி என்பதும் தீர்மானிக்கப்படவில்லே. ஆகவே கார்யான் விதே சப்தசக்தி: என்று சொல்லப்படுவது வ்யர்த்தமே. ஆகவே கார்யான் விதே சக்தி என்றே, அல்லது சித்தான்விதேசக்தி: என்றே சொல்லப்படவேண்டிய அவஸ்யமில்லே. யோக்ய இதரான் விதே சக்தி: என்று சொல்லப்படுமானுல் இரண்டும் பொருந்தும். அவ்விதம் இன்றி கார்யான் விதே சக்தி: என்று சொல்லப்படுமானுல் க்ரியாபதத்துடன் மற்றெருக்ரியாபதம் சேர்க்கமுடியாது. உதாரணமாக, 'ஸ்வர்க்ககாமோயஜேத ' என்ற வாக்யத்திலுள்ள 'யஜேத' என்றக்ரியாபதத்துடன் 'ஸ்வர்க்ககாம:' என்ற பதம் சேராமல் எப்படி 'யஜேத' பதம் எதனுடன் சேர்ந்து தன் அர்த்தத்தை போதிக்க முடியும்? ஆகவே, யோக்ய இதரான் விதேசப்தசக்தி: என்றே சொல்லவேண்டும்.

**348. அவதாரிகை :**

யோக்ய இதரான் விதேசப்தசக்தி: என்று கூட சொல்லவேண்டிய அவஸ்யமில்லே. அன்விதேசக்தி: என்று சொன்னுலே போறுமானது என்று சொல்லமுடியாது. உதாரணமாக

'காமானய' என்ற சப்தத்தைக் கேட்டவுடன், அந்த சப்தத்தை கேட்பவனுக்கு முதலில் எதுக்ரியாபதம்? எது சித்தபதம் என்று தெரியாததால், (யோக்ய இதர அன்வயம் என்று விவேசனம் செய்து அறிய முடியாததால்? இவ்வித நியமும் சொல்வது பொருந்தாது.

**ச்லோகம் :**

यत्राविशेषितनिमित्तकताविरोधे किंचिन्निवारकमुदीक्षितमस्तु तत्र ।
किंचिद्विशेषणविशिष्टमभीष्टशक्तेः वस्तप्रयोजकमिदं पूनरत्र नास्ति ॥

**ச்லோகார்த்தம் :** கார்யான்விதம் என்ற விசேஷணம் இல்லாத விஷயங்களில் சப்தசக்தியைக்கொண்டு சொல்லப்படுகின்றபோது விரோதம் இருக்குமானுல், விசேஷ ணங்களுடன் கூடிய விஷயத்தில் சப்தசக்தியை சொல்லவேண்டும். ஆனுல் இங்கு விரோதம் ஏதும் அறியப்படவில்லை. (கார்யான்விதம் என்ற விசேஷணம் தேவைஇல்லை).

**வ்யாக்யானம் :** ஒரு வாக்யத்திலுள்ள பதங்களில் எது சித்தமானவஸ்துவை தெரிவிக்கும், எதுக்ரியையை போதிக்கின்றபதம் என்பது அறியப்படாததால், இரண் டையும் விவேனம் செய்து தெரிந்து கொள்வதற்கு பாதகம் ஏற்படுகிறது. இந்த விதம் பொதுவாக பதங்களின் அர்த்தம் இன்னதென்றே அறியப்படாமல் இருக்கின்றபோது பதங்களுக்கு க்ரியான் விதே சக்தி: என்று எப்படிச் சொல்லமுடியும்? உதாரணமாக, 'காமானய' என்ற வாக்யம் பசுவைக் கொண்டுவா என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று முதலில் தெரிந்திருக்கமுடியாது. அதனுல் இந்த வாக்யத்தைக் கேட்டவுடன் எதுக்ரியாபதம்? எது காரகபதம்? என்பதை அறிந்து கொள்ளமுடியாது. அதன் பிறகு இந்த வாக்யத்தைக் கேட்டமத்திமவ்ருத்தனுடைய செய்கையைப்பார்த்து, இந்த வாக்யத்தைக் கேட்டவுடன்தான் இந்த செயலை செய்கின்ருன் என்பதால், இவனுடையப்ரவ்ருத்திக்குகாரணம் அந்த வாக்யத்திலிருந்து ஏற்பட்ட 'ஞானம்தான்' என்று முதலில் அனுமானிக்கிருன். ஆனுல் இதில் எதுக்ரியாபதம்? எது காரகபதம் என்று அறிந்துகொள்ள முடியவில்லை. அதன் பிறகு 'காம்நய' என்ற வாக்யப்ரயோகம் செய்கின்றபோது, மத்திமவ்ருத்தனின் செய்கையைப்பார்த்து, அந்த பதங்களின் மாற்றத்தை அறிந்து அந்தந்த பதங்களுக்கு அர்த்தத்தை விசேஷமாக அறிந்து கொள்கிருன். ஆகவே க்ரியாபதம் காரகபதத்துடனும், காரகபதம் க்ரியா பதத்துடனும் அன்வயித்தே தன் அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லாமல் க்ரியான்விதே சப்தசக்தி: என்று சொல்வது சரியல்ல. மேலும் க்ரியாபதம் இருந்தால்தான் அர்த்த போதகமாகும் என்று சொல்வதற்கு முடியாது. க்ரியாபதம் இல்லாமலேயே காரகபதங்கள் எல்லாம் அன்வயிக்கக் கூடிய யோக்யமுள்ளதாக இருந்தால் அந்தவாக்யமும் அர்த்த போதமாகலாம். அதனுல் யோக்ய இதரான்விதே ஸ்வார்த்தத்தில் சப்தசக்தி; என்று சொல்லவேண்டுமேயன்றி க்ரியான் விதே சக்தி: என்று விசேஷநியமம் சொல்லமுடியாது. யோக்ய இதரான்விதே சக்தி என்று எவ்வித விசேஷமும் இன்றிசொல்லப்படுமானுல் அதில் சிலவாக்யம் கார்யத்தையும் போதிக்கலாம் சிலவாக்யம் சித்த வஸ்துவையும் போதிக்கலாம் என்று கிடைக்கும். க்ரியான்விதமாக இருந்தால்தான் அர்த்த போதகமாகும் என்று சொல்வதற்கு காரணம் ஏதுமில்லை.

கேவலம் ஒவ்வொருபதமும் தனித்தனியாக அதன் அர்த்தத்தை தெரிவிக்கிறது என்று சொல்லலாமே? என்ருல், அவ்விதமும் சொல்லமுடியாது. ஏனெனில் ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள் ஒன்றுடன் ஒன்று அன்வயிக்கவேண்டும். எதனுடன்

அன்வயம் ஏற்படமுடியுமோ அந்தபதத்துடன் அன்வயம் ஏற்பட்டால்தான் வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படும். ஆகவே, அன்விதார்த்தே சப்தசக்தி : என்று சொல்வதைக்காட்டிலும் 'யோக்யஇதரான்விதேசப்த சக்தி:' என்று சொல்வதே மிக்க பொருத்தமாக இருக்கும். அதனுல் கார்யம் என்பதை அன்வயத்திற்கு ப்ரதியோகியாக சேர்த்துச் சொல்லப்படுவது சரியல்ல.

**349. அவதாரிகை :**

கார்யான்விதேசப்த சக்தி: என்று சொல்லப்படுவதால் எவிதமான ப்ரயோஜனமும் கிடையாது. அதனுல் அவ்விதம் சொல்லவேண்டிய அவஸ்யமுமில்லே.

**ச்லோகம் :**

कार्यान्वयान्वयिनि वस्तुनि शब्दशक्तिरित्युच्यते यदि तदापि समानमेतत् ।
अन्वीयमानवचनत्वमतोपपत्तौ कार्यान्वयान्वयिविशेषणगीर्वृथेति ॥

**ச்லோகார்த்தம் :** சப்தசக்தியென்பது கார்யத்தில் அன்வயிக்கின்றபதங்களில் அன்விதமாக இருக்கின்றது என்று சொன்னுலும் அதேதோஷம்தான் ஏற்படுகிறது. யோக்யமான மற்றெருபதத்தில் அன்விதமாக இருந்து அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்ற மதமானது பொருத்தமாக இருக்கின்றபோது கார்யான்வயான்வயி என்ற விசேஷணம் அனர்த்தகம்.

**வ்யாக்யானம் :** ஒரு வாக்யத்திலுள்ள பதங்கள் ஒன்றுடன் ஒன்று ஸம்பந்தப்படுவதற்குயோக்யமாக இருந்து அந்த பதங்களுக்கு ஸம்பந்தம் ஏற்படுமானுல் அந்தவாக்யம் அர்த்தத்தை போதிக்கக் கூடிய சக்தி உடையதாக இருக்கிறது. அதனுல் அந்தவாக்யத்திலுள்ள எல்லா பதங்களுமே அததன் அர்த்தத்தை தெரிவிக்கின்றதால், க்ரியாபதம்சேர்ந்தால்தான் அர்த்த போதகம் ஆகும் என்ற விசேஷணம் ஏன்சொல்லவேண்டும்? அவ்விதம் சொல்லவேண்டிய அவஸ்யமும் ஏதுமில்லே. மேலும் க்ரியாபதம் என்பது எந்தபதத்துடன் அன்வயித்து அர்த்த போதமாகிறது என்று சொல்வதற்குமுடியாது. க்ரியாபதம் மற்றெருக்ரியாபதத்துடன் அன்வயித்து அர்த்தபோதமாகிறது என்று சொல்லப்படுமானுல் கர்மகர்த்ருவிரோதம் ஏற்படும். அதாவது ஒரே வஸ்து விசேஷணமாகவும் விசேஷ்யமாகவும் இருக்கிறது என்று சொல்லப்படுவது போலாகும். ஆகவே எவ்விதப்ரயோஜனமுமில்லாமல் க்ரியான்வயான்விதே சப்தசக்தி : என்று விசேஷணம் சொல்லப்படுவது கௌரவதோஷம். ஆகவே 'இதரான்விதே சப்த சக்தி:' என்று சொல்லப்படுவதே எவ்வித தோஷமுமின்றி பொருந்துகின்றது. உதாரணமாக 'அக்னி' என்ருலே உஸ்ணஸ்வபாவமுள்ள வஸ்து என்பது லோகப்ரசித்தம். அவ்விதம் இருக்கின்றபோது உஷ்ணமான அக்னி என்று விசேஷணம் சொல்ல வேண்டிய அவஸ்யம் என்ன? உஷ்ணமில்லாத அக்னி என்பது இருக்குமானுல் அதிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காக விசேஷணம் சொல்லலாம். ஆகவே பதம் (சப்தம்) என்பதில் ஸ்வபாவமாகவே அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய சக்தி இருக்கின்றதால் க்ரியான் விதம் என்ரே கார்யான் விதம் என்ரே காரகான்விதம் என்ரே விசேஷணம் எதுவும் சொல்லப்படவேண்டிய அவஸ்யமே இல்லே. அதனுல் சித்தான்விதமானபதமே சப்தார்த்த சக்திக்கு காரணம் என்ரே அல்லது க்ரியான்

விதமான பதம்தான் காரணம் என்றோ அல்லது க்ரியான்விதமான பதம்தான் காரணம் என்றோ நியமம் சொல்லப்படுவது அனர்த்தகம்.

**350. அவதாரிகை :**

அவரவர்களின் சாஸ்திரத்தில், அவரவர்களால் சொல்லப்படும் நியமம் சரியாகவே இருக்கலாம் என்ற ந்யாயம் இருந்தபோதிலும், க்ரியையுடன் அன்வியிக்கின்ற காரகபதத்திற்கே, அர்த்தத்தை போதிக்கக் கூடியசக்தி இருக்கின்றது, அதனால் தான்க்ரியான்விதே சப்தசக்தி : என்பதே ப்ரயோஜனம் என்றே சொல்லவேண்டும் என்று சொன்னால், அதிப்ரஸங்கதோஷம் ஏற்படும்.

**ச்லோகம் :**

वक्तृज्ञानविवक्षयोरपि भवेच्छब्दार्थता तावके पक्षे शब्दमनुप्रतीतिरुभयोरस्त्येव यस्मात्तयोः ।
यद्यच्छब्दमनुप्रतीतिपदवीमारोहदुत्प्रेक्ष्यते तत्तद्वाच्यमिति स्थितौ न हि तयोः शब्दार्थतावर्जनम् ॥

**ச்லோகார்த்தம் :** சப்தப்ரயோகம் செய்கின்றபோது, வக்தாவின் ஞானமும் விவக்ஷையும் அறியப்படுவதால், உங்கள் பக்ஷத்தில் வக்தாவின் ஞானமும் விவக்ஷையும்கூட சப்தார்த்தம் என்று சொல்லநேரிடும். எந்த சப்தப்ரயோகத்தினால், எந்த ஞானம் ஏற்படுகிறதோ அவையெல்லாமே சப்தார்த்தம் என்று சொல்லப்படுவதால், வக்தாவின் ஞானமும் விவக்ஷையும் சப்தார்த்தம் என்று உங்களால் சொல்லாமல் இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ஏதோ சில வாக்யங்கள் கார்யான்விதமாக இருக்கிறது என்பதற்காக கார்யான்விதே சப்தசக்தி: என்று சொல்லப்படுவது சரியல்ல. கார்யான்விதமே சப்தசக்திக்கு நியாமகம் என்று சொல்லப்படுமானால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். லோகத்தில் ஒருவன் வாக்யப்ரயோகம் செய்கின்றபோது, வக்தாவிற்கு ஏற்படும் ஞானமும், அவனுடைய விவக்ஷையும் கூட அந்த வாக்யத்திலிருந்து அறியப்படுகின்றதால், அவைகளையும் சப்தார்த்தம் என்றே சொல்லநேரிடும். ஏனெனில், வாக்யப்ரயோகம் செய்கின்றபோதே, வக்தாவிற்கு இந்த விஷயத்தைப்பற்றிய ஞானம் ஏற்பட்டு, அதை தெரிவிக்கவேண்டுமென்ற இச்சையும் ஏற்பட்டபிறகே இந்தவாக்யத்தை ப்ரயோகம் செய்கின்றான் என்று சொல்லநேரிடும். இந்தவிதம் சப்தப்ரயோகத்தினால் எவையெல்லாம் அறியப்படுகிறதோ, அவையெல்லாம் சப்தத்தின் வாக்யார்த்தம் என்று சொல்லமுடியாது ஏனெனில் வக்தாவின் ஞானமும், விவக்ஷையும் சப்த ப்ரயோகம் செய்கின்றபோதே நீங்கிவிடும். அதேபோல், கார்யான்விதேசக்தி : என்பதும், அந்த க்ரியையை போதிக்கின்ற சப்த ப்ரயோகம் முடிந்தவுடனேயே நீங்கிவிடும். ஆகையால் இவைகளை சப்தார்த்தம் என்று சொல்வதற்கு முடியாது.

**351. அவதாரிகை :**

வக்தாவின் ஞானமும், விவக்ஷையும் கூட சப்தார்த்தம் என்று சொல்வதால் ஏற்படும் தோஷம் என்ன? என்றால்.

**ச்லோகம் :**

वेदे वक्तुरभावतस्तदुभयं नास्तीह यस्मादतः शब्दो वाचकशक्तिमुज्झति निजां तत्र स्ववाच्यं विना ।
वाच्ये वाचकशक्तिमिच्छति भवान्नान्यत्र तत्र श्रुतेरप्रामाण्यमिति स्फुटं तव भवेद्बुद्धेरनुत्पत्तितः ॥

**ச்லோகார்த்தம் :** வேதசப்தங்களில் வக்தா என்பதே இருக்க முடியாது. அதனுல் வக்தாவின் ஞானம், விவக்ஷை என்பதும் இருக்கமுடியாது. அதனுல் வேதசப்தம், என்பது, தன்னுடைய சப்தார்த்தம் என்பது இல்லாததால், வாசகசக்தியை இழந்து விடுகிறது. ஏனெனில் தன்னுடைய வாச்யத்தில்தான் வாசக சக்தி இருக்கின்றதேயன்றி வேறெதிலும் இல்லையென்று உங்களால் சொல்லப்படுவதால், வேதசப்தங்களிலிருந்து ஞானம் ஏற்பட முடியாதாகையால் வேதம் அப்ரமாணம் என்று சொல்லவேண்டும் என்ருகிறது.

**வ்யாக்யானம் :** லௌகிக சப்தங்களில், வக்தாவின் ஞானம் விவக்ஷை என்பதெல்லாம் சப்தார்த்தம் என்று ஒத்துக்கொண்டபோதிலும், வேதங்களில் வக்தா என்பதே கிடையாதாகையால், வக்தாவின் ஞானம், விவக்ஷை என்பதெல்லாம் சப்தார்த்தம் என்று சொல்லமுடியாது. அதனுல் வாசகக்தி என்பதே வேதங்களுக்கு சொல்லமுடியாத நிலை ஏற்படுகிறது.

**பூர்வ :** ப்ரஹ்மமென்பது வாச்யார்த்தமல்ல என்ருலும்கூட சப்தத்திலிருந்து அறியப்படுவதாக எப்படிச் சொல்லப்படுகிறதோ அதுபோல் வேதசப்தமென்பதும், வக்தாவின் ஞானம், விவக்ஷை என்பதெல்லாம் அவாச்யமாக இருந்தாலும் வேதசப்தம் அர்த்த போதகமாகிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது வேதவாக்யங்களில் வக்தாவின் ஞானம், விவக்ஷை இல்லாவிட்டாலும்கூட, அந்த வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படலாம் என்று சொல்லப்படுமானுல், லௌகிக வாக்யங்களில் மட்டும் அவ்விதம் ஏற்படாது என்று சொல்வதற்கு தனிப்பட்ட காரணம் என்ன இருக்கிறது? மேலும், க்ரியான்விதமான சித்த (பதம்)ம், சித்தான்விதமான க்ரியை (க்ரியாபதம்) வக்தாவின் விவக்ஷை, ஞானம், எல்லாம் சேர்ந்தே வாச்யார்த்தமாக ஆகிறது என்று சொல்லப்படுமானுல், ஞானம், விவக்ஷை என்பதெல்லாம், சப்தப்ரயோகம் செய்கின்றபோதே நீங்கி விடுகிறது என்று சொல்லப்படுவதால், அந்த இரண்டையும் விட்டுவிட்டு, மற்றவைகளுக்கு மட்டும் சப்தவாச்யத்வம் சொல்வதற்கு காரணம் கிடையாது. ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் வாச்யார்த்தமே ஸம்பவிக்கமுடியாததால், லக்ஷணையாக அர்த்தம் சொல்லப்படுகிறது. அதுபோல் சப்தசக்தியை விசாரிக்கின்ற இடத்தில் சப்தவாச்யமாக என்ன அறியப்படுகிறது? என்று விசாரிக்கவேண்டியதாக இருக்கிறது. இவ்விதம் விசாரிக்கநேரிடும்போது அவாச்யமான ப்ரஹ்ம போதத்தைப்பற்றிய விஷயத்தை இங்கு உதாகரணம் சொல்வதற்கு முடியாது. வாச்யத்தில் வாசகசப்தம் இருக்கவேண்டும் என்றும், அதில் ஞானம், விவக்ஷை என்பதெல்லாம், அறியப்பட்டபோதிலும், அவைகளை விட்டுவிட்டு க்ரியான் விதே சப்தசக்தி: என்று வாசக சப்தமாக ஒத்துக்கொள்ளப் படவேண்டுமென்றும் உன்னுடைய சித்தாந்தத்தில் சொல்லப்படுவதால், ப்ரஹ்ம ஸ்வரூப போதத்தைப்பற்றிய விஷயத்தை த்ருஷ்டாந்தமாக சொல்லப்படுவது பொருந்தாது. ப்ரஹ்மமென்பது வாச்யமே இல்லை. ஆகவே, உன்னுடைய ப்ரதிஞ்ஞைக்கு ஹானி ஏற்படுகிறது.

**352. அவதாரிகை :**

கார்யான்விதே சப்தசக்தி: என்று சொல்லப்படும் உன்னுடைய பக்ஷத்தில் வேதத்தில் விதிக்கப்படும் விசிஷ்ட விதி என்பதே சித்திக்கமுடியாது.

**ச்லோகம் :**

न च सोमयागपदयोरुभयोरपरस्परेण घटतेऽत्र युजा ।
पदजातमेतदखिलं हि निजं विषयं समर्पयति कार्ययुतम् ॥

**ச்லோகார்த்தம் :** இந்த பக்ஷத்தில், ஸோமபதத்திற்கும், யாகபதத்திற்கும் பரஸ்பரஸம்பந்தம் என்பது ஏற்படமுடியாது, ஏனெனில் எல்லாபதங்களும் கார்யான்விதமான விஷயத்தையே தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** எந்த பதமாக இருந்தாலும் க்ரியையுடன் அன்வயித்தே அதன் அர்த்தத்தை தெரிவிக்கவேண்டும் என்று உன்னுல் சொல்லப்படும் பக்ஷத்தில் வேதத்தில் விதிக்கப்படும் விசிஷ்ட விதி என்பதே சித்திக்கமுடியாது. ஏனெனில் 'ஸோமேன யஜேத' என்ற வாக்யமானது விசிஷ்ட விதியை போதிக்கின்றது. அதாவது 'ஸோமலதையினுல் யாகத்தைச் செய்து இஷ்டம் ஸம்பாதயேத்' என்று அந்த வாக்யம் தெரிவிக்கின்றது. 'ஸோமேனயாக:' என்பதிலுள்ள ஸோமபதத்திற்கும் யாக பதத்திற்கும் அன்வயம் சொல்லப்பட்டால்தான் பரஸ்பர அன்வயத்தினுல் விசிஷ்டவிதி என்பது சித்திக்கும் அவ்விதமின்றி ஸோமபதமும் யாக பதமும் க்ரியையுடன் அன்வயித்தே அர்த்தத்தை போதிக்கவேண்டும் என்று சொல்லப்படுமானுல் ஸோமலதை என்ற கரணம், யாகம் என்ற கார்யம் இந்த இரண்டிற்கும் பரஸ்பரம் கரண க்ரியாபாவேன ஸம்பந்தம் (அன்வயம்) சொல்லமுடியாது. ஸோமேன இஷ்டம் பாவயேத் யாகேன இஷ்டம் பாவயேத் என்று அர்த்தம் கிடைக்குமேயன்றி ஸோமத்தினுல் யாகத்தைச் செய்து இஷ்டத்தை ஸம்பாதிக்கவேண்டும் என்ற அர்த்தம் கிடைக்காது. ஆகவே பதங்களுக்கெல்லாம் க்ரியாபதத்துடன்தான் அன்வயம் ஏற்படும் என்று சொல்வது சரியல்ல. வாக்யம் என்றுல், அதிலுள்ள காரக பதங்களும் கிரியாபதமும் ஒன்றுக்கொன்று அன்வயித்து அர்த்தபோதமாகிறது என்று சொல்லாவிடில் ஏகவாக்யார்த்தம் என்பதும் சித்திக்காது, விசிஷ்டவாக்யார்த்தம் என்பதும் சித்திக்காது.

**353. அவதாரிகை :**

இவ்விதம் கார்யான்விதே ஸ்வார்த்தபோதம்சப்தசக்தி: என்று சொல்லப்படுவதில் விசிஷ்டவிதி ஸம்பவிக்காது என்பது மட்டுமல்ல, கார்யான்வயான்வயம் என்ற பக்ஷத்திலும் இந்த தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

कार्यान्वयान्वयिनि शक्तिरिति स्थितौ च कार्यान्वयान्वितमतिर्न परस्परेण ।
संबन्धितामतिरतश्च न सिद्धिमेति सर्वो विशिष्टविधिरित्यपि दूषणं वः ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்தின் சக்தியானது, கார்யான்வயத்தில் அன்வயிக்கின்ற விஷயத்தில் தான் இருக்கின்றது என்று சொல்லப்பட்டாலும் கார்யான்வயத்தில் அன்விதமான ஞானம்தான் ஏற்படுமேயன்றி, பரஸ்பரஸம்பந்தத்தை தெரிவிக்ககூடியஞானம் ஏற்படாது. ஆகையால் விசிஷ்டவிதி என்பதே சித்திக்கமுடியாது என்ற தோஷமும் உங்களுடைய பக்ஷத்தில் ஸம்பவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'ஸோமேன யஜேத' என்ற விசிஷ்ட விதியானது க்ரியான்விதே ஸ்வார்த்தபோதகம்' என்று சொல்லப்படும் உன் பக்ஷத்தில் சித்திக்கமுடியாது என்பதை கீழே விளக்கப்பட்டது. இந்த விஷயத்தில் மேலே ஒரு ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. என்னவென்றுல், கர்மகாண்டத்தில் 'உத்பிதாயஜேத', 'சித்ரயா யஜேத', 'அக்னிஹோத்ரம் ஜுஹுயாத்', 'ஸ்யேனேன யஜேத்', என்று பலயாகங்கள் வேதத்தில் விதிக்கப்படுகிறது. இவையெல்லாம் எப்படி யாகம் என்ற க்ரியையுடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ, அதேபோல் 'ஸோமேன யஜேத' என்ற வாக்யமும் க்ரியாபதத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் 'உத்பித்' 'சித்ரா' 'அக்னிஹோத்ரம்' 'ச்யேனம்' என்பதெல்லாம், ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணத்தைக்கொண்டு, காரணப் பெயராகச் சொல்லப்படுகின்றதால், அந்த பதங்கள் க்ரியாபதத்துடன் அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிப்பதாகச் சொல்லலாம். அதாவது உத்பித் என்ற பதமானது யோகவ்யுத் பத்தியினுல் யாகத்தை தெரிவிக்கிறது. உத்பிதா என்ற யாகமானது எப்பேர்ப்பட்ட இடையூறுகள் ஏற்பட்டாலும் அவைகளை பெயர்த்து எறிந்துவிட்டு அந்த கர்மாவிற்குரிய பலத்தைக் கொடுக்கின்றது என்பதால் யோகவ்யுத்பத்தியைக்

கொண்டு அந்த கர்மாவிற்கு உத்பித் என்ற பெயர் சொல்லப்படுகிறது. இதேபோல் சித்ரயாகம் என்பது யாகத்தின் நாமா என்று சொல்லாவிடில் சித்ரா என்பது ஒரு யாகம் என்றும் யாகம் என்பது மற்றொரு க்ரியை என்றும், வாக்யம் இரண்டு விதமான யாகத்தை தெரிவிக்கிறது என்று சொல்லநேரிடும் அவ்விதம் சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஏற்படும்.

அக்னி ஹோத்ரம் என்பதும் தத்ப்ரக்ய சாஸ்திரத்திஞல் பெயரைக் கேட்க்கின்றபோதே கர்மநாமதேயம் என்று அறியப்படுகின்றது. (தத்பரக்யம் =பெயரைக் கேட்க்கின்ற போதே) 'ச்யேனேன' என்ற வாக்யத்திஞலேயே இந்த யாகம் 'ச்யேனம்' என்ற நாமத்திஞல் சொல்லப்படுகிறது என்பதை அந்த வாக்யமே தெரிவிக்கின்றது. இந்தவிதம் நான்கு காரணங்களைக் கொண்டு அவைகள் கர்ம நாமதேயமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல் 'ஸோமேன யஜேத' என்பது கர்மநாமதேயமாகச் சொல்லப்படவில்லை. ஏனெனில் முதலில் சொல்லப்பட்ட நான்கு வாக்யங்களிலும் எப்படி காரணம் சொல்லப்பட்டிருக்கின்றதோ அதுபோன்ற காரணம் 'ஸோமேன யஜேத' என்ற வாக்யத்தில் சொல்லமுடியாது என்பதால் அதை நாமபதம் என்று சொல்லமுடியாது. மேலும் 'அக்னிஹோத்ரம்' என்ற கர்மாவை விதித்த பிறகு அடுத்த வாக்யத்தில் 'தத்னேன இந்த்ரிய காம: ஜுஹுயாத்' என்று விதிக்கப்படுகிறது. அந்த இடத்தில் 'அக்னிஹோத்ரம் ஜுஹுயாத்' என்ற வாக்யத்திஞல் எந்த கர்மாவிதிக்கப்பட்டதோ அவ்விதம் ப்ராப்தமான அந்த கர்மாவை அனுவாதம் செய்து, அதில் ததி என்பதை குணமாக விதிக்கப்படுவதால், அதை குண விதி என்று சொல்லப்படுகிறது. அதுபோல், 'ஸோமேன யஜேத' என்ற வாக்யம் குணவிதி என்று சொல்லமுடியாது. (குறிப்பிட்ட ஒரு யாகத்திற்கு வேறு ஒருவாக்யத்துடன் ப்ராப்தி இருக்குமானுல், அந்த இடத்தில் த்ரவ்யம் விதிக்கப்படுமானுல் அதை குணவிதியென்று சொல்லலாம்) ஆகவே, அக்னிஹோத்ரம் என்ற கர்மாவில் ததி என்ற த்ரவ்யத்தைக் கொண்டு ஹோமம் செய்வாஞகில் இந்த்ரியங்கள் மிகவும் சக்தியுடையதாக ஆகும் என்று அந்த வாக்யம் தெரிவிக்கின்றதால் அதை குணவிதி என்று சொல்லப்படுகிறது. 'ஸோமேனயஜேத' என்ற வாக்யத்திற்கு முன்ஞல் கீழே வேறு எந்த கர்மாவும் விதிக்கப்படவில்லை. ஆகையால் 'ஸோமேன யஜேத' என்ற வாக்யம் குறிப்பிட்ட அந்த ஒரே கர்மாவைத்தான் விதிக்கின்றது என்பதால் இந்த வாக்யம் விசிஷ்டவிதி என்றே சொல்லவேண்டும். ஸோமலதை என்ற த்ரவ்யத்துடன் கூடியயாகத்திற்கு க்ரியையுடன் அன்வயம் சொல்லவேண்டுமேதவிர ஸோமபதத்திற்கும் யாகபதத்திற்கும் தனித்தனியே க்ரியையுடன் அன்வயம் சொல்லமுடியாது. ஆகவே எல்லாபதங்களும் க்ரியையுடன் அன்வயித்தே அர்த்தத்தை தெரிவிக்கவேண்டும் என்று சொல்லப்படும் உன்னுடைய பக்ஷத்தில் விசிஷ்ட விதி என்பதே சித்திக்க முடியாது.

**பூர்வ :** 'ஸோமேன யஜேத' என்ற வாக்யத்திலுள்ள இரண்டு பதங்களும் ஒன்றன்பின் ஒன்ருக உபயோகித்திருப்பதால் இரண்டும் சேர்ந்துக்ரியாபதத்துடன் அன்வயிக்கிறது என்று சொல்லலாமே?

**சித்தா :** எந்த பதமாக இருந்தாலும் அது க்ரியான்விதமாகத்தான் இருக்கவேண்டும் என்று சொல்கின்ற உன்னுடையபக்ஷத்தில், இந்த இரண்டு பதங்களில் எந்த பதம் க்ரியையுடன் அன்வயிக்கிறது என்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. அதாவது ஸோமத்தில் யாகம் விதிக்கப் படுகிறதா? யாகத்தில் ஸோமம் விதிக்கப்படுகிறதா? என்ற நிச்சயம் ஏற்படமுடியாது. மேலும் 'ஆக்னேய: யாக:' என்ற வாக்யமானது அக்னியை தேவதையாகக்கொண்ட யாகத்தை விதிக்கின்றது என்ற அர்த்தம் வேதத்திஞல்தான் அறியப்படவேண்டுமேயன்றி லோகப்ரஸித்தமில்லை. அதஞல் லோகந்யாயத்தைக் கொண்டு வேதவாக்யங்களுக்கு அர்த்தம் செய்வதென்பது சரியல்ல. ஆகவே பதங்கள் எல்லாம் க்ரியான் விதமாக இருந்தால்தான் அதன் அர்த்தத்தை போதிக்கமுடியும் என்று

சொல்லப்படுமானால் 'ஸோமேனயஜேத' என்ற விசிஷ்ட்டவிதியை போதிக்கின்ற வாக்யத்திற்கும் 'அருணைதி' குணவிசிஷ்ட்டமான வாக்யங்களுக்கும் அர்த்தம் என்பதே சித்திக்கமுடியாது. 'ஸோமேனயஜேத' என்ற வாக்யத்திலுள்ள பதங்கள் இரண்டும் ஒன்றுடன் ஒன்று அன்வயித்த பிறகே எதைக்கொண்டு அந்த யாகம் செய்யப்படவேண்டும் என்று அந்த வாக்யம் விதிக்கின்றது என்பதை அறிந்துகொள்ளவேண்டும். ஆகையால், பதங்கள் எல்லாம் க்ரியான்விதமாகத்தான் இருக்கவேண்டுமென்ற உன்னுடைய கொள்கையில் விசிஷ்ட்டவிதி என்பதோ குணவிதி என்பதோ சித்திக்கமுடியாது. அதுமட்டுமல்ல, ஸோமேன்யாக: யாகேன இஷ்ட்டம் ப்ரவயேத்' என்று சொல்லப்படவேண்டியதாக இருப்பதால் வாக்யபேதம் என்ற தோஷமும் ஸம்பவிக்கின்றது.

**354. அவதாரிகை :**

**பூர்வ :** இந்தவிதம் 'க்ரியான்விதே' (சப்த) சக்தி:' என்று சொல்லப்படும் எங்களுடைய பக்ஷத்தில், விசிஷ்ட்டவிதியே ஸம்பவிக்காது என்றும் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கும் என்றும் சொல்லப்படுமானால் 'யோக்யஇதரான்விதே சப்தசக்தி: என்று சொல்கின்ற உங்களுடைய பக்ஷத்திலும் இந்த தோஷம் ஸம்பவிக்கின்றதே? அதாவது முதலில் ஸோமத்தைக் கொண்டு யாகத்தைச் செய்யவேண்டும் என்றும், யாகத்தினால் இஷ்ட்டம் ஸம்பாதயேத் என்றும் அர்த்தம் அறியப்படுவதால் வாக்யபேதம் என்ற தோஷம் உங்கள் பக்ஷத்திலும் ஸம்ப விக்கின்றதே?

**சித்தா :** எங்களுடைய சித்தாந்தத்தில் எவ்வித தோஷமும் ஸம்பவிக்கமுடியாது. ஏனெனில் ஒருவாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாம் அதற்குயோக்மான இதர பதங்களுடன் அன்வயம் ஏற்பட்டு அதன்மூலம் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. ஆகவே, ஸோமலதையைக் கொண்டு, யாக்த்தைச்செய்து இஷ்ட்டத்தை அடையவேண்டும் என்று வாக்யத்திலிருந்து அர்த்தம் அறியப்படுகிறது. 'ஸோமகரணகேன யாகேன் இஷ்ட்டம் ஸாதயேத்' என்ற அர்த்தம் இடைக்கின்றதால் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**ச்லோகம் :**

योग्येतरान्वितपदार्थगतैव शब्दशक्तिः स्थिता यदि पुनर्घटते तदाऽयम् ।
सर्वो विशिष्टविधिरस्तु तथैव तस्मात् युक्तं तदेतरदितीदमपीह भाष्यम् ॥

**ச்லோகார்த்தம் :** சப்தத்தின் சக்தியானது, யோக்யமான இதரபதார்த்தத்தில் அன்வயிக்கின்ற விஷயத்தில் இருக்கின்றது என்று சொல்லப்படுமானால், விசிஷ்ட்டவிதி என்பது பொருந்துகின்றது. ஆகையால், எல்லா விசிஷ்ட்டவிதிகளும் இவ்விதமே இருக்கவேண்டும் மேலும் 'யதா ஏகஸ்மாத் அபூர்வம் ததா இதரத்ததர்த்தம்" என்ற ஸ்ரபாஷ்ய வாக்யத்திற்கும் இது பொருந்துகின்றது.

**வ்யாக்யானம் :** 'ஸோமேனயஜேத' என்ற விசிஷ்ட்ட விதியை தெரிவிக்கின்ற வாக்யமானது, க்ரியான்விதே சப்தசக்தி: என்று சொல்லப்படும் பக்ஷத்தில் அர்த்தபோதம் ஏற்படமுடியாது. ஏனெனில், ஸோமம், யாகம், என்ற இரண்டுமே சித்தபதமாக இருக்கின்றதால் க்ரியான்விதம் இல்லாமல் அர்த்தம் கிரஹிக்கப்படமுடியாது. அதற்காக யாகத்திற்கும், ஸோமத்திற்கும் யோக்யதா வஸாத் கார்யான்வயம் இல்லாவிட்டாலும் அன்வயம் ஏற்படலாம் என்று சொல்லப்படுமானால், அன்விதா அபிதானம் என்ற கொள்கையை ஒப்புக்கொண்டதாக ஆகுமேயன்றி உன்னுடைய கொள்கை நிறைவேறாது. இந்த விஷயத்தில், ஸோமபதம் யாகபதம் லிங் என்ற பதங்களுக்கு எப்படி அன்வயம் சொல்லப்படுகிறது என்று விசாரிக்கின்றபோது 'ஸோமேன இஷ்ட்டம் பாவயேத்' என்று அன்வயம் சொல்லப்படுகிறதா? அல்லது யாகேன இஷ்ட்டம் பாவயேத் என்று அன்வயம் சொல்லப்படுகிறதா? அல்லது எல்லா பதங்களும் சேர்ந்து இஷ்ட்டம் பாவயேத் என்பதில் அன்வயிக்கின்றதா? என்று

விசாரித்து யாகேன இஷ்ட்டம் பாவயேத் என்று முதலில் ப்ரதானமான, யாகபதம்தான் அன்வயிக்கிறதென்றும் அதன்பிறகு (ஸோமபதம் என்பது கரணமானதால்) அப்ரதானமான ஸோமபதம் அன்வயிக்கிறது என்றும் ஸபரபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஸோமபதம் யாகபதத்துடனும், யாகபதம் க்ரியையுடனும் அன்வயிக்கிறதென்றே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் சொல்லாமல் எல்லா பதங்களும் க்ரியையுடன் அன்வயிப்பதாகச் சொல்லப்படுமானால் ஸோமேன இஷ்ட்டம் பாவயேத் என்பதால் அதன் பலனாக ஒரு அபூர்வமும் யாகேன இஷ்ட்டம் பாவயேத் என்பதனால் ஒரு அபூர்வமும் ஒரே யாக கார்யத்தில் இரண்டு அபூர்வங்களை கல்ப்பிக்க வேண்டியதாக இருக்கும். ஆகையால் ஏதாவதொன்றில் இஷ்ட்டம் பாவயேத் என்று பலம் சொல்லப்படுமானால், இரண்டு பதங்களில் எது ப்ரதானமோ அந்த பதத்துடன் முதலில் அன்வயம் சொல்வதே பொருந்தும் என்று ஸபர ஸ்வாமிகளாலும் சொல்லப்படுகிறது. இந்த கல்பனைதான் லகுவானது. இவ்விதம் சொல்லாமல் க்ரியான்விதேசப்தசக்தி: என்று சொல்லப்படுமானால் ஸபரஸ்வாமிகளின் பாஷ்யத்திற்கு உன்னுடைய சித்தாந்தம் விரோதமென்றாகிறது. ஆகவே, வாக்யத்திலுள்ள பதங்கள் அன்வய் யோக்யமுள்ளதாக இருக்கவேண்டுமென்பதுதான் அர்த்தபோதம் ஏற்படுவதற்கு முக்யகாரணம். எது அபூர்வத்திற்கு ஸாதனமோ அதுவே ப்ரதானம், மற்ற பதங்கள் அப்ரதானம் என்றே சொல்லவேண்டும். முதலில் அபூர்வ ஸாதனமான யாகம் என்பது லிங்ர்த்தத்தில் அன்வயித்து அதன் பிறகுயாக பதத்துடன் ஸோமபதம் அன்வயிக்கின்றது என்று ஸபரபாஷ்யத்தில் சொல்லப்படுகிறது. ஸோம கரணக: யாக: (ஸோமம்யாக கரணம்) என்று அன்வயம் ஏற்படுவதால் விசிஷ்ட்ட விதி ஸம்பவிக்கின்றது. இந்த விதம் ஸோமம் என்பதும் யாகம் என்பதும் இரண்டுமே அபூர்வத்திற்காக என்பது சித்திக்கின்றதால் இதில் எவ்வித தோஷமும் கிடையாது. இதனால் கார்யம் ப்ரதானம் என்று சொல்வதற்கு தேவையே இல்லை. யோக்ய இதர அன்வயே பதார்த்தசக்தி: என்று, சொல்லப்படுவதால் எங்களுடைய பக்ஷத்தில் எவ்வித தோஷத்திற்கும் இடமில்லை. மேலும் இந்த வாக்யத்தில் யாகம் என்ற க்ரியைதான் ப்ரதானமாக இருக்கின்றதால் யாகம் என்ற பதம் க்ரியையுடன் அன்வயிக்கிறது என்று சொல்லப் படுகிறது. இதனால் எவ்விதஹானியுமில்லை.

கேவல க்ரியையிலிருந்தோ கேவல நாமாவிலிருந்தோ அபூர்வம் ஏற்படாது. யாகத்தைச் செய்வதால் அபூர்வம் ஏற்படுகிறது 'பலவத்ஸன்னிதௌ அபலம் ததங்கம்' என்று சொல்லப் படுவதால், பலவத்தான யாகத்துடன், ஸோமம் என்பது அங்கமாக அன்வயிக்கின்றது என்று ஸபர பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல் கார்யம் என்பது இல்லாமலேயே பதங்களுக்குள் அன்வயம் ஏற்படலாம். எந்த இடத்தில் க்ரியை என்பது கர்த்தவ்யமாக விதிக்கப்படுகிறதோ அந்த இடத்தில் க்ரியாபதம் ஸேஷியாக (ப்ரதானமாக) இருக்கலாம். அதனால் க்ரியைக்கு யாகம் அங்கம், யாகத்திற்கு ஸோமம் அங்கம் என்று சொல்லலாம். ஆனால் இந்த இடத்தில் க்ரியைக்கு ப்ராதான்யம் இருக்கிறது என்பதற்காக எல்லா இடத்திலும் இந்த நியமம் சொல்லமுடியாது.

### 355. அவதாரிகை :

லோகத்தில் எந்த வாக்யமானது, ஒருவனை கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கும்படிச் செய்கின்றதோ அந்த வாக்யமே ப்ரமாணமாகும். இவ்விதமின்றி இந்த இஷ்ட்டத்திற்கு இது ஸாதனம் என்று தெரிவிக்கின்ற வாக்யமாக இருந்தால், அதனால் யாருக்கும் ப்ரவ்ருத்தி ஏற்படாது. அதனால் ப்ரயோஜனம் ஏதுமில்லாததால், அப்பேர்ப்பட்ட வாக்யங்கள் ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. ஆகையால், லிங்லோட்தவ்ய ப்ரத்யயத்திற்கு விஷயமாகின்ற 'யஜேத' என்பது போன்ற வாக்யங்களைத்தான் ப்ரமாணம் என்று சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

शब्दः प्रवृत्तिजनको न तु बोधकश्चेन्नैतत्प्रवर्तकधियो जनकत्वहेतोः ।
इष्टाभ्युपायमतिजन्मनिमित्तभूतः शब्दः प्रवर्तयति नैष पुनः पुमांसम् ॥

**ச்லோகார்த்தம் :** சப்தம் என்பது ப்ரவர்த்தகம்தான் என்றும், போதகமில்லையென்றும் சொல்லப்படுவது சரியல்ல, ஏனெனில் சப்தம் ப்ரவர்த்தகஞானத்தை உண்டுபண்ணுகிறது. இஷ்ட ஸாதனஞானம் உண்டாவதற்கு நிமித்தமாக இருப்பதன்மூலம் சப்தம் புருஷனை ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றது.

**வ்யாக்யானம் :** 'கார்யான் விதே சப்தசக்தி:' என்று சொல்லப்படுகின்றபக்ஷம் சரியல்லவென்றும், 'யோக்ய இதரான்விதே சப்த சக்தி:' என்று சொல்லப்படவேண்டும் என்றும் இதுவரை சொல்லப்பட்டது. இதேவிஷயத்தில் மேலும் ஏற்படும் சிலஸந்தேகங்களை மேலே விசாரிக்கப்படுகிறது. ஒருவாக்யத்தைக் கேட்டவுடன் அந்த வாக்யார்த்தஞானம் ஏற்படுகிறது. அதன் பிறகே அந்த கார்யத்தை செய்வதற்கு ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. அதனால் சப்தம் என்பது ப்ரவர்த்தகஞான ஜனகத்வம் என்றே சொல்லவேண்டும். ஆகவே கார்யான்விதே சப்த சக்தி: என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி யோக்ய இதரான்விதே சப்தசக்தி: என்று சொல்லப்படுமானால் அது கார்யம், அகார்யம் என்ற இரண்டிற்கும் ஸாதாரணமாக (பொதுவாக) இருக்கின்றதால் சப்தசக்தி ப்ரவ்ருத்திஞான ஜனகத்வம் என்று குறிப்பிட்டுச்சொல்லப்படுவது பாதிக்கப்படுகின்றது. ஆகவே வாக்யம் ப்ரமாணமாக ஆகவேண்டும் என்றால் ப்ரவ்ருத்திஞானஜனகத்வம் என்றுதான் சொல்லப்படவேண்டும் (இவ்விதம் ச்லோகத்தின் முதல் பாகத்தில் பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது).

**சித்தா :** சப்தத்தினால் அர்த்த ஞானம் ஏற்படுகிறது என்று சொல்வது தான் சரி. ஆனால் அந்த அர்த்த ஞானம் புருஷனை கார்யத்தில் ப்ரவர்த்திக்கும்படிச் செய்கிறது என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் வாக்யத்தைக்கேட்டவர்கள் எல்லோருமே அந்த கார்யத்தை செய்வதற்கு ப்ரவ்ருத்திப்பார்கள் என்று சொல்லமுடியுமானால்தான் சப்தத்தினால் ஏற்பட்ட ஞானம் ப்ரவ்ருத்திஜனகத்வம் என்று சொல்லமுடியும். அவ்விதம் கார்யத்தைப்பற்றிய ஞானம் சப்தத்திலிருந்து ஏற்பட்டபோதிலும், இந்த கார்யத்தை செய்வதால் என் இஷ்டம் சித்திக்கும் என்று இஷ்ட ஸாதனதாஞானம் ஏற்பட்டால்தான் அந்த கார்யத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படும். அது மட்டுமல்ல அந்த ஸாதனங்களைக்கொண்டு அந்த கார்யத்தை செய்யக்கூடிய புத்திஸாமர்த்யம், தனதிகள், த்ருடகாத்ரம்(பலம்) முதலானவைகள் இருந்தால்தான் அந்த கார்யத்தைச்செய்வதற்கு இச்சை ஏற்படும். இந்தவிதம் ஏற்படும் இச்சையே ப்ரவ்ருத்திக்கு காரணமாகிறது. ஆகையால் வாக்யத்திலிருந்து 'இது இஷ்ட ஸாதனம் என்ற ஞானமும், க்ருதிஸாத்யத்வம்' என்ற இரண்டும் இருந்தால்தான், அந்த கார்யத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படும் தனக்கு இஷ்டமாக இல்லாத கார்யத்திலோ அல்லது தன்னால் செய்யமுடியாத கார்யத்திலோ எவருக்கும் ப்ரவ்ருத்திஏற்படாது. அதனால் வாக்யத்தை கேட்டபோதிலும், உதாசீனமாகவே இருப்பார்கள் என்பதால் கார்யான்விதே சப்தசக்தி: என்று சொல்லப்படும் பக்ஷம் சரியல்ல. அதனால் இதரான் விதேசப்த சக்தி: என்று சொல்வதே சரியானதாகும்.

**356. அவதாரிகை :**

இந்த விஷயம் பற்றிய விசாரத்தை இத்துடன் ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது—:

**ச்லோகம் :**

तस्मादसंगतमिदं यदुशन्ति केचित् कार्यान्वितार्थविषयैव तु शब्दशक्तिः ।
तत्र प्रयोगमभिवीक्ष्य तथा प्रतीतिः कल्प्येति वर्णितनिजेष्टविघातहेतोः ॥

**ச்லோகார்த்தம் :** வ்ருத்தவிவகாரப்ரயோகத்தைப் பார்த்து, அதிலிருந்து ஏற்படும் ஞானம் அனுமானம் செய்யப்படுகிறது. அதனுல் கார்யான் விதமான விஷயத்தில்தான் சக்தி இருப்பதாக சிலர் சொல்கிருர்கள. இது சரியல்ல ஏனெனில், கீழே சொல்லப்பட்டமுறையில் அவர்களுக்கு இஷ்டமான விசிஷ்ட விதி என்பதே ஸம்பவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** பதங்களினுல் ஏற்படும் சப்த சக்தி என்பது கார்யான்விதமாகத்தான் இருக்கவேண்டுமென்று சொல்வதற்கு உரிய காரணம் ஏதுமில்லை, அதற்குரிய ப்ரமாணமும் இல்லை. அதுமட்டுமல்ல கார்யான்விதே சப்த சக்தி: என்று சொல்லப்படுமானுல், அந்த பக்ஷத்தில் அவர்களுக்கு இஷ்டமான விசிஷ்ட விதி என்பதே ஸம்பவிக்கமுடியாது. விசிஷ்டவிதி என்பது பூர்வமீமாம்ஸா சாஸ்திர விஷயமாக இருக்கின்றதால், விசிஷ்டவிதியை ஒத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அதனுல் கார்யான்விதே சப்த சக்தி: என்று சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** 'காமாயை' என்ற வாக்யம், கார்யான்விதமாகவே இருக்கின்றது. அத்துடன் ப்ரமாணமாகவும் இருக்கின்றதே?

**சித்தா :** சப்த சக்தி என்பது பலவிதமாக இருக்கின்றது அதனுல் கார்யான் விதமாகத்தான் சப்தசக்தி இருக்கிறது என்று சொல்லப்படுவது சரியல்ல. அவ்விதம் சொல்லப்படுமானுல் விசிஷ்டவிதியும் சித்திக்காது, கார்யம் என்று எதைச்சொல்லப்படுகிறதோ அதுவும் சித்திக்காது. அதனுல் கார்யான்விதே சப்த சக்தி: என்று சொல்லப்படுவது சரியல்ல. இந்த விஷயம் மேலேயும் விசாரிக்கப்படுகின்றதால் இங்கு அதிகம் விஸ்தரிக்கப்படவில்லை. வேறு மார்க்கமின்றி (அன்யதா அனுப பத்தியினுல்) கார்யம் என்பது கற்பிக்கப்படுகிறது. அதில் இந்த வேத பதங்களுக்கு சக்தி என்று சொல்லும்பக்ஷத்தில், மானுந்தரவிஷயம் என்றே சொல்லவேண்டுமானதால் அபூர்வம் வேதவாக்யம் என்று சொல்லமுடியாது. அஞ்ஞாதமான அர்த்தத்தை வேதம் தெரிவிக்கின்றது என்று சொல்லமுடியாததால், வேதங்களிலுள்ள லிஙாதி பதங்களுக்கு கார்யம் என்பது வாச்யமாக ஆகிறது என்று சொல்லமுடியாது. மேலும் 'ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்க்ககாமோயஜேத' என்ற வாக்யம் வேதத்தினுல் சொல்லப்படுகிறது. (விதிக்கப்படுகிறது) இதில் லிஙாதி பதங்களுக்கு 'கார்யம்' என்பது அர்த்தம் என்று சொல்லப்படுமானுல் முதலில் கார்யம் என்ருல் என்ன? என்பது அறியப்படவேண்டும். அதன் பிறகு அந்த கார்யம் என்பது எந்த பதத்துடன் அன்வயிக்கின்றது என்று அறியவேண்டும். ஸவர்க்கபதத்துடன் அன்வயமா? அல்லது காம: என்ற பதத்துடன் அன்வயமா? அல்லது கடபடாதி பதங்களுடன் அன்வயமா? என்று அறியமுடியாது. கடாதிகள் என்ற பதம் வாக்யத்திலேயேஇல்லை. த்ரவ்யமோ குணமோ, கார்யத்துடன் அன்வயிக்காது. அதனுல் யாகம்தான் அன்வயிக்கமுடியும் என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில் கார்யம் என்னவென்று சித்தித்தால்தான் பதங்களுக்கு அன்வயம் சொல்லமுடியும், பதங்களின் அர்த்தம் சித்தித்தால் தான் கார்யத்திற்கு அன்வயம் சொல்லமுடியும் என்று அன்யோன்ய ஆச்ரயதோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே வேதங்களிலிருந்தே லிஙாதிகளுக்கு நியோகம் என்ற அர்த்தம் அறியப்படுவதாகவும் வேறு ப்ரமாணுந்தரங்களிலிருந்து அறியப்படவில்லை என்றும் சொல்லப்படுமானுல் லிஙாதிகளுக்கு சக்தி க்ரஹம் ஏற்படுகிறதென்றே சொல்லமுடியாது. அதற்காக மானுந்தரத்தினுல் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானுல் அந்த விஷயம் அபூர்வம் என்று சொல்லமுடியாதாகையால் அஞ்ஞாதார்த்த போதகம் வேதம் என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே, கார்யான்விதமான அர்த்தத்தில்தான் பதங்களுக்கு சக்தி என்று சொல்வது பொருந்தாது; ப்ரமாணம் என்ருல் என்ன? என்று அறிந்தவர்கள் இவ்விதவாதம் செய்யமாட்டார்கள்.

**357. அவதாரிகை :**

சப்தங்களுக்கு, கார்யம் என்ற ஒரு அர்த்தம் சித்திக்காததால், கார்யான்விதே சப்த சக்தி என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே கார்யம் என்பது என்ன? என்று சித்தித்தால்தான் அந்த கார்யத்துடன் சப்தம் அன்வயிக்கிறது என்று சொல்லமுடியும்.

**ச்லோகம் :**

वेदैकगम्यमिति कार्यमभीष्टमस्मिन् शक्तिग्रहोऽपि न यदस्य समञ्जसोऽयम् ।
शक्तिग्रहं च परिहृत्य न बोधकत्वं शब्दस्य शक्यमिह वक्तुमशङ्कितेन ॥

**ச்லோகார்த்தம் :** கார்யம் என்பது வேதத்திலிருந்தே அறியப்படுவதாக ப்ராபாகரர்களால் சொல்லப்படுகிறது. ஆனால், 'லிங்' பதத்திலிருந்து, கார்ய விஷயத்தில் சக்தி க்ரஹம் ஏற்படுகிறது என்ற விஷயம் பொருந்தாது. சக்திக்ரஹம் ஏற்படாமலேயே சப்தம் போதகமாகிறது என்று வித்வான்களால் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** கார்யான்விதமான அர்த்தத்தில்தான் பதங்களுக்கு சக்திக்ரஹம் என்று சொல்லப்படுமானால் கார்யம் என்பது எந்த வாக்யத்தில் இருக்கிறதோ அந்த வாக்யத்தில்தான் பதங்களுக்கு சக்திக்ரஹம் ஏற்படுகிறதென்று சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் வேதங்களில் சொல்லப்படும் வாக்யங்களில் உள்ள பதங்களிலிருந்து நியோகம் என்ற கார்யம் அறியப்படுவதாகச்சொல்லமுடியாது. ஏனெனில் 'கார்யம்' என்பது 'வேதங்களிலிருந்தே அறியப்பட வேண்டுமென்றால், மற்ற ப்ரமாணங்களிலிருந்து அறியப்படமுடியாது என்று சொல்லப் பட்டதாகஆகிறது. இவ்விதம் மானாந்தர ப்ரஸித்தமாக இல்லையென்றால் சப்தத்திலிருந்து சக்தி க்ரஹம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே மானாந்தர ப்ரஸித்தமாக இல்லாத விஷயத்தில், வேதத்தில் இருக்கின்றபதங்களுக்கு சக்திக்ரஹம் எப்படி ஏற்படமுடியும்?

**பூர்வ :** 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற வாக்யமானது ஸ்வர்க்கபலத்தில் இச்சையுடையவனை இந்த யாகத்தைச் செய்' என்று ஏவுகின்றது. இவ்விதம் அந்த வாக்யம் விதிக்கவில்லையானால் அவன் அந்த கார்யத்தைச் செய்யமாட்டான். அதனால் 'இதைச் செய்' என்ற நியோகம் சித்திக்க வேண்டுமானால் லிஙாதிகளுக்கு கார்யம் என்பதே அர்த்தமென்று சொல்லவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுமானால் அர்த்தாபத்தியினால் கார்யம் என்பது சித்திக்கிறது என்று சொல்லவேண்டுமேயன்றி வேதவாக்யங்களிலிருந்தே கார்யம் அறியப்படுவதாகச் சொல்ல முடியாது.

**358. அவதாரிகை :**

**பூர்வ :** வேதங்களினால் தெரிவிக்கப்படும் கார்யம் என்ற லிஙாதிபதங்களுக்கு சக்தி க்ரஹம் ஏற்படாது என்பதால் வேதத்தினாலும் கார்யம் என்பது சித்திக்காது என்று தோஷம் சொல்லப்படுமானால் நியோகம் என்பது எப்படி மானாந்தர அவிஷயமோ அதுபோல் வேதாந்தத்தினால் தெரிவிக்கப்படும் ப்ரஹ்மவிஷயம் என்பதும் மானாந்தர அவிஷயம் என்பதால் இந்த தோஷம் உங்கள் பக்ஷத்திலும் சித்திக்கின்றதே?

**ச்லோகம் :**

शश्वत्स्वयंप्रभमलुप्तचिदात्मभूतं विष्णोःपरं पदममुत्र तु शब्दशक्तिः ।
शक्या ग्रहीतुमतिबुद्धिमनस्यपीति शास्त्रप्रमाणकमदः प्रवदन्ति सन्तः ॥

**ச்லோகார்த்தம் :** விஷ்ணுவின் பதம் என்ற ப்ரஹ்மமானது, ஸதாஸ்வயம் ப்ரகாசமாகவும் நித்ய சைதன்யஸ்வரூபமாகவும் இருக்கின்றது. ஆகவே மனஸ் புத்தி என்பவைகளுக்கும் அதீதமாக இருக்கின்றது என்றாலும் இந்த ப்ரஹ்ம விஷயத்தில் சக்தி க்ரஹம் ஏற்படமுடியும். அதனால் ப்ரஹ்ம விஷயத்தில் சாஸ்திரமே ப்ரமாணம் என்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ப்ரமாணாந்தரத்திற்கு விஷயமாக இல்லாத நியோகம் என்ற கார்யத்திற்கு சக்தி க்ரஹம் ஏற்படாது என்று சொல்லப்பட்டதற்காக ப்ரஹ்மமென்பதும் மானாந்தர அகோசரமானதால் சக்திக்ரஹம் ஏற்படமுடியாது என்று சொல்வதற்கு முடியாது. ஸங்கல்ப விகல்பாத்மகமான மனஸிற்கும் புத்திக்கும் விஷயமாகாது என்றும், இவைகளுக்கெல்லாம் அதீதம் என்றும் சொல்லப்பட்டபோதிலும் சப்தசக்தியினால் அந்த விஷ்ணோ: பரமம் பதம் என்று லக்ஷணம் சொல்லப்படும் ப்ரஹ்மமானது அறியப்படுகிறது என்றே சொல்லப்படுகிறது. அதாவது ப்ரஹ்ம ஸ்வரூபமென்பது ஸ்வயம்ப்ரகாசம் என்பதால், ஸ்வயமே சித்தமாகிறதால் சப்தத்தினால் சக்தி க்ரஹம் ஏற்படலாம். உண்மையில் ஸர்வவிகாரங்களுக்கும் அதீதமான ஸ்வரூபந்தான். ஆனால் ஸ்வயம் ப்ரகாசமாய் ப்ரத்யக் ஸ்வரூபமாக ஸதா அஹமஹம் என்று நித்யஸ்புரணாத்மகமாக இருக்கின்றதால், ப்ரஹ்மசப்தம் ஆத்மசப்தம் இவைகளுக்கு சக்திக்ரஹம் ஏற்படலாம். இந்த ஸ்வரூபத்தின் உண்மையான தத்வம் என்ன என்பது வேதாந்தத்தினால்தான் அறியப்பட வேண்டுமென்பதால் வேதமே இதில் ப்ரமாணமென்று வித்வான்களால் (சாதுக்களால்) தெரிவிக்கப்படுகிறது. அவாங்மனோகோசரமான விஷயத்தை சப்தத்தினால் எப்படித் தெரிவிக்க முடியும் என்றால், முதலில் ப்ரஹ்மாதி சப்தமானது ஸபளத்தையே போதிக்கின்றது என்றும் அதன்பிறகு பாகத்யாக லக்ஷணையினால் கேவல சைதன்யம் போதிக்கப்படுகிறது என்றும் சொல்லப்படுவதால் ப்ரஹ்மமென்பது மானாந்தர வேத்யமில்லையென்றும் வேதாந்த வேத்யம் என்றும் சொல்லப்படுவதில் எவ்வித தோஷமுமில்லை. ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபமான விஷயத்தில் சப்தத்திற்கு சக்திக்ரஹம் ஏற்படலாம் என்பதாலும் எங்கள் பக்ஷத்தில் எவ்வித தோஷமும் கிடையாது. ஆனால் அதுபோல் ஜடமான நியோகம் என்பதில் சொல்வதற்குமுடியாது. மானாந்தரத்தினால்தான் நியோகம் என்பதே சித்திக்க வேண்டியிருப்பதால் நியோகம் அபூர்வம் என்று சொல்லமுடியாது. அபூர்வம் என்பது மானாந்தர அஸித்தம் என்பதால், சக்திக்ரஹமே ஏற்பட முடியாது. ஆகவே உன்னால் சொல்லப்படும் கார்யம் என்பதும் வேதவேத்யம் என்றோ, மானாந்தர வேத்யம் என்றோ, சொல்லமுடியாதாகையால் கார்யம் என்பது என்னவென்ற சித்திக்கமுடியாது.

**359, 360. அவதாரிகை :**

இதுவரை கார்யம் என்று ஒன்று இருப்பதாகச் சொல்லப்பட்டதை ஒப்புக்கொண்டு, அதில் தோஷம் சொல்லப்பட்டதுடன் கார்யம் என்பதே ஒன்று இருக்கமுடியாது என்றும் விளக்கப்பட்டது. இப்போது கார்யான்விதமாக இல்லாத, சித்தார்த்தத்தை போதிக்கின்றவாக்யமாக இருந்தாலும் முன்னால் சொல்லப்பட்டபடி (வ்யுத்பத்தி) சக்தி க்ரஹம் ஏற்படலாம் என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** जातः सुतः सकलवंशविवर्धनस्ते विप्रेति वाक्यसमनन्तरमस्य बुद्धिः ।
श्रोतुर्मुखाकृतिवशेन तु पुत्रजन्मवस्तुन्यवश्यमनुमीयत एव बालैः ॥
भूतार्थनिष्ठवचनादपि शब्दशक्तिः शक्या ग्रहीतुमुदितेन यथाऽनभिज्ञैः ।
तत्र प्रवर्तकनिवर्तकवाक्यमूलशक्तिग्रहैकनियमस्य न हेतुरस्ति ॥

**ச்லோகார்த்தம் :** "ஹே! விப்ர! வம்ஸ வ்ருத்தியை ஏற்படுத்துகின்ற ஒரு புத்ரன் உனக்கு பிறந்திருக்கிறான்." என்ற வாக்ய ப்ரயோகம் செய்தபிறகு புத்ரஜன்ம விஷயத்தைப்பற்றிய ஞானம் பிதாவிற்கு ஏற்பட்டிருக்கிறது என்று ச்ரோதாவின் முகமலர்ச்சிலிருந்து அஞ்ஞர்கள் அறிந்துகொள்கிறார்கள். கீழே சொல்லப்பட்டமுறையில் பூதார்த்த வாக்யங்களிலிருந்தும் சக்தி க்ரஹம் (ஏற்படலாம்) ஸம்பவிக்கமுடியும். ஆகவே ப்ரவர்த்தக நிவர்த்தக வாக்யங்களின் மூலமாகவே சக்திக்ரஹம் ஏற்படுவதாக நியமம் சொல்லப்படுவதற்கு காரணம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** இதுவரை, கார்யத்தை போதிக்கின்ற வாக்யத்திற்கே சக்திக்ரஹம் ஏற்படும் என்று சொல்வது சரியல்ல என்று தெரிவித்து கார்யபரமாக இல்லாத வாக்யத்திலிருந்து சக்திக்ரஹம்

ஏற்படலாம் என்று சொல்லப்பட்டது. இப்போது சித்தார்த்தத்தை போதிக்கின்றவாக்யமாக இருந்தாலும் சக்திக்ரஹம் ஏற்படலாம் என்பதை உதாரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது. தேசாந்தரத்திலிருந்து வந்த ஒரு புருஷன், ஒரு வீட்டின் முகப்பில் (திண்ணையில்) வந்து, உட்கார்ந்திருக்கின்றான். அவனுக்கு அந்த தேசத்தின் பாஷை தெரியாது. அந்த ஸமயம் ஒரு தூதுவன், அந்த வீட்டிற்கு வந்து அந்த வீட்டின் யஜமானனை அழைத்து 'புத்ரஸ்தேஜாத:' என்று சொல்கிறான். இவ்விதம் புத்ரன் பிறந்திருக்கிறான் என்ற சப்தத்தைக்கேட்டவுடன் பிதாவான அந்த புருஷனின் முகம் மகிழ்ச்சியினால் மலருகின்றதைப் பார்க்கின்ற, தேசாந்திரத்திலிருந்து வந்த புருஷனானவன் பாஷை தெரியாமலிருந்தும், அந்த வீட்டின் யஜமானனுக்கு மகிழ்ச்சியைதரக்கூடிய அவனுக்கு இஷ்டமான ஒன்றை இந்த தூதுவன் தெரிவித்திருக்கிறான் என்று, செய்தியை கேட்டவுடனுடைய முகமலர்ச்சியைக் கொண்டு அனுமானிக்கின்றான். எப்படி எனக்கு இஷ்டமானது கிடைக்கின்றபோது நான் மகிழ்ச்சி அடைகிறேனே, அதுபோல் அவனுக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்பதை தன்னுடைய அனுபவத்தைக்கொண்டும் இந்த வாக்யமே மகிழ்ச்சியை கொடுத்திருக்கிறது என்று அன்வயவ்யதிரேகத்தைக் கொண்டு அறிகிறான். ஆனால் முக மலர்ச்சியைக் கொண்டு என்ன இஷ்டத்தை அடைந்திருக்கிறான் என்பதை அவனால் அறியமுடியவில்லை. ஆனால் அந்த தூதுவன் புத்ரனின் பாதங்களை குங்குமத்தில் ஒற்றி அதை வெள்ளை வஸ்திரத்தில் பதித்துக்கொண்டுவந்து அந்த யஜமானனிடம் காண்பித்ததைப்பார்த்ததும் 'புத்ரன் பிறந்திருக்கிறான்' என்ற செய்திதான் அவனுடைய மகிழ்ச்சிக்கு காரணம் என்பதை தேசாந்திரி தீர்மானிக்கின்றான். ஆகவே க்ரியாபதம் இல்லாத வாக்யங்களும் சித்தமான அர்த்தத்தை போதிக்கின்றவாக்யமாக இருந்தாலும் அர்த்தபோதமாகலாம் என்பதால் சப்தத்திலிருந்து சக்தி க்ரஹம் ஏற்படுவதாகவே சொல்லவேண்டும்.

**361. அவதாரிகை :**

**பூர்வ :** சித்த வஸ்துவை போதிக்கின்றவாக்யமும் அர்த்தபோதத்தை உண்டுபண்ணலாம் என்று சொல்லப்பட்டபோதிலும் வம்ஸவ்ருத்திக்கு காரணமான 'புத்ரன் பிறந்திருக்கிறான்' என்ற வாக்யத்திலுள்ள பதங்களுக்கு விசேஷமான அர்த்தம் என்ன? என்பதை எப்படி அறிந்து கொள்ளமுடியும்? ஆகவே ப்ரவர்த்தகவாக்யமாக இருந்தால்தான் ஆவாப, உத்வாபங்களின் மூலமாக அந்தந்த பதங்களுக்கு என்ன அர்த்தம் என்பதை விசேஷமாக அறிந்துகொள்ளமுடியும். (இந்த சங்கைக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது).

**ச்லோகம் :**

सामान्यतः प्रथममेष पदार्थपिण्डो वाच्योऽस्य वाचकमिदं पदपिण्डरूपम् ।
इत्याकलय्य पुनरेष विशेषतोऽपि शब्दार्थसंगतिमवैति जनस्तटस्थः ॥

**ச்லோகார்த்தம் :** இந்த பதார்த்த ஸமுதாயமே வாச்யம் என்றும் இந்த பதஸமுதாயம் வாசகம் என்றும் முதலில் ஸாமான்யமாக அறிந்து, அதன்பிறகு விசேஷமாகவும், பதார்த்த ஸங்கதியை தடஸ்த்தமாக இருக்கின்ற புருஷன் அறிந்துகொள்கிறான்.

**வ்யாக்யானம் :** வாக்யம் என்பது ஆகாங்க்ஷா, யோக்யதா, ஸன்னிதி, என்பவைகளுடன் கூடியதாக இருக்கின்றதால் முதலில் ஸாமான்யமாக வாக்யத்திலிருந்து அர்த்தம் அறியப்படுகிறது. அதன் பிறகு வாக்யங்களை நன்றாக கவனிக்கின்றபோது புத்ரன் என்ற பதத்தை எடுத்துவிட்டு 'வத்ஸ' என்ற பதத்தையும் 'ஜாத' என்ற பதத்தை எடுத்துவிட்டு ஆகத: என்ற பதத்தையும் சேர்க்கின்றதைக் கொண்டு 'புத்ரஸ்தே ஜாத:' என்ற வாக்யத்திற்கும் விசேஷமான அர்த்தத்தை அறிந்துகொள்ளலாம். இவ்விதம் பதங்களை மாற்றிச்சொல்வதால் மட்டுமே வாக்யத்திற்கு அர்த்தம் அறியப்படுகிறது என்ற

சொல்லவேண்டுமென்பதில்லை அபிநயத்திலும் கூடவாக்யார்த்தம் க்ரஹிக்கப்படலாம் ஆகவே க்ரியா பதத்துடன்கூடினவாக்யம்தான் அர்த்தபோதத்தை உண்டு பண்ணுகிறது என்று சொல்வதற்குமுடியாது.

**362. அவதாரிகை :**

**சித்தா :** மேலும், கார்யான்வய புத்தி இல்லாமலேயே வாக்யங்களிலிருந்து அர்த்தம்போதம் ஏற்படலாம். ஒரு வாக்யத்திலுள்ள சில பதங்களுக்கு அர்த்தம் ப்ரஸித்தமாக இருப்பதைக்கொண்டே மற்ற பதங்களுக்கும் அர்த்தம் க்ரஹிக்கப்படலாம்.

**ச்லோகம் :**

काष्ठैःस्थाल्यां पचति विविधैरोदनं पूर्णिकेति श्रुत्वा बालः सपदि मनुते काष्ठशब्दस्य शक्तिम् ।
दृष्ट्वा तस्मिन्पचनकरणं प्रज्वलत्काष्ठजातं न्यायोपायादितरवचसां शक्तिषु प्राक्प्रवीणः ॥

**ச்லோகார்த்தம் :** பூர்ணிமா என்பவள் விறகு கட்டைகளைக்கொண்டு பாத்திரத்தில் சமையல் செய்கிறாள்' என்ற வாக்யத்தை கேட்டவுடன் வாக்யத்திலுள்ள மற்ற பதங்களின் சக்தியை அறிந்திருக்கின்ற பாலகன், சமைப்பதற்கு உபயோகமாக இருக்கின்ற, எரிந்து கொண்டிருக்கின்ற விறகைப்பார்த்து பாரிஸேஷந்யாயத்தினால் காஷ்ட்ட சப்தத்தின் சக்தியை (அர்த்தத்தை) அறிந்து கொள்கிறான்.

**வ்யாக்யானம் :** பூர்ணிமா என்ற சமையல்காரி விறகைக்கொண்டு சமையல் செய்கிறாள் என்று ஒருவன் வாக்யப்ரயோகம் செய்கிறான். அந்த வாக்யத்தை கேட்ட பாலகன் பூர்ணிமா என்பவளை முன்னதாகவே அறிந்திருக்கிறான். அதேபோல் சமையல் என்ற பதத்திற்கும் அர்த்தம் அறிந்திருக்கிறான், ஆனால் விறகு என்ற பதத்திற்குமட்டும் அர்த்தம் அறியப் படவில்லை அதனால் அங்கு இருக்கின்ற பதார்த்தங்களில் புதிதாக இருக்கின்ற பதார்த்தம் எதுவோ அதுவே காஷ்ட்டம் என்ற பதத்திற்கு அர்த்தம் என்பதை அறிந்துகொள்கிறான். இதே போல் 'மலர்ந்திருக்கின்ற தாம்ரைப்பூவின் மத்தியில் உள்ள மதுவை மதுகரம் குடிக்கின்றது' என்ற வாக்யத்தை கேட்கின்றபோது, மற்ற பதங்களின் அர்த்தத்தை அறிந்திருப்பதால் மதுகரம் என்ற பதத்திற்கு வண்டு என்று அர்த்தம் என்பதை அறிந்து கொள்வதற்குமுடியும். ஆகவே க்ரியாபதம் இருந்தால்தான் வாக்யம் அர்த்தபோதமாகும் என்று சொல்வது முற்றிலும் பொருந்தாது.

**363. அவதாரிகை :**

கார்யம் என்ற பதத்திற்கே அர்த்தம் என்ன? என்று தீர்மானிக்கமுடியாதபோது 'கார்யம்' என்பதே லிஙர்த்தம் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே, எந்த ப்ரமாணமும் இல்லாமல் நியோகம் என்று ஒன்று இருப்பதாக சொல்லப்படுவது ஒத்துக்கொள்ளக்கூடியதுஅல்ல. ஆகவே, நியோகம் என்பது லிஙர்த்தம் என்று (லிஙாதிகளுக்கு நியோகம் வாச்யம்) எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :** न च किमपि नः कार्यं नामप्रमाणपथानुगं यदिह तु पुनर्लिङ्लोडादेरुपैष्यति वाच्यताम् ।
न खलु तदितो धात्वर्थादेः पृथग्व्यवसीयते व्रजतु तदिह श्रेयोहेतुर्लिङादिपदार्थताम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரமாணத்தினால் கார்யம் என்ற ஒரு விஷயமே அறியப்படவில்லை. அவ்விதம் ப்ரமாணத்தினால் அறியப்படும் விஷயமாக இருக்குமானால் அது லிங்லோட் தவ்ய ப்ரத்யயத்திற்கு விஷயமாக இருக்கலாம். கார்யம் என்பது தாத்வர்த்தம் முதலானவை களிலிருந்து வேறாக நிர்ணயிக்கப்படுவதில்லை. அதனால் ச்ரேயஸ், ஸாதனத்வமே லிஙாதிகளுக்கு அர்த்தம் என்று ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரை, கார்யம் என்று சொல்லப்படுவது எதுவோ, அது பதார்த்த வ்யுதபத்திக்கு காரணம் என்று சொல்லப்பட்டது சரியல்ல என்று நிர்ணயம் செய்யப்பட்டது. இப்போது 'கார்யம்' என்பதே ஒன்று ப்ராமாணிகமாக இருப்பதாகச்சொல்லமுடியாது. அதனால் கார்யம் என்பதற்கு சக்தி க்ரஹம் ஏற்படுவதாக சொல்வதற்கும் முடியாது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**பூர்வ :** 'ஸ்வர்க்க காமோயஜேத' என்ற வாக்யத்திலிருக்கின்ற 'யஜேத' என்ற பதத்திலிருந்து ஏதோ ஒன்று செய்யப்படவேண்டும் என்று கர்த்தவ்யமாக அறியப்படுகிறது. இவ் விதம் அறியப்படும் கர்த்தவ்யதா அம்ஸமே கார்யம் என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், ததி, கோதோஹனம், என்பதுபோன்ற பதங்களின் தாத்வர்த்தங்கள் சாத்யமாக இருக்கின்றதால் அவைகள் கர்த்தவ்யதாரூபமாக அறியப்படவில்லே. யாகத்திற்கு இவைகள் சாதனம் என்று தான் அறியப்படுகிறதேயன்றி நியோகம் என்று வேருக எதுவும் அறியப்படவில்லே.

**பூர்வ :** 'பசதி' என்று சொல்லப்படுகின்றபோது கார்யம் என்ற அர்த்தம் அறியப்படவில்லே என்ருலும் 'பசேத்' என்று சொல்கின்றபோது அதில், க்ரியை என்பது அறியப்படுகிறது. ஆகவே, 'பசதி' என்பதில் தாத்வர்த்தம் இருக்கிறது. ஆனுல் கர்த்தவ்யதை அறியப்படவில்லே. ஆனுல் பசேத் என்னும்போது தாத்வர்த்தத்தை தவிர வேருக கார்யம் என்பது அறியப்படுகிறது. அதையே கார்யமென்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லப்படுவதும் சரியல்ல. கார்யம் என்று சொல்லப்படுவது எதுவோ அதுப்ராமாணிகமில்லே என்பதால் பதார்த்தங்களிலிருந்து கார்யம் என்பது ஒன்று அறியப்படுவதாகச் சொல்வது சரியல்ல. 'ஆனயதி' என்று சொல்கின்றபோது கர்த்தவ்யாகாரம் அறியப்படவில்லேயாருலும் **'ஆனயேத்'** என்று சொல்லப்படுகின்றபோது கர்த்தவ்யாகாரம் அறியப்படுகிறதே? என்று ஆக்ஷேபம் செய்வது பொருந்தாது. 'யஜேத' என்பது க்ரியாபதம், ததி கோதோஹனம் என்பதெல்லாம் காரகபதங்கள்.

கட்டில் வாங்கவேண்டும் த்ருப்தி செய்யவேண்டும் என்று சொல்லப்படுகின்ற இடத்தில் கட்டில் என்பது சித்தவஸ்துவானதால் அது கார்யமல்ல. அதேபோல் த்ருப்தி என்பது மனதில் ஏற்படும் ஸந்தோஷமானதால் அதுவும் கார்யமல்ல. ஆனுல் இரண்டு இடங்களிலும் கர்த்தவ்யமாக அறியப்பட்டபோதிலும் அவைகள் கார்யமல்ல. அதேபோல் யஜேத என்னுமிடத்தில் யாகம் என்பதையன்றி, கார்யம் என்று ப்ரஸித்தமாக எதுவும் அறியப்படவில்லே. கர்த்தவ்யம் என்பது க்ரியா ரூபமாகத்தான் இருக்கவேண்டுமென்று சொல்வது சரியல்ல. சித்தமான வஸ்துவையே போதிக்கின்றபோதும் சாத்யம்போல வாக்யப்ரயோகம் செய்யப்படுகிறது என்ருலும் அதை சாத்யமென்று சொல்லமுடியாது. மயா இதம் கர்த்தவ்யம்' என்று சொல்லுமிடத்தில், அந்த விஷயம் கர்த்தவ்யாகாரமாக இல்லாமல் இருக்குமானுல், இந்த இடத்திலும் க்ரியையைத்தான் போதிக்கின்றது என்று சொல்லமுடியாது. 'யாகம்' என்ற பதம் மட்டும் ப்ரயோகம் செய்கின்றபோது அது இஷ்ட்ட சாதனமா? இல்லேயா? என்று அறிந்துகொள்வதற்கு முடியாது. ஆகையால் 'யஜேத' என்று சொல்லப்படுகின்றபோது இஷ்ட்டசாதனதா காரேண யாகம் லிஙர்திகளுக்கு அர்த்தமாக ஆகின்றது, ஆகவே 'யஜேத ஸ்வர்க்க காம:' என்பது முதலான வாக்யங்களினுல் யாகாதி க்ரியா ரூபமான அர்த்தமானது ச்ரேயஸ்ஸுக்கு சாதனமாக இருக்கின்றதால் இஷ்ட்டசாதனதாகாரேண லிஙாதிசப்தவாச்யமாகிறது ஆகவே கர்த்தவ்யம்போல் அறியப்பட்டபோதிலும், இஷ்ட்டசாதனதாகாரேண லிஙாதி சப்தவாச்யமாகிறது

என்றே சொல்லவேண்டும் 'யஜேத' என்பதற்கு பதில் 'யஜதி' என்று சொல்லப்படுமானல் லடாதிபதவாச்யமாகிறது. இந்தவிதம் சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**364. அவதாரிகை :**

லிஙாதிகளுக்கு அர்த்தமாகச் சொல்லப்படும் கர்த்தவ்யதை என்பதுதான், 'இஷ்ட ஸாதனதா ஞானம்' என்று சொல்வதற்கு காரணம் என்னவென்ருல், ப்ரவ்ருத்திக்கு இஷ்டஸாதனதாஞானமே காரணம் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது.

**ச்லோகம் :** न खलु जगति श्रेयोहेतुप्रतीत्युदयादृते पुरुषवचनात् क्वापि प्राज्ञः प्रवर्तितुमर्हति ।
पुरुषवचनाच्छ्रेयो हेतुप्रतीत्युदयात्पुनः तदनुवशगो रागोत्पत्तौ ततः स हि चेष्टते ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் இது ச்ரேயஸ்ஸிற்கு ஸாதனம் என்ற ஞானம் ஏற்படாமல், அறிவாளியாக இருப்பவன், புருஷ வசனத்திஞல் மட்டும் (கார்யத்தில்) ப்ரவ்ருத்திக்கமாட்டான்; புருஷவசனத்திலிருந்து இது ச்ரேயஸ் ஸாதனம் என்ற ஞானம் ஏற்பட்டவுடன் ராக உற்பத்தியிஞல் அந்த வசனத்தை அனுசரித்து அவன் ப்ரவ்ருத்திக்கின்ருன்.

**வ்யாக்யானம் :** 'காமானய' என்று வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில் ஏவல் இருக்கின்றதால் கார்யதாஞானம் ஏற்பட்டு பசுவைக்கொண்டுவர ப்ரவ்ருத்திக்கின்ருன். அதனுல் இதம் மயாகர்த்தவ்யம் என்ற ஞானமே காரணம் என்றே சொல்லவேண்டுமேயன்றி லிஙாதிகளுக்கு ச்ரேயஸ்ஸாதனத்வ ஞானம்தான் அர்த்தம் என்று சொல்வதற்குமுடியாது.

**சித்தா :** இது சரியல்ல. கவாநயனம் என்பது இஷ்டஸாதனம் என்ற ஞானம் ஏற்பட்டால்தான் அந்தகார்யத்தில் ப்ரவ்ருத்திப்பானேயன்றி ஏவல் செய்வதற்காக ஒருவனும் ப்ரவ்ருத்திக்கமாட்டான். 'விஷத்தைச் சாப்பிடு' ('விஷம் புங்க்ஷ்வ') என்ற ஏவலைக்கேட்டவுடன் அந்தக்கார்யத்தில் எவரும் ப்ரவர்த்திப்பதில்லை என்ற வ்யதிரேகத்ருஷ்ட்டாந்தம் மூலம் முன்பே விளக்கப்பட்டது. அதேபோல் 'ஒதனம் புங்க்ஷ்வ' என்று எவரும் ஏவல் செய்யாமலேயே ராகாத் அன்னத்தை புஜிப்பதில் ப்ரவ்ருத்தி இருக்கிறது என்பதையும் அன்வய த்ருஷ்ட்டாந்தமூலம் விளக்கப்பட்டது. ஆகவே ச்ரேயஸ் ஸாதனம் என்ற ஞானம் ஏற்படுமானல் அதில் புருஷனுக்கு இச்சை ஏற்படுவதால் ராகத்திற்கு வசப்பட்டு அந்தக்கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கிருன் என்றே அறியப்படுகிறது. ஆகையால் ப்ரவ்ருத்திக்கு ஏவல் காரணம் என்று சொல்லமுடியாது. இஷ்ட ஸாதனதாஞானமே காரணம் என்றுதான் சொல்லவேண்டும்.

**365, 366. அவதாரிகை :**

ராகமே ப்ரவ்ருத்திக்கு காரணம் என்று சொல்லப்படுமானல், ராகமே லிஙர்த்தம் என்று சொல்லலாமே? என்ருல்

அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், சப்தத்திஞல் ராகம் என்பது அறியப்படவில்லை. 'இது எனக்கு ச்ரேயஸ் ஸாதனம்', என்ற ஞானம் தான் சப்தத்திஞல் ஏற்படுகிறது. ஆகவே, ராகத்திற்கு காரணமான ச்ரேயஸாதனத்வ ஞானத்தில்தான் லிஙாதிபதங்களுக்கு சக்திக்ரஹம் ஏற்படுகிறது என்றே அன்வயவ்யதிரேகத்தைக்கொண்டு அறியப்படுகிறது. ஆகவே கார்யமும் லிஙர்த்தமில்லை ராகமும் லிஙர்த்தமில்லை. இஷ்டஸாதனஞானம்தான் லிஙர்த்தம் என்று சொல்லவேண்டும்.

**ச்லோகம் :** नयनिपुणधीर्बालश्श्रेष्टां समीक्ष्य समीहितुः कृततदुचितव्याप्तिज्ञानः पुरा निज आत्मनि ।
परतनुगतं श्रेयोहेतुप्रतीत्युदयोत्थितं चरितविषये रागं तस्य प्रवर्तकमिङ्गति ।

ச்லோகம் :

प्रवर्तकोत्थाननिबन्धने ततः समीहितोपायविशेषवस्तुनि ।
गिरोऽनुमाय प्रतिपत्तिहेतुतां विशेषसिद्धौ तु समीहते पुनः ॥

**ச்லோகார்த்தம் :** ந்யாயத்தில் நிபுணனாக இருக்கின்ற ஒருவன் தனக்கு ஏற்பட்ட முன் அனுபவத்திலிருந்து, அனுமானத்திற்கு ஸாதகமாக இருக்கின்ற வ்யாப்திஞானத்தை அறிந்து கொள்கிறான். அதனால் மற்றொருவனுடைய ப்ரவ்ருத்தியைப் பார்க்கின்றபோது, ச்ரேயஸாதனம் என்ற ஞானத்திலிருந்து ஏற்பட்டராகமே அவன் ப்ரவ்ருத்திக்கு காரணம் என்று பரபுருஷனிடத்தில் இருக்கின்ற ராகத்தை கல்ப்பிக்கின்றான்.

(இவ்விதம்) ப்ரவ்ருத்தி ஏற்படுவதற்கு காரணமான ச்ரேயஸாதனத்தைப்பற்றி ஞானம் ஏற்படுவதற்கு இந்த வாக்யமே உபாயம் என்பதை அனுமானிக்கின்றான், அதன்பின் விசேஷ சப்தார்த்தஸங்கதியை தெரிந்துகொள்ள முயற்சிக்கின்றான்.

**வ்யாக்யானம் :** பாலகன் ஒருவன் மத்யமவ்ருத்தனின் சேஷ்ட்டைகளைப் பார்த்து 'இவன் இந்தக்கார்யத்தைச் செய்வதில் ப்ரவ்ருத்தி ஏற்படுவதற்கு காரணம் இதைச் செய்வதால் தனக்கு ச்ரேயஸ் ஏற்படும் என்ற ஞானம் ஏற்பட்டிருக்கவேண்டும் அதன்பிறகே இதில் ராகம் ஏற்பட்டு இந்த கார்யத்தைச் செய்வதற்கு ப்ரவ்ருத்திக்கிறான் என்று தன்னுடைய முன் அனுபவத்தைக் கொண்டு ப்ரவ்ருத்திக்கு காரணம் என்ன? என்பதை அனுமானிக்கின்றான். அதாவது இது எனக்கு இஷ்ட்ட ஸாதனம் என்று எந்த கார்யம் அறியப்படுகிறதோ அதில் ராகத்தினால் ப்ரவ்ருத்தியும் இது எனக்கு அநிஷ்ட்டஸாதனம் என்று எந்த கார்யம் அறியப்படுகிறதோ அதில் த்வேஷம் ஏற்படுவதால் அதில் நிவ்ருத்தியும் ஏற்படுகிறது. இதேபோல் இது எனக்கு இஷ்ட்டம் என்றோ இது எனக்கு அநிஷ்ட்டம் என்றோ ஞானம் ஏற்படாத கார்யத்தில் ராகமும் இல்லை த்வேஷமுமில்லை. அதனால் ப்ரவ்ருத்தியுமில்லை நிவ்ருத்தியுமில்லை. ஔதாசீன்யமாகவே இருக்கின்றோம் என்பதை நன்கு விவேகித்து அறியக்கூடிய புத்திதீக்ஷண்யம் உடையவனாக இருக்கின்ற பாலகன், தன்னுடைய அனுபவத்தைக் கொண்டே இஷ்ட்ட ஸாதனதா ஞானமே ப்ரவ்ருத்திக்கு காரணம் என்பதை அனுமானத்தினால் தீர்மானித்து பரனுடைய ப்ரவ்ருத்திக்கு காரணத்தை அறிகிறான். அதன் பிறகு இஷ்ட்ட ஸாதனதாஞானம் என்பது இந்த வாக்யத்திலிருந்தே ஏற்பட்டிருக்கவேண்டும் என்பதையும் அனுமானிக்கிறான் அதன்பின் ஆவாபம் உத்வாபம் என்ற செய்கைகளைக்கொண்டு அந்தந்த பத, பதார்த்தங்களை அறிந்து கொள்கிறான், இதே விஷயத்தைப்பற்றி மேலும் விசாரிக்கப்படுகிறது.

**367, 368. அவதாரிகை :**

ஒரு வாக்யத்திலுள்ள பதங்களில் ஒன்றை எடுத்து மற்றபதத்தைச்சேர்க்கின்ற முறையில் (ஆவாப உத்பாவங்கள் மூலமாக) அந்தந்த பதத்திற்கு என்ன அர்த்தம் என்பதை விசேஷமாக அறிந்து கொள்கிறான்.

ச்லோகம் :

पदान्तरस्यागमनादिहान्यतस्तथा पदस्योद्धरणादितो गिरः विशेषसिद्धिं लभते प्रयत्नवान् पदार्थसंबन्धगतां विचक्षणः।
लडादिशब्देऽपगते लिङादौ प्रत्यागतेऽभीप्सितसाधनत्वम् प्रतीयते तेन लिङादिशब्दस्तदर्थवाचीति स वेत्ति बालः ॥

**ச்லோகார்த்தம் :** முன் ஒரு வாக்யத்திலுள்ள பதத்துடன் மற்றொரு வாக்யத்திலுள்ள பதத்தை சேர்ப்பதையும் அதேபோல் பின் வாக்யத்திலுள்ளபதத்தை முன் வாக்யத்திலுள்ள பதத்துடனும் சேர்ப்பதை பார்க்கின்ற கூர்மையான புத்தி சாதுர்யமுடைய பாலனானவன் அதிக கவனத்தையுடையவனாக இருந்து அந்தந்த பதத்திற்கும், அதற்குரிய அர்த்தத்திற்கும் உள்ள விசேஷ ஸம்பந்தத்தை அறிகின்றான். லடாதி பதங்களை எடுத்துவிட்டு லிஙாதி சப்தங்களை

ப்ரயோகிக்கின்றபோது இஷ்ட்ட ஸாதனத்வம் என்பது அறியப்படுகிறது. இதிலிருந்தே பாலனானவன் லிஙாதிபதங்கள் இஷ்ட்டஸாதனத்தை போதிக்கின்றது என்று அறிந்துகொள்கிறான்.

**வ்யாக்யானம் :** வாக்யத்தைக் கேட்கின்ற பாலன் ஒருவன் அதன் விசேஷார்த்தங்களை எப்படி அறிகிறான் என்றால், உதாரணமாக 'காமானய' என்று ஒருவன் வாக்யப்ரயோகம் செய்கிறான் அதைக்கேட்ட மற்றவன் எழுந்து போய் பசுவைக்கொண்டு வருகிறான் அதன் பிறகு 'அஸ்வமானய' என்ற வாக்யம் ப்ரயோகம் செய்யப்படுகிறது. இதைக்கேட்டவுடன் குதிரையைக் கொண்டுவருகிறான். அதன்பிறகு 'அஸ்வம் பதான' 'காம் நய' என்ற வாக்யங்களை ப்ரயோகிக்கிறான் இதைக் கேட்டவுடன் குதிரையைக் கட்டுகிறான் பசுவை கொண்டுபோகிறான் இதைப்பார்த்துக் கொண்டிருக்கின்ற பாலகன் கூர்மையான புத்தியுடையவனாக இருக்கின்றதால் வாக்யத்திலுள்ள பதங்கள் மாற்றப்படுவதையும், அதற்குரிய செயல்களை செய்கின்றதையும் கவனிக்கின்றபோது அந்தந்த பதங்களுக்குள்ள விசேஷார்த்தங்களை அறிந்துகொள்கிறான். இந்த விதம் 'கோ' பதம் 'அஸ்வ' பதம் போன்ற நாம பதங்களைக் கொண்டு அதன் விசேஷார்த்தம் எப்படி அறியப்பட்டதோ அதேபோல் க்ரியாபதங்கள் எதை போதிக்கின்றது என்பதை விசேஷமாக அறிந்துகொள்கிறான். அதாவது 'பசதி' என்ற பதம் க்ரியாபதமாக இருந்தாலும் அந்தபதம் லடாதி அர்த்தத்தை போதிக்கின்றதால் இஷ்ட்ட ஸாதனம் என்பதை போதிக்கவில்லை என்றும் 'பசேத்' என்ற க்ரியாபதமே லிஙாதி அர்த்தமான இஷ்ட்ட ஸாதனத்வஞானத்தை உண்டுபண்ணுகிறது என்று நாமபதத்திற்கு எப்படி அர்த்தம் அறிந்து கொள்ளப்பட்டதோ அதுபோல் க்ரியா பதங்களுக்கும் விசேஷார்த்தத்தை அறிந்துகொள்கிறான். இவ்விதம் ஆவாப உத்வாபங்களைக் கொண்டு பாலனானவன் விசேஷார்த்தங்களை அறிந்து கொள்கிறான்.

லிங் லோட் தவ்ய லேட் என்ற நான்கில் எதை ப்ரயோகம் செய்தாலும், இது இஷ்ட்ட ஸாதனம் என்பது அறியப்படும். இதைத்தவிர லடாதிகளை ப்ரயோகம் செய்யப்படுமானால் இஷ்ட்ட ஸாதனம் என்பது அறியப்படுவதற்கு முடியாது.

**369. அவதாரிகை :**

மேலும் விசேஷணத்துடன் கூடியதான விசிஷ்ட்டார்த்தத்தை தெரிவிக்கின்ற வாக்யமாக இருந்தாலும்கூட அந்த வாக்யமும், க்ரியான் விதமாக இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :** योग्येतरान्विततया न च वाच्यताऽस्य कार्यान्वितत्ववपुषा सुतरां न चेष्टा ।
किं त्वन्वितत्ववपुषो न विशेषणस्य किंचित्प्रयोजकमिहास्ति निरूपणायाम् ॥

**ச்லோகார்த்தம் :** பதமானது யோக்ய இதரான்விதமாக இருப்பதாலோ, கார்யஅன்விதமாக இருப்பதாலோ, தன் அர்த்தத்தை தெரிவிப்பதாக சொல்லத்தேவையில்லை அன்வித ரூபமாக இருந்தே தன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்பதால் யோக்யம் என்றோ இதரம் என்றோ கார்யம் என்றோ, விசேஷணங்கள், அன்விதமான பதத்திற்கு சேர்க்கவேண்டிய அவஸ்யமில்லை.

**வ்யாக்யானம் :** ஒரு வாக்யத்திலுள்ள பதங்களின் அர்த்தம் எந்த ரூபத்தினால் அந்தந்த பதங்களுக்கு வாச்யார்த்தமாக ஆகிறது? யோக்ய இதர அன்விதமாக இருக்கின்றதால் சக்தி க்ரஹம் ஏற்படுகிறதா? அல்லது அன்விதமாக இல்லாமல் (அனன்விதமாக) இருந்தாலும் ஸ்வ அர்த்தத்தில் சக்திக்ரஹம் ஏற்படுகிறதா? அல்லது பொதுவாக பதார்த்தத்திற்கு சாதாரணமாகவே அர்த்தம் அறியப்படுகிறதா?

1. யோக்ய இதர அன்விதம் என்று சொல்லவேண்டிய அவஸ்யம் இல்லை. அன்விதே சக்தி : என்று சொன்னாலே போதுமானதாக இருக்கின்றதால் கல்பனா கௌரவம் என்ற தோஷம் ஸம்பவிக்காமல் இருப்பதற்காகவும் யோக்ய இதர அன்வயம் என்று சொல்வதற்கு தேவையில்லை.

2. அனன்விதே பதார்த்த சக்தி : என்று சொல்லப்படுமானால் சப்தத்திலிருந்து பதார்த்த அன்வயம் என்பது அறியப்படுவதாகச் சொல்லமுடியாது.

3. - ஸாதாரணத்வேன என்று பொதுவாக ஒரு அர்த்தம் அன்வயம் இல்லாமலேயே ஏற்படுவதாகச்சொல்வதற்கேமுடியாது. ஆகவே இந்த மூன்றுவிதமாகவும் வாக்யத்திலிருந்து அன்வயபோதம் ஏற்படுவதாக உங்களால் சொல்லமுடியாது ஆகையால் மீதம் இருக்கின்ற கார்யான்விதே பதார்த்த சக்தி : என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**370. அவதாரிகை :**

இந்த விஷயத்தில் தார்கிகர்களாலும் பாட்டர்களாலும் வேறுவிதமான அர்த்தம் தெரிவிக்கப்படுகிறது. என்னவென்றால், அன்வயம் என்பது சப்தத்திலிருந்தே அறியப்படுவதாகச் சொல்ல வேண்டியதில்லை முதலில் சப்தத்திலிருந்து தனித்தனியாக பதங்களின் அர்த்தம் தான் அறியப்படுகிறது. அவ்விதம் அறியப்பட்ட பதார்த்தங்கள் மூலமாக யோக்யதாவஸாத் பின்னால் ஒன்றுடன் ஒன்று அன்வயிக்கின்றது என்று சொல்கிறார்கள். இவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல.

**ச்லோகம் :**

यत्केचिदाहुरभिधाय निजान्पदार्था नेतावतोपरतवन्ति पदानि तेभ्यः ।
पश्चाद्विशेषणविशेष्यतया तु तेषां संसर्गबुद्धिरपराऽवतरिष्यतीति ॥

**ச்லோகார்த்தம் :** பதங்காளனது, தன்னுடைய அர்த்தத்தை தெரிவித்தபிறகு முடிவை அடைகின்றது. அதன்பிறகு அந்த பதார்த்தங்களுக்கு மத்தியில் ஸம்ஸர்க்கஞானம் ஏற்படுவதால் விசேஷண விசேஷ்ய ரூபமாக அன்வயம் அறியப்படுகிறது என்று வேறு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** பதங்கள் ஒன்றுடன். ஒன்று அன்வயித்து அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுவது சரியல்ல என்று தார்க்கிகர்களால் சொல்லப்படுகிறது. அதாவது பதங்களிலிருந்தே வாச்யார்த்தம் அறியப்படவில்லையென்றும், பதங்கள் அதனுடைய அர்த்தத்தை தெரிவித்தவுடனேயே (அதன் வேலை முடிந்துவிடுகிறது) உபாதமாகின்றது. அதனால் பலபதங்களுடைய வாக்யத்தில் ஏதாவது ஒரு பதம் மறந்து விடுமானால் அந்த வாக்யத்திலிருந்து அர்த்தபோதமே ஏற்படாது. அதனால் முதலில் பதத்திலிருந்து பதங்களின் அர்த்தம் அறியப் படுமானால் அந்த அர்த்தங்களைக் கொண்டு ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவேன அன்வயம் ஏற்படுகிறது. அதன் பிறகு வாக்யார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லமுடியும். அதனால் பதம் என்பது பதார்த்த போதத்தை உண்டுபண்ணுகின்றதேயன்றி அன்வயம் ஏற்பட்டு வாக்யார்த்தபோதம் ஏற்படும்வரையில் இருப்பதில்லை. ஆகவே அன்வயம் என்பது சப்தத்திலிருந்தே அறியப்படுவதாகச் சொல்வது சரியல்ல. இவ்விதம் தார்க்கிகர்களால் ஆக்ஷேபிக்கப்படுகிறது. இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

உதாரணமாக 'காமானய' என்ற வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில் 'கோ' பதமானது ஆனயபதத்துடனும் ஆனய பதம் கோபதத்துடனும் அன்வயித்து அந்த வாக்யம் பொதுவாக ஒரு

அர்த்தபோதத்தை ஏற்படுத்துகின்றது. அதன்பிறகு 'கோ' பதத்தின் அர்த்தமென்ன? ஆனய பதத்தின் அர்த்தமென்ன? என்று பதார்த்தங்கள் அறியப்பட்ட பிறகே ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவேன அன்வயப்ரதிபத்தி ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். இதையே அபிறித, அன்வயம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே அன்விதத்வரூபேணவாச்யத்வமில்லை, பதார்த்தத்வரூபேண வாச்யத்வம் சொல்லப்பட வேண்டும், என்று பாட்டார்களாலும், தார்க்கிகர்களாலும் சொல்லப்படுகிறது.

**சித்தா :** இந்தவிதம் ஆக்ஷேபம் செய்வது சரியல்ல. முதலில் வாக்யத்தைக்கேட்டவுடன் சப்தத்திலிருந்து அன்விதமான அர்த்தம் தான் அறியப்படுகிறது. அதன்பிறகே பதங்களுக்கு விசேஷமாக அர்த்தம் அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** 'காமானய' என்ற வாக்யத்தினை ப்ரயோகம் செய்கின்றபோது 'பசுவைக்கொண்டு வா' என்ற அர்த்தமானது பொதுவாக அறியப்படுகிறது என்றாலும் ஆவாப உத்வாபங்களைக் கொண்டே அந்தந்த பதார்த்தம் அறியப்பட்ட பிறகே எந்த பதத்திற்கு எந்த பதத்துடன் அன்வயம் என்று அறிவதற்குமுடியும். ஆகையால், பதார்த்த ப்ரதீதிக்குப் பிறகே அன்வயப்ரதீதி சொல்ல வேண்டும், இல்லையானால், ஒரு பதம் ப்ரயோகம் செய்யப்படுவதாலேயே அதன் அர்த்தம் அறியப்படுவதாகச் சொல்லலாம். இரண்டு பதங்கள் ப்ரயோகம் செய்யவேண்டிய அவஸ்யமில்லையென்று சொல்ல நேரிடும். ஆகையால் பதங்களின் அர்த்தம் அறியப்பட்ட பிறகே ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவேன அன்வயித்து வாக்யம் அர்த்தபோதமாகிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் சப்தத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாதே? என்றால், சப்தத்திலிருந்து எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ அதைத்தான் வாக்யம் தெரிவிக்கின்றதால் சப்தத்திலிருந்தே வாக்யார்த்த போதம் ஏற்படுவதாகச் சொல்வதில் தோஷம் ஏதுமில்லை. எவ்விதம் சமைப்பதற்காகவே விறகு இருக்கின்றதோ அதுபோல் பதங்களின் அர்த்தத்தினால் மட்டும் அந்த வாக்யத்திலுள்ள பதங்கள் விச்ராந்தியை அடைவதில்லை. பதங்கள் பதார்த்த அன்வயபோதம் ஏற்படும் வரையில் இருக்கின்றது. ஆகவே பதார்த்தபோதம் ஏற்படுவதற்காகவே பதங்கள் அதன் அர்த்தத்தை முதலில் தெரிவிக்கின்றது ஆகவே சப்தத்திலிருந்தே அர்த்தபோதம் ஏற்படுகிறது என்றே சொல்லலாம்.

**371. அவதாரிகை :**

இந்தவிதம் ஆக்ஷேபிக்கின்ற மதங்கள் இரண்டையும் சரியல்ல என்று நிராகரித்து இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

तद्दुर्घटं न खलु किंचिदपि प्रमाणमस्याः प्रसाधकमुदीरितकल्पनायाः ।
येनोपलब्धिविषयत्वमुपागतानि संसृष्टमेव तु पदानि पदार्थमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** இது பொருந்தாது. கீழே சொல்லப்பட்ட கல்பனைக்கு சாதனமான ப்ரமாணம் எதுவும் கிடையாது. ஏனெனில் சப்தத்தை கேட்கின்றபோதே, ஸம்ஸ்ருஷ்டமான பதார்த்தத்தையே தெரிவிக்கின்றது. ஆகவே இந்த ஆக்ஷேபம் பொருந்தாது.

**வ்யாக்யானம் :** இவ்வித கல்பனைக்கு ப்ரமாணம் ஏதுமில்லை என்பதால் இதை ஒத்துக் கொள்ளமுடியாது. சப்தத்தைக்கேட்டவுடன் பதங்கள் ஒன்றுடன் ஒன்று அன்வயித்த அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. 'காமானய' என்ற வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்தில் அந்த வாக்யத்தை

கேட்க்கின்றவன் உடனே பசுவைக் கொண்டுவருகிறுன். இதைப்பார்த்துக் கொண்டிருப்பவனுக்கு இந்த வாக்யத்திலிருந்தே பசுவைக் கொண்டுவரவேண்டும் என்ற ஞானம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று முதலில் ஞானத்தை அனுமானம் செய்கின்றுன். ஆகவே முதலில் அன்வயார்த்தமே வாக்யத்திலிருந்து அறியப்படுகிறது என்றும் அதன்பிறகு பதபதார்த்தங்களை அறிகிறுன் என்றே சொல்லவேண்டும். ஆகவே முதலில் தனித்தனியாக பதங்களின் அர்த்தம் அறியப்படுகிறது என்றும் அதன்பிறகு பதார்த்தங்களுக்கு அன்வயம் ஏற்படுகிறது என்றும் சொல்வதில் ப்ரமாணம் ஏதுமில்லை. மேலும் பதங்களின் அர்த்தம் அறியப்பட்ட பிறகே அன்வயார்த்தம் அறியப்படுவதாகச் சொல்லப் பட்டபோதிலும் அதுவும் சப்தத்திலிருந்தே அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும் ஆகையால் அவஸ்யமாக பதார்த்த ஞானத்தினுல் தான் அன்வய ஞானம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவது கௌரவமில்லை. அனுபவ விரோதமாகவும் இருக்கிறது. மேலும் வாக்யத்திலுள்ள பதங்கள், அனேகம் இருப்பதால் ஏதாவது ஒருபதம் மறந்துவிடுமாளுல் அந்த வாக்யம் அர்த்தபோதகமாகாது என்று சொல்வதும் பொருந்தாது. ஏனெனில் பதங்களைப் போல் பதார்த்தமும் மறக்க நேரிடுமானதால் இதை ஒரு காரணமாகச் சொல்வது சரியல்ல. பதங்கள் ஞாபகத்தில் இல்லையென்றுலும் பதங்களை கல்பித்துக்கொண்டு அந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யலாம். (உதாரணமாக கதவைமூடு என்ற சொல்லநேரிடும் போது, கதவு கதவு என்று சொல்லிமூடு என்று பதம் மறந்துவிட்டாலும் மூடு என்ற பதத்தை கல்பித்துக்கொள்கிறோம். அதேபோல் மூடு என்று சொன்னுலும் கதவு என்று கல்பித்துக் கொள்ளலாம்). ஆகவே வாக்யத்தைக் கேட்டவுடன் பொதுவாக பதங்களின் அன்வயம் ஏற்பட வில்லை பதார்த்தபோதம் ஏற்பட்டபிறகே அன்வயம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல் அனேக பதார்த்தங்கள் இருக்குமானுல், எந்த பதம் எதனுடன் அன்வயிக்கின்றது என்று சொல்ல முடியாது. ஆகவே 'காமானய' என்ற வாக்யம் க்ரஹிக்கப்பட்டவுடன் இந்த வாக்யமே பசுவைக் கொண்டுவர காரணம் என்பதை அறிகிறுன் என்பதுதான் சரியாகும்.

**372. அவதாரிகை :**

ஆகையால் பதங்கள் ஒன்றுடன் ஒன்று அன்வயிக்காமல், சுத்தபதார்த்தங்களினுல் பதங்களுக்கு சப்தசக்தி என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் வ்யுத்பத்தி தசையிலும் எது முன்னுல் எது பின்னுல் சொல்லப்படுகிறது என்ற வ்யவஸ்த்தையே இருக்கமுடியாது.

**ச்லோகம் :**

नासंसृष्टपदार्थबुद्धिपदयोः पूर्वापरत्वप्रमां मुक्त्वा कारणकार्यतावगतये कश्चित्समर्थस्तयोः ।
पौर्वापर्यमुदीक्ष्य हेतुफलतां सर्वत्र संगृह्णते नोचेत्सर्वमसंगतं भवति वः सर्वव्यवस्थाहतेः ॥

**ச்லோகார்த்தம் :** இது பூர்வம், இது அபரம் என்ற ஞானம் ஏற்படாமல், பதத்திற்கும் அஸம்ஸ்ருஷ்டார்த்தமான பதார்த்தத்திற்கும்இடையே இருக்கின்ற கார்யகாரண பாவத்தை அறிந்துகொள்வதற்கு யாராலும் முடியாது. எல்லாஇடத்திலும் கார்ய காரண பாவமானது பௌர் வாபர்யபாவத்தை அறிந்த பிறகே. அறியப்படுகிறது. இல்லையென்றுல் வ்யவஸ்தை என்பதே இருக்கமுடியாது ஆகையால் எல்லாமே அஸங்கதமாகிவிடும்.

**வ்யாக்யானம் :** முதலில் பதங்களிலிருந்து பதார்த்தம் அறியப்பட்ட பிறகே. ஒன்றுடன் ஒன்று அன்வயித்து வாக்யார்த்தபோதம் சப்தத்திலிருந்து ஏற்படுவதாகச்சொல்வதுசரியல்ல. ஏனெனில் பூர்வாபரங்களின் அர்த்தஅன்வயத்துடன் வாக்யம் அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றதாகச்

சொல்லாவிட்டால், காரண கார்ய பாவமென்பதே சொல்லமுடியாது. இதனால் லோகத்தில் எந்த வ்யவ காரத்திலும் வ்யவஸ்த்தை என்பதே இருக்கமுடியாது.

**பூர்வ :** ஒன்றுடன் ஒன்று அன்வயிக்கின்ற பதத்தில் சப்த சக்தி என்று சொல்வதைக் காட்டிலும் அந்தந்த பதார்த்தத்தில் அததற்கு சக்தி என்று சொல்லப்படுவதில் லாகவம் இருக்கிறதே?

**சித்தா :** முதலில் வாக்யத்தைக் கேட்டவுடன் அந்த வாக்யத்திலுள்ள பதங்கள் ஒன்றுடன் ஒன்று அன்வயித்து ஸாமான்யமாக ஒரு அர்த்தபோதம் ஏற்படுகிறது. இவ்விதம் பொதுவாக அர்த்தம் க்ரஹிக்கப்படுகின்றபோது எந்தவிதமான ஆகாங்க்ஷையும் ஏற்படுவதில்லை ஆனால் ஒரு பதத்தின் பதார்த்தத்தை க்ரஹிக்கப்படுகின்றபோது அதற்குமேல் என்ன? என்ற ஆகாங்க்ஷை ஏற்படுகிறது. 'கௌ:' என்ற பதத்தின் அர்த்தம் கிரஹிக்கப்பட்டவுடன் அதற்குமேல் என்ன சொல்லப்படுகிறது? என்ற ஆகாங்க்ஷை ஏற்படுகிறது. அதாவது 'பசு' என்றவுடன் பசுமேய்கிறதா? வருகின்றதா? போகின்றதா? என்று பலவிதமான ஆகாங்க்ஷை ஏற்படுகிறது. இந்தவிதம் பதங்களின் அன்வயபோதம் ஏற்படுகின்றபோது ஜிஜ்ஞாஸை ஏற்படுவதில்லை. ஆகவே பதங்களிலிருந்தே அன்வயம் ஏற்படுகிறது என்று சொல்வதே சரி.

**பூர்வ :** ஒரு வாக்யத்திலுள்ள க்ரியாபதம் காரக பதத்துடனும் காரகபதம்க்ரியாபதத்துடனும் அன்வயிக்கின்றது என்பது சாதாரணம் ஸாமான்யம் வாக்யார்த்தம் என்று சொல்லப்படுகிறதேயன்றி ஸம்ஸர்க்கவிசேஷத்தை வாக்யார்த்தம் என்று சொல்லப்படவில்லை. 'கோ' பதமானது இதரமான 'ஆனய' பதத்துடனே 'ஆனய' பதம் இதரமான 'கோ' பதத்துடனே அன்வயிக்கிறது. என்று சொல்லப்படுவதால் சுத்தமான இரண்டு பதங்களுக்கு அன்வயம் சொல்லப்படவில்லையென்று அறியப்படுகிறது. ஆகவே முதலில் ஸம்ஸர்க்கம் என்பது ஸாமான்யமாகவும் அதன்பின் ஸம்ஸர்க்கம் விசேஷமாகவும் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால். முதலில் ஏற்படும் அன்வயத்தையன்றி வேறு அன்வயமே கிடையாது என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** 'காமானய' என்ற வாக்யத்தினால் ஸாமான்யமாக 'பசுவை கொண்டு வா' என்ற அர்த்தம் அறியப்படுகிறது. அப்போது 'கோ'பதம் கர்மாவா? அல்லது 'ஆனய' பதம் கர்மாவா? என்ற விசேஷம் முதலில் அறியப்படவில்லை. பின்னால்தான் அறியப்படுகிறது அதற்காக வாக்யத்திலிருந்து முதலில் ஏற்பட்ட அன்வயத்தைத் தவிர வேறாக புதிதாக ஒரு அன்வயம் அறியப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? பதார்த்த ஸம்ஸர்க்கமே வாக்யார்த்த ஸம்ஸர்க்கம் என்பதால் முதலில் சாமான்யமாக அறியப்பட்ட அன்வயம் மறுபடி விசேஷமாக அறியப்படுகிறது ஆகவே வேறு அன்வயம் கிடையாது. உதாரணமாக பிதா புத்ரன் என்ற இருவருக்கும், பித்ரு புத்ர பாவஸம்பந்தம் என்றும் சொல்லலாம், அல்லது பிதாவும் புத்ரனும் பித்ருபுத்ர பாவஸம்பந்தமுடையவர்கள் என்றும் சொல்லாம். இதேபோல் குணகுணினௌஸம்வேதம் ஸம்பந்தம் என்றும் சொல்லலாம், அல்லது குணம் குணீ இரண்டும் ஸமவாய ஸம்பந்தேன இருக்கிறது என்றும் சொல்லலாம். ம்ருத் என்பது ஸமவாய ஸம்பந்தத்தினால் கடத்தில் இருக்கிறது என்றும் சொல்லலாம், அல்லது ம்ருத்திற்கு கடத்துடன் ஸமவாய ஸம்பந்தம் இருக்கிறது என்றும் சொல்லலாம். ஸமவேதே குணகுணினௌ என்றும், ஸம்யுக்தௌ கடௌ என்றும் சொல்லப் படுவதிலும் ஒரே ஸம்பந்தம்தான் சொல்லப்படுகிறது. இரண்டு முறை ஸம்பந்தம் என்ற பதம் ப்ரயோகம் செய்யப்பட்டபோதிலும் அந்த ஸம்பந்தம் ஸமவாய ஸம்பந்தத்தையன்றி வேறல்ல. (ஸம்யோக ஸம்பந்தம் உள்ளது எதுவோ அதுவே ஸம்யுக்த ஸம்பந்தம்) ஸம்யோகினா என்று சொல்லும்போது விசேஷபாவேன அறியப்படுகிறது. அதனுடன் ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்கின்றபோது விசேஷ்யமாக அறியப்படுகிறது ஆகவே விசேஷ்யமாகவும் விசேஷமாகவும் அறியப்படும் ஸம்பந்தம் ஒன்று தான். அந்தந்த இடத்தில் ஏற்படும் ஜிஜ்ஞாஸையை அனுசரித்து ஸாமான்யமாக அறியப்பட்டது எதுவோ, அதுவே மறுபடி விசேஷமாக அறியப்படுகிறது.

ஒரு வாக்யத்தைக் கேட்டவுடன் முதலில் சப்தத்திலிருந்து அன்விதார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொன்னால்தான் கார்ய காரணபாவம் சொல்லமுடியும் அதாவது முதலில் சப்தமும் பின்னால் ஸம்ஸ்ருஷ்டட பதார்த்த ஞானமும் ஏற்பட்டால்தான் பௌர்வாபர்யம் அறியப்படும் ஆகவே முதலில் சப்தத்தினால் ஸாமான்யமாக பதங்களுக்கு அன்வயம் அறியப்படுகிறது என்றும், அதன்பின் விசேஷமாக பதார்த்தம் அறியப்படுகிறது என்றும் சொன்னால்தான், பூர்வம் அபரம் என்பதைக் கொண்டு எது காரணம்? எது கார்யம் என்ற வ்யவஸத்தையே இருக்கமுடியும் மேலும் சப்தத்திலிருந்து கேவல பதார்த்தபோதம் அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. 'காமானய' என்ற வாக்யத்தை கேட்டவுடன் 'பசுவை கொண்டு வா' என்று இந்த வாக்யம் தெரிவிக்கிறது என்று அறியப்படுகின்றதால் முதலில் அன்வித அர்த்தம் தான் அறியப்படுகிறது. அதனால் அன்விதார்த்தம் எதுவோ அதுவே வாக்யார்த்தம் என்று சொல்ல வேண்டுமேயன்றி, பின்னால் அறியப்படும் பதார்த்தம் வாக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. அவ்விதம் சொல்லப்படுமானால், சப்தத்திற்கும் ஸம்ஸ்ருஷ்ட அர்த்தத்திற்கும், கார்யகாரண பாவம் சொல்லமுடியாது. அறிவாளிகள் பதத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் பதஞானம் முதலிலும், அர்த்த ஞானம் பின்னாலும் ஏற்படுகிறது என்று அறிந்து, ப்ரத்யக்ஷாதிஸ்தலங்களில் ப்ரமாணம், ஞானம், என்ற இரண்டிற்கும் கார்யகாரணபாவம் சொல்லவேண்டும் என்றும் (ப்ரமாணம் காரணம் ஞானம் கார்யம்) பூர்வா, பரத்வ ஞானமின்றியே கார்ய காரணபாவம் சொல்லப்படுமானால் லோக விவகாரத்தில் வ்யவஸ்த்தை என்பதே இருக்கமுடியாது என்றும் சொல்கிறார்கள். எள் என்பது எண்ணைக்கு காரணம் என்று காரணகார்யபாவம் அறியப்பட்டால்தான் லோகவ்யவகாரம் நியமமாக நடக்கமுடியும்.

**373. அவதாரிகை :**

**பூர்வ :** பௌர்வாபர்யம் இருந்தால்தான் கார்ய காரணபாவம் க்ரஹிக்கப்படும் என்று சொல்வது சரியல்ல. யாகம் என்பது இந்த ஜென்மாவில் செய்யப்படுகிறது. அதன் பலனை ஸ்வர்க்கம் என்பது எவ்வளவோ காலம் கடந்து கிடைக்கின்றது. அதனால் இது ஹேது இது பலம் என்று எப்படி தீர்மானிப்பது? ஸ்வர்க்கத்திற்கு முந்தினக்ஷணம்யாகம் என்பது இல்லையென்றாலும் யாகம் காரணம், ஸ்வர்க்கம் அதன் பலன் என்று பௌர்வாபர்யம் இல்லாமலேயே கார்யகாரணபாவம் சொல்லப்படுகிறதே? என்றால்,

**ச்லோகம் :**

पूर्वापरान्वयबलेन हि कारणत्वकार्यत्वसंगतिमिह प्रतियन्ति लोके ।
नो चेद्भवेदनियमो न च तत्र कर्तुं कार्याणि कारणविशेषमुपाददीरन् ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் பௌர்வாபர்ய பாவத்தைக்கொண்டே கார்யகாரண பாவம் அறியப்படுகிறது. இல்லையென்றால் வ்யவஸ்த்தை என்பதே இல்லாமற்போகும், மனுஷ்யர்கள், ஒரு கார்யத்தை உண்டு பண்ணுவதற்கு விசேஷணமான காரணத்தை எடுத்துக் கொள்வதில்லை.

**வ்யாக்யானம் :** லோகத்தில் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களைக் கொண்டு இது காரணம் இது கார்யம் என்று விவகாரம் செய்யப்படுகிறது என்பது எல்லோருக்கும் ப்ரஸித்தம். ஆகவே லோகத்தில் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் நியமத்தைக்கொண்டு ப்ரத்யக்ஷமாக அறியப்படும் விஷயத்திற்கு உதாரணம் சொல்லலாமேயன்றி வேதவாக்யங்களினால் அபூர்வமாக தெரிவிக்கப்படும் விஷயத்தினை உதாரணமாகச் சொல்லப்படுவது சரியல்ல. யாகம் ஸ்வர்க்கம் என்ற இரண்டிற்கும் பூர்வம் அபரம் என்று சொல்லமுடியாவிட்டாலும் காரணம் யாகம், கார்யம் ஸ்வர்க்கம் என்று வேத வாக்யம் கார்ய காரண பாவத்தை தெரிவிக்கிறது கார்ய காரண பாவம் அறியப்படுமானால் பூர்வம் அபரம் என்பதும் அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இதுபூர்வம் இது அபரம் என்பது அறியாமல் எதை காரணம் என்று சொல்லமுடியும்? எதை கார்யமென்று சொல்லமுடியும்? ஆகவே கார்யகாரண பாவம் என்பது

பௌர்வாபர்யத்தை (அறிவதால் தான்) க்ரஹிப்பதால்தான் ஏற்படுகிறது என்ற நியமம் ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுவதால் இதை இல்லை என்று யாராலும் மறுக்க முடியாது.

**374. அவதாரிகை :**

பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயிக்கவில்லை என்றும், பதங்களின் ஞாபகத்தைக் கொண்டு கேவல பதார்த்தங்களின் அன்வயம் போதிக்கப்படுவதாகவும் சொல்லப்படும் பக்ஷத்தை மேலே நிராகரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

पदजातबुद्धिजनिता भवति व्यतिषक्तबुद्धिरिति तावदिह ।
न विगानमस्ति भवतामपि चेद् व्यवधानकल्पनमकारणकम् ॥

**ச்லோகார்த்தம் :** பதஸமூகங்களிலிருந்து உண்டான புத்தியானது ஸம்ஸ்ருஷ்டார்த்த ஞானத்தை உண்டுபண்ணுகிறது என்ற இந்த அபிப்ருயத்தை நீங்கள் ஒத்துக் கொண்டீர்களானால், நடுவில் கல்பிக்கப்படுகின்ற கேவலபதார்த்த புத்தியானது அப்ரமாணமாகிவிடும்.

**வ்யாக்யானம் :** சாப்த ஞானத்திலேயே, பரஸ்பரம் ஒன்றுடன் ஒன்று அன்வயித்த அர்த்த ஞானமும், பதஞானத்திலிருந்தே உண்டாவதாகச் சொல்லலாமே? இவ்விதம் சொல்வதை விட்டுவிட்டு, பதங்களின் ஞாபகங்களைக்கொண்டு அந்தந்த பதங்களின் அர்த்தம் அறியப்படுவதாகவும் அதன்பின் வாக்யார்த்தஞானம் அறியப்படுகிறது என்றும் கல்பிக்கவேண்டிய அவஸ்யம் என்ன? மேலும் ஒன்றுக்கொன்று அன்வயிக்காத அர்த்தத்தில் பதத்திற்கு சக்தி என்று சொல்லப்படுமானால், அன்வயம் என்பது சப்தசக்தியினால் க்ரஹிக்கப்படவில்லை என்று சொல்லப்பட்டதாகஆகிறது. சப்தசக்தியினால் அன்வயம் அறியப்படாவிட்டாலும் பதார்த்தஞானம் ஏற்படும் என்று சொல்லப்படுமானால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். ஆகவே அன்வயபோதம் சப்தத்தினால் ஏற்படவில்லையென்று சொல்லப்படுமானால், சப்தத்திலிருந்து அறியப்படுவதுதான் சப்தார்த்தம் என்று முறையாக சொல்லமுடியாது. பதத்திலிருந்து பதார்த்தம் தான் அறியப்படுகிறது என்றும் அதன் பிறகு வாக்யார்த்தம் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானால் சப்தத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுவதாகச் சொல்வதற்குமுடியாது.

**பூர்வ :** பதத்திலிருந்து பதார்த்தம் அறியப்பட்டாலும் அதுவும் சப்தார்த்தம் தான் என்பதால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது. உதாரணமாக 'கங்காயாம் கோஷ': என்ற வாக்யத்திலுள்ள 'கோஷம்' என்ற பதத்தைக்கொண்டு 'கங்கா' பதத்திற்கு லக்ஷணையினால் 'தீரம்' என்று அர்த்தம் செய்யப்படுகிறது. அதுபோல் பதத்திலிருந்து நேரிடையாக அன்வயபோதம் ஏற்படவில்லையென்றாலும், பதத்திலிருந்து ஏற்படும் பதார்த்திலிருந்து அன்வய போதம் ஏற்படுவதாகச் சொல்லலாமே? அதாவது எப்படி 'கங்காயாம் கோஷ': என்ற வாக்யத்தில் 'கோஷம்' என்ற பதத்தைக்கொண்டு ஸக்யார்த்தமாக இல்லாத தீரபதத்திற்கு லக்ஷணையைக்கொண்டு தீரபதத்துடன் சப்தார்த்தத்திற்கு எப்படி அன்வயம் சொல்லப்படுகிறதோ அதுபோல் சப்த சக்தியினால் அர்த்தம் அறியப்படவில்லையென்றாலும் சக்யமான அன்வயத்தையே தெரிவிக்கிறது என்று சொல்லலாமே? இவ்விதம் சொல்லப்படுமானால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் எப்படி ஸம்பவிக்கமுடியும்?

**சித்தா :** கங்காபதத்துடன் கோஷம் என்ற பதத்திற்கு அன்வயம் சொல்லமுடியாத காரணத்தினால் தீரம் என்ற அர்த்தம் லக்ஷணையாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் கங்கா பதத்துடன் ஸக்யார்த்த ஸம்பந்தமில்லாத தீர பதத்திற்கு கங்காபதத்துடன் ஸக்யார்த்த ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுமானால் கோஷம் என்ற பதத்திற்கு தீரம் என்பதுடன் எப்படி ஸம்பந்தம் இருக்கிறதோ அதுபோல் காக்கைகளுடனும் ஸம்பந்தம் இருப்பதால் கோஷம் என்பதற்கு காக்கை என்று

அர்த்தம் செய்யநேரிடும். காக்கை என்ற பதம் இல்லையே? என்றால், தீரம் என்ற பதமும் இல்லை. ஆகையால் அசக்யமான தீர சப்தத்தை ஒத்துக்கொள்வது போல், அசக்யமான காக சப்தத்தையும் ஒத்துக்கொள்ள நேரிடும். அதனால் அதிப்ரஸங்க தோஷம் ஏற்படும். மேலும் உதாரணமாக 'காமானய' என்ற சப்தத்தைக்கேட்டவுடன் பாலகனுக்கு முதலில் வாக்யத்திலிருந்து பரஸ்பரம் ஒன்றுக்கொன்று அன்வயித்த விசிஷ்டார்த்தபோதமே ஏற்படுகிறது. வாக்யத்திற்கும் வாக்யார்த்தத்திற்கும் மத்தியில் சப்தத்திலிருந்து பதார்த்தபோதம் ஏற்படுவதாகச்சொல்வதற்கு ப்ரமாணம் ஏதுமில்லை. வாக்யத்தைக் கேட்டவுடன் வாக்யார்த்தபோதம் ஏற்படுகிறது என்பதை உன்பக்ஷத்திலும் ஒத்துக் கொள்ளப்படுவதால் இதற்கு மத்தியில் பதார்த்தபோதம் ஏற்படுவதாக கல்பிக்க தேவையும் கிடையாது. ஆகவே பதங்களைக்கேட்டபிறகு பதார்த்த ஸ்ம்ருதி ஏற்படுவதாகவும் அதன் பிறகு ஆகாங்க்ஷை முதலானவைகளால் பதார்த்த அன்வயபோதம் ஏற்படுவதாகவும் சொல்லப்படும் வாதம் சரியல்ல. சப்தத்தைக் கேட்டவுடனேயே பதங்களிலிருந்து அன்விதமான அர்த்தபோதம் ஏற்படுகிறது என்று (அன்விதாபிதான வாதம்) சொல்லப்படுவதே சரியானதாகும்.

**375. அவதாரிகை :**

சப்தத்திலிருந்து அன்விதார்த்த போதம் ஏற்படுகிறது என்றாலும், மத்தியில் பதத்தின் ஸ்ம்ருதியை உண்டுபண்ணி அதன்பிறகு பதார்த்த போதத்தினால் அன்விதார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லலாமே? பாகம் என்ற க்ரியைக்கு விறகு காரணம் என்றாலும் அந்த விறகில் பிடித்த அக்னிஜ்வாலை மூலமாகத்தான் விறகானது பாகத்திற்கு காரணமாகிறது அது போல் மத்தியில் பதார்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

व्यतिषक्तबुद्धिजनकं सकलं पदजातमित्यनुमतं यदि वः ।
व्यवधानकल्पनविडम्बनया किमिहाञ्जसैव जनकं भवतु ॥

**ச்லோகார்த்தம் :** எல்லா பதங்களும் ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தையே தெரிவிக்கின்றது என்று நீங்கள் ஒத்துக்கொள்வீர்களானால், மத்தியில் வேறொரு கல்பனையினால் என்ன ப்ரயோஜனம்? பதங்கள் நேரிடையாகவே ஸம்ஸ்ருஷ்டார்த்தத்தை தெரிவிக்கட்டுமே?

**வ்யாக்யானம் :** த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்ட பாகம் என்பது அக்னி இல்லாத காஷ்டத்தினால் (விறகு) செய்யமுடியாது. மத்தியில் அக்னி ஜ்வாலையென்பதே பாகத்திற்கு காரணம் என்பது ப்ரத்யக்ஷமாக ஏற்படும் அனுபவம். ஆனால் அதுபோல் சப்தம் என்பது நடுவில் எதையும் எதிர்பார்க்காமலேயே அன்விதார்த்தபோதத்தை நேரிடையாகவே உண்டு பண்ணுகிறது. ஆகையால் சப்தத்திலிருந்து பதார்த்த ஸ்ம்ருதி ஏற்பட்டால்தான் விசிஷ்டார்த்தபோதம் ஏற்படும் என்ற நியமம் சொல்லமுடியாது.

சப்த ஞானம் என்ற கரணத்திற்கும், அர்த்த ஞானம் என்ற பலத்திற்கும் நடுவில் எந்தவிதமான வ்யாபாரமும் தேவைஇல்லை. கரணம் என்றாலே ஒரு வ்யாபாரமூலமாகத்தான் பலனை உண்டுபண்ணவேண்டும் என்ற நியமம் எதுவும் கிடையாது. அதனால் கரணமே நேரிடையாகவே பலனை உண்டு பண்ணலாம். ஆகவே 'காமனய' என்ற வாக்யத்தினால் முதலில் ஒன்றுடன் ஒன்று அன்வயித்த அர்த்தபோதம் ஏற்பட்ட பிறகு ஆவாப உத்வாபங்களினால், அன்விதார்த்தமான பதங்களின் ஞாபகத்தைக்கொண்டு அந்தந்த பதங்களுக்கு அர்த்தத்தை அறிகின்றான். ஆகவே பதங்களின் தனித்தனி அர்த்த ஞானம் (அர்த்தபோதம்) கரணமான சப்தத்தின் வ்யாபாரம் என்று சொல்லமுடியாது. கரணத்திற்கு வ்யாபாரமே தேவையில்லை

சப்தத்திலிருந்து ஏற்பட்ட வாக்யார்த்தபோத ஸம்ஸ்க்காரத்தினுல்தான் மறுபடி பதார்த்தபோதம் ஏற்படுகிறது. ஆகவே விசிஷ்ட்ட வாக்யார்த்தபோதம் ஸ்ம்ருதி என்று சொல்லமுடியாது. ஏனெனில் முதலில் எந்த ஸம்ஸ்க்காரத்தினுல் விசிஷ்ட்டார்த்தபோதம் ஏற்படுகிறது? என்று கேள்வி ஏற்படும். ஆகவே சப்தத்திற்கும் விசிஷ்ட்டார்த்தபோதத்திற்கும் மத்தியில் பதார்த்தபோதம் ஏற்படவேண்டும் என்று சொல்லப்படுவது சரியல்ல. அதனுல் 'பாகம்' என்ற த்ருஷ்ட்டாந்தமும் இங்கு பொருந்தாது.

**376. அவதாரிகை :**

**பூர்வ :** வேதத்தில், ஒரிடத்தில் பரம்பரையாகவே வாக்யத்திலிருந்து அன்வயம் ஏற்படுவதாக அறியப்படுகின்றதே? அதாவது 'அருணயா, பிங்காக்ஷ்யா, ஏகஹாயன்யா ஸோமம் க்ரீணுதி' என்ற வாக்யத்திலிருந்து பரம்பரையாகவே அன்வயம் ஏற்படுகின்றதால், வாக்யங்களிலுள்ள பதங்கள் முதலில் பதார்த்தத்தையே போதிக்கின்றது என்றும், அதன்பிறகே அன்வயம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** த்ருஷ்ட்டாந்தமாகச் சொல்லப்படுகின்ற 'அருணயா' என்ற வாக்யத்தில், வேறு எந்த விதமாகவும் அன்வயம் ஏற்படமுடியாது என்பதால், பரம்பரையாக அன்வயம் சொல்லப் படுகின்றது. அதற்காக, எந்த வாக்யமாக இருந்தாலும், பதார்த்தம் அறியப்பட்டபிறகே வாக்ய அன்வயம் ஏற்படுமென்று சொல்வதற்குமுடியாது. ஆகவே சப்தத்திலிருந்துசாக்ஷாத் அன்வயபோதம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

पारम्पर्यं ह्यगतिकगतिं कारणादाश्रयन्ते नोत्सर्गेण स्फुरति विदुषां यत्र तत्र प्रणाडी ।
श्रुत्या सोमक्रयमनुगतः साधनत्वेन हित्वा साक्षाद्भावं ह्यरुणिमगुणः प्रापदेनामशक्तेः ॥

**ச்லோகார்த்தம் :** நேரிடையாக ஸம்பந்தம் ஸம்பவிக்காத காரணத்தினுல் மட்டுமே, வேறு வழியின்றி பாரம்பர்ய ஸம்பந்தம் என்பது ஆச்ரயிக்கப்படுகிறது. (ஆகவே) எந்த இடத்தில் ஸாமான்யந்யாயத்தினுல் நேரிடையாக ஸம்பந்தம் அறியப்படுவதில்லேயோ அந்த இடத்தில்தான் பாரம்பர்யம் என்பது வித்வான்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. த்ருதீயாச்ருதியினுல், ஸாதன ரூபமாக ஸோமக்ரயத்தில் அனுகதமான அருணகுணமானது நேரிடையான ஸம்பந்தத்தை தெரிவிக்கமுடியாததால் அதைவிட்டு, பாரம்பர்ய ஸம்பந்தத்தை தெரிவிக்கிறது.

— **வ்யாக்யானம் :** ஒரு கார்யத்திற்கு, வேறு ஒன்றை காரணம் என்று சொல்ல வேண்டுமானுல், எது நேரிடையாக அறியப்படுகிறதோ அதைத்தான் காரணம் என்று சொல்ல வேண்டும் என்பது பொதுவாக ஏற்பட்ட நியமம். இந்த நியமம் எந்த இடத்தில் (பொருந்த வில்லேயோ) அல்லது சொல்லப்படமுடியவில்லேயோ, அந்த இடத்தில் மட்டுமே வேறு கதி இல்லாததால் பரம்பரையாக அர்த்தம் சொல்லப்படவேண்டியிருக்கிறது. உதாரணமாக, அனுபவம் என்பது ஸ்ம்ருதிக்கு காரணம் என்று சொல்கிறேம். ஆனுல் அனுபவம் என்பது ஸம்ஸ்க்காரத்தின் மூலமாகவே ஸ்ம்ருத்திக்குகாரணமாகிறதேயன்றி நேரிடைகாரணமாக ஆகாது. இதைத்தான் பரம்பரைகாரணம் என்று சொல்கிறேம். இதேபோல் 'அருணயா, பிங்காக்ஷ்யா, ஏகஹாயன்யாஸோமம் க்ரீணுதி' என்ற வாக்யம், சிகப்பு நிறமுடையதும், மஞ்சள் நிறமான கண்களையுடையதும், ஒரு வயது உடையதுமான (பசுவின்) கன்றுக்குட்டியை க்ரயமாகக் கொடுத்து ஸோமலதையைவாங்க வேண்டுமென்று இந்த லக்ஷணமுடைய கன்றுக்குட்டியை க்ரய ஸாதனமாக தெரிவிக்கின்றது. இந்த வாக்யத்திலுள்ள 'அருணயா' என்ற பதம் த்ருதீயாவிபக்தியில் சொல்லப்பட்டிருந்தாலும் 'க்ரீணுதி' என்ற க்ரியாபதத்துடன் அன்வயிக்கமுடியாது. ஏனெனில்

'அருணயா' என்பது குணமானதால் ஸாதனமாக ஆகமுடியாது. அதனால் இந்த வாக்யத்தில் வேறு கதி இல்லாததால் சாக்ஷாத் அன்வயத்தை விட்டு விட்டு பரம்பரை அன்வயத்தை ஒத்துக்கொள்ளப்படுகிறது. இந்த வாக்யத்தில் பரம்பரையாக அன்வயம் சொல்லப்படுகிறது என்பதற்காக எல்லா இடங்களிலும் பரம்பரையாகவே அன்வயம் ஏற்படுகிறது என்று நியமம் சொல்லமுடியாது. ஆகவே சப்தத்தைக்கேட்டவுடன் வாக்யத்திலிருந்தே சாக்ஷாத் அன்வயார்த்தபோதம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். அதன் பிறகே ஆவாப உத்வாபங்களினால் பத பதார்த்தஞானம் ஏற்படுகிறது என்றுதான் சொல்லவேண்டும். இந்த விஷயத்தையே பட்டர் என்பவரும் 'சாக்ஷாத்யத்யபிகுர்வந்தி' என்று தெரிவிக்கின்றார்.

**377, 378. அவதாரிகை :**

**பூர்வ :** பதங்கள் அந்தந்த அர்த்தத்தை தெரிவிக்கவில்லையென்றாலும் வேறு ஏதாவது ஒரு முறையில் அறியப்படுகின்ற அர்த்தத்தின்மூலமாக ஒன்றுடன் ஒன்று அன்வயித்து வாக்யம் அர்த்தபோதத்தை உண்டுபண்ணலாம். ஆகையால் பதார்த்த ஸ்ம்ருதி இல்லாமலேயே வாக்யத்திலிருந்து அன்வயார்த்தபோதம் ஏற்படலாமே?

**ச்லோகம் :**

श्वेतिमानमभिपश्यतः पुरः श्रृण्वतस्तदनु हेषितध्वनिम् तद्वदत्र खुरमुद्गरस्वनं श्वेतरूपतुरगोऽटतीति धीः ।
तद्वदत्र पदजातबुद्धिभिर्बोधिताखिलपदार्थहेतुकः सर्वशब्दविषयार्थसंगतेः प्रत्ययो भवति योग्यतादिभिः ॥

**ச்லோகார்த்தம் :** தனக்கு முன்னால் இருக்கின்ற வெள்ளை நிறமுள்ள வஸ்துவை பார்க்கின்றவனும், அதன் பிறகு கனைக்கின்ற சப்தத்தையும், கனமான குளம்பின் சப்தத்தையும் கேட்க்கின்ற ஒரு புருஷனுக்கு வெள்ளைநிறக்குதிரை ஓடுகிறது என்ற ஞானம் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** சப்தத்திலிருந்தே அன்வயபோதம் ஏற்படுகின்றதால் அன்வய போதத்திற்கு சப்தம்தான் காரணம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் சக்ஷுராதி கரணங்களினாலும் விசிஷ்டார்த்தபோதம் ஏற்படலாம். உதாரணமாக வெகுதூரத்தில் நிற்கின்ற ஒரு ப்ராணியை ஒருவன் பார்க்கின்றபோது அந்த வஸ்து என்னவென்று தெரியாவிட்டாலும் அந்த வ்யக்தியிலுள்ள வெள்ளைநிறம் மட்டும் கண்ணினால் க்ரஹிக்கப்படுகிறது. அதன்பிறகு அதனுடைய கனைப்பு சப்தம் செவியினால் க்ரஹிக்கப்பட்டவுடன் இது ஒரு குதிரை என்று அறிகிறான் அதன் பிறகு அந்த குதிரை ஓடுகின்றபோது குளம்பின் சப்தத்தை செவியினால் க்ரஹிக்கின்றபோது குதிரை ஓடுகின்றது என்பதை அறிகிறான் இந்தவிதம் கண்களினால் க்ரஹிக்கப்பட்ட விஷயத்தைக்கொண்டும், செவியினால் க்ரஹிக்கப்பட்ட விஷயத்தைக்கொண்டும், 'வெள்ளைக் குதிரை ஓடுகிறது' என்று அன்வயார்த்தபோதம் ஏற்படலாமே? ஆகவே, இதேபோல் பதங்களிலிருந்து முதலில் தனித்தனியே அர்த்தம் அறியப்பட்டபிறகே யோக்யதை ஆகாங்க்ஷை ஸன்னிதி என்பவைகளைக்கொண்டு பதார்த்த ஸம்பந்தம் என்பது ஸ்வயமே ஏற்படுவதாகச் சொல்லலாமே? சப்தத்திலிருந்தே அன்வயபோதம் ஏற்படுவதாகச் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

**379. அவதாரிகை :**

இவ்விதம் ஆக்ஷேபிக்கப்பட்ட விஷயம் சரியல்ல என்று தூஷிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नैतत् क्लृप्तनिमित्ततोऽपि घटते संसर्गधीरीदृशी श्वेतोऽश्वस्त्वरितोऽभिधावतितरामित्यादिका योत्थिता ।
कार्यं क्लृप्तनिबन्धनं यदि भवेन्नास्यापरं कारणं कल्प्यं तेन पदार्थजातजनिता नैषा मतिर्लिङ्गजा ॥

**ச்லோகார்த்தம் :** இது சரியல்ல, வெள்ளைக்குதிரை வேகமாக ஓடுகிறது என்ற இந்த ஸம்ஸர்க்கஞானமானது, ப்ரஸித்தமான ப்ரமாணங்களினால் ஏற்படுகிறது என்று சொல்வதற்கு முடியும். ஆகவே, ஒரு கார்யம் ஏற்படுவதற்கு ப்ரஸித்தமான காரணம் இருக்கின்றபோது வேறு ஒரு காரணம் கல்பிக்கமுடியாது. ஆகவே, இந்த ஞானம் பதார்த்தங்களினால் ஏற்பட்டதல்ல லிங்கத்தினால் ஏற்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** பதங்களின் ஸம்ஸர்க்கபோதம், பதார்த்தத்திலிருந்து ஏற்படுவதாக சொல்வதற்குமுடியாது. பதார்த்தம் என்பது ப்ரமாணமில்லை. இவ்விதம் இருந்தும், பதார்த்தத்திலிருந்தே அன்வயபோதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானால் (ஆகமம்) சப்தம் என்பது ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. அந்தந்த வஸ்து விஷயகமான ஞானம் என்பது (அர்த்தபோதம்) அததற்கு உரிய ப்ரமாணத்தைக்கொண்டே (கார்யகாரணத்தைக் கொண்டு) ஏற்படுகிறது என்ற நியதியை அனுசரித்தே அந்தந்த ஞானம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். இதைத்தவிர வேறு எந்த முறையிலும் வாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. இந்த நியமத்தை அனுசரிக்காமல் வேறு எந்தவிதமாக சொல்லப்பட்டாலும், அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். எப்படியெனில் 'வெள்ளைக்குதிரை ஓடுகிறது' என்று அறியப்படுகின்றபோது, வெள்ளை நிறமுள்ள ஒரு வஸ்து கண்களினால் ப்ரத்யக்ஷமாக க்ரஹிக்கப்படுகிறது. அதன்பிறகு குளம்பின் ஓசையைக்கேட்டு இது நான்கு கால் ப்ராணி என்பதையும், கனைப்பு சப்தத்தைக்கேட்டு இது குதிரை என்றும் ச்ரோத்ரேந்த்ரியத்தினால் அறியப்பட்டதைக் கொண்டு அனுமானம் செய்வதன்மூலம், வெள்ளைக்குதிரை வேகமாக ஓடுகிறது என்று அறிகிறான் ஆகவே, இவ்விதம் ப்ரத்யக்ஷத்தினால் அறியப்பட்டதைக் கொண்டே அந்த வஸ்துவை அனுமானத்தினால் அறிகிறான், என்றே சொல்லவேண்டும். ஆகையால் அந்தந்த காரணத்தைக் கொண்டு அததற்கு உரிய கார்யம் ஏற்படுகிறது என்ற நியமம் இருக்கின்றபோது இதைவிட்டு வேறு காரணங்கள் கல்பிக்கப்படுமானால் அது பொருந்தாது. இதேபோல் பதார்த்தத்தினால்தான் வாக்ய ஸம்ஸர்க்கபோதம் ஏற்படுவதாக சொல்லப்படுமானால் அந்த ஞானம், சப்தம் என்ற ப்ரமாணத்தினால் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது என்பதை கீழேயும் விளக்கப்பட்டிருக்கிறது. சாப்தம் ப்ரமாணம் என்று சொல்லவேண்டுமானால், பதார்த்தத்திலிருந்து வாக்யபோதம் ஏற்படுவதாகச் சொல்வது முற்றிலும் பொருந்தாது.

**380. அவதாரிகை :**

**பூர்வ :** அனுமானத்தினால் எந்த விஷயம் அறியப்படுகிறதோ அதே விஷயம் மற்றொரு ஸமயம், ப்ரத்யக்ஷத்தினாலும் கிரஹிக்கப்படுகின்றதே? அதேபோல், பதார்த்தம் என்ற ப்ரமாணத்தினால் அறியப்படும் விஷயம், ப்ரத்யக்ஷத்தினாலும் அறியப்படுவதாகச் சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்வதற்குமுடியாது. ஏனெனில், ப்ரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் (சாப்தம்) என்ற ப்ரமாணங்களைப்போல் பதார்த்தம் என்பதும் ஒரு ப்ரமாணம் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

पादार्थं न पृथक् प्रमाणमपरं नानाप्रमाणोद्भवं नाप्येतत्फलमत्र पक्षयुगले कल्प्यं निमित्तान्तरम् ।
क्लृप्तं लिङ्गमतोऽपि निर्वहति चेत्संसर्गधीरीदृशी पादार्थी न पृथक् प्रमा न च फलं नानाप्रमाणोद्भवम् ॥

**ச்லோகார்த்தம் :** பதார்த்தரூபம் என்ற ஒரு விசேஷமான ப்ரமாணம் என்பதே கிடையாது அன்விதஞானம் என்ற பலமானது, பல ப்ரமாணங்களிலிருந்து ஏற்பட்டதும்அல்ல. இந்த இரண்டு பக்ஷத்திலும் வேறு ப்ரமாணங்கள் கல்பிக்கநேரிடும். இந்த இடத்தில் ப்ரஸித்தமான அனுமானப்ரமாணம் இருக்கின்றது. இந்த ப்ரமாணத்திலிருந்து ஸம்ஸர்க்கஞானம் ஏற்படுகிறது

என்பதை நிர்வாகம் செய்யமுடியும். ஆகவே, பதார்த்தங்களிலிருந்து ஞானம் ஏற்படுகிறது என்பது கிடையாது. அன்வித ஞானம் என்பது பல ப்ரமாணங்களிருந்து ஏற்படுவதாகவும் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரமாணங்களில், பதார்த்த ரூபமான ப்ரமாணம் என்பதே கிடையாது. இதேபோல் அனேக பதார்த்தங்கள் என்ற ப்ரமாணங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு விஷய ஞானத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லப்படுவதையும் ஒப்புக்கொள்ளமுடியாது. உதாரணமாக 'வெள்ளைக் குதிரை வேகமாக ஓடுகிறது' என்ற ஞானம் ஏற்படுகின்றபோது, வெளுப்பு என்ற நிறம் சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்தினால் ப்ரத்யக்ஷமாக ஏற்படுகிறது என்றும் அதன் கனைப்பு சப்தம் குளம்பின் ஓசை வேகம் என்பதெல்லாம் ச்ரோத்ரம் என்ற ப்ரமாணத்தினால் அறியப்படுவதால் இது குதிரை என்றும் வேகமாக ஓடுகிறது என்பதும் அனுமானத்தினால் அறியப்படுகிறது என்றே சொல்ல வேண்டும் ஆகவே ப்ரத்யக்ஷம் அனுமானம் என்ற ப்ரமாணங்களைக் கொண்டே இந்த ஞானம் ஏற்படுவதாகச் சொல்லவேண்டுமேயன்றி வேறு எந்தவிதமாகவும் கல்பிக்கமுடியாது. இவ்விதமின்றி, பதங்களிலிருந்து தனித்தனியாக அந்தந்த பதார்த்தங்கள் அறியப்படுவதாகவும் அதன் பிறகு அந்த பதார்த்த அன்வயம் ஏற்பட்டு வாக்யம் அர்த்தபோதமாகிறது என்றும் சொல்வது பொருந்தாது. ஏனெனில் அந்தந்த பதார்த்தங்கள் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானால், இவ்விதம் அறியப்பட்ட அனேக விதமான ப்ரமாணங்களைக் கொண்டு 'வெள்ளைக்குதிரை ஓடுகிறது' என்று அன்வயபோதம் ஏற்படுவதாகச் சொல்வது முற்றிலும் பொருத்தமற்றது. அதுமட்டுமல்ல, இவ்விதம் சொல்வதற்குரிய அவஸ்யமும் கிடையாது. ஏனெனில் ஒரு விஷயத்தின் ஞானம் ஏற்படுவதில் 'லிங்கம்' என்பதே ப்ரமாணமாக இருக்கிறது. மற்றொரு விஷயத்தில் ப்ரத்யக்ஷமே ப்ரமாணம் என்று வ்யவஸ்த்திதமாக இருக்கிறது. ஆகவே, ப்ரத்யக்ஷம் அனுமானம் என்ற இரண்டு ப்ரமாணங்களைக் கொண்டு வன்னி என்பது எப்படி அனுமானிக்கப்படுகின்றதோ அதேபோல் இந்த இரண்டு ப்ரமாணங்களைக் கொண்டே 'வெள்ளைக்குதிரை வேகமாக ஓடுகிறது' என்பதும் அறியப்படுகிறது என்றே சொல்ல வேண்டும். அதாவது எப்படி தூமத்தை ப்ரத்யக்ஷமாகப் பார்த்து வன்னி அனுமானிக்கப்படுகிறதோ அதேபோல் வெள்ளைக்குதிரை ஓடுகிறது என்ற ஞானம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

இந்தவிதம் சப்தத்தைக் கேட்டவுடன் பொதுவாக அன்வயபோதம் ஏற்படுகிறது என்றும், அதன்பிறகே பதார்த்தங்களின் விசேஷார்த்தம் அறியப்படுகிறது என்றும் சொல்வது தான் பொருந்தும். இவ்விதமின்றி பதார்த்த ஞானத்திலிருந்தே வாக்யார்த்தஞானம் ஏற்படுகிறது என்றோ, அனேக பதார்த்தங்களிலிருந்து (அனேக ப்ரமாணங்களிலிருந்து) ஒரு வஸ்து ஞானம் ஏற்படுகிறது என்றோ சொல்லப்படுவதை ஒப்புக்கொள்வதற்குமுடியாது. ஏனெனில், இவ்விதம் ஒப்புக்கொள்வதற்குரிய ப்ரமாணமும் ஏதும் கிடையாது. இந்த விஷயம் லோகப்ரஸித்தமுமில்லை. அதாவது சக்ஷுராதி பலப்ரமாணங்கள் சேர்ந்து ஒரு விஷயஞானத்தை உண்டுபண்ணுகிறது என்பதாக லோகத்தில் அறியப்படவில்லை. ஆகையால் இவ்வித கல்பனைக்கு இடமே இல்லை.

**381. அவதாரிகை :**

இவ்விதம் கீழே சொல்லப்பட்ட இரண்டு பக்ஷங்களையும் சரியல்ல என்று நிராகரிக்கப்பட்ட விஷயம் இப்போது ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

नासंसृष्टमतो वदन्ति न च तान्याहुः क्रियासंगतं योग्येनान्वितमेव केवलममून्याहुः स्वमर्थं यतः ।
एवं सत्यपवर्जितक्रियमलं निष्पन्नरूपं सदा संसर्गादिविवर्जितं च वदितुं वस्तुस्वरूपं श्रुतिः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் பதங்களானது, அஸம்ஸ்ருஷ்ட்டார்த்தத்தையோ, க்ரியான்விதமான அர்த்தத்தையோ தெரிவிப்பதில்லை ஏனெனில், பதங்கள் யோக்யமான வேறு ஒரு பதத்துடன் அன்வயித்து தன்னுடைய அர்த்தத்தை தெரிவிக்கின்றது. இந்தவிதம் ச்ருதியானது, க்ரியாஸம்பந்தம் அற்றதும் ஸம்ஸர்க்காதிகள் அற்றதுமான சித்தவஸ்து ஸ்வரூபத்தை தெரிவிப்பதற்கு ஸாமர்த்யம் உடையதாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயித்து வாக்யார்த்தம் போதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால், ஒரு வாக்யமானது அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றபோது, வேதாந்த வாக்யத்தில் அன்வயத்திற்கு விரோதம் ஏற்படுமானால் அந்த இடத்தில் பாகத்யாக லக்ஷணையினால், ஸம்ஸர்க்கத்தைவிட்டு, ஏகரூபமான அகண்டார்த்தத்தை வாக்யம் போதிக்கின்றது என்று சொல்லலாம் அதாவது, அன்வய விரோதம் ஏற்படுமிடத்தில், இதுவரை அறியப்படாத 'ஜீவப்ரஹ்ம ஐக்யம்' என்பதை ச்ருதிவாக்யமானது லக்ஷணையினால் போதிப்பதற்கு ஸாமர்த்யமுடையதாக இருக்கிறது என்று சொல்லமுடியும். ஆகவே 'கார்யான்விதே சப்த சக்தி:' என்று சொல்லப்பட்ட பக்ஷத்தை கண்டிக்கப்படுவதற்கு இதுவே முக்யகாரணம். இதேபோல், பதங்களின் அர்த்தம் அறியப்பட்ட பிறகுதான் அவைகளின் ஸம்பந்தம் அறியப்படுகிறது என்றும் சப்தம் ஸம்ஸ்ருஷ்ட்டார்த்தபோதகம்தான் என்றும் சொல்லப்படும் பக்ஷத்தையும் கண்டிக்கப்படுகிறது. ஆகவே பதங்கள், தனித்தனியே அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்றும் அதன்பிறகு அன்வயம் ஏற்படுகிறது என்று சொல்லப்படும் அபிஹித அன்வயவாதம் சரியல்ல. 'அன்ய அன்விதேபதானும் சப்த சக்தி:' என்று சொல்வதே சரியானது. கார்யமென்றோ அல்லது அகார்யமென்றோ, எந்த விதமான விசேஷணமும் சேர்க்காமல், யோக்யமுள்ள பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

உதாரணமாக :- 'ஆனய' என்ற வாக்யத்திலுள்ள க்ரியாபதத்தை மட்டும் ப்ரயோகம் செய்தாலும் அர்த்தபோதம் ஏற்படாது. அதேபோல் 'கோ' பதத்தை மட்டும் ப்ரயோகம் செய்தாலும் அர்த்தபோதம் ஏற்படாது. ஆகையால் 'பசுவை கொண்டுவா' என்ற வாக்யம், பூர்ணமான அர்த்தத்தை தெரிவிக்கவேண்டுமானால், பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயித்த பிறகே அதன் அர்த்தத்தை தெரிவிக்கமுடியும். ஆகவே வேத வாக்யங்களிலும் 'ஸ்வர்க்க காமோயஜேத' என்ற கர்மகாண்ட வாக்யம் 'ஸ்வர்க்கம் என்ற இஷ்ட்டத்திற்கு யாகம் (இஷ்ட்ட) ஸாதனம்' என்று தெரிவிக்கிறதேயன்றி க்ரியையை போதிக்கின்றது என்று சொல்வதற்குமுடியாது என்பதால், கார்யாபேக்ஷையே இல்லாத வேதாந்தவாக்யம் எப்படி க்ரியையை போதிக்கமுடியும்? ஆகவே, வேதாந்த வாக்யம் அகண்டார்த்தமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே போதிக்கின்றது என்பதாலேயே ச்ருதி வாக்யங்கள் ப்ராமாண்யத்தை அடைகின்றது. ச்ருதி வாக்யமானது சித்தவஸ்துவை போதிப்பதற்கு ஸாமர்த்யம் உடையதாக இருக்கின்றது என்பதால் உபநிஷத்வாக்யங்கள் ஒன்றுடன் ஒன்று ஸம்ஸர்க்கமான அர்த்தத்தை போதிக்கின்றது என்றோ அல்லது விசேஷண, விசேஷ்ய பாவத்துடன் கூடிய வஸ்துவை போதிக்கின்றது என்றோ சொல்லமுடியாது. அகண்டார்த்தத்தையே வாக்யம் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

## 382. அவதாரிகை :

வாக்யம் என்றாலே அது ஏவலைத்தான் போதிக்கின்றது என்று வாதம் செய்யப்படுவதை கண்டிப்பதற்காகவே வாக்யம் என்பது அன்விதமான அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்று பிடிவாதமாகச் சொல்லப்படவேண்டியதாக இருக்கிறது ஏனெனில், அன்விதார்த்த போதகம் என்று சொல்லப்பட்டால்தான் நியோகம் என்பது சித்திக்கும். அதனால் அபிஹித அன்வயமா? அன்வித அபிதானமா? என்று விசாரித்து அபிஹித அன்வயவாதம் சரியல்ல என்று கண்டிக்கப்பட்டது.

ஆனுல் வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுகின்ற (வேதாந்தியான) உங்களுடைய பக்ஷத்தில் வாக்யம் அன்விதார்த்த போதகம் என்றோ அல்லது அனன்விதார்த்த போதகம் என்றோ எதைச்சொன்னுலும், அதில் விசேஷம் ஏதுமில்லாததால், இந்த விஷயத்தில் வாக்யம் அன்விதார்த்த போதகம்தான் என்று வாதம் செய்யவேண்டிய அவஸ்யம் என்ன? என்ருல், அதற்குமேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अभिहितघटनाऽथवाऽन्वितानामभिहितिरस्त्वथवा न पक्षपातः ।
क्वचिदपि समयेऽस्ति नः कदाचिद्बहुघटनात्मकवस्तुनिष्ठवाक्ये ॥

**ச்லோகார்த்தம் :** பல பதங்கள் சேர்ந்து ஸம்ஸ்ருஷ்டமான அர்த்தத்தை தெரிவிக்கின்ற இடத்தில் அபிஹிதான்வயவாதம் என்று சொல்லப்படுவதிலோ அல்லது அன்வித அபிதான வாதம் என்று சொல்லப்படும் விஷயத்திலோ எங்களுக்கு எவ்விதமான பக்ஷபாதமும் கிடையாது.

**வ்யாக்யானம் :** 'தமேதம் வேதானு வசனேன' என்ற வேதாந்தத்திலுள்ள அவாந்தர வாக்யங்களுக்கு, அன்வித அபிதானம் என்பது உபயோகமாக இருக்கிறதென்பதை தெரிவிப்பதற்காகவே இந்த விஷயத்தைப்பற்றி விசாரிக்க வேண்டியதேவை ஏற்பட்டது. ஆனுல் மஹாவாக்யங்களில் இந்த விசாரணைக்கு தேவையே கிடையாது. உண்மையென்னவென்ருல் பதார்த்தங்களின் போதத்திற்குப் பிறகே அன்வயார்த்தபோதம் ஏற்படுகிறது என்ற விஷயத்திலோ அல்லது அன்வயித்த அர்த்தத்தில்தான் போதம் ஏற்படுகிறது என்ற விஷயத்திலோ எங்களுக்கு பக்ஷபாதம் ஏதுமில்லை. ஏனெனில், இவ்வித விசாரங்கள் எல்லாம், அனேக பதார்த்தங்களின் ஸம்ஸர்க்கத்துடன்கூடிய வாக்யங்கள் எப்படி அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்பதைப்பற்றிய விசாரமானதால், ஸம்பந்தம் முன்னுல் போதிக்கப்படுகிறதா? பின்னுல் போதிக்கப்படுகிறதா? என்ற விசாரம் எங்களுக்கு தேவையே இல்லை. ஆகவே அன்விதாபிதானமாக இருந்தாலும்சரி அபிஹிதான்வயமாக இருந்தாலும்சரி இதில் பக்ஷபாதம் ஏதுமில்லை.

**383. அவதாரிகை :**

எங்களுடைய பக்ஷத்தில் விசாரிக்கப்படுகின்ற விஷயம், மஹாவாக்யமானதால், (அபிஹிதான்வயமா அன்விதாபிதானமா ) இந்த இரண்டு பக்ஷத்தைப் பற்றி விசாரிக்கவேண்டிய அவஸ்யமே கிடையாது.

**ச்லோகம் :**

अभिहितघटना न चोपपन्ना परदृशि नाभिहितिस्तथान्वितानाम् ।
अनधिकविकलार्थगोचारत्वान्न तदुभयं श्रुतिमस्तके पदानाम् ॥

**ச்லோகார்த்தம் :** சுத்த சைதன்யம் என்ற விஷயத்தில் அபிஹித அன்வயம் என்பதோ (அல்லது) அன்விதாபிதானம் என்பதோ ஸம்பவிக்காது. வேதாந்தத்தில் பதங்களானது அன்விதார்த்த விஷயமாகவோ (அல்லது) அனன்விதார்த்த விஷயமாகவோ இல்லாததால் இந்த இரண்டுமே ஸம்பவிக்காது.

**வாக்யானம் :** வேதாந்த வாக்யங்கள் அகண்டார்த்தத்தை போதிக்கின்ற மஹா வாக்யங்களைப்பற்றி விசாரிக்கின்றதால் இந்த இடத்தில் (வாக்யம்) அபிஹிதத்திற்கு அன்வயமா அல்லது அன்விதத்தின் அபிதானமா என்று விசாரிக்கவேண்டிய தேவையே கிடையாது. ஆகையால் இரண்டு பக்ஷத்திலும் எங்களுக்கு இஷ்டம் ஏதுமில்லை 'தத்வமஸ்யாதி' மஹா வாக்யங்களிலுள்ள பதங்களில் பேதம் எதுவுமே இல்லையென்பதையும், அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்பதையும் 'ஏகதைவ' அனுத்ரஷ்டவ்யம் என்ற வாக்யம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் ஏகம்என்றே அறியவேண்டும் என்று, இந்தவாக்யம் அகண்டார்த்தத்தை

போதிப்பதாக ச்ருதிப்ரமாணமே போதிக்கின்றதால் வாக்யம் அன்விதார்த்தபோதகமா? இல்லையா? என்ற விசாரத்திற்கே இடமில்லை. ஏனெனில் அஸம்ஸ்ருஷ்டார்த்தமான அகண்டார்த்தத்தையே போதிக்கின்றதால், ஸம்ஸர்க்கம் (அன்வயம்) முன்னால் போதிக்கப்படுகிறதா? பின்னால் போதிக்கப்படுகிறதா? என்ற விசாரணைக்கே இடமில்லை என்பதால் இந்த இரண்டு பக்ஷத்திலும் எங்களுக்கு ஆர்வம் ஏதுமில்லை. மேலும் அஸங்க சிதாத்ம ஸ்வப்ரகாச ஸ்வரூபமாக இருக்கின்ற ப்ரத்யகாத்மாவை அறிவிக்கக்கூடிய பதங்களே கிடையாது. ஸ்வப்ரகாச ஸ்வ ரூபமான ஆத்மா, ஏதாவது ஒரு பதார்த்தத்துடன் அன்வயிக்கக்கூடியதாக இருக்குமானால் (அன்வயப்ரதியோகித்வம்) அபிதையினால் (சப்தத்தினால்) அறியப்படுவதாகச் சொல்லலாம். ஆத்ம ஸ்வரூபம் சப்தத்தினால் போதிக்கக்கூடியதுஅல்ல. ஆகவே ஸ்வப்ரகாச ஸ்வரூபமான ஆத்மா அன்விதமாகவோ அனன்விதமாகவோ போதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. வேதாந்த வாக்யங்கள் அதிகார்த்த கோசரமுமில்லை, விகலார்த்த கோசரமுமில்லை.

**384. அவதாரிகை :**

அன்விதாபிதானம் என்றும் அபிஹிதான்வயம் என்றும் சொல்லப்படும் இரண்டு பக்ஷங்களினால் பதார்த்தஞானம் ஏற்படுவதில் இரண்டிற்குமுள்ள வித்யாஸம் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** अभिहितघटना यदा तदानीं स्मृतिसमबुद्धियुगं पदे विधत्तः ।
परदृशि पुनरन्विताभिधाने पदयुगलात्स्मृतियुग्ममेव पूर्वम् ॥

**ச்லோகார்த்தம் :** அபிஹிதான்வய வாதத்தில், தத் த்வம் என்ற இரண்டு பதங்களும், முதலில் சைதன்ய விஷயத்தில் ஸ்ம்ருதி ஸமமான இரண்டு அர்த்தத்தை தெரிவிக்கின்றது. அன்விதாபிதான வாதம் என்பதில் இரண்டு பதங்களிலிருந்தும் ஸ்ம்ருதி த்வயமே ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** அபிஹித அன்வயவாதம் என்பது பட்ட மதஸ்த்தர்களின்வாதம். அதாவது, பதங்கள், தனித்தனியாக அந்தந்த பதார்த்தங்களை தெரிவித்தவுடன் அந்த பதங்களின் ப்ரயோஜனம் முடிவை அடைகின்றது. இவ்விதம் பதார்த்தங்களை போதிக்கின்ற சக்தி, அந்த பதங்களில் இருக்கின்றதால் பதங்கள் வாசகம் என்று சொல்லலாமேயன்றி ஸ்மாரகம் என்று சொல்லமுடியாது. அதனால் பதங்கள் ஸ்ம்ருதி ரூபம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸ்ம்ருதி என்பது ஸம்ஸ்க்காரத்தினால் ஏற்படுகிறது. ஏற்கனவே அறியப்பட்ட அர்த்தத்தை மறுபடியும் தெரிந்து கொள்வதாகச் சொல்லப்படுமானால் அதை அனுவாதம் என்றே சொல்லலாம். இவ்விதம் பதங்களிலிருந்து அறியப்பட்ட அர்த்தத்தையே, மறுபடியும் அந்த பதங்களிலிருந்து அறியப்படுகிறது என்ற தன்மையினால் (காரணத்தினால்) ஸம்ருதிக்கு ஸமம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே மஹாவாக்யத்திலுள்ள தத் த்வம் என்ற இரண்டு பதங்களும் வாச்யார்த்தமாக ஸபள ஸ்வரூபத்தையே ஸ்ம்ருதிக்கு ஸமமான அர்த்தத்தில் இரண்டுபதங்களும் போதிக்கின்றது என்றே சொல்லலாம். அன்வித அபிதானம் என்ற இரண்டாவது பக்ஷத்தை விசாரிக்கின்றபோது வாக்யத்திலுள்ள பதங்கள் முதலில் அன்விதமான அர்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதால், வாக்யத்தைக் கேட்டவுடனேயே பொதுவாக விசிஷ்டார்த்த போதம் ஏற்படுகிறது என்றும் அதன்பிறகு தனித்தனியாக பத சக்தியினால் அர்த்தம் அறியப்படுவதாகவும் சொல்வது சரியல்ல. ஏனெனில் ஏற்கனவே பொதுவாக அறியப்பட்ட அர்த்தத்தின் ஸம்ஸ்க்காரத்தினால் பின்னால் ஆவாபஉத்வாபங்களைக்கொண்டு அந்தந்தபதார்த்தஞானம்

ஏற்படுகிறது. ஆகவே இந்த பக்ஷத்தில் பதார்த்த ஞானம் என்பது ஸ்ம்ருதி ரூபம் என்று சொல்லலாம். ஆகையால் அன்வித அபிதானம் என்ற பக்ஷத்தில், பத சக்தியானது, அன்விதமான அர்த்தத்தையே போதிக்கின்றதேயன்றி கேவலபதார்த்தத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. (பதார்த்தஞானம் பத கரணகமாக ஏற்படவில்லை) இந்தவிதம் அன்விதஅபிதானவாதம் என்பதோ அல்லது அபிஹித அன்வயவாதம் என்பதோ ச்ருதிவாக்யமான, மஹாவாக்யத்தை விசாரிக்கின்ற விஷயத்தில் தேவையே கிடையாது. ஆனாலும் வாக்யத்தைக்கேட்டவுடனேயே, தத்பத ஸபதார்த்தமும், த்வம்பத ஸபதார்த்தமும், விசிஷ்டமாக அறியப்பட்டால்தான் அதிலுள்ள விரோதங்கள் அறியப்படுவதாகச் சொல்லலாம். ஆகவே, பாகத்யாகலக்ஷணையைக்கொண்டு அகண்டார்த்தம் அறியப்படுவதற்குமுன், அன்விதமான அர்த்தத்தையே இந்த வாக்யம் போதிக்கின்றது என்று சொல்லவேண்டும். இவ்விதம் விசிஷ்டார்த்தபோதம் ஏற்பட்டால்தான், தத் த்வம் பதங்களுக்கு அன்வயம் ஏற்படவில்லையே என்று விசாரிக்கின்றபோது லக்ஷணையினால் அகண்டார்த்தம் போதிக்கப்படுவதாகச் சொல்லலாம். ஆகவே அன்வித அபிதானவாதம் என்பது இந்த அம்ஸத்தில் மட்டும் ப்ரயோஜனமாக இருக்கிறது என்பதால், இந்த விஷயத்தைப்பற்றி விசாரிக்கப்பட்டது. (வாக்யத்திலிருந்து அன்வயமே அறியப்படவில்லையென்றால் லக்ஷணையினாலும் அர்த்தம் ஸம்பவிக்கமுடியாது.)

ஆனாலும் மஹாவாக்யத்தினால் ஏற்படும் அகண்டார்த்தபோதம் என்பது அபிதையினால் (சப்தசக்தியினால்) அறியக்கூடியதல்ல என்பதால் அபிஹித அன்வயம் என்ற பக்ஷத்திற்கோ அல்லது அன்வித அபிதானம் என்ற பக்ஷத்திற்கோ அகண்டார்த்தத்தை போதிக்கின்ற இந்த மஹாவாக்யத்தில் இடமே இல்லை.

**385.** அவதாரிகை :

இந்த இரண்டு பக்ஷங்களிலும் வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதில் என்ன விசேஷம் இருக்கிறது (வித்யாஸம்) என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स्मृतिसमपदजन्यबुद्धियुग्मात् परदृशि मोहनिवर्त्तनं परेषाम् ।
परदृशि पदजस्मृतिद्वये स्यात् पदयुगलात्प्रमितेः समुद्भवो नः ॥

**ச்லோகார்த்தம் :** பிறர்களுடைய மதத்தில் (அபிஹிதான்வயமதத்தில்) பதத்திலிருந்து ஏற்பட்ட ஸ்ம்ருதிக்கு ஸமமான ஞானத்திலிருந்து ஆத்மவிஷயகமானஞானம் ஏற்படுகிறது. எங்களுடைய (அன்விதஅபிதான) மதத்தில் தத் த்வம் பதங்களிலிருந்து இரண்டு ஸ்ம்ருதிரூபமானஞானம் ஏற்பட்டவுடன், பதங்களிலிருந்து ஞானம் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** அபிஹித அன்வயபக்ஷமாக இருந்தாலும்சரி அல்லது அன்வித அபிதான பக்ஷமாக இருந்தாலும் சரி இதில் எந்த பக்ஷமும் வேதாந்த சித்தாந்தத்திற்கு தேவையேஇல்லை. ஆனால் அன்விதஅபிதான பக்ஷமானது மஹாவாக்யத்திலிருந்து அர்த்தபோதம் ஏற்படுவதற்கு உபகாரகமாக இருக்கின்றது என்ற காரணத்தினால், அந்த பக்ஷத்தை ஒப்புக்கொண்டு விசாரிக்கப்பட்டது. இந்த இரண்டு பக்ஷங்களிலிருந்து வாக்யார்த்தபோதம் ஏற்படுவதில் என்ன வித்யாஸம் இருக்கிறதென்பதை மேலே விளக்கப்படுகிறது. அபிஹித அன்வய வாதத்தில் முதலில் (பதத்தின் சக்தியினால்) பதத்திலிருந்து பதார்த்த ஞானம் ஏற்பட்டு அதன் பிறகு ஸ்ம்ருதிக்கு ஸமமான பதார்த்தஞானத்திலிருந்து வாக்யார்த்தஞானம் ஏற்படுவதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுமானால், ப்ரஹ்ம விஷயகமான அஞ்ஞான நிவர்த்தி என்பது சப்தத்திலிருந்து ஏற்பட்டதாகச் சொல்லமுடியாது ஸ்ம்ருதி ஸமமான பதார்த்தத்திலிருந்து ஏற்படும்

ஞானத்திலிருந்தே அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுவதாக சொல்ல நேரிடும். இதனுல் சப்தம் ப்ரமாணம் என்று சொல்வதற்கே முடியாது.

அன்வித அபிதான வாதத்தில் முதலில் பதங்கள் ஒன்றுக்கொன்று அன்வயித்து ஸம்ஸர்க்கமான அர்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதால் வாக்யத்திலிருந்தே அர்த்தபோதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் வாக்யத்திலிருந்து ஏற்படும் பதார்த்தங்களின் அன்வயத்தில் விரோதம் அறியப்படுவதால், லக்ஷணையினுல் அகண்டார்த்தம் (அறியப்படுவதாக) சித்திப்பதாகச் சொல்வதற்குமுடியும். ஆகவே அன்வித அபிதான வாதத்தில், சப்தத்திலிருந்தே அன்விதார்த்தம் அறியப்படுவதால் சப்தம் ப்ரமாணம் என்று சொல்வதற்கு முடியும். அதனுல் வாக்யத்திலிருந்தே அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது என்றும் அகண்டார்த்தபோதம் ஏற்படுவதாகவும் சொல்லமுடியும். ஆகவே அன்வித அபிதானம் என்ற பக்ஷத்தில்தான் ப்ரமை என்பது சாப்தீ என்ருகும் (சப்தம் என்ற ப்ரமாணத்தினுல் ஞானம் ஏற்படுகிறது என்பதால்). இந்த வாதத்தை ஆக்ரஹமாக சித்தம் செய்யப்பட்டது.

**386. அவதாரிகை :**

சித்தமான ஒரு வஸ்துவைப்பற்றி வேதம் உபதேஸிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அந்த வஸ்து, சாத்யமான க்ரியைக்கு அங்கமாகத்தான் இருக்கவேண்டும். ப்ரஹ்மமென்பது சித்தவஸ்துவானதால், க்ரியைக்கு அங்கமாகவே 'ப்ரஹ்ம' மானது உபதேஸிக்கப்படுகிறது என்று பாட்ட மதஸ்த்தர்களால், வேறெரு முறையில் ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** औदासीन्यप्रच्युतिप्रापकेऽर्थे लिङ्लोडादेर्लोकतो ज्ञातशक्तेः ।
पुंसो वेदे प्रेरकत्वेन कल्प्या लिङ्लोडादेर्भावनैवानृतन्त्रे ॥

**ச்லோகார்த்தம் :** லிங், லோட், முதலானவைகள், புருஷனிடத்தில் ப்ரவ்ருத்தியை ஏற்படுத்துகிறது என்ற அர்த்தத்தை லோகவ்யவஹாரத்திலிருந்து அறியப்பட்டிருப்பதால், அபுருஷ தந்த்ரமான வேதத்தில் லிங்லோட் முதலானவைகள் ப்ரவ்ருத்தியை ஏற்படுத்துகின்றதால் பாவனை என்றே கல்ப்பிக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** இதுவரையில் பதம் என்ருலே கார்யான்விதே சக்தி: என்று சொல்லப்படவேண்டும் என்றும் அதனுல் வேதத்திலுள்ள வாக்யங்களும் கார்யத்தையே போதிக்கின்றது என்றும் செய்யப்பட்ட ஆக்ஷேபங்களை கண்டித்து அந்த வாதங்கள் சரியல்ல என்று நிரூபணம் செய்யப்பட்டது. இந்த வாதங்களுக்கு இடையில், ப்ரஸங்கவஸாத் அபிஹிதான்வயமா? அல்லது அன்விதாபிதானமா? என்று விசாரம் செய்து இந்த இரண்டில் அன்விதஅபிதானமே சிறந்தது என்று சித்தம் செய்யப்பட்டது. இப்போது லிங் லோட் முதலானவைகளுக்கு பாவனை =ப்ர வர்த்தனை என்பதே அர்த்தம் என்று சொல்லப்படும்வாதம் சரியல்ல என்று கண்டித்து, ப்ரஹ்ம விஷயத்தில் வேதாந்தமே ப்ரமாணம் என்ற விஷயத்தை த்ருடமாக சித்தம் செய்வதற்காகமேலே, பூர்வபக்ஷம் என்ன என்பதை விளக்கப்படுகிறது. அதாவது லோகத்தில் உதாசீனமாக இருக்கின்ற ஒரு புருஷனை அந்த நிலையைவிட்டு, ஒரு கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கச் செய்ய வேண்டுமானுல் லிங் லோட் முதலான ஏவலைக் கொண்டே ப்ரவ்ருத்திக்கச் செய்யவேண்டும். ஆகையால், ஆஞ்ஞை என்பது புருஷனுடைய ப்ரவ்ருத்திக்கு ப்ரவர்த்தகமாக ஆகிறது. மேலும், புருஷப்ரச்யுதிக்கு (ஔதாசீன்யத்திலிருந்து நழுவுவதற்கு) காரணமான ஏவல் என்பதும் ஆஞ்ஞை, விதி, நிமந்தரணம், ஆமந்தரணம் ப்ரார்த்தனை என்பது

போல் பலவிதமாக இருக்கிறது. ஆகவே லோக வ்யவகாரத்தைக்கொண்டு லிஙாதிகளுக்கு ஆஞ்ஞை முதலானவைகளில் சக்தி இருக்கிறதென்று அறியப்படுகிறது. இதேபோல், அபௌருஷேயமான வேதத்தில் ஆஞ்ஞை முதலான புருஷ அபிப்ருயம் இல்லாததால் லிஙாதிகளுக்கு ஆஞ்ஞாதிகளை அர்த்தமாகச் சொல்லமுடியாது. அதனுல் லிஙாதிகளுக்கு பாவனையே ப்ரவர்த்தி என்று சொல்லவேண்டும். அல்லது லிஙாதிகளுக்கு நியோகம் என்ற ஏவல்தான் அர்த்தம் என்று சொல்லவேண்டும். ஆகவே லோகத்தில் ஆஞ்ஞை முதலானவைகளை அறிந்து ப்ரவ்ருத்திக்கிருன் என்றும் வேதத்தில் லிஙாதிகளை கேட்டவுடனேயே ப்ரவ்ருத்திக்கிருன் என்றும் சொல்லப்பட்டபோதிலும், இரண்டிலும் ப்ரவ்ருத்திக்கும்படிச்செய்வது எதுவோ அதுவே லிஙாதிகளுக்குஅர்த்தம் என்று அறியப்படவேண்டும் என்று சொல்லப்படுகிறது.

இந்தவிதம், வேதவாக்யம் பாவனையைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படும் வாதத்திற்கும் 'கார்யான்விதேபதசக்தி:' என்று சொல்லப்படும் வாதத்திற்கும் வித்யாஸம் இருக்கிறது . என்னவென்ருல், கார்யவாதம் என்பதில் (யாகம் என்பது ஸாதனமானதால் பலபர்யந்தம் க்ரியை இல்லாததால்) அர்த்தாத் அபூர்வம் என்பது கல்ப்பிக்கப்படவேண்டியதாக இருக்கிறது. ஆனுல் பாவனுவாதத்தில், பதத்திலிருந்தே பாவனை என்பது அறியப்படுகிறது. இதுவே இரண்டிற்குமுள்ள வித்யாஸம்.

**387. அவதாரிகை :**

லோகத்தில் லிஙாதிகளுக்கு ஆஞ்ஞை முதலானவைகள் அர்த்தமென்றும் வேதத்தில் பாவனை (ப்ரவர்த்தனை) அர்த்தம் என்றும் ஏன் சொல்லவேண்டும்? லௌகீக வாக்யங்களிலும் ப்ரவ்ர்த்தனையே அர்த்தமென்று சொல்லலாமே என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், லோகத்தில் ஆஞ்ஞாதிகளால் ப்ரவ்ருத்திக்கிருன் என்பது த்ருஷ்டமாக அனுபவத்தினுல் அறியப்படுகிறது. அதனுல் த்ருஷ்டமாக அறியப்படும் ஆஞ்ஞாதிகளை விட்டுவிட்டு, கேவலப்ரவர்த்தனையை லிஙாதிகளுக்கு அர்த்தமாகச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. வேதம் என்பதில் ஆஞ்ஞையை ஒத்துக்கொள்ளமுடியாததால், ப்ரவர்த்தனை என்பதை கல்ப்பிக்கிருேம்.

**ச்லோகம் :**

आज्ञाद्यर्थः प्रेरकः पौरूषेये लिङ्लोडादेर्भावना वेदवाक्ये ।
पुंसोऽभावात्तद्गताज्ञाद्यभावात् पुंसंबन्धात्प्रेरकास्ते हि वाक्ये ॥

**ச்லோகார்த்தம் :** பௌருஷேய வாக்யத்தில், ஆஞ்ஞை முதலான அர்த்தங்கள் ப்ரேரகமாக இருக்கின்றது. வேதவாக்யத்தில் லிங்லோட் முதலானவைகளின் அர்த்தமான பாவனை என்பதே ப்ரேரகமாக இருக்கிறது. ஏனெனில் லௌகிகவாக்யத்தில் புருஷஸம்பந்தம் இருக்கின்றதால் ஆஞ்ஞை முதலானவைகள் ப்ரேரகமாக இருக்கிறது. வைதிகவாக்யத்தில் புருஷஸம்பந்தமோ அதனுல் ஏற்படும் ஆஞ்ஞாதிகளோ இல்லாததால் பாவனை என்பதே ப்ரேரகமாக இருக்கிறது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் வாக்யங்கள் புருஷனுல் ப்ரயோகம் செய்யப்படுகிறது. அதனுல் ஆஞ்ஞை முதலான அர்த்தபேதங்கள் புருஷஅபிப்ருயத்தைக்கொண்டு அறியப்படுவதால் ப்ரேரணை என்பது ஸம்பவிக்கின்றது. வேதம் என்பதில், வாக்ய ப்ரயோகம் செய்யக்கூடிய புருஷன் இல்லாததால் பாவனை =ப்ரவர்த்தனை என்பதே லிஙாதிகளுக்கு அர்த்தமாகச் சொல்லவேண்டும். லௌகிக வாக்யங்களில் ஆஞ்ஞை என்பது தேவைப்படுகிறது. வேதத்தில் ஆஞ்ஞையென்பது இல்லாமலேயே, லிஙாதிகளுக்கு ப்ரவர்த்திக்கச் செய்யக்கூடிய சக்தி இருக்கிறது. ஆகையால்

ப்ரேரகத்வம் அறியப்படுகிறது. ஆகவே பௌருஷேயம் அபௌருஷேயம் என்ற வித்யாஸம் இருக்கின்றதால் வேதத்தில் லிஙாதிகளுக்கு பாவனு' என்ற அர்த்தம்தான் சொல்லவேண்டும்.

**388. அவதாரிகை :**

வேதத்தில் புருஷன் என்பவன் இல்லாததால் அபௌருஷேயமான அந்த வாக்யத்தினுல், ஏவுகின்றவன் யார்? ஏவலுக்கு விஷயம் என்ன? அந்த ஏவலினுல் ஏற்படும் வ்யாபாரம் எப்படி ஏற்படுகிறது? பாவனை என்பது என்ன? என்று செய்யப்படும் ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

लिङ्लोडादिर्भावकस्तत्र भाव्यानुष्ठेयेऽर्थे पुंस्प्रवृत्तिः प्रसिद्धा ।
लिङ्लोडादेः पुंस्प्रवृत्त्यंशनिष्ठो व्यापारो यस्तं विदुर्भावनेति ॥

**ச்லோகார்த்தம் :** லிங், லோட், தவ்யம் முதலியவைகள்பாவகம்.அனுஷ்டேயமான விஷயத்தில் ஏற்படும் புருஷப்ரவர்த்தியே பாவ்யம்.புருஷப்ரவ்ருத்தியை விஷயமாகக்கொண்டிருக்கும், லிங்லோட் முதலானவைகளின் வ்யாபாரமே பாவனை என்று அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வேதத்தில், லிஙாதிகளுக்கு பாவனைதான் அர்த்தம் என்று சொல்லப்படுமானுல் பாவனை என்ற ப்ரேரணையைச் செய்பவன் (பாவகம்) யார்? அந்த பாவனைக்கு (ஏவலுக்கு) விஷயம் என்ன? பாவ்யம் என்பது என்ன? பாவனை என்ருல் என்ன? என்ற கேள்வி களுக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது. பாவனை என்பது இரண்டுவிதம் சாப்தீபாவனையென்றும் ஆர்த்தி பாவனை என்றும் இரண்டுவிதம் இதில் ஏவல் என்பதே சாப்திபாவனை. இதையே ப்ரேரணை (ஏவல்) என்று சொல்லப்படுகிறது. புருஷனுடைய ப்ரவ்ருத்தி என்பதே பாவ்யம் (பாவனைக்கு விஷயம்) லிங்லோட் முதலானவைகள் பாவகம். ஆகவே, வேதங்களில் லிங்லோட் முதலானவைகள் சேதனஸ்தானீயமாக இருக்கிறது. அதுவே ப்ரவர்த்தியை உண்டுபண்ணுவதால் அதை பாவகம் என்று சொல்கிருேம். யாகத்தில் ப்ரவ்ருத்தி என்பதே பாவ்யம். லிங்லோட் முதலான ப்ரயோகத்தினுல் ஏவல் என்பது அறியப்படுவதால் அதுவே பாவனை. புருஷனைப்போல் பாவகம். அவன் அபிப்ராயம் போல் சாப்தீபாவனை. புருஷப்ரவ்ருத்திக்கு காரணமான ஏவலையே பாவனையென்றும் ப்ரேரணை என்றும் சொல்லப்படுகிறது. யாகம் பாகம் என்பவைகளில் பலவிதமான க்ரியைகள் இருந்த போதிலும் அவைகளை இந்த பாவனை என்ற சப்தம் தெரிவிக்கவில்லை.

தூண்டுதல் என்ற க்ரியை பாவனை. தூண்டுவது எதுவோ அது பாவகம். இது வேதத்தில் லிங்லோட் தவ்ய ப்ரத்யயம். லோகத்தில் புருஷனுல் ஏவப்படும் ஆஞ்ஞை முதலானவை. சேதனஸ் தானீயமாக இருக்கின்ற லிஙாதிகள் (ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றதால்) பாவகம். யாகாதி அனுஷ்டேய விஷயத்தில் ஏற்படும் புருஷப்ரவ்ருத்தி = பாவ்யம். பாவ்யமான புருஷ ப்ரவர்த்தியை உண்டு பண்ணுவதற்காக பாவகத்தில் எந்த வ்யாபாரம் ஏற்படுகிறதோ அந்த வ்யாபாரமே பாவனை. ஆகையால் தாத்வர்த்தம் =பாகக்ரியையில் அதிச்ரயணம் என்ற தாத்வர்த்தமும் பாவனையல்ல, அரிசியில் ஏற்படும் மாறுதல் என்பதும் பாவனை இல்லை. பாவகத்தில் ஏற்படும் (இருக்கின்ற) வ்யாபாரத்தையே பாவனை என்று பாவனுவாதிகளால் சொல்லப்படுகிறது.

**389. அவதாரிகை :**

சாப்தீபாவனை என்பதற்கு கரணமென்ன? இதிகர்த்தவ்யதை என்பதுஎன்ன? என்ருல், அதற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

करणमिह लिङादेर्ज्ञानमेवाङ्गभागः पुनरभिरूचिहेतुर्दृश्यते च प्रशंसा ।
विधिरयमिह तन्त्रे जैमिनीये न कार्यं न च भवति विधिर्नः श्रेयसो हेतुरर्थः ॥

**ச்லோகார்த்தம் :** லிஙாதிஞானமே இந்த (சாப்தீபாவனு) விஷயத்தில் காரணமாகிறது. இச்சையை உண்டுபண்ணுகின்ற ப்ரஸம்ஸாவாக்யங்கள் இதிகர்த்தவ்யதாவுக ஆகிறது. இந்த ஜைமினீயசாஸ்திரத்தில் சாப்தீபாவனை என்பதே விதியாக ஆகிறது. நியோகம் என்பது விதி என்று சொல்லமுடியாது. இஷ்டஸாதனதா ஞானம் என்பதும் விதி என்று சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் லிஙாதிகளால் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்ற விஷயம் க்ரஹிக்கப்பட்டிருப்பதால் அதேபோல் வேதத்திலும் லிஙாதிகள் ப்ரவர்த்திக்கச் செய்கிறது என்ற ஞானம் புருஷனுக்கு ஏற்பட்டிருக்கவேண்டும். இந்த ஞானத்திஞல்தான் புருஷனுக்கு ப்ரவ்ருத்தி ஏற்படுவதால் சாப்தீபாவனைக்கு கரணம் லிஙாதிஞானம் என்றே சொல்லவேண்டும். இதி கர்த்தவ்யதை =இந்த கார்யம் அவஸ்யம் செய்யவேண்டும் என்ற கர்த்தவ்யதையென்பது விதி வாக்யங்களில் சொல்லப்படும் அர்த்தவாத வாக்யங்களால் ஏற்படுகிறது. உதாரணமாக "வாயுர்வைக்ஷேபிஷ்ட்டா" என்ற வாக்யமானது அந்த யாகத்தைச் செய்யவேண்டுமென்ற இச்சையை உண்டுபண்ணுகின்றதால் புருஷ ப்ரவ்ருத்திக்கு இந்த வாக்யம் உபகாரகமாக இருக்கிறது. லிஙாதிகளால் போதிக்கப்படும் பாவனைகள் "ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:" என்ற விதியிஞலேயே போதிக்கப்படுகிறது. புருஷப்ரயத்னம் எதஞல் ஏற்படுகிறது என்ருல், இதி கர்த்தவ்யதை என்பது லிஙாதி ஞானத்திஞலும் ஏற்பட்டபோதிலும் செய்யவேண்டிய கார்யமானது ஸ்துதிக்கப் படுகின்றபோது அதைச்செய்யவேண்டுமென்ற இச்சை அர்த்தவாதத்திஞல் ஏற்படுகிறது அதஞல் புருஷன் ப்ரவர்த்திக்கின்ருன்.

ஆகவே சாப்தீபாவனை என்பதில் லிஙாதி அர்த்த ஞானமே கரணம், லிஙாதி சப்தத்திஞல் அறியப்படும் ஏவல் என்பது எதுவோ அதற்கு பாவனை என்று பெயர். வேதங்களில் ஏவல் என்பதே ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிறது என்பது த்ருஷ்டமாக (நேரிடையாகவே) அறியப்படுகிறது. அதஞல் லிஙாதிகளுக்கு 'ஏவல்' என்பதே அர்த்தம் என்று சொல்ல வேண்டுமேதவிர அத்ருஷ்டம், அபூர்வம் என்றெல்லாம் அர்த்தம் சொல்லப்படுவது சரியல்ல. லிஙாதிகளில் புருஷனை ப்ரவர்த்திக்கச் செய்யக்கூடியஸாமர்த்யம் இருக்கின்றது. வேதத்தில் ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: என்ற விதி வாக்யம் முதல், எந்த விதிவாக்யமாக இருந்தாலும் அவைகளில் லிங்லோட் முதலானவைகளிஞல் சப்தபாவனை என்ற ப்ரேரணை இருக்கின்றது. ஆகவே கார்யம் என்ற அபூர்வம் என்று சொல்லப்படுவது எதுவோ அதுவே லிஙர்த்தம் என்று சொல்லப்படும் பக்ஷமாஞலும் சரி அல்லது வேதாந்தி பக்ஷமான ஸ்ரேயஸ் சாதனத்வம் லிஙர்த்தம் என்று சொல்லப்படும் பக்ஷமாஞலும் சரி இந்த இரண்டுமே லிஙர்த்தம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், நியோகம் கார்யம் என்ற அபூர்வம் லிஙர்த்தம் என்று சொல்லப்படுமாஞல் இது லோகத்தில் ப்ரஸித்தமா அப்ரஸித்தமா என்று விசாரிக்கின்றபோது லோக ப்ரசித்தமில்லையென்பதும் வேதத்திஞல்தான் அறியப்படவேண்டும் என்பதும் சித்தமாகிறது. அவ்விதம் வேதத்திஞல் மட்டும் அறியக்கூடியதாக இருக்குமாஞல் லிஙாதிகளுக்கு சக்திக்ரஹம் என்பது ஏற்படமுடியாது. ஏனெனில் லோகத்தில் வேறு ப்ரமாணத்திஞல் அறியப்பட்ட விஷயத்தில் தான் சக்திக்ரஹம் ஏற்படமுடியும் அதஞல் நியோகம் என்பதும் கார்யம் என்பதும் என்னதென்றே நிரூபணம் செய்யமுடியாது என்பதை கீழேயே

கண்டிக்கப்பட்டிருக்கிறது. இஷ்ட ஸாதனதா ஞானம் ப்ரவ்ருத்திக்கு காரணமாகமுடியாது ச்ரேயஸ் ஸாதனத்வம் லிங்ர்த்தம் என்று சொல்லப்படுமானல், இஷ்ட ஸாதனத்வம் என்பது வேதம் ஒன்றினல் தான் அறியப்படும் என்று சொல்லமுடியாது வேறு உபாயத்தினலும் அறிந்துகொள்ளலாம். ஆகையால் வேதம் அபூர்வத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படவேண்டும் என்பதால் இஷ்டஸாதனத்வம் லிங்ர்த்தம் என்று சொல்லமுடியாது. அதனல் லிஙாதிகள் ப்ரவர்த்தனையைத்தான் போதிக்கின்றது என்று சொல்லவேண்டும்.

ஆகவே சப்த பாவனைக்கு லிஙாதிகளின் ஞானமேகரணம் அதாவது சப்தபாவனை என்பது தன்னுடைய ஞானத்தையேதனக்கு கரணமாகக் கொண்டிருக்கிறது என்றும் அந்தந்த விதி வாக்யங்களை ப்ரயோகம் செய்கின்ற இடத்தில் புருஷனுக்கு ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுவதற்கு அர்த்தவாதவாக்யம் உபகாரகமாக இருக்கிறது என்றும் பூமீமாஸ்திரத்தில் ஜைமினியினல் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதனல் இஷ்ட ஸாதனத்வமோ, கார்யம் என்பதோ லிஙாதிகளுக்கு அர்த்தமல்ல என்று ஜைமினியினல் சொல்லப்பட்டிருக்கிறது. ஸப்தபாவனைக்கு மூன்று ஆகாங்க்ஷைகள் ஏற்படுவதாக சொல்லப்படுகிறது. இதில் கிம் கேன கரணம் என்று மூன்று வித ஆகாங்க்ஷைகள் இருக்கிறது. சப்தபாவனை என்பதே ஏவல், இந்த ஏவலானது புருஷனிடத்தில் ப்ரவ்ருத்தியை உண்டு பண்ணுகிறது இதுவே பாவனைக்கு பாவ்யமாகும் =பாவனைக்கு விஷயம் புருஷப்ரவ்ருத்தி, கரணம் = லிஙாதி ப்ரத்யயங்களின் ஞானமே கரணம். இதி கர்த்தவ்யதை அர்த்தவாத வாக்யங்கள். அர்த்தவாத வாக்யத்தை கேட்பதால்தான் அதில் இச்சை ஏற்பட்டுப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. கிம் என்றல் அர்த்தவாதம் புருஷப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிறது, கேன லிஙாதிஞானத்தினல் சப்த பாவனைக்கு கரணம் என்ன என்றல் லிஙாதிஞானமே கரணம் இதி கர்த்தவ்யதை என்ன என்றல் இந்த கார்யத்தைச் செய்யவேண்டுமென்றே இச்சை ஏற்பட காரணமான அர்த்தவாத வாக்யங்கள் சப்தபாவனை என்பதே வேதங்களின் லிஙாதிகளுக்கு அர்த்தம், வேதங்களில் கார்யம் என்பதோ, ச்ரேயஸ் ஸாதனத்வம் என்று சொல்லப்படுவதெல்லாம் சாப்தீபாவனைக்கு அர்த்தமாக ஆகாது ஆகவே சப்தபாவனை என்பதே விதி.

**வ்யாக்யானம் :** சங்கதிக்ரஹம் ஏற்பட்ட லிஙாதிஞானமே ஸப்தபாவனை என்பதில் கரணம் ஏனெனில் சப்தபாவனையினல் தான் புருஷனுக்கு கார்யத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. விதி வாக்யங்களில் பின்னல் சொல்லப்படும் அர்த்தவாத வாக்யங்கள்தான் இதி கர்த்தவ்யதை 'வாயுர்வைக்ஷேபிஷ்டா' என்ற வாக்யம் அந்த கார்யத்தைச் செய்யவேண்டுமென்ற இச்சையை உண்டு பண்ணுகின்றதால் ப்ரவ்ருத்திக்கு இது உபகாரகமாக இருக்கிறது. இவ்விதம் சப்த பாவனை என்ற லிஙாதி வாக்யம்தான் பாவனை. ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: என்று விதியினல் விதிக்கப்படுவது லிஙாதிவாக்யங்கள்தான் இந்த கார்யத்தைச் செய் என்று தெரிவிக்கின்றதால் புருஷனுக்கு ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகின்றது.

கிம் பாவயேத் =புருஷப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிறது. கேன, லிஙாதி ஞானேன (கரணகாங்க்ஷை) கதம், அர்த்தவாதம் என்பதே இதிகர்த்தவ்யதை. லிஙாதிஞானமும் அர்த்த வாத ஞானமும் ஏற்படுவதால் ப்ரவ்ருத்தி என்பது ஏற்படுகிறது.

**390. அவதாரிகை :**

பாவனை என்ற ஏவல் என்பது லிஙாதி ப்ரத்யத்தின் அர்த்தமாக இருக்கின்றதால், அதற்கே முக்யத்வம் என்றும் மற்றவைகள் அங்கம் என்றும் சொல்லநேரிடுமே? அவ்விதம் சொல்லப் படுமானல் குரு மதத்தில் நியோகம் என்பதற்கு ப்ராதான்யம் என்று சொல்லப்படுவதுபோலவே உங்கள் பக்ஷத்திலும் சொல்லப்பட்டதாக ஆகிறது என்ற பட்ட மதத்தினரின் ஆக்ஷேபத்திற்கு அவ் விதம்

சொல்லமுடியாது என்று பதில் சொல்லப்படுகிறது. ஏனெனில், ப்ரத்யயார்த்தமாக இருந்த போதிலும் கர்த்தாவினிடமுள்ள ஸங்க்யைகள் எப்படி குணமாக அன்வயிக்கின்றதோ அதுபோல் இந்த இடத்திலும் அப்ரதானமாக அன்வயம் சொல்லலாம்.

**ச்லோகம் :**

विधिरिह गुणभूतः प्रत्ययार्थोऽपि नित्यं भवति च पुरुषोत्था भावनाऽस्य प्रधानम् ।
भवति दशलकारप्रत्ययैः साऽभिधेया विधिविहितलकारैर्भावना शब्दहेतुः ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யயத்தினால் சொல்லப்படும் விதியானது எப்போதுமே அமுக்யம் தான் (கௌணம்). புருஷனிடம் ஏற்படும் வ்யாபாரரூபமான ஆர்த்தீபாவனை என்பதே ப்ரதானம். இந்த ஆர்த்தி பாவனையானது பத்து விதலகாரங்களினாலும் சொல்லப்படுகிறது. விதிரூபமாக இருக்கின்ற லிஙாதி லகாரங்களினால் சாப்தீபாவனை என்பது அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அர்த்தபாவனை என்பது புருஷப்ரவ்ருத்தி என்ற க்ரியையைக்குறிக்கின்றது. வாக்யங்களில் க்ரியைக்கே ப்ராதான்யம் சொல்லப்படவேண்டும் என்பதால் அர்த்தபாவனை என்பதே ப்ரதானம். அதனால் ப்ரதானமான அர்த்தபாவனையில் சப்தபாவனையென்பது குணபாவேன அன்வயிக்கின்றது. (லகாரம் என்றாலே பொதுவாக அர்த்தவாதங்களையே தெரிவிக்கும், லகார விசேஷம் என்றால், லிங், லோட், தவ்ய ப்ரத்யயம். இந்த லகார விசேஷம் சாப்தீபாவனையை தெரி விக்கும்.) லிஙாதி ப்ரத்யயங்களினால்தான் சப்தபாவனையென்பதும், அர்த்தபாவனை என்பதும் சொல்லப்படுகிறது என்றால், ஒரே ப்ரத்யயத்திற்கு இரண்டு அர்த்தம் எப்படிச் சொல்வது? (ஸாதாரணமாக ப்ரத்யயார்த்த ப்ராதான்ய ஸ்யாத் ப்ரக்ருத்யர்த்த: உபஸர்ஜனம் என்று சொல்லப்படும். லிங் லோட் லட் முதலான பத்து லகாரங்களுக்கும் பொதுவாக ஆக்யாதம் என்று பெயர். அதில் லிங்லோட் தவ்யப்ரத்யயங்களை விதி என்று சொல்லப்படும். இந்த விதம் ஒரே ப்ரத்யயத்தில் ஆக்யாத அம்ஸம் என்றும் லிஙாதி அம்ஸம் என்றும் இரண்டு அம்ஸங்கள் இருக்கின்றதால் இரண்டு அர்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது, தசலகாரங்களிலுள்ள பொதுத்தன்மையான ஆக்யாதம் என்ற அம்ஸத்தினால் அர்த்தபாவனையென்பது அறியப்படுகிறது. விதியினால் விதிக்கப்படும் லிங்லோட் தவ்யப்ரத்யயங்களால் சப்தபாவனை என்பது அறியப்படுகிறது. (திங்த்வேன தசல காரங்களின் (லட் லிட்லோட் முதலான) தன்மைகளையும், லிங்த்வேன லிங்லோட் தவ்ய ப்ரத்யயங்களின் தன்மைகளையும் தெரிவிக்கின்றதால் ஒரே ப்ரத்யயத்தினால் அர்த்தபாவனை சப்த பாவனை இரண்டும் சொல்லப்படலாம். இதில் தோஷம் ஏதுமில்லை. லிங்லோட் த்வ்யப்ரத்யயங்களால் அறியப்படும் ஸப்த பாவனை என்பது அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றபோது, ப்ரத்யயார்த்தமாக இருந்தபோதிலும், குணபாவேன அன்வயிக்கிறதேயன்றி ப்ரதான்யமாக அன்வயிக்கிறதில்லை. ஏனெனில் லிங்லோட் தவ்ய ப்ரத்யயத்தினாலேயே இரண்டு வ்யாபாரங்கள் அறியப்பட்டபோதிலும் வேறு அர்த்தங்களுடன் அன்வயிக்கின்றபோது, அர்த்தபாவனைக்குத்தான் ப்ராதான்யம் சொல்ல வேண்டும் என்பதால் மற்றவைகள் குணபாவேன அதில் சேர்ந்து அன்வயிக்கிறது என்றே சொல்லவேண்டும்.

உதாரணமாக 'யஜேத: ஸ்வர்க்க காம:' என்ற வாக்யத்திலுள்ள 'யஜேத' என்ற பதத்தில் சாப்தீபாவனை ஆர்த்தி பாவனை என்ற இரண்டும் 'த' என்ற ஒரே ப்ரத்யயத்திற்கு அர்த்தமாக இருந்த போதிலும், க்ரியைக்குத்தான் ப்ராதான்யம் சொல்லவேண்டும் என்பதற்காக ஆர்த்தி பாவனைக்குத்தான் ப்ராதான்யம் சொல்லப்படுகிறது. பொதுவாக காரகங்களுக்கு க்ரியையில்தான் அன்வயம் சொல்லவேண்டும் அதனால் புருஷனுடைய ப்ரவ்ருத்தியில், சப்த பாவனை என்பது அங்கமாக அன்வயிக்கின்றது. யஜதி என்பதிலும் பும்ஸப்ரவ்ருத்தி இருக்கிறது என்றாலும் எல்லா லகாரங்களினாலும் ஏவல் குறிப்பிடப்படவில்லை. லிங்லோட் தவ்ய ப்ரத்யயத்தினால் ஏவலும் ஆர்த்தி பாவனையைக் குறிப்பிடப்படுகிறது.

**391. அவதாரிகை :**

தசலகாரங்களினுல் சாப்தீபாவனை ஆர்த்திபாவனை என்ற இரண்டும் சொல்லப்படுவதால் இதில் ஒன்று ப்ரதானம், மற்றொன்று அப்ரதானம் என்று எப்படிச் சொல்லமுடியும்? என்றால் அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

भवति च पुरूषार्थकर्मिकेयं पुरुषनिमित्तकभावना न तद्वत् ।
भवति तु विधिशब्दकर्तृकाऽन्या नहि निरवद्यपुमर्थता प्रवृत्तेः ॥

**ச்லோகார்த்தம்:** புருஷப்ரவ்ருத்திரூபமாக இருக்கின்ற ஆர்த்திபாவனையென்பது, புருஷ்ப்ரவ்ருத்திக்குஹேதுவாக இருக்கின்ற வ்யாபாரத்தை உடையது. ஆனல் விதிசப்தங்களினுல் போதிக்கப்படும் சாப்தீபாவனையென்பது அவ்விதமில்லை. ஏனெனில், ப்ரவ்ருத்தி என்பது நிர்த்தோஷமான புருஷார்த்தமாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ஆர்த்தி பாவனை என்பது, யாகாதிகளுக்கு பலமாகச் சொல்லப்படும், ஸ்வர்க்காதிகளை பலமாக கொண்டிருக்கிறது. அதனுல் இஷ்டத்தை பலமாகக் கொண்ட ஆர்த்திபாவனைக்கு ப்ராதான்யம் சொல்லப்படுகிறது.

கீழே சப்தபாவனைக்கு கிம்? கேன? கதம்? என்று மூன்று விதமான ஆகாங்க்ஷை சொல்லப்பட்டது. அதுபோல் ஆர்த்தி பாவனை மூன்று. இதில் ஆகாங்க்ஷை ஸ்பஷ்டமாகச் சொல்லபட்டவில்லையென்றாலும், உபலக்ஷணமாக சொல்லப்பட்டிருக்கிறது. சாப்தீபாவனைக்கு மூன்று வித ஆகாங்க்ஷைஸ்பஷ்டமாகச் சொல்லப்படவில்லையென்றாலும், உபலக்ஷணமாக சொல்லப்ப்ட்டிருக்கிறது. சாப்தீபாவனைக்கு அம்ஸத்ரயம் என்னவென்றால்,

கிம்பாவயேத்? = புருஷப்ரவ்ருத்திம் பாவயேத்

கேன? = பாவனுஞானேன (லிஙாதிஞானம் பாவனா)

கதம்? = அர்த்தவாதரூபேண (இதிகர்த்தவ்யதை).

ஆர்த்தீ பாவனைக்கு அம்ஸத்ரயம் என்னவென்றால்

கிம்பாவயேத் = ஸ்வர்க்கம் பாவயேத்.

கேன பாவயேத் = யாகேன

கதம் பாவயேத் = ப்ரயாஜாயாதிகளை அங்கமாக செய்வதின்மூலம் என்று ஆர்த்திபாவனை சாப்தீபாரவனை இரண்டிற்கும் பாவ்யா காங்க்ஷைமூன்று அம்ஸங்களும் சொல்லப்பட்டது.

**392– அவதாரிகை**

சாப்தீபாவனை ஆர்த்திபாவனை இரண்டுமே பாவனை என்பதால் இந்த இரண்டிற்குள் வித்யாஸம் எப்படிச்சொல்லமுடியும் என்றால் அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अभिमतपशुपुत्रवृष्टिनाकप्रभृतिकभाव्यगता हि भावनेयम् ।
अनभिमतसुदुष्करातिदुःखां नयति तु भाव्यपदं प्रवृत्तिमन्या ॥

**ச்லோகார்த்தம் :** ஆர்த்திபாவனை யானது இஷ்டமான பசு, புத்ரன், மழை, ஸ்வர்க்கம் முதலானவற்றை பாவ்யமாகக் கொண்டிருக்கிறது. ஆனல் சாப்தீபாவனை என்பது அநிஷ்டமானதும், துஷ்கரமானதும், அதிகதுக்கமுடையதுமான ப்ரவ்ருத்தியையே பாவ்யமாகக்கொண்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** 'ஸ்வர்க்ககாமோ யஜேத' என்றவாக்யதில் 'த' என்ற லகாரத்துடன் 'யஜு' என்றபதம் சேர்ந்திருக்கின்றது. ஸ்வர்க்ககாம: என்ற பதங்கள், இதனுடன் சேராமல் வேருக இருந்தபோதிலும் யாகம் என்பதை தனக்கு ப்ரயோஜனமாகக் கொள்ளாமல் (பாவ்யமாக) ஸ்வர்க்கம் என்ற பலத்தையே பாவ்யமாக (ப்ரயோஜனமாக) கொண்டிருக்கிறது. ஆகவே— ஆர்த்திபாவனை என்பது யாகம் என்ற தாத்வர்த்தத்தை விட்டு இஷ்டமான பசுபுத்ராதிகளை பாவ்யமாகக் கொண்டிருக்கிறது. சாப்தீபாவனை என்பது ஏவலாக இருக்கின்றதால், துக்கரூபமாக இருக்கின்றது. துக்கரூபமாக இருந்தாலும் ஏவல் இருந்தால் தான் ப்ரவ்ருத்திக்கிருன் ஆகவே சாப்தீபாவனைக்குப்ரவ்ருத்தியே பாவ்யமாக இருப்பதால் அதை புருஷார்த்தமென்று சொல்லமுடியாது. ஆர்த்திபாவனைக்கு புருஷார்த்தம் பாவ்யமாக இருக்கின்றது என்பதால் இரண்டும் பாவனை என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் ஆர்த்திபாவனையென்பது புருஷார்த்தத்தை பலமாக கொண்டது என்பதை தெரிவிப்பதற்காகவே இந்த ச்லோகத்தில் விளக்கப்பட்டது.

**393, 394. அவதாரிகை :**

இந்தவிதம் தாத்வர்த்தமானது லிஙாதிகளுடன் அன்வயித்த அர்த்தத்தையே தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானுல், அபிஹிதான்வய வாதத்தை ஒத்துக்கொள்கின்ற உங்கள் பக்ஷத்திற்கு பங்கம் ஏற்படுகிறதே என்ருல் அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रत्ययप्रकृतिशब्दतो बहिर्विद्यतेऽभिहितसङ्गतिश्च नः प्रत्ययप्रकृतिशब्दयोः पुनर्नित्यमन्वितधियो निमित्तता। भावनाद्वयमतोऽवबोध्यते धातुवाच्यघटितं लिङादिभिः प्रत्ययार्थगुणवस्तुवाचिनो धातवः प्रकृतयो हि धातवः॥

**ச்லோகார்த்தம் :** ப்ரக்ருதிக்கும், ப்ரத்யயத்திற்கும் வெவ்வேருக அன்வயம் சொல்லமுடியாதகாரணத்திஞல், ப்ரக்ருதியும் ப்ரத்யயமும எப்போதும் அன்வித அபிதானமுறையிலேயே அர்த்தத்தை தெரிவிக்கின்றது. அதனுல் லிஙாதிகளைக் கொண்டுதாத்வர்த்தத்துடன் ஸம்பந்தமுள்ள இரண்டு பாவனைகள் சொல்லப்படுகிறது. தாதுக்கள் என்பதுப்ரத்யயார்த்தங்களுக்கு விசேஷமாக இருக்கின்றநன்மையை போதிக்கின்றது. தாதுக்களே இங்குப்ரக்ருதியாக ஆகின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரக்ருதி, ப்ரத்யயம் இரண்டும் சேர்ந்திருக்கின்ற இடத்தில் அன்விதாபிதானம் என்றே சொல்கிருேம். ஏனெனில் ப்ரக்ருதி ஓர் அர்த்தத்தையும்ப்ரத்யயம்மற்ருெரு அர்த்தத்தையும் தெரிவிக்கமுடியாது. என்பதால் இரண்டும் சேர்ந்தே அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்வதுதான் ந்யாயம்.

பாவனை எனறு சொல்லப்படும் இரண்டிலும்—லிங்கம் என்பதும் ஸங்கியை என்பதும் ப்ரத்யயத்திஞல் அறியப்படுகிறது. இந்தப்ரத்யயமே இரண்டு விதமானபாவனைகளையும் தெரிவிக்கின்றது. இவ்விதம் ப்ரக்ருதி—ப்ரத்யயம் என்ற இரண்டும் ஒன்றுடன் ஒன்று அன்வயிக்காவிடில், தனிப்பட்டமுறையில் அந்த பதத்திற்கு அர்த்தம் இன்னதென்று தீர்மானிக்கமுடியாது. ஆகவே 'யஜேத' என்ற பதத்திலுள்ள 'த' என்ற லிஙானது யாகம் என்ற க்ரியையுடன் அன்வயித்த அர்த்தபாவனையுடன் கூடின சாப்தீபாவனையிஞல் விசிஷ்டமான அர்த்தம் அறியப்படுகிறது. அதாவது யாகாதிக்ரியையைச் செய் (யாகம்குர்யாத்) என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. ப்ரக்ருதி ப்ரத்யயம் என்ற இரண்டிற்கும் அர்த்த பேதம் கிடையாது. யாக: கர்த்தவ்ய: என்று சேர்த்தே அர்த்தம் செய்யவேண்டும். யஜு என்ற ப்ரக்ருதி அர்த்தம் யாகம். 'த' என்ற ப்ரத்யயத்தினால் கர்த்தவ்யமாக அறியப்படுகிறது.

சாப்தீபாவனை என்பது அர்த்தவாதபலத்தைக் கொண்டே புருஷனிடத்தில் ப்ரவிருத்தியை உண்டுபண்ணுகிறது. ஆகவே யாகம் என்பதை கரணமாகவும் ஸ்வர்க்கம் என்பதை பலமாகவும் ப்ரயாஜாயாதிகளை அனுஷ்ட்டிக்க வேண்டுமென்ற இதிகர்த்தவ்யதையுடன் கூடின ஒன்றை சப்தபாவனை என்பது புருஷனுக்கு அடையப் படவேண்டியதாக (புருஷார்த்தமாக) போதிக்கின்றது. 'செய்' என்று சொல்லப்படுமானல் எந்தக் கார்யத்தையும் செய்யலாம். அதனல் யாகத்தைச் செய் என்று யாகத்தை ப்ரதானமாகச் சொல்லப்படவேண்டுமே என்ருல், 'யஜேத' என்பதில் முதலில் யாகம் என்றபதம் அறியப்படுவதால் லிங்ர்த்தமாக அறியப்படும் அர்த்தம் தான்ப்ரதானம் அதற்கு குணமாகத்தான் யாகம் என்ற தாத்வர்த்தம் சொல்லப்படவேண்டும்.

ப்ரக்ருதியென்ருலே, ப்ரத்யயார்த்தத்திற்கு குணபூதமாக எதைச் சொல்லப்படுகிறதோ அதற்குத்தான் ப்ரக்ருதி என்று பெயர். 'செய்' என்பது விசேஷ்யம்—எதைச் செய்ய வேண்டுமோ அது விசேஷணம். ஆகையால் குணமாகவே அன்வயிக்கின்றது. குர்யாத் என்பதில் 'யாத்' என்ற ஆக்யாத அம்ஸத்தில் ப்ரக்ருதி, ப்ரத்யயங்களுக்குஸ்வரூபத: பேதம் இருந்த போதிலும் குணகுணீபாவேன(அங்க அங்கீபாவேன) அன்வயித்த பிறகு பேதம் என்பது கிடையாது. ப்ரத்யாயார்த்தமான பாவனைக்கு குணமாக அன்வயிக்கக்கூடிய அர்த்தத்தை தெரிவிப்பது எதுவோ, அது தாதுக்கள் என்பதால் ப்ரத்யயம் என்பதே ப்ரதானம் என்ற அர்த்தம் தானே கிடைக்கின்றது. தாத்வர்த்தம் எல்லாமே குணம் என்பதால் அப்ரதானம் என்றே எல்லா இடத்திலும் ஒத்துக்கொள்ளவேண்டும். எல்லா இடங்களிலும் 'தாது' என்பதே மாறுபடுகிறது. லிங்லோட்தவ்யப்ரத்யயங்கள் மாறுபடுவதில்லை. ஆகவே சப்தபாவனை அர்த்தபாவனை என்ற இரண்டிற்கும் தாத்வர்த்தைக் கொண்டே வேறுபாடு சொல்லப்படவேண்டும். ப்ரக்ருதி—ப்ரத்யயார்த்தம் இரண்டும் சேர்ந்தே அர்த்தத்தை தெரிவித்த போதிலும் ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்று பெரியோர்களாலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதம் ப்ரக்ருதி ப்ரத்யயம் என்ற இரண்டும் அன்வயிக்கின்ற இடத்தில் அன்விதாபிதானம் என்பதையே நாங்கள் ஒத்துக் கொள்கிறோம். மற்ற இடங்களில் அபிஹிதான்வயம் என்பதை ஒத்துக்கொள்ளப்படுகிறது. (அதனல் எங்கள் பக்ஷத்தில் பங்கம் ஏதுமில்லை).

## 395. அவதாரிகை:

இதுவரை சொல்லப்பட்ட காரணங்களினுல் ஸர்வவேதங்களும் பாவனை என்ற ஏவலைத்தான் போதிக்கின்றது என்ற காரணத்திஞல் சித்தமான ப்ரஹ்மத்தைபோதிக்கின்ற விஷயத்தில் ப்ராமாண்யம் கிடையாது.

**ச்லோகம் :**

भव्याय भूतमुपदिश्यत इत्यवोचन् पूज्यास्ततः सकलमेव तु वेदशास्त्रम् ।
कार्यप्रधानमिति निश्चिनुमोऽस्मदीये तन्त्रे च कार्यमुदितः पुरुषप्रयत्नः ॥

**ச்லோகார்த்தம்:** பூதவஸ்துக்கள் பவ்யத்திற்காக உபதேசிக்கப்படுகிறது என்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது. ஆகையால் ஸர்வவேதமும்—கார்யப்ரதானம் என்றே எங்கள் மதத்தில் நிச்சயிக்கப்படுகிறது. புருஷப்ரயத்னம் என்பதே கார்யம் என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** சப்தத்திற்கு பாவனைதான் அர்த்தம் என்ற விஷயத்தை தெரிவித்தபிறகு, வேதங்கள், பாவனாரூபம் என்று சொல்லப்பட்டால் தான் வேதங்கள், ப்ராமாண்யமாக ஆகும் என்று தீர்மானிக்கப்பட்டது. அதனால் வேதம் ஸாத்யவஸ்து போதகம் என்று தீர்மானிக்கப்பட்டது. வேதம் சித்தவஸ்து போதகம் என்று சொல்லப்படுமானால் அதுப்ரமாணமாகவே ஆகாது. "பூதம் பவ்யாயவ்யபதிச்யதே" என்ற ந்யாயத்தை அனுசரித்து ஸபரஸ்வாமிகளும் தன்கருத்தை தெரிவிக்கின்றார். அதாவது. ஒருக்ரியையுடன் சேர்த்து த்ரவ்யங்களைச் சொல்லப்பட்டிருக்கின்ற இடத்தில், சித்தமான த்ரவ்யங்கள் க்ரியைக்காக என்று உபதேசிக்கப்படுகிறது. பூஜ்யர்களான ஜைமினி முதலானோர்களால் இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே சாஸ்திரம் ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிப்பதாக ஒப்புக் கொள்ளப்பட்டபோதிலும், சாஸ்திரமானது ஒரு கர்மாவைச் 'செய்' என்று விதிக்கின்றபோது அந்த கர்மாவிற்கு ஸம்பந்தப்பட்ட கர்த்தாவையும் அதற்குரியஸாமக்ரியையும் அந்த கர்மா அபேக்ஷிக்கின்றதால் ப்ரஹ்ம சப்தமானது, பாவனைக்கு தேவையான கர்த்தாவையே போதிக்கின்றது. ஆகவே வேதாந்தம் ஸ்வதந்தரமாகப்ரஹ்மத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. பாட்டமதஸ்த்தர்கள் லிஙாதிகளுக்கு நியோகம் அர்த்தமில்லை என்று சொல்கிறார்கள். அதைநாங்கள் ஒத்துக்கொள்ளவில்லை. புருஷப்ரயத்னரூபமான அர்த்தபாவனையைத்தான் நியோகம் என்றும் கார்யம் என்றும் எங்களால் சொல்லப்படுகிறது. ஆகையால் பாவனை என்பதே வேதவாக்யங்களுக்கு அர்த்தம் என்பதால் பாவனாரூபம் தான் வேதங்கள், என்று சொன்னால் தான் வேதம் என்பது ப்ரமாணமாக ஆகும் என்று தீர்மானம் செய்யப்படுகிறது. இவ்விதம் சொல்லாமல் வேதம் சித்தவஸ்துபோதகம் என்று சொல்லப்படுமானால் வேதம் என்பது ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. 'பூதம் பவ்யாயவ்யபதிச்யதே' என்ற நியாயத்தை அனுசரித்து ஆர்த்தீ பாவனை என்று சொல்லப்படும் புருஷப்ரவ்ருத்தியைத்தான் இங்கு கார்யம் என்று சொல்கிறோம். ஆகையால் நியோகம் என்ற அத்ருஷ்டத்தை நாங்கள் கார்யம் என்று சொல்லவில்லை.

**396. அவதாரிகை:**

இதுவரை செய்யப்பட்ட ஆக்ஷேபங்கள் சரியல்லவென்று மேலே கண்டிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अभिदधाति करोति च लिङ्पदं श्रुतिवचःसु निजामपि भावनाम् ।
न च करोति न वक्ति च तां पुनर्नरवचःस्विति दुःशकमुच्यते ॥

**ச்லோகார்த்தம் :** வேதவாக்யங்களில் லிங்பதமானது தன்னுடைய அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது. அத்துடன் ஆர்த்திபாவனை என்பதையும் உண்டுபண்ணுகின்றது என்றும்— புருஷவாக்யங்களில் லிங்பதமானது தன்னுடைய அர்த்தத்தையும் தெரிவிப்பதில்லை, ஆர்த்திபாவனையை உண்டுபண்ணுவதும் இல்லை என்று சொல்வது பொருந்தாது.

**வ்யாக்யானம் :** வேதவாக்யங்களில் லிஙாதிபதங்கள்—சப்தபாவனை என்ற தன்னுடைய வ்யாபாரத்தை தெரிவிக்கிறதுடன் அர்த்தபாவனை என்பதையும் உண்டு பண்ணுகிறது என்று சொல்லப்படுவது பொருந்தாது. தன்னுடைய வ்யாபாரத்தை தானே தெரிவிக்கிறது என்றால், ஸ்வக்ரியாவிரோதம் ஏற்படும். இதேபோல் லோகத்தில் பௌருஷேய வாக்யங்கள் சாப்தீபாவனையினால் தெரிவிக்கவுமில்லை, செய்யும்படி செய்யவுமில்லை என்று சொல்லப்படும் வ்யவஸ்த்தை ஒத்துக்கொள்ளக்கூடியது அல்ல. ஏனெனில் வேதமாக இருந்தாலும் லோகமாக

இருந்தாலும் சப்தம் என்பது ஒன்றுதான். இதில் வித்யாஸம் ஏதுமில்லே; வித்யாஸம் இருப்பதாகச் சொல்லப்படுமானல் 'லோகவேதாதிகாரணம்' என்ற அதிகரணத்தில் உங்களால் சொல்லப்பட்டிருக்கின்ற விஷயத்திற்கு ஹானிஏற்படும். 'யஏவலௌகீகா: சப்தா: ஸஏவவைதிகா:' என்ற நியாயம் மீமாம்ஸகர்களான உங்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே லோகத்தில் லிஙாதிகளுக்கு ஒரு அர்த்தம் வேதத்தில் லிஙாதிகளுக்கு வேறு அர்த்தம் என்று சொல்வது சரியல்ல, அவ்விதம் வித்யாஸம் இருப்பதாகச் சொல்வதற்குரியப்ரமாணமும் கிடையாது. சப்தம் என்பது ஒன்றே. சப்தம் என்பது ப்ரமாணம். அர்த்த போதகம் (அர்த்தத்தை தெரிவிக்கிறது) என்று சொன்னல் தான்ப்ரமாணம் என்ருகும். சப்தம் காரகம் என்று சொல்லப்படுமானல் அதுப்ரமாணமாகவே ஆகமுடியாது.

**397. அவதாரிகை :**

அபௌருஷேயமான வேதத்தில், ஆஞ்ஞை முதலானவைகள் சம்பவிக்கமுடியாது என்பதால், வேறு கதி இல்லாத காரணத்தினல், வேதத்தில் லிஙாதிகளுக்கு ஒருவிதமான அர்த்தமும், லோகத்தில் வேருருவிதமான அர்த்தமும் இருப்பதாகச் சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் சப்தம் என்பது, வேதத்திலும், லோகத்திலும் ஒரே விதமான அர்த்தத்தையே போதிக்கின்றது. என்று சொல்வதற்குரியமார்க்கம் இருக்கின்றதால், உன்னுடைய கல்பனை உசிதமில்லே.

**ச்லோகம் :**

वक्तृत्वमेव घटते यदि लिङ्पदस्य सर्वत्र नार्द्धजरतीयमिदं प्रशस्तम् ।
सामर्थ्यमेकरसमेव यदोपपन्नं नानारसं न खलु तत्परिकल्हनीयम् ॥

**ச்லோகார்த்தம் :** வேதமாக இருந்தாலும் சரி லோகமாக இருந்தாலும்சரி, சப்தம் என்பது ஒரே அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்பதால் லிங்பதமானது வேதத்திலும் லோகத்திலும் தன்னுடைய அர்த்தத்தை தெரிவிக்கமுடியும். ஆகையால் இந்த அர்த்த ஜரீயந்யாயம் பொருந்தாது. எப்போதுலிங் பதமானது ஒரே விதமான அர்த்தத்தை தெரிவிக்கக் கூடியஸாமர்த்யம் (சக்தியை) உடையதாக இருக்கிறதோ அதனுலேயே அதற்கு வெவ்வேறு சக்திகளை கல்பிக்க வேண்டிய அவஸ்யம் இல்லே யென்பதால் உன்கல்பனை பொருந்தாது.

**வ்யாக்யானம் :** லிஙாதி பதங்களும் இதுவரை அறியப்படாத அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொன்னல்தான் ப்ரமாணமாக ஆகிறது. அதனுல் லோகம் என்பதிலும், வேதம் என்பதிலும் வித்யாஸம் ஏதுமின்றி லிஙாதிகள், 'இஷ்டஸாதனம்' என்பதையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லாமல் ஓரிடத்தில் வக்த்ருத்வம் என்பதையும், மற்ருெரு இடத்தில் காரகத்வம் என்பதையும் போதிக்கின்றது என்று கல்பனை செய்வது அர்த்தஜரீயந்யாயம் போலாகும். அதுமட்டுமல்ல, கல்பனு கௌரவம் என்ற தோஷமும் ஸம்பவிக்கும்.

**பூர்வ :** சப்தம் என்பது ஒரேவிதமாக இருக்க வேண்டுமென்பது தான் நியாயம். ஆனுலும் தெய்வச்செயலாக, லோகத்தில் பௌருஷேயமாகவும் வேதத்தில் அபௌருஷேயமாகவும் இருக்கின்ற காரணத்தினுல் சப்தத்தில் இந்த வித்யாஸம் இருப்பதாக கல்ப்பிக்க வேண்டி இருக்கிறது.

**சித்தா :** பௌருஷேயம் அபௌருஷேயம் என்ற வித்யாஸம் இருக்கிறது என்பதற்காக— சப்தத்தில் அர்த்தபேதம் இருப்பதாகச் சொல்லமுடியாது. இவ்விதம் அர்த்தபேதம்

இருக்குமானுல், கடம் என்றசப்தத்திற்கு லோகத்தில் குடம் என்று அர்த்தமென்றும்—வேதத்தில் கடசப்தத்திற்கு படம் என்று அர்த்தம் என்று சொல்லப்படுமானுல் வ்யவஸ்த்தை என்பதே இருக்கமுடியாது. மேலும் சப்தம் என்பது, லோகத்தில் எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ, அதுவே வேதத்திலும் அர்த்தம் என்று 'லோகவேதாதிகரணம்' என்ற அதிகரணத்தில் விசாரிக்கப்பட்டிருக்கின்ற விஷயம் தேவையில்லை என்ருகும். (அதனுல் அந்த அதிகரணமே வ்யர்த்தமென்ருகும்.) தவிர லிஙாதிபதங்கள் இஷ்ட்டஸாதனத்தை போதிக்கின்றது என்பதும் பொருந்துகின்றது. ஆகையால் லிஙாதிபதங்கள் வக்த்ருத்வத்தை போதிக்கின்றது என்று சொல்வதுதான் பொருந்தும். அவ்விதமின்றி வக்த்ருத்வம் கர்த்ருத்வம் என்ற இரண்டுமே லிஙாதிசப்தார்த்தம் என்று சொல்லப்படுமானுல், அர்த்தஜரீயந்யாயம் போலாகும்.

**398. அவதாரிகை:**

இந்த விஷயத்தில், என்னுடைய பக்ஷத்தில் ஒரேவிதமான அர்த்தம் சொல்லப்படுவதால் மேலே சொல்லப்பட்ட தோஷங்கள் எதுவும் ஸம்பவிக்காது.

**ச்லோகம் :**

श्रेयोहुतुत्ववाची यदि भवति तदा संभवत्येकरूपा शक्तिस्तस्याभिधाने न तु भवति तदा कारकोऽयं प्रवृत्तेः ।
श्रेयोहेतुश्च वाच्यः श्रुतिवचसि तदा पौरुषेये च तुल्यः क्लृप्तश्चासौ न कल्प्यः श्रुतिवचसि यथा भावना लिङ्निबद्धा॥

**ச்லோகார்த்தம் :** லிங் பதமானது ச்ரேயஸ்ஸிற்கு ஹேதுவையே தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானுல்தான் லிங்பதம் அதன் அர்த்தத்தை தெரிவிப்பதில் லோகமானுலும் வேதமானுலும் ஒரே ரூபமான சக்தி உடையதாக இருக்கிறது என்பது ஸம்பவிக்கும். அதனுல் லிங்பதம் ப்ரவருத்தியை உண்டுபண்ணுகிறது என்று சொல்லமுடியாது. லிங்பதம் வேதங்களில் ச்ரேயஸ்ஸுக்கு ஹேதுவை தெரிவிக்கிறது என்று சொன்னுல்தான் அது பௌருஷேய வாக்யங்களிலும் ஸமானமாக இருக்கிறது என்று சொல்லலாம். இந்த அர்த்தமே லோகசித்தமாக இருக்கின்றதால் வேதவாக்யங்களில் லிங்ஸம்பந்தமான பாவனை என்பதை கல்ப்பிக்கவேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** லோகத்தில் ப்ரயோகிக்கப்படும் சப்தத்தில் ஆஞ்ஞாதிகள் ஸம்பவிக்கின்றது வேதசப்தத்தில் ஆஞ்ஞாதிகள் ஸம்பவிக்க முடியாது என்ற காரணத்தைக் கொண்டு இரண்டிற்கும் வித்யாஸம் இருப்பதாக கல்ப்பிக்கிருேம். மேலும் இஷ்ட்டஸாதனம் லிஙர்த்தம் என்று சொல்லப்பட்ட போதிலும், புருஷப்ரவ்ருத்தி என்பது இஷ்ட்டஸாதனம் என்ருலும் ஏற்படுகிறது, ஆஞ்ஞாதிகளாலும் ஏற்படுகிறது. ஆகவே ப்ரவ்ருத்தி என்பது இரண்டு இடங்களிலும் ஒன்ருகவே இருக்கின்றதால் லிஙர்த்தம் ப்ர்வர்த்தனை என்பதையே போதிக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுமானுல் பௌருஷேய வாக்யமானுலும், அபௌருஷேய வாக்யமானுலும் கண்டம்—தாலுமுதலானவைகளின் வ்யாபாரமும் ப்ரவ்ருத்தகமாக இருக்கின்றதால், கண்டம்தாலு முதலானவைகளின் வ்யாபாரங்களையும் லிஙாதிகளுக்கு வாச்யம் என்று சொல்லநேரிடும்.

**பூர்வ :** கண்டதாலுவாதிகளின் அபேக்ஷை இருந்த போதிலும், அவைகளை அறிந்து கொள்ள வேண்டிய அவஸ்யமில்லை. ஆனுல் ப்ரவரத்தனை என்பது அறிந்து கொள்ள வேண்டியதாக இருக்கின்றதால், அதையே லிஙாதி சப்தம் தெரிவிக்கிறது என்று சொல்லலமே?

**சித்தா :** இரண்டும் ஞாதமாகவோ ஸ்வரூபமாகவோ இருந்துப்ரவர்த்தகமாக ஆகிறது என்று சொல்லப்பட்டபோதிலும் அவ்விதம் ப்ரவர்த்தி ஏற்படுவதற்கு காரணம் என்ன என்று கேட்கப்படுமானுல் இந்த கேள்விக்கு உன்னுல் பதில் சொல்லமுடியாது. மேலும் பௌருஷேயவாக்யங்களில் ப்ரவர்த்தனே (ஆஞ்ஞை) என்பது இருந்தாலும், அந்த ஆஞ்ஞைக்காக எவரும் ப்ரவர்த்திப்பதில்லை. ஆகையால் ப்ரவர்த்தனேயென்பது ஞாதமாக இருப்பதால் பரவர்த்திக்கிருன் என்று சொல்லமுடியாது. ஆகவே, பாவனே என்பதே லிங்ர்த்தம் என்று தீர்மானித்து, அதன்பிறகு அவைகள் பொருந்தவில்லை என்பதற்காக மேன்மேலும் கல்ப்பிக்க வேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது. அதனுல் கல்பனு கௌரவம் என்ற தோஷங்களுக்கு இடமின்றி இஷ்ட்டஸாதனதா போதகம் லிங்ர்த்தம் என்று சொல்லப்படுமானுல் எவ்வித விரோதமும் இல்லை. லிஙாதிகளின் சப்த சக்தி, பௌருஷேயமானுலும் அபௌருஷேயமானுலும் இரண்டிலும் ஒரே விதமாக இருக்கிறது. என்று சொல்வதற்கு முடியும். மேலும் லிங்ர்த்தம் காரகம் என்று சொல்லப்படுமானுல் அதுப்ரமாணமாகவே ஆகாது என்ற தோஷமும் எங்களுடைய சித்தாந்தத்தில் ஏற்படாது. அதனுல் லிங்காதிகளுக்கு இஷ்ட்டஸாதனத்வம் என்பதே அர்த்தம் என்று சொல்வதே சரியானதாகும். இல்லையானுல் லோகப்ரசித்தமாகவோ வேதப்ரசித்தமாகவோ இல்லாததான பாவனே என்பது கல்ப்பிக்கிப்படுகிறது என்றதோஷம் ஸம்பவிக்கின்றது.

**399. அவதாரிகை:**

சப்தபாவனே என்ற ஏவல் இல்லாமல் இருக்கட்டும். ஆனுல் அர்த்தபாவனே என்பது ப்ரமாண சித்தமாக இருக்கின்றதால், அதையே லிங்ர்த்தமாக ஒத்துக்கொள்ளலாமே? ஏனெனில் லிங்ர்த்தம் என்பது புருஷப்ரவ்ருத்தியை தெரிவிக்கிறது என்ற அர்த்தத்தை இல்லையென்று மறுக்க உங்களால் முடியாது. அதனுல் புருஷப்ரவ்ருத்திக்கு அங்கமாகவே, ப்ரஹ்ம மென்பது வேதாந்தத்தில் போதிக்கப்படுகிறது என்று சொல்லலாமே? அவ்விதம் ஆர்த்திபாவனே என்பதையும் லிங்ர்த்தமாகச் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

धात्वर्थतोऽन्या न च भावनाऽस्ति यां भावनां वक्तुमलं लकारः ।
धात्वर्थमुद्दिश्य न पुंस्प्रयत्नो लोके यतो भाति निरूपणायाम् ।।

**ச்லோகார்த்தம் :** தாத்வர்த்தத்திற்கு வேருக பாவனே என்பது இல்லாததால் அதை லகாரமானது தெரிவிக்கமுடியாது. ஏனெனில் இதை விசாரிக்கின்றபோது தாத்வர்த்தத்திலிருந்து வேருக புருஷ்ப்ரயத்னம் என்பது லோகத்தில் அறியப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** லகாரத்திற்கு சாப்தீபாவனே ஆர்த்திபாவனே என்ற இரண்டும் அர்த்தம் என்று முன்னுல், உன்னுல் சொல்லப்பட்டது. இப்போது புருஷப்ரயத்னம் என்ற ஆர்த்திபாவனேதான் லகாரத்திற்கு அர்த்தம் என்று சொல்லப்படுகிறது. இதுவும் சரியல்ல என்பதை மேலே விளக்குகிறோம். தாத்வர்த்தோ நாம க்ரியா என்பதால் க்ரியையைத்தான் தாத்வர்த்தம் என்று சொல்லவேண்டும். "க்ரியாவாசினே ப்வாதய: தாதுஸம்ஞாஸ்யு:" என்று க்ரியை என்பதைக்காட்டிலும் தாத்வர்த்தத்திற்கு வேறு அர்த்தமில்லையென்பதால் பாவனேயென்றும் புருஷப்ரயத்னம் என்றும் அர்த்தம் கல்பிப்பது பொருந்தாது.

உன்னுல் சொல்லப்படும் பாவனே என்பது எந்தக்ரியையை தெரிவிக்கிறது? உதாரணமாக பாகம் என்றக்ரியையில் அதிச்ரயணுதிகளான பாகவிஷயத்திற்கு தேவையான மற்ற ஸாமக்ரியைகளே சேர்க்கின்றகிரியையா அல்லது யாகம் என்றக்ரியையில் த்ரவ்யங்களை

தேவதாதிகளை உத்தேசித்துயாகம் செய்யப்படுகின்றக்ரியையா, அல்லது தேவதைகளுக்கு இதைத்யாகம் செய்கிறேன் என்ற ஸங்கல்பரூபமான மானஸக்ரியையா, அல்லது வ்ருக்ஷம் முதலானவைகளில் ஏற்படும் அசைவு என்ற ஸ்பந்தனம் என்றக்ரியையா என்று விசாரிக்கவேண்டும். இவ்விதம் விசாரிக்கின்றபோது இவையெல்லாமே தாத்வர்த்த மாகத்தான் அறியப்படுகிறதேயன்றி இதைத்தவிர வேருக பாவனை என்று சொல்லக் கூடியதாக எதுவும் அறியப்படவில்லை.

**பூர்வ :** தாத்வர்த்தம் என்பதில் க்ரியாஸாமான்யம் க்ரியாவிசேஷம் என்ற வித்யாஸம் இருக்கிறது. யாகம் குர்யாத் என்பதில் க்ரு என்ற தாதுவும் யாத் என்ற ப்ரத்யயமும் இருக்கிறது. இதில்க்ரு என்ற தாத்வர்த்தம் 'ப்ரயத்னம்' என்பதையும் 'யாத்' என்றப்ரத்யயம் ஏவலையும் தெரிவிக்கின்றது என்ற வித்யாஸம் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும்.

**400. அவதாரிகை :**

புருஷப்ரயத்னம் என்பதே கார்யம் (ஆர்த்திபாவனை). கார்யஸேஷமாகத்தான் ப்ரஹ்மத்தை வேதாந்தம் போதிக்கின்றது என்று சொல்லப்படுவது சரியல்ல என்பதை தெரிவித்து, இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

न कर्मकाण्डेऽपि ततो नियोगो न भावनाऽप्युक्तनयेन तस्मिन् ।
न तद् द्वयं वेदशिरस्सु तस्मात्ततो न कार्यार्थपराणि तानि ॥

**ச்லோகார்த்தம் :** மேலே சொல்லப்பட்ட காரணங்களினுல், கர்மகாண்டம் என்பது நியோக ரூபம் என்ருே அல்லது பாவனையை தெரிவிக்கின்றது என்ருே சொல்லமுடியாது. இவை இரண்டும் வேதாந்தத்தில் சொல்லப்படவில்லை, அதனுல் வேதாந்தம் கார்யபரமில்லை.

**வ்யாக்யானம் :** கர்மகாண்டத்தில்கூட, நியோகம் என்பதும் பாவனை என்பதும் லிஙர்த்தம் என்று சொல்லமுடியாது என்ருல், வேதாந்தத்தில் எப்படி நியோகாதிகள் ஸம்பவிக்கமுடியும்? அஞ்ஞாதார்த்தபோதகமான வேதாந்தத்தில் நியோகம் என்பதோ பாவனை என்பதோ, இருக்கிறதா இல்லையா என்ற சந்தேகத்திற்கே இடமில்லையென்பதால் வேதாந்தம் கார்யபரம் என்று சொல்வதற்கேமுடியாது. சித்தபரம் என்றே சொல்லவேண்டும் என்பதால் லிஙாதிகளிலிருந்து, பாவனை என்பதோ, நியோகம் என்பதோ அறியப்படவில்லை.

**401. அவதாரிகை :**

மேலும் வேதம் கார்யம் என்று சொல்லப்படுமானுல், கர்மகாண்டத்திலேயே இருக்கின்ற விதிபரமான சாஸ்திரம், நிஷேதபரமான சாஸ்திரம் எல்லாமே கார்யபரம் என்று சொல்லமுடியாது. நிஷேதசாஸ்திரத்தில் கார்யம் என்பதே கிடையாது. ஆகவே, கர்மகாண்டத்திலுள்ள வாக்யங்களிலேயே, இவ்விதம் கார்யபரம் என்று சொல்லமுடிய வில்லையென்ருல் வேதாந்தபாகத்தில் லிஙாதிகள் எப்படி கார்யத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अपि च प्रतिषेधचोदनाविषयः स्यात्प्रतिषिद्धकर्मणः ।
फलगर्धिनिवृत्तिरेव सा न नियोगो न च तस्य गोचरः ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் நிஷேத வாக்யத்தின் விஷயமானது, நிஷித்தகர் மாக்களின் பலத்தை அடைவதற்கான இச்சை என்பதின் நிவர்த்தியே ஆகும். இந்த நிவர்த்தியானது நியோகம் என்றே சொல்லமுடியாது.

வ்யாக்யானம் : 'நசுராம் பிபேத்' என்ற நிஷேதவாக்யம், சுராபானம் இஷ்ட்ட ஸாதனம் என்று நினைத்து, அதில் ப்ரவர்த்திக்கின்றவனை, அது சுகமில்லை, அநிஷ்ட்டஸாதனம் என்பதையே இந்த வாக்யம் தெரிவித்து, அதில் ப்ரவர்த்திக்காமல் அவனை தடுக்கின்றது. இதனுல் அவனுடைய இச்சை நிவர்த்திக்கின்றதால், அவன், தன்னுடைய ஔதாசீன்ய நிலையிலிருந்து நழுவாமல் இருக்கின்ருன். இதைத்தவிர, அவன் எந்தக்கார்யத்திலும் ப்ரவர்த்திப்பதில்லை. ஏனெனில் 'சுராபானம் செய்யாதே' என்று சொல்கின்றபோது, இதைக்கேட்பவன், அதன் பிறகு அனுஷ்டிக்கப்படவேண்டிய கார்யம் எதுவுமில்லை. இதேபோல் "ப்ராஹ்மணோநஹந்தவ்ய." என்ற வாக்யம், ப்ராஹ்மண ஹனனம் இஷ்ட்ட ஸாதனமில்லையென்பதையே தெரிவிக்கிறது. அதனுல் நிஷேத வாக்யத்திலுள்ள நஞர்த்தம், அபாவத்தை போதிக்கின்றது என்பது ப்ரசித்தம். இந்த வாக்யத்தில் ப்ராஹ்மணஹனனம் என்பது நிஷித்த கர்மா என்பதை தெரிவிக்கின்றது. அதனுல் ப்ராஹ்மணஹனத்தினுல் விரும்பப்பட்ட பலத்தில் உள்ள இச்சையை, நிஷேதவாக்யம் நிவர்த்திக்கின்றது. இந்த நிவர்த்தியே, ப்ரதிஷித்த சோதனைக்கு விஷயம். ஆகையால் நியோகமோ, பாவனை என்பதோ விஷயமில்லை. அதனுல் நியோகமோ, பாவனையென்பதோ நிஷேதவாக்யத்திற்கு வாச்யார்த்தமில்லை என்று சொல்வதற்காக அந்த வேதவாக்யமே ப்ரமாணமில்லை என்று சொல்வதற்குமுடியாது. ஆகவே, நியோகபரமாகவோ, பாவனுபரமாகவோ இல்லாமலேயே நிஷேதவாக்யங்கள் ப்ரமாணம் என்றே சொல்லப்படுகின்றது. அதனுல் ஸர்வ வேதமும் விதிபரம் என்று சொல்வதற்குமுடியாது.

**402. அவதாரிகை :**

நிவர்த்தி என்பதே நஞ்ஞர்த்தம் என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளமுடியாது. பர்யுதாஸம் முதலானவைகளும் நஞ்ஞர்த்தம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் பாவரூபமான அர்த்தத்தை போதிக்கின்றதால், அது அனுஷ்ட்டேயமாகின்றது. ஆகவே, அபாவம்தான் நஞ்ஞர்த்தம் என்று நியமம் சொல்லமுடியாது. (என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது).

**ச்லோகம் :** नञः स्वसम्बन्धिपदार्थवस्तुनो निवृत्तिरर्थः सहजः प्रसिद्धितः ।
अनीक्षणादौ व्रतशब्दसङ्गतेः परप्रयुक्ता खलु मानसी क्रिया ॥

**ச்லோகார்த்தம் :** ஸ்வாபாவிகமாகவே, 'நஞ்' என்பது தன்னுடன் ஸம்பந்தப்பட்ட அர்த்தத்தின் அபாவத்தையே போதிக்கின்றது என்பது ப்ரசித்தம்: அநீக்ஷணம் முதலான விஷயங்களில் வ்ரத சப்தப்ரயோகம் இருக்கின்றதால், ஸ்வாபாவிகமாக இல்லாத மானஸக்ரியை என்பதை நஞ்ஞர்த்தமாகச் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** நிவர்த்தியைத்தான் நஞ்ஞர்த்தம் போதிக்கிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? 'சுராம் நபிபேத்' என்ற வாக்யம், அபாவார்த்தத்தை போதிக்கின்றது என்பது உண்மையே. அதேபோல் லோகத்திலும் நஞ்ஞர்த்தம் அபாவத்தைப் போதிக்கின்றது என்பது ப்ரசித்தம்தான். ஆனுல் "நேக்ஷேதோத்யந்தமாதித்யம், நாஸ்தம்யந்தம்கதாசன நோபரக்தம் ந வாரீஸ்த்தம் நமத்யம் நபஸோகதம்" என்ற வாக்யமானது, ப்ரஜாபதி வ்ரதம் என்பதை அனுஷ்ட்டேயமாக தெரிவிக்கின்றதால், இந்த வாக்யத்திற்கு எப்படி அபாவார்த்தம் சொல்லமுடியும்? அதாவது, மேலே ப்ரஹ்மசாரிகள்

அனுஷ்டிக்கப்படவேண்டிய விஷயங்களை தெரிவிக்கிறேன் என்று சொல்லப்படும் வாக்யத்திலுள்ள 'வ்ரதம்' என்ற சப்தம், அனுஷ்ட்டேயமான ஒன்றை முடிவில் தெரிவிக்கின்றது. 'அதாத: ப்ரஜாதி வ்ரதம் என்ற இந்த வாக்யம் அனுஷ்டிக்கப்பட வேண்டியதான ஒன்றை தெரிவிக்கின்றதால் 'நஞ்' ப்ரயோகம் இருந்தாலும் அபாவார்த்தம் என்று சொல்வதற்கு முடியாது.

**சித்தா :** இந்த வாக்யத்திலுள்ள 'நஞ்' சப்தம் அபாவார்த்தத்தை போதிக்கமுடியாது என்று சொல்வது ஸத்யமே. ஏனெனில் 'வ்ரதம் வ்யாக்யாஸ்யாம:' என்று ப்ரஜாபதிவ்ரதம் அனுஷ்டிக்கப்படவேண்டிய முறைபற்றி தெரிவிக்கிறேன் என்று சொல்லப்படுவதாலும், 'வ்ரதம்' என்று ஆரம்பிக்கின்றதனுலேயே அது அனுஷ்ட்டேயமான ஒரு விஷயத்தையே தெரிவிக்கிறது என்ற அர்த்தம் அறியப்படுகிறது. அதனுல் இந்த வாக்யத்தின் அர்த்தம் 'ஈக்ஷணவிரோத ஸங்கல்பம் கர்த்தவ்யம்' என்று சொல்லவேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. அதனுல் இந்த இடத்தில் லக்ஷணையினுல் பாவார்த்தத்தை ஒத்துக்கொள்ள நேரிடுகிறது. ஆனுல் இவ்விதம் எல்லா நிஷேதவாக்யங்களுக்கும் அர்த்தம் சொல்லமுடியாது. மற்ற வாக்யங்களில் நஞ்ஞர்த்தம் முக்யமான அபாவார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும் என்பதால் முக்யார்த்தத்தை விடமுடியாது.

**403. அவதாரிகை :**

நிஷேதவாக்யங்கள், நிவர்த்தியையே போதிக்கின்றது என்பதை ஒத்துக் கொள்ளாமல், அவைகளும் ஏதோ ஒன்றை விதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், வேதத்திலுள்ள எல்லா வாக்யங்களுமே விதிவாக்யம் என்றே சொல்லநேரிடும். ஆனுல் வேதத்திலேயே விதிவாக்யம் என்றும் நிஷேதவாக்யமென்றும் சொல்லப்படுவதால், இதில் வித்யாஸம் என்பதே உன்னுல் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अपि च प्रतिषेधचोदना न तु भिद्येत भवन्मते विधेः ।
विधिरेव तु चोदनाऽखिला न हि वेदे वचनं निवर्तकम् ॥

**ச்லோகார்த்தம் :** உன்னுடைய மதத்தில் நிஷேதவாக்யம் என்பது, விதி வாக்யத்திலிருந்து வேறுபட்டது என்று சொல்லமுடியாது. ஏனெனில், எல்லாவாக்யங்களும் விதிவாக்யம் என்றே உங்களால் சொல்லப்படுகின்றதால், உங்கள் சித்தாந்தத்தின்படிவேதத்தில் நிவர்த்தக வாக்யங்களே இல்லையென்று சொல்ல நேரிடும்.

**வ்யாக்யானம் :** நிஷேதவாக்யமென்பதும் விதிவாக்யம் போலவே, ப்ரவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் இரண்டிற்கும் வித்யாஸம் என்பதே இருக்கமுடியாது. 'நசுராம் பிபேத்' என்பதற்கு, சுராபானம் செய்யாமல் இருப்பதற்கு ப்ரயத்னம் செய்கிறுன் என்று சொல்லப்படுமானுல் அதுசரியல்ல. முக்யார்த்தம் ஸம்பவிக்கின்ற இடத்தில் லக்ஷணையினுல் அர்த்தம் செய்வது சரியல்ல. நிஷித்த கர்மாவிற்குபாபம் பலன். நிஷித்த கர்மாவிற்கு விபரீதமாக ஒரு கார்யத்தைச் செய்யப்ரயத்னம் செய்கிறுன் என்றுல், அதற்கு பலன் என்ன? விதிவாக்யத்தினுல் தெரிவிக்கப்படும் கார்யத்தைச் செய்வதால் பலன் உண்டு. ஆகவே, விதி, நிஷேதம் என்ற இரண்டும் முற்றிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டது. எப்படியெனில், இரண்டிற்கும் பலபேதம் இருக்கிறது. அதேபோல் அறியப்படவேண்டிய விஷயத்திலும் பேதம் இருக்கிறது. (ஞானபேதம் இருக்கிறது) அதிகாரிபேதம், விஷயத்தை போதிக்கின்ற முறையில் உள்ள பேதம் என்று பலவிதமான பேதங்கள் இருக்கின்றது

என்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது. அதனுல் இரண்டும் ஒன்று என்று சொல்வது சரியல்ல. ஆகவே, உங்களுடைய பக்ஷத்தில் சோதனையென்ருலே, விதிசோதனையென்றே சொல்லப்படுவதால், வேதம் நிஷேத வாக்யங்களை தெரிவிக்கவில்லை என்று சொல்லநேரிடும். அதனுல் ப்ரதிஷேதசாஸ்திரமும் அனுஷ்டிக்கப்பட வேண்டிய ஒன்றை தெரிவிக்கிறது என்று அர்த்தம் செய்வது சரியல்ல.

**404. அவதாரிகை :**

நிஷேத சாஸ்திரம், நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று சித்தம் செய்வதால் உங்களுக்கு ஏற்படும் லாபம் என்ன?

**ச்லோகம் :**

प्रतिषेधवाक्यवदतः सकलं विधिशून्यमेव फ़लवद्भवतु ।
वचनं त्रयीशिरसि तत्वमसिप्रभृति प्रतीचि तमसोऽपहतेः ॥

**வ்யாக்யானம் :**

**சித்தா :** நிஷேதவாக்யங்கள் நிவர்த்தியை போதிக்கின்றது என்று தீர்மானம் செய்வதால் ஏற்படும் லாபம் என்ன என்ருல்,

கார்யம் என்பதை போதிக்காமல், நிஷேதவாக்யம் என்பது கார்ய அபாவத்தை போதிக்கின்ற வாக்யமாக இருந்தும் எப்படி ப்ரமாணமாகின்றதோ, அதேபோல் 'தத்வமஸி' முதலான வேதாந்தவாக்யங்களும், விதிசூன்யமாக இருந்தபோதிலும், ப்ரத்யகாத்ம விஷயத்திலுள்ள அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற காரணத்தினுல் பலம் உள்ள வாக்யமாக இருக்கின்றதாலும், சித்த வஸ்துவை போதிக்கின்றவாக்யமும் ப்ரமாணமாகிறது என்பதை சித்தம் செய்யப்படுகிறது. அதுவே எங்களுக்கு ஏற்படும் லாபம். இதனுல் வேதவாக்யங்கள் எல்லாமே விதியைத்தான் போதிக்கின்றது என்று சொல்வதற்குமுடியாது. விதி நிரபேக்ஷமாக இருந்தும் ஸம்ஸாரபீஜமான அஞ்ஞான நிவர்த்தி என்ற பலத்துடன் கூடியதாகவே இருக்கின்றது. ஆகவே, உபநிஷத்வாக்யங்களிலுள்ள சித்தவஸ்துபரமான வாக்யங்களும் பலமுள்ளதாகவே இருக்கின்றதால் ப்ரமாணமாகிறது என்பது இதனுல் சித்தம் செய்யப்பட்டது.

**405. அவதாரிகை :**

நிஷேத வாக்யத்திலுள்ள 'நஞ்ஞர்த்தம்', நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்ற விஷயத்தை, மேலும் த்ருடப்படுவதற்காக, மற்ற மதஸ்த்தர்களால் சொல்லப்படும் பக்ஷத்தை விளக்கி, அவைகளும் சரியல்ல என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नामधातुसहितो नञिष्यते पर्युदासविषयो मनीषिभिः ।
न प्रसक्तविनिवृत्तिवाचकोऽब्राह्मणादिषु तथोपलम्भनात् ॥

**ச்லோகார்த்தம் :** 'நஞ்' என்பது நாமாவுடனே, அல்லது தாதுவுடனே, ப்ரயோகிக்கின்றபோது, பர்யுதாஸார்த்தத்தையே போதிக்கின்றது என்று வித்வான்களால் சொல்லப்படுகின்றது. இந்த இடங்களில், 'நஞ்' என்பது ப்ரஸக்த ப்ரதிஷேதம் என்ற அர்த்தத்தை போதிக்காது. ஏனெனில், அப்ராஹ்மணன், அதர்மம் போன்ற பதங்களில் பர்யுதாஸமே காணப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'நஞ்' என்பதற்கு எல்லா இடத்திலும் நிவர்த்திதான் அர்த்தம் என்று சொல்லமுடியாது. சில இடத்தில் நிவர்த்தியும், சில இடத்தில் பர்யுதாஸம் என்பதும்

அர்த்தமென்றே ஒப்புக்கொள்ளவேண்டும். அந்தந்த இடங்களில் இருக்கின்ற விஷய பேதத்தைக்கொண்டு, 'நஞ்' அர்த்தம் என்னவென்று சொல்லவேண்டும் ஆகையால், அபாவம் என்ற நிவ்ருத்திதான் முக்யார்த்தம் என்றும், பர்யுதாஸம் முக்யார்த்தமில்லை என்று சொல்வது சரியல்ல, இரண்டும் முக்யார்த்தம் என்றே சொல்லவேண்டும் என்பது பாட்டர்களின் அபிப்ருயம். 'நஞ்' என்பது எந்த இடத்தில் முக்யார்த்தத்தை போதிக்கின்றது எந்த இடத்தில் பர்யுதாஸத்தை போதிக்கின்றது என்ருல், க்ரியாபதமாக இல்லாத ஸுபந்தம் என்ற நாமபதத்துடனே, க்ரியாபதமான தாதுவுடனே, 'நஞ்' அர்த்தம் எந்த விஷயத்தை போதிக்கின்றதோ அதுவே பர்யுதாஸம் என்பதை போதிக்கின்றது. நிவ்ருத்தியை போதிக்கவில்லை. அதாவது இந்த இடத்தில் 'நஞ்' சப்தமானது விருத்தம் (= வேறு,) என்ற அர்த்தத்தையே போதிக்கின்றது.

"நாம தாத்வர்த்த யோகேன நைவ நஞ்ப்ரதிஷதக:

வததோऽப்ராஹ்மணுதர்மாவன்யமாத்ர விரோதிநௌ" என்று சொல்லப்படுகிறது. அதாவது நாமா என்பதுடனே, தாத்வர்த்தத்துடனே, 'நஞ்' என்பது சேர்க்கப்பட்டிருக்குமானுல், அந்த இடத்தில் 'நஞ்' என்பது அபாவமென்ற நிவர்த்தியை போதிக்கவில்லை. அப்ராஹ்மண:, அதர்ம:, என்று ப்ரயோகம் செய்யுமிடத்தில் ப்ராஹ்மண அன்யம் என்றும் (அன்யம் என்ற அர்த்தத்தையும்) அதர்மம் என்னுமிடத்தில் தர்மவிருத்தம் (விரோதம்) என்ற அர்த்தமும் 'நஞ்' அர்த்தமாக தெரிவிக்கின்றது. இந்தவிதம் பர்யுதாஸம் என்பது அனுதிகாலமாகவே ஒத்துக்கொள்ளப்படுகிறது. (இது அனுதி லக்ஷணம்). அனுதி லக்ஷணையென்றும், சாதிலக்ஷணை என்றும் இரண்டு விதம் சொல்லப்படுகிறது. உதாரணமாக லாவண்யம் என்ருல் அழகு என்றும், குசலம் என்ருல் லவணஸ்யபாவம் லாவண்யம் = உப்பு கரிக்கின்றது என்பதே (ஸம்ஸ்க்ருத பாஷையில் அர்த்தம்)முக்யார்த்தம். லாவண்யம் என்பதற்கு அழகு என்ற அர்த்தம் முக்யார்த்தமுமில்லை, லக்ஷணையாக அர்த்தம் செய்யப்படுவதாகவும் சொல்லமுடியாது. ஆனுலும், அனுதி காலமாக லாவண்யம் என்பதற்கு அழகு என்ற அர்த்தம் முக்யார்த்தமாகவே வழக்கத்தில் இருக்கிறது. இதையே அனுதி லக்ஷணை என்று சொல்லப்படும்.

இதேபோல் குசலம் என்ருல், குசம் என்பதற்கு தர்ப்பை என்றும், லம் என்ருல் அறுப்பது என்றும் அர்த்தம். அதனுல் குசலம் என்பதற்கு தர்ப்பையை அறுப்பது என்பதே முக்யார்த்தம். ஆனுல் குசலம் என்பதற்கு திறமை என்றும் க்ஷேமம் என்றும் அனுதிகாலமாக முக்யார்த்தமாகவே சொல்லப்படுகின்றதால் இதை அனுதி லக்ஷணை என்று சொல்லப்படுகிறது. 'கங்காயம்' என்ற பதத்திற்கு 'தீரம்' என்று சொல்லப்படும் லக்ஷணை, சாதி லக்ஷணை என்று சொல்லப்படுகிறது.

ஆகவே, 'நஞ்' என்பதற்கு பர்யுதாஸம் என்ற ஒரு அர்த்தம் சொல்லப்பட்ட போதிலும், அதை நிரூட லக்ஷணை என்று அனுதி காலமாக பர்யுதாஸம் என்பதை விவகாரத்தில் ப்ரயோகம் செய்யப்படுகிறது என்ருலும், அதை 'நஞ்' என்பதின் முக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. அபாவார்த்தம் என்பதே முக்யார்த்தம் என்று சொல்லவேண்டும். 'பராஹ்மணே நஹந்தவ்ய:' என்ற வாக்யத்தில் ப்ராஹ்மண: என்பது நாமபதம். 'ஹன்யாத்' என்பதிலுள்ள 'ஹனு' என்பது தாது. 'யாத்' என்ற பதம் ப்ரத்யயம். இதில் ஹனு என்ற தாது 'கொல்வது' என்ற க்ரியையும், 'யாத்' என்ற பதம் செய்யவேண்டும் என்ற விதியையும் தெரிவிக்கின்றது. (ஹன்யாத் = கொல்லவேண்டும்) (யாத் = தவ்யம் என்பது நியோகம்) எந்த இடத்தில் 'நஹந்தவ்ய:' என்று

தெரிவிக்கின்றதோ, அந்த இடத்தில் பர்யுதாஸம்தான் போதிக்கப்படுகிறது என்று அறிஞர்களால் சொல்லப்படுகின்றது. (இதனுல் நஞ் என்பதற்கு பர்யுதாஸமே முக்யார்த்தம் என்று பாட்டார்களால் சொல்லப்படுகிறது.)

**406. அவதாரிகை :**

நாமாவுடனும், தாதுவுடனும் 'நஞ்' என்பது சேர்ந்த இடத்தில் பர்யுதாஸம் அர்த்தம் என்பதற்கு உதாரணம் என்னவென்ருல்,

**ச்லோகம் :**

अब्राह्मणाधर्मगिरोर्नञेषः नामान्वयादाश्रितपर्युदासः ।
अन्यं विरुद्धं च सदाभिधत्ते नोद्यन्तमित्यादिषु धातुयोगात् ॥

**ச்லோகார்த்தம் :** அப்ராஹ்மணன், அதர்மம், முதலானஇடங்களில் நாமாவுடன் சேர்ந்திருப்பதாலும், "நேக்ஷேதோத்யந்தம்" என்பது போன்ற இடங்களில் தாதுவுடனும் சேர்ந்திருப்பதால், இது போன்ற இடங்களில் பர்யுதாஸார்த்தத்தையே 'நஞ்' சப்தம் போதிக்கின்றது. ஆகையால் இது போன்ற இடங்களில் 'நஞ்' என்பது எப்போதும் அன்யமான அர்தத்தையோ, அல்லது விருத்தமான அர்த்தத்தையோ தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** நாமாவுடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் இருக்குமிடத்திலும், தாத்வர்த்தத்துடன் அன்வயம் இருக்குமிடத்திலும் பர்யுதாஸார்த்தமே சொல்லப்படுகிறது என்பதற்கு உதாகரணம் என்ன என்பதை இங்கு இரண்டையும் பிரித்து விளக்கப்படுகிறது. 'அப்ராஹ்மண:' என்னுமிடத்தில், ப்ராஹ்மணனைக்காட்டிலும் அன்யம் என்ற பஞ்சமி அர்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது ப்ராஹ்மணனுக்கு ஸமமான, ப்ராஹ்மணனைப்போன்ற க்ஷத்ரியன் முதலானவர்களை 'அப்ராஹ்மண:' என்ற பதத்திலுள்ள 'நஞ்' அர்த்தம் தெரிவிக்கின்றது. இதேபோல் அதர்மம் என்ற இடத்தில், தர்ம விருத்தம் அதர்மம் என்பதையே 'நஞ்' அர்த்தம் போதிக்கின்றது. அதனுல் தர்மம் என்ருல் தர்மாத் அன்யம் என்று அர்த்தமில்லை. (தர்மேணஸஹ) தர்மேணவிருத்தம் என்று (த்ருதீயார்த்தம்) சொல்லப்படுகிறது. இவ்விதம் நாமாவுடன் 'நஞ்' என்ற அன்வயம் இருக்கின்ற இடத்தில் பர்யுதாஸம் என்பதே அர்த்தம் என்று உதாகரணம் சொல்லப்படுகிறது. இதேபோல் 'நேக்ஷேதா' என்ற வாக்யத்திலுள்ள 'நஞ்' அர்த்தம் நிவர்த்தியை போதிக்கவில்லையென்றும், ஈக்ஷணவிரோத ஸங்கல்பத்தையே போதிக்கின்றதால் பர்யுதாஸம்தான் அர்த்தமென்று சொல்லவேண்டும் என்று தாத்வர்த்தத்துடன் நஞர்த்தம் அன்வயமாக இருக்கின்ற வாக்யத்தை உதாகரணமாகச் சொல்லப்படுகிறது. அதாவது ஆதித்யனை பார்க்கின்ற க்ரியைக்கு விருத்தமாக பார்க்ககூடாது என்ற ஸங்கல்பத்தையே இந்த வாக்யம் போதிக்கின்றது என்றும் அதனுல் பர்யுதாஸம் என்றே சொல்லவேண்டும் என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்லப்படும் நிரூடலக்ஷணையினுல இவ்வித அர்த்தம் போதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. (நிரூடலக்ஷணை என்ருலும், அனுதி லக்ஷணை என்ருலும் இரண்டும் ஒன்றுதான்.)

**407. அவதாரிகை :**

இதே விஷயத்தை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नोद्यन्तमित्यत्र नञेक्षणार्थसमीपकार्यान्तरमुच्यते हि ।
ततश्च नेक्षिष्य इतीदृशी स्यात् संकल्पना संनिहितत्वहेतोः ॥

ச்லோகார்த்தம் : 'நேக்ஷேதோத்யந்தம்' என்னுமிடத்தில் 'நஞ்' பதம், ஈக்ஷணர்த்தத்திற்கு ஸமீபத்தில் இருக்கின்ற வேறு ஒரு கார்யத்தை தெரிவிக்கின்றது.

இவ்விதம் ஈக்ஷணம் என்பதற்கு ஸமீபமாக 'நஞ்' என்பது இருக்கின்ற காரணத்தினுலேயே நான் பார்க்கமாட்டேன் என்ற ஸங்கல்பம் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட விஷயத்தையே மேலும் விளக்கப்படுகிறது 'நேக்ஷேதோத்யந்தம் ஆதித்யம்' என்ற வாக்யத்தினுல் 'அதாதப்ரஜாதி: வ்ரதம் வ்யாக்யாஸ்யாம:' என்று செய்யவேண்டிய கார்யமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல், ஈக்ஷணம் என்ற தாத்வர்த்தத்திற்கு ஸமீபமாக இருக்கின்ற அநீக்ஷணம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. அதாவது எவன் பார்க்கின்ருனே அவன்தான், நான் உதய, அஸ்தமன, மத்யகால ஸூர்யனே பார்க்கப்போவதில்லை என்று ஈக்ஷண விரோதியான ஸங்கல்பம் செய்யவேண்டுமென்று இந்த வாக்யம் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். பார்க்கின்ற க்ரியைப்போலவே, பார்க்கவேண்டாம் என்பதும் மானஸக்ரியைதான். ஆகவே, ஈக்ஷணக்ரியையுடன் 'நஞ்' என்பது சேர்க்கப்பட்டிருப்பதால், ஈக்ஷணவிரோதியான ஸங்கல்பம் இந்த வாக்யத்தினுல் போதிக்கப்படுகிறது என்று சொல்லவேண்டும்.

**408. அவதாரிகை :**

இவ்விதம் 'நஞ்' என்பதற்கு பர்யுதாஸம் என்பதே அர்த்தம் என்று சொல்லப்படுமானுல், நஞர்த்தமாக நிவர்த்தி என்பது எப்படிச் சொல்லமுடியும்? என்ருல், சில இடங்களில் 'நஞ்' அர்த்தம் நிவர்த்தியையும் போதிக்கலாம்.

**ச்லோகம் :**

द्विजं न हन्यान्न कलञ्जमद्यादित्यादिवाक्ये विधिनाऽस्य योगात् ।
प्रसज्यमानार्थनिवृत्तिमात्रं नञोऽर्थ इत्याश्रितमादरेण ॥

**ச்லோகார்த்தம் :** ப்ராஹ்மணனை கொல்லக்கூடாது, மாமிஸம் புஜிக்கக்கூடாது என்பது போன்ற வாக்யங்களில், விதியுடன் சேர்ந்திருக்கின்றதால், ப்ரஸக்த ப்ரதிஷேதம் என்பதே 'நஞ்' அர்த்தமாகச் சொல்லப்பட வேண்டுமென்றே எங்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** நாமாவுடனும், தாதுவுடனும் ஸம்பந்தப்பட்ட நஞ்ஞர்த்தம், பர்யுதாஸம் என்று சொல்லப்படுகிறது என்பதற்கு கீழே இரண்டு உதாகரணங்கள் சொல்லப்பட்டது. இப்போது நிவர்த்தி என்ற அர்த்தம் எப்படி கிடைக்கிறது என்பதற்கு உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. 'த்விஜம் நஹன்யாத்' என்றும் 'களஞ்சம் நபக்ஷயேத்' என்றும் இரண்டு வாக்யங்கள் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் 'த்விஜம் நஹன்யாத்' என்ற வாக்யம் 'ப்ராஹ்மணனைக் கொல்லாதே' என்று தெரிவிக்கின்றது. இதில் விதி ஏதுமில்லை. ராகத்தினுல் ப்ராஹ்மணஹனனம் என்ற வ்யாபாரத்தைச் செய்ய ப்ரவர்த்திக்கின்றவனை, அந்த கார்யத்தில் ப்ரவர்த்திக்காமல் அவனை தடை செய்கின்றது. அதனுல் இந்த வாக்யத்தைக் கேட்டவுடன், ப்ரவர்த்திக்கமுயன்றவன், அந்த ப்ரவர்த்தியைவிட்டு ஔதாசீன்யமாக இருக்கின்ருன். அதனுல் இந்த இடத்தில் அநீக்ஷண ஸங்கல்பம்போல் ஸங்கல்பம் செய்வதாகச் சொல்லமுடியாது. நிவர்த்தியென்றே சொல்லவேண்டும். 'த்விஜம் நஹன்யாத்' என்ற வாக்யத்திலுள்ள 'நஞ்' என்ற பதம் நாமாவுடனே, தாதுவுடனே ஸம்பந்தப்படுவதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் த்விஜன் என்பது நாமா, ஹனனம் என்பது க்ரியை (தாது) யாத் என்பது ப்ரத்யயம். இந்த வாக்யத்திலுள்ள 'நஞ்' சப்தமானது நாமாவுடனே, அல்லது

தாதுவுடனே அன்வயிக்கிறது என்று சொல்லப்படுமானுல் ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படும். எப்படியெனில், ப்ராஹ்மணன் என்ற நாம பதத்துடன் 'நஞ்' என்பது சேர்க்கப்படுமானுல் அப்ராஹ்மணன் என்ற அர்த்தம் கிடைக்கும். அதனுல் ப்ராஹ்மணனைத் தவிர வேருக இருப்பவனைக்கொல்லலாம் என்ற அர்த்தம் கிடைக்கும். இவ்வித அர்த்தம் கிடைக்குமானுல் 'நஞ்' என்பதை நாமாவுடன் சேர்க்கமுடியாது. அதேபோல் 'நஞ்' என்பதை 'ஹனனம்' என்ற க்ரியாபதத்துடன் (தாது) சேர்க்கப்படுமானுல் ஹனன விருத்தமான கார்யம் என்றே அர்த்தம் கிடைக்கும். அதனுல் நஞ் என்பதை தாதுவுடன் சேர்க்கமுடியாது. இவ்விதம் 'நஞ்' என்பது அன்வயித்து அதன் அர்த்தத்தை போதிப்பதாகச் சொல்லவேண்டும். இந்தவிதம் சொல்லப்படுமானுல் ப்ரவர்த்தியின் அபாவத்தையே நஞ்ஞர்த்தம் போதிக்கின்றது என்று பாட்டர்களால் சொல்லப்படுகிறது.

**409. அவதாரிகை :**

இந்த விஷயத்தில், ப்ராபாகர்கள் வேறுவிதமான அர்த்தத்தை தெரிவிக்கிருர்கள். என்னவென்ருல்,

**ச்லோகம் :** नाद्यां न हन्यां न पिबेयमित्यपि वाक्येषु नञ्वत्सु वदन्ति मानसीम् ।
संकल्परूपां विधिबन्धिनीं क्रियां नोद्यन्तमित्यादिवचःस्विवापरे ॥

**ச்லோகார்த்தம் :** 'நேக்ஷேதோத்யந்தம்' என்ற வாக்யத்திற்கு எப்படி பர்யுதாஸார்த்தம் சொல்லப்படுகிறதோ, அதுபோல், 'நஞ்' என்பதுடன் கூடிய வாக்யங்களுக்கும், 'நான் கொல்லமாட்டேன்' 'நான் மாமிஸம் புஜிக்கமாட்டேன்' என்று விதி ரூபமான மானஸக்ரியை என்பதையே நஞ்ஞர்த்தமாகச் சொல்லவேண்டுமென்று ப்ராபாகர்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'த்விஜ நஹந்தவ்ய'. 'களஞ்சம் நபக்ஷயேச்' ந சுராம் பிபேத்' என்பது போன்ற நிஷேதவாக்யங்களில் உள்ள 'நஞ்' அர்த்தம், முக்யார்த்தமான அபாவத்தை (நிவர்த்தியை) போதிக்கின்றது என்ருலும், அதை விட்டுவிட்டு லக்ஷணையினுல் பர்யுதாஸம் என்ற அர்த்தமே, போதிக்கப்படுவதாக ப்ராபாகரர்களால் சொல்லப்படுகிறது இந்தவிதம் முக்யார்த்தம் ஸம்பவிக்கின்ற இடத்திலும் லக்ஷணையாகத்தான் அர்த்தம் சொல்லவேண்டும் என்று சொல்லமுடியாததைக்கூட சொல்லுகிருர்கள் என்று 'இத்யபி' என்று ச்லோகத்திலுள்ள பதத்தினுல் சொல்லப்படுகிறது. 'நேக்ஷேதோத்யந்தம்' என்னுமிடத்தில் ஈக்ஷணவிரோதி ஸங்கல்பம் என்று 'நஞ்' என்பதற்கு விரோதி அர்த்தம் ஏன் சொல்லப்படுகிறது என்ருல், இந்த வாக்யத்திற்கு முன்னுல் 'வ்ரதம் வ்யாக்யாச்யாம:' என்று அனுஷ்டிக்கப்படவேண்டிய ஒன்றை தெரிவிக்கின்றேன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் இந்த இடத்தில் வேறு எந்த முறையிலும் அர்த்தம் செய்யமுடியாது. ஏனெனில் அபாவம் என்ற அர்த்தமாக இருக்கும்பக்ஷத்தில் அனுஷ்டிப்பது என்பது பொருந்தாது. அதனுல் இந்த இடத்தில் வேறு எந்த முறையிலும் அர்த்தம் செய்யமுடியாது. அதனுல் முக்யார்த்தத்தைவிட்டு, ப்ரத்யயார்த்தத்திற்கு ஸமீபமாக இருக்கின்ற தாதுவுடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லப்படுகிறது. இதுபோல் மற்ற எல்லாவாக்யங்களிலும் நஞ்ஞர்த்தம் அபாவத்தை போதிக்கவில்லையென்று எப்படிச் சொல்லப்படுகிறது? என்ருல், 'நஹன்யாத்' என்பது போன்ற வாக்யங்களும் 'நேக்ஷேதோத்யந்தம்' என்ற வாக்யம் போல

விரோதி ஸங்கல்பம் என்றே சொல்லவேண்டும். எப்படியெனில், ப்ரத்யயாரததத்தைக் காட்டிலும் ஸமீபமாக இருக்கின்ற தாத்வர்த்தத்துடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லப்பட வேண்டும் என்பதை விட்டுவிட்டு, ஹனனப்ராகபாவம் என்று அர்த்தம் செய்யப்படவேண்டும். இவ்விதம் அர்த்தம் செய்யப்படுமானல், அபாவம் என்பது அனுஷ்ட்டேயமாக இல்லாததால், 'ப்ராகபாவத்தை காப்பாற்றக்கூடிய ஹனனவிரோதியான ஸங்கல்பத்தைச் செய்' என்று ப்ரத்யயார்த்தமான விதியுடன் நஞர்த்தத்தைச் சேர்த்து அர்த்தம் செய்யப்படவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானல் விரோதி ஸங்கல்பமான, மானஸக்ரியையை இந்த வாக்யம் விதிப்பதாகச் சொல்லலாம் என்று 'நஞ்' என்பதற்கு நிவர்த்தி என்ற அபாவார்த்தமே கிடையாது என்றும், பர்யுதாஸமே அர்த்தம் என்றும் ப்ராபாகார்களால் சொல்லப்படுகிறது.

**410. அவதாரிகை :**

'நஞ்' என்பதற்கு ப்ரதானமான ப்ரத்யயார்த்தத்துடன்தானே அன்வயம் சொல்லவேண்டும்? அதை விட்டுவிட்டு ஏன் உபஸர்ஜனமான தாத்வர்த்தத்துடன் அன்வயம் சொல்லவேண்டும் என்ருல், இந்தவிதம் தாத்வர்த்தத்துடன் அன்வயம் சொல்லாமல், வேறு முறையில் அர்த்தம் செய்வதற்கு வேறு எந்தவிதமான மார்க்கமும் கிடையாது என்று அவர்களால் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

वाक्येषु नञ्वत्सु निवृत्तिमात्रं प्रमेयमित्यभ्युपगम्यमाने ।
प्रत्यक्षमानेन विरुध्यते हि निवृत्तिशास्त्रं न च युज्यते तत् ॥

**ச்லோகார்த்தம் :** 'நஞ்' என்ற பதத்துடன்கூடிய வாக்யங்களின் அர்த்தம் நிவர்த்தி மாத்ரமே என்று சொல்லப்படுமானல், அது ப்ரத்யக்ஷப்ரமாணத்திற்கு விரோதமாக இருக்கிறது. அதனல் அபாவார்த்தம் சொல்லப்படுவது பொருந்தாது.

**வ்யாக்யானம் :** 'நஞர்த்தம்' நிவ்ருத்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானல், ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படுகிறது. அதனல் இந்த வாக்யங்களை நிவ்ருத்தி சாஸ்திரம் என்று சொல்லாமல், விதிசாஸ்திரம் என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். 'த்விஜம் நஹன்யாத்' என்ற வாக்யத்தில் 'ஹன்யாத்' என்பது விதி ப்ரத்யயமாக இருக்கின்றது. அதனல் நிவர்த்தி அர்த்தம் சொல்லமுடியாது. ஆகவே 'ஹனனம் செய்யமாட்டேன்' என்று ஸங்கல்பம் செய்கிருன் என்றே சொல்லவேண்டும். ப்ரத்யயார்த்தத்துடன்தான் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லவேண்டும் என்பது ப்ரசித்தமாக இருக்கின்ற போது, ப்ரக்ருதி அர்த்தத்துடன் ஏன் அன்வயம் சொல்லவேண்டும்?

விதி, ப்ரத்யயத்திற்கு விருத்தமாக இருக்கின்றதால் ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படுகிறது என்பதை 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்தை விசாரிக்கின்றபோது சொல்லப்போகின்ருேம். ஆகையால் ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படுமானல், இந்த வாக்யம் ப்ரமாணமென்றே ஆகமுடியாது. அதனல் பர்யுதாஸார்த்தம் தான் சொல்லப்படவேண்டும்.

**411. அவதாரிகை :**

மேலும், ஸபரஸ்வாமிகளின் பாஷ்யத்திலும் வாக்யங்களெல்லாமே ப்ரவர்த்தகம்தான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதனல் அதற்கு விரோதமில்லாமல் அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**ச்லோகம் :**

प्रवर्तकं वाक्यमुवाच चोदनां निवर्तकं नैवमुवाच भाष्यकृत् ।
ततश्च विघ्नो न हि चोदनाऽस्ति सा प्रवर्तिका या न भवेदिति स्थितिः ॥

**ச்லோகார்த்தம் :** பாஷ்யகாரரான ஸபரஸ்வாமிகள் ப்ரவர்த்தகவாக்யங்களைத்தான் சோதனை (ஏவல்) என்று சொல்லியிருக்கின்றுரேயன்றி நிவர்த்தக வாக்யங்களை சோதனை என்று சொல்லவில்லை. இதனுலேயே ப்ரவர்த்தகமாக இல்லாத வாக்யங்கள் ஏவலாக இருக்கமுடியாது என்பது அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** பாஷ்யகாரரான ஸபரஸ்வாமிகள், ஒரு க்ரியையில் ஒருவனை ப்ரவர்த்திக்கச் செய்வது எதுவோ, அதுவே சோதனை என்று சொல்லவேண்டுமென்று சொல்கிருரேயன்றி நிவர்த்தக வாக்யத்தை சோதனை என்று சொல்லவில்லை. ஆகவே, இதை அனுசரித்து நிஷேதவாக்யங்களுக்கு அர்த்தம் செய்யப்படவேண்டும். 'சோதனு லக்ஷணோऽர்த்தோ தர்ம:' என்ற ஸூத்ரத்திற்கு வ்யாக்யானம் செய்கின்றபோது 'சோதனேதி க்ரியயாப்ரவர்த்தகம் வசனம்' என்று சொல்லப்படுகிறதேயன்றி, நிவர்த்தியை போதிக்கின்ற வாக்யம் சோதனை என்று சொல்லப்படவில்லை. மேலும், நிஷேத வாக்யங்கள் நிவர்த்தியை போதிக்கின்றது என்றுலும், அது ப்ரமாணந்தான் என்று சொல்லப்படுமானுல் ப்ரவர்த்தகவாக்யம், நிவர்த்தகவாக்யம் என்ற இரண்டுமே சோதனை என்று அவரால் சொல்லப்பட்டிருக்கவேண்டும். இவ்விதம் சொல்லப்படாத காரணத்தினுல் நிஷேத வாக்யம் நிவர்த்தியை போதிக்கின்றது என்று சொல்வதற்கு தடையாக இருக்கிறது. அதனுல் ப்ரவர்த்தியை தெரிவிக்காத வாக்யம் சோதனை (ஏவல்) என்று சொல்லமுடியாது என்பதையே சாஸ்திரம் தெரிவிக்கின்றது.

**412. அவதாரிகை :**

இதுவரை 'நஞ்' அர்த்தமாகச் சொல்லப்பட்ட பக்ஷங்கள் இரண்டுமே சரியல்ல என்பதை மேலே கண்டிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

न नामयोगो न च धातुयोगो लिङादियोगोऽपि न कारणं नः ।
नञः स्वसम्बन्धिनिवृत्तिमात्रं स्वतोऽभिधेयं परतोऽन्यदस्य ॥

**ச்லோகார்த்தம் :** 'நஞ்' என்ற பதம், நாமாவுடனே, தாதுவுடனே அல்லது லிஙாதிகளுடனே ஸம்பந்தப்படுகின்றபோது, பல அர்த்தங்களை போதிப்பதற்கு காரணமாகின்றது. 'நஞ்' என்பது ஸ்வாபாவிகமாகவே, தன்னுடன் ஸம்பந்தப்பட்ட வஸ்துவின் அபாவத்தை போதிக்கின்றது. ஆனுல், வேறு காரணங்களினுல், வேறுவிதமான அர்த்தங்களை போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** பாட்டர்களாலும், ப்ராபாகரர்களாலும் சொல்லப்படும் 'நஞ்' அர்த்தம் சரியல்லவென்று மேலே கண்டிக்கப்படுகிறது. அவர்களால் சொல்லப்படும் வ்யவஸ்த்தைக்கு காரணமே இல்லை. அதாவது 'நஞ்' அர்த்தம் பலவிதம் என்று சொல்வதற்கு நாமா என்பதுடனும், தாதுவுடனும், லிஙாதிகளுடனும் ஸம்பந்தப்படுவதை காரணமாகச் சொல்லப்படுகிறது. இதற்கு உதாகரணமாக, அப்ராஹ்மண:, அதர்ம:, நேக்ஷேதோத்யந்தம் முதலான வாக்யங்களைச் சொல்லப்பட்டது. இவ்விதம் சொல்லப்பட்ட காரணம் எதுவுமே சரியல்ல. ஏனெனில், 'நஞ்' என்பதற்கு ஸ்வபாவமாகவே, அபாவம் என்பதே முக்யார்த்தம். பர்யுதாஸம் என்பது லக்ஷ்யார்த்தம்தான் என்பதால்

முக்யார்த்தமில்லே. 'அப்ராஹ்மணமானய' என்று சொல்லுமிடத்தில், 'நஞ்' என்பதற்கு அபாவார்த்தம் சொல்லப்படுமானுல், லோகப்ரசித்தமான அர்த்தத்திற்கு விரோதமாக இருக்கிறது. அதேபோல், 'அதர்மம் சரதி' என்ற இடத்தில் 'சரதி' என்பதால் அபாவார்த்தம் சொல்லமுடிவதில்லே. அதேபோல் 'நேக்ஷேதோத்யாதி' வாக்யப்ரயோகம் செய்கின்ற இடத்திலும், 'ப்ரஜாபதி வ்ரதம் வ்யாக்யாஸ்யாம:' என்று அனுஷ்டேயமான ஒன்றை தெரிவிக்கின்றதால் அபாவார்த்தம் சொல்லமுடியவில்லே. இவ்விதம் முக்யார்த்த பாதம் ஏற்படுமானுல் லக்ஷணேயாக அர்த்தம் செய்யப்படுகிறது. ஆகவே நிவ்ருத்தி என்பது எப்படி 'நஞ்' சப்தமுக்யார்த்தமோ அதுபோல் பர்யுதாஸம் என்பதும் முக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. ஒரே பதத்திற்கு அனேகார்த்தம் சொல்வது ந்யாயமில்லே என்பதாலும் இரண்டும் முக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. உதாகரணமாக 'கங்கயாம் கோஷ:' என்னுமிடத்தில் 'கங்கா' பதத்திற்கு, ப்ரவாகம் என்பது முக்யார்த்தம், தீரம் என்பதும் முக்யார்த்தம் என்று சொல்லமுடியாது. ஆகையால் எந்த இடத்தில் முக்யார்த்தம் பொருந்தவில்லேயோ அந்த இடத்தில்தான் லக்ஷணேயைக்கொண்டு அர்த்தம் செய்யலாம். அதனுல் 'நஞ்' சப்தத்திற்கு எந்த இடத்தில் என்ன அர்த்தம் செய்யப்படவேண்டும் என்பதற்கு அவர்களால் சொல்லப்படுவதெல்லாம் காரணமாகவே ஆகாது.

**413. அவதாரிகை :**

ஏன் இவ்விதம் ஒத்துக்கொள்ளப்படவில்லே என்ருல், 'நஞ்' என்பதற்கு நாமா என்பதுடனே, தாதுவுடனே, அல்லது லிஙாதிகளுடனே ஸம்பந்தம் இருக்கின்ற இடத்தில் எல்லாம் ப்ரயுதாஸம்தான் அர்த்தம் என்று நியமம் சொல்லமுடியாது. ஆகையால் இதில் வ்யபிசாரம் ஏற்படுகிறது.

**ச்லோகம் :**

तथाहि नाग्रे करिणीति नाम्ना गजोऽत्र नास्तीति च धातुयोगी ।
लिङादियोगेऽपि निवृत्तिरर्थो विषं न खादेदिति नञ्पदस्य ॥

**ச்லோகார்த்தம் :** இந்தவிதம், 'எதிரே இருப்பது யானே அல்ல,' என்ற இடத்தில் 'நஞ்' என்பது நாமத்துடனும், 'யானே இங்கு இல்லே' என்னுமிடத்தில் தாதுவுடனும், 'விஷத்தை புஜிக்கக்கூடாது' என்னுமிடத்தில் லிஙாதிகளுடனும் சேர்ந்து நிவர்த்தியையே போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** எதிரே இருக்கின்ற ஒரு மரத்தின் நிழலேப்பார்த்து, இது யானேயோ என்று ப்ரமித்து நிற்கின்றபோது, 'ந அக்ரே கரிணி' என்று 'எதிரே இருப்பது யானே அல்ல என்று இந்த வாக்யம் தெரிவிக்கின்றது. இதில் 'நஞ்' அர்த்தம் யானே என்ற நாமாவுடன் சேர்ந்திருந்த போதிலும், அபாவார்த்தத்தையே போதிக்கின்றது. இதேபோல், எதிரே இருக்கின்ற மலே குகைக்கு எதிரில் உள்ள பாறையைப்பார்த்து, யானே இருக்கிறது என்று சொல்கின்றபோது 'கஜம் நாஸ்தி' என்று அங்கு கஜம் இல்லேயென்று அஸ்தாதுவுடன் 'நஞ்' என்பது ஸம்பந்தப்பட்டிருந்தாலும் கூட, கஜ அபாவமே இந்த வாக்யத்தினுல் போதிக்கப்படுகிறது. இதேபோல், 'விஷம் ந காதேத்' என்னுமிடத்தில் லிஙர்த்தத்துடனே ஸம்பந்தப்பட்டிருந்தும் கூட அபாவார்த்தத்தையே போதிக்கின்றது என்று லோக ப்ரசித்தமான உதாகரணத்தின்மூலம் விளக்கப்பட்டதால், உங்களால் நஞுர்த்தம் ப்ரயுதாஸத்தையே போதிக்கிறதென்று சொல்லப்பட்ட காரணத்திற்கு வ்யபிசாரம் ஏற்படுகிறது.

**414. அவதாரிகை :**

இதேபோல் வேதவாக்யங்களிலும் 'நஞ்' என்பது, நாமா, தாது, லிஙாதிகள் என்பவைகளுடன் ஸம்பந்தப்பட்டிருந்தாலும் அவைகளும் அபாவார்த்தத்தையே போதிக்கின்றது என்பதால் உங்களால் சொல்லப்படும் காரணங்களுக்கு வ்யபிசாரம் ஏற்படுகிறது.

**ச்லோகம் :**

तथा श्रुतौ नेति वचःसु नामनि नानेह नास्तीति च धातुयोगो ।
तथा विदाने न कलञ्जमद्यान्नञोऽविशेषेण निवृत्तिरर्थः ।।

**ச்லோகார்த்தம் :** இதேபோல் வேதவாக்யம், 'இது இல்லை' 'இது இல்லை' என்று தெரிவிக்கின்றபோது நாமாவுடனும், 'இங்கு நானுத்வம் இல்லை' என்று சொல்லும்போது தாதுவுடனும், 'மாமிஸம் புஜிக்கக்கூடாது' என்னும்போது லிஙாதிகளுடனும் ஸம்பந்தப்படுகின்றபோது 'நஞ்' சப்தம் நிவர்த்தியையே போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'அதாத ஆதேச: நேதி நேதி' என்ற வாக்யம், மூர்த்தம், அமூர்த்தம் என்ற எதுவுமே இல்லையென்ற வாக்யத்திலுள்ள 'நஞ்' பதம் நாம பதத்துடன் சேர்ந்திருந்தும்கூட, அபாவார்த்தத்தையே போதிக்கின்றது. அதேபோல் 'ந இஹ நானு அஸ்தி' என்ற 'நேஹ நானுஸ்தி கிஞ்சன' என்ற வாக்யத்திலுள்ள 'அஸ்தி' என்ற (தாது) க்ரியாயபதத்துடன் சேர்ந்த 'நஞ்' அர்த்தம் 'த்வைதமில்லை' என்று அபாவத்தையே போதிக்கின்றது.

இதேபோல் 'ந களஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்திலுள்ள 'லிங்' என்பதுடன் சேர்ந்த 'நஞ்' அர்த்தம் நிவர்த்தியையே போதிக்கின்றது. 'நகளஞ்சம் அத்யாத்' என்ற இடத்தில், 'அத்யாத்' என்ற ப்ரத்யயத்துடன் நஞ் என்பதற்கு அன்வயம் இருந்தும்கூட நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது. அதனுல் நாம ஸம்பந்தம் இருப்பதனுலோ, அல்லது, தாதுவுடனே, லிஙாதிகளுடனே 'நஞ்' என்பது ஸம்பந்தப்பட்டிருப்பதற்காக பர்யுதாஸார்த்தமே சொல்லவேண்டும் என்பது வ்யபிசரிக்கின்றது. அதனுல் 'நஞ்' சப்தம் ஸ்வபாவமாக, அபாவார்த்தத்தையே போதிக்கின்றது என்பதால் நிவர்த்தியை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**415. அவதாரிகை :**

சொல்லப்பட்ட வாக்யங்களிலும் பர்யுதாஸமே அர்த்தம் என்று சொல்லலாமே என்றுல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

औदासीन्यं पुरुषगतमेवाविशेषान्नञोऽर्थः भ्रान्तिप्राप्तेऽसति तु विषये यत्र यत्रैष दृष्टः ।
नौदासीन्यं पृथगिह भवेदात्मचिन्मात्ररूपात् सिद्धे वस्तुन्यवसितमतो वेदवाक्यं निषेधे ।।

**ச்லோகார்த்தம் :** ப்ராந்தி சித்தமான விஷயங்களில், எந்த இடத்தில் 'நஞ்' என்பது ப்ரயோகம் செய்யப்படுகிறதோ அந்த இடத்தில் 'நஞ்' என்பது புருஷனிடத்தில் இருக்கின்ற ஔதாசீன்யத்தையே போதிக்கின்றது. ஔதாசீன்யம் என்பது சின்மாத்ரமான ஆத்ம ஸ்வரூபத்திலிருந்து வேறுபட்டது இல்லை. ஆகவே வேதத்திலுள்ள நிஷேத வாக்யங்கள் சித்த வஸ்துவை போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'நஞ்' அர்த்தம் எந்த இடத்திலும் நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று எப்படி நியதமாகச் சொல்லமுடியும்? என்றுல், ப்ரமாணத்தினுல் எந்த வஸ்து சித்திக்கின்றதோ அந்த வஸ்துவை நிஷேதம் செய்வதற்கேமுடியாது. அதேபோல் வஸ்துவே இல்லையென்றுலும் அதை நிஷேதம் செய்யமுடியாது. அதனுல், எந்த இடத்தில் நிஷேதம் செய்யப்படுகிறதோ, அந்த இடத்தில் அந்த வஸ்து ப்ராந்தி

சித்தமாகத்தான் இருக்கவேண்டும். ஆகவே, ப்ராந்திஜன்யமான (சித்தமான) விஷயத்தில்தான் 'நஞ்' என்பதே ப்ரயோகம் செய்யமுடியும். அதனுல் 'நஞ்' என்பது ப்ராந்தி விஷய அபாவத்தைத்தான் போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஏதோ ஒருசில இடத்தில் பர்யுதாஸம் அர்த்தம் என்று சொல்லநேரிடுகிறது என்பதற்காக பர்யுதாஸம் என்பதே நஞ்ஞர்த்தம் என்று சொல்லமுடியாது. ஆகவே, நஞ்ஞர்த்தம் என்பது நிவர்த்திரூபமான ஔதாசீன்யத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** 'நஞ்' என்பது ப்ராந்திசித்தமான விஷயத்தை நிஷேதம் செய்கின்றதால் ஔதாசீன்யம் என்ற நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமாஞல், நிவர்த்தி என்பதற்கும் ப்ரயத்னம் செய்யவேண்டி இருப்பதால், அதை கார்யம் என்று தானே சொல்லவேண்டும்?

**சித்தா :** 'ப்ராஹ்மணஹனனம்', 'ஸுராபானம்' முதலானவைகள் இஷ்ட்ட ஸாதனம் என்று நினைத்து ப்ரவர்த்திக்க விரும்புகின்றவனை, அவைகள் இஷ்ட்ட ஸாதனமில்லை என்று அபாவார்த்தத்தையே நஞ்ஞர்த்தம் போதிக்கின்றது. ப்ரவர்த்திக்க வேண்டுமென்ற ப்ராந்தி விஷயமான ப்ரஸக்த க்ரியா அபாவத்தையே போதிக்கின்றது. அதனுல் ஔதாசீன்யம் என்பது அனுஷ்டிக்கப்பட வேண்டிய க்ரியை அல்ல. ஔதாசீன்யம் என்பது கேவல ஆத்மஸ்வரூபமே என்பதால், புருஷஸ்வரூபத்தைக்காட்டிலும் வேருனதாக இல்லாததால், புருஷனுல் அனுஷ்டிக்கப்பட வேண்டிய கார்யம் என்று சொல்லமுடியாது.

எது நிவர்த்திக்கப்படுகிறதோ அவையெல்லாம் உண்மையில் இல்லாத வஸ்து என்பதால், ஆரோபித வஸ்து நிவர்த்தியென்பது அதிஷ்ட்டான ஸ்வரூபமாகவே இருக்கின்றது. அதனுல் வேத வாக்யங்களில், உள்ள நிஷேதபரமான வாக்யங்களும் சித்த வஸ்துவையே போதிக்கின்றது என்பதும் இதனுல் சித்திக்கின்றது. ஆகையால் ப்ராந்தி சித்தமான விஷயத்தில் நஞ்ஞர்த்தம் நிவர்த்தியை போதிக்கின்றது. ப்ரமாணசித்தமான விஷயத்தில் நிஷேதமே ஸம்பவிக்காது என்பதால், அந்த இடத்தில் நஞ்ஞர்த்தம் பர்யுதாஸம் என்று லக்ஷணையினுல் சொல்லப்படுகிறது என்று விவேகித்து அறியவேண்டும். நிவர்த்தி என்பது க்ரியாரூபமாக இருந்தால் விதிநிஷ்ட்டம் என்று சொல்லலாம். ஆனுல் நிவர்த்தியென்பது ஔதாசீன்யரூபமாக இருப்பதால் இதில் விதி என்பதே ஸம்பவிக்க முடியாது.

**416. அவதாரிகை :**

கீழே, 'க்ரியையா ப்ரவர்த்தகம் வசனம் சோதனம்' என்று ஸபரஸ்வாமிகளின் பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே என்ருல், நிவர்த்தகவாக்யம் ப்ரமாணமில்லை என்ற அர்த்தத்தில் அவரால் சொல்லப்படவில்லை. ப்ரவர்த்தகம், நிவர்த்தகம் என்ற இரண்டு வாக்யங்கள் இருக்கின்றதென்பதை அறிந்தே, உபலக்ஷணமாக ப்ரவர்த்தக வாக்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**ச்லோகம் :**

प्रवर्तकं वाक्यमुवाच चोदनां निधाय बुद्धौ वचनं निवर्तकम् ।
द्वितीयसूत्रे भगवान्बहुश्रुतो न चोदनाद्वित्वनिवारणाय तत् ॥

**ச்லோகார்த்தம் :** நன்கு பாண்டித்யமுடைய பகவான் ஸபரஸ்வாமிகள் நிவர்த்தக வாக்யங்களை கருத்தில் கொண்டே, சோதனு என்பது ப்ரவர்த்தக வாக்யமென்று இரண்டாவது ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் தெரிவிக்கின்ருர். ஆகையால், அந்த வாக்யம் இரண்டுவிதமான சோதனையை நிஷேதிப்பதாக ஆகாது.

**வ்யாக்யானம் :** 'க்ரியையா ப்ரவர்த்தகம் வாக்யம் சோதனு' என்று பாஷ்யம் செய்யப்பட்டதனுல், நிஷேதவாக்யம் ப்ரமாணமில்லே என்று சொல்லமுடியாது. ஏனெனில் 'சோதனு லக்ஷணேர்த்தோ தர்ம:' என்ற ஜைமினி சூத்ரத்திற்கு அர்த்தம் தெரிவிக்கின்றபோது, 'சோதனு லக்ஷணே தர்ம:' என்று சொல்லாமல், 'சோதனு லக்ஷணே அர்த்தோ தர்ம:' என்று 'அர்த்த:' என்ற பதம் அதிகமாக சேர்த்தே ஜைமினியினுல் சூத்ரம் செய்யப்பட்டிருக்கிறது. அதனுல் வேதத்திலிருந்து தர்மம் என்ன என்பது மட்டுமல்லாமல், அதர்மம் என்னவென்பதையும் அறிந்துகொள்ளவேண்டுமென்று சூத்ரத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது என்பதை பாஷ்யகாரரால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே 'அதர்மத்தை தெரிந்துகொள்' என்று சொல்லப்படுவதனுலேயே நிஷேதம் என்பது சோதனைக்கு விஷயம் என்று அறிந்தே, அதை ஒத்துக்கொண்டு பாஷ்யம் செய்திருக்கின்ருர் என்றே சொல்லவேண்டும். உதாகரணமாக 'ச்யேனயாகம் செய்' என்று வேதவாக்யம் தெரிவிக்கின்றது. ஆனுல் இந்தவாக்யம் சத்ருவைவதம் செய்வதற்குரிய கர்மாவை தெரிவிக்கின்றது என்பதால் இதனுல் ஹிம்ஸை ஏற்படுகிறது. அதனுல் இந்த கார்யம் அதர்மம் என்று தீர்மானிக்கப்படுகிறது. இந்தவிதம் தர்மம் என்பது மட்டுமல்லாமல் அதர்மம் எது என்பதையும் அறியவேண்டும் என்பதே சூத்ரத்தின் அர்த்தம் என்று, 'ப்ரவர்த்தகம் வாக்யம் சோதனு' என்று உபலக்ஷணமாகவே பாஷ்யகாரரால் சொல்லப்பட்டிருக்கிறது, என்று அறியவேண்டும்.

**417. அவதாரிகை :**

இவ்விதம் நஞ்ஞர்த்தம், நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படும் விஷயம் சரியல்ல என்று ப்ராபாகரர்களால் தூஷிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

ननु निवृत्तिपरत्वमुदीरितं विघटयामि निषेधगिरामहम् ।
न हि कलञ्जमिति प्रतिपाद्यते यदि तदा नयनेन विरुध्यते ॥

**ச்லோகார்த்தம் :** நிஷேத வாக்யங்கள் நிவர்த்திபரம் என்ற அத்வைத மதம், ப்ராபாகரமதம் இவைகளை அனுசரிக்கின்ற எங்களால் 'களஞ்சம் நபக்ஷயேத்' என்ற வாக்யத்தினுல் களஞ்சத்தின் அபாவம் போதிக்கப்படவில்லையென்றும், அவ்விதம் சொல்லப்படுமானுல் அது ப்ரத்யக்ஷவிரோதமாகும் என்று சொல்லப்படுகிறது. அதனுல் உங்களுடைய பக்ஷம் சரியல்ல என்று நிஷேதம் செய்கிருேம்.

**வ்யாக்யானம் :** 'ந களஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யம் ப்ரயோகம் செய்கின்ற இடத்தில் களஞ்சம் என்ற நாம பதத்துடன் 'நஞ்' என்பது சேர்ந்து, அது களஞ்சம் இல்லேயென்று நிஷேதம் செய்கின்றதா? அல்லது களஞ்சம் என்பது புஜிக்கின்றபோது புஜிக்கவில்லே என்று அந்த க்ரியையை நிஷேதம் செய்கின்றதா. அல்லது களஞ்ச பக்ஷணத்தினுல் ஏற்படும் சுகத்தையோ, த்ருப்தியையோ இல்லேயென்று நிஷேதம் செய்கின்றதா அல்லது ப்ரத்யயார்த்தமான பக்ஷண விஷயம் நியோகமில்லேயென்று நியோகத்தை நிஷேதம் செய்கின்றதா இதில் எதை நஞ்ஞர்த்தம் நிஷேதம் செய்கின்றது? ப்ரத்யக்ஷமாக கையில் வைத்துக் கொண்டிருக்கின்ற 'களஞ்சம்' என்பதை இல்லே என்று நிஷேதம் செய்யமுடியாது. ஏனெனில் 'சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்தினுல் களஞ்சம் என்பது அறியப்படுகிறது. அதனுல் அதை நிஷேதம் செய்வதாகச் சொல்லப்படுமானுல் ப்ரத்யக்ஷ விரோதம் ஏற்படும். அதனுல் களஞ்சம் என்ற நாமபதத்துடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லமுடியாது.

**418. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்ட ஆக்ஷேபங்களில் இரண்டாவது, மூன்ருவது ஆக்ஷேபங்களை நிஷேதம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

अथ कलञ्जपदार्थगभक्षणं नहि तदाऽप्यमुनैव विरुध्यते ।
अथ तदीयफलस्पृहयान्वयो न हि तदप्यनुभूतिपराहतम् ॥

**ச்லோகார்த்தம் :** நிஷேதார்த்தகமான 'நஞ்' என்பது களஞ்ச பக்ஷண அபாவத்தை போதிப்பதாகச் சொல்லப்படுமாகுல், ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படும். அதேபோல் 'நஞ்' என்பது பல இச்சையுடன் அன்வயிப்பதாகவும் சொல்லமுடியாது. ஏனெனில் அதுவும் ப்ரத்யக்ஷ விரோதமாக இருக்கிறது.

**வ்யாக்யானம் :** தாத்வர்த்தமான பக்ஷணத்துடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லப்படுமாகுல், களஞ்சம்புஜிக்கவில்லை என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. 'களஞ்சம்' என்பதை புஜிக்கின்ருன் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுவதால், ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாகிறது. அதேபோல் களஞ்ச பக்ஷணம் சுகத்தைக் கொடுக்கின்றது என்பதையும் நிஷேதம் செய்யமுடியாது. ஏனெனில் அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறது அதனுல் ப்ரத்யயார்த்தமாக நியோகத்துடன் அன்வயம் சொல்லப்படுமாகுல் அனுபவத்திற்கு விருத்தமாக இருக்கிறது. மேலும் களஞ்ச பக்ஷணம் விதி ப்ராப்தமாக இருந்தால்தான் அதை நிஷேதம் செய்யலாம். அதாவது 'களஞ்ச பக்ஷணம் செய்' என்று நியோகம் இருந்தால்தான் நஞ் என்பது நியோகத்துடன் சேர்ந்து 'அதைச் செய்யாதே' என்று நிஷேதம் செய்வதாகச் சொல்லலாம். களஞ்சம் என்பது ராகத்தினுல் ப்ராப்தம் என்பதால் ப்ரத்யயார்த்தத்துடன் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லமுடியாது.

**419. அவதாரிகை :**

अथ तदीयनियोगनिवर्तनं भवतु भक्षणमस्तुतदिच्छया ।
न हि नियोगनिवृत्तिनिवेदने सति कलञ्जमभक्ष्यमितीर्यते ॥

**ச்லோகார்த்தம் :** மேலும் 'நஞ்' என்பது களஞ்ச பக்ஷண விஷயமான நியோகத்தை (ஏவலை) நிவர்த்திப்பதாகவும் சொல்லமுடியாது. ஏனெனில், ராகத்தினுலேயே களஞ்ச பக்ஷணத்தில் ப்ரவர்த்தி ஏற்படுகிறது. ஆகையால் நியோகம் என்பது புஜிக்கக்கூடியது அல்ல என்று ஒத்துக்கொள்வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற ச்ருதிவாக்யம் களஞ்ச பக்ஷணம் அனர்த்தஹேது என்று தெரிவிக்கின்றதால் களஞ்ச பக்ஷணம் நிஷேதம் செய்யப்படுகிறது என்று சொல்லப்படுவதெல்லாம் உண்மையல்லவென்றும் முற்றிலும் கல்பனையே என்று, இந்த விஷயத்தை விசாரிக்கின்றபோது அறியப்படுகிறது. களஞ்ச பக்ஷணம், வேதத்தினுல் விதிக்கப்பட்டிருந்தால்தான், அந்த விதியைமீறி பக்ஷணத்தில் ப்ரவர்த்திக்கின்ருன் என்று சொல்லலாம். ஆகவே, எந்த கார்யமாக இருந்தாலும் இச்சையினுல்தான் எல்லோரும் ப்ரவர்த்திக்கின்ருர்கள் என்பதால், ராகப்ராப்தமான கார்யத்தில் ப்ரவர்த்திப்பதை தோஷம் என்று சொல்லமுடியாது. க்ருஷ்யாதிகளிலும் இச்சையினுல்தான் ப்ரவர்த்திக்கின்ருன். அதனுல் எவ்வித அனர்த்தமும் ஏற்படுவதில்லை, அதனுல் தோஷம் என்பது ஏற்படுவதில்லை. ஆகவே க்ருஷ்யாதிகள் எப்படி நியோகமில்லையோ அதுபோல் களஞ்சம் பக்ஷயேத் என்பதும் நியோகமில்லை. ராகத்தினுல் ப்ராப்தமாகின்ற விஷயம் அநிஷ்ட்ட ஸாதனம் என்று தெரிவித்து

நிஷேதம் செய்யப்படுவதாகச் சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல. ஏனெனில் களஞ்ச பக்ஷணம் சுகஸாதனம் என்பது அனுபவத்தினுல் அறியப்படுகிறது. அதனுல், களஞ்ச பக்ஷணம் அநிஷ்ட்டஸாதனம் அனர்த்தகரம் என்று இந்த வாக்யம் நிஷேதத்தினுல் தடுக்கின்றது என்று சொல்வது பொருந்தாது.

**420. அவதாரகை :**

இந்தவிதம் 'களஞ்சம்' என்பதையோ, பக்ஷணம் என்பதையோ, நியோகம் என்பதையோ, அல்லது களஞ்ச பக்ஷணத்தினுல் ஏற்படும் சுகம் என்பதையோ நஞ்ஞர்த்தம் நிஷேதம் செய்யவில்லையென்ருல், இந்த நான்கையும் தவிர வேருக இருக்கின்ற ஒன்றை நிஷேதம் செய்கிறது என்று சொல்வதற்கு, இந்த வாக்யத்தில் வேறு பதங்கள் எதுவுமில்லை. அதனுல் வேறு எதனுடனும் நஞ்ஞர்த்தம் அன்வயிப்பதாகச் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

इह कलञ्जपदेन नञन्वयो भवति वाऽस्य नञोऽदिसमागमः ।
अदिगतेन लिङादिपदेन वा सह समेति नञत्र गतिस्त्रयी ॥

**ச்லோகார்த்தம் :** 'நகளஞ்சம் அத்யாத்' என்ற வாக்யத்தில் நஞ் என்பது 'களஞ்ச' பதத்துடன் அன்வயிக்கலாம். அல்லது 'அத்யாத்' என்ற பதத்துடன் அன்வயிக்கலாம். அல்லது 'அத்' என்ற தாதுவுடன் சேர்ந்திருக்கின்ற லிஙாதி ப்ரத்யயங்களுடன் அன்வயிக்கலாம். இந்தமூன்று விதங்களில்தான் 'நஞ்' என்ற பதம் சேர்க்கமுடியும்.

**வ்யாக்யானம் :** நஞ்ஞர்த்தம் என்பது எதனுடன் ஸம்பந்தப்படுகின்றதோ, அதை இல்லையென்று நிஷேதம் செய்கிறது என்று சொல்லப்படுமானுல், களஞ்சம் என்ற நாமபதம், பக்ஷணம் என்ற தாத்வர்த்தம், பக்ஷயேத் என்பதிலுள்ள 'யேத்' என்ற லிஙர்த்தமான ப்ரத்யயம் என்ற இந்த மூன்றையும் தவிர இந்த வாக்யத்தில் 'நஞ்' என்பதுடன் அன்வயிக்கக்கூடிய பதம் வேறு எதுவும் இல்லை. ஆகையால் நஞ்ஞர்த்தம் நிவர்த்தியை போதிப்பதாகச் சொல்லமுடியாது என்று இந்த மூன்றையும், அவதாரிகையில் சொல்லப்பட்ட நான்காவது விகல்பத்திற்கு உபலக்ஷணமாகச் சொல்லப்பட்டது. அதனுல் வேறு எந்தவிதமாகவும் நஞ்ஞர்த்தம் நிவர்த்தியை போதிக்கின்றது என்று சொல்லமுடியாது.

**421. அவதாரிகை :**

எப்படிச் சொன்னுலும் இந்த மூன்றுக்குள் ஒன்றுடன்தான் 'நஞ்' என்பதற்கு அன்வயம் சொல்லமுடியும் என்று எந்த விதத்திலும் சொல்லமுடியாது என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उदितपक्षपरिग्रहकारिणां न च निषेधगिरामुपपादने ।
भवति शक्तिरतश्च निषेधगीरपि नियोगपराऽभ्युपगम्यताम् ।

**ச்லோகார்த்தம் :** கீழே சொல்லப்பட்ட பக்ஷங்களை ஒத்துக்கொள்பவர்கள் நிஷேத வாக்யத்தின் அர்த்தத்தை உபபாதனம் செய்யமுடியாது. ஆகையால், நிஷேதவாக்யம் நியோகபரம் என்றே ஒத்துக்கொள்ளலாமே?

**வ்யாக்யானம் :** 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்திலுள்ள 'நஞ்' என்பதற்கு நாமாவுடனே தாதுவுடனே, ப்ரத்யயத்துடனே, அன்வயம் சொல்லமுடியாது என்று சொல்லப்பட்டதால், இந்த நிஷேத வாக்யங்கள் நிவர்த்தியை போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக ஆகாது. அப்படியானுல் நிஷேத வாக்யங்கள் ப்ரமாணமில்லையென்று

சொல்லநேரிடுமே என்றால், நிஷேத வாக்யங்களுக்கு வேறு மார்க்கம் எதுவும் சொல்லமுடியாததால், விதிவாக்யம் போலவே, நிஷேத வாக்யமும் நியோகத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அதாவது பக்ஷணஅபாவ நியோக: = பக்ஷண விரோதி ஸங்கல்பம் கர்த்தவ்யம் என்று பர்யுதாஸார்த்தமே சொல்லப்படவேண்டும். இதையன்றி வேறு எந்தமுறையில் அர்த்தம் செய்யப்பட்டாலும், ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படும்.

**422. அவதாரிகை :**

நிஷேதவாக்யங்கள் நியோகத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், எந்தக் கார்யத்தை செய்யும்படி ஏவுகின்றது என்று செய்யப்படும் கார்யத்தில் விசேஷம் என்னவென்று சொல்லவேண்டும். அதாவது 'செய்' என்று நியோகம் தெரிவிக்குமானால் எதைச் செய்வது? யஜேத என்பதால் யாகத்தைச்செய் என்றும், 'தத்யாத்' என்பதால் தானம் செய் என்றும் சொல்லப்படுமானால், இதை சாஸ்திரபேதம் என்று சொல்லப்படும். இந்த சாஸ்திரபேதம் என்பது எப்படி அறியப்படுகிறது என்றால், தர்சபூர்ணமாஸம், ஜ்யாதிஷ்ட்டோமம் என்பது முதலான அனுபந்தங்களைக் கொண்டு அறியப்படுகிறது. (அதாவது கர்ம பேதத்தைக் கொண்டு அறியப்படுகிறது) இந்தவிதம் நிஷேத வாக்யங்களில் சாஸ்திரபேதமோ அனுபந்தபேதமோ அறியமுடியாது. ஏனெனில் அபாவத்தை போதிக்கின்ற நிஷேதத்திலிருந்து எவ்வித விசேஷமும் அறியமுடியாது. ஆகவே, நிஷேத சாஸ்திரமும் நியோகத்தையே போதிக்கின்றது என்றால், நியோக பேதம் எப்படி சித்திக்கமுடியும்?

**ச்லோகம் :**

यथा च यागाद्यनुबन्धभेदाद्भिन्नेषु शास्त्रेषु नियोगभेदः ।
निवर्त्यभेदादपि तद्वदस्य निवृत्तयोऽपि ह्यनुबन्धभूताः ॥

**ச்லோகார்த்தம் :** நியோகத்துடன் ஸம்பந்தப்படும் விஷய பேதத்தினால் சாஸ்திரத்தில், நியோக பேதம் சொல்லப்படுகிறது. அதேபோல், நிவர்த்யமான விஷயத்தின் பேதத்தினால் நிவர்த்தியென்பதும் நியோக ஸம்பந்த முடையதாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** விதி சாஸ்திரங்களில், தர்ச பூர்ணமாஸம் என்ற கர்மாவைச் செய், ஜ்யோதிஷ்ட்டோமத்தைச்செய் என்று, செய்வேண்டிய அந்தந்த கர்மாக்களின் பேதத்தைக்கொண்டு, சாஸ்திரத்திலும் பேதம் இருப்பதாக, பேதம் என்பது அறியப்படுகிறது. அதனால் 'யாகத்தைச் செய்' என்று நியோகம் தெரிவிக்கின்றது என்று சொல்கிறோம். இந்த விதம், விதி சாஸ்திரம் என்பதில் நியோக பேதம் இருக்கின்றதால், அந்த வாக்யத்திலிருந்து அபூர்வம் முதலானவைகளையும் அறிந்து கொள்கிறோம் இதே போல் நிஷேத வாக்யத்திலும், 'நசுராம்பிபேத்' 'நப்ராஹ்மண: ஹந்தவ்ய:' என்ற வாக்யங்கள் குடிக்காதே என்றும் ப்ராஹ்மணனைக்கொல்லாதே என்றும் தெரிவிக்கின்றதால் விஷயபேதம் இருக்கின்றது. அதனால் நியோக பேதம் இருப்பதாகச் சொல்லலாமே? எப்படி யாகம், தானம், என்பது போன்ற அனுபந்த பேதங்களைக்கொண்டு விதிசாஸ்திரம் விதேய பேதத்தைக்கொண்டு விதி பேதம் என்பதை ஒத்துக்கொள்கிறதோ அதுபோல் நிஷேத்யமான விஷய பேதத்தைக்கொண்டு நிஷேத சாஸ்திரம் நிவர்த்தி பேதத்தை போதிக்கின்றது என்றே சொல்லலாம்.

**423. அவதாரிகை :**

'நஞ்' என்பதற்கு நிவர்த்திதான் அர்த்தம் என்று சொல்கின்ற எங்கள் பக்ஷத்தில்தான் நிஷேத வாக்யங்கள் அனர்த்தஹேது என்ற காரணத்தை தெரிவித்து, இது இஷ்ட்ட ஸாதனம் என்று நினைத்து 'ப்ரவர்த்திக்கின்றவனை, அதில் ப்ரவர்த்திக்காமல் தடை செய்கின்றது என்று

(அனர்த்தஹேது என்ற அர்த்தத்தை) சொல்லமுடியும். ஆனால் உங்களுடைய பக்ஷத்தில், 'களஞ்சம் என்பதை புஜிக்காதே' என்ற நிஷேதவாக்யத்திற்கு களஞ்சபக்ஷண விரோதி ஸங்கல்பம் கர்த்தவ்யம் என்று அர்த்தம் செய்யநேரிடுகிறது. ஏன் அவ்விதம் ஸங்கல்ப்பம் செய்வேண்டும்? என்றால், அதற்கு காரணம் எதுவும் சொல்லமுடியாது. காரணம் சொல்லாவிடில், அதில் ப்ரவர்த்திக்காமல் இருக்கமாட்டான். அதனால் 'அனர்த்த ஹேது' என்ற அர்த்தம் எங்கள் பக்ஷத்தில்தான் கிடைக்கின்றது.

**ச்லோகம் :**

निवृत्तिसिद्ध्यापि नियोगसिद्धिः प्रवर्तमानस्य न गर्तपातः ।
निषिद्धचेष्टा निरयस्य हेतुर्नियोगतो नाध्यवसीयते हि ॥

**ச்லோகார்த்தம் :** நிவர்த்தி சித்தியினால்தான் நியோகம் சித்திக்கின்றது. நியோகத்திலிருந்து நிஷித்த கார்யத்தில் ப்ரவர்த்திப்பவனுக்கு நரகம் பலம் என்ற அர்த்தம் நிச்சயம் செய்யப்படுவதில்லை. ஆகவே, நிஷித்த விஷயத்தில் ப்ரவர்த்திப்பவனுக்கு நரகம் பலம் என்று சொல்வதற்குமுடியாது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** நிஷேத வாக்யங்களான 'நகளஞ்சம் பக்ஷயேத்' 'நசுராம்பிபேத்' என்பது முதலான வாக்யங்கள் நிவர்த்திபரம் என்றும், அந்த வாக்யங்கள் அனர்த்த ஹேது, என்ற அர்த்தத்தை போதிக்கின்றது என்றும் அர்த்தம் செய்யப்படுவது சரியல்ல. ஏனெனில், அவ்விதம் அர்த்தம் செய்வதற்கு ப்ரமாணம் ஏதுமில்லை. ஆகையால் நிஷேதவாக்யங்களும் நியோகத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். விதியாக இருந்தாலும், பலன் இல்லையென்றாலும், அநீக்ஷண ஸங்கல்பம் போல், அந்தந்த விஷய விரோதி ஸங்கல்பம் செய்யவேண்டுமென்றே இந்த வாக்யங்களுக்கும் அர்த்தம் செய்வேண்டும். அவ்விதமின்றி வாக்யத்தில் சொல்லப்படாத நரகம் முதலானவைகளின் ப்ராப்தியை பலம் என்று சொல்வதற்குமுடியாது. நித்யகர்மாக்களை விதிக்கின்ற வாக்யங்களுக்கு எப்படி பலத்தைக்கொண்டு அர்த்தம் செய்யப்படுவதில்லையோ அதுபோல் களஞ்சம் முதலான நிஷேத வாக்யங்களுக்கும் களஞ்சபக்ஷண விரோதி ஸங்கல்பம் செய்வேண்டுமென்ற அர்த்தத்துடன்தான் அந்த வாக்யார்த்தம் முடிவுபெறுகிறது. ஆகவே, குரு நிந்தனை செய்தால் பாபம் ஏற்படும் அதன் பலனாக நரகப்ராப்தி என்று சொல்வதெல்லாம் பொருந்தாது. குரு நிந்தனை என்ற வாக்யத்தில் வாக்யஸேஷமாக இருக்கின்ற இந்த வாக்யம் அர்த்தவாதமாக இருக்கின்றதால், அதை ப்ரமாணம் என்று சொல்லமுடியாது. மேலும் ஒரே வாக்யத்திற்கு அனேக அர்த்தங்கள் சொல்லப்படுவதும் சரியல்ல. 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற விதி வாக்யமானது, ஸ்வர்க்கத்தை விரும்புகின்றவன் யாகத்தைச் செய்யவேண்டும் என்று எப்படித் தெரிவிக்கின்றதோ அதுபோல் நரகப்ராப்தியை விரும்பாதவன் களஞ்சபக்ஷணம் செய்யக்கூடாது என்று அந்தவாக்யம் நரகபலம் இருப்பதாக தெரிவிக்கவில்லை. அதனால் நித்யகர்மாவைப்போல் பலன் இன்றி நிஷேதவாக்யமும் அந்தந்த விஷய விரோதி ஸங்கல்பத்தை விதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**424. அவதாரிகை :**

நிஷேத வாக்யம் 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற நியோகத்தையே தெரிவித்தபோதிலும், அதற்கு எந்தவித பலனும் இல்லையென்றால், அபுருஷார்த்தம் என்றே சொல்லவேண்டும். அபுருஷார்த்தமான ஒன்றை வேதம் விதிக்கிறது என்று

சொல்லமுடியாது. பலன் இல்லாமல் எந்தக்கார்யத்தையும் செய்யமாட்டான் என்பதால், இதைச் செய்தால் அனர்த்தம் ஏற்படும் என்று சொன்னால்தான் அந்த கார்யத்தில் ப்ரவர்த்திகாமல் இருப்பான். அதனால் நிஷேதவாக்யத்திற்கு பலன் கல்பிக்கவேண்டும்.

**பூர்வ** : இது சரியல்ல நிஷேத வாக்யத்திலிருந்து நிவர்த்தியென்பது நேரிடையாகச் சொல்லப்படாததால் இந்த கல்பனை பொருந்தாது.

**ச்லோகம் :**

नियोग एवैष पुमान्नियुज्यते नियोगसिद्ध्यै तु पुनर्नियुज्यते ।
परत्र कर्मस्वथ वा निवृत्तिषु स्थितिः प्रसिद्धेति नियोगवादिनाम् ॥

**ச்லோகார்த்தம் :** புருஷன் முதலில் நியோகத்தில்தான் ஏவப்படுகிறான். அதன்பிறகு நியோகம் சித்திப்பதற்காக, அந்த கார்யங்களில் ப்ரவர்த்திப்பதற்கோ அல்லது நிவர்த்திப் பதற்கோ அவன் ஏவப்படுகிறான் என்று நியோக வாதிகளின் மதம் தெரிவிகின்றது.

**வ்யாக்யானம் :** களஞ்ச பக்ஷணம் சுகம் என்று நினைத்து அதில் ப்ரவர்த்திக்கின்ற புருஷனை 'களஞ்ச பக்ஷணம் செய்யாதே' என்று நிஷேத வாக்யம் தடை செய்யுமானால் ஏன் புஜிக்கக்கூடாது? என்று கேட்க்கின்றவனுக்கு இது அனர்த்தத்தைக்கொடுக்கும் என்று காரணம் சொல்லப்பட்டால்தான், அந்தக் கார்யத்தைச் செய்யாமல் நிவர்த்திப்பான். ஆகவே, நிஷேத வாக்யங்களுக்கு அனர்த்த ஹேது என்ற பலன் அவஸ்யம் சொல்லப்படவேண்டும். இவ்விதம் சொல்லாவிடில், அந்த வாக்யங்களுக்கு எவ்வித ப்ரயோஜனமும் இருக்கமுடியாது. ஒருவரும் அதனை அனுஷ்டிக்கமாட்டார்கள்.

**பூர்வ :** நிஷேத வாக்யம், நிவர்த்தியை நேரிடையாக போதிக்கவில்லை. மேலும் 'செய்' என்று சொல்லவேண்டுமானால் செய்யக்கூடியதாக இருப்பதைத்தான் செய்யலாம். யாகாதிகளைச் செய் என்றால் செய்யலாம். அபூர்வம் என்பது இவனால் செய்யக்கூடியது அல்ல. அதனால் அபூர்வம் சித்திப்பதற்காக யாகாதிகளைச் செய்கின்றான். அதுபோல் நிவர்த்தியென்பது செய்யக்கூடிய கார்யமில்லை. அதனால் இந்த விஷயத்தில் நியோகம் என்பது, அந்தந்த விஷய விரோதி ஸங்கல்பத்தையே போதிக்கின்றது. ஆகவே நிவரத்தியென்பது சித்திப்பதற்காக விரோதி ஸங்கல்பம் செய்யப்படுகிறது என்று நிஷேத வாக்யங்களுக்கு அர்த்தம் செய்வதே பொருந்தும். மேலும் நேரிடையாக இந்த நிஷேத வாக்யங்கள் நிவர்த்தியை போதிக்காததால் பலம் என்பதை கல்பிக்கவேண்டிய தேவையுமில்லை. ஆகவே, வாக்யார்த்தம் என்பதில் பலன் இருக்கிறதா? இல்லையா? என்ற கேள்விக்கே இடமில்லை இந்த விதம் நியோகம் சித்திப்பதற்கு, வாக்யத்திற்கு எந்தவிதம் அர்த்தம் செய்தால் பொருந்துமோ அந்தவிதம் அர்த்தம் செய்வதே சரியான முறையாகும். ஆகவே பக்ஷணம் முதலான தாத்வர்த்தம் என்பது நியோகம் சித்திப்பதற்காகவே சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் பக்ஷணவிரோதி ஸங்கல்பம் கர்த்தவ்யம் என்றே அர்த்தம் சொல்லவேண்டும்.

யாகாதி க்ரியையை விதிக்கின்ற வாக்யங்களில் பலன் சொல்லப்பட்டிருக்கிறதே என்றால், பலன் என்பது யாகாதி க்ரியைக்கு விசேஷணமாக அந்தந்த வாக்யங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் பலனுக்கும், நியோகத்திற்கும் ஸம்பந்தமில்லை. யாகாதி நியோஜ்யத்திற்கு பலமாக ஸ்வர்க்கம் என்பது விசேஷணமாக அந்த வாக்யத்தில் சொல்லப்படுவதுபோல் நிஷேதவாக்யத்தில் பலன் சொல்லப்படவில்லை. அதனால் பலம் இல்லாத நித்யகர்மாவைப்போல், நிஷேத வாக்யமும் பலமில்லையென்றாலும் நியோகம் விதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**425. அவதாரிகை :**

களஞ்சபக்ஷணத்திற்கு முன்பு, களஞ்ச பக்ஷணப்ராகபாவம் என்பது அனுதியாக இருக்கின்றதால், ப்ராகபாவம் என்பதை அனுஷ்ட்டேயம் என்று எப்படிச் சொல்லமுடியும். என்றுல், அனுதி ப்ராகபாவ பரிபாலனம் செய்வதற்காக புருஷன் அபக்ஷண ஸங்கல்பம் செய்யவேண்டும் என்று விதிப்பதாகச் சொல்லலாமே?

**ச்லோகம் :**

प्रवृद्धरागस्य निवृत्तयोऽस्थिरास्ततः स्थिरत्वाय नियुज्यते पुमान् ।
निवृत्तिदेशेषु नियोगबुद्धितो निवृत्तिमूर्ध्वं परिपालयिष्यति ॥

**ச்லோகார்த்தம் :** ராகம் என்பது அதிகமாக இருக்கின்றவர்களுக்கு நிவர்த்தி என்பது ஸ்திரமாக இருக்காது. ஆகையால் நிவர்த்தி என்பதை காப்பாற்றுவதற்காக புருஷன் ஏவப்படுகின்றுன். அந்த புருஷன் நிவர்த்தி விஷயங்களில் இருக்கின்ற நியோக புத்தியினுல் நிவர்த்தியை காப்பாற்றுகிறுன்.

**வ்யாக்யானம் :** களஞ்சபக்ஷணம் சுகத்தைக் கொடுக்கும் என்ற இச்சையினுல் ப்ரவர்த்திக்கின்ற புருஷனை நிஷேத சாஸ்திரம், 'இதைச் செய்யாதே' என்று தெரிவிக்காவிட்டால், ராக பலத்தினுல் அதை புஜிக்க முயற்சிப்பாளுகில், பக்ஷணம் என்ற க்ரியையின் ப்ராக பாவத்திலிருந்து அவன் நழுவ நேரிடுகிறது. ஆகவே, நிவர்த்தியைப் போதிக்கின்ற நியோக வாக்யத்தினுல், ப்ராகபாவ பரிபாலனம் என்பது நிலைத்து ஸ்திரமாக இருக்கின்றது. அதனுல் ப்ராகபாவ பரிபாலனம் என்ற நிஷ்ட்டை என்பது விஷயப்ரவர்த்தி விரோத அனுஷ்ட்டேயமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே, விஷயப்ரவர்த்தி விரோத ஸங்கல்பம் என்பதை நிஷேத வாக்யம் விதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**426. அவதாரிகை :**

நியோகவாதிகள், அபாவம் என்று ஒன்றையும் ஒத்துக்கொள்வதில்லையென்பதால், நிவர்த்தியென்பதை நியோக விஷயம் என்று எப்படிச் சொல்லமுடியும் என்றுல், அதற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अनाद्यजग्धेश्च निवृत्तिरिष्टा विशिष्टदन्तोष्ठनिविष्टसंवित् ।
अनन्यसंसर्गिपदार्थसंविन्निवृत्तिरित्येष हि राजमार्गः ॥

**ச்லோகார்த்தம் :** நிஷித்த பதார்த்தங்களை புஜிக்காமல் இருக்கவேண்டும் என்பது, நிஷித்த பதார்த்தங்களுடன் ஸம்பந்தப்படாமல் இருக்கின்ற, தந்தம், ஒஷ்ட்டம் (பல், உதடு) இவைகளில் ஞானம்தான். நிவர்த்தி என்பதே அன்யஸம்பந்தமில்லாத பதார்த்தத்தின் ஞானம்தான். இதுவே ராஜமார்க்கம்.

**வ்யாக்யானம் :** நஞ்ஞர்த்தம் அபாவத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவதை ப்ராகபகரர்கள் ஒத்துக்கொள்வதில்லை. அதனுல் நிவர்த்தி என்பது அபாவமில்லையென்று அவர்களால் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. அதாவது அபக்ஷ்யபக்ஷண நிவர்த்தி என்பது பாவரூபமான ஸம்வித் (ஞானம்) ரூபம். அபாவரூபமல்ல. அதனுல் ஞானரூபமாக இருக்கின்றதால் அனுஷ்டிக்கக்கூடியயோக்யமுள்ளது என்பதால் நியோகத்திற்கு விஷயமாக ஆகலாம். அபாவரூபமான நிவர்த்தியை பாவரூபமான ஸம்வித் என்று எப்படிச் சொல்லமுடியும்?

களஞ்ச பக்ஷணம் செய்யமாட்டேன் என்ற ஸங்கல்பம் செய்யப்படுகின்றதால், களஞ்சத்தின் ஸம்பந்தமில்லாத பல், உதடு முதலானவைகள் கேவலமாக இருக்கிறதென்ற

ஞானமே நிவர்த்தி புத்திக்கு ஆலம்பனம் என்று சொல்லப்படுகிறது. அதனால், விவகாரயோக்யமான ஞானமாக இருக்கின்றதால் பாவரூபமென்றே சொல்லவேண்டும். இது லோகப்ரசித்தம்தான் என்று குருமத்தைச் சேர்ந்த ப்ராபாகரர்களால் சொல்லப்படுகிறது. இவர்கள் ஞானம் என்பதையன்றி வேறாக, ஜ்ஞேயமென்று ஏதுவுமில்லை என்று சொல்கின்ற பௌத்த மதத்தை தழுவி இவ்விதம் தெரிவிக்கின்றார்கள். இவ்விதம் எல்லாம் ஞானமே என்று சொல்லப்படுவதால், களஞ்சம் என்பதுடன் ஸம்பந்தமில்லாமல் நிர்வ்யாபாரமாக தந்தம் முதலானவைகள் இருக்கின்றதென்ற ஞானம்தான், அபாவம் என்று நிவர்த்திக்கு ஆலம்பனம் என்று சொல்கிறார்கள். தந்தம் முதலானவைகள் எதனுடனும் சேராமல் இருப்பதற்காக அவை களை அபாவரூபமென்று சொல்லமுடியாது.

**427. அவதாரிகை :**

நியோகபக்ஷம் சரியல்ல என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

ननु समीहितसाधनता लिङो लशुनगृञ्जनभक्षणसंश्रया ।
भवति वाच्यतयाऽभिमताऽस्य नो नञपि तद्विनिवृत्तिनिवेदकः ॥

**ச்லோகார்த்தம் :** எங்கள் அபிப்ராயப்படி லிங்ப்ரத்யயத்தின் வாச்யார்த்தம் என்பது, லசுனம், க்ருஞ்சனம் முதலான பக்ஷணம் இஷ்ட்ட ப்ராப்தி ஸாதனம் என்றே தெரிவிக்கின்றது. 'நஞ்' என்பது அதன் நிவர்த்தியை போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'ந களஞ்சம் பக்ஷயேத்' என்பதிலுள்ள 'பக்ஷ' என்ற பதம்தாது. 'யேத்' என்ற பதம் ப்ரத்யயம். ப்ரத்யயார்த்த ப்ரதானம் ச்யாத், ப்ரக்ருத்யர்த்தம் விசேஷணம். ஆகவே, 'நஞ்' என்பதற்கு ப்ரத்யயார்த்தத்துடனேயே அன்வயம் சொல்லப்படவேண்டும். இஷ்ட்ட ஸாதனத்வம் என்ற ப்ரத்யார்த்தத்துடன் 'நஞ்' என்பதைச் சேர்த்து இது இஷ்ட்ட ஸாதனம் இல்லையென்று தெரிவிப்பதாகவே சொல்லவேண்டும். இதுவேந்யாயம். ஆகவே, நாமா, தாது, ப்ரத்யயம் என்ற இந்த மூன்றில் எதனுடன் 'நஞ்' என்பதைச் சேர்த்து அர்த்தம் செய்யப்பட்டாலும் ப்ரத்யக்ஷ விரோதம் ஏற்படுகிறது என்றும், ஆனால் நஞ்ஞர்த்தம் அபாவார்த்தமில்லை என்று கீழே ஆக்ஷேபிக்கப்பட்ட விஷயம் சரியல்ல. 'நஞ்' என்பதற்கு, ப்ரத்யயமான லிங் என்பதுடன்தான் ஸம்பந்தம் சொல்லப்படவேண்டுமென்பதால் இஷ்ட்ட ஸாதன அபாவத்தையே 'நஞ்ஞர்த்தம்' போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**428. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுவதையும் ஒத்துக்கொள்ளாமல் அதிலும் தோஷம் இருக்கின்றது என்று பூர்வ பக்ஷியினால் ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तदसदिष्टफलोद्भवदर्शनाल्लशुनगृञ्जनपर्युषिताशनात् ।
नहि निषिद्धपदार्थनिमित्तकः सुखलवः पुरुषस्य न विद्यते ॥

**ச்லோகார்த்தம் :** இது சரியல்ல, பூண்டு, வெங்காயம், பழய அன்னம், (பர்யுஷித அன்னம்) இவைகளை புஜிக்கின்றதால் இஷ்ட்டமானபலம் சித்திக்கின்றது. நிஷித்தமான இந்த பதார்த்தங்களை புஜிப்பதால் சுகலேசங்கூட இல்லை என்று சொல்வதற்குமுடியாது.

**வ்யாக்யானம் :** வெங்காயம், பூண்டு முதலான களஞ்ச பக்ஷணம் என்பதை புஜிக்கின்றதென்பது அநிஷ்ட்டஸாதனம் என்று, லிஙர்த்தம் நஞ்ஞர்த்தத்துடன் சேர்ந்து

போதிப்பதாகச் சொல்வது சரியல்ல. அவைகளை புஜிப்பதால் சுகம் ஏற்படுகிறது என்பது எல்லோருக்கும் ப்ரஸித்தமாக அறியப்பட்டிருக்கிறது. அதற்கு விரோதமாக அதை அநிஷ்ட்டஸாதனம் என்று நியோகம் போதிப்பதாகச் சொல்வது ஒப்புக்கொள்ளக் கூடியதல்ல. ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படுகிறது. வெளுப்பாகவும் துர்நாற்றமுடையதுமாக இருப்பது பூண்டு, சிகப்பாக இருப்பது வெங்காயம், இதேபோல் பழய உணவு, இவை களையே களஞ்சம் என்ற பதத்தினால் சொல்லப்படுகிறது.

களஞ்சம் என்பது சுகமாக இல்லையென்பது இல்லையென்று வ்யதிரேகத்தினால் இந்த விஷயம் பூர்வ பக்ஷியினால் ஆக்ஷேபிக்கப்படுகிறது. இதே விஷயம் கீழேயே சொல்லப்பட்டிருந்தும்கூட, அநிஷ்ட்டஸாதனம்தான் என்று சித்தாந்தி பிடிவாதமாக அதே நோக்கத்தில் இருக்கின்றதால், மறுபடி அதில் தோஷம் சொல்லப்பட்டது.

**429. அவதாரிகை :**

இவ்விதம் சொல்வது சரியல்ல என்று கண்டிக்கபபடுகிறது.

**ச்லோகம் :**

अदृष्टदोषं परिहृत्य शंसतः कलञ्जमास्वाद्यसुखित्वमात्मनः ।
पुमानबोधोपहतः समीहते तदीहिताभावपरा निषेधगीः ॥

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானியானவன், அத்ருஷ்ட்டதோஷம் இல்லாமல், களஞ்சபக்ஷணம் செய்து, அதனால் தனக்கு சுகம் ஏற்படவேண்டுமென்று எதிர்பார்க்கின்றான். நிஷேதவாக்யம், அந்த இஷ்ட்டம் அடையமுடியாது என்பதை தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** இவ்விதம் ஆக்ஷேபிக்கப்படும் ப்ராபாகரர் மதம் சரியல்ல என்று மேலேகண்டிக்கப்படுகிறது. அதாவது லிங் என்பதற்கு 'நஞ்' என்பதுடன்தான் அன்வயம் சொல்லப்படவேண்டும். 'களஞ்சம்' என்பது சுகம் என்ற இஷ்ட்டத்திற்கு ஸாதனமில்லை என்பதையே நிஷேத வாக்யம் தெரிவிக்கின்றது. துக்கமற்ற சுகத்தையே சுகம் என்றும், இஷ்ட்டம் என்றும் சொல்லலாம். ஆகையால் அத்ருஷ்ட்டமான அனர்த்தத்திற்கு களஞ்சபக்ஷணம் காரணமாகிறது என்று அறியாமல் ப்ரமிக்கின்றவனுக்கு அது இஷ்ட்டஸாதனமில்லை என்று இந்த வாக்யம் போதிக்கின்றது. சாஸ்திரத்தினால்தான் இது மஹாத்தானபாபம் என்று அறிந்துகொள்ளமுடியும். சாஸ்திரம் ஒன்றே இதில் ப்ரமாணம் என்பதை அறியாமல், இது இஷ்ட்டம் என்று நினைக்கின்றான். ப்ரத்யக்ஷமாக சுகானுபவம் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், அத்ருஷ்ட்டபலமாக துக்கமே ஏற்படும் என்பதையே ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. விஷ ஜந்து என்று அறியாமல் அதைக்கொன்று அந்த மாமிஸத்தை ருசியாக இருக்கிறது என்ற ப்ராந்தியினால் எவன் புஜிக்கின்றானோ அவனுக்கு அனர்த்தம்தான் ஏற்படுமேயன்றி சுகம் ஏற்படாது. இதையே நஞ் என்பதுடன் சேர்ந்த லிஙர்த்தம் போதிக்கின்றது. ப்ராந்தி சித்தமான, த்ருஷ்ட்ட சுகத்தை விரும்பி,இது இஷ்ட்ட ஸாதனம் என்று ப்ரவர்த்திப்பவனை அது இஷ்ட்டஸாதனமில்லையென்று அவனுடைய ப்ரவர்த்தியை தடுப்பதற்காகவே சாஸ்திரம் நிஷேதவாக்யத்தினால் அநிஷ்ட்டஸாதனம் என்று தெரிவிக்கின்றது.

**430. அவதாரிகை :**

களஞ்சபக்ஷணம் போன்ற எந்த விஷயங்களை சாஸ்திரம் நிஷேதம் செய்கின்றதோ, அவைகளை சுக ஸாதனம் என்று ப்ரத்யக்ஷமாக அறியப்பட்டபோதிலும், சுகஸாதனம் என்ற இந்த இச்சை, ப்ரமத்தை காரணமாகக்கொண்டு ஏற்படுவதால், அத்ருஷ்ட்டபலபயம் இன்றி,

அந்தகார்யத்தில் ப்ரவர்த்திக்கின்ருன் என்பதால் சாஸ்திரம், அது இஷ்ட்டஸாதன மில்லையென்று போதிக்கின்றது.

**ச்லோகம் :**

नरकपातविवर्जनवर्त्मना भवतु विप्रवधात्परमार्थतः ।
मम सुखित्वमितीच्छति यत्पुमान्न तदितीह निषेधगिरोच्यते ॥

**ச்லோகார்த்தம் :** ப்ராஹ்மணவதம் செய்வதனுல் எனக்கு நரகபாதை ஏற்படாமல் பரமார்த்தமான சுகம் ஏற்படவேண்டுமென்று ஒருவன் ஆசைப்படுகிருன், நிஷேதவாக்யம் இது சரியல்ல என்று தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ராஹ்மணனைக் கொன்ருல் என் இஷ்ட்டம் நிறைவேறும் என்று ப்ராஹ்மணஹனனத்தை சுகம் என்று நினைக்கின்ற புருஷனை, இந்த நிஷேத வாக்யம் (த்விஜம் நஹன்யாத்) இது இஷ்ட்டஸாதனமில்லை என்று தெரிவிப்பதன்மூலம் அவனை அந்த ப்ரவ்ருத்தியிலிருந்து தடுக்கின்றது. இதனுலேயே இஷ்ட்டஸாதனம் என்று நினைப்பது ப்ராந்தி சித்தம் என்று அறியப்படுகிறது. ப்ரமாண சித்தமாக இருக்கும் பக்ஷத்தில் அதை நிஷேதம் செய்யமுடியாது. துக்கம் என்ற பலனை கொடுக்கக்கூடிய விஷயத்தை சுகம் என்று நினைப்பதால் ப்ரவர்த்திக்கிருன். சாஸ்திரம் 'அதைச் செய்யாதே' என்று நிஷேதம் செய்கின்றபோது. அந்த கார்யத்திலிருந்து நிவர்த்திக்கிருன் என்றே சொல்லவேண்டும். அதைவிட்டு அனுஷ்ட்டேயமாக ஒன்றை வாக்யம் போதிக்கின்றது என்று சொல்வது முற்றிலும் பொருந்தாது.

**431, 432, அவதாரிகை :**

நிஷேதம் என்பது லிஙர்த்தமான ப்ரவர்த்திக்கு எது விசேஷணமாகச் சொல்லப்படுகிறதோ, அந்த களஞ்சபக்ஷணம் முதலானவைகளை புஜிக்கக்கூடாது என்றே நிஷேதவாக்யம் போதிக்கின்றது. பக்ஷண விரோதி ஸங்கல்பம் என்பதை கர்த்தவ்யமாக போதிக்கவில்லை. பலவத் அநிஷ்ட்ட அனனுபந்தி என்று எதை ப்ராந்தியினுல் நினைக்கின்ருனே அதையே நிஷேதம் செய்கின்றது.

**ச்லோகம் :**

प्रमाणतो नास्ति निषिद्धकर्मणः फलस्पृहाऽदृष्टभयं विना तव भ्रमादबोधप्रभवात्प्रवर्तसे न तात मानेन फलस्पृहाऽत्र ते ।
इति श्रुतिः शास्ति निषिद्धकर्मणि प्रवृत्तिमन्तं पुरुषं नञन्विता न चायमर्थोऽपहृतः प्रमान्तरैर्नहि प्रमाणैरपरैर्विरुध्यते ॥

**ச்லோகார்த்தம் :** நிஷித்தகர்மாக்களிலிருந்து, அத்ருஷ்ட்டபயம் இன்றி பல ப்ராப்தி ஏற்படவேண்டுமென்ற உன் இஷ்ட்டம் (இச்சை) எந்த ப்ரமாணத்தினுலும் சித்திக்கமுடியாது. ஹே! குழந்தாய், அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட ப்ரமத்தினுலேயே நீ ப்ரவர்த்திக்கின்ருய். அதனுல் பயமற்ற உன் இச்சை எந்த ப்ரமாணத்தினுலும் சித்திக்கமுடியாது என்பதையே 'நஞ்' என்பதுடன் கூடிய ச்ருதிவாக்யம் நிஷித்தகர்மாவில் ப்ரவ்ருத்திக்கின்ற புருஷனுக்கு போதிக்கின்றது, இந்தவிதமான அர்த்தம் வேறு எந்த ப்ரமாணங்களினுலும், போதிக்கப்படவுமில்லை, எதனுலும் சாதிக்கப்படவுமில்லை.

**வ்யாக்யானம் :** ப்ராஹ்மணஹனனம், களஞ்ச பக்ஷணம் முதலான நிஷித்த கர்மாவினுல் ஏற்படும் நரகாதி அத்ருஷ்ட்ட பலப்ராப்தியை அறியாமல், அதில் பயம் இல்லாத காரணத்தினுலோ, அல்லது அந்த பலனை லக்ஷ்யம் செய்யாமலோ, அந்த நிஷித்த கர்மாவினுல் ஏற்படும் பலம் சுகம் என்று நினைத்து புருஷன் அதில் ப்ரவர்த்திக்கின்ருன். இது ப்ராந்திசித்தமேயன்றி ப்ரமாணசித்தமில்லை என்று கீழேயே சொல்லப்பட்டது. அதனுல்

நிஷேத வாக்யத்திலுள்ள 'நஞ்' என்பது ப்ரத்யயார்த்தத்துடன் அன்வயித்து நிஷித்த கர்மாவில் ப்ரவர்த்திக்கின்றவனை தடுக்கின்றது என்ற இந்த விதமான அர்த்தம் வேறு ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு விஷயமில்லை. அதனால் ப்ரத்யக்ஷ விரோதம் ஏதுமில்லை. களஞ்சபக்ஷணம் செய்யவில்லையென்றோ, களஞ்சமே இல்லையென்றோ சொன்னால்தான் ப்ரத்யக்ஷவிரோதம் ஏற்படும். அதனால் 'நஞ்' என்ற பதம், களஞ்சம் முதலானவைகளுடன் அன்வயிப்பதாகச் சொல்லப்படவில்லை. 'நிஷித்த கர்மாவை செய்யாதே' என்று வாக்யம் தெரிவிக்கின்றபோதே, நிஷித்தம் என்ற பதமே, செய்யக்கூடாது என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. இந்த அர்த்தம் வேறு எந்த ப்ரமாணத்திற்கும் விரோதமில்லை. அதனால் ப்ரத்யயார்த்தத்துடன் நஞ் என்பது சேர்ந்து அன்வயம் சொல்லப்படுவதில் விரோதம் இல்லாததால், வேறு அர்த்தம் கல்பிக்கவேண்டிய அவஸ்யமுமில்லை. களஞ்சபக்ஷணம் ப்ராஹ்மணஹனனம் முதலானவைகள் இஷ்ட்ட ஸாதனமில்லை என்று ச்ருதி என்பதைத் தவிர வேறு ப்ரமாணங்களால் அறிந்து கொள்ளமுடியாது. வேறு ப்ராணத்தினால் அறியமுடியுமானால்தான், அதை ச்ருதி தெரிவிக்கின்றதால் அனுவாதம் என்று சொல்லலாம். அல்லது வேறொரு ப்ரமாணத்திற்கு ச்ருதிவாக்யம் தெரிவிப்பது விரோதமாக இருக்குமானால், அந்த வாக்யம் குணவாதம் என்று சொல்லலாம். வேறு ப்ரமாணத்திற்கு விஷயமாகாமலும், எந்த ப்ரமாணத்திற்கும் விரோதமில்லாமலும் இருப்பதால், இதை பூதார்த்தவாதம் என்றே சொல்லவேண்டும் என்று தெரிவித்து இதை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**433, 434. அவதாரிகை :**

உண்மையில் எது அநிஷ்ட்ட ஸாதனமோ, அந்த வஸ்து ப்ராந்தியினால் இஷ்ட்ட ஸாதனமென்று நினைத்து அதில் ப்ரவ்ருத்திக்கின்றவனை ச்ருதியானது இது இஷ்ட்ட ஸாதனமில்லை என்பதை நிஷேத வாக்யங்களைக்கொண்டு போதிக்கின்றது. இந்த விஷயத்தை லௌகீக த்ருஷ்ட்டாந்தம் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

भुजङ्गभोगं सुकुमारशीतलं निदाघसन्तापनिवृत्तये शिशुम् भ्रमादुपादित्सुमुदीक्ष्य कातरा निवर्तयेत्तज्जननी यथा तथा ।
भ्रमादनर्थस्य निदानमादरात्कृतार्थतायै लशुनादिभक्षणम् नञन्विता वैदिकचोदनाऽप्यसौ विधित्सुमालक्ष्य निवर्तयिष्यति ॥

**ச்லோகார்த்தம் :** பாலகன் ஒருவன் கோடை காலதாபநிவர்த்திக்காக, ம்ருதுவாகவும் சீதளமாகவும் இருக்கின்ற ஸர்ப்பத்தின் படத்தை ப்ரமத்தினால் எடுக்க ப்ரவர்த்திக்கின்றபோது பயமுற்றதாயானவள், அந்த குழந்தையை தடை செய்கின்றாள். அதுபோல், ப்ரமத்தினால், திருப்திக்காக அனர்த்தஹேதுவாக இருக்கின்ற லசுனம் முதலான பக்ஷணத்தை செய்கின்ற ஒருவனை, 'நஞ்' ஸம்பந்தமுள்ள வேத வாக்யமானது நிவர்த்திக்கச் செய்கின்றது.

**வ்யாக்யானம் :** பாலகன் ஒருவன், அறியாமையினால், ஸர்ப்பத்தை பிடிப்பதற்காக ப்ரவர்த்திக்கின்றபோது; அதைக்கண்ட தாயானவள், அது விஷ ஐந்து என்று அறியாமல் பிடிக்க ப்ரவர்த்திக்கின்றானே என்ற பயந்து, அவனுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்று விரும்பி, அந்த பாலகனுக்கு ஏற்படப்போகின்ற அபாயத்திலிருந்து அவனைக்காப்பாற்ற நினைத்து, அதில் ப்ரவர்த்திக்காமல் அவனை எப்படி தடுத்து நிறுத்துகின்றாளோ அதுபோல் ஸர்வஜீவர்களுக்கும் ஹிதத்தைச் செய்யவேண்டுமென்று விரும்புகின்ற ச்ருதிமாதாவானவள் லசுனாதி பக்ஷணம் சுகம் என்று நினைத்து ப்ரமத்தினால் ப்ரவர்த்திக்கின்றவனை அது

இஷ்ட்ட சாதனமில்லை என்று தெரிவித்து, அவனை அதில் ப்ரவர்த்திக்காமல் தடை செய்கின்றது.

**435. அவதாரிகை :**

நிஷேத வாக்யங்கள் நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்பட்டது. இப்போது, நிஷேத வாக்யங்கள் நியோகத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், அந்த நியோகத்திற்கு விஷயம் என்ன என்றே சொல்லமுடியாது என்று மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

क्रियानुप्रवेशं विना प्रागभावः प्रसक्तक्रियाया न निर्वोढुमीशः ।
गुणद्रव्यवन्नित्यनिष्पन्नभावात्पदत्वं नियोगस्य भावार्थवद्वः ।।

**ச்லோகார்த்தம் :** க்ரியை என்பதில் ஸம்பந்தமின்றி, ப்ரஸக்த க்ரியையின் ப்ராகபாவம் என்பது, பாவார்த்தம்போல் நித்யசித்தம் என்று உங்களால் சொல்லப்படுவதால் த்ரவ்யம், குணங்கள் போல நியோக விஷயம் என்று சொல்வதற்குமுடியாது.

**வ்யாக்யானம் :** நிஷேத வாக்யங்கள் நியோகத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், அந்த நியோகத்திற்கு விஷயம் என்ன? 'களஞ்ச பக்ஷண அபாவ ஸங்கல்பத்தைச் செய்' என்று பாவரூபமான ஒன்றைச் செய் என்று விதிப்பதாகச் சொல்லலாமே என்றால் அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்திலிருந்து வாச்யார்த்தமாக, விஷய அபாவ ஸங்கல்பம் என்பதை விதிக்கின்றது என்று சொல்லமுடியாது. லக்ஷணையினால் சொல்லலாமே என்றால், முக்யார்த்தம் ஸம்பவிக்கின்றபோது லக்ஷணையாக அர்த்தம் செய்வது சரியல்ல. அதற்காக பக்ஷண ப்ராகபாவம் என்பதை நியோகத்திற்கு விஷயமாகச் சொல்லலாமே? என்றால்,

ப்ராகபாவம் என்பது நித்யசித்தம் என்று சொல்லப்படுவதால், ந்யோகம் என்பது ஸம்பவிக்கமுடியாது. அதனால், ஏதாவது ஒரு க்ரியையுடன் ஸம்பந்தமில்லாமல், நியோகம் என்பதற்கு வேறு எதனுடனும் அன்வயம் சொல்லமுடியாது. ப்ராகபாவம் என்பது ஸ்வத: நித்யமாக இருக்கின்றதால், அதை அனுஷ்ட்டேயமாகச் சொல்வதென்பதே முடியாது. எப்படி அருணம் முதலான குணங்கள், ததி முதலான த்ரவ்யங்கள் எல்லாம் க்ரியையுடன் ஸம்பந்தப்பட்டு க்ரியாத்வாரா நியோகத்திற்கு விஷயமாகின்றதோ அதுபோல் ப்ராகபாவம் என்பது, க்ரியை என்பதை மூலமாகக்கொண்டு நியோகத்துடன் அன்வயிக்கிறது என்று சொல்லமுடியாது.

பூர்வமீமாம்ஸையில் 'வ்ருஷ்டி காமோ யஜேத' என்று சொல்லப்படும் காரிரீயிஷ்ட்டி விஷயத்தில் (மழையை வேண்டி செய்கின்ற கர்மாவில்) வேதி எப்படி அமைக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. அதில் இது மேடாக இருக்கவேண்டும், இது பள்ளமாக இருக்கவேண்டும் என்றும், தாழ்வாக இருக்கின்ற இடத்தை அளந்து பார்க்கவேண்டும் என்றும் தெரிவிக்கின்றது. இதில் தாழ்மை என்பது க்ரியைக்கு விஷயமில்லை. தாழ்மை என்பது அந்த ப்ரதேசத்தை முன்னிட்டு அந்த க்ரியையுடன் ஸம்பந்தப்பட்டு நியோகம் என்பதற்கு விஷயமாகிறது. அதனால் தாழ்மை என்பது ஸ்வதந்தரமாக நியோகத்திற்கு விஷயமாகவில்லை. இதுபோலே நிஷேதவாக்யம், நியோகம் என்பதற்கு நேரிடையாகவும் ஸம்பந்தப்படவில்லை வேறு ஒன்றின் ஸம்பந்தமாகவும் விஷயமாகாது. இதே விஷயத்தை

வேமுெருரு உதாரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. 'தத்னேந்த்ரிய காமஸ்ய ஜுஹ்யாத்' என்ற வாக்யத்திலுள்ளததி என்பது சித்தமான வஸ்து. ஆனுல் இந்த்ரியகாமனுக இருக்கின்றவன் 'ததி' என்பதை பால் கறக்கின்ற பாத்ரத்தில், (கோதோஹனம்) வைத்து, அந்த கர்மாவில் சொல்லப்படும் ஹோமத்தை செய்யவேண்டுமென்று இந்த வாக்யம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் க்ரியாமூலமாக நியோகத்திற்கு அன்வயம் சொல்லமுடியுமா என்ருல், அபாவம் என்பதுடன் நியோகத்திற்கு அன்வயம் ஏற்படாது என்பதால், ப்ரஸக்த க்ரியையான களஞ்ச பக்ஷண ப்ராகபாவம் என்பதுடன் நியோகத்திற்கு அன்வயம் சொல்லமுடியாது. எப்படி யாகாதி க்ரியைகள் (பாவார்த்தமாக) செய்யக்கூடிய கார்யமாக இருக்கிறதோ அதுபோல் நிஷேத வாக்யங்களில் நியோகத்தினுல் செய்யக்கூடிய கார்யம் எதுவுமில்லே என்று வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தத்தின்மூலம் அறியவேண்டும். விதிவாக்யமாக இருந்தால், அது பாவார்த்தமாக இருக்கின்றதால் அனுஷ்ட்டிக்கப்படக்கூடியதாக இருக்கும். அதன்மூலம் நாமார்த்தமான 'ததி' முதலானவைகள் நியோக விஷயமாக ஆகின்றது என்று சொல்லலாம். ஆனுல் நேரிடையாக நாமார்த்தமான 'ததி' முதலானவைகளும் நியோகத்திற்கு விஷயமாகாது.

இந்தவிதம் (பாவார்த்தம்) தாத்வர்த்தமான க்ரியை எப்படி நியோகத்திற்கு விஷயமாகின்றதோ அதுபோல் நாமார்த்தங்கள் விஷயமாக ஆகமுடியாது என்பது வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தம். ஆகவே ப்ராகபாவம் என்பது சாத்யமாக இல்லாததால் க்ரியாஸம்பந்தமாகவோ, நியோக விஷயமாகவோ ஆகமுடியாது என்பது மீமாம்ஸகர்களாலும் சொல்லப்படுகிறது.

**436. அவதாரிகை :**

ப்ராகபாவபரிபாலனம் என்ற க்ரியையுடன் ஸம்பந்தப்பட்டு அதன் மூலமாக நியோகத்திற்கு விஷயமாகிறது என்று சொல்லலாமே என்ருல் அவ்விதம் சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :** न पाल्यत्वयोगादलंभूष्णुभावो यतः पालनं श्रूयते नात्र वाक्ये ।
न खल्वश्रुतं गृह्यते न्यायहानाद्यथा न श्रुतं त्यज्यते तद्भयेन ॥

**ச்லோகார்த்தம் :** ப்ராகபாவ பரிபாலனம் என்ற க்ரியை, நியோகத்திற்கு விஷயமாகலாம் என்று சொல்வதற்குமுடியாது. ஏனெனில், இந்த வாக்யத்தில் பாலனம் சொல்லப்படவில்லே. ப்ரசித்தமான ந்யாயத்திற்கு விரோதமாக இருக்கின்றதால், ச்ருதியில் சொல்லப்படாத விஷயம் க்ரஹிக்கப்படுவதில்லே. இதே காரணத்தினுல் ச்ருதியில் சொல்லப்படுவதை விடப்படுவதுமில்லே.

**வ்யாக்யானம் :** நியோகம் நேரிடையாக ப்ராகபாவத்திற்கு விஷயமாக இல்லேயென்ருலும் ப்ராகபாவ பரிபாலனம் என்ற க்ரியாமூலமாக நியோக விஷயமாகிறது என்று சொல்லலாமே என்ருல், இந்தவிதம், நியோகம் என்பதற்கு பரிபாலன க்ரியை என்பது விஷயமாகிறது என்று யுக்தியினுல் கல்பிக்கப்படுகிறதா அல்லது ச்ருதி என்ற ப்ரமாண பலத்தைக்கொண்டு சொல்லப்படுகிறதா? யுக்தியினுல் இவ்விதம் சொல்வதற்குமுடியாது. ஏனெனில், நிவர்த்தி என்ற ப்ராகபாவமானது அனுதி சித்தமாக இருக்கின்றதால், பாலனத்வாரா நியோக விஷயத்வம் ஸம்பவிக்கிறதென்று சொல்லமுடியாது. இந்த விஷயத்தில் ச்ருதி ப்ரமாணமும் கிடையாது. ச்ருதியில் சொல்லப்படவில்லேயென்ருலும், அதை கல்ப்பிக்கிறேன் என்று சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல. ச்ருதி என்பது நிவர்த்தியைத்தான் போதிக்கின்றது. ப்ரஸக்தமான க்ரியை எதுவோ, அதையே ச்ருதிவாக்யம்

ப்ரதிஷேதம் செய்கிறது என்ற அர்த்தம் நிஷேதவாக்யத்தினுல் நேரிடையாகவே கிடைக்கின்றது. இந்த அர்த்தத்தைவிட்டு, பரிபாலன க்ரியையை நியோகம் போதிக்கின்றது என்று சொல்வதற்கு எந்த காரணமும் சொல்லமுடியாது. ஆகவே, ச்ருதிவாக்யத்தினுல் தெரிவிக்கப்படும் அர்த்தத்தை விடப்படுகிறது என்ற தோஷமும் ச்ருதியினுல் தெரிவிக்கப்படாத அர்த்தத்தை கல்ப்பிக்கப்படுகிறது என்ற தோஷமும் ஸம்பவிக்கிறது. (ச்ருதஹானி அச்ருதகல்பனம் என்பது தோஷம்) அதனுல் வாக்யம் பரிபாலன க்ரியையை போதிக்கின்றது என்று சொல்லப்படுவது ந்யாயமில்லை.

**437. அவதாரிகை :**

'ச்ருதஹானி' என்று சொல்வதற்கு என்ன காரணம்? என்ருல்.

**ச்லோகம் :**

उदासीनता च श्रुता नञ्पदार्थो नियोगे सति त्याज्यतां याति सद्यः ।
अतद्योग्यभवादयोग्यः पदार्थो न वाक्यार्थभागिष्यते जैमिनीयैः ॥

**ச்லோகார்த்தம் :** 'நஞ்' பதத்தின் அர்த்தம் ஔதாசீன்யமேயாகும். நியோகம் என்பதை ஒப்புக்கொள்ளப்படுமானுல், ஔதாசீன்யம் என்பது அன்வயயோக்யமாக இருக்கமுடியாது. அதனுல் அதை உடனே விடப்படவேண்டும். அன்வயயோக்யமில்லாத அர்த்தத்தை வாக்யார்த்தமாக ஜைமினிமதஸ்த்தர்கள் ஒத்துக்கொள்வதில்லை.

**வ்யாக்யானம் :** நிஷேத வாக்யங்களில் நஞ்ஞர்த்தம் என்பது முக்யமாக ஔதாசீன்யத்தை போதிக்கின்றது என்றே அர்த்தம் சொல்லவேண்டும். அவ்விதமின்றி நிஷேத வாக்யங்கள் நியோகத்தையே (விதி) தெரிவிக்கிறது என்று அர்த்தம் செய்யப்படுமானுல், வாக்யத்தினுல் நேரிடையாக அறியப்படும் ஔதாசீன்யம் என்ற அர்த்தம் விடப்படுகிறது. அதனுல் ச்ருதஹானி என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**பூர்வ :** 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்திலுள்ள லிங்ர்த்தமான விதியை விட்டுவிட்டு அர்த்தம் செய்யப்படுமானுல் அதுவும் ச்ருதஹானி என்று தானே சொல்லவேண்டும்? மேலும் வாக்யம் ஔதாசீன்யத்தை போதிக்கின்றது என்ற அர்த்தத்தை நாங்கள் விடவில்லை. ஔதாசீன்ய பரிபாலனத்வாரா நியோகத்திற்கு விஷயமாகிறது என்றே சொல்கிருேம். அதனுல் ச்ருதஹானி என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**சித்தா :** விதிக்கு விஷயம் (நியோஜ்யம்) என்பதே இல்லாமல் விதிக்கின்றது என்று அர்த்தம் கல்பிக்கப்படுவது சரியல்ல. நஞ்ஞர்த்தமான அபாவத்துடன் விதிக்கு அன்வயம் என்பதே ஏற்படமுடியாது. ப்ரஸக்தக்ரியா ப்ராகபாவம் என்பது நித்யசித்தம். ஆகவே, நித்யசித்தமான ப்ராகபாவத்துடன் நியோகம் என்பது அன்வயிக்கமுடியாது. விதிக்கு விஷயமாக இருக்குமானுல் அது அனுஷ்டேயமாக இருக்கவேண்டும். அனுஷ்டிக்கப்படவேண்டிய விஷயம் ஏதுவுமில்லாமல், விதிக்கு விஷயமாக, அன்வயயோக்யமில்லாத ஒன்றை (ஔதாசீன்யம்) அர்த்தமாகச் சொல்வது பொருந்தாது. ஔதாசீன்யம் என்பது நியோக விஷயமாக இருக்குமானுல், அதை ஔதாசீன்யம் என்றே சொல்லமுடியாது.

**438. அவதாரிகை :**

நிஷேத வாக்யங்கள், நியோகபரம் என்று சொல்லப்படுமானுல், நிஷித்த கார்யத்தினுல் ஏற்படும் ப்ரத்யவாயதோஷம் என்பதும் லோகத்தில் சித்திக்காது. அதாவது பாபகார்யங்களைச் செய்வதால் நரகம் முதலான பலன்கள் ஏற்படும் என்ற அர்த்தமே சித்திக்கமுடியாது.

**ச்லோகம் :**

निषिद्धक्रिया प्रत्यवायाय नेति स्वकर्णौ जनः प्रोर्णुते पापभीरुः ।
समाकर्ण्य दुर्भाषितं पार्श्ववर्ती न पापाक्षरं किंचिदेतादृगन्यत् ॥

**ச்லோகார்த்தம் :** 'நிஷித்த க்ரியையென்பது, ப்ரத்யவாய தோஷத்தை உண்டுபண்ணுது' என்ற தோஷமுள்ள வாக்யத்தைக் கேட்க்கின்றபோது, பாபத்திற்கு பயப்படுகின்ற ஒருவன், இந்த வாக்யத்தைக்காட்டிலும் பாபகரமான வாக்யம் என்பதே கிடையாது என்று தன் செவிகளை மூடிக்கொள்வான்.

**வ்யாக்யானம் :** நிஷேத வாக்யங்களால், எந்தக் கார்யங்கள் செய்யக்கூடாது என்று தெரிவிக்கப்படுகிறதோ, அந்த வாக்யங்கள் எல்லாமே நியோகத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், நிஷேத வாக்யங்கள் அனர்த்தஹேது என்ற அர்த்தத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. மேலும், நரகப்ராப்திக்கு காரணமான பாபகார்யத்தைச் செய்யாதே என்று தடுப்பதாகச் சொல்லப்படும் வாக்யங்கள் ப்ரமாணமில்லை என்று சொல்லநேரிடும். இவையெல்லாம் பாபகார்யம் என்பது லோகப்ரசித்தம் என்பதாலும், சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தைக் கொண்டு அறியப்படுவதாலும், நிஷித்தகார்யம் பாபமில்லை என்று ஆக்ஷேபம் செய்வது, செய்யக்கூடாததை செய்வதைக்காட்டிலும் மிகுந்த பாபகரம். அதனுல் ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களுக்கு விரோதமாக பாபம் கிடையாது என்று சொல்பவனே நாஸ்திகன். இப்பேர்ப்பட்ட நாஸ்திகனுக்கு ச்ருதி போதிக்கவில்லை. பாபம் எது? புண்யம் எது? என்று அறிந்து கார்யத்தை அனுஷ்டிப்பவன்தான் இந்த ச்ருதிவாக்யங்களுக்கு அதிகாரியாவான். இவ்விதம் நிஷேத வாக்யங்கள் அநிஷ்ட்டஸாதனம், அனர்த்தஹேது என்ற அர்த்தத்தை போதிக்கவில்லையென்றும் பாபம் முதலானவைகளில் ப்ரமாணமில்லை என்று ஆக்ஷேபம் செய்யப்படுமானுல், அந்த வாக்யத்தை கேட்ப்பதே மஹாபாபம் என்று சிஷ்ட்டர்களான பெரியோர்கள் தங்கள் செவிகளை மூடிக் கொள்வார்கள். இவ்விதம் சொல்பவர்களின் உறவினர்களும் அவனை விரும்பமாட்டார்கள். மேலும் வாக்யங்களில் நேரிடையாக அறியப்படும் அர்த்தங்களை விட்டுவிட்டு, அர்த்தாத் வேறு அர்த்தம் கல்பனம் செய்யப்படுமானுல் ச்ருதஹானி, அச்ருத கல்பனம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். ஒரு வாக்யத்தில் அறியப்படாத ஒரு அர்த்தத்தை எந்தக் காரணமும் இல்லாமல் கல்பிக்கப்படலாம் என்று சொல்லப்படுமானுல் எல்லா வாக்யத்திலும் இந்த ந்யாயம் கடைபிடிக்கலாம் என்று சொல்லநேரிடும். 'வாஜபேயேன ஸ்வாராஜ்யகாமோயஜேத' என்பது ஒரு வாக்யம். இந்த வாக்யத்தினுல் சொல்லப்படும் கர்மாவிற்கு அதிகாரி யார்? என்றுல், ஜீவன் உள்ளவனும் சுசியாக இருப்பவனும் அதிகாரி என்று இந்த வாக்யம் தெரிவிக்கிறது என்று அர்த்தம் சொல்லப்படுமானுல், 'ஸ்வர்ாஜ்யகாம:' என்ற பதம் எதற்காக சேர்க்கப்பட்டிருக்கிறது? ஆகவே, வாக்யத்தின் தாத்பர்யம் என்னவென்று அறியாமல் அர்த்தம் செய்வதென்பது பொருந்தாது. விஸ்வஜித் என்ற யாகம், அதைச்செய்யக்கூடியதனம், பலம், சிரத்தை முதலான ஸகல வஸதிகளுடன் கூடியவனுகவும், அந்தக் கார்யத்தைச் செய்யக்கூடிய சாமர்த்யம் உடையவனுகவும் இருப்பவன்தான் அந்த கர்மாவில் அதிகாரியாக இருக்கமுடியும். இதேபோல் சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தில் விஸ்வாஸமுடையவனும் பாபபுண்யங்களுக்கு கட்டுப்பட்டவன் எவனோ அவனே நிஷேத வாக்யங்களுக்கு அதிகாரியாவான். இவ்விதம் சாஸ்திரத்தை நன்கு அறிந்த பெரியோர்களால் சொல்லப்படும் விஷயங்களுக்கு விரோதமின்றி வாக்யங்களுக்கு அர்த்தம் செய்யப்படுவதே ந்யாயமாகும். விபரீதமாக அர்த்தம் கல்பிப்பது சரியல்ல.

**439. அவதாரிகை :**

நிஷித்த கர்மாவைச் செய்வதால் பாபம் ஏற்படாது என்று (ப்ரத்யவாயம் முதலானதோஷங்கள் ஸம்பவிக்காது என்று) சொல்லப்படுவது, சாஸ்திரம், அனுபவம் இரண்டிற்கும் விரோதமாகும்.

**ச்லோகம் :**

निषिद्धक्रिया प्रत्यवायाय नो चेत्तदा दुःखमाकस्मिकं सर्वपुंसाम् ।
सुखं पुण्यमूलं यथा सर्वपुंसां तथा दुःखमप्यस्तु वः पापमूलम् ॥

**ச்லோகார்த்தம் :** நிஷித்த க்ரியை என்பது ப்ரத்யவாயத்தை உண்டு பண்ணுது என்று சொல்லப்படுமானுல், எல்லோருக்கும் துக்கம் என்பது அகஸ்மாத்தாக ஏற்படுகிறது என்று சொல்லநேரிடும். எப்படி சுகம் என்பது எல்லோருக்கும் புண்யத்திஞல் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறதோ அதேபோல் துக்கமென்பதும் பாபத்திஞல் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**வ்யாக்யானம் :** வேதத்திஞல் செய்யக்கூடாது என்று நிஷேதம் செய்யப்படும் கார்யத்தைச் செய்கின்றதால், ஏற்படும் பலன்கள் பாபம். அந்த பாபத்தின் காரணமாகத்தான் அனேகவிதமான துக்கத்தை அனுபவிக்கின்ருன் என்றே சொல்லவேண்டுமேயன்றி வேறு எதையும் காரணமாகச் சொல்லமுடியாது. இந்தவிதம் ஒத்துக்கொள்ளாவிட்டால், துக்கம் என்பது காரணமின்றியே அகஸ்மாத்தாக ஏற்படுகிறது என்று சொல்லநேரிடும். காரணமின்றி கார்யம் என்பது ஏற்படமுடியாது. சிலவற்றில் த்ருஷ்ட்டமான காரணம் இருக்கலாம். அதாவது ஜலத்தில் மூழ்கலாம். அக்னியிஞல் தஹிக்கப்படலாம். அல்லது முள்குத்தலாம் விஷ ஜந்துக்களாலும் துக்கம் ஏற்படலாம். இதில், கால் வழுக்கி மூழ்கி விட்டான் என்றும் அக்னி இருப்பதைப்பார்க்காமல் விழுந்துவிட்டான் என்றும் த்ருஷ்ட்டமான பல காரணங்கள் அறியப்படலாம். ஆனுல், இதுவரை இவ்விதம் ஏற்படாமல் இன்று ஏற்படக்காரணம் என்ன? இவனுக்குமட்டும் ஏன் இவ்விதம் ஏற்படவேண்டும்? என்று விசாரிக்கின்றபோது, ப்ரத்யக்ஷமாக அறியமுடியாத அத்ருஷ்ட்டம்தான் காரணம் என்று சொல்லவேண்டும். வேதத்தில் பலவிதமான கர்மாக்கள் விதிக்கப்படுகிறது. அவ்விதம் விதிக்கப்படும் அனேகவிதமான கர்மாக்களுக்கும் அனேகவிதமான விசித்ரமான பலன்களும் இருக்கின்றது. அதேபோல், வேதத்தில் பலவிதமான கர்மாக்களை நிஷேதம் செய்யப்படுகிறது. அதுவும் விசித்ரமாக இருப்பதால், அதன் பலனுன துக்கமும் அனேகவிதமாக இருக்கின்றது. அதனுல், சுகம், துக்கம் இரண்டிற்கும் அத்ருஷ்ட்டம் என்பதே காரணம். இவ்விதம் சொல்லப்படாமல், சுகத்திற்கு மட்டும் அத்ருஷ்ட்டமான புண்யம் என்பதை காரணமென்றும், துக்கம் என்பது காரணமின்றியே ஏற்படுவதாகச் சொல்லப்படுமானுல், அர்த்த ஜரீயந்யாயமாக ஆகும். ஆகவே, விஹித கர்மாவிஞல் புண்யம் ஏற்படுகிறது என்றும் நிஷித்தகர்மாவிஞல் பாபம் ஏற்படாது என்றும் சொல்வதும் பொருந்தாது.

**440. அவதாரிகை :**

பாபத்தின் பலம் துக்கம் என்பது இருக்கட்டும். ஆனுல் நிஷித்த கர்மாவைச் செய்வதால்தான் பாபம் ஏற்படுகிறது என்பதில் என்ன ப்ரமாணம் என்ருல்,

**ச்லோகம் :**

निषिद्धक्रियां चोदितस्याक्रियां वा विना नास्ति पापस्य निष्पत्तिहेतुः ।
ततस्तद्द्वयं पापनिष्पादकत्वाद्भवेत्प्रत्यवायस्य नित्यं निदानम् ॥

**ச்லோகார்த்தம் :** நிஷித்த கர்மாவை அனுஷ்டிப்பதாலும், விஹிதகர்மாவை அனுஷ்டிக்காமல் இருப்பதனுலேயே பாபம் ஏற்படுகிறது. இந்த இரண்டையும் தவிர, வேறெதுவும் பாபத்திற்கு காரணமில்லே. இவை இரண்டுமே பாபத்தை உண்டுபண்ணுகின்றதால் துக்கத்திற்கு காரணமாகிறது.

**வ்யாக்யானம் :** நிஷித்த கர்மாவைச் செய்கின்றதால்தான் பாபம் ஏற்படுகிறது என்று எப்படிச்சொல்வது என்றுல், வேதமானது எதைச் செய்யவேண்டுமென்று விதிக்கின்றதோ அந்தக்கர்மாவை செய்வதால் பாபம் ஏற்படாது. அதேபோல் வேதத்தில் விதிக்கப்படாத கார்யத்தை செய்வதாலும் பாபம் ஏற்படாது. ஆனுல் வேதம் எந்தக் கார்யத்தைச் செய்யக்கூடாது என்று நிஷேதம் செய்கின்றதோ அதைச் செய்தால் பாபம் ஏற்படும் அதேபோல் வேதத்தில் விதிக்கப்படும் கர்மாவைச் செய்யாவிட்டாலும் பாபம் ஏற்படும். இதையே 'அகுர்வன் விஹிதம்கர்ம, நிந்திதம் ச ஸமாசரன்' என்று ஸ்ம்ருதிவாக்யமும் தெரிவிக்கின்றது.

**பூர்வ :** வேத விஹிதமான கர்மாவைச் செய்யாவிடில்பாபம் ஏற்படும் என்று எப்படிச் சொல்லமுடியும்? அபாவத்திலிருந்து பாவோற்பத்தி என்று சொல்வது எப்படி பொருந்தும்?

**சித்தா :** வேத விஹிதமானகர்மாவை, எந்த காலத்தில் எதைச்செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்றதோ, அதைச் செய்யாமல் இருக்கின்றபோது, வேறு ஏதோ ஒரு கார்யத்தை செய்கின்றதால் அது பாபத்திற்கு சூசகமாக ஆகிறது. நிஷித்த கர்மா செய்யப்படுமானுல் அது நேரிடையாகவே பாபத்திற்கு காரணமாகின்றது. விஹிதகர்மா, செய்யாமல் இருப்பது லக்ஷணேயாக பாபத்திற்கு காரணமாகின்றது. அதனுல் ப்ரத்யவாயதோஷத்திற்கு காரணமாகிறது என்று சொல்லப்படுகிறது.

**441. அவதாரிகை :**

விஹித கர்மாவைச் செய்யாததால்பாபம் ஸம்பவிக்கின்றது என்று நேரிடையாக அர்த்தம் கிடைக்கின்றது. இவ்விதம் கிடைக்கின்ற அர்த்தத்தை விட்டுவிட்டு வேறு ஒன்றை செய்வதால் பாபம் ஏற்படுகிறது என்று லக்ஷணேயாக அர்த்தம் செய்யப்படுவதற்கு என்னப்ரமாணம்?

**ச்லோகம் :**

निषिद्धक्रिया दुःखनिष्पत्तिहेतुर्भवेल्लक्षणं चोदितस्याक्रियाऽस्य ।
अभावान्न भावस्य निष्पत्तिरिष्टा भवेल्लक्षणं ज्ञायमानस्त्वभावः ॥

**ச்லோகார்த்தம் :** நிஷித்த க்ரியை என்பது துக்கத்திற்கு காரணமாகின்றது. விஹிதக்ரியையைச்செய்யாமல் இருப்பது துக்கம் ஏற்பட சூசகமாக இருக்கிறது. அபாவத்திலிருந்து பாவோற்பத்தி என்பதை ஒத்துக்கொள்ளப்படுவதில்லே. ஆகையால் அறியப்படும் அபாவம் துக்கத்திற்கு சூசகமாக ஆகிறது.

**வ்யாக்யானம் :** வேத விஹிதமான கர்மாவைச் செய்யாததால், ப்ரத்யவாயம் முதலான தோஷத்தின் காரணமாக பாபம் ஸம்பவிக்கின்றது என்று சொல்லலாமே? இவ்விதம் சொல்லாமல், வேறொரு கார்யத்தைச் செய்தாலும், நிஷித்தகர்மாவைச் செய்வதாலும் பாபம் ஏற்படுகிறது என்று ஏன் சொல்லவேண்டும்? துக்கம் என்பது அகஸ்மாத்தாக ஏற்படுகிறது என்று சொல்வதால் ஏற்படும் தோஷபரிகாரத்திற்காக, விஹித அகரணமே காரணம் என்று நேரிடையாகவே சொல்லலாமே?

**சித்தா :** நிஷித்த க்ரியை என்பதே நேரிடையாக பாபத்திற்கு காரணமாகிறது. அகரணம் என்பது அபாவமானதால், பாவரூபமான துக்கத்திற்கு காரணமாகிறது என்று எந்த விதத்திலும் சொல்லமுடியாது.

**பூர்வ :** கட உற்பத்திக்கு கடப்ராகபாவம் காரணம் என்று தார்க்கிகளுல் சொல்லப்படுகிறதே? அதுபோல், ப்ரதிபந்தக அபாவம் என்பதும் ஒரு காரணம் என்று சொல்லப்படுகிறதே? (பீஜம் முளைப்பதற்கு ப்ரதிபந்தக அபாவம் காரணம் என்று சொல்கிருர்கள்).

**சித்தா :** ப்ராகபாவம் என்பதும், ப்ரதிபந்தக அபாவம் பாவோற்பத்திக்கு காரணம் என்று தார்க்கிகளுல் சொல்லப்படுவதை ஒத்துக்கொள்வதற்கு முடியாது. அபாவம் என்பது நி:ஸ்வபாவம். அதில் எந்தவிதமான தர்மமும் கிடையாது. நிர்வ்யாபாரமான அபாவத்திலிருந்து ஒரு கார்யத்தை உண்டுபண்ணக்கூடிய வ்யாபாரம் இருக்கிறதென்று சொல்வது பொருத்தமற்றது. வேதமானது நித்யகர்மாக்கள் முதலானவைகளை விதிக்கின்றது. இதில் எந்த காலத்தில் எந்தக் கார்யத்தைச் செய்யவேண்டுமென்று விதிக்கின்றதோ, அதன்படி அந்தக்கார்யம் செய்யப்படவில்லையென்பது அபாவரூபம்தான். ஆனுல் அபாவம் என்பது பாபத்திற்கு காரகமாக ஆகமுடியாது (ஹேதுவாக ஆகமுடியாது) என்ருலும் லக்ஷணையாக ஆகலாம். அதாவது ஞாபகமாக ஆகலாம். இந்த காலத்தில் இதைச் செய்யவேண்டும் என்பது விதி, வேறு எதையும் செய்யக்கூடாது என்பது நிஷேதம். நிஷேதம் செய்யப்பட்டதை செய்வதால் பாபம் ஏற்படுகிறது என்பதற்கு அகரணம் என்பது லக்ஷணமாக ஆகிறதேயன்றி காரகமாக ஆகிறது என்று சொல்லப்படவில்லை என்பதைத்தான் 'ஞாயமான ஸ்வபாவத:' என்று ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. அதாவது ஸ்வரூபத: பாபபலன் இல்லையென்ருலும் லக்ஷணையாக பாபபலன் உண்டு என்பதையே தெரிவிக்கின்றது. ஆகவே, அகரணம் என்ற ஞானத்தினுல்தான் ப்ரத்யவாயம் ஸம்பவிக்கும் என்ற ஞானம் ஏற்படுகிறது.

**442. அவதாரிகை :**

நிஷித்த க்ரியை என்பது அனர்த்த ஹேது என்பதையே இந்த வாக்யம் அறிவிக்க விரும்புகிறது என்று (இதுவே விவக்ஷிதார்த்தம்) சொல்லப்படுமானுல் இந்த அர்த்தம், அர்த்தாத் கிடைக்கின்றது என்று ஏன் சொல்லவேண்டும்? நிஷேதவாக்யம் நேரிடையாக தெரிவிக்கிறது என்றே சொல்லலாமே? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

निवृत्तिनिष्ठे तु निषेधवाक्ये निषिद्धकर्माचरणादनर्थः ।
प्रतीयतेऽर्थादिति तत्र युक्तम् दुःखं नृणां दुश्चरितैकमूलम् ॥

**ச்லோகார்த்தம் :** நிவர்த்தியை போதிக்கின்ற நிஷேதவாக்யத்திலிருந்து நிஷித்தகர்மாவைச் செய்வதால் அனர்த்தம் ஏற்படும் என்று, அர்த்தாத் கிடைக்கிடைக்கின்ற அர்த்தம். இதிலிருந்து மனுஷ்யர்களுக்கு துக்கம் என்பது துஷ்கார்யங்களைச்செய்வதால் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவது பொருந்துகின்றது.

**வ்யாக்யானம் :** நிஷேத வாக்யங்கள் நேரிடையாக 'இந்த கார்யத்தைச் செய்யாதே' என்று அந்த கார்யத்தில் ப்ரவர்த்திக்க இச்சிக்கின்றவனை தடை செய்கிறது. அப்போது ஏன் செய்யக்கூடாது என்ற கேள்வி ஏற்படுகிறது. அப்போது, 'இது இஷ்ட்ட ஸாதனமில்லை, இது அனிஷ்ட்டத்திற்கு ஹேதுவாக இருக்கிறது' அதுவே பாபத்திற்கு காரணம், என்ற அர்த்தம் கிடைக்கின்றது. ஆகையால் நிஷேதவாக்யம், அர்த்தாத் இஷ்ட்ட ஸாதனமில்லையென்பதை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஏனெனில் நிஷேதவாக்யம் 'இதைச் செய்யாதே' என்றுதான் நேரிடையாக தெரிவிக்கின்றது. அதனுல் இது இஷ்ட்ட ஸாதனமில்லை என்பதையே நஞ்ஞர்த்தம் நேரிடையாக போதிக்கின்றது என்று

முக்யார்த்தம் ஸம்பவிக்கின்றது. அதனால் அனர்த்த ஹேது என்பது முக்யார்த்தம் என்று சொல்வதற்குமுடியாது. ஆகவே, பர்யுதாஸம் என்ற அர்த்தம் கிடைக்கமுடியாது, ஏன் செய்யக்கூடாது என்றால், அனர்த்த ஹேது என்பது லக்ஷணையாக கிடைக்கின்றது. அதனால் நிஷேதவாக்யங்களும் ப்ரமாணமென்றே சித்திக்கின்றது.

**443. அவதாரிகை :**

நிஷேத வாக்யங்களுக்கு எது விவக்ஷிதார்த்தமோ, அந்த அர்த்தம், அர்த்தாத் கிடைக்கின்றது என்று சொல்லவேண்டியதில்லை. நேரிடையாகவே, அனிஷ்ட்டத்திற்கு காரணம் என்பது போதிக்கப்படுவதாகவே சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

समीहितोपायतया लिङन्वयात्प्रतीयमानस्य तु भक्षणादिनः ।
न पर्युदासाश्रयणेन नञ्पदादनिष्टहेतुत्वमतिर्भविष्यति ॥

**ச்லோகார்த்தம் :** இஷ்ட்ட ஸாதனம் என்று தோன்றுகின்ற களஞ்ச பக்ஷணம் முதலானவைகள், அநிஷ்ட்டத்திற்கு ஹேதுவாகிறது என்ற 'ஞானம்', என்பது, லிங்ப்ரத்யத்துடன் சொல்லப்படும் 'நஞ்' பதத்திலிருந்து பர்யுதாஸம் என்பதால் ஏற்படுகிறது என்று சொல்வதற்குமுடியாது.

**வ்யாக்யானம் :** 'நகளஞ்சம் பக்ஷயேத்' 'நத்விஜம்ஹன்யாத்' என்பது போன்ற நிஷேத வாக்யங்களில் உள்ள 'நஞ்' சப்தார்த்தம் முக்யமாக, 'இல்லை' யென்ற அபாவார்த்தத்தையே போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஏனெனில் இது இஷ்ட்டஸாதனம் என்று நினைத்து ப்ரவர்த்திக்கின்றவனை அந்த விஷயத்தை தெரிவித்து 'இதைச் செய்யாதே' என்று ப்ரஸக்த ப்ரதிஷேதம் செய்கின்றது, என்ற முக்யார்த்தமே ஸம்பவிக்கின்றபோது, எவ்விதகாரணமுமில்லாமல் முக்யார்த்த த்யாகம் செய்வதற்குமுடியாது. அதனால் 'லிங்' என்பதற்கு 'நஞ்' என்பதுடன் அன்வயம் சொல்லவேண்டும் என்பது அவஸ்யமாக இருக்கின்றதால், நேரிடையாக அனிஷ்ட்டஸாதனம் என்ற அர்த்தம் கிடைக்காது என்பதால் பர்யுதாஸார்த்தம் சொல்லமுடியாது.

**444. அவதாரிகை :**

அப்படியானால், பர்யுதாஸம் என்ற அர்த்தமே வாக்யங்களில் சித்திக்கமுடியாதே? என்றால், அவ்விதம் இல்லை. 'நஞ்' என்பதற்கு அபாவார்த்தம்தான் முக்யார்த்தம். எந்த இடத்தில் முக்யார்த்தத்திற்கு பாதம் ஏற்படுகிறதோ அந்த இடத்தில் லக்ஷணையைக்கொண்டு பர்யுதாஸார்த்தம் சொல்வது பொருந்தும்.

**ச்லோகம் :**

तथा हि संबन्ध्युपमर्दबुद्धये समर्थमुत्सर्गमपेक्ष्य नञ्पदम् ।
न पर्युदासाय विनाऽपवादकं ततो निवृत्यर्थपरं तदिष्यते ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் தன்னுடன் ஸம்பந்தப்பட்ட வஸ்துவின் அபாவத்தை போதிப்பது என்ற ஸ்வாபாவிகமான ஸாமர்த்யத்தையுடைய 'நஞ்' பதமானது, அபவாத நிமித்தம் ஏதுமில்லாமல், பர்யுதாஸம் என்பதை தெரிவிக்காது. ஆகவே, 'நஞ்' பதம் நிவர்த்தி என்பதையே போதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** சாதாரணமாக 'நஞ்' பதமானது, எந்த பதத்துடன் அன்வயிக்கின்றதோ, அந்த பதார்த்தத்தின் அபாவத்தையே அந்த வாக்யம் முக்யார்த்தமாக தெரிவிக்கின்றது

என்று சொல்லவேண்டும். ஆனுல் சில இடங்களில் அபாவம் என்ற முக்யார்த்தம் சொல்லமுடியாமல், ஏதாவது காரணம் இருக்குமானுல், அந்த இடத்தில்தான், பர்யுதாஸம் அர்த்தம் என்று சொல்லலாம். உதாரணமாக, 'யஜதி' என்ற பதத்தை உபயோகித்து எந்த யாகம் விதிக்கப்படுகிறதோ, அதில் 'யேயஜாமஹும்' என்ற மந்த்ரத்தை ஜபிக்கக்கூடாது என்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் சொல்லப்படும் வாக்யம் ப்ரஸக்த ப்ரதிஷேதமா? அல்லது; பர்யுதாஸமா? என்று விசாரிக்கின்றபோது, பர்யுதாஸம் என்பதே அர்த்தமாகக்கிடைக்கின்றது. 'அனுயாஜம்' என்ற வாக்யத்திலும் 'யஜு' என்ற தாது சேர்க்கப்பட்டிருப்பதால், மந்த்ரஜபம் செய்யவேண்டுமென்றே அர்த்தம் செய்யப்படவேண்டும். ஆனுல் 'ந அனுயாஜேஷு' என்று 'நஞ்' சேர்க்கப்பட்டிருப்பதால் அந்த மந்த்ரத்தை ஜபிக்கக்கூடாது என்றே சாதாரணமாக அர்த்தம் கிடைக்கும். ஆனுல் இந்தவிதம் அர்த்தம் செய்யப்படுமானுல், அப்ரஸக்தப்ரதிஷேதம் என்று சொல்லநேரிடும். ஏனெனில் 'யே யஜாமஹும்' என்ற வாக்யத்தினுல்தான் அந்த மந்த்ரமேப்ராப்தமாகின்றது. ஆகையால் 'ந அனுயாஜேஷுயே யஜாமஹும் கரோதி' என்ற வாக்யத்திற்கு அனுயாஜ பின்னமான யஜு என்ற தாதுவினுல் எந்த கர்மா விதிக்கப்பட்டிருக்கிறதோ அதில்தான் இந்த மந்த்ரம் ஜபிக்கப்படவேண்டும் என்று இந்த வாக்யம் பர்யுதாஸம் என்ற அர்த்தத்தை போதிப்பதாகச்சொல்லப்படுகிறது. ஏனெனில் 'யஜதி' என்ற தாது இரண்டு வாக்யத்திலும் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலும், 'ந அனுயாஜேஷுயேயஜாமஹும் கரோதி' என்ற வாக்யத்திலுள்ள, யேயஜாமஹும் என்ற மந்த்ரமானது, ஜபிக்கவேண்டுமென்று எந்த வாக்யம் தெரிவிக்கின்றதோ, அந்த வாக்யத்திலிருந்தே 'யே யஜாமஹும்' என்ற மந்த்ரம் விதிக்கப்படுவதாக அறியப்படுகிறது ஆகவே, உப ஜீவ்யமான இந்த வாக்யத்திற்கு விரோதமாக நிஷேதம் செய்வதற்குமுடியாது. இரண்டு வாக்யங்களுமே ப்ரமாணமாக இருக்கின்றதால், இரண்டிற்கும் ப்ராமாண்யம் ஏற்படுகின்ற முறையில் அர்த்தம் செய்யப்படவேண்டும். ஆகையால், அனுயாஜபின்னமான யஜதி ப்ரயோகம் செய்யப்படும் வாக்யங்களால், எந்த யாகம் விதிக்கப்படுகிறதோ, அதில் இந்த மந்த்ரம் ஜபிக்கவேண்டுமென்பதையே, 'ந அனுயாஜேஷு' என்ற வாக்யம் தெரிவிக்கின்றது என்று அர்த்தம் சொல்லப்படுகிறது. இதுவே பர்யுதாஸார்த்தம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அர்த்தம் சொல்லாவிட்டால், இந்த இரண்டு வாக்யங்களுக்குமே ப்ராமாண்யம் சித்திக்காது. அதுமட்டுமல்ல, 'யஜதி' சோதனையில் 'யே யஜாமஹே' என்ற மந்த்ரம் ஜபிக்கவும் செய்யலாம், ஜபிக்காமலும் இருக்கலாம் 'என்ற விகல்பம் ஏற்படும். இவ்வித விகல்பத்தினுல் எட்டு விதமான தோஷங்கள் ஸம்பவிக்கும் 'என்று மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே, இவ்வித விகல்பபரிகாரத்திற்காக அனுயாஜம் என்ற கர்மாவைத்தவிர மற்ற கர்மாக்களில் ஜபிக்கவேண்டுமென்று இந்த நிஷேத வாக்யம் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் 'நஞ்' என்பதற்கு முக்யார்த்தம் ஸம்பவிக்காத இடத்தில்தான் லக்ஷணையைக்கொண்டு பர்யுதாஸார்த்தம் சொல்லப்படவேண்டும் என்றும், முக்யார்த்த பாதம் இல்லாத இடத்திலும் லக்ஷணையினுல் பர்யுதாஸம் அர்த்தம் என்று சொல்லக்கூடாது என்றும் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

**445. அவதாரிகை :**

வாக்யத்தில் முக்யார்த்தம் ஸம்பவிக்கின்ற இடத்தில் லக்ஷணையாக அர்த்தம் செய்வது என்பது பொருந்தாது.

**ச்லோகம் :**

अतः प्रसज्यप्रतिषेधसंभवान्न पर्युदासाश्रयणं प्रशस्यते ।
न पर्युदासाश्रयणं विना भवेदनिष्टहेतुत्वनञर्थकल्पना ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் ப்ரஸக்த ப்ரதிஷேதம் என்ற அர்த்தம் ஸம்பவிக்கின்றதால், பர்யுதாஸார்த்தம் சொல்லப்படுவது சரியல்ல. பர்யுதாஸார்த்தம் சொல்லப்படாமல் 'நஞ்' பதத்திற்கு அநிஷ்ட்டஹேதுத்வம் என்ற அர்த்தம் கல்பிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** நிஷேதவாக்யத்திலுள்ள 'நஞ்ஞர்த்தம்' அபாவம் தான் என்றும், ஔதாசீன்யத்தையே முக்யமாக போதிக்கின்றது என்று ஏன் சொல்லவேண்டும்? ஔதான்சீன்யம் என்பது எப்படி முக்யார்த்தமோ அதேபோல் அனர்த்தஹேதுத்வம் என்பதும் முக்யார்த்தம் என்றே சொல்லலாமே? மேலும் பர்யுதாஸார்த்தமாக 'அனர்த்த ஹேது' என்பது முக்யார்த்தமாக சொல்லப்படுகிறது என்று சொல்வதற்காக, முக்யார்த்தத்திற்கு எவ்வித பாதகமுமில்லை. அதனுல் அனர்த்தஹேது என்ற விவக்ஷிதமான அர்த்தத்தை வாக்யம் முக்யார்த்தமாக தெரிவிக்கவில்லையென்றும், லக்ஷணையாகவே அறியப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், வாக்யத்தின் விவக்ஷிதார்த்தம் முக்யமாக இல்லாமல் லக்ஷணையாகத்தான் அறியப்படுகிறது என்ற தோஷம் ஏற்படும். அதுமட்டுமல்ல, 'நஞ்' என்பதற்கு ப்ரஸஜ்ஜப்ரதிஷேதம் என்ற அர்த்தத்தைவிட்டு லாக்ஷணிகார்த்தம் சொல்லப்படுகிறது என்ற மற்றுமொரு தோஷமும் ஸம்பவிக்கின்றது. ஆகையால் அனர்த்த ஹேதுத்வம் என்பது முக்யமாகவே, பர்யுதாஸார்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ஒரே வாக்யம் ஔதாசீன்யம் என்ற நிவர்த்தியையும், அனர்த்த ஹேது என்ற அர்த்தத்தையும், முக்யார்த்தமாகவே போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், ஒரே வாக்யம் அனேக அர்த்தங்களை தெரிவிக்கின்றது என்று வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்ற வாக்யத்திலுள்ள 'நஞ்'' சப்தம், ப்ரஸக்தமான களஞ்ச பக்ஷணத்தையே ப்ரதிஷேதம் செய்கிறது அதனுல் ப்ரஸஜ்ஜப்ரதிஷேதம் ஸம்பவிக்கின்றது. அதனுல் பர்யுதாஸாச்ரயம் சொல்லமுடியாது. விவக்ஷிதார்த்தமான அனர்த்தஹேதுத்வம் என்ற அர்த்தம் லாக்ஷணிகமாக அர்த்தாத் கிடைக்கின்றது என்பதால் இந்தவிதம் அர்த்தம் சொல்லப்படுவதில் எவ்வித தோஷமும் கிடையாது. ஆகவே, நிஷேதவாக்யத்திலுள்ள 'நஞ்'' சப்தமானது அபாவார்த்தம் என்பதையே முக்யமாக போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**446. அவதாரிகை :**

நிஷேதவாக்யத்திலுள்ள நஞ்ஞர்த்தம் லிஙர்த்தத்துடன் சேர்ந்து அனிஷ்ட்டஸாதனம் என்ற அர்த்தம் கிடைக்கிறது என்றும் அதனுல், லக்ஷணையாக அனர்த்த ஹேது என்ற அர்த்தம் போதிக்கப்படுவதாக ஏன் சொல்லவேண்டும் என்ருல்,

**ச்லோகம் :**

अभीष्टहेतुत्वलिङर्थपृष्ठतो ह्यनर्थहेतुत्वनञर्थकल्पना ।
न पर्युदासं परिहृत्य कल्प्यते न पर्युदासः प्रतिषेधसंभवात् ॥

**ச்லோகார்த்தம் :** இஷ்ட்ட ஸாதனமான லிஙர்த்தத்திற்குப்பின், அனர்த்தஹேதுத்வம் என்ற 'நஞ்' அர்த்தம் கல்பிக்கப்படவேண்டுமானுல், பர்யுதாஸார்த்தம் என்பதை

ஒப்புக்கொள்ளாமல் ஸம்பவிக்கமுடியாது. ப்ரஸக்தப்ரதிஷேதம் என்பது ஸம்பவிக்கின்றதால், பர்யுதாஸார்த்தம் ஸம்பவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** 'நகளஞ்சம் பக்ஷயேத்' என்பது போன்ற வாக்யங்களில் பர்யுதாஸம் என்பதை ஆச்ரயித்து அர்த்தம் செய்வதற்குமுடியாது. ஏனெனில், களஞ்சபக்ஷணம் இஷ்ட்ட ஸாதனம் என்று இச்சையினுல் ப்ரவர்த்திக்கின்றவனை அந்த வாக்யத்துடன் சேர்ந்த 'ந' என்ற சப்தம், இஷ்ட்டஸாதனமில்லை என்று தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அவ்விதமின்றி களஞ்சபக்ஷணம் அநிஷ்ட்டஸாதனம் என்று தெரிவிப்பதற்குரிய பதங்கள் எதுவுமில்லை. அதனுல் அநிஷ்ட்டஸாதனம் என்ற அர்த்தம் லக்ஷணையாகத்தான் சொல்லவேண்டும். இந்த விஷயம் பற்றி கீழேயே 'நஞ்' பதம் எதனுடன் அன்வயிக்கின்றது என்று விசாரிக்கின்றபோதே விளக்கப்பட்டிருக்கிறது. முக்யார்த்தமான நிவர்த்தி என்ற அர்த்தம் ஸம்பவிக்கின்றபோது பர்யுதாஸம் என்பதை ஆச்ரயித்து அர்த்தம் செய்யவேண்டும் என்ற கல்பனை பொருந்தாது.

**447. அவதாரிகை :**

இதுவரை செய்யப்பட்ட விசாரத்தினுல், நிஷேதவாக்யங்கள் நியோகபரம் என்று சொல்லமுடியாது என்பதை சித்தம் செய்யப்பட்டது. ஸர்வம் வாக்யம் கார்யபரம் என்று சொல்கின்ற கார்யவாதியான (நியோகவாதியான) உங்களுக்கு இரண்டு பக்கங்களிலும் கட்டப்பட்டு இழுக்கப்படும் பாசக்கயிறு போல், இரண்டு பக்ஷத்தில், எந்த பக்ஷத்தைச் சொன்னுலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

प्रमाणमिच्छन्प्रतिषेधचोदनां समस्तवेदस्य न कार्यगोचरम् ।
प्रमाणभावं प्रतिपत्तुमीश्वरो निषेधवाक्ये तदसंभवाद्यतः ॥

**ச்லோகார்த்தம் :** நிஷேத வாக்யங்கள் ப்ரமாணம் என்று ஒத்துக்கொள்கின்ற ஒருவனுல், நியோகம் மூலமாகவே ஸமஸ்த்த வேதாந்தத்திற்கும் ப்ராமாண்யம் ஏற்படுகிறது என்று சொல்வதற்குமுடியாது. ஏனெனில் நிஷேதவாக்யங்களில் இது ஸம்பவிக்காது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** நிஷேத வாக்யத்தினுல் நிவ்ருத்தி தான் போதிக்கப்படுகிறது என்றும் அவைகள் கார்யபரமில்லை என்றும் சித்தம் செய்யப்பட்டதால் உங்களுக்கு ஏற்பட்ட லாபம் என்ன?

**சித்தா :** நிஷேத வாக்யங்கள் ப்ரமாணம் என்று சொல்லவேண்டுமென்று விரும்புவாயானுல், ஸர்வ வேதங்களும் கார்யபரம் என்று உன்னுல் சொல்வதற்கு முடியாது. ஏனெனில் நிஷேத வாக்யங்கள் அபாவத்தை (நிவ்ருத்தியை) போதிப்பதன்மூலமாக ஔதாசீன்யம் என்ற சித்தவஸ்துவையே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டது. அதனுல் இந்த வாக்யங்கள் கார்யபரம் என்று சொல்லமுடியாது. ஆகையால் கார்யபரமான வாக்யங்களே ப்ரமாணம் என்று உன்னுல் சொல்லப்படுவதால், கார்யபரமாக இல்லாத நிஷேதவாக்யங்கள் ப்ரமாணமில்லையென்று சொல்லநேரிடும். அதற்காக, நிஷேதவாக்யம் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானுல், ஸர்வ வேதங்களும் கார்யத்தை போதிப்பதால்தான் ப்ரமாணமாகிறது என்று சொல்லப்படும் உங்கள் பக்ஷம் சித்திக்கமுடியாது. ஏனெனில் கர்மகாண்டத்திலுள்ள நிஷேதவாக்யங்களே கார்யபரம் என்று சித்திக்கமுடியவில்லை என்பதால் எந்தவிதமும் சொல்லமுடியாது.

**448. அவதாரிகை :**

மேலும், இவ்விதம் வேதபாகமான கர்மகாண்டத்திலுள்ள நிஷேதவாக்யங்களே கார்யபரமில்லை என்று சித்திக்கின்றதால், வேதாந்தவாக்யம் விதி நிஷ்ட்டம் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே, வேதாந்த வாக்யங்கள் சித்தவஸ்து பரம் என்று சொல்லப்படுவதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை. அதனால் ஸர்வம் வாக்யம் க்ரியாபரம் என்று சொல்வதற்கு சிறிதும் இடமில்லை.

**ச்லோகம் :**

अतो न वेदान्तवचःसु विद्यते विधिर्नियोगो न च शब्दभावना ।
न कर्मकाण्डेऽपि नियोगतोऽस्त्यसौ यतो निषेधेषु न विद्यते विधिः ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் வேதாந்த வாக்யங்களில் விதியோ, நியோகம் என்பதோ சப்தபாவனை என்பதோ எதுவும் கிடையாது. கர்ம காண்டத்திலும் நியமேன விதி என்பது கிடையாது, ஏனெனில் நிஷேதவாக்யங்களில் விதி என்பதே கிடையாது.

**வ்யாக்யானம் :** கர்மகாண்டவாக்யங்களிலுள்ள நிஷேதவாக்யங்கள் எல்லாம், இஷ்ட்ட ஸாதனமில்லையென்றும், அனர்த்தஹேது என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கிறது என்று சித்தம் செய்யப்பட்டதால், நியோகம் என்பதால் சப்தபாவனை ஆர்த்தி பாவனை என்பதால், வேதவாக்யங்கள், கார்யத்தை போதிக்கின்றது என்று சொல்லப்பட்ட விஷயத்தை நிராகரிக்கப்பட்டது. அதனால் கர்மகாண்டத்திலேயே நிஷேதவாக்யம் கார்யபரமாக இல்லாவிட்டாலும் ப்ராமாண்யமாகிறது என்பது சித்தமாகின்றது என்றால் கைமுதிகந்யாயேன வேதாந்தவாக்யம் சித்தவஸ்து போதகமாக இருந்தாலும் ப்ரமாண்யம் உண்டு என்று சொல்லப்படுவதில் என்ன ஆக்ஷேபம் இருக்கமுடியும்.?

ஆகவே வேதத்தில் கர்மகாண்டத்திலுள்ள வாக்யங்களும் 'இது இந்த இஷ்ட்டத்திற்கு ஸாதனம்' என்பதைத்தான் தெரிவிக்கிறது. அந்த வாக்யங்களிலும் நியோகம் என்பது ஏவலை போதிக்கின்றது என்றோ, அல்லது அபூர்வார்த்தத்தையே வைதிகவாக்யம் போதிக்கின்றது என்றோ சொல்லப்பட்டால்தான் அது ப்ரமாணமென்றாகும். அதனால் வேதவாக்யம் கார்யம் என்ற நியோகார்த்தத்தையே போதிக்கின்றது என்றும் சப்தபாவனையே லிஙர்த்தம் என்றும் சொல்லப்படுவதெல்லாம் பொருத்தமற்றது. ஆகவே கர்மகாண்டத்திலுள்ள நிஷேதவாக்யங்களிலேயே வாக்யம் கார்யபரம் என்று நியமமாகச் சொல்லமுடியவில்லையென்றால், சித்தபரமான வேதாந்தவாக்யங்களை கார்யபரம் என்று எப்படிச் சொல்லமுடியும்? சித்தமான வஸ்துவை தெரிவிக்கின்றதால், ஹேயமுமில்லை உபாதேயமுமில்லை. வஸ்து மாத்ரபோதகம் என்பதால் நியோகாதி விவகாரங்களுக்கே இடமில்லை. கர்மகாண்டத்திலேயே நியோகம் ஸம்பவிக்காவிட்டாலும் அந்த வாக்யங்கள் ப்ரமாணமாகிறது என்றால் ஞான காண்டத்தில் ஞானத்தையே போதிக்கின்றதால் அதில் விதியோ நியோகமோ எப்படி ஸம்பவிக்கமுடியும்? ஆகவே சித்தவஸ்து போதக வாக்யங்களும் ப்ரமாணமென்றே சித்திக்கின்றது என்பதால் இரண்டு பக்ஷத்திலும் எங்களுக்கு லாபம் என்பதில் ஸந்தேகமில்லை.

**449. அவதாரிகை :**

கர்மகாண்ட வாக்யங்களிலேயே நியமமாக நியோகாதிகள் ஸம்பவிக்கமுடியாது என்பதை இதுவரை சித்தம் செய்யப்பட்டது. இவ்விதமிருந்தும் அதை ஒத்துக்கொள்ளாமல் கர்மகாண்டம் நியோகபரம்தான் என்று உன்னால் ஆக்ஷேபிக்கப்படுமானால், எப்படியிருந்தாலும்

வேதாந்த வாக்யங்கள் நியோகபரம் என்று சொல்வதற்குமுடியாது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उपेत्यवादं परिगृह्य चोच्यते नियोगनिष्ठास्तु निषेधगीरपि ।
तथाऽपि वेदान्तवचःसु विद्यते विधेर्न गन्धोऽपि विरोधकारणात् ॥

**ச்லோகார்த்தம் :** அப்யுபேத்யவாதமாக இவ்விதம் சொல்லப்படுகிறது. நிஷேத வாக்யமும் நியோகம் என்றே இருக்கட்டும். ஆனாலும், வேதாந்த வாக்யங்களில் விதி என்பது லேசமும் கிடையாது. ஏனெனில் அது விருத்தமானது.

**வ்யாக்யானம்** : இதுவரை கர்மகாண்டத்திலுள்ள நிஷேதவாக்யங்கள், நியோகபரம் (விதிபரம்) என்று சொல்வதை நிஷேதம் செய்யப்பட்டது. வேத வாக்யங்கள் சித்த வஸ்துபரம் என்று சொல்லப்படுமானால் அதை கார்யபரம் (விதிபரம்) என்று சொல்லமுடியாது. விதேயம்தான் என்று சொல்லப்படுமானால் ப்ரஹ்மமென்பதே சித்திக்கமுடியாது. வாக்யம், க்ரியாபரமாகவும், வஸ்து பரமாகவும் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கும்.

ஆகவே எந்த வாக்யமும் நியோகபரமில்லை என்று சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளாமல், கர்மகாண்டத்திலுள்ள விதி நிஷேதவாக்யங்கள் நியோகபரம் என்றே வாதத்திற்காக ஒப்புக்கொண்டாலும்கூட வேதாந்த வாக்யம் நியோகபரம் (விதிபரம்) என்று சொல்லப்படும் உன்வாதத்தை ஒப்புக்கொள்வதற்கேமுடியாது. நிஷேதவாக்யங்களில் விதி இருப்பதாகச் சொல்லப்படுவதை ஒரு ஸமயம் ஒத்துக்கொள்வதால்கூட எங்களுக்கு எந்தவிதமான பாதகமுமில்லை. ஆனால் எந்தவிதமாகவும் வேதாந்தவாக்யம் விதிபரம் என்று சொல்லப்படுவதை ஒப்புக்கொள்வதற்கே முடியாது.

**450. அவதாரிகை :**

வேத வாக்யம் விதிபரம் என்றால் சித்தபரம் என்று சொல்லமுடியாது. சித்தபரம் என்றால் விதிபரம் என்று சொல்லமுடியாது இரண்டிற்கும் விரோதம் இருக்கிறது. எப்படி விரோதம் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

ज्ञानं विधातुं न हि शक्यमेतन्न शक्यते कर्तुमकर्तुमेतत् ।
अतोऽन्यथा कर्तुमशक्यमेतत्प्रमाणमेयैकनिबन्धनत्वात् ॥

**ச்லோகார்த்தம் :** ஞானம் என்பது செய்வதற்கோ, செய்யாமல் இருப்பதற்கோ, அல்லது வேறுவிதமாகச் செய்வதற்கோ விஷயமாகாது. ஏனெனில் ஞானம் என்பது ப்ரமாணம் ப்ரமேயம் என்பவைகளுக்கு கட்டுப்பட்டு இருக்கின்றது. அதனால் ஞானம் என்பதில் விதி என்பதே ஸம்பவிக்க முடியாது.

**வ்யாக்யானம் :** எந்த காரணத்தினால் வஸ்துபரம், விதிபரம் என்று இரண்டிற்கும் விரோதம் சொல்லப்படுகிறது? என்றால் எதை விதிக்கு விஷயம் என்று சொல்லப்படுகிறதோ அது ஒரு புருஷனால் செய்யக்கூடிய கார்யமாக இருக்கவேண்டும். எந்த விஷயம் புருஷனால் செய்யக்கூடியதாக இருக்கிறதோ அதைத்தான் அந்த புருஷன் செய்யலாம். செய்யாமலும் இருக்கலாம் வேறு விதமாகவும் செய்யலாம் உதாரணமாக நடக்கின்றது என்ற க்ரியையில் நடக்கலாம் நடக்காமலும் இருக்கலாம் அல்லது வேறு விதமாக ஓடவும் செய்யலாம். இது புருஷதந்திரம். செய்கை என்பது புருஷனுக்கு வஸப்பட்டது. இவ்விதம் புருஷ தந்த்ரமாக

இருப்பது எதுவோ அதுதான் விதிக்கு விஷயமாவதற்கு யோக்யமுடையதாக ஆகும். இதுபோல் ஞானம் என்பது புருஷ தந்த்ரம் இல்லை. அதனால் ஞானம் விதேயமில்லை. புருஷனால் செய்யக்கூடியதுஅல்ல. ஞானம் என்பது ப்ரமாணத்தினால் வஸ்து எப்படி இருக்கிறதோ அப்படி ஏற்படுகிறது. அதனால் ப்ரமாணம் ப்ரமேயம் என்ற இரண்டிற்கும் பரதந்த்ரமாக இருக்கிறது. அதனால் ஞானம் வஸ்து தந்த்ரம். சக்ஷுஸ் என்ற ப்ரமாணமானது, கண்ணை திறந்தவுடன் எதிரில் கடம் இருந்தால் இதுகடம் என்று தெரிவிக்கும் படம் இருந்தால் படம் என்று தெரிவிக்கும். ஆகவே ஞானம் என்பது ப்ரமாணத்தினால் ஏற்படவேண்டி இருக்கின்றதால் அதை ப்ரமேயமான, வஸ்து தந்த்ரம் என்றே சொல்லவேண்டும். அதனால் ஞானம் என்பது விதிக்கு விஷயம் என்று சொல்வதற்கேமுடியாது. க்ரியையாக இருந்தால்தான் விதிக்கு விஷயம் என்று சொல்லலாம். ஆகவே இந்தவிதம் இரண்டிற்கும் விரோதம் இருக்கின்றதால் விதிபரம் என்றால் வஸ்துபரம் என்று சொல்லமுடியாது. வஸ்துபரம் என்றால் விதிபரம் என்று சொல்லமுடியாது.

**451. அவதாரிகை :**

மேலும், வேதாந்தமானது ப்ரஹ்மஞானத்தை விதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், விதேயமான அந்தப்ரஹ்மஞானம் என்பது ஏற்கனவே அறியப்பட்டதா? அல்லது அறியப்படாததா? விதிப்பதற்குமுன் அறியப்படாதது என்று சொல்லப்படுமானால் அதை எப்படி விதிக்கமுடியும்?

**ச்லோகம் :**

ब्रह्मज्ञानं जानता ब्रह्मबुद्धेः कर्तव्यत्वं शक्यते ज्ञातुमेतत् ।
न ह्यज्ञात्वा ब्रह्मबुद्धिं तदीयं कर्तव्यत्वं कश्चिदीष्टे ग्रहीतुम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மஞானம் என்பதை அறிகின்ற ஒருவனால்தான், ப்ரஹ்மஞானம் என்பதின் கர்த்தவ்யத்தன்மை என்பது அறியப்படுவதற்குமுடியும். ப்ரஹ்மஞானம் என்பதே அறியப்படாமல் அதை செய்வதென்பது யாராலும் முடியாது.

**வ்யாக்யானம் :** விதேயமான ப்ரஹ்மஞானத்தின் ஸ்வரூபமே என்னவென்று அறியப்படவில்லையென்றால் அந்த ஞானம் கர்த்தவ்யம் என்று அறியப்படுவதற்கேமுடியாது அதற்காக ப்ரஹ்மஞானம் என்பது விதிப்பதற்குமுன் அறியப்பட்டதுதான் என்று சொல்லப்படுமானால், அதன்பிறகு விதி எதற்காக? ஆகவே அறியப்பட்டது என்றாலும் விதி தேவையில்லை.

**452. அவதாரிகை :**

அறியப்பட்ட ப்ரஹ்மஞானமே விதிக்கப்படுகிறது என்று சொல்வதால் என்ன தோஷம் என்றால், ப்ரஹ்மமென்பது அறியப்பட்டால்தான், ப்ரஹ்மஞானம் அறியப்பட்டது என்று சொல்லலாம்: ப்ரஹ்மமென்பதே ப்ரஹ்மஞானத்திற்கு விஷயம். ஆகையால் அந்தவிஷயமே அறியப்படவில்லையென்றால், அந்த விஷயகமான ஞானம் எப்படி ஏற்படமுடியும்? ஆகையால் ப்ரஹ்மஞானம் என்னவென்று நிரூபிக்கவேமுடியாது.

**ச்லோகம் :**

ब्रह्मज्ञानं ब्रह्मणि ज्ञायमाने ज्ञातुं शक्यं नान्यथा तच्च तद्वत् ।
विज्ञातं चेद्ब्रह्मणस्तत्वमस्य प्राप्ता मुक्तिर्नास्ति कृत्यं विधीनाम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மமென்பது அறியப்பட்டால்தான் ப்ரஹ்மஞானம் என்பது அறியப்பட்டதாக ஆகும். வேறு எந்த விதத்திலும் ப்ரஹ்மஞானம் ஏற்படமுடியாது.

ப்ரஹ்மஸ்வரூபம் அறியப்படுமானால் முக்தி ஏற்படுகிறது. அதன்பின் விதிவாக்யங்களுக்கு ப்ரயோஜனமே கிடையாது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது விதிக்குமுன் அறியப்பட்டதா? அறியப்படாததா? என்று விசாரிக்கின்றபோது அறியப்பட்டதுதான் என்று சொல்லப்படுமானால், 'ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி' என்று பலமாகச் சொல்லப்படும் முக்தி என்பது சித்திக்கின்றதால் அதன்பிறகு விதி என்பதற்கு பலமே ஏதுமில்லாததால் விதி என்பது வ்யர்த்தமாகின்றது. அதற்காக ப்ரஹ்மமென்பது விதிக்குமுன் அறியப்பட்டதல்ல என்று சொல்லப்படுமானால், அறியப்படாத அந்தப்ரஹ்மஞானம் எப்படி ஏற்படமுடியும். ப்ரஹ்மமென்பது விசேஷணம், ஞானம் என்பது விசேஷ்யம். ஆகவே விசேஷம் என்பது அறியப்படாமல் விசிஷ்ட்ட ஞானம் ஏற்படாது. ஆகையால் ப்ரஹ்மமென்பது அறியப்பட்டது என்றாலும் விதி ஸம்பவிக்காது அறியப்படவில்லையென்றாலும் விதி ஸம்பவிக்காது.

**453. அவதாரிகை :**

**பூர்வ :** ப்ரஹ்மஞானம் ஏற்பட்ட போதிலும் அதன் பலனானமோக்ஷம் என்பது உடனே ஏற்படாது. விதேயமாகச் சொல்லப்படும் ஞான ஆவ்ருத்தியின் பலனாகவே மோக்ஷம் சித்திக்கவேண்டும். எப்படி யாகபலமாகச் சொல்லப்படும் ஸ்வர்க்காதி பலன்கள் காலாந்தரத்தில்தான் சித்திக்கின்றதோ அதுபோல் முக்தி என்பதும் காலாந்தர பலம் என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

**ச்லோகம் :**

दृशो विराट्सूत्रशरीरगोचरं परस्पराध्यासमबोधसम्भवम् ।
अनर्थमाहुः श्रुतिमस्तके स्थितास्ततोऽस्य विद्यासमयैव मुक्तता ॥

**ச்லோகார்த்தம் :** சைதன்யத்திற்கும், விராட், சூத்ரம், என்ற ஜடத்திற்கும் அஞ்ஞானத்தினால் ஏற்படுகின்ற அன்யோன்ய அத்யாஸமே ஸம்ஸாரத்திற்கு காரணம் என்று வேதாந்தத்தில் நிஷ்ட்டையுடையவர்கள் சொல்கிறார்கள். ஆகவே, ஞானம் ஏற்படுகின்ற காலத்திலேயே முக்தி ஏற்படுகின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஞானம் ஏற்பட்டாலும், அதன் பலனான முக்தி என்ற புருஷார்த்தம் ஏற்பட்டதாக அறியப்படவில்லையே? உதாரணமாக ஒரு விஷயத்தைப்பற்றிய ஞானம் ஏற்படுவதற்காக அந்த விஷயம் அடையப்பட்டதாக எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே, ஏற்பட்ட ஞானத்தினால் அந்த விஷயத்தை அடையக்கூடிய கார்யத்தைச் செய்தால்தான் அதன் பலன் கிடைக்கும். (ஆகவே ஞானத்தை ஆவ்ருத்தி செய்யவேண்டும்).

**சித்தா :** ஸ்வர்க்காதி பலன்களைப்போல் ப்ரஹ்மஞானம் என்பது காலாந்தர பலமல்ல. ஏனெனில் அவித்யா, த்வம்ஸமே, மோக்ஷம். வித்யையினால், அவித்யா நாசம் என்பது அந்த க்ஷணமே ஏற்படுகின்றதால் முக்தி என்பது காலாந்தரபலம் என்று சொல்வது சரியல்ல. அவித்யை என்ற ஒரே காரணத்தினால்தான் சைதன்யஸ்வரூபத்தில் ஸமஷ்டி என்றும் வ்யஷ்டியென்றும் சொல்லப்படும் ஸ்தூல, சூக்ஷ்ம சரீராதிகளின் அத்யாஸம் ஏற்படுகிறது. அதன் காரணமாகவே ஸர்வ அனர்த்தங்களும் ஏற்படுகிறது என்று வேத வித்துக்களால் சொல்லப்படுகிறது. ஆகவே ஸமஷ்டி ஸ்தூல சரீரம்விராட், ஸமஷ்டிசூக்ஷ்ம சரீரம் சூத்ராத்மா என்றும் இதேபோல் வ்யஷ்டி ஸ்தூலசூக்ஷ்ம சரீரத்துடன்கூடிய சைதன்யமே ஜீவனென்று அவித்யாவஸாத் ஏற்பட்ட பேதம் காரணமாக இந்த சரீராதிகளில் ஏற்பட்ட அபிமானமே

ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணமாகின்றது. இந்தவிதம் அனாதி அஞ்ஞானத்தினால் சித்திற்கும் ஜடத்திற்கும் ஏற்பட்ட பரஸ்பர அத்யாஸம்தான் அனர்த்தகரமான ஸம்ஸாரம் என்ற துக்கத்திற்கு காரணமாகின்றது. ஆகவே ப்ராந்தியினால் ஏற்பட்ட இந்த ஸம்ஸாரமானது. யதார்த்தமான ப்ரத்யகாத்ம ஸ்வரூப ஞானம் ஏற்பட்ட க்ஷணத்திலேயே நிவர்த்திக்கின்றதால் ஸர்வ அனர்த்த நிவ்ருத்தி ஏற்படுகிறது. இதுவே முக்தி. அதுவே புருஷார்த்தம் என்று வேதார்த்தங்களை விசாரித்து அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே, ஞானம் ஏற்பட்ட பிறகு முக்திக்காக செய்யவேண்டிய கார்யம் ஏதுமில்லை.

**454. அவதாரிகை :**

**பூர்வ :** பந்தம் என்பது அவித்யா கார்யமாக இருந்தபோதிலும்கூட அவித்யை என்பது அனாதிகாலமாக இருக்கின்றதால் த்ருடமாக இருக்கின்ற காரணத்தினால், வித்யை ஏற்படுவதனாலேயே, அவித்யை, அதன்கார்யம் என்பதெல்லாம் நிவ்ருத்திக்கின்றது என்று சொல்லமுடியாததால், வித்யையினால் ஏற்பட்ட ஞானத்தை ஆவ்ருத்தி செய்யவேண்டு மென்று வேதாந்தவாக்யம் விதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் ஆக்ஷேபிப்பது சரியல்ல.

**ச்லோகம் :** अनाद्यविद्यापटनेत्रबन्धनं प्रसह्य वेदान्तनिबन्धना मतिः ।
स्वजन्ममात्रेण दृढाऽऽत्मगोचरा समूलदाहं दहतीति हि श्रुतिः ॥

**ச்லோகார்த்தம் :** வேதாந்த ப்ரமாணத்திலிருந்து ஏற்படுகின்ற த்ருடமான ஆத்மஞானமானது,, தன் உற்பத்தி மாத்திரத்தினாலேயே வஸ்த்ரம் போன்று மறைக்கின்ற நேத்ரபந்தனமாக இருக்கின்ற அனாதி அவித்யையை பரிபூரணமாக நாசம் செய்கின்றது.

**வ்யாக்யானம் :** அவித்யை, அவித்யா ஸம்பந்தத்தினால் ஏற்பட்ட சிதாபாஸம் என்ற ஜீவ, ஈச்வர விபாகங்கள் முதலான ஷடஸ்மாகம் அனாதி என்று ஒத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது. அதனால் வஸ்திரத்தினால் கட்டப்பட்ட நேத்ரங்களினால் எப்படி விஷயங்கள் அறியப்படுவதில்லையோ அதுபோல், அஞ்ஞானத்தினால் நமது ஸ்வரூபம் அனாதிகாலமாக மறைக்கப்பட்டிருக்கின்ற காரணத்தினால் ஏற்பட்ட கர்த்ருத்வ போக்த்ருத்வரூபமான பந்தமானது அனேக ஜன்மாக்களில் தொடர்ந்து அனுபவிக்கப்படுவதால் த்ருடமாக இருக்கின்றது. இப்பேர்ப்பட்ட அவித்யை அதன் கார்யமான பந்தம் என்பதெல்லாம், இந்த ஜன்மாவில் ஏற்படும் ஞானத்தினால், ஞானோதயம் ஏற்பட்டவுடனேயே நிவ்ருத்திக்கிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே ஏற்பட்ட ஞானத்தை ஆவ்ருத்தி செய்வேண்டுமென்று வாக்யம் விதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல அவித்யையினால் ஏற்பட்ட இந்த பந்தமானது வித்யையினால் நிவ்ருத்திக்கின்றது என்றே சொல்லவேண்டும். வேதாந்தார்த்தங்களை, ஸம்சயமோ விபர்யயமோ இல்லாமல் நன்கு விசாரித்து அறிந்த ஞானமே த்ருடமான ஆத்மஞானம். இந்த ஞானமானது வஸ்து எப்படி இருக்கின்றதோ அப்படியே ஏற்படும் ஞானமாக இருப்பதால், இந்த ஞானமானது அசைக்கமுடியாதபடி பலமுள்ளதாகவே ஏற்படுகின்றது. ஆகவே இவ்விதம் அபரோக்ஷமாக ஏற்படும் அகண்டாகார ஆத்ம ஞானம் த்ருடமாக ஏற்படுகின்றதால் இந்த ஞானம் ஏற்பட்டவுடனேயே, அவித்யை அதன் கார்யம் எல்லாவற்றையும் பலாத்காரமாக நாசத்தை அடையச்செய்கின்றது. ஆகவே ஞானம் ஏற்பட்ட உடனேயே அவித்யா நிவ்ருத்தி ஏற்படுகிறது என்பதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை என்பதை ச்ருதியே 'தரதிசோகம் ஆத்மவித்' என்று தெரிவிக்கின்றது.

ஒரு சிலருக்கு வேதாந்த விசாரம் செய்தும் பந்தம் நிவர்த்திக்கப்பட்டதாக அறியப்படவில்லையே என்ருல் அஸம்பாவனே விபரீதபாவனையென்ற ஸம்சயங்கள் அற்ற த்ருடமானஞானம் ஏற்பட்டால்தான் பந்தம் நிவர்த்திக்கும். அதனுல் பந்தம் நிவர்த்திக்க வில்லையென்ருல் த்ருடஞானம் ஏற்படவில்லையென்று அறியவேண்டுமேயன்றி ஞானம் ஏற்பட்டும் பந்தம் நிவர்த்திக்கவில்லை என்று சொல்வது சரியல்ல.

ஆகவே அகண்டாகார ஞானத்திஞல் அவித்யாநிவர்த்தி என்பது ஏற்படுகின்றதால் அதன்பிறகு செய்யவேண்டியகார்யம் ஏதுமில்லை. ஆகையால் ஞானஆவ்ருத்தி செய்யவேண்டுமென்று சொல்வது சரியல்ல.

**455. அவதாரிகை :**

ப்ரஹ்மம் என்பது அறியப்பட்டதா அறியப்படாததா என்று விகல்ப்பிக்கின்ற போது, எந்த விதம் சொல்லப்பட்டாலும் அதில் தோஷம் ஸம்பவிக்கின்றது. அதனுல் வேதாந்தம் ப்ரஹ்மஞானத்தை விதிக்கின்றது. என்று சொல்வதற்கே முடியாது.

**ச்லோகம் :**

विज्ञाते ब्रह्मणि स्याद्विधिरयमफलः प्रत्यये तद्वदाज्ञातब्रह्मकर्मा विधिविषय इति प्रत्ययो बुद्धियोग्यः ।
ब्रह्मात्मप्रत्ययेऽतो विधिरनवसरः सर्वथा चिन्त्यमानस्तस्माद्ब्रह्मात्मवस्तुन्यवसितमखिलं विद्धि वेदान्तवाक्यम् ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மமென்பது அறியப்பட்டது என்ருல், ப்ரஹ்மஞான விஷயத்தில் விதி என்பது நிஷ்பலமாகிறது. அறியப்படாத ப்ரஹ்மஞானம் என்பது விதிக்கு விஷயமாகிறது என்று சொல்லப்படுவதும் (விதேயதன்மை) நிரூபணம் செய்யமுடியாததால், விதிக்கு விஷயமில்லை. ஆகவே, எவ்விதம் விசாரிக்கப்பட்ட போதிலும் ப்ரஹ்மாத்மஞானம் என்பது விதிக்கு விஷயமாக ஆகாது. அதனுல் வேதாந்த வாக்யங்கள் எல்லாமே ப்ரஹ்மாத்ம வஸ்துவை தெரிவிப்பதன் மூலமே முடிவை அடைகிறது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஞானம் என்பதில் விதிஸம்பவிக்க முடியாது என்று கீழேவிசாரிக்கப்பட்ட விஷயத்தை இப்போது முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது. அதாவது அறியப்பட்ட ப்ரஹ்மமானது விதிக்கு விஷயமா அறியப்படாதப்ரஹ்மமென்பது விதிக்குவிஷயமா என்று விகல்ப்பிக்கின்ற போது. எந்த விதமாகச் சொன்ஞலும் தோஷம் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில் அறியப்பட்டப்ரஹ்ம மென்ருல் அதன்பிறகு விதி என்பதே தேவை இல்லாததால் விதி என்பது நிஷ்ப்பலமாகிறது. அதற்காக அறியப்படாதப்ரஹ்மமானது விதிக்கு விஷயம் என்று சொல்லப்படுமானுல், புத்திக்கே விஷயமாகாத ப்ரஹ்மமானது எப்படி விதிக்கு விஷயமாக ஆகமுடியும்? இந்த இரண்டு முறையைத் தவிர மூன்ருவது முறை என்பதாக எதுவுமில்லை. மேலும், ப்ரஹ்மஞானம் ஏற்பட்டவுடனேயே புருஷார்த்தம் சித்திக்கின்றதால் அதன் பிறகு கர்த்தவ்யம் என்பதே கிடையாது. ஆகவே வேதாந்த வாக்யங்கள் சித்தமான ப்ரஹ்மாத்மதத்வத்தை போதிப்பதில் முடிவை அடைகின்றது அதனுல் விதி என்பதற்கு வேதாந்தத்தில் அவகாஸமே கிடையாது.

**456. அவதாரிகை :**

மேலேசொல்லப்படும் காரணத்திஞலும், ப்ரஹ்மஞானத்தில் விதி ஸம்பவிக்க முடியாது.

**ச்லோகம் :** विरुद्धत्रिकस्य द्वयापत्तिदोषान्न शक्यं विधानं धियः संग्रहीतुम् ।
यथा वाजपेये गुणस्येह तद्वत्ततो नास्ति वेदान्तवाक्ये विधानम् ॥

**ச்லோகார்த்தம் :** விருத்தமான த்ருகத்வயம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றதால், வாஜபேய வாக்யத்தில் குணவிதீ என்பதை ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. அதேபோல் ஆத்மஞானம் என்பதிலும் விதி என்பதை ஒத்துக்கொள்ளமுடியாது. ஆகவே, வேதாந்தவாக்யத்தில் விதி ஸம்பவிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** மேலே சொல்லப்போகின்ற காரணத்தைக் கொண்டும், ப்ரஹ்மஞானத்தில், விதிஸம்பவிக்கமுடியாது என்பதை கர்மகாண்டத்திலுள்ள ஒரு வாக்யத்தை இதற்கு உதாரணமாகத் தெரிவித்து அதன்மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது. அதாவது; எந்த இடத்தில் விருத்தத்ருகத்வயதோஷம் ஸம்பவிக்கின்றதோ அந்த இடத்தில் விதிஸம்பவிக்க முடியாது என்று, பூர்வ மீமாம்ஸகர்களாலேயே தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, 'வாஜபேயேன ஸ்வாராஜ்ய காமோயஜேத' என்ற கர்ம காண்டவாக்யமானது, ஸ்வாராஜ்யகாமன், வாஜபேயம் என்ற யாகத்தைச் செய்ய வேண்டுமென்று விதிக்கின்றது. இந்த வாக்யத்திலுள்ள 'வாஜபேயம்' என்ற சப்தமானது, குணவிதியை தெரிவிக்கிறதா? அல்லது யாகத்தின் நாமதேயமா? என்ற ஸந்தேகம் ஏற்படுகின்றது. இந்த இடத்தில் (வாஜம் என்றால் அன்னம், தத்பேயம் என்றால் அதைபருகக் கூடிய விதமான கஞ்சி) அன்னத்தினலான கஞ்சியைக் கொண்டு இந்தயாகத்தில் ஹோமம் செய்யப்படவேண்டுமென்று 'வாஜபேயம்' என்றபதம் குணவிதியை தெரிவிக்கின்றதா? அல்லது யாகத்தின் நாமதேயமா? என்று விசாரிக்கப்படுகிறது. இதை குணவிதி என்று சொல்லப்படுமானல் த்ருகத்வய தோஷம்ஸம்பவிக்கின்றதால் நாமதேயம் என்றே தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே ப்ரஹ்மஞானத்திலும் விதி என்பது சொல்லப்படுமானல் த்ருகத்வய தோஷம்ஸம்பவிக்கும். அதனல் ப்ரஹ்மஞானத்தில் விதி ஒத்துக் கொள்ளமுடியாது.

**பூர்வ :** கர்மகாண்டத்தில் 'அக்னிஹோத்ரம் ஜுஹ்யாத்ஸ்வர்க்ககாமோயஜேத' என்ற இடத்தில் 'தத்னேந்த்ரிய காமஸ்ய ஜுஹ்யாத்' என்ற வாக்யமானது குணவிதியாக எப்படி விதிக்கப்பட்டிருக்கின்றதோ, அது போல் 'வாஜபேயேன ஸ்வாராஜ்யகாமோயஜேத" என்ற வாக்யமும், ஸ்வாராஜ்ய பலனுக்காக, "ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்க்ககாமோ யஜேத" என்று விதிக்கப்பட்டயாகத்தில் குணவிதியாக இருக்கலாமே?

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுமானல் விருத்தத்ருகத்வயதோஷம்ஸம்பவிக்கின்றது. எப்படியெனில், யாகம் என்பதை உத்தேசித்து, அதில் குணம் விதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானல், யாகம் என்பது, உத்தேச்யத்வம், அனூத்யத்வம், ப்ரதானத்வம் என்ற தன்மையுடையதாக ஆகிறது. அதனல் குணம் என்பது உபாதேயத்வம் விதேயத்வம் சேஷத்வம் (அப்ரதானத்வம்) என்ற தன்மையுடையதாக ஆகிறது. இதேபோல், ஸ்வாராஜ்யம் என்ற பலனை உத்தேசித்து யாகம் விதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானல், பலன் என்பது உத்தேச்யத்வம் அனூத்யத்வம் ப்ராதானத்வம் என்ற தன்மையுடையதாகிறது. அதனல் யாகம் என்பது உபாதேயத்வம், விதேயத்வம் ஶேஷத்வம் என்ற தன்மை உடையதாக ஆகிறது. ஆகவே இந்த விதம் இந்த வாக்யம் குணவிதி என்று சொல்லப்படுமானல் ஒரேயாகமானது உத்தேச்யத்வம் உபாதேயத்வம் என்றும் ஒன்றுக்கொன்று விரோதமான தன்மைகள் உடையதாக ஆகிறது. இதுவே த்ரிகத்வயதோஷம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, ஒரேபலத்திற்காக, ஒரேயாகத்தை, ஒருவாக்யம் விதிக்கின்றது என்றால், அது, குணவிதி என்று சொல்லமுடியாது அதனல் 'வாஜபேயம்' என்பது நாமதேயம் என்றே தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது.

'அக்னிஹோத்ரம் ஜுஹுயாத் ஸ்வர்க்ககாமோயஜேத' என்ற வாக்யமானது, ஸ்வர்க்கம் என்ற பலனுக்காக இந்த யாகத்தைச் செய்யவேண்டுமென்று விதிக்கின்றது. அதன் பிறகு அடுத்த வாக்யத்தில் இந்த்ரியகாமன்ததியைக்கொண்டு ஹோமம் செய்வானுகில், இந்த்ரியங்கள் நன்ருக செயல்படும் என்று தெரிவிக்கப்படுகிறது. ப்ரதானகர்மாவில், 'தத்னேனேந்த்ரியகாமஜுஹுயாத்' என்ற வாக்யம். குணவிதியாக சொல்லப்படுகிறது. இந்தவிதம் வாக்யம் என்பதும் இரண்டாக இருப்பதாலும், பலன்களும் இரண்டுவிதமாக இருப்பதாலும் அந்த இடத்தில் குணவிதி என்று சொல்லலாம். அதுபோல் (ஏகஸ்யஉபயார்த்தத்வம்) வாஜபேயேனஸ்வாராஜ்ய காமோயஜேத' என்ற வாக்யம் குணவிதி என்று சொல்லமுடியாது. த்ருகத்வயதோஷம் ஸம்பவிக்கின்றதால் வாஜபேயம் என்பது நாமதேயம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இதேபோல் ப்ரஹ்மஞானம் என்பது விதிக்கப் படுவதாகச் சொல்லப்படுமானுல் த்ரிகத்வயதோஷம்ஸம்பவிக்கின்றது. அதனுல் வேதாந்தவாக்யம் விதிபரம் என்று சொல்லமுடியாது.

**457. அவதாரிகை :**

விருத்தத்ருகத்வயம் என்ருல் என்ன? என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उद्दिश्यमानत्वमनूद्यमानभावः प्रधानत्वमितीदमेकम् ।
तथाप्युपादेयविधेयशेषभावप्रभेदं त्रिकमन्यदत्र ॥

**ச்லோகார்த்தம் :** விருத்த த்ருகத்வயம் என்பதில், முதலில் உத்திச்யமானத்வம், அனூத்யமானத்வம், ப்ரதானத்வம் என்பது ஓர்த்ருகம். அதேபோல் இரண்டாவதாக உபாதேயத்வம், விதேயத்வம் ஸேஷத்வம் என்பது மற்ருெரு த்ருகமாகும்.

**வ்யாக்யானம் :** விருத்தத்ருகத்வயம் என்பதின் ஸ்வரூபம் என்ன என்பதை தெரிவித்து, அவைகள் ஒன்றுக்கொன்று க்ரமப்படிவிரோதமுள்ளதாக இருக்கின்றதால் தோஷம் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

உத்திச்யமானத்வம் என்ருல் உபாதேயத்வம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸ்வர்க்கம் என்ற பலனை உத்தேசித்து, யாகம் என்பது விதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகின்றபோது, உத்தேச்யமான ஸ்வர்க்கம் என்பது சித்தமாக இருக்கின்றதால், அது அனுஷ்ட்டேயமாக இருக்கமுடியாது.க்ருதிஸாத்யமாக இல்லாதது எதுவோ அதுவே உத்திச்யமானமாக இருக்கின்றது.

உபாதேயத்வம் என்பது உத்திச்யத்வம் என்பதற்கு நேர்விருத்தம். அதாவது, யாகம் என்பது விதிக்கப்படுகின்றதால் 'யாகம் என்பது உபாதேயமாக = அனுஷ்ட்டிக்கப்பட வேண்டியதாக க்ருதிஸாத்யமாக இருக்கின்றது. ஆகவே க்ருதிஸாத்யமான யாகம் என்பதும். சித்தமானஸ்வர்க்காதி பலன்களும் ஒன்றல்ல. சித்தம் ஸாத்யம் என்று இரண்டும் ஒன்றுக்கொன்று பேதமாக விருத்தமாக இருக்கின்றது. ஆகவே உத்தேச்யத்வம் என்பதும் உபாதேயத்வம் என்பதும் ஒன்றுக்கொன்று விருத்தம்.

இதேபோல் அனூத்யமானத்வம் — விதீயமானத்வம் என்ற இரண்டும் ஒன்றுக் கொன்று விருத்தம். அதாவது, எது உத்தேச்யமோ அந்த வஸ்துவே அனுவாதம் செய்யப் படுவதால், அனூத்யமானவஸ்து சித்தமாக இருக்கின்றதால், அது விதீயமானமாக இருக்கமுடியாது. ஆகவே அனூத்யத்வம் என்பதும் விதீயத்வம் என்பதும் நேர்

விருத்தமானது. ஏனெனில் விதீயத்வம் என்பதுக்ருதியினுல் அடையப்படவேண்டியதாக இருக்கிறது. அனூத்யத்வம் என்பது ஏற்கனவே அடையப்பட்டதாகவே இருக்கின்றது. ஆகையால் இரண்டும் ப்ராப்தம் அப்ராப்தம் என்ற முறையில் விருத்தமாக இருக்கின்றது. இதேபோல் ப்ரதானத்வம் (ஸேஷித்வம்) அப்ரதானத்வம் (ஸேஷத்வம்) என்ற இரண்டும் பரஸ்பரம் விருத்தமாக இருக்கின்றது. அதாவது எந்த பலனை உத்தேசித்து, எது விதிக்கப்படுகிறதோ அந்த பலன் என்பதே ப்ரதானம். அந்த பலனுக்காக எந்த யாகம் விதிக்கப்படுகிறதோ அந்த யாகம் என்பது க்ருதிவ்யாப்யமானதால், யாகம் அப்ரதானம் =ஸேஷம் என்று சொல்லப்படுகிறது. ப்ரதானமென்ற ஸேஷியென்பது அனன்யார்த்தத்வ லக்ஷணமுடையது, ஸ்வதந்திரம். அப்ரதானமான ஸேஷம் என்பது அன்யார்த்தத்வ லக்ஷணமுடையது, பரதந்திரம். இவ்விதம் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கின்றது. ஆகவே உத்திச்யமானத்வம் x உபாதேயத்வம் என்பதும், அனூத்யமானத்வம் x விதீயமானத்வம் என்பதும், ப்ரதானத்வம் x அப்ரதானத்வம் என்பதும் சொல்லப்பட்ட க்ரமத்தின்படி பரஸ்பரம் விருத்தமாக இருக்கின்றது. இதையே விருத்தத்ருகத்வயதோஷம் என்று சொல்லப்படுகிறது.

**458. அவதாரிகை :**

ப்ரஹ்மஞானத்தில் விதி என்று சொல்லப்படுமானுல் விருத்த த்ருகத்வயதோஷம் என்பது எப்படி ஸம்பவிக்கின்றது என்றுல்,

**ச்லோகம் :** एकेन वाक्येन धियो विधानं प्रत्यक्प्रमित्सा च यदि प्रतीचि ।
त्रिकद्वयं तत्र विरुद्धमेतत् प्रसज्यते कष्टमतः किमन्यत् ॥

**ச்லோகார்த்தம் :** ஒரே வாக்யத்தில் ஆத்ம ஞானத்தில் விதி என்பதையும், ஆத்மாவை அறிந்துகொள்ளவேண்டுமென்ற இச்சை என்பதையும் ஒத்துக்கொள்ளப் படுமானுல் விருத்தமான த்ருகத்வயம் என்பது ஏற்படும், இதைவிட வேறு என்ன கஷ்டம் வேண்டும்?

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஞானத்தில் விதி என்று சொல்லப்படுமானுல், விருத்த த்ருகத்வய தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில், 'ஆத்மாவாऽரேத்ஷ்டவ்ய' என்ற வாக்யம், ஆத்மா அறியப்படவேண்டும் என்று ஆத்மதர்ஸனத்தை விதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், ஆத்மாவை உத்தேசித்து ஞானம் விதிக்கப்படுகிறது என்றுகிறது.

ஆகவே, இந்தவிதம் சொல்லப்படுமானுல், ஆத்மா என்பது, விருத்த த்ருக த்வயதோஷம் உள்ளதாக ஆகின்றது. அதனுல் ஆத்மஞானம் விதிக்கப்படுவதாகச் சொல்லமுடியாது. அதேபோல் ஆத்மா என்பதும் சித்தவஸ்துவாக இருக்கின்றதால் உபாதேயத்வம் விதேயத்வம் ஸேஷத்வம் என்பதெல்லாம் ஸம்பவிக்கமுடியாது.

ஆகையால் அஞ்ஞாதமாக இருக்கின்ற ஆத்மா, ஞாதமாக ஆகின்றது என்று அஞ்ஞாத ஞாபகம் விதியென்று சொல்லவேண்டுமேயன்றி அப்ரவர்த்த ப்ரவர்த்தனம் விதி என்று சொல்வது பொருந்தாது. ஆகையால் அறியப்படாததை அறிந்து கொள்வதே விதி என்றே சொல்லவேண்டும்.

**459. அவதாரிகை :**

எப்படியெனில்

**ச்லோகம் :**

उद्दिश्यमानं तदनूद्यमानभूतं प्रधानं च धियो विधाने ।
प्रमीयमाणं पुनरात्मवस्तु तदास्पदं स्यादितरत्रिकस्य ।।

**ச்லோகார்த்தம் :** ஞானம் என்பது விதிக்கப்படுமாஞல், ஆத்மா என்பது உத்திச்யமானம், அனூத்யமானம், ப்ரதானம் என்ற த்ருகத்தை உடையதாக ஆகிறது. ஆத்ம வஸ்து அறியப்படுகிறது என்று இருக்குமாஞல் ஆத்மா என்பது இரண்டாவது த்ருகத்தை உடையதாக ஆகிறது.

**வ்யாக்யானம் :** 'ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய:' என்ற வாக்யமானது, ஆத்ம ஞானத்தை விதிக்கின்றதாகச் சொல்லப்படுமாஞல், ஆத்மா என்பது உத்திச்யமானம் அனூத்யமானம் ப்ரதானம் என்ற மூன்று தன்மைகள் உடையதாக ஆகிறது என்று கீழே சொல்லப்பட்டது. அதேபோல் 'மோக்ஷகாம: ஆத்மானம் ஜானீயாத்' என்று சொல்லப்படுகின்றபோது மோக்ஷகாமன், ஆத்மாவை அபரோக்ஷமாக அறியவேண்டும். என்று சொல்லப்படுமாஞல் ஆத்ம ஞானம் அபரோக்ஷமாகவேண்டும் என்பதால் ஞானத்திற்கு ஆத்மாவிசேஷணம் என்ருகிறது. ஞானத்திற்கு ஆத்மா விஷயம் என்று சொல்லப்படுமாஞல் ஞானம் என்பது உத்திச்யமானம், அனூத்யமானம் ப்ரதானம் என்று மூன்று தன்மைகள்உடையதாக ஆகிறது. ஆத்மா என்பது உபாதேயம் விதேயம் அப்ரதானம் என்ற மூன்று தன்மைகளை உடையதாக ஆகிறது. ஆகவே ஒரே ஆத்ம வஸ்து, விருத்த த்ருகத்வய தன்மையுடையதாகச் சொல்லப்படுமாஞல் தோஷம் ஸம்பவிக்கும். அதுமட்டுமல்ல ஆத்மா சித்தவஸ்துவானதால் ஆத்மா அனுஷ்டேயத்வரூபமான உபாதேயத்வம் என்பதால் விதேயம் என்றும் சொல்லமுடியாது. எப்படி இருந்தபோதிலும் மோக்ஷத்தை உத்தேசித்து ப்ரத்யக்தத்வஞானமானது அபரோக்ஷஅனுபவ பர்யந்தம் ஆத்மஞானம் விதிக்கப்படுவதால், விசேஷணமான ஆத்மா விதேயம் என்று சொல்லலாமே என்ருல் ஆத்மாவிற்கு விதேயத்வம் என்பது ப்ரமேயத்வம்தான். அதஞல்தான் அஞ்ஞாத ஞாபனம் விதி: என்பதை ஒப்புக்கொள்ளலாமேயன்றி அப்ரவ்ருத்த ப்ரவர்த்தனம் விதி : என்பதை ஒப்புக்கொள்ளமுடியாது.

ஆகவே ஆத்மஞானத்தில் விதி என்று சொன்ஞலும் சரி ஆத்மாவில் விதி என்று சொல்லப்பட்டாலும் சரி இரண்டிலும் விருத்த த்ருகத்வதோஷம் ஸம்பவிக்கின்றது.

**460. அவதாரிகை :**

உதாரணமாகச் சொல்லப்பட்ட (வாக்யத்தில்) விஷயத்தில் த்ருகத்வயதோஷம் என்பது எப்படி ஸம்பவிக்கின்றது? என்ருல்,

**ச்லோகம் :**

प्रथमत्रिकं यजिनिगद्यगतं गुणसंगतेरवगमे भवति ।
चरमत्रिकं यजिनिगद्यगतं फलसंगतेरवगमे तु पुनः ।।

**ச்லோகார்த்தம் :** வாஜபேய விதியை குண்விதியாக ஒத்துக்கொள்ளப்படுமாஞல் யாகம் என்பதில் முதல் த்ருகம் ஸம்பவிக்கும். வாஜபேய விதியை பல விதியாக ஒத்துக் கொள்ளப்படுமாஞல் யாகத்தில் இரண்டாவது த்ருகம் என்பது ஸம்பவிக்கும்.

**வ்யாக்யானம் :** "வாஜபேயேன ஸ்வாராஜ்யகாமோ யஜேத" என்ற வாக்யமானது, யாகம் என்பதை உத்தேசித்து வாஜபேயம் என்ற அன்னத்திஞல் செய்யப்பட்ட கஞ்சியை ஹோமம் செய்யவேண்டுமென்று 'வாஜபேயம்' என்பதை குணமாக விதிக்கின்றது என்று சொல்லப்படுமாஞல், உத்தேச்யத்வம் அனூத்யத்வம் ஸேஷித்வம் (ப்ரதானத்வம்) என்ற

மூன்றும் யாகம் என்பதில் ஸம்பவிக்கின்றது. இதேபோல், ஸ்வாராஜ்யம் என்ற பலனை உத்தேசித்து யாகம் என்பது விதிக்கப்படுவதாகச் சொல்லப்படுமானால், யாகம் என்பதில், உபாதேயத்வம், விதேயத்வம் ஶேஷித்வம் (அப்ரதானத்வம்) என்பது ஸம்பவிக்கின்றது. ஆகவே ஒரே யாகமானது, இரண்டுவிதமாக, ஒன்றுக்கொன்று விருத்தமான மூன்று தன்மைகளையுடையதாகச் சொல்லநேரிடுகின்றதால் த்ருகத்வயதோஷம் ஸம்பவிக்கின்றது.

**461 அவதாரிகை :**

இந்த வாக்யத்தில், யாகம் என்பது ஒரே சமயத்தில், குண ஸம்பந்தமுள்ளதாகவும் பல ஸம்பந்தமுள்ளதாகவும் இரண்டு விதமாக விதிக்கவில்லை. ஒன்றன்பின் ஒன்றாக விதிப்பதாகச் சொல்லப்படுமானால் விரோதம் ஏற்படமுடியாது. ஆகவே, தோஷமில்லை என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

सकृदुच्चरन्यजतिरेष गुणं न फलं च संगमयितुं क्षमते ।
कथितत्रिकद्वयविरोधवशाद्यजिवस्तुनीति ननु नीतिविदः ॥

**ச்லோகார்த்தம் :** கீழே சொல்லப்பட்ட விருத்த த்ருகத்வய தோஷம் ஸம்பவிக்கின்றதால், ஒரே ஒருமுறை சொல்லப்படும் யஜுதாதுவானது, யாகத்தில் குணம் பலம் என்ற இரண்டு ஸம்பந்தங்களைச் சொல்லமுடியாது என்று ந்யாயத்தை அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : "வஜாபேயேன ஸ்வாராஜ்யகாமோ யஜேத" என்ற வாக்யம், ஒரேமுறைதான் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் க்ரமமாக இரண்டுவிதமான அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை. அதனால் அந்த வாக்யத்திலுள்ள பதங்களைக்கொண்டு 'யாகம்' என்ற பதத்திற்கு குணத்துடனும் பலத்துடனும் ஸம்பந்தமிருப்பதாகச் சொல்வதற்கேமுடியாது. மேலும் வாக்யங்கள் இரண்டு இருக்குமானால்தான் க்ரமமாக தெரிவிக்கிறது என்று சொல்லலாம். அவ்விதம் இரண்டு வாக்யங்கள் இல்லாமல் ஒரே வாக்யம் க்ரமமாக இரண்டு அர்த்தங்களை தெரிவிப்பதாகச் சொல்லப்படுமானால், வாக்யபேதம் என்ற தோஷம் ஏற்படும் என்று வேதார்த்தங்களை அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகின்றது.

**462 அவதாரிகை :**

இந்தவிதம் விசாரிக்கப்பட்ட ந்யாயத்தைக்கொண்டும் ஆத்ம ஞானத்தில் விதி ஸம்பவிக்கமுடியாது என்று சொல்லப்பட்டது. இந்த காரணத்தினால் உபநிஷத்வாக்யங்களெல்லாம் 'கேவல ஆத்ம வஸ்து மாத்ர போதகம்' என்றே சித்தம் செய்யப்பட்டதால், இந்த விஷயம் ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

इति वाजपेयगतनीतिवशादपि नाऽऽत्मवस्तुविषयावगतौ ।
विधिरस्ति तेन विधिशून्यतया परमात्मवस्तुविषयोपनिषत् ॥

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் வாஜபேய வாக்யத்தில் சொல்லப்பட்ட ந்யாயத்தினால் ஆத்மஞான விஷயத்திலும் விதி ஸம்பவிக்கமுடியாது. ஆகவே, விதி என்பது ஸம்பவிக்கமுடியாததால் உபநிஷத்தின் தாத்பர்யம் என்பது பரமாத்ம வஸ்துவேயாகும்.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட ந்யாயத்தைக்கொண்டு ஆத்ம ஞானத்தில் விதி ஸம்பவிக்கமுடியாது என்று சித்தம் செய்யப்பட்ட பிறகும், இதை ஒத்துக்கொள்ளாமல் ஆத்ம ஞானத்தில் விதி இருப்பதாகச் சொல்லப்படுமானால் விருத்தமான த்ருக த்வய தோஷம் ஸம்பவிக்கின்றது என்பதை த்ருஷ்டாந்தத்தைக் கொண்டுவிளக்கப்பட்டது. ஆகவே இந்த விஷயம் முடிவை அடைகிறது.

**463. அவதாரிகை :**

உபநிஷத் வாக்யங்கள் எல்லாமே நிர்விசேஷமான ஆத்மஸ்ரூபத்தையே போதிக்கின்றது என்று எப்படி சொல்லமுடியும்? உபநிஷத்துக்களில் ஸகுண வித்யை, நிர்க்குண வித்யை என்று இரண்டுவிதமான வித்தைகளையும் அதன் பலன்களையும் வெவ்வேறுக தெரிவிக்கின்றது என்பது ப்ரஸித்தம். ஆகவே, ஸர்வ உபநிஷத்துக்களும், நிர் விசேஷமான ஆத்மதத்வத்தை போதிப்பதில்தான் ஸமன்வயத்தை அடைகின்றது என்பதால், ஏக வாக்யத்வம் என்று சொல்வது எப்படி பொருந்தும்?

**ச்லோகம் :**

सगुणवाक्यमपीह समन्वितं भवति निर्गुणवस्तुनि सर्वशः ।
न खलु निर्गुणवस्तुसमन्वयं न सहते सगुणस्य समन्वयः ॥

**ச்லோகார்த்தம் :** ஸகுண வாக்யங்கள் எல்லாமே இந்த நிர்க்குணவஸ்துவிலேயே ஸமன்வயத்தை அடைகின்றது. ஸகுண வஸ்துவில் ஸமன்வயத்தை அடைகின்ற ஸகுண வாக்யங்கள் நிர்க்குண வஸ்துவில் ஸமன்வயிக்கின்றது என்பதில் விரோதம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** இதுவரை ஆத்மதத்வஞானம் விதி பரம் என்று சொல்லப்பட்ட பக்ஷத்தை நிராகரணம் செய்யப்பட்டது. ஆயினும் உபநிஷத்துக்களில் ஸகுண ப்ரஹ்ம பரமான வாக்யங்களும் அதன் பலன்களும் வெவ்வேருகச் சொல்லப்படுகின்றதால் மானஸக்ரியையான உபாஸனையை விதிக்கின்றது என்று தானே சொல்லவேண்டும்? ஆகையால் வேதாந்தத்தில் விதி பரமான வாக்யமே கிடையாது என்றும் எல்லா வாக்யங்களும் நிர்விசேஷமான, நிர்க்குணப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் ஸமன்வயத்தை அடைகிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? என்று வேதாந்த மதத்தைச் சேர்ந்தவர்களிலேயே ஒரு சிலரால் இவ்விதம் ஆக்ஷேபிக்கப் படுகிறது. இந்த ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

ஸகுண வாக்யங்கள் எல்லாமே நிர்க்குண ப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையதாக இருக்கின்றது. இரண்டிற்கும் பலபேதம் இருப்பதாகவே சொல்லமுடியாது. ஏனெனில், பலம் என்ருலே, மோக்ஷம் என்ற ஒன்றைத் தான் பலம் என்று சொல்லமுடியும். ஸகுண உபாஸனுபலமாகச் சொல்லப்படும் ஐஸ்வர்யாதிகளை பலம் என்று சொல்வதற்கேமுடியாது. அந்த பலன்கள் எல்லாம். பல ஆபாஸமேயன்றி பலமென்று சொல்லமுடியாது. அதேபோல் ஸகுண ப்ரஹ்ம விஷயத்தில் சொல்லப்படும் ஸர்வஞ்ஞத்வாதி குணங்கள் என்பதும் அறியப்படவேண்டிய விஷயமாக இல்லாததால், அவைகள் எல்லாம் ப்ரமேய ஆபாஸம் என்றே சொல்லவேண்டும். ஆகவே மோக்ஷரூபமான புருஷார்த்தம் என்பதே வாஸ்த்தவமான பலன் என்பதாலும், நிர்க்குணவஸ்து பரமான (ஐக்யபோதக) வாக்யமே முக்யம் என்பதாலும், ஸகுண ப்ரஹ்ம வாக்யங்களும் நிர்க்குணத்தை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையது என்பதால் எல்லா வாக்யங்களும் நிர்விசேஷ ப்ரஹ்மத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

ஸகுண உபாஸனுபலன்களாகச் சொல்லப்படும் ஸ்வர்க்காதிகள் ஸத்யமாக இல்லாததால் பலபேதம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே வாஸ்த்தவ பலமான மோக்ஷத்திற்கு அனுகூலமாகவே மற்ற வாக்யங்களுக்கும் ஸம்பந்தம் சொல்லப்படவேண்டியது அவஸ்யம். ஆகையால் வேதாந்தத்திலுள்ள ஸகுணவாக்யங்களுக்கு அவாந்தர தாத்பர்யம் என்றும், நிர்க்குணவாக்யங்களுக்கே மஹாதாத்பர்யம் என்றும் சொல்லப்படவேண்டும், அதாவது, ஸகுண ப்ரஹ்ம உபாஸனையானது சித்த சுத்தி த்வாரா, மோக்ஷமென்ற பலனுக்கு ஸாதனமாகிறது என்பதால், ஸகுணஸ்வ ரூபத்திலும் ஸமன்வயம் சொல்லலாம் என்பதால் அவாந்தர தாத்பர்யம் ஸகுணவாக்யங்களுக்கு சொல்லலாம் நிர்க்குணவஸ்துவில்தான் மஹாதாத்பர்யம் என்று அங்க அங்கிபாவேன ஸமன்வயம் சொல்லலாம். ஆகவே ஸகுண வாக்யங்களுக்கு, குணங்களிலோ உபாஸனத்திலோ அதன் பலன்களிலோ அவாந்தர தாத்பர்யம்தான் இருக்கிறதேயன்றி முக்யதாத்பர்யமில்லை நிர்க்குணவஸ்துவை தெரிவிப்பதில்தான் முக்யதாத்பர்யம் உடையதாக இருக்கிறது என்பதே இதன் சாரமாக அறியப்படுகின்றது. ஆகவே வேதாந்த வாக்யங்கள் எல்லாமே நிர்விசேஷ ப்ரஹமதத்வத்தையே போதிப்பதில் ஸமன்வயத்தை அடைகின்றது என்பதால் ஏகவாக்யத்வம் என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை.

**464. அவதாரிகை :**

எப்படி ஸகுணவாக்யமானது நிர்க்குணவாக்ய ஸமன்வயத்தை ஸஹிக்கின்றது என்றால்,

**ச்லோகம் :**

सत्यासत्यवपुस्तथा हि सगुणं ब्रह्मास्य विद्या तथा तद्वत्तद्विषयस्य वेदवचसस्तात्पर्यमेवंविधम् ।
तेनावान्तरमस्य वेदवचसस्तात्पर्यमन्यादृशं चान्यन्निर्गुणवस्तुतत्त्वविषयं संकीर्त्यते भागशः ॥

**ச்லோகார்த்தம் :** ஸத்யம் அஸத்யம் என்ற இரண்டு சேர்ந்ததே ஸகுண ப்ரஹ்மம். அதேபோல், ஸகுண ப்ரஹ்மஞானம் என்பதும், இரண்டும் சேர்ந்ததுதான். அதேபோல் ஸகுண ப்ரஹ்ம விஷயமான வேதவாக்யங்களுடைய தாத்பர்யமும் இதுவேயாகும். ஆகவே வேதவாக்யங்களின் அவாந்தர தாத்பர்யம் ஒருவிதம் இருக்கும். முக்ய தாத்பர்யம் நிர்க்குண வஸ்து விஷயமாக இருக்கும் என்று இரண்டு பாகமாகச் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** நிர்க்குண வாக்யமே மஹாதாத்பர்யம் என்றும், ஸகுணவாக்யம் அவாந்தர தாத்பர்யம் என்றும் விபாகம் செய்து தெரிவிப்பதற்கு என்ன காரணம் என்றால், ப்ரஹ்மமென்பது ஸ்வரூபத: உண்மையில் நிர்க்குணம் அதுவே ஸத்யம். இந்த ப்ரஹ்மமே, அவித்யை அதன் கார்யமான குணங்கள் என்ற உபாதியுடன்கூடி அறியப்படுகின்றபோது அதை ஸகுண ஸ்வரூபம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ஸ்வரூபத: ஸத்யம், குணங்கள் என்ற உபாதிவஸாத் (மித்யை) அஸத்யம். இவ்விதம் ஸத்யா ஸத்யஸ்வரூபத்தை தெரிவிக்கின்ற வாக்யம் ஸகுண வாக்யம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் ஸகுணத்தை தெரிவிக்கின்ற சில வாக்யங்கள் ஸர்வ கர்மாக்களும் ஸர்வகாமங்களும், ஸர்வகந்தமும் வாக் பாதம் பாணி ப்ராணாதிகளுடனும் திக் முதலான எல்லாவற்றுடனும் கூடி இருப்பதாக தெரிவிக்கின்றது. எதனுடனும் ஸம்பந்தப்படாததும் நிரவயவமானதும் அஸங்க கூடஸ்த்த ஸ்வரூபத்திற்கு, இயற்கையாக பாதாதி விசேஷணங்கள் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே குணங்களுடன்கூடிய வஸ்துவை உபாஸனத்திற்காக தெரிவிக்கப்படுவதால் அந்த வாக்யங்கள் அவாந்தர தாத்பர்யத்து

டனேயே வேதவாக்யங்கள் போதிக்கின்றது. இந்த வாக்யங்களை ஸகுணவித்யை என்று சொல்லப்படுகிறது. ஸகுண ப்ரஹ்மமானது ஸத்யாஸத்யவபு: என்று சொல்லப்படுகின்றது. இந்த ஸகுணவாக்யமும், ஸகுண ஸ்வரூபம் எப்படி இருக்கின்றதோ அப்படியே போதிக்கின்றதாலும் வஸ்து எப்படி இருக்கின்றதோ அப்படியே ஞானம் ஏற்படுவதாலும், ஸகுண ப்ரஹ்ம போதகமான வேதவாக்யமும் ப்ராமாண்யம் என்றே அறியவேண்டும். ஆகவே ஸகுண வாக்யத்திற்கு அவாந்தர தாத்பர்யம் என்றும் நிர்க்குண வாக்யத்திற்கே மஹாதாத்பர்யம் என்றும் சொல்லவேண்டும். நிர்க்குண வஸ்துவை போதிக்கின்ற வாக்யம்தான் ஏகரஸமான ப்ரஹ்மத்தை போதிக்கின்றது. அதுவே பரமார்த்தமான விஷயம்.

**பூர்வ :** ஸகுண வாக்யம் ஒரு அர்த்தத்தையும் நிர்க்குணவாக்யம் வேறு ஒரு அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது என்றால், வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றதே?

**சித்தா :** ஸகுண ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற ப்ரகரணத்தில் உள்ள, உபாஸனாபரமான வாக்யங்களுக்கும் நிர்க்குண ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற ப்ரகரணத்திலுள்ள உபாஸனாபரமான வாக்யங்களுக்கும் உபாஸனாக்ரியையை தெரிவிப்பதில் தாத்பர்யமில்லை. அத்யாரோபிதமான விஷயங்களை அபவாதம் செய்வதற்காகவே நிஷேத்யமான குணங்களை தெரிவிக்கின்றது. இவ்விதம் விசிஷ்டமான ஸ்வரூபமானது ஸகுண வாக்யத்தினால்தான் அறியப்படுகிறது. வேறு எந்த ப்ரமாணத்தினாலும் ப்ரஹ்மமானது ஸர்வஞ்ஞத்வாதி குணங்கள் உடையதாக அறியப்படவில்லை. ஆகையால் விசிஷ்ட ஸ்வரூபவாக்யமும் தாத்பர்யமுடையது என்றே அறியப்படவேண்டும். விசிஷ்டம் என்றாலே, விசேஷ்யத்துடன் கூடியதாகவே இருக்குமானதால் விசிஷ்ட விஷயம் ஸ்வரூப விஷயம் என்ற இரண்டு தன்மைகளும் அதில் இருக்கின்றது. ஆகவே விசிஷ்ட விஷயத்தில் அவாந்தர தாத்பர்யம் என்றும் ஸ்வரூப விஷயத்தில் மஹாதாத்பர்யம் என்றும் ப்ரகரணவிபாகம் செய்து வேத வாக்யங்கள் தத்வத்தை போதிக்கின்றது என்று அறிந்துகொள்ளவேண்டும்.

**465. அவதாரிகை :**

ஸகுண வாக்யமானது ஸத்யாஸத்யம் என்ற இரண்டையும் விஷயீகரிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்? ஸத்யம் அஸத்யம் என்ற இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கின்றதால் ஸத்யாஸத்ய விசிஷ்ட புத்தி எப்படி ஏற்படமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

रूप्यज्ञानं रजतमिदमित्येवमुत्पद्यमानं सत्यासत्यं विषयमपृथग्दर्शयत्येकमेव ।
तद्वन्मानं सगुणविषयं सत्यमिथ्यावभासं संसृष्टार्थद्वयमिति दृढं दर्शयत्येकमेतत् ॥

**ச்லோகார்த்தம் :** 'இது வெள்ளி' என்று ஏற்படும் ஏகமான வெள்ளி ஞானத்தில், ஸத்யம் அஸத்யம் என்ற இரண்டு விஷயங்களும் ஒன்றாகவே அறியப்படுகிறது. அதேபோல், ஸத்யம் மித்யை என்ற இரண்டு விஷயங்களையும் தெரிவிக்கின்ற ஸகுண வாக்யங்களும் விசிஷ்டார்த்தத்தையே ஸ்பஷ்டமாக தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** கிளிஞ்சலைப் பார்த்து, 'இது வெள்ளி' என்று ப்ராந்திஞானம் ஏற்படும் இடத்தில், இது என்ற இதமம்ஸம் அதிஷ்டானம். இந்த அதிஷ்டான

அம்ஸம்ஸத்யம். இதில் ஆரோபிதமான வெள்ளி என்ற அம்ஸம் அஸத்யம். இவ்விதம் ஸத்யமான வஸ்து அஸத்யமான வஸ்து இரண்டும் சேர்ந்து 'இது வெள்ளி' என்று ஒன்ருகவே ஞானம் ஏற்படுகிறது. இவ்விதம் ஏற்படும் ஞானம் ஒன்ருக இருந்தபோதிலும் அதில் ஸத்யம் மித்யை என்ற இரண்டும் சேர்ந்தே ப்ரகாசிக்கின்றதால் புத்தியினுல் இதம் ரஜதம் என்று இரண்டையும் சேர்த்தே க்ரஹிக்கப்படுகிறது. இதேபோல் ஸகுண வாக்யத்தினுலும் ஸத்யம் மித்யை என்ற இரண்டும் சேர்ந்து ஒரே ஞானம் ஏற்படலாமே?

**பூர்வ :** சுத்தியில் ரஜத ஞானம் என்பது ப்ராந்திஞானம். அதேபோல் ஸகுண வாக்யமும் ஸத்யம் + மித்யை என்ற இரண்டையும் தெரிவிக்கின்றது என்ருல் ஸகுணவாக்யம் என்பது அப்ராமாண்யம் என்று சொல்லநேரிடும்?

**சித்தா :** இதம் ரஜதம் என்று ஏற்படும் ஞானம் ப்ராந்திஞானம். ஸகுணவாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானம் வ்யாவகாரிக வஸ்துஞானம் ஆரோபிதமான ரஜதம் ப்ராதிபாஸிகம் ஸகுணவாக்யத்தினுல் அறியப்படும் ஸர்வஞ்ஞத்வாதி குணங்கள் வ்யாவஹாரிகம். ஆகவே குணவிசிஷ்ட்டமாகச் சொல்லப்படும் ஸ்வரூபம் வ்யாவஹாரிக ஸத்யத்வம் உடையதாக இருக்கின்றது. ஆகவே ப்ரஹ்மத்தில் பாரமார்த்திகமாக இல்லையென்பதால் மித்யாத்வம் சொல்லப்பட்டபோதிலும் சுத்திரஜதம் போல் ப்ராதிபாஸிகமில்லை. வேதம் பூராவிற்கும் வ்யாவகாரிக ப்ராமாண்யம் உண்டு. ஆகவே குணம் என்பதற்கும் வ்யாவகாரிக ப்ராமாண்யம் உண்டு. எப்படி விதி வாக்யங்கள், வ்யாவகாரிகமான தர்மா தர்மங்களை போதித்த போதிலும் அதற்கு ப்ராமாண்யம் உண்டோ, அதேபோல் ஸகுண வாகயத்திற்கும் ப்ரமாண்யம் உண்டு. ஆகவே ப்ரத்யக்ஷப்ரமாணங்களால் அறியப்படும் கடபடாதி வஸ்துக்களுக்கும் தர்மாதர்மங்களை போதிக்கின்ற விதி வாக்யங்களுக்கும் எப்படி வ்யாவஹாரிக ப்ராமாண்யம் உண்டோ அதுபோல், உபாஸனுபரமான ஸகுண விஷயத்திற்கும் வ்யாவஹாரிக ஸத்யத்வம் உண்டு. ஆனுல் தத்வத்ருஷ்ட்டியில் இவைகளுக்கு ப்ராமாண்யம் கிடையாது.

நிர்விசேஷமான ப்ரஹ்மதத்வத்தை போதிப்பதற்கு உபாயமாக ஸகுண ஸ்வரூபத்தை போதிக்கின்றது என்பதுதான் வேதாந்த சித்தாந்தம். ஆகவே ஸகுணவாக்யமும் நிர்க்குண ஸ்வரூபத்தை போதிப்பதில் தான் மஹாதாத்பர்யம் என்பதால் ஸகுணவாக்யம் நிர்க்குண வாக்யத்தில்தான் பர்யவஸானத்தை அடைகிறது.

**466. அவதாரிகை :**

விசிஷ்ட்டவிதி என்று சொல்லப்படுகின்ற இடத்தில் இரண்டுவிதமான தாத்பர்யம் இருப்பதாக அறியப்படாததால், குணவிசிஷ்ட்டமான ஸகுணத்தை போதிக்கின்ற வாக்யத்திற்கு, குணவிசேஷணத்திலும் தாத்பர்யம் குணவிசேஷ்யத்திலும் தாத்பர்யம் என்று சொல்லப்படுவது பொருந்தாது. ஏனெனில், வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபம் செய்வதற்கு முடியாது.

**ச்லோகம் :** तद्बुद्धिमात्रफलतैव च तत्परत्वं वेदान्तवादिसमये न तु शेषभावः ॥
शेषत्वमक्षरकलापगताप्तिमात्रं प्रत्येव नाध्ययनमर्थधियो विशेषः ॥

**ச்லோகார்த்தம் :** ஒரு வாக்யமானது தன்னுடைய அர்த்த ஞானத்தை பலமாகக் கொண்டிருப்பதே அந்த வாக்யத்தின் தாத்பர்யம் என்று சொல்லப்படுகிறது. தன்னுடைய அர்த்தத்திற்கு அங்கமாக இருப்பது தாத்பர்யம் இல்லை. அத்யயனம் என்பது வேதத்தை மனப்பாடம் செய்வதற்கு அங்கமாகுமேயன்றி அர்த்தத்தை அறிவதற்கு அங்கமாகாது.

**வ்யாக்யானம் :** ஸகுணவாக்யம் என்பது ஸத்யாஸத்ய உபயாத்மகம் என்று சொல்லப்படுவதால், அந்த வாக்யம் ப்ராமாண்யமில்லை என்று சொல்லமுடியாது என்பதை கீழே சொல்லப்பட்டது.

**பூர்வ :** இவ்விதம் ஒரே வாக்யம் இரண்டுவிதமான விஷயங்களை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. அதுமட்டுமல்ல இரண்டுவித தாத்பர்யம் உடையதாகவும் அறியப்படவில்லை.

**சித்தா :** இவ்வித ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில், மீமாம்ஸகர்களைப்போல் தத்ப்ரதீதிஸேஷத்வம் தாத்பர்யம் என்று சொல்லப்படாததால் இவ்வித தோஷங்கள் ஸம்பவிக்கமுடியாது.

ஸகுண வாக்யங்களுக்கு, ஸகுண ப்ரஹ்ம விஷயத்தை தெரிவிப்பதில் முக்யதாத்பர்யமில்லையென்றும் அதனுல் அவாந்தர தாத்பர்யம் தான் என்றும் சொல்லப்படுகிறது. நிர்விசேஷ ப்ரஹ்மத்தை தெரிவிப்பதில்தான் மஹாதாத்பர்யம் என்றும் சொல்லப்படுவதால் இதில் எந்தவிதமான தோஷமும் கிடையாது.

**பூர்வ :** ஒரே வாக்யமானது இரண்டு விதமான தாத்பர்யமுடையது என்று சொல்லப்படுமானுல் விசிஷ்ட்டம், விசேஷ்யம் என்ற இரண்டிலும் தாத்பர்யமுடையது என்று சொல்லப்படுகிறதா?அல்லது விசேஷ்யத்தில் மட்டும் தாத்பர்யம் உடையது என்று சொல்லப்படுகிறதா? முதல் பக்ஷமான விசிஷ்ட்டத்தில்தான் இரண்டுவித தாத்பர்யம் என்று சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஏற்படும். 'ஸோமேன யஜேத' என்ற விசிஷ்ட்டவிதி வாக்யம், ஸோமத்தையும் விதிக்கிறது, யாகத்தையும் விதிக்கிறது என்று சொல்லமுடியாது. இதில் விசேஷணத்திலோ விசேஷ்யத்திலோ தாத்பர்யம் இருப்பதாக இரண்டையும் வேறுபடுத்தி அர்த்தம் சொல்லப்படுவதில்லை, வேறுபடுத்தி அர்த்தம் செய்யப்படுமானுல் விசிஷ்ட்டவிதி என்றே சொல்லமுடியாது. இதேபோல் ஸகுண ப்ரஹ்மவாக்யமும் உபாஸனத்தையும் அதன் பலனையும் தெரிவிக்கிறது என்று அர்த்தம் சொல்லவேண்டுமேயன்றி அதற்குமேல் அதில் அர்த்தம் சொல்வது பொருந்தாது. 'ஸோமேன யஜேத' என்ற விசிஷ்ட்டவிதியானது விசேஷணமான ஸோமத்தை மட்டும் தெரிவிக்கிறது என்றோ விசேஷ்யமான யாகத்தைமட்டும் தெரிவிக்கிறது என்றோ சொல்லப்படுமானுல் அதை விசிஷ்ட்ட விதி என்றே சொல்லமுடியாது. ஆகவே இரண்டையும் சேர்த்தே தாத்பர்யம் சொல்லப்படவேண்டும்.

**சித்தா :** ஸகுண ப்ரஹ்ம வாக்யமானது, 'ஸோமேன யஜேத' என்பதுபோல் விசிஷ்ட்டவிதி வாக்யமில்லை. மேலும் மீமாம்ஸகர்களைப்போல் 'தத்ப்ரதீதிஸேஷத்வம் தாத்பர்யம்' என்று சொல்லப்படவில்லை. அதனுல் எந்தவிதமான தோஷத்திற்கும் இடமில்லை. ஸகுண பரமான வாக்யங்களுக்கு, ஸகுணத்தை போதிப்பதில் முக்யதாத்பர்யமில்லை. அவாந்தர தாத்பர்யம்தான் என்றும், நிர்விசேஷ ப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் முக்ய தாத்பர்யம் என்றும் சொல்லப்படுகிறது. ஸகுணவாக்யங்கள் மஹாதாத்பர்யமாக நிர்விசேஷத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதற்காக ஸ்குண உபாஸனையோ அதன் பலனே ஏற்படாது என்று சொல்லப்படவில்லை. ஸகுண வாக்யம், ஸகுணப்ரஹ்ம உபாஸனையை அவாந்தர தாத்பர்யத்துடன்தான் போதிக்கின்றது என்றுலும் அந்த உபாஸனையை பலாபேக்ஷை இல்லாமல் செய்தால் சித்தசுத்தி என்ற பலனும், பலாபேக்ஷையுடன் செய்தால் ப்ரஹ்மாதி லோகப்ராப்தியும் சித்திக்கும் என்பதில் யாதொருவிதமான ஸந்தேகத்திற்கும் இடமில்லை. இதே ஸகுணப்ரஹ்மமானது, தத்வத்ருஷ்டியைக் கொண்டு

அறியப்படுகின்றபோது. மோக்ஷமென்ற பலன் சித்திக்கின்றது என்று சொல்லப்படுவதால் இரண்டுவிதமான தாத்பர்யம் உடையது என்று சொல்வதில் எவ்வித தோஷமும் கிடையாது. இவ்விதம் பலன்கள் அனேகவிதமாக இருந்தாலும் வாக்யமானது ஒரு அர்த்தத்தைத்தான் மஹாதாத்பர்யத்துடன் போதிக்கின்றது என்பதால் விசேஷணத்தில் அவாந்தர தாத்பர்யம்தான் என்று சொல்லப்படுவதாலும் அந்தந்த பலவிசேஷணங்களும் ஏற்படலாம் என்று சொல்லப்படுவதாலும் இதில் எந்தவிதமான விரோதத்திற்கும் இடமில்லை.

**பூர்வ :** 'தத் ப்ரதீதிஸேஷத்வம் தாத்பர்யம்' என்று மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. அதாவது "ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: என்ற வாக்யத்தினுல் அத்யயனம் என்பது அர்த்த ஞானத்திற்கு அங்கம் (ஸேஷம்) என்று சொல்லப்படுகிறது. ஆகையால் ஸேஷத்வம் தாத்பர்யமில்லை என்று எப்படிச் சொல்வது? அவ்விதம் சொல்லப்படுமானுல் அத்யயனம் செய்யவேண்டும் என்று விதிப்பதாக எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** மீமாம்ஸகர்களால் சொல்லப்படும் இந்த விஷயத்தை வேதாந்திகளான நாங்கள் ஒத்துக்கொள்வதில்லை. ஸ்வாத்யாயோ அத்யே தவ்ய: என்ற விதிவாக்யமானது அத்யயனம் என்பதையே விதிக்கின்றது. அதாவது குருமுகமாக உச்சாரணம் அனுச்சாரணம் செய்யவேண்டுமென்பதே அதன் அர்த்தம். அக்ஷர க்ரஹணம் என்பதே அத்யயனம். அத்யயனத்திற்குப் பிறகு கர்மாக்களை அனுஷ்ட்டிக்கப்படவேண்டியிருப்பதால் அதன் அர்த்தங்கள் அறியப்படவேண்டும் என்பது அன்யதா அனுபபத்தியினுல் கிடைக்கின்ற அர்த்தமேயன்றி விதிவாக்யத்தினுல் இந்த அர்த்தம் கிடைக்கவில்லை. அதாவது அத்யயனவிதி அர்த்தஞானத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று தெரிவிக்கவில்லை.

ஆகவே ஒரு வாக்யமானது எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அந்த அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய சக்தி அந்த வாக்யத்தில் இருப்பதாகச் சொல்லவேண்டும். ஒரு வாக்யமானது அவாந்தர தாத்பர்யமாக ஒரு அர்த்தத்தையும் மஹாதாத்பர்யமாக வேறு ஒரு அர்தத்தையும் தெரிவிப்பதில், எந்த விரோதமும் இல்லை. ஒரே தாத்பர்யத்தில் இரண்டுவிதமான அர்த்தம் சொல்லப்பட்டால் தான் விருத்தம். ஆகவே இதனுல் வாக்யபேதம் என்ற தோஷமும் ஏற்படாது. இந்தவிதம் சொல்லப்படும் வேதாந்த சித்தாந்தத்தை ஒத்துக்கொள்ளாமல், யதாச்ருதமான அர்த்தத்தைவிட்டு தத்ப்ரதீதிஸேஷத்வம் தாத்பர்யம் என்று அர்த்தம் செய்வதற்கு ப்ரமாணம் ஏதுமில்லை. ஆகையால் அவாந்தர தாத்பர்யத்தில் பலன் ஒன்று மஹாதாத்பர்யத்திற்கு பலன் ஒன்று என்று சொல்வதில் விரோதம் ஏதுமில்லை.

**467. அவதாரிகை :**

மீமாம்ஸகர்களால் சொல்லப்படுவதுபோல், அத்யயனம் என்பது அர்த்தஞானத் திற்கு ஸேஷம் என்று சொல்லப்படவில்லையானுல், அர்த்தஞான பர்யந்தம் அத்யயனம் செய்யவேண்டுமென்ற விஷயம் எப்படி அறிந்து கொள்ளமுடியும்? என்ருல்,

**ச்லோகம் :** तच्छेषभावमनपेक्ष्य च तत्फलं स्यादाधानवन्न हि तदङ्गमिह क्रतूनाम् ।
अग्न्यङ्गमेव हि तदिष्टमथापि तस्य सर्वक्रतुष्वधिकृतिः फलमभ्युपेतम् ॥

**ச்லோகார்த்தம் :** வேதாத்யயனம் என்பது ஆதானம்போல் அர்த்தஞானத்திற்கு அங்கமாக இல்லாமல், அர்த்தஞான பலத்தையுடையது என்று சொல்லலாம். ஆதானம் என்பது யாகங்களுக்கு அங்கமாக ஆகாது. அக்னி என்பதற்கே அங்கமாக

ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனாலும் அந்த ஆதானத்தினுடைய பலமானது எல்லா யாகங்களையும் செய்வதற்கு அதிகாரம் என்று ஒத்துக்கொள்ளப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அத்யயன விதியானதுஅர்த்த ஞானத்திற்கு ஸேஷம் என்றும் அதுவே தாத்பர்யம் என்றும் சொல்லாவிட்டால், அத்யயனத்திற்கு, அர்த்தஞானம், பலம் என்பது சித்திக்காது என்று சொல்வது சரியல்ல. அத்யயன விதிக்கு அர்த்தஞானம் ஸேஷமாக இல்லாவிட்டாலும் அதற்கு பலம் உண்டு என்பதை உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது. ஒன்றை மற்றொன்றுக்கு அங்கம் என்று சொல்லப்படவேண்டுமானால், ச்ருதி லிங்க, வாக்ய, ப்ரகரண, ஸ்தான, ஸமாக்யா என்ற ஆறு ப்ரமாணங்களைக் கொண்டே இந்த அங்கிக்கு, இது அங்கம் என்று தீர்மானிக்கப்படவேண்டும். இந்தவிதம் அத்யயனம் என்பது, அர்த்தஞானத்திற்கும் அங்கம் என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை. அதனால் அத்யயனம் அர்த்தஞானத்திற்கு ஸேஷம் என்று சொல்லமுடியாது. ஆனால் அத்யயனம் அர்த்த ஞானம் என்பதை பலமாகக் கொண்டிருக்கிறதென்று சொல்லலாம். ஏனெனில் வேதசப்தமாத்ரம் புருஷார்த்தமல்ல. அதில் சொல்லப்படும் கர்மாக்களை அனுஷ்ட்டிப்பதானால்தான் புருஷார்த்தம் என்பதால் அத்யயனம் என்பது சப்தக்ரஹண மாத்ரமின்றி அதன் அர்த்தபர்யந்தம் ஸம்பந்தம் இருக்கின்றது என்று சொல்லலாம்.

வைதிக கர்மாக்களில் உபயோகிக்கப்படும் அக்னியானது மந்த்ரபூர்வகமாக சுத்தி செய்யப்பட்டு ஹோமாதிகளைச் செய்ய தகுதி உடையதாகச் செய்யவேண்டுமென்று வேதம் விதிக்கின்றது. இதை அக்னி ஆதானம் என்று சொல்லப்படும். இந்த ஆதானம் என்பது அக்னிக்குத்தான் அங்கமே தவிர அந்த கர்மாவிற்கு ஆதானம் அங்கமென்று சொல்லமுடியாது. (அவஸ்யமில்லை) வ்ருஹீன் ப்ரோக்ஷதி என்ற இடத்தில் ப்ரோக்ஷணம் வ்ருஹிக்கு அங்கம் என்பதுபோல் கர்மாவிற்கு அக்னி அங்கமாக இருக்கின்றதால் அந்த அக்னியுடன் ஆதானத்திற்கு ஸம்பந்தம் இருக்கின்றதால் ஆதானம் என்பது அக்னிக்கு அங்கமாக இருந்தாலும் கர்மாவிற்கும் அங்கமாக ஆகின்றது. அக்னி என்பது மந்த்ரபூர்வகமாக ஆதானம் செய்யப்படுவதற்குமுன்பு இது ஆஹவனீயம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்னி, என்ற ஸ்வரூபமே அக்னிக்கு ஏற்படாது. அக்னி ஆதானம் செய்தால்தான் க்ரதுவிற்கு அக்னியென்பது உபகாரகமாக ஆகின்றது. ஆகவே இந்த முறையில் கர்மாவிற்கு ஆதானத்துடன் ஸம்பந்தம் இருக்கிறது. 'யஸ்யபர்ணமயி ஜுஹுர்பவதி' என்ற வாக்யமானது புரசஇலையினால் செய்யப்பட்ட பாத்ரவிசேஷத்தில் நெய்யை விட்டு ஹோமம் செய்யப்படுமானால் அதற்கு இன்னபலம் என்று எப்படி சில பல விசேஷங்கள் சொல்லப்படுகிறதோ (பர்ணமயி என்பதற்கு எப்படி நேரிடையாக கர்மாங்கத்வம் சொல்லப்படுகிறதோ) அதுபோல் ஆதானம் என்பதற்கு கர்மாங்கத்வம் கிடையாது. வேறு பலாந்தரம் சொல்லப்படாததால் ஆதானம் என்பது அக்னி என்பதற்கே அங்கம் என்று சொல்லவேண்டுமேயன்றி க்ரதுவிற்கு அங்கமென்று சொல்லமுடியாது.

**பூர்வ :** க்ருதுவிற்கு ஆதானம் அங்கம் என்று சொன்னால்தான் ஆதானம் விசேஷம் என்றாகும். அவ்விதமின்றி ஆதானம் அக்னிக்கு அங்கமென்றால் ஆதானம் நிஷ்ப்பலம் என்றாகுமே?

**சித்தா :** அக்னி ஆதானம் என்பதற்கு தனியாக எந்த பலனும் கிடையாது என்ற போதிலும், அக்னி ஆதானம் என்ற க்ரியையைச் செய்தவர்களுக்கே வைதிக கர்மாக்களில் அதிகாரம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ஆதானம் என்பதற்கு பலம்

உண்டு. ஆதானம் செய்யப்பட்ட அக்னிதான் ஆஹவனீயம் என்று சொல்லப்படும். ஆஹவனீய அக்னியென்பதே யாகம் என்ற கர்மாவிற்கு அவஸ்யம் தேவை. 'அக்னீனுததீத' என்ற வாக்யம், கர்மாவிற்கு உபயோகமாகின்ற அக்னி, ஆதானம் செய்யப்பட வேண்டுமென்று தெரிவிக்கின்றது. ஆகவே ஆதானம் செய்யப்பட்ட அக்னி, யாகாதி கர்மாக்களில் உபயோகப்படுகிறது என்ற முறையில் பரம்பரையாக கர்மாவிற்கு ஆதானம் அங்கமாகிறது என்று சொல்லலாம், நேரிடையாக அக்னியென்பதற்கே ஆதானம் அங்கம் என்று சொல்லப்படவேண்டும். அதுபோல் அத்யயனம்மூலம் அர்த்த ஞானத்தினுல் கர்மாவை செய்வதற்குரிய அதிகாரித்வம் ஸம்பவிக்கின்றது என்ற காரணத்தினுல் அர்த்த ஞானபர்யந்தம் அத்யயன விதிக்கு அர்த்தம் சொல்லப்படுகிறது. அதனுல் அத்யயனம் என்பது அர்த்த ஞானத்திற்கு ஸேஷம் என்று சொல்லமுடியாது. அத்யயனத்தினுல் ஏற்படும் கேவல சப்தக்ரஹணத்தினுல் மட்டும் புருஷார்த்தம் சித்திக்காது என்பதால் அர்த்த ஞானபர்யந்தம் என்று சொல்லப்படுகிறதால் பரம்பரையாக அங்கமென்று சொல்லலாமேயன்றி நேரிடையாக அங்கம் என்று சொல்லமுடியாது.

**468. அவதாரிகை :**

**பூர்வ :** 'ததர்த்தபோதகத்வம் தத்பரத்வம்' என்று சொல்லப்படுமானுல், அர்த்தவாதம் என்பதும் மந்த்ரங்களும் அந்தந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதால், அவைகளையும் ஸ்வதந்தரமாக ப்ரமாணம் என்று சொல்லநேரிடுமே? ஏனெனில் தத்பரத்வம்தானே ப்ராமாண்யத்திற்கு காரணம் என்று சொல்லப்படுகிறது?

**சித்தா :** இது சரியல்ல. மந்த்ரம் அர்த்தவாதம் என்பவைகளை அறிவதால் மட்டும் ப்ரமாண மென்று சொல்லமுடியாது பலவத் அர்த்தபோதகத்வம் தாத்பர்யம் என்று சொல்லப் படுவதால் மந்த்ரம் அர்த்தவாதங்களுக்கு ஸ்வதந்த்ரப்ராமாண்யம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

मन्त्रार्थवादगतमध्ययनं तदर्थमात्रप्रतीतिफलमित्यपि नाभ्युपेतम् ।
विध्यर्थबुद्धिमनुसृत्य फलावसानां सा तद्वतीति तदतत्परतोपपत्तिः ॥

**ச்லோகார்த்தம் :** மந்த்ரார்த்த வாதங்களின் அத்யயனத்திற்கு அதன் அர்த்தஞானமே பலம் என்று (மீமாம்ஸகர்களால்) ஒத்துக் கொள்ளப்படுவதில்லை. வித்யர்த்தத்தினுடைய ஞானத்தை அபேக்ஷித்து மந்த்ரார்த்த வாதங்களின் ஞானமானது ஸபலமாகின்றது. ஆகையால் மந்த்ரார்த்தவாதங்களின் அர்த்தஞானத்தை, அதன் தாத்பர்யம் என்று சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** வேதம் என்பது ஒன்றை விதிக்குமானுல் அதற்கு அவஸ்யம் ப்ரயோஜனம் இருக்கவேண்டும். "ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:" என்பது போன்ற விதிவாக்யமோ அல்லது அர்த்தவாத வாக்யமோ அல்லது மந்த்ர வாக்யமோ எல்லாமே வேதவாக்யமாக இருப்பதால் அதற்கு ப்ரயோஜனம் இருக்கவேண்டும். ஆகவே அத்யயனமோ மந்த்ர அர்த்தவாத வாக்யங்களினுலோ அர்த்தஞானம் ஏற்பட்டால்மட்டும் அது புருஷார்த்தமாக ஆகாது. அர்த்த ஞானத்தை பலமாக ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. அத்யயனம் முதலான விதி வாக்யார்த்தத்தை அனுசரித்து அந்தந்த கர்மாக்கள் அனுஷ்டிக்கப்படுகின்றபோது மந்த்ரம் அர்த்தவாதம் இவைகள் அபேக்ஷிக்கப்படுகின்றது.

விதிவாக்யார்த்த ஞானம் பலவத் என்பதால் அதில் தாத்பர்யம் உண்டு என்று சொல்லப்படுகிறது.மந்த்ரமானது கர்மாவை அனுஷ்டிக்கப்படவேண்டிய முறைகளை (க்ரமத்தை) தெரிவிக்கின்றது. அர்த்தவாதம் அதை ஸ்துதி செய்கின்றது. ஆகவே விதி

வாக்யத்துடன் சேர்ந்து இவை இரண்டுமே பலவத்தாக ஆகிறது என்பதால் மந்த்ரார்த்த வாதங்களுக்கு ப்ராமாண்யம் உண்டு ஆனால் விதி வாக்யமே முக்யதாத்பர்யமென்றும் மற்ற மந்த்ரார்த்தவாதங்களுக்கு அவாந்தர தாத்பர்யமென்றே சொல்லப்படவேண்டும். ஏனெனில் விதி வாக்யமே புருஷார்த்தமான ஸ்வர்க்காதிபலங்களுக்கு ஸாதனமான யாகத்தை போதிக்கின்றது. அதை அனுசரித்து மந்த்ரார்த்தவாதங்கள் பலமுடையது என்று சொல்லப்படுகிறது. அதனால் அவைகளுக்கு ஸ்வார்த்தத்தில் தாத்பர்யமில்லை. ப்ரயோஜனமுடையதாக இல்லையானால் தத்பரத்வம் சொல்லமுடியாது.

**469. அவதாரிகை :**

இந்த விஷயத்தில் எது தத்பரம்? எது தத்பரமில்லை? என்ற விஷயத்தைப்பற்றி வேதவித்துக்களால் விசாரிக்கப்பட்டு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்பதை மேலே தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

सप्रयोजनकबुद्धिकारणं वाक्यमाहुरिह तत्परं बुधाः ।
सप्रयोजनकबुद्धिशेषधीहेतुमन्यपरमाश्रयन्ति च ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரயோஜனத்துடன்கூடிய ஞானத்திற்கு காரணமாகின்ற வாக்யமே தத்பரமான (தாத்பர்யமான) வாக்யம் என்றும் ப்ரஜோயனத்துடன் கூடிய ஞானத்திற்கு அங்கமாகின்ற ஞானத்தை ஏற்படுத்துகின்ற வாக்யம், அன்யபரமான வாக்யம் என்றும் வித்வான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** எந்த வாக்யமானது பலவத்தான அர்த்தஞானத்தை உண்டு பண்ணுகின்றதோ அந்த வாக்யமே தத்பரம் (தாத்பர்யமுடையது) என்று சொல்லப்படும். எந்த வாக்யமானது பலவத்தான வாக்யத்திற்கு ஸேஷமாக இருக்கின்றதோ அந்த வாக்யம் அன்யபரம் என்று சொல்லப்படும். இரண்டு வாக்யங்களும் அர்த்த ஞானத்தை உண்டுபண்ணுகின்ற விஷயத்தில் விசேஷம் ஏதுமில்லை என்றாலும் பலமுள்ளதான வாக்யம் எதுவோ அதுவே தத்பரம் என்றும் பலரஹிதமானவாக்யம் எதுவோ அது தத்பரமில்லை என்றும் (ஸ்வார்த்தமில்லை அன்யபரம்) பெரியோர்களால் தீர்மானிக்கப் பட்டிருக்கின்றது.

**470. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானால், தேவதாஸ்வருபத்தை தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஸ்வர்க்காதி பலன்களை தெரிவிக்கின்ற வாக்யங்களுக்கு, ஸ்வார்த்தபரத்வம் இல்லையென்று சொல்லநேரிடுமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

मन्त्रार्थवादवाचसामपि गोचरेषु सौवेष्ववान्तरमुशन्ति च तत्परत्वम् ।
केचित्त्रयीशिरसि खिन्नधियो मुनीन्द्रास्तद्बुद्धियो विधिषु शेषतया निवेशात् ॥

**ச்லோகார்த்தம் :** மந்த்ரார்த்தவாத வாக்யங்களுக்கும் தன்னுடைய அர்த்தத்தில் அவாந்தர தாத்பர்யம் இருக்கின்றது என்ற வேதாந்த விசாரத்தில் நிபுணர்களான வித்வான்களால் சொல்லப்படுகிறது. அவைகளின் அர்த்தஞானமானது வித்யர்த் தத்திற்கு அங்கமாக சேர்க்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** யஞ்ஞாதிகளை விதிக்கின்ற வாக்யங்களில் சில வாக்யங்கள் விதி வாக்யத்திற்கு அங்கமாக இல்லாமல் இருக்குமானாலும், அல்லது ஏற்கனவே அறியப்பட்ட

விஷயத்தை அனுவாதம் செய்யப்பட்டிருக்குமாளுலும் அந்த வாக்யங்களை தத்பரத்வம் (தாத்பர்யம்) என்று சொல்லமுடியாது. ப்ரதான வாக்யத்திற்கு விஷயம் எதுவோ அதற்கு தேவையான விஷயங்களை தெரிவிக்கின்ற வாக்யமாக இருந்தால்தான் அதை அங்கவாக்யம் என்று சொல்லலாம்.

விதி வாக்யத்திளுல் எந்த கர்மா விதிக்கப்படுகிறதோ அந்த கர்மாவிற்கு உரிய தேவதாஸ்வரூபமோ அந்த கர்மாவிளுல் ஏற்படும் பலன்களோ வேறு எந்த ப்ரமாணத்திளுலும் அறியப்படமுடியாது. இவ்விதம் அஞ்ஞாதமான அர்த்தத்தை தெரிவிக்கின்ற வாக்யங்களுக்கு அவாந்தர தாத்பர்யம் சொல்லப்படுகிறது. விதி வாக்யத்தில்தான் முக்யதாத்பர்யம் சொல்லப்படுகிறது. எந்தக் கர்மாவை விதிக்கின்றதோ அதில் அந்தந்த தேவதைகளை உத்தேசித்து ஹவிஸ்ஸைக் கொடுக்கின்றபோது அந்தந்த தேவதைகளை த்யானம் செய்து மந்த்ரபூர்வகமாக ஹவிஸ்ஸைக் கொடுக்கவேண்டும் என்று அந்த வாக்யம் தெரிவிக்கின்றது. இதேபோல் 'ஸ்வர்க்ககாமோ யஜேத' என்று விதி வாக்யமானது யாகத்தை விதிக்கின்றதுடன் அதன் பலளுன ஸ்வர்க்கத்தைப்பற்றியும் தெரிவிக்கின்றது. ஆகவே இவ்விதம் தேவதா ஸ்வர்க்காதி பலம், முதலானவைகளைத் தெரிவிக்கின்ற வாக்யங்களுக்கு அவாந்தர தாத்பர்யம் சொல்லப்படுகிறது. ஆகவே அங்க, அங்கி பாவேன கர்மாவை விதிக்கின்ற வாக்யங்களில் அங்கவாக்யங்கள் அவாந்தர தாத்பர்யமுடையது என்றும் அங்கி என்பதே முக்யதாத்பர்யமுடையதென்றும் சொல்லப்படுகிறது.

விதி வாக்யம்தான் பலமுடையது ப்ரதானம் என்று சொல்லப்பட்டபோதிலும், அந்த வாக்யத்திற்கு அங்கமாக இருக்கின்ற வாக்யங்களை அபேக்ஷித்தே விதி வாக்யத்திளுல் செய்யப்படும் கர்மாவின் பலன் சித்திக்கின்றது. அதாவது அந்த கர்மா எப்படிச் செய்யவேண்டும்? அதற்குரிய தேவதாஸ்வரூபம் அதன் விசேஷணம் எல்லாமே அங்க வாக்யத்திளுல்தான் அறியப்படவேண்டும். இந்தமுறையில் அங்க வாக்யங்களும் பலவத்தாக இருக்கின்ற காரணத்திளுல், இந்த வாக்யங்களுக்கு தாத்பர்யம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆளுல், விதிவாக்யங்களிளுல் சொல்லப்படும் அர்த்தத்தில்தான் மஹாதாத்பர்யம் அங்க வாக்யங்களுக்கு அவாந்தர தாத்பர்யம். என்றும் ப்ரயாஜை, அனுயாஜங்கள் ஏல்லாம் அங்க கர்மா என்றும் தர்சபூர்ணமாஸம் ப்ரதானம் என்றும் இருப்பதற்காக அங்க கர்மாவை விட்டு ப்ரதானத்தை மட்டும் செய்வதற்குமுடியாது. ஆகவே அங்க வாக்யமோ அல்லது அங்கியை தெரிவிக்கின்ற வாக்யமோ இரண்டுமே பலவத் என்றே சொல்லவேண்டுமானதால் தத்பரம் என்றே சொல்லவேண்டும் ஆளுல் அர்த்தவாத வாக்யங்களை கர்மாவிற்கு அங்கமாகச் சொல்லமுடியாது. கர்மாவை அனுஷ்டிப்பதற்கு அர்த்தவாதங்கள் தேவைஇல்லை. ஆகவே பொதுவாக மந்த்ரார்த்தவாத வாக்யங்கள் ஸ்வார்த்த பரமில்லை என்று சொல்லப்பட்டிருந்தாலும் கூட அங்கபாவேன சொல்லப்படும் வாக்யங்களில் தாத்பர்யம் உண்டு என்றே சொல்லவேண்டும். குணவாதமென்றும் அனுவாதமென்றும் பூதார்த்தவாதம் என்றும் மூன்றுவித அர்த்தவாதம் என்று விபாகம் செய்யப்படுகிறது. ப்ரமாணங்களால் அறியப்படும் அர்த்தத்திற்கு விரோதமாக இருக்குமாளுல் அதை குணவாதம் என்றும், ஏற்கனவே அறியப்பட்ட அர்த்தத்தையே தெரிவிக்குமாளுல் அனுவாதம் என்றும், ஏற்கனவே அறியப்படாததும், ப்ரமாணுந்தர விரோதமில்லாததுமான அர்த்தத்தை தெரிவிக்குமாளுல் அதை பூதார்த்தவாதம் என்றும் சொல்லப்படும் என்று மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறது. இதில் குணவாதம்

அனுவாதம் இரண்டிற்கும் ஸ்வார்த்தபரத்வம் கிடையாது. பூதார்த்தவாதம் என்பதில் ஸ்வார்த்த பரத்வம் உண்டு. ஆனுல் இவைகளுக்கும் மஹாதாத்பர்யமில்லே. அவாந்தர தாத்பர்யமே ஒத்துக்கொள்ளப்படும். பூதார்த்தவாத வாக்யங்களுக்கு சாக்ஷாத்பலம் ஏதுமில்லேயென்ருலும் அங்கவாக்யமாக இருக்கின்றதால் தாத்பர்யம் சொல்லப் படுகின்றது. ஏனெனில் தேவதைகளே உத்தேசித்து ஹவிஸ்ஸை கொடுக்கின்றபோது. அந்த தேவதையை த்யானித்துவஷட் என்ற மந்தர உச்சாரணம் செய்து ஹவிஸ்ஸை ஹோமம் செய்வேண்டும் என்று தெரிவிக்கின்ற த்யானத்தை விதிக்கின்ற வாக்யத்தில் அந்த த்யானத்திற்கு உரியத்யேய விஷயமான தேவதாஸ்வரூபம் அறியப்படவேண்டும். வேறு ப்ரமாணத்தினுல் தேவதாஸ்வரூபம் சித்திக்கமுடியாது. (மேலும் சப்தம் தான் தேவதை, சப்தத்தையன்றி ஸ்வரூபம் என்பது கிடையாது என்று மீமாம்ஸகர்கள் சொல்கிருர்கள். அதை வேதாந்திகள் ஒத்துக்கொள்வதில்லே)

இந்தவிதம் சில வாக்யம் தேவதாஸ்வரூபத்தைப் பற்றியும், சில வாக்யம் பலங்களின் ஸ்வரூபத்தைப் பற்றியும் தெரிவிக்கும் என்பதால் இந்த வாக்யங்களுக்கும் அவாந்தர தாத்பர்யம் சொல்லப்பட்ட போதிலும் ப்ரதான வாக்யத்துடன் அன்வயித்து பலனே கொடுக்கின்றதால் தாத்பர்யம் (தத்பரத்வம்) உடையது என்றே சொல்லப்படுகிறது.

**471. அவதாரிகை :**

இவ்விதம் ஸகுணவாக்யம் என்பதும் அவாந்தர தாத்பர்யம் உடையது என்று சொல்லப்படுமானுல் உபாஸனுதிகளே விதிக்கின்றது என்பதால் வேதாந்த வாக்யங்களிலும் விதி விஷயத்வம் இருப்பதாகத்தானே சொல்லவேண்டும்? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

श्रेयःसाधनता लिङर्थ इति च प्रागुक्तमत्यादराच्छ्रेयः साधनायागदानहनाद्यर्थैकनिष्ठं ततः ।
सर्वं कर्मवचो नियोगपरता तस्यापि नाऽलोचने वक्तव्या किमुतास्य वेदशिरसः सा नेति भूयोऽपि नः॥

**ச்லோகார்த்தம் :** லிஙர்த்தமானது ச்ரேயஸ் சாதனத்தை தெரிவிக்கின்றது என்று இதுவரை சொல்லப்பட்டது. ஆகையால் எல்லாவாக்யங்களும் ச்ரேயஸ் ஸாதனங்களான யாகம், தானம், ஹவனம் முதலானவைகளே தெரிவிக்கின்றது. ஆகவே, இவ்விதம் விசாரிக்கின்றபோது கர்ம வாக்யங்களுக்கே நியோக பரத்வம் என்பது ஸம்பவிக்காது என்ருல், வேதாந்த வாக்யங்களுக்கு நியோகம் என்பதே ஸம்பவிக்காது என்று நாங்கள் சொல்லவேண்டிய அவஸ்யமே இல்லே.

**வ்யாக்யானம் :** கீழே ஸகுண வாக்யங்களுக்கும் நிர்க்குணப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் மஹாதாத்பர்யம் என்றும் ஸகுண உபாஸனே அதன் பலன்களில் அவாந்தர தாத்பர்யம் என்று சொல்லப்பட்டது, இதில் உபாஸனம் என்பது விதிக்கப்படுவதால் வேதாந்தவாக்யமும் விதிக்கின்றது என்று தானே சொல்லப்பட வேண்டும்? என்ருல் அவ்விதம் சொல்வதற்குமுடியாது.

ஏனெனில் கீழேயே லிஙர்த்தமானது நியோகாதிகளேயோ பாவனே முதலானவைகளேயோ போதிக்கவில்லேயென்றும் 'ச்ரேயஸ் ஸாதனம்' என்பதே லிஙர்த்தம் என்றும் தீர்மானம் செய்யப்பட்டதால் 'விதி' என்ற விஷயத்திற்கே இடமில்லே.

கர்மவாக்யங்களிலேயே விதி ஸம்பவிக்கமுடியாது என்று சித்தம் செய்யப்பட்டிருப்பதால் வேதாந்த வாக்யத்தில் எப்படி விதி ஸம்பவிக்க முடியும்?

ஸகுண வாக்யங்கள் நிர்விசேஷ ப்ரஹ்மத்தைப்போதிக்கின்ற விஷயத்தில்தான் மஹாதாத்பர்யம் என்றும் ஸகுண விஷயத்தை தெரிவிப்பதில் அவாந்தர தாத்பர்யம்தான் என்று சொல்லப்பட்டதற்கு காரணம் என்னவென்ருல் அவ்விதம் செய்யப்படும் உபாஸனைகளிருல் சித்த ஏகாக்ரதை ஏற்படுவதன் மூலமாக நிர்க்குணப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிவதற்கு உபகாரகமாக இருக்கின்றது என்பதால் அவாந்தர தாத்பர்யம் சொல்லப்படுகிறது. ஏனெனில் அதுவே புருஷார்த்தமல்ல. ஆகையால் நிர்க்குணப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் ஸகுணவாக்யம் மஹாதாத்பர்யமுடையதாக இருக்கிறது. ஆகவே வேதாந்தவாக்யங்கள் எல்லாம் நியோகபரம் என்று சொல்வதற்கேமுடியாது.

**472. அவதாரிகை :**

கர்மகாண்ட வாக்யமும் நியோகபரமில்லை என்று சொல்லப்படுமாருல், பாட்டர், பாவனுபரமில்லை என்றும் ப்ராபாகரர்கள் நியோகபரம் என்றும் வ்யாக்யானம் செய்திருப்பது எப்படி பொருந்தும்? என்ருல், அவர்களால் சொல்லப்படுவது பொருந்தாது. ஏனெனில் பூர்வ மீமாம்ஸா சூத்ரக்காரரான ஜைமினியும் அந்த சூத்ரத்திற்கு பாஷ்யம் செய்திருக்கின்ற ஸபரஸ்வாமிகளும் ச்ரேயஸ் சாதனம் என்றே போதிக்கின்றதாக தெரிவிக்கிருர்கள் அதற்கு முரண்பட்ட விதத்தில் பாட்டர் முதலானவர்களால் செய்யப்படும் வ்யாக்யானம் அபவ்யாக்யானம் என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

श्रेय:साधनयागदानहवनाद्यर्थेषु कार्यात्मसु सर्वं कर्मवचः प्रमाणमिति तु ग्राह्यं वचो जैमिनेः ।
भाष्यं पश्यत शाबरं स्फुटतरं यो यागमित्यादिकं श्रेय:साधनयागमात्रवचनं धर्माभिधानं वदत् ॥

**ச்லோகார்த்தம் :** ச்ரேயஸ் சாதனங்களான யாகம், தானம், ஹவனம் முதலான கர்ம விஷயங்களில், ஸர்வ கர்மவாக்யங்கள் அனைத்தும் ப்ரமாணம் என்று ஜைமினியின் சூத்ரத்தின்மூலம் அறியலாம். 'எவன் யாகத்தைச் செய்கின்ருனே' என்ற சாபரபாஷ்யத்தைக் கொண்டே ச்ரேயஸ் சாதனமான யாகத்திற்கு மட்டுமே தர்மம் என்று பெயர் சொல்லப்படுகிறது என்று அறிந்துகொள்ளலாம்.

**வ்யாக்யானம் :** விதி வாக்யங்கள் எல்லாம் ச்ரேயஸ் ஸாதனமான கர்மாக்களை போதிக்கின்றது என்று ஜைமினி மஹரிஷியினுலும் ஸபரஸ்வாமிகளினுலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'சோதனுலக்ஷணேர்த்தோ தர்ம:' என்ற ஜைமினியின் சூத்ரம், ச்ரேயஸ் ஸாதனமான யாகத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்வதுதான் ந்யாயம்.

**பூர்வ :** ஜைமினியின் சூத்ரத்தினுல் எப்படி இந்த அர்த்தம் கிடைக்கின்றது?

**சித்தா :** 'அதாதோ தர்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்திற்குப் பிறகு சோதனு லக்ஷணேர்த்தோ தர்ம:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. தர்ம சப்தமானது, ச்ரேயஸ் ஸாதனமான கர்மாவை போதிக்கின்றது என்று பாஷ்யகாரராலும் சொல்லப்பட்டிருக்கிறது 'எவன் யாகம் செய்கின்ருனேஅவன் தார்மிகன்' என்று அவரால் சொல்லப்பட்டிருக் கின்றதால் தர்ம சப்தார்த்தம், ச்ரேயஸ்கரம் என்பது இந்த வாக்யத்தினுல் அறியப்படுகிறது. ஆகையால், கர்மாவை விதிக்கின்ற வாக்யங்கள் கர்மா ச்ரேயஸ்கரம் என்பதையே தெரிவிக்கின்றது என்பது பாஷ்யத்திலிருந்து ஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. ஆகவே நியோகமோ பாவனையோ இந்த வாக்யங்களுக்கு அர்த்தமாகச் சொல்வது ஒத்துக் கொள்ளக்கூடியதல்ல.

பாஷ்யகாரரால் ஸ்புடதரமாக இந்த ஸூத்ரத்திற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்பதால் ஸூத்ரகாரரின் அபிப்ருயமும் (ச்ரேயஸ் ஸாதனம்) இதுவே என்று, ஸந்தேகமோ விபர்யயமோ இல்லாமல் அறியப்படுகிறது.

**473. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுமானால், 'சோதனு லக்ஷணோர்த்தோதர்ம:' என்ற ஸூத்ரத்திலுள்ள தர்ம சப்தமானது புல்லிங்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதால், தர்ம சப்தம்' யாகம் என்ற கர்மாவை தெரிவிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில், 'தானி தர்மாணி ப்ரதமான்யாஸன்' என்றதாதி வைதிக ப்ரயோகங்கள் தர்மாணி என்று நபும்ஸகலிங்கத்தில் சொல்லப்பட்டிருக்குமானுல்தான் தர்ம சப்தம் யாகத்தை குறிப்பதாகச் சொல்லலாம். அவ்விதம் சொல்லப்படாமல் புல்லிங்கத்தில் தர்ம சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதால் அபூர்வத்தையே தர்ம சப்தம் தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டுமேயன்றி கர்மாவை குறிப்பதாகச் சொல்லமுடியாது என்ற ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

पुल्लिङ्गताऽपि घटते क्रतुगामिनोऽस्य सूक्ष्मात्मना भवति हि क्रतुरप्यपूर्वम् ।
तेन क्रतोरुपचरन्नभिदां पुमान्स्यात् क्लीबस्तु धर्ममिति हि क्रतुवाचकत्वे ॥

**ச்லோகார்த்தம் :** யாகத்தை தெரிவிக்கின்ற தர்மம் என்ற சப்தமானது புல்லிங்கத்திலும் ப்ரயோகிக்கலாம். ஸூக்ஷ்ம ரூபத்திலுள்ள யாகமே அபூர்வம் என்று சொல்லப்படுகிறது என்பதால், யாகத்திற்கும் அபூர்வத்திற்கும் அபேதம் என்பதை உபசாரமாக தெரிவிக்கின்றமுறையில் தர்மம் என்ற சப்தம் புல்லிங்கத்தில் இருக்கின்றது. தர்மம் என்ற சப்தம் யாகத்தைமட்டும் தெரிவிக்குமானுல் நபும்ஸகலிங்கமாகவே இருக்கிறது.

**வ்யாக்யானம் :** 'சோதனு லக்ஷணோர்த்தோ தர்ம:' என்ற ஜைமினியினுல் சொல்லப்பட்ட இரண்டாவது ஸூத்ரத்தில் சொல்லப்படும் 'தர்ம' சப்தமானது புல்லிங்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதால் அந்த தர்ம சப்தம் "யாகம்" என்ற கர்மாவை குறிப்பதாகச் சொல்லமுடியாது. 'அபூர்வம்' என்ற அர்த்தத்தை தெரிவிப்பதாகத்தான் சொல்லவேண்டும். ஏனெனில், கர்மாவானயாகத்தை தெரிவிக்க வேண்டுமானுல் 'தர்மாணி' என்று நபும் ஸகலிங்கத்தில் சொல்லப்பட்டிருக்கவேண்டும். 'தானி தர்மாணிப்ரதமான் யாஸன்' என்று யாகம் என்ற கர்மாவைத் தெரிவிக்கவேண்டுமானுல் நபும்ஸகலிங்கத்தில் இருக்கவேண்டும் என்றும், அத்ருஷ்டத்தை குறிப்பதாக இருந்தால் புல்லிங்கத்தில் இருக்கவேண்டுமென்றும் கோஸத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. வேதத்தில் அபூர்வம் என்பதே ஜகத் என்பதின் ஸ்திதிக்கு காரணம் என்று 'தர்ம:' என்று புல்லிங்க ப்ரயோகமே செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த ஸூத்ரத்திலுள்ள 'தர்ம' சப்தம் அபூர்வத்தை தெரிவிக்கிறதென்று சொல்லவேண்டுமேயன்றி ச்ரேயஸ் சாதனமான யாகத்தைக்குறிப்பதாகச் சொல்லமுடியாது.

**சித்தா :** "தர்மோ விச்வஸ்ய ஜகத: ப்ரதிஷ்ட்டா" என்ற வாக்யமானது தர்மத்தை அடிப்படையாகக் கொண்டே இந்த ஜகத் நிலைத்திருக்கின்றது என்றும். 'தானி தர்மாணி ப்ரதமான்யாஸன்' என்ற வாக்யம் யாகாதிகளை தர்மாணி என்ற நபும்ஸகலிங்கத்தில் சொல்லப்படவேண்டுமென்ற நியமம் இருந்தபோதிலும் இந்த ஸூத்ரத்திலுள்ள தர்மசப்தம் புல்லிங்கத்தில் சொல்லப்பட்டிருப்பதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. ஏனெனில் யாகம் என்ற கர்மாவின் ஸூக்ஷ்மாவஸ்த்தையைத்தான் அபூர்வம் என்று சொல்லப்படுவதால், கார்யகாரண

அபேதம் என்ற முறையில் உபசாராத் காரணமான யாகாதிகளில் சொல்லப்படுகிறது. அபூர்வம் என்பது க்ரியையின் மாறுபட்ட நிலைதான். இந்த ஜகத் தர்மத்தை அதிஷ்ட்டானமாகக் கொண்டே நிலைத்திருக்கிறது என்று இவ்விதம் பலத்தைக் கொடுக்கக்கூடிய அபூர்வமானது க்ரியாபரிணமந்தான் என்று சொல்லப்பட்டிருக் கின்றதால், கார்யகாரண அபேதத்தைக்கொண்டு 'தர்மம்' என்ற சப்தம் புல்லிங்கத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருந்தாலும் ச்ரேயஸ்ஸாதனமான யாகம் என்பது கார்யமான அபூர்வத்திற்கு காரணமாக இருக்கின்றதால் க்ரியையான யாகம் உபசாராத் புல்லிங்கத்தில் சொல்லப்படுவதில் எந்த விதமான பாதகமுமில்லை.

கேவலயாகத்தை (க்ரியையை) மட்டும் குறிக்கப்படுமானல் நபும்ஸகங்கத்தில் தர்ம சப்தம் ப்ரயோகிக்கப்படவேண்டும் என்பது சரியே. ஆனல் ச்ரேயஸ் ஸாதனமான யாகத்தை குறிப்பிடப்படுவதால், சூத்ரத்திலும் பாஷ்யத்திலும் தர்ம சப்தம் புல்லிங்கத்தில் குறிப்பிடப்படுவது பொருத்தம்தான். இந்தயாகம் என்பது ச்ரேயஸ் சாதனம் என்று சொல்லப்படுவதால் அபூர்வரூபமாக ச்ரேயஸ்ஸுக்கு காரணமாகிறது என்று கருத்தை தெரிவிக்கவேண்டுமென்பதற்காகவே சூத்ரகாரரும் பாஷ்யகாரரும் நபும்ஸகலிங்கத்தில் தெரிவிக்கவேண்டியதை புல்லிங்கத்தில் தெரிவிப்பதன்மூலம் இரண்டும் ஒன்றே என்று தெரிவிக்கிருர்கள்.

**474. அவதாரிகை :**

இவ்விதம், ச்ரேயஸ் ஸாதனமான யாகாதிகளையே லிஙாதி பதங்களால் விதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானல் க்ரியை என்பது அவஸ்யம் கர்த்தாவை அபேக்ஷிக்கின்றது என்பதால் 'ஸ்வர்க்க காம:' என்ற பதங்கள் முதலில் கர்த்தாவை ஸ்மர்ப்பணம் செய்கிறது என்று சொல்லலாமேயன்றி அதிகாரியை ஸமர்ப்பிப்பதாகச் சொல்லமுடியாது. அதனல் 'ஸ்வர்க்ககாம அதிகரணம்' என்பதில் சொல்லப்படுவதற்கு விரோதமாக ஆகிறதே என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் இந்த விஷயத்தில் பாவனுவாதியின் அபிப்ருயத்தைப்போலவே எங்களாலும் சொல்லப் படுவதால் அதிகரண விரோதம் ஏற்படாது.

**ச்லோகம் :**

इष्टाभ्युपायवचनो लिङिति स्थितौ च स्याद्भावनावचनताऽस्य यदा तदा च ।
कर्तुर्भवेदधिकृतिस्तु नियोगवादे स्वाम्ये स्थिते सति भवेदथ कर्तृभावः ॥

**ச்லோகார்த்தம் :** 'லிங்' என்பது இஷ்ட்ட ஸாதனம் என்பதை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படும் பக்ஷத்திலும், பாவனையை போதிக்கின்றது என்ற பக்ஷத்திலும் கர்த்தாவிற்கே பலத்தில் அதிகாரம். நியோகபக்ஷத்தில் ஒருவன் நியோகத்திற்கு ஸ்வாமியாக இருந்து அதன் பிறகு கர்த்ரு பாவத்தை அடைகிருன்.

**வ்யாக்யானம் :** லிஙாதிகள், ச்ரேயஸ் சாதனமான யாகாதிக்ரியைகளைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானல், க்ரியை என்பது கர்த்தாவை எதிர்பார்க்கின்றதால் ஸ்வர்க்க காமனை அதிகாரியே கர்த்தாவாக அன்வயிக்கின்ருன் என்ற அர்த்தம் கிடைக்காது. கர்த்தாவை மட்டும் அந்த வாக்யம் போதிப்பதாகச் சொல்லநேரிடும். இதனல் 'ஸ்வர்க்ககாம அதிகரணம்' என்ற மீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்ற விஷயத்திற்கு விரோதம் ஏற்படுகிறதே என்ருல்,

**சித்தா :** லிஙர்த்தமானது இஷ்ட்ட ஸாதனமான யாகத்தை போதிக்கின்றது என்று சொன்னலும் சரி, அல்லது லிஙானது பாவனையைத்தான் போதிக்கின்றது என்று

சொன்னாலும் சரி இந்த இரண்டுபக்ஷத்திலும் முதலில் கர்த்தாவை போதிக்கின்றது என்றும் அதன்பிறகு அதிகாரியைபோதிக்கிறது என்று சொல்லப்படுவதற்காக அதிகரண விரோதம் ஏற்படுகிறது என்று சொல்வதற்குமுடியாது.

க்ரியை என்பது முதலில் கர்த்தாவை அபேக்ஷிக்கின்றது என்பதால் முதலில் கர்த்தாவாக அன்வயித்தபோதிலும் அந்த க்ரியையினால் ஏற்படும் பலனுக்கும் இவனே ஸ்வாமியாக ஆகின்றான் என்பதால் அதிகாரியாகவும் அன்வயிக்கிறான் என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்லப்படுவதால் அதிகரண விரோதம் ஏதுமில்லை.

**பூர்வ :** நியோகம் என்றாலே, நியோஜ்யன் நியோகத்திற்கு விஷயம் என்ற இரண்டு இல்லாமல் நியோகம் என்பதே சித்திக்காது. அதாவது ஸ்வர்க்க காமனாக இருக்கின்ற என்றால் இந்த கார்யம் செய்யப்படவேண்டும் என்று அறிகின்றான். அவனே நியோஜ்யனான அதிகாரி என்று சொல்லப்படுகிறான். இந்த கர்மாவைச் செய்தால்தான் பலன் ஏற்படும் செய்யாவிடில்பலன் ஏற்படாது என்பதால், நியோகம் கர்த்தவ்யமாகிறது. ஸ்வர்க்க பலனில் இச்சையுடையவன் யாகத்தைச் செய்யவேண்டுமென்று 'ஸ்வர்க்க பலன் வேண்டுமானால் யாகத்தைச் செய்' என்று தெரிவிக்கின்றபோது யாகம் என்பது நியோகத்திற்கு விஷயமாகிறது. ஸ்வர்க்கம் என்ற பலனுக்கு கரணமாகிறது. ஆகவே 'ஸ்வர்க்க காம:' என்ற வாக்யமானது, முதலில் அதிகாரியாகவும் அதன் பின்னரே கர்த்தாவாகவும் அன்வயிப்பதாகச் சொல்லவேண்டும்.

**சித்தா :** பாவனை தான் லிஙர்த்தம் என்று சொல்லப்படுகின்ற பக்ஷத்தில் சப்தபாவனைக்கு பலம் புருஷப்ரயத்னம் என்ற ஆர்த்திபாவனையென்றும், புருஷ முயற்சியே க்ரியைக்கு அனுகூலம் என்றும் அதனால் முதலில் கர்த்ருத்வேன அன்வயித்த பிறகே அதிகாரித்வேன அன்வயிப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்த பக்ஷத்தை எங்களாலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்ற வாக்யம் கர்த்தா அதிகாரி இரண்டையும் தெரிவிக்கின்றது என்பதில் ஸந்தேகமே இல்லை இதில் பௌர்வாபர்யம் இருக்கிறது என்பதைத் தவிர வேறு எந்த விதமான விரோதமும் கிடையாது.

**பூர்வ :** ஒரே வாக்யத்தில் இரண்டு முறை அன்வயம் எப்படி ஏற்படமுடியும்?

**சித்தா :** இந்த தோஷம் உன் பக்ஷத்திலும் ஏற்படுவதால், இதில் என் பக்ஷத்தில் தோஷமிருப்பதாகச் சொல்லமுடியாது. மேலும் அந்த வாக்யத்தில் அதிகாரியாக அன்வயித்த பிறகே கர்த்தாவாக அன்வயிக்கவேண்டும் என்ற அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய விதி ஏதுமில்லை. மேலும் 'யஜேத' என்ற பதமானது ச்ரேயஸ்ஸாதனமான யாகத்தை தெரிவிக்கின்றது என்பது அர்த்த சித்தமாக இருக்கின்றது. ஆகவே ஸ்வர்க்கத்தை விரும்புகின்றவன்தான் யாகத்தில் ப்ரவ்ருத்திப்பான் என்பது அர்த்தாத் கிடைக்கின்றது. 'யாகம்' என்பது க்ரியையானதால் கர்த்தா என்பது நேரிடையாகவே கிடைக்கின்ற அர்த்தம். இந்தவிதம் அதிகாரித்தவம் என்பது அர்த்தாத் கிடைக்கின்றது என்று சொல்லப்பட்டபோதிலும் அந்த வாக்யம் தாத்பர்யமுடையதென்றே சொல்லப்படுகிறது. ஏனெனில் வேறு ப்ரமாணாந்தரத்தினால் அறியப்படாத விஷயத்தையே வேதம் தெவிக்கின்றதால் தாத்பர்ய விஷயமென்றே சொல்லவேண்டும். ஆகவே எந்தவிதம் சொல்லப்பட்ட போதிலும் ப்ரகரண விஷயத்திற்கு விரோதம் ஏதுமில்லையென்பதால் ச்ரேயஸ் ஸாதனத்வம் லிஙர்த்தம் என்றே சொல்லலாம். 'ஸ்வர்க்க காம:' என்ற பதங்கள் பலத்தை தெரிவிக்கின்றதால் அந்த பலத்தை விரும்புகின்ற அதிகாரியை தெரிவிக்கின்றது என்பது அர்த்த சித்தம்.

**475. அவதாரிகை :**

இஷ்ட்ட ஸாதனத்வம் லிஙர்த்தம் என்று சொல்லப்படும் பக்ஷத்தில், விதி என்பது கார்யத்தில் ப்ரவ்ருத்திக்காமல் இருக்கின்ற ஒருவனே, அந்தக் கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கும்படிச் செய்கின்றது என்று 'அப்ரவர்த்தப்ரவர்த்தனம் விதி:' என்று சொல்வதற்கு முடியாது பல இச்சையினலேயே அந்த ஸாதனத்தில் ப்ரவ்ருத்திப்பதாகச் சொல்லநேரிடுமே? என்ருல்,

**ச்லோகம் :**

इष्टाभ्युपायो विधिरात्मनीच्छामुत्पादयन्प्रेरकतामुपैति ।
इष्टाभ्युपायेऽवगते लिङादेरिच्छा फलादेनमुपैति सद्यः ॥

**ச்லோகார்த்தம் :** இஷ்ட்ட ஸாதனமான யாகம் என்பது, தன்னிடத்தில் இச்சையை ஏற்படுத்திக்கொண்டு ப்ரவர்த்தகமாக ஆகிறது. லிஙாதிகளிலிருந்து இஷ்ட்ட ஸாதனம் என்பது அறியப்படுகின்றபோது இச்சையென்பது உடனே பலத்திலிருந்து ஸாதனத்திற்கு செல்கிறது.

**வ்யாக்யானம் :** 'அப்ரவ்ருத்த ப்ரவர்த்தனம் விதி:' என்று சொல்லப்பட்டால்தான், வாக்யத்திலிருந்து ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்று சொல்லலாம். அவ்விதம் இன்றி இஷ்ட்ட சாதனதாஞானம் விதி: என்று சொல்லப்படுமாஞல் இந்த வாக்யத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? என்ருல்,

**சித்தா :** அஞ்ஞாத ஞாபனம் விதி: என்றே சொல்லவேண்டும். பலத்தில் இச்சை உடையவன் எவனே அவனே சாதனத்தில் இச்சை உடையவனுக ஆகின்ருன் என்பதால் அந்த கார்யத்தில் ப்ரவர்த்திக்கின்ருன் என்றே சொல்லவேண்டும். ஆனுல் இன்னபலத்திற்கு இது ஸாதனம் என்பது அவனுக்கு அறியப்படாததால், அதை சாஸ்திரமே தெரிவிக்கவேண்டி இருக்கிறது ஆகவே வாக்யத்திலிருந்தே ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்றே சொல்லலாம். ஆகவே, விதிவாக்யத்தினுல் இச்சை ஏற்பட்டு அதன் மூலம் ப்ரவர்த்திக்கிருன் என்று சொல்லலாம். ஸ்வர்க்கம் என்ற பலனில் இருக்கின்ற இச்சையினுல், அதன் ஸாதனம் என்பதிலும் இச்சை ஏற்படுகிறது. இவ்விதம் ஸாதன இச்சை ஏற்பட சாஸ்திரமே காரணமாகிறது. ஆகையால் பல இச்சையுடையவன் அதற்கு ஸாதனம் என்ன? என்று தெரிவிக்கின்ற வாக்யத்தைக்கேட்டு அதில் ப்ரவ்ருத்திக்கின்ருன் என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** பல இச்சையுடையவன் அந்த ஸாதனத்தை அறிந்து அந்தக்கார்யத்தில் ப்ரவர்த்திக்கின்ருன் என்பது ஸாமான்யமாக அறியப்பட்டபோதிலும், 'இந்த காரயத்தைச்செய்' என்று நியோகமானது நேரிடையாகவே ப்ரவ்ருத்திக்கச் செய்கின்ற தால் நியோக வாதத்தில் தான் விதி என்பதற்கு ப்ரவர்த்தகத்வம் சொல்லமுடியும்.

**சித்தா :** பல இச்சை இருந்தபோதிலும் அதற்கு உபாயம் என்னவென்று அறியாமல், அந்தக் கார்யத்தைச் செய் என்று தெரிவிப்பதற்காகமட்டும் ஒருவனும் கார்யத்தில் ப்ரவர்த்திக்கமாட்டான். அதனுல் இந்த பலனுக்கு இது ஸாதனம் என்று அறிவதால். ஸாதனத்தில் ஏற்படும் இச்சையின் மூலமாகவே (அந்த கார்யத்தில்) விதியானது ப்ரேரகமாகிறது என்று சொல்லவேண்டும்.

அதாவது ஏற்கனவே பல இச்சையானது ஏற்பட்டிருந்தபோதிலும் அதற்கு உபாயம் என்னவென்று அறிந்தால்தான் அதில் ப்ரவ்ருத்தி ஏற்படும், என்பதால் உபாயம் என்ன? என்ற விசேஷஞானம் விதிவாக்யத்தின்மூலமாக ஏற்பட்டு அந்த உபாயத்திலும் இதைச் செய்யவேண்டுமென்று இச்சை ஏற்பட்டு அதனுல் அந்தக்கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கின்ருன்.

இவ்விதம் சொல்லப்படுவதால் அப்ரவ்ருத்த ப்ரவ்ருத்தி என்று உங்களால் சொல்லப்படும் லக்ஷணமும் பொருந்துகிறது. பல இச்சையென்பது ஸாதன இச்சைக்குகாரணம், ஸாதன இச்சை ப்ரவ்ருத்திக்குகாரணம் என்பதால் இதில் விரோதம் ஏதுமில்லை.

**476. அவதாரிகை :**

நியோகம் என்பதே கார்யத்தில் நேரிடையாக ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றது ராகாதிகளின் த்வாராப்ரவ்ருத்திக்கச் செய்யவில்லை. ஆகவே நேரிடையாக ப்ரவ்ருத்திக்கச் செய்கின்ற நியோகம்தான் லிங்அர்த்தம் என்று சொல்லவேண்டு மேயன்றி இஷ்ட்டஸாதனதா ஞானமே விதி என்று சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

नियोगकोट्याऽपि नरो न कश्चिदिच्छां विना दुःखनिदानभूतम् ।
करोति कर्मेह पुमर्थरागात्प्रवृत्तिरेवेति हि राजमार्गः ॥

**ச்லோகார்த்தம் :** கோடிக்கணக்கான நியோகங்கள் இருந்தபோதிலும் ஒருவன் இச்சையேயின்றி, துக்கத்திற்கு காரணமான கர்மாவைச் செய்யமாட்டான். ஆகையால் புருஷார்த்தத்தில் இச்சையினால்தான் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்று சொல்வதே ராஜமார்க்கம்.

**வ்யாக்யானம் :** ஸ்வர்க்காதி பலங்களில் இச்சை இல்லாதவர்களிடம் 'யாகத்தைச் செய்' என்று எத்தனை கோடிமுறை திரும்ப, திரும்ப சொல்லப்பட்டபோதிலும் அந்த கார்யத்தில் எவரும் ப்ரவ்ருத்திக்கமாட்டார்கள். ஆகவே எந்த பலனை எவர் விரும்புகிறார்களோ அந்த பலத்திற்கு இது காரணம் என்று அறிந்தால்தான் அந்தக்கார்யத்தில் ப்ரவ்ருத்திப்பார்கள். அதனால் நியோகம் என்பதும் இச்சையை உண்டுபண்ணினால்தான் ப்ரவ்ருத்திக்கச்செய்யமுடியும். எப்படி ஸங்கீதமானது புருஷனை தன் வசப்படுத்துகின்றதோ அதுபோல் விதிவாக்யம் புருஷனை தன் வஸப்படுத்தி கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கச் செய்வதில்லை.

**பூர்வ :** நித்யகர்மாவை விதிக்கின்ற வாக்யங்கள், பலமில்லாமலேயே ப்ரவ்ருத்திக்கும்படிச் செய்கின்றதா?

**சித்தா :** 'கர்மணா பிதுர்லோக:' என்று சொல்லப்பட்டிருக்கின்றதால் நித்யகர்மாவிற்கும் பலம் இருக்கிறது. 'அஹரஹர் ஸந்த்யாம் உபாஸீத' என்ற விதிவாக்யமும் ராகத்தை உண்டுபண்ணி அதன்மூலமாகவே ப்ரவ்ருத்திக்கச் செய்கின்றது. வேதத்தில் பலன் இல்லாத கர்மாக்கள் என்பதே கிடையாது. மேலும் க்ரியை என்பது துக்ககரமானதால் தன்னுடைய இஷ்ட்டத்திற்கு இது ஸாதனம் என்று அறிந்தால்தான் கார்யத்தில் ப்ரவ்ருத்திப்பான். அவ்விதமில்லையானால் எத்தனைமுறை செய் செய் என்று விதி வாக்யம் ஏவினாலும் அதைச் செய்யமாட்டான். ஆகவே விதிவாக்யம் இஷ்ட்டத்திற்கு ஸாதனம் என்ன என்பதை தெரிவித்து அதில் இச்சையை உண்டுபண்ணி ப்ரேரகமாகிறது என்று சொல்வதுதான் ராஜமார்க்கம்.

**477. அவதாரிகை :**

இது இஷ்ட்டஸாதனம் என்று அறிவதாலேயே ப்ரவ்ருத்தி ஏற்படும் என்று சொல்லமுடியாது. உதாரணமாக, மேகச்சாயை என்பதால் ஏற்படும் நிழல் என்பது இஷ்ட்டத்திற்கு ஸாதனம் என்று அறியப்படுகிறது. அதனால் என்ன ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது?

**ச்லோகம் :**

इष्टाभ्युपायस्य च कार्यभावः प्रयत्ननिष्पाद्यतयोपपन्नः ।
स चावसेयो वचनाल्लिङादेः प्रत्यक्षतो रागनिबन्धनस्तु ॥

**ச்லோகார்த்தம் :** இஷ்ட்ட ஸாதனமான யாகம் என்பது ப்ரயத்ன ஸாத்யமாக இருக்கின்றதால், அது செய்யப்படவேண்டியது என்ற அர்த்தம் லிங்முதலான சப்தங்களினுல் சொல்லப்படுகிறது. இச்சையினுல் ஏற்படுகின்ற கார்யபாவம் என்பது ப்ரத்யக்ஷத்தினுலேயே அறியப்படுகின்றது.

**வ்யாக்யானம் :** இஷ்ட்டஸாதனமாக இருப்பது ஏதுவோ, அது ஒரு ப்ரயத்தனத்தின்மூலம் அடையக்கூடியதாக இருந்தால்தான் அந்தக்கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கமுடியும். மேகச்சாயை என்பது இஷ்ட்டஸாதனமாக இருந்தபோதிலும் அது ப்ரயத்ன ஸாத்யமாக இல்லை. இஷ்ட்டஸாதனதாஞானம் ப்ரவ்ர்த்தகம் என்று சொல்லப்பட வேண்டுமானுல், ஸாதனதா (கரணதா) ப்ரவர்த்தகம் என்று அறியப்படவேண்டும். கரணம் என்று சொன்னுல் கர்த்தாவின் வ்யாபாரத்திற்கு உரியதாக இருக்கவேண்டும். அவ்விதம் இல்லையென்ருல், ப்ரவ்ருத்தி என்பதே ஏற்படாது.

**பூர்வ :** க்ருதி உத்தேச்யத்வம் கார்யம் என்றும் சொல்லமுடியாது. யாகம் என்பது க்ருதி ஸாத்யம் என்று ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகிறது. அதனுல் சாஸ்திரமானது இதை விதிக்கவேண்டிய அவஸ்யமே இல்லை.

**சித்தா :** க்ருதிக்கு விஷயமாக இருக்கிறது என்பது மட்டும் கார்யமாக ஆகாது. அந்த விஷயம் பலம் உடையதாகவும் இருக்கவேண்டும். ஆகையால் யாகம் க்ருதிஸாத்யம் என்று அறியப்பட்ட போதிலும், அந்த யாகம் இஷ்ட்டமான பலத்திற்கு ஸாதனமா? என்பதை சாஸ்திரமே போதிக்கவேண்டும். ஆகவே, பல இச்சையினுல்தான் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது.

க்ருதிஸாத்யத்வம் கார்யம் என்றும், இஷ்ட்டஸாதனத்வம் கார்யம் என்றும் கார்யம் என்பதை இரண்டுவிதமாகச் சொல்லலாம். எவைகளெல்லாம் இஷ்ட்டஸாதனமாக இருக்கிறதோ அவைகள் எல்லாம் க்ருதி ஸாத்யம் என்று சொல்லமுடியாது. (மேகச்சாயைபோல்). அதேபோல் க்ருதிக்கு விஷயமாக இருப்பதெல்லாம் இஷ்ட்டத்திற்கு ஸாதனம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் துஷ்கார்யங்களும் க்ருதிக்கு விஷயம்தான் என்ருலும் இஷ்ட்ட ஸாதனமில்லை. ஆகவே, இஷ்ட்டஸாதனமாகவும், க்ருதி ஸாத்யமாகவும் இருப்பதையே கார்யம் என்று சொல்லலாம். ஆகையால், கார்யம் என்பது பலத்தில் இச்சை இருந்தாலும் க்ருதிஸாத்யமாக இருக்கலாம் என்று சொல்லப்பட்டபோதிலும், அது இஷ்ட்ட ஸாதனமா? இல்லையா? என்பதை சாஸ்திரத்திலிருந்தே அறிந்துக்கொள்ள வேண்டும்.

கேவல ராகத்தினுல் ப்ரவ்ருத்தி என்பது ஸகஜமாக ஸ்வயமே ஏற்படுகிறது. இவ்விதம் ஸகஜமாக ப்ரவ்ருத்திக்கின்ற விஷயத்தில் விதிதேவை இல்லை. ஸாதாரணமாக லிங்லோட் த்வ்யப்ரத்யய வாக்யமாக இருக்குமானுல், அந்த வாக்யம் ஏவலைக்குறிக்கின்றது என்பது பொதுவாக லோகப்ரஸித்தம்தான். ஆனுல், இந்த ஏவலுக்காக மட்டும் எவரும் கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கமாட்டார்கள். தன்னுடைய இச்சைக்கு இது விஷயம் என்று அறிந்தால்தான் அதில் ப்ரவ்ருத்தி ஏற்படும். லோக விஷயத்தில் ப்ரத்யக்ஷமாகவே இது இச்சைக்கு விஷயம் என்பது அறியப்படுகிறது.

அதனுல் சாஸ்திரம் இதை விதிக்கவேண்டியதில்லே. அதனுல் விதிவாக்யத்திற்கு ப்ரவ்ருத்தியை அர்த்தமாகச் சொல்லமுடியாது. வேறு எந்த ப்ரமாணங்களாலும் அறியமுடியாத விஷயத்தையே சாஸ்திரம் தெரிவிக்கவேண்டும். யாகம் என்பது க்ரியை என்பதை சாஸ்திரம் தெரிவிக்கவேண்டியதில்லே. யாகம் என்ற க்ரியையானது இஷ்டட்டமானபலத்திற்கு ஸாதனம் என்பதை சாஸ்திரம் தெரிவிக்கின்றதால், அந்த யாகத்தைச் செய்து அந்த பலனே அடையவேண்டுமென்ற இச்சையினுல்தான் ப்ரவ்ருத்திக்கின்ருன். ஆகவே ச்ரேயஸ் ஸாதனத்வம் என்பதே ப்ரவ்ருத்திக்குகாரணம் என்று சொல்லப்படும் எங்களுடைய சித்தாந்தத்தில் தோஷம் ஏதுமில்லே. இவ்விதஞானம் லிஙாதிகளே போதிக்கின்ற வாக்யங்களினுலும் ஏற்படலாம்.

**478. அவதாரிகை :**

இவ்விதம் கார்யத்வம் என்பது இரண்டுவிதமாக இருக்கின்றதென்று சொல்லப்படும் விஷயத்தில் ப்ரமாணம் என்ன? என்ருல்,

**ச்லோகம் :**

कार्यत्वमिच्छावशवर्ति किंचिदिष्टाभ्युपाये निजमस्य किंचित् ।
निजं लिङादेरवसेयमस्य साक्षिप्रसादादितरप्रतीतिः ॥

**ச்லோகார்த்தம் :** இஷ்ட்ட ஸாதனமான யாகத்தில் இச்சையினுல் ஏற்படுகின்ற கார்யத்வம் என்பதும், ஸ்வாபாவிகமாகவே இருக்கின்ற க்ருதி ஸாத்யத்வருபமான கார்யத்வம் என்பதும் இரண்டுவிதம் இருக்கின்றது. ஸ்வாபாவிகமான கார்யத்வம் என்பது லிஙாதிகளால் நிச்சயிக்கப்படுகிறது. மற்றென்று சாக்ஷிப்ரத்யயத்தினுல் அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** க்ருதி விஷயத்வம் கார்யம் என்பது ஒன்றுதானே? அந்த கார்யத்வம் என்பதை, ராகப்ரயுக்த கார்யத்வம் என்றும், விதி ப்ரயுக்த கார்யத்வம் என்றும் இரண்டுவிதமாக பிரித்துச்சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன? இவ்விதம் சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்ன?

**சித்தா :** ஏதாவது ஒரு பலத்தைக் கருதி, அதற்கு உபாயமான விஷயத்தினுல் எந்த செயலே செய்யப்படுகிறதோ அதையே கார்யம் என்று சொல்கிருேம். அதாவது ஸ்வர்க்கம் என்ற பலனே உத்தேசித்து அதற்கு உபாயமான யாகம் என்ற க்ரியையச் செய்கின்றதால், அந்த செயலேத்தான் கார்யம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் செயலுக்கு உரிய விஷயம் (க்ருதி விஷயத்வம்) என்பது யாகம் என்பதிலும் இருக்கிறது. லோக விஷயங்களிலும் இருக்கிறது. ஆனுல் ஸ்வர்க்கம் என்ற பலனுக்கு யாகம் ஸாதனம் என்ற அம்ஸம் அறிவதென்பது அஸாதாரணம். பலத்தை அடைகின்ற பர்யந்தம் கார்யம் என்பதற்கு அர்த்தம் என்பது ஸ்வாபாவிகம். இந்த விஷயமானது ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியக்கூடியது அல்ல. லிஙாதிகளினுல்தான் அறியப்படவேண்டும். இது இந்த இஷ்ட்டத்திற்கு உபாயம் என்பதை சாஸ்திரம் ஒன்றினுல்தான் அறியப்படவேண்டும். ஆகவே பொதுவாக இஷ்ட்டத்தினுல் ப்ரவ்ருத்தி என்பது எல்லா கார்யங்களிலும் இருந்தபோதிலும் ஸ்வர்க்காதிகள் போன்ற இஷ்ட்டத்திற்கு உபாயமான யாகம் என்ற க்ரியையானது ஆக்யாதம் என்ற லகாரத்தினுல்தான் அறியப்படவேண்டியதாக இருக்கிறது. இதையே இஷ்ட்ட அப்யுபாயத்வ விசிஷ்ட்டம்

கார்யம் என்று (விதி ப்ரயுக்த கார்யத்வம்) சொல்லப்படுகிறது. ராக ப்ரயுக்த கார்யத்வம் என்பது கேவல இச்சையினுல்மட்டும் ப்ரவ்ருத்திக்கின்ற கார்யம். இவ்விதம் கேவல இச்சையினுல் மட்டும் ஏற்படும் கார்யம் என்பது இஷ்ட்டத்திற்கு உபாயமாகவும் இருக்கலாம், அல்லது அநிஷ்ட்டத்திற்கு உபாயமாகவும் இருக்கலாம். இந்தகார்யம் என்பது ப்ரத்யக்ஷத்தினுலேயே அறியப்படுகிறது. அதாவது, இச்சையென்பது ஒரு விஷயத்தைப்பற்றியதாகவே இருக்கின்றதால், சாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதால் மனஸினுலேயே அறியப்படுகிறது என்பதால் இதற்கு சாஸ்திரம் தேவையில்லை. இந்தவிதம் கார்யம் என்பது இரண்டுவிதம் என்று அறியப்படுகிறது.

**479. அவதாரிகை :**

க்ருதிஸாத்யத்வம் இஷ்ட்டஸாதனத்வம் என்ற கார்யங்கள், லிங்ர்த்தத்தினுல்தான் அறிந்துகொள்ளப்படவேண்டும் என்று சொல்லப்படும் விஷயமானது பெரியோர்களாலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

**ச்லோகம் :** जानात्यर्थे लिङ्पदं गौणमाहुर्जानात्यर्थः कर्तृतन्त्रो न हीष्टः ।
यागाद्यर्थे कर्तृतन्त्रे हि मुख्यो लिङ्लोडादिः श्रेयसो हेतुभूते ॥

**ச்லோகார்த்தம் :** ஞானம் என்பது கர்த்ருதந்த்ரம் என்று ஒத்துக் கொள்ளப் படாததால், ஞானம் என்ற அர்த்தத்தில் லிங்பதமானது கௌணமாக சொல்லப்படுகிறது. ச்ரேயஸ் ஸாதனமாகவும், கர்த்ருதந்த்ரமாகவும் இருக்கின்ற யாகாதி அர்த்தங்களில் லிங்பதமானது முக்யார்த்த மென்றே சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஒரு கார்யத்தில் ப்ரவ்ருத்தி என்பது கேவல இஷ்ட்ட ஸாதனம் என்று அறிவதால்மட்டுமோ அல்லது கேவல க்ருதிஸாத்யம் எனபதினுல்மட்டுமோ ஏற்படாது. ஆகவே இஷ்ட்ட ஸாதனமாகவும் க்ருதிஸாத்யமாகவும் இருப்பது எதுவோ அதில்தான் ப்ரவ்ருத்தி என்பது ஏற்படும் என்று வித்வான்களாலும் சொல்லப்படுகிறது. அதாவது 'ஆத்மானம் ஜானீயாத்' என்ற வாக்யத்திலுள்ள 'ஜானீயாத்' என்ற லிங்பதமானது (ஏவலை குறிக்கின்ற பதமானது) விதிபோல இருந்தாலும், விதி ஸம்பவிக்கமுடியாது. ஏனெனில் ஆத்மஞானம் என்பது க்ருதி ஸாத்யமில்லை. ஞானம் என்பது ப்ரமாணதந்த்ரம். க்ரியையினுல் உண்டுபண்ணக்கூடியதல்ல. ப்ரமாணம் என்பதால் ப்ரமேயமான வஸ்துஞானம் ஏற்பட்டேயாகும். வஸ்து தந்த்ரம் ஞானம். ஆகவே க்ருதி ஸாத்யமாக இல்லாத ஞானம் என்பதில் விதி என்பதே ஸம்பவிக்கமுடியாது. (விதி தடைபட்டுவிடும்) (வாழை மரத்தை கத்தியால் வெட்டலாம். பாருங்கல்லை, கத்தியினுல்வெட்டமுடியாது). ஆகவே ஆத்மஞானம் என்பதும் ச்ரேயஸ் ஸாதனம், யாகம் என்பதும் ச்ரேயஸ் ஸாதனம்தான் என்ருலும், யாகம் என்பதில் ச்ரேயஸ் ஸாதனத்வம் என்பதும் க்ருதிஸாத்யத்வம் என்பதும் இருக்கின்றதால் அந்த வாக்யத்தில் விதி என்பது முக்யம். ஞானம் என்பதில் ச்ரேயஸ் ஸாதனத்வம் மட்டுமே இருப்பதால் விதி கௌணம் என்று சொல்லவேண்டும்.

**480. அவதாரிகை :**

**பூர்வ :** ஞானம் என்பது ச்ரேயஸ்ஸுக்கு ஸாதனம் இல்லை அதனுல்தான் ஞானத்தில் விதி கௌணம் என்று சொல்லப்படுகிறது.

**சித்தா :** இவ்விதம் சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

जानात्यर्थे श्रेयसो हेतुभावभागोऽबुद्धो बोध्यते लिङ्पदेन ।
यागाद्यर्थे श्रेयसो हेतुभावो मुख्यो बोध्यः कर्तृतन्त्रो न गौणः ॥

**ச்லோகார்த்தம் :** ஞானர்த்தத்தில் இருக்கின்ற ச்ரேயஸ்ஸாதனத்வம் என்ற அறியப்படாத அம்ஸம் லிங்பதத்தினுல் அறிவிக்கப்படுகின்றது. யாகாதிகளின் இருக்கின்ற கர்த்ருதந்திரமான ச்ரேயஸ் ஸாதனத்வம் என்பது லிங்பதத்தினுல் முக்யமாகவே சொல்லப்படுகிறதேயன்றி கௌணமாகச் சொல்லப்படவில்லை.

**வ்யாக்யானம் :** ஞானத்தை போதிக்கின்ற வாக்யங்களிலுள்ள லிஙர்த்தமானது ச்ரேயஸ் ஸாதனத்வம் க்ருதிஸாத்யத்வம் என்ற இரண்டு அம்ஸங்களையும் போதிக்காததாலும் ச்ரேயஸ் ஸாதனம் என்பதை மட்டும் போதிக்கின்றதால் அதை கௌணமென்று கல்ப்பிக்கவேண்டிய அவஸ்யம் என்ன? ப்ரஹ்மஞானத்தில் ச்ரேயஸ்ஸாதனத்வம் என்பதும் இல்லையென்றே சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ச்ரேய்ஸ்ஸுக்கு ஸாதனமாக இல்லாத ஒன்றை சாஸ்திரம் போதிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்? அஞ்ஞாதமான அர்த்தத்தை தெரிவிப்பதாலும், ச்ரேயஸ்ஸுக்கு ஸாதனமாக இருக்கின்ற விஷயத்தை தெரிவிப்பதாலும்தான் சாஸ்திரம் ப்ரமாணமாகின்றது. ஆகவே அஞ்ஞாதமான இஷ்ட்ட ஸாதனத்வத்தையே லிஙாதிகள் போதிக்கின்றது. 'தத் விஜிஞாஸஸ்வ' 'தமேவைகம் ஜானத ஆத்மானம்' 'ஸம ஆத்மேதி வித்யாத்' முதலான வாக்யங்களில் லிங்லோட் தவ்ய பரத்யயங்கள் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதம், ப்ரஹ்மஞானம் என்பதை அடையவேண்டும் என்று விதிக்கின்ற வாக்யங்களுக்குப்பிறகு ப்ரஹ்மஞானம் என்பதே மோக்ஷம் என்ற புருஷார்த்தம் என்பதையும் 'ப்ரஹ்ம வித் ப்ரஹ்மைவ பவதி' என்றும், ப்ரஹ்மவித் ஆப்னோதி பரம்' என்றும், 'தரதிசோகம் ஆத்மவித்' என்றும் பின்னுல் சொல்லப்படும் வாக்யங்களினுல் அதன் பலனையும் தெரிவிக்கின்றது. இப்பேர்ப்பட்ட புருஷார்த்தத்தையும் தெரிவித்து அதற்கு ஸாதனமான ஞானத்தையும் போதிக்கின்ற வாக்யம் ச்ரேயஸ்ஸாதனத்தை போதிக்கவில்லை என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே, ப்ரஹ்மாத்ம ஞானமானது மோக்ஷரூபமான ச்ரேயஸ்ஸுக்கு ஸாதனம் என்பதையே லிஙாதிகள் போதிக்கின்றது என்றுலும் க்ருதி ஸாத்யத்வமாக இல்லாததால் லிஙாதிகள் முக்யமில்லை கௌணம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் ப்ரஹ்மஞானம் இஷ்ட்டஸாதனம் இல்லையென்று யாராலும் சொல்லமுடியாது.

('தத்விஜிஞ்ஞாஸஸ்வ' என்று தைத்ரீயச்ருதியும் தமேவைகம் ஜானத ஆத்மானம் என்று முண்டகச்ருதியும் ஸம ஆத்மேதி வித்யாத் என்று (கௌ 3—8) வாக்யங்களில் லிங்லோட் தவ்யப்ரத்யயங்கள் ப்ரயோகம் செய்யப்படுகிறது.)

**481. அவதாரிகை :**

ப்ரஹ்மஞானம் என்பது ச்ரவணுதிகளால்தான் ஏற்படவேண்டுமானதால், ச்ரவணுதிக்ரியை என்பதும் யாகாதிகள் போல கர்த்ரு தந்த்ரமாக இருக்கின்றதால், ச்ரவணுதிகளில் விதி முக்யம் என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

यागाद्यर्थे मुख्यता यद्वदस्य ब्रह्मज्ञानस्यान्तरङ्गेषु तद्वत् ।
तर्कादीनां कर्तृतन्त्रत्वहेतोर्ज्ञानादर्वाग्गौणता हेत्वभावात् ॥

**ச்லோகார்த்தம் :** யாகாதி விஷயங்களில் லிஙாதி பதங்களுக்கு முக்யார்த்தம் ஸம்பவிக்கின்றது. அதேபோல் ஞானம் அடைவதற்குமுன், ப்ரஹ்மஞானத்திற்கு அந்தரங்க ஸாதனங்களான தர்க்கம் முதலான விஷயங்கள் கர்த்ரு தந்த்ரமாக இருக்கின்றதால் லிஙாதி பதங்களுக்கு முக்யார்த்தமே ஸம்பவிக்கின்றது. ஏனெனில் கௌணார்த்தம் சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** ச்ரவணாதிகளும் ஞானாத்மகமாக இருக்கின்றதால் கர்த்ரு தந்த்ரமென்று சொல்லமுடியாது. ஆகவே ச்ரவணாதிகளில் விதிக்கு முக்யத்வம் எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** ச்ரவணாதிகள் யுக்தி முதலானவைகளைக்கொண்டு தீர்மானித்து அறியப்பட வேண்டியதாக இருக்கின்றதால் ச்ரவணாதிகள் க்ரியாரூபம், கர்த்ருதந்த்ரம் என்றே சொல்லவேண்டும் அதனால் கௌணமென்று சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லை.

**பூர்வ :** ப்ரஹ்மஞானமானது அஞ்ஞான நிவர்த்திமூலமாக ஸம்ஸார நிவர்த்தி ரூபமான பலத்தை உண்டு பண்ணுகின்றதால், ஞானம் ஏற்பட்டால் அஞ்ஞான நிவர்த்தித்வாரா மோக்ஷமென்றபலன் ஏற்படும், ஞானம் ஏற்படவில்லையானால் மோக்ஷமென்ற பலனும் இல்லை என்று அன்வயவ்யதிரேகத்தைக் கொண்டே மோக்ஷமென்ற பலனுக்குஞானம் ஸாதனம் என்பது அறியப்படுகிறது. அவ்விதமிருக்கின்றபோது, லிஙாதிகள் அறியப்படாத ஒரு விஷயத்தை போதிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** அவ்விதம் மோக்ஷத்திற்கு சாதனம் ச்ரவணாதிகள் என்பதை அன்வய வ்யதிரேகத்தைக்கொண்டு அறிந்துகொள்ளமுடியும். ஆனால் வேதாந்த விசாரம் செய்யப்பட்டாலும், அபரோக்ஷஞானம் ஏற்படவில்லை என்றால், ஆத்மஞானத்திற்கு ச்ரவணாதிகள் ஸாதனமா இல்லையா என்ற ஸந்தேகம் ஏற்படலாம். இப்பேர்ப்பட்ட அவித்வானுக்கு மோக்ஷமென்ற பலனுக்கு, இதுவே ஸாதனம் என்பதை லிஙாதிகள் போதிக்கின்றது என்றே சொல்லலாம். ச்ரவணாதிகள் என்பது ப்ரஹ்மஞானத்திற்கு அந்தரங்கஸாதனமாக இருக்கின்றதாலும் கர்த்தாவென்பவன் ச்ரவணமனனாதிகளை ஆத்ம சாக்ஷாத்காரம் ஏற்படுவதற்காக நான் செய்கிறேன் என்று அபிமானத்துடன் செய்கின்றதால் ச்ரவணாதிகளில் லிஙாதிகளுக்கு கௌணத்வம் கல்பிக்கவேண்டிய காரணம் ஏதுமில்லை. ஆகவே விதியென்பது முக்யமா கௌணமா என்று அறிவதற்கு ச்ருதி ஸாத்யமா இல்லையா என்ற விஷயம்தான் காரணம். ஆகவே விதிமுக்யமா கௌணமா என்பதற்கு ச்ரேயஸ் சாதனத்வம் என்பது காரணமில்லை.

**482. அவதாரிகை :**

**பூர்வ :** பூமீமாம்ஸகர் சித்தாந்தப்படி 'பூதம் பவ்யாய வ்யபதிச்யதே' என்று, வேதம் என்பது க்ரியையைத்தான் கர்த்தவ்யமாக போதிக்கின்றது. (விதிக்கப்படுகின்றது) என்றும் க்ரியையாக இல்லாத சித்தார்த்தத்தை போதிக்கின்ற வாக்யங்கள் ஸாத்யமான க்ரியைக்கு அங்கமாக இருக்கின்றதால், சித்தமான ஆத்மாவை போதிக்கின்ற வாக்யங்கள், ச்ரவணாதிக்ரியையை போதிக்கின்ற வாக்யங்களுக்கு அங்கமாகத்தான் இருக்கவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல.

**ச்லோகம் :** भूतस्य भव्याय यथोपदेशः क्रियापरे वस्तुपरे तु काण्डे ।
न हीष्टमेवं विपरीतमस्मिन्भव्यस्य भूताय सदोपदेशः ॥

**ச்லோகார்த்தம் :** கர்ம காண்டத்தில் சித்தவஸ்து பரமான வாக்யங்கள் பரிபூரணமாக ஸாத்ய வஸ்துவை அறிந்துகொள்வதற்கு உபயோகமாகின்றது. இங்கு (ஞானகாண்டத்தில்) அவ்விதமில்லை. ஸாத்யவஸ்துபரமான வாக்யங்கள் சித்தவஸ்துவை அறிந்துகொள்வதற்கு உபயோகமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஞானம் என்பது அஞ்ஞாதமான ச்ரேயஸ் சாதனமாக இருக்கின்றதால் ப்ரஹ்மஞானத்தில் விதி என்பது முக்யமில்லை கௌணம் என்று சொல்லப்பட்டபோதிலும் ஆத்மஞானத்தை போதிக்கின்ற ச்ரவணாதிகள் க்ருதி சாத்யமாக இருக்கின்றதால் ச்ரவணாதிகளில் விதி முக்யமென்றே சொல்லலாம் என்பதால் ஆத்மாவாऽரே த்ரஷ்டவ்ய:, ச்ரோதவ்ய: என்று சித்தமான ஆத்மதத்வத்தை (பூதார்த்தத்தை) போதிக்கின்ற வாக்யங்கள் (ச்ரவணாதிகளை விதிக்கின்ற வாக்யங்களை அனுசரித்து) ச்ரவணாதி விதிகளுக்கு அங்கம் என்று சொல்லலாமே? ஆகவே வேதாந்த வாக்யங்கள் விதிபரமான வாக்யத்தில்தான் முடிவை அடைகிறது (பர்யவஸானம்) என்றுதான் சொல்லவேண்டும். ஆகையால் ஆத்மாவை போதிக்கின்ற வாக்யங்கள் வஸ்துநிஷ்டத்வம் என்று சொல்லமுடியாது, 'பூதம் பவ்யாயவ்யபதிச்யதே' என்ற ந்யாயத்தைக்கொண்டே சித்தபரமான வாக்யங்களுக்கும் அர்த்தம் சொல்லப்படவேண்டும்.

**சித்தா :** (கர்ம காண்ட வாக்யங்களெல்லாமே விதி பரம் என்று சொல்லமுடியாது என்பதுதான் உண்மை ஆனாலும்) 'பூதம் பவ்யாய வ்யபதிச்யதே' என்ற ந்யாயமானது கர்மகாண்டத்தில் க்ரியையை ப்ரதானமாக உபதேசிக்கின்றதால் அந்த இடத்தில் க்ரியைக்கு ப்ராதான்யமும் மற்றவைகளுக்கு அங்கஸ்தானீயம் என்றும் சொல்லப்படுவது ந்யாயம்தான். ஆனால் ஞானகாண்டம் என்பதில், ஸர்வவாக்யங்களும் சித்தமான வஸ்துவை போதிக்கின்றதால், பூதத்திற்கு ப்ராதான்யமும், பவ்யத்திற்கு அப்ராதான்யமும்தான் சொல்லப்படவேண்டும். ஆகவே 'பூதம் பவ்யாயவ்யபதிச்யதே' என்ற ந்யாயம் பொருந்தாது. பவ்யம் பூதாய வ்யபதிச்யதே என்றே சொல்லவேண்டும்.

**483. அவதாரிகை :**

'பூதம் பவ்யாயவ்யதிச்யதே' என்ற ந்யாயத்திற்கு விபரீதமாக 'பவ்யம் பூதாயவ்யபதிச்யதே' என்று எப்படிச் சொல்வது? என்றால்

**ச்லோகம் :**

भव्यप्रतीतावुपयोगभाजो भवन्ति कात्स्न्येन च सिद्धवादाः ।
क्रियाप्रधाने न तथाऽत्र किं तु भूतप्रतीतौ खलु भव्यवादाः ॥

**ச்லோகார்த்தம் :** கர்மகாண்டத்தில் சித்த வஸ்துபரமான வாக்யங்கள் பரிபூரணமாக ஸாத்யவஸ்துவை அறிந்துகொள்வதற்கு உபயோகமாகின்றது. இங்கு (ஞானகாண்டத்தில்) அவ்விதமில்லை. ஸாத்யவஸ்துபரமான வாக்யங்கள் சித்தவஸ்துவை அறிந்துகொள்வதற்கு உபயோகமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஒரே வேதத்திலுள்ள இரண்டு காண்டங்களில், கர்மகாண்டமானது 'பூதம் பவ்யாயவ்யபிதிச்யதே' என்று தெரிவிக்கின்றது என்றும் ஞானகாண்டத்தில் 'பவ்யம்பூதாயவ்யபதிச்யதே' என்றும் ஒன்றுக்கொன்று விபரீதமாக விபாகம் செய்து தெரிவிக்கிறது என்று சொல்வது எப்படிப்பொருந்தும்? ஏனெனில் வேதம் என்ற ப்ரமாணம் தெரிவிக்கின்ற விஷயத்தில் வித்யாஸம் எப்படிச்

சொல்லமுடியும்? என்ருல் இரண்டும் ஒரே வேதத்தில்தான் சொல்லப்படுகிறது. கர்மகாண்ட வாக்யங்கள் த்ரவ்யம், குணம் முதலான பூதார்த்தங்களை போதிக்கின்றது. அவ்விதம் போதிக்கப்படும் த்ரவ்யாதிகள் க்ரியாரூபமான யாகாதிகளில் உபயோகமாகின்றது. அதனுல் 'பூதம் பவ்யாயவ்யதிச்யதே' என்று சொல்லலாம். ஆனுல் அதுபோல் அத்வைத பரமான சித்தவஸ்துவை போதிக்கின்ற ஞானகாண்டத்தில், விதிக்கு உபயோகமே கிடையாது. ஆகவே, வேதம் என்பது ப்ரமாணந்தான். ஆனுல் எந்த வாக்யத்திற்கு எந்த அர்த்தம் பொருந்துமோ அந்த அர்த்தத்தைத்தான் சொல்லமுடியும். 'ஸ்வர்க்கம் என்ற பலனுக்கு யாகம் ஸாதனம்' என்று தெரிவிக்கின்ற வாக்யத்தினுல் க்ரியைக்குத்தான் புருஷார்த்த ஸாதனத்வம் இருக்கின்றது. ஆகவே புருஷார்த்தத்திற்கு ஸாதனமாக இருப்பதால் க்ரியை என்பது ப்ரதானமாகவும் மற்றவை அப்ரதானம் என்றும் சொல்லலாம். ஏனெனில் பூதார்த்தத்தை அறிவ்தால் மட்டும் பலன் கிடையாது. க்ரியாப்ரதீதிக்கே பலம். ஆகவே பலமுள்ளது எதுவோ அதுவே ப்ரதானம். பலமில்லாதது (அப்ரதானம்) அங்கம் என்று சொல்லவேண்டுமென்ற ந்யாயம் பொருந்தும். "பலவத் ஸன்னிதௌ அபலம் ததங்கம்"என்பது ந்யாயம். ஆனுல் ஞானகாண்டத்தில் மோக்ஷமென்ற புருஷார்த்தத்திற்கு ஆத்மஞானம் நேரிடையான சாதனம். இந்த ஆத்மஞானத்திற்கு ச்ரவணுதிகள் சாதனம் (உபயோகமாகிறது) என்று சொல்லவேண்டுமேயன்றி நேரிடையாக புருஷார்த்தஸாதனத்வம் சொல்லமுடியாது. மஹா வாக்யச்ரவணத்தினுல்தான் ஞானம் ஏற்படவேண்டும். ஆத்மஞானம் ஏற்படுவதற்கு, ப்ரதிபந்தகமாக இருக்கின்ற ப்ரமாண அஸம்பாவனை ப்ரமேய அஸம்பாவனை விபரீதபாவனை என்ற அஸம்பாவனைகளை நிவர்த்திக்கின்றதன் மூலமாகவே ச்ரவணுதிகள் ஞானத்திற்கு உபயோகமாக ஆகிறது. ஆகவே ஞானம்தான் மோக்ஷமென்ற பலனை கொடுப்பதால் ஞானமே ப்ரதானம் ச்ரவணுதிகள் அங்கம் (அப்ரதானம்). ச்ரவணுதிகளுக்கு தனித்தபலன் ஏதுமில்லாததால் ஆத்மஞானத்திற்கு ச்ரவணுதிகள் அங்கம் என்றே சொல்லவேண்டும். ஆகவே 'பவ்யம் பூதாயவ்யபதிச்யதே' என்று ஞான காண்டத்தில் சொல்லப்படுகிறது.

**484. அவதாரிகை :**

சித்தமான ஆத்மதத்வத்தை போதிக்கின்ற "ஸத்யம், ஞானம்" போன்ற உபநிஷத்வாக்யங்கள் ச்ரவணுதி க்ரியைக்கு வேண்டிய விஷயங்களை ஸமர்ப்பணம் செய்வதன்மூலம் அவைகள் எல்லாம் ச்ரோதவ்யம் மந்தவ்யம் முதலான பவ்யார்த்தத்தையே போதிக்கின்ற விதிவாக்யத்திற்கு அங்கமாக ஆகலாமே? என்ருல், அவ்விதம் சொல்ல முடியாது. பலவத் ஸன்னிதௌ அபலம்ததங்கம் என்ற ந்யாயப்படி ஆத்மஞானம் என்பதே மோக்ஷம் என்ற பலனைக்கொடுக்கின்றதால் ஞானமே ப்ரதானம் ச்ரவணுதிகளையே அங்கம் என்று சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

भव्यप्रतीतौ न हि कश्चिदर्थो भूतप्रतीतौ पुनरस्ति मुक्तिः ।
श्रोतव्य इत्यादि ततो विधानं भूतोपदेशानुगुणं समस्तम् ॥

**ச்லோகார்த்தம் :** ஞானகாண்டத்தில் ஸாத்யவஸ்துவின் ஞானத்தினுல் எவ்வித புருஷார்த்தமும் ஏற்படுவதில்லை. ஆகவே, ச்ரோதவ்ய: என்பது முதலான விதிவாக்யங்கள் சித்தவஸ்துபரமான வாக்யங்களுக்கு அங்கமேயாகும்.

**வ்யாக்யானம் :** ஒரே வேததத்தில் இருக்கின்ற காண்டங்கள் இரண்டும் ஒரேவிதமாகத்தானே போதிக்கவேண்டும்? ஒன்று க்ரியையை போதிக்கின்றது என்றும் ஒன்று சித்தவஸ்துவை போதிக்கின்றது என்றும் ஏன் சொல்லவேண்டும்? வேதாந்தங்களிலும் 'பூதம் பவ்யாயவ்யபதிச்யதே' என்று ஒத்துக்கொள்ளலாமே? என்ருல்

அவ்விதம் சொல்லமுடியாது. பவ்யார்த்தம் என்று சொல்லப்படும் ச்ரவணுதிகளை புருஷார்த்தம் என்று சொல்லப்படவுமில்லை, கல்பிக்கப்படவுமில்லை. ஏனெனில் கல்பிப்பதற்கு உரிய காரணம் ஏதுமில்லை. ஏனெனில் 'ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவபவதி' என்பது போன்ற வாக்யங்கள் ப்ரஹ்மஞானத்திஞல் ப்ரஹ்மபாவம் ஏற்படுகிறது என்று ஜீவப்ரஹ்ம ஐக்யஞானத்திஞல் மோக்ஷமென்ற புருஷார்த்தம் சித்திக்கின்றது என்று ஸ்பஷ்டமாக பலன் சொல்லப்படுகிறது. அத்துடன் வித்வான்களின் அனுபவத்திற்கும் விஷயமாக இருக்கிறது. இவ்விதம் சித்தார்த்தமான ஞானத்திற்கே மோக்ஷமென்ற பலன் என்று சித்தமாகின்றதால் ச்ரவணுதிகளில் பலனை கற்பிக்கப்படுமாஞல் ச்ருதஹானி அச்ருதகல்பனம் என்ற தோஷம் ஏற்படும். ஆகவே 'பலவத் ஸன்னிதௌ அபலம்ததங்கம்' என்ற ந்யாயப்படி தத்வமஸ்யாதி வாக்யங்களிஞல் ஏற்படும் ஆத்மஞானத்திற்கும் ச்ரவணுதிகள் அங்கம் என்றே சொல்லப்படவேண்டும்.

**485. அவதாரிகை :**

**பூர்வ :** ச்ரவணுதி வாக்யங்களில் விதி என்பது முக்யம் என்று சொல்லப்படுமாஞல், ச்ரவணுதிகளை கர்த்தவ்யமாக உபதேசிக்கப்படுவதால் அவைகள் ப்ரவ்ருத்தி பரமாகஇருக்கின்றது. வேதாந்தம் சித்தபரமான வாக்யங்கள் நிவ்ருத்தியைபோதிக்கின்றது. இவ்விதம் இருக்கின்றதால் நிவ்ருத்திபரமான வாக்யங்களுக்கு ப்ரவ்ருத்தி பரமான வாக்யம் அங்கம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** ஸத்யம். ஆஞல் ச்ரவணுதிகளிஞல் ஆத்மஞானம் ஏற்படுகிறது என்று ஏகவாக்யமாகவே அர்த்தம் செய்யப்படவேண்டும். அதில் ஞானம்வேறு ச்ரவணம் வேறு என்று பிரித்து இரண்டும் முக்யம் என்று சொன்ஞல்தான் விரோதம். ஞானத்திற்கு முக்யார்த்தமும், ச்ரவணுதிகள், அதற்கு சாதனமாக இருப்பதால் அங்கபாவம்தான் சொல்லப் படவேண்டுமென்பது லக்ஷணையிஞல் கிடைக்கின்றது. (ஆகவே விரோதமில்லை).

**ச்லோகம் :**

आदाय मुख्यगुणलाक्षणिकप्रवृत्तीर्भव्यप्रतीतिजनकैः सह भूतवादाः ।
संबन्धिनो विधिवचःसु तथाऽत्रसर्वे भव्यार्पणाः परिवृढप्रतिपादकेन ॥

**ச்லோகார்த்தம் :** கர்ம காண்டத்தில் சித்தவஸ்துபரமான வாக்யங்கள் முக்யவ்ருத்தி, கௌணவ்ருத்தி, லக்ஷணுவ்ருத்தி இவைகளின்மூலம் ஸாத்யவஸ்து ஞானத்துடன் ஸம்பந்தப்படுகின்றது. அதேபோல் ஞானகாண்டத்தில் ஸாத்யபரமான வாக்யங்கள் சித்தவஸ்துபரமான வாக்யங்களுடன் ஸம்பந்தப்படுகின்றது.

**வ்யாக்யானம் :** 'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:' என்பதில், தவ்யப்ரத்யயம் இருக்கிறது என்ருலும் ஞானம் என்பதில் விதி ஸம்பவிக்கமுடியாது. ஆகவே இந்த வாக்யத்திலுள்ள த்ரஷ்டவ்ய: என்ற பதார்த்தத்தில் விதி கௌணம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் இதில் விதியானது கர்த்ருதந்தரமில்லை. கர்ம காண்டங்களிலுள்ள விதிவாக்யங்களில் சொல்லப்படுகின்ற ததி முதலான பூத வாக்யங்களும் இருக்கின்றதால் அந்தந்த இடங்களில் உள்ள வாக்யத்தின் தாத்பர்யத்தை அனுசரித்து இது முக்யமா? கௌணமா?

அல்லது லாக்ஷணிகமா என்பதை பரீக்ஷித்து அறிந்து பூதவாக்யங்கள் பவ்யார்த்தமான வாக்யங்களுடன் அங்கபாவத்தை அடைந்து ஸம்பந்தத்தை அடைகிறது என்று அறியவேணடும். அதேபோல் வேதாந்தங்களில் க்ரியாபோதகமான வாக்யங்கள், சித்தமான ப்ரஹ்மவஸ்துவை போதிக்கின்ற வாக்யங்களுடன் முக்யமாகவோ கௌணமாகவோ லாக்ஷணிகமாகவோ அங்கபாவேள ஸம்பந்தத்தை அடைகிறது என்று சொல்லலாம். வேதாந்தமானது சித்தவஸ்துவையே ப்ரதானமாக போதிக்கின்றதால் ப்ரஹ்ம தத்வத்தை போதிக்கின்ற 'தத்வமஸ்யாதி' வாக்யங்களுக்கு விரோதமில்லாமல் ச்ரவணாதிகளை விதிக்கின்ற வாக்யங்களுக்கு அர்த்தம் சொல்லப்படவேண்டும். ஆகவே 'லிங்லோட்தவ்ய ப்ரத்யயம் விதி:' என்று சொல்வது சரியல்ல. வாக்யத்தின் தாத்பர்ய விஷயம் எதுவோ அதுவே விதிவாக்யம். தாத்பர்யமில்லையென்றால் அதற்கு ப்ராதான்யமும் கிடையாது. ச்ரவணாதிகளில்பலன் என்பது இல்லாததால் பூதார்த்தத்திற்கே ப்ராதான்யம் சொல்லப்படவேண்டும் என்பதால் தாத்பர்யவிஷயத்தை அனுசரித்து ச்ரவணாதி வாக்யங்களுக்கு லக்ஷணையினால் அங்கபாவம் சொல்லப்படுவதால் எவ்வித விரோதமுமில்லை.

**486. அவதாரிகை :**

**பூர்வ :** மந்த்ரம், அர்த்தவாத வாக்யங்கள் எல்லாம் அனுவாதகமாக இருக்கின்றதால், அவைகளில் விதிஇல்லை. அதனால் அவைகளில் லக்ஷணையாக அர்த்தம் சொல்லலாம். ஆனால் ச்ரோதவ்யம் முதலான வாக்யங்களில், லிங்லோட் தவ்யப்ரத்யயமான விதி இருக்கின்றதால், ச்ரவணாதி வாக்யங்களில் எப்படி லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யமுடியும்?

**சித்தா :** எந்த வாக்யத்தில் எதை ப்ரதான விஷயமாகச்சொல்லப்படுகிறதோ அந்த விஷயத்தில் லக்ஷணை சொல்லமுடியாது. எந்த விஷயம் குணமாகச் சொல்லப்படுகிறதோ அதில் லக்ஷணையை கல்பிக்கலாம் என்பதுதான் நியமம் (சட்டம்). ஆகவே விதி இல்லையென்றால் லக்ஷணையைக் கல்பிக்கலாம் என்பது சரியல்ல புருஷார்த்தத்தை தெரிவிப்பது எதுவோ அதுவே ப்ரதானம் ச்ரவணாதிகள் அதற்கு அங்கம் என்பதால் லிங்லோட் தவ்யப்ரத்யயம் இருந்தாலும் லக்ஷணையை கல்பிக்கலாம், மந்த்ர அர்த்தவாதங்களிலும் லிங்லோட் தவ்யப்ரத்யயம் இல்லாவிடினும் குணமாக இருப்பதால் லக்ஷணையை கல்பிக்கலாம். 'வ்ருஹிநவஹந்தி' என்ற வாக்யத்தில் லிங்லோட் த்வயப்ரத்யயம் இல்லாவிட்டாலும்கூட வ்ருஹி அவஹனனம் என்பதற்கும் அத்ருஷ்டமான பலனுக்கும் ஸம்பந்தம் இருப்பதால், அபூர்வத்திற்கு ஸாதனம் என்ற காரணத்தினால் லக்ஷணையினால் விதியை ஒத்துக்கொண்டு அவஸ்யம் வ்ருஹியை அவஹனனம் செய்தே ஆகவேண்டும் என்று விதி (அவஹந்தி என்றிருந்தாலும் அவஹன்யாத் என்று அர்த்தம்) என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

सिद्धार्थवादिवचनेषु न गौणतादिर्दोषाय कर्मपरवाक्यगतेषु यद्वत् ।
कार्यार्थवादिवचनेषु न गौणतादिर्दोषस्तथोपनिषदीति समानमेतत् ॥

**ச்லோகார்த்தம் :** கர்ம காண்டத்திலுள்ள சித்தவஸ்து பரமான பதங்களுக்கு கௌணத்வம் என்பது எப்படி தோஷமென்று சொல்லப்படுகின்றதோ அதேபோல் உபநிஷத்தில் இருக்கின்ற கார்யபரமான பதங்களுக்கும் கௌணத்வம் என்பது தோஷமாகச் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** ச்ரவணாதி விதிகளுக்கு முக்யத்வம் சொல்லாவிடில் தோஷம் ஏற்படாதா? என்றால்

**சித்தா :** கர்மகாண்டத்தில் எப்படி ப்ரதானமான க்ரியாபரமான வாக்யத்துடன் சித்தார்த்தவாக்யங்களுக்கு அன்வயம் ஏற்படுவதற்காக லக்ஷணையினுல் கௌணத்வம் கல்பிக்கப்படுகிறதோ அதுபோல் உபநிஷத்வாக்யங்கள் சித்தார்த்தப்ரதானமாக இருக்கின்றதால், அப்ரதானமான பவ்யார்த்தத்தில் லக்ஷணை ஒத்துக்கொள்ளப்படுவதில் எவ்வித தோஷமும் கிடையாது. இதே விஷயத்தை கீழே ஔதாசீன்ய விசேஷம் என்ற ச்லோகத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

**487. அவதாரிகை :**

கர்மகாண்டத்தில் 'பூதம் பவ்யாயவ்யபதிஸ்யதே' என்று ந்யாயம் சொல்லப்படுகிறது. ஆனுல் ஞானகாண்டத்தில் அதற்கு நேர்மாருக 'பவ்யம் பூதாயவ்யபதிச்யதே' என்று சொல்கிருேம். இதுமட்டுமல்ல இதேபோல், கர்மகாண்டத்தில் மானத்தினுல் மேயம் சித்திக்கிறது, ஆனுல் ஞானகாண்டமானது அதற்கு விபரீதமாக மேயத்தினுல் மானம் சித்திக்கின்றது என்று மாருன ந்யாயம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

मानेन मेयावगतिश्च युक्ता धर्मस्य जाड्याद्विधिनिष्ठकाण्डे ।
मेयेन मानावगतिश्च युक्ता वेदान्तवाक्येष्वजडं हि मेयम् ॥

**ச்லோகார்த்தம் :** தர்மம் ஜடமாக இருக்கின்றதால், ப்ரமாணத்தின்மூலம் ப்ரமேயமான தர்மம் அறியப்படுகிறது என்று சொல்வது கர்மகாண்டத்தில் பொருந்துகின்றது. வேதாந்தத்தில் ப்ரமேயமானது சேதனமாக இருக்கின்றதால், ப்ரமேயமான ஆத்மாவினுல் ப்ரமாணங்கள் அறியப்படுகிறது என்று சொல்வது பொருந்துகின்றது.

**வ்யாக்யானம் :** ஒரே வேதம் என்பது, கர்மகாண்டம் ஞான காண்டம் என்ற இரண்டு பாகங்களையுடையதாக இருந்தாலும் இரண்டும் ப்ரமாணமென்றே சொல்லவேண்டும். இதில் பூர்வ காண்டத்திற்கும், உத்தரகாண்டத்திற்கும் ஒன்றுக்கொன்று விருத்தமான (வித்யாஸமான) அர்த்தத்தை போதிக்கின்றதாக எப்படிச்சொல்லமுடியும் என்ருல், இதுமட்டுமல்ல. இந்தவிதம், வேதத்திலுள்ள இரண்டு காண்டங்களில் இப்போது சொல்லப்பட்ட (வைஷம்யம்) விரோதம் மிகவும் அல்பம். இரண்டு காண்டங்களிலுமுள்ள விஷயங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டதாக எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றது. லோகத்தில், பண்டிதன் முதல் பாமரன்வரையில் எல்லோருக்கும் ப்ரமாணத்தினுல், ப்ரமேயம் அறியப்படுகிறது என்றே ப்ரஸித்தமாக அறியப்பட்டிருக்கிறது. இவ்விதம் மானம் என்பது விஷயத்தை அறிவிக்கின்றதென்றும் மேயம் என்பது அறியப்படும் விஷயம் என்பதும் ப்ரஸித்தமாக இருந்தபோதிலும், வேதாந்தத்தில் இந்த ந்யாயம் மாறுபட்டு இருக்கின்றது. அதாவது வஸ்து ஸ்வரூபம் எப்படி இருக்கிறதோ அதை அனுசரித்தே இது மானம் என்றும் இதுமேயம் என்றும் சித்திக்கவேண்டும். ஸ்வபாவத்திலேயே ப்ரகாசமற்றதான ஜடவஸ்துக்கள் அதற்கு ப்ரகாசகமான ப்ரமாணத்தினுல்தான் அவைகள் ப்ரகாசிக்க வேண்டும் என்பது ந்யாயம். ஆகவே அந்த:கரணம் என்பதும் ஸ்வயம் ஜடமாக இருந்தபோதிலும், (சைதன்யப்ரதி பல்னம் ஏற்படக்கூடியதாக இருக்கின்றதால்), சிதாபாஸவ்யாப்தியினுல் மற்ற ஜட வஸ்துக்களை ப்ரகாசிக்கச்செய்கிறது. ஆகவே ப்ரகாசமில்லாத ஜடவஸ்து ப்ரகாஸ ஸ்வரூபமான சைதன்யத்தை அபேக்ஷித்து ப்ரகாசிக்கின்றது என்று சொல்வதுபொருந்தும். அதனுல் கர்மகாண்டத்தில் சொல்லப்படும் தர்மம் என்பது ஜடமானதால், அந்த தர்மமென்பது

வேதம் என்ற ப்ரமாணத்தினுல் அறியப்படுகிறது என்பதால் தர்மம் என்பது மேயம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் ஞானகாண்டத்தில் மேயமாகச் சொல்லப்படும் விஷயமான ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாச (ஸ்வரூபமானதால்) ஸ்வபாவமானதால், மேயமென்று சொல்லப்பட்டபோதிலும், ஸர்வப்ரமாண ப்ரமேயங்களுக்கும் ப்ரகாஸகமாக இருக்கின்ற தால் அதுவே (ப்ரஹ்மமே)மானம் என்று சொல்வதுதான் பொருந்தும். ஆகவே, இந்தவிதம் ப்ரமாணம் ப்ரமேயத்தை ப்ரகாசப்படுத்துகிறது என்ற தன்மை இருந்தபோதிலும், அந்த ப்ரமாணங்களும் எந்த ப்ரஹ்மத்தினுல் (மேயத்தினுல்) சித்திக்கின்றதோ அந்தவஸ்து மானத்தினுல் மேயமாகிறது என்று சொல்லமுடியாது. அதனுல் விபரீதமாகச் சொல்லப்படுகிறது.

**பூர்வ :** ப்ரஹமத்தினுல்தான் ப்ரமாணமே ப்ரகாஸிக்கின்றது என்ருல் ப்ரஹ்மென்பது வேதாந்தவேத்யம் என்று எப்படிச்சொல்வது?

**சித்தா :** ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாச ஸ்வரூபம்தான் என்ருலும் அதற்கு ஆவாரகமான அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மாகாரவ்ருத்தியினுல்தான் நிவர்த்திக்கப்படவேண்டும். அதனுல் சாஸ்திரத்தின் அபேக்ஷை தேவைப்படுகிறது என்ற காரணத்தினுல் வேதாந்த வேத்யம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் உண்மையில் ஸ்வப்ரகாச ஸ்வரூபமான ப்ரஹ்மமானது ஸ்வய்மே ப்ரகாசிக்கின்றதால், ப்ரமாணத்தினுல் ப்ரமேயம் என்று சொல்லமுடியாது.

**488. அவதாரிகை :**

வேதம் பூராவும் ஆக்யாதம் என்ற விதிதான் ப்ரதானம் என்று (ஸர்வம் க்ரியாபரம்) சொல்லப்படும் விஷயத்திலும் வேதாந்த பாகத்தில் நேர் விபரீதமாகவே அர்த்தம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

कर्मप्रधानेऽतिगते च काण्डे वाक्यत्वमाख्यातपदप्रयुक्तम् ।
ब्रह्मप्रधाने श्रुतिमस्तकेऽस्मिन्नामप्रधानं वचनं समस्तम् ॥

**ச்லோகார்த்தம் :** கர்ம ப்ரதானமான பூர்வ காண்டத்தில் வாக்யத்வம் என்பது ஆக்யாதம் என்பதை அனுசரித்து இருக்கின்றது. ப்ரஹ்ம ப்ரதானமான இந்த வேதாந்தத்தில் எல்லா வாக்யங்களும் நாமப்ரதானமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** மேலும் கீழே சொல்லப்பட்ட விரோதம்மட்டுமில்லை நிருக்த க்ரந்தக்காரரான யாஸ்கர் முதலானவர்களால் சொல்லப்பட்ட ந்யாயமும் மாறப்படுகிறது. அதாவது வாக்யம் என்ருலே அதில் க்ரியாப்ரதானமாக இருந்தால்தான் அதை வாக்யமென்றே சொல்லலாம் என்று சொல்லப்படும் ந்யாயம் க்ரியையை ப்ரதானமாக தெரிவிக்கின்ற கர்மகாண்டத்தில்தான் பொருந்தும். ஆனுல் வேதாந்தத்தில் எந்த வாக்யமாக இருந்தாலும் அது பூதபரம் என்றே சொல்லப்படவேண்டும். ஏனெனில் ஞானகாண்டத்தில் ப்ரஹ்மஞானத்தினுலேயே மோக்ஷம் என்ற புருஷார்த்தம் சித்திக்கின்றதால், சித்தவஸ்துவை தெரிவிக்கின்ற பதங்கள்தான் ப்ரதானம். ஆகையால் நாமபதத்தை அல்லாமல், வேருன க்ரியாபதம் சொல்லப்பட்டிருந்தாலும்கூட அவைகளுக்கு ப்ராதான்யம் இல்லலாததால் ஸுபந்தமான நாமபதத்துடன் திஙந்தமான க்ரியாபதத்திற்கு அன்வயம் சொல்லவேண்டும். இவ்விதம் பூதவஸ்துவான ப்ரஹ்மஞானம் என்பதே பலவத்தாக இருப்பதால் அதுவே ப்ரதானம்.

**489. அவதாரிகை :**

க்ரியாபரமான விதி வாக்யத்திற்கும், சித்தபரமான வாக்யத்திற்கும் உள்ள வைலக்ஷண்யம் (வித்யாஸம்) என்ன? என்பதை முன்னுலேயே விளக்கப்பட்டிருக்கிறது அதையே மறுபடி ஞாபகப்படுத்தப்படுகிறது.

**ச்லோகம் :**

कार्यप्रधानमखिलं च पदं सुबन्तमाख्यातमेव फलतः खलु कर्मकाण्डे ।
तद्वत्तिङन्तमपि वेदशिरःसु सर्वं नामैव तद्धि परिनिष्ठितवस्तुनिष्ठम् ॥

**ச்லோகார்த்தம் :** கர்ம காண்டத்தில் நாம பதங்கள் எல்லாமே கர்ம பரமாக இருக்கின்றதால் பொதுவாக (அதன் கருத்தை ஆராய்கின்றபோது) பலத்தில்தான் ஆக்யாதம் என்ருகிறது. அதேபோல் வேதாந்தத்தில் எல்லா க்ரியாபதங்களும் பலத: நாமமென்றேயாகிறது. ஏனெனில் அவைகள் சித்தபரமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** கர்மகாண்டத்திலுள்ள, சித்த வஸ்துவை போதிக்கின்ற பதங்கள் எல்லாம் ஸுபந்தமாக இருந்தபோதிலும், அவைகள் திஙந்தார்த்தத்தில்தான் சொல்லப்படவேண்டுமென்று எப்படி உங்களால் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றதோ அதுபோல் ஞான காண்டத்திலுள்ள ஆக்யாத ப்ரஸித்தமான திஙந்தார்த்தத்தை போதிக்கக்கூடிய பதமாக இருந்தாலும் அவைகள் க்ரியையை போதிக்காததால் அவைகள் எல்லாம் நாமார்த்தமான ஸுபந்தத்தில்தான் பர்யவஸானத்தை அடைகிறது என்று சொல்லப்படவேண்டும்.

உதாரணமாக :– 'ஆக்னேயோ அஷ்டாகபாலோபவதி' என்று கர்மகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற வாக்யம், அக்னியை தேவதையாகக்கொண்ட யாகத்தில், எட்டு கபாலங்களிலுள்ள ஹவிஸ்ஸை ஹோமம் செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்றது. இதில் 'ஆக்னேய: அஷ்டாகபால:' என்பது நாமபதம் போல் இருந்தாலும்கூட, அக்னிதேவதாகமமான ஒரு யாகத்தைச் செய்யவேண்டுமென்று க்ரியையில்தான் அந்த வாக்யம் முடிவை அடைகின்றதால் ஸுபந்தபதமாக அறியப்படும் ஆக்னேயம் என்ற பதம் ஆக்யாயிகமாக ஆகிறது. அதாவது ஆக்னேயம் த்ரவ்ய தேவதாத்மகமான கர்மாவை போதிக்கின்றது என்பதால் அந்த பதம் ஸ்வயமே க்ரியையை போதிக்கின்றது என்று அறியப்படுகிறது. ஆகவே அதேபோல் வேதாந்த பாகத்திலும் திஙந்தபதங்களும் ஸுபந்தமாகஆகிறது என்று சொல்கிறோம்.

**490. அவதாரிகை :**

இதே விஷயத்தை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

आग्नेयमाश्विनमथैन्द्रमितीदृशं हि सर्वं सुबन्तमपि भव्यपरं प्रसिद्धम् ।
साऽस्येति तद्धितसमन्वितसंनिधाने नामैव तद्भवति यद्भवतीति तद्वत् ॥

**ச்லோகார்த்தம் :** ஆக்னேயம், ஆஸ்வினம், ஐந்த்ரம் முதலான நாம பதங்களும் ஸாத்யபரம் என்றே ப்ரசித்தமாக இருக்கிறது. 'ஸா அஸ்ய தேவதா' என்ற சூத்ரத்தில் சொல்லப்பட்ட படி (ஆக்னேயம் முதலான) தத்தித பதங்களுடன் சேர்ந்திருக்கின்றபோது பவதி என்ற ஆக்யாதமானது நாமமாகவே ஆகின்றது.

**வ்யாக்யானம் :** 'கர்மகாண்டத்தில்' ஆக்னேயோ அஷ்டா கபாலோபவதி' என்றும் 'ஐந்த்ரம் ததி' என்றும் 'ஆஸ்வினம் தூம்ரமாலபேத' என்றும் பல வாக்யங்கள்

சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் உள்ள பதங்கள் ஸுப்பந்தமாக இருந்தாலும் அவைகள் க்ரியையு போதிப்பதாகவே உங்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அக்னிதேவதாகமான யாகத்தில் அஷ்ட்ட கபாலங்களிலுள்ள த்ரவ்யத்தைக்கொண்டு செய்யவேண்டும் என்றும், 'ஐந்த்ரம் ததி' என்ற வாக்யம் இந்த்ரனைதேவதையாகக் கொண்ட யாகத்தில் ததியைக்கொண்டு யாகம் செய்யவேண்டுமென்றும் 'ஆஸ்வினம் தூம்ரமாலபேத' என்ற வாக்யம் அஸ்வினி தேவதையை உத்தேசித்து தூம்ரம் என்ற பசுவைக்கொண்டு யாகம் செய்யவேண்டுமென்றும் இந்த வாக்யங்கள் எல்லாம் த்ரவ்யம் தேவதைகளின் ஸம்பந்தமுடையதாக தெரிவிக்கின்றதால் இவைகள் எல்லாம் கர்மாவை விதிக்கின்றது என்றே சொல்லப்படவேண்டும் என்று 'ஸாऽஸ்யதேவதா' என்ற பாணினியின் சூத்ரத்தைக்கொண்டு, நியமம் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஆக்னேயம் என்ற பதமானது நாம பதமாக இருந்தபோதிலும் அக்னிதேவதா அஸ்யகர்மண: என்று த்ரவ்ய தேவதாஸம்பந்தம் இருப்பதால் அதை எப்படி க்ரியாபதம் என்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறதோ அதேபோல் அதே வாக்யத்திலுள்ள 'பவதி' என்பது திங்ந்தம்போல இருந்தாலும் அது பவ்யமானக்ரியையை போதிக்கக்கூடிய தன்மையில் இல்லாததால் அதை நாமபதம் என்றே (ஸுப்பந்தம்) சொல்லப்பட்டிருக்கிறது. அதேபோல் வேதாந் தங்களிலும் க்ரியாபதம்போல இருந்தாலும் நாமபதார்த்தம்தான் சொல்லப்படவேண்டும். (ஆனால் நாமபதம் என்பது வேதாந்தத்தில் திஙந்தபதமாக ஆகமுடியாது.) என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**491. அவதாரிகை :**

வேதாந்தத்தில் எந்த இடத்தில் திஙந்தம் என்பது நாமாவாகஆகிறது? என்றால், அதை விளக்குகிறோம்.

**ச்லோகம் :**

अस्त्यस्म्यसीति च तिङन्तपदानि सन्ति वेदान्तवाक्यनिलयानि तथाऽपि तानि ।
नाऽऽख्यातशब्दनिजशक्तिधुरं वहेयुरस्तित्वमात्रविषया हि निषक्तिरेषाम् ॥

**ச்லோகார்த்தம் :** அதேபோல், அஸ்தி, அஸி, அஸ்மி முதலான க்ரியாபதங்கள் வேதாந்த வாக்யங்களில் இருக்கின்றது. ஆனால் அவைகள் ஆக்யாத சப்தங்களின் அர்த்தமான ஸாத்யார்த்தத்தை தெரிவிப்பதில்லை. ஸத்வம் என்பதை தெரிவிக்கின்ற முறையில்தான் இந்த பதங்கள் அன்வயிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'அஸ்தி ப்ரஹ்மேதி வேத சேத்' 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற வாக்யங்களில் 'அஸ்தி' 'அஸி' 'அஸ்மி' என்ற க்ரியாபதங்கள் இருந்தாலும். 'ஆக்னேய: அஷ்ட்டாகபாலோ பவதி' என்ற வாக்யத்திலுள்ள 'பவதி' என்ற க்ரியாபதம் எவ்விதம் க்ரியையை போதிக்கவில்லை என்றும் சித்த வஸ்துவைத்தான் போதிக்கின்றது என்றும் சொல்லப்படுகிறதோ, அதுபோல் வேதாந்தவாக்யத்திலுள்ள க்ரியாபதங்களும் சித்தமான அர்த்தத்தையே போதிக்கின்றதால் மஹாவாக்யத்திலுள்ள 'அஸ்மி, அஸி அஸ்தி' என்ற பதங்களுக்கும் 'ஸத்' என்பதே அர்த்தம். க்ரியாபதங்களாக இருந்தாலும் அவைகள் ஏன் க்ரியையை போதிக்கவில்லை என்றால், 'அஸ்தி, அஸ்மி, அஸி' என்ற பதங்களுக்கு ஸத்வம் (ஸத்தை) என்பதைத்தவிர வேறு எந்த அர்த்தமும் சொல்லமுடியாது. உதாரணமாக 'கட: அஸ்தி' என்னும் இடத்தில் ஸாத்யமான க்ரியை ஏதுவுமில்லை. கடத்தின் ஸ்வரூபஸத்வம்தான் போதிக்கப்படுகிறது. லோக வ்யவகாரிங்களிலேயே க்ரியாபதங்கள்

க்ரியையை போதிக்கவில்லை என்றால், நிர்விசேஷமான ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற வேதாந்த வாக்யங்கள் சித்தமான அர்த்தத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**492. அவதாரிகை :**

**பூர்வ :** அஸ்தி, அஸ்மி முதலான பதங்களும் தாத்வர்த்தமாக இருக்கின்றதால் அவைகளும் க்ரியையை போதிப்பதாகத்தானே சொல்லவேண்டும்? ஆகவே அவைகளை யும் ஆக்யாதம் என்றே (அஸு என்பதை தாது பாடத்தில் பாணினியினால்) படிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுவதால் விரோதம் ஏதுமில்லை.

**சித்தா :** அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

पूर्वापरीभूतपदार्थनिष्ठमाख्यातमाख्यातविदो वदन्ति ।
कूटस्थसत्तावगतिप्रधानमाख्यातवत्साधु तिङन्तमाहुः ॥

**ச்லோகார்த்தம் :** ஆக்யாதம் என்பது ஸாத்யவஸ்துபரம் என்றும் கூடஸ்த்த ஸத்தையை தெரிவிக்கின்ற (அஸ்தி முதலான) க்ரியாபதங்கள் கௌணமான ஆக்யாதம் என்றே வித்வான்களால் மிகப்பொருத்தமாகச் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** தாத்வர்த்தமாக இருக்கிறது என்பதற்காகவே அதை க்ரியை என்று ஒத்துக்கொள்ளவேண்டுமென்ற அவஸ்யமில்லை. எந்த வஸ்துவானது முன்பு இருந்த நிலை மாறி வேறு நிலையை புருஷப்ரயத்னத்தினால் அடையக்கூடியதாக இருக்கின்றதோ அதையே க்ரியை என்று சொல்லமுடியும்.

**பூர்வ :** பசதி என்ற பதமானது தாதுவாக இருப்பதால் எப்படி க்ரியையை போதிக்கின்றதோ அதுபோல் தாத்வர்த்தமான 'அஸ்தி' முதலானவைகளையும் க்ரியையை போதிக்கின்ற திங்ந்தம் என்றுதானே சொல்லவேண்டும்?

**சித்தா :** பசதி என்ற பாகக்ரியையானது (விக்லுத்யனுகூல வ்யாபார : = பசனம்) என்று மாறுபாட்டை அடையக்கூடிய தன்மையில் இருக்கின்றதால் அந்த இடத்திலுள்ள க்ரியாபதம், ஆக்யாதம் என்று முக்யார்த்தமாகவே சொல்லப்படலாம். ஆனால் சித்தார்த்தத்தை போதிக்கின்ற வாக்யங்களில் க்ரியாபதம் கௌணமாகவே ஆக்யாதம் என்பதை தெரிவிக்கிறது. ஆகவே அஸ்தி முதலான பதங்கள் திங்ந்தமாக இருந்தாலும் ஸாத்யஸ்வபாவமாக இல்லாததால், ஸத்தையையே போதிக்கின்றதால் ஆக்யாதம்போல் இருந்தாலும் உண்மையில் ஆக்யாதமில்லை. வாக்யத்தில் க்ரியாபதம் இருந்தால்தான் வாக்யார்த்தபோதம் ஏற்படும் என்று வாதம் செய்பவர்களுக்காக அஸ்தி முதலான க்ரியாபதம் இருப்பதாகச் சொல்லப்பட்டதேயன்றி உண்மையில் க்ரியாபதம் என்பதே வேதாந்த வாக்யத்தில் ஸம்பவிக்கமுடியாது. ஆகையால் அஸிமுதலான பதங்கள் உண்மையில் ஆக்யாதமில்லை.

**493. அவதாரிகை :**

ப்ராபாகரருடைய ஒரு ஆக்ஷேபம். அதாவது,

**ச்லோகம் :**

अस्तित्ववस्तुविषयोपनिषन्निषक्तिराश्रीयते यदि तदा प्रमितं प्रमेयम् ।
तस्यास्तवाऽऽपतति मानमितत्वमेव ह्यस्तित्वमात्मगतमभ्युपयन्ति धीराः ॥

**ச்லோகார்த்தம் :** உபநிஷத் விஷயம் என்பது, சித்தவஸ்து என்று சொல்லப்படுமானல், உபநிஷத் என்ற ப்ரமாணத்தினல் அந்தப்ரமேயமான வஸ்து, அறியப்பட்ட விஷயந்தான் என்றதோஷம் உங்கள் மதத்தில் ஏற்படுகிறது. ஆத்மாவின் ஸத்தை என்பது ப்ரமாணுந்தரங்களினல் அறியப்பட்டது என்று (ப்ராபாகரர்கள்) வித்வான்கள் ஒத்துக்கொள்கிருர்கள்.

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யங்கள் 'அஸ்தித்வம்' என்பதை மட்டும் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானல் அந்த வாக்யம் அனுவாதகமாக ஆகுமேயன்றி அபூர்வத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது என்று ப்ராபாகரரால் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. அதாவது ஒரு வஸ்து 'இருக்கிறது' என்று சொல்லவேண்டுமானல் அந்த வஸ்து மானத்தினல் (மேயமாக) அறியப்பட்டதாகவே ஆகிறது. ஆகவே வஸ்து இருக்கிறதா? இல்லையா? என்று விசாரிக்கின்றபோது, மானத்தினல் அறியப்பட்ட வஸ்துவையே 'இருக்கிறது' என்று சொல்லப்படுகிறது. அதனல் உபநிஷத்வாக்யங்கள் ஸத்தாமாத்ரமான விஷயத்தைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானல், மானத்தினல் அறியப்பட்ட விஷயத்தையே தெரிவிக்கின்றதால் அனுவாதகம் என்று ஆகுமேயன்றி அபூர்வத்தை போதிப்பதாக சொல்லமுடியாது. அதனல் ப்ரஹ்மமென்பது ஸத்ரூபம் என்ருல் மானத்தினல் அறியப்பட்டது என்றே சொல்லநேரிடும்.

**494. அவதாரிகை :**

**சித்தா :** இவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் மானமேயத்வம் தான் ஸத்வம் என்று சொல்லப்படுமானல், ஒரு வஸ்து அறியப்படுவதற்கு முன்னலும் அறியப்பட்ட பிறகும் மானமேயமாக இல்லாததால் மானமேயத்வம் என்ற தன்மை க்ஷணிகம் என்றே சொல்லநேரிடும்.

**ச்லோகம் :**

अथवा मितियोग्यताऽस्तिता निरवद्याऽस्तु समस्तवस्तुषु ।
परमात्मनि तत्प्रतीतये सकलं वेदशिरः प्रवर्तताम् ॥

**ச்லோகார்த்தம் :** இல்லையென்ருல், எல்லாவஸ்துக்களிலும் இருக்கின்ற ஞானயோக்யத்வமே அஸ்தித்வம் என்ற தோஷமற்ற பக்ஷமே இருக்கட்டும். பரமாத்மாவில் இப்பேர்ப்பட்ட அஸ்தித்வம் இருக்கின்ற தென்பதை தெரிவிப்பதற்காகவே ஸகல வேதாந்தங்களும் ப்ரவர்த்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** மானமேய விஷயமான வஸ்து ஸத்தை என்று சொன்னல்தான் அந்த வஸ்து க்ஷணிகம் என்று சொல்லநேரிடும். ஆகையால் மானயோக்யத்வம் வஸ்து, ஸத்வம் என்று சொல்லப்படுமானல் ஆத்ம வஸ்து அனுத்மவஸ்து எல்லாவற்றிலும் மானத்தினல் அறியப்படும் தன்மை என்பது இருக்கின்றதால், மான யோக்யத்வமுள்ளது எதுவோ அதையே அஸ்திதை என்று சொல்லலாம், ஆகவே மான மேயத்வம் என்பது எப்போதும் இல்லாவிட்டாலும் மானயோக்யதை என்பது எப்போதும் இருக்கின்றதால் வஸ்துக்ஷணிகம் என்ருகுமே என்ற தோஷம் ஸம்பவிக்காது. இந்தவிதம் மானயோக்யதை உள்ளது ஸத்தை என்ற காரணத்தினல் ப்ரஹ்மமென்பது அனபேக்ஷத்வ ப்ராமாண்யம் உடையது என்று சொல்லமுடியாது. ஆகவே மானுந்தரத்தினல் அறியப்படாத விஷயத்தில் சப்தம் என்பதே ப்ரவ்ருத்திக்கமுடியாது என்பதால், அபூர்வார்த்தத்தை தெரிவிப்பதாக சொல்லமுடியாது ஆகவே அனுவாதகம் என்றே சொல்லநேரிடும்.

அதனுல் வேதாந்தம் ஸ்வத: ப்ரமாணம் என்ற உங்களுடைய சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படுகிறது.

**495. அவதாரிகை :**

மானயோக்யத்வம்தான் ஸத்வம் என்று சொல்லப்படுமானுல், ஒரு வஸ்துவானது ஏதோ ஒரு ஸமயம் மானத்திற்கு விஷயமாக இருந்தாலே, அதுமான யோக்யத்வம் என்று சொல்லப்படுகிறதா? அல்லது, மான யோக்யத்வம் என்பது அபாத்யத்வம் என்று சொல்லப்படுகிறதா? இந்த இரண்டு பக்ஷத்தில் முதல் பக்ஷமான காதாசித்கமான யோக்யத்வமுள்ளது ஸத் என்று சொல்லப்படுமானுல் அது சரியல்ல. இந்த முதல் பக்ஷத்தில் என்ன தோஷம் என்பதை தெரிவித்து அதை கண்டிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तदसुन्दरमात्मसंविदोरपि सत्ता भवताऽभ्युपेयते ।
न तयोर्विषयत्वहीनयोर्मितियोग्यत्वमितित्वसंभवः ॥

**ச்லோகார்த்தம் :** இது பொருந்தாது ஆத்மாவிற்கும், சைதன்யம் என்பதற்கும் ஸத்தை இருக்கிறது என்று (ப்ராபகரர்) உங்களால் சொல்லப்படுவதை ஒத்துக் கொள்ளமுடியாது. நிரதிசயமாக இருக்கின்ற அவைகள் இரண்டிற்கும் ஞானயோக்யத்வம் ஸம்பவிக்காது. (மானவிஷயத்வம், மானயோக்யத்வம் ஸத்வம் என்று சொல்வது ஆத்மாவிலோ அல்லது ஞானத்திலோ ஸம்பவிக்காது.)

**வ்யாக்யானம் :** ப்ரமாதாவான ஆத்மா, ப்ரமை என்று சொல்லப்படும் ஞானம் என்ற இரண்டுமே ஸர்வதாஸ்வப்காச: ஸ்வரூபமானதால், ஒருபோதும் மானயோக்யத்வம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவேமானயோக்யத்வமுள்ளதுதான் ஸத்வம் என்று ஸத்தைக்கு லக்ஷணம் சொல்லப்படுமானுல் ஆத்மா, ஞானம், என்ற இரண்டிலும் இந்த லக்ஷணம் இருப்பதாகச் சொல்லமுடியாதாகையால் அஸத் என்று சொல்லநேரிடும். ஆனுல் ஆத்மா என்பதும் ஸம்வித் என்பதும் (ஸத்வம் உள்ளது என்று) ஸத் என்று உங்களால் சொல்லப்படுகிறது. ஆகவே ஸத்வம் என்பதற்கு சொல்லப்படும் லக்ஷணம் பொருந்தாது.

உதாரணமாக 'தேவதத்தன் கடத்தை அறிகிருன்' என்று சொல்கின்றபோது இந்த அறிவிற்கு (ஞானத்திற்கு) ஆத்மா ஆச்ரயமாக இருக்கின்றது. கடம் இந்த ஞானத்திற்கு விஷயமாக ஆகிறது. அதாவது ஆத்மா, ஞான ஆச்ரயத்வேன ப்ரகாசம், ஞானம் என்பது ஸ்வயமே ப்ரகாஸம், விஷயம் என்பது ஞான விஷயத்வேன ப்ரகாசம். ஆகவே ஞான விஷயத்வமாக இருப்பது எதுவோ அதுவே ப்ரமேயமாக ஆகமுடியும். ஆகையால் ஆத்மா என்பதும் ஸம்வித் என்பதும் ப்ரமேயமாக ஆகமுடியாது என்பதால் இரண்டிற்கும் ப்ரமேயத்வம் ஸம்பவிக்கமுடியாது. அதனுல் ஞானத்திற்கு விஷயமாகின்ற கடாதிகளேயே ப்ரமேயத்வம் உள்ளதாகச் சொல்லலாமே தவிர ப்ரமாதாவான ஆத்மா என்பதோ ஸம்வித் (ப்ரமிதி) என்பதோ மானயோக்யத்வமுள்ளதாக ஆகாது. அதனுல் ஆத்மாவும் ஸம்வித் என்பதும் ஸத் என்றே சொல்லமுடியாது. இவ்விதம் ஆத்மாவே 'ஸத்' என்று சொல்லாமல், நாஸ்தி என்று சொல்லப்படுமானுல் வேறு எதுவுமே சித்திக்காது. ஆகவே ஸத்வம் என்பதற்கு, மானயோக்யத்வம் என்று லக்ஷணம் சொல்லப்படுவது சரியல்ல. இதற்காக இரண்டாவது பக்ஷமான அபாத்யத்வரூபமானமான யோக்யத்வமுள்ளது ஸத் என்று சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல, ஏனெனில்,

லோகத்திலுள்ள ஸர்வவஸ்துக்களும் பாத்யத்வமுடையாதகவே இருக்கின்றது. அதனுல் அபாத்யத்வரூபமான யோக்யத்வமான ஸத்வம் என்பது ப்ரத்யக்ஷாதி ப்ரமாண விஷயங்களுக்கு கிடையாது. ஆகவே அபாத்யத்வரூபமான ஸத்வம் என்பது வேறு ப்ரமாணங்களுக்கு விஷயமாக இல்லை. ச்ருதி என்ற ப்ரமாணத்திற்கே விஷயமாக ஆகமுடியும் என்பதால் ச்ருதிக்கு அனுவாதகத்வம் என்ற தோஷம் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே மானயோக்யத்வமில்லாத ப்ரமாதாவான ஆத்மா, ப்ரமிதி என்ற ஸம்வித் (ஞனம்) என்ற இரண்டிற்கும் ஸத்வம் இருக்கின்றது. மான யோக்யத்வம் இல்லை. ஆகவே மான யோக்யத்வமுள்ளதே ஸத் என்றும் ச்ருதி என்பது அனுவாதகம் என்றும் சொல்வது சரியல்ல.

(இதுவரை – 495 ஸ்லோகங்கள் முடிய மஹாவாக்யங்களும் அவாந்தர வாக்யங்களும் ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் ஸமன்வயத்தை அடைகின்றது என்று சொல்லப்பட்டது.)

**496. அவதாரிகை :**

இந்தவிதம், தத்வமஸ்யாதி மஹாவாக்யங்களும் ஸத்யஞானனந்தம் என்பது போன்ற அவாந்தர வாக்யங்களும் ப்ரஹ்மத்தை போதிக்கின்றதில்தான் ஸமன்வயத்தை அடைகின்றது என்று சொல்லப்பட்டது. இப்போது 'யதோவா இமானி பூதானி' என்று ப்ரஹ்மத்திற்கு தடஸ்த்தலக்ஷணமாக இருக்கின்ற வாக்யங்களும் 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற சூத்ரந்யாயத்தின்படி ஸமன்வயத்தை அடைகின்றது என்று சொல்லப்படுகிறது. அதாவது, எது ஜகத் ஜன்மாதிகளுக்கு காரணமாக இருக்கிறதோ அது ப்ரஹ்மமென்று அனுவாதம் செய்து உபதேசிக்கின்றது. ஆகவே வேதாந்த வாக்யங்கள் எல்லாமே ப்ரஹ்மத்தைபோதிப்பதில்தான் ஸமன்வயத்தை அடைகின்றது.

**பூர்வ :** இவ்விதம் சொல்வது பொருந்தாது. ஏனெனில் ஜகத் என்பது கார்யம் என்று சித்தித்தால்தானே அதற்கு காரணம் ப்ரஹ்மமென்று சொல்லலாம்? க்ஷித்யாதிகள் (ப்ருதிவ்யாதி பஞ்ச பூதங்கள்) கார்யம் என்று சொல்வதற்கு ப்ரமாணம் ஏதுமில்லை. அதனுல் ஜகத்காரணம் ப்ரஹ்மமென்று சொல்லமுடியாது.

இந்தவித ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்வதற்காக ஜகத் என்பது கார்யம் என்பதை முதலில் சித்தம் செய்தபிறகு ஜகத் காரணம் ப்ரஹ்மமென்பதை சாதிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

क्षितिजलदहनानिलाम्बराणां जनिमनुमाय विभक्तताबलेन ।
जगति हि जनिमद्विभज्यमानं घटघटिकादि समीक्ष्यते समस्तम् ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் குடம், கலயம் என்பதெல்லாம் வெவ்வேருக இருக்கின்றதால், அவை அனைத்தும் உற்பத்தி உடையதாக அறியப்படுகிறது. அதுபோல் ப்ருதிவி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களும் வெவ்வேருக இருக்கின்றதால் அவைகளும் உற்பத்தி உடையதென்றே அனுமானிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கீழே இதுவரை 495 ச்லோகங்களினுல் சித்தவஸ்துவான, அகண்டார்த்த ப்ரஹ்ம வஸ்துவில்தான் தத்வமஸ்யாதி மஹாவாக்யங்களுக்கும், ஸத்யஞானனந்தம் முதலான அவாந்த்ரவாக்யங்களுக்கும் ஸமன்வயம் ஏற்படுகிறது என்பதை விளக்கப்பட்டது. இவ்விதம் விளக்கப்பட்டதன்மூலமாக த்வம்பதார்த்த சோதனம் செய்து, த்வம்பத லக்ஷ்யார்த்தமே அகண்டார்க்கமான ப்ரஹ்மஸ்வரூபம்

என்பதை விளக்கப்பட்டது. அத்துடன் அவ்வப்போது செய்யப்பட்ட பூர்வபக்ஷங்களையும் விசாரித்து சித்தாந்தம் எதுவோ அதை நிர்ணயம் செய்யப்பட்டது. இதன்மூலமாக வேதாந்த வாக்யங்கள் ஸர்வமும் ப்ரஹ்மத்தை போதிக்கின்ற விஷயத்தில் ஸமன்வயத்தை அடைகிறது என்று சொல்லப்பட்டது. இதேபோல் சிருஷ்ட்யாதி வாக்யங்களும் தத்பதார்த்தமான ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாக இருக்கின்றதால் ப்ரஹ்மத்தில் எப்படி ஸமன்வயத்தை அடைகிறது? என்ற விஷயத்தை தெரிவித்து அதன்மூலம் கீழே சொல்லப்பட்ட ஸமன்வயத்தை மேலும் த்ருடப்படுத்தப்படுகிறது.

சிருஷ்டிவாக்யங்களும் ப்ரஹ்மத்தையே போதிக்கின்றது என்று சொல்லாவிடில் கீழே சொல்லப்பட்ட ஸமன்யம் பொருந்தாது. 'யதோவா இமானி பூதானி' என்ற சிருஷ்டிவாக்யத்தை உத்தேசித்து 'தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி' என்று ஜகத் காரணத்வத்தை அனுவாதம் செய்து அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்ளவேண்டும் என்று ப்ரஹ்மமென்பது விதேயமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே மஹாவாக்யங்களோ அவாந்தர வாக்யங்களோ எந்த வாக்யமாக இருந்தாலும் ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாக இருந்தே ப்ரஹ்மத்தை போதிக்கின்றது. ஆகவே உபலக்ஷணமாக வாக்யார்த்தம் என்னவென்று நிர்ணயம் செய்து அறியப்படவில்லையென்றால், உபலக்ஷித ஸ்வரூபம் என்ன என்பதோ வாக்யார்த்தம் என்ன என்பதோ அறியமுடியாது. அவ்விதம் அறியப்படாத வரையில் ஸத்யஞானனந்தம் முதலான வாக்யங்களால் அறியப்பட்ட லக்ஷ்யார்த்தமான தத்பதார்த்தம் என்பது நிலைத்திருக்கமுடியாது ஆகையால், தத்பதார்த்த சித்திக்காக ஜகத் காரணத்வத்தை தெரிவித்து அதுவே ப்ரஹ்மென்று சிருஷ்ட்யாதிவாக்யங்கள் போதிக்கின்றது. இவ்விதம் சிருஷ்ட்டி வாக்யங்களும் ப்ரஹ்மத்தையே போதிக்கின்றது என்று சொல்லப்படாவிட்டால் கீழே சொல்லப்பட்ட ஸமன்வயம் பொருந்தாது. ஆகவே ஜகத் காரணத்வத்தை அனுவாதம் செய்து அதுவே ப்ரஹ்மமென்று தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுவதால் ஜகத் காரணம் உத்தேச்யம், ப்ரஹ்மமென்பது விதேயம் என்றாகிறது. இவ்விதம் சொல்லாமல், ப்ரஹ்மமே ஜகத் காரணம் என்று சொல்லப்படுமானால் ப்ரஹ்மமென்பது உத்தேச்யம், ஜகத் காரணம் விதேயம் என்றாகிறது. இந்த இரண்டு பக்ஷங்களில் எந்தவிதம் சொன்னாலும், ஜகத் என்பது கார்யம் என்பது முதலில் சித்தமானால்தான், ப்ரஹ்மமென்பதே ஜகத் காரணம் என்று சொல்லலாம். ஆகவே லோகத்தில் ஜகத்திற்கு காரணம் இதுதான் என்று எந்த ப்ரமாணத்தினாலும் எவராலும் அறியப்படவில்லையென்பதால் ஜகத் என்பது கார்யம் என்பது எப்படி சித்திக்கின்றது? என்றால்,

ஜகத் என்பது கார்யந்தான் என்பதை அனுமானத்தினால் சாதிக்கின்றோம். பஞ்ச மஹாபூதங்கள் உற்பத்தி உடையது. விபக்தத்வாத் (பரிசின்னமாக இருப்பதால்) (யத்யத் விபக்தம் தத்தத்ஜனிமத் என்பது வ்யாப்தி). கட, கடிகாதிகள்போல' என்று 'அனுமானத்தினால் ஜகத் என்பது கார்யம் என்றே சித்திக்கின்றது. அதாவது ஜகத் என்பது பஞ்சபூத விஷயம் என்பது எல்லோருக்கும் ப்ரஸித்தம்தான். பஞ்சபூதாத்மகமான இந்த ஜகத்தின் கார்யம் பௌதிக கடபடாதி வஸ்துக்களில் இது கார்யமா? இல்லையா? என்ற ஸந்தேகமே கிடையாது. ஆகவே பௌதிகமான வஸ்துக்களில், விபக்தத்வமும் (பரிச்சின்னத்வம்) இருக்கிறது கார்யத்வமும் இருக்கின்றது. அதேபோல் இவைகளுக்கு காரணமான பஞ்ச பூதங்களில் விபக்தத்வம் இருப்பதால், கார்யத்வமும் இருக்க வேண்டுமென்று அனுமானத்தினால் அறியப்படுகிறது. ஆகவே பஞ்ச பூதங்களும் கார்யம்

என்பது தீர்மானிக்கப்படுவதால் அதற்கு காரணம் என்பது இருக்கவேண்டுமென்று அனுமானிக்கலாம், ப்ரதிஞ்ஞா, ஹேது, த்ருஷ்ட்டாந்தம், உபநயம், நிகமனம் என்று அனுமான ப்ரமாணத்திலுள்ள பஞ்ச அவயவங்களில், இரண்டு அவயவம் சொல்லப்பட்டது. அதாவது மஹா பூதங்கள் (ஜனிமத்) உற்பத்தி உடையது என்ற ப்ரதிஞ்ஞையும் விபக்தத்வாத் என்ற ஹேதுவும் சொல்லப்பட்டது. இப்போது மூன்றுவது அவயவமான த்ருஷ்ட்டாந்தத்தைமேலே விளக்கப்படுகிறது. அதாவது எங்கெல்லாம் விபக்தத்தவம் இருக்கின்றதோ அங்கெல்லாம் கார்யத்வம் இருக்கிறது. (ஜனிமத்தாக இருக்கின்றது) கடம் என்பதும் கடிகம் என்பதும் விபக்தமாகவும் இருக்கிறது கார்யமாகவும் இருக்கிறது. ஆகவே இந்த த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் ஜகத் என்பது கார்யம் என்றே சித்திக்கின்றது.

**பூர்வ :** யத்ரயத்ர விபக்தத்வம், தத்ரதத்ர கார்யத்வம்' என்று அனுமானம் சொல்லப்படுமானல் இதில் வ்யபிசார தோஷம் ஸம்பவிக்கின்றது. எப்படியெனில் அஞ்ஞானம், அதன் கார்யம், அதன் ஸம்பந்தம் என்பதெல்லாம் ஒன்றல்ல வேறுபட்டதுதான். ஆனல் அனதியென்பதால், இவைகளுக்கு உற்பத்தி சொல்ல முடியாது. ஆகவே விபக்தமாக இருந்தும் கார்யமாக இல்லையே?

**சித்தா :** அவித்யாதிகள் அனதியென்று சொல்லப்பட்டபோதிலும் அவைகளுக்கு ஸ்வயமே ஸத்வம் கிடையாது. அன்யாதீனமானஸத்தை உடையதாக இருக்கின்றதால், கார்யத்வம் என்பதும் விபக்தத்வம் என்பதும் இரண்டுமே இருக்கின்றது. ஆகவே இந்த அனுமானத்தில் வ்யபிசாரத்திற்கு இடமில்லை.

**பூர்வ :** விபக்தத்வம் இருந்தாலே கார்யம் என்று சொல்லப்படவேண்டுமானல், ஆத்மா என்பதும் அனத்மா என்பதும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதாக இருக்கின்றதால் விபக்தம் என்று சொல்லவேண்டும். அப்படியானல் ஆத்மா கார்யம் என்று சொல்லமுடியுமா? ஆகவே விபக்தத்வம் இருந்தாலும் கார்யத்வம் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**சித்தா :** ஆத்மா என்பதும் அனத்மா என்பதும் ஸமஸத்தை உடையது அல்ல. அனத்மாவான ஜகத் வ்யாவகாரிகஸத்தை உடையது. ஆத்மா என்பது பாரமார்த்திகஸத்தை உடையது. ஸமஸத்தை உடையதாக இருந்தால்தான் இரண்டிற்கும் பேதம் இருப்பதாகச் சொல்லலாம். தர்மியென்பது எந்த ஸத்தை உடையதாக இருக்கிறதோ அதே ஸமானமான ஸத்தை என்பது பேதம் இருப்பதாகச் சொல்லப்படும் ப்ரதியோகியிலும் இருக்கவேண்டும். மித்யாபூத வஸ்துவிற்கும் ஸத்யவஸ்துவிற்கும் பேதம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகாஸாதி ப்ரஞ்சத்தின் பேதம் ப்ரஹ்மத்தில் இருக்கலாம். ஆனல் ஆகாஸாதிகள் தத்வமல்ல. ஆகவே 'ப்ருதிவ்யாதிகள் கார்யம்தான் விபக்தத்வாத், கட கடிகாதிகள் போல' என்று சொல்லப்பட்ட அனுமானத்தில் தோஷம் ஏதுமில்லை.

**பூர்வ :** ப்ரஹ்மமென்பது வேறு, ஆத்மா என்பது வேறு என்றும் ஒவ்வொரு சரீரத்திலும் ஆத்மா என்பது வெவ்வேருக இருக்கிறது என்றும் ஸாங்க்யர்களாலும் நையாயிகர்களாலும் சொல்லப்படுகிறதே? அதனல் ஆத்மா விபக்தம் என்று தானே சொல்லவேண்டும்.

**சித்தா :** ஸாங்க்யர் முதலானவர்கள், அஹங்காரத்துடன் கூடிய ஸ்வரூபத்தையே ஆத்மா என்று சொல்கிறார்கள். அதனால் அவர்களால் சொல்லப்படுவது ஆத்ம ஸ்வரூபமல்ல. ஆகவே யத்ரயத்ர விபக்தத்வம் தத்ர தத்ர கார்யத்வம் என்று சொல்லப்பட்ட அனுமானத்தில் தோஷம் ஏதுமில்லை. 'எது விபக்தமோ அவையெல்லாம் உற்பத்தி உடையது கடாதிகள் போல' என்று விபக்தம் என்ற ஹேது பலத்தைக்கொண்டு அவர்களாலும் வ்யாப்தி ப்ரத்யக்ஷமாக க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. (கடாதிகளில் விபக்தத்வம், ஜனிமத்வம் இரண்டும் இருக்கின்றது என்ற வ்யாப்தி ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகிறது.)

**497. அவதாரிகை :**

இந்த விஷயத்தில் வேறு ஒரு காரணத்தைக்கொண்டு வேறு அனுமானம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

क्षितिजलदहनेषु तत्प्रदेशाञ्जनिसहितानुपलभ्य तब्दलेन ।
क्षितिजलदहनत्वलिङ्गमार्गादपि जनिमेष्वनुमाय तर्कयन्ति ॥

**ச்லோகார்த்தம் :** ப்ருதிவி, ஜலம், அக்னி என்பவைகளில் ஏகதேசம் உற்பத்தி உடையது என்று அறியப்படுகிறது. இதனால் ஸமஸ்த்தமான ப்ருதிவி ஜலம் அக்னி முதலானவைகளிலும் அவைகளின் தன்மை இருக்கின்றது என்பதால் அவை எல்லாமே உற்பத்தி உடையது என்று ப்ருதிவியின் ஏகதேசத்தைக்கொண்டே அனுமானிக்கப் படுகிறது.

**வ்யாக்யானம் :** கீழே மஹாபூதங்கள் எல்லாம் விபக்தமாக இருப்பதால், கார்யமாகத்தான் இருக்கவேண்டும். கடாதிகள்போல என்று அனுமானம் சொல்லப்பட்டது. இப்போது ஒவ்வொரு பூதத்தையும் தனித்தனியே பக்ஷமாக வைத்து, அதற்குரிய ஹேதுவைக்கொண்டு இது கார்யம் என்பதை அனுமானத்தினால் சாதிக்கப்படுகிறது. ப்ருதிவி என்பது ஜனிமத் என்றே சொல்லவேண்டும், ஏனெனில் (ப்ருதிவி கார்யமான வேதிகை என்பது எப்படி ஜனிமத்தாக இருக்கிறதோ,) வேதிகை என்பது ப்ருதிவியாகவே இருப்பதால் கடம் போல என்று அனுமானத்தினால் ப்ருதிவியும் கார்யம்தான் என்று சாதிக்கிறோம். அதேபோல், அப்பு என்பதும் ஜனிமத் = கார்யம் என்றே சொல்கிறோம் ஏனெனில் ஜலத்வாத் சந்த்ர காந்த கல்போல என்பது அனுமானம், ஜலத்தின் அம்ஸமான சந்த்ரகாந்தக்கல் என்பது எப்படி ஜனிமத்தாக இருக்கிறதோ அதுபோல் என்று அனுமானிக்கப்படுகிறது. அதேபோல், தேஜஸ் என்பதும் கார்யம்தான் ஏனெனில் அக்னித்வாத் அரணிக்கட்டைபோல் என்று எப்படி அக்னியம்ஸமான அரணிக்கட்டை கார்யமாக இருக்கிறதோ அதுபோல் தேஜஸ் என்பதும் அக்னியாக இருப்பதால் கார்யம் என்றே சொல்லவேண்டும். இதேபோல் வாயு என்பதும் கார்யம்தான் வாயுத்வாத் (வ்யஜனம்போல் விசிறிபோல் என்று அனுமானிக்கப்படுகிறது. விசிறினால் காற்று உண்டாகிறது அதனால் காற்று கார்யம் என்றே சொல்ல வேண்டும். இந்தவிதம் நான்கு பூதங்களில் உதாகரணத்துடன் விளக்கப்பட்டது. ஆனால் நிரவயவமான ஆகாஸம் என்பதும் கார்யந்தான், பூதத்வாத் ப்ருதிவ்யாதிகள் போல என்று எப்படி ப்ருதிவி முதலான நான்கு பூதங்களும் கார்யமாக இருக்கிறதோ அதுபோல் ஆகாஸம் என்பதும் பூதமாக இருக்கின்றதால் கார்யமென்றே சித்திக்கின்றது.

**பூர்வ :** ஆகாஸம் என்பது உற்பத்தி உடையது (என்று சொல்லமுடியாது) அல்ல ஏனெனில், நிரவயவத்வாத், (ஆத்மாபோல) ஆத்மவத் என்று அனுமானத்திஞல் ஆகாஸம் கார்யமல்லவென்று சாதிக்கிறேன்.

**சித்தா :** இந்த அனுமானத்தில் உபாதிதோஷம் இருக்கின்றது.

உபாதிதோஷம் இந்த இடத்தில் அவித்யையிலிருந்து வேருகவும், சேதனமாகவும் இருப்பதென்பதும் உபாதி, ஆகாஸம் என்பது நிரவயமாக இருந்தபோதிலும் சேதனமாக இல்லை. இது ஸாதன அவ்யாபகத்வம், கார்யமில்லாத வஸ்துக்கள் எல்லாம் சேதனமாக இருக்கின்றது என்பது ஸாத்யவ்யாபகத்வம். ஆகையால் இவ்விதம் ஸாதன அவ்யாபகத்வம் ஸாத்யவ்யாபகத்வம் உடைய உபாதி இருப்பதனுல் ஆகாஸம் கார்யமில்லை என்ற அனுமானம் பொருந்தாது. மேலும் பூர்வ பக்ஷியினுல் சொல்லப்பட்ட 'ஆத்மா என்ற த்ருஷ்ட்டாந்தத்தில் நிரவயவ த்ரவ்யத்வம் என்ற ஹேது இருப்பதாகச் சொல்லமுடியாது ஏனெனில் ஆத்மா என்பது நிர்க்குணமானதால் த்ரவ்யத்வம் என்பது ஸம்பவிக்கமுடியாது (குணுச்ரயம் த்ரவ்யம் என்று உங்களாலேயே சொல்லப்படுவதால் நிர்க்குணமான ஆத்மா த்ரவ்யம் என்று சொல்லமுடியாது.

**498. அவதாரிகை :**

ஜகத் என்பது கார்யந்தான் என்பதையும் அதற்கு காரணம் ஒன்று இருக்கவேண்டுமென்பதையும் கீழே தீர்மானிக்கப்பட்டது. இப்போது அவ்விதம் ஜகத் காரணமாகச் சொல்லப்பட்ட வஸ்து சேதனம் என்பதை நிரூபிக்கப்பட வேண்டும். (ஏனெனில் க்ஷீத்யங்குராதிகளுக்கு காரணம் இருக்கவேண்டுமென்பதை ஜடமான கடபடாதிகளைக் கொண்டு விளக்கப்பட்டதால் பூதங்களுக்கு காரணமாகச் சொல்லப் படுவதும் ஜடமாக இருக்கலாமே? என்ற ஸந்தேகம் ஏற்படலாம். ஆகவே ஜெகத் காரணம் சேதனஞகத்தான் இருக்கவேண்டுமென்று அனுமானத்திஞல் சாதிக் கின்ருர்கள்.

**ச்லோகம் :** जनिमदभवदेतच्चेतनादेव हेतोर्घटवदिति पुनस्तत्कारणे चेतनत्वम् ।
अनुमिमत उदर्के कार्यतालिङ्गतोऽमी जगति हि परिदृष्टं चेतनादेव कार्यम् ॥

**ச்லோகார்த்தம் :** இந்த பூதங்கள் அனைத்தும் கடம் முதலானவைகள் போல் சேதனமான காரணத்திலிருந்தே உற்பத்தியாகின்றது. இவ்விதம் கார்யலிங்கத்தைக் கொண்டு காரணத்தினுடைய சேதனத்வம் என்பது பிறகு அனுமானிக்கப்படுகிறது. லோகத்திலும் சேதனமான காரணத்திலிருந்தே கார்ய உற்பத்தி ஏற்படுகிறதென்பது ப்ரசித்தம்தான்.

**வ்யாக்யானம் :** இந்த ஜகத் என்பது அத்ருஷ்ட்டத்வாரா ஜீவனே காரணம் என்று ஜகத்திற்கு அத்ருஷ்ட்டத்தை காரணமாகச் சொல்வது உண்டு. அந்தவிதம், ஜகத்திற்கு ஜடமான அத்ருஷ்ட்டம் காரணமென்று சொல்லமுடியாது. ஜகத் காரணம் சேதனஞகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில் கார்யமாக இருப்பதனுல், கார்யத்வாத் கடாதிகள் போல என்று அனுமானத்திஞல் சாதிக்கப்படுகிறது. கார்யமான பூதங்களும் சேதனனையே காரணமாகக் கொண்டது கார்யத்வாத், கடாதிவத் என்பது அனுமானம். சேதனஞன ஒரு காரணத்திலிருந்தே என்ற, ஏவகாரத்தினுல் அசேதனம் காரணமில்லை என்று அறியப்படுகிறது. இதம் க்ஷித்யங்குராதிகம் காரணபூர்வகம் கார்யத்வாத்

கடாதிகள் போல என்று ஜகத்திற்கு காரணம் ஒன்று இருக்கவேண்டுமென்று அனுமானம் செய்தபிறகு அந்த காரணம் சேதனமாகத்தான் இருக்கவேண்டுமென்று சாதிக்கப்படுகிறது. கடாதிகளில் கார்யத்வமும் இருக்கிறது, சேதன காரணத்வமும் இருக்கிறது என்ற வ்யாப்தியைக் கொண்டு ஜகத் காரணமும் சேதனமாகத்தான் இருக்கவேண்டும். விமதம் க்ஷித்யங்குராதி சேதனகாரணகம், கார்யத்வாத், கடவத். கடாதிகள் சேதன காரணமா இல்லையா என்று ஸந்தேகம் ஏற்படுவதில்லை அதேபோல் இதுவும் சேதன காரணமாகவே இருக்கவேண்டம்.

**499. அவதாரிகை :**

இவ்விதம் அனுமானத்தினுல் சித்திக்கப்பட்ட ஜகத் காரணத்வத்தையே ச்ருதியானது அனுவாதம் செய்து தெரிவிக்கின்றதேயன்றி அபூர்வமாக எதையும் ச்ருதியானது போதிக்கவில்லை என்றே சொல்லவேண்டும்.

**சித்தா :** இவ்விதம் சொல்வது சரியல்ல, ஜகத்திற்கு ஒரு காரணம் இருக்கவேண்டுமென்பது அனுமானத்திஞல் சித்திக்கலாமேயன்றி, ஜகத் காரணம் ஏகம் என்பதும் ஸர்வஞ்ஞும் என்பதெல்லாம் அனுமானத்திஞல் சித்திக்கமுடியாது.

**ச்லோகம் :**

जगदुदयनिमित्तं चेतनं किं नु नाना किमु भवतु तदेकं सर्ववित्सर्वशक्ति ।
इति भवति तु पश्चात्कारणे चेतनेऽस्मिन्ननवगतिनिमित्तः संशयो दुर्निवारः ॥

**ச்லோகார்த்தம் :** ஜகத் உற்பத்திக்கு காரணமான சேதனவஸ்து என்பது அனேகமா அல்லது ஸர்வஞ்ஞத்வம், ஸர்வசக்தித்வம் உடைய ஒரேவஸ்துவா? என்று இன்ன தன்மையுடையது என்று நிச்சயிக்க முடியாதவிதம் அஞ்ஞானத்திஞல் சேதனகாரண வஸ்துவில் அநிர்வார்யமான ஸந்தேகம் ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஜகத் காரணம் சேதனஞக இருக்கவேண்டுமென்பது அனுமானத்திஞல் சித்தித்த போதிலும் அந்த காரணம் ஏகமா? அநேகமா? கிஞ்சிக்ஞஞ? ஸர்வஞ்ஞஞ? ஸர்வசக்சக்தியுடையதா? அல்ப சக்தியுடையதா? என்று அனுமானத்திஞல் அறியமுடியாது. ஏனெனில், கார்யம் என்பது ஒன்ருக இருந்தாலும் அதற்கு அனேக கரத்தா இருக்கலாம். அதேபோல் கர்த்தா ஒன்ருக இருந்தாலும் கார்யம் அநேகம் இருக்கலாம். உதாரணமாக கோபுரம் என்ற கார்யம் ஒன்றுதான் என்ருலும் அதில் அனேக கர்த்தாக்களின் அபேக்ஷை இருக்கிறது என்பதை காண்கிரேும். அதேபோல் பாகக்ரியை என்பது அனேகம், கார்யம் அனேகமிருந்தாலும் ஒருவனே அனேக க்ரியையைச் செய்கிருன். ஆகவே ஜகத்திற்கு காரணமான கர்த்தா ஏகம் என்பது அனுமானத்திஞல் சித்திக்காது. காரணம் ஒன்றுதான் என்று கடாதிகளைக்கொண்டு அனுமானத்திஞல் தீர்மானிக்கப்படுமானுல் காரணம் அனேகமாகவும் இருக்கலாம் என்பதை கோபுரம் போன்ற வேறு எதிரிடையான அனுமானத்தைக்கொண்டு சாதிக்கமுடியும். ஆகவே ஜகத் காரணம் ஏகமா? அனேகமா? என்று ஏற்படும் ஸந்தேகம் அனுமானத்திஞல் நிவர்த்திக்காது. அதேபோல் ஜகத்திற்கு காரணமாக இருக்கின்றவன் ஸர்வஞ்ஞஞக இருக்கவேண்டுமென்று வ்யாப்தி க்ரஹிக்கமுடியாது என்பதால் வ்யாப்தி க்ரஹமின்றி அனுமானத்திஞல் ஸர்வஞ்த்வாதிகளை சித்தம் செய்யமுடியாது. ஸாமான்ய அனுமானத்தைக்கொண்டு விசேஷ தன்மைகளை அனுமானம் செய்வதென்பதும்முடியாது. லோகத்தில் இருக்கின்ற த்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டு ஜகத் கர்த்தா ஸர்வஞ்ஞன் என்பதை

தீர்மானிக்கமுடியாது. தர்க்கத்தினுல் சாதிக்கமுடியுமானுல், சாங்க்யர் முதலானமற்ற மதஸ்த்தர்களால் அவரவர்க்கு தோன்றியவிதம் ஜகத் காரணத்தை பலவிதமாகச் சொல்வதற்குமுடியாது. ஆகவே தர்க்கத்தினுல் சாதிக்கக்கூடியதாக இருந்தால் எல்லோரும் ஒரே காரணத்தைச் சாதித்திருக்கலாம். அவ்விதமில்லாததால் தர்க்கத்தினுல் ஜகத் காரணத்வம் சாதிக்கமுடியாது என்பது அறியப்படுகிறது. மேலும் தார்க்கிகனுல் சொல்லபடுகின்ற த்ருஷ்ட்டாந்தத்தினுல், ஜகத் காரணம் ஏகமென்று சொன்னுலும் அல்லது அனேகம் என்று சொன்னுலும் சரி அந்த சேதனன் ஸசரீரனு? அல்லது அசரீரனு? என்புதை தீர்மானிக்கமுடியாது. ஏனெனில் த்ருஷ்ட்டாந்தமாகச் சொல்லப்படும் கார்யங்களில் எல்லாம் கர்த்தாஸசரீரனுகவே இருக்கின்ற காரணத்தினுல் அனுமானத்தினுல் அஸரீரன் காரணம் என்று சாதிக்கமுடியாது. ஏனெனில் இந்த அனுமானத்தில் ஸரீரத்வம் என்ற உபாதிதோஷம் ஸம்பவிக்கின்றது. அதேபோல் ஸர்வஞ்ஞன் என்பதும் சித்திக்காது. ஏனெனில் லோகத்தில் கபிலர் கணுதர் வ்யாஸர் எல்லோரையும் ஸர்வஞ்ஞர் என்று சொல்லப்பட்டபோதிலும், ஒருவருக்கொருவர் தாரதம்யமுடையவராகவே இருக்கின்றதால் இதற்குமேல் ஸர்வஞ்ஞன் கிடையாது என்று சொல்வதற்கே முடியாது. ஜகத் காரணமான ப்ரஹ்மமோ ஸர்வஞ்ஞும் என்றும் அதற்கு மேற்பட்ட ஸர்வஞ்ஞுமே கிடையாது என்றும் அனுமானத்தினுல் சாதிப்பதற்குமுடியாது. அதேபோல் ஜகத்காரணம் ஸர்வவித் என்றும் சாதிக்கமுடியாது. ஏனெனில் லோகத்தில் கடாதிகார்யங்களுக்கு கர்த்தாவாக இருப்பவன் அஸர்வவித்தகாவே இருக்கின்றதால், ஜகத் காரணகர்த்தருகம் அஸர்வவித்தாகவும் இருக்கலாம். அதேபோல் அஸர்வஞ்ஞுனுகவும் இருக்கலாம். அதேபோல் லோகத்தில் எல்லாம் ஸசரீரகர்த்ருகமாகவே இருக்கின்றதால் அசரீரிஜகத் காரணம் என்று அனுமானிக்கப்படுமானுல் சரீரி ஜகத்காரணம் என்று ப்ரத்யனுமானத்தினுல் முதலில் சொல்லப்படும் அனுமானத்தை பாதிக்கலாம். ஆகவே அனுமானத்தைக் கொண்டு ஜகத் காரணம் என்பது ஏகம், ஸர்வஞ்ஞும், ஸர்வசக்தித்வம் அசரீரத்வம் என்ற விசேஷணங்களுடையது என்று சாதிப்பதற்குமுடியாது. உபநிஷத்தினுல் ஜகத்காரணம் என்ன என்பதை தெரிவிக்கின்ற விஷயங்களை மற்ற ப்ரமாணங்களால் தெரிவிக்கமுடியாது என்பதால் வேதாந்தம் அபூர்வமான விஷயத்தையே தெரிவிக்கின்றது. ஆகவே அனுமானத்தினுல் அறியப்பட்டதை ச்ருதி அனுவாதம் செய்து தெரிவிக்கிறது என்று சொல்வது சரியல்ல.

**500. அவதாரிகை :**

ஜகத் காரணம் ஏகம் என்றும் ஸர்வஞ்ஞும் என்றும் ச்ருதியினுல் எப்படி சித்திக்கின்றது? என்றுல்,

**ச்லோகம் :** श्रुतिवचनविशेषाच्चेतने कारणेऽस्मिन् यत इति निरवद्यादेकताधीरथाऽऽद्या ।
प्रकृतिरिति च तस्मिन्कारणे पञ्चमीयं जनयति दृढबुद्धिं तद्विधानादिहैव ॥

**ச்லோகார்த்தம் :** 'யதோவா' என்ற நிர்த்தோஷமான ஏகவசன ச்ருதிப்ரயோகத்தினுல் சேதனகாரணம் ஒன்றே என்ற ஞானம் ஏற்படுகிறது. 'யத:' என்ற பதத்தில் இருக்கின்ற பஞ்சமி விபக்தியானது, காரணம் என்று சொல்லப்படுவது எதுவோ அதுவே உபாதானமாகவும் இருக்கின்றது என்று த்ருடஞானத்தை ஏற்படுத்துகின்றது.

ஏனெனில் பஞ்சமி விபக்தி என்பதே உபாதானம் என்ற அர்த்தத்தில்தான் விதிக்கப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** ஜகத் காரணம் என்பது ஏகமா? அனேகமா? ஸர்வஞ்ஞமா? அஸர்வஞ்ஞமா? என்பது போன்ற ஸந்தேகம் ஏற்படுகிறது என்பது போலவே, ஜகத் காரணம் என்பது நிமித்த காரணமாக மட்டும் (கர்த்தாவாக மட்டும்) இருக்கிறதா? அல்லது உபாதான காரணமாகவும் இருக்கிறதா? அல்லது நிமித்த காரணத்தையன்றி வேருக உபாதானகாரணம் இருக்கின்றதா? என்பது போன்ற ஸந்தேகங்கள் ஏற்படுகின்றது. ஏனெனில், லோகத்தில் சேதனனுனவன் கடத்திற்கு கரத்தாவாக இருந்தபோதிலும் கடத்திற்கு உபாதான காரணமான ம்ருத் என்பது குலாலனைக் காட்டிலும் வேருக இருக்கின்றது. அதுபோல் உபாதானம் வேருக இருக்கிறதா? அல்லது சிலந்தியானது தன்னுடைய உமிழ் நீரினுலேயே தனக்கு வலையை சிருஷ்ட்டித்துக் கொள்வதுபோல் நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருக்கின்றதா என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது? ஆத்ம குணங்களுக்கு ஆத்மாவே நிமித்தோபாதனமாக இருக்கிறது என்று தார்க்கிகனுலும் சொல்லப்படுகின்றதால் இவ்வித ஸந்தேகங்களுக்கு இடமுண்டாகிறது. மேலும் கடாதிகளுக்கு நிமித்தமான குலாலன் உபாதானமான ம்ருத் இந்த இரண்டையும் தவிர தண்ட சக்ராதிகளும் ஸஹகாரி காரணமாக தேவைப் படுகிறது. இதுபோல் ஜகத் காரணம் என்பதிலும் அனேக காரணங்கள் இருக்கிறதா? இல்லையா? என்பதை எத்தனை கோடி தர்க்கங்களினுலும் தீர்மானிக்கமுடியாது. ஆகையால் ச்ருதி என்ற ஒரே ப்ரமாணத்தைத் தவிர வேறு எதனுலும் ஜகத்காரணம் என்னவென்பதை நிரூபணம் செய்யமுடியாது. இந்த விஷயத்தைப்பற்றி மேலே விளக்கப்படுகிறது. ஜகத் காரணம் சேதனனுக இருக்கவேண்டுமென்று அனுமானத்தினுலேயே சித்திக்கலாம் என்ருலும், அந்த சேதனமே உபாதானகாரணமாக இருக்கிறது என்பது அனுமானத்தினுல் சித்திக்கமுடியாது. ஆகவே ச்ருதியினுல்தான் ஜகத்காரணம் சித்திக்கின்றது. எப்படியெனில் 'யதோவா இமானி பூதானி' என்ற ச்ருதி வாக்யத்திலுள்ள 'யத:' என்ற பதமானது யத் என்பதால் ப்ரஹ்மத்தையும் த: என்ற ப்ரத்யயமானது ஏகத்வத்தையும் தெரிவிக்கின்றது. அதாவது எந்த ஒரு காரணத்திலிருந்து ஸர்வ பூதங்களும் உண்டாகின்றதோ என்று சொல்லப் படுவதிலிருந்தே ஜகத் காரணம் ஏகம் என்ற அர்த்தம், 'யத:' என்ற சப்தத்தினுலேயே அறியப்படுகிறது என்று சொல்லப்படுவதில் எவ்வித தோஷமும் கிடையாது. மேலும் 'யத': என்ற சப்தம் ஏகத்வத்தை தெரிவிப்பதுடன் பஞ்சமி விபக்தியின் பலத்தினுல் அதுவே ப்ரக்ருதியாகவும் (உபாதானமாகவும்) இருக்கிறது என்று அறியப்படுகிறது. இந்தவிதம் ஜகத்காரணம் ஏகம் என்பதும், அதுவே நிமித்த உபாதானகாரணமாகவும் இருக்கிறதென்பதும், யத:' என்ற ஏகவசன விசேஷணத்தினுலேயே அறியப்படுகிறது. 'யத:' என்ற பதம் பஞ்சமி விபக்தியில் சொல்லப்படுபவதற்காக அதனுல் ப்ரக்ருதி என்ற அர்த்தம் எப்படி கிடைக்கிறது? என்ருல் ஜனிகர்த்துப்ரக்ருதி:என்று பாணினியினுலேயே, இந்தவிதம் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மேலும் வேத வசனம் என்ருலே அது வேறு ப்ரமாணத்திற்கு விஷயமாகாது என்பதுடன் ஸ்வயம் ப்ரமாணமென்பதால் ச்ருதி வசனத்தில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. ஆகவே ஜகத் காரணமான ப்ரஹ்மம் ஏகம் என்பதும் அதுவே உபாதானம் என்றும் எப்படி ச்ருதி வாக்யத்தினுல் சித்திக்கின்றதோ அதேபோல் விசித்ரமான இந்த ஜகத்திற்கு காரணம்

என்பது ஸர்வஞ்ஞும் ஸர்வவித் யஸ்யஞானமயம்தப:' என்றெல்லாம் நேரிடையாகவே போதிக்கின்றது. சூத்ர பாஷ்யத்திலும் இதை விசாரித்து இந்த விஷயம் மிகவும் த்ருடமாக தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. சப்தத்திஞல் ஸ்ஹகாரி காரணம் ஏதும் இல்லையென்பதும் அறியப்படுகிறது ஆகவே ப்ரஹ்ம ஸர்வசக்தம் என்பதும் அறியப்படுகிறது. (யத் என்ற ப்ராதிபதிகத்திஞல் ஏகத்வத்தையும் 'த:' என்ற ப்ரத்யயத்திஞல் ப்ரக்ருதி = உபாதானத்தையும் தெரிவிக்கின்றது).

**501. அவதாரிகை :**

'யத்' என்பது ப்ரக்ருதி, 'த:' என்பது ப்ரத்யயம். ப்ரத்யயத்திலிருந்தே ஏகம் என்றும், ப்ரக்ருதி என்றும் இரண்டு அர்த்தங்கள் கிடைக்கின்றது. சாதாரணமாக ப்ரத்யயத்திலிருந்து கிடைக்கின்ற அர்த்தங்கள் எல்லாம், ப்ரக்ருதி அர்த்தத்துடன் சேரவேண்டும். ஆஞல் இந்தஇடத்தில் ப்ரத்யயார்த்தமான இரண்டிற்கும் ஒன்றுக்கொன்று அன்வயம் சொல்லப்படுகிறது. இந்தவிதம் அர்த்தம் செய்யப்படுவது சரியல்ல. ஒவ்வொன்றுக்கும் ப்ரக்ருதியுடன் அன்வயம் சொல்லவேண்டும் என்ற ந்யாயம் இருக்கின்றது. ஆகையால் இவ்வித ந்யாயத்திற்கு விரோதமாக அன்வயம் சொல்வது எப்படிப் பொருந்தும்? என்ற ஆக்ஷேபத்திற்கு இங்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

एकत्वमेकवचनादवगम्यमानं यच्छब्दवाच्यनिलयं यत इत्यमुष्मिन् ।
वाक्ये जगत्प्रकृतिगामितया न विद्मः संख्यां विभक्त्यभिहिते वचनं हि नाऽऽह ॥

**ச்லோகார்த்தம் :** 'யத்' என்பது ப்ராதிபதிகம். விபக்தி என்பது ப்ரத்யயம். ப்ராதிபதிகத்தில்தான் ஏகத்வம் அன்வயிக்கின்றதேயன்றி ப்ரத்யயார்த்தமான ப்ரக்ருதியில் அன்வயிக்கவில்லை. ப்ரக்ருதி என்பதில் ஏகத்வத்திற்கு அன்வயமில்லை. யத: என்ற யத்சப்தார்த்தமான ப்ராதிபதிகார்த்தத்தில்தான் ஏகத்வம் அன்வயிக்கின்றது. ப்ரத்யயத்திஞல் ப்ரக்ருதி ஏகம் என்று சொல்லப்படவில்லை.

**வ்யாக்யானம் :** யத: என்ருல்எந்த ஒரு காரணத்திஞல் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. ஆகையால் 'யத:' என்ற பதத்திஞல் ஏகத்வம் அறியப்படுகிறது. மேலும் 'த:' என்பது ஏகவசனமாகவும், விபக்தியாகவும் இருக்கிறது. ஆகவே ஏகவசனமாக இருப்பதால் ஏகம் என்றும், பஞ்சமியாக இருப்பதால் ப்ரக்ருதி என்ற அர்த்தத்தையும் தெரிவிக்கின்றது. (இவ்விதம் சொல்லாமல் விபக்தி என்று சொல்லப்படுமாஞல், அந்த விபக்தியிலேயே இருக்கின்ற ஏகத்வத்தை எப்படி தெரிவிக்கமுடியும்?

**பூர்வ :** வசன பலத்திஞலும் விபக்தி பலத்திஞலும் யத்:என்ற பதமானது ஜகத் என்பதற்கு ஒரே ப்ரக்ருதிதான் எனறு சித்திப்பதாக சொல்லலாமே?

**சித்தா :** யதோவா இமானி பூதானி என்ற வாக்யத்தில், ஏகவசனத்திஞல் அறியப்படும் ஏகத்வம் என்பது 'யத்' என்ற ப்ராதிபதிகார்த்தம் எதுவோ, அந்த ப்ரஹ்மத்திலுள்ள ஏகத்வத்தையே தெரிவிக்கின்றதேயன்றி விபக்தி அர்த்தமான ப்ரக்ருதியிலுள்ள ஏகத்வத்தை தெரிவிக்காது. ப்ராதிபதிகார்த்தம் ஒன்று என்று தெரிவிப்பதற்காகவே ஏகவசனம். அந்த வசனம் ப்ராதிபதிகார்த்தத்தில் இருப்பது எதுவோ அதைத்தான் தெரிவிக்கும்.

**502. அவதாரிகை :**

விபக்தியினுல் அறியப்படும் ஒரு பதார்த்தத்திலுள்ள ஸங்க்யையை, ஏகவசனம் விஷயமாக தெரிவிக்காது. அதேபோல், விபக்தியினுல் அறியப்படும் அர்த்தம் வசனகதமான அர்த்தத்தை போதிக்காது.

**ச்லோகம் :**

न हि विभक्त्यभिधेयपदार्थगं वचनमाह निजं विषयं क्वचित् ।
वचनवाच्यगतं न वदन्ति च स्वमभिधेयमशेषविभक्तयः ॥

**ச்லோகார்த்தம் :** விபக்தி அர்த்தமாக இருக்கின்ற (ப்ரக்ருதியிலுள்ள ஸங்க்யையை) வஸ்துவில் இருப்பதை வசனமானது தெரிவிக்காது. அதேபோல் விபக்தி அர்த்தமானது, வசனத்துடன் ஸம்பந்தப்பட்ட அர்த்தத்தை தெரிவிக்காது. ஆகையால், விபக்தி அர்த்தத்திற்கும், வசனுர்த்தத்திற்கும் ப்ரஸ்பரம் அன்வயம் சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** விபக்தி என்பது காரகத்திலிருக்கின்ற தன்மையைத் தெரிவிக்கின்றது. (விபக்தி அர்த்தம் காரகம்). வசனமானது காரகத்திலுள்ள ஸங்க்யையை தெரிவிக்காது. ப்ராதிபதிகார்த்தத்திலுள்ள ஸங்க்யையைத்தான் தெரிவிக்கும். காரகம் என்பது சித்தரூபமல்ல. அதனுல் வசனமானது சித்தரூபமான ப்ராதிபதிகார்த்தத்திலுள்ள ஸங்க்யையைத்தான் தெரிவிக்கும். ஏனெனில் வஸ்து ஒன்றே சித்தமாக இருக்கிறது. அந்த வஸ்து கர்த்ரு காரகமா? கர்மகாரகமா? கரணகாரகமா? அல்லது அபாதான காரகமா? என்று வசனம் அன்வயிக்கின்றபோது அதன் ஸ்வரூபம் சித்திக்காது. அதனுல் நித்யசித்தமான ப்ராதிபதிகார்த்தத்தில் உள்ள ஸங்க்யையை மட்டுமே தெரிவிக்குமேயன்றி காரகத்திலுள்ள ஸங்க்யையை தெரிவிக்காது. ப்ராதிபதி கார்த்தத்திலுள்ளதை தெரிவிக்காமல் விபக்தி அர்த்தத்திலுள்ளதை தெரிவிக்கிறது என்று சொல்வதற்குரியகாரணம் ஏதுமில்லை. அதேபோல் விபக்தி என்பதும் ஸங்க்யையுடன் அன்வயித்து தன் அர்த்தத்தை தெரிவிக்கிறதென்று சொல்லமுடியாது. ஆகையால் பரஸ்பரம் அர்தத்தத்தில் அன்வயிக்கின்றது என்ற ரூபே கைஷயைப்பொறுத்து விபக்தி அர்த்தத்திலுள்ள ஸங்க்யையை வசனம் தெரிவிக்கிறது என்று சொல்வதற்கு முடியாது. விபக்தி அர்த்தத்திலுள்ள ஸங்க்யையை வசனம் தெரிவிக்காது வசனத்திலுள்ள அர்த்தத்தை விபக்தி தெரிவிக்காது. 'ராம:' என்பதில் 'ராம' என்பது ப்ராதிபதிகம் 'அ:' என்பது ப்ரத்யயம். அதேபோல் 'யத:' என்பதிலுள்ள 'யத்' என்பது ப்ராதிபதிகம். இந்த யத் சப்தமானது சேதனமான ப்ரஹ்மத்தையே குறிக்கின்றது. எதிலிருந்து என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்ற யச் சப்தமானது ப்ரஹ்ம ஏகம் என்ற ஸங்க்யையைத்தான் அந்த வசனம் தெரிவிக்கிறது. அந்த ப்ரஹ்மமே உபாதானகாரணம் என்பதை விபக்தி தெரிவிக்கின்றது. ஆகையால் ப்ரக்ருதியிலுள்ள ஏகத்வத்தை வசனம் தெரிவிக்கிறதென்றே அல்லது ஏகத்வ ஸங்க்யையுள்ள ப்ரக்ருதியை வசனம் தெரிவிக்கின்றதென்றே சொல்லமுடியாது.

**503, 504. அவதாரிகை :**

'பஸுனு யஜேத' என்ற வாக்யத்திலுள்ள பஸுனு என்ற பதத்தினுல், முதலில் ஏற்பட்ட அர்த்தத்தையன்றி வேருக, பின்னுல் தாத்பர்யவஸாத் கிடைக்கின்ற அர்த்த அன்வயபலத்தைக் கொண்டு இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

प्रातिपदिकार्थगतमेव वचनानि स्वं स्वमभिधेयमभिधातुमलमर्थम् ।
प्रातिपदिकार्थगतमेव निजमर्थं वक्ति च विभक्तिरपि नेह वचनार्थे ।
पशुनेति पदे तृतीयया करणत्वं हि पशोर्निवेद्यते ।
वचनेन पशोरिहैकता न पुनः सा करणस्य कथ्यते ॥

**ச்லோகார்த்தம் :** வசனங்கள் தன் அர்த்தமான ஸங்க்யை என்பதை ப்ராதிபதிகார்த்தத்துடன் ஸம்பந்தப்படுகிறது என்றே கூறமுடியும். விபக்தியிலும் தன்னுடைய அர்த்தமான காரகத்தை ப்ராதிபதிகார்த்தத்துடன். ஸம்பந்தப்படுகிறது என்றே சொல்லமுடியும். வசனுர்த்தத்துடன் தன் அர்த்தம் ஸம்பந்தப்படுவதாக கூற முடியாது. ('பசுனுயஜேத' என்ற வேத வாக்யத்தில்) 'பசுனு' என்ற பதத்தில் த்ருதீயாவிபக்தியினுல் பசுவினுடைய கரணத்வம் தெரிவிக்கப்படுகிறது. ஏகவசனத்தினுல் பசுவினுடைய ஏகத்வம் தெரிவிக்கப் படுகிறது. இந்த ஏகத்வம் என்பது கரணத் தினுடையது என்று சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :**

**பூர்வ :** 'பஸுனுயஜேத' என்ற வாக்யத்தில் 'பஸுனு' என்பதில் ஏக வசனமும், த்ருதீய விபக்தியினுல் கரண விபக்தியும் அறியப்படுகிறது. இந்த வாக்யத்திலுள்ள ஏகவசனம், கரணத்தில் அன்வயிக்கவில்லை. பசுவில்தான் அன்வயிக்கின்றது. அதேபோல் கரணத்வமும் பசுவில் தான் அன்வயிக்கின்றது. இந்த இடத்திலும் வசனத்திற்கும், விபக்திக்கும் அன்வயமில்லையென்றுலும், ஏகத்வத்திற்கு முன்னுல் அன்வயம் இல்லாவிட்டாலும் பின்னுல் (ஏகத்வத்திற்கு) அர்த்தாத் கரணத்தில்தான் அன்வயம் ஏற்படுகிறது. 'பஸுனுயஜேத' என்ற இடத்தில் ஒரே ப்ர்த்யயத்தினுல் அறியப்படும் கரணத்வமும், ஏகத்வம் என்பதும் அத்யந்த ஸாமீப்யத்தினுல் பரஸ்பரஸ்ம்பந்தத்தை தெரிவிக்கின்றது. அதன்பிறகு பதத்தினுல் ப்ராதிபதிகார்த்தத்துடன் ஸம்பந்தத்தை தெரிவிக்கின்றது. அதேபோல் 'யத:' என்ற இடத்திலும் அர்த்தம் சொல்லலாமே?

வசனமும், விபக்தியும் ப்ராதிபதிகார்த்தத்துடன் அன்வயித்தாலும் தன் அர்த்தத்தையே தெரிவிக்கும் என்பது உண்மையே. ஆனுலும் ப்ரக்ருதி, ப்ரத்யயம் என்ற இரண்டும் சேர்ந்தே தன் அர்த்தத்தை தெரிவிக்கிறதேயன்றி, தனித்தனியே அதன் அர்த்தத்தை தெரிவிக்கவில்லை. 'ப்ரத்யயார்த்த ப்ராதான்யாத், ப்ரக்ருதியர்த்த: உபஸர்ஜனம்' என்ற ந்யாயப்படி, ப்ரக்ருதி அர்த்தமானது முதலில் விபக்தி அர்த்தத்துடன் சேர்ந்து ப்ரக்ருதி 'ஏகம்' என்ற அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ப்ரத்யயார்த்தத்துடன் சேர்ந்தே ப்ராதிபதிகார்த்தம் அறியப்படுமேயன்றி ப்ராதிபதிகார்த்தம் தனியாக அறியப்படாது. அதனுல் இரண்டும் சேர்ந்தே அறியப்படுகிறது என்று சொல்லவேண்டுமேயன்றி, தனித்தனியே அறியப்படுவதாகச்சொல்லமுடியாது. ப்ராதிபதிகார்த்தம் அறியப்படுகின்றபோதே, விபக்தி அர்த்தம் வசனுர்த்தம் என்ற இரண்டுடன் கூடியதாகவே அறியப்படுகிறது. ஆகையால் விபக்தி அர்த்தத்துடன் அன்வயித்த ப்ராதிபதிகார்த்தத்தில் வசனத்திலுள்ள ஸங்க்யையின் அன்வயம் பின்னுல் அறியப்படுகிறது. அதேபோல் விபக்தி அர்த்தமும் வசனத்திலுள்ள ஏகத்வஸங்க்யையும் கூடின ப்ராதிபதிகார்த்தத்துடன் சேர்ந்தே (அன்வயித்தே) அதன் அர்த்தத்தை தெரிவிக்கின்றது. ஆகவே ஒரே ஸமயத்தில் விபக்தி வசனம் என்ற இரண்டுடன் அன்வயித்தே ப்ராதிபதிகார்த்தம் அறியப்படுகிறது. அதேபோல் 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள 'யத்' என்ற பதத்திலுள்ள 'யத்' சப்தார்த்தமான 'ப்ரஹ்ம' மென்பது

அறியப்படுகிறது. அதனுல் ப்ரஹ்மரூபமான அர்த்தத்தில் அந்த ஒரே வஸ்துதான் இந்த ஜகத்திற்கு ப்ரக்ருதி என்ற அர்த்தமானது, சப்த ஸாமர்த்யத்திலுலேயே சித்திக்கின்றது என்று சொல்லலாமே?

**சித்தா :** இந்த ஆக்ஷேபம் சரியல்ல. வசனங்கள் எல்லாம் ப்ராதிபதிகார்த்தத்திலுள்ள (ப்ராதிபதிகார்த்தத்துடன் அன்வயித்த) ஸங்க்யையைத்தான் தெரிவிக்கும். தனியாக விபக்தி அர்த்தத்துடன் அன்வயித்த, தன் அர்த்தத்தை தெரிவிக்காது. அதேபோல் பஞ்சமி விபக்தியும் ப்ராதிபதிகார்த்தத்துடன், அன்வயித்த, தன் அர்த்தத்தைத்தான் தெரிவிக்குமேயன்றி தனியாக அதன் அர்த்தத்தை தெரிவிக்காது. அதனுல் 'யத:' என்ற பதமானது, வசனுர்த்தமான ஸங்க்யையுடன் அன்வயித்த, தன் அர்த்தத்தை தெரிவிக்கவில்லை. ஆகையால் 'யத:' என்ற இடத்தில் 'யத்' என்பது ப்ராதிபதிகம் இந்த ப்ராதிபதிகார்த்தத்தினுல் சேதனஞன ப்ரஹ்மமென்பது 'ஏகம்' என்றும் அதுவே ப்ரக்ருதியாக இருக்கிறது என்பதும் அன்வயத்தினுல் அறியப்படுகிறது. பஞ்சமியினுல் ப்ரக்ருதி என்று கிடைக்கின்ற அர்த்தத்திற்கும், வசனத்தினுல் கிடைக்கின்ற ஏகத்வம் என்பதற்கும் அன்வயம் இல்லையென்றே ஸாமான்யமாக இந்த சப்தங்களினுல் அர்த்தம் அறியப்படுகிறது.

'பஸுனுயஜேத' என்ற வாக்யத்தில் த்ருதீயவிபக்தியினுல் பஸுனு என்பது ஒரே ப்ரத்யயத்தினுல், வசனம் காரகம் என்ற இரண்டும் அறியப்படுகிறது. அதாவது இந்த ப்ரத்யயத்தினுல் கரணம் என்ற காரகமும், வசனத்தினுல் அறியப்படும் ஏகத்வம் என்ற ஸங்க்யை என்ற இரண்டும் ஒரே ப்ரத்யயத்தினுல் அறியப்படுகிறது. அதனுல் முதலில் இரண்டும் பரஸ்பரம் அன்வயிக்கின்றது. அதன் பிறகு 'பஸு' என்ற பதம் சப்தத்தினுல் ப்ராதிபதிகார்த்தமான பஸுவுடன் சேர்ந்து, கரணம், ஸங்க்யை என்ற இரண்டிற்குமுள்ள ஸம்பந்தம் அறியப்படுகிறது என்று ந்யாயத்தில் நிபுணர்களான பெரியோர்களால் சொல்லப்படுகிறது.

'யத:' என்ற இடத்திலும் இதேபோல் அர்த்தம் ஏன் சொல்லக்கூடாது? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், பஸுனு என்பதிலுள்ள பஸு என்ற ப்ராதிபதிகார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட காரகமான கரணத்வம் என்பதற்கும், ஸங்க்யையான ஏகத்வம் என்பதற்கும் ஒரே ஸமயத்தில் இரண்டும் சேர்ந்து அன்வயித்து அர்த்தம் அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. 'பஸுனு' என்பதிலுள்ள 'னு' என்ற த்ருதீயவிபக்தியினுல் பஸுவிற்கு கரணத்வம் நிச்சயிக்கப்படுகிறது. அதன் பிறகு வசனத்தினுல் அறியப்படும் ஏகத்வத்திற்கு கரணத்வத்துடன் அன்வயம் ஏற்படுகிறது. ஆகவே இந்த இடத்திலுள்ள வசனத்தினுலும் பஸுவிலுள்ள ஏகத்வம்தான் சொல்லப்படுகிறதேயன்றி கரணத்திலுள்ள ஏகத்வம் சொல்லப்படவில்லை. ஆகவே, எங்களால் சொல்லப்பட்ட விஷயத்திற்கு விரோதம் ஏதுமில்லை.

**505. அவதாரிகை :**

காரகம் என்பதும் ப்ராதிபதிகத்தில்தான் அன்வயிக்கும் வசனம் என்பதும் ப்ராதிபதிகத்தில்தான் அன்வயிக்கும் என்ற வ்யுத்பத்தியை மீறி ஏக: பஸு: கரணம் என்ற ஞானம் ஏற்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? என்ருல்,

**ச்லோகம் :**

अनुपपत्तिबलेन विधेस्तयोः करणतैकतयोरवगम्यते ।
करणतैकपशोरिति संगतिर्न घटते हि विधिर्विरहय्य ताम् ॥

**ச்லோகார்த்தம் :** கரணத்வம், ஏகத்வம் என்ற இவைகளின் ஸம்பந்தம் இன்றி விதி ஸம்பவிக்காது. இவ்விதம் விதிஸம்பவிக்காது என்ற காரணத்தினுல் "ஒரே பசு" என்பதே காரணம் என்று கரணத்வம், ஏகத்வம் என்பவைகளில் ஸம்பந்தம் அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'பஸுனுயஜேத' என்ற இடத்தில் ஒரே பஸு என்பதும் அதுவே கரணம் என்பதும் எப்படி கிடைக்கின்றது? என்ருல், 'பஸுனுயஜேத' என்ற வாக்யமானது ஏகத்வம், கரணத்வம் என்ற இரண்டுடன் அன்வயிக்கின்ற பசுவை தெரிவிக்க வில்லையென்ருல், இந்த வாக்யத்திலுள்ள விதி என்பதே பொருந்தாது. ஏனெனில் விதிக்கப்படும் க்ரியையுடன் (காரகம்) கரணம் என்பது அன்வயிக்க வேண்டும் அந்த, கரணம் என்பது அவச்சேதக தர்மமில்லாமல், அந்த க்ரியையுடன் அன்வயிக்காது. 'பஸுனு' என்பதில் முதலில் ஏகத்வம் என்பது அறியப்படுகிறது. ஒரு பசுவைக்கொண்டு யாகத்தைச் செய்யவேண்டும் என்று வாக்யம் தெரிவிக்கின்றபோது காரகம் ஏகம் என்று அர்த்தம் கிடைக்கவில்லையென்ருல் அதனுல் ஏற்படும் ப்ரயோஜனம் சித்திக்காது. அதனுல் பசுவுடன் அன்வயித்த ஏகத்வமும் கரணத்துடன் அன்வயிக்கின்றது என்பதை அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும். அதாவது பசுவுடன் அன்வயித்த ஏகத்வத்திற்கு காரக த்வாராதான் அபூர்வ ஸம்பந்தம் சொல்லப்பட வேண்டியிருப்பதால் அதை நிச்சயம் செய்து தெரிவிப்பதற்காக, கரண அவச்சேதமாக இருக்கின்ற பசு என்பது ஒன்றுதான் என்று கரணத்துடன் ஏகத்வத்திற்கு அன்வயம் சொல்லப்படவேண்டி இருக்கிறது. குருமதத்தினை தழுவி இவ்விதம் பதில் சொல்லப்படுகிறது.

**506. அவதாரிகை :**

இந்தவிதம் கரணமாக இருக்கின்ற பசு ஏகம்தான் என்று ஸம்பந்தமானது, அனுபபத்தியினுல் அர்த்தாத் கிடைக்கின்ற காரணத்தினுல், நேரிடையாக சப்தத்தினுல் இந்த அர்த்தம் கிடைப்பதாகச்சொல்லமுடியாது. ஆகையால் நேரிடையாகக் கிடைக்கின்ற அர்த்தம்தான் சோத்னுர்த்தம் என்று சொல்லலாமே தவிர அர்த்தாத் கிடைப்பதை சோதனுர்த்தம் என்று சொல்லக்கூடாது என்ற ந்யாயத்தின்படி சப்தத்திற்கு அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்தில் தாத்பார்யம் இருக்கமுடியாது என்பதால் அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்துடன் விதி என்ற நியோகத்திற்கு எப்படி ப்ரவேசம், ஸம்பந்தம், ஏற்படமுடியும்? என்ருல், அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்திற்கும் விதியுடன் அன்வயம் ஏற்படலாம் என்று குருமதஸ்த்தரான ப்ராபாகரரால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதை அனுசரித்து இங்கு பதில் சொல்கிரேும்.

**ச்லோகம் :**

उपादानतः संख्यया संगतिः स्यादवच्छेदकत्वेन संख्यानिवेशात् ।
पशोरेतयोस्तेन मार्गेण कार्ये निवेशोपपत्तेरुपादानमानात् ॥

**ச்லோகார்த்தம் :** ஏகத்வ ஸங்க்யை என்பது கரணரூபமான பசுவிற்கு அவச்சேதகமாக இருக்கின்றது என்று அர்த்தாபத்தியினுல் அறியப்படுகிறது. அர்த்தாபத்தி ப்ரமாணத்தினுல் கரணத்வம், ஏகத்வம் என்ற இரண்டும் பசு மூலமாக நியோகத்தில் ஸம்பந்தப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'பஸுனுயஜேத' என்ற வாக்யத்திலிருந்து பசு என்ற கரணத்தைக்கொண்டு யாகம் செய்யவேண்டுமென்ற அர்த்தம் வாக்யத்திலிருந்தே

கிடைக்கின்றது. ஆனுல் பசு என்ருல் ஒரு பசுவா? அனேக பசுவா? என்ற ஸந்தேகம் ஏற்படுகின்றது. 'பஸுனு' என்ற த்ருதீய சருதியினுல் பசு என்பது யாகத்தில் கரணம் என்று பசுத்வ ஜாதியையுடைய வ்யக்தியை குறிப்பிட்டபோதிலும் ஏகமா? அனேகமா? என்ற ஸங்க்யை எப்படி அறியப்படுகிறது? என்ருல், 'பஸுனு' என்ற பதமே ஏகவசனமாக இருக்கின்றதால் ஏகத்வ ஸங்க்யையும் அதனுலேயே அர்த்தாத் அறியப்படுகிறது. அதாவது நியோகத்திற்கு விஷயம் யாகம். இந்த யாகத்திற்கு விசேஷணம் ஒரே பசு. ஒரே பசுவை கரணமாகக் கொண்ட யாகத்தைச்செய்' என்று இந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்வேண்டும் அவ்விதம் அர்த்தம் செய்யாவிட்டால் விதி என்பதே ப்ரயோஜனமுடையதாக ஆகாது. ஆகவே அர்த்தாபத்தி என்ற ப்ரமாணத்தைக்கொண்டு ஏகத்வஸங்க்யை என்பது கரணத்துடன் அன்வயிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**507. அவதாரிகை :**

'பஸுனுயஜேத' என்ற இடத்தில், விதி இருக்கின்றதால் வேறு எந்த அர்த்தமும் பொருந்தாது என்பதால் உபாதானப்ரமாணத்தைக் கொண்டு (அர்த்தாபத்தி) வசனம் விபக்தி என்ற இரண்டிற்கும் பரஸ்பரம் அன்வயம் இருக்கிறது என்று சொல்லப்பட்டது சரியே. ஆனுல் (ப்ரக்ருத விஷயமான இந்த இடத்தில்) 'யதோவா இமானி' என்ற வாக்யத்தில் விதி என்பதே இல்லையானதால் 'பஸுனு' என்ற வாக்யத்தைப்போல் அன்வயம் சொல்வதற்கு எப்படிமுடியும்? என்று ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

न चैवं विधिः कश्चिदत्रेति न स्यादुपादानतः संगतिर्यत्पदार्थे ।
विभक्त्यर्थसंख्यार्थयोर्नेह कश्चिद्यतो वा इमानीति वाक्ये विधिर्नः ॥

**ச்லோகார்த்தம் :** எங்கள் (மீமாம்ஸகர்கள்) அபிப்ராயப்படி 'யதோவா' என்ற வாக்யத்தில் விதி ஏதுமில்லை. ஆகையால் அர்த்தாபத்தி என்ற ப்ரமாணத்தினுல் 'யத்' பதார்த்த விஷயத்தில் விபக்தி அர்த்தமான காரகத்திற்கும், வசனுர்த்தமான ஸங்க்யைக்கும் ஸம்பந்தம் ஸம்பவிக்கமுடியாது. ஏனெனில் 'யதோவா' என்ற வாக்யத்தில் விதி ஏதுமில்லை.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள 'யத்' சப்தமானது விபக்தியினுல் ப்ரக்ருதித்வம் என்பதையும், ஏகத்வம் என்ற ஸங்க்யை வசன விசேஷணத்தினுலும், ஜகத் காரணமான வஸ்துவில், அன்வயம் சொல்லப்படுகிறது என்றும் அதற்கு உதாகரணமாக 'பஸுனுயஜேத' என்ற வாக்யம்போல என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளமுடியாது. ஏனெனில் 'பஸுனுயஜேத' என்ற வாக்யம் விதி வாக்யமாக இருப்பதால் அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்திற்கும் அன்வயம் ஏற்படுவதாகச் சொல்வது பொருந்தும். ஆனுல், அதுபோல் 'யதோவா இமானி' என்ற வாக்யம் விதி வாக்யமாக இல்லாததால் 'பஸுனு' என்பதில் சொல்லப்படும் ந்யாயம் இங்கு பொருந்தாது.

'யதோ வா இமானி பூதானி' என்ற வாக்யத்திலும் 'தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி' என்று அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்ளவேண்டுமென்று அந்த வாக்யத்திலும் விதி இருக்கிறதே? என்ருல், அந்த வாக்யத்திலுள்ள விதியானது ப்ரஹ்ம விசாரத்தை விதிக்கின்றதேயன்றி 'பஸுனுயஜேத' என்ற வாக்யத்தைப்போல், ஸங்க்யை என்ன? காரகம் என்ன? காரணம் என்ன? என்று யாகத்தில் உள்ள விதியைப்போல்,

ஏகத்வஸங்க்யையோ உபாதான காரணத்தைப்பற்றியோ 'யதோவா' என்ற வாக்யத்தில் விதிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் 'பஸுனு' என்ற விதி வாக்யத்தில், உபாதான ப்ரமாணத்தைக் கொண்டு கரணகாரகமான பசு என்பதும் பசு ஏகம் என்ற ஸங்க்யையும் யாகத்தில் அன்வயிப்பதாக எப்படி சொல்லப்படுகிறதோ அதுபோல் 'யதோவா' என்ற வாக்யத்தில் உபாதானத்வம் ஸங்க்யை என்ற இரண்டிற்கும் அவஸ்யம் அன்வயம் சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லாவிடில் விதி ஸம்பவிக்காது என்று சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லே. அதனுல் 'யத்' சப்தமான ப்ராதிபதிகாரத்தத்துடன் விபக்திக்கும் வசனுர்த்தத்திற்கும் சம்பந்தம் இருப்பதாகச் சொல்லமுடியாது. விதி இல்லாவிடினும் விதியை கல்பித்து அர்த்தம் செய்யலாமே என்ருல், அவ்விதம் கல்பிப்பதற்கும் முடியாது, ஏனெனில் வேதாந்த சித்தாந்தத்தில் விதி என்பதே கிடையாது என்பதால் உங்களுடைய சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படும்.

**508. அவதாரிகை :**

விதி என்பது இல்லாவிட்டாலும் விசிஷ்ட்ட வாக்யார்த்தத்தில் அனுபபத்தி ஏற்படுமாளுல் அந்த அனுபபத்தியினுலேயே அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தத்தைக் கொண்டு விபக்தியர்த்தத்திற்கும் வசனுர்த்தத்திற்கும் அன்வயம் சொல்லப்படலாம். (பஸுனுயஜேத என்ற வாக்யத்திலும் அர்த்தத்தில் ஏற்படும் அனுபபத்தியைக் கொண்டே ஸம்பந்தம் கற்பிக்கப்படுகிறது.)

**ச்லோகம் :**

अवितथामिदमेवमेतदस्मिन्न खलु विधेर्वचनं पठन्ति वाक्ये ।
यत इति घटते तथापि योगो वचनविभक्तिनिगद्ययोरिहापि ॥

**ச்லோகார்த்தம் :** உங்களால் சொல்லப்படுவதுசரியே. "யதோவா" என்ற வாக்யத்தில் விதி ஏதும் கிடையாது. ஆனுலும் விபக்தி அர்த்தமான காரகத்திற்கும், வசனுர்த்தமான ஸங்க்யைக்கும் இங்குஸம்பந்தம் இருக்கிறது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்தில் விதி இல்லே என்று சொல்வது ஸத்யம் தான். ஆனுல் 'பஸுனு' என்ற வாக்யத்தில் எந்த முறையில் அன்வயம் சொல்லப்படுகிறதோ அதே முறையில் 'யத:' என்ற பதத்தினுல் வசனுர்த்தம் விபக்தி அர்த்தம் இரண்டிற்கும் ஸம்பந்தம் பொருந்துகின்றது. 'யதோவா இமானி' என்ற வாக்யம் ப்ரஹ்ம லக்ஷணத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படவேண்டுமானுல், விதியை ஒத்துக்கொள்ளமுடியாது. விதியை ஒத்துக் கொள்ளப்படுமானுல் விவக்ஷிதமான அர்த்தம் சித்திக்காது என்பதால் வசனம் விபக்தி என்ற இரண்டையும் கொண்டு இரண்டிற்கும் அன்வயம் ஏற்படலாம்.

**509. அவதாரிகை :**

('பஸுனுயஜேத' என்ற வாக்யத்தில் விதியின் அனுபபத்தியினுல் அர்த்தாபத்தி ப்ரமாணத்தைக்கொண்டு ஸம்பந்தம் சொல்லப்படுகிறது). அதுபோல் இந்த வாக்யத்தில் எதனுடைய அனுபபத்தியினுல் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது?

**ச்லோகம் :**

एकत्वमेकवचनेन समर्पितं यद्यच्छब्दवाच्यनिलयं यत इत्यमुष्मिन् ।
पञ्चम्युपात्तमपि यत्प्रकृतित्वमस्मिन्संगच्छते तदुभयं पशुवस्तुनीव ॥

**ச்லோகார்த்தம் :** 'யதோவா' என்ற வாக்யத்தில் இருக்கின்ற 'யத்' சப்தார்த்தத்தில், ஏகவசனத்திஞல் தெரிவிக்கப்படும் ஏகத்வம், பஞ்சமிவிபக்தியிஞல் தெரிவிக்கப்படும் உபாதானத்வம் இவை இரண்டும் 'பசுஞயஜேத' என்ற வாக்யத்திலுள்ள பசு என்ற வஸ்துவில் ஸம்பந்தப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்தில் விதி இல்லையென்ருல், எந்த அனுபபத்தியிஞல், வசஞர்த்தம் விபக்தி அர்த்தம் இரண்டிற்கும் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது? 'யத்' சப்தத்திலுள்ள, வசனத்திஞல் அறியப்படும் ஏகத்வம் என்பதும் பஞ்சமி விபக்தி அர்த்தத்திஞல் அறியப்படும் ப்ரக்ருதித்வம் என்பதற்கும் ஒன்றுக்கொன்று அன்வயம் இருப்பதாகச் சொல்லப்படாவிட்டால் ஏகத்வம் ப்ரக்ருதித்வம் என்ற இரண்டு தன்மைகளுடன்கூடின சேதனமான ப்ரஹ்மத்தை அனுவாதம் செய்து இந்த வாக்யம் ப்ரஹ்மதத்வத்தை உபதேசிப்பதாகச் சொல்லமுடியாது. விசேஷணம் என்னவென்று தெரிவிக்காமல் விசேஷ்யமான ப்ரஹ்மமானது (தத்விஜிஞ்ஞாஸஸ்வ என்று) வாக்யத்திஞல் போதிக்கப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஆகவே ஏகவசஞர்த்தமும் பஞ்சமி விபக்தி அர்த்தமும் சேர்ந்து விசிஷ்ட்டமான ஒரு அர்த்தத்தை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**510. அவதாரிகை :**

கீழே சொல்லப்பட்ட விஷயத்தையே மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

एका या प्रकृतिः समस्तजननी तद्ब्रह्म जिज्ञास्यतामित्यत्रापि हि वस्तुनिष्ठवचने शक्यैव तत्संगतिः ।
विज्ञातुं विधिमन्तरेण च तथाऽऽनर्थक्यभीत्या न हि स्वाध्यायाध्ययनैकगोचरविधेरायातमर्थं विना ॥

**ச்லோகார்த்தம் :** "ஸர்வத்திற்கும் உற்பத்தி ஸ்தானமாக இருக்கின்ற ஏகமான உபதான காரணமாக இருப்பது எதுவோ அதுவே ப்ரஹ்மம். அந்த ப்ரஹ்மம் விசாரத்திஞல் அறியப்படவேண்டும்" என்ற இந்த சித்தபோதக வாக்யத்திலும் விதி இல்லாமல் ஆனர்த்தக்ய பயத்திஞல் விபக்தி அர்த்தத்திற்கும் வசஞர்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தை அறிந்து கொள்ளமுடியும். "யதோவா" என்ற வாக்யம் அர்த்தமின்றி "ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:" என்ற விதியிஞல் அறிந்து கொள்ளப்படும் வாக்யமாகாது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி பூதானி' என்று ஆரம்பித்து. 'தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம' என்று முடிவு பெறுகின்ற இந்த வாக்யத்திலுள்ள வசனம் விபக்தி என்ற விசேஷணத்திஞல் யத: என்ற சப்தமானது ஜகத் காரணம் ஏகம் என்றும் அதுவே உபாதானம் என்றும் தெரிவிக்கிறது. இமானி பூதானி என்பதில் இந்த ஸர்வஜகத்தும் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. ஆகவே "எதிலிருந்து இந்த ஜகத்தெல்லாம் உண்டாயிற்ரே எதில் ஸ்திதிபெற்று எதில் லயத்தை அடைகிறதோ அதுவே ஜகத்காரணம் என்றும் ஏகம்என்றும் உபாதானமாகவும் (நிமித்தமாகவும்) சேதனமாகவும் எந்த ஸ்வரூபம் சொல்லப்படுகிறதோ அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்" என்ற இந்த வாக்யமானது ப்ரஹ்ம லக்ஷணத்தை தெரிவிக்கின்றதால் இந்த வாக்யத்தில் விதி என்பது கிடையாது. ஆஞல் விதி இல்லாவிடினும் ப்ரஹ்மமென்பதற்கு ஜகத்காரணத்வத்தை லக்ஷணமாகச்சொல்லப்படாவிட்டால் பூர்ஞத்மாவான அகண்டம் ப்ரஹ்மமென்பது சித்திக்காது. ஆகையால் ஏகத்வம் ப்ரக்ருதித்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாகச் சொல்லப்படுகிறதேயன்றி

ஸ்வரூபலக்ஷணமாகச் சொல்லப்படவில்லை. ஆகவே எந்த விதமான சித்தாந்த ஹானியும் கிடையாது. எந்த விதமான லக்ஷணம் சொல்லப்பட்டால் 'அகண்டம் ப்ரஹ்ம' என்ற ப்ரஹ்ம சப்தார்த்தம் சித்திக்குமோ அந்த விதமாக எவ்வித விரோதத்திற்கும் இடமில்லாமல், பூர்ணாத்ம ஸ்வரூபமாக போதிக்கப்படுகிறது. ஆகவே யத் சப்தத்தினால் போதிக்கப்படுகின்ற சேதனமான ப்ரஹ்மத்திற்கு அவச்சேதக த்வாரா அன்வயம் ஏற்படுகிறது என்பதால் விதி இல்லாமலேயே இந்த வாக்யத்திற்கு அன்வயம் ஏற்படுகிறது என்பது சித்தம். இவ்விதம் சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளாமல் அவஸ்யம் விதி இருக்கவேண்டுமென்று பிடிவாதமாகச் சொல்லப்படுமானால் இந்த வாக்யத்திலும் ஸம்ஸர்க்கத்திற்கு காரணமான விதி இருப்பதாகவே சொல்லலாம். எப்படியெனில் 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்ற வாக்யத்தினால் வேதாத்யயனம் கர்த்தவ்யம் என்ற அறியப்படுகிறது. இவ்விதம் அத்யயனம் விதிக்கப்படுவதால் அதற்கு ப்ரயோஜனம் இருக்கவேண்டும். ப்ரயோஜனமுள்ளதான அர்த்தத்தை வேதம் போதிக்கவில்லை என்றால் அத்யயனம் என்பதே தேவையற்றதாக ஆகிவிடும். இதேபோல் 'யதோ வா இமானி பூதானி' என்ற வாக்யமும் வேத வாக்யமானதால் அந்த வாக்யமும் அர்த்தமுள்ளதாகவும் ப்ரயோஜனமுள்ளதாகவும் இருக்கிறது என்று சொல்லவேண்டுமானால் ப்ரக்ருதித்வம் ஏகத்வம் என்ற இரண்டிற்கும் ப்ரஹ்மத்துடன் அன்வயம் சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லாவிடில் வேத வாக்யம் அனர்த்தகம் என்று சொல்லநேரிடும். இவ்விதம் 'யதோவா' என்ற வாக்யம் அனர்த்தகம் என்று சொல்லப்படுமானால் ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்ற வாக்யத்தினால் கர்த்தவ்யமாகச் சொல்லப்படும் அத்யயனவிதி என்பதும் அனர்த்தகமென்றே சொல்லநேரிடும். விதி என்றால் அதற்கு அவஸ்யம் பலன் இருக்கவேண்டும் என்ற நியமத்தைக்கொண்டு அத்யயன விதிக்கு அர்த்த ஞானத்தைத்தான் பலமாகச் சொல்லவேண்டும். ஆகவே அத்யயனவிதிக்கு ஆனர்த்தக்யம் ஏற்படக்கூடாது என்ற பயத்தினாலும் 'யதோவா' என்ற வாக்யமும் வேத வாக்யமானதாலும் இந்தவிதம் ப்ரக்ருதித்வம் ஏகத்வம் என்ற இரண்டிற்கும் அவஸ்யம் அன்வயம் சொல்லப்படவேண்டும் என்று சொல்லலாம்.

**511. அவதாரிகை :**

இந்தவிதம் 'பஸுனாயஜேத' என்ற வாக்யத்தில், எப்படி விதி இல்லாவிடில் அர்த்தம் பொருந்துவதில்லையோ, அதுபோல் 'யதோவா இமானி' என்ற லக்ஷண வாக்யத்திலும் 'யத:' என்ற பதத்தில், வசனத்திற்கும், விபக்திக்கும் அன்வயம் சொல்லாவிடில் ப்ரஹ்மத்திற்கு விசிஷ்ட்ட லக்ஷணம் சொல்லப்பட்டதாக ஆகாது. ஆகையால் வசனம் விபக்தி என்ற இரண்டினுடைய அன்வயம் இந்த வாக்யத்தில் சித்திக்கின்றது என்பதை தெரிந்து இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

वचनार्थविभक्तिवाच्ययोरुपपन्नाऽन्वयबुद्धिरर्थतः ।
पशुनेति पदे यथा तथा यत इत्यादिपदेऽपि लक्षणे ॥

**ச்லோகார்த்தம் :** 'பசுனாயஜேத' என்ற வாக்யத்தில் அர்த்தாபத்தி ப்ரமாணத்தினால் வசனார்த்தமும் விபக்தி அர்த்தமும் பரஸ்பரம் அன்வயிக்கின்றது என்ற ஞானம் பொருத்தமாக இருக்கிறது. அதேபோல் 'யதோவா' என்ற ப்ரஹ்மலக்ஷணவாக்யத்திலும் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்ற விதி வாக்யத்தினுலேயே 'யதோவா' என்ற இந்த வாக்யத்திற்கும் அன்வயம் (ஸம்பந்தம்) கிடைக்கின்றது என்று முன்னுல் சொல்லப்பட்ட விஷயமானது அப்யுபேயமாக ஒத்துக்கொண்டு சொல்லப்பட்டது. ஆனுல் உண்மை என்னவென்ருல் சப்த ஸாமர்த்யத்தினுலோ, அர்த்த ஸாமர்த்யத் தினுலோ ஸம்ஸர்க்க சித்தி (அன்வயம்) ஏற்படுகிறது என்பதுதான் உண்மை. இல்லையென்ருல், 'ஸவாத்யாயோ' என்ற விதி வாக்யமும், அத்யயன வஸாத் ஸம்ஸர்க்க சித்தியா? ஸம்ஸர்க்க சித்தியினுல் அத்யயனம் கர்த்தவ்யம் என்று அறியப்படுகிறதா? என்று அன்யோன்ய ஆச்ரயதோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகையால் இந்தவிதமான வாக்யங்களில் எப்படி அர்த்தம் பொருந்துகிறது என்பதை பொறுத்தே ஸம்ஸர்க்கம் இருக்கிறதா இல்லையா என்று தீர்மானிக்கவேண்டும். ஆகவே விசிஷ்டார்த்த அனுபபத்திதான் ஸம்ஸர்க்கத்திற்கு (அன்வயத்திற்கு) காரணம் என்று சொல்லவேண்டு மேயன்றி வித்யனுபபத்தி ஸம்ஸர்க்கத்திற்கு காரணம் என்று சொல்லமுடியாது. வாக்யத்தில் அர்த்தம் பொருந்துவதே அன்வயத்திற்கு காரணமாகிறது. 'பஸுனு' என்ற பதம் போலவே 'யத:' என்ற பதமுள்ள இந்த வாக்யத்திலும் அன்வயம் பொருந்துகின்றது. 'யதோவா இமானி' என்ற வாக்யம் போலவே, வேதத்தில் "தஸ்மாத் ஏதத் ப்ரஹ்ம நாமரூபமன்னம் சஜாயதே' 'ஏதஸ்மாத் ஜாயதே ப்ராண:' 'தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மன:' என்ற வாக்யங்களுக்கும் வசனுர்த்தம், விபக்தி அர்த்தம் இரண்டிற்கும் அன்வயம் என்பது ஏற்படுகிறது.

**512. அவதாரிகை :**

'யதோவா இமானி' என்ற வாக்யத்தில் விதி இல்லாததால், ஆபேக்ஷத்தினுல் அவாந்தர ஸம்பந்தம் உண்டுபண்ணப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும் என்ருல் விதி வாக்யத்திலும் விதியினுல் ஆபேக்ஷமில்லை. ப்ரதானயாகத்தை விதிக்கின்ற அம்ஸத்தில் சேர்ந்த விஷயத்தினுல்தான் ஆபேக்ஷமாக ஆகிறது. அதேபோல் இந்த வாக்யமும் ப்ரதான அர்த்தத்திற்கு அனுகுணமான அவாந்தர ஸம்பந்தத்தை ஆபேக்ஷித்துக் கொடுக்கின்றதால் அவாந்தர ஸம்பந்தம் ஏற்படுகிறது. ஆகவே அவாந்தர ஸம்பந்தம் ஏற்படுவதற்கு இரண்டு வாக்யங்களுக்கும் காரணம் ஒன்றுதான்.

**ச்லோகம் :**

विधिनिष्ठवाक्यमपि बोधयति स्वमपेक्षितं विषयमर्थवशात् ।
परमात्मनिष्ठमपि तुल्यमिदं वचसोर्द्वयोरपि तु रूपमतः ॥

**சலோகார்த்தம் :** விதிவாக்யம் என்பதும் தன்னுடைய அர்த்தத்தை அர்த்தாபத்தியினுல் போதிக்கின்றது. அதேபோல் ப்ரஹ்ம லக்ஷணவாக்யமும் போதிக்கின்றது. ஆகையால் இரண்டுவாக்யங்களிலும் ஸ்மானமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'பஸுனுயஜேத' என்ற வாக்யத்திலுள்ள 'பஸுனு' என்ற பதத்தில் விதி இருப்பதால்தான் அந்த வாக்யார்த்தத்திற்கு ஆபேக்ஷமாகிறது அதுபோல் 'யதோவா' என்ற வாக்யத்தில் விதி இல்லாததால் அந்த வாக்யார்த்தத்தை ஆபேக்ஷித்துக் கொடுப்பதாக எப்படிச் சொல்லமுடியும் என்ருல்,

வாக்ய அன்வயம் ஏற்படுவதற்கு விதி இருப்பதும் இல்லாததும் காரணமல்ல. விதி வாக்யமாக இருந்தாலும் விசிஷ்டமான முக்யார்த்தம் எதுவோ அந்த ப்ரதான அர்த்தத்தை அபேக்ஷித்து, தாத்பர்யார்த்தம் எதுவோ அந்த ஸம்பந்தத்தை

போதிக்கப்படவேண்டும். ஆகவே விதி இல்லாமலேயே எந்த வாக்யமானது பரமாத்ம போதகமாக இருக்கின்றதோ அந்த வாக்யமும், வாக்யத்திலிருந்து கிடைக்கவேண்டிய அர்த்தத்தை அனுசரித்து, ப்ரதான அன்வயம் ஏற்படுவதற்கு அபேக்ஷிதமாக இருப்பது எதுவோ அந்த அன்வயத்தை அந்த வாக்யமே ஆபேக்ஷித்துக்கொடுக்கின்றது. ஆகவே விதி வாக்யத்திலும் அர்த்த ஸம்பந்தத்தின் பலத்தை அனுசரித்தே ஆபேக்ஷிதமாகிற தேயன்றி விதி இருப்பது காரணமல்ல. ஆகையால் பரமாத்ம போதக வாக்யத்திலும் விதி இல்லையென்றுலும் பதபதார்த்த அன்வயமென்பது எந்த வாக்யத்திலும் ஒரே விதமாகவே ஆகாங்க்ஷையை உண்டுபண்ணுகிறது. அதனுல் ஸம்ஸர்க்கமான அர்த்தம் அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

**513. அவதாரிகை :**

ஜகத் காரணம் என்ற லக்ஷணத்தைக்கொண்டு லக்ஷ்யமான ப்ரஹ்மமானது அறியப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? ஏனெனில், லோகத்தில் எந்த வஸ்துவானது ஒரு லக்ஷணத்தினுல் அறிவிக்கப்படுகிறதோ அந்த லக்ஷ்ய வஸ்துவும் அந்த லக்ஷணமும் ஒரு ப்ரமாணத்தினுல் அறியப்படக்கூடியதாக இருக்கிறது. ஆனுல் லக்ஷ்யவஸ்துவான ப்ரஹ்மமென்பது எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாகக்கூடியதல்ல. அதேபோல் ஸர்வ ஜகத் காரணத்வம் என்ற லக்ஷணமும் ஒரு வஸ்துவில் இருப்பதாகச் சொல்லப்படுவதற்கு ப்ரமாணமும் இல்லை. இவ்விதம் இரண்டுமே அப்ரஸித்தமாக இருக்கின்றபோது ஒன்றுக்கொன்று லக்ஷ்ய லக்ஷணபாவம் சொல்வது எப்படி பொருந்தும்.

**ச்லோகம் :**

एकं चेतनमस्य यत्प्रकृतितामापन्नमुत्प्रेक्षते तद्ब्रह्मेति निशामयेति निपुणं ब्रूते परब्रह्मणः ।
सिद्धं लक्षणमादरेण महता व्यावर्तयद्ब्रह्मणस्तत्त्वं तत्त्वमसीति वाक्यनिलयं तच्छब्दलक्ष्यं वचः ।

**ச்லோகார்த்தம் :** "எந்த ஒரு சேதனவஸ்து, ஜகத்காரணமென்று அனுமானிக்கப் படுகின்றதோ, அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்" என்று ச்ருதியானது மிகவும் ஸாமர்த்யமாக பரப்ரஹ்மத்தின் சித்தமான லக்ஷணத்தை ஆதரவுடன் தெரிவிக்கின்றது. இந்தலக்ஷணமானது தத்த்வம் என்ற மஹா வாக்யத்திலுள்ள தத்சப்த லக்ஷ்யமான பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை வேறுபடுத்தி தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள யத்சப்தார்த்தம் என்ன? ஜகத் காரணம் என்ன? என்று வேறு எந்த ப்ரமாணத்தினுலாவது அறியப்பட்டிருக்குமேயானுல், இது இந்த வஸ்துவின் லக்ஷணம், இது லக்ஷ்யம் என்று சொல்வது பொருந்தும். அவ்விதம் இந்த இரண்டும் எதனுல் சித்திக்கின்றது என்பது சொல்லாமல் இந்த லக்ஷணத்தினுல் 'ப்ரஹ்ம' சித்திக்கின்றது என்று சொல்வது பொருந்தாது. மேலும், இந்த வாக்யமே, ஜகத் காரணத்துடன்கூடியது ப்ரஹ்மென்று விசிஷ்டார்த்தமாக தெரிவிக்கிறது என்றும் அதன்பிறகு, ஜகத் காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு தடஸ்த்தலக்ஷணம் என்றும், இந்த வாக்யமே இரண்டுவிதமான அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே ஒரே வாக்யமானது ஜகத் காரணமான ப்ரஹ்மத்தையும் அந்தப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் போதிக்கின்றது என்று சொல்வது பொருந்தாது.

**சித்தா :** எந்த ஒரு வஸ்து ஜகத் காரணம் என்றும் சேதனம் என்றும் அனுமானத்தினுல் அறியப்படுகிறதோ அதுவே ப்ரஹ்மமென்று சாஸ்திரம் உபதேசிக்கின்றது. அதாவது எந்த

வஸ்து ஜகத் காரணம் என்று அனுமானத்தினுல் சித்திக்கின்றதோ அந்த வஸ்துவே ப்ரஹ்மமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. அதனுல் அனுமானத்தினுல் எது சித்திக்கின்றதோ அதுவே லக்ஷண்ம் என்பதால் லக்ஷணம் அப்ரஸித்தம் என்று சொல்லப்படுவது சரியல்ல. இந்தவிதம் லக்ஷணத்திற்கு எப்படி அப்ரஸித்தி இல்லையோ அதேபோல் லக்ஷ்யத்திற்கும் அப்ரஸித்தி இல்லை. 'தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத் ப்ரஹ்மேதி' என்று அந்த வாக்யத்திலுள்ள ப்ரஹ்ம சப்த்திற்கு (பதத்திற்கு) அர்த்தமாக ஒரு வஸ்து சித்திக்கின்றதால் அந்த வஸ்துவே லக்ஷ்யம். இந்த லக்ஷ்யமான ப்ரஹ்ம வஸ்து தத்வமஸ்யாதி மஹா வாக்யங்களினுல் சித்திக்கின்றது ஆகவே இரண்டும் அப்ரஸித்தம் என்று சொல்வது சரியல்ல.

**பூர்வ :** மஹா வாக்யங்களினுலேயே லக்ஷ்யமான ப்ரஹ்மவஸ்து சித்திக்குமானுல், அதற்கு லக்ஷணம் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

**சித்தா :** மஹா வாக்யங்களிலிருந்து எந்த ப்ரஹ்ம வஸ்து சித்திக்கின்றதோ, அதுவே ஜகத் காரணம் என்று சித்திக்கிவேண்டுமானுல் (ஜகத் காரணமென்று சொல்லப்படும்) ப்ரதானம் முதலானவைகளில் பொருந்தாமல் ப்ரஹ்மத்தில் மட்டும் பொருந்துகின்ற ஒரு லக்ஷணத்தைச் சொல்லப்பட்டால்தான் அதுவே ஜகத் காரணம் என்று சித்திக்கும் என்பதால் லக்ஷணம் சொல்லப்படவேண்டியதாக இருக்கிறது. ப்ரஹ்ம ஸ்வரூபம் அபரிச்சின்ன சிதானந்த ஏகரூபம் என்றும், பரிச்சின்னமாகவும் ஜடமாகவும் இருக்கின்ற ப்ரதானமோ பரமாணுவோ ஜகத் காரணமாகாது என்று இவைகளிலிருந்து வேறுபட்டது ப்ரஹ்மமென்பதை தெரிவிக்கவேண்டிய அவஸ்யம் ஏற்படுவதால், லக்ஷணம் அவஸ்யம் தேவைப்படுகிறது. தத்வமஸி மஹா வாக்யத்திலுள்ள, தத்பதார்த்த சோதனம் செய்வதற்கு லக்ஷணம் உபகாரகமாக இருக்கிறது. 'ஸதேவ ஸௌம்யஇத மக்ரஆஸீத்' என்ற வாக்யமானது 'தத்' என்ற சப்தார்த்தம் எதுவோ அதுவே ஜகத் காரணம் என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகச் சொல்லப்படும் ஜகத் காரணத்வம் தடஸ்த்தலக்ஷணம் என்று சொல்லப்பட்டால்தான் பாகத்யாக லக்ஷணையினுல் அந்த லக்ஷணத்தை விலக்கி கேவல சைதன்ய ரூபமான லக்ஷ்ய ஸ்வரூபத்தை அறிந்து கொள்ளமுடியும்.

ஆக்வே சேதனம்தான் ஜகத் காரணமென்றும் அது ஏகம் என்பதும் அனுமானத்தினுல் ஏற்கனவே சித்தமாக இருக்கின்றது. இவ்விதம் அனுமானத்தினுல் சித்திக்கப்பட்ட விஷயம் எதுவோ அதுவே, ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம். இந்தவிதம் எந்த ஒரு வஸ்து இந்த ஜகத்திற்கு ப்ரக்ருதியாகவும், ஏகமாகவும் சேதனமாகவும் சித்திக்கின்றதோ 'அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்' என்று சாஸ்திரம் போதிக்கின்றது. இதனுல் ஜகத் காரணம் ப்ரதானுதிகள் இல்லையென்று, அவைகளி லிருந்து வேறுபடுத்தி ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படுகிறது.

தத்வமஸ்யாதி வாக்யத்திலுள்ள 'தத்' பதமும் தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத் ப்ரஹ்மேதி' என்ற வாக்யத்திலுள்ள 'ப்ரஹ்ம' பதமும் லக்ஷ்யமான ப்ரஹ்மத்தை போதிக் கின்றதால் மஹாவாக்யங்களிலிருந்து லக்ஷ்யமான ப்ரஹ்மமானது சித்திக்கின்றது.

**514. அவதாரிகை :**

ஜகத் காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு தடஸ்த்த லக்ஷணம் என்று சொல்லப்படுமானுல், லக்ஷ்யார்த்தத்தில் ஸம்பந்தப்படாத ஒன்றை அந்த வஸ்துவிற்கு லக்ஷணம் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? என்றுல் —

லக்ஷணமானது லக்ஷ்ய ஸ்வரூபத்தில் சேராமலேயே உபலக்ஷணமாக இருந்து லக்ஷ்யத்தை தெரிவிக்கமுடியும் என்பதை தெரிவிப்பதற்காக லக்ஷணை என்பது எத்தனை விதமாக இருக்கிறது என்பதை மேல் வரும் ச்லோகங்களில் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

लक्ष्यस्य लक्षणमिह त्रिविधं प्रसिद्धम् लोके स्वलक्षणममुष्य विशेषणं वा ।
यद्वोपलक्षणमिमानि च लक्षणेन व्यावर्णयामि पृथगेव तु तत्प्रतीहि ॥

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் ஒரு லக்ஷ்யத்திற்கு ஸ்வரூபலக்ஷணமென்றும், விசேஷலக்ஷணம் என்றும் உபலக்ஷணம் என்றும், மூன்றுவிதமான லக்ஷணங்கள் ப்ரசித்தமாகச் சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணங்களை வெவ்வேறாக பிரித்து வர்ணிக்கின்றேன் அதை அறிந்துகொள்.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யமானது தடஸ்த்த லக்ஷணமாக இருந்து ப்ரஹ்மத்தை போதிக்கின்றது என்று சொல்லப்பட்ட விஷயத்தில் எவ்வித தோஷமும் கிடையாது. ஸ்வலக்ஷணம் என்று எந்த வஸ்துவிற்கு ஒரு லக்ஷணம் சொல்லப்படுகிறதோ அந்த லக்ஷணம் அந்த வஸ்துவில் ஸம்பந்தப்படாமலேயே இருந்து அந்த வஸ்துவை தெரிவிக்கின்றதா? அல்லது லக்ஷ்ய வஸ்துவில் அந்த லக்ஷணம் ஸம்பந்தப்பட்டதாகவே இருந்து அந்த வஸ்துவை தெரிவிக்கிறதா? என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. இதில், லக்ஷணம் ஸம்பந்தப்படாமலேயே இருந்து லக்ஷ்யத்தை தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால் எந்த வஸ்துவிற்கும், எதை வேண்டுமானாலும் லக்ஷணம் என்று சொல்லநேரிடும் அதனால் அதிப்ரஸங்கம் என்ற தோஷம் ஏற்படும். ஆகவே இந்த லக்ஷணம் எந்த லக்ஷ்ய ஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது என்றே அறியமுடியாது. அதற்காக லக்ஷ்ய ஸ்வரூபத்தில், அந்த லக்ஷணமானது ஸம்பந்தப்பட்டே லக்ஷ்யத்தை தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால், அஸங்கமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் லக்ஷண ஸம்பந்தம் இருக்கமுடியாது என்பதால் இந்த இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஆகையால் இது லக்ஷ்யம் அதற்கு இது லக்ஷணம் என்று எப்படிச் சொல்லமுடியும்? என்றால், ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படும் லக்ஷணத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் வாஸ்த்தவமான ஸம்பந்தம் இருக்கமுடியாது என்றாலும் ஏதோ ஒரு விதமான ஸம்பந்தத்தினால் இந்த லக்ஷணமானது ப்ரஹ்மத்தில் இருந்து கொண்டு லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றது என்பதை மேலே விளக்கப்படுகிறது. அதாவது விவகாரதசையில் லக்ஷணம் என்பது மூன்று விதம் என்று சொல்லப்படுகிறது. (ஸ்வலக்ஷணம்) ஸ்வரூபலக்ஷணமென்றும் ஸ்வரூபத்தின் விசேஷலக்ஷணமென்றும் உபலக்ஷணம் என்றும் மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது. ஏதோ ஒருவிதம் எப்போதாவது லக்ஷ்ய ஸ்வரூபத்துடன் ஸம்பந்தமுள்ளதாக அறியப்படுவது உபலக்ஷணம். இந்த லக்ஷணங்களைப்பற்றி மேல்வரும் ச்லோகங்களில் உதாகரணத்துடன் விளக்கப்படுகிறது.

**515. அவதாரிகை :**

லக்ஷணம் எத்தனைவிதம் என்று விபாகம் செய்து தெரிவிப்பதற்குமுன்பு பொதுவாக லக்ஷணம் என்றால் என்ன என்று லக்ஷணத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

लक्ष्यार्थनिष्ठमुपलब्धमतोऽन्यतोऽर्थान्निःशेषतो यदतिरिच्य तदर्थवस्तु ।
लक्ष्यं निवेदयति लक्षणमेतदाहुः सामान्यलक्षणमिदं त्रिषु लक्षणेषु ॥

**ச்லோகார்த்தம் :** லக்ஷ்யவஸ்துவில் அறியப்படுகின்ற எந்ததர்மம் வேறு பதார்த்தங்களிலிருந்து பூர்ணமாக வேறுபடுத்தி லக்ஷ்யவஸ்துவை தெரிவிக்கின்றதோ அதுவே லக்ஷணம் என்று சொல்லப்படும். இதுவே மூன்றுவித லக்ஷணங்களுக்கும் ஸாமான்யமான லக்ஷணம்.

**வ்யாக்யானம் :** மூன்றுவிதமான லக்ஷணங்கள் என்ன? என்று விபாகம் செய்து தெரிவிப்பதாக ப்ரதிஞ்ஞை செய்யப்பட்டது. இவ்விதம் விபாகம் செய்வதற்குமுன், லக்ஷணம் என்றால் என்ன என்று ஸாமான்யமாக லக்ஷணத்தின் தன்மை என்ன வென்று லக்ஷணத்தின் லக்ஷணம் சொல்லாமல் அந்த லக்ஷணங்களை விபாகம் செய்து தெரிவிப்பது சரியல்ல. ஆகவே, முதலில் லக்ஷணம் என்றால் என்ன என்று சொல்கிறோம். லக்ஷ்ய வஸ்து எதுவோ அந்த வஸ்துவை, மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பது எதுவோ அதுவே லக்ஷணம் என்று சொல்லப்படும். லக்ஷ்யத்திலிருந்து வேறுபடுத்தப்படுகின்ற வஸ்து, ஸஜாதீயமாகவும் இருக்கலாம்; விஜாதீயமாகவும் இருக்கலாம். லக்ஷணமானது லக்ஷ்யார்த்தத்தில் இருந்து கொண்டே மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. லக்ஷ்யார்த்தநிஷ்டம், உபலப்தம் என்ற இரண்டு விசேஷணங்களுடன்கூடியது லக்ஷணம். லக்ஷ்யார்த்தத்தில் இல்லாததும், லக்ஷணமென்று அறியப்படாமலும் இருக்குமானால், அது லக்ஷ்யத்தை தெரிவிக்க முடியாது. ஆகவே லக்ஷ்யார்த்தநிஷ்டம், உபலப்தம் என்ற விசேஷணம் சொல்லப் படுகிறது. ஆகவே எந்த லக்ஷ்யத்தை ஸஜாதீய விஜாதீயங்களிலிருந்து வேறுபடுத்து கின்றதாகவும், அறியப்படுவதாகவும், லக்ஷ்ய ஸ்வரூபத்தில் இருக்கின்றதாகவும். இருக்கின்றதோ அதையே லக்ஷணம் என்று சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணம் மூன்றுவிதம் என்பதை மேலே விபாகம் செய்து தெரிவிக்கிறோம்.

**516. அவதாரிகை :**

முதலில் ஸ்வரூபலக்ஷணம் என்றால் என்ன? என்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

लक्ष्यस्वरूपमपि सद्यदमुष्य साक्षादर्थान्तराद्भवति भेदकमेतदाहुः ।
अस्य स्वलक्षणतयैव तु लक्षणं खं छिद्रं द्रवं जलमितीदृशमत्र लोके ॥

**ச்லோகார்த்தம் :** எந்த தர்மமானது லக்ஷ்யவஸ்துவின் ஸ்வரூபமாகவே இருந்து கொண்டு வேறு பதார்த்தங்களிலிருந்து லக்ஷ்யவஸ்துவை வேறுபடுத்தி தெரிவிக் கின்றதோ அதையே ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லப்படுகிறது. 'அவகாசரூபம் ஆகாசம்' (இடைவெளியே ஆகாசம்) 'த்ரவ வஸ்துவே ஜலம்' என்று லோகத்தில் ஸ்வரூபலக்ஷண வாக்யங்கள் தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** லக்ஷ்யஸ்வரூபத்திலிருந்து மற்றவஸ்துக்களை வேறுபடுத்தி லக்ஷ்யவஸ்துவை தெரிவிப்பது எதுவோ அதுவே லக்ஷணம் என்று சொல்லப்பட்டது. இந்த லக்ஷணம் என்பது ஸ்வரூபலக்ஷணம் என்றும் விசேஷண லக்ஷணமென்றும் தடஸ்த்தலக்ஷணம் என்றும் மூன்றுவிதமாக பிரித்துச் சொல்லப்படுகிறது. இதில் முதலில் ஸ்வரூபலக்ஷணம் என்றால் என்ன என்பதை விளக்கப்படுகிறது. மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கக்கூடியதும் வேறு உபாதியைக்கொண்டு லக்ஷணமாக இல்லாமல், நிரூபாதிரூபமாக இருக்கின்ற லக்ஷணம் எதுவோ (அதாவது ஸ்வரூபமாகவே இருக்கின்ற லக்ஷணம் எதுவோ,) அதுவே ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லப்படும்.

ஸ்வரூபலக்ஷணத்தைப்பற்றி தெரிவிக்கிறோம் என்று சொல்லப்படுவதாலேயே மற்றுமுள்ள விசேஷண லக்ஷணமில்லை தடஸ்த்த லக்ஷணமில்லை என்று மற்ற லக்ஷணங்களிலிருந்து இந்த லக்ஷணம் வ்யாவ்ருத்தி செய்து (வேறுபடுத்தி) தெரிவிக்கப்படுகின்றது. இதேபோல் விசேஷணம் என்றாலே அந்த லக்ஷணம் ஸ்வரூபலக்ஷணமல்ல, தடஸ்த்தலக்ஷணமுமல்ல என்று அறியப்படுகிறது. அதேபோல் தடஸ்த்த லக்ஷணம் என்றாலே அது ஸ்வரூபலக்ஷணமுமல்ல விசேஷணலக்ஷணமுமல்ல என்று வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. இதுவே லக்ஷணம் என்று அறிந்துகொள்ள வேண்டும். மேலும் ஸ்வரூபலக்ஷணம் என்றால் என்ன என்பதை உதாகரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

'கடம்' என்று சொல்லப்படுமானால், அந்த கடத்திற்கு கம்பு க்ரீவாதிகளை (shape) ஸ்வரூபலக்ஷணம் என்று சொல்லப்படும். சிகப்பு கடம் என்று சொல்லப்படுமானால் சிகப்பு கலர் என்பது கடத்தின் தர்மம். கடத்திலுள்ள இந்த தர்மம் மற்ற தர்மங்களைக்காட்டிலும் வேருக இருந்து லக்ஷ்யத்தை தெரிவிக்கின்றது. அதேபோல் ஸ்வரூபம் என்பதும் மற்றவைகளைக்காட்டிலும் வேருக இருக்கின்றதால் லக்ஷ்யத்தை தெரிவிக்கின்றது. ஆகவே அன்யவ்யாவர்த்தகமாகவும் நிரூபாதிகரூபமாகவும் இருப்பது எதுவோ அதுவே ஸ்வரூபலக்ஷணம். மேலும், உதாரணமாக ஜலம் என்பது ஸ்வச்சம் என்று லக்ஷணம் சொல்லப்படுமானால் இந்த ஸ்வச்சத்வம் என்ற லக்ஷணம் ஸ்படிகம் முதலானவைகளில் இருக்கின்றதால் இந்த லக்ஷணத்தில் அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே ஸ்வரூபலக்ஷணத்திற்கு அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்காமல் இருப்பதற்காக அன்யவ்யாவர்த்தகம் என்ற முதல் விசேஷணம் சொல்லப்படுகிறது. அதேபோல் நிரூபாதிகம் என்ற விசேஷணம் சொல்லப்படுகிறது. ஏனெனில் ஸ்வரூபலக்ஷணமும் தடஸ்த்தலக்ஷணமும் வ்யாவர்த்தகமாக இருப்பதால் அதிவ்யாப்திதோஷம் ஏற்படும். அதனால் அந்த தோஷநிவர்த்திக்காக நிரூபாதிகம் என்ற விசேஷணம் சொல்லப்படுகிறது. மூன்றாவதாக 'ரூபம்' என்ற விசேஷணம் சொல்லப்படுவதற்கு என்ன காரணம் என்றால் விசேஷணலக்ஷணத்தில் ஸ்வரூபலக்ஷணத்திற்கு அதிவ்யாப்தி ஸம்பவிக்குமானதால் அதை நிவர்த்திப்பதற்காக ரூபம் என்ற விசேஷணம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது உதாகரணமாக 'கம்சித்ரம்' = ஆகாசம் அவகாஸ ஸ்வரூபம் என்பது ஸ்வரூபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் அவகாஸம் என்பது ஆகாசத்தின் தர்மம் என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை. அதனால் அவகாஸமே ஸ்வரூபம் என்றுதான் சொல்லவேண்டும். இதேபோல் ஜலம் என்பதற்கு த்ரவத்வம் என்பதே ஸ்வரூபம். இந்தவிதம் அன்யவ்யாவர்த்தகமாகவும் நிரூபாதிகரூப மாகவும் இருப்பது எதுவோ அதுவே ஸ்வரூபலக்ஷணம் லக்ஷ்யவஸ்துவின் ஸ்வரூபமாக இருந்து லக்ஷணமாக இருக்கின்றதால் ஸ்வரூபலக்ஷணம் என்று பெயர்.

**517. அவதாரிகை :**

விசேஷணலக்ஷணமென்றால் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :** स्वानुरक्तमतिजन्मकारणं यत्पुनर्भवति लक्ष्यवस्तुनि ।
तद्विशेषणतयाऽस्य लक्षणं केसरादिकमिवाश्ववस्तुनः ॥

**ச்லோகார்த்தம் :** 'குதிரையின் கேசம்' முதலானவைகள் போல் எந்த தர்மமானது தன்னுடன் ஸம்பந்தப் பட்டதாகவே இருந்துகொண்டு லக்ஷ்யவஸ்துவின் ஞானம் ஏற்பட காரணமாக இருக்கின்றதோ அதுவே விசேஷ லக்ஷணம்.

**வ்யாக்யானம் :** லக்ஷ்யஸ்வரூபத்துடன் எப்போதும் சேர்ந்து அறியப்படுமானுல் அதுவே விசேஷணலக்ஷணம் என்று சொல்லப்படும். அதாவது எந்த லக்ஷ்யஸ்வரூப மானது, இந்த விசேஷணத்தினுல் அறியப்படுகிறதோ அந்த விசேஷணமான தர்மத்துடன் கூடினதாகவே எப்போதும் அறியப்படும். உதாரணமாக கேசராதிகளுடன் கூடியது எதுவோ அது குதிரை என்றும் சிகப்புக்குதிரை என்றும் லக்ஷணம் குறிப்பிடப்படுகின்றபோது கேசரம் என்பதும், சிகப்பு கலர் என்பதும் குதிரைக்கு விசேஷணம். இந்த விசேஷணங்கள் எப்போதும் குதிரையுடன் சேர்ந்தே அறியப்படும் ஆகவே விசேஷ்யம் உள்ளவரை இந்த விசேஷணங்களும், இருக்கும் என்ற அம்ஸத்தில் மட்டும் இந்த உதாகரணம் சொல்லப்படுகிறது. ஸ்வ அனுரக்த மதி ஜன்ம காரணம் என்று இந்த லக்ஷணத்திற்கு விசேஷணம் சொல்லப்படுகிறது. கந்தவதி ப்ருதிவி என்பது ஸ்வரூபலக்ஷணம். இந்த லக்ஷணத்திலிருந்து விசேஷண லக்ஷணத்தை வேறுபடுத்தி தெரிவிக்காவிடில் அதிவ்யாப்தி ஸம்பவிக்கும். ஆகவே வ்யாப்த்யா என்ற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. இதேபோல் தடஸ்த்தலக்ஷணத்திலிருந்து விசேஷணலக்ஷணம் வேறுபட்டது என்பதை தெரிவிக்க ஸ்வஅனுரக்த மதி ஜன்ம காரணம் என்ற விசேஷணமும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் 'வ்யாப்த்யா' என்பதாலும், 'ஸ்வஅனுரக்தம்' என்பதாலும் வ்யாவர்த்தகம் என்பதாலும், விசேஷணம் சொல்லப் பட்டதால் மூன்றுவிதமான அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**518. அவதாரிகை :**

உபலக்ஷணம் என்ருல் என்ன?

**ச்லோகம் :**

स्वानुरक्तमतिजन्महेतुतां लक्ष्यवस्तुनि निरस्य लक्षणम् ।
अस्वरूपमपि तस्य यद्भवेत्काकवत्तदुपलक्षणं विदुः ॥

**ச்லோகார்த்தம் :** எந்த தர்மமானது ஸ்வரூபமாக இல்லாமலேயே தன்னுடன் ஸம்பந்தப்பட்டதாகவே இருந்து கொண்டு லக்ஷ்யவஸ்துவின் ஞானம் ஏற்படுவதற்கு காரணமாக இல்லாமல் இருந்து கொண்டே லக்ஷணமாக இருக்கின்றதோ அதுவே 'காகவத் தேவதத்த க்ருஹம்' என்பதுபோல் உபலக்ஷணம் என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ஸ்வரூபமாகவோ அல்லது ஸ்வரூபத்துடன் எப்போதும் சேர்ந்திருக்கும் தன்மையில் இல்லாமல் மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பது எதுவோ அதுவே உபலக்ஷணம் என்று சொல்லப்படும். தடஸ்த்தலக்ஷணம் என்றும் சொல்லலாம். ஒரு வஸ்துவிற்கு எதை லக்ஷணமாகச் சொல்லப்படுகிறதோ, அது லக்ஷணமாகவே இல்லாமல் இருக்குமானுல் அதை லக்ஷண ஆபாஸம் என்றே சொல்லவேண்டுமேயன்றி லக்ஷணமென்று சொல்லமுடியாது. ஆகவே லக்ஷ்யஸ்வ ரூபத்தில் சேராமலேயே லக்ஷ்யத்தை தெரிவிக்கின்றதால் லக்ஷகமான இந்த லக்ஷணம் தடஸ்த்த லக்ஷணம் என்று சொல்லப்படும்.

ஆகவே ஸ்வரூபலக்ஷணமாக இல்லாமலும் எப்போதும் லக்ஷ்யத்துடன் ஸம்பந்தப்பட்டே அறியப்படும் விசேஷணமாகவும் இல்லாமல், ஒரு ஸமயம் அந்த

லக்ஷ்யஸ்வரூபத்திலிருந்து லக்ஷ்ய வஸ்துவை மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பது எதுவோ அதுவே உபலக்ஷணம் என்று சொல்லப்படுகிறது. உதாரணமாக அதோ காக்கை உட்கார்த்திருக்கிறதே அதுவே தேவதத்தனுடைய க்ருஹம் என்று தெரிவிக்கின்றபோது லக்ஷ்யவஸ்து மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. காக்கை என்ற விசேஷணம் எப்போதும் க்ருஹத்துடன் சேர்ந்ததல்ல. என்பதால் விசேஷணலக்ஷணத்தினுலோ ஸ்வரூபலக்ஷணத்தினுலோ அதிவ்யாப்தி தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

**519. அவதாரிகை :**

(இந்தவிதம் சொல்லப்பட்ட மூன்று லக்ஷணங்களில் ஸ்வரூபலக்ஷணமென்றும் விசேஷணலக்ஷணமென்றும் சொல்லப்பட்ட இரண்டு லக்ஷணங்கள் பற்றி ப்ரக்ருத விஷயத்தில் விசாரிக்கவேண்டிய அவஸ்யமில்லை). ஆனுல் உபலக்ஷணம் என்று சொல்லப்பட்ட லக்ஷணத்தினுல் ப்ரக்ருத விஷயத்திற்கு என்ன லாபம் என்ருல், அதைப்பற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वमस्य चिद्वस्तुनो यदसहायपरिग्रहस्य ।
तद्वर्णनीयमुपलक्षणमेव कस्माद्ब्रह्मेति लक्ष्यपदशक्त्ययविरोधहेतोः ॥

**ச்லோகார்த்தம் :** எந்தவிதமான ஸஹாயமுமில்லாத 'சித்வஸ்து' என்பதே ஜகத் உற்பத்தி ஸ்திதி லயகாரணம் என்று சொல்லப்படுவதே ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணம் என்று சொல்லப்படுகிறது. ஏனெனில் இவ்விதம் சொல்லப்படுவதால், லக்ஷ்யவஸ்துவை தெரிவிக்கின்ற ப்ரஹ்மபதத்தின் அர்த்தத்திற்கு விரோதம் ஏற்படாது.

**வ்யாக்யானம் :** லக்ஷணம் என்பது மூன்றுவிதம் என்றும் அவைகளின் லக்ஷணம் என்னவென்பதையும் இதுவரை விளக்கப்பட்டது. இப்போது இந்த லக்ஷணங்களில் ப்ரஹ்மத்திற்கு, ஜகத்காரணத்வம் என்பது உபலக்ஷணமாகத்தான் இருக்கமுடியும் என்பதை மேலே விளக்கப்படுகிறது.

சித்வஸ்துவான ப்ரஹ்மானது, வேறு எந்தவிதமான, கர்த்ருகரண ஸஹாயம் எதுவுமின்றி ஜகத்திற்கு காரணமாக ஆகிறது என்பதை மேலே சொல்லப்படுகிறது. இவ்விதம் ப்ரஹ்மத்திற்கு ஜகத் காரணத்வம் என்பது உபலக்ஷணமாகவே சொல்லப்படுகிறது. உபலக்ஷணமாகச் சொல்லப்பட்டால்தான், ப்ரஹ்மசப்தத்திற்கு விரோதமில்லாமல் ப்ரக்ருதித்வம் என்பதை சொல்லமுடியும். ப்ரக்ருதித்வம் என்பது விசேஷணமாகச் சொல்லப்படுமானுல் 'ப்ரஹ்ம' சப்தார்த்தம் பாதிக்கப்படும். சத் சித் ஆனந்த ஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு ஜகத் ஜன்மாதிகள் ஸ்வரூபலக்ஷணமாக இருக்கமுடியாது. ஆகவே 'யதோவா இமானி' என்ற வாக்யமானது ஜகத் காரணத்வம் என்பதை ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாகவே தெரிவிக்கின்றது. ஏனெனில் அத்விதீயமான ப்ரஹ்மதத்வமே லக்ஷ்யமாக இருக்கின்றதாலும் எவ்வித ஸஹாயமுமின்றி அந்த ப்ரஹ்மமே ப்ரக்ருதியாகவும் சொல்லப்படுவதால் உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படவில்லையென்ருல், 'அத்விதீய சித்ரூபம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மசப்தார்த்தம் எதுவோ அந்த உண்மையான அர்த்தம் சித்திக்காது. ஆகவே ப்ரஹ்ம சப்தம் பாதிக்கப்படாமல் ப்ரக்ருதித்வம் என்பது உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும்.

**520. அவதாரிகை:**

ஜகத்காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணம்தான் என்று சாதிக்கப்பட்டதால் என்ன விரோதபரிகாரம் செய்யப்படுகிறது என்றால், அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம்:**

विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वरूपमेकाकिनो यदिह लक्षणमुच्यमानम् ।
तद्ब्रह्मणो यदि विशेषणरूपमिष्टं ब्रह्मेति लक्ष्यविषयस्य पदस्य भङ्गः ॥

**ச்லோகார்த்தம்:** ஜகத் உற்பத்திஸ்திதிலயத்திற்கு ஏகமான காரணம் என்று எந்த லக்ஷணம் சொல்லப்படுகின்றதோ அது ப்ரஹ்மத்தினுடைய விசேஷணலக்ஷணம் என்று சொல்லப்படுமானால் அது ல்க்ஷ்யவஸ்துவை தெரிவிக்கின்ற ப்ரஹ்மபதத்திற்கு விரோதமாக இருக்கும்.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்தினால் சொல்லப்படும் ஜகத் காரணத்வம் என்ற லக்ஷணம், உபலக்ஷணம் என்றே சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி ஜகத்காரணத்வம் என்பது விசேஷணலக்ஷணம் என்று சொல்லப்படுமானால், அபரிச்சின்னம் என்ற ப்ரஹ்மபதார்த்தத்திற்கு பங்கம் ஏற்படும். அகண்டார்த்தத்தை போதிப்பதற்காகவே லக்ஷணம் சொல்லப்படுகிறது. லக்ஷணம் விசேஷணம் என்று சொல்லப்படுமானால் ஸங்கோசம் செய்து அர்த்தம் அறியப்படுகிறது. அதனால் அகண்டார்த்தபோதம் ஏற்படாது. ஆகவே, 'அதீஹி பகவோ ப்ரஹ்மேதி' என்று உபக்ரமத்தில், ப்ரஹ்மதத்வத்தை அறியவேண்டுமென்று விரும்பி ப்ரார்த்திக்கப்பட்ட விஷயத்திற்கு, ஜகத்காரணத்வத்தை ப்ரஹ்மத்திற்கு விசேஷணமாக சொல்லப்படுமானால். அந்த அர்த்தம் ஸங்கோசமாக ஆகுமேயன்றி ப்ரஹ்மசப்தார்த்தமாக ஆகாது. ஆகவே அகண்டார்த்த போதகமாக இருந்தால்தான் மோக்ஷஹேதுவாக இருக்க முடியும் என்பதால் ஜகத் காரணத்வம் உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும்.

**521. அவதாரிகை :**

லக்ஷ்யமான ப்ரஹ்மபதார்த்தத்திற்கு பங்கம் ஏற்படுகிறது என்பதற்காக, ப்ரஹ்மசப்தார்த்தத்தை ஸங்கோசம்செய்து அர்த்தம் சொல்லக்கூடாது என்று சொல்லப்படுமானால், ஜகத்காரணம் என்ற லக்ஷணம், விசேஷணம் என்று சொல்லமுடியாது. இவ்விதம் விசேஷணம் என்று சொல்லப்படவில்லையென்றால், ஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் என்று சொல்லப்படுவதே பொருந்தாது. ஆகையால் லக்ஷ்யமான ப்ரஹ்மபதார்த்தத்திற்கு பங்கம் ஏற்பட்டபோதிலும், லக்ஷணபதம், லக்ஷ்யபதம் என்ற இரண்டில் எதுமுக்யம் என்ற ஸம்சயம் ஏற்படுகிறது. இதில் லக்ஷணம் என்பதே முதலில் சொல்லப் படுவதால் அஸஞ்ஜாத விரோதியென்பதால் லக்ஷணபதமே முக்யம். ஆகவே லக்ஷணபதபங்கம் இல்லாமல் அர்த்தம் செய்யப்பட வேண்டும்.

**ச்லோகம் :** लक्ष्यार्थवाचि पदमत्र हि लक्षणार्थे वाक्ये प्रधानमितरद्गुणभूतमाहुः ।
ब्रह्मेति लक्ष्यविषयं च पदं समर्थं भूमानमेव वदितुं न तु मर्त्यमल्पम् ॥

**ச்லோகார்த்தம்:** இங்கு லக்ஷணவாக்யத்தில் லக்ஷ்ய வஸ்துவை தெரிவிக்கின்ற பதந்தான் ப்ரதானம். மற்ற பதங்கள் கௌணம் என்று சொல்லப்படுகின்றது. லக்ஷ்யத்தை தெரிவிக்கின்ற ப்ரஹ்மமென்ற பதமானது அனந்தம் என்ற வஸ்துவை தெரிவிக்க தகுதியுள்ளதாக இருக்கின்றதேயன்றி அல்பமான மர்த்யவஸ்துவை தெரிவிக்காது.

**வ்யாக்யானம் :** லக்ஷணம் என்பது எந்த லக்ஷ்யார்த்தத்தை தெரிவிக்கின்றதோ, அந்த லக்ஷ்யார்த்தத்திற்கு பங்கம் ஏற்படாமல் அர்த்தம் செய்ய வேண்டும் என்று சொல்லப்படுமானால், லக்ஷணம் என்பது விசேஷணம் என்று சொல்லப்படவில்லையென்றால், ஜகத்காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் என்றே சொல்லமுடியாது. ஆகவே, லக்ஷ்யார்த்தத்திற்கு பங்கம ஏற்படுவது போலவே, லக்ஷணார்த்தத்திலும் பங்கம் ஏற்படுகின்றது. அதனால் லக்ஷ்யம், லக்ஷணம் என்ற இரண்டில் எதற்குமுக்யத்வம் சொல்லப்படவேண்டும் என்பது தீர்மானிக்கப்படவேண்டும். 'யதோவா இமானி' என்ற வாக்யத்தினால் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டபிறகே, 'தத்ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மதத்வத்தை போதிக்கின்றது. ஆகவே வாக்யத்தில் முதலில் ப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுவதால், லக்ஷணம் என்பதற்கு பங்கம் ஏற்படாமல் லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்மபதத்தின் அர்த்தத்தை ஸங்கோசம் செய்து அர்த்தம் செய்வதே சரியானதாகும். லக்ஷணம், லக்ஷ்யம் என்ற இரண்டிற்குமுள்ள சிறிதளவு பேதத்தை அபேக்ஷித்து லக்ஷ்யார்த்த பங்கம் ஏற்படும் என்று சொல்லவேண்டிய அவஸ்யமில்லை.

**சித்தா :** இந்தவிதம் லக்ஷணம் என்பதே முக்யம் என்று சொல்வது சரியல்ல. எந்தலக்ஷணத்தைக் கொண்டு எந்த லக்ஷ்யார்த்தம் போதிக்கப்படுகிறதோ, அதுவே அறியப்படவேண்டியலக்ஷ்யார்த்தம் என்பதால், லக்ஷ்யார்த்தமே முக்யம். எதை உத்தேசித்து எதுபோதிக்கப்படுகிறதோ அந்த உத்தேச்யமான விஷயமே (வஸ்துவே) முக்யம். 'யதோவா இமானி' என்ற வாக்யம், 'தத்விஜிஞ்ஞாஸஸ்வதத்ப்ரஹ்மேதி' என்று 'ஜகத்காரணம்எதுவோ அதுவே ப்ரஹ்மமென்று அறிந்துகொள்' என்றே இந்தவாக்யம் போதிக்கின்றது. அதனால் உத்தேச்யமான ப்ரஹ்மமே முக்யம். ப்ரதானமாக, ப்ரஹ்மமென்பதை அறிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே, அதற்குரிய லக்ஷணங்கள் போதிக்கப்படுகின்றது. அதனால், லக்ஷணங்கள் அங்கம், லக்ஷ்யம் என்பதே அங்கி. ஆகவே குணத்தை அனுசரித்து, ப்ரதானத்திற்கு பங்கம் ஏற்படும் முறையில் ப்ரஹ்மபதத்திற்கு அர்த்தம் செய்யப்படுவது தோஷம். ப்ரதானத்தை அனுசரித்து குணத்திற்கு பங்கம் ஏற்படுமானால் அதனால் தோஷமில்லை என்பது மட்டுமல்ல, அதனால் லாபமும் ஏற்படுகிறது.

மேலும், லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்மபதத்தில் சிறிதளவு கூடபேதம் ஒத்துக்கொள்ள முடியாது. ஏனெனில் ப்ரஹ்மசப்தம் ப்ருஹ என்ற தாதுவிலிருந்து உண்டாகின்றதால் ப்ரஹ்மபதத்திற்கு எந்தவிதத்திலும் பங்கம் ஏற்படக்கூடாது. யத்ர ந அன்யத் பச்யதி அன்யத் ச்ருணோதி.......... ஸபூமா என்று, பூமஸ்வரூபமான ப்ரஹ்மமென்பது ஸர்வபேதரஹிதம் என்று தெரிவிக்கிறது. ஆகையால் சிறிதளவு பேதமும் ஒத்துக்கொள்ள முடியாது. மேலும், 'யத்ர....... ஸபூமா, யோவை பூமாதத்சுகம், தத்அம்ருதம்' என்று தெரிவிக்கின்றது. அதுமட்டுமின்றி, இந்தவாக்யம் த்ருடப்படுவதற்காகவே, அடுத்தவாக்யம் 'அத யத்ர அன்யத்பச்யதி அன்யத்ச்ருணோதி, அன்யத் விஜானாதி தத் அல்பம், தந் மர்த்யம் என்று முன்சொன்ன வாக்யத்திற்கு விபரீதமாக பரிச்சின்னமான வஸ்துவைப்பற்றி தெரிவிக்கின்றது. ஆகவே, ஜகத்காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்கு ஸ்வரூபலக்ஷணமுமில்லை, விசேஷண லக்ஷணமுமில்லை. உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். ப்ரஹ்மத்திற்கு ஜகத்காரணத்வம் என்பது தர்மமாகவும் இருக்கமுடியாது என்றால், ஸ்வரூபலக்ஷணமாக எப்படி இருக்கமுடியும்? ஆகையால் ப்ரஹ்மபதார்த்த ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் ஏற்படாமல் வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**522. அவதாரிகை :**

இவ்விதம் விசாரிக்கப்பட்ட முறையில் ப்ரதானத்தை அனுசரித்து, அதற்கு பங்கம் ஏற்படாத முறையில், (குணமான) லக்ஷணத்தையே உபலக்ஷணம் என்று அர்த்தம் சொல்லப்படவேண்டும். ஏனெனில் லக்ஷ்யமே ப்ரதானம், குணம் என்பது அப்ரதானம்என்ற ந்யாயத்தைக்கொண்டு குணத்தில்தான் ஸங்கோசம் செய்து அர்த்தம் செய்யப்படவேண்டும்.

**ச்லோகம் :**

तस्मात्प्रधानपदभङ्गभयाद्गुणानां युक्तं ग्रहीतुमुपलक्षणगोचरत्वम् ।
ब्रह्मेति चैतदुपलक्ष्यसमर्पणार्थमेवं समञ्जसमिदं पदजातमस्मिन् ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால், ப்ரதானமான ப்ரஹ்மபதத்தின் அர்த்தத்திற்கு பங்கம் ஏற்படுமே என்றபயத்தினுல் அப்ரதானமாக இருக்கின்றலக்ஷணபதங்களுக்கு உபலக்ஷணம் என்று அர்த்தம்க்ரஹிக்கப்படுவதேபொருந்தும். இந்தவிதம் ப்ரஹ்மமென்றபதமும் உபலக்ஷ்யமான ப்ரஹ்மவஸ்துவையே தெரிவிக்கின்றதால் ப்ரயோஜனமுடையதாகிறது என்று சொல்வது பொருந்துகின்றது. இந்தவிதம், 'எதிலிருந்து' என்பதுபோன்ற லக்ஷணவாக்யத்தினுல் இந்த பதங்கள் எல்லாம் சேர்ந்து விபாகத்தினுல் அன்விதார்த்தமாக இருந்து அபேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தை போதிக்கின்றது என்பது பொருந்தும்.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது, அதாவது, ப்ரதானமான ப்ரஹ்மபதஸ்வாரஸ்யத்திற்குபங்கம் ஏற்படாமல் ப்ரஹ்ம சப்தத்திற்கு பொருந்துகின்ற அர்த்தம் எதுவோ அதையே முக்யமாக எடுத்துக்கொள்ளவேண்டும். லக்ஷணர்த்தமான ஜகத்காரணத்வம் என்பதை உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். இந்தவிதம் அர்த்தம் செய்யப்பட்டால்தான் ப்ரஹ்மபதம் அகண்டார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியும். அதீஹி பகவோ ப்ரஹ்மேதி' என்று ப்ரஹ்மத்தை அறியவிரும்பின சிஷ்யனுக்கு, அகண்டார்த்தமான ப்ரஹ்மஸ்வரூபம் உபதேசிக்கப்பட்டதாக ஆகும். இவ்விதம் அர்த்தம் சொல்லப்பட்டால்தான், இந்தலக்ஷணவாக்யம் யாதொருவிதமான தோஷமுமின்றி விவக்ஷிதமான அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லமுடியும். இவ்விதமின்றி வேறு முறையில் அர்த்தம் செய்யப் படுமானுல், இந்த வாக்யத்தினுல் தாத்பர்ய விஷயம் போதிக்கப்படுவதாக சொல்லமுடியாது.

**523. அவதாரிகை :**

ப்ரஹ்மத்திற்கு எதை லக்ஷணமென்று சொல்லப்படுகிறதோ, அந்தலக்ஷணம் ஸ்வரூபமுமில்லை, விசேஷணமுமில்லை என்று சொல்லப்படுமானுல் லக்ஷ்யஸ்வரூபத்தில் இல்லாத ஒன்றை அந்த லக்ஷ்யத்திற்கு லக்ஷணமாக எப்படிச் சொல்ல முடியும்? என்ருல், இந்த ஆக்ஷேபத்திற்கு முன்பேபதில் சொல்லப்பட்டிருக்கிறது என்ருலும், இங்குமறுபடி ஞாபகப்படுத்துகின்ருேம்.

**ச்லோகம் :**

लक्ष्यस्वरूपकथनाय न लक्षणानि नाप्यस्य वाचकमिदं पदमित्यमुष्मै ।
व्यावृत्तमेतदखिलादितारार्थजातादित्येतदेव वदितुं ननु लक्षणानि ॥

**ச்லோகார்த்தம் :** லக்ஷணங்கள் லக்ஷ்யஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காகவும் அல்ல, இந்தபதம் இந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்வதற்காகவும் அல்ல. வேறு எல்லா பதார்த்தங்களிலிருந்தும் இந்தவஸ்து வேறு பட்டதாக இருக்கின்றது என்று தெரிவிப்பதற்காகவே லக்ஷணங்கள் ப்ரயோஜனமாக இருக்கிறது.

**வ்யாக்யானம் :** லக்ஷணம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் சித்திப்பதற்காக சொல்லப்படவில்லை. ஜகத்காரணம் என்பது ப்ரதானமில்லை, அணு இல்லை என்று மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி ப்ரஹ்மமென்பதே ஜகத்காரணம் என்று தெரிவிப்பதற்காகவே லக்ஷணம் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மஸ்வரூபம் ஏற்கனவே சித்தமாக இருக்கின்றதால், ப்ரஹ்மஸ்வரூப சித்திக்காக லக்ஷணம் சொல்லப்படவில்லை. தடஸ்த்தலக்ஷணம் என்று சொல்லப்படுவதால் ஸ்வரூபசித்திக்காக என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஜகத்காரணத்வம் ஸ்வரூபத்தில் சேரமுடியாது. உதாரணமாக 'ராஜாயார்' என்று அறியவிரும்பி கேட்க்கின்ற ஒருவனுக்கு 'அதோ கட்டிலில் ஸயனித்திருக்கின்றரே அவர்தான் ராஜா என்று பதில் சொல்லப்படுகிறது. அதைக் கேட்க்கின்றவன் ராஜாவை மட்டுமே அறிந்து கொள்கின்றனேயன்றி கட்டில் என்பதையும் சேர்த்து அறிந்து கொள்வதில்லை. கட்டில் என்பது ராஜாவின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததல்ல. இவ்விதம் இருந்தாலும், வாக்யத்தைக் கேட்டவன், மற்றவர்கள் ராஜா அல்ல என்று விலக்கி அவர்களிடமிருந்து ராஜாவை வேறு படுத்தி அறிந்துகொள்கிறன். இந்தவிதம் ராஜாவின் ஸ்வரூபத்தை மட்டும் அந்தவாக்யம் எப்படி தெரிவிக்கின்றதோ அதுபோல் ஜகத்காரணம் என்பதும் உபலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். ஸ்வரூபலக்ஷணமென்றே விசேஷணலக்ஷணம் என்றே சொல்லமுடியாது. ஜகத்காரணம் என்ற இந்தலக்ஷணம் லக்ஷ்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தைபோதிப்பதில் ப்ரவ்ருத்தி நிமித்தமில்லை. இந்த லக்ஷணம் ஸ்வரூபத்தில் இல்லாததால் ப்ரவ்ருத்தி நிமித்தம் என்று சொல்லமுடியாது. அதனுல் மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே இந்தலக்ஷணம்ப்ரயோஜனமாகஆகிறதேயன்றி ஸ்வரூபசித்திக்காக சொல்லப்படவில்லை. ஆகவே ப்ரமாணுந்தரங்களினுல் அறியப்படாத ஒருஸ்வரூபத்தை இந்த லக்ஷணவாக்யம் போதிக்கின்றது என்றும், அதனுல் அஞ்ஞாதமான வஸ்துவின் ஸ்வரூபத்தை தெரிவிக்கின்றது என்ற ஒருமுறையில்தான் லக்ஷணம் என்பது இருக்கமுடியும் என்று ஒரு சிலர் சொல்லுகின்றுர்கள். வேறு சிலர் "ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம" என்று ப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்ற ச்ருதிவாக்யம் எந்த ப்ரஹ்மத்தை போதிக்கின்றதோ அதுவே 'தத்வமஸி' மஹாவாக்யத்திலுள்ள தத்பதார்த்தம் என்று சொல்கிறுர்கள். அதாவது ப்ரஹ்ம மென்பது, தத்பதம் என்பதை ஸம்ஞையாகக்கொண்டது என்று தத்பதத்தினுல் ப்ரஹ்மமே போதிக்கப்படுகிறது என்றும், அதன் ஸம்பந்தத்தை க்ரஹிப்பதற் காகவே லக்ஷணம் ப்ரயோஜனமாகிறது என்றும் வேறு சில ரால்சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படும் இரண்டு பக்ஷங்களும் சரியல்ல.

லக்ஷ்யஸ்வரூபமான ப்ரஹ்மமென்பது ப்ரமாணுந்தரத்தினுல் அறியப்பட்டது என்றே சொல்லலாம். அதனுல் லக்ஷணத்தைக்கொண்டுதான் அறியப்படவேண்டுமென்று சொல்லமுடியாது. அதேபோல், ஸம்ஞாஸம்ஞிஸம்பந்தம் அறியப்படுவதற்காக லக்ஷணம் என்று சொல்லப்படுவதும் சரியல்ல. லக்ஷணம் என்பது லக்ஷ்யமானவஸ்துவை, ஸஜாதீய, விஜாதீயமான மற்றவஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி லக்ஷ்யவஸ்துவை தெரிவிக்கின்றது என்பதே லக்ஷணத்தின் ப்ரயோஜனம். அஞ்ஞாதமான ஸ்வரூபத்தை போதிக்கின்றது எதுவோ அது லக்ஷணம் என்று சொல்வது சரியல்ல.

**524 அவதாரிகை :**

லக்ஷ்யஸ்வரூபமே சித்திக்கவில்லை யென்றுல் லக்ஷணே என்பதால் அதற்கு வ்யாவ்ருத்தி என்பதே சித்திக்காது. அதனுல் லக்ஷணே என்பது லக்ஷ்யஸ்வரூப

சித்திக்காக என்று சொல்லமுடியாது. லக்ஷ்யம் என்பது ப்ரஹ்மபதத்தினுலேயே அறியப்பட்டதுதான். லக்ஷணம் என்பது அனுமானுதிகளால் அறியப்படுகிறது. ஆகவே நிரதிசயவ்யாபகத்வம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் என்பது அறியப்பட்டதுதான் என்பதால், ஜகத்காரணம், ப்ரதானம் முதலானவைகள் இல்லையென்று அவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதே லக்ஷணத்திற்கு ப்ரயோஜனம்.

**ச்லோகம்:**

लक्ष्यस्वरूपमुपलभ्य तदेकनिष्ठं दृष्ट्वा च लक्षणमनेन तदेव लक्ष्यम् ।
व्यावर्त्य बोधयितुमुत्सहते जनोऽयं तत्त्वान्तरादिति यतः प्रतिपन्नमेतत् ॥

**ச்லோகார்த்தம் :** லக்ஷ்யஸ்வரூபத்தை அறிந்து கொண்டு, அந்தவஸ்துவில் மாத்ரம் இருக்கின்ற அஸாதாரணதர்மமான லக்ஷணம் என்பதைக்கொண்டு அதன் மூலம் ஒருவன் லக்ஷ்யவஸ்துவை வேறு பதார்த்தங்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்க முயற்சிக்கிருன் என்பது எல்லோராலும் அறியப்பட்ட விஷயம்தான்.

**வ்யாக்யானம் :** லக்ஷ்யஸ்வரூபத்தை, மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்கே உபலக்ஷணம் என்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்ட விஷயம். உதாரணமாக, 'கோ' என்பது எல்லோராலும் அறியப்படுகிறது. அவ்விதம் அறியப்பட்ட பசுவிற்கு ஸாஸ்னை என்பதை லக்ஷணமாகச் சொல்லப்படுகிறது. பசுவைப்பார்க்கின்ற போதே ஸாஸ்னை என்பதும் அறியப்படுகிறது. ஆனுல் மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே, ஸாஸ்னை உள்ளது 'கோ' என்று லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஆகையால் லக்ஷணமென்பதும் அறியப்பட்டதுதான், லக்ஷ்யம் என்பதும் அறியப்பட்டதுதான். இதேபோல் ப்ரஹ்மசப்தார்த்தமும் அறியப்பட்டதுதான். சாஸ்திரம் என்றப்ரமாணத்தினுல் ஜகத்காரணம் ப்ரஹ்ம என்பதும் அறியப்படுகிறது. ஆகையால் மற்றவை எதுவும் ஜகத்காரணமில்லை என்று வ்யாவ்ருத்தி செய்கின்றது என்றும் சொல்லலாம், அல்லது, மற்றவைகளிலிருந்து ப்ரஹ்மத்தை வேறுபடுத்தி போதிப்பதற்காக லக்ஷணம் என்றும் சொல்லலாம்.சொல்லப்படும் இந்த லக்ஷணம் எதில் இருப்பதாக அறியப்படுகிறதோ அந்த லக்ஷ்யஸ்வரூபம் என்பதும் அத்யந்தம் அஞ்ஞாதம் என்று சொல்லமுடியாது. ஆகவே எந்தவஸ்துவிற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறதோ அந்தலக்ஷணம் அந்தலக்ஷ்யவஸ்துவில் தான் இருக்கின்றது என்றும், அதைத்தவிர மற்ற வஸ்துக்களில் அந்த லக்ஷணம் இல்லையென்பதும் எல்லோருக்கும் ப்ரஸித்தமாக அறியப்பட்டிருக்கிறது. அதனுல் லக்ஷ்யம், லக்ஷணம் என்ற இரண்டும் ப்ரமாணுந்தரத்தினுல் அறியப்பட்டதுதான். சில இடங்களில் சப்தம் என்றப்ரமாணத்தினுலும் சில இடங்களில் வேறுப்ரமாணங்களினுலும் அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். அதனுல் லக்ஷணத்திற்கு அஞ்ஞாத ஞாபனம் என்பது ப்ரயோஜனம் என்று சொல்லமுடியாது.

**525 அவதாரிகை :**

இவ்வித காரணத்தினுல் தான், கந்தவதிப்ருதிவி என்று ப்ருதிவிக்கு லக்ஷணம் சொல்லுமிடத்தில், வேறுப்ரமாணத்தினுல் (ப்ருதிவியின்ஸ்வரூபமும் கந்தபதத்தின் அர்த்தமும் அறியப்படுகின்றதால்) கந்தவத்வம் ஸ்வரூபம் என்பது ப்ருதிவி சப்தார்த்தம் என்று அறிந்துகொண்டு, கந்தவதி ப்ருதிவி என்று லக்ஷணம் சொல்லப்படுகிறது. இந்த கந்தபதம் என்பது, ப்ருதிவி என்பதை கந்தவத்வமில்லாத ஜலம முதலானவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கின்றது.

**ச்லோகம் :**

संज्ञासंज्ञिसमन्वयावगतये नेष्टं क्वचिल्लक्षणं व्यावृत्तिप्रतिपत्तिमात्रजनकं लक्ष्ये भवेदन्यतः ।
लक्ष्यं लक्षणवर्त्मना हि जगति व्यावर्तयन्तोऽन्यतस्तत्तल्लक्षणमादरेण महता संगृण्हते वादिनः ॥

**ச்லோகார்த்தம் :** லக்ஷணம் என்பது எந்த இடத்திலும் பதத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தை தெரிவிக்கின்றதற்காக இருக்கின்றது என்று ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. லக்ஷ்ய வஸ்து என்பது மற்ற பதார்த்தங்களிலிருந்து வேறுபட்டது என்ற ஞானம் ஏற்படுவதற்கே ப்ரயோஜனமாக இருக்கிறது. லோகத்திலும் லக்ஷணமூலமாக லக்ஷ்யத்தை மற்றபதார்த்தங்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே வித்வான்கள் மிக்க ஆதரவுடன் லக்ஷணத்தை க்ரஹிக்கின்றார்கள்.

**வ்யாக்யானம் :** இதுவரை, அஞ்ஞாத ஞாபனம் என்பதே லக்ஷணத்திற்கு ப்ரயோஜனம் என்று சொல்லப்பட்ட மதத்தை நிராகரணம் செய்யப்பட்டது. இப்போது ஸம்ஞாஸம்ஞியின் ஸம்பந்தத்தை அறிவிப்பதே லக்ஷணம் என்று சொல்லப்படும் கொள்கையும் சரியல்ல என்று நிராகரணம் செய்யப்படுகிறது. 'கோ ஸத்ருச: கவய:' என்ற வாக்யப்ரயோகம் செய்யுமிடத்தில் கவயம் என்ற பிராணி பசுவைப்போல் இருக்கும் என்று கவயத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுவதாக ஒருசிலரால் சொல்லப்படுகிறது. அதாவது கவயபதத்திற்கும், அந்தப்ராணிக்கும் உள்ள ஸம்பந்தத்தையே 'கோ ஸத்ருசம்' என்ற லக்ஷணம் போதிக்கின்றது என்று சொல்கிறார்கள். இந்தவிதம் லக்ஷணம் என்பது ஸம்ஞாஸம்ஞிஸம்பந்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவது ஒத்துக் கொள்ளக் கூடியதல்ல ஏனெனில் மற்றவஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி குறிப்பிட்டவஸ்துவை அறிந்து கொள்வதற்காகவே லக்ஷணம் சொல்லப்படுகிறது. அதனால் கவயமாக இல்லாத மற்றப்ராணிகளிடமிருந்து வேறுபடுத்தி பசுவைப் போன்ற பல தன்மைகளையுடைய ப்ராணி எதுவோ அதுகவயம் என்று தெரிவிக்கின்றது. ஆகவே, லக்ஷணம் என்பது ஸஜாதீய, விஜாதீய வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிக்கிறதென்பதே லக்ஷணத்திற்கு ப்ரயோஜனம் என்பது ஸர்வசாஸ்திரங்களையும் அறிந்த பெரியோர் களாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (ஒத்துக்கொள்ளப்படுகிறது).

**526 அவதாரிகை :**

இதுவரை சொல்லப்பட்ட ந்யாயங்களைக்கொண்டு 'யதோவா இமானி' என்ற வாக்யம் எப்படி ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகிறது என்ற விஷயத்தில் பொருத்தி இந்தவிஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

तस्माद्ब्रह्मणि वाच्यवाचकयुजासिद्ध्यै श्रुतिर्नाभ्यधाज्जन्माद्यस्य समीक्षितस्य जगतो यद्ब्रह्मणो लक्षणम् ।
नापीदं स्वकरूपबोधनपरं संकीर्तितं ब्रह्मणः किं त्वब्रह्मपदार्थतोऽस्य सकलाद्व्यावृत्ततासिद्धये ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் த்ருச்யப்ரபஞ்சத்தின் சிருஷ்டிஸ்திதிலய காரணம் என்றப்ரஹ்மலக்ஷணத்தை ச்ருதியானது, பதபதார்த்த ஸம்பந்தத்தை தெரிவிப்பதற்காகவும் சொல்லவில்லை. ப்ரஹ்மஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காகவும் சொல்லவில்லை. ப்ரஹ்மத்தையன்றி வேறாக இருக்கின்றதால் ஸர்வபதார்த்தங்களிலிருந்தும் வேறுபடுத்தி தெரிவிப்பதற்கேப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட காரணங்களினால் எங்களுடைய கொள்கையே தோஷமற்றது என்பதை தெரிவித்து இந்த விஷயம் உபஸம்ஹாரம்

செய்யப்படுகிறது. ஸம்ஞாஸம்ஞீஸம்பந்தத்திற்காக லக்ஷணம் என்று சொல்லப்படுவது சரியல்ல. வாச்யவாசகபாவஸம்பந்தத்தை தெரிவிப்பதில் ச்ருதிக்கு நோக்கம் இல்லை. ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களினால் அறியப்படும் இந்த ஜகத்திற்கு காரணம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகச் சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணத்தினால் மற்றவைகள் ஜகத்காரண மில்லையென்பதையே போதிக்கப்படுகிறது. அஞ்ஞாதமான ப்ரஹ்மஸ்வரூபம் என்ன என்று தெரிவிப்பதற்காகவும் லக்ஷணம் சொல்லப்படவில்லை.

**527 அவதாரிகை:**

ஸஜாதீய, விஜாதீயமானவஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதே லக்ஷணத்திற்கு ப்ரயோஜனம் என்று சொல்லப்படுமானால், வேதாந்த சித்தாந்தத்தில் 'அத்விதீயம்ப்ரஹ்ம' என்று சொல்லப்படுவதால் ஸஜாதீயமாகவோ, விஜாதீயமாகவோ வேறு வஸ்துக்களே இருக்கமுடியாது என்பதால், எந்தவஸ்துவிலிருந்து வ்யாவ்ருத்தி செய்து தெரிவிப்பதற்காக, ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது? என்றால், அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

परिच्छिन्नवस्तुव्यवच्छेदसिद्ध्यै जगाद श्रुतिर्लक्षणं ब्रह्मणस्तत् ।
परिच्छिन्नता प्रापिता पूर्वपक्षे परब्रह्मणस्तन्निषेधार्थमेतत् ॥

**ச்லோகார்த்தம் :** பரிச்சின்னவஸ்துக்களிலிருக்கின்ற வேறுபாட்டை தெரிவிப்பதற்காகவே, ச்ருதியானது ப்ரஹ்மலக்ஷணத்தை தெரிவிக்கின்றது. பூர்வபக்ஷத்தில் ப்ரஹ்மமென்பது பரிச்சின்னம் என்று சொல்லப்படுவதால் அதை நிஷேதம் செய்வதற்காக இந்தலக்ஷணம் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அத்வைத சித்தாந்தத்தில், வ்யவசேதத்தினால் விலக்க வேண்டிய வஸ்து என்பதே எதுவுமில்லை யென்பதால் அன்யவ்யாவ்ருத்திக்காக லக்ஷணம் என்று சொல்வது எப்படி பொருந்தும்?

**சித்தா :** ஸத்யம்; ஆனால் உண்மையில் ஸஜாதீயமாகவோ, விஜாதீயமாகவோ எந்த வஸ்துவும் கிடையாது என்றாலும், ப்ராந்தியினால் கல்பிக்கப்படுகின்ற சேதன அசேதனாத்மகமான இந்த ஜகத்தில் ஜகத்திற்கு காரணமாக அசேதனமானப்ரதானம் என்றும், பரமாணு என்றும், பலவிதமாகச்செல்லப்படுகிறது. இதேபோல், மீமாம்ஸகர்களும் கர்மத்வாரா ஜீவனே ஜகத்காரணம் என்று சொல்கிறார்கள். இவைகள் எல்லாம் ஜகத்காரணமில்லை என்பதையும் அபரிச்சின்னமான ப்ரஹ்மந்தான் ஜகத்காரணம் என்று, ப்ராந்தி சித்தமான மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே லக்ஷணம் சொல்லப்படுகிறது.

**பூர்வ :** ப்ரஹ்மசப்தத்திலிருந்தே பரிச்சின்ன வஸ்துக்கள் காரணமாக இருக்கமுடியாது என்பது அறியப்படுகிறதே? அதன்பிறகு தனியாக லக்ஷணம் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

**சித்தா :** ப்ரஹ்மசப்தார்த்தத்திலிருந்தே அபரிச்சின்னம் என்ற அர்த்தம் கிடைத்த போதிலும், அதுவே ஜகத்காரணம் என்பது சாஸ்திரத்தினால்தான் அறியப்பட வேண்டியிருக்கிறது. ஏனெனில் வேறு எந்த ப்ரமாணத்தினாலும் அறியக்கூடியதாக இல்லை. லோகத்தில் நிரதிசயவ்யாபகத்வம் என்று அறிவதற்குரிய வஸ்து எதுவுமே கிடையாது. கார்யத்தைக் காட்டிலும் காரணம் பெரிது என்ற முறையில் ப்ரதானமே பெரிது என்றும், ஜீவனையே ப்ரஹ்மசப்தார்த்தமாக தெரிவிக்கலாம் என்றும் (ஏனெனில் இந்த சரீரத்தில்

ஜீவன் இருப்பதனுல் தான் சரீரம் வளர்ச்சி அடைகிறது என்றும்) இவ்விதம் பலர் பலவிதமாக ஆபேக்ஷிகமான அபரிச்சின்னத்வம் என்பதையே ஜகத்காரணம் என்று சொல்லுகின்றுர்கள். இவைகளை நிஷேதம் செய்து ஜகத்காரணம் என்னஎன்பதையும், ப்ரஹ்மசப்தார்த்தம் என்பது ஸாமான்யமாக அறியப்பட்டிருந்தபோதிலும், முக்யமாக ப்ரஹ்மசப்தார்த்தம் என்ன என்று நிச்சயம் செய்து (விசேஷமாக) அதன் அர்த்தத்தை தெரிவிப்பதற்காகவே லக்ஷணம் என்பது அவஸ்யம் தேவைப்படுகின்றது. ஆகவே ப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுகிறது.

**528. அவதாரிகை :**

ப்ரஹ்மபதத்திற்கு ப்ரதானம் முதலான பரிச்சின்னவஸ்துக்களை அர்த்தமாக தெரிவிக்கின்ற மதஸ்த்தர்களைப்பற்றி மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कालस्वभावपरमाण्वसुभृत्प्रधानस्कन्धप्रतीत्यखिलशून्यकथाप्रसङ्गे ।
जन्मादिसूत्रमवतीर्णमियं श्रुतिश्च तस्मादिदंपरमिदं द्वितयं प्रवृत्तम् ॥

**ச்லோகார்த்தம் :** காலம், ஸ்வபாவம், பரமாணு, ஜீவன், ப்ரதானம், பஞ்சஸ்கந்தம், க்ஷணிக விஞ்ஞானம், சூன்யம் என்பவைகளையெல்லாம் ஜகத்காரணம் என்றுமற்ற வாதிகளால் கூறப்படுகிறது. அதனுல் அவைகளை நிவர்த்திக்கும் பொருட்டு 'யதோவா' என்ற ச்ருதிவாக்யத்தினையும், 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற சூத்ரத்தினையும் அதன் அர்த்தத்தினையும் தெரிவிக்கின்றதன் மூலம், மற்றவைகள் ஜகத்காரணமில்லையென்று வ்யாவ்ருத்தி செய்வதற்காகவே இரண்டுவாக்யங்களும் ப்ரவர்த்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** பரிச்சின்னமானவஸ்துக்களையே ஜகத்காரணம் என்று யாரால், எந்தக்காரணத்தைக்கொண்டு சொல்லப்படுகிறது என்பதைப்பற்றிமேலே விளக்கப்படுகிறது. சுபம் அசுபம் என்பதெல்லாம் காலதீனமாகவே ஏற்படுகின்றதால், காலம் என்பதே ஜகத்காரணம் என்று ஜ்யோதிடர்களால் சொல்லப்படுகிறது. பால் என்பதிலிருந்தே தயிர் உண்டாகிறதேயன்றி, ஜலத்திலிருந்தோ, அல்லது ம்ருத்திலிருந்தோ உண்டாகிறதில்லை. அதேபோல் ம்ருத்திலிருந்தே கடம் உண்டாகின்றது என்பதாலும், வேறு எந்த முயற்சியினுலும் எதுவும் உண்டாகாது என்பதால் அந்தந்தவஸ்துஸ்வபாவத்தை அனுசரித்தே இந்த ஜகத் என்பது இருக்கின்றதால் ஸ்வபாவமே ஜகத்காரணம் என்று நையாயிகர்களால் சொல்லப்படுகிறது. இதேபோல் பரமாணுவே ஜகத்காரணம் என்று வைசேஷிகர்களால் சொல்லப்படுகிறது.

ஸமஷ்டிஜீவன் என்று சொல்லப்படும் ஹ்ரண்யகர்ப்பரே ஜகத்காரணமென்றும், கர்மத்வாரா வ்யஷ்டி ஜீவன்தான் ஜகத் காரணமென்றும் மீமாம்ஸகர்களினுலேயே இரண்டுவிதமாகச்சொல்லப்படுகிறது. ப்ரதானம் என்பதே ஜகத்காரணமென்று ஸாங்க்யார்களால் சொல்லப்படுகிறது. பஞ்சஸ்கந்தம் என்பதே காரணம் என்று ஸௌத்ராந்திகன் வைபாஷிகன் என்ற பௌத்த மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது. விஞ்ஞானம் என்பதே ஜகத் காரணமென்று யோகாசாரர்கள் என்ற பௌத்தமதத்தினரால் சொல்லப்படுகிறது. சூன்யமே ஜகத்காரணம் என்று மாத்யமிகர் என்ற பௌத்த மதத்தினரால் சொல்லப்படுகிறது.

இந்த விதம் பலமதஸ்த்தர்கள் பலவிதமாக ஜகத்காரணத்தைப் பற்றி தெரிவிக்கின்றதால், இவைகள் எல்லாம் ஜகத்காரணமில்லை என்பதை காரணத்துடன்

எடுத்து விளக்கப்படுவதன் மூலம், அந்த மதங்கள் சரியல்ல என்று கண்டனம் செய்து ப்ரஹ்மமென்பதே ஜகத்காரணம் என்று தெரிவிப்பதற்காக' ஜன்மாத்யாஸ்யயத: என்றசூத்ரமும், 'யதோவா' என்ற ச்ருதிவாக்யம், ஸதேவ ஸௌம்ய இதமக்ர ஆஸீத் என்றச்ருதி வாக்யத்தைக்கொண்டும் சைதன்யஸ்வரூபமாகவும் ஏகமாகவும், (அகண்டமாகவும்) இருக்கின்றப்ரஹ்மமே இந்த ஜகத்திற்கு அபின்ன நிமித்தோ பாதானம் என்று நிரூபணம் செய்யப்படுகிறது. ஆகவே இந்தவாக்யங்கள் ஜகத்காரணம் என்னவென்பதை மிகவும் ஸ்பஷ்டமாக தெரிவிக்கின்றது. ஆகவே காலம், ஸ்வபாவம், ப்ரதானம், பரமாணு முதலானவைகள் அசேதனமாக இருப்பதால் ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதானமாக இருக்கமுடியாது. அதேபோல் அத்யந்த அஸத்தான சூன்யம் என்பதும் ஜகத்காரணமாக இருக்க முடியாது. ஜீவன் என்பதும் பஞ்சஸ்கந்தம் என்பதும் அநேகமாக இருக்கின்றதால், ஜகத்காரணம் ஏகம் என்பது சித்திக்காது. ஸமஷ்டிஜீவரென்ற ஹ்ரண்யகர்ப்பர் என்பவரும் கார்யகோடியில் சேர்ந்த வரானதால் (சிருஷ்டிக்கப்பட்டவர்) அவரையும் ஜகத்காரணமென்று சொல்லமுடியாது. இவ்விதம் பரிச்சின்னமான எவையும் ஜகத்காரணமாக இருக்க முடியாது என்பதால், சூத்ரமும், உபநிஷத்வாக்யங்களும் அபரிச்சின்னமான ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று தெரிவிப்பதற்காக, கார்யமான அவையெல்லாம் ஜகத் காரணமாக இருக்க முடியாது என்று கார்யமானமற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே; இந்தவாக் யங்களினுல் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால், பரிச்சின்னமான எதுவும் ஜகத்காரணமாக இருக்கமுடியாது என்பதால், சூத்ரத்திலும், உபநிஷத்வாக்யங்களினுலும் அபரிச்சின்னமான ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று, கார்யமான மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி, அவைகளெல்லாம் காரணமாக இருக்கமுடியாது என்பதை தெரிவிக்கவே, இந்த வாக்யங்களில் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் சொல்லப்பட்டி ருக்கிறது.

**529. அவதாரிகை :**

ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதான காரணமாக 'ப்ரஹ்ம' மென்பது சித்திப்பதாகச் சொல்லப்படுமானுல், அதிஷ்டாதாவான சேதனம், அதிஷ்டேயமான உபாதானம் என்ற இரண்டிற்கும் அவஸ்யம் பேதம் இருக்கவேண்டும். அதனுல் ப்ரஹ்மமென்பது அபரிச்சின்னம் என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆகவே பரிச்சின்ன வ்யாவ்ருத்தி என்று சொல்வதற்கு முடியாது.

**ச்லோகம் :**

अधिष्ठात्रधिष्ठेयभावेन योनिर्निमित्तं च यत्कारणं जन्मभाजाम् ।
परिच्छिन्नताऽस्यापि संभावितैव प्रतीचोऽस्य भेदे परैरुच्यमाने ॥

**ச்லோகார்த்தம் :** உற்பத்தியுடைய எல்லாபதார்த்தங்களுக்கும் நிமித்தோபாதானம் ப்ரஹ்மந்தான். நியம்யநியாமக ரூபத்தில் இந்தகாரணப்ரஹ்மமென்பதும், ஜீவனும், பின்னம் என்று தார்க்கிகர்களால் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மத்திற்கு பரிச்சேதம் ஸம்பவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி ஜகத்காரணம் என்னவென்பதை கீழேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது 'ச்ருதிவசன' என்று ஆரம்பிக்கப்பட்டு இதுவரை சொல்லப்பட்டச்லோகங்களைக்கொண்டும், ச்ருதிவசனங்களினுலும், அநுமானத்தினுலும், சேதனுகவும், ஏகமாகவும், நிமித்தோபாதானமாகவும் இருக்கின்ற

ப்ரஹ்மமென்பதே ஜகத் காரணம் என்று நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது. அதனுல், 'யதோவா இமானி' என்றச்ருதிவாக்யத்திருல், ஸமஸ்த்த பரிச்சின்ன வஸ்துக்களிலிருந்தும் வ்யாவ்ருத்தி செய்யப்பட்டு பரிபூர்ண ஸ்வரூபமான ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று சித்தம் செய்யப்பட்ட பிறகு ப்ரஹ்ம மென்பது பரிச்சின்னமில்லே என்று தெரிவிப்பதற்காக லக்ஷணம் சொல்லப்படுகிறது என்ருல் மறுபடியும் இந்தவிஷயம் பற்றி விசாரிக்கவேண்டிய அவஸ்யம் என்ன என்ருல்,

பரிச்சின்னம் என்பதை தெரிவிப்பதற்காக கீழே வெவ்வேறுகாரணங்கள் சொல்லப்பட்டது. ஆனுல் இதுவரை ஏற்படாத ஸந்தேகங்கள் ஏதாவது ஏற்படுமானுல் அதையும் நிவர்த்திக்க வேண்டுமென்ற முறையில் இங்கு மேலும் விசாரிக்கப்படுகிறது. அதாவது, லோகத்தில், நிமித்தகாரணம்வேறு, உபாதானகாரணம் வேறு என்றும் இரண்டும் வெவ்வேருக இருக்கின்றது. அதுபோல் கார்யமான இந்தஜகத்திற்கும் அதிஷ்ட்டாதாவாக சேதனம் என்பவன் நியாமகமாகவும், நியம்யமான இந்த ஜகத்திற்கு உபாதானம் என்பதும் வெவ்வேருகத்தானே இருக்கவேண்டும் என்றும், இதையன்றி ஜீவன் என்பவனும் வேருகத்தானே இருக்கவேண்டும் என்றும் இவ்விதம் மூன்று விதமான பேதங்கள் இருக்கிறதென்று தார்க்கிகர்களால் சொல்லப்படுகின்றதால் ப்ரஹ்மம் பரிச்சின்னம் என்ற சந்தேஹம்மறுபடி ஏற்படுகின்றது.

**530 அவதாரிகை :**

இவ்வித ஆக்ஷேபங்களுக்கு மேலேபதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

ततस्तन्निषेधार्थमेतद्बभाषे श्रुतिर्ब्रह्म तभ्दिन्नता तस्य कस्मात् ।
प्रतीचोऽपि हि ब्रह्मता नित्यसिद्धा दृशो भेदसिद्धिर्निरालम्बनैव ॥

**ச்லோகார்த்தம் :** இந்த பரிச்சேதத்தை நிஷேதம் செய்வதற்காகவே ச்ருதியானது 'யதோவா' என்ற லக்ஷணத்தின் மூலம் ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்றது. ப்ரஹ்மத்திற்கு ஜீவனிடமிருந்து எப்படி பேதம் இருக்க முடியும்? 'ப்ரத்யகாத்மாப்ரஹ்ம' என்ற விஷயமானது நித்யசித்தம். ஏனெனில் சைதன்யத்தில் பேதம் என்பது அப்ராமணிகமேயாகும்.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் பேதம் இருப்பதாகச் சொல்லப்படும் தார்க்கிகர்களின் பக்ஷத்தை நிராகரணம் செய்யப்படுகிறது. 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள 'யத:' என்ற சப்தத்திருலேயே 'அபின்ன நிமித்தோபாதான காரணம் ப்ரஹ்ம' என்றே தெரிவிக்கப்படுகிறது. அதனுல் ப்ரஹ்மத்தையன்றி வேருக ஈச்வரனென்ருே, ஜீவனென்ருே, இருப்பதாக சொல்வதற்கு முடியாது. ப்ரஹ்மமென்றும் ஈச்வரனென்றும் இரண்டுதத்வம் வேருக இருப்பதாக எப்படிச் சொல்லமுடியாதோ, அதேபோல் ப்ரஹ்ம, ஈச்வரன் என்ற இரண்டைக்காட்டிலும் ஜீவன் என்பதும் வேருக இருக்கமுடியாது. ஏனெனில் ப்ரத்யக்ஸ்வரூபமென்பதும் நித்யசித்தம், சைதன்யஸ்வரூபம் ஈச்வரனென்பதும் ஸ்வப்ரகாசஸ்வரூபம். ஆகையால் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்று சொல்வதற்கு ஆலம்பனம் (அடிப்படையான காரணம்) ஏதுமில்லே. ஆகையால் 'யதோவா இமானி' என்றச்ருதிவாக்யமானது, ஜகத்திற்கு 'அபின்ன நிமித்தோபாதான காரணம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் தெரிவிக்கின்றது. ஸர்வஞ்ஞத்வம், கிஞ்சிக்ஞத்வம் என்பது போன்ற பேதங்கள் எல்லாம் உபாதிவஸாத் ஏற்பட்டதால் உண்மையில் ஸ்வரூபத்தில் எவ்வித பேதமும் கிடையாது. ஞானம் என்பதுஸ்வயம் ப்ரகாச ஸ்வாபவம்

என்பதால், அந்த ஞானஸ்வரூபத்தில் பேதம் என்பது இருக்கிறது என்று சொல்வ தற்குரிய காரணம் ஏதுமில்லை. ப்ராந்திசித்தமான உபாதிபேதத்தை அல்லாமல், ஸ்வரூபத்தில் உண்மையில் பேதம் இருப்பதாக யாராலும் நிரூபிக்க முடியாது.

**531. அவதாரிகை :**

ஜகத் ஜன்மாதி காரணம் ப்ரஹ்மமென்று தெரிவிக்கின்ற லக்ஷணம் என்பது, நிமித்த உபாதானம் என்ற பேதங்களும் கிடையாது என்றே தெரிவிக்கின்றது. இந்தச்ருதி வாக்யத்தின் மூலமாகவே அஞ்ஞாதமான ஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காக லக்ஷணம் என்று சொல்லப்படுவதையும், ஸம்ஞாஸம்ஞியின் ஸம்பந்தத்தை தெரிவிப்பதற்காக லக்ஷணம் என்று சொல்லப்படுவதையும் முன்பே நிராகரணம் செய்யப்பட்டதால், மற்றவைகளிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே லக்ஷணம் என்று சொல்லப்பட்ட விஷயம் சரியே என்று மேலும் இந்த விஷயம் பற்றி விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

जगत्कारणत्वं पुनर्यत्र दृष्टं न तल्लक्षणम् तत्स्वरूपप्रसिद्ध्यै ।
स्वरूपे यतो लक्षणे दृश्यमाने प्रसिद्धं ततो लक्ष्यवस्तुस्वरूपम् ॥

**ச்லோகார்த்தம் :** லக்ஷ்யஸ்வரூபத்தில் அஸாதாரணதர்மமான லக்ஷணம் அறியப்படுகின்றபோது லக்ஷ்யஸ்வரூபம் ப்ரஸித்தமாகவே இருக்கின்றது. ஆகையால் ஜகத்காரணத்வம் என்ற தர்மம் எந்த ப்ரஹ்மத்தினிடம் அறியப்படுகின்றதோ அந்த ப்ர்ஹ்மஸ்வரூபம் சித்திப்பதற்காக லக்ஷணம் ஏற்படவில்லை.

**வ்யாக்யானம் :** எந்த வஸ்துவிற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறதோ, அந்த வஸ்துவின் ஸ்வரூபம் ஏற்கனவே அறியப்பட்டதாகவே இருக்க வேண்டும். ஆகையால் ஸ்வரூபம் என்பது ப்ரசித்தமாக இருக்கின்றதால், ஸ்வரூபபோதனம் என்பது லக்ஷணத்திற்கு ப்ரயோஜனம் என்று சொல்லமுடியாது. இதரவ்யாவ்ருத்தியே லக்ஷணத்திற்கு பலம் என்று சொல்ல வேண்டும். ஆகவே, மஹாவாக்யங்களில் ப்ரயோகம் செய்யப்படுகின்ற ப்ரஹம பதத்தின் அர்த்தமானது 'ப்ருஹிவ்ருத்தௌ' என்று ப்ரஹ்மணுத் ப்ரஹ்ம என்ற அவயவசக்தியைக் கொண்டு நிரதிசயவ்யாபகமான ஸ்வரூபம் என்பது ப்ரஹ்ம சப்தார்த்தமாக சித்திகின்றது. இவ்விதம் மஹாவாக்யங்களினுல் அறியப்பட்டஸ்வரூபம் என்பது எந்தக்காரணத்தைக் கொண்டும் ஸங்கோசம் செய்து அர்த்தம் தெரிவிக்க முடியாது. நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவம் என்பதும், ஸர்வஞ்ஞும், ஸர்வ சக்தி என்பதும் அந்தவாக்யங்களிலுள்ள பதங்களினுலேயே கிடைக்கின்றது என்ற காரணத்தினுல், முன்னுல் சொல்லப்பட்ட பூர்வபக்ஷ ஆக்ஷேபங்களுக்கு சிறிதும் இடமில்லை. ஆகவே (அதிஷ்ட்டாதா, அதிஷ்ட்டேயம்) நிமித்தோபாதானம் என்ற பேதமும் இல்லையென்பதால் பரிச்சேதரஹிதம் பரஹ்மமென்று தெரிவிப்பதற்காகவே, ஜகத்காரணம் ப்ரஹ்மம் என்று ஜகத்காரணத்வத்தை ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாக தெரிவிக்கின்றதேயன்றி, ப்ரஹ்ம ஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காக லக்ஷணம் சொல்லப்படுவதாகச்சொல்வது சரியல்ல. மஹாவாக்யத்தினுலேயே லக்ஷ்யமான ப்ரஹ்மஸ்வரூபம் ப்ரசித்தமானதால் ஸ்வரூபத்தை லக்ஷணம் தெரிவிக்கவேண்டியதில்லை. லக்ஷணம் என்பதும் லக்ஷ்யம் என்பதும் அறியப்படாமல் ஒருவஸ்து லோகத்தில் இருப்பதாகச்சொல்லமுடியாது. ஆகவே, லக்ஷணத்தைக் கொண்டு புதிதாக லக்ஷ்யவஸ்து அறியப்படுகிறது என்று சொல்வதற்கு முடியாது.

**532. அவதாரிகை :**

அபின்ன நிமித்தோபாதான காரணமாக ஒருவஸ்து லோகத்தில் இருப்பதாக ப்ரஸித்தமாக எந்த ப்ரமாணத்திலுைம் அறியப்படவில்லை. ஆகையால் ஏற்கனவே ப்ரஸித்தமான இந்த வஸ்துவையே அனுவாதம் செய்து இந்த லக்ஷணம் சொல்லப் படுகிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

निमित्तं च योनिश्च यत्कारणं तत्परं ब्रह्म सर्वस्य जन्मादिभाजः ।
इति स्पष्टमाचष्ट एषा श्रुतिर्नः कथं सिद्धवल्लक्षणं सिद्धिबाह्यम् ॥

**ச்லோகார்த்தம் :** உற்பத்தி, ஸ்திதி, லயம் உடைய எல்லாவஸ்துக்களுக்கும் எது அபின்ன நிமித்தோபாதான காரணமோ 'அதுவே ப்ரஹ்மம்' என்று ச்ருதியானது நம்மிடம் ஸ்பஷ்ட்டமாக தெரிவிக்கின்றது. ப்ரமாணாந்திரங்களினால் சித்தமாக இல்லாத வஸ்துவைப்பற்றி ப்ரமாணத்தால் சித்தித்ததுபோல் எப்படி ச்ருதி கூறமுடியும்? (அவ்விதம் கூறுகிறது என்பதே பொருள்)

**வ்யாக்யானம் :** ஜகத்காரணம் என்று எந்த வஸ்து அனுமானத்தினால் சித்திக்கின்றதோ, அந்த வஸ்துவை அனுவாதம் செய்து, இந்த லக்ஷணத்தைக் கொண்டு அதுவே ப்ரஹ்மமென்று அறிந்து கொள் என்று ச்ருதியினால் விதிக்கப்படுகிறதா? அல்லது அபின்னநிமித்தோபாதானம் ப்ரஹ்ம என்று ச்ருதிவாக்யம் அபூர்வமாக (புதிதாக) தெரிவிக்கின்றதா?

அனுமானத்தினால் ஏற்கனவே சித்தமான வஸ்து எதுவோ அதுவேப்ரஹ்மமென்று அறிந்துகொள் என்று வாக்யம் விதிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் அபின்ன நிமித்தோபாதானமாக எந்த வஸ்துவும் லோகத்தில் ப்ரஸித்தமில்லையென்பதால் ந்யாயத்திற்கு விரோதமாக, இப்பேர்ப்பட்ட ஒருவஸ்து இருப்பதாகவோ, அதை ச்ருதி அனுவாதம் செய்து தெரிவிக்கின்றது என்றோ சொல்ல முடியாது.

**533. அவதாரிகை**

'யதோவா இமானி' என்ற வாக்யம் அனுவாதம் செய்து லக்ஷ்ய வஸ்துவை போதிக்கின்றது என்று சொல்லப்படுமானால், எந்த அம்ஸம் அனுவாதம் செய்யப்படுகிறதோ அந்த அம்ஸம் லோகப்ரஸித்தமாக இருக்கவேண்டுமே?

**ச்லோகம் :**

न खल्वीदृशं कारणं लोकसिद्धम् यतोऽनूद्य तल्लक्षणं तेन लक्ष्यम् ।
व्यवस्थापयन्ती प्रवृत्तैवमेषा विधत्तेऽनुवक्तीति चैतद्विरुद्धम् ॥

**ச்லோகார்த்தம் :** ஜகத்காரணத்வம் என்ற லக்ஷணமானது ப்ரமாணாந்தர சித்தமாக இருக்குமானால் ச்ருதியானது அந்த லக்ஷணத்தை அனுவாதம் செய்து லக்ஷ்யத்தை வ்யவஸ்தாபனம் செய்கிறது என்று சொல்லலாம். ஆனால் ஜகத்காரணம் ப்ரமாணாந்தர சித்தமில்லை யென்பதால் இந்தச்ருதி ஜகத்காரணத்வம் என்ற லக்ஷணத்தை விதிக்கின்றது என்றும் அனுவாதம் செய்கின்றது என்றும் சொல்லப்படுவது விரோதமாகும்.

**வ்யாக்யானம் :** அபின்ன நிமித்தோபாதானமாக ஜகத்காரணம் இருக்கின்ற தென்று அனுமானத்தினால் அறியப்படவில்லை. லோகத்தில்வேறு எந்தப்ரமாணத்தினாலும் இவ்விதம் ஒருவஸ்து இருப்பதாக அறியப்படவில்லை ஜகத்திற்கு ஒரு காரணம் இருக்க

வேண்டும்மென்றும் அந்த காரணம் ஏகமாகவும் சேதனமாகவும் இருக்கவேண்டுமென்று அனுமானத்தினுல் சித்திக்கின்றதேயன்றி நிமித்தோபாதானமாக ஒரு காரணம் இருப்பதாக எந்தப்ரமாணத்தினுலும் சித்திக்கமுடியாது. அதனுல் ச்ருதி அனுவாதம் செய்து தெரிவிக்கிறதென்று சொல்லமுடியாது. உத்ப்ரேக்ஷாமாத்ரம் அர்த்தத்தை தீர்மானிக்க முடியாது. ப்ரமாண சித்தமாக இருக்கின்ற வஸ்துவையே ச்ருதி அனுவாதம் செய்து லக்ஷணம் தெரிவிக்கிறது என்று சொல்லாம். அனுமானம் என்பது த்ருடதரமான ப்ரமாணம் என்று சொல்லமுடியாது.

**சித்தா :** ச்ருதிவாக்யமே 'யத:' என்ற சப்தத்தினுல், ஏகவசனத்தினுலும், பஞ்சமியில் சொல்லப்படுவதாலும் இப்பேர்ப்பட்ட காரணவஸ்துவை ச்ருதிப்ரமாணமே சாதிப்பதாகச் சொல்லலாமே?

**பூர்வ :** அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ப்ரஹ்மமென்பதை விதிக்கின்றதா? அல்லது. நிமித்தோ பாதானமான காரணம் என்பதை அனுவாதம் செய்கின்றதா? என்ருல் இரண்டையுமே ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கும்.

**534. அவதாரிகை :**

இவ்விதம் செய்யப்பட்ட ஆக்ஷேபங்களுக்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

अनुवददिदमेव वाक्यमर्थादुपनयतीदृशकारणं प्रसिद्धम् ॥
अनुवदनमशक्यमन्यथा स्यादवगतगोचरमेव हीदमिष्टम् ॥

**ச்லோகார்த்தம் :** 'யதோவா' என்றவாக்யமான்து ப்ரஸித்தமான ஜகத்காரணத்வத்தை அனுவாதம் செய்து அதையே அர்த்தாபத்தியினுல் விதிக்கின்றது. (அவ்விதம்) இல்லையானுல் அனுவாதம் செய்யமுடியாது. ஏனெனில் ப்ரமாணுந்தர சித்தமான வஸ்துவை மட்டுமே அனுவாதம் செய்யமுடியும் என்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்டதேயாகும்.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யம், ஜகத்காரணமாக இருக்கின்ற வஸ்து ஏகம், சேதனம், ஸர்வஞ்ஞும், ஸர்வசக்தி என்று எந்த வஸ்துவை தெரிவிக்கின்றதோ அதுவே ப்ரஹ்மமென்று அனுவாதம் செய்து தெரிவிக்கின்ற காரணத்தினுலேயே நிமித்தோபாதானமாக ஜகத் காரணமானவஸ்து இருக்கின்றது என்பதை அர்த்தாத் போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக இருக்கிறது. எந்த ப்ரமாணத்தினுலும் அறியப்படவில்லையென்ருல், அப்பேர்ப்பட்ட வஸ்துவை ச்ருதி அனுவாதம் செய்கிறது என்று சொல்லமுடியாது. ஸ்வத: ப்ரமாணமானச்ருதியே இவ்விதம் ஜகத்காரணமான வஸ்துவை சித்தம் செய்து அனுவாதம் செய்வதனுலேயே, ப்ரதானம் முதலானவைகள் ஜகத்காரணமில்லை என்று தீர்மானித்து (அவைகளிலிருந்து வேறுபடுத்தி) தெரிவிக்கின்றது என்பதால் அர்த்தாத் நிமித்தோபாதானம் என்பதும் சித்திக்கின்றது.

**535. அவதாரிகை :**

இதேவிஷயத்தை உதாகரணத்தின் மூலம், மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

यथा विशिष्टस्य विधानतोऽर्थाद्विशेषणानां घटते विधानम् ।
स्थितेऽनुवादेऽपि तथेह योज्यमनूद्यमानेऽपि जगन्निदाने ॥

**ச்லோகார்த்தம் :** விசிஷ்டமான ஸோமயாக விதியினுல் விசேஷணமான ஸோமமும் அர்த்தாபத்தியினுல் விதிக்கப்படுகிறது. அதேபோல் இந்த வாக்யத்தில் ஜகத் காரணத்வம் என்பதை அனுவாதம் என்று ஏற்றுக்கொள்ளபட்டபிறகு அனுவாதம் செய்யப்பட்ட ஜகத்காரணம் என்பது அர்த்தாபத்தியினுல் விதிக்கப்படுகிறது என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**வ்யாக்யானம் :** இந்தவாக்யம் அனுவாதம் என்று எப்படி சித்திக்கிறது? என்ருல், 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள 'யத:' என்ற 'யத்' சப்தத்திஞல், 'எந்தக் காரணத்திஞல்' என்று சொல்லப்படுவதிலிருந்தே அந்த காரணம் என்பது ப்ரசித்தம் என்பதால் அதை அனுவாதம் செய்தேச்ருதி தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. உதாரணமாக கர்மகாண்டத்தில் 'ஸோமேனயஜேத' என்ற வாக்யமும், 'ஆக்னேய: அஷ்டகபால:' என்பது முதலான வாக்யங்களும் விசிஷ்டவிதி என்று சொல்லப்படு கின்றது. ஒரு விசேஷணத்துடன் கூடியது எதுவோ அதுவே விசிஷ்டவிதி என்பதால், ஸோமம் என்ற விசேஷணத்தில் விதி இல்லாமல் விசிஷ்டத்தில் விதி என்று சொல்வதற்கு முடியாது என்பதால் அர்த்தாத் விசேஷணத்தில் விதி சித்திக்கிறது என்று சொல்லப்படுகிறது. அதேபோல் இந்த இடத்திலும் ச்ருதிவாக்யமானது ஜகத்தின் ஜன்மாதிகளுக்கு காரணம் எதுவோ அது ப்ரஹ்மம் என்று தெரிவிக்கின்றது. ஏற்கனவே இப்பேர்ப்பட்ட ஜகத்காரணமான ஒருவஸ்து (இருப்பதாகவே) சித்தமாகவில்லையென்ருல், அதையே ப்ரஹ்மமென்று அறிந்துகொள் என்று அந்தவாக்யம் விதிப்பதாகச் சொல்ல முடியாது. வஸ்து சித்தமில்லையென்ருல் அனுவாதம் என்பதும் ஸம்பவிக்காது. ஆகவே, அனுவாதம் செய்வதிலிருந்தே இப்பேர்ப்பட்ட அபின்ன நிமித்தோபாதானமான காரணம் சித்தம் என்பது அர்த்தாத் கிடைக்கின்றது. த்ருஷ்டாந்தமாக சொல்லப்பட்ட 'ஸோமேனயஜேத' என்றவாக்யத்தில் ஸோமம் என்பது விசேஷணம். ஆனுல் தார்ஷ்டாந்தத்தில் ஜகத்காரணம் என்பது விசேஷணமல்ல, உபலக்ஷணம் என்ற வித்யாஸம் இருக்கின்றது என்ருலும், விசேஷணத்தில் விதி என்பது எப்படி அர்த்தாத் சித்திக்கின்றதோ அதுபோல் இந்தவாக்யம், ஜகத்காரணத்வம் என்பதை அனுவாதம் செய்து தெரிவிப்பதனுலேயே அர்த்தாத் ஏற்கனவே வஸ்துசித்தம் என்பது கிடைக்கின்றது என்ற அம்ஸம், த்ருஷ்டாந்தம், தார்ஷ்டாந்தம் இரண்டிலும் பொருந்துகின்றது.

**536. அவதாரிகை:**

ஜகத் ஜன்மாதிகளுக்கு காரணம் ப்ரஹ்மமென்று ச்ருதியானது அனுவாதம் செய்து, அதுவே ப்ரஹ்மமென்று போதிக்கின்றது என்றும், அந்தப்ரஹ்மமே ஜகத்திற்கு நிமித்தோபாதானமாகவும் இருக்கின்றது என்பதையும் இந்தவாக்யமே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்குமே? என்ருல், அனுவாத வாக்யத்திலிருந்தே அபின்ன நிமித்தோபாதானம் என்ற அர்த்தம் கிடைக்கின்ற தென்று சொல்லப்படவில்லை. அந்த வாக்யத்திலிருந்து ஏற்பட்ட அனுபபத்தியினுல், மற்றொரு வாக்யத்தை கல்பித்து அதிலிருந்தே அபின்ன நிமித்தோபாதான காரணம் ப்ரஹ்மமென்று பட்டருடையசித்தாந்தத்தை அனுசரித்து இங்கு சொல்லப்படுகிறது. அதனுல் எந்த விதமானதோஷத்திற்கும் இடமில்லை.

**ச்லோகம்:** अथ वाऽनुवादमुपलभ्य ततोऽनुपपद्यमानवपुषः प्रमितेः ।
अपरं निमित्तमिह कल्प्यमिति प्रवदन्ति केचिदभियुक्ततराः ॥

**ச்லோகார்த்தம் :** அல்லது அனுவாதத்தை அறிந்தபிறகு ப்ரமாணுந்தரத்தினுல் அறியப்படாததை அனுவாதம் செய்யமுடியாது என்ற அனுபபத்திதோஷத்தை அறிந்து கொண்டு, அறியப்படாததை அறிந்து கொள்வதற்காகவே, வேறெரு வாக்யத்தை கல்பிக்க வேண்டுமென்று வித்வான்களில் ஒரு சிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** ச்ருதிவாக்யம் என்பதே ப்ரமாணம். ஆகையால் அந்தவாக்யமானது ஜகத்ஜன்மாதிகளுக்கு காரணமான ப்ரஹ்மமென்பது அபின்னநிமித்தோபாதான காரணமாக இருக்கிறது என்று தெரிவிக்கின்றது. ஆகையால் ச்ருதியானது எந்த ஜகத்காரணத்தை அனுவாதம் செய்து தெரிவிக்கின்றதோ அந்தச்ருதியே அபின்ன நிமித்தோபாதானமாகவும் இருக்கிறது என்று வேறெருவாக்யத்தை கல்பித்து போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஏனெனில் நிமித்தோபாதான காரணம் ப்ரஹ்மமென்று போதிக்கின்ற வாக்யமும் ச்ருதிவாக்யமாகவே இருக்கின்றது. அதனுல் அந்தவாக்யமும் ப்ரமாணமென்றே சொல்லவேண்டும். ஒரேவாக்யம் இரண்டு விதமான அர்த்தத்தை போதிக்கின்றது என்ருல் வாக்ய பேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். ஆகையால் இரண்டு அர்த்தமும் ஒரே வாக்யத்தினுல் போதிக்கப்படுகிறது என்று ப்ராபாகரரால் சொல்லப்படுவது யுக்தமே என்ருலும், பாட்டர்களால் சொல்லப்படுவது யுக்த தரமாக இருக்கின்றதால், ச்ருதியே மற்றெரு வாக்யத்தையும் கல்பித்து போதிக்கின்றது என்பது மிகவும் பொருத்தமாக இருக்கிறது. அதனுல் இதில் எவ்வித தோஷமும் கிடையாது.

**537. அவதாரிகை :**

விசிஷ்டவிதிவாக்யங்களில், விசேஷணம் என்பதிலும் அர்த்தாத்விதி சித்திக்கின்றது என்று ப்ராபாகரரால் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுவது சரியல்ல. ஆகவே, விசிஷ்டவிதியின் அனுபபத்தியினுல் விசேஷணம் என்பதும் விதிக்கப்படுகிறது என்று மற்றெருவாக்யம் கல்பிக்கப்படுகிறது. அதனுல் விசேஷணத்திலும் விதிஸம்பவிக்கிறது என்று சொல்லப்படும் பாட்டமதத்தை அனுசரித்து இங்கு அர்த்தம் செய்யப்படவேண்டும் என்று மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अपि विशिष्टविधौ वचनान्तरादनुपपत्तिबलानुमितादिह ।
विधिरशेषविशेषणगोचरो न तु पुनस्तत एव विधानतः ॥

**ச்லோகார்த்தம் :** விசிஷ்டவிதி விஷயத்தில் அனுபபத்திதோஷபலத்தினுல் வேறு ஒருவாக்யம் அனுமானிக்கப்பட்டு அந்தவாக்யத்தினுல் விசேஷணம் விதிக்கப்படுகிறது. விசிஷ்டவிதியினுலேயே விசேஷணம் விதிக்கப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** இந்த இடத்தில் விசிஷ்ட விதி என்பது சித்தமான ஒரு விஷயத்தை தெரிவிக்கின்றது. அதாவது, விசிஷ்டவாக்யத்திலும் விசேஷணம் என்பது சித்தமாக இருக்கின்றது என்ற காரணத்தினுல்தான் விசிஷ்டவிதி என்பதே ப்ரவ்ருத்திக்கின்றது. விசேஷணத்தில் விதி இல்லையென்ருல் விசிஷ்டத்தில் விதி என்பதே பொருந்தாது. ஆகையால் விசேஷணத்தில் ஒரு விதி கல்பிக்கப்பட வேண்டும் என்பதற்காக வேறு ஒரு வாக்யத்தை கல்பிக்கப்படுகிறது. கல்பிக்கப்படும் வாக்யம் ச்ருதி வாக்யமா என்று ஆராயவேண்டிய அவஸ்யமில்லை. விசிஷ்ட விதியின் அனுபத்தி யினுலேயே மற்றெரு வாக்யம் கல்பிக்கப்படுகிறது என்று அறிந்து கொள்ளலாம். அதேபோல் இங்கு விசாரிக்கப்படுகின்றவாக்யத்திற்கும் வேறு ப்ரமாணுந்தரங்களை

தேடவேண்டிய அவஸ்யமில்லை. அனுவாதவாக்யம் தெரிவிக்கின்ற விஷயம் ப்ரமாணமாக இருக்கின்றதாலும், வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்காமல் இருக்கவேண்டும் என்ற காரணத்திற்காகவும் அபின்ன நிமித்தோபாதான காரணம் ப்ரஹ்மமென்று மற்றொரு வாக்யத்தை கல்பித்து தெரிவிக்கின்றது என்றே ஒத்துக் கொள்ளப்படவேண்டும்.

**538. அவதாரிகை :**

இந்தவிதம் அனுவாத வாக்ய ஸாமர்த்யத்தினாலேயே ஜகத்காரணம் ப்ரஹ்மமென்று சித்திப்பதாகச் சொல்லப்படுமானால், ப்ரஹ்மஸ்வரூப சித்திக்காக லக்ஷணம் சொல்லப்படவில்லையென்று உங்களால் சொல்லப்பட்டது சரியல்ல என்று சொல்ல நேரிடுமே என்றால், அவ்விதம் சொல்லப்பட்டவிஷயத்திற்கும் இங்கு சொல்லப்படும் விஷயத்திற்கும் விரோதம் ஏதுமில்லையென்பதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம்:**

जन्मादिलक्षणमिदं जगतो यदुक्तं सद्ब्रह्मणस्तदिह चिह्नतयोपदिष्टम् ।
नास्मिन्प्रमाणमपरे पुनरेतदेव ब्रह्मप्रमाणमनुमानमुदीरयन्ति ॥

**ச்லோகார்த்தம் :** ஜகத் ச்ருஷ்டிஸ்திதிலய காரணமான ஸத்ப்ரஹ்மலக்ஷணம் என்பது உபலக்ஷணம் என்றே சொல்லப்படுகிறது. இதுப்ரஹ்மத்திற்கு ப்ரமாணமாக ஆகாது. (ஆனால்) வேறுசிலர் இதுவே ப்ரஹ்மத்திற்கு ப்ரமாணமாக இருக்கின்ற அனுமானம் என்று சொல்கிறார்கள்.

**வ்யாக்யானம் :** ஜகத்காரணம் என்பது பரஹ்மத்திற்கு தடஸ்த்தலக்ஷணம் என்றே சொல்லவேண்டும். அதனால் ஸ்வரூபத்தை போதிப்பதற்காக லக்ஷணம் என்று சொல்வதற்குமுடியாது. மற்றவஸ்துக்களிலிருந்து வேறுபடுத்தி தெரிவிப்பதற்காகவே லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஆகையால் 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்களினால் எந்த ப்ரஹ்மம் போதிக்கப்படுகிறதோ, அந்த ப்ரஹ்மபதசக்தியினால் அறியப்படுகின்ற ப்ரஹ்ம பதார்த்தமே ப்ரமாணத்தினால் அத்விதீயமாகவும் சேதனமாகவும் சித்திக்கின்றது. இந்தவிதம் ஸாமன்யமாக சித்தம் செய்யப்பட்ட ப்ரஹ்ம வஸ்துவையே 'யதோவா' என்றவாக்யம் அனுவாதம் செய்து அதுவே ஜகத்காரணம் என்று போதிக்கின்றது. இவ்விதம் ஜகத் உற்பத்தி முதலானவைகளுக்கு காரணம் எதுவோ அதுவே ப்ரஹ்ம மென்று லக்ஷணம் சொல்லப்படும் ப்ரஹ்மம் மஹாவாக்யத்திலிருந்து அறியப்படும் ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபமான ஸத்வஸ்துதான். ஆகையால் நையாயிகரால் சொல்லப்படும் அனுமானரூபப்ரமாணத்தை இந்தச்ருதி வாக்யம் தெரிவிக்கிறது என்று சொல்லப்படவில்லை. ஆகவே இந்தவாக்யம் லக்ஷணத்தைக்கொண்டுபரிச்சின்னமான மற்றவஸ்துக்கள் எதுவும் ஜகத்காரணமில்லை என்பதை தெரிவித்து அவைகளிலிருந்து வ்யாவ்ருத்தி செய்து அபரிச்சின்னமான ப்ரஹ்மஸ்வரூபம் என்பது இந்த வாக்யத்தினால் போதிக்கப்படுகிறது. ஆகவே, அத்யந்தம் அஜ்ஞாதமான ஒருவஸ்துவை அனுமானப்ரமாணத்தைக்கொண்டு போதிக்கப்படுகிறது என்று சொல்வது முற்றிலும் சரியல்ல என்று இதன்மூலம் விளக்கப்பட்டது.

**539. அவதாரிகை :**

நையாயிகர்களால் சொல்லப்படும் விஷயம் சரியல்ல என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कार्यानुमानपरतन्त्रमिदं हि शास्त्रं शास्त्रस्य नोपकरणं तदितीक्षमाणाः ।
तद्दुर्घटं न खलु कारणमद्वितीयं चैतन्ययुक्तमिति कार्यवशात्प्रतीमः ॥

**ச்லோகார்த்தம் :** 'யதோவா' என்ற இந்த உபநிஷத்வாக்யமானது கார்யம் என்பதை லிங்கமாகக் கொண்ட அனுமானத்தை ஆச்ரயிக்கின்றது. அனுமானம் என்பது உபநிஷத்வாக்யத்தை ஆச்ரயிப்பதில்லை. கார்யலிங்கத்தைக் கொண்டு காரணம் சேதனமாகவும் அத்விதீயமாகவும் இருக்கின்றதென்று நம்மால் அறியப்படவில்லை. அதனால் இதுஸம்பவிக்காது.

**வ்யாக்யானம் :** சாஸ்திரமானது ஸ்வதந்திரமாக ஒரு அர்த்தத்தை போதிப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் ச்ருதி வாக்யம் தெரிவிக்கின்ற அர்த்தத்தில் ஜகத்காரணத்வம் என்பது ப்ரஹ்மத்திற்குத்தான் சித்திப்பதாகச்சொல்லமுடியாது. ப்ரதானம் முதலான வைகளும் ஜகத் காரணமாக இருக்கலாமே என்ற ஸந்தேகம் ஏற்படுகிறது. ஆகவே அனுமானம் என்பதை தனக்கு ஸாதனமாகக் கொண்டு சாஸ்திரம் இதை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும் என்பதால் சாஸ்திரம் என்பது அனுமானத்திற்கு பரதந்த்ரமேயன்றி, சாஸ்திரத்திற்கு அனுமானம் உபகரணமில்லை.

**சித்தா :** இவ்விதம் சொல்லப்படுவது பொருந்தாது (துர்கடம்). ஏனெனில், கார்யமான இந்த ஜகத்தைக் கொண்டு அதற்கு ஒரு காரணம் இருக்கவேண்டும் என்பது மட்டுமே அனுமானத்தினுல் சாதிக்கலாம். ஆனுல் அந்த காரணம் என்பது ஏகமா அனேகமா சேதனமா அசேதனமா சரீரியா அசரீரியா என்பதெல்லாம் அனுமானத்தினுல் சித்திக்கமுடியாது. மேலும் ஜகத்திற்கு அபின்னநிமித்தோபாதான காரணமாக ஒரு வஸ்து சித்திக்கிறது என்பதும் அனுமானத்தினுல் சித்திக்கமுடியாது. ஆகவே, அனு மானத்தினுல் சித்தமான ஜகத்காரணம் என்பதைச்ருதி அனுவாதம் செய்து தெரிவிக்கின்றது என்று சொல்வது முற்றிலும் பொருந்தாத விஷயம். சாஸ்திரத்தினுல் எந்த விஷயம் போதிக்கப்படுகின்றதோ அந்த விஷயத்தில் ஏதாவது அஸம்பாவனை (ஸந்தேகம்) ஏற்படுமானுல் அதை நிவர்த்திப்பதற்காகவே அனுமானம் சொல்லப் படுகிறது. அதனுல் அனுமானத்தினுல் சாஸ்த்ரார்த்தம் சித்திக்கின்றது என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ள முடியாது. மேலும் ஆப்தவாக்யம் ப்ரமாணம் என்ற முறையில், ஈச்வரனுல் சொல்லப்பட்டவேதவசனங்களும் ப்ரமாணமாகின்றதேயன்றி, வேதம் ஸ்வதப்ரமாணமில்லை என்றும் அனுமானத்தை ஸஹாயமாகக்கொண்டே ப்ரமாணமாகிறது என்று சொல்வதும் பொருத்தமற்றது. அனுமானத்தினுல் எந்த அர்த்தம் கிடைக்கின்றதோ அந்த அர்த்தத்தை விட்டு சாஸ்திரமானது ஜகத்காரணம் சேதனம் என்றும், ஏகமென்றும் ஸர்வஞ்ஞம் என்றும் ஸர்வசக்தி உடையது என்றும், அபின்ன நிமித்தோபாதானம் என்றும் தெரிவிக்கின்றது. இந்தவிதமான அர்த்தங்கள் எதுவும் ஒருக்காலும் அனுமானத்தினுல் சாதிக்கமுடியாது. மேலும் அசரீரியான ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்பதும் அனுமானத்தினுல் சாதிக்கமுடியாது. அதுமட்டுமல்ல, அசரீரியாக இருக்கின்ற காரணத்தினுல் அதில் ஜன்யக்ரியை இருப்பதாகவோ, அந்த க்ரியை நித்யமாகவோ அல்லது அநித்யமாகவோ இருப்பதாகச்சொல்லமுடியாது. ஸசரீரனுக இருப்பவனிடமே அநித்யக்ரியை இருக்கமுடியும். நித்யக்ரியை உடையது என்று சொல்லப்படுமானுல் அது ஞானஸ்வரூபம் என்றே சொல்லமுடியாது. மேலும்

ப்ரஹ்மம் அகண்டஸச்சிதானந்தஸ்வரூபம் என்பதும் அனுமானத்தினுல் அறியமுடியாது. ப்ரஹ்மசைதன்யமானது ஸர்வ அசேதன வஸ்துக்களிலிருந்தும் வேறுபட்டது. இந்தவிதம், ஸர்வசேதன விலக்ஷணமாகவும், ஸர்வஞ்ஞனுகவும், ஏகமாகவும், அபின்ன நிமித்தோபாதானமாகவும், சாஸ்திரத்தினுல் சித்திக்கின்றதுமான பரஹ்மபதார்த்தம் கார்யவஸ்துக்களை லிங்கமாகக்கொண்டு வ்யாப்தி க்ரஹிக்கப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்? வ்யாப்தியென்பது த்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டே க்ரஹிக்கப்படவேண்டும். இப்பேர்ப்பட்ட வஸ்து லோகத்தில் ப்ரஸித்தமென்றே சொல்லமுடியாது. ஆகவே அத்விதீயமான அகண்ட ஸ்வரூபமாக சேதனனுக ஒரு வஸ்து ச்ருதியினுல்தான் சித்திக்கவேண்டும். இந்தவிதம் ஒத்துக்கொள்ளப்படவில்லையென்ருல், ப்ரஹ்மபதத்திற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தம் பூர்ணமாக கிடைக்காது. ச்ருதியினுல் தெரிவிக்கப்படும் விஷயத்திற்கு த்ருஷ்ட்டாந்தம் தேவையில்லை. அனுமானத்திற்கே த்ருஷ்ட்டாந்தம் தேவை. ஆகையால் மஹா வாக்யங்களில் எந்தப்ரஹ்ம ஸ்வரூபமானது ஸாமான்யமாக போதிக்கப்பட்டதோ அந்தப்ரஹ்மமே ஸர்வ ஜகத்திற்கும் நிமித்தோபாதானமாக இருக்கிறது என்றும், ஸர்வத்திலும் ஸன்மாத்ரமாக அனுஸ்யூதமாக இருக்கின்றது என்ற விஷயங்கள் எல்லாம் ச்ருதியைத்தவிர வேறு எந்தப்ரமாணங்களினுலும் அறிய முடியாது. ஆகையினுல் 'யதோவா இமானிபூதானி' என்ற ச்ருதிவாக்யம் லக்ஷணவாக்யமாகவே இருந்து ஜகத்காரணம் ப்ரஹ்மம் என்று போதிக்கின்றது. அதனுல் இந்த வாக்யம் அனுமானத்திற்கு ஸேஷம் என்று சொல்லமுடியாது. சாஸ்திரம் என்பது ஸ்வதந்தரமாக தன் அர்த்தத்தை போதிக்கின்றது.

**540. அவதாரிகை :**

அனுமானப்ரமாணத்தினுல் கார்யமான இந்த ஜகத்திற்கு காரணமான ஸ்வரூபம் ஸர்வஞ்ஞனை ஈச்வரன் என்பது சித்திக்க முடியாது என்று சொல்லப்படுமானுல் (வ்யாப்திக்ரஹிக்கமுடியாது என்ருல்) அது சரியே. ஆனுலும் சப்தத்தினுல் மட்டும் ஸர்வஞ்ஞத்வாதி குணமுடையஸ்வரூபம் எப்படி சித்திக்க முடியும்?

**ச்லோகம்:**

वेदान्तवाक्यमिह येन पथा प्रवृत्तं लोकप्रसिद्धपदशक्तिमुपाददानम् ।
विश्वोद्भवस्थितिलयप्रकृतौ निमित्ते सच्चित्सुखात्मनि परात्मनि नैवमन्यत् ॥

**ச்லோகார்த்தம் :** லோகப்ரஸித்தமான பதசக்தியைக் கொண்டு வேதாந்த வாக்யமானது சத்சிதானந்த பரமாத்மாவே ஜகத்சிருஷ்டி ஸ்திதி லயத்திற்கு அபின்ன நிமித்தோ பாதானம் என்ற விஷயத்தை தெரிவிக்கின்றது. மற்றப்ரமாணங்கள் இவ்விதம் தெரிவிப்பதில்லை.

**வ்யாக்யானம் :** அனுமானம் என்ற ப்ரமாணத்தினுல் ஜகத் காரணம் என்பது எப்பேர்ப்பட்டது என்பது கிரஹிக்கமுடியாது என்ருல், ப்ரமாணுந்தரங்களுக்கே விஷயமாக இல்லாத வஸ்துவில்சாஸ்திரம் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்வது? சப்தம் என்பது அந்த விஷயத்தை போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாக ஆகிறது? எப்படி லோகத்தில் ப்ரயோகிக்கப்படும் வாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாம் எந்த முறையில் அதன் அர்த்தத்தை போதிக்கின்றதோ அதே முறையில்தான் சாஸ்திரம் என்பதும் தன் அர்த்தத்தை போதிக்கின்றது. ப்ரஹ்மம் முதலான பதசக்தியைக் கொண்டே அவைகளின் அர்த்தம் போதிக்கப்படுகிறது. இவ்விதம் சப்தம் என்பது எப்படி பதசக்தியைக் கொண்டு அதன் அர்த்தத்தை போதிக்கின்றதோ அதுபோல் அனுமானம் என்பது த்ருஷ்ட்டாந்தமோ,

வ்யாப்தியோ இல்லாமல் தன் அர்த்தத்தை தெரிவிக்கமுடியாது. ஆகவே வேதம் ஒன்றே ஸ்வத: ப்ரமாணம். வேறு ப்ரமாணாந்தரங்களால் அறியப்படாத விஷயத்தையே சாஸ்திரம் தெரிவிக்கின்றதால்தான் சாஸ்திரம் ஸ்வதப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. ப்ரமாணத்திற்கு விஷயமாக இல்லாத ப்ரஹ்மஸ்வரூபத்தை சப்தம் லக்ஷணையினால் போதிக்கக்கூடிய தன்மையுடையதாக இருக்கிறது. அனுமானம் என்பது லிங்கத்தைக் கொண்டு வ்யாப்திக்ரஹிக்கவேண்டியிருக்கின்றதால் ப்ரஹ்மவஸ்துவை போதிக்க முடியாது. (இதைப் பற்றி முன்பே விசாரிக்கப்பட்டிருக்கிறது).

**541. அவதாரிகை :**

அனுமானத்தினால் எந்த ஒரு காரணவஸ்து சித்திக்கின்றதோ, அந்த வஸ்துவையே சாஸ்திரமும் போதிக்கின்றது என்பதால், சாஸ்திரம் என்பதும் வேறுப்ரமாணத்தை அனுசரித்தே காரணவஸ்துவை தெரிவிக்கிறது என்று சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லப்படுமானால் ச்ருதஹானி அச்ருதகல்பனம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். ஆகவே அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

भङ्क्त्वा कथंचिदनुमानवशेन सिद्धे सर्वेश्वरे कणभुगादिभिरुच्यमाने ।
वेदान्तवाक्यमपि योज्यमतोऽनुमाने सापेक्षतोपनिषदां यदि साहसं तत् ॥

**ச்லோகார்த்தம் :** கீழே சொல்லப்பட்ட ச்ருதி தாத்பர்யத்தை விட்டு ச்ருதி வாக்யத்தை எப்படியாயினும் வைசேஷிகர்களால் சொல்லப்படுகின்ற அனுமானத்தினால் சித்திக்கின்ற ஸத்விதீய ஸர்வேச்வரனிடத்தில் பொருத்தி வேதவாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்பட வேண்டும் என்றும் அதனால் உபநிஷத்வாக்யங்கள் அனுமானத்தை ஆச்ரயிக்கின்றது என்று சொல்லப்படுவது மிகவும் ஸாகஸமேயாகும்.

**வ்யாக்யானம் :** உபநிஷத்வாக்யங்களினால் எந்தப்ரஹ்மமானது ஜகத்காரணம் என்று சித்திக்கின்றதோ, அது அனுமானத்தினால் சித்திக்கவில்லை என்று சொல்லப்படுவது சரியே என்றாலும், அனுமானத்தினால் எந்தவஸ்து சித்திக்கின்றதோ அதையே சாஸ்திரம் போதிக்கின்றது என்று சொல்லலாமே? அதாவது காணாதர்கள் என்ற தார்க்கிர்களால் ஸர்வேச்வரன் பரிச்சின்னன் என்று சொல்லப்படுவதையே வேதாந்தம் தெரிவிப்பதாகச் சொல்லலாமே?

**சித்தா :** கணபுகாதிகளால் சொல்லப்படும் ஈச்வரன்தான் ஜகத்காரணம் என்று வேதாந்தசாஸ்திரமும் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுவது மிகவும் முரட்டுத்தனமானவாதம். ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியப்படாத அதீந்த்ரியமான விஷயத்தையே சாஸ்திரம் போதிக்கின்றது. வேதம் என்பது அபௌருஷேயம், அனுமானம் என்பது புருஷபுத்தியைக்கொண்டு தீர்மானிக்கப்படும் விஷயம். இவ்விதம் அதீந்த்ரியமான விஷயங்களை போதிக்கின்ற சாஸ்திரமானது அனுமானத்தினால் சித்திப்பதையே தெரிவிக்கிறது என்று சொல்வது மிகுந்த ஸாகஸமேயாகும். ச்ருதியானது அத்விதீயம் ப்ரஹ்மஎன்றும், அதுவே நிமித்தோபாதானம் என்றும் சப்தஸாமர்த்யத்தினால் ஜகத்காரணமான வஸ்துவை தெரிவிக்கின்றது. இவ்விதம் ச்ருதியினால் போதிக்கப்படும் அர்த்தத்தை விட்டு, அனுமானத்தினால் அறியப்படுவதையே ச்ருதியும் தெரிவிக்கிறது என்று கல்பனை செய்வது ஸாகஸம் என்பது மட்டுமல்ல. ச்ருதஹானி அச்ருதகல்பனம் என்ற தோஷமும் ஏற்படுகிறது. அபௌருஷேயமான சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தை விட்டு அனுமானத்திற்கு முக்யத்வம் சொல்லப்படுவது முற்றிலும் சரியல்ல.

**542. அவதாரிகை :**

சில இடங்களில் உபநிஷத் வாக்யங்களுக்கு உபசாராத் வேறு அர்த்தமும் ஒத்துக்கொள்ளப்படுவதால், அதேபோல் இந்த இடத்திலும் உபசாராத் அர்த்தம் சொல்லப்படலாமே? அதனுல் இதைஏன்ஸாகஸம் என்று சொல்லப்படவேண்டும் என்றுல் :

**ச்லோகம் :**

निष्कारणं श्रुतिशिरोवचनस्य भङ्गं ये वर्णयन्ति सहसा स्वमनोरथेन ।
दीप्तस्य दावदहनस्य न ते किमर्थं ज्वालां पिबन्ति कथनीयमिदं बहुज्ञैः ॥

**ச்லோகார்த்தம் :** வைசேஷிகர்கள் காரணமின்றியே இச்சையினுல் ஸாகஸமாக வேதாந்த வாக்யத்தை நிராகரிக்கின்றுர்கள். "அவர்கள் ஏன் நன்றுக எரிகின்ற காட்டுத்தீயின் ஜ்வாலையை குடிப்பதில்லை"? என்று வித்வான்கள் (வைசேஷிகர்களை) கேட்க்கவேண்டும்

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யமென்றுலே அதற்கு முக்யார்த்தம்தான் சொல்லவேண்டுமென்ற அவஸ்யம் என்ன? சில இடங்களில் முக்யார்த்தத்தை மாற்றி கௌணுர்த்தமும் உங்களால் சொல்லப்படுகிறதே? அதேபோல் இந்த இடத்திலும் அனுமானம் என்ற ப்ரமாணத்தைக்கொண்டு பதங்களின் அர்த்தத்தை மாற்றி கௌணவ்ருத்தியை ஆச்ரயித்து அர்த்தம் செய்யப்படலாமே?

**சித்தா :** இவ்விதம் அர்த்தம் செய்யப்பட வேண்டுமென்று பிடிவாதம் செய்வதை ஒத்துக் கொள்ள முடியாது. ஏனெனில் எந்த இடத்தில் முக்யார்த்தம் பொருந்தவில்லையோ அந்த இடத்தில்தான் லக்ஷணையைக்கொண்டு அர்த்தம் செய்யப்படலாமேயன்றி முக்யார்த்தபாதம் இல்லாத இடத்திலும், அனுமானத்தைக் கொண்டு அர்த்தம் செய்ய வேண்டுமென்று சொல்வது பொருந்தாது. லௌகீகவாக்யங்களிலேயே இவ்வித நியமம் சொல்லப்படுகின்றது என்றுல், மானுந்தர கோசரமாக இல்லாத ஒரு விஷயத்தைப் பற்றி சாஸ்திரம் தெரிவிக்கின்றபோது அதன் தாத்பர்யம் என்ன என்பதை அறியாமல் பலாத்காரமாக தன்னுடைய கொள்கைக்கு ஒத்துவரவில்லை என்ற ஒரே காரணத்திற்காக அனுமானத்தைக் கொண்டு முக்யார்த்தத்தை மாற்ற வேண்டும் என்று சொல்வது பொருத்தமற்றது. அக்னிஜ்வாலை என்பதும் ஜலம்போல குளிர்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்று அனுமானம் என்ற தர்க்கத்தைக் கொண்டு தீர்மானித்து, தாக சாந்திக்காக அக்னிஜ்வாலையை அள்ளிக்குடிக்கலாமே? ஏன் அவ்விதம் செய்வதில்லை?

ஆகவே, மானுந்தர விஷயமாக இல்லாத ஒன்றை தெரிவிப்பதில் சாஸ்திரம் ஒன்றேப்ரமாணம். சாஸ்திரத்தினுல் தெரிவிக்கப்படும் விஷயத்திற்கு எந்த விதமான பாதமும் இல்லாதபோது கௌணவ்ருத்தியை ஆச்ரயித்து அர்த்தம் செய்வது சரியல்ல.

**543. அவதாரிகை :**

வாக்யத்தின் அன்வயம் பொருந்தவில்லையென்பதனுலேயே லக்ஷணை சொல்ல வேண்டியிருக்கிறது என்று லக்ஷணையைக் கொண்டு அர்த்தம் செய்வதற்கு அன்வய அனுபபத்தியே பீஜமாக இருக்கிறது. இந்தச்ருதி வாக்யத்திலும் முக்யார்த்த அன்வயம் ஏற்படாததால் அனுமானத்தைக்கொண்டு அர்த்தம் கல்பிக்கப்படலாமே? ஆகவே வாக்யார்த்தத்தை மாற்ற வேண்டுவதற்குரிய காரணம் இல்லாததால் வேறு அர்த்தம் கல்பிக்கப்பட வேண்டியதில்லை என்று சொல்வது பொருந்தாது.

**ச்லோகம் :**

ननु सच्चिदादिवपुषो जगतः प्रकृतित्वबोधनमकारणकम् ।
परमात्मनो न हि पदार्थयुजा रहितेह सम्भवति योग्यतया ॥

**ச்லோகார்த்தம் :** சத்சிதானந்த ஸ்வரூபமானப்ரஹ்மமே ஜகத்திற்கு உபாதானம் என்று சொல்வதற்கு காரணம் ஏதுமில்லை. யோக்யதையின்றி பதார்த்த ஸம்பந்தம் என்பது பொருந்தாது.

**வ்யாக்யானம் :** 'யதோவா இமானி' என்ற வாக்யத்திலுள்ள 'யத்' சப்தத்தினுல் குறிப்பிடப்படுகின்ற ப்ரஹ்மமென்பது சத்சித் ஆனந்த அத்விதீய கூடஸ்த்தஸ்வரூபம். இப்பேர்ப்பட்ட தன்மையுடைய ப்ரஹ்மஸ்வரூபம், யத்சப்தார்த்தத்தினுல் தெரிவிக்கப்பட்டு அதற்குமேல் பஞ்சமியை ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்ற காரணத்தினுல் ஜகத்திற்கு ப்ரஹ்மமே ப்ரக்ருதி என்று சொல்லப்படுவது பொருந்தாதவிஷயம். ஏனெனில் ப்ரஹ்மமென்பது ஜகத் உபாதான காரணமாக இருக்கக்கூடிய யோக்யதை உடையது அல்ல. ஏனெனில் ப்ரக்ருதி அர்த்தமான ப்ரஹ்மத்திற்கும், ப்ரத்யயார்த்தமான உபாதானத்திற்கும் அன்வயம் ஸம்பவிக்க முடியாது. ஆகையால் இந்த லக்ஷணத்திற்கு பீஜமான முக்யார்த்த அனுபபத்தி (பொருந்தாத தன்மை) இருக்கிறது. ஏனெனில் ப்ரஹ்மத்திற்கு ஜகத் உபாதானத்வம் என்பது ஸம்விக்க முடியாது. யோக்யதை இன்றி பதார்த்தங்களின் அன்வயம் என்பது சப்தத்திற்கோ அர்த்தத்திற்கோ ஏற்படாது. அதனுல் இந்தவாக்யத்திற்கு முக்யார்த்தம் பொருந்தவில்லையென்றே சொல்லவேண்டும்.

**544. அவதாரிகை:**

ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு உபாதான காரணமாக இருக்கமுடியாது என்று என்ன காரணத்தினுல் சொல்லப்படுகிறது என்ருல்,

**ச்லோகம் :**

उपादानता सच्चिदानन्दमूर्तेर्विरुद्धा जडेष्वेव सा दृश्यते हि ।
विरूद्धैः पदार्थैर्न वाक्यार्थसिद्धिर्न खल्वग्निनोक्षेदितीहान्वयोऽस्ति ॥

**ச்லோகார்த்தம் :** சத்சிதானந்தஸ்வரூபமான ப்ரஹ்மமே உபாதானம் என்பது விருத்தமாகும். ஏனெனில் ஜடவஸ்துக்களே உபாதானமாக காணப்படுகிறது. விருத்தமான பதார்த் தங்களினுல் வாக்யார்த்தம் சித்திக்காது. "அக்னியினுல் ப்ரோக்ஷிக்க வேண்டும்" என்பது போன்ற வாக்யங்களுக்கு அன்வயம் சொல்ல முடியாதல்லவா?

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு உபாதான காரணமாக இருக்க முடியாது என்று சொல்வதற்கு காரணம் என்ன? என்ருல், சத்சிதானந்த லக்ஷணமான ப்ரஹ்மசைதன்யம் அசேதனமான இந்த ஜகத்திற்கு உபாதானம் என்று சொல்லப்படுவது ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களால் அறியப்படும் விஷயங்களுக்கு விரோதமாக இருக்கிறது. லோகத்தில் எந்தவஸ்து உபாதானமாக இருக்கின்றதோ அவையெல்லாம் அசேதனமாகவே இருக்கின்றது. ஆகவே அசேதனமான இந்த ஜகத்திற்கு சேதனம் உபாதானம் என்று சொல்லப்படுவது பொருந்தாது. ஒன்றுடன் ஒன்று அன்வயிக்க யோக்யமில்லாத வஸ்துக்களுக்கு ஸம்பந்தம் என்பது ஏற்படாது. ஆகவே, ஜகத்திற்கு ப்ரஹ்மமே காரணம் என்று இந்தவாக்யம் தெரிவிக்கின்றது என்பது உண்மை. அதனுல் ஜகத்திற்கு நிமித்தகாரணம் ப்ரஹ்மமென்று சொல்லலாம். ஆனுல் உபாதானகாரணம் என்று சொல்வது பொருந்தாது. ஆகவே, பொருந்தாத

அர்த்தத்தை இந்தவாக்யத்திற்கு அர்த்தமாகச்சொல்லப்படுமானல் அக்னியினுல் நனைக்க வேண்டும் என்று சொல்வது போலாகும்.

**545. அவதாரிகை :**

இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

उपादानता चेतनस्यापि दृष्टा यथा स्वप्नसर्गे विचित्रे प्रतीचः ।
यथा चोर्णनाभस्य सूत्रेषु पुंसां यथा केशलोमादिसृष्टौ च दृष्टा ॥

**ச்லோகார்த்தம் :** விசித்ரமான ஸ்வப்ன சிருஷ்டிக்கு சேதனமான ஆத்மாவே உபாதானமாக இருக்கிறது. சூத்ர (நூல்) சிருஷ்டிக்கு சேதனமான சிலந்தி என்பதே உபாதானம். கேஸம், லோமம், முதலான சிருஷ்டிக்கும் சேதனமான புருஷனே உபாதானம் என்பது ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகிறது. ஆகையால் சேதன வஸ்துவிற்கும் உபாதானத்வம் என்பது ப்ரத்யக்ஷவிஷயமாகவே இருக்கிறது.

**வ்யாக்யானம் :** அசேதனமான ஸ்வப்ன சிருஷ்டிக்கு சேதனமே உபாதான காரணமாக இருக்கிறது. ஆனுல் ஸ்வப்னம் என்ற நிலே ஏற்படுவதற்கு நித்ரை என்ற அவித்யை என்பது த்வாரகாரணமாக ஆகிறதேயன்றி உபாதான காரணமாக அவித்யையைச் சொல்ல முடியாது. அதனுல் ப்ரத்யக் சைதன்யமே உபாதான காரணம் என்றே சொல்லவேண்டும். அதேபோல் ஜாக்ரத்ப்ரபஞ்சத்திற்கும் சைதன்யம்தான் உபாதான காரணம். அவித்யை என்பதை த்வாரகாரணமாகக்கொண்டு சேதனமே உபாதான காரணமாக ஆகிறது என்பது கட:ஸன், பட:ஸன், என்று கடாதிவஸ்துக்களில் ஸத் என்பது அனுஸ்யூதமாக இருக்கின்ற காரணத்தினுலேயே அறியப்படுகிறது. ஸத்வம் என்பது (ஸத்தை) ஜாதி என்றும் அது கடத்தில் இருப்பதாக தார்க்கிகனுல் சொல்லப்படுகிறது. இது சரியல்ல. ஸத்தை என்று ஒரு ஜாதி இருக்கிறதென்பதற்கு ப்ரமாணமே கிடையாது என்று அவர்களுடையவாதம் கண்டிக்கப்பட்டிருக்கிறது. ம்ருத்கடம் என்பதில் ம்ருத் என்பது எப்படிதர்மி என்று சொல்லப்படுகிறதோ அது போல் 'ஸத்' என்பதும் கடத்திற்கு தர்மி என்றே சொல்லவேண்டும். ம்ருத் என்பது எப்படி கடத்திற்கு உபாதானமோ அதுபோல் ஸத் என்பதும் உபாதானமாக இருக்கின்றதால் தான் ஸன்கட: என்ற ப்ரதீதி (ஞானம்) ஏற்படுகிறது. அவ்விதமின்றி ஸத்தை என்பது தர்மம் என்று சொல்லப்படுமானுல் கடம் என்பது தர்மி என்று சொல்லநேரிடும். அவ்விதம் கடம் என்பதை தர்மி என்று சொல்லப்படுமானுல் கடத்திற்கு நாசமே ஏற்படக்கூடாது. ஏனெனில் ஸத்தை என்ற தர்மம் உள்ளது ஸத்தாகத்தான் இருக்கவேண்டும். அவ்விதமின்றி கடத்திற்கு நாசம் ஏற்படுகிறது என்பது ப்ரத்யக்ஷமாகவே அறியப்படுகின்றதால், கடத்தில் ஸத்தை என்பது தர்மமாக இருக்கிறதென்று சொல்வது சரியல்ல. ஆகவே காலத்ரயத்திலும் பாதிக்கப்படாத ஸத்ரூபமான ஆத்மவஸ்துவே ஸர்வத்திலும் அனுஸ்யூதமாக இருக்கிறது. இந்தவிதம் சேதன உபாதானமாக இருந்தும், அஞ்ஞானத்தை காரணமாகக் கொண்டே ஜடமான இந்த ஜகத் தோன்றுகிறது. தோன்றக்கூடாத ஒன்று தோன்றுகிறது என்றுலே, அதற்கு அவித்யை என்பதே காரணமாக இருக்கவேண்டும். ஆகவே, சேதன உபாதானமாக இருந்தும் ப்ரபஞ்சம் ஜடமாகத் தோன்றுகிறது. எப்படி சேதனமான சிலந்தியானது ஜடமான நூலுக்கு உபாதானமாக இருக்கிறதோ, அது போலவும், கேஸம், லோமம் என்பவைகளுக்கு எப்படி சேதனன் உபாதான காரணமாக

இருக்கின்றனே அதுபோல் ப்ரஹ்மசைதன்யம் ஜகத்திற்கு உபாதானமாக இருக்கின்றது. சிலந்தி என்பது நூலுக்கு உபாதானமில்லை நிமித்தமாகத்தான் இருக்கிறது என்று சொல்லப்படுமானால், அந்த நூலானது மறுபடி சிலந்தியிலேயே லயத்தை அடையமுடியாது. அதேபோல் ம்ருத ஸரீரத்திலிருந்தும் கேஸ, லோமாதிகள் உண்டாகிறதில்லை. ஆகவே, அசேதனமான இந்த ஜகத்திற்கும் சேதனமான ப்ரஹ்மமே உபாதான காரணமாக இருக்கிறதென்றே சொல்லவேண்டும். இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**546. அவதாரிகை :**

நையாயிகராலும் சேதனமான வஸ்து அசேதன வஸ்துவிற்கு உபாதானமாக இருக்கலாம் என்று சொல்லப்படுவதால் இந்த விஷயம் ப்ரசித்தம்தான்.

**ச்லோகம் :**

बुद्ध्यादिकार्येष्वपि चेतनोऽयं भवेदुपादानमितीष्यते च ।
आत्मा गुणी ते च गुणाः प्रसिद्धा गुणी गुणानां प्रकृतिश्च सिद्धा ॥

**ச்லோகார்த்தம் :** ஞானம் முதலான கார்யங்களுக்கு சேதன ஆத்மாவே உபாதானம் என்று வைசேஷிகர்களால் ஒத்துக் கொள்ளப்படுகிறது. ஆத்மா என்பது குணி என்றும் ஞானம் முதலானவைகள் குணங்கள் என்றும் குணி என்பது குணங்களுக்கு உபாதான காரணம் என்று (சொல்லப்படுவதால்) சித்தமாகிறது.

**வ்யாக்யானம் :** லோகத்ருஷ்டியில் இந்தவிஷயம் எப்படி உதாரணத்தினால் விளக்கப்பட்டதோ அதேபோல் சாஸ்திரத்ருஷ்டியிலும் நையாயிகர்களால் சொல்லப்படும் விஷயத்திற்கு இங்கு உதாகரணம் சொல்லப்படுகிறது. ஆத்மா என்பது குணி என்றும் அதில் புத்தி, சுகம், துக்கம், ஞானசக்தி என்பதெல்லாம் அந்த ஆத்மாவிற்கு குணம் என்றும் குணியான ஆத்மா என்பது குணங்களுக்கு உபாதானகாரணம் என்று தார்க்கிகர்களால் சொல்லப்படுகிறது. எப்படி வஸ்திரத்திற்கு நூல் என்பது உபாதானமாகிறதோ அதுபோல் சேதனனான ஆத்மா புத்தி முதலானவைகளுக்கு உபாதானமாக இருக்கிறது என்று சொல்கிறார்கள். ஆகவே அசேதனவஸ்துக்களுக்கு சேதனம் உபாதானமாக இருக்கிறது என்று ச்ருதியினால் தெரிவிக்கப்படும் விஷயத்தில் பொருந்தாதது ஏதுமில்லை.

**547. அவதாரிகை :**

ஆகையால் 'யதோவா' என்ற வாக்யத்தில் ப்ரஹ்மமென்பது உபாதான காரணம் என்று அனுவாதம் செய்து சொல்லப்படுவது பொருத்தம்தான் என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை ஒருமுடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

आकांक्षादिर्विद्यते योग्यतान्ता यस्मादस्मिन्नागमाज्जायमाने ।
सामग्री या वैदिकैरस्य दृष्टा तस्माद्युक्ता योनिता चेतनस्य ॥

**ச்லோகார்த்தம் :** ஆகாங்க்ஷாமுதல் யோக்யதைவரை எந்தஸாமக்ரியையானது ஞானம் ஏற்படுவதற்கு காரணமாக மீமாம்ஸகர்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறதோ அது இந்த வாக்யத்தில் இருக்கின்றது. ஆகையால் சேதன வஸ்துவே உபாதானம் என்று சொல்லப்படுவது பொருந்தக் கூடியதேயாகும்.

இவ்விதம் 'யதோவா' என்ற வாக்யத்தினுல் எந்த சேதனவஸ்துவை ஜகத்திற்கு உபாதானமாகச் சொல்லப்படுகிறதோ அந்த வாக்யம் ஆகாங்க்ஷை முதலான ஸாமக்ரியை யுடையதாக இருக்கின்றதால் ஜகத் உபாதானத்வம் சேதனனுன ப்ரஹ்மத்திற்கு சொல்லப்பட்ட விஷயம் வைதிகத்ருஷ்ட்டியிலும் பொருத்தமே என்று சொல்லப்பட்டது. இந்த விஷயத்தைப்பற்றி ஸூத்ரபாஷ்யத்தில் அவிரோதா அத்யாயத்தில்தானே விசாரிக்கப் பட்டிருக்கிறது? அவ்விதம் இருக்கின்றபோது இங்கு இந்த விஷயம் பற்றி முதல் அத்யாயத்திலேயே விசாரிக்கப்பட வேண்டிய அவஸ்யம் என்ன?

**சித்தா :** இந்த இடத்தில் ஜகத்காரணத்தைப் பற்றி விசாரிக்கப்படுகின்றதால் அதற்கு அனுகூலமாக இந்த விஷயம்பற்றியும் விசாரிக்கப்பட்டது. மேலும் 'யதோவா' என்ற வாக்யத்திலுள்ள பதங்களுக்கு அன்வயயோக்யதை இருக்கிறது என்று தெரிவிப்பதற் காகவே, ஆக்ஷேபத்தையும் ஸமாதானத்தையும் இங்கு சொல்லப் பட்டிருக்கிறது. இந்த முறையில் வேதாந்தவாக்யங்களும் அதன் முக்யார்த்தத்தை போதிக்கலாம் என்பதால் அசேதனமான இந்த ஜகத்திற்கு சேதனமான ப்ரஹ்மமே உபாதான காரணம் என்பதையே இந்தவாக்யம் போதிக்கின்றது.

**548. அவதாரிகை:**

ஆகையால் 'யதோவா' என்றவாக்யம் அறியப்படவேண்டிய ப்ரஹ்மசைதன்யத்தை தெரிவிப்பதற்கு தடஸ்த்தலக்ஷணமாகசொல்லப்பட்ட வாக்யமேயாகும். ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அனுமான ப்ரமாணத்தைக்கொண்டு இந்த வாக்யம் போதிக்கின்றது என்று சொல்வது சரியல்ல.

**ச்லோகம் :**

तस्मादेतल्लक्षणं चिह्नमाहुर्नैतत्तस्मिन् ब्रह्मणि स्यात्प्रमाणम् ।
आम्नायस्य स्वप्रधानत्वहेतोर्लिङ्गस्यास्मिञ्छेषभावाच्च नित्यम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆகையால் இந்தலக்ஷணம் உபலக்ஷணமென்றே சொல்லப் படுகிறது. இது ப்ரஹ்மத்திற்கு ப்ரமாணமாக ஆகாது. ஏனெனில் வேதம் ஸ்வத: ப்ரமாணமாகவே இருக்கிறது. கார்யலிங்கமானது எப்போதும் வேதவாக்யத்தை ஆச்ரயித்தே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'யதோவா' என்ற வாக்யமானது அனுமானம் என்றப்ரமாணத்தைக் கொண்டு ப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவது சரியல்ல. ச்ருதியானது தன்னுடைய அர்த்தத்தை ஸ்வயமே தெரிவிக்க முடியாது என்றும் அனுமானத்தை அபேக்ஷித்தே தன்அர்த்தத்தை தெரிவிக்கவேண்டும் என்றும் சொல்லப்படுமானுல் ச்ருதியென்பது ப்ரமாணமென்றே சொல்லமுடியாது. ஆகையால் அபௌருஷேயமானதால் ச்ருதியென்பது ஸ்வதப்ராமாண்யம் உடையது என்றே சொல்லவேண்டும். ச்ருதிக்கு அனுகூலமானதர்க்கங்களை அவஸ்யமானுல் உபயோகித்துக்கொள்ளலாம். ஆகவே ச்ருதிக்கு அங்கமாகவே தர்க்காதிகள் இருக்கின்றதேயன்றி தர்க்கத்திற்கு அங்கமாகச்ருதி இருப்பதாகச்சொல்லமுடியாது. ஆகவே ப்ரஹ்மஸ்வரூபத்தை அறியவிரும்புகின்ற முமுக்ஷுவிற்கு 'யதோவா' என்ற வாக்யம், ஜகத்காரணத்வம் என்பதை ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகவே தெரிவிக்கின்றது. அதனுல் அனுமானத்தைக் கொண்டு ப்ரஹ்மஸ்வரூபம் போதிக்கப்படவில்லை. லக்ஷணம் என்ற சப்தம் சில இடத்தில் ப்ரமாணம் என்ற அர்த்தத்தில் உபயோகிக்கிப்படுவதால், இந்த இடத்தில் லக்ஷணம் என்ற

சப்தம் லக்ஷணத்தையே குறிக்கின்றதேயன்றி ப்ரமாணத்தை குறிப்பிடவில்லை என்று தெரிவிப்பதற்காகவே ச்லோகத்தில் 'சின்னம்' என்ற பதம் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. ஆம்னாயம் (வேதம்) என்பது வேறு எந்த ப்ரமாணத்தையும் அபேக்ஷிக்காமல் தன்னுடைய அர்த்தத்தை தெரிவிக்கக்கூடிய சக்தி உடையது என்பதால் 'ஸ்வப்ரதானம்' என்று வேதம் ஒன்றுக்கே சொல்லமுடியும். அபௌருஷேய மாகவும், அதீந்த்ரிய விஷயத்தை போதிக்கக் கூடிய சக்தி உடையதாகவும் இருக்கின்ற ஆகமத்திற்கு புருஷபுத்தியைக்கொண்டு வ்யாப்தி முதலான ஸஹாயங்களை கொண்டு அனுமானிக்கப்படுகிறது என்று சொல்லப்படுவது வைதிக சித்தாந்தத்திற்கு பொருந்தாது.

**பூர்வ :** ஈச்வரன் என்பதே அனுமானத்தினால்தான் சித்திக்கவேண்டும். அந்த ஈச்வரனால் சொல்லப்பட்ட வேதத்திற்கு அனுமானத்தின் அபேக்ஷை இல்லை யென்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் பூர்வமீமாம்ஸையில் ப்ரதம பாதத்திலேயே விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும் இந்த க்ரந்தத்திலேயும் மேலும் விசாரிக்கப் போகிறோம். அனுமானம் என்பது வேதவாக்யங்களினால் தெரிவிக்கப்படும் அர்த்தத்திற்கு ஸஹாயமாக சொல்லப்படுகின்றதால் வேதம் என்பதற்கு அனுமானம் என்பது அங்கமென்றே சொல்லவேண்டும். அதீந்த்ரியமான விஷயத்தை போதிக்கின்ற வேதமானது அனுமானத்திற்கு அங்கமென்று சாதிப்பதற்கு யாராலும் முடியாது.

**549. அவதாரிகை:**

சிருஷ்டியை தெரிவிக்கின்ற வாக்யங்கள் எல்லாம் ஒரேவிதமாக இல்லாமல், ஒவ்வொன்றிலும் வெவ்வேறு விதமாக ஆரம்பிக்கப்பட்டிருக்கின்ற காரணத்தினால், சிருஷ்டியைப் பற்றி தெரிவிப்பதில் வேதாந்தத்திற்கு தாத்பர்யம் கிடையாது. ஆகையால் கீழே சொல்லப்பட்டபடி ப்ரஹ்ம தத்வத்தை போதிப்பதில் தான் வேதவாக்யங்கள் தாத்பர்யமுடையதாக இருக்கிறது.

**ச்லோகம் :**

इत्थं जगत्कारणवादिवाक्यं समन्वितं ब्रह्मणि तत्पदार्थे ।
तल्लक्षणं तस्य तटस्थभूतमानन्त्यसिद्ध्यै कथयद्यथोक्तम् ॥

**ச்லோகார்த்தம் :** இந்தவிதம் முன்னால் சொல்லப்பட்ட உபலக்ஷணரூபமான அந்த ப்ரஹ்மலக்ஷணமானது 'ப்ரஹ்மத்தின் அனந்தத்வம் சித்திப்பதற்காகவே' என்று சொல்லப் படுவதன் மூலம் ஜகத்காரணத்தைதெரிவிக்கின்ற வாக்யங்கள் தத்பதலக்ஷ்யார்த்தமான ப்ரஹ்மத்தினிடம் ஸமன்வயிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'யதோவா' என்ற வாக்யம், தத்பதார்த்தமான ப்ரஹ்மவஸ்து அபரிச்சின்னம், அனந்தம் என்று தெரிவிப்பதற்காகவே, ஜகத்காரணத்வம் என்பதை ப்ரஹ்மத்திற்கு தடஸ்த்தலக்ஷணமாக தெரிவித்து ப்ரஹ்மதத்வத்தை போதிக்கின்றது. இந்தவித லக்ஷணத்தினால் மூன்றுவிதமான பரிச்சேதரஹிதம் ப்ரஹ்மமென்று, பரிச்சேதமுள்ள மற்ற வஸ்துக்களிலிருந்து வ்யாவ்ருத்தி செய்து தெரிவிக்கின்றது. ஆகவே ஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு உபலக்ஷணமாகவே சொல்லப்படுகிறது. இந்த விதம் ப்ரஹ்மதத்வத்தை போதிப்பதில் இந்த வாக்யம் (இந்த முறையில்)ஸமன்வயத்தை அடைகிறது. அனந்தம் ப்ரஹம என்று சாதித்து கொடுப்பதில் இந்தலக்ஷணம் தடஸ்த்தமாக இருந்து லக்ஷ்யமான ப்ரஹ்மத்தைபோதிக்கின்றதால் ப்ரஹ்மஸம்பந்த முடையதாக ஆகிறது. இந்தவிதம் விசாரிக்கப்பட்டமுறையில் ஜகத்திற்கு உபாதான காரணம் ப்ரஹ்மமென்று சித்தம் செய்யப்பட்டது.

**550. அவதாரிகை :**

ஜகத்திற்கு உபாதான காரணம் ப்ரஹ்ம மென்று சித்திக்கிறது என்ருலும் நிமித்தகாரணம் என்னவென்று சித்திக்காவிடில் விசித்ரமான இந்த ஜகத் எப்படி உண்டாயிற்று என்று சொல்வதற்கே முடியாது. ஆகவே விசித்ரமான இந்த ஜகத் ப்ரஹ்மத்திலிருந்து எப்படி உண்டாகமுடியும்? முடியாது என்பதால் நிமித்தகாரணம் எப்படி சித்திக்கின்றது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स्वात्मानमेव जगतः प्रकृतिं यदेकं सर्गे विवर्तयति तत्र निमित्तभूतम् ।
कर्माकलय्य रमणीयकपूयमिश्रं पश्यन् नृणां परिवृढं तदितीर्यमाणम् ॥

**ச்லோகார்த்தம் :** அத்விதீய ப்ரஹ்மமானது சிருஷ்டி காலத்தில், சிருஷ்டிக்கு நிமித்தமாக இருக்கின்ற புருஷர்களின் பாபம் புண்யம் மிச்ரம் என்ற மூன்றையும் ஸஹகாரியாகக் கொண்டு தன்னேயே ஜகத்திற்கு உபதானமாகக்கொண்டு விவர்த்தமாக சிருஷ்டிக்கின்றது என்று இவ்விதம் லக்ஷணம் சொல்லப்படுவதன் மூலம் இந்த வாக்யங்கள் ப்ரஹ்மத்தினிடம் ஸமன்வயத்தை அடைகின்றது.

**வ்யாக்யானம் :** ஜீவர்களின் புண்யம், பாபம், புண்யபாபமிச்ரம் என்ற மூன்று விதமான தர்மங்களே அனுசரித்து அவரவர்கள் எந்தெந்த போகங்களே அனுபவிக்க வேண்டுமோ அவைகளேயெல்லாம் ஆலோசித்து, ஒன்றுக்கொன்று மாறுபடாத முறையில் இந்தஜகத் என்பது சிருஷ்டிக்கப்படுகிறது. ப்ரஹ்மஸ்வரூபத்திலுள்ள மாயாசக்தியினுலேயே இந்தவிதமான ஜகத்தோற்றுவிக்கப்படுகிறது. இந்த விஷயத்தைப்பற்றியே ச்ருதிவாக்யம் 'ததாத்மானம் ஸ்வயமகுருத' என்று தெரிவிக்கின்றது. ஆகவே ஏகம் அத்விதீயமான ப்ரஹ்மமே சிருஷ்டிகாலத்தில் ஜீவர்களின் மூன்று விதமானகர்மாக்களே அனுசரித்து அவரவர் போகத்திற்கு தகுந்தவாறு தன்னுடைய மாயா சக்தியினுல் தன்னேயே உபாதானகாரணமாகக்கொண்டு இந்த ஜகத்தை சிருஷ்டிக்கின்றது. ஸர்வஞ்ஞத்வம் ஸர்வசக்தித்வம், நித்யத்வம் முதலான ஸ்வபாவமுள்ள ப்ரஹ்மமே இந்த ஜகத்திற்கு நிமித்தோபாதானமாக ஆகிறது என்பதையே இந்தலக்ஷணவாக்யம் போதிக்கின்றது. அதனுல் இந்த வாக்யம் ப்ரஹ்மத்தில்ஸமன்வயத்தை அடைகின்றது.

**551. அவதாரிகை :**

'ஜன்மாத்யஸ்ய யத:' என்ற ஸூத்ரத்தினுலேயே ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு நிமித்தோபாதான காரணம் என்று தெரிவிப்பதனுலேயே 'அகண்டம் ப்ரஹ்ம' என்று வாக்யார்த்தம் சித்திக்கின்றது. அதனுல் அதற்குப்பிறகு 'தத்து ஸமன்வயாத்' என்ற ஸூத்ரம் சொல்லப்படுவதற்கு அவஸ்யம் என்ன? ஆகையால் இந்த ஸூத்ரம் தேவையில்லே என்ற ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

पदवृत्तिसमन्वयावुभौ प्रतिपाद्यौ प्रथमे हि लक्षणे ।
तदवान्तरवाक्यवर्त्मना पदवृत्तिः प्रथमं प्रकीर्तिता ॥

**ச்லோகார்த்தம் :** தத்த்வம் என்ற பதங்களுடைய வ்ருத்தியும் (அர்த்தமும்) தத்வமஸி என்ற மஹாவாக்யத்தின் தாத்பர்யமும் ப்ரஹ்மஸூத்ரத்தின் முதல் அத்யாயத்தில் சொல்லப்படவேண்டியதாக இருக்கிறது. ஆகையால் அவாந்தர வாக்யவிசாரத்தின் மூலம் பதங்களின் தாத்பர்யம் முதலில் சொல்லப்பட்டது.

**வ்யாக்யானம் :** இது வரை 'ஜன்மாத்யஸ்ய யத:' என்ற சூத்ரம், 'யதோவா' என்ற ச்ருதிவாக்யம் எல்லாம் அகண்டமான ப்ரஹ்மத்தில் ஸமன்வயத்தை அடைகிறது என்று சொல்லப்பட்டது. மேலும் வேதாந்த வாக்யங்கள் எல்லாமே ப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் ஸமன்வயத்தை அடைகிறது என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் விளக்கப்பட்டபிறகு 'ஆனந்தமயோப்யாஸாத்' என்பது முதலான சூத்ரங்களைக்கொண்டு, இவையெல்லாம் எந்தகாரணத்தினுல் ப்ரஹ்மத்தில் ஸமன்வயத்தை அடைகிறது என்பதைப்பற்றி ஒவ்வொரு அதிகரணத்திலும் பின்னுல் தான் விளக்கப்படவேண்டுமேயன்றி முன்னுல் விளக்கவேண்டிய அவஸ்யம் என்ன? மேலும், ஜன்மாதி சூத்ரத்தைக்கொண்டு ஜகத்காரணத்வம் என்பது 'யதோவா' என்றவாக்யத்தினுல் போதிக்கப்பட்டமுறையில் ப்ரஹ்மத்தில் ஸமன்வயம் சொல்லப்பட்டது. அதுமட்டுமின்றி, அத்விதீயமான ப்ரஹ்ம வஸ்துவில்தான் ஸர்வவேதாந்தங்களும் ஸமன்வயத்தை அடைகிறது என்று ஸமன்வய சூத்ரத்தினுல் விளக்கப்பட்டபிறகு 'ஆனந்த மயோப்யாஸாத்' என்ற சூத்ரம் சொல்லப்படவேண்டிய அவஸ்யம் என்ன? என்ற ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

முதல் அத்யாயத்தில் பதார்த்தம் என்ன? வாக்யார்த்தம் என்ன? என்று நிரூபணம் செய்யப்படவேண்டும். பதத்திற்கு லக்ஷ்யார்த்தம் என்னவென்று சொன்னுல்தான் வாக்யார்த்தம் பொருந்தும். 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம' என்றவாக்யம் போலவே, 'ஜன்மாத்யஸ்ய யத:' என்ற சூத்ரத்தை விளக்குகின்ற 'யதோவா' என்ற அவாந்தர வாக்யமான லக்ஷணவாக்யம், விசிஷ்டஸ்வரூபத்தை அர்த்தமாகக்கொள்ளாமல் உபலக்ஷணஸ்வரூபத்தையே அர்த்தமாக தெரிவிக்கவேண்டுமென்று தடஸ்த்த லக்ஷணத்தினுல், ப்ரஹ்மஸ்வரூபம் நிரூபணம் செய்யப்பட்டது.

**552. அவதாரிகை :**

ஜீவனை உத்தேசித்து (ஈச்வரன்) தத்பதார்த்தம் விதிக்கப்படவேண்டும். அதனுல் முதலில் உத்தேச்யமான த்வம்பதார்த்தம்தானே விதிக்கப்படவேண்டும்? என்று கேட்கப்படுவது சரியே, ஸத்யம். ஆனுல் த்வம்பதார்த்தம் பற்றி முதல் சூத்ரத்திலேயே விசாரிக்கப்பட்டிருக்கிறது.

**ச்லோகம்:**

आद्ये सूत्रे त्वंपदस्योदितत्वाद्वृत्तेरस्मिंस्तत्पदस्योच्यमाना ।
वृत्तिर्ज्ञेया तत्पदार्थेऽद्वितीये प्रत्यङ्मात्रे त्वंपदस्योदितैव ॥

**ச்லோகார்த்தம் :** முதல் சூத்ரத்தில் த்வம்பதத்தின் வ்ருத்தியை (அர்த்தத்தை) சொல்லப்பட்டிருக்கின்றதால், இந்த இரண்டாவது சூத்ரத்தில் தத்பதத்தின் வ்ருத்தி சொல்லப்பட்டிருக்கின்றதென்று அறிந்து கொள்ளவேண்டும். அத்விதீயமான ப்ரஹ்மத்தில் தத்பதார்த்த வ்ருத்தியும், ப்ரத்யகாத்மாவில் த்வம்பதார்த்தத்தின் வ்ருத்தியும் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** ஜிஞ்ஞாஸா சூத்ரமென்று சொல்லப்படும் முதல், சூத்ரம், 'அதாதோ ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்று த்வம்பதார்த்தமான ஜீவனை அத, அத: என்ற இரண்டுபதங்களினுலும் தெரிவிக்கின்றது. ஒரு 'அத' சப்தம் ஸாதன சதுஷ்ட்டயங்களை அனுஷ்டித்தபிறகு என்ற அர்த்தத்தையும், அத: என்ற சப்தத்தினுல் ஸாதன சதுஷ்ட்டய ஸம்பன்னனுன அதிகாரியை தெரிவிக்கின்ற வ்யாஜத்தினுல் த்வம்பதார்த்தமான ஜீவனையே தெரிவிக்கின்றது. அதன்பிறகு துக்கநிவர்த்திக்காக 'நீயேப்ரஹ்மமென்று அறிந்து கொள்' என்று

உபதேசிக்கின்றது. ஜீவனுக்கு ப்ரஹ்மபாவம் என்பது, உபாதியை நீக்கயத்வம் பதார்த்தத்தில்தான்ஸம்பவிக்கும். ஆகவே த்வம்பதார்த்தம் என்பது விசிஷ்டார்த்த மில்லே. த்வம்பதலக்ஷ்யார்த்தம்தான் என்பதை சூத்ரத்திலுள்ள பதங்களினுலேயே விளக்கப்பட்டிருக்கிறது. இந்தவிதம் த்வம்பதார்த்தத்தை முதல் சூத்ரத்தில் தெரிவிக்கப்பட்டதால், இரண்டாவது சூத்ரத்தில் சொல்லப்பட்ட பதவ்ருத்தியைக் கொண்டு ஸஜாதீயம் முதலான மூன்று வித பேதங்களும் அற்றதான தத்பதார்த்த லக்ஷ்யஸ்வரூபமான அத்வைதஸ்வரூபமே சொல்லப்படுகிறது. த்வம்பதத்திற்கு சரீரத்தில் ஆந்தரமாக இருக்கின்ற ப்ரத்யக் ஸ்வ்ரூபத்தினே, ஸர்வாந்தரமானஸ்வரூபம் என்று (த்வம் பதவருத்தியைக்கொண்டு) தெரிவிக்கப்படுகிறது. ஆகவே, தத்பதம் த்வம்பதம் என்ற இரண்டிற்கும் உபலக்ஷணத்தினுல் தெரிவிக்கப்பட்ட லக்ஷ்யார்த்தத்தினுல் அபேதார்த்தம் என்பது சித்திக்கின்றது. இந்தவிதம் சூத்ரங்கள் க்ரமமாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

**553. அவதாரிகை:**

த்வம்பதத்திற்கு ப்ரத்யக்சைதன்யத்தில்தான் பதவ்ருத்தி (சக்தி) என்று சொல்லப்படுமானுல், சுத்தசைதன்யத்திற்கு அதிகாரித்வம் என்பது எப்படி ஸம்பவிக்க முடியும்? அதனுல் அதிகாரி என்று சொல்லப்படுமானுல் ப்ரத்யக்சைதன்யம் என்று சொல்லமுடியாது. ப்ரத்யக்சைதன்யம் என்ருல் அதிகாரித்வமான ஸாதனஸம்பத்திஸம்பவிக்க முடியாதே? என்ருல்,

**ச்லோகம் :**

अनधिकारिणि शुद्धचिदात्मके दृगदृशोरितरेतरविभ्रमात् ।
शमदमादिसमन्विततेष्यते भवति तेन चितोऽप्यधिकारिता ॥

**ச்லோகார்த்தம் :** சுத்தசைதன்யஸ்வரூபமான ப்ரத்யகாத்மா என்பதற்கு அதிகாரித்வம் ஸம்பவிக்கமுடியாது என்ருலும், ஆத்மானுத்ம அவிவேகத்தினுல் சைதன்யத்திற்கு ஸமதமாதிகள் இருப்பதாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. அதனுல் சைதன்யத்திற்கு அதிகாரித்வம் ஏற்படலாம்.

**வ்யாக்யானம் :** சுத்தசைதன்யமான ஆத்மஸ்வரூபத்தில் ஸமம்தமம் முதலான ஸாதனஸம்பத்தி இருக்கமுடியாது என்பது சரியே. ஆனுல் அசேதனமான புத்தியென்பதற்கோ, அல்லது புத்திக்கு காரணமான அஞ்ஞானம் என்பதற்கோ, ஸ்வயமே விஷயவிஞ்ஞானம் ஏற்படுகிறதென்று சொல்லமுடியாது. அதனுல் சேதனனுக்கே கர்த்ருத்வம் சொல்லவேண்டும். சித், ஜடம் என்ற இரண்டிற்குமுள்ள பரஸ்பர அத்யாஸத்தினுல் சேதனனே ஆத்மாவிற்கு அதிகாரித்துவம் ஏற்படுவதற்கு உரியதன்மையை ஜடமான அஞ்ஞானம் என்பது பொருந்தும்படிச்செய்கின்றது. ஜடமான அஞ்ஞானத்திற்கோ அதன்ஸம்பந்தத்திற்கோ கர்த்ருத்வசக்தி இருக்கிறதென்று சொல்லமுடியாது. அதனுல் சேதனனுக்கே அதிகாரித்வம் சொல்லப்படுகிறது. ஸ்வயமே கர்த்ருத்வாதிகள் இருப்பதாகச்சொல்லப்படவில்லே. இந்த விஷயத்தைப்பற்றியே 'கர்த்தா சாஸ்த்ரார்த்தத்வாத்' என்ற பூர்வபக்ஷ சூத்ரத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது. கேவல ஜடமோ, கேவல சைதன்யமோ கர்த்தா அல்ல என்று சொல்லப்படுமானுல் கர்ம காண்டவிஷயங்கள் வ்யர்த்தம் என்ருகும், அப்ரமாணம் என்று சொல்லநேரிடும். அதனுல் ஆத்மாவே கர்த்தா என்று சொல்லவேண்டும் என்று முதலில் தெரிவித்து, அதன்பிறகு கர்த்ருத்வம் முதலானவைகள் ஆத்மாவில் ஆரோபிதம் என்று இந்தவிஷயம்பற்றி விசாரித்து தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

**554. அவதாரிகை:**

அஸங்கமாகவும், நித்யமுக்தமாகவும் இருக்கின்ற சிதாத்மஸ்வரூபத்தில் ஸமதமாதிகள் ஸ்வயமே இருக்க முடியாது என்றால், அத்யாஸத்தினால் ஸமதமாதிகள் எப்படி ஏற்படமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

अनधिकारितया दृगवस्थिता स्वरसतःपरमेश्वरविग्रहा ।
घनतमः पटलावरणान्वयादुपगता श्रवणाद्यधिकारिताम् ॥

**ச்லோகார்த்தம் :** சைதன்யமானது ஸ்வரூபத்தினால் பரமாத்மாவாக இருக்கின்றது என்பதால் அனதிகாரியாகவே இருக்கின்றது. ஆனால் காட அந்தகாரமான திரைபோல் இருக்கின்ற அஞ்ஞானஸம்பந்தத்தினால் ச்ரவணாதிகளில் அதிகாரித்வம் உடையதாக ஆகின்றது.

**வ்யாக்யானம் :** பரமாத்மஸ்வரூபமே ப்ரத்யக்ஸ்வரூபமானதால் ப்ரத்யகாத்மாஎன்பது ஸ்வயமே அஸம்ஸாரிதான். ஆனால் கும்மிருட்டைப் போன்ற அஞ்ஞானம் என்பது, த்ருக் ஸ்வரூபமான ஆத்மாவை மறைக்கின்றது. உதாரணமாக, பார்க்கின்ற சக்தி கண்ணிற்கு இருந்தபோதிலும் அந்த கண்கள் மாமிஸ தோலினால் மறைக்கப்படுகின்றபோது வஸ்துக்களைப்பார்க்க முடிவதில்லை. அதுபோல் ஆத்மாவில் ஆரோபிதமான அஞ்ஞான ஸம்பந்தத்தினால் ஆத்மாவிற்கு அதிகாரித்வம் இருப்பது போல் ஆரோபம் செய்யப் படுகிறது. அதனால் ஆத்மாவிற்கு அதிகாரித்வம் ஸம்பவிக்கிறதாகச் சொல்லப்படுகிற தேயன்றி உண்மையில் நித்யமுக்த அஸங்க சிதாத்மஸ்வரூபத்தில் அதிகாரித்வம் முதலான எதுவுமே ஸம்பவிக்க முடியாது.

**555. அவதாரிகை:**

ப்ரத்யகாத்மாவான சுத்தசைதன்யத்திற்கு அத்யாஸத்தினால் அதிகாரித்வம் ஸம்பவிக் கின்றதாகச்சொல்லப்படுமானால், ஜடமானலிங்கசரீர விசிஷ்டஸ்வரூபத்திற்கே அதிகாரித்வம் சொல்லப்பட்டதாகஆகிறது. சேதனனுக்கு ஜடஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுமானால் சேதனனும் ஜடமென்றே சொல்லநேரிடும். அவ்விதம்சொல்லப்படுமானால், ஜடஸ்வரூபத்திற்கு வித்யையினால் முக்தி என்பது எப்படி ஏற்படமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

अज्ञानतज्जघटना चिदधिक्रियायां द्वारं परं भवति नाधिकृतत्वमस्याः ।
नाचेतनस्य घटतेऽधिकृतिः कदाचित् कर्तृत्वशक्तिविरहादिति वक्ष्यते हि ॥

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானம் என்பதும் அதன் கார்யம் என்பதும் சைதன்யத்தில் அதிகாரித்வம் ஏற்படுவதற்கு நிமித்தமாத்ரமாக இருக்கிறது. அதனால் அசேதனமான அவைகளிடத்திலும் கர்த்ருத்வ சக்தி இல்லாததால் அவைகளுக்கும் அதிகாரித்வம் என்பது ஒருபோதும் ஸம்பவிக்கமுடியாது என்பதை சூத்ரக்காரராலேயே பிறகு சொல்லப்பட்டிருக் கிறது.

**வ்யாக்யானம் :** சின்மாத்ரமான ஆத்மஸ்வரூபத்திற்கு மட்டும் அதிகாரித்வம் ஸம்பவிக்கின்றது என்று சொல்லமுடியாது. அதனால் அஞ்ஞானம், அதன் கார்யமான அந்தःகரணம் என்ற இவைகளின் ஸம்பந்தத்தின் மூலமாகவே அதிகாரித்வம் ஸம்பவிக்கின்றது. ஆனாலும் அஞ்ஞானம் அதன் ஸம்பந்தம் என்பதெல்லாம் சிதாத்மாவிற்கு விசேஷணமாக சொல்லப்படவில்லை. அஞ்ஞானத்தின் மூலமாக அதிகாரித்வம் ஆத்மாவிற்கு

ஸம்பவிக்கின்றது என்று சொல்லப்படுவதால், கேவலஜடத்திற்கும் அதிகாரித்வம் சொல்லமுடியாது. செய்யப்படவேண்டியது என்ன? செய்யக்கூடாதது என்ன என்ற (அதிக்ருதத்வம்) ஞானம், ஜடத்திற்கு ஏற்படாது. ஆகையால் ஜடமான அந்த:கரணத்திற்கு கர்த்தா என்று, 'கர்த்தா சாஸ்த்ரார்த்தத்வாத்' என்ற சூத்ரத்தில் வ்யாஸரால் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல, அதற்கு முன்பே 'ரசனுனுபத்தேச்ச ந அனுமானம்' என்ற சூத்ரத்தினுல் அசேதனத்திற்கு கர்த்ருத்வம் ஸம்பவிக்கமுடியாது என்பதையும் சொல்லப்பட்டிருக்கிறது.

**556. அவதாரிகை :**

'அதாதோ ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா'என்ற முதல் சூத்ரத்தில் சொல்லப்படும் 'அத' சப்தமானது 'கர்மகாண்ட விஷயங்களை அறிந்து அந்தகர்மாக்களைச் செய்து அதன்பிறகு' என்று கர்மானந்தரம் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதனுல் 'அத' சப்தம் ஸாதன சதுஷ்ட்டயஸம்பத்தி அனந்தரம் என்று அதிகாரியைப் தெரிவிப்பதாகச் சொல்வது சரியல்ல என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம்:**

उपसत्तिवाक्यमधिकारिणि यत् कथितं समन्विततया प्रथमम् ।
इदमेव चेतसि निधाय तु तत् मुनिना प्रकीर्तितमुदारधिया ॥

**ச்லோகார்த்தம் :** குரு உபஸதன வாக்யமானது அதிகாரியினிடத்தில் ஸமன்வயிக்கப் படுகிறது என்று முதலில் சொல்லப்பட்டதை மனதில் கொண்டு மஹான் வ்யாஸமுனிவரால் முதல் சூத்ரம் இயற்றப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யக்சைதன்யத்திற்கு அதிகாரித்வம் என்பது அஞ்ஞானத் வாரா ஏற்படுகிறது என்று சொல்லப்பட்டது. அதனுல் அதிகாரியை நிரூபணம் செய்வதன் மூலமாக முதல் சூத்ரம் த்வம்பதார்த்தம் பற்றியே தெரிவிக்கின்றது என்று சொல்லப்பட்டது பொருத்தமாகவே இருக்கிறது. ஆனுல் இவ்விதம் அர்த்தம் செய்யப்படுவதற்கு ப்ரமாணம் என்ன? எந்தக்காரணத்தைக்கொண்டு முதல் சூத்திரத்திற்கு இவ்விதம் அர்த்தம் செய்யப்படுகிறது? என்ருல், 'அதாதோப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தில் 'அத' என்றும் 'அத:' என்றும் இரண்டு சப்தங்கள் சொல்லப்பட்டிருக் கின்றது. இந்த இரண்டு அதசப்தங்களும் அதிகாரியைத்தான் தெரிவிக்கின்றது. 'ப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்றபதங்களினுல் 'தத்விஞ்ஞாஸஸ்வ, தத்ப்ரஹ்மேதி' என்று ப்ரஹ்ம விசாரம் விதிக்கப்படுகிறது. விசாரம் செய் என்று யாரை குறிப்பிட்டுத் தெரிவிக்கின்றதோ (நியோஜ்யனை) அவனே அதிகாரியாக இருக்க வேண்டும். அதனுல் 'அதாதோ' என்ற இரண்டு சப்தங்களினுல் ஸாதன சதுஷ்ட்டய ஸம்பன்னனை அதிகாரியையே குறிப்பிடப்படுகிறது என்பது 'தத்விஞ்ஞாஸஸ்வ' என்ற உபஸத்திவாக்யத்தினுல் அறியப்படுகிறது. இந்தவிதம் அதிகாரியை தெரிவித்தபிறகே 'ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்று ப்ரஹ்மத்தை அறிந்து கொள்' என்று ப்ரதமசூத்ரம் தெரிவிக்கின்றது என்று சொன்னுல் தான் பொருந்தும். ஆகையால் த்வம்பதார்த்தம் உண்மையில் உபாதிகள் அற்றஸ்வரூபம் என்பதால், இவைகளையெல்லாம் கருத்தில் கொண்டே வ்யாஸர் சூத்ரம் செய்திருக்கிருர் என்பது நன்கு அறியப்படுகிறது.

தவிர பரீக்ஷ்யலோகான் என்றச்ருதிவாக்யத்திலும் 'தத் விஞ்ஞானுர்த்தம் குருமேவாபிகச்சேத்' என்று உபஸத்தி வாக்யம் தெரிவிக்கின்ற போதே வைராக்யம்

வேண்டுமென்பதையும் அந்த வாக்யமே தெரிவிக்கின்றது. தைத்ரீய வாக்யமும் 'வருணம் பிதரம் உபஸஸார' என்று தெரிவிக்கின்றது. இதனுல் வைராக்யாதி ஸாதன ஸம்பத்தியுடைய சிஷ்யனே குருவின் ஸமீபத்தை அடைந்து வித்யையைப்பெற வேண்டும் என்று விதிக்கின்றது. இதேபோல் 'ப்ரசாந்த சித்தாய ஸமன்விதாய' என்று தெரிவிக்கின்றது. ஆகவே ப்ரஹ்மவிசாரத்திற்கு அதிகாரித்வம் அவஸ்யம், என்பது உபநிஷத்வாக்யங்களாலும் அறியப்படுகிறது. அதனுல் 'அதாதோ' என்ற அத சப்தங்களுக்கு சாதன ஸம்பத்தி அனந்தரம் என்றே அர்த்தம் செய்யப்படவேண்டும். அவ்விதமின்றி ப்ரஹ்ம விசாரத்திற்கு அபேக்ஷிக்கப்படாத கர்மாவைச்செய்தபிறகு ப்ரஹ்மவிசாரம் செய் என்று அர்த்தம் செய்யப்படுவது முற்றிலும் பொருந்தாது. ஆகவே முதல் சூத்ரம் ப்ரஹ்மவிசாரத்தை விதிக்கின்றதனுலேயே அதற்கு உரிய அதிகாரியை தெரிவிக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**557. அவதாரிகை:**

முதல் சூத்ரத்திற்கு இதுவே அர்த்தமென்று வ்யாஸருடைய கருத்தாக இருக்குமானுல் ப்ரதமசூத்ரத்தில் 'தத்விஞ்ஞாஸஸ்வ' என்ற உபஸத்திவாக்யத்தை ஏன் உதாரணமாகச் சொல்லப்படவில்லை? என்ருல்,

**ச்லோகம் :**

शिष्योपसत्तिवचनानि समन्वितानि शिष्ये चिदात्मनि परात्मनि नित्यमुक्ते ।
इत्येतदत्र कथितं मुनिना त्वमर्थे त्वंशब्दवृत्तिकथनाय परे प्रतीचि ॥

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மாவினிடம், த்வம்சப்தவ்ருத்தியை தெரிவிப்பதற்காக சிஷ்ய உபஸதனவாக்யங்கள் சிதாத்மாவாகவும், பரமாத்மாவாகவும் நித்யமுக்தனுகவும் த்வம்பதலக்ஷ்யார்த்தமாகவும் இருக்கின்ற சிஷ்யனிடம் ஸமன்வயிக்கின்றது என்று முதல் சூத்ரத்தில் வ்யாஸமுனிவரால் சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** உபஸத்தி வாக்யமானது பலவிஷயங்களை தெரிவிக்கின்றது. அவ்விதம் இருந்த போதிலும் 'தத் விஜிஞ்ஞாஸஸ்வ' என்ற இடத்தில் அதிகாரியைத்தான் தெரிவிக்கின்றது. ஆகவே இந்தகருத்தையே 'அத' சப்தார்த்தமும் தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். 'தத்விஞ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி' என்று 'ஜிஞ்ஞாஸஸ்வ' என்பதால் ஜீவனையே குறிப்பிடப்படுகிறது. அதனுல் ஸாதனஸம்பத்தி உடையவனே அதிகாரி என்பதையே 'அத' சப்தம் தெரிவிக்கின்றது. ஆகவே த்வம்பதத்திற்கு தாத்பர்யவிஷயம் என்ன என்பதை லக்ஷணையினுல் தெரிவிப்பதற்காகவே, உபாதி விசிஷ்ட்டஸ்வரூபம் மித்யை என்பதை வாக்யம் தெரிவிக்கவேண்டும். அதன் பிறகு வாக்யார்த்தத்தை விசாரிப்பதன் மூலமாக உபாதி பரமார்த்தமில்லை என்று அறியப்படவேண்டும் என்ற விஷயத்தை தெரிவிப்பதற்காகவே முதல் சூத்ரம் சொல்லப்பட்டிருக்கிறது.

**558 அவதாரிகை :**

இவ்விதம் முதலில் த்வம்பதார்த்தம், அதன் பிறகு தத்பதார்த்தம் என்ற இரண்டையும் விசாரித்த பிறகு உபாதிஅற்ற ஸ்வரூபமே, த்வம்பத, தத்பதார்த்தஸ்வரூபம் என்பதை முதல் இரண்டு சூத்ரங்களினுல் விளக்கப்பட்டபிறகு இந்த இரண்டும் ஒன்றே என்று நான்காவது சூத்ரத்தில் வாக்யார்த்தம் சொல்லப்படுகிறது. இந்தவிதம் முதலில் பதார்த்தம் அதன்பிறகு வாக்யார்த்தம் என்று க்ரமமாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

**ச்லோகம்:**

उपसदनवचोविचारमार्गात् त्वमिति पदस्य परात्मनीह वृत्तिम् ।
कथयति भगवान् द्वितीयसूत्रे तदिति पदस्य परात्मनीति भेदः ॥

**ச்லோகார்த்தம் :** முதல் ஸூத்ரத்தில் உபஸதனவாக்யங்களை விசாரிப்பதன் மூலம் த்வம்பதத்தின்வ்ருத்தி பரமாத்மாவில் இருக்கின்றதென்றும், இரண்டாவது ஸூத்ரத்தில் தத்பதத்தின் வ்ருத்தி பரமாத்மாவில் இருக்கின்றதென்றும் பகவான் வ்யாஸர் தெரிவிக்கின்றார். இதுவே இரண்டிற்குமுள்ள பேதம்.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் முதல்ஸூத்ரத்தில் 'அத' சப்தத்தினால் உபஸத்திவாக்யத்தின் மூலம் த்வம்பதார்த்தம் என்ன என்பதை தெரிவித்தபிறகு, 'ஜன்மாத்யஸ்ய யத:' என்ற இரண்டாவது ஸூத்ரத்திலுள்ள 'யத:' என்பது முதலான வாக்யார்த்த விசாரத்தினால் தத்பதார்த்தம் என்ன என்பதை வ்யாஸபகவான் தெரிவிக்கின்றார். இவ்விதம் த்வம் என்றும் தத் என்றும் பதங்களில் பேதம் இருந்த போதிலும் லக்ஷ்யார்த்தத்தில் எந்தவிதமான பேதமும் கிடையாது. கார்யகரணஸங்காதங்களுக்கு விலக்ஷணமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில்தான் த்வம்பதார்த்தத்திற்கு வ்ருத்தி(சக்தி) என்பதையே முதல் ஸூத்ரம் தெரிவிக்கின்றது. இதேபோல் தத்பதார்த்தத்திலும் கேவலஸ்வரூபமே லக்ஷ்யார்த்தமாக போதிக்கப்படுகிறது. இந்த இரண்டு பதங்களினாலும் தெரிவிக்கப்படும் ஸ்வரூபம் ஒன்றே என்று தெரிவிப்பதற்காகவே இந்தச்லோகத்தில் 'பரமாத்மா' என்ற பதத்தை இரண்டிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**559. அவதாரிகை :**

ஸூத்ரங்கள் இரண்டிற்கும் பதவ்ருத்தியை தெரிவிக்கின்றதனால் மட்டும் அர்த்தம் சித்திப்பதாக தெரிவித்து, வாக்யார்த்தம் சொல்லப்படுவது போதுமானதாக ஆகாது. அதனால் வாக்யார்த்தம் என்ன என்பதை யுக்தியுடன் போதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால் வாக்யபேதம் என்ற தோஷம் ஸம்பவிக்கிறதே? என்றால்,

**ச்லோகம் :**

आवृत्या वा तन्त्रवृत्याऽथवेदं सूत्रं युक्तिं वेदवाक्योपयुक्ताम् ।
अप्याचष्टे बृंहणीमन्तरेण स्वार्थे युक्तिं वेदवाक्यं न पुष्टम् ॥

**ச்லோகார்த்தம் :** ஆவ்ருத்தியினாலோ, தந்த்ரவ்ருத்தியினாலோ இந்த இரண்டாவது ஸூத்ரமானது வேத வாக்யத்திற்கு உபயுக்தமானயுக்தியை தெரிவிக்கின்றது. தனக்கு ஸாதகமாக இருக்கின்றயுக்தி இல்லாமல் வேதவாக்யம் தன் அர்த்தத்தை த்ருடமாக தெரிவிக்காது.

**வ்யாக்யானம் :** (அர்த்தாந்தரவிவக்ஷயா புனருச்சாரணமாவ்ருத்தி : பஹ்வர்த்த விவக்ஷயாஸக்ருத்உச்சாரணம் தந்த்ரம்) ஒரே ஒரு முறை உச்சரித்து (உச்சாரணம் செய்து) பல அர்த்தத்தை தெரிவிப்பதே தந்த்ரவ்ருத்தி. ஸூத்ரம் என்பது மிகப்பெரிய விஷயங்களை உள்ளடக்கி சுருக்கமாக தெரிவிக்கின்றது என்பதால் தான் 'ஸூத்ரம்' என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் 'விஸ்வதோமுகம்' என்ற ஸூத்ரலக்ஷணத்தின்படி அதிலுள்ள தாத்பர்யவிஷயத்தை பல விதமாக ஒரே ஸூத்ரம் தெரிவிக்கலாம். இதை தந்த்ரவ்ருத்தி என்று சொல்லப்படும். இந்த தந்த்ரவ்ருத்தியினாலோ அல்லது ஸூத்ரார்த்தத்தை வெவ்வேறு விதமாக விளக்குவதற்காகவோ ஸூத்ரத்தை ஆவ்ருத்தி செய்தும் அர்த்தம் செய்யலாம். இந்த முறையில்

வாக்யத்தின் தாத்பர்யவிஷயம் என்ன என்பதை விளக்குவதற்காக அதற்குரிய யுக்திகளையும் சூத்ரத்தில் சொல்லப்படலாம்.

இந்த சூத்ரங்களினால் ஜீவப்ரஹ்ம அபேதம் போதிக்கப்படுகிறது. 'யதோவா' என்ற ச்ருதிவாக்யமானது நிமித்தோபாதானமாகவும் ஏகம் அத்விதீயமாகவும்இருக்கின்ற ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று தெரிவிக்கின்றது. ஆனால் இந்த விஷயத்தில் மற்ற மதஸ்த்தர்களின் அபிப்ருயம் இதற்கு விபரீதமாக இருக்கின்றது. அதாவது அபின்ன நிமித்தோபாதானமாக ஒரு காரணம் இருக்க முடியாது என்பதை அவர்களால் பலயுக்திகளைக்கொண்டு நிரூபணம் செய்யப்படுகிறது. ஆகவே, அவர்களால் சொல்லப் படுவது சரியல்ல என்று தெரிவிப்பதற்காக சூத்ரத்தை ஆவ்ருத்தி செய்வதனாலோ அல்லது தந்த்ரவ்ருத்தியினாலோ வேறு பலயுக்திகளைக் கொண்டு நிரூபணம் செய்யப்பட்டால்தான் வாக்யார்த்தம் பொருந்தும். ஆகவே 'ஜன்மாத்யஸ்ய யத:' என்ற சூத்ரமானது எதிலிருந்து இந்த ஜகத்தின் உற்பத்தி முதலானவைகள் ஏற்படுகின்றதோ அதுவே ப்ரஹ்மமென்று வாக்யார்த்தம் போதிக்கின்றது. இந்த சூத்ரத்திற்கு இதுவே அர்த்தமென்று சொல்வதற்குரிய காரணம் என்ன என்ற ஸந்தேகம் ஏற்படலாம். அதனால் எவ்வித ஸந்தேகங்களுக்கும் இடமின்றி அபின்னநிமித்தோபாதான காரணம் ப்ரஹ்ம மென்பதை நிரூபணம் செய்யும் பொருட்டு 'ஊர்ண நாபி' முதலான பலத்ருஷ்ட்டாந்தங்களைக் கொண்டும் பலயுக்திகளைக் கொண்டும் சொல்லப்பட்ட விஷயத்தை தீர்மானம் செய்யப்படுகிறது. இவ்விதம் ஜகத்திற்கு ப்ரஹ்மத்தையன்றி வேறு எதுவும் காரணமாக ஆகமுடியாது என்பதை ஆவ்ருத்தியினாலும் தந்தரயுக்திகளாலும் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதம் யுக்திகளைக் கொண்டு நிரூபணம் செய்யாவிடில் வேத வாக்யங்களின் அர்த்தம் பூர்ணமாக அறிந்துகொள்ளமுடியாது.

**560. அவதாரிகை :**

இந்தவிதம் ஜிஞ்ஞாஸாசூத்ரம், ஜன்மாதிசூத்ரம் என்ற இரண்டு சூத்ரங் களினாலும், த்வம்பதார்த்த தாத்பர்யத்தையும் தத்பதார்த்த தாத்பர்யத்தையும் சொல்லப் பட்டது. சாஸ்திரயோனித்வாத் என்ற மூன்ருவது சூத்ரமானது அபேக்ஷிதமான அர்த்தத்தை தெரிவிக்கின்றது. அதன்பிறகு ஸமன்வயசூத்ரத்தினால் மஹாவாக்யார்த்தம் போதிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

त्वम्पदार्थविषयं समन्वयं तत्पदार्थविषयं ततः क्रमात् ।
तस्य शेषमपरं च वर्णयन्नुक्तवानथ महावचोगतम् ॥

**ச்லோகார்த்தம் :** (முதல் சூத்ரத்தில்) த்வம் பதார்த்த ஸமன்வயமும், அதன்பிறகு (இரண்டாவது சூத்ரத்தில்) தத்பதார்த்தஸமன்வயமும் செய்யப்படுகிறது. (அதை மீண்டும் த்ருடப்படுத்துவதற்காக) அதற்குஶேஷமாக மூன்ருவது சூத்ரத்தை தெரிவித்து, அதன் பிறகு (நான்காவதுசூத்ரத்தில்) மஹாவாக்யத்தின் ஸமன்வயத்தை தெரிவிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் முதல் இரண்டு சூத்ரங்களினால் த்வம்பதார்த்தம், தத்பதார்த்தம் என்பதை விளக்கப்பட்டது. ஆனாலும் மூன்ருவது 'சாஸ்த்ரயோனித்வாத்' என்ற சூத்ரத்தினால் தத்பதார்த்தமான ப்ரஹ்மமென்பது ஸர்வஞ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் உடையது என்று தத்பதார்த்தத்திற்கு அங்கமான விஷயத்தைப்பற்றி தெரிவிக்கின்றது. அதாவது ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்று தெரிவிப்பதிலிருந்தே அர்த்தாத் ப்ரஹ்மம்

ஸர்வஞ்ஞும் என்பது சித்திக்கின்றது. இவ்விதம் ஜன்மாதி ஸூத்ரத்திற்குதேவையான ஸர்வஞ்ஞத்வம் என்பது தானே கிடைக்கின்றது என்றாலும் ஸர்வஞ்ஞமான சாஸ்திரம் என்பதே ஈச்வரனிடமிருந்து நிஸ்வாஸம் போல் அனாயாஸமாக வெளிப்படுகிறது என்பதையும் இந்தஸூத்ரத்தின் மூலம் தெரிவிக்கப்படுகிறது. இவ்விதம் சொல்லப் படுகின்றதால் வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்று சித்திப்பதற்கு விரோதம் ஏதுமில்லாமல், ஸர்வவேதங்களுக்கும் உபாதானமாக இருக்கின்றதால் ஸர்வத்தையும் ப்ரகாசப் படுத்துகின்ற ஞானஸ்வரூபம் ப்ரஹ்மமென்று மூன்றாவது ஸூத்ரம், இரண்டாவது ஸூத்ரத்திற்கு அங்கமாக இருந்து சொல்லப்பட விஷயங்களை மேலும் விளக்கமாக போதிக்கின்றது.

**561.அவதாரிகை :**

தத்பதார்த்தத்தை நிரூபணம் செய்வதற்கு தேவையான ஈக்ஷத்யதிகரணம் என்பது ஸமன்வயஅதிகரணத்திற்கு முன்னால் சொல்லப்படவேண்டுமே? என்றால், அவ்விதம் சொல்லப்படவேண்டிய தேவை எதுவுமில்லை. ஏனெனில் ஈக்ஷத்யதிகரணத்தில் உள்ள விஷயம் அறியப்படுவதற்கு முன்பே, ஸமன்வயஸூத்ரத்தினால் மஹாவாக்யார்த்தம் சித்திக்கும். ஆகையால் முன்னால் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை.

**ச்லோக:**

त्वम्पदस्य दृशिवृत्तिमद्वये तत्पदस्य च निवेदयन्मुनिः ।
प्रत्यगद्वयपरं समन्वयं शेषिणं पुनरथाब्रवीत्तयोः ॥

**ச்லோகார்த்தம் :** த்வம்பதத்திற்கு ப்ரத்யகாத்மாவினிடத்திலும் தத்பதத்திற்கு அத்வய ப்ரஹ்மத்தினிடத்திலும் வ்ருத்தி தெரிவிக்கப்பட்ட பிறகு தத்த்வம் பதங்களுக்கு முக்யமான ப்ரத்யகாத்ம ப்ரஹ்ம ஐக்ய விஷயத்தில் ஸமன்வயத்தை பின்னால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** த்வம்பதம் தத்பதம் என்ற இரண்டிற்கும் முறையே ப்ரத்யக் சைதன்யம் என்றும், அத்வயஸ்வரூபமான ப்ரஹ்மமென்றும் அர்த்தம் போதிக்கப்பட்டது. இவ்விதம் இந்த இரண்டு ஸூத்ரங்களினால் சொல்லப்பட்ட ப்ரதானமான த்வம்பதார்த்தம், தத்பதார்த்தம் என்ற இரண்டிற்கும் அபேதம் என்பதை போதிப்பதற்காக அதற்கு தேவையான மஹாவாக்யம் போதிக்கப்படவேண்டும். அதற்காக வ்யாஸபகவான் நான்காவது ஸூத்ரத்தை இயற்றி அதன்மூலம் அத்வைதம் தத்வம் என்பதை போதிக்கின்றார். பதார்த்தஞானத்தினால் மட்டும் அஞ்ஞானம் நிவர்த்திக்காது வாக்யார்த்த ஞானத்தினால் தான் அஞ்ஞானம் நிவர்த்திக்கப்படும். அதனால் ப்ரதானமாக வாக்யார்த்த ஞானத்தினால் தான் அஞ்ஞான நிவர்த்தி என்ற பலம் ஏற்படுகிறது என்பதால் வாக்யார்த்த ஞானம் முக்யமாக தேவைப்படுகிறது. ஆகவே, பதங்கள் ஸேஷம், வாக்யம் ஸேஷி—ஆகவே ஜீவப்ரஹ்ம ஐக்யம் என்பதை போதிக்கின்ற முறையில் முதலில் இரண்டு பதங்களின் அர்த்தத்தை போதித்து, நான்காவது ஸூத்ரத்தினால் இரண்டு பதார்த்தங்களுக்கும் அகண்ட ஆனந்த அத்வய ஆத்மஸ்வரூபத்தில் தான் ஸமன்வயம் என்பது போதிக்கப்படுகிறது. ஈக்ஷத்யதிகரணம் என்பது சாங்க்யவாதத்தை கண்டனம் செய்வதற்காக விசாரிக்கப்பட்டிருக்கிறது. அதனால் மஹாவாக்யார்த்தத்தை போதிப்பதற்கு அந்த அதிகரணம் தேவையில்லை.

**562. அவதாரிகை :**

ஸமன்வயஸூத்ரத்தினால் சித்திக்கின்ற அர்த்தம் என்ன என்பதை மறுபடியும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

शक्नोति सिद्धमवबोधयितुं च वाक्यं शक्नोति कार्यरहितं वदितुं च वाक्यम् ।
शक्नोत्यखण्डमवबोधयितुं च वाक्यम् शक्नोति मुक्तिफलमर्पयितुं च वाक्यम् ॥

**ச்லோகார்த்தம் :** வ்ாக்யமானது சித்தவஸ்துவை தெரிவிப்பதில் தகுதி உடையது என்றே சொல்லவேண்டும். வாக்யம் கார்யமாக இல்லாத அர்த்தத்தை தெரிவிப்பதில் தகுதிபெற்றதாகவே இருக்கிறது ஆகவே, வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்ற ஸாமர்த்யம் உடையதாக இருப்பதால் முக்தி என்ற பலத்தை அடைவதற்குரிய தகுதி உடையதாகவே இருக்கிறது.

**வ்யாக்யானம் :** சித்தமான அர்த்தத்தை தெரிவிப்பதில் சப்தத்திற்கு ப்ரவ்ருத்தி உண்டா இல்லையா என்பதை விசாரிக்கப்பட்டு, ப்ரவ்ருத்தி உண்டு என்று சாதிக்கப்பட்டது. அதேபோல் நியோகம் தான் வாக்யார்த்தம் என்று சொல்லப்பட்டதும் சரியல்ல என்று நிராகரணம் செய்யப்பட்டது. அத்துடன், கார்யஸம்பந்தம்ற்ற அகண்டமான அர்த்தத்தை போதிப்பதன் மூலமாக மோக்ஷரூபமான பலனைக்கொடுப் பதற்கு இந்த வாக்யம் ஸாமர்த்யம் உடையதாக இருக்கிறது என்பதையும் இந்த நான்காவது ஸூத்ரத்தின் மூலமாக விளக்கப்பட்டிருக்கிறது. வாக்யத்திற்கு அகண்டார்த்தத்தில்தான் ஸமன்வயம் இருக்கின்றது என்பதை முன்பே விஸ்தாரமாக விளக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும், வாக்யத்திற்கு கார்யத்தில் தான் அன்வயம் என்று சொல்லமுடியாது என்பதையும், சித்தவஸ்துவாக இருந்தாலும் வாக்யத்திற்கு அன்வயம் இருக்கிறது என்பதையும் ஸமன்வயஸூத்ரம் தெரிவிக்கின்றது.

2. ப்ரஹ்மமென்பது உபாஸனபரமாக விதிக்கப்படுகிறது என்றும் கார்யமான உபாஸனத்தில்தான் அன்வயம் என்று சொல்லப்படுவது சரியல்ல என்று கண்டித்து, கார்ய அன்வயம் இல்லாத ப்ரஹ்மதத்வத்தையே இந்தவாக்யம் போதிக்கின்றது என்று தெரிவிக்கப்பட்டது.

3. ஜீவனும் ப்ரஹ்மமும், உபாதியினால்தான் பேதமேயன்றிஸ்வத: பேதமில்லை என்பதையும் தெரிவிப்பதன் மூலம் அகண்டார்த்தத்தையே ஸூத்ரம் போதிக்கின்றது.

இந்தவிதம் வேறு எந்தப்ரமாணத்தின் தேவையுமின்றி சித்தமான அர்த்தத்தையே இந்த வாக்யம் போதிக்கின்றது என்பதையும், வாக்யம் உபாஸனபரம் என்று சொல்லப்படுவது சரியல்ல என்பதையும், வாக்யம் கார்யப்ரதானமில்லையென்றும், ஸ்வப்ரதானமாகவே தன் அர்த்தத்தை போதிக்கின்றது என்றும் மஹாவாக்யம் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது. என்றும், இந்த ஸூத்ரத்தினாலேயே போதிக்கப்படுகிறது. தத்வசாக்ஷாத்காரத்தினால் ஏற்படுகின்ற மோக்ஷமென்ற பலனைக் கொண்ட மஹாவாக்யம் ஸ்வப்ரதானம் என்றே சித்திக்கிறது. அதனால் வேறொன்றுக்கு அங்கமாகச் சொல்ல முடியாது. தனியாக பலம் இல்லாமல் இருப்பது எதுவோ அதுவே வேறொன்றுக்கு அங்கமாக இருக்கமுடியும். ஸ்வப்ரதானமாக ஸ்வயமே பலனுடையவாக்யம் கர்மஸேஷம் என்று சொல்லமுடியாது என்று முன்பே நிரூபணம் செய்யப்பட்டவிஷயத்தையே மேலும், இந்தச்லோகத்தினால் விளக்கப் பட்டிருக்கிறது.

**563. அவதாரிகை:**

இந்தவிதம் நான்கு ஸூத்ரங்களையும் விசாரிக்கப்பட்ட முறையில் ஸமன்வய ஸூத்ரத்தின் அர்த்தம் விளக்கப்பட்டதாக ஆகிறது. இந்த ஸமன்வய அத்யாயத்திலுள்ள

நான்கு பாதங்களில் முதல் பாதத்தின் அர்த்தமான நிர்க்குணப்ரஹ்ம நிரூபணம் செய்யப்படுவதற்காகவே, வேதாந்தம் ப்ரவ்ருத்திக்கின்றது என்றும் இவ்விதமே ஸர்வவேதாந்தவாக்யங்களும்நிர்க்குணப்ரஹ்மத்தை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையது என்றும் முதல் பாதத்தில் சொல்லப்படுகிறது. இதுவே, ஸ்பஷ்ட்டப்ரஹ்மலிங்க வாக்யத்தின் தாத்பர்யம்.

இரண்டாவது பாதம் அஸ்பஷ்ட்டப்ரஹ்மலிங்க வாக்யத்தின் தாத்பர்யம் என்னவென்பதை தெரிவிக்கின்றது. அதாவது எல்லாவாக்யங்களும் உபாஸ்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஸமன்வயத்தை அடைகிறது என்று சொல்லப்படுகிறது.

மூன்றுவது பாதத்தில் ஞேயமான ப்ரஹ்மத்தில் ஸர்வவாக்யங்களும் ஸமன்வயத்தை அடைகிறது என்று சொல்லப்படுகிறது.

நான்காவது பாதத்தில் தனித்தனியாக அவ்யக்தம் முதலானபதங்களின் அர்த்தம் விசாரிக்கப்படுகிறது. இந்தவிதம் நான்குசூத்ரங்களும் விசாரிக்கப்பட்டதனுலேயே நான்கு பாதங்கள் உள்ள ஸமன்வயார்த்தம் பூராவும் விசாரிக்கப்பட்டதாக ஆகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

एतत्समन्वयनिरूपणमेवमस्मिन् बुद्धिस्थतामुपगते सति वाक्यजन्यम् ।
विज्ञानमद्वयगतं न ततोऽन्यदन्यत् पुंसोऽपराधकृतमित्युदियात्प्रतीचि ॥

**ச்லோகார்த்தம் :** இதுவரை சொல்லப்பட்ட முறைப்படி ஸமன்வய சூத்ரந்யாயத்தை அறிந்த காரணத்தினுல் ஸத்யஞானனந்த அத்விதீய ப்ரஹ்மஸ்வரூபமே ச்ருதிதாத்பர்யம் என்பதை நிரூபணம் செய்யப்பட்டது. இதனுல் வேதாந்த வாக்ய ப்ரமாணத்தில் ஏற்பட்ட அஸம்பாவனே நீங்கி ஸமன்வயவாக்யார்த்த நிச்சயம் சித்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** மோக்ஷரூபமான புருஷார்த்தத்திற்கு அவஸ்யம் தேவையான் ஞானம் இதனுல் உபதேசிக்கப்பட்டது என்ற விஷயத்தை மேலே விளக்கப்படுகிறது. ஜீவப்ரஹ்மஐக்யஞானம் என்பதே மோக்ஷம் என்ற புருஷார்த்தம். இந்த ஞானம் புத்தியில் நிலேத்திருப்பதற்கு, மஹாவாக்யத்திலிருந்து ப்ரத்யக்ப்ரஹ்மஅபேதஞானம் ஏற்பட வேண்டும். இவ்விதமின்றி உபநிஷத்வாக்யங்களும் பேதத்தைத்தான் போதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் அவையெல்லாம் உபநிஷத்வாக்யார்த்தமில்லே. ஆகவே, அவரவர் புத்தியில் தோன்றுவதையெல்லாம் உபநிஷத்வாக்யார்த்தம் என்று சொல்லப்படுவது சரியல்ல என்பது இதுவரை விசாரிக்கப்பட்ட முறையினுலேயே அறியப்படுகிறது.

இந்த விதம் ஸர்வஞ்ஞாத்ம முனிவரின் ஸம்க்ஷேபசாரீரகம் என்ற க்ரந்தத்தின் முதல் அத்யாயம் விசாரிக்கப்பட்டு முடிவு பெற்றது. இதேபோல் இந்தக்ரந்தத்திற்கு புருஷோத்தம யதி என்பவரால் செய்யப்பட்ட ஸுபோதினி என்றவ்யாக்யானமும், ராமதீர்த்தர் என்பவரால் செய்யப்பட்ட அர்த்தப்ரகாஸிகா என்றவ்யாக்யானமும் முதல் அத்யாயத்திற்கு முடிவு பெற்றது.

